# இப்புத்தகத்தில் அடங்கியுள்ளவை.

# முகவுரை.

இந்நூலுள் அறத்துப்பாலும், பொருட்பாலின் முதற் பாகமும், இரண்டாம் பாகமும் முறையே இதன் முன்னர் வெளி வந்துள்ளன. அதன் மூன்றாம்பாகமாகிய இது இப்பொழுது வெளிவருகின்றது. பேதைமை முதல் கயமை ஈறாக இருபத்தைந்து அதிகாரங்கள் இதில் அடங்கியுள்ளன. பேதைமை நீங்குங்கள்; புல்லறிவொழியுங்கள்; இகல் அகலுங்கள்; பகை நலங் கண்டு அதன் வகை நிலை தெளியுங்கள்; உட்பகை களையுங்கள்; பெரியாரை இகழாதீர்கள்; பெண்வழிச் செல்லாதீர்கள்; பரத்தையரைப் பாராதீர்கள்; கள்ளுண்ணாதீர்கள்; சூதாடாதீர்கள்; அளவறிந்துண்ணுங்கள்; குடிப்பிறப்போர்ந்து, மானம் பேணிப், பெருமை சார்ந்து, சால்பமைந்து, பண்புடையராய் எவரும் இன்புறநின்று பகுத்துதவுங்கள்; பொருளை இறுகப்பற்றிப் படு உலோபிகளாய்ப் பழிபடாதீர்கள்; சிறந்த நாணுடையராய் நின்று, பிறந்த குடியைப் பேணி, உழவினை ஓம்பி, வறுமையுறா வண்ணம் வழிசெய்து வாழுங்கள்; இரவுநிலை தெரிந்து இரந்து படுதலை மறந்தும் செய்யாதீர்கள்; கீழ்மையாளராய்ப் பாழ்பட்டொழியாதீர்கள்; என இன்னவாறு நன்னயமான உறுதிநலங்கள் பல இதில் உணர்த்தப்பட்டுள்ளன.

அமிர்தமயமான இவ் அருமை நூலை அருள்செய்துதவிய பெருவள்ளலாகிய வள்ளுவமூர்த்தியின் உரைநலங்கள் கதை வளங்களோடு கலந்து இதில் கனிந்திருக்கின்றன ஆதலால் எவரும் இன்பமீக் கூர்ந்து இனிது நுகர்ந்து உயர்பயனடையலாம். இந்நூலை முதலில் யான் எழுதத்தொடங்கியபொழுது உல்லாசமான பொழுதுபோக்காகவே கருதிச் செய்தேன். இதனை உலகில் வெளிப்படுத்தவேண்டுமென்று அதுபொழுது கருதவில்லை. பின்னர் உரையும் கதையும் வரைந்து வெளியிடும்படி திருவருள் தூண்ட வெளிவர நேர்ந்தது.

திருவருட்செயலால் அறக் கடலையும் பொருட் கடலையும் கடந்துவந்துள்ளேன். இனி இன்பக் கடல் ஒன்றே எஞ்சியுள்ளது.

அதனையும் எம்பெருமான் அருள் வலியால் எளிதில் கடந்து விடுவேன் என்னும் துணிவு மிக வுடையேன். முன் வெளிவந்துள்ள இருபாலினும் இனிவரும் இன்பப் பாலையே அறிஞர் பலரும் விழைந்து எதிர்நோக்கி நிமிர்ந்து நிற்கின்றனர். புரவலர் என எவரையும் எவ்வகையிலும் ஒரு சிறிதும் புகவொட்டாமல் இவ் அரிய நூலைப் புனித நிலையில்வைத்து இனிது முடித்துவரும் எம் செந்திற் பெருமான் திருவருள் நிலையை எண்ணியெண்ணி இறும்பூதெய்திப் பெரும் பூரிப்புடன் இறைஞ்சி நிற்கின்றேன்.

செந்திலென் றொருகால் நெறியிடைச் செல்வோர் செப்பினும்
தீயுறு மெழுகிற்
சிந்தைநைந் துருகி மென்மயிர் பொடித்துச் செய்மொழி
குளறிமெய் நடுங்கி
உந்திமென்புனலிற் கண்கள் நீர் துளித்துள் ளுருகிடும்
அன்பர்க ளிருப்ப
வந்தெனையாண்டாய்! யான்செய் மாதவமென் வள்ளலே
மாசிலாமணியே?

பொன்றா அறமும் பொருளும் அருளியிதை
நன்றாகச் செய்துவைத்த நாதனே — குன்றாமல்
இன்பும் அருளி இனிதாள்வான் நன்னெஞ்சே
துன்பமுறல் ஏனோ துணி.

திருவள்ளுவர் நிலையம்,
தூத்துக்குடி.
ஞாஅ-ளு ஆடி-மீ. எ-உ
22—7—33.

இங்ஙனம்
ஜெகவீரபாண்டியன்.

## மதிப்புரைகள்.

### ஸ்ரீமான் ஸ்ரீநிவாச ராவ் அவர்கள் B. A. Sub-Registrar எழுதியது.

அன்புமிக்க ஐயா, நலம். என்னைத் தங்கள் நண்பன் என்று தெரியாத அறிஞர் சிலர் என்பால் வந்து திருக்குறட் குமரேச வெண்பாவைக் குறித்து மிக்க உருக்கமாகப் பேசினர். குறள்களோடு இணைந்து விளங்கும் தங்களது பனுவலின் அருமையையும், உரை நடையின் அழகையும், சொற்றொடர்களின் இனிய அமைப்பையும், அவைபெற்றொலிக்கும் நல்லோசையையும் பற்றிப் பலரும் பன்முறை வியந்து புகழ்கின்றனர்.

தங்கள் வெண்பாக்களைப் படிக்குந்தோறும் விரிந்த சிறகால் பறந்து, மலர் தோறும் அமர்ந்து, மகரந்தம் துளைந்து, செழுந்தேன் பருகி எழுந்து களிக்கும் வண்டேபோல் என் உள்ளங் களிக்கின்றது. குமரேசனது திருவருள் மாண்பால் குறள் என்னும் பாற்கடலில் ஆழ்ந்து அதன் நலமுழுதுந் தோய்ந்து அமைவுடன் எழுந்து, பன்னூலுலகில் ஒண்ணிலாய் பரப்பிப் பல் கலை துலக்கி, எல்லா உயிர்களும் இன்புறுமாறு பொருளமுதத்தை அருளுடன் பொழியும் கலைத்திங்களை யொத்த தங்களைத் தமிழ் நாடு இந் நாளில் பெற்றமையை நினைந்து நினைந்து பெரிதும் மகிழ்கின்றேன்.

தாங்கள் உதவுகின்ற இந்த உயரிய விருந்தைத் திருந்த இருந்து அருந்தி மகிழ்கின்ற அறிஞரனைவரும தங்கள் மதி நலத்தையும், மன நலத்தையும் தெரிந்துகொள்வார்களென்று யான் தெளிந்துள்ளேன்.

---

### ஸ்ரீமான் K. G. சேஷய்யரவர்கள் ஹைகோர்ட்டு ஜட்ஜ் (Retired) எழுதியது.

அன்பார்ந்த ஐயா, நலம். தாங்கள் இயற்றி அச்சிட்டுவரும் திருக்குறட் குமரேச வெண்பாவை வாசித்து மகிழ்வுற்றேன். அதன் அருமையும் பெருமையும் பெரிதும் பாராட்டற்பாலன. அந் நூல் சொல் நயத்திலும் பொருள் நயத்திலும் சிறந்து விளங்கு

கின்றது. தமிழர்கள் அதைப் படித்து அதில் அடங்கியுள்ள கல்வி நலங்களைத் துய்த்து நல்லறிவு மல்கி இன்புறுவார்கள். செய்யுட்களின் சிறந்த நலமும், உரையின் தெள்ளிய நடையும், உதாரணமாகக் கூறியுள்ள கதைகளின் பொருத்தமும் எல்லோர் மனத்தையுங் களிக்கச் செய்யும். தேவர் திருக்குறளின் பொருளை நன்கு விளக்கத் தாங்கள் செய்துவரும் இப் பெருங் கைங்கரியம் தமிழகமெங்கும் ஆதரிக்கப் பெற்று விளங்குமாறு ஈசன் அருள் புரிவாராக.

---

மதுரைத் தமிழ்ச் சங்க கௌரவ காரியதரிசி,

திருவாளர் S. சோமசுந்தர பாரதியவர்கள் M.A.,B.L. எழுதியது.

தாம் இன்புறுந் தமிழ்த்தேனைப் பிறரின்புறக் கண்டு காமுறும் கற்றறி கவிஞ! நலம். தங்கள் அமிழ்தனைய வெண்பா நூற்பகுதிகளைக் கண்ணுற்று அளவற்ற மகிழ்வுற்றேன். இயற்றமிழ்க் கடலும் சமய நூல் ஆறுகளும் மாந்தித் திளைத்த நலமனைத்தும் வீண்போகாது வடித்தெடுத்து வாய்த்தவழி அக் காரமாக்கி அருத்தி மகிழும் தங்கள் அகச் செவ்வியை இந்நூல் வெளிப்படுத்துகின்றது. சிந்தாமணியனைய பழுத்துச் சிவந்த செய்யுள் பயின்று தேக்கிய தங்கள் கல்வி வளத்தைப் பல்லாண்டு களுக்கு முன்னமே சல்லாப வாயிலாக நேரிலறிவேன். பல மன்றங்களில் செய்யக் கேட்ட விரிவுரைகளால் தங்கள் நாவன் மையையுமுணர்வேன். எனினும் இயலினிய அரியபாவன்மையை யும், நுணித்து நுனயஞ் சுவைத்து விகசிக்கும் தங்கள் மதி நுட் பத்தையும தஙகள் குமரேச வெண்பா மூலம் தெளிந்து உள மிக உவக்கின்றேன்.

சோமேசர்முதுமொழி வெண்பாப்போலன்றித் தங்கள் குமரேச வெண்பாப் புதுமொழிப்புத்தமுதாம் என்பது புனைந் துரையன்று. தொல்லைப் புராணங்களைத் துருவி நல்ல கதைகளை வருவிக் குறளொடு மருவிப் புதுநலமும் புத்துயிரும் பெற் ருளிரக் குயிற்றுந் தங்கள் கைவினையாண்மையைப் பார்த்தோ றும் படித்துணரலாம். விருத்தருக்கு இளமை நல்கு·ந புதிய

மருத்துவ முறைகளை மேனாட்டார் கூறிவருகின்றனர்; வளம் வறந்து வாழ்விறந்த பழங் கதைகளுக்கு விருந்தெனத் திருந்திய மறு வாழ்வும் மணச் செறிவு முறுத்து மருந்தினை வள்ளுவர் தெள்ளமுதிற் கண்டு கையாளும் தங்கள் புலமைத்திறத்திற்குத் தங்கள் வெண்பாக்கள் சரிபகருகின்றன. உரையும் பாட்டும் ஒருங்கினிய நடை நலனும் பொருள்வளமும் பொருந்தி மிளிர் கின்றன. தெரித்துரைக்கும் கருத்துரையும், குறிப்புக்களும் கலைபுலவிக் காழ்த்த தங்கள் மதிநுட்பத்தைக் கவினுறுத்துகின் றன. குறள்களின் உட்கிடையைத் திறம்பட விளக்குங் கதைப் பொருத்தத்தையும், பாட்டுகளூட்டும் பயனையும், திரட்டி யுருக் கித் திரும்பவார்த்தெடுத்தபடிமம்போன்ற தங்கள் புதிய கொழு க்குறள்கள் பாசுரவுரை யிறுதி நின்று விழுப்பந்தருகின்றது.

சுருங்கச் சொல்லில் இந்நூல் தங்கள் விரிந்து சிறந்த நூற் பயிற்சியையும், அலகியகன்ற அறிவுயர்ச்சியையும் பறையறை கின்றது. தங்கள் தமிழ்த் தொண்டும் ஆர்வமும் தமிழரால் மிகவும் பாராட்டத்தக்கவென்பது சொல்லாமேயமையும். இன் னும் பல்லாண்டினிது வாழ்ந்து இனைய புதிய இனிய பெரிய பலன்தரு நூல் பல இயற்றித் தமிழ் மக்களுக்கு அணிந்து புலவர் தமிழறம் ஆற்றிச் சிறந்து தமிழ்ச் சோதரரைச் சிறப் பித்து எண்ணிறியும் ஒண்புகழும் பண்புயர உடனுயர்ந்து வளம் பெருக வளர்ந்துயர வாழ்கவெனப் பல்லாண்டு கூறுகின்றேன்.

---

பாஞ்சாலங்குறிச்சி மாசி மன்னரின் அருமைச் சகோதரர்

ஸ்ரீமாந் சுப்பிரமணியத் துரையவர்கள் இயற்றியன.

சொன்னாட்டு பாவலர்கள் சொற்குறுதி நாட்டுநூல் துவிதத்தொன்றை
முன்னாட்டு குமரேச வெண்பாவா முயர்நூலை மொழிதல்செய்து
பொன்னாட்டும் இந்நாட்டும் புலவர்களுக் கின்னமுதம் புகட்டி நின்றே
எந்நாட்டும் இசைநாட்டும் ஜெகவீர பாண்டியனும் எழிற்சிம் மேறே. (க)

கற்றவநற் பலகலையும், கருணைவடிவாங் கந்தன் கழல்மீதன்புள்
உற்றவ, நண்புற்றவருக் குண்மையறிவானந்த உருவத்துண்மை
முற்றவுநன் குணர்த்தியவ, முந்நீர் சூழ் வையமெலா முறையாலேத்தும்
நற்றவ, நம்குலதிலக, ஜெகவீரபாண்டிய நன் னாவல் லோனே. (உ)

## இராகவேந்திரனார்.

செய்யதிரு மறைமலர்ந்த திசைமுகனே வள்ளுவனாய்த்
திகழ்ந்து முன்னிவ்
வையமதல் வந்தினிய குறட்பாவால் வண்பொருளாம்
அமிர்தை வாரி
உய்யவுயிர்க் கருளிய நன் குண்ணுமல் ஒழிவதைக்கண்
டுளமிரங்கிப்
பைய ஒரு வகையானே பாண்டியப்பேர் பூண்டுவந்து
பரிந்து தந்தான்.

---

## இராஜசூடாமணி.

சேட்டசெவி நினைத்தமனம் சொன்னவாய் இன்னமென்று
கேட்போம் என்று
தேட்டமுறும் படிபேசும் ஜெகவீரபாண்டிய நின்
திருநூலொன்றை
நாட்டமுடன் படித்துணர்ந்தேன் நவிரின்பக்கடல்படிந்தேன்
ஞால முய்யக்
காட்டுமுயர் வானுக்கும் நிற்குமெவர் கைம்மாறு
காட்ட வல்லார்?

---

## துரைராஜா அவர்கள்.

தெய்வப் புலமைத் திருவள்ளுவப்பெருமான்
உய்வைத் தரவைத்த ஒண்பொருளைக்—கைவைத்து
வாரிக் கொடுத்தான் வயவேந்தர் போற்று ஜெக
வீரக் குலமன் விழைந்து.

# 84-ம் அதிகாரம் பேதைமை.

அஃதாவது அறிவில்லாதது தன்மை. செய்வன தவிர்வன யாதும் அறியாது வெவ்விய கேட்டிற்கே இனமாய் நிற்கும் இவ் அறிவிலிகள் தமக்கும் பிறர்க்கும் பயன்படாத பதடிகளாதலால் வடிவொப்புமைகண்டு நன் மக்களென்று நம்பி நட்புக்கொள்ள லாகாதென உணர்த்துகின்றாராதலால் கூடாநட்பின் பின்னர் இது வைககப்பட்டது. பேதையருறவு ஒழிதலே ஒருவனுக்கு ஊதியமாமென முன் சுருக்கி உரைத்ததனை ஈண்டு விரித்துணர்த் துகின்றார் என்க.

831 கண்டுபலன் காணமல் காகனேன் தீமையுளங்
கொண்டுநலன் விட்டான் குமரேசா—உண்டான
பேதைமை யென்பதொன் றியாதெனின் ஏதங்கொண்
டூதியம் போக விடல். (க)

இ—ள்.

குமரேசா! காகன் என்பவன் தீமையைச் செய்து கொண்டு எய்திய நன்மையை இழக்கவிட்டு ஏன் இறந்தொழிந் தான் எனின், பேதைமை என்பது ஒன்று யாது? எனின், ஏதம் கொண்டு ஊதியம் போகவிடல் என்க.

இஃது அறிவிலிகளின் இயல்பு கூறுகின்றது.

பலன் காணமல் நலன் விட்டான் என்றது கைவந்திருந்த புகழையும் புண்ணியத்தையும் போகவிட்டுப் பழியும் பாவமும் எய்தி யழிவுற்றமை கருதி.

பேதைமை = அறியாமை; அஃதாவது நன்மை தீமைகளை யாதும் நாடி அறியாத மூடத்தன்மை. இதன் எதிர்மொழி மேதைமை. மேதை = அறிவு.

ஏதம் = கேடு, துன்பம். ஏதந்தருதற்குரிய செயலை ஈண்டு ஏதம் என்றதனால் இது காரியவாகு பெயர். ஊதியம் என்ப தும் அது. ஊதியம் = இலாபம், நன்மை.

அறியாமை என்று சொல்லப்படுவது ஒன்று யாதோ? என்று வினவின் அது, தனக்குக் கேடுதருவன வற்றைக் கைக்கொண்டு நன்மை பயப்பனவற்றை ஒழிய விடுதலேயாம் என்பதாம்.

ஒன்று யாது எனின் என்று ஊன்றி வினவி, கொண்டு விடல் என்னும் இரண்டு வினைகளையும் அதற்கு உரிமையாக உடையது என உணரவைத்துப் பேதைமையின் பெற்றியை உணர்த்தியிருக்கும் அழகை உய்த்துணர்ந்து கொள்க.

உயிர் பாங்களின் நிலையாகிய தத்துவ நலனை உய்த்துணர்ந்து கொள்ளாமல் பிறவிக்கு ஏதுவாயுள்ள பேதைமை ஒன்றும், உலகியலோடு தக்க இன்ன; தகாதன இன்ன; என்று ஒக்க நோக்கி விதிமுறை யறியாது நெறி பிறழ்ந்து நிற்கும் பேதைமை ஒன்றும் ஆக இரண்டுள்ளன: ஆகலால் அவற்றுள் ஒன்று யாது எனப் பின்னியதை மீண்டு உணர்த்துகின்றதுபோல் இவ் வினா உணர நின்றது. ஏதத்தை அஞ்சித் தள்ளுதலும், ஊதியத்தை ஒன்றிக் கொள்ளுதலும் அறிவுடைமையின் அமைவாம் ஆதலால் அவற்றிற்கு மாறாக மருவிக் கோடலும், மயங்கி விடலும் அறிவின்மை என நின்றன.

பழியும் பாவமும் வறுமையும் வருதற்குரிய இழி செயல்களை விரும்பிச் செய்தலும், புகழும் புண்ணியமும் செல்வமும் பொருந்தற்குரிய சிறந்த வினைகளைச் செய்யாது இகழ்ந்து விடுதலும் அறிவிலிகளுக்கு இயல்பாம் என்பார் ஏதம் கொண்டு ஊதியம் போகவிடல் பேதைமை என்றார்.

விடல் என்று மாத்திரம் சொல்லிவிடாமல் போக என இடையே பொருந்த வைத்தது என்னை? யெனின், இருமையிலும் பெருமை யுறுதற்குரிய ஊதியங்களெல்லாம் இயல்பாகவே தமபால் எய்தியிருந்தாலும் களித்தவன் மடிப்பொருள்போல் தாமாகவே அவை ஒழிந்துபோகும்படி மூடர்கள் இழிந்து நிற்பர் என்பது நன்கு விளங்க என்க.

இம்மையிலும் மறுமையிலும் துன்புறுதற்கே துவாகிய கேடான காரியங்களையே மூடர் நாடிக்கொள்வர் என்றவாறு.

உள்ளீடாகிய அறிவு இல்லார்க்குப் புறத்தே வெள்ளம் என்னும்படி செல்வ முதலியன மேவியிருந்தாலும் அவற்றால் யாதும் பயனில்லையாம் என்க.

குலமதவம் கல்வி குடிமைமூப் பைந்தும்
விலங்காமல் எய்தியக் கண்ணும்—நலஞ்சான்ற
மையறு தொல்சீர் உலகம் அறியாமை
நெய்யிலாப் பாற்சோற்றி னேர். என்றது நாலடி.

உயிர்க்கு ஊதியமாகிய நலங்கள் எவ்வளவு எய்தியிருந்தாலும் அறிவில்லையாயின் அவற்றாற் பயனில்லை என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. உணர்வில்லாத பேதையை நெய் இல்லாத சோற்றோடு இதில் நேரவைத்தது நெய்யில்லாத உண்டி பாழ் என்று அஃது எள்ளப்படுதல் போல் இப்பாழ் மகனும் இகழ்ந்து தள்ளப்படுதல் கருதி என்க.

ஆவதைக் கைவிட்டு அழிவினைக்கொள்ளும் அறிவிலிகளோடு யாதும உறவு கொள்ளலாகாதென்பது கருத்து.

உடல் மிகவருந்திக் கடலகங் கடைந்து
பெற்ற போமிர்தைப் பேணுது கைவிட்டு
அழித்திடக் கருதிக் களித்து முன்வந்
துற்ற மோகினியைக் குற்றமென் றுணராது
உள்ளங்கொண்டு முன் ஒழிவுறலான

அசுரர்கள்போல் ஏதங்கொண்டு ஊதியம் போகவிட்டுப் பேதையர் வீணே ஒழிந்துபோவர் என்றவாறு.

ஏதத்தை விளைக்க வல்ல மகோதரன் சகுனி முதலாயினோரை உவந்துகொண்டு ஊதியத்தைப் பயத்தற்குரிய விபீடணன் விதுரன் முதலிய சதுரர்களை ஒழியவிட்டு இராவணனும் துரியோதனனும் அழிவுபட்டதுபோல் ஆவன அறியாது அலமகொண்டு பேதையர் நோவர் என்க.

இனிய இதங்கள்பல நெருங்கியிருப்பினும் குருடன் முன் குருமணி கிடப்பதுபோல் பேதையர்க்கு அவை யாதும் பயன் படா என்க.

பொன்னே கொடுத்தும் புணர்தற்கு அரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும்—அன்னோ
பயனில் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமில் அறிவி னவர். (நாலடி.)

அரியாருள்ளவர் அணுகியிருந்தாலும் அப்பெரியர்பால் அறிந்துகொள்ளவேண்டிய நலங்களை விரைந்துகொள்ளாமல் வறிதே வம்பளந்து அகல விடுவர் அறிவிலிகள் என இது அறிவுறுத்தியிருத்தல் காண்க.

வெள்ளையர்பால் உள்ள வினையாண்மை யாதிநலம்
உள்ளி யுயர்பயனை யுட்கொள்ளார்—துள்ளியவர்
கொள்ளும் உடையும் குடியும் தலைதறிப்பும்
அள்ளுகின்றார் அந்தோ அவம்.

என்பதும் ஈண்டு அறியத்தக்கது. நமரவர்எதங்கொண்டு ஊதியம் போகவிடலை எண்ணி யிரங்கி இது எழுந்து நின்றுள்ளமை காண்க.

பேதையர் புகழ் புண்ணியங்களைப் போகவிட்டுப் பழிபாவங்களைப் பற்றிக்கொண்டு இழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காகன்பால் உணரப்படும்.

## கதை.

காகன் என்பவன் விதர்ப்ப நாட்டின் வடமேல்பாலமைந்து கிடந்த குறுநிலப் பகுதியைத் தனக்கு உரிமையாகக் கொண்டிருந்த ஓர் வேடர் தலைமகன். இவன் மிகுந்த வெஞ்சினமுடையவன். யாதும் அஞ்சா நெஞ்சினன். முன்னும் பின்னும் ஆராய்ந்து பாராமல் தன் மனம் போனபடியே திமிர்ந்து செருக்கி எதனையும் திண்மையோடு செய்து நின்ற சிறு தொழிலாளன். உள்ளத்தில் உறுதியுடையவனாயினும் நல்ல அறிவு சிறிதும் இல்லாதவன். வாதும் சூதும் யாதுமிலனெனினும் தீது மிக்கவன். வன்சொல் வழங்கலும் புன்செயல் புரிதலும் தன் செய்கையாகக் கொண்டவன். தனக்கு என்ன கேடு வந்தாலும் அதனை எண்ணி நோக்காதவன். செல்வம் இருத்தலால் தன்னை அடுத்துப் புகழ்ந்தவர்க்குக் கண்மூடித்தனமாகக் கொடுத்து வந்தான். இவன் கொடை சாம்பரில் விட்ட நெய்போல் ஆம்பரிசு ஒன்றுமின்றித்

தியர்க்கேயாயினமையால் நீங்கமைந்து நின்றது. இங்ஙனம் நெஞ்சாபோனபடி நிலை நிலைத்திருக்க இவன், ஒரு நாள் வேட்டை மேல் விரும்பி வனத்திடையடைந்தான். அந்த நள மன்னன் கலிவயத்தனுப் பிரிந்து போனமையால் அவனுடைய அருமைத் திரு மனைவியாகிய தமயந்தி பெரிய ஓர் அரவின் வாய்ப்பட்டு அழுது புலம்பினுள், அவ்வமயம் இவன் துணிந்து போய் அப் பாம்பினைத் துண்டஞ் செய்தான். அப்பதிவிரதை உயிர்பிழைத்து நன்றி பாராட்டி இவனைத் துதிசெய்து நின்றுள்.

ஆருயிரும் நாணும அழியாமல் ஐயா இப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரின்
இதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
விதர்ப்பன்றுன் பெற்ற விளக்கு.

அம்மாதர் திலகம மனங்குளிர்ந்து இங்ஙனம் போற்றி நின்ற பொழுது இப்பேதைமகன் நிலையறியாமல் அவள்மேல் காதல் கொண்டான். இப்புலைமகன் நிலைமையை அத் தலைமகள் நோக்கினுள். தந்தையே! யான் உன் புதல்வி என்றுள். மகள் என்று சொல்லியும இவ் அறிவிலி கேளாமல் அவ் அழகியை நெருங்கி என்னுடன் வருக என்று அழைத்தான. இவ்வெய்ய மொழியைக் கேட்டவுடன் ஐயகோ! என்று அழுது தவித்தாள். இவன் யாதும் இரங்காமல் அருகில் அணைந்தான. அவள் மறுகி ஓடினுள். விடுவதில்லை என்று இக்கொடியவனும விரைந்து தொடர்ந்தான். அக் கற்புத் தெய்வம் கனன்று விழித்தாள். உடனே பக்கென் றெரிந்து இவன் பாழாய்விழுந்தான். இப்பழிமகன் செய்கையைப் புலவர் திலகராகிய புகழேந்திப் புலவர் அழகுறக் கூறியுள்ளார். அவ் அருமைப் பாடலை இதன்டியில் காண்க.

இந்து நுதலி எழில்கோகிலி வதேதன்
சிந்தை கருதிச் சிலைவேடன்—பைக்கொடி நீ
போதுவா யென்னுடனே என்றுன் ; புலைநரகுக்
கேதுவாய் நின்று னெடுத்து. (க)

வேடன் அழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
ஆடன் மயில்போல் அலமரா—ஓடினுள்
தூறெலாமாகச் சுரிகுழல்வேற் கண்ணினீ
ராறெலா மாக அழுது. (உ)

திக்கட் பனிதொடாச் செல்லும் கிறுமான்போல்
ஆக்கை தளர அலமந்து—போக்கற்றுச்
சிறு விழித்தாள் சிலைவேடன் அவ்வளவில்
நீறுய் விழுந்தான் நிலத்து. (ரு.)

இம் மூழ்மகன் இவ்வாறு ஒழிந்து போனதை நினைந்து அக்குலமகள் உளம் இரங்கினாள். தன்னைப்பாதுகாத்த புண்ணியத்தையும், புகழையும் பொருந்திக்கொள்ளாமல் பழியையும் பாவத்தையும் எய்தி இங்ஙனம் அழிவடைந்தானே! என்று அருள் சுரந்து நின்று பேதைமையின் நிலைமையை நொந்து அம்மாதரசி அகன்றுபோனாள். இனிய நலங்கள் தம் கையில் எய்தியிருந்தாலும் வகைதெரியாமல் அவற்றை ஒழியவிட்டுப் பழி வழிகளையே அறிவிலிகள் பற்றிக்கொள்வர் என்பதை அங்கு முனிவரும் உற்றறிந்து சென்றார். பேதையர் ஏதங்கொண்டு ஊதியம் போகவிடுவர் என்னும் உண்மையை உலகம்காண அன்று இவன் உணர்த்தி நின்றான்.

வெய்யஅரவின் பகுவாயின் விடுத்த மடமான் எழில்நோக்கி
மையல் கூர்ந்த நெஞ்சினனாய் வரிவிற்றடக்கை வயவேடன்
தொய்யில் முலைமேற் புல்லுதற்குத் தொடரத் துஞ்சா வருங்கற்பின்
தையல் முனிந்து நோக்குதலும் சாம்பராயிற் றவனுடலே.

என நைடதத்திலும் இவன் சரிதம் குறிக்கப்பட்டுள்ளது.

பேதைமை யென்னும் வித்திற் பிறந்து பின் வினைகளென்னும்
வேதனை மரங்கள் நாறி வேட்கை வேர் வீழ்த்து முற்றிக்
காதலும் களிப்பு மென்னும கவடுவிட்டு அவலம் பூத்து
மாதுயர் இடும்பை காய்த்து மரணமே கனிந்து நிற்கும்.
(சீவகசிந்தாமணி.)

பேதைமை யென்பது யாதென வினவின்
ஓதிய இவற்றை உணராது மயங்கி
இயற்படு பொருளாற் கண்டது மறந்து
முயற்கோடு உண்டெனக் கேட்டது தெளிதல். (மணிமேகலை)

பேய்மை யாக்குமிப் பேதைமைக் கள்வனோ டுடனாய்க்
காமுற்றுமதன் பயத்தினிற் காமனைக் கடந்து

காமஞூடம் புகழ் கொடுப்பதோர் நன்னெறி நண்ணும்
வாமன் வாய்மொழி மறந்திட்டு மறக்கொழிகின்றம.
(வீரசோழியம்-உரை).

பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும் செம்பொருள் காண்பது அறிவு என்பதைத் தெளிவுறுத்தி நிற்கின்ற இவையும ஈண்டு எண்ணற்குரியன.

உடற்கண் ஒளியிழக்க ஒண்குருட னேனும்
தொடக்குண்டு நன்மை தொடர்வார்—மடக்கண்ணர்
ஏதும் அறியார்; இருமையினும் இன்னலுற
ஏதமே கொள்வார் இசைந்து.

உற்ற நலம்விட் டுறுதீதை நேய்யரிபோல்
பற்றுமே பேதை பழி.

பேதையா இயல்பு இதனால் கூறப்பட்டது.

---

832 சீதையிடம் காதலன்று செய்து சயந்தனேன்
கோதடைந்து நின்றான் குமரேசா—ஏதமுறும்
பேதைமை யுள்ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல். (உ)

இ—ள்.

குமரேசா! சீதையிடம் காதலைச்செய்து பெரும்பேதை என்று எல்லாரும் இகழ்ந்து சொல்லச் சயந்தன் ஏன் அன்று இழிந்து நின்றான் எனின், காதன்மை கையல்லதன்கண் செயல் பேதைமையுள் எல்லாம் பேதைமை என்க.

இது, பேதையர் வீண் காதல்செய்து விளிவர் என்கின்றது. பேதைமையு ளெல்லாம்பேதைமை என அச்சுப்பிரதிகளில்பாடம் காணப்படுகின்றது. அங்ஙனம்கொண்டால் தளைதட்டும்; அதனைத் தளைக்கு இசையுமாறு பிரித்துப் பொருத்தின் செப்பலோசை சிதைவதாகும். அவதை ஆய்ந்துகொள்க.

பேதைமையுள் எல்லாம் பேதைமை என்றது பெரும் பேதைமை என்றவாறு. இன்மையுள் இன்மை என்புழிப்போல் து மிகுதி தோன்ற நின்றது.

காதன்மை = வேட்கை, ஆசை. காதல் என்பது மைவிகுதி எய்தி நின்றது. "காதன்மை கண்ணுளே யடக்கி" என்பது சிந்தாமணி.

கை என்னுஞ் சொல் ஒழுக்கம் செயல் பக்கம் வரிசை முதலியவற்றை யுணர்த்தி வரும். கையல்லதன் கண் என்றது எவ்வாற்றானும் தனக்கு யாதும் இசையாத பொருளின் கண்ணே என்றவாறு. எனவே கை என்பது ஈண்டு உரிமை தோன்ற நின்றது. தன் கைபோல் ஒருவனுக்கு மிக உரிமையாய் நெருங்கியமைந்தது கையுள்ளதெனப்படுமாதலால் அங்ஙனம் அமையாதது கையல்லதென நின்றது. "கைவரும் வேந்தன்" என்புழி இது நின்றுணர்த்துதல் காண்க. "கையமை விளக்கம்" என்ற முல்லைப் பாட்டும் ஈண்டுள்ளத்தக்கது.

மேல், நலம் பயப்பதைக் கைவிட்டுத் தீது தருவதையே பேதையர் பேணிக்கொள்வர் என்றார்: இதில், இடவகை தெரியாமல் எதன்கண்ணும் காதல்செய்து அவர் இழிவர் என்கின்றார்.

அறியாமை யெல்லாவற்றுள்ளும் ஒருவனுக்கு மிக்க அறியாமையாவது, எவ்வகையினும் தனக்குக் கைவாராத காரியத்தின் கண்ணே காதலைச் செய்தல் என்பதாம்.

அறிவது அறிந்து ஆய்ந்து நின்று தன் நிலையினையும் உறுவதனையும் ஓர்ந்து தெளிந்து தனக்கு உரிமையாய் உறுதி பயக்கத் தக்க செயல்களில் காதல்செய்து நீதியோடு போதருதல் மேதைமையாகுமாதலால் அதற்கு மாறாய இது பேதைமை என நின்றது.

தம் நிலைக்கும் தகுதிக்கும் சிறிதும் ஒவ்வாத அரிய பொருளில் ஆசைகொண்டு அறிவிலிகள் வறிதே யுழல்வர் என்பார் கையல்லதன்கட் காதன்மை செய்தல் பேதைமை என்றார்.

நெடிது பற்பகல் செல்லினும் நிரம்புவ தொன்றை
இடைவிடாமலே முயன்று பெற்றிடுகின்ற தியற்கை
உடல் வருந்தியும் தங்களால் முடிவுறு தொன்றை
முடியும் ஈதெனக் கொள்வது கயவர்தம் முறையே.

என்பது கந்தபுராணம். கைவாராத பொருளில் காதன்மை செய்வது கயமையாம் என்று இது காட்டி நிற்றல் காண்க.

எவ்வளவுதான் எண்ணி முயன்றாலும் கைவாராமையோடு பழியுந் தொடர்கின்ற இழிவினையில் காதலைச் செய்வது பேதையர் தன்மையாம் என்றவாறு. எனவே அப் புன்மையாளர் நன்மை யாதும் அறியாமல் நலிந்து இழிவர் என்பதாயிற்று.

தீதடைவதாயினும் கையுறுவதன்கட் காதல் செய்வோர் பேதையர்; கருதியதை யடைந்தேமென்றுவது அவர் சிறிது ஆறுதலடைவர்; கையல்லதன் கட் காதல் செய்வோர் பயனொன்று மின்றிப் பழிபாவங்களையே கொண்டு இழிவாதலால் அவரினும் இவர் பெரும் பேதையர் ஆயினர். ஆகவே இவரியல்பு பேதைமையுள் எல்லாம் பேதைமை என நின்றது.

போர்மகளைக் கலைமகளைப் புகழ்மகளைத் தழுவியகை பொருமை கூரச்
சீர்மகளைத் திருமகளைத் தேவர்க்கும் தெரிவரிய தெய்வக் கற்பின்
பேர்மகளைத் தழுவுவான் உயிர்கொடுத்துப் பழிகொண்ட பித்தா பின்னைப்
பார்மகளைத் தழுவினையே திசையானைப் பணையிறுத்த பணைத்த மார்பால்.

இது தன் அண்ணனாகிய இராவணன் இறந்து கிடந்த பொழுது விபீடணன் சொன்னது. காதன்மை கையல்லதன் கட் செய்தமையான் எய்தி யிருந்த நலங்களோடு இன்னுயிரையும் இழந்து பழியடைந்து அவன் அழிந்ததற்கு இரங்கி "உயிர் கொடுத்துப் பழிகொண்ட பித்தா" என்று வயிறெரிந்து கூவி அம்மதிமான் மறுகியழுதிருக்கும் உரிமையை இதில் ஊன்றி யுணர்க. பித்தா என்று காதலித்த அப்பேதைமையை உய்த்துணரும்படி கம்பர்பெருமான் வைத்திருக்கும் அழகைப்பார்க்க.

சிறந்த செல்வங்களை யடைந்திருந்தாலும் தனக்கு ஆகாத பொருளின் கண்ணே ஒருவன் ஆவல்கொண்டுழல்வனாயின் அறிவிலி என அவன் அவமதிக்கப்படுவானாதலால் அங்ஙனம் படா வண்ணம் கருத்தறிந்து பார்த்து இதம்பெற மக்கள் நடந்து கொள்ளவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

பிறர் கேட்டால் எள்ளி நகைத்து இழித்துரையாடும்படியான பொல்லாத செயல்களில் தம் உள்ளத்தைச் செலுத்திப் பேதையர் பேதுறுவர் என்ற இதனால் அவர் தீதுடைமை தேறலாம்.

உறுவதொன்றும் உணராமல் தகாத இடத்தும் தம் காதலைச் செலுத்துவோர் எவ்வளவு உயர்வுடையராயினும் பேதையர் என்றே யாவராலும் பின்பு இகழப்படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சயந்தன்பால் உணரப்படும்.

## கதை.

சயந்தன் என்பவன் இந்திரனுடைய திருமகன். தாய் பெயர் சசி. இவன் அழகு முதலிய உருவ நலங்களில் சிறந்திருந்தானாயினும் குணநலம் குன்றியிருந்தான். தெய்வத் திருவுடையனாயிருந்தும் இவனுளத்தில் களிப்பும் காதலும் மிகச் செழித்திருந்தன. களிப்பாவது எய்தியுள்ள பொருள் நலன்களை யெண்ணி யெண்ணி உள்ளே பெருக மகிழ்தல். காதலாவது எய்தாத பொருள்களை எதிர்நோக்கி விழைந்து எய்தும்படி கருதி இன்புறுதல். பொறி பின்பங்களிலேயே இவன் இங்ஙனம் பொங்கி நின்றான். அடுத்து நின்று தொழுது அமரர்கள் கூறிவந்த புகழ்ச்சி மொழிகளைக் கேட்டு மகிழ்ச்சி மீக்கொண்டு மதன லேகை என்னும் தன் மனைவியோ டமர்ந்து காமச் சுவையில் கனிந்து நாளும் புதிது புதிதான போகங்களை நுகர்ந்து ஓகை யெய்தி வந்தான். சுவையுறத் தோன்றியுள்ள அழகுடைப் பொருள்கள் யாவும் தன் அனுபவத்துக்காகவே அமைந்திருந்தன என்று இவன் அகங்களித்திருந்தான். தான் கருதிய பொருள் எதுவாயினும் வருவதொன்றையும் கருதாது அதனையுற விழைந்து கொள்வான். இராமன் வனம் புகுந்து சீதையோடு சித்திரகூடம் என்னும் மலைச்சாரலிலுள்ள ஓர் அழகிய பூஞ்சோலையிலமர்ந்திருக்கும்பொழுது இவன் விமானமூர்ந்து விசும்பாறாக வந்தான். அங்ஙனம்வருங்கால் கீழே விளங்கியிருந்த சானகியைக்கண்டான். கழிபெருங் காதல் கொண்டான். விமானத்தைப் போகவிட்டு விரைந்துவந்து அங்கோர் மரச் செறிவில் மறைந்து நின்றான். அழகினை உற்று உற்று நோக்கி உளமிக உருகினான். அக் கற்புடையாள் தன் கருத்திற்கு இணங்காளே என்று எண்ணி எண்ணி உளைந்தான். எப்படியாவது அத் திருமேனியைத் தீண்டிவிட வேண்டும் என்று துணிந்தான். தன் வடிவோடு

போகலாகாதென்று தெளிந்து ஓர் காகவடிவங் கொண்டான். பாவம்! காமங் காழ் கொண்டால் அது செய்யுந் தீமைதான் என்னே!

எண்ணின்றியே துணியும்; எவ்வழியானும் ஓடும்
உண்ணின்றுருக்கும; உரவோருரை கோடல் இன்றும்;
நண்ணின்றியேயும் நயவாரை நயந்து நிற்கும்;
கண்ணின்று காமம்; நனிகாமுறுவாரை வீழ்க்கும். (வளையாபதி).

என்றபடியே தீமையில் வீழ்ந்து பேதையாய இவன் கடுகிச் சென்று அப் பதிவிரதையின் தோளில்போய்ப் பழகிய பறவை போல் கெழுதகைமையோடு தழுவி யிருந்துகொண்டு மெல்ல மார் பின்கண்ணே நழுவி முலைகளில் தன் முகத்தைப் பொருந்தவைத்து அழுந்தத் தேய்த்தான். இப்பேதைச்செயலைப் பாராமுகமாய் அய விருந்த இராமனறிந்து ஓர் புல்லினை எடுத்து ஒல்லென எறிந்தான் அவ் வீரன் கைப்பட்ட அது, ஓர் கூரிய பாணமாய் அவனைக் கொன்றுவிடும்படி கொதித்துச் சென்றது. காகமாய் நின்ற அவன் உள்ளஞ்சி வேகமா ஓடினான். தானும் இப்படியே தீது ஒன்று செய்து முன்பு பூனையாய் ஓடிப் புன்பழி கொண்ட இவன் தந்தையையும் இங்கு எண்ணுதுவிட முடியுமா? வித்தும் மூளை யும் வேறுகாமல் ஒத்திருத்தல் இவ் அவ நிலையிலும் உணரலாகும். செல்வமிகுந்தால் கையல்லதன் கண்ணும காதல் செய்யும்படி ஊக்கி அஃது இவ்வகை அல்லலை யாக்கும்போலும். அந்தோ! அவன் ஓடினும் அது விடாமல் உடன் தொடர்ந்தது. கொல்லு மாறு தொடர்ந்துவரும் அதன் கோரநிலையைநோக்கி இவன் குலை நடுங்கிப் பல இடங்கட்குஞ் சென்று எங்கும் பற்றுக் கோடில்லா மையால் முடிவில்வந்து இராமனடியில் விழுந்தான். அருள் வள் ளலாகிய அப்பெருமான் அகம் இரங்கினான். ஆயினும் அப்பகழி காகவடிவாய் நின்ற இவன் கண்ணை யழித்துச்சென்றது. அத னால் காக்கை இனம் முழுவதும் அவ் அழிபயனைக் கலந்துநின்றன. அமரர் முதலனைவரும் இவனது அறிவின்மையை நினைந்து வருந் திக் காகாசுரன் என்னும்படி ஓர் அசுரன்போலவே இன்று இவன் ஆயினன் என்று இகழ்ந்துகூறி ஆறுதல்செய்து அகன்று போயி

ஞர். தனக்கு எவ்வகையிலும் சிறிதும் ஒவ்வாத இடத்திலே தன் காதலைச்செய்து பழியும் தீதும் அடைந்து, பேதையருங்கூட இகழ்ந்து நகைக்கும்படி இவன் பெரும் பேதையாயினனே என்று முனிவரும் பேசி இரங்கினர். பேதைமையுள் எல்லாம் பேதைமை காதன்மை கையல்லதன் கண் செயல்; என்னும் உண்மைக்கு இவன் உரிமையாய் நின்றான். பேதையாய்க் காதல் செய்து இவன் தீதடைந்ததைக் குறித்துக் கம்பர்பெருமான் நன்கு கூறியுள்ளார். அடியில் வருவன காண்க

நாகம் ஒன்றிய நல்வரை யின்றலை மேனாள்
ஆகம் வந்தெதனை அள்ளுகிர் வாளினளைந்த
காகம் ஒன்றை முனிந்தயல் கல்லெழு புல்லால்
வேக வெம்படை விட்டது மெல்ல விரிப்பாய். (க)

அங்கதஞ்சி நடுங்கி அயன்பதி அண்மி
இங்கு நின்வர வென்னவெனக் கனல்வெய்த
பங்கை பங்கனொடெண் டிசை யுஞ் செலமற்றோர்
தங்கள் தங்கள் இடங்கள் மறுத்தமை தைப்பாய். (உ)

இந்திரன் தரு மைந்தனுறுந்துயர் யாவும்
அந்தரத்தினில் நின்றவர் கண்டினி அந்தோ
எந்தை தன்சரண் அன்றியொர் தஞ்சமும் இன்றால்
வந்தவன்சரண் வீழ்கென வுற்றதும் வைப்பாய். (ங)

ஐய நின் சரணஞ் சரணென்றவன் அஞ்சி
வையம் வந்து வணங்கிட வள்ளல் மகிழ்ந்தே
வெய்யவன்கண் இரண்டொடு போகென விட்ட
தெய்வ வெம்படை யுற்றுளதன்மை தெரிப்பாய். (ச)

எந்தை நின்சரணஞ் சரணென்ற இதன்றால்
முந்து நின் குறையும் பொறை தந்தனம்; முந்துன்
சிந்தமொன்று கொடித்திரள் கண்கள் தமக்கே
வந்தொர் நன்மணி நிற்கென வைத்ததும் வைப்பாய். (ரு)

வேகம் விண்டு சயந்தன் வணங்கி விசும்பிற்
போக அண்டர்கள் கண்டலர் கொண்டு பொழிந்தார்
நாக நம்பன் இளங்கிளை நன்குணராத
பாகு தங்கிய வென்றியின் இன்சொல் பணிப்பாய். (சா)

(இராமாயணம்.)

இவை அனுமானிடம் அடையாளங் கூறிவிடுங்கால் சீதை கூறியன. இதனால் இவ் வுண்மையின் உறுதி புலனாலாகும்.

சித்திரகூடத் திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட
அத்திரமே கொண்டெறிய அனைத்துலகுந் திரிந்தோடி
வித்தகனே இராமாவோ! நின்னபயம் என்றழைப்ப
அத்திரமே அதன் கண்ணை அறுத்ததும் ஓர் அடையாளம்.

(திருமொழி).

காதும் ஒருவிழி காகம் உற அருள் மாயனரிதிரு மருகோனே

(திருப்புகழ்.)

மேற்குறித்த பேதையாகிய இச்சயந்தன் சரிதம் இங்ஙனம் பல நூல்களிலும் குறிக்கப்பட்டுள்ளது.

பொன்னுலகோர் வேந்தன் புதல்வனோர் புன்காதல்
மன்னியதாற் காகமாய் மண்ணிழிந்து—தன்னுபழி
எய்தியிழி பேதையென எள்ளநின்றான் யாரெனினும்
உய்தியுண்டோ தீமை புரின்.

எண்ணுமற் காதல் ஏதன்கண்ணும் பேதைசெய்
துண்ணோம் பின் ஊன முறும்.

பேதையர் கோதுமிகக் காதல்செய்து தீதுறுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

833 நாணுமல் கற்புடையாள் நற்றுகிலைத் துச்சதனன்
கோணுதேன் ஈர்த்தான் குமரேசா—பூணுக
நாணுமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணுமை பேதை தொழில. (௩)

இ—ள்.

குமரேசா! பதிவிரதையாகிய துரோபதையின் துகிலைத் துச்சாதனன் ஏன் சிறிதும் நாணுமல் பற்றி இழுத்தான் எனின், நாணுமை, நாடாமை, நார்இன்மை, யாது ஒன்றும் பேணுமை, பேதை தொழில் என்க.

இந்து அறிவிலிகள் செயல்வகை இன்னவாம் என்கின்றது.

கற்புடையாள் என்றது துரோபதையை. நல்துகில் = நல்ல ஆடை. நன்மையாவது மானங்காத்துநின்ற தன்மை என்க.

நாணம் = வெட்கம்; அஃதாவது பழிபாவங்களுக்குக் கூசி ஒடுங்குதல். அங்ஙனம் ஒடுங்காமை நாணாமையாம். நாடாமை = ஆராய்ந்து தேராமை; அஃதாவது செய்வன தவிர்வன தெரிந்து கொள்ளாமை என்க.

நார் = அன்பு. பேணாமை = போற்றாமை; தான் பிறந்த குடிப்பிறப்பு முதலியன வடுப்படாதபடி போற்றிக்கொள்ளாமை.

மேல், ஊதியம் போகவிட்டு, ஏதங்கொண்டு, கையல்லதன் கண் காதல் செய்வனெனப் பேதையர் இயல்பு கூறினார்; இதில், அவர் செயல்களைக் கூறுகின்றார்.

நாணம் இல்லாமையும், ஆராயாமையும், அன்பின்மையும், யாதொன்றனையும் பேணிக்கொள்ளாமையும் பேதையாது தொழிலாம் என்பதாம்.

பழிபாவங்களைக் கூசாமல் துணிந்து செய்தலும், நன்மை தீமைகளைநாடி ஆராய்ந்து செய்வன தவிர்வன தேராமல் திமிர்ந்து புரிதலும், கடுத்த சொல்லும் வெறுத்த செயலுமுடையராய் என்றும் யார் மாட்டும் இரக்கம் இல்லாமையும், தாம் எடுத்த பிறப்பு அடுத்த நலன் முதலிய நிலைகளை யாதும் எண்ணிப் பாராமல் இழிவுற இயற்றலும் அறிவில்லார்க்கு இயற்கையாம் என்பார் நாணாமை, நாடாமை, நார்இன்மை, யாது ஒன்றும் பேணாமை, பேதை தொழில் என்றார்.

நாடுதல், இரங்குதல், பேணுதல் என்னும் இக்குண நலங்கள் யாவும் நாணுதல் ஒன்று உண்டாயின் ஒருங்கு உளவாம் ஆதலால் அதன் தலைமை தோன்ற அது முதலில் நின்றது.

நாணம் முதலிய குணங்கள் இன்றி மனம்போனபடியே மதத்துத்திரியும் நடைப்பிணங்களை நட்பாகப் பேணி ஒழுகலாகாதென்பது கருத்து.

காணார் பரியார் கயனில செய்தொழுகும்
பேணு அறிவிலா மாக்களைப்—பேணி
ஒழுக்கி அவரோ டுடனுறை செய்தல்
புழுப்பெய்து புண்பொதியு மாறு. என்றது பழமொழி.

பேதை மாக்களை உடனுறையும்படி பேணிச் செய்தல் சீழில் ஒழுகிவரும் புழுக்களைப் புண்ணுட் பொதிந்து மூடிவைத்தல்போல் பொறுத்தற்கரிய பெருந்துன்பமாமென இஃதுணர்த்தி நிற்றல் காண்க. பரியார் என்றது அன்பிலார் என்றவாறு.

சீழில் மூழ்கிக்கிடக்கும் புழுக்களோடு பேதையரை ஒப்புற வைத்தது இழிந்த நிலையிலழுந்திக்கிடக்கும் அவரது இழிவு தோன்ற என்க.

பேதையர் யாதொரு நிலைமையும் கருதாது மனம் போன படியே சென்று பழிபாவங்களைச் செய்து இழிவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துச்சாதனன் பால் உணரப்படும்.

## கதை.

துச்சாதனன் என்பவன் திருதராட்டிரனுடைய புதல்வர் நூற்றுவருள் ஒருவன். துரியோதனனுக்கு அடுத்த தம்பியான யுயுத்சு என்பவனுக்குப் பின் பிறந்தவன். துச்சகன் துச்சலன் சலசந்தன் விந்தன் முதலிய துணைவர் தொண்ணூற்றெண்மருக்கும் மூத்தவன். எல்லாருக்கும் முன்னவனாகிய அவ் அண்ணனை யாவது ஒருவகையில் நல்லவனென்று எண்ணிக்கொள்ளலாம் எவ் வகையிலும் இவன் மிகப் பொல்லாதவன். தன் மனம் மொழி மெய்களை எப்பொழுதும் தீயவழிகளிலேயே செலுத்தி இவன் செருக்கித் திரிந்தான். எவரையும் பழிபடப் பேசும் இழி குணமுடையவன். இவன் வாய்திறந்தால் நோய் புகுந்ததுபோல் அறிவுடையார் மிக வருந்துவர். "ஆன்றோர் கேட்கிற் செவி புதைக்கும் அழல்கால் வெஞ்சொல் அறன் இல்லான்" எனவும். சொல்லிடை நஞ்சுகக்கும் துன்மதியுடைய தம்பி எனவும் வில்லி யாழ்வார் இவனைக்குறித்துச் சொல்லியுள்ளார். மன்னன் மகனுய்ப்

பிறந்திருந்தும் சின்ன எண்ணங்களையே கொண்டு இவன் இன்னா விழைத்து நின்றான். துரியோதனன் சதியாலோசனை செய்து பஞ்சவரை யழைத்துச் சூதால் வஞ்சித்துக்கொண்ட பின் அரச சபையில் வைத்து அவரை இவன் மிகவும் அவமானஞ்செய்தான். ஏழைகளானஉங்களுக்குத்தோளிலேபோட மேலாடையும் வேண்டுமோ? என்று இகழ்ந்து கூறி அவரிடம் துணிந்து வாங்கினான். அவர்களுடைய அருமைத் திரு மனைவியாகிய துரோபதையைப் பேயக் கொடுமையாக வலித் திழுத்துவந்து அவையில்நிறுத்துத் துகிலுரியத் துணிந்தான். காந்தாரியருகே அரண்மனையிலிருந்த அப் பாஞ்சாலியைப் பற்றி வருங்கால் இப்பழிமகன் தன் பாழ் வாய் திறந்து இழிமொழிகள் பல கூறினான். சில இதனடியில் வருவன

தலத்துக்கு இசையாது ஐவரையுந் தழுவித் தழுவித் தனித்தனியே
நலத்துப்பொய்யே மெய்போல நடிக்குஞ் செவ்வி நலனுடையாய்
குலத்திற் பிறந்தா யாமாகில் கூசாது என்பின் போதுகெனப்
பெலத்திற் செங்கைமலர் நீண்டிப் பிடித்தான் சூழ்ச்சி முடித்தானே. (௧)

வாருங்கண்ணீர் வளர்கொங்கை வரைமே லருவி யெனை வீழத்
தாருங் குழலும் மின்னுடனே தலஞ்சேர் கொண்டலென வீழக்
கூருந்துயரினுடன் வீழ்ந்து கோகோ வென்று கோச் சபையிற்
சோருங் கொடியை முகம் நோக்கித் துச்சாதனன் மெய்சுடச் சொன்னான்

மன்வந்திருந்த சங்கத்துன் மாமன் இருந்தான்; ஐவருமுன்
முன்வந்திருந்தார்; முன்கொண்ட முறையால் முயங்கு முடிவேந்தர்
மின்வந்தனைய நுண்ணிடையாய்! விழிநீர் சொரிந்து மெலியவுனக்
கென்வந்தது சொல்! பொது மகளிர்க்கு அரிதோ விழிநீர் எளிதென்றான்.௩.

பொல்லா வசையே புகழ் பூணப் புல்லன் புகல இதற்கொன்றுஞ்
சொல்லாதிருந்த பேரவையைத் தொழுதாள் அழுதாள் சோர்வுற்றாள்
மல்லார் திண்டோள் மாமாவோ மந்தாகினியாள் மதலாயோ!!
எல்லா நெறியும் உணர்ந்தாருக்கு இதுவோமண்ணில் இயல்பென்றாள். (௪)

இங்ஙனம் இப்பழிமகன் சொல்லிய இழிமொழிகளைக் கேட்டு அப் பதிவிரதை பதைத்து அழுதாள். அவையிலிருந்தவரனைவரும் அரவக்கொடியனுகிய அக் கொடியவனுக்கு அஞ்சி யாதும் கூற மாட்டாமல் தலை குனிந்து நொந்து அடங்கி யிருந்தார். இவன்

மிஞ்சி யெழுந்து பஞ்சவராடையைப் பறித்துவிட்டு நெஞ்சில் யாதொன்றையும் நாடாமல் கொஞ்சமுங்கூட நாணுமல் அவ் வஞ்சியின் உடையினை வெளவி யுரிந்தான்.

தருக துகிலென எழுந்து தங்களை வன்பொடுதுச்சா தனன் சொலாமுன்
வருகவென வரைமார்பில் வாங்காத உத்தரியம் வாங்கி யீர்த்தார்
அருகணுகி மடவாலை அஞ்சாமல் துகிலுரிவான் அமைந்த போதில்
இருகை நறு மலர்தலைய எம்பெருமான் இணையடிக்கே இதயஞ் சேர்த்தாள்.

ஆருகி இருகடங்கண் அஞ்சனவெம் புனல்சோர அளகஞ் சோர
வேருன துகில்தகைந்த கைசோர மெய்சோர வேறோர் சொல்லுங்
கூறுமல் கோவிந்தா கோவிந்தா என்றாற்றிக் குளிர்ந்து நாவில்
ஊறாத அமிழ்தூற உடல்புளகித்து உள்ளமெல்லாம் உருகினுளே.

இவ்வாறு உருகிநிற்குங்கால் திருமால் ஒருவரும் அறியாமல் வந்து உடுக்கை யிழந்தவன் கைபோல இடுக்கண் களைந்து மானங் காத்து நின்ருர். உரிய உரிய உடை பெருகி வந்ததைக் கண்டு அனைவரும் பெரு வியப்படைந்து இறைவனருளென் றெண்ணி யெழுந்து தொழுதார். இவ் அறிவிலியும் அஞ்சி நின்ருன். தன் பிறப்பின் சிறப்பையும நிலைமையும் பேணுமல், உறவொன்றை யும் நாடாமல், சிறிதும இரங்காமல், பழியே பாவமே என்று யாதும் நாணுமல், ஒரு பத்தினி யுடுத்திருந்த உடையைப் பலர் காணும்படி பற்றி யீர்த்தானே! இப் பேதை மகன் என்று இவ னது தீதுடைமையை நினைந்து எல்லாரும் சீசீ என இகழ்ந்தார். நாணுமை, நாடாமை, நார் இன்மை, யாதொன்றும் பேணுமை பேதை தொழில் என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்ருன்.

பின்வருவ தோரார் பிழைகளையே பேணுவார்
முன்வருவ தேதேனும் முட்டிநிற்பார்—மன்வருமா
மேன்மை திரண்டு மிகுந்தாலும் பேதையர்தம்
பான்மை யிழிந்து படும்.

நாடிநலம் யாதும் நயவார் படுபழியே
மூடர் புரிவார் முனைந்து.

பேதையர் யாதும் நாணுமல் தீது புரிவர் என்பது இதனுல் கூறப்பட்டது.

834 அன்றுய்ந் தறிந்துமேன் ஆர்ந்தமுழு மூடனெனக்
குன்றினன் கேமன் குமரேசா—நன்றாக
ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்தும் தானடங்காப்
பேதையிற் பேதையார் இல். (௪)

இ—ள்.

குமரேசா! பல நூல்களை ஓதி உணர்ந்திருந்தும் அடங்காது நின்ற கேமசருமன் ஏன் பெரும பேதை என இழிக்கப் பட்டான் எனின், ஓதி உணர்ந்தும பிறர்க்கு உரைத்தும் தான் அடங்காப் பேதையின் பேதையார் இல என்க.

இது, யாதினும் பேதையர் அடங்கார் என்கின்றது அறிந்தும் குன்றினன் என்றது பல கலைகளை வழுவறப் பயின்றறிந் திருந்தும் அடங்கி ஒழுகாமையால் இழிந்துபோனமை கருதி. நன்றாக என்பதை ஓதல் முதலிய மூன்றற்கும் தனித்தனி ஒட்டிக் காண்க.

ஓதி = பல நூல்களைக் கற்றும்; உணர்ந்து என்பதிலுள்ள உம்மை இதன் கண்ணும் ஒட்ட நின்றது. உம்மைகள் எண்ணுப் பொருளன.

தான்என்றது ஓதி உணர்ந்து உரைக்கின்றவன் என்றவாறு.

அடங்காப் பேதையின் = அடங்கி ஒழுகாத அறிவிலிபோல. இன் உருபு ஒப்புப் பொருளது. இனி எல்லைப் பொருளாகக் கொண்டு அடங்கா மூடனைக் காட்டிலும் முழு மூடன் யாண்டும இல்லை யெனினுமாம்.

உணர்தற்கும் உரைத்தற்கும் ஓதல் காரணமாதல் தோன்ற அதனை முதலில் வைத்தார். ஓதலும் உணர்தலும் தன்னுள் நிகழ்வன; உரைத்தல் பிறர் பற்றுக் கோடாக நிலவும் என்க. வைப்பு முறையால் அவற்றின் உயர் வுரிமைகளை யுணர்ந்துகொள்க.

மேல், யாதும் நாணாது பேதையர் தீது செய்வர் என்றார்; இதில், நலம் அடங்கிய நூல் பல கற்றாலும் அவர் உளம் அடங்கி ஒழுகார் என்கின்றார்.

நூல்களைக் கற்றும், அவற்றின் பயனை நன்கு அறிந்தும், அக் கல்வியைப் பிறரெல்லாரும் எளிதாக உணர்ந்துகொள்ளுமாறு தெளிவாகச் சொல்லியும், தான் மாத்திரம் அடங்கி ஒழுகாத பேதையைப்போலப் பேதையார் இவ்வுலகத்தில் இல்லை என்பதாம்.

மனம் மொழி மெய்கள் யாதும் தீமையுறுவண்ணம் புனித முற நின்று நல்ல எண்ணமும், நல்ல சொல்லும், நல்ல செயலு முடையனாய் அமைந்து அடங்கி ஒழுகலே ஒருவன் கல்விக்குப் பயனும் ஆதலால் அவ் அடக்கத்தை யீண்டு இணைத்துக் காட்டினார்.

அறிவோர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல் என்றபடி நல்லோர் அமைந்து நிற்பர்; நல்லறிவில்லாத புல்லர்கள் எவ்வளவு தாம் படித்துத் தேர்ந்தாலும் நல்லொழுக்கத்தில் படியாராய்ப் பாழே செருக்கித் திரிவர் என்க.

நீதி நெறிகளை நாடியறிந்து நிலை திரியாமல் அடங்கி ஒழுகுதற்கு ஏதுவாய கல்வி நலனைப் பெற்றிருந்தும் தன் புல்லிய மடமையால் அடக்கமாகிய அதன் பயனைப் பெறுமல் அருநரகு உய்க்கவல்ல அடங்காமையை மேற்கொள்ளல் பெரு மடமையாகுமாதலால் அப் பேதையிற் பேதையார் இல் என்றார்.

அடங்கி யகப்பட ஐந்தினைக் காத்துத்
தொடங்கிய மூன்றினால் மாண்டீண்—டுடம்பொழியச்
செல்லும்வாய்க் கேமம் சிறுகாலைச் செய்யாரே
கொல்லிமேற் கொட்டுவைத் தார். (பழமொழி.)

இருமையிலும் இன்பம பயக்கத்தக்க அடக்கத்தைக் கைக்கொண்டு ஒழுகாதவர் நெருப்பின்மேல் நெற்கூட்டை நிரப்பி வைத்தாரோடு ஒப்பர் என இது விளக்கி நிற்றல் காண்க. கொல்லி = நெருப்பு. கொட்டு = நெற்கூடு. பெரும் பயன் பேணுமல் சூடு சுட்டுப் பொரிப் பொறுக்கிகளாய்ச் சிறுமையே கருதிப் பேதையர் மீறித் திரிவர் என இஃது உணர்த்தி நிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க. மூன்று என்றது மனம் மொழி மெய்களை.

அடக்க ஒழுக்கங்களைப் பயக்கத்தக்க அரிய நூல்களைப் படித்தறிந்தாலும் பேதையர் அடங்கி ஒழுகார் என்றவாறு. "ஐங்காரம் இட்டு அரைத்துக் கரைத்தாலும் தன் நாற்றம் போகா தாம் பேய்ச் சுரைக்காய்" என்ற பழமொழிப்படி பேதையர் இடம்பட மெய்ஞ்ஞானங் கற்பினும் என்றும் அடங்கார் என்க.

ஓதி உணராத பேதையரேனும் என்றாவது உய்தல் கூடும்; அங்ஙனம் உணர்ந்தும் அதன் பயனடையாதார் கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள் என்னும்படி கற்றும் பேதையராய் என்றும் உய்தியில்லா வண்ணம் மயங்கிக் களித்து மனம் போனபடி திரிந்து இழிவாதலால் அவர் பெரும்பேதையர் எனப் பேச நின்றனர்.

விரிந்தநல் வேத புராணங்கள் ஆகமம் மிக்க கலை
தெரிந்து படித்துப் பொருள் செப்பித்தான் நிலைசேர்ந்து நில்லாது
இருந்த சண்டாளரின் ஏற்றம் கழுதை எழிற் குங்குமம்
பரிந்து சுமந்தும் பின் வஞ்சம பண்ணுக பயன் எதிலே.

என்ற அறிவானந்த சித்தியும் ஈண்டு அறியத்தக்கது. கல்விப் பயனாகிய அடக்கத்தைக் கைக்கொள்ளாமல் களித்துத் திரிவோரைக் குங்குமப் பொதி சுமந்த கழுதையினும் கடையாக உணர்த்தி நிற்கும் இதன் உறுதியை உற்று நோக்குக.

அரிய நூல்கள் பலவும் கற்று, அறிவு மிக்கு, எவரும் கேட்டு வியந்து புகழும்படி அவையிடை நின்று இனிது சொல்லிப் பெரிய பண்டிதமணியெனப் பேர் பெற்றிருப்பினும் உளம் அடங்கி ஒழுகாதார் முழு மூடரே யாவராதலால் அவரை ஒரு பொருளாக மதித்து உறவுகொள்ளலாகா தென்பது கருத்து. கல்வியறிவுடையாராயினும் அடக்க ஒழுக்கங்கள் இலராயின் அவர் பெரும் பேதையராக இழிக்கப்படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேமசருமன் பால் உணரப்படும்.

## கதை.

சேமசருமன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர் வட நாட்டிலே கடகபுரி என்னும் நகரிலிருந்தவன். பாரத்துவாச கோத்திரத்தானாகிய சண்டதருமன் என்னும் வேதிய

னுடைய மகன், தாய் பெயர் தருமவதி. இவன் இளமையி லேயே வேத முதலிய கலைகள் பலவும் ஓதி உணர்ந்து வேந்தரும் விரும்புமாறு விளங்கியிருந்தான். நல்ல அழகோடு சொல் வன்மையிலும் சிறந்தவன். பலகாலமும் பயின்று நின்ற முநிவோர்களும அறியமாட்டாமல் திகைத்து நிற்கும் மறைப்பொருளை இவன் மிக எளிதாக விளக்கி உரைத்துவிடுவான். இங்ஙனம் அறிவு முதலிய நலங்கள் அமைந்திருந்தும் அடக்கமில்லாமல் துடுக்கு மிக்கு மனம்போனபடியே இவன் செருக்கித் திரிந்தான். எவரையும் வாதுககழைத்து வைது பழித்து யாதுந் தெரியாதென வாயடி செய்து வசையுறுத்தி நின்றான். வல்வாயனுதலால் தன் சொல்வழியே பிறரையும் செல்லும்படி செய்தான். கல்வி மிக்கிருந்தும் நல்லொழுக்கமின்றி வரைமுறை பாராது இளமங்கையர் பலரையும் தழுவி மகிழ்ந்தான். ஓதி உணர்ந்த உனக்கு இது தகுமா? என்று விரத சீலர் என்னும் முனிவரொருவர் உறுதி தோன்ற ஒரு முறை உரைத்தபொழுது கண்ணன் பதினாயிரங் காதலிகளைக் கலந்து மகிழ்ந்தான் யானும் அவ்வண்ணமே செய்து எண்ணிவருகின்றேன் இதில் என்ன குறையென்று இவன் எதிர்ந்துரையாடி யகன்று போனான். மாபுக்குரிய வழக்கமான ஒழுக்க நிலைகளையும் ஒழித்து இவன் இழுக்க மீக் கூர்ந்தான்.

சந்திகள் மறந்து சாதித் தருமங்க ளொருவி வேதச்
சிந்தையு மொழிந்து காயத் திரிமுத லயர்த்து மாதர்
உந்தியந் தடத்து மூழ்கி யுயர்முலைச் சாந்தம் பூசி
மந்திரம் அவர்பாலோதி வணங்குவான் மதனத் தெய்வம். (க)

மனுவுக நானுவாநாள் மானயம் சங்கிராந்தி
வினவுமட் டகைகண் மேலே விதிபாதம் திருதியாய
புனிதநாள் தொண்ணூற் றாறும் புணர்முலைத தடமே யன்றி
இனியநீர்த் தடமுந் தோயான் இயன்றதென் புலதமீதார்க் கீயான்(உ)

வேந்தனைச் செங்கோல் செய்யும் விரகினைக் கரவால் மாற்றி
மாந்தர்மேற் கொடுங்கோல் செய்ய மந்திரக் குடிலஞ் செய்தும்
காந்தனைப் பிரியா மாதர் கற்பினைப் பிரித்தும் தன்பாற்
போந்தமா மறைச்சிறார்க்கும் புன்மை போதிப்பதானான். (ந)

என்றபடியே ஏதங்கள் பல விளைத்து இவன் தீதுற்று நின்றான். பின்பு அனங்கலேகை என்னும் ஓர் வேசியிடம் பெருமோகம் கொண்டு அவள் விரும்பியபடி யெல்லாம் நடந்து அருமபொருளனைத்தையும் இழந்து காம மயக்கத்தோடு கள்ளுண்டுங் களித்தான். கல்லாதவருங்கூட இவனை முழு மூடன் என்று எள்ளி யிகழ்ந்தார். பல நூல்களைக் கற்று உய்த்துணர்வுமிக்கு எவரும் வியந்து கேட்கும்படியாகச் சொற்றிறம் பெற்றும் நல்ல நெறியிலடங்கி ஒழுகாமையால் யாவரும புல்லினென் றிகழப் பெரும பேதையனாய் இவன் பேதுற்றழிந்தான். "சங்கையறப் படித்தாலும் கேட்டாலும் பிறர்க்குறுதி தனைச் சொன்னாலும், அங்கவனுலகிற் சிறியோர் தாமடங்கி நடந்து கதியடையமாட்டார்; என்று பின்பு புலவர் பாடும்படி இவன் முன்பு நிலவி நின்றான். ஓதி உணர்ந்தும் பிறர்க்கு உரைத்தும் தானடங்காப் பேதையிற் பேதையார் இல் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. திருவாரூர் மான்மிய முதலிய நூல்களில் இவன் சரிதம் காணலாகும்.

கோடியெனப் பேதையர்தாம் கூர்ந்துகலை கற்றாலும்
நாடி யடங்கார் நவை.

விரிந்த கல்வியுடையாராயினும் பேதையர் அடங்கி ஒழுகார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

835 என்றும் நரகழுந்த எண்ணமல் காஞ்சனன்முன்
கொன்று நின்றான் என்னே குமரேசா—நின்ற
ஒருமைச் செயலாற்றும பேதை யெழுமையும் (ரு)
தான்புக் கழுந்தும் அளறு.

இ—ள்.

குமரேசா ஒன்றையும ஓராமல் செய்த கொலைத் தீமையால் காஞ்சனன் ஏன் என்றும் நரக மெய்தினான் எனின், பேதை எழுமையும் தான்புக்கு அழுந்தும் அளறு ஒருமைச் செயல் ஆற்றும் என்க.

இது, பேதையர் தீவினை செய்யுந்திறங் கூறுகின்றது.

எண்ணுடல் = ஆராய்ந்து பாராமல். கொன்று நின்றான் என்றது கொலைசெய்து அதனால் பழியும் பாவமும் கொண்டு அழிதுயரடைந்து நின்றமை கருதி.

ஒருமை = ஒரு பிறப்பு; தான் எய்திபுள்ள ஒரு பிறவியி லேயே என்றவாறு.

எழுமை = எழு பிறப்பு; அஃதாவது தேவர் மனிதர் விலங்கு பறவை நீர்வாழ்வன ஊர்வன தாவரம் எனவரும் எழுவகைத் தோற்றங்களை. உம்மை முற்றும்மை.

பேதை செயல் ஆற்றும் = மூடன் செய்து கொள்ள வல்லனும்.

அளறு = நரகம். இழிந்த குழைசேறு யெங்கும் நிரம்பி என்றும கொடுந்துன்பங்கட்கு இடனுயுள்ள தென்பது தோன்ற நரகு அளறு என நின்றது.

மேல், பேதையாயினர் கல்வியறிவில் வல்லராயினும் நல் லொழுக்கமுடையராய் அடங்கி நடவார் என்றார்: இதில், அவர் நரகத்திற்கு ஏதுவான செயல்களையே நாடிச்செய்வர் என்கின்றார்.

பேதையானவன் எழுபிறப்புகளிலும் தான்புகுந்து அழுந் துதற்குரிய நரகத்தினை ஒரு பிறப்புள்ளே செய்துகொள்ள வல்ல னும் என்பதாம்.

பின்பு வரும் பிறவிகளிலெல்லாம் பெருந் துன்பங்களையடை தற்குக் காரணமாகிய கொடுந் தீமைகளை மூடனானவன் தான் எய்தி நின்ற ஒரு பிறவியிலேயே விரைந்து செய்துகொள்ளவல்லன் என்பார "எழுமையும் தான் புக்கு அழுந்தும் அளறு பேதை ஒருமைச் செயல் ஆற்றும்" என்றார்.

பேதை பிறர்க்கு நலஞ் செயலாற்றானாயினும் தனக்கேனும் அது செய்து கொள்வனோ? எனின், அதுவு மாட்டான்; தனக்கு அளறு செயல் ஒன்றே ஆற்றும என்க. இதனால் அவனது செயல் வகையும், தீமையும் தெளியலாகும்.

நரகில் அழுந்தியும், மீண்டு விலங்கு பறவை முதலிய எழு வகைப் பிறவிகளை யெய்தி அவற்றாட் பெருந்துயரடைந்தும் ஒழி வில்லாதபடி மாறிமாறி உறு துன்பமே உழந்து சுழன்றுழலுதற்கு

ஏதுவான வினைகளை மூடர் முனைந்து செய்து நிமிர்ந்து நிற்பர் என்றவாறு.

அளற்றின் இயல்பையும், அதில் அழுந்துவார் துயர் நிலைகளையும் அடியில் வருவனவற்றால் சிறிது காணலாம்.

பாரகம் கழூஉர்போலப் பருஉத்தடி பலரும் ஏந்தி
வீரநோய் வெகுளிதோற்றி விழுப்புற அதுக்கி யிட்டுக்
காரகற் பொரிப்பர்; கண்ணுட் சுரிகையை நடுவர்; நெஞ்சிற்
பாரக் கூர்ந்தறிகள் நட்டுப் பனையெனப் பிளப்பர் மாதோ. (க)

நாப்புடை பெயர்த்த லாற்றார் நயந்துநீர் வேட்டு நோக்கிப்
பூப்புடை யணிந்த பொய்கை புக்குநீ ருண்ணலுற்றாற்
சீப்படு குழம்பதாகிச் செல்ல லுற்றந்தோ வென்னக்
கூப்பிடு குரலாய் நிற்பர் குறைப்பனைக் குழாங்களொத்தே. (2)

வெந்துருக் குற்ற செம்பின் விதவையுள் அழுத்தியிட்டும்
எந்திரவூசலேற்றி எரியுண மடுத்தும், செக்கில்
சுந்தெழுந்தரைத்தும், போகச் சுண்ணமா நுணுக்கியிட்டும்
மந்தரத்தனைய துன்பம் வைகலும் உழப்பர் மாதோ. (ந)

உழும்பகட் டெருதுபோல உரனறு தாளராகிக்
கொழுக்களி அளற்றுள் வீழ்ந்தும் கொழும்புகை மடுக்கப்பட்டும்
அழுவதும் இந் நரகந் தன்னுள் செல்பவர் யார்கொல்? என்னின்
எழுந்தவெண் டிமிரும்பைந்தார் இறைவநீ கேண்மோ வென்றான். (ச)

கொல்வதே கன்றி நின்றார்; கொடியவர்; கடிய நீரார்;
இல்லையே இம்மையல்லால் உம்மையும் உயிருமென்பார்;
அல்லதுந் தவமும் இல்லை தானமும் இழுவென்பாரும்
செல்ப அந் நரகந் தன்னுள் தீவினை தேர்கள் ஊர்ந்தே. (5)

(சீவகசிந்தாமணி)

நரகத்தின் தன்மையும், அதில் அழுந்துதற்கு ஏதுவான செயல்களின் வகையும், அவற்றை ஆராயாது ஆற்றி நிற்கும் பேதையராய அத் தீவினையாளர் பின்பு அவ் வினைப்பயனைத் தொலைக்குமாறு அதில் வீழ்ந்து படுந் துன்பங்களும் இவற்றுள் விளங்குதல் காண்க.

பகுத்தறியாமல் தமக்கே மிகுத்த துயரங்களை மூடர் விளைத்துக் கொள்வர் என்பதாம். ஆகவே நரகமே குடியாக நிற்கும்

அக் கொடு வினையாளரோடு சிறிதும் கூடலாகாதென்பதாயிற்று.

எதனையும் ஆராய்ந்தறியாமல் என்றும் நரகத்திற்கு ஏதுவான தீய செயல்களைப் பேதையர் விரைந்து செய்துவிடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காஞ்சனன்பால் உணரப்படும்.

## கதை.

காஞ்சனன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் காஞ்சனபுரம் என்னும் நகரிலிருந்த ஓர் விஞ்சையர் தலைமகன். மிக்க வஞ்சமுடையவன். தனக்கமைந்திருந்த பெரும் பொருளனைத்தையும் கொடுஞ் செயல்களுக்கே படும்படி வைத்தவன். சினமும் களிப்பும் சேரப் பெற்றவன். கழிபெருங் காமி. காயசண்டிகை என்னும் ஓர் அழகியை மணந்து மிகு மோகியாய் அவளது இன்ப நுகர்விலேயே என்றும் இவன் இழிந்திருந்தான். அவளும் அழகியாயினும் உறுவதொன்றனையும் கருதாமல் இவன் போலவே விழைந்தபடியெல்லாம் கலந்து காதலித்து உளங் களித்திருந்தாள். போகம் ஒன்றையே பொருளெனக் கொண்டு நின்ற இவன் அவளோடு எங்குஞ் சென்று இனிய மலர்ச் சோலைகளிலும், விழுமிய மலைச் சாரல்களிலும் தங்கி காமச் சுவையைப் புதிது புதிதாகத் துய்த்துப் பொழுது போக்கி வந்தான். அங்ஙனம் வருங்கால் ஒரு முறை பொதிகை மலையை அடைந்தான். அங்கு ஆடியும் பாடியும் ஊடியும் கூடியும் இருவரும் உலாவி வதிந்தார். அவ்வண்ணம் அமைந்துவருங்கால் அங்கு விருச்சிகன் என்னும் முனிவர் ஒரு பெரிய நாவற் கனியைத் தேக்கிலையில் வைத்துவிட்டு நீராடச் சென்றார். அக்கனி பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒருமுறை பழுத்துத் தோன்றும்; அத்துணைக் காலமும் பட்டினி கிடந்து பருவம் பார்த்துவந்து அம் முனிவர் அதனை யுண்டு போவர். அத்தகைய தெய்வக் கனியை இவன் மனைவி கண்டாள். களிப்பு மிகுதியால் யாதொன்றனையும் ஆராயாமல் உல்லாசமாகத் தன் காலால் அதனை உதைத்துச் சிதைத்தாள். முனிவர் அறிந்து பெருஞ் சினங்கொண்டு "பன்னீராண்டளவும் யானைத் தீ என்னும் பசி நோய் உன்னைப் பற்றக்

கடவது" என்று பழித்துச் சபித்தார். தான் ஆற்றியதை நினைந்து அப் பேதை அஞ்சி நடுங்கி அவ்வாறே அருந்துயருழந்தாள். அதனை இதனடியில்வரும் மணிமேகலைப் பாடலால் தெளிவாக அறியலாம்.

"மாசில் வாலொளி வடதிசைச் சேடிக்
காசில் காஞ்சனபுரக் கடிநக ருள்ளேன்
விஞ்சையன் தன்னொடென் வெவ்வினை யுருப்பத்
தென்திசைப் பொதியில் காணிய வந்தேன்
கடுவரல் அருவிக் கடும்புனல் கொழித்த
விடுமணற் கானியாற் றியைந்தொருங் கிருந்தேன்
புரிநூல் மார்பிற் றிரிபுரி வார்சடை
மரவுரி உடையன் விருச்சிகன் என்போன்
பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி யனையதோர்
இருங்கனி நாவற் பழமொன் றேந்தித்
தேக்கிலை வைத்துச் சேணுறு பரப்பிற்
பூக்கமழ் பொய்கை யாடச் சென்றோன்
தீவினை யுருத்தலிற் செருக்கொடு சென்றேன்
காலால் அந்தக் கருங்கனி சிதைத்தேன்
உண்டல் வேட்கையின் வரூஉம் விருச்சிகன்
கண்டனன் என்னைக் கடுங்கனிச் சிதைவுடன்
சீர்திகழ் நாவலிற் றிப்பிய மானது
ஈரா றாண்டில் ஒரு கனி தருவது
அக்கனி யுண்டோர் ஆறீ ராண்டு
மக்கள் யாக்கையின் வரும்பசி நீங்குவர்
பன்னீ ராண்டில ஒருநா ளல்லது
உண்ணா நோன்பினோன் உண்கனி சிதைத்தாய்
அந்தரஞ் செல்லும் மந்திரம் இழந்து
தந்திக தீயால் தனித்துய ருழந்து
முந்நா லாண்டின் முதிர்கனி நானீங்கு
உண்ணும் நாள் உன் உறுபசி களைக என
அந்நாள் ஆங்கவன் இட்ட சாபம்" எனத் தன் வாயால்

அவளே பின்பு இவ்வாறு இரங்கிக் கூறியுள்ளாள். தான அழுந்

ஆதற்கு ஏதுவான செயலை ஆற்றி நின்ற அப்பெண் பேதையை விட்டு இப் பெருப் பேதை பிரிந்துபோய் நெடுநாளாய் வருந்தி யிருந்து பின்பு காவிரிப்பூம்பட்டினத்தி லிருப்பதாக அறிந்து அங்கு வந்தான். உண்மையில் அவள் விந்த மலையில் வீணே நொந்து மடிந்தாள். அதனை யறியாமல் இவன் அந் நகரிடைப் புகுந்து பல இடங்களிலும் தேடி ஒரு பனிமலர்ச் சோலையில் காயசண்டிகைபோல் உலாவி நின்ற மணிமேகலையைக் கண்டு தன் மனைவியென்று நம்பி அருகே நெருங்கிக் காதற்குறிப்போடு இனிய மொழிகள் பல இசைவுறக் கூறினான். அக் கற்புத் தெய்வம் இவனது பேதைமைக்கு இரங்கி யாதும் பேசாதகன்றாள். வேறோர் ஆசை நாயகன் அமைந்திருத்தலினாற்றான் இங்ஙனம் பேசாது போகின்றாள் என இப் பேதை மகன் தனக்குள்ளேயே மனப்பால் குடித்து மிக்க சினத்தோடு ஒரு பக்கத்தில் மறைந் திருந்தான். சிறிது பொழுது கழிந்தபின் அரச குமாரனாகிய உதயன் என்பவன் இயல்பாக அங்கு வந்தான். பதுங்கி யிருந்த இவன் பாம்பெனச் சீறி விரைந்து பாய்ந்து அவனை வெட்டி வீழ்த்தினான். அவ் அரசிளங் குமரன் அலறி வீழ்ந்து உடனே ஆவி நீங்கினான். இப் பாவிமகன் அவளைக் கைக்கொண்டு போகக் கடுகி நெருங்கினான். அப்பொழுது ஓர் தெய்வந்தோன்றி "வெய்யோய்! அவள் கிட்ட நெருங்காதே; உன் மனைவி யல்லள்; மணிமேகலை காண்; பேதை மகனே! நீ தேராமல் தீது செய்தாய் ஆதலால் அரு நரகடைவாய்; கொடியோய்! அகன்று போ" என்று புகன்று நின்றது. இவன் அஞ்சி நீங்கி அலமரலெய்தி இழிபழி யடைந்து கொடிய நரகமே குடியாக் கொண்டு பல பிறவிகளிலும அழி துயரமே மிக்கு ஆயாதாற்றிய தன் தீவினைப் பயனைத் துய்த்து அழுந்திக் கிடந்தான். ஒருமைச் செயலாற்றும் பேதை எழுமையும் தான் புக்கழுந்தும் அளறு என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். இவனது இயல்பையும் செயலையுங் குறித்துக் கூலவாணிகன் சாத்தனார் கூறியுள்ளமையை அடியில் காண்க.

மற்றவள் இருந்த மன்றப் பொதியிலுட்
புற்றடங்கு அரவிற் புக்கொளித் தடங்கினன்,

காஞ்சனன் என்னும் கதிர்வாள் விஞ்சையன்,
ஆங்கவ ளுரைத்த அரசிளங் குமரனும்
கோயில் கழிந்து வாயில் நீங்கி
ஆயிழை யிருந்த அம்பலம் அணைந்து
வேக வெந்தீ நாகங் கிடந்த
போகுயர் புற்றளை புகுவான் போல
ஆகந் தோய்ந்த சாந்தலருறுத்த
ஊழடி யிட்டதன் உள்ளகம் புகுதலும்
ஆங்குமுன் னிருந்த அலர்தார் விஞ்சையன்
ஈங்கிவன் வந்தனன் இவள்பால் என்றே
வெஞ்சின அரவம நஞ்செயி றரும்பத்
தன்பெரு வெகுளியின் எழுந்துபை விரித்தென
இருந்தோன் எழுந்து பெரும்பின் சென்றவன்
சுரும்பறை மணித்தோள் துணியவீசிக
காயசண்டிகையைக் கைக்கொண்டந்தரம்
போகுவல் என்றே அவள்பாற் புகுதலும்
நெடுநிலைக் கந்தின் இடவயின் விளங்கக்
கடவுளெழுதிய பாவையாங் குரைக்கும்
அணுகல்! அணுகல்! விஞ்சைக் காஞ்சன,
மணிமே கலையவள் மறைந்துரு வெய்தினள்
காயசண்டிகை தன கடும்பசி நீங்கி
வானம்போ வுழி வந்தது கேளாய்
அந்தரஞ் செலவோர் அந்தரி யிருந்த
விந்த மால்வரை மீமிசை போகார்;
போவா ருளரெனிற் பொங்கிய சினத்தள்
சாயையின் வாங்கித் தன வயிற்றிடூஉம்
விந்தங் காக்கும் விந்தா கடிகை
அம்மலை மிசைப்போய் அவள் வயிறடங்கினள்
கைம்மை கொள்ளேல் காஞ்சன! இது கேள்
வெவ்வினை செய்தாய் விஞ்சைக் காஞ்சன!
அவ்வினை நின்னையும் அகலா தாங்குறும்
என்றிவை தெய்வங் கூறலும் எழுந்து

கன்றிய நெஞ்சிற் கடுவினை உருத்தெழ
விஞ்சையன் போயினன். (மணிமேகலை.)

மேற்குறித்த சரிதம் இதனைகண்ணும் விளங்கி நிற்றல் காண்க. மிக்க இளம்பருவமான சிறிது பொழுதுள்ளே தான் செய்த தீவினையால் இம்மையிலேயே மனைவி முதலிய நலங்கள் யாவும் ஒருங்கே யிழந்து பின்பு நரகிலழுந்திப் பிறவிகள் தோறும் இப் பேதைக் காஞ்சனன் பேதுற்று நின்றமையும் பிறவும் இதில் வரலாகும்.

நீதிபல கூறி நெறிமுறையே யுய்த்தாலும்
பேதையர்தாம் மெய்யறிந்து பேணுவரோ—தீது
புரிவதையே பேணிப் புகுந்து நரகம்
வருவதையே செய்வார் மகிழ்ந்து.

என்றும் பழிதுயர்கள் எய்த ஒருகணத்தே
நின்றுஞற்றும் பேதை நிலை.

நரகிற் கேதுவான தீமையை மூடர் மிக விரைவிற் செய்து கொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

836 மண்டிவினை மேற்சென்ற மாதங்கன் பின்பழிமீக்
கொண்டிழிந்தான் என்னே குமரேசா—கொண்டவினை
பொய்படும் ஒன்றோ புனைபூணும் கையறியாப்
பேதை வினைமேற் கொளின். (சு)

இ—ள்.

குமரேசா! வினைமேற்கொண்டு சென்ற மாதங்கன் ஒரு பயனும் காணாது என் இழிவுற்றான் எனின், கை அறியாப்பேதை வினைமேல் கொளின் பொய்படும்; ஒன்றோ, புனை பூணும் என்க.

இது, மூடர் செயல்வகை யறியாது கெடுவர் என்கின்றது.

புனை = விலங்கு; புணைக்கு தளைதற்குரியது என்னும் ஏது வான் வந்தது. கை என்பது ஒழுக்கஞ் செயல்களை யுணர்த்திவரும்.

கைபற்பாப் பேதை என்றது செயல் முறை யறியாத மூடன் என்றவாறு.

வினை, பொய்படும்; பேதை, புனை பூணும் என்க. இனி, பொய் படுதலைப் பேதைக்கே ஏற்றி அவன் வினையை மேற்கொண்டால் 'இந்த மடையன் யாதும் செய்யமாட்டான்' என அவனை யாரும் நயபார் எனினுமாம். வினை = தொழில், கருமம்.

மேல், ஈரகினுக்கேதுவாய தீயவினைகளைப் பேதையாயினன் விரைந்து செய்துகொள்வன் என்றார்; இதில், நல்ல காரியம் யாதும் அவனால் செய்யமுடியாதென்கின்றார்.

செயல்வகை யறியாத பேதையானவன் ஒரு காரியத்தைச் செய்வதாக மேற்கொள்வனாயின் அது முடியாது பழுதுபடும்: அவனும் விலங்கு பூண்டு கலங்கி நிற்பன் என்பதாம்.

துரோபதையைக் கவர்ந்து வருகின்றேன் என்று விரைந்து போன சயிந்தவன் அங்கு ஐவர் கைச் சிக்கிக் கைவிலங்கிட்டுக் கழுதைமேல் வைக்கப்பட்டு அலமந்தது போல் பேதையர் நல்வினை ஒருவி அல்வினை செய்யப் புகினும அதனையும் வழியோடு முடிக்கமாட்டாமல் நின்று அகப்பட்டு விழிப்பர் என்றவாறு.

மூடர் ஒரு தொழிலையாவது வகையோடுசெய்ய அறியாமல் உழப்பெருதுபோல் உழந்து திரிந்து ஒரு காசுங்கூட ஈட்டமாட்டாத கடையராவாதலால் அம் மடையரை நடையுடையரென்று நயபி நட்பாக நெருங்கலாகாதென்பது கருத்து.

மூடன் ஒரு காரியத்தைச் செய்யத் தொடங்கின் அதனையும் பாழாக்கித் தன்னையும் கெடுத்துக்கொள்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மாதங்கன்பால் உணரப்படும்.

## கதை.

மாதங்கன் என்பவன் வங்கநாட்டிலே சகளாபுரி என்னும் நகரிலிருந்தவன். மருத்துவர் குலத்தினன். பேராசையோடு வீண் பெருமையுமுடையவன். தன்னைக் குறித்தும் தன் மரபினைக் குறித்தும் மிகப் பெருமை பாராட்டி எவரிடமும் எப்பொழுதும் புகழ்ந்து சொல்லும் புல்லிய இயல்பினன். வெயில்படா

வண்ணம நிழலிலிருந்து தொழில்செய்து தம்மவரோ இனிது வாழ்பவரொன்றும், பிறரெல்லாரும் வெயிலிலும் காற்றிலும் நின்று மிக வருந்தி யுழைப்பவரொன்றும் கபகதுரைத்து இகழ்ந்து நின்று வன். குடி மக்கள் என்றும், சிரஞ்சீவிகள் என்றும் தமக்குப் பெயர் அமைந்துள்ளன என்று அவற்றைக் குறித்து வியந்து பேசுவன். அம்பட்டன் என்றால் அழகிய பட்டத்தை யுடையவன் என்று தம்பட்டங்கொள்வதுபோல் தானே தருக்கிக் கொள்வான். வெறும் பட்டங்களை நினைந்து சிலர் பெருமிதமடைவது போல் இவன் உறும்பட்டத்தை உன்னி உளங் களித்திருந்தான். நாவிதன் என்றால் இனிய சொல்லினன் என்று பொருள் கூறிப் பொங்குவான். மருத்துவம் இல்லையானால் குருத்துவம் ஏது? என்றுகிருத்துவம் பேசுவான். பிறர் படித்துப் பரிந்துகொள்ளும் பண்டிதப் பட்டம், படியாமலிருப்பினும் தமக்குப் பிறப்பிலேயே அமைந்துளளதென்று சிறப்புறச் சொல்வன்.

ஆரார் தலைவணங்கார் ஆரார்தம் கையெடார்
ஆரார்தான் சத்திரத்தில் ஆறாதார்—சீராரும்
தென்புலியூர் மேவும் சிவனருள்சேர் அம்பட்டத்
தம்பிபுகான் வாசலிலே தான், என்று எங்களில் ஒருவனைக்

குறித்து முன்பு கம்பர் பாடியுள்ளாரே யென அடிக்கடி இதனைப் படித்துக் காட்டுவன். இக் கலகெடுப்பான அக் கையெடுப்பின் மெய் யெடுப்பைக் காணாது களித்துக் கொள்வான். இங்ஙனம் இனந்தெரியாமல் மனம்போனபடியெல்லாம் பிதற்றும் பேதையா யிருப்பினும் தன் வேலையில் இவன் மிகத் திறமையுடையவன். அத் தொழிலில் வரும் வரவு தன் பெருமைக்குக் காணாதென்று கருதி நிறைகப் பேராசை கொண்டிருந்தான். தலைகால் தெரியாது இங்ஙனம் இவன் இருந்துவருங்கால் தன்பால் வேலைசெய்து வந்த செட்டி மகனொருவன் ஓர் சித்தன் அருளால் மிக்க பொற் றிரள் பெற்றான். நல்வினைப் பயனால் தன் கனவில் தோன்றிய படி செய்து அவன் அதனை அடைந்தான். அஃதாவது சின்னாளில் உன் முன்தோன்றும் மூன்று பரதேசிகளைத் தடிகொண் டடித்தால் உடனே பொற்குவியலாய்ப் பொங்கி நிற்பர் என்று

கனவுகண்டபடியே செய்து அவன் கைவரப் பெற்றான். இப் பேதை மகன் யாதும் அறியாமல் அவன்போலவே பொருள் பெறவேண்டுமென்று போரவனோடு சென்றான். இவ்வாறு வினைமேற்கொண்டு பல விடங்களிலும் திரிந்து முடிவில் ஓரிடத்தில் முண்டிதராயிருந்த மூவரைக் கண்டான். பதுங்கியிருந்து அமயம் பார்த்து விரைந்து பாய்ந்து அந்த அறவியர் மூவரும் உயிர் துடித்து மாயும்படி ஓங்கி யடித்தான். உடனே காவலாளர் கடுகிவந்து இம் மூடமூடனை இறுகப் பிணித்து விலங்கிட்டுக் கொண்டுபோய் விசாரித்து நிகழ்ந்தபழிச் செயலை நினைந்து சினந்து நெடிய கொடிய கழுவிலேற்றினர். பதைத்துப் பழியோடு இவன் அழிவுறலானான். பொருள்பெற விரும்பி வினைமேற்கொண்டு விரைந்துபோய் வகை தெரியாமற்செய்து பழியும் பாவமும் அடைந்தானே என்று அனைவரும் இவ் அறிவிலியைப் பழித்து வைதார். கையறியாப் பேதை வினைமேற்கொளின் பொய்படும் ஒன்றோ? புனையும் பூணும் என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான். இவன் சரிதம் பஞ்சதந்திரத்தும் குறிக்கப்பட்டுள்ளது. அடியில் வருதல் காண்க.

கண்டவன் நாவிதன்றான் கருதி அவ்வாறுதானும்
முண்டிதனுகி வந்த மூவரைத் தடியால் மோத
விண்டுயிர் இறந்தார்; அந்த வேளையில் காவலாளர்
கண்டனர் அவனை ஐயோ கழுவினிற் போட்டு விட்டார்.
(பஞ்சதந்திரம்.)

இதனாலும் மேற்குறித்த வுண்மை இனிது புலனும்.

மைதீர் பசும்பொன்மேல் மாண்ட மணியழுத்திச்
செய்த தெனினும் செருப்புத்தன் காற்கேயாம்
எய்திய செல்வத்த ராயினுங் கீழ்களைச்
செய்தொழிலாற காணப் படும். (நாலடியார்.)

மூடன் தொழில்செய்ய மூண்டால் படுபழியும்
கேடுமே கூடி விடும்.

பேதையர் யாதொரு தொழிலும் செய்ய அறியார் என்பது இதனால் கூறப்பட்டது.

837 தண்டாத் திருவடைந்தும் தண்டன் தமர்பசிநோய்
கொண்டுநின்றா ரென்னை குமரேசா—அண்டாத
ஏதிலார் ஆரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வம் உற்றக் கடை. (எ)

இ—ள்.

குமரேசா! தண்டன் பெருந்திருவடைந்திருந்தும் அவனுடைய உறவினர் ஏன் நெடும்பசியடைந்திருந்தார் எனின், பேதை பெருஞ்செல்வம் உற்றக்கடை ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர் என்க.

இது, பேதையாயினான் செல்வமெய்தினும் நல்லது செய்யான் என்கின்றது.

ஏதிலார் = அயலார். தமர் = தம்மவர்; சுற்றத்தார் என்றவாறு. ஆர = நிரம்ப, பொருந்த. கையாரவுண்டான்; வாயாரவாழ்த்தினான், என்புழி இது நின்றுணர்த்துதல் காண்க.

ஏதிலார் ஆர்தலும், தமர் பசித்தலும் பேதை செல்வம் உற்றுழி உளவாம் என்ற இதனால் நிலை திரிந்து தலைதடுமாறி நிற்கும் அவனது இழிதகைமை புலனும்.

பேதை கொண்ட என்னாது உற்றக்கடை என்றதன் கருத்து என்னை? எனின் தெய்வகதியாய்த் தானாக வந்து செல்வம் இயைந்து நின்றதலன்றி அவன் அதனை முயன்று செய்துகொள்ளமுடியாதென்பதை உணர்ந்து கொள்ள வேண்டி என்க.

மேல், பேதையர் இடவகை தெரியாமல் காரியங்களைக் கெடுத்து விடுவர் என்றார்; இதில், அவர் செல்வமெய்தினும் இனந்தெரிந்து நல்லன செய்யார் என்கின்றார்.

பேதையானவன் பெருஞ் செல்வத்தை அடைவனாயின் ஊரார் வயிறார உண்டு மகிழ்வர்; உற்றார் பசித்து வருந்துவா எனபதாம்.

உணவினை வயிறார உண்டும், ஆடை பொருள் முதலியன ஆசைதீரக் கொண்டும் அயலார் மகிழ்வர் என்பார் ஏதிலார் ஆர என்றார்.

தமர் பசிப்பர் என்றது உணவுங்கூட உண்ணப்பெறாமல் உறவினர் கொதிப்பர் என்றவாறு.

சுற்றத்தாற் சுற்றப் படஒழுகல் செல்வந்தான் பெற்றத்தாற் பெற்ற பயன் என்றபடி ஒருவன் செல்வம் பெற்றால் தன் சுற்றத்தாரைப் பேணித் தன்னை அவர் சூழ்ந்து மகிழும்படி வாழ்ந்து வரவேண்டும்; அதுவே அவன் பெற்ற செல்வத்திற்குப் பயனும்; அங்ஙனம் இன்றி அவரைக் கொதிக்கவிட்டுத் தனக்கு யாதொரு தொடர்பும் இல்லாத அயலாரை ஆதரித்தல் அறிவிலிகள் செயலாகுமாதலால் அவற்றை யீண்டு எடுத்துக்காட்டினார்.

அறிவுடையார் செல்வம்பெற்றால் செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல் என்றபடி தம் தமரைப் பேணி உயர்புகழ் கொள்வர்; அறிவிலார் பெற்றால் அவரை ஆதரியாமல் அகலவிட்டு இழிபழி யெய்துவர் என்க.

தன் தமராகிய தருமனாதியர் பசித்துழலும்படி அவரை வனத்துக்கு ஓட்டிவிட்டுப் பக்கத்தாரைப் பாராட்டிப் "புறஞ் சுவர் கோலஞ் செய்தான்" என்றபடி நின்ற துரியோதனன் போலப் பேதையர் செல்வமெய்தினால் நீதி மாறித் தீமை செய்வர் என்றவாறு.

பழிமுதல் நாணார் செய்வன தவிர்வ பார்த்திடார் குடிப்பிறப் பொழுக்கம்
எழில்வளர் கல்வியாதிகள் பேணார் எவரையு முறிக்குஞ் சொற்செயலார்
கழிமகிழ் வுடையார் கெடுதிகொண் டாக்கம் கைவிடுவார் செல்வமுறினும்
கொழிபயமனைத்தார் பிறர்க்கலாற் றமர்க்குக் கொடார் இவர் பேதைய
ரொழிக. என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

பேதை பெருஞ்செல்வம் பெறினும் சுற்றம் பேணாது குற்றஞ்சூழ்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தண்டன்பால் உணரப்படும்.

## கதை.

தண்டன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னாக சிந்துநாட்டிலிருந்த ஒரு குறுநில மன்னன். கணிதவித்தையிலும் ஓவியப்புலமையிலும் இவன் மிக வல்லவன்; ஆயினும் நல்ல அறிவு இல்லாதவன். பெண்கள்பால் பெருமோகியாய்

உறவுதொன்றையுங் கருதாது வரைமுறையின்றி மருவிச்களித்தான். தன் முன்னோர் காலத்தில் செழித்திருந்த அரசு இவன் கைக்கொண்டபின் பலவகையிலும் நிலைகுலைந்து நின்றது. பழமையோடு உரிமை பூண்ட நந்த பணிவிடையாளர்களையும், உறவின் முறையாரையும் மறுகியழும்படி வறுமையுறவிட்டுத் தன் கருத்துக் கிசைந்த சிற்றினத்தாரையே இவன் கருதிக்கொண்டான். அரசு முறையை யாதும் பாராமல் மதனதிலகி என்னும் வேசை முதலிய ஆசை நாயகிகளிடமே அன்புசெலுத்தி இன்ப நுகர்ச்சியிலாழ்ந்திருந்தான்.

"எண்ணுவது மதன கலை; எழுதுவது முலைத் தொய்யில்,
உண்ணுவது வாயமுதம்; உறங்குவது தனதட மேற்
பண்ணுசெப மந்திரமும் பாவை செவி மந்திரமே;
தண்ணளியான் குளிக்குநீர் சந்தமுலைப் பனிநீரே.

கைப்பொருளெலாங்கொடுத்துக் கல்வி கேள்விகள் முதலா
மெய்ப் பொருளைக் கைவிடுத்து வேசை முலைப் போக மெனும்
பொய்ப் பொருளே கைக்கொண்டான் பொதுமாதா மயல் பூண்டால்
எப்பொருளுந் தெரிந்தாரும் தெளிவரோ இருநிலத்தில்."

என்றபடியே இவன் நின்று வந்தான். இவனுடைய மந்திரி பெயர் சிந்துமேதன். அவனும் இவன் மனம் போலவே இசைந்தொழுகும் மதியிலி. குடிகளெல்லாரும் வெறுத்திகழ்ந்தாலும் அதனைப் பொருட்படுத்தாமல் தீயவழியிலேயே திரிந்து நின்ற இவன் அம் மேதன் முதலிய பேதையர் சிலருடன் கூடி வேட்டைக்குப்போனான். நெடுநேரம் கழிந்தபின் நீர்வேட்கை கொண்டு அவ் வனத்தில் தோன்றிய ஓர் தவச்சாலையையடைந்தான். அங்குத் தங்கியிருந்த பார்க்கவ முனிவருடைய பத்தினி அரசனென்று தெரிந்து மிக உபசரித்துப் பருக நீர் தந்தாள். அவளது தனிமையையும் அழகையும் கண்டு பெருமையல் கொண்டு கருத்தறியாமலே துணிந்து போய் அவள் கையைப் பிடித்தான். உடனே அவள் உள்ளங் குலைந்து கையை உதறி விட்டு வெய்யோன் என விரைந்து விலகிப் போயினாள். அதுபொழுது வெளியே போயிருந்த முனிவர் வந்து நிகழ்ந்ததையறிந்து நெஞ்சங் கொதித்து இவனை அலியாகவும், தடுக்காமல் அடுத்து நின்ற

அவ் அமைச்சனை வேட்டைகவும் சபித்தார். அதன் பின் நகரினை யடைந்து உறுபோகங்கள் ஒன்றுமின்றிப் பெருநாண் கொண்டு உளமடங்கியிருந்தான். மற்றவர்களெல்லாம் துய்த்து மகிழ உற்றவர்க்கொன்றும் இவன் உதவாதிருந்தும் இவன் இழிந்து வந்த பொழுது உளமிரங்கி அவ் உறவினர் மிக வருந்தி நின்றார். பெரும் பொருளை யெய்தியிருந்தும் உறவினர்க்கு ஒரு பயனையும் உதவாது இவ் அறிவிலி பழி வளர்த்து இவ்வாறு இளிவுறலானனை யென்று அனைவரும் பழி கூற இவன் இழிவுற்றிருந்தான். 'ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர் பேதை பெருஞ்செல்வம் உற்றக்கடை' என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

> நன்றறியார் தீதை நயந்துகொள்வார் நல்லவர்பாற்
> சென்றறியார் சேர்ந்தொன்றும் செய்கலார்—நின்ற
> படத்தெக்கு போன்றென்றும் மூடர் தமர்க்குப்
> படத்தங்கார் யாதும் பயன்.
>
> உற்றார் மறுகியழ ஊர்மகிழப் பேதைசெல்வம்
> பெற்றால் பெருகும் பிழை.

மூடர் திருவெய்தினும் உறவினர்க்குதவார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

838 நேர்ந்த திருவை நினைந்துவந்து ஆறகன்மீக
கூர்ந்திழிந்தான் ஏனோ குமரேச—சார்ந்துநின்ற
மையலொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின். (அ)

இ—ள்.

குமரேசா! செல்வமடைந்தவுடனே அறகன் ஏன் செருக்கி அழிந்தான் எனின், பேதை தன் கையொன்று உடைமை பெறின் மையல் ஒருவன் களித்தற்று என்க.

இது, பேதை செல்வம் பெற்றால் பெருங்களி கொள்ளும் என்கின்றது.

மையல் ஒருவன் = மையலையுடைய ஒருவன்; பித்தன் என்றபடி. மையல் = பைத்தியம், உன்மத்தம், மோகம், மயக்கம்.

"மையலவர்போல் மனம் பிறந்த வகை சொன்னார்" எனச் சிந்தாமணியிலும், "மையல் உற்ற மகன்பின் வருந்தி" என மணிமேகலையிலும், "மையல் ஒழிக்க தையல் தான்" எனப் பெருங்கதையிலும், "மையலா லறிவு நீக்கி" என இராமாயணத்திலும் இது நின்றுணர்த்துதல் காண்க.

கை ஒன்று உடைமை பெறின் = கையகத்தே ஒருபொருளையுடையனாகப்பெற்றால். பெறின் என்றது அப்பேதை கையில் ஒன்று உறுதலின் அருமைதோன்ற நின்றது.

மேல், மூடன் செல்வம் பெற்றால் சுற்றம் பேணாமல் குற்றஞ் செய்வன் என்றார்; இதில், அவ்வுடைமையால் அவன் உள்ளங் களித்துத் துள்ளி இழிவன் என்கின்றார்.

பேதையானவன் தன் கையில் ஒரு பொருள் உடையனாகப் பெறின் பித்துகொண்டவன் மேலும் கள்ளுணடு நின்றாற்போல் பெரிதும் களிபபுற்று மயங்குவன் என்பதாம.

அறிவிலிகளுக்குப் பொருள் கிடைத்தால் அவர் எப்படியிருப்பரென்று அடிகளெவ்வ அவர்க்கோர் ஒப்புமைகாட்டி உணர்த்தியுள்ளதுபோல் இஃது உணர நின்றது.

மையலும், மதுக்களிப்பும் அறிவை ஒருவழிப்படாதபடி நிலைகுலைத்து அலமரச்செய்யுமாதலால அவற்றை யெடுத்துக்காட்டிச் செல்வம் வந்தபொழுது பேதை நிற்கும்நிலைமை இவ்வாறு விளக்கியருளினார். மையல், பேதைக்கும; களிப்பு, அவன பொருள் பெற்றபோதுறும் பெற்றிக்கும ஒப்புக் காண்க.

இயல்பாகவே பைத்தியம் பிடித்தவன் மேலும் கொஞ்சம் கள்ளைக்குடித்தால் அவன் எவ்வாறு நிலைதடுமாறி உழலுவனோ அவ்வாறே பேதைகையில் சிறிது பொருளுடையனுபின உடனே தலைகால் தெரியாமல் செருக்கிககளித்துப் பல தீமைகளை விளைத்து விடுவன் என்றவாறு. அரசு கைவந்தபோது கஞ்சன் செய்தது போல் அறிவிலார் பொருள் கண்டபோது நஞ்சனைய வெஞ் செயல்களை நாடாது செய்வர் என்க.

தம் கையில் கொஞ்சம் பொருள் கிடைத்தாலும "முந்திரிமேல் காணி மிகுமாகில் கீழ்தன்னை இந்திரனா" எண்ணிவிடும் என்

றபடி. மூடர் மிகமிஞ்சிக் களிப்பர் என்பது விளங்க ஒன்றுடைமை பெறின் என எளிமை தோன்ற உரைத்தார்.

அருள் அறங்களை வளர்த்துப் புகழ்புண்ணியங்களைப் பயக்க வல்ல செல்வமும் பேதையர் கைப்பட்டால் பழிபாவங்களை விளைத்து அவரை அது கெடுத்துவிடும் என்க. "அறிவிலாத அற்பரானவர்க்குச் செல்வம் அல்லது பகை வேறுண்டோ?" என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

பொருளுடைமை செருக்கை மிகுக்குமாதலால் அது மதுக் களிப்போடு மதிக்க நின்றது. வடநூலார் இதனைத் தநமதம் என்பர்.

கழிபெருஞ் செல்வக் கள்ளாட்டயர்ந்து
மிக்க நல்லறம் விரும்பாது வாழும்
மக்களிற் சிறந்த மடவோருண்டோ. என்றது மணிமேகலை.

ஏர்பெறும் இருநிதிச் செருக்கை எய்திடிற்
றேர் செவி புடையரும் செவிடராகுவர்
ஓர்தரும் உரைவலோர் ஊமராகுவர்
கூர்விழி புடையரும குருடராவரே. (காசிகண்டம்)

விழிதெரிந் திருக்கவுங் குருடு மேவுவர்
மொழிதெரிந் திருக்கவும் மூகராகுவர்
பொழி மது வன்றியும் மயக்கம் பூணுவர்
அழிதரு காலமாம் அரசர் வண்ணமே. (1)

வாலிபம் பெருநிலக்கிழமை மாண்பொருள்
மேலறி வின்மையில் ஒன்று மேவினும்
சீலமுங் குடிமையுஞ் சிதையுமால இவை
நாலுமுள்ளவர் செயல் நவில வேண்டுமோ (2) (செவ்வந்திப் புராணம்)

அறிவிலார் செல்வமடைந்தால் களிமீக்கூர்ந்து பழியாக்கி, இழிவர் என இவை உணர்த்தி நிற்றல் காண்க.

அறியாமை யோடிளமை கூடுவதாம் ஆங்கே
செறியப் படுவதாம் செல்வம்—சிறிய
பிறைபெற்ற வாணுதலாய் தானே ஆடும்பேய்
பறைபெற்றால ஆடாதோ பாய்ந்து. (பழமொழி)

தானாகவே களிமிகுத்தாடுகின்ற பேய் பறை அடிப்புங் கேட்டால் எப்படிப் பாய்ந்து ஆடுமோ? அதுபோல் இயல்பாகவே மருளெய்தியுள்ள பேதை பொருளெய்தினால் நிலைதெரியாமல் தலைகடுமாறுவன் என இஃதுணர்த்தி நிற்கும் அழகை உற்று நோக்குக.

பேதையர்க்குச் செல்வம் கிடைத்தால் பெருங் களிப்புக் கொண்டு கொடுங் கேடு விளைப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துற்கன்பால் உணரப்படும்.

கதை.

துற்கன் என்பவன் உருவென்னும் ஓர் அசுர தலத் தலைவனுடைய புதல்வன். மிக்க மெய்வலியுடையவன். இவன் சிறந்த திருவினையடைந்திருந்தும் நீதி நெறிகள் யாதும் அறியாமல் தீய வழிகளில் புகுந்து மாயவினைகள் பலசெய்து மன்னுயிர்க்கெல்லாம் இன்னல்விளைத்தான். செல்வக் களிப்பால் இவன் செய்த அல்லல்கள் அளவிடலரியன.

அண்ணலந் திருவிடை யழுந்தி யாரையும்
எண்ணலன்; செந்நெறி யியற்ற ஓர் கலன்;
கண்ணிலன்; மதியிலன்; களிப்பினோர் மகன்
மண்ணிடை விரைவொடு வழிக்கொண்டானென. (௧௩௪)

என்றபடியே இவன் நின்று திரிந்து அனைவருக்கும் இடர்விளைத்து அமரர் பலரைப் பற்றிச் சிறையிடை வைத்தான். இவனது கொடுமையை ஆற்றாது பரமனிடம் போய் அமரர்கோன் கூறி முறையிட்டுத் தன் தமரினைக் காத்தருளும்படி தாழ்ந்து வேண்டினான். அவ் இறைவன் அருகேயிருந்த உமாதேவியை நோக்கிப் பேரருளுடைய நீயே இத்துயரினை நீக்கியருளவேண்டுமென்று வினோதமாக விளம்பினார். உடனே அம்மை தன் சத்திகளுள் காளராத்திரி என்பவளை அழைத்துச் சிறையில் வைத்துள்ள தேவர்களை விரைவில் விட்டுவிடும்படி உரைசெய்துவா என இவனிடம் தூதாக விடுத்தாள். அவ்வாறே அவள் வந்துரைத்தாள். இவ் அறிவிலி அவ்வுரையினையும் உறுதியையும் சிறிதும் கருதா

மல் அவளது பேரழகை நோக்கிப் பெருமோகங்கொண்டு தனக்கு உரிமையாக்க எண்ணி காதற்குறிப்போடு களிந்துரையாடினான். இவனது மடமையையும் களியாட்டையும் கண்டு அவள் கடுத்து மொழிந்தாள். உடனே அவளைப் பிடித்து வரும்படி இவன் அடுத்து நின்ற அசுரரை ஏவினான். நெருங்கிவந்த அனைவரையும் அவள் நீறுசெய்துவிட்டுச் சீறியெழுந்துபோய்த் தேவியையடைந்து இவனது செய்தியைச் செப்பினாள். அவ் அன்னை புன்னகை செய்து இவன் முன்னர்த் தோன்றி இன்னருளோடு இதம்பல கூறி அமரரை விடும்படி அளிசெய்து நின்றாள். இப் பழிமகன் சிறிதும் கேளாமல் அம் மூழுமுதல்வி முன் விழிசிவந்து வெகுண்டு வெம்போர் தொடங்கினான். அதன்பின் இறைவி சினந்து விழித்தாள். உடனே இவன் இறந்து விழுந்தான். பெருஞ் செல்வத்தையடைந்தும் தன் பேதைமையால் ஆவதை யறியாமல் களிமிக்கொண்டு இழிதுயரியற்றி நிலைதிரிந்து தலைதடுமாறி அழிந்தொழிந்ததை யறிந்து அமரரெல்லோரும் மகிழ்ந்திருந்தார். பேதை தன் கையொன்றுடைமை பெறின் மையலும் மதுக்களிப்புமுடையான் போல் செய்வன தவிர்வன தெரியாமல் செருக்கி நடந்து சீரழிந்து விளிவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. அறியாமையின் மிகுதியால் இளமையிலேயே இவன் அழிவுறலானதைக் குறித்துப் புலவர் பலர் பாடியுள்ளார். விரிவைக்காசிகாண்டத்தில் காண்க.

> பேதையர் செல்வம் பெற்றால் பெருங்களி கொண்டு நன்று
> தீதென வொன்றுந் தேரார்; தீமையே கன்றி நிற்பார்;
> பாதக மனைத்து நாடிப் பழிமிகச் செய்வார்; நல்லோர்
> ஓதினும் உணரார் நீதி ஒழிவையே உவந்து மாள்வார்.

> பித்தோடு கள்ளுண்ட பேய்க்குரங்கு போற்பொருள்கை
> யுற்றதேல் பேதை யுறும்.

பேதையர் செல்வம் பெற்றால் மிகத் தீது செய்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

839 பேணிநின்ற நுச்சிலன் பேதனிவர் பின்பிரிவிற்
கோணவில்லை என்னே குமரேசா—மாணப்
பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில். (கூ)

இ—ள்.

குமரேசா! மிக்க உரிமையாய்க் கூடிநின்ற நுச்சிலனும பேதனும் பின்பு பிரிந்து போனபோது ஏன் வருந்தவில்லை எனின் பிரிவின் கண் பீழை தருவது ஒன்று இல்; ஆதலால் பேதையார் கேண்மை பெரிது இனிது என்க.

இது, பேதையர் நட்பின் பெற்றி கூறுகின்றது.

கோணவில்லை என்றது பிரிந்தபோது அவர் யாதும் வருந்தாமல் அகன்று போனமை கருதி.

பெரிது இனிது என்றது மிகவும் நல்லது என்றவாறு. பேதையர் பிரிவில் சிறிதும் இன்னுமை தோன்றுது என்பது தோன்ற இங்ஙனம் அடைபுணர்த்துணர்த்தினுர்.

பீழை = துன்பம். "பீழை செய்து பெற்றனன்" எனச் சிந்தாமணியில் இது நின்றுணர்த்துதல் காண்க. "முற்பயக்கும் சின்னீர இன்பத்தின் முற்றிழாய் பிற்பயக்கும் பீழை பெரிது" எனபதுங் காண்க.

"பேயோடு பழகுறினும் பிரிவதரிது" என்றபடி உணர்வு சிறிதிருந்தாலும் கேண்மையாய்க் கூடி நின்றவர் பிரிய நேர்ந்தால் பெரிதும் வருந்துவர்; அங்ஙனம் வருந்துவதற்குரிய அது, பேதையாமாட்டு யாதும் செய்யாது என்பார் "தருவது ஒன்று இல்" என்றுர். இதனுல் அவரது உறவின் புன்மை உணராகும். பிரிவின்கண் பீழையுறுவது பேதையாகரு இல்லை என்றதனுல் மேதையர்க்கு அஃது உண்டு என்பதாயிற்று "உள்ளப்பிரிதல் புலவர் தொழில்" என மேலுரைத்துள்ளதும் ஈண்டு உள்ளத் தக்கது.

மேல், செல்வமெய்தினுல் பேதையர் நிலைதெரியாமல் தலை தடுமாறுவர் என்றுர்; இதில், அவரது உறவின் இயல்பினை புணர்த்துகின்றுர்.

பின்பு பிரிந்தவிடத்துத் துன்பம் ஒன்றுங் கருவதில்லை ஆகலான் பேதையர் நட்பு மிக இனிதாம் என்பதாம்.

சிறியார் உறவு நாள்தோறும் தேய்ந்து வரும் ஆகலான் அது பிரிவில் பீழை தாராதென்றார். "மதிப்பின்னீர பேதையார் நட்பு" என முன்னுரைத்ததுங் காண்க. "உலகறியத் தீக்கலப்பினும் நில்லா சிலபகலாம் சிற்றினத்தார் கேண்மை" என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது

பேதையார் கேண்மை மிகவும் தீயது ஆகலான் அதனை ஒரீஇ விடல் என முன்னர் உரைத்துவிட்டு ஈண்டு அது "பெரிது இனிது" என்றது மாறுபடாதோ? எனின், மூடர், தமருள்ளேயே நட்பாய்க் கூடிக்கொள்ளலும், பின்பு பகையாய் விரைந்து பிரிந்துபோதலும், அப்போக்கு வரவுகளில் யாதொரு நோக்குமின்றி ஆடுமாடுகள் போல் உழன்று திரிதலுமாகிய அவரது புன்மையை இனிமையாக இதில் உணர்த்துகின்றாராதலால் முன் கூறியவற்றோடு இது மாறுபடாதென்க.

முன்பு மிக உரிமையோடு உறவாய்இணைந்திருந்த கேளையும், பிறரையும் பின்பு பிரிந்தபொழுது சிறிதும் வருந்தாமல் ஒருவரை ஒருவர் கடந்தகன்றதுபோல் அறிவிலிகள் நட்பழிந்து அகன்று போவர் ஆகலால் பேதையர் கேண்மை பிரிவின்கண் பீழை தராதென்க.

அறிவுடையார் கேண்மை பிரிவுற நேரின் மிகவும் இன்னாதாம்; "பகைநட்பாம் காலம் வருங்கால் முகநட்டு அகநட்பு ஒரீஇ விடல்" என்று — "பகைத்தபின் தீர்தலிற் றீப்புருதல் நன்று" என்று அவர் கன்றி நிற்பர்; அறிவிலிகள் அதில் யாதும் வருந்தாமல் வனவிலங்குகள் போல் மனமழிந்துபோவர்; ஆகலால் அவரது கேண்மை பெரிது இனிது என்றார்.

இன்னாதாராய பேதையர் ஒருவகையில் இனியராயுள்ளார் என மிகவியப்பாக அவரது இழிவினை உணர்த்தியிருக்கும் அழகை இதில் ஊன்றி நோக்குக. இது புகழ்வது போன்று பழித்துக் கூறியதென்க. இங்ஙனம் வருவதனை இலேசம் எனவும், வஞ்சப்புகழ்ச்சி எனவும் அணியியல் கூறும்.

புகழ்வது போலப் பழித்திறம் புனைதலும்
பழிப்பது போலப் புகழ் புலப்படுத்தலும்
அவைபுகழென வென் றறைந்தன ருளரே (தண்டியலங்காரம்)

பழிப்பிற் புகழ்ச்சி புகழ்ச்சியிற் பழிப்புப்
புகழ்ச்சியிற் புகழ்ச்சி யெனமுப்பாலாய்ப்
போந்தது வஞ்சப் புகழ்ச்சியாகும். (சந்திராலோகம்)

மூடர் இயல்பினை இங்ஙனம் அணிநயத்தில் வைத்து நகை நலந்தோன்ற உணர்த்தியது அவரது சிறுமையை ஆராய்ந்து கலைத்து வந்த அறிவுக்கு ஓர் இனிமையான ஆறுதல் உண்டாதல் கருதி என்க.

காணுதல் ஒழிக; நல்லார்க் காணின் அங் கவர்பால் நட்புப்
பேணுதல் ஒழிக; பேணிற் பிரிவுறல் ஒழிக; உற்றால்
மாணுயிர் உடம்பில் வாழும் வாழ்க்கை போய் ஒழிக வென்று (லீலை)
ஊணிடும் ஒருதாய் நீத்த பார்ப்பென உளங்குலைந்தார். (பிரபுலிங்க

இது, முன்பு நண்பாய்நின்ற அல்லமதேவர் பின்பு பிரிய நேர்ந்தபொழுது வசவண்ணர் மறுகி நொந்தபடியைக் கருதி வந்தது. நல்லாரைக் காணுதல் ஒழிக என்றது பிரிவின்கண் பீழை தருவதை யெண்ணி என்க. குழந்தையை இழந்தவர் அது இல்லாதிருந்தாலும் நல்லதாமே! என்று சொல்லி ஏங்குதல்போல் இது உள்ளி நொந்ததென்க. கேண்மையின் பான்மையைக் குறித்து மேன்மைபெற விளக்கியிருக்கும் இக்கவியின் அருமை நயங்களை ஆழ்ந்து நோக்குக.

இத்தகைய நட்பின் தன்மை பேதையரிடத்துச் சிறிதும் உண்டாகாதென்றவாறு. எனவே அப்புல்லரை நன்மக்களாக எண்ணி நணுகலாகாதென்பது கருத்து.

பேதையர் முதலில் மிக நட்பாயிருப்பினும் பின்பு விரைந்து பிரிந்து யாதும் வருந்தாது போவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துச்சீலன், பேதன் என்னும் இவர்பால் உணரப்படும்.

## கதை.

துச்சீலன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சிந்துநாட்டிலே குண்டினபுரத்திலிருந்த

வன். வேதியர் மரபினன். இவனுடைய தந்தைபெயர் யஞ்ஞசீலன், தாய்பெயர் புண்ணியவதி. இவன் பருவமெய்தியபின் சதருசி என்னும் ஓர் கன்னியை மணந்து களிப்புற்றிருந்தான். சின்னாளில் இரு முதுதாவரும் பரகதியடைந்தார். பின்பு இவன் ஒரு கதியும் அடையாவகை உளஞ்செருக்கி நின்றான். சிறிது பொருளுடையனாயினும் அறிவிலியாதலால் எதிர்வதொன்றையும் எண்ணாமல் ஒரு தொழிலும் செய்யாமல் உறுதியொன்றுமிலனாய் உளஞ்சென்றபடியே உலக்கித் திரிந்தான். இவனது நடையுடை பாவனைகளைக்கண்டு அனைவரும் இவனை மடையனென்று இகழ்ந்தார். மூடனாயினும் மங்கையர் கூடலில் இவன் மிகப் பாடுபட்டு ஓடினான்.

> "அடிமுறை நடந்து செல்ல அறிவுகண்ணிலனாய் மோகச்
> செடிவழி சுழன்று காமத் திரள்புலி தொடர ஓடி
> கொடியிடைக் கணிகைமாதர் கொங்கைவெற் பிடறி வீழ்ந்து
> கடிதடவாவி தாவிக் கலவியங் கயத்துள் ஆழ்ந்தான்."

என்றபடியே தாழ்ந்திருந்த இவன்பால் பேதன் என்பவன் மிகவும் நண்பனாய்ப் பேணி நின்றான். இருவர் நட்பும் பெருகி நின்றது. மூடரை மூடர் கொண்டாடிய முறைபோல் ஒருவரை ஒருவர் நயந்துட வியந்தும் அவர்தழைக்க நாளும் உவர்களைச் செய்து வந்தார். வருங்கால் தமது அழி செயல்களால இருவர் செல்வமும் ஒழிவுறலாயது. ஆயபின் மேலும் தீயவினைகளைச் செய்தார். அதனால அரச தண்டனை வர ஒருவரையொருவர் குறைகூறி இருவரும் பிரிந்தார். அப்பிரிவின் கண் யாதொரு துன்பமும் அடையாமல் அகன்று போயினர். சின்னாட் கழிந்தபின் மீண்டுங் கூடினார். மறுபடியும் பிரிந்து பின்பு ஒருவழியும் காணாமல் ஒழிந்து நீங்கினர்.

> வான்முறையறியார்; துன்பம் வந்திடின் நொந்துதேய்வார்;
> ஒருவரை ஒருவர் நம்பார்; உள்ளதை புணர்ந்து சொல்லார்;
> உரிமைபோலுறினும தீமையுள்ளுற உவந்து நிற்பார்;
> பிரிவிலேலார் துயரும் எய்தார்; பேதையரியல்பி தம்பா.

என்றவண்ணமே நின்றுழன்று இவர் கன்றி யிழிந்தார. இவரது

பிரிவும், உறவும் சில பறவை விலங்குகளினிடம்போல் மிகவும் இழிவுகொண்டிருந்தன. பேதையார் கேண்மை பிரிவின்கண் பீழை தாராது எனனும் உறுதிமொழிக்கு இவர் உரிமையாய் நின்றார். இத் தச்சிலன் சரிதம் புள்ளிருக்கும் வேளூர்ப் புராணத் திங் கூறப்பட்டுளளது.

பிரிவில் ஒருதுயரும் பேதையர்பின் கொள்ளார்
நரிநாய்போ லாமவர்தம் நட்பு

மூடர் நட்பு நீடிநில்லாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

840 அன்று தருமன் அவையைச் சிசுபாலன்
குன்றவைத்தான் எனனே குமரேசா—நன்றாக்
கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல். (ய)

இ—ள்.

குமரேசா! வீடுமா முதலிய மேலோர்கள் குழுமியிருந்த தருமாது சபை சிசுபாலன் புகுந்ததனால் என் இழிந்தது எனின், சானறோர் குழாத்துப் பேதை புகல், கழாககால் பள்ளியுள் வைத்தற்று என்க.

இது, பேதை புகுந்த இடமும் இழிந்து படும் என்கின்றது.

அன்று என்றது இராச சூயம் செய்த அக்காலத்தில் என்றவாறு. குன்றவைத்தான் என்றது அவையில் குழுமியிருந்த அனைவரும் நிலைகுலைந்து போமாறு கலகம் விளைத்துக கெடுத்தமை கருதி.

கழாக்கால் = கழுவாதகால்; அசுத்தமாவது இழிந்த மல முதலியவற்றை மிதித்துக் கழுவாது வந்தகால் என்க. "கழா அத்தலையர் கருஙகடை நெடுவேல" எனப் புறத்தில் வந்ததுங் காண்க. அளபெடைகள் செய்யுளோசையை நிறைந்து நின்றன.

பள்ளி = அமளி; "பொய்கைப் பள்ளி" என ஐங்குறு நூற்றிலும், "பள்ளிப் பேரறை உள்ளகம் புக்கு" எனப் பெருங்கதையிலும், "எம்பெருமான பள்ளி யெழுந்தருளாயே" எனத்திருவாசகத்தி

ஓர். "பஞ்சணை பாம்பணையாகப் பள்ளிகொள் அஞ்சன வண்ணனை இராமன்" என்பதிலும், பள்ளியறை என வழங்கிலும் இது நின்றுணர்த்துதல் காண்க.

சான்றோர் குழாம் என்றது அறிவால் நிறைந்த பெரியோர் குழுமியிருந்த இடம் என்றவாறு.

மலந்தோய்ந்த காலை மலரணைமேல் வைத்தால் அது எப்படி இகழ்ந்து தள்ளப்படுமோ அப்படியே பேதையர், உயர்ந்தோர் இடம் புகுந்தால் அது முன்பு சிறந்து நின்ற நிலை குலைந்து இழிந்துபடும் என்பார் "பேதைபுகல், கழாக்கால் பள்ளியுள் வைத்தற்று" என்றார்.

மேல், பேதையா கேண்மை கொள்ளலாகாத கீழ்மையர் என்றார்; இதில், அவர் தீண்டவுந் தகாத தீயர் என்கின்றார்.

மேலோர்கள் கூடியிருந்த அவையின்கண் பேதை புகுதல் கழுவாத காலை அமளியின்கண் வைத்தாற்போல மிகவும் இழிவாம் என்பதாம்.

சான்றோரை இதில் மலரணையோடு ஒப்பவைத்தது அறிவு மணமுடையராய்த் தம்மை அடுத்தவர்க்கு இன்பந்தரும் அருமை கருதி.

பேதையரைக் கழாக்காலோடு ஒப்பவைத்தது நினைப்பினும் அருவருக்கத்தக்க அவரது இழிநிலையை நினைந்தென்க.

அறிவமைந்த பெரியோர்கள் உள்ள இடத்தில் அறிவில்லாத பேதை புகுவாராயின் அது புனித வேதியர் மனையில் ஓர் புலைநாய் புகுந்ததுபோல் மிகுந்த துன்பத்தையும் வெறுப்பையும் விளைத்துவிடும் என்பதாயிற்று.

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே; இராஅ
துரைப்பினும் நாய்குரைத் தற்று. என்றது நாலடியார்.

இதில் அறிவிலிகளை நாயோடு ஒப்பவைத்து அவரது இழிவினை விளக்கியிருக்கும் அழகினை நோக்குக. நல்லார் அமர்ந்தி

ருக்கும் அவையுள் பேதை மக்களாகிய புல்லர் புகுதல் அல்ல லாம் என்ற இதனால் அவர்கள் கழி பேரிழிவு தெளியலாகும்.

ஆன்றவிந்த சான்றோருட் பேதை புகல் இன்னு; என்றார் கபிலரும். அடிகளது சொல்லையும் பொருளையும் இது அடியொற் றிவந்திருத்தல் காண்க.

பேதைமைபகற்று என்று ஔவையருளியதும் ஈண்டு அறிய த்தக்கது. இவ் அறியாமையை அகற்றுவழி அது மிக்க சிறு மையை விளைத்துவிடும் ஆகலின் அதனை அகற்றிவிட்டு அறிவு டையராய் அமைந்தொழுக வேண்டும் என்க.

பேதையர் ஏதங்கொண்டு ஊதியம் போகவிடுவர், கையல்ல தன் கண்ணும் காதலைச் செய்வர், நாண முதலிய நலங்களைப் பேணார், ஓதியுணர்ந்தாலும் உளளம் அடங்கார், எழுமையும் நர குறுமாறு ஒருமையிலேயுறுவார், ஒரு தொழிலும செய்ய அறி யார், பழிநிலைகளையே பற்றி நிற்பார் என இதுவரையும் அவர் தம் இழி வியல்புகளை புணர்த்திவந்து இறுதியாக அவர் எண்ண வுந்தகாத ஈனர் அன்று இதில் உறுதிபெற உணர்த்திப் பேதை மையின் புன்மையை அடிகள் இவ்வாறு உணர்த்தியருளினார். பேதைமையானது தன்னையுடையானை மிகவும் தாழ்த்தி விடும் ஆதலால் அதனை ஒழித்து மக்கள் உயர்ந்து கொள்ள வேண்டும் என்பது கருத்து.

சிறந்த பெரியோர்கள் நிறைந்திருந்த சபையில் பேதையான வன் புகுந்தால் அது நிலை குலைந்து இழிந்துபடும என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிசுபாலன்பால் உணரப்படும்.

## கதை.

தருமர் இராசசூயம் என்னும் வேள்வியை இந்திரப்பிரத்தத் தில் செய்யுங்கால் அரசர் வேதியர் முனிவர் முதலிய பலரையும் அங்கு வரவழைத்திருந்தார். பல தேயங்களிலிருந்து சிறந்தவர் பலரும அவ்விழவினைக் காண விழைந்து குழுமினார். வந்தவரெல் லாருக்கும் உண்டியும் உறையுளும் தந்து தகுதவாறு உவந்து உபசரித்து நல்ல ஓரையில் தொடங்கி வேதவிதிப்படி அவ்வேள்

வினை அவர் முடித்தார். காசிபர், பாரத்துவாசர், கண்ணுவர், மைத்திரேயர், கோசிகர், பரசுராமர், கோதமர், வாமதேவர், வியாசர் முதலிய மாதவர்களும்; வீடுமர், துரோணர், விதுரர் முதலிய முதியோர்களும்; மதிமான்களான அரசர்களும், அதி வீரர்களும நிறைந்து நெருங்கியிருந்த அவ் அவையில் முன்னதாக யாருக்கு மரியாதை செய்யவேண்டும் என்பதைக் குறித்துத் தருமர் எண்ணி ஆராய்ந்து இனிது வினவினர். அங்கிருந்த வியாசர் முதலாயினோர் அதற்குக் கண்ணனே தக்கவன் என்று கருதி மொழிந்தார். தருமரும் மகிழ்ந்து அவனுக்கு முதற்பூசனை செய்ய முனைந்தெழுந்தார். அவண் புகுந்திருந்த சிசுபாலன் அது செய்யலாகாதென்று சினந்து தடுத்தான். "முன் மதிப்புப் பெறுதற்கு இப்புன்மதியனுக்கு என் மதிப்புள்ளது?. இடையர் குலத்திற் பிறந்த இம் மடையனுக்கா இங்கு முதன் மரியாதை! நன்று நன்று" என்று கன்றி நகைத்துக் கடுத்து மொழிந்தான். இதனைக் கேட்ட உடனே யாதவ வீரரனைவரும் கொதித்தார். வெற்றிலைக்கும் நீறுக்கும் விபூதிக்கும் கலகமிட்டு எமக்கு முந்தி உமக்கு முந்தி என்று சில தம்பிரான்கள் தலைகளையுடைத்துக் கொள்ளுகின்ற இக்காலத்து நிலையும் இங்கு நினைவுறலாகும். இங்ஙனம் கொதித்த அவரோடு இவன் கொடுஞ் சமர் விளைக்க எழுந்தான். இழிந்த வசைமொழிகள் பல விரைந்து தூற்றினான். இவன் அன்று தூற்றிய சுடுமொழிகளில் சில பாரதப் பாடல்களிலும் காணலாம்.

சொற்றவா நன்று சுகன்திருத்தாதை சூதிகைத் தோன்றிய பொழுதே
பெற்றதாய் காணும பிதாவுமுன் வணங்கப் பேசலா உரையெலாம பேசிக்
கற்றமாயையினால் கன்னியகிருப்பக் காரிருட் காளிந்தி நீந்தி
அற்றைநாளண்ட ரானவர்க்கெல்லாம் அரசனுக்கருமகவானான். (1)

பாடினான் மறுகு பெருநகை விளைப்பப் பாவையர் மனைதொறும் வெண்ணெ
ய்க், காடினான் அவர்கள் முகந்தொறு மெச்சிலாக்கினான கன்றுமுன்னோடே
ஓடினான் ஆவின் பேரிளங்கன்றை யுயிருடன் ஒருதனி விளவிற்
சாடினான் அரவின் முதுகையும் புள்ளின்தாலுவோ டலகையும் பிளந்தான்.

பின்னியகுஞ்சிக் கோவலர்பயந்த பேதையர் பலரையும் களித்த
கன்னியின் மருகனுமோரையின் மருங்குங் கலையெலா நாணிடக் கவர்ந்தே
முன்னிய இன்பச் செருக்கிலே மயங்கி மூரிவிற் காமனுமானான்
அன்னியனல்லன் மற்றிவன்பெருமை யாசரிலாரறியாதார். (3)

என்று இன்னவாறாகப் பல இழிவுரைகளாடி ஒரு வீரமும் இல்லாத ஆட்டிடையனுக்கு இந்த அரச சபையில் என்ன மேன்மை எனத் தன் மனம்போனபடியே மேலும் மேலும இவன் கிளர்ந்து நின்றான். இவனைக் கொன்றொழித்தாலன்றி இனி இந்த நன்றாகாதென்று கண்ணன் கனன்று எழுந்தான்.

எந்நாட்டி லவனிபரும் ஈண்டியவித் தொல்லவையின் இசைத்தசேதி
நன்னாட்டுக கதிபதியா நரபால! நின் மாற்றம் நன்று நன்று
கன்னாட்டும் படியாக இருவோரும் பொருதறிதும் கடிதேயென்று
தன்னாட்டம் மிகச் சிவந்தான் கரிய வடிவினிற் புனைந்த தண்டுழாயோன்.

அதன்பின் கொடும்போர் நிகழ்ந்தது. முடிவில் இவன் மடிவுறலானான். மங்களமாக வேள்வி முடித்து எல்லாரும் மகிழ்ந்து செல்லும்படியிருந்த அந்த நல்ல இடத்தில் இவன் புகுந்து அல்லல் பல செய்து புனிதமான அதை, உதிரவெள்ளம்பெருகி இழிவுறுமாறு இயற்றி அமர்ந்திருந்த ஆன்றோர் அனைவரும் உளங்கலங்கி நிலை குலையுமாறு உளைந்து ஒழிந்தானே என்று அனைவரும் இவனை இழிந்து நின்றார். கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றால் சான்றோர் குழாத்துப் பேதை புகல் என்பதை அன்று இவன் புகுந்துணர்த்தினன்.

இடுகாட்டுள் நன்காடெனவிசைத்து மச்சொல்
இடுகாடே தன்பொருள் என்றுணர்த்தும்; சான்றோர்
வடுவுரையா மென்றுதம்போல் மாண்பின ரென்றாலும்
கெடுவுடைமை காட்டிவிடுங் கீழ். (இன்னிசை).

கற்றாரைக் கைவிட்டு வாழ்தலும்; காமுற்ற
பெட்டாங்கு செய்தொழுகும் பேதையும்;—முட்டின்றி
அல்லவை செய்யும அலவலையும்; இம்மூவர்
நல்லுலகஞ் சேரா தவர். (திரிகடுகம்)

புலைநாய் புனிதரகம் புக்கற்றே பேதை
தலையாயார் தம்முட் புகல்.

பேதையர் மிகுந்த இழிவினர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

பேதையர் கேடான காரியங்களைக் கைக்கொண்டு ஊதிய மானவற்றை ஒழிய விடுவர். ஆகாத பொருளின் கண்ணும் காதலைச் செய்து அவர் அல்லலுறுவர். நாணுமை நாடாமை முதலிய இழிகுணங்களையே தமக்குரிமையாக அவர் தழுவி நிற்பர். கலைகள் பல கற்றாலும் அவர் உளம் அடங்கி ஒழுகார். நரக துன்பத்தையடைந்து பல பிறவிகளிலும் வருந்தி யுழலும்படியான தீமைகளை மூடர் ஒரு பிறவியிலேயே விரைந்து செய்துகொள்வர். அவர் யாதொரு தொழிலையும் வழுவறச்செய்து பொருளீட்ட அறியார். ஒருவேளை விதிவழியால் பொருள் பெற்றால் தமசுற்றத்தார் பசித்து வருந்த அற்றஞ் செய்வார். பேதையர் செல்வமெய்தினால் கள்ளுண்ட பித்தன்போல் தலைகால் தெரியாமல் துள்ளி நிற்பர். அவர் உறவும பிரிவும் மிக விரைவில் ஒழியும். அப்பேதையர் நல்லோரவையுட் புகுந்தால் அதுவும் புல்லிதாம்.

அச-வது பேதைமை முற்றிற்று.

---

# 85-ம் அதிகாரம் புல்லறிவாண்மை.

அஃதாவது புல்லிய அறிவினை ஆளுந்தன்மை. புன்மையாவது அற்பத்தன்மை என்க. தாம் சிற்றறிவினராயிருந்தும் பேரறிவுடையாராக மதித்துச் செருக்கிப் பிழைமீக் கூரக் களித்துத் திரியும் இம் முழுமக்கள் மிக இழிக்கத்தக்கவராதலால் அவ் இயல்பினையும் அவருறவினையும் ஒழிக்கவேண்டும் என்று இதில் உணர்த்துகின்றார். அறியாமையினும் அறிவுடையேம் என்று அகங்கரித்து நிற்கும் இப் பாழறிவு மிகக் கேடு பயக்குமாதலால் இது பேதைமையின்பின் வைக்கப்பட்டது.

841 செல்வமுற்றும் நல்லறிவு சேரமற் சண்டனன்று
கொல்ல நின்றான் என்னே குமரேசா—நல்ல
அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு. (க)

இ—ள்.

குமரேசா! நல்ல அறிவில்லாத சண்டன் மிக்க செல்வ முடையனாயிருந்தும் இழிவாய் ஏன் கொல்ல நின்றான் எனின், இன்மையுள் இன்மை அறிவின்மை; பிறிது இன்மை, இன்மையா உலகு வையாது என்க.

இது, புல்லறிவின் தீமை கூறுகின்றது.

அறிவு சேராமல் என்றது அறிவின் பயனாகிய நல்லொழுக் கங்களைக் கொள்ளாமல் நயந்தபடியே அவன் வியந்து திரிந்தமை கருதி. கொல்ல நின்றான் என்றது புல்லறிவு மிகுதுப் பிறவுயிர் களுக்கு அல்லலிழைத்து அதனால் தான் அழிவுறுமாறு அவன் அமைந்து நின்றமையான் என்க.

இன்மை என்றது வறுமையை; நுகர்ச்சிக்குரியன யாதும் இல்லாமை என்றவாறு.

அதிகாரத்திற்கேற்பப் புல்லறிவு என்னாது அறிவின்மை என அதனைக் குறிசெய்து வைத்தது அப்பாழறிவு இருத்தலினும் இல் லையாதலே நல்லதாதலால் அதற்கு ஓர் இருப்புக்கூற விருப்பமில் லாமையான் என்க.

பிறிது என்றது செல்வத்தை. அறிவினை முதலில் கூறி யிருத்தலால் அதனோடு அடுத்து எண்ணப்படுவதாய இதனைப் பிறிது என்று குறித்தார்.

உலகு வையாது என்றது உலகிலுள்ள மேலோர் அப்பொரு ளில்லாமையை ஓர் இழிவாகக் கருதி இகழார் என்றவாறு.

அறிவின்மையின் இழிவினை உணர்த்தற்குப் பொருளின் மையை இணைத்துக்காட்டியதென்னை யெனின், அது இழிவாக எண்ணப்பட்டிருத்தலால் அதனை எல்லை காட்டி அறிவின்மையின் புன்மையைத் தெளிவாக விளக்கினார் என்க.

அறிவில்லாமை மடமை எனவும், பொருளில்லாமை வறுமை எனவும் படும்; பின்னதினும் முன்னதே மிகவும் இழிவாகக் கரு தத்தக்கதாம் என்றவாறு.

வறுமையுள் வறுமையாவது நல்ல அறிவு இன்மையேயாம்; செல்வம் இன்மையை ஓர் வறுமையாக உயர்ந்தோர் கொள்ளார் என்பதாம்.

அறிவுடையார் எல்லாம் உடையார்; அறிவிலார் என்னுடையரேனும் இலர்; என்பதை இது எதிர் நோக்கி நிற்றல் காண்க.

எவ்வளவு பெருஞ்செல்வத்தை ஒருவன் அடைந்திருந்தாலும் அவன் அறிவில்லாதவனாயின் புகழ் அறங்களைச் செய்து உயர்வடையமாட்டான்; ஆகவே இம்மை மறுமை என்னும் இருமையிலும் மிகச் சிறுமையே அடைந்து நிற்பன் ஆதலால் இன்மையுள் இன்மை அறிவின்மை என்றார்.

தன் கையில் ஒரு பொருளும் இலனாயினும் அறிவுடையவன் குசேல முனிவன் போல் இருமையிலும் நன்மையெய்திய பெருமையடைவன் ஆதலால் பிறிதின்மையை உலகு இன்மையாவையா தென்றார்.

பொருள் இல்லாமையாலாம் எளிமையினும், அறிவின்மையாலாம் மடமை மிகக் கொடிதாம் என்றவாறு.

நுண்ணுணர் வின்மை வறுமை அஃதுடைமை
பண்ணப் பணைத்த பெருஞ் செல்வம் — எண்ணுங்கால்
பெண்ணவாய் ஆணிழந்த பேடி அணியாளோ
கண்ணவாத் தக்க கலம். என்றது நாலடி.

அறிவின்மையே இன்மையுள் இன்மை என அருளி நிற்கும் அடிகள் கருத்தை இது, அடியொற்றி வந்திருத்தல் காண்க. நல்ல அறிவில்லாத மூடன் செல்வமெய்தி நிற்றல் பெண்மை நலம் இலாத பேடி அணி கலன்களை அணிந்து வருதல்போல் இகழ்ச்சிக்கே யிடமாம் என இது உணர்த்தி நிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

பொருளில்லாதவன் என்பதினும் இவன் புல்லறிவாளன் என்று பேசப்படுவது மிகவும் ஈனமாதலால் அவ் இடும்பையை அறவே ஒழித்துவிடவேண்டுமென்பது கருத்து.

நல்ல அறிவில்லாதவன் எவ்வளவு செல்வமுடையனாயினும் அவன் புல்லன் என்றே இழிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சண்டன்பால் உணரப்படும்.

## கதை.

சண்டன் என்பவன் சுந்தன் என்னும் அசுர வீரனுடைய புதல்வன். இவன் மிக்க மெய்வலியுடையவன். அரசகர் அமரர் முதலிய அனைவரும் அஞ்சுமாறு மிஞ்சிய வலியோடு மேவி நின்ற இவன் இயல்பாகவே எய்தியிருந்த பெருஞ் செல்வத்தை நினைந்து மிகு களிகொண்டு உயிர்களுக்கு இடரிழைத்து வந்தான். இவனது கொடுமையைக் கண்டு எல்லாரும் குலை நடுங்கி நின்றார். மடமை மிக்கிருந்தும் தன்னை ஓர் உயர்ந்த அறிவுடையனாக எண்ணி இவன் உளஞ்செருக்கி நின்றான். இவனுடைய தம்பி பெயர் முண்டன். அவனும் மிகக் கொடியவனாதலால் காற்றோடு சேர்ந்த நெருப்புப்போல அவனுடன் கலந்து இவன் கொடுஞ் செயல் புரிந்து கடுந்துயர் விளைத்து வந்தான். வருங்கால் ஒரு நாள் மானதவாகினி என்னும் ஓர் தேவமாதைக்கண்டு பெருங் காதல் கொண்டான். போற்றோடு பெருந் திருவுமுடையவன் என்னைச் சேரவா என்று இவன் செருக்கி அழைத்தான். பேரழகியாகிய அவள் இவ் அறிவிலியை இகழ்ந்துவிட்டு அகன்று சென்றாள். இக்கொடியன் விரைந்து பற்றி அவளை வலிந்து புல்லிய போகநலனை நுகர்ந்து போனான். அவள் வைது பழித்து "என்போல ஒரு பெண்ணால் அழிந்து தொலைவாய்" என்று அழுதுபோயினாள். இங்ஙனமே இம் மூடமகன் பழிமிகச் செய்து பலவகையிலும் பாவங்களை வளர்த்து வந்தான். அறிவுடையாரனை வரையும் வறிதே பழித்து இவன் அகங்கரித்திருந்தான். இவனது கொடுஞ்செயலை நினைந்து முடிவில் இவனைக் கொன்றுவரும் படி உமாதேவியார் காளியை ஏவினார். அவள் கடிந்து வந்த போது இவன் எதிர்த்தமர் புரிந்து இறுதியில் இறந்து தொலைந்தான்.

"மாசிலாத குடிப்பிறப்பு மானங்கீர்த்தி இவைமாய
ஆசைநோயானது பெருக அனங்கசரத்தால் வருந்தி
கூசலின்றிக் குலத்தவரைக் குலைபசச் செய்தார குலத்தோடு
நாசமெய்திப் பழியோடு நாகமுறுவரென வுரைத்தான்".

என்றபடியே இவன் எய்தி நொந்தான். பெருஞ்செல்வமடைந்

திருந்துப. நல்ல அறிவில்லாமையால் யாதொரு நலனையுமடையா மல் இழிவே மிகுந்து இன்னலுற்று இவன் அழிந்துபோனதை யறிந்து அவ்வவரும் உவந்து நின்றார். புல்லறிவாளன் செல்வமுடையனாயினும் அவன் எல்லாராலும் இழிக்கப்படுவான் என்பதை உலகம் அறிய இவன் உணர்த்தி யிழிந்தான். அறிவின்மை இன்மையுள் இன்மை; பிறிதின்மை யின்மையா வையாது உலகு என்னும் உண்மைக்கு இவன் உரிமையாய் நின்றான்.

உற்ற அறிவோன் றுறுனேல் உயிரிழந்த
வெற்றுடம்பு போலெல்லாம் வீண்

புல்லறிவாளன் எல்லாராலும் இகழப்படுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

842 அன்றுவந்து தந்தான் அறப்பகைஞன் நல்லறிவு
குன்றிநின்றும் என்னே குமரேசா—நன்றும்
அறிவிலான் நெஞ்சுவந் தீதல் பிறிதியாதும்
இல்லை பெறுவான் தவம். (உ)

இ—ள்.

குமரேசா! நிருபகோபன் நல்ல அறிவில்லாதவனாயிருந் தும் என் அன்று மனமகிழ்ந்து தந்தான் எனின், அறிவு இலான் நெஞ்சு உவந்து ஈதல் பிறிது யாதும் இல்லை; பெறுவான் தவம் என்க.

இது, புல்லறிவுடையான் நல்லன செய்யான் என்கின்றது.

அறிவிலான் என்றது புல்லறிவாளனை. அறிவிலானை மூடன் என்றன்றோ கூறவேண்டும்; புல்லறிவன் என்றது எற்றுக்கெனின், அதிகாரம் நோக்கி என்க. நல்[illegible]றுதலையாய இப்புல்லறிவு, மூடத் தன்மையினும் மிகக் கேடு விளைக்கும் என்க.

நல்லறிவு புல்லறிவு மூடம் என்னும் இம் மூன்றனுள் முன்னது ‘அறிவுடையார் எல்லாம் உடையார்’ என்றபடி எல்லா நலங்களையும் இனிது அருள வல்லது; பின்னுள்ள இரண்டும் பேரிழிவு பயப்பனவாயினும் இறுதி மூடம் ஏதேனும் ஒரு காலத்து உறுதி

பெறினும் பெறும்; இடையாய புல்லறிவு யாதும் தெளியாது என்றும் தீதே விளைத்து நிற்கும் என்க.

பிறிது யாதும் இல்லை என்றது அவ் ஈகைக்குக் காரணம் வேறு ஒன்றும் இல்லை என்றவாறு.

வேறு கூறுது தவம் என்றது கருதிய யாவும் தருதற்குரிய அதன் பெருமை நோக்கி என்க. வேண்டிய வேண்டியாங்கு எய்தலாற் செய்தவம் ஈண்டு முயலப்படும்; என்பது ஈண்டுணரத் தக்கது. "எவ்வகைப் பொருள்களும் ஈபவல்லது, செவ்விய தவம்" என்பதுங் காண்க.

பெறுவான் என்றது புல்லறிவாளன் கொடுப்பதைக் கொள்கின்றவன் என்றவாறு. தவம் என்றது அவனது நல்வினையை.

மேல், புல்லறிவானது மிகவும் இகழ்ந்து வெறுக்கத்தக்க தோர் இழிகுணம் என்றார்; இதில், அதனையுடையான் ஒன்றனையும் தனது உணர்ந்து செய்பான என்கின்றார்.

புல்லறிவாளன் மனமகிழ்ந்து ஏதேனும் ஒன்றனைக்கொடுப் பனேல் அதற்குக் காரணம் வேறு ஒன்றும இல்லை; அப்பொருளைப் பெறுகின்றவனது நல்வினைப் பயனேயாம் என்பதாம்.

ஈதலின் பெருமையும் அதனால் உயிர்க்கு வரும் ஊதியமும் நன்கு அறிந்து தன் கடமையாகக் கருதி தாக்தெரிந்து வந்தவர்க்கு நெஞ்சு உவந்து ஈதல் அறிவுள்ளாருக்கே அமையும்; அறிவிலிக்கு அஃது அமையாது; ஒரோ வழி அறிவிலான் பால் அது காணப்படின் அதற்குக் காரணம் வேறாய் என இது காட்டிய தென க

புல்லறிவுடையார் உளமிசைந்து நல்லறஞ் செய்யார்; செல்வச்செருக்கால் ஏதேனும் ஒன்றைப் பிறர்க்கீயினும் அதனை வரிசையறிந்து ஈயார்; ஆதலால் அவர் வண்மை கண்முடிக்தனயான வோர் புன்மையதே [illegible] மையுடையதாகாதென்பார் அவரது ஈதலை யிழித்துப் பெறுவான் தவம் என்றார்.

பொன்னிறச் செந்நெற் பொதியொடு பீள்வாட
மின்னொளிர் வானங் கடலுள்ளும் கான்றுகுக்கும்
வெண்மை யுடையார் விழுச்செல்வம் எய்தியக்கால்
வண்மையும் அன்ன தகைத்து. என்ற நாலடியும் இங்கு

அறியத்தக்கது. நல்லறிவு யாதுமின்றி மிக்க வன்கண்ணரா யிருப்பினும் சிலர் சில சமயங்களில் துரியோதனன் கன்னனுக்கு அங்கதேசத்தைத் தந்ததுபோல் நெஞ்சுவந்து பிறர்க்குப் பெரும் பொருளைத் தந்துவிடுவர்; ஆயின் அக்கொடை அவர்க்கு இயற்கையாயமைந்ததன்று; தான் கைவிட்ட பொருளை ஒருவன் கண்டெடுத்ததுபோல் அதனைப் பெறுகின்றவன் செய்திருந்த நல்வினைப்பயனே அப்புல்லர் மூலமாகப் பொருந்திவந்தது என்று உணர்ந்துகொள்ளவேண்டும் என்றவாறு.

இழிந்த சிப்பியிலிருந்து ஓர் உயர்ந்த முத்துக் கிடைத்தால் அது, உவந்து கொடுத்ததாக யாரும் வியந்து சொல்லார்; கிடைக்கப்பெற்றவனது நல்வினைப் பயனையே எல்லாரும் புகழ்ந்துகொள்வார்; அதுபோல் புல்லறிவுடையவனிடமிருந்து ஒருவன் நல்ல பொருள் பெற்றால் அது அவன் தாந்தெரிந்து கொடுத்ததாகக் கொள்ளப்படாது; அதனைக் கொண்டவனது புண்ணியப் பயனே அங்ஙனம் பொருந்தச் செய்தது என்பார் அறிவிலான் ஈதல், பெறுவான் தவம் என்றார்.

புல்லறிவாளனாய் நின்ற பொல்லாதவனொருவன் தன்பால் வந்தவனுக்கு ஒருநாள் ஒரு பெரும பொருளைக் கொடுப்ப அதனைக்கண்டிருந்த அறிஞனொருவன் "என்ன? அற்புதம்! களிப்பு மீக்கூர்ந்து செருக்குமனமும் கொண்டு நன்மை தீமைகளை நாடியறியாத புன்மையாளனாய இவன் இன்று என்ன வகையில் இன்னவாறு தந்தான்! போனது போகட்டும் இனிமேலாவது கொஞ்சம் புண்ணியஞ் செய்வோம் என்று எண்ணியா! துறக்கம் வரும் என்று கருதியா? ஈதல் அல்லது உயிர்க்கு ஊதியமில்லை எனபதை உணர்ந்தா? இறந்துபோனால் இச் செல்வம் கூட வாராதென்று தெளிந்தா? ஈயார் இழிகுலத்தோர் என்ற பழிமொழிக்குப் பயந்தா? இப்படுபாவி ஈயாத கொடுலோபி என்று பிறர் இகழ்ந்து தூற்றுவதை யறிந்தா? அல்லது அஞ்சியா? ஈந்தால் எல்லாரும் புகழ்ந்து சொல்வார்கள் என்று நினைந்தா? அத்தி பூத்ததுபோல் இப்புல்லன் இன்று உவந்து கொடுத்ததற்குக காரணம் யாதோ? என்றுநீள நினைந்து பார்த்தும் தெளிவுறாமல் நம் தேவர்பால்

வந்து ஐயனே! நல்ல அறிவு சிறிதுமில்லாத இன்னான் இன்று இவ்வாறு ஈந்ததற்கு என்ன காரணம்? என்று வினவ அதற்குப் பிறிது யாதும் இல்லை பெறுவான் தவம் என அவனை நோக்கி அடிகள் உணர்த்தியதாக இவ் அருமைத் திருப்பாட்டு அமைந்துள்ளமை காண்க.

செல்வம் எய்தியிருந்தாலும் புல்லறிவாளர் பகுத்தறிவோடு நின்று நாடித்தெரிந்து நல்லது செய்யார் என்பது கருத்து.

புல்லறிவாளன் எவர்க்கேனும் ஒன்றை உவந்து கொடுப்பனாயின் அது மிகவியக்கத்தக்கதாம் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை தருமகோபன்பால் உணரப்படும்.

## கதை.

தருமகோபன் என்பவன் சூரபன்மனுடைய மந்திரிகளுள் ஒருவன். பல நூல்களையும் நன்கு பயின்றுள்ளவனாயினும் இயற்கையில் மிகவும் கொடியவன். இரக்கம் என்பது சிறிதும் இல்லாதவன். அறிவிலும் ஆற்றலிலும் தனக்கு நிகரானவர் எவரும் இலரென எண்ணி யிறுமாந்து எப்பொழுதும் தன்னையே வியந்து புகழ்ந்து வீண் செருக்குற்றவன். அரச காரியங்களை நடாத்துவதிலும், பிறரை யடக்கியாளுவதிலும் இவன் சதுரனாயிருந்தான்; ஆயினும் உயிர்களுக்கெல்லாம் அல்லலையே விளைத்துப் புல்லறிவாளனாய்ப் பொங்கி நின்றான். உறுதி நலங்களைக் கருதாமல் தன் மனம் போனவாறே வினைபுரிந்து அரசனுக்கு உழையிருந்து உரை செய்து வந்தான். இவனது உரைகள் மிகப் பிழைபாடுடையன. அறுமுகப் பெருமான் படையெழுச்சி செய்து அமர்குறித்து வந்திருந்ததைப்பற்றிச் சூரபன்மன் மந்திராலோசனை செய்தபொழுது உற்றுள்ள உண்மைகள் ஒன்றையுமுணராமல் தன் சிந்தை சென்றபடியே இவன் திமிர்ந்து சொல்லினான். இவன் அன்று சொல்லியவற்றுள் சில அடியில் வருவன.

குலம்படு நவமணி குயின்று பொன்புனை
அலம்படை கொண்டுபுன் முதிரை யாக்கத்தாற்
புலமபடக் கிறுவ போலும் வீர! நீ
சிலம்படி மைந்தனோ டாடல் செய்வதே. (க)

எரிமுகன் இரணியன் எனும் உன்மைந்தரில்
ஒருவனுக்கு ஆற்றலர் இலக்கத் தொன்பது
பொருதிறல் வயவரும் பூதர் யாவரும்
ஆரனருள் புரிதரும் அறுமுகத்தனும். (உ)

கிள்கொடு நகங்கொடு கிள்ளும் ஒன்றினை
வாள்கொடு தடியுமோ வன்மைசான்றதோர்
ஆள்கொடு முடிக்கிடு மவரை வென்றிட
நீள்கொடு மரங்கொடு நீயும சேறியோ. (ங)

பலகினி மொழிவதென் படியில் தானவத்
தலைவரி லொருவனை விளித்துக் காளையோ
டிலைஅயில் முருகன்மேல் ஏவுவா யெனின்
அலைவுசெய் தொல்லையில் அடல்பெற் றேதுவான். (ச)

(கந்தபுராணம்)

இவனது புல்லறிவு எவ்வளவில் இருந்திருக்கும் என்பதை இங்ஙகுக் கூறிய இவற்றால் இனிதுணரலாகும். இங்ஙனமே சிறுமையும செருக்கும பொருந்தி நிமிர்ந்திருந்த இவன் அசுரேசனுக்கு அமைச்சனுயிருந்ததலோடு சிங்ககிரி என்னும் ஒரு சிறிய தேசத்துக்குத் தலைவனுயுமமைந்திருந்தான். பெருஞ் செல்வத்தோடு கல்வியுமுடையனுய்க் காட்டி நின்றுலும் என்றும் எவாககும் யாதும் இரங்கி ஈயமாட்டான். அறநிலைகள் யாவும் அழிவுறும் படி செய்து முனிவர் பலருக்கும் இடர் மிக விளைத்தான். அதனுல் தருமகோபன் என எவரும் இவனை உரிமை செய்தழைத்தார். இவனது இயற்பெயர் காலநேமி என்பர்.

" அறநெறி உடலுக்கேற்ப உண்டுடுத் தனுபவித்தல்;
மறநெறி பசியால் ஆகம் வருந்தி நோன்பிருத்தல்; என்று
திறநெறி போலக் கூறிச் செந்நெறித் தலைநின் றுரைப்
புறநெறி யாதகாரம் புருத்துதல் கருமம் ஆனுன்."

என்ற வண்ணமே இவன் நின்று வந்தான். தன் பெருக்கேற்ப இங்ஙனம் இவன் மறம் புரிந்து புல்லறிவினனுய் மதத்து வருங்கால் திரிசதன் எனும் புலவனொருவன் இவன்பால் வந்து தான் கருதியதைத் தந்தருளும்படி கனிந்து வேண்டினுன். அவன்

அசுர மாபினன்; ஆரியம், தெலுங்கு, பைசாசம் என்னும் மூன்று மொழிகளிலும் தேர்ந்தவன்; காயசித்தியுடையவன். அவன் கருதியுள்ளபடி ஒரு வேள்வி செய்தற்கு எழுநூறுகோடி பொன்னும், வளமலிந்த ஓர் மலைச்சாரலும் வேண்டும் என்று இவன்பால் உரைத்தான். உடனே இவன் உள்ளமுவந்து அவையனைத்தையும் கொடுத்து விடுத்தான். எவரையும் மதியாமல் இழிமொழியாடி ஒன்றும் ஈயாது என்றும் அறநிலைக்கு மாறுகின்ற இவன் அன்று ஈந்ததைக் குறித்து அனைவரும் வியந்து, வந்தவன் செய்த புண்ணியமேயன்றி இவன் மனமாரத் தந்ததன்றெனத் தத்தமக்குள்ளே ஒத்துரைத்து நின்றார். புல்லறிவுடையார் வரிசையறிந்து ஒருவருக்கும் உதவி செய்யமாட்டார்; ஒருக்கால் செய்தாராயின் அது அப்பொருளைப் பெற்றுப் போகின்றவனது நற்றவப்பயனேயாம் என்பதை அன்று இவன்பால நன்கு கண்டார். அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல் பிறிதுயாதும் இல்லை பெறுவான் தவம் என்னும் உண்மையை உலகமகாண இவன் உணர்த்தி நின்றான்.

ஆம்பரிசு தேறு அறிவிலியோன் றீயினது
வேம்பினித்தாற் போலோர் வியப்பு.

புல்லறிவாளர் நல்லது செய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

843 ஆர்ந்த சுகலர் அறிவிழந்து தாமாகக்
கூர்ந்தழிந்தார் என்னே குமரேசா—நேர்ந்த
அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்கும் செய்த லரிது. (௩)

இ—ள்.

குமரேசா! நல்லறிவில்லாத சுகலர் தாமாகவே என் அல்லல் அடைந்தார் எனின், அறிவு இலார் தாம தம்மைப் பீழிக்கும் பீழை செறுவார்க்கும் செய்தல் அரிது என்க.

இது, புல்லறிவாளர் தமக்குத் தாமே அல்லலை ஆக்கிக் கொள்வார் என்கின்றது.

கூர்ந்து = துன்பமிகுந்து. சேர்ந்த என்றது உயிர்க்குணமாய்ப் பொருந்தியுள்ள என்றவாறு.

பீழிக்கும் = வருத்தும்; பீழித்தல் = துயருறுத்தல். பீடிக்கும் பீடை என வடமொழி வண்ணமாய் வழங்குவதும் காண்க.

பீழை = துன்பம். செறுவார் = பகைவர். செறுத்தலையுடையவர் என்னும் ஏதுவான் வந்தது. செறுத்தல் = கொல்லல், கோபித்தல். "செறுவாரைச் செறுகிற்கும்" எனபுழி இது நின்றுணர்த்துதல் காண்க.

பிழை செய்தற்கு உரியார் செறுவாரே யாதலால் அவ்வுரிமை கருதி அவரை இங்கு உடனுணர்த்தினர். உம்மை சிறப்புணர்த்தி நின்றது. செய்தல் அரிது என்றது அவர் செய்து கொள்ளும் அவ்வளவு துன்பத்தை இவர் செய்துவிட முடியாது என்றவாறு. அறிவிலிகளைக் கெடுத்தற்கு வேறு பகைவர் வேண்டாதலாதான், விருகன்போல் தாமாகவே அவர் அழிந்துபோவர் என உணர்த்திப் புல்லறிவின் பொல்லாத் தீமையை இது விளக்கியதென்க.

மேல், புல்லறிவுடையார் பிறர்க்கு நல்லது செய்ய அறியார் என்றார்; இதில், தமக்குத் துன்பத்தைத் தாமே அவர் செய்து கொள்வர் என்கின்றார்.

புல்லறிவாளர் தாமே தம்மைத் துன்புறுத்தும் துன்பம் தம் பகைவர்க்கும் செய்யமுடியாதென்பதாம்.

பகைவர் காலம் அறிந்து இடங்கண்டு அமயம் வாய்த்தபோது துயர் செய்வர்; அங்ஙனம் செய்யினும் பொருட்கேடு முதலாக ஏதேனும் ஓரளவோடு ஒழியும்; புல்லறிவாளர் அவ்வகை அடக்கறியாத அகங்காரிகளாதலால் நேர்ந்தபடியெல்லாம் நிமிர்ந்து செருக்கிக் கொடிய வினைகளைத் துணிந்து செய்வர்; அதனால் பொருள் முழுதும் இழந்து பழியும் பாவமும் அடைந்து இருமையினும் பெருந்துன்பங்களை அனுபவித்துப் பேதுறுவர் என்றவாறு.

செறுவாரும் செய்தலரிய பெருநோயைத் தாமே தமக்குச் செய்துகொண்டு புல்லறிவினர் பொங்கி மடிவர் என்ற இதனால் அவர்தம் புலைகெட்டதன்மை நன்குணரலாகும்.

கொள்ளியை எடுத்துத் தலை சொறிந்தது போல் தாம் துயருறுதற்கேற்ற செயல்களையே செய்து அறிவிலிகள் தாமாகவே இழிந்து தொலைவர் எனறபடி.

தாமேயும் இன்புறார்; தக்கார்க்கும் நன்றாற்றார்;
மெஞ்சார் நன்னெறியுஞ் சேர்கலார்;—தாமயங்கி
ஆக்கத் துட் டூங்கி யவத்தமே வாழ்நாளைப்
போக்குவார் புல்லறிவி னோர். (நாலடியார்.)

தமக்கு அருமையாக அமைந்துள்ள ஆயுள் நாளை அவமே போக்கி, இருமையிலும் தாம் சிறுமையுறுதற் கேதுவான வினைகளைச் செருக்கிச்செய்து, அறிவினர் களித்துத் திரிந்து கழிந்து தொலைவர் என்பதை இதுவும் உணர்த்திநிற்றல் காண்க.

நல்லதொன்றையும் நாடாமல் துள்ளித் திரிந்து பொல்லாதனவற்றையே பொங்கிப் புரிந்து ஆப்பதனைப் பிடுங்கசைத்த பேய்க்குரங்குபோலத் தமக்குத் தாமே இடரிழைத்துப் புல்லறிவாளர் இழிந்துதவிப்பர என்பது கருத்து.

இத்தகைய மூர்க்கரோடு கூடின் இழிவும் அழிவும் எய்திவிடுமாதலால் சிறிதும் சேரலாகாதெனபது குறிப்பு.

புல்லறிவாளர் பெரிய அல்லலைத் தமக்குத் தாமே விளைத்துக்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுகலர்பால் உணரப்படும்.

## கதை.

சுகலர் என்பவர் இற்றைக்கு ஆயிரத்துத் தொள்ளாயிரம் ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே வையையாற்றின தென்கரையிலிருநத குருவிருந்த துறை என்னும் ஊரிலிருந்தவர். வேளாண் மரபினர். சுகலன் சுகலை என்பவர்க்குப் புதல்வராய்த் தோன்றி வடிவு குணஞ் செயல்களில் ஒருபடித்தா யிருந்தமையால் இவர் சுகலர் எனப் பெற்றார். இவர் ஒரு தொகையாகப் பன்னிருவராவர். பெருஞ் செல்வமுடையவர். தம் தந்தை தாயர் இறந்துபோன பின்னர்த் தமக்குத் தோன்றிய வாறே செலவுகள் செய்து இவர் செருக்கிக் களித்தார். செல்வமிக்கிருந்தமையால் எவரையு மதியாமல் திமிர்ந்து திரிந்து தீவினைகளைச்

செய்தார். அதனால் பலரும் பகைமைகொண்டு இவரை நலிவு செய்ய முயன்றனர்; முயன்றும் இவரது ஒற்றுமையாலும் வலியுடைமையாலும் அவரது எண்ணம் யாதும் பலியாமல் தமக்குள்ளேயே எள்ளி வைது காலம் நோக்கிக் கடுத்திருந்தார். அவர் இங்ஙனமிருப்ப இவர் மேலும் செய்துவந்த தீமையால் தம் செல்வமுழுவதுந் தேய்ந்தது. பின்பு தமக்குள்ளேயே கலாம் விளைத்து ஒருவரை யொருவர் வெறுத்து உளம்போனபடியே திரிந்தார். தாம் அறிவிலரா யிருந்தும் மிகவும் அறிவுடையராகத் தம்மைத்தாமே வியந்து புகழ்ந்து வீணே அகங்கரித்து ஆன்றோர் கூடியுள்ள அவைகளில் அடங்காது புகுந்து அங்கு நிகழும் வழக்குகளைக் குழப்பிவிட்டுப் பல முறை வெளியேறி வந்தார். ஒரு நாள் வேடர் சிலருடன் கூடி ஒரு சோலையை யணுகி யங்குத் தவஞ்செய்துகொண்டிருந்த சத சிருங்கர் என்னும் முனிவரைக் கண்டு அவர் நிலையினை யறியாமல் நெடிது அவமதித்துப் பெரு நகை செய்தார். அவ்வளவோடமையாமல் சிறிய கற்களை வாரி அப் பெரியவர் மேல் வீசினர். அவர் கன்றி விழித்துப் பன்றிக் குட்டிகளாய்ப் படுத்துழலும்படி இவரைக் கடிந்து சபித்தார். இப்பன்னிருவரும் அவ்வாறே தம்முருவம் நீங்கித் தாழ்ந்துழந்தார். இவர் இழிந்துநொந்த நிலையினை யறிந்து இவரது பகைவரனைவரும் உளங்களி கூர்ந்தார். அப் பகைவர் முனைந்து செய்தாலும் முடியமாட்டாத கொடிய துன்பத்தைத் தாமாகவே தமக்கு இவர் விளைத்துக்கொண்டதை நினைந்து பிறரும் வியந்து பழித்தார். புல்லறிவாளர் தமக்குத் தாமே அல்லலை ஆக்கிக்கொள்வர் என்பதைக் குறித்துச்சொல்லுங்கால் அக்காலத்தவர் இவரையே எடுத்துக் காட்டாக இணைத்துச் சொல்லிவந்தார். அறிவிலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை செறுவார்க்கும் செய்தலரிது என்பதை உலகம் காண இவர் உணர்த்திநின்றார். இவர் பிழை செய்த பெற்றியைக் குறித்துப் பரஞ்சோதி முனிவர் அழகுறப் பாடியுள்ளார். அடியில் வருதல் காண்க.

சுகலன் என்றொரு வேளாளன் அவன்மனை சுகலை யென்பாள்
இகலருங் கற்பினாள்பன் னிருமகப் பெற்றாள் செல்வப்
புகலருஞ் செருக்கால் அன்ன புதல்வரைக் கடியாராகி
அகலருங் களிப்புமீதூ ரன்பினால் வளர்க்கு நாளில். (க)

தங்கையும் காயும் மாயத் தனுகண்மிக் குடையராகி
மைந்தரும் வேடரோடு கூடிவெங் கானில் வந்து
வெந்தொழில் வேட்டஞ் செய்வார் வெயில்புகாப் புதற்கி லெய்தி
யைந்தவித் திருந்து நோற்குங் குரவனை யங்குக் கண்டார். (2)

கைத்தலம் புடைத்து நகுக் கல்லும் வெம் பரலும் வாரி
மெய்த்தவன் மெய்யிற்றாக்க வீசினர் வினையை வெல்லும்
உத்தமன் வீக்கஞ் செய்தார் தவத்தினுக் குலரென்னுன்னிச்
சித்தகொந் தினைய வஞ்சத தீயரைச் செயிர்த்து நோக்கா. (௩)

கொழுந்தொழில் மறந்து வேடத் தொழிலுழுந் துழல்வீர் நீர்மண்
ணுழுந்தொழி லுடைய நீராற் பன்றியி னுதாத் தெய்திக்
கொழுந்தழலினைய வெனக் குருளையாய்த் தந்தை தாயை
யிழந்தல முறுமின் என்று இட்டனன் கடிய சாபம். (4)

(திருவிளையாடற்புராணம்).

மேற்குறித்தசரிதம இதன்கண்ணும் விளங்கிநிற்றல் காண்க.

விட்டி லொளிவீழ் விதம்போல் முழுமுடர்
கெட்டழிவார் தாமே கிளர்ந்து.

புல்லறிவினன் தனக்குத் தானே அல்லலைச் செய்துகொள் வன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

844 ஒள்ளியனுத் தன்னை யுயர்த்தியுமேன் துச்சேதன்
கொள்ள இழிந்தான் குமரேசா—எள்ளலுறும்
வெண்மை யெனப்படுவ தியாதெனின் ஒண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு. (௪)

இ—ள்.

குமரேசா! தன்னை அறிவுடையனாகக் கருதிச் செருக்கிய துச்சேதன் பின்பு என் அறிவிலியென இழிக்கப்பட்டான் எனின், வெண்மை எனப்படுவது யாது? எனின், யாம் ஒண்மை உடையம என்னும் செருக்கு என்க.

இது, புல்லறிவின் தன்மை கூறுகின்றது.

தன்னை உயர்த்தியும் என்றது கல்வி சொல்வன்மை முதலிய எல்லாவற்றிலும் தான் சிறந்தவனென்று தன்னைத்தானே வியந்து சொல்லி அவன் மிதந்து நின்றமை கருதி. கொள்ள இழிந்தான் என்றது புல்லியன் என்று எல்லாரும் எள்ளி இகழ அவன் இழிந்துபோனமை கருதி.

வெண்மை = வெளிற்றுத்தன்மை; என்றது அறிவின்மையை. உள்ளே வயிரங்கொள்ளாத மரத்தை வெளிறு என்பதுபோல உள்ளீடாகிய அறிவில்லாமையை இது கருதிவந்தது. "வெண்மை இல்லை பல் கேள்வி மேவலால்" என்புழி இது நின்றுணர்த்துதல் காண்க. அறிவுடையாரை ஒளியார் எனவும், அறிவில்லாரை வெளியார் எனவும் அடிகள் குறித்திருத்தலுங் காண்க.

ஒண்மை = ஒள்ளிய தன்மை; ஒளி, புகழ், அழகு முதலிய வற்றை உணர்த்திவரும் இப்பண்புப் பெயர் ஈண்டு அவற்றிற் கெல்லாம் முதன்மையாயுள்ள அறிவினைக் குறித்து நின்றது. "ஒப்பின் மாகர் ஒண்மை மற்றி யாதெனின்" எனச் சிந்தாமணியிலும், "ஒண்மையும் நிறையும் ஓங்கிய ஒளியும்" எனப் பெருங்கதையிலும் இது நின்றுணர்த்துதல் காண்க.

மேல், புலவறிவாளர் தமக்குத் தாமே அல்லலை விளைத்துக் கொள்வர் என்றார்; இதில், அவர் அளவிறந்து தருக்கி யிழிவர் என்கின்றார்.

அறியாமை என்று சொல்லப்படுவது யாது என்று வினவின் அது, யாம் அறிவுடையேம் என்று தம்மைத்தாமே மதித்திருக்கும் களிப்பே என்பதாம்.

அறிவிற் சிறந்தவராகத் தம்மைத் தாமே வியந்து களித்தலே அறிவீனம் என்பார் ஒண்மை என்னும் செருக்கு வெண்மை என்றார்.

அறிவு நலங்கள் எவ்வளவு அமையப்பெற்றிருந்தாலும் நல்ல அறிவுடையார் யாதும் செருக்காமல் அடங்கியிருப்பர்; ஏதேனும் சிறிதமையப்பெற்றாலும் புல்லறிவுடையவர் பொங்கிக் களித்து எமக்கு நிகர் எங்கும் இல்லையென்று எம்ராதன், வல்லான் போல் இறுமாந்து திரிவர் என்றவாறு.

நாம்பெரியர் என்னுமதை நாடாதடகருமவர்
தாம்பெரிய ரென்றுமறை சாற்றியிடும்—நாம்பெரியர்
என்பார் சிறியர் இவராலாது இவ்வுலகில்
துன்பார் சுமப்பார்கள் சொல். (சிவபோகசாரம்).

யாம் ஒண்மையுடையம் என்பதே வெண்மையாம் என இது விளக்கி நிற்றல் காண்க.

எம்மை யறிந்திலிர் எம்போல்வார் இல்லென்று
தம்மைத்தாம் கொள்வது கோளன்று—தம்மை
அரியரா நோக்கி அறனறியுஞ் சான்றோர்
பெரியராக் கொள்வது கோள். (நாலடியார்).

சிற்றுணர்வோர் என்றுஞ் சிலுசிலுப்பர் ஆன்றமைந்த
முற்றுணர்வோர் ஒன்றும் மொழியாரே—வெற்றிபெறு
வெண்கலத்தி னோசை மிகுமே விரிபசும்பொன்
ஒண்கலத்தி னுண்டோ ஒலி. (நீதிவெண்பா).

அறிவுடையம் யாமென் றகஞ்செருக்கல் ஒன்றும்
அறியாத பான்மை; அறிவுயிர்க் குண்டோ
பிறவுஞான் றின்மையிற் பின்னரிவ் வெல்லாம்
இறையான் அறிவ தெனல். (இன்னிசை).

தன்னை வியப்பிப்பான் தற்புகழ்தல் தீச்சுடர்
நன்னீர் சொரிந்து வளர்த்தற்றால்—தன்னை
வியவாமை யன்றே வியப்பாவ தின்பம்
நயவாமை யன்றே நலம். (நீதிநெறி விளக்கம்.)

சிறிய கேள்வியர் கழியவும் செருக்குடையோர். (திருவிளையாடல்)

இவை ஈண்டு எண்ணற்குரியன. உலகம், தம்மை எள்ளி நிற்பதையும் பாராமல் தம்மைத் தாமே வியந்துகொண்டு துள்ளி நிற்பார் புல்லறிவாளர் என்றவாறு.

தன்னைமிக்க அறிவுடையவனாக எண்ணி எவன் செருக்கிக் களிக்கின்றானோ அவனே அறிவில்லாதவனென அடிகள் உணர்த்தி யிருக்கும் அழகை இதில் ஆய்ந்து பார்க்க.

புல்லறிவுடையவர் எல்லாவற்றிலும் தம்மை மிகச் சிறந்தவராக மதித்துச் செருக்குறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துச்சேதன்பால் உணரப்படும்.

கதை.

துச்சேதன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டு கட்கு முன்னர் மகததேசத்திலே வீரை என்னும் நகரிலேயிருந்த வன். வைதிய மரபினன். சீரியகுலத்திற் பிறந்தும் நேரிய குணங்கள் யாதும் இலனாய் யாரையும் பழித்து இவன் அகஞ் செருக்கி நின்றான். வடமொழியிலுள்ள சிலநூல்களை வழுவுறப் படித்துச் சிறிது தருக்கமும் கற்று எத்திக்கிலும் தனக்கு நிகர் எவருமில்லையென்று மிகவுங்களித்து மிகவியந்து திரிந்தான். வியாசர் முதலிய பண்டைக்காலத்து மாதவர்களையுங்கூட இவன் மதியாதிகழ்ந்தான். உண்மையில் எவரும் வியந்து கேட்கத்தக்க சொல்வன்மை இவன்பால் இயல்பாக அமைந்திருந்தது; அதனால் தன புலைமைகொள்கைகளை ஆனவரையும் பரவச்செய்து அமைந்த சிலரைத் தன்வசமாக்கிக்கொண்டு தான் ஓர் சிறந்த தலைவன்போல் நிமிர்ந்து நின்று "பழைய முறைகளெல்லாம் பழுதுடையன; அவைகளைத் தழுவி யொழுகுதல் அறிவிலிகள் செயல்களாம்; அவற்றை யொழித்தொழுகலே உணர்ந்தார்க்கழகு" என்று தன் உளம் போனபடியே களித்து இவன் உரைத்திவந்தான்.

"பெருகுதல மறையோர் தம்மைப் பெருமைசேர் தருமநீதி
அருங்கலைப் பயிற்சிமாற்றி அருங்கநூல் பயிலச்செய்தும்
பார்த்து நீர் காலைமாலை படிந்து நீறணிவார் தம்மைத்
திருந்தின வெந்நீராடிச் செஞ்சாந்து புனையச்செய்தும்."

என்றபடி தன் புன்மைச்செயல்களை எங்கும் புகுத்தி இவன் பொங்கிநின்றான். தன்செல்வாக்கை யெண்ணிச் செருக்குமீக் கூர்ந்து அதனால் அறிவுடையாரை யெல்லாம் அவமதித்திழித் தான். "அறிவினில் குலத்தினில் அழகில் ஆண்மையில், நெறி யினில் செல்வத்தில் நிலையில் நீதியில், செறிதருகல்வியில் செப்பும் வன்மையில், எறிகடலுலகினில் யாவர் என் ஒப்பார்" என்று இவன் உன்னிக்களித்தான். இவனது தருக்கினிமிர்ச்சியை நோக்கியெல்லாரும் வெறுத்துப் பழித்தார். திரியளவில் நின் றால் தெய்வம் என்று விளக்கினை விரும்பிப்போற்றுவர்; அது மிகுந்து கூரையில்பற்றிக் கொழுந்துவிட்டு நிமிர்ந்தால் அங்கண

நீரையும் வாரியிரைத்து யாவரும் விரைந்து அதனை அவித்துத் தொலைப்பர் அன்றோ? அதுபோல் செருக்கி நின்ற இவனை எல்லாரும் வெறுத்துக் கடிந்தார். மூடர் எவரினும் முழுமூடன் என்று எவரும் இகழ்ந்து சொல்ல இவன் பழிமீக்கொண்டு செல்வ முதலியனயாவும் இழந்து முடிவில் இழிந்து தொலைந்தான். அறிவுடையேன் என்று செருக்கி நின்றதால் அறிவிலின இவன் அவமதிக்கப்பட்டு அழிவுறலாகி மறுபிறப்பிலும் இழிவெய்தி யிருந்தான். ஒண்மையுடையம் யாம் எனனுஞ் செருக்கே வெண் மையெனப்படும் என்பதை உலகம்காண இவன் விளக்கிநின்றான். விரிவைக காசிகசியத்தில் காண்க.

கற்றனவும் கண்ணகன்ற சாயலும் இற்பிறப்பும்
பக்கத்தார் பாராட்டப் பாடெய்தும் தானுரைப்பின்
மைத்துனர் பல்கி மருந்திற் றணியாத
பித்தனென் றெள்ளப் படும். (நாலடியார்.)

ஒண்மை யுடையம் என்று உளம் செருக்கி எழுவோர் புன்மை அடைவர் என இஃதுணர்த்தி நிற்கும் அழகைப்பார்க்க.

அறிவுடையேன் யானேன் றகஞ்செருக்கல் யாதும்
அறிவிலான் செய்கை யறி.

அறிவிலிகளே அறிவுடையேம் என்று அகஞ் செருக்குவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

845 அன்றுதான் கல்லா அருங்கவிமேற் கொண்டுதன்மி
குன்றினன் என்னே குமரேசா—நன்றுதாம்
கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉம் ஐயந் தரும். (ரு)

இ—ள்.

குமரேசா! தானை கல்லாத கவியைக் கொண்டுபோய்ச் சொல்லித் தருமி ஏன் எள்ளலடைந்தான் எனின், கல்லாத மேல் கொண்டு ஒழுகல் கசடு அற வல்லதூஉம் ஐயம் தரும் என்க.

இது, கள்ளப்புலமை காட்டுதல் புல்லறிவு என்கின்றது.

அருங்கவி என்றது வேறெவரும் செய்தற்கு அரிதாய் நின்ற அதன் அருமை கருதி என்க.

கல்லாத என்றது தாம் நன்ருகக் கற்றறியாத நூல்களை.

கசடு = குற்றம். மேற்கொள்ளல் = வெளிக்குத் தெரியுமாறு புறத்தே போர்த்துக்கொள்ளுதல். ஐயம் = சந்தேகம்.

கசடு அற வல்லதூஉம் = வழுவறக் கற்றுள்ளதும்; என்றது தான் தெளிவாகக் கற்றுள்ள நூலின் கண்ணும் என்றவாறு. அளபெடை இன்னிசை தோன்ற நின்றது. கற்றதூஉம் என்னுது வல்லதூஉம் என்றது எதுகை நயமாத்திரம் கருதியன்று அக்கல்வியின் முடிவான எல்லை தோன்ற என்க.

தான் கற்றதனை மேற்கொண்டு கள்ளம் புரியாது ஒழுகல் நல்லறிவாமாதலால் கல்லாத மேற்கொண்டொழுகல் புல்லறிவு எனநின்றது.

மேல், புல்லறிவாளர் தம்மைப் போறிவுடையாராக மதித்துச் செருக்குவார் என்ருர்; இதில், தமக்குத் தெரியாததனையும் தெரிந்ததாகக் காட்டி அவர் சீரழிவர் என்கின்ருர்.

தான் நன்ருகக் கற்றறியாத நூல்களைக் கற்றிருப்பதாகக் காட்டி ஒருவன் கள்ளஞ் செய்தொழுகுதல் குற்றமற அவன் கற்றிருப்பதன் கண்ணும் ஐயத்தை விளைக்கும் என்பதாம்

இனி, ஒழுகற்க: ஒழுகின், வல்லதும் ஐயந்தரும் எனினுமாம். இப்பொருளில ஒழுகல் என்பது விதிப்பொருட்டாய் வந்த வியங்கோளாம்.

தமக்கு எல்லாந் தெரியுமென்று எண்ணிச் செருக்குதல் புல்லறிவாளர்க்கு இயல்பாகுமாதலால் ஒரோவழி நல்லாரோடு இவர் சொல்லாட நேரின் தாம் கல்லாத நூல்களையும் கற்றிருப்பதாகக் காட்டத் துணிவார்; அங்ஙனம் துணியுங்கால் அவ் ஒள்ளியார் முன் இவரது வெள்ளறிவு வெளிப்படும்; படவே உண்மையாகவே இவர் ஏதேனும் கற்றிருப்பதுளதாயின் அதுவும் இப்படித்தான் இருக்குமோ? என்று அவர் ஐயுற நேரும்; ஆதலின் "வல்லதூஉம் ஐயந் தரும்" என்ருர்.

இங்ஙனம் சோரப்புலமை காட்டுதல் மிகவும் ஈனத்தனமாகு மாதலால் புல்லறிவுக்கு இனமாக இதனை எடுத்துக் காட்டினர்.

கற்றதூஉம் இன்றிக் கணககாயர் பாடத்தால்
பெற்றதாம் பேதை ஓர் சூத்திரம்—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும். (நாலடியார்).

கல்லாத மேற்கொண்டு கள்ளம் புரிந்தொழுகும் புல்லறிவாளர் இயல்பினை யுணர்த்தி நிற்கும் இதனமுகை யூன்றி யுணர்க.

புல்லறிவாளர் தாமாகக் கருதிக் கல்லாமல், பிறர் சொல்வதைக்கேட்டுப் பாடஞ்செய்துகொண்டு, அவ்வளவில் தம்மை மிகப் படித்தவராக மதித்துக் களித்து மனம் போனவாறு பிதற்றித்திரிந்து பிழைபடுவர் என்றவாறு.

ஏட்டுப் படிப்பை யிதந்தெரிந்து கல்லாமல்
கேட்டுப் படிப்பே கெழீஇக் கொண்டு—நீட்டிமேல்
எல்லாந் தெரியுமென எண்ணிச் செருக்குவார்
புல்லறிவோர் எங்கும் புகுந்து. என்றபடியே மிகுந்து திரிந்து புல்லிய அறிவினர் கல்வி நலங்காணுமல் கழிந்திழிவர் என்க.

இவ்வாறு கள்ளக் கல்வி காட்டுதல் புல்லறிவு ஆகுமாதலால் அப்புன்மையை ஒழித்தொழுகுதலே நல்லறிவாம் என்பது கருத்து.

தான் கல்லாததொன்றைக் கற்றதாகக்கொண்டு நல்லறிவாள ரிடம் காட்டுவனாயின் அவன்புல்லறிவன் என்று எள்ளப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமி பால் உணரப்படும்.

## கதை.

தருமி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்த ஓர் ஆதிசைவ வேதியா மாயினன். இளமையிலேயே இவன் தந்தை தாயரை யிழந்து மிக வருந்தியிருந்தான். தன் தாயுடன் பிறந்த சிற்றன்னை இவனைப்

பாதுகாத்து வந்தான். இவன் பருவமெய்தியவுடனே தன் மாபின் முறைப்படி இறைவனைப் பூசிக்கும் உரிமையை மேற்கொண்டு அதில் வரும் ஊதியத்தால் உயிரோம்பி நின்றான். வறியவாழ்க்கையன்; எனினும் பெரிய சூழ்ச்சியன். சொல்வன்மையிற் சிறந்தவன். என்ன இருந்தாலும் பொருளில்லாமையால் இவனை யாரும் பொருள் செய்பவில்லை அதனால் மணமுடியாமல் இவன மறுகியிருந்தான். இங்ஙனம் இருந்து வருங்கால் அந்த அரசபுரித்துவந்த சண்பகமாறன் என்னும் வங்கிய சூடாமணிப்பாண்டியன் தான் கருதியுள்ளதைத் தெளிவுறக் கவி செய்து கூறுவோர்க்கு ஆயிரம் பொன் தருவதாக உறுதிகூறி அப்பொற்கிழியைத் தன் சங்க மண்டபத்தில் தொங்கவிட்டிருந்தான். உள்ளி நோக்கியும் மன்னன் கருத்து இன்னதென்று தெரியாமையால் கபிலா பரணா முதலிய பெரும் புலவர் பலரும் ஒன்றுங்கூறாது ஒடுங்கியிருந்தார். பொருள் நிலை கருதி ஆசை வயத்தராய்ச் சிலர் கவிசெய்து வந்தும் அமைவின்மையால் அகன்று போயினர். வறுமையில் மூழ்கியுள்ள இவன் ஒருநாள் அப்பொருளினை நினைந்தான்; தனக்கு எய்திவிடாதா? என்று எண்ணி ஏங்கினன். உடனே பரம்பொருள் முன்னணுகிப் பணிந்து போற்றினன்.

> " தந்தை தாயிலேன் தனியனாகிய
> மைந்தனேன் புதுவதுவை வேட்கையேன்
> சிந்தைநோய் செயுஞ் செல்லல் தீர்ப்பதற்கு
> எந்தையே யிதுபதமென் றேத்தியே " (திருவிளையாடல்).

என்பதாகியாக வருந்தி வேண்டி இவன் பரிந்து நின்றான். இருமுது குரவரையுமிழந்து அநாதையாய் நிற்கும் இவன்மேல் அநாதியாய அவன் அருள் சுரந்து ஒரு கவி புனைந்துதந்து இதனைப் பாண்டியனிடம் கொடுத்து நீ வேண்டியதைக் கொள்க என்று விளம்பி விடுத்தான். இவன் கொண்டு விரைந்து சென்று வேந்தனிடங் கூறினன். தான் கருதியபடியே கவி அமைந்திருத்தலைக்கண்டு அவன் பெருமகிழ்ச்சி கொண்டான். இவ் அருமைய பாட்டைச் செய்த அறிவுப் பெருந்தகையா! என்று இவனை அர

சன் விரும்பி உவந்து வியந்து வியந்து பார்த்தான். இங்ஙனம் அவன் வியந்து போற்றுங்கால் அண்ணலருளியதென ஒரு சிறிதும் உண்மையை யுரைக்காமல் தன்னதாகவே மேற்கொண்டு இவன் தலையெடுத்து நின்றான். சங்கம் சென்று அப்பொற்கிழியைக்கொண்டுபோகும்படி சாற்றி விடுப்ப இவன்போய் அதனைச் சார்ந்தெடுத்தான். அடுத்துவந்து கீரனார் தடுத்து நிறுத்தி "எங்கே! நீ சொற்ற கவி இங்கே சொல்லுக" என்றார் கல்லாத இவன் அக்கற்றவன் முன்னே அதனைக்காண நீட்டினான். அவனைக்கண்டு நோக்கி உன் கவி குற்றம் என்றான்.

குற்றம் இக்கவிக் கென்று கூறலும்
கற்றிலான் நெடுங்காலம் வெம்பசி
யுற்றவன் கலத்துண்ணும் எல்லைகைப்
பற்றவாடினன் பண்பு பற்றினன். (திருவிளையாடல்).

யாதும் சொல்லமாட்டாமல் சோர்ந்து நின்ற இவன் பின்பு உள்ளம் ஏங்கி மெல்ல நீங்கினான். ஊமைபோல் ஒன்றும் பேசாமல் இவன் ஒடுங்கி மீளுவதை நோக்கி அங்கிருந்தவரெல்லாரும் இப்பாட்டு இவன் பாடியதன்று; யாரோ ஒருவர் செய்திருந்ததை வஞ்சகமாக இவன் கொண்டுவந்திருக்கவேண்டுமென்று ஐயுறவோடு குறித்துரையாடினார். நெஞ்சு திரியாமல் நேர்மையோடு நின்று உண்மையை உரைத்திருந்தால் இவனுக்கு உறுபொருள் கிடைத்திருக்கும்; புல்லிய தன்மையைச் சிறிது புல்லி நின்றதால் அல்லலும் இளிவும் அடைந்து நொந்தான். அந்தோ! கல்லாதன மேற்கொண்டு ஒழுகலாகாதென்பதும், ஒழுகின் உள்ளதுங் கெட்டு எல்லாரும் இகழ்ந்துகூற இழிந்துபடுவர் என்பதும் உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

பொதியப் பொருப்பன் மதியக் கருத்தினைக்
கொங்குதேர் வாழ்க்கைச் செந்தமிழ் கூறிப்
பொற்குவை தருமிக்கு அற்புடன் உதவி
என்னுளங் குடிகொண் டிரும்பய னளிக்கும்
கள்ளவிழ் குழல்சேர் கருணையெம் பெருமான். (கல்லாடம்).

நன்பாட்டுப் புலவனாய்ச் சங்கமேறி
நற்கனகக் கிழி தருமிக்கு அருளினோன் காண் (தேவாரம்).

இன்னவாறே திருவிளையாடல், சீகாளத்திப்புராண முதலிய நூல்களிலும் இவன் சரிதம் குறிக்கப்பட்டுள்ளது. இறைவன் அருள் செய்துதவியும் தான் புன்மை புகுந்து தருமி சிறந்து நேர்மை குன்றியதால் கருதிய பொருள் கிடையாமல் கண்கலங்கி மீண்டான்; இதனால் பாமன் பாவலனாய் வாவும், தமிழ்க்கவியின் அருமையும், ஓர் உண்மைப் புலவனுயர்வும், புன்மையொழியவேண்டும் என்னும் உண்மையும் முதலிய நன்மைகள்பல விளையலாயின.

*அண்ணல் கவியை அளித்தும் தருமியன்று*
*பண்ணியதோர் பொய்யான பாவனையால்—கண்ணெதிரே*
*கண்ட பொருளும்தன் கைக்கெட்டா தேங்கினன்சீர்*
*அண்டுமோ வஞ்ச கம்.*

கல்வியிலும் கள்ளமுறக் காட்டிக் களித்திழிவர்
புல்லறிவோர் பொய்மை புரிந்து.

சோரப் புலமை கொள்ளல் புல்லறிவாமென்பது இதனால் கூறப்பட்டது.

---

846 *நின்றபர்ந்தும் சும்ப நிசும்பரேன் புல்லரெனக்*
*குன்றி யிழிந்தார் குமரேசா—நன்றாக*
*அற்ற மறைத்தலோ புல்லறிவு தமவயிற்*
*குற்ற மறையா வழி.* (சு)

இ—ள்.

குமரேசா! சும்ப நிசுமபா சிறந்த செல்வமுடைத்திருந்தும் குற்றம்புரிந்து வந்தமையால் புல்லர் என ஏன் எள்ளநின்றார் எனின், தம வயின் குற்றம் மறையாவழி அற்றம் மறைத்தல் புல்லறிவு என்க.

இது, குற்றங் கூசாமையே புல்லறிவென்கின்றது.

அற்றம் என்பது சமயம் சோர்வு மறைவு முதலியவற்றை யுணர்த்திவரும். இங்கு மறைககத்தக்க அவயவத்தை அது குறித்து நின்றது. “அற்றம் காவாச் சுற்றுடைப் பூந்துகில்” என மணிமேகலையில் இது நின்றுணர்த்துதல் காண்க.

மறைத்தல் இரண்டனுள் முன்னது புனைந்து மூடுதல்; பின்னது ஒழித்து நீக்குதல். தம் வயின் = தம்மிடத்து. வயின் = இடம். மறையா வழி, புல்லறிவு எனற தனுல் மறைந்தவழி அது நல்லறிவாம் என்பதாயிற்று.

குற்றம் என்றது தீய செயல்களை. அவை, கள்ளல் பொய்த்தல் கள்ளுண்டயர்தல், எள்ளல் செருக்கல் இன்னுயிர் செகுத்தல், புறஞ்சொற் கூறல் பிறர்மனை நயத்தல் முதலிய பொல்லாத புன்மைகள் என்க.

இழிவான இக்குற்றங்களைக் கடிந்து நீக்கினவனே ஆண்மகனவன்; அவனே அரையில் ஆடைகட்டி வெளியில் வரலாம்; அல்லாதவன் தானும் ஒரு மனிதன்போல் அங்ஙனம் மறைத்து வருதல் முழுதும ஒளியிழந்த குருடன் அழகமைந்த கண்ணுடியை மூக்கிலிட்டுக்கொண்டு மேக்குற நோக்கி வருவதுபோல் நகைக்கேயிடமாகுமாதலால் அது புல்லறிவு என நின்றது.

மேல், புல்லறிவாளர் கலலாத மேற்கொண்டு கள்ளஞ் செய்வர் என்ருர்; இதில், அவர், பொல்லாத பழிகளைக்கூசாது பொருந்திநிற்பர் என்கின்ருர்.

தம்மிடத்துக் குற்றத்தை நீக்காராயின் அவர் ஆடையால் தமது தனியுறுப்பை மறைத்தலும் புல்லறிவாம் என்பதாம்.

அற்றம், உடலில் அமைந்தது. குற்றம், உயிரில் உற்றது. உயிர்மானத்தைக் காத்துப் பேணுமல், உடல் மானத்தை மட்டும் மறைத்துப் போற்றி அதனுல் ஒரு குறைவுமின்றித் தாமும் உயர்வுடையாராக மதித்து நிற்றல் மடமையாம் என்க.

மறைததற்குரிய உயர்ந்தவற்றை யெல்லாம் மறையாது விட்டு இழிந்ததொன்றனை மட்டும் மறைத்து அவ்வளவில் தம்மைச் சிறந்தவராகச் செருக்கிக் களித்தல் அறிவீனமாகுமாதலால் மறைத்தலோ புல்லறிவு என்ருர். ஓகாரம் தெளிவோடு இகழ்வும் தோன்றநின்றது.

தன்னிடத்தோ தன் குடும்பத்தின்கண்ணோ களைதற்குரிய குற்றங் குறைகளைக் களையாதுவிட்டுக் களித்து நின்ற ஒருவன்

மேட்டிமையோடு வெளியேவரின் அவனைக் கண்டவர் "இவன் வேட்டியுங் கட்டி வீதியில் வரவேண்டுமோ?" என இகழ்ந்து கூறுவதுங் காண்க.

அவமதிப்பிற்கு ஏதுவான இழிகுணங்களைத் தொலைத்தொழிக்காதவர் மதிப்புடையவர்போல் உடையுடுத்தி வெளியில் வரலாகாது; ஆடுமாடுகளைப் போலவே ஆடையாதிகள் யாதுமின்றி வறிதே அலைந்து திரியலாம்; அங்ஙனம் திரியின் விலங்குகள் என்று இரங்கி அவரை விலக்கி விடலாம்; அவ்வாறின்றித் தாமும் சிறப்புடைய மக்களென்று செருக்கிக்கொண்டு அதற்குரிய ஒழுக்கமில்லாமல் வழுக்கி நிற்றல் மிகவும் இழிக்கத்தக்கதாம் என்றவாறு.

பழிபாவங்களாகிய பழுதுகள் அணுகி யிழிவுறுத்தாவண்ணம் பார்த்துத் தம் உயிரைப் பாதுகாக்காமல் விட்டு உடலைமட்டும் உடையணிகளால் புனைந்து காத்து உளஞ் செருக்கி நிற்பர் புல்லறிவாளர் என்ற இதனால் அவரது போகுடைமை புலனும்.

உள்ளத்து மாசை யொழியார் உடன்மாசை
வெள்ளத் தொழித்து விதவிதமா—உள்ள
உடையணியால கோலம் உறுத்திக் களிப்பார்
கடையரிவ ரனறி யெவர் காண. என்பதுங் காண்க.

இழிகுணங்களை யொழிக்காமல் புல்லறிவாளர் இறுமாந்திருப்பர் எனபது கருத்து.

பழிக்கு ஏதுவான இழிகுணங்களைத் தன்னிடத்தே யுடையவன் புறத்தே வேறென்ன நலன்களை யெய்தியிருந்தாலும் அவன் இழிக்கப்படுவான என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சும்பநிசும்பரால் உணரப்படும்.

## கதை.

சும்ப நிசும்பர் என்பவர் சுந்தோபசுந்தருடைய புதல்வர். அவர் இகலி மாண்டுபோன பின்னர் இவர் முதல்வராகி ஒருமைபோடு நின்று தம உரிமையெய்தி அரசுபுரிந்தார். இவரது ஆட்சி மிக அஞ்சத்தக்கதாயிருந்தது. புலிகண்ட புல்வாயினங்கள்போல்

உயிர்களெல்லாம் மலிதுயமெய்தி நலிவுறுமாறு இவர் நிலவியிருந்தார். தாம் அடைந்துள்ள அரச இன்பம் என்றும் நிலையானதென்று நினைந்து களித்து எவரையும் மதியாமல் வீண் செருக்குக்கொண்டு இடரிழைத்து நின்றார். தம் மாபிற் சிறந்திருந்த அறிவுடைய முதியோர் சொல்லையுங் கேளாமல் தமமதி சென்றபடியே மதத்துத் திரிந்தார்.

வழுவிலோரையும் தாழ்வதொன் றின்மையாம மகுடம்;
எழுவ தின்மையாம் பீடம்; வந்தெவர் தொழுதிடினும
தொழுவதின்மையாம் கங்கணம்; முனைநெடுஞ் சுடர்வேல்;
குழைவதின்மையாம கயம; இறுமாப்பெனுங் கொடித்தேர்.

என்றபடியே இவர் கொண்டு வாழ்ந்தார். அடிக்கடி சென்று அமரர் பலருக்கும் அல்லல் விளைத்து அரம்பையர் சிலரைக் கவர்ந்துகொண்டு வந்து தாம் விழைந்தபடியெல்லாம் போகங்களை நுகர்ந்து மகிழ்ந்தார். சிறந்த பட்டாடைகளாலும் உயர்ந்த மணியணிகளாலும தம்மை யலங்கரித்துக்கொண்டு, விஞ்சையர் சித்தர் முதலிய தேவகணத்தவர் பலரும் நாற்புறத்தும் புடைசூழ்ந்து வரும்படிசெய்து, தாம குடைநிழலமர்ந்து குஞ்சரம் ஊர்ந்தும், வெஞ்சமர் புரிந்தும் யாவரும் அஞ்சலிசெய்து பணியுமாறு மிஞ்சி நிமிர்ந்து புன்செயல் பல செய்தார. இவரது தீச்செயலைப் பொறுக்கமாட்டாமல் வானவரும் மானவரும் வருந்துவதைக் கண்டு அருள் மீக்கூர்ந்து உமாதேவியார் கௌசிகை என்னும் ஓர் சத்தியை ஏவி இவர்க்குப் புத்தி சொல்லி வரும்படி புரிந்து விடுத்தார். அவள் கருணையால் வந்து இதமுறச் சொல்லியும் இவர் சிறிதும் உணர்ந்து கொள்ளாமல் அகங்கரித்து நின்றார். தமமை எவரினும் சிறந்தவராக எண்ணிக் களித்த இவரது புன்மையைக்கண்டு அம்மையும் புன்னகை செய்தார். "கல்லாமை கொலை தீமை களவு ஆசை யின்சொற், சொல்லாமை நடுவின்மை சுடுகோபம் இவையே, அல்லாமல் அறமேதும" அறியாராய இவர், மிகப் பெரியாரபோல் தம்மைத் தாமே வியந்து புகழ்ந்திருந்தாலும் அறிஞரனைவரும் தம்முள் இவரை அவமதித்தேயிருந்தார். முடிவில் இழிவோடு இவர் முடிந்து தொலைந்தார். தம் வயின் குற்றம் மறை

யாவழி ஆடை முதலியவற்றால் அவர் அற்றம் மறைத்து அலங்கரித்து வியப்புற நின்றாலும் புல்லறிவாளர் என்றே எல்லாரும் அவரை இகழ்வர் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

மண்டுபழி மிக்கிருந்தும் மாண்புடையேம் என்றுகளி
கொண்டெழுவார் புல்லர் குறி.

உள்ள குற்றத்தை நீக்காமல் வெளியே அலங்கரித்து வருதல் புல்லறிவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

847 கேசியேன் தேறாமல் கேடுசெய்து தானுகக்
கூசி மடிந்தான் குமரேசா—ஆசில்
அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு. (எ)

இ—ள்.

குமரேசா! கேசி என்பவன் மதிமறந்து தனக்குத் துன்பத்தைத் தானே ஏன் விளைத்துக்கொண்டான் எனின், அருமறை சோரும் அறிவிலான், தானே தனக்கு பெருமிறை செய்யும் என்க.

இது, புல்லறிவாளர் மறப்புங் கேடும் மருவி இழிவர் என்கின்றது.

அருமறை = அரிய மறைப்பொருள்; அஃதாவது அருமையாகத் தனக்குக் கிடைத்திருந்த உபதேச முதலிய மந்திரங்களை என்க. மிறை = துன்பம். சோர்தல் = மறந்துபோதல், தளர விடுதல்.

மேல, புல்லறிவாளர் குற்றம் நீக்காராய்க் கொடுங்களி கொள்வர் என்றார்; இதில், தமக்குத் தாமே பெருந்துன்பங்களை அவர் பேணிக்கொள்வர் என்கின்றார்.

அரிய மறைப் பொருளைச் சோரவிடும் புல்லறிவாளன் தனக்குத்தானே பெரிய துயரங்களைச் செய்துகொள்வான் என்பதாம்.

அறிவிலான் மறைசோரும்; மிறைசெய்யும்; எனத் தனித் தனி காணினும் அமையும்.

கிடைத்தற்கரிய மந்திரப் பொருள் தெய்வாதீனமாத் தனக்குக் கிடைக்கப் பெற்றாலும், அருமையறிந்து பேணுமல் புல்லறிவாளன் அதனை ஒழிய விடுவன் என்பார் அருமறை சோரும் என்றார்.

சங்கசூடன், விரோசனன் செய்துகொண்டதுபோல் தான் இறந்துபடுதற்கு ஏதுவான பெருந்துன்பத்தைப் புல்லறிவினன் தானே செய்துகொள்வன் என்பார் தனக்குத் தானே அறிவிலான் பெருமிறை செய்யும் என்றார்.

தான் அழிதற்கேதுவான வழியைப் புல்லறிவாளன் தானே ஆக்கிக்கொள்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கேசிபால் உணரப்படும்.

கதை.

கேசி என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் வடமதுரையிலிருந்தவன். அசுரர் மரபினன். மாயத்தொழில்கள் செய்வதில் இவன் மிகவும் வல்லவன். தன் மரபிலிருந்த பிந்துசேனன் என்னும் ஓர் முனிவனிடமிருந்து அரிய மந்திர வித்தையை இவன் அறிந்திருந்தான். அதனால் நினைத்த வடிவங்களை யெடுத்து நெஞ்சுபோனபடியெல்லாம் வஞ்ச வினைகள் செய்து யாதும அஞ்சானய்த் தீதமைந்து நின்றான. இவனது திண்மை வன்மைகளையும செய்திறங்களையும் கண்டு கஞ்சன் இவனைத் தனக்கு நண்பனுககிக் கொண்டான். அத்தீயவன் ஏவியபடியெலலாம் இவன் தீயவினைகளைச்செய்து நேயமிக்கிருந்தான். தேனுகன், பானுகம்பன், அரிட்டன், சார்வாகன, சாலுவன், விடூரகன் முதலிய கொடியவர்களோடுவரும் உறவுகொண்டாடி உவந்து புகழ இவன் உளங்களித்து வந்தான். கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் என்றபடி இப்புல்லறிவாளர்களைச் சேர்த்து வைத்து அப்பொல்லாதவன் எல்லார்க்கும் இடரிழைத்து வருங்கால் கண்ணனையும பலராமனையும காவாகக் கொன்றுவருமபடி இவனைக் கூவி விடுத்தான். கருநாயிறுபோல் இளம்பருவத்தோடு கோகுலத்தில் வளர்ந்து வருங்கால் அக்களங்கனி வண்ணனைக் கொல்லத் துணிந்து இப்புல்லன் புகுந்தான். இளைஞர்க்

கும் என்போன்ற முனிவர்க்கும் இடரிழைத்தால் அன்று உனக்கு அழிவு தோன்றும் என்று தன் குரு மொழிந்திருந்த அரிய மறையினையும் மறந்து ஒரு குதிரை யுருக்கொண்டு பாய்ந்து துள்ளிப் பசுக்களோடு கலந்து அப்பசுக் குழுவினையணுகி விழுங்கிவிடுமாறு தன் பாழ்வாய் திறந்தான். அச்செவ்வாய்ச் சிறுவன் சிறிதும் அஞ்சாமல் தன் கையை இவன் வாய்க்குள் விடுத்து வயிறளவும் புகுத்தி மேலும் வளரச் செய்தான் அதனால் உடனே இவன் அலறி இறந்தான். பகைவர் பலர் சூழ்ந்து நின்று கொன்றாலும் கொல்லமுடியாத இவன் தான் கொண்டிருந்த மறையினை மறந்து தன் புல்லறிவினால் அல்லல் செய்து தானாகவே குன்றி மடிந்தான். அருமறை சோரும் அறிவிலான் செய்யும் பெருமிறை தானே தனக்கு என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. இப்புல்லறிவினன் மறைசோர்ந்து புகுந்து தனக்கு மிறைசெய்து கொண்டதைக்குறித்து ஆரியப்பப்புலவர் அழகுறக் கூறியுள்ளார். அடியில் வருதல்காண்க.

பூசுறு பருதிபோலப் பொன்னணிந் திலகு மார்பன்
பாசிலைப் படலைமாலை பங்கயக் கண்ணனோடு
மாசறு திங்கள்மேனி வள்ளலையடுக வென்னாக்
கேசியை அழல் வெஞ்சீற்றங் கிளர்ந்தெழ ஏவினானால். (க)

அவிருளை புதறி வானம் அலக்கணுற் றிரிய ஆர்த்துப்
புவிமுது குளுக்கப் பாய்ந்து பூந்துழாய்க் கொண்டல் முன்னர்க்
கவிகுளம் பெறியுந் தூளி கருங்கடல் தூர்ப்ப மற்றாங்கு
இவுளியாய்க் கேசி என்னும் எறுழ்வலி அவுணனேற்றான். (உ)

விழுங்குவான் போலச் சால விரிந்ததி வாயினூடு
பிழிந்துபேய் ஆவியுண்டோன் பிறங்கும் பாற்றொடிக்கை நீட்டி
வழிந்தழ கொழுகு செங்கை வளர்த்தனன் வளர்ப்ப ஆகம்
கிழிந்தவாம் புரவியாய கேசி மாண் டுயிர நீத்தானால். (பாகவதம்)

பேய் ஆவியுண்டோன் = கண்ணன். அவன், கைநீட்டி வளர்ப்ப, கேசி உயிர் நீத்தான் எனக் காண்க. மேற்குறித்த இப்புல்லன் புன்மையும், மறைசோர்ந்து மதியின்றி மிறை செய்தழிந்த தன்மையும் இதன்கணும் விளங்கி நிற்றல் காணக.

புல்லறிவு தீமையெலாம் போதப் புகுத்துமுயர்
நல்லறிவே நல்கும் நலம்.

தமக்குத் துயரினைத் தாமே புல்லர் விளைத்துக் கொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

848 தேர்ந்துணரா அந்தகனென் றிர்ந்தொழியு மவ்வளவும்
கூர்ந்துநின்றான நோயாக் குமரேசா—சார்ந்தவர்தாம்
ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய். (அ)

இ—ள்.

குமரேசா! அந்தகாசுரன் அழிந்துபோம்வரையும் எல்லார்க்கும் ஒரு பெருந்துயராய் ஏன் அமைந்து நின்றான் எனின், ஏவவும் செய்கலான்; தான் தேறான்; அவ் உயிர் போஓம் அளவும் ஓர் நோய் என்க.

இது, புல்லறிவாளன் இருத்தல் எல்லார்க்கும் துன்பமாம் என்கின்றது.

ஏவவும் = அறிவுடையார் சொல்லவும்; ஏவுதல் = தூண்டுதல், கட்டளையிடுதல். உம்மை எதிரது தழீஇ நின்றது.

அவ் உயிர் என்றது புல்லறிவுடையனாய் நின்ற அச் சீவன் என்றவாறு.

போம் அளவும் = உடம்பைவிட்டு அவ் வுயிர் நீங்கிப் போகும் வரையும். அளபெடை செய்யுளோசையை நிறைக்கவந்தது.

மேல், புல்லறிவாளன் மறப்புடையனாய் நின்று தனக்குத் தானே இறப்புத் துன்பத்தைச் செய்துகொள்வன் என்றார்; இதில், இவ் வுலகிற்கே அவன் ஓர் நோயாம் என்கின்றார்.

இது நல்லதென்று அறிவுடையார் சொலினும் செய்யான்; தானாகவும் தெளியான்; அப் புல்லறிவாளனுயிர் போயொழியும் வரையும் இவ்வுலகிற்கு ஓர் பெருநோயாம் என்பதாம்.

தனக்கு இதமான நலங்களை நாடி ஆராய்ந்து நல்லோர் நயந்து சொல்லினும் புல்லறிவினன் உணர்ந்து செய்யான் என்

பார் எவவும் செய்கலான் என்றும்; அங்ஙனம் செய்யா தொழியி னும் தானாகவாவது தனக்கு உறுதியாயவற்றைத் தெளிந்து கொள்ளான் எம்பார் தான் தேரான் என்றும் கூறினார்.

தனக்கும் புத்தி இல்லை; சொற்புத்தியும் கேட்கமாட்டான் என்றபடி.

உறுதிப் பொருளை அருளோடு நல்லறிவாளர் வற்புறுத்திச் சொல்லினும் நல்லதென்று தம் செவிசாய்த்துப் புல்லர் அதனை ஏற்றுக்கொள்ளார் என்ற இதனால் அவரது ஈனத்தன்மை புலனும்.

தாடகை நெஞ்சில் இராமன் அம்பு தங்காது விரைந்து வெளியே போனதைக் குறித்து விளக்குங்கால் "கல்லாப் புல்லர்க்கு நல்லோர் சொன்ன பொருளெனப் போயிற்றன்றே" என்று கம்பர் கூறியதும் ஈண்டுக காணத்தக்கது. சொன்னசொல் என்றது பொருளை என்று அப் புலவர் பெருமான் பொதிந்து வைத்திருக்கும் அருமை நயங்களை ஆராய்ந்துணர்ந்து கொள்க.

குருடோடு செவிடுங் கலந்த ஒருவனுக்கு வழியறிவிக்கும் படி அயல்நின்று ஒருவன் உரையாடுதல்போல் அகக்கண்பொன்றி மிகச் செருக்கி நிற்கும் புல்லர்க்கு நல்லறிவு கூறுதல் அவமாம் என்பது கருத்து.

புல்லறிவாளன் இல்லாதொழிதலே இவ்வுலகிற்கு நல்லதாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அந்தகாசுரன் பால் உணரப்படும்.

## கதை.

அந்தகாசுரன் என்பவன் இரணியாக்கனுக்குப் புதல்வனாய்த் தோன்றித் தானவர்க்கெல்லாந் தலைவனாய் நின்றவன். வானவர் முதலாக யாவரும் அஞ்சத்தக்க வலியினையுடையவன். மிகவும் கொடிய நெஞ்சினன்; நெடிய கரிய பெரிய உருவினன். இடர்கோடி எய்துவதாயினும் தான் கொண்டதை விடாத கண்டகன். உயர்ந்த அரச பதவியையடைந்து சிறந்திருந்தாலும் இழிந்த வினைகளையே நாளும் இவன் விழைந்து புரிந்தான். விகசன் வைபவசன் அத்தி என்னும் இவர் இவனுக்கு மந்திரிகளாயமைந்திருந்தனர். அவர் திண்ணியராயினும் மிகத்தீயவர். இவன்

எண்ணியபடியெல்லாம் இசைந்துகூறி வஞ்சை வளர்த்து வந்தார். அப்பொல்லாத மந்திரிகளோடுகலந்து இப்புன்மையாளன் செய்து வந்த தீவினைகள் பல. மாலினி வாகினி மதனசிலை முதலிய மனோ வியா இருபதின்மரை மருவிக்களிக்கக்கோடு அமையாமல் அழகும் இளமையும் அமைந்த அமர மங்கையர் பலரை வலிதின் வௌவிக் கொணர்ந்து தான் விழைந்தபோதெல்லாம போகங்களை நுகர்ந் தும் கள்ளுண்டயர்ந்தும் களிமீக்கொண்டு மன்னுயிர்க்கெல்லாம் இவன் இன்னல்மிகச் செய்தான். அடிக்கடி வானுலகம் புகுந்து தேவர்களை வருத்தினன். இவனது மடமையால் விளையும் கொடு மையைக்கண்டு சகலர் என்னும் முனிவர் ஒருநாள் இவன்பால் வந்து காமக்களிப்புகளின் தீமையை விளக்கி ஆருயிர்கட்கு அல் லல்செய்யாவண்ணம் அமைந்து வாழுமாறு பல நீதிகளை யினிது கூறி அறிவுறுத்தினர். அதனை இவன் சிறிதும் கேளாமல் பொறி களால் அனுபவிக்கும் போக நலன்களைப் பெரிதும் போற்றி அவ ரையும் தனைபோல அமர்ந்து வாழுமாறு இவன் எதிர்ந்துகூறி மறுமை முதலிய மறை முறைகளை இகழ்ந்து நகைத்தான்.

"யாழினும் இனிய சொல்லும் ஏந்திள முலையும் செய்ய
மாழையை வகுத்தாலன்ன வடிவமும் பவளவாயும்
சூழியின மணமும் துய்த்துத் தோகையர் போகங்கொள்ளாக்
கோழையரவரே யல்லாற் குணபம் வேறுலகத்துண்டோ. (க)

அமைக்கொத்த தோளினர்தாள் அலர்த்தகச் சுவடுதாங்கி
இமைகிற்செய் புலவிநீக்கி இளமுலைப் போகங்கொள்ளார்
உமிக்குத்திக் கைகநொந்தோயும் உணர்விலார் புகல்பொய்வேடம்
தமைப்பற்றிச் சிலர்மெய்வாடித் தாணிமேற்றிரிவர் அந்தோ. (உ)

கனத்திறமாந்து விம்முங் கதிர்முலைத் தடத்தில்மூழ்கிப்
புனக்கொடி மாதர் செவ்வாய்ப் புத்தமுதுண்டு கூந்தல்
இனககடி மலர்பெய்காவின் இன்னிழல் வதியார்;வாளா
வனக்கிழங்குண்டு சில்லோர் மறுமைவேட்டழிவர் மன்னே. (ங)

பாகத்திற் கலந்தும், நாவிற்பதித்தும், தன் குறங்கில் வைத்தும்
ஆகத்திலணைத்தும், அன்றே! அரன் அயன் வலாரி மாயன்
போகத்திற் பெரியானர் ; பொருந்திய வாறு நீரும்
மேகத்தின் மின்னன்னாரை விரும்பியே கூடி வாழ்மின்" (ச)

என்று இன்னவாறாய கொள்கைகளைப் பலபட விரித்து இவன் களிமிகுந் துரைத்ததைக் கேட்டு அவர் யாதும் கூறாது சீறிப் போயினார். இவன் யார் சொல்லையும் கேளாமல் மேலும் தீமைகளை மிகச் செய்து முடிவாக ஒன்று கருதினான். அஃதாவது "சிவபெருமானை வென்றுவிட்டால் அகில உலகங்களுக்கும் தான் முதல்வனாகி எல்லா இன்பங்களையும் இனிது நுகரலாம்" என்று எண்ணிக் களித்தான். இதிலிருந்து இவனது புல்லறிவு எவ்வளவினது என்பது இனிது தெளியலாம். எவர் தடுத்தும் கேளாமல் தான் கருதியபடியே படைகளோடு சென்று அப் பரமனை யடைந்தான். இக் கொடிய மூடனைச் சிறிதுநேரம் அமர் புரியும்படி விட்டு இறுதியில் அம் முதல்வன் சூலத்தால் குத்திச் சுழற்ற இவன் குலைந்து முடிந்தான். அறிஞர் சொன்னதையும் உணராமல், தானாகவும் தெளியாமல் அகங்கரித்து இவன் அழிந்ததனை நினைந்து அமரரெல்லாரும் ஓர் கொடுநோய் நீக்கம் பெற்றார்போல் பெருக மகிழ்ந்தார். ஏவவும் செய்கலான் தான் தேறான் அவ்வுயிர்போம் அளவும் ஓர் நோயாம் என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைச் சிவமகாபுராணத்தில் காண்க.

கந்தடு புழைக்கை கால்வாய்க் கடாக்களிற் றுருத்தல போலும்
அந்தகாசுரன் றன்மார்பத் தழிபெருங் குருதி கால
இந்திரன் முதலதேவர் இறைஞ்சினா தொழுது வாழ்த்தக்
கொந்தழற் சூலவேலாற் குத்தியீ தேந்தினானே. (கூர்மபுராணம்)

இவன் சரிதம் இவ்வாறு கூர்ம புராணத்தும் கூறப்பட்டுள்ளது.

இழிமதிசேர் புல்லர் இருத்தலிடர் இன்றி
ஒழியின் இனிதாம் உலகு.

புல்லறிவினர் வாழ்தல் மிகவும் அல்லலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

849 காட்டியுமேன் தக்கனன்று காணாமல் கண்டதிலே
கோட்டிகொண்டு நின்றான் குமரேசா—நாட்டமுடன்
காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான்கண்ட வாறு. (க)

இ—ள்.

குமரேசா! புலகர் ததீசி முதலாய பேரறிவாளர் உண்மைப் பொருளைக் காணுமாறு உணர்த்தியும் தக்கன் அன் காணுமல் தான் கண்டதையே துணிந்துகொண்டிருந்தான் எனின், காணுதாற் காட்டுவான் தான் காணுன்; காணுதான் தான் கண்டவாறு கண்டாளும் என்க.

இது, புல்லறிவாளன் நல்லவர் சொல்லைக் கேளான் என்கின்றது.

காணுதாற் காட்டுவான் = காணுதானைக் காட்டுவான். இரண்டாம் வேற்றுமை யுருபு உயர்திணையில தொக்கு வந்தது.

காணுதான் என்றது புல்லறிவாளனை; தனக்கு எல்லாந் தெரிந்திருப்பதாகப் புல்லறிவாளன எண்ணியிருப்பன்; அதனுல் பிறரிடமிருந்து நல்ல அறிவுகளை அறிந்துகொள்ளவேண்டும் எனும் அறிவில்லாதாணுய் அகந்தெருக்கி நிற்பன் ஆதலால காணுதான் என அவனைக் காணவைத்தார்.

காட்டுவான் என்றது புல்லறிவாளனுக்கு நல்லறிவுசொல்லப் புகுவான் என்றவாறு.

காணுதான் கண்டாளும்; காட்டுவான் காணுனும்; என்று அடிகள் அணிபெற அருளியிருக்கும் இதனழகை ஆய்ந்து நோக்குக.

மேல், புல்லறிவாளன் பிறர் சொல்லையும் கேளான்; தானுகவும் நல்லதைத் தெரிந்துகொள்ளான் என்ருர்; இதில், அவனுக்கு அறிவுசொல்ல வருவாரை அவன் அவமதித்துவிடுவன் என்கின்ருர்.

அறிவில்லாதானை ஒருவன் அறிவிக்கப்புகுவானுபின் அவன் தானே அறியானுய் முடிவான்; அவ் அறிவில்லாதான் தான் அறிந்தபடியே அறிந்துகொண்டாணுய் மகிழ்ந்துவிடுவான் என்பதாம்.

தான் எல்லாந் தெரிந்தவனுக எண்ணிக் களித்துப் புல்லறிவுடையவன் இறுமாந்திருப்பானுதலால் அவனுக்கு நல்லறிவு சொல்லலாகாது; சொல்லின் சொன்னவனையே அறிவில்லாதவ

ளுக அவன் அவமதித்துவிடுவன் என்றவாறு. எனவே அங்ஙனஞ் சொல்லலை ஒழித்துவிட வேண்டும் என்று இதில் உணர்த்திய தென்க. இதனை எளிதில் உணர்ந்துகொள்ளுமாறு காணுதானையும் காட்டுவானையும் ஒரு சேர எடுத்துக் காட்டினர்.

புல்லறிவுடைய ஒருவன் தன்னையொத்த சிலர் குழுமியிருந்த இடத்தில் தான் கேட்டிருந்த பாட்டொன்றினைப் படித்துக் காட்டித் தன் வாய்கருவந்தபடி அதற்கு வழுப்படப்பொருள் கூறினன்; அவ்வமயம் அங்குவந்த ஓர் அறிவாளன் அவ் வழுக்களைக் கேட்டுச் சகிக்காமையால் அவனைத் தனியே மெல்ல அழைத்து அதன்பொருள் அன்னதன்று; இன்னதாம் என உண்மைப் பொருளை உளம் இரங்கி உரைத்தான்; அவன் அதனை ஒத்துக்கொள்ளாமல் "இதற்கு இதுதான் பொருள்; எனக்கா நீ புத்தி சொல்லுகின்றவன? எல்லாம் எனக்குத் தெரியும்; என்னை யார் என்று நினைத்தாய்? உனக்கு இதில் என்னதெரியும்? ஒன்றுந் தெரியாது போபோ" என்று பெருங்குரலிட்டு வாயடியடித்தான்; பாவம்! போனவன் என்னசெய்வான் புன்னகைசெய்து சிறிது நாணமுங்கொண்டு மீளலாயினன்; அங்கிருந்த புல்லரும அவனது வாயடியைக் கண்டு வியந்து அவனே உண்மைப் பொருளை கண்டவனாக உவந்து கொண்டார்; தன் ஆற்றலை நினைந்து அவனும் அகஞ் செருக்கி மகிழ்ந்து நின்றான்; இந் நிகழ்ச்சியை அயலே நின்று கண்டிருந்த ஒருவன், என்னே இது! காணுதானைக் காட்டுவானாய் வந்தவன் தானே காணுதவனாய் நாணிப் போனன்; காணுதான் தான் கண்டவாறு கண்டானே! இக் காலநிலை தான் என்னே! என்று அவன் கருதி யிரங்கியபோது இவ் அருமைத் திருக்குறளை நினைந்து அளவிலுவகையெய்தி நம் தேவரது தெய்வப் புலமையை வியந்து துதித்துப் பின்பு அமயம்வாய்த்த போதெல்லாம் புல்லறிவாளர்க்கு நல்லறிவு சொல்லின் அல்லலாம் என இதனை ஓதிக் காட்டி உணர்த்திவந்தான் என்பர். இஃது ஈண்டு உணரத்தக்கது.

கோவாத சொல்லுங் குணனில்லா மாக்களை
நாவாய் அடக்கல் அரிதாகும்—நாவாய்
களிகள்போற் றாங்குங் கடற் சேர்ப்ப வாங்கி
வளிதோட் கிடுவாரோ இல். (பழமொழி.)

காற்றைப்பிடித்து வளைத்து அடக்கித் தன் தோள்மேலிட்டுச் செல்லுதல் ஒருவனுக்கு எவ்வாறு முடியாதோ அவ்வாறே நல்லதைச் சொல்லிப் புல்லறிவாளரை யடக்கி நல்வழிப்படுத்த முடியாது என இஃது உணர்த்திநிற்கும் அழகை உற்றுநோக்குக.

தெரிந்திலாதவனைச் சுகமாய்த் தெரியச்செயலாம்; விசேடமதாய்க்
தெரிந்தவனை நேராய்த் தெரியச் செயலாம்; நலந்தீங்கிது வெனவே
தெரிந்துந் தெரியாமூடனைச் சீர்திருத்தித் தெரியச் செய்ய எல்லாம்
தெரிந்து விதிக்கப்படும பிரமதேவன் றனக்குமுடியாதே. (௧)

இடங்கர்வாய் மாமணியை யெடுத்திடலாம்; நெடுந்திரைசூழ்
தடங்கடலைத் தாண்டிடலாம்; தலையின்மேல மாலையதாய்ப்
படங்கொள்பாம் பணிந்திடலாம; பாழ்மூடர்க் கறிவுறுத்தி
அடங்கி நடந்திடச் செயவல் லாரொருவர் இல்லையே. (௨)

நீணிற மணலில் எண்ணெய் யுண்டாகினும்
கானல்நீ ரெடுத்துத் தாகத்துக் குண்ணினும்
கூன் முயற்கோடு கைக்கொளினும் மூர்க்கரைத்
தானிதப் படுத்திடத் தகாதியார்க்குமே. (௩)

எவன் மதகரியைத் தாமரைத் தண்டின் இழையினாற் கட்டவல்லவனோ
எவன் வயிரத்தை வாகைமென் பூவால இருபிளவாக்க வல்லவனோ [வனோ
எவன் மதுத்துளியால் உவர்க்கடலினைத்தும் இனிமையுண்டாக்க வல்ல
அவன் இத வசனத்தாலு மூர்க்கரை நேராக்கிடச் செய்திடவறிகே. (௪)
(பர்த்துருகரி).

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுத்த முடியாதென்பதை உறுதிபெற இவை உணர்த்தி நிற்றல் காண்க

வென்றிப் பொருட்டால் விலங்கொத்து மெய்க்கொள்ளார்
கன்றிக் கறுத்தெழுந்து காய்வாரோ—டொன்றி
உரைவித் தகமெழுவார் காண்பவே கையுட்
சுரைவித்துப் போலுந்தம் பல். (நாலடியார்)

தாம் கண்டதையே சாதித்து முதலைபோல் கொண்டதை விடாமல் மண்டி நிற்கும் புல்லர்க்கு நல்லதை வற்புறுத்திச் சொலலற்க; சொல்லின் அவர் சிறிதும் இருந்தார்; சொன்னவனது பல்லை உதிர்த்துக் கையில் கொடுத்துவிடுவர் என இஃதுணர்த்தி நிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

களிப்பு மீக்கூர்ந்து செருக்கு மேற்கொண்டு புல்லறிவாளர் இருப்பாராதலால் நல்ல உறுதிகளை நல்லோர் நயந்து சொல்லினும் அவர் உணர்ந்து கொள்ளார். இவ்வுண்மை இரணியன், இராவணன், சூரபன்மன் முதலாயினோர்கட் காணலாம். தன் அண்ணன் அல்வழியில் மிதந்ததை யறிந்து சிங்கமுகன் அகம் மிக வருந்தி எம்பெருமான் பெருமையை எவ்வளவோ எடுத்துக்காட்டி ஏதுவோடு அறிவுறுத்தியும் அவன் அறியமாட்டானாய் இவனை அவமதித்து அறிவில்லாதவனே யென்று இழித்துப் பெரிதும் வைதான்; அறிவுகாட்டப்புகுந்த இவன் மிகவும் நொந்து புல்லறிவின் நிலைமைய யந்நினைன். அதுபொழுது இவன் உரைத்தவற்றுள் சில இதனடியில் வருகின்றன.

உறுதியை உரைத்தனன் உணர் விலாதவன்
வறிதெனா இகழ்ந்தனன் வருவதோர்கிலன்
இறும்வகை நாடினன் யாதோர் புந்தியை
அறிவிலார்க்கு உரைப்பவர் அவரிற் பேதையோர். (க)

உய்த்தனர் தேன்மழை உதவிப் போற்றினும்
கைத்திடல் தவிருமோ காஞ்சிரங்கனி
அத்தகவல்லவோ அறிவிலாதவன்
சித்தம துணர்வகை தெருட்டுகின்றதே. (உ)

தொலைகரும் திருவுடைச் சூரன் புந்தியைக்
கலக்கினும் உய்வகை கருதுகின்றிலன்
அலகுகணுற்றிருந்து நாம் இரங்கி யாவதென்
விலக்கரும் விதியையாம் வெல்ல வல்லமோ. (கந்தம்.) (ந)

உய்த்துணர்த்தினும புல்லறிவினர் உணர்ந்துகொள்ளாராய் இகழ்ந்து விடுவர் என்பதும், காணாதார்க் காட்டுவார் தாமே காணாய்கலங்கி நிற்பர் என்பதும் இவற்றுள் விளங்குதல் காண்க.

அறிவின்றி அகஞ்செருக்கி நிற்கும் புல்லார்க்கு நல்லறிவு சொல்லல் அல்லலாதுமாதலால் அங்ஙனம் சொல்லலாகா தென்பது கருத்து.

நன்சொல்லே மேற்படுப்பான், தண்டி, தடி, பிணக்கண்,
புன்சொல்லே போதாவு பார்த்திருப்பான்,—இன்சொல்லை
என்றிருந்துங் கேளாத ஏழை, என இவர்கட்
கான்றவர்கள் கூறுர் அறம். (அறநெறிச்சாரம).

ஒருவகையானும் உணர்ந்து திருந்தாமல் தம்மையே பெருக மதித்து உளங்களித்திருக்கும் புலலறிவாளர்க்கு உறுதிகூறல் பயனில்செயலாம என இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

எவ்வளவு இதமாக எடுத்துச் சொன்னாலும் புல்லறிவாளர் உணர்ந்து தெளியார்; அவரை உணர்த்தச் சென்றவரே இகழ்ந்து படுவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புலகர் பால் உணரப்படும.

## கதை.

புலகர் என்பவர் அருமறை முழுவதும் வழுவறப்பயின்ற ஓர் அந்தணர் திலகர். நல்ல விரதசீலர். இவர், பிருதியை என்னும் அழகிய ஒரு கன்னியை மணந்து இல்வாழ்க்கையை இன்புற நடத்திப் பின்பு தவவொழுக்கினை மேறகொண்டு செவ்விய தண்ணளியாளராய் எவ்வுயிர்க்கும இதஞ்செய்திருந்தார். அழகிய தோற்றமும் விழுமிய பார்வையும் புனித நீர்மையும இனிய சொல்லு முடையவர். முனிவரும் பிறரும் இவரை மிக மதித்திருந்தனர். நல்லன நாடிச் சொல்லி அல்லலுறுவகை யாரையும இவர் நல்வழிப்படுத்தும் இயல்பினர். தக்கன செருக்கு மிகுந்து யாம்பொருளை யிகழ்ந்து மறம்புரிந்து வருதலை இவர் அறிந்து வருந்தினர். அவம் திரிந்து அறிவின்மையால் அவன் அழிந்து போவனே யென்று இரங்கி அவனுக்கு அறிவு கொளுத்த விழைந்து ஒருநாள் அவனுழையணுகினா. அவனும அகந்தையோடு வருக என்று முதலில் சிறிதுபசரித்தான். அவனது அமயம் நோக்கி இதமாகத் தாம் உள்ளிவந்ததை இவர் உறுதிபெற உரைத்தார். "உயர்ந்து திகழ்தற் குரியார், எவரையும் இகழ்ந்து கூறலாகாது; இழிவுரையாடல் அழிவினை செய்கையாம்; தன்னை யொத்த மக்களை இகழினும் மிக்க கேடாமே! ஒப்பற்ற முதகண் அப்பனைப் பழிப்பின் எப்படிப் பிழைப்பாம்? பிறர்க்கு அல்லல்

செய்யாமையே என்றும் தனக்கு நல்லதாகும்" என எவ்வளவோ அறங்களை எடுத்துக் காட்டியும் அவன் யாதும் தேறாமல் பொருளில்லாத உமக்கு என்னுடைய அருமை என்ன தெரியும்? உமக்கு அறிவு போதாது; அகன்றுபோம் என்று அவன் அவமதித்து நின்றான். மிக்க அறிவுடைய இவர் அவ் அறிவிலானுக்கு அறிவிக்கப் புக்கதால அறிவில்லாதவர் என அவனால் அவமதிக்கப் பட்டார். காணாதானைக் காட்டுவான் தான் காணான்; காணாதான், தான் கண்டவாறே கண்டானும் என்னும் உண்மையை உலகம் காண அன்று இவர் உணர்த்தி நின்றார். அப் புல்லறிவாளனுக்கு இவர் நல்லது சொல்லப்புக்க உண்மையைக் கச்சியப்பசுவாமிகள் விளக்கிக் கூறியுள்ளார். அடியில் வருவனவற்றுள் சிறிது காணலாம்.

தகவும் ஈரமும் நீங்கிய புரைநெறித்தக்கன்
புகலும் வாய்மையைத் தேர்ந்துழிப் புலகனென் றுரைப்போன்
நிகரில் கண்ணுதற் கடவுளை எள்ளலை; நின்னை
இகழ்வர் யாவரும்; எஞ்சும் உன் வெறுக்கையு மென்றான். (க)

என்றவன்முகம் நோக்கியே தவத்தினால் என்கண்
நின்ற இத்திரு நீங்குமோ? நெடியமால் முதலோர்
ஒன்றும் எனபணி மறந்திலர் எள்ளுவதுண்டோ
நன்று நன்றுநின் உணர்வெனச் சிறுவிதி நக்கான். (உ)

முறுவலித்திடு தக்கனைக் கண்ணுறீஇ முனிவன்
பிறரிழிப்புரை கூறுறு தென்னினும; பெருஞ்சீர்
குறைவுபெற்றிடா தெனினுய; நினக்கருள் கொடுத்த
இறைவனைப்பழித் திடுவது தகுவதோ என்றான். (கந்தம்) (ங)

இன்னவாறு என்னவகையாக எடுத்துக் காட்டினும் இகழ்ச்சி மீக்கொண்டு அவன் இறுமாந்தே யிருந்தான். பின்பு ததீசி சிவந்து இவன் அழிமதிகொண்டு ஒழிவுறுகின்றானே! என்று உளமிரங்கி யுரைத்தும் ஒன்றும் உணர்ந்துகொள்ளாமல் தான் கருதிநின்றபடியே பெருகியிருந்து பரமனை இகழ்ந்தான்.

கழிந்த தியுடல எந்தியே திரியுமோ? கானில்
இழிந்தகேசமும் தரிக்குமோ? ஏனத்தின் எயிறும்,
ஒழிந்த கூருமக்கோடும், மேற்கொளளுமோ? உலகம்
அழிந்திடும்படி உயிர்களை முடிக்குமோ? அமலன். (க)

புலியி னீருரி உடுக்குமோ? தந்தியின் புன்தோல்
வலிய தன்புயம் போர்க்குமோ? செந்தழல் மழுமான்
இலைகொள் முத்தலை வேற்படை ஏந்துமோ? எங்கும
பலியும் ஏற்குமோ? நிருத்தமும் செய்யுமோ? பரமன். (உ)

மிக்கசாரதர் படையெனத் திரியுமோ? விடமே
கக்கும் வெம்பணி பூணுமோ? வெண்டலை கலமாச்
செக்கர்மாமுடி தரிகருமோ? அம்பரத் திசையா
நக்கனாகுமோ? வேற்றுருக் கொள்ளுமோ? நாதன். (ங)

விடையும் ஏறுமோ? ஆலமும் கொள்ளுமோ? வீந்தோர்
சுடலை தன்னினும் ஆடுமோ? ஒருத்தியைச் சுமந்தோர்
மடமகட்கிடங் கொடுக்குமோ? மகவையும் பெறுமோ?
கடியதோர் குணம் படைக்குமோ? பரமெனுங் கடவுள். (ச)

என்பதாதியாக உண்மை புணர்வின்றிக் கண்மூடித்தனமாக அவன் உளறி நின்றான். முனிவர் தம்மாலானவரையும் உண்மையை யறிவுறுத்தியும் அவன் அறியாமல் அவரையே அறிவில்லாதவரென்று அவமதித்தான்.

வல்லாரத் தம்மை யெண்ணி மதித்துமீச் செருக்கி நல்லோர்
சொல்லுறும் உறுதிகொள்ளாத் துகளெழு மனத்தராய
புல்லறி வுடையோர்க்கந்தோ புகுந்துபோய்ப் போதமூட்டல்
அல்லலாம்; அவமதிப்பாம்; அவரை விட்டொழிதல் நன்றே.

என்று அவர்கன்றி அகன்று போயினர். தான் கண்டவாறே கண்டு அவன் களித்திழிந்து புல்லறிவோர்க்குப் போதம் ஏறா தென்பதைஎல்லாரும் உணர உணர்த்தி நின்றான்.

கல்லைக் கனிவிக்கக் கையிடல்போ லாகுமே
புல்லர்க் கறிவூட்டல் போய்.

புல்லறிவாளர்க்கு நல்லறிவு கொளுத்த இயலாதென்பது இதனால் கூறப்பட்டது.

850 உள்ளநலம் இல்லையென்றான் ஓராக் குசலன்பின்
கொள்ள நின்றான் தீதென் குமரேசா—உள்ளி
உலகத்தா ருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும். (ம)

இ—ள்.

குமரேசா! ஊயந்தார் உள்ளன் என்று சொல்லிய நல்லறங்கள் ஒன்றும் இல்லையெனத் தள்ளிய குசலன் ஏன் பின்பு எல்லாராலும் இழிக்கப்பட்டான் எனின், உலகத்தார் உண்டு என்பது இல்லென்பான் வையத்து அலகையா வைக்கப் படும் என்க.

இது, புல்லறிவாளர் பேயோடொப்பர் என்கின்றது.

அலகை = பேய். பேயைக் கண்ணால் காண இயலாதாதலால் எல்லாருங் காணுமாறு இவ்வுலகத்தில நடமாடித் திரிகின்றதோர் பேய் என்பார வையத்து அலகை என்றார்.

உலகத்தார் = உலகத்திலுள்ள நன்மக்கள்; அவராவார் நூன் முறை தெளிந்து சீலத்தொழுகு மேலோர்கள்.

உண்டு என்பது = உள்ளதென்று மேலோர் சொல்லுகின்ற உண்மையை. அஃதாவது விதி விலக்குகளாய உறுதி நலங்கள் என்க.

மேல், அறிவுடையார் கூறும் நல்லுரைகளைப் புல்லறிவாளர் கேளார் என்றார்; இதில், தம் மனம் போனவாறெல்லாம் பேசி அவர் மாள்வர் எனகின்றார்.

உள்ளன என்று பெரியோர்கள் சொல்லிவந்த உண்மைகளை இல்லையென்பவன் இவ்வுலகத்தில் காண நின்றதோர் பேயாகக் கருதப்படுவான் என்பதாம்.

மேலோர் உண்டு எனபதோர் உண்மைப் பொருளை இல்லை என்று சொல்லுவான் புல்லறிவாளன்; அவனை மகனென்று எண்ணலாகாது; பேயென்றே கொள்ளவேண்டும் என்பார் உண்டு என்பது இல் எனபான் அலகையா வைக்கப்படும் என்றார்.

நல்வினை இன்பம் பயக்கும்; தீவினை துன்பந் தரும்; கடவுள் ஒருவர் உளர்; அவர் அருள்வழி யொழுகலே ஆருயிர்க்கு அழகாம்; புண்ணியஞ் செய்யத்தக்கது; பாவம் ஒழிக்கற்பாலது; துறக்க முதலிய பத முத்திகள் உள்ளன; நரகம் உண்டு; மறு பிறப்பு உண்டு: என்பதாதியாக உயர்ந்தோர் சொல்லும் உறுதிப் பொருள்கள் ஒன்றும் இல்லையென்று சொல்லிப் புல்லறிவோர் துள்ளி நிற்பர் என்றவாறு. அப்புலை நிலையாளரை அலகையாக் கொள்ள வேண்டும் என்றது தெய்வ நிலைக்கு மாறாய் நின்று களித்துக் கூத்தாடும் சிறுமையான் என்க.

பரம்எது? வினைசெயும் பயன்எது? பதிஎது? பசுஎது? பாசம்எது
பத்திஎது அடைகின்ற முத்திஎது அருள்எது பாபபுண்ணி யங்களேது
வரம்எது தவம்எது விரதம்எது ஒன்றும்இலை; மனமவிரும்புண வுண்டுநல்
வத்திரமணிந்து மடமாதர் தமைநாடி நறுமலர்சூடி விளையாடிமேற்
கரமேவவிட்டு முலைதொட்டு வாழ்ந்தவரொடு கலந்துமகிழ் கின்றசுகமே
கண்கண்ட சுகமிதே கைகண்ட பலனெனுங் கயவரைக் கூடாதருள்
தரமேவு சென்னையில் கந்தகோட்டத்துள் வளர் தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி சண்முகத தெய்வமணியே.
(திருவருட்பா).

புல்லறிவாளர் நிலையும், உலகத்தார் உண்டு என்பதை இல்லையென்று சொல்லி அவர் இறுமாந்திருக்கும் இயல்பும், அவரது செயலும், அத்தீயரைக் கூடல் தீதாம் என்பதும் பிறவும் இஃது ஓதி உணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க.

புல்லறிவு மிக இழிக்கத்தக்கது; அதனையுடையவன் நல்லதொன்றுஞ் செய்யான்; தனக்குத்தானே துன்பத்தைச் செய்துகொள்வான்; செருக்குமிக்குச், செம்மையின்றிச், சிறுமைபுரிந்து, உறுதியை மறந்து, நோய்போல் நின்று யாவருக்கும் துயர்மிகச் செய்வான்; எவர்சொல்லையுங் கேளான்; அவன் பேயாகவேகருதி இழிக்கப்படுவான்; எனத் துலக்கி அதனால் புல்லறிவாண்மையின் தீமையை விளக்கி அப்புன்மையை ஒழித்துயரவேண்டும் என்று அடிகள் உணர்த்தியிருக்கும் அருமையை ஊன்றி யுணர்ந்து கொள்க.

நெறிமுறை மாறி இழிவுரையாடி மனம்போனபடி செருக்கித் திரியும் புல்லறிவினரை எல்லாரும் இழித்துப் பழிப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குசலன்பால் உணரப்படும்.

## கதை.

குசலன் என்பவன் இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே கொற்கை என்னும் ஊரிலிருந்தவன். வேதியர் மரபினன். இவன் பல நூல்களையும் நன்கு படித்தவனாயினும் மிக்க மனக்கோட்ட முடையவன். தனக்கமைந்திருந்த சிறிய செல்வச் செருக்கால எவரையும் மதியாமல் இவன் எள்ளிக் களித்தான். தன் கல்வி யறிவை நல்ல வழியிற் பயன் படுத்தாமல் அல் வழியிற் செலுத்தி அகஞ் செருக்கி நின்ற இவன், சொல் வன்மையில் மிகச் சிறந்திருந்தானாதலால் எல்லாரையும் தன் வயப் படுத்திப் புல்லிய கொள்கைகளைப் புகுத்திவந்தான். தான் ஒரு வேதியனாயிருந்தும் வேத விதிகளை இகழ்ந்து "அவை யாவும் நம்பத்தக்கனவல்ல; அறிவு நிரம்பாமல் அச்சமுற்றிருக்கும் கொச்சை மக்களே அவற்றை மெய்யென்று நம்பி அடங்கி நடந்து பயனொன்றுமின்றி ஒடுங்கி நிற்பர்; என்போன்ற அறிவுடையார் அவற்றிற்கு ஒருபோதும் அடங்கி நடவார்; கடவுள் உண்டு, முத்தி உண்டு, மறுபிறப்புண்டு, நரகம் உண்டு, பாவம் உண்டு, புண்ணியம் உண்டு என்று தம் கண்ணாரக் காணாததை யெல்லாம் கண்டதுபோல உண்மை கூறி உளறுதல் உணர்வின்மையே யாகும்;" என இவன் மிக உணர்வுடையானபோல் உளறி நின்றான். இவனது பிதற்றுரையைக் கேட்டுச் சிலர் மயங்கி நிலைதிரிந்தாரேனும் பலர் இவனை வெறுத்திருந்தார். இருப்பினும் எதிர்த்துரையாட முடியாதபடி எவரையும் இவன் வெருட்டி வந்தான். கற்றிருந்தும் புலலறிவு மிகுந்து இங்ஙனம் இவன் அல்லல் விளைத்து வந்ததைக் குறித்துத் திரிகூடப்பக் கவிராசர் மிக அழகாகக் கூறியுள்ளார். அடியில்வருதல் காண்க.

நூல்பல பயின்றானேனும் நுவலுறு பொருளைத் தேரான்
மேலுறு சுபமா நோக்கான் மெய்ப்பொரு ளிதுவென்றோரான்
நால்வகைப் பண்டஞ் சேர்ந்த நனிகரு கூலம் புக்கும்
பாலனை சுரும்பு விழுத்தி வேம்புகொள் பாலன் போன்றான். (க)

ஓதியும் உணர்ந்தும் ஏனோர்க் குரைத்தும் தானுணர்கலாத
பேதையுட் பேதையாகி மறைக்குலப் பெருமை தீர்ந்தான்
நீதிநூ லுணர்ந்தோ ரோதும் நெறியினும் நில்லான்; ஆதி
வேதவாக்கியங்கள் சொல்லும் மெய்யெலாம் பொய்என்பானல். (உ)

பூதமன்றி வேறோர் புவனமு மில்லைப் பூமேல்
யாதுமங் குதிக்குஞ் செய்கை இயற்கையே படைப்போன் இல்லைத்
தீதற நிற்றல்தானும் இயற்கையே; திருமால் இல்லை;
சாதலும் இதுவேயன்றிச் சம்புவும் இல்லை யென்பான். (ங)

இங்கிவன் கிழகரு வேறு யெனக்குமேற் காதலாலே
அங்கமர் நிரைசீவரில்லை; அத்திசைத் தேவும் இல்லை;
துக்கமுன் வினையும் இல்லை; தோற்றிடும் செயல்களிங்கே
பங்கமாய்க் கழிதலாலே பாவபுண்ணியமும் இல்லை. (ச)

கறந்தபால் முலைபுகாது கழிகனி மரம் புகாதால்
இறந்தவர் பிறப்பதில்லை; இறந்தவர் உயிர்கள் கீழ்மேல்
பறந்திடக் காண்பதில்லை; பவர்க்கமும் அதனாலில்லை
சிறந்தோர் சுவர்க்கமில்லை; தெய்வமும் இல்லை யென்பான். (ரு)
(திருக்குற்றாலத்தல புராணம்).

இவற்றால் இவனது புல்லறிவு எவ்வளவிலிருந்திருக்கும் என்பது இனிதுணரலாகும். இன்னவாறு நூல் வழக்கோடும் உலக வழக்கோடும் மாறுபட்டுத் தான் நிலை திரிந்ததோடு பிறரையும் நிலை திரித்து வாயடிசெய்து பேய்போல் ஓங்கி இவன் ஒழுகி வருதலைக்கண்டு எல்லாரும் உளங்கலங்கி யிருந்தார். அங்ஙனம் இருக்குங்கால் சோழநாட்டிலிருந்து வந்த ஆதிசைவ வேதியனொருவனோடு இவன் வாது செய்யப் புகுந்து தோல்வியடைந்து வாயடங்கினான். அதன்பின் அவமதிப்பெய்தி ஊழ்வயத்தால் உற்ற செல்வம் முற்றும் இழந்து உணவும் கிடைக்கப்பெறாமல் உறுபசி கொண்டு உழலலாயினான்.

கேழ்பெருகுஞ் சிவமறையோன் தனைவணங்குங் கேள்வியினோர்
வாழ்வுபடைத் தினிதுயர்ந்தார் வணக்க வணங்காத கணைபோல்
தாழ்வுபடைத் தானுசலன் செல்வம்போய்த் தடுமாறி
ஆழ்கடலிற் கலங்கவிழ்த்த நாய்கன்போல் அலமந்தான். (க)

எயுநான் மறைப் பொருளைத் தெய்வத்தை யிகழ்ந்துரைத்த
வாயிலூறு சுவைக் கலந்து வறுமையால் பசியுழந்து
நோயினொடு நவழிந்து நோக்குவார் புறம்பழிப்பத்
தாயனார் புறந்தளளச் சந்தியிற் பந்தாயினான். (உ)

எனறபடியே இவன் ஆகி நொந்து பேய்போலலைந்து பெரு நோய
டைந்து பழியோடுழந்து இறுதியில் முடிந்தான. உயர்ந்தோர்
உண்டென்றுரைத்த உண்மைப் பொருள்களையெல்லாம் இல்லை
யென்று சொல்லித் தன் புல்லறிவால் பேய்போல்நின்று போய்த்
தொலைந்தானே யென்று எல்லாரும் பெரு மகிழ்வுற்றார். உலகத்
தார் உண்டு என்பதை இல்லை யெனபான வையத்து அலகையா
வைக்கப்படும் என்னும் உண்மையை உலகம் இவனபால் உணர்ந்து
நின்றது.

ஆர்த்த அறிவின ராண்டிளைய ராயினும்
காத்தோம்பித் தம்மை யடக்குப—மூத்தொறூஉம்
தீத்தொழிலே கன்றித் திரிதந் தெருவைபோல்
போத்தறார் புல்லறிவி னார். (நாலடியார்)

உள்ளவெலாம் இல்லென் றுளறி யுளஞ்செருக்கிப்
புல்லறிவோன் தீதே புகும்.

நல்லவற்றையெல்லாம் பழித்துப் புல்லறிவாளர் இழிவர்
என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

புல்லறிவாண்மையே எல்லாத் தீமைகட்கும் காரணமாகும்.
புல்லறிவாளர் தகவறிந்து யாதும் நல்லது செய்யார். தாமே தமக்
குப் பெருங்கேட்டை அவர் விளைத்துக்கொளவர். தம்மை யறி
வுடையராக மதித்து அவர் மிக அகங்கரித்து நிற்பர். தாம கல்
லாதவற்றைப் கற்றிருப்பதாக அவர் காட்டிக் களிப்பர். தம்
குற்றஙகளை நீக்காமலே குணமுடையார்போன்று அவர் குதித்து
நிற்பர். அருமறை காவாமல் அவர் பெருமிறை கொள்வர்;
தாமும் உணரார்; பிறர் சொன்னாலும் கேளார். நல்லறிவாளர்

நன்கு சொல்லினும் புல்லறிவாளர் அதனைப் பொருந்திக்கொள்ளார். உயர்ந்தோர் உண்டென்று சொல்லும் உண்மையை அவர் இல்லையென்று சொல்லுவர்; ஆதலால் அவரை ஒருவகைப் பேயென்றே கொள்ளவேண்டும் என்பதாம்.

அரு-வது புல்லறிவாண்மை முற்றிற்று.

---

# 86-ம் அதிகாரம் இகல்.

அஃதாவது ஒருவரோடு ஒருவர் கறுவுகொண்டு உளம் மாறுபடுதல். இம் மாறுபாடு உறவு நலங்களை வேறுபடுத்தி அல்லலும் பழியும் விளைத்துத் தன்னையுடையாரை அழிவுறுத்திவிடுமாதலால் இதனை அறவே ஒழித்துவிடவேண்டும் என்று இதில் உணர்த்துகின்றார். புல்லறிவுபோல எல்லாத் துயரங்கட்கும் இது காரணமாகுமாதலால் அவ்வுரிமை கருதி அதன்பின் இது வைக்கப்பட்டது.

851 துன்றிநின்ற சுந்தோப சுந்தரிக லாற்பிரிந்து
குன்றினர் என்னே குமரேசா—என்றும்
இகலென்ப எல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கும் நோய். (க)

இ—ள்.

குமரேசா! ஒருமையெய்தி நின்ற சுந்தோப சுந்தர் இகலால் பிரிந்து ஏன் அழிவடைந்தார் எனின், எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும் நோய் இகல் என்ப என்க.

இது, இகலின் தீமை இன்னதாம் என்கின்றது.

இகல் = மாறுபாடு; அஃதாவது தம்முட் செற்றங்கொண்டு ஒருவனை ஒருவர் வென்றுகொள்ள மூண்டு நிற்கும் வெம்மனக் கோட்டம் என்க.

பகல் = பிரிவு, கூடாமை. பாரித்தல் = வளர்த்தல், மிகுத்தல்.

எல்லா உயிர்கட்கும் பிரிவு என்னும் பெருந்தீமையை வளர்க்கும் நோய் இகல் என்று சொல்லுவர் மேலோர் என்பதாம்.

உறவுரிமைகளைச் சிதைத்து ஒற்றுமையைக் கெடுத்து என்றும் பிரிவுபாட்டையே விளைத்து மனக்கலக்கத்தை வளர்த்து உயிர்களைத் துயருறுத்தும் இயல்பினதாதலால் இகலை நோய் என்றார். ஈளை க்ஷயம் காசம் குட்டம் முதலிய உடல்நோய்களினும் வேறுபாடு தோன்ற "பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும்" என இவ்வுயிர் நோயின் இயல்பினைப் பாரித்துரைத் துரைத்தார்.

இகலானது கொடிநோய்போல் நின்று உயிர்களுக்கு என்றும் துயர் இழைக்கவல்லதாதலால் அதனை அறவே மக்கள் ஒழித்து ஒழுகவேண்டும் என இஃதுணர்த்தியதெனக.

இகல் என்னும் நோய்க்கு இடங்கொடாமல் தன் மனத்தைப் பாதுகாத்து வருவோரே என்றும் இன்பவாழ்வுடையாராயினிதமர்ந்திருப்பர் என்றவாறு. "இகலோடு செற்றம் நீங்கிய மனத்தினர்" என முனிவர்களின் இயல்பைக்குறித்துக் கூறுங்கால் நக்கீரனார் விளக்கியிருத்தல் காண்க.

எவ்வளவு ஆற்றலுடையாராயினும் இகலுக்குச் சிறிது இடங்கொடுத்தால் பின்பு அவர் பிரிந்துபட்டு இறந்துபடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுந்தோபசுந்தர்பால் உணரப்படும்.

## கதை.

சுந்தோபசுந்தர் என்பவர் நிகும்பன் என்னும் ஓர் அசுர வீரனுடைய புதல்வர். இவ்விருவரும் உடன் பிறந்தவர். சுந்தன், உபசுந்தன் எனப் பெயரிடப்பெற்று வளர்ந்துவந்த இவர் உருவம் அழகு குணம் செயல்களால் யாதும் வேற்றுமையின்றி இசைந்திருந்தமையால் சுந்தோபசுந்தர் என ஒருமையோடு எல்லாரும் இவரை உவந்தழைத்து வந்தார். இவர் பருவம் எய்தியபின் பிரமனை நோக்கி அரிய தவங்களைச் செய்து பெரிய வரபலங்களை யடைந்து சிறந்த அரசுரிமையோடு விளங்கியிருந்தார். தம் திண்டோள் வலியால் எண்டிசைகளையும் வென்று அமரில் தமக்கு எவரும் நிகரில்லை என்று இவர் இறுமாந்துவந்தார். இவரது கொடுங்கோன்மையை ஆற்றமாட்டாமல் அமரர் பலரும் அலமந்து

இறுதியில் வந்து திருமாலிடம் முறையிட அவரும் இவரை வெல்வதரிது என்று தெளிந்து முடிவாக ஒன்று கருதித் திலோத்தமையை அழைத்துச் சில கற்பித்து இவரிடம் செலுத்தினர். அவ்வாறே அவள் இசைந்து வந்தாள். அவ்வமயம் இவ்விருவரும் தம் ஆண்மைநலனுருகேயமைந்திருந்த ஓர் இனிய பூஞ்சோலையில் அமர்ந்திருந்தனர். அங்கு அவள் புகுந்து தன் மேனிமினுக்கோடு விழியொளிபரப்பி இவர்முன் அழகொழுக நின்றாள்.

" பிடியிருக்கும் சிறுநடையாள் பெருங்காமன் அபிடேகம்
முடியிருக்கும் கனதனத்தாள் முத்திருக்கும் குறுநகையாள்
துடியிருக்கும் சிற்றிடையாள் சூதுபெருங் குடிலமெலாங்
குடியிருக்கும் படைவிழியாள் குமரிருக்குஞ் சசிபோல்வாள்; (க)

மூலவேழம் முன்காப்ப மூரிமதன் பின்காப்ப
வலைவீசுங் கலகவிழி வாள்களிரு புறங்காப்ப
அலையாழி சூழுலகை யாணைவசத் தாலடக்கிக்
கலைவேலி நகருள்ளாக அரசிருக்குங் கடிதடத்தாள். (உ)

அன்னமோ? வானாட்டில் அரம்பையோ? முனிவோரை
இன்னமோர் முறைமயக்க எழுந்த மோகினிதானோ?
சொன்னமோ? மதனிரதி தோற்றமோ? சிலைக்காமன்
சின்னமோ? மடமாதர் தீபமோ? எனப்புகுந்தாள்." (ங)

என்றபடியே அவ்விடம் புகுந்துநின்ற அவளது எழில் நலங்களைக்கண்டு இவர் கழிபெருங் காதல்கொண்டார். பள்ளம் பாயும் வெள்ளமென உள்ளமுருகி விரைந்தெழுந்து எனக்கு எனக்கு என ஒருவரின் ஒருவர் முந்தி இருவரும் வந்து அருகே நின்றார். பெருக விழைந்து பேதுற்று நோக்கினர். ஒத்த வலியுடைய சுத்த வீரர்களாகிய உங்களிருவருக்கும் ஏககாலத்தில் யான் ஒருத்தி எப்படி இன்பமூட்டுவேன்; நும்மில் ஒருவருக்கே யான் உரிமையாவேன என அவள் உயிருருக உரைத்தாள். மூத்தவனாதலால் முதலுரிமை எனக்கே எனச் சுந்தன் முந்தினான். இளையவனாயினும் அவளை முதலில் யானே கண்டேனாதலால் எனக்கே முன்னுரியள் எனப் பின்னவன் பன்னினான். இங்ஙனம் மாறுபட்டு இருவரும் பெரிதும் சீறிமீறினர். முடி

வில் ஒருவரை ஒருவர் கொல்லத்துணிந்து மல்லமர் புரிந்தார். மூண்ட அவ் அமரில் இருவரும் மாண்டே தொலைந்தார். அவ் வகையிலும், யாதொரு வேறுபாடுமின்றி உடலும் உயிரும்போல் ஒற்றுமையுற்று எவராலும் வெல்லமுடியாதபடி மெய்வலி மேவி நின்ற இவர், இடையேபுகுந்த ஓர் இகலால் பிளவுபட்டுப்போராடி இறந்தொழிந்தாரே! என்று அனைவரும் வியந்து நின்றார். இவரது இழிவினை நோக்கி அமரெல்லாரும் உளமகிழ்வுகொண்டார். இகல் என்பது பகல் என்னும் பண்பின்மையைப் பாரித்து, நோய் போல நின்று எவரையும் மாய்துயர் விளைக்கும் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இவரைக் குறித்துக் கவிஞர் பெருமானாகிய கம்பரும் கூறியுள்ளார். அடியில வருதல் காண்க.

தந்தோள் வலிமிக்கவர் தாம் ஒருதாய் வயிற்றின்
வந்தோர் மடமங்கை பொருட்டு மலைக்கலுற்றார்
இந்தோ டரியொண்கட் டிலோத்தமை காதல்செற்ற
சுந்தோப சுந்தப்பெயரத் தொலைவியினொரு மொத்தார்.

(இராமாயணம்)

ஒரு தாய்வயிற்றில் பிறந்து உடனமர்ந்து வளர்ந்து ஒத்த வலியுடையராய வாலி சுக்கிரீவர்கள் தம்முட் கறுவுகொண்டு ஒருவரை ஒருவர் கொலைத்துணிந்து மல்லமர் புரிந்தது, முன்பு சுந்தோபசுந்தர் செய்ததுபோன்றிருந்ததென்று இதில் இவரை ஒப்புக் காட்டி வைத்திருக்கும் அழகை உற்றுப்பார்க்க.

முராரியை முராரிநாபி முளரிவாழ்முனியை முக்கட்
புராரியை நோக்கி முன்னாட்புரி பெருந்தவத்தின் மிக்கார்
சுராரிகள் தம்மிற் சுந்தோ பசுந்தரென்றிருவர் தங்கள்
திராரி வலியினால் வந்த திலோத்தமை தன்னைக்கண்டார். (க)

கண்டலும் அவள்மேல வைத்தகாதலால் உழந்து நெஞ்சில்
ஈண்டிய துயரத்தோடும் இருவரும் நயந்தபோழ்தப்
பூண்டகு பொலிவினாள் தன் பொருட்டமர்தம்மிற் பூண்டு
மாண்டனர் எனனும்வார்த்தை மாநிலம் அறியுமன்றே. (உ)

இவற்றின்கண்ணும் மேற்குறித்த சரிதம் விளக்கப்பட்டிருத்தல் காண்க நிற்றல், நடத்தல், இருத்தல், படுத்தல், உண்டல், உலா

வல் முதலிய எல்லாவற்றிலும் என்றும் ஒற்றுமையுற்றுநின்ற சுந்தோபசுந்தரரை ஓர் புல்லிய இகலானது புகுந்து பிரித்து இருவரையும் அடியோடு பொன்றச்செய்து இகல் என்ப எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பின்மை பாரிக்கும் நோய் என்னும் உண்மையை உறுதிபெற விளக்கித் தெளிவுபெற நிற்றலை இதனால் இனிதுணரலாகும்.

இகலும் பிணியும் இடரிழைக்கு மேனும்
இகல்போல் பிணியியற்ற வின்றாம்—இகலோதன்
நேசங் குலைத்து நிலைபிரித்து நீள்துயராய்
நாசமிகச் செய்யுமே நாடு.

எல்லாத் துயரும் எழுந்து பெருகுமே
பொல்லா இகலுட் புகின்.

இகல் தீயதாதலால் அதனைக் கொள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

852 காதுமிகல் கொண்டும் கலிக்காமர் யாதொன்றும்
கோதுசெய்யார் என்னே குமரேசா—தீதாம்
பகல்கருதிப் பற்றா செயினும் இகல்கருதி
யின்னாசெய் யாமை தலை. (உ)

இ—ள்.

குமரேசா! கலிக்காம நாயனார் சுந்தரமூர்த்திகள் பால் இகல்மிக்கிருந்தும் என் யாதொரு இன்னாமையும செய்யாதிருந்தார் எனின், பகல் கருதிப் பற்றா செயினும், இகல் கருதி இன்னா செய்யாமை தலை என்க.

இஃது இகலுறினும் இன்னாதன செய்யலாகாதென்கின்றது.

கொண்டும் செய்யார் என்றது அவர் இகலி நின்றும் யாதொரு இன்னலையும் செய்யாதிருந்தமை கருதி. உம்மை சிறப்புணர நின்றது.

பகல்=பகுதியாதல்; அஃதாவது பிரிந்து நிற்றல். இது தொழிற்பெயர். பெயராய்வரின் சூரியன், தினம், ஒளி முதலிய

வற்றை உணர்த்திவரும். "பகலிடம் கண்ணிப் பலரொடுங்கூடி" என்புழிஇது நின்றுணர்த்துதல் காண்க.

பகல் கருதி = தம்மொடு கூடாதிருத்தலை நினைந்து.

பற்று என்றது பற்றுத செயல்களை; அஃதாவது வெறுக்கத் தக்க வெய்யசெயல்கள் என்க. இது, ஈறுதொக்க எதிர்மறைப் பண்மை வினையாலணையும் பெயர். பற்றுதல் = விரும்புதல.

பற்றுதனவும், இன்னாதனவுமான செயலகளைச் செய்தற்குப் பகலும், இகலும் ஏதுவாகுமாதலால் அவற்றை மீண்டு எடுத்துக் காட்டினார். பற்றுசெயினும் இன்னாசெய்யாதே என்றது அத னினும் இது தீமையாதல் கருதி. உம்மை அச்செய்கையின் இழிவுதோன்ற நின்றது.

மேல், இகல் என்பது நோய்போல் நின்று உயிர்கட்குத் துயருறுத்தும் என்றார்; இதில், அதனை ஒழித்தவர் உயர்ந்தவ ராவர் என்கின்றார்.

தம்மோடு சேராதிருத்தலை நினைந்து சிலர் தீயசெயலகளைச் செய்தாராயினும் அவரோடு மாறுபடுதலைக் குறித்துத் துன்ப மானவற்றைத் தாம் அவர்க்குச் செய்யாதிருத்தல் சிறந்ததாம என்பதாம்.

செய்யாமை தலை என்றதனால் செய்தல் கடை என்பதா யிற்று.

வேறுபாடும், மாறுபாடும் பிறர்க்கு ஊறுபாட்டைச் செய்ய லாகுமாதலால் அவற்றிற்கு இடங்கொடுக்காமல் நலம் பெற நின்று உயர்ந்துகொள்ளவேண்டும் என்று இஃதுணர்த்திய தென்க.

தன் உள்ளத்தில் மாறுபாடு இருப்பின் அதனை அடக்கிக் கொள்ள வேண்டுமேயன்றி அது காரணமாகப் பிறர்க்கு இன்னா தனவற்றைச் செய்யலாகாது; செய்யின் மேலும் மேலும் பகை மிகும்; அச்செயலால் பாவமும் புகும்; புகவே தான் தளர்ந்து கெடநேரும் ஆதலால் இகல் கருதி இன்னாசெய்யற்க என்றார். செய்யற்க எனத் துணிந்து விதிக்காமல் செய்யாமை தலை எனறு நளினமாக வுரைத்தது இகலுடையார் இதம்பெற உணர்ந்து நலம்பெறத்திருந்துமாறு நயம்பட வுணர்த்தியவாறும்.

இகலைமதித்தின் னுமைபிழை யியற்றினோர்க்கும் புரியாயேற்
பகையும் உறவாம்; பெருஞ்செல்வம் பலிக்கும்; கெடாதபுகழுண்டாம்
இகலின் மிகுத்தின்னுவ் வியற்றின் இனியதமரும் ஏதிலராய்ப்
பகைமைவளரும்; வலிதொலையும்; பாழ்க்கும் பாழாவாழ்க்கையுமே.

என்பதும் ஈண்டு நோக்கத்தக்கது. இகலானது பிறர்க்கு இடையூறுசெய்யத்தூண்டுமாதலால் அதன் வயப்படாது அதனை ஒழித்தொழுகவேண்டும் என்பது கருத்து.

தம் உள்ளத்தில் மாறுபாடு தோன்றினும் பிறர்க்கு ஊறு செய்யார் உயர்ந்தோர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கலிக்காமர்பால் உணரப்படும்.

## கதை.

கலிக்காமர் என்பவர் சோழநாட்டிலே பெருமங்கலம் என்னும் திருநகரிலே வேளாளர் குலத்திலே உயர் குடியிலே பிறந்தவர். இவரது முன்னோர்களெல்லாரும் சோழமன்னர்களிடத்துச் சேனாதிபதிகளாய்ச் சிறந்திருந்தனர். இவரும் அவ்வாறே தானைத் தலைவராய் நின்று எங்கும புகழ் பரப்பி இன்புற்று வாழ்ந்தார். திண்ணியராய் என்றும் போர் முறையிற் பொருந்தியிருந்தாலும் புண்ணியநீர்மையர், வஞ்சம்பாதும் அறியாத நெஞ்சினர். சிவபரம்பொருளிடத்துப் பதிந்த அன்புடையவர். அடியவரெவர்க்கும் வேண்டிய எவையும் விரும்பியுதவி யாவர்மாட்டும் நேயமித்து நிலவி நின்றார். இவரது தூய நிலையினை நோக்கிக் குடிப்பெயரையும் இணைத்து 'ஏயர்கோன் கலிக்காம நாயனார் என யாவரும் இவரை இனிதுபோற்றி வந்தார். தக்க செலவாக்கோடு மிக்க நேர்மையுடையராய் இங்ஙனம இவர் விளங்கிவருங்கால் சுந்தரமூர்த்தி நாயனார் சிவபெருமானைப் பரவைநாச்சியாரிடம் தூது விட்ட செய்தியைக் கேள்வியுற்று இவர் துடித்து நொந்தார். "யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடைய என் ஆண்டவனை ஓர் அடியவன் தன் காதற்கிழத்தியிடம் சென்று அவனைத்திருத்தியழைத்துவரும்படி தூது விட்டானே! அந்தோ! இது என்ன தீமை" என்று எண்ணி எண்ணிச் சினந்தார் அந்தரம் யாரும் அறியாமல் இந்த நிந்தையைச் செய்த அந்தச் சுந்தரனைக் கண்டால் என் சிந்தை என்ன பாடுபடுமோ? இனி அவன் முகத்தி

லாவது விழிக்கலாமா? என்று இவர் அகத்தில் செற்றங்கொண்டு அடங்கா திருந்தார். இங்ஙனம் இவர் மாறுபட்டிருத்தலை அச்சுந்தரர் தெரிந்து உள்ள இயல்பையும் உறுதியன்பையும் கருதி வியந்து இவரோடு உறவுகொள்ள விழைந்து இறைவனை வேண்டினார். எளிதில் வசமாகார் என்று இனிது தெளிந்து இறைவர் இவருக்கோர் சூலைநோயைத் தந்து துயர்மிகச்செய்து ஒருநாள் கனவிடைத் தோன்றிச் சுந்தரன் வந்தால்தான் இந்த நோய் நீங்குமெனச்சொல்லி மறைந்தார். இவர் துள்ளி யெழுந்தார். "நோயால் யான் இறந்துபடினும் படுவனேயன்றி அப்பேயன் முகத்தில் விழிப்பேனு! அவனோடு உறவுகொண்டதனால் பரமனுக்கும் இவ்வாறு உணர்வு திரிந்ததுபோலும்" என்று மேலும் மேலும் இவர் இகல் மிகுந்து நின்றார். இங்ஙனம் நிற்பினும் அவருக்கு யாதோர் துயரும் செய்யாமல் இவர் தானே துயருற்றிருந்தார். இவரைக் காணவேண்டுமென்று காதல்கொண்டு ஒருநாள் அவர் கடுகி வந்தார். அவர் வந்ததையறிந்து தன் வாசலில் நுழையுமுன்னரே உடைவாளையுருவித் தன் வயிற்றில் குத்திக்கொண்டு குடல்சரிந்து இவர் மாண்டுவிழுந்தார். அவர் புகுந்து உண்மை தெரிந்து ஐயகோ! என்னாலல்லவா இவர் மாண்டுபோயினார் என்று மனம் பதைத்துத் தாமும் அவ்வாளினால் தலை துணிக்கத்துணிந்தார். உடனே இறைவன் அருளால இறந்த இவர் எழுந்தார். அவரது நிலையினைநோக்கி நெஞ்சம் இரங்கினார். முன்பு கொண்டிருந்த இகலை அறவே துறந்தார். பின்பு இருவரும ஒருவரை ஒருவர் தழுவி உவந்துற வாழினார். இகல் மிகுத்திருந்தும் யாதொரு இன்னலையும் அவர்க்கு இயற்றாமல் தம்மையே நொந்துகொண்டு அடங்கியிருந்த இவரது அருமையை வியந்து அனைவரும் புகழ்ந்து போற்றினார். இகல் கருதி இன்னா செய்யாமை தலை என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. விரிவைப் பெரியபுராணத்தில் காண்க.

இகலூறினும் தீமை யியற்றல் இயற்றின்
பகைமிகும்பின் பாவம் படும்.

இகலெய்தி நின்றாலும் பிறர்க்கு இடர் செய்யலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

853 தண்டா இகல்நீங்கச் சாம்பவந்தர் பின்பொளிமீக்
கொண்டாரீ தென்னே குமரேசா—கொண்ட
இகலென்னும் எவ்வநோய் நீக்கிற் றவலிலாத்
தாவில் விளக்கந் தரும். (௩)

இ—ள்.

குமரேசா! தாம் கொண்டிருந்த இகல் நீங்கியபின் சாம்பவந்தர் ஏன் இனியராய் விளங்கினர் எனின், இகல் என்னும் எவ்வநோய் நீக்கின் தவல் இலாத் தாவில் விளக்கம் தரும் என்க.

இஃது இகல் ஒழிந்தால் புகழ்வரும் என்கின்றது.

ஒளிமீக்கொண்டார் என்றது அவர் இகல் நீங்கியபின் இசையும் இன்பமும் எய்தி யாவரும் போற்ற உயர்ந்து நின்றமை கருதி.

எவ்வம் = துன்பம், வெறுப்பு, இகழ்ச்சி. "மாதுயர் எவ்வம் மக்களை நீக்கி" என மணிமேகலையிலும், "கூர்ந்த எவ்வம் விட" எனப்புறத்திலும், "எவ்வத் தொவ்வா மாமுதல் தடிந்து" எனப் பரிபாடலிலும், "எவ்வம் மிக்கவனும புலம்ப" எனப்பெருங் கதையிலும், "எவ்வம் தீர்த்திருந்தாள்" எனச் சிந்தாமணியிலும், "எரிப்பச் சுட்டு எவ்வநோய் ஆக்கும்" என நாலடியிலும், "மையல் நெஞ்சிற்கு எவ்வம் தீர" என ஐங்குறு நூற்றிலும இது நின்றுணர்த்துதல் காண்க.

தவல் = தவறு, அழிவு, கேடு. "தவல் இல் துன்பம் தலை வரும்" என மணிமேகலையிலும், "தவலருந் தொல் கேள்வி" என நாலடியாரிலும், "தவலில் அருநோய் தலைத்தந்தோரே" என ஐங்குறு நூற்றிலும் இது வந்திருத்தல் காண்க.

தா இல் = கேடு இல்லாத. தா என்னும் ஓரெழுத்தே ஒரு மொழியாய் நின்று அழிவு, கேடு, வருத்தம் முதலியவற்றை உணர்த்தி வரும். "தாவில் கொள்கைத் தந்தொழில் முடிமார்" என்பது திருமுருகாற்றுப் படை.

மேல், இகலுறினும் இன்னா செய்யலாகாதென்றார்; இதில், அஃது இல்லாதொழிதலே நல்லதாம் என்கின்றார்.

இகல் என்று சொல்லப்படுகின்ற தீயநோயை ஒருவன் நீக்கி விடுவானாயின் என்றும் அழிவில்லாத குற்றமற்ற புகழினை அவனுக்கு அது கொடுக்கும் என்பதாம்.

நோய் என்றுமட்டும் தனியே கூறிவிடாமல் இவ் இகலினை எவ்வநோய் என்றது அதன் துன்பநிலையின் தொடர்பு தோன்ற என்க. நோயானது ஒருவனைப்பற்றின் அவனளவில் நின்று துயருறுத்தி அகலும்; இவ் இகல், தன் குடியையும் குலத்தையும் துரியோதனன் கெடுத்ததுபோல் தன்னைக் கொண்டவரையும், கண்டவரையும் அடியோடு கெடுத்துவிடுமாதலால் அந்நோயினும் தீயதாக இது நோக்க நின்றது.

இகலாவது ஒத்த தரமுடைய இருவர் ஒருவரோடு ஒருவர் மாறுபட்டுத் துயரிழைக்கும் தோற்றத்ததாகலின் அதனை நீக்கிவிடின் எல்லார்க்கும் நல்ல தோற்றமுண்டாம் என்றவாறு.

பகலினொடு இகலுவ படர்மணி; மடவார்
நகலினொடு இகலுவ நளிவளர் இளநீர்;
துகிலினொடு இகலுவ சுதைபுரை நுரை; கார்
முகிலினொடு இகலுவ கடிமண முரசம். (இராமாயணம்.)

இகலினை இடையேவைத்து அதன் இயல்பினை விளக்கி அதன் வாயிலாகக் கோசலநாட்டின் நிலையினைக்காட்டிக் கம்பர் இதில் உரைத்திருக்கும் அழகைப் பார்க்க.

விளக்கம் என்றது புகழினை. தன்னையுடையானை விளங்கச் செய்வதாதலின் இங்ஙனம் அது விளங்கி நின்றது. தவல் இலா விளக்கம், தா இல விளக்கம் என அதனை விசேடித்து விளக்கியது அதன் நிலைபெற்ற தன்மையை நினைந்தென்க. பொன்றுமல் என்றுமே புகழ் ஒன்றே நிலைநிற்கும் என்றபடி அது நின்றுவருதலால் தவல் இன்மையும், தாவின்மையும் அதற்கு அடைகளாய் நின்றன.

துன்பமயமான இகலினை ஒருவன் தொலைத்துவிட்டால் அவன் இன்பமயமான புகழ்நலங்களை யெய்தி எங்குஞ் சிறந்து எல்லாரும்போற்ற இனிது உயர்ந்து நிற்பன் என்பது கருத்து.

இகலை நீக்காதவன் எவ்வகையிலும் என்றும் விளங்கமாட்டான் என்பது குறிப்பு.

தன் மனத்திற் கொண்ட மாறுபாட்டை ஒருவன் ஒழித்து விடுவானாயின பின்பு அவன் ஒளிமிகப் பெற்று உயர்ந்து விளங்குவான் எனபது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை சாம்பவந்தன்பால உணரப்படும்.

## கதை.

சாம்பவந்தன் என்பவன் தெய்வத்தன்மை வாய்ந்த ஓர் பெரிய வீரன். பிரமனிடமிருந்து அரிய வரபலங்களைக் கொண்டவன். பலகலைகளையும வழுவறப் பயின்றவன். கரடி முகமும் மனிதவடிவமுமுடையவன். சிரஞ்சீவிகட்குரிய நெடிய வாழ்நாளை முடியக்கொண்டவன். திருமால், வாமனராய் வந்து மாவலியிடஞ்சென்று மண இரந்து உரிமைசெய்து கொண்டபொழுது அவ்வுண்மையை உலகமுழுதும் அறியப் பறைபறைந்துரைத்தவன். சிறந்தபோர்வீரன். ஆயிரத்தறுநூறுகோடி என்னும் அளவினையுடைய ஓர் பெரும் படைக்குத்தலைவனாய் நின்று சுக்கிரீவனுக்கு இவன் துணையமைந்திருந்தான். அவன் இராமனுக்குத் துணையாய் வநதபொழுது எல்லாப்படைவீரர்களோடும் இவனும் உரிமைமீக்கூர்ந்து உடனமர்ந்து வந்தான். அன்று இவன் வந்த விதத்தை அடியில் வருமாறு கம்பர் கூறியிருக்கின்றார்.

> ஆயிரத்தறு நூறுகோடியிற் கடையமைந்த
> பாயிரப் பெரும் படைகொண்டு பாவையிற்றிரையில்
> தாயுருத் துடனேவரத் தடநெடு வரையை
> ஏயுருப்புயச் சாம்பன் என்பவனும் வந்திறுத்தான். (இராம)

இங்ஙனம் வந்த இவன் இராமன்பால் பேரன்புடையனாய் நின்று அமயம் வாய்த்தபோதெல்லாம் அரிய உதவிகள் செய்தான். ஆழ்ந்த அறிவும் அமைதியும் உடையவன். பேரறிவாளனாய அனுமானும் இவனது உறுதிமொழிகளை உவந்துகேட்டு ஊக்கி வினையாற்றினான். இந்திரசித்தன் ஏவிய பிரமாத்திரத்தால் இலக்குவன் முதலாக எல்லாரும் நிலைகுலைந்து அமர்க்களத்தில் பாடுகிடக்

தபோது மருந்துகொண்டு வரும்படி உறுதிகூறி அவனை இவன் உணர்த்தி விடுத்தான். அங்ஙனம் இவன் உணர்த்தியவற்றுள் சிறிது அடியில் வருதல் காண்க.

மேருவினைக் கடந்தப்பால் ஒன்பதினாயிரமுள யோசனையைவிட்டால்
நேரணுகி நீலகிரி தானீரண்டாயிரமுள யோசனையில் நிறகும்
மாருதி! மற்றதற்கப்பால் யோசனைநாலாயிரத்து மருத்துவைகும்
கார்வரையைக் காணுதி மற்றதுகாண இத்துயர்க்குக் கரையுங் காண்டி. (௧)

மாண்டாரை யுய்விக்கு மருந்தொன்றும், உடல்வேறு வகிர்களாக் கீண்டாலும் பொருந்துவிப்ப தொருமருந்தும், படைக்கலங்கள் கிளைப்பத் தோன்றும், மீண்டேயும் தம்முருவே அருளுவதோர் மெய்மருந்தும், உள நீவிர, ஆண்டேகிக் கொணர்தியென அடையாளத்தொடு முரைத்தான் அறிவின்மிக்கான். (௨)

இன்னமருந்தொருநான்கும் பயோததியைக் கலக்கியஞான் றெழுந்ததேவா
உன்னியமைத்தனர் மறைக்குமெட்டாத பரஞ்சுடர் இவ்வுலகமூன்றும்
தன்னிருதாளுள்ளடக்கியபொலி போழ்தில் யான் முரசஞ்சாற்றும்வேலை
அன்னதுகண் டியாவதலும் தொன்முனிவர் அவற்றியலெற் கறிவித்தாரால்.

இம்மருந்து காத்துறைவ எண்ணிலவாற் றெய்வங்கள் இரக்கா யார்க்கும்
நெய்மருங்கு படாகில்லா நெடுநேமிப் படையுமவற்றுடனே நிற்கும்
பொய்ம்மருங்கு மில்லாதாய்! புரிகின்ற காரியத்தின் பொதுமைநோக்கிக்
கைம்மருங்கு தொடர்ந்துன்னைக் காவாவென் றப்புறம்போய்க் காக்கு
மென்றான். (இராமாயணம்.) (௩)

இவற்றால் இவனது விரிந்த காட்சியும், பூகோள ககோளங்களின் நிலைகளைப் பறிந்துள்ள மாட்சியும், காலம்பல கழிந்தாலும் கருதியதை மறவாதிருக்கும் உறுதியும், பிறவும் இனிதுணரலாகும். இராமாவதாரம் முடிந்து திருமால் கண்ணனாய் அவதரித்தபோது வடமதுரையை யடுத்திருந்த ஒரு பெருவனத்தில் இவன் தனியரசாட்சி செய்திருந்தான். அங்ஙனம் செய்துவருங்கால் ஓர் அரசனை பிரசேனன் என்பவன் சமந்தகம் என்னும் தெய்வமணி ஒன்றினை பணிந்து வேட்டைக்குவந்து அங்கோர் சிங்கத்தால் மாண்டுபோனான். அம்மணியை இவன் கண்டெடுத்து வைத்திருந்தான். அதனைக் கவர்ந்துகொண்டுபோகக் கருதிப் படைவீரர்களுடன் கண்ணன்வந்து யாதும் கூறாமல் வளைந்துநின்று கடுஞ்

சமர் விளைத்தான். இயல்பாகவே யாதவவீரர்களிடம் இகல் மிகுத்திருந்த இவன், அவனை இன்னான் என்று அறியாமல் எதிர்த்து அமர்புரிந்தான். ஒருவரை ஒருவர் வெல்ல முனைந்தும் இருவராலும் அது முடியவில்லை. நாள்பல கழிந்தன. தன்மனத்துட் கொண்ட மாறுபாட்டோடு இவன சீறியே நின்றான். வந்தவன் இன்னான் என்று ஒருநாள் இவன் உசாவியறிந்தான். உடனே இகலை ஒழித்து மணியினைக்கொடுத்துத் தன்மகளாகிய சாம்பவதி என்பவளையும் அவனுக்கு மணம்புரிந்து தந்து மகிழ்ந்து போற்றினான். அதன்பின்பு யாதவகுலத்தவரனைவரும் இவன்பால் பேரன்புடையராய் நேர் நண்பு கொண்டார். கண்ணனுக்கு மாமன் என்று அனைவரும் விரும்பிப் போற்ற எல்லாநலங்களும் எய்தி மிகுபுகழோடு இவன் விளங்கியிருந்தான். இகல் என்னும் எவ்வ நோய் நீக்கின் தவல் இல்லாத் தாவில் விளக்கம் தரும் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவைக் கல்கி புராணத்தில் காண்க. இவன் அமர் புரிந்த திறத்தையும், பின்பு இகல் ஒழிந்து பெருமகிழ்வோடு மிக விளங்கிநின்ற நலத்தையும் ஆரியப்பப்புலவரும் கூறியுள்ளார். அடியில் வருதல் காண்க.

ஒல்லென உருமின் வெம்போர் உழந்தனர் ஒன்பான் வைகல்
செல்லலும் எண்கின் வேந்தன் தெள்ளிதிற் றெளிந்து சொற்ற
வில்லினால் இலங்கை செற்ற விறல்கெழு தடக்கை வீரன
அல்லைகொல்? நீயீ தென்னோ அடைந்ததென் றேத்தினனால், (க)

பணிபுரை சீற்றத் துப்பிற் பலதலை அரக்கன் சூடும்
துணிகதிர் மகுடபந்தி துணியவெஞ்சிலைகால் கோட்டும
அணிமணிக் குன்றமன்னான் அலர்கதிரெறிக்குஞ் செக்கர்
மணியினுக் கடைந்தவண்ணம் மணியிதழ் விண்டு சொன்னான். (உ)

வெண்மணி சுழிக்குந் தெண்ணீர் வியன்பணை விதர்ப்ப வேந்தன்
கண்மணி யனையநகை காதலங் கொழுநற்காவகுப்
பெண்மணி யோடும் முந்நீர்ப் பிறந்த செங்கதிரினன்ன
ஒண்மணி யெண்கின் வேந்தன் உவப்பொடும் உதவி நின்றான். (௩)

(பாகவதம்.)

மேற்குறித்த வுண்மையும், இகலொழிந்து இவன் இன்புற்ற தன்மையும் இதன்கண்ணும் விளங்கி நிற்றல் காண்க.

தீநோய்போல் நெஞ்சம் சிதைத்துமே தீங்கூக்கும்
ஓவோ இகல்தீ தொழி.

இகல் நீங்கினேரே புகழோங்குவார் என்பது இதனால் கூறப்பட்டது

---

854 பண்டிகலை நீக்கியபின் பப்புருவா கன்னின்பம்
கொண்டுயர்ந்தான் என்னே குமரேசா—உண்டாகும்
இன்பத்துள் இன்பம் பயக்கும் இகலென்னும்
துன்பத்துட் டுன்பங் கெடின். (ச)

இ—ள்.

குமரேசா! உற்ற இகல் ஒழிந்தபின் பப்புருவாகனன் ஏன் மிக்க இன்பம் எய்தி நின்றான் எனின், இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின், இன்பத்துள் இன்பம் பயக்கும் என்க.

இது, இகல் நீங்கின் இன்பம் ஓங்கும் எனகின்றது.

இகல் ஒழியுமுன் கவலுற்று நின்ற இவன் அது ஒழிந்த பின்பு இன்பமெய்தி விளங்கி நின்றானுதலால் "நீக்கியபின் இன்பம் கொண்டுயர்ந்தான்" என்றும்.

இன்பத்துள் இன்பம் என்றது பேரின்பம் என்றவாறு.

துன்பத்துள் துன்பம் என்றது கொடுந்துன்பம் என்றபடி.

இகலைத் துன்பத்துள் துன்பம் என்றது பலரோடு பகைத்தும் சலமிக விளைத்தும், வலமிற நின்றும் நலமறக்கொன்றும், ஒழியாக்கவலை கழியாதுறத்தியும், எரிப்புவீழ் கண்ணிற் கரிப்பு மீக்கூர்ந்தும், அல்லும் பகலும் அல்லலை இழைத்தும், குன்றாத்துயராய்க் கூடி நிற்கும் அதன் கொடுமை கருதி என்க.

இகலை ஒழித்துவிடவேண்டும் என்று உரைப்ப அங்ஙனம் ஒழிப்பின அதனுல வரும்பயன் யாது? என்பாரைநோக்கி உணர்த்தியுள்ளதாக இதனை உணர்ந்து கொள்க

மேல், இகல் ஒழியின் புகழ் எய்தும் என்றார்; இதில், அவ்வொழிவால் உயர்ந்த இன்பமும் உண்டாம் என்கின்றார்.

இகல் என்று சொல்லப்படுகின்ற பெருந்துன்பம் கெடின் அப்பொழுதே பேரின்பம் உண்டாகும் என்பதாம்.

இருள் ஒழிய ஒளிபரந்து நிற்றல்போல் இகல் ஒழிய இன்பம் பரந்துநிற்கும் என்பார் இகல் கெடின் இன்பம் பயக்கும் என்றார். கெடின் என்றது அருமைதோன்ற நின்றது

பரதனைக் கண்டவுடனே வேறுபட நினைந்து இகல்மிக்கொண்டு துன்பமெய்தித் துடித்த குகன், அவனது உண்மை நிலைமையை உணர்ந்தபின்பு இகல் நீங்கி அப்பொழுதே இன்பமெய்தியதுபோல் இகல் இல்லாதவர் எய்துவர் என்க.

இகல் இல்லாதவனுக்கு எல்லாரும் உறவாவர்: ஆகவே செல்வமும் துணைமையும் பெற்று எல்லா இன்பங்களையும் எளிதிலெய்துவன் ஆதலால் இகல் கெடின், இன்பத்துள் இன்பம் பயக்கும் என்றார். இகல் இல்லாதவர்க்கே இன்பம் உண்டாம் என்று விளக்கி அத்துன்பக்கருவைத் துடைத்துவிடுமாறு அடிகள் உணர்த்தியிருக்கும் ஒண்மையை யிதில் ஊன்றி யுணர்க.

இகல் இருக்கும் மனத்தில் கவலை கலக்கம் கடுப்பு முதலிய துன்பவர்க்கமே துதைந்திருக்குமாதலால் அது துனபமென நின்றது. இன்பமுற வேண்டுவோர் இகலை மேற்கொள்ளலாகாதென்பது கருத்து.

ஒருவன் கொண்ட இகலை ஒழித்துவிட்டால் பின்பு அவனுக்கு இன்பமுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பப்புருவாகனன்பால் உணரப்படும்.

## கதை.

பப்புருவாகனன் என்பவன் அருச்சுனனுடைய மகன். சித்திரவாகனன் என்னும் பாண்டியமன்னன் மகளாகிய சித்திராங்கதையிடம் பிறந்தவன். போழுகியாகிய அம்மங்கையை மணந்து மகிழ்ந்து விழைந்து மதுரையில் சிலகாலம் தங்கியிருந்து இவனைப் பெற்றெடுத்து அவ்வழுதி வேந்தனிடமே வைத்துவிட்டுப் பார்த்தன் தீர்த்தயாத்திரை போயினான். இதனை அடியில்வரும் வில்லிபாடலிலும் காணலாம்.

பன்னாளில் நெடும்போகம் பயின்றபின்னர்ப் பப்புருவாகனனென்னும்
பைந்தற்றிங்கள், அன்னானை யவள்பயந்தாள் பயந்தபோதே அம்மகவை உவ
கையுடனவனுமீந்தான், தென்னவன் றனிமூலவேம்பின் தண்டார்த்
தேம்பரிசில் வழங்குபுயத்தென்னர் கோவும், நின்னையென் மரபுநிலைபெற்ற
தென்று நேயமுடன் கவர்ந்து துயர் நீங்கினனே. (பாரதம்).

இங்ஙனம் பாட்டனிடமிருந்து வளர்ந்து பலவகைக் கலைகளையும் பயின்று தெளிந்து இவன் பருவமெய்தினான். உருவிலும் திருவிலும் உயர்ந்து விளங்கினான். வில்லாண்மையில் அவ் விசயனும் வியக்கத்தக்க வெற்றித்திறம் இவன்பால் மேவியிருந்தது. இவ்வாறு மேன்மைமிகவிருந்தும் பிறர் சொல்லை எளிதில் நம்பி விரைவில் மாறுபடும் இயல்பினனாய் இவன் இசைந்திருந்தான். இவ்வகை இவன் இருப்ப முன்பு பிரிந்துபோன தந்தை பின்பு திரும்பி வரவில்லை. தன் துணைவர்களோடு அமைந்து அங்கு வினைபுரிந்திருந்தான். தருமர் அசுவமேதயாகஞ்செய்தபொழுது வெற்றி நலம் பெற்றுவருமாறு முறைப்படி சிறப்புடைய பரியினை நடத்தி அவன் தென்றிசை நோக்கி வந்தான். அவன் வருகையை முன்னதாகவே யறிந்து உலூபி முதலானவர்கள் இவனிடம் வந்து "வடக்கிருந்து ஓர் மன்னன் நினதாகிய இத் தென்னாட்டை வென்றுபோக வருகின்றான்; புரந்தரனையும் வென்று புகழ்மீக்கொண்ட பாண்டியன் பேரனாகிய உன்னையும் மதியாமல் அவன் இன்னவாறு வரலாமா? அவனை எளிதில் விட்டுவிடலாகாது" என்று இதமாக இகல் மூட்டினர். உடனே மனம் மாறுபட்டு இவன் சினமூண்டு நின்றான். இங்ஙனம் இகலி நின்ற இவன் தன் நகருக்கு அவன் வருமுன்னரே வில்லுங்கையுமாக விரைந்து சென்று எதிர்போய் நின்று வெகுண்டு தடுத்தான். இருவருக்கும் ஒருவரையொருவர் இனந்தெரியாமையால் வெம்போர் மூண்டது. அரிய வில்வீரனாகிய அவனும் இவனது வில்லாடலைக்கண்டு வியந்து திகைத்தான். இறுதியில் மந்திரவலியோடு இவன் முந்தி நின்று உந்தி எய்த ஓர் வெம்பகழியால் அவன் வெம்பி விழுந்தான். அங்ஙனம் மூர்ச்சித்து விழுந்தவன் தன் தந்தையே யென்பதைப் பின்பு இவன் தெளிந்து பெரிதும் வருந்தி நாகர்வேந்தன்பால் தான் பெற்றிருந்த மந்திரசித்தியால்

எழுப்பி அவனை வணங்கிப் போற்றினன். என்றும் அடையாத தோல்வியை இன்றடைந்தேனென்று ஏங்கி நின்ற அவனும் தன் புதல்வன் என்று தெளிந்து பொங்கி மகிழ்ந்தான். இகல் ஒழிந்தபின் இருவரும் மிக்க இன்பமெய்தி இணங்கியிருந்தார். இகலுற்றபோது உளங்கவல்கொண்டு துயருற்று நின்ற இவன் அதனை ஒழித்தபின்பு உயரின்பமுடையனாய் ஓங்கி விளங்கினன். இன்பத்துள் இன்பம் பயக்கும் இகல் என்னும் துன்பத்துள் துன்பம்கெடின் என்பதை உலகமறிய இவன் உணர்த்தி நின்றான்.

அகமொழியின் மேன்மை அறம்பெருகும் தீய
இகலொழியின் இன்பம் எழும்.

இகல் இல்லாதவர்க்கே இன்பம் உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

855 என்றும் இகலையெதிர் ஏலாத பத்திரனை
குன்றுமல் நின்றான் குமரேசா—நின்ற
இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர். (ரு)

இ—ள்.

குமரேசா! இகலை என்றுகொள்ளாத விசயபத்திரன் ஏன் என்றும் வென்றியுடையனாய் இன்பமெய்தி நின்றான் எனின், இகல் எதிர் சாய்ந்து ஒழுகவல்லாரை மிகல் ஊக்கும் தன்மையவர் யார் என்க.

இது, இகல் உறாதவர் என்றும் உயர்வுறுவர் என்கின்றது.

இகலை என்றும் ஏலாத என்றது யாரோடும் யாண்டும் அவன் மாறுகொள்ளாது மாண்புற்றிருந்தமை கருதி.

சாய்ந்து ஒழுகலாவது தம் மனத்தில் இகல் எதிரெழுந்து தோன்றினும் அதனை என்றுகொள்ளாது ஓர்ந்து விலகி இனியராய்ச் சார்ந்து நடத்தல் என்க. அங்ஙனம் அமைந்து நடத்தல் மிகவும் அருமை என்பது தோன்ற ஒழுகவல்லாரை என்றார். யாரே? என்ற வினா ஒருவரும் இல்லை என்பதை உணர்த்தி நின்றது. ஓகாரம் தெளிவு தோன்ற நின்றது.

மிகல் ஊக்கும் தன்மையவர் = வெல்லக்துணியும் இயல்பினை யுடையார். எதிரியை வென்று அதனால் சிறந்து சீர் மிகுந்திருத்தலால் வெல்லலை மிகல் என்றார். தாவிப்படரும ஓர்வன்கொடி, எதிரூன்றும கொள்கொம்பில்லையானால் எவ்வாறு தளர்ந்து சாயுமோ அவ்வாறே இகலுக்கு முகமாகாமல் எதிர்சாய்வார் முன் அது தலைசாய்ந்துபோம் என்க.

மேல், இகல் ஒழிந்தால் இன்பம் மிகும் என்றார்; இதில், அதனை விலகி ஒழுகுவார் என்றும் வென்றியாளராய் விளங்கி நிற்பர் என்கின்றார்.

தம் உள்ளத்து மாறுபாடு தோன்றின் அதனை மேற்கொள்ளாது மேவி ஒழுக வல்லாரை வெல்லக்கருதும் இயல்புடையார் யாரும் இல்லை என்பதாம்.

தம்மீது பிறர் இகல் விளைப்பினும் தாம் அவர்மீது எதிர் விளைக்காது அறிவுடையார் இனிதமைந்திருக்கவேண்டும் என்று அடிகளருள அங்ஙனம் இருப்பின் தோல்வியாகாதோ? என ஒருவன் தொடர்ந்து வினவ அவனை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்து கொள்க.

இகல் என்னும் கடுநீரோட்டத்தில் இறங்கிவிடாமல் அகன்று நிற்பவரை அதன் வேகம் யாதும் செய்யமாட்டாதென்றபடி.

தன்மேல் ஒருவன் மாறுபாடுகொண்டு ஊறுபல செய்யினும், தானும் அவன்பால் பதில்செய்யாது ஒதுங்கி இனிதமைந்து ஒழுகின் அவன பாடு தேயுப; சேயவே நாளடைவில் நண்பனுவன்; இகலிநின்ற அவனே இவ்வாறாயின பொதுவில் நின்ற அனைவரும் இவன்பால் அன்பாய்ப பொருந்தி வாழ்வார்; இங்ஙனம் எல்லாரும் தன் வசமாம்படி இனிய நீர்மையனாய் இகலொழிந்து வாழும் இவனைப் பகைபுரிந்து வென்றுகொள்ளவேண்டும் என்று யாரும் நினைபார் ஆகலால் இகல் எதிர் சாய்ந்தொழுக வல்லாரை மிகல் ஊக்கும் தன்மையவர் யார்? என்றார். இங்ஙனம் இன்மை தோன்ற வினவியது அவ்வன்மையையடைந்து எல்லாரும் இத்தன்மையை எய்தவேண்டும் என்றெண்ணி யென்க.

இகல் மீக்கொண்டு தமக்கு எப்பொழுதும் விசுவாமித்திரர் இடரிழைத்து வந்தும் அதற்கு எதிர் செய்யாமல் வசிட்டர் ஒதுங்கி யொழுகியதுபோல் ஒருவன் இகலுக்கு எதிர்சாய்ந்து அமைந்தொழுகுவனாயின் அவன் வென்றியும் புகழும் அடைந்து விளங்குவான் என்றவாறு.

இகலை மேற்கொள்ளாதவர் எல்லா நலங்களையும் கொண்டு என்றும் மேன்மையாளராய் நின்று நிலவுவர் என்பது கருத்து. தனக்கு நன்மையும் வளமையும் ஒருவன் வேண்டுவனாயின் அவன் இகலை வேண்டலாகாதென்பது குறிப்பு. எவ்வகையிலும் இகலை மேற்கொள்ளாமல் இனியனாய் ஒருவன் இசைந்தொழுகுவனாயின் அவனை எல்லாரும் விருமபிப்போற்றுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விசயபத்திரன்பால் உணரப்படும்.

## கதை.

விசயபத்திரன் என்பவன் இற்றைக்கு மூவாயிரத்து முந்நூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பவகிரி என்னும் நகரிலிருந்து அரசு புரிந்த சயசேனன் என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். இவனுடைய தாய் பெயர் பிரிதிமதி. அழகு, அறிவு, ஆண்மை, அமைதி முதலிய மேன்மைகள் யாவும் இவன்பால் மேவியிருந்தன. பருவமெய்தி அரசு கைக்கொண்டு இவன் முறைபுரிந்த காலத்து உயிர்களெல்லாம் மிக மகிழ்ந்திருந்தன. பல நூல்களையும் நன்கு பயின்று தெளிந்த புலவர்களும், இவனது கல்வி நலத்தையும் கட்டுரை வன்மையையுங்கண்டு வியந்து புகழ்ந்தனர். இராச தந்திரத்தில் இவன் மிகச் சதுரன். நுண்மதியாளராய மந்திரிகள் எழுவரை முந்துறவைத்து, தன் ஆட்சியை மாட்சிபெற இவன நடாத்தி வருங்கால் முன்னோர் காலந்தொடங்கிப் பழம் பகைவராயிருந்த அரசர் சிலர் இவன்மேலும சலஞ்சாதித்து வந்தார். அவரது வரவினையும் இயல்பினையும் எதிரறிந்து காத்து எளிதாக இடங்கொடாமலும், எதிர்ந்து இகல்புரியாமலும் இடைதெரிந்து நின்று தடையற இவன் இதஞ்செய்து வந்தான். தாம் மாறுபாடுடையராய் ஊறுபல செய்தும் இவன் மாறுபட்டு வேறு புரியாமல் பெருந்தன்மையோடு நின்று இனிய நீரனாய் அமைந்து

ஒழுகிவருதலை அவர் அறிந்து அடங்கினர். பின்பு அன்பு மேற்கொண்டு நாளடைவில் இவன்பால் நண்பராய் நின்றார். பகைவரும் இகலொழிந்து நயந்து நகலுறும்படி இவன் நடந்துவந்ததைக் கண்டு மறுபுல மன்னரும் வியந்து கொண்டாடினர். மனநலமுடையனாய் இகலற நின்று இங்ஙனம் விளங்கிவந்த இவனை எல்லாரும் உவந்து போற்ற உலகமுழுவதையும் இவன் ஒரு குடைக்கீழ் ஆண்டு முடிவில் அருந்தவம் புரிந்து சாசாம் என்னும் தெய்வபதத்தையும் பெற்று செவ்விய முறையில் அரசு செலுத்தினன். தன் உள்ளத்தில் இகலை ஒழித்தமையால் எங்கும் இகல் கடந்து யாவரும் நண்பராய் நின்று மகிழ இவன் நிலவியிருந்தான். இகல் எதிர்சாய்ந்து ஒழுகவல்லாரை வெல்லக் கருதுவார் யாரும் இல்லை என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. இகலகன்றொழுகிய இவனைக் குறித்து அசோதரன் என்னும் ஓர் முனிவரர் மிக வியந்து உரைத்துள்ளார். அடியில் வருதல் காண்க.

பங்கயப் பழனவேலிப் பவகிரி அரசன் பைந்தார்
தங்கிய தடந்தோள் மார்பன் சயசேனன் அவற்குத் தேவி
செங்கயல் நெடுங்கட் செவ்வாய்ப் பிரிதிமதிபயந்த காளை
வெங்களி யானைவல்ல விசயபத்திரன் என்பானே. (க)

மந்திரத் தரசர்கோவே மற்றவன வையங்காக்கும்
தந்திரந் துறந்து நோற்று மறைந்துசா சாரம் என்னும்
இந்திர வுலகமெய்தி ஏழுடைரைந்து முந்நீர்
அந்தர காலந் தேவர்க் காசனா யாண்டுவந்தான். (உ)

ஆதலால் அமரபோகம் நுகர்ந்தவன் அரசர்செல்வம்
போதுலாம அலங்கல் மார்பபொருளென மருளல்செல்லான்
தீதெலாம் அகலநோற்றுச் சிவகதி சேரும் என்றக்
கோதிலா முனிவன்சொன்ன வுரையிவை கூறககேட்டான். (ந)

(சூளாமணி)

மேற்குறித்த இவன் சரிதம் இதன்கண்ணும் விளங்கி நிற்றல் காண்க. இவனது மனநலமும, மதிநலமும், இகலொழிந்து வாழ்ந்த மாண்பும், பகைகடந்துநின்ற பண்பும், தெய்வத்திருவும், பிறவும் இதனால் இனிதுணரலாகும்.

உள்ளஇகல் நீங்கின் உலகில் இகல்கடந்து
வள்ளலென வாழ்வார் மகிழ்ந்து.

இகலை மேற்கொள்ளாதவரை எல்லாரும் உவந்து மேற்கொள்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

856 அன்றிகலே நன்றென் றகங்கரித்த சாந்தகனேன்
குன்றியுடன் மாய்ந்தான் குமரேசா—என்றும்
இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலும் நணித்து. (சா)

இ—ள்.

குமரேசா! இகலையே மிக விரும்பிநின்ற சாந்தகன் ஏன் இழிவடைந்தழிந்தான் எனின், இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை தவலும் கெடலும் நணித்து என்க.

இது, இகலுடையார் விரைந்து கெடுவர் என்கின்றது. குன்றி உடன் மாய்ந்தான் என்றது பொருள் படை முழுதும் இழந்து அவனும் பொன்றி யொழிந்தமை கருதி.

இகலின் மிகல = இகலின் கண்ணே மிகுதல்; அஃதாவது பிறரோடு மாறுபட்டு அதிலேயே மேலும் மேலும் மீறி நிற்றல்.

இனிது எனபவன் என்றது இன்னாதாய அம் மிகுதியை இனிதென்று கொள்பவன் என்றவாறு. எல்லா இழவுகளையும விரைவிலுளவாக்கும் இகலை இனிது என்று கொள்ளலாகாதென்பது குறிப்பு.

தவலுதல் = குன்றல், சாதல். நணித்து = நெருங்கியுள்ளது. வாழ்கைகை எனப் பொதுவாகக கூறியிருத்தலால் உயிர் வாழ்க்கையையும், உலக வாழ்க்கையையும் உள்ளுகின்றது.

என்பவன் தவலும, வாழ்க்கை கெடலும் என்று கொள்ளின் சொல் நிறையாம்.

மேல், இகல் ஒழிந்தவரே என்றும் உயர்ந்தொளிர்வர் என்றார்; இதில், அதனை ஒழியாது வந்தவர் விரைந்து கெடுவர் என்கின்றார்.

மாறுபாட்டின்கண் மீறி நிற்றலே எனக்கு இனிது என்று கொள்பவனது வாழ்க்கை குன்றலும் அழிதலும் விரைவில் உளவாம் என்பதாம்.

இனிது என்பவனது வாழ்க்கை தவலும் நணித்து, கெடலும் நணித்து எனத் தனித்தனி கூட்டியும் காண்க. இங்குள்ள உம்மைகள் இரண்டனுள் முன்னது எதிரது தழுவிய எச்சம், பின்னது இறந்தது தழீஇயதென்க.

யார் கூறினும் கேளாமல், எவ்விதத்திலும் இணங்காமல் மாறுபடுதலின் கண்ணேயே மிகவும் மீறி நிற்பவர் செல்வமும் இழந்து, அவரும் செத்துத் தொலைவர் என்பார் இகலின் மிகுபவன் வாழ்க்கை தவலும் கெடலும் நணித்து என்றார்.

உளத்தில் இகல்கொண்டு நீண்டவன் கழுத்திலே கயிறிட்டு நான்றவன்போல் தப்பாமல் நாசமுறுவன் என்றவாறு.

பேரெழில் இளமை யாற்றல், பெறலரும் வெறுக்கை வீரம்
சீரொறு சுற்றம் யாக்கை யாவையும் நிலைய வன்றே
சீரெனப் பட்டதன்றோ நிற்பது செறுநர் போரில்
ஆருயிர் விடினும் வானோர் அருஞ்சிறை விடுவதுண்டோ.
இறந்திடவரினும் அல்லால் இடுக்கணொன் றுறினும் தம்பாற்
பிறந்திடு மானந் தன்னை விடுவரோ பெரியரானோர்
சிறந்திடும் இரண்டு நாளைச் செலவத்தை விரும்பி யானும்
துறந்திடேன் பிடித்தகொள்கை சூரனென்றெருபோ பெற்றேன்.

எனச் சூளாற்றி நின்ற சூரபன்மன்போல் இகலிலேயே மிக ஊக்கி நிற்பவர் வாழ்க்கை முற்றும் இழந்து வறிதே மாய்ந்து போவர் என்க.

உற்ற வழக்கினர் உடன்பட வரினும் இடங்கொடாமல் இகல் மிகுந்து முரண்புரிந்து திமிர்ந்தவர் முடிவிலே உறு பொருள் முழுவதும் இழந்து இழிந்துழலுதலை நாளும கண்கூடாக இங்கு நன்கு காணலாம்.

இகலானது பொருட் கேட்டையும் உயிர்க் கேட்டையும் பொருந்த விளைக்குமாதலால் அதனைச் சிறிதும் பொருந்தாது ஒழித்துவிட வேண்டும் என்பது கருத்து.

இகலேயே நலமென்று மிகவும் விரும்பி நின்றவன் விரைவில் இழிந்து அழிவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நாந்தகன்பால் உணரப்படும்.

## கதை.

நாந்தகன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்திருநூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் உறையூரிலிருந்து அரசுபுரிந்த ஒர் சோழ மன்னன். படைக்கலப் பயிற்சியிலும் குதிரையேற்றத்திலும் இவன் மிகச் சிறந்தவன் ஆண்மையுடையவனயினும் அமைதியில்லாதவன். மிக்க முன் கோபமுள்ளவன். பலபோர்முனைகளிலும் புகுந்து வென்றுவந்தானுகலால் எங்கும் தனக்கு எதிரியில்லை என்று இவன் இறுமாந்திருந்தான். சிறந்த பதவியில் உயர்ந்திருந்தும் யாரையும் மதியாது இகழ்ந்து கூறும் இழிந்த இயல்பு இவன்பால் இசைந்திருந்தது. உறுதியை யூன்றியுணராமல் எதனையும் விரைந்து செய்கின்ற வெவ்விய தன்மையன். அறிவுடையாரைவிட வலிவுடையாரையே உவந்துபேணி மிகுந்தபடைகளைத் திரட்டி வைத்து ஆயிரம் பரிக்கோர் சேவகன் என யாவரும் போற்ற இவன் மேவியிருந்தான். இவன் இங்ஙனம் இருந்து வருங்கால் சுந்தரேசபாதசேகரன் என்னும் பாண்டிய மன்னன் மதுரையிலிருந்து அரசுபுரிந்து வந்தான். அவன் நல்ல நீதிமான். கலவியிலும் அறிவொழுக்கங்களிலும் மிகச் சிறந்தவன் தனக்குரிய அரச செல்வங்களையெல்லாம ஒரு பொருளாக மதியாமல் என்றும் இறைவனருளையே கருதி நின்றவன். அரசுகாறுதியாகப் படை முதலியவற்றை மிகுதிபுறத் தொகுத்து வைக்காமல் பரமனுக்கே பலவகைப் பணிகளையும் பரிந்து புரிந்தான்.

> "கண்டிகை மகுடமாதிக் கலனிரை குயின்றுந் திங்கள
> மண்டல மிடறுஞ்சென்னிக் கோபுரம பாடவீதி
> எண்டிசை இருள்கால்சீப்ப எரிமணியிழைத்து வேய்ந்துந்
> திண்டிற லுடையான் இன்ன திருப்பணி பிறவுஞ்செய்தான்."

இன்னவாறு பல புண்ணியச் செயல்களைப் புரிந்துவந்த அவன் மேல் இவன் மிகுந்த இகல் விளைத்து நின்றான். படை முதலிய வலிகள் குறைந்துள்ளன என்று தெளிந்து அமயம் நோக்கி அவ்வேலை வென்றுகொள்ள இவன் கன்றியெழுந்தான்.

“கல்லுமாறநன்ற மார்பன் கருவியின் சிறுமைநோக்கி
மல்லுமாறுதந் திண்டோள் வளவர்கோன் ஒருவன் காவிற்
செல்லும் ஆயிரம் பரிகட்கோர் சேவகன் என்போன்றானை
வெல்லுமா றெண்ணிவஞ்சி வேய்ந்துகொண் டெழுந்துபோந்தான்.”

இவன் இகலிவருதலை அவன் எதிர்ந்து சினந்து இறைவனருளை எண்ணித் துதித்துத் தனக்குள்ள சிறிய படையைத் திரட்டி நகரின் வடதிசை வந்து செருமுனைந்து நின்றான். கடல்போன்ற பெரிய சேனையைச் செலுத்தித் தான் ஒரு கடும் பரிமேலேறி விரைந்து வந்த இவன் முனைமுகம் புகுந்து வெம்போர் தொடங்கினான். அவ்வமயம் பரமன் ஓர் வீர வேடுவன்போல் வேடந் தாங்கி வேல் கைக்கொண்டு எதிர்வந்து வெகுண்டு அமர் செய்தான். அப்போரில் இவன் எதிர்நிற்கமாட்டாமல் அஞ்சி ஓடினான். ஐயன் நகைத்து யாரும் அறியாவண்ணம் அகன்று போயினான். மாறுபட்டு வந்த இவன் வீறுகெட்டு ஓடுவதைக் கண்டு அவ்வழுதி வேந்தன் இவனை விரைந்து தொடர்ந்தான். சிறிதுதூரம்போய் இவன் திரும்பிப்பார்த்தான் அஞ்சும்படிவந்த அந்த வேடுவனைக் காணாமையால் அச்சம் நீங்கி அவன்மேல் ஆர்த்து வந்தான். அம்மீனவன் மீண்டான். இவன் முடுக்கிமேல் நீண்டான். இங்ஙனம் நீண்டுவருங்கால் இடையே ஆழ்ந்திருந்த ஒரு பெரு நீர்க்கிடங்கில் அப்பாண்டியன் விழ்ந்து நீந்திப்போக இவன் பரியோடு பாய்ந்து அதில் ஆழ்ந்து போனான். அன்று இவன் மாய்ந்துபோனதைக் குறித்துப் பரஞ்சோதி முனிவர் நன்கு விளக்கியுள்ளார்.

மீனவன் மதுரை மூதூர் மேற்றிசைக் கிடங்கில் வீழ
மானவெம் புரவியோடும் வளவனும் வீழ்ந்தான் கூடற்
கோனவனருளால் வானோர் குரைகடல் கடையத் தோன்றும்
யானையினெழுந்தான் தென்னன்; கோழிவேந் தாழ்ந்துபோனான்.
(திருவிளையாடல்)

கோழிவேந்து என்றது சோழனை. கோழி = உறையூர். இகலே தனக்கு நன்றென்று என்றும் நயந்து நின்று பாண்டியன்மீது மிகவும் மூண்டுவந்த இவன் ஈண்டிய யாவும் இழந்து இங்ஙனம்

மாண்டுபோனபின், அவன் வேண்டிய நலங்களைஎய்தி வெற்றியோடு விளங்கியிருந்தான். இகலை நயவாத அவன் இன்புற்று வாழ்ந்தான். இகலுவந்து நின்ற இவன் துன்புற்றழிந்தான். இகலில் மிகுந்தவர் விரைவில் அழிவர் என்பதைக்குறித்து அக்காலத்தவர் உரையாடுங்கால் இவனையே முதன்மையாக எடுத்து மொழிந்து வந்தார் இகலின் மிகல் இனிதென்பவன் வாழ்க்கை தவலும் கெடலும் நணித்து என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

நன்றேன் றிகலை நயந்தார் நலமிழந்து
பொன்றுவார் அந்தோ புகைந்து.

இகலால் கேடுவரும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

857 கன்றியிகன் மேவியுண்மை காணாமல் தக்கனென்
குன்றி மடிந்தான் குமரேசா—என்றும
மிகன்மேவன் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா அறிவி னவர். (௭)

இ—ள்.

குமரேசா! தக்கவக்கிரன் இகலே மேற்கொண்டு கண்ணனது உண்மையியல்பினை யுணராமல் என் புன்மைசெய்து ஒழிந்தான் எனின், இகல மேவல் இன்னா அறிவினவர், மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார் என்க.

இது. இகலி நின்றவர்க்கு அறிவு குன்றும் என்கின்றது.

கன்றி என்றது என்றும் கண்ணனோடு கடுத்து நின்றமை கருதி. கன்றல் = கடுப்பு, சினப்பு.

இகல் மேவல்—மாறுபாட்டோடு பொருந்துதலையுடைய. மேவல்—பொருந்தல், சேர்தல்.

மிகல்மேவும் எனவும் இகல்மேவும் எனவும் பாடம்.

இன்னா = இன்னாத; துன்பமான என்றவாறு. இன்னா அறிவு என்றது தமக்கும் பிறர்க்கும் துயர் விளைத்து நிற்கும் இழிமதி

என்க. இகல் மேவாமல் யார்க்கும் இதம் பயந்து நிற்கும் இயல் பினை யுடையது இனிய அறிவாமாதலால் இது, இன்னா அறிவு என நின்றது.

மிகல் = மேன்மை. மெய்ப் பொருள் = தத்துவப்பொருள்; அஃதாவது மெய் நூலில் சொல்லியுள்ள உண்மைப் பொருள் என்க. "மிக்க கல்வியன் மெய்ப் பொருட் கேள்வியன்" என்றது சிந்தாமணி. அதற்கு மேன்மையாவது தன்னை உணர்ந்து கொண்டவரை என்றும் உயர்த்தி நிற்கும் ஒண்மை என்க.

மேல், இகலானது கேட்டினை விளைக்கும் என்றார்; இதில், நல்ல உணர்வையும் அஃது ஒழிக்கும் என்கின்றார்.

இகலை மேவி நிற்கும் இன்னாத அறிவினையுடையவர், மேன் மையை மேவி நிற்கும் உண்மையான உறுதிப் பொருளை உணர மாட்டார் என்பதாம்.

ஒரு பொருளின்மீது மாறுபாடுகொண்ட மனத்தினர்க்கு அதன் உண்மை இயல்பினைத் தேறுமாறு யார்வந்து எவ்வளவு தாம் கூறினும் அவர் உறுதிகண்டு தெளியமாட்டார் என்பார் "இகல் மேவல் இன்னா அறிவினவர், மெய்ப்பொருள் காணார்" என்றார்.

இராமனது மெய்யியல்பினை விபீடணன் எவ்வளவோ எடுத் துக் கூறியும் இகலை மேற்கொண்டிருந்த இராவணன் அதனை உணரமாட்டாமல்

> "ஊனவில் இறுத்து ஓட்டைமா மரத்துள் அம்போட்டிக்
> கூனி சூழ்ச்சியால் அரசிழந்து உயாவனங் குறுகி
> யான் இழைத்திட இல்லிழந்து இன்னுயிர் சுமக்கும்
> மானிடன் வலி நீயலாது யாருளா மதிப்பார்".

என அவனை அவமதித்து வெகுண்டதும், பிரகலாதனன் திரு மாலின் நாம உண்மையை நன்குணர்த்தியபோது இகல் மேவி நின்ற இரணியன் அதனை இசைந்து கொள்ளாமல்

> "மறங்கொள் வெஞ்செரு மலேகுவான் பன்முறை வந்தான்
> கறங்கு வெஞ்சிறைக கலுழன்றன் கடுமையிற் கரந்தான்
> பிறந்து தெண்டிரைப் பெருங்கடல் புக்கினம் பெயராது
> உறங்குவான் பெயர் உறுதியென ருருனக்கு உரைத்தார்".

என்று மிகவும் கனன்று கரைந்ததும் ஈண்டுக் காணத்தக்கன.

எம்பெருமான் தன்மையைச் சிங்கமுகன் எடுத்துணர்த்தியும் இகலி நின்ற சூரன் யாதும் உணராமல்

காற்றில் தள்ளுண்டு, நெருப்பினில் சூடுண்டு, கங்கை
யாற்றில் தாக்குண்டு, சரவணம் புக்கலை யுண்டு,
வேற்றுப் பேர் முலையுண்டு, அழுதே விளையாடும்
நேற்றைப் பாலனையோ பரம்பொருளென நினைந்தாய்.

என்று சினந்ததும் காண்க. இகலின் தீமை இவற்றால் இனிது தெளியலாம். இகலானது அறிவைக் கலக்கி உண்மையை உணர வொட்டாதபடி மக்களை இழிவுபடுத்துமாதலால் அதனை ஒழிவு செய்து ஒழுகவேண்டுமென்பது கருத்து.

இகலுடையவர் உறுதி உண்மைகள் ஒன்றையும் உணராமல் ஊக்கி ஒழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தந்தவக்கிரன்பால் உணரப்படும்.

கதை.

தந்தவக்கிரன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் வட மதுரையிலிருந்த குரோத கீர்த்தியினுடைய புதல்வன். வசுதேவருக்கு ஒரு முறையில் இவன் மைத்துனன் மகனுவன். இவன் மிக்க மெய்வலியுடையவன். சித்திரரதன் சுந்தகன் நீலன் வீரதாமன் கண்டகன் விடூரதன் சிசுபாலன் கஞ்சன் சாலுவன் என்பவர் இவனுக்குத் துணைவராயும் தோழராயும் அமைந்திருந்தனர். ஆண்மையுடையனுயிருந்தும் எப்பொழுதும் கொடிய செயல்களையே இவன் கொண்டு வாழ்ந்தான். யாரும் அஞ்சத்தக்க வெஞ்சினமுடையவன். கஞ்சன் போலவே கண்ணன மீது இவன் கறுவுகொண்டிருந்தான். கண்டவரெவரும் களிந்து காதல்கொள்ளத்தக்க பேரழகனை அவனைச் சிறிதும் மதியாமல் பழுவினை வலியால் மிக இகழ்ந்துவந்தான். பல அற்புதச் செயல்களால் தன் உண்மைத் தன்மையை அக் கண்ணன் காட்டியும் இவன் எண்ணிக் காணுமல் இகல் மிகுத்தே நின்றான். அவனது அருமை பெருமைகளைப் பிறர் அறிவுறுத்தியும் இவன் யாதும் அறியமாட்டாமல் அவமதிப்பே செய்தான். முடிவில் ஒருநாள் அமர்செய்ய மூண்டு கொடிய தண்டொன்றை யெடுத்து

அம் முடிவில்லான்மேல் முனைந்து அடித்தான். அதனைத் தடுத்து விலக்கி அவன் கடுத்துப் பாய்ந்து தன் கைவலி காட்டி இவனை முடித்துத் தொலைத்தான். இவன் முடிந்துபோனதை யறிந்து அறிஞர் பலர் வியந்து நின்றார். இகலின் மேவி நின்றதால் மெய்ம்மை யொன்று மறியாமல் இங்ஙனம் இழிந்தழிந்தானே என்று உற வினரெல்லாரும் இரங்கி நொந்தார். இகல் மேவல் இன்னா அறிவினவர், மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைப் பாகவதத்தில் காண்க.

உளக்கண் குருடாவார் உண்மை யுணரார்
துளக்கும் இகலுட் கொளின்.

இகலுடையார் உறுதி யுண்மைகள் யாதும் உணரா தொழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

858 அன்றிகலி நின்ற அடவியன்பின் ஆக்கமற்றுக்
குன்றினன் என்னே குமரேசா—கன்றும்
இகலிற் கெதிர்சாய்தல் ஆக்கம் அதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு. (அ)

இ—ள்.

குமரேசா! இகலுதலையே மிக ஊக்கி நின்ற அடவியன் ஏன் தன் ஆக்கமிழந்து அழிவுறலானான் எனின், இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம் அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம் என்க.

இது, இகல் மிகுந்தால் கேடுமிகும் என்கின்றது.

இகலை உளங்கொள்ளாமல் ஒருவன் ஒழுகிவருவானாயின் அவ் வாறு அனைவரையும் உறவினராக்கி எல்லா நலங்களையும் அவனுக்கு உளவாக்குமாதலால் அஃது ஆக்கம் என நின்றது.

அதனை என்றது இகலினை. இதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்கும் என்றது அவ்வூக்கலை ஒழித்தொழுகுமாறு உணர்த்திய வாறாம். ஊக்கல் = உறுதியோடு துள்ளி யெழுதல்.

இகலினை எதிர்கொள்ளாதவனிடத்தே எல்லாச் செல்வங் களும் எதிர்கொண்டுவரும்; அதனைக் கொண்டவனைக் கேடுக

ளெல்லாம் கூடி வந்து குவிந்துகொள்ளும் என்றவாறு. இதனால் அதனது ஈனநிலை இனிது புலனாம்.

மேல், இகலை மேற்கொண்டவர்க்கு உண்மை யுணர்வு தோன்றாதென்றார்; இதில், அதனை ஊக்கி நிற்பவர்க்கு ஆக்கம் கெடும் எனகின்றார்.

தன மனத்தில் மாறுபாடு தோன்றினும அதற்கு இடங் கொடாமல் அமைந்தொழுகுதல் ஒருவனுக்கு ஆக்கமாம்; அதனை மிகுதியாக ஊக்கி எழின் கேடு மேற்கொண்டு எழும் என்பதாம்.

மேருவோடு மாறுபட்டு மிக ஊக்கிநின்ற விந்தம் பின்பு நிலைகேடு கெட்டு நிலத்தில் இழிந்ததுபோல் இகலின்கண் மிகுந்தவர் தகவழிந்து இழிந்து கெடுவர் என்க.

ஒருவன் மீது மாறுபாடு தன் மனத்தில் தோன்றின் அதனை மிகப் பாராட்டாமல் பராமுகஞ் செய்து ஒதுங்கி ஒழுகின், எதிரியும் இனியனாய் அமைந்து நிற்பன்; அதனால் உள்ள பொருள் தேயாமல மேலும் நல்லனவே மிகுந்துவருமா ஆதலால் இகலிற்கு எதிர்சாய்தல் ஆக்கம் என்றார். அங்ஙனம் சாயாமல் அதனை மேற்கொண்டு ஊக்கின் பகைவளரும்; அது வளரப் பொருதல் போக்கல் கன்றல் பொன்றல் முதலிய இழவுகளெல்லாம் கிளர்ந் தெழுந்து தொடர்ந்து புகும் ஆதலால் அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்கும் என்றார்.

இகலினை மிகுதியாக ஒருவன் கொண்டு நிற்பனாயின் அவனுக்குக் கெட்டகாலம் வந்திருக்கின்றது என்று கண்டுகொள்க என்றவாறு. இகல் இல்லையானால் செல்வம் உண்டாம்; அது, உண்டானால் கேடு மண்டும் என இது உணர்த்தியதென்க.

இகலானது கேட்டிற்கே ஏதுவாய் நிற்கும் ஆதலால் அதனை நன்று என்று அரசர் கொள்ளலாகாதென்பது குறிப்பு.

இகலையே என்றும் விரும்பி நிற்பவர் இழிந்து கெடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அடவியன் பால் உணரப்படும்.

## கதை.

அடவியன் என்பவன் ஆரியகண்டத்தை யணுகியிருந்த பெருநிலப் பகுதியைத் தனக்கு உரிமையாகக்கொண்டு வாரணவாசி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். பெரிய போர் வீரன். தன் நாட்டைப் பலவகையிலும் வளம்பெறச் செய்து குடிகளுக்கு நலம் பல செய்தவன். வில்வாள் முதலிய பல்வகைப் படைக்கலங்களிலும் இவன் வல்லவன். யானை தேர் முதலிய நால்வகைச் சேனைகளையும் நன்கு தொகுத்துவைத்து எங்கும் வெற்றியுடையனாய் இவன் இசைமிகுத்து வந்தான். யாண்டும் அசையாத நெஞ்சுறுதி யுடையவன். இவனது போர்த்திறத்தையும் படைச் செருக்கையும் கண்டு அரசர் பலரும் அஞ்சி யடங்கியிருந்தார். இவனது அரண் வலியும் கடத்தற்கரிய மிடுக்கோடு சிறப்புற்றிருந்தது. இவனது படை யரண் முதலிய வலியுயர்வுகளைக் குறித்துக் கொங்கு வேளிர் அடியில்வருமாறு கூறியுள்ளார்.

"காண்டற்காகாக் கடல் மருள் பெரும்படைத்
தீண்டற் காகாத் திருந்து மதி லணிந்த
வாரண வாசி வளர்ந்தந் தோம்பும்
ஏரணி நெடுங்குடை யிறைமீக் கூரிய
படைநவில் தடக்கைப் பைந்தார்க் கருங்கழல்
அடவி யரசேனும் ஆண்டகை ஒருவன்." (பெருங்கதை.)

இங்ஙனம் எல்லா மாட்சிகளுமுடையனாய் ஆட்சியில் இவன் சிறந்திருந்தாலும் அகத்தில் பெருந்தன்மையின்றி யாரோடும் விரைந்து பகைத்து வெம்மைசெய்து நின்றான். மகதநாட்டு மன்னனாகிய தருசகன்மீது பொறாமைகொண்டு இவன் இகல் மிகுத்துவந்தான். இவன் அவ்வாறு மிகுந்தாலும் முதலில் அவன் யாதும் எதிர்செய்யாது அமைதியுற்றிருந்தான். இவன் உணர்ந் தடங்காமல் அவனை இகழ்ந்து மேலும் மேலும் மாறுபட்டு மீறினான். தன் போலவே அவன்மீது பகைமைசெய்துவந்த விரிசிகன், அரிமான், மல்லன், முதலானவர்களுடன் கூடி அல்லல் பல விளைத்து முடிவில் வெல்லக்கருதி எல்லாப் படைகளையும் திரட்டி ஒல்லெனவந்து உறுபோர் தொடங்கினான். இவனது கொடு

மையை யறிந்து அவன் உள்ளங் கொதித்தான். உதயணன் முதலாயினோர் உதவியைக் கொண்டு இடமறிந்து நின்று இவ னோடு வந்த அனைவரையும் வென்று அவன் உயர்புகழ் கொண் டான். அதில் இவன் அழிவும் அல்லலும் அடைந்து இழிவோடு மீண்டான். அதன்பின் திருவிழந்து தேய்ந்து பெருங் கேடுகள் பல எய்தி உறுதியின்றி நொந்தான். இகலை என்று கொள்ளாத அவன் உயர்ந்து வாழ்ந்தான்; அதனை மிகுதியும் மேற்கொண்டு நின்ற இவன் தகுதியெல்லாங் குன்றித் தாழ்ந்து கெட்டான். இகல் எதிர் சாய்ந்தொழுகல் ஆக்கம்; அதனை மிகல் ஊக்கின், ஊக்குமாம் கேடு; என்னும் உண்மையை இவன் கூடியுணர்த்தி னான். விரிவைப் பெருங்கதையில் காண்க.

மாறுபா டுள்ளம் மருவின் மருவுமே
ஊறுபா டெல்லாம் ஒருங்கு

இகல் மிகுத்தவர் இழிந்து கெடுவர் என்பது இதனால் கூறப் பட்டது.

---

859 ஏமாங் கதனென் இகலென்றுங் காணாமல்
கோமானாய் நின்றான் குமரேசா — தோமாம்
இகல்காணா னாக்கம் வருங்கால் அதனை
மிகல்காணும் கேடு தரற்கு. (௯)

இ—ள்.

குமரேசா! யாண்டும் இகலை நோக்காத ஏமாங்கதன் என் என்றும் இசையோடு நின்று விளங்கினான் எனின், ஆக்கம் வரும் கால் இகல் காணான்; கேடு தரற்கு அதனை மிகல் காணும் என்க. தோம் = குற்றம்.

இது, இகல் எய்தாதவர்க்கு ஆக்கம் எய்துமென்கின்றது.

காணான் = கருதான். காண்டை இந்துமனச நோக்கு. அதனை = அவ் இகலினை. காணும் = கருதிக்கொள்வான். செய் யும் என்னும் இவ் வினைமுற்று உயர்திணையாண்பாலோடு உற்று முடிந்தது. கேடு தரற்கு = கேட்டினை விளைத்துக் கொடற்கு.

கேடு செய்துகொள்ளுதற்குக் காண்பான் என்றதனுல் அவ் இகலின் தீமை இனிது விளங்கும்.

மேல், இகல் மிகுந்தால் கேடுமிகும் என்றார்; இதில், அதனை நீக்கிவிடின் ஆக்கம் பெருகும் என்கின்றார்.

தனக்கு ஆக்கம் வருங்காலத்து இகலினை ஒருவன் நினையான்; கேடுவருதற்கு அதனை மிகுதியாக எண்ணுவான் என்பதாம்.

ஆகூழ் கனிந்து தனக்குச் செல்வ முதலிய நலங்கள் உளவாங் காலத்தில் ஒருவன் இகலினை உளங்கொள்ளான்; போகூழ் புகுந்து கேடு விளையுங்காலத்தே அதனை மிகுதியாக மேற்கொள்வான் என்பார் ஆக்கம் வருங்கால் காணுன்; கேடுதரற்குக் காணும் என்றார். தான் கெட்டழிய நின்றவன் இகலைவிட்டொழியமாட்டான் என்பதாம்.

பிறரோடு மாறுபடுதற்குரிய காரணம் இருந்தாலும் தனக்கு நல்லகாலம் உள்ளபொழுது அதனை ஒருவன் உள்ளங் கொள்ளான்; கெடுகாலம் வந்தபோதுதான் அதனை மிகவும் கெழீஇக் கொள்வான் என்றவாறு. இகலினை என்று கொள்ளாதவன் எவனே அவனே ஆக்கமுடையனுய் என்றும் அமர்ந்து விளங்குவான்; அதனைக் கூர்ந்துகொண்டவனே குடிகெட்டு அடியோடு குன்றி யொழிவான் என்க.

நல்ல காலத்துக்கு இகல் தோன்றாது; கெட்டகாலத்துக்குத்தான் ஒருவன் உள்ளத்தில் அது தோன்றும் எனச் சுட்டி உணர்த்தி அத்தீக்குணத்தைத் தோற்றமறத் துடைத்து விடும்படி அடிகள் இதில் அருளியிருக்கும் அழகைப் பார்க்க.

இகலை மேற்கொண்டவன் தப்பாமல் கெட்டழிவானுதலால் அதனை யாண்டும் கொள்ளலாகாதென்பது கருத்து.

இகலினை உட்கொள்ளாதவன் எல்லாச் செல்வங்களையும் அடைந்து யாவரும் போற்ற இனிது வாழ்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஏமாங்கதன்பால் உணரப்படும்.

## கதை.

ஏமாங்கதன் என்பவன் சித்திரகூடம் என்னும் வித்தியாதர நகரிலிருந்து அரசுபுரிந்தவன். மித்திரநீகனுடைய புதல்வன்.

அழகில் இவன் மிகச் சிறந்தவன். பல கலைகளிலும் வல்லவன். யாவர்மாட்டும் இனிய நீர்மையனாய் நின்று இதங்கள் பலசெய் தவன். தன் திண்டோள் வலியால் எண்டிசைகளையும் வெல்ல வல்லனாயினும் முறைகடந்து யாண்டும் இகல்கொள்ளாது என் றும அருளும் அமைதியுமுடையனாய் அமைந்திருந்தானாதலால் எல்லாரும் இவன்பால் அன்புமீக்கூர்ந்து நண்பாய் நின்றார். நலம் புரிந்து நிற்கும் எல்லா வுயிர்களுமே இதம்பெற்று வாழும்படி உல கினை இனிது காத்துவருதலே அரசபதவிக்கு உரிமையாம் என இவன் உணர்ந்திருந்தான். மணிநீர் சூழ்ந்த மாயிரு ஞாலம் பிணி தீர்ந்தின்பம பெருக எழுந்த அணிபூந்தருவென இவன் அமர்ந்து விளங்கினான்.

“ மண்குளிர் கொள்ளக்காக்கும் மரபொழிந் தரசர் தங்கள்
விண்குளிர் கொள்ளவோங்கும் வெண்குடை வெதும்புமாயிற்
கண்குளிர் கொள்ளப்பூக்குங் கடிகமலத் தடமும், காவுந்
தண்குளிர் கொள்ளுமேனும் தான்மிக வெதும்பு மன்றே. (1)

தீயினம் படர்ந்து வேந்தன் செறுவதே புரியுமாயிற்
போயினம் படர்ந்து வாழும் புகலிடம் இன்மையாலே
வேயினம் படர்ந்த சாரல் வேங்கையை வெருவிப் புல்வாய்
மாயினம் படர்ந்ததெல்லாம் வையகம் படருமன்றே ”. (2)

என்பன வாதியான நீதி யுண்மைகளையும் அரசர் தன்மை களையும் உருகி நினைந்து இனிய நீர்மைகளையே என்றும் இவன் உளங்கொண்டு நின்று உலகோம்பிவந்தான். குறுநிலக் கிழவரும் பெருநில மன்னரும் ஒருவரோடு ஒருவர் மாறுகொண்டு பலமுறை அமர் விளைக்கத் துணிந்தபொழுது இவன் புகுந்து இதமபல கூறி இகலொழிந்து வாழுமாறு இன்னருள் செய்தான். இவனது இன்னுரைகளைக் கேட்டும் செயல் இயல்களைக் கண்டும் அவரும் இகலொழிந்து வாழ்ந்தார். இங்ஙனமே எல்லார்க்கும் இனிய னாய்ப் புனிதமெய்தி நின்று இவன் செங்கோல் செலுத்தினான். மறுபுல மன்னர் சிலர் பொறாமையால் இவன் மீது மாறுபாடு கொண்டு நேரில் ஒன்றும் செய்யமாட்டாமல் வேறுபட நின்று ஊறுசெய்துவந்தார். அவர் மீதும் இவன் மாறுபாடு நினையாமல்

நேர்மையோடு நின்றே அன்புசெய்து வந்தான். காரணமுள்ள இடத்தும் இகல் எண்ணுமல் இவன் ஒழுகிவருதலை நினைந்து அவ ரெல்லாரும் பகையொழிந்து உறவுகொண்டாடி இவனை உவந்து போற்றினர். இங்ஙனம் அனைவரும் மகிழ்ந்து உரிமைசெய்ய உலக முழுவதுக்கும் தனியரசனாய் நின்று இவன் இனிது புரந் தான். தனக்கு ஆக்கம் வருங்கால் ஒருவன் இகல் காணுன் என் பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான். இவனைக் குறித் துத் தோலாமொழித் தேவர் அடியில்வருமாறு கூறியுள்ளார்.

செந்தளிர் புதைந்த சோலைச் சித்திரகூடம் ஆளும்
அந்தளிர் அலங்கல் மாலை அரசர் கோன் சிறுவனந்தார்
இந்திரன் புதல்வனன்னுன் எந்தல் ஏமாங்கதற்கு இம்
மந்திர வுலகின்வாழும் மன்னர் மாறில்லை மன்னு. (சூளாமணி.)

அரசர் பலரும் உவந்துபோற்ற இவன் உயர்ந்து நின்ற தன் மையும், இந்திர குமரன்போல் எல்லா ஆகங்களையும் எய்தி விளங்கியிருந்த வுண்மையும் இதனுல் இனிதுணரலாகும்.

உள்ளத் திகலை யொழியார் உறுதுயராம்
வெள்ளத்து வீழ்வார் வினை.

இகலுடையாதவரே உயர்வுடைவார் என்பது இதனுல் கூறப் பட்டது.

---

860 வென்றிக் கனக விசயரிகல் கொண்டதனுல்
குன்றினர் என்னே குமரேசா—என்றும
இகலானு மின்னுத வெல்லாம் நகலானு
நன்னய மென்னுஞ் செருக்கு. (ம)

இ—ள்.

குமரேசா! கனக விசயர் இகல் கொண்டிருந்ததனல் ஏன் துயர்கொண்டு நொந்தார் எனின், இன்னுத எல்லாம் இக லான் ஆம்; நன்னயம் என்னும் செருக்கு நகலான் ஆம் என்க.

இஃது இகலொழிந்தால் எல்லா நலங்களும் எய்தும் என் கின்றது. இகல், நகல் என்பவற்றில் ஆன் மூன்றனுருபு.

இன்னாத வெல்லாம் = துன்பத்தொகுதிகள் யாவும். அவை கவலை, கலக்கம், வறுமை, பழி, பாவம் முதலியன.

நகல் = மகிழ்தல்; அஃதாவது உடன்பட்டு உவத்தல். மாறுபாட்டிற்கு மாறுபட இது யாரையும் தன் வயப்படுத்தும் மாட்சிமையுடையது. இதனை மன்னர் இடமறிந்து நன்கு மருவிக்கொள்ள வேண்டும் என்பது கருதி ஆக்கத்தை விரித்துணர்த்தினார்.

நன்னயம் என்றது நல்ல நயம் என்றவாறு. என்றது இன்பத்திற்கேதுவாய இனிய நீர்மையை.

செருக்கு என்றது இங்குத் தீமை கலவாத உள்ளக் களிப்பினை. இகலுடையார்க்கு எத்துணையும் இஃது எய்தாதென்பது தோன்ற நகலான் ஆம் என்றார்.

மேல், இகலி நிற்பவர் கெடுவர் என்றார்; இதில் அஃதில்லாதவர்க்கே எல்லா இன்பங்களும் உளவாம் என்கின்றார்.

இகல் ஒன்றினால் துன்பங்களெல்லாம் உளவாம்; அஃதின்றி நகுதலால் நல்ல நயமாகிய உள்ளக் களிப்பு உண்டாம் என்பதாம்.

எளிதில் மாறுபடுதலாகிய புன்மையை ஒருவன் மருவி நிற்பின் அவனை யாவரும் மருவாது வெறுத்து விடுவர்; விடவே தள்ளுண்ட தனி விலங்குபோல் தனித்து வருந்தி அமயம் வாய்த்தபோதெல்லாம் அல்லலிழைப்பன்; அதனால் செல்வமிழந்து சிறுமையடைந்து அழலிடைப்பட்ட புழுப்போல் நாளும் துயரிடைப்பட்டுத் துடித்து உழலுவன் என்பார் இன்னாதவெல்லாம் இகலான் ஆம் என்றார்.

பிறர் சிறிது மாறுபடினும் அதனைப் பெரிதாக வளர்த்துக் கொடும் பகையாக்கி அடும்போர் ஆற்றி அறிவிலார் முடிந்து போவர்; அறிவுடையார் அவ் இகலினை அகலவிடுத்து நகல் மிகப் புரிந்து நலமுறச் செய்வர் என்க.

நேரலர் தங்களை நேர்ந்துளா ரெனப்
பேரிகலாற்றியே பெரிது மாய்வதும்
பூரியர் கடனலாற் புலமைக்கு ஏற்பதோ?
சீரியர் கடனவை தெரிந்து செய்வதே. (கந்தபுராணம்)

இகலுக்கு எளிதாக அரசர் இடங் கொடுக்கலாகாதென இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

இகலாவது தீக்குணங்களுள் ஒன்று; அது, உறவினைக் கெடுத்துப் பிரிவினை விளைத்து நோய்போல் நின்று உயிர்களை வருத்தும்; எவர்க்கும் இடர் செய்யத் தூண்டும்; அதனை ஒழித்தவரே புகழும் இன்பமும் பொருந்தி என்றுந் தாழ்வின்றி எங்கும் வென்றியாளராய் நின்று விளங்குவர்; அதனை ஒழித்துவிடாதவர் வாழ்விழந்து உறுதியோராது தாழ்வடைந்து தவிப்பர்; என இதுவரையும் உரைத்து வந்து இறுதியாக அவ் இகலால் துன்பமே விளைபுமாதலால் அதனை மன்னர்கள் கொள்ளலாகாது என உறுதி பெற இதில் உணர்த்திய நுளிறு.

இகலானது துன்பங்களுக்கெல்லாம் நிலைக்களமாயுள்ள தோர் புலைக்குணமாதலால் அஃது உளத்திலுருவண்ணம் தொலைத்து விடவேண்டும் என்பது கருத்து.

இகல்புரிந்து நிற்பவர் துயர் மிகுந்து இழிவர் என்பதும், அதனை ஒழித்து விட்டவரே உயர்ந்து விளங்குவர் என்பதும் இதில் உணர்த்தப்பட்டன. இவ்வுண்மை கனகவிசயர்பால் உணரப்படும்.

கதை.

கனகவிசயர் என்பவர் பாலகுமாரன் என்னும் ஆரிய மன்னனுடைய அருமைப் புதல்வர். கனகன் விசயன் என்னும் இவர் ஒருதாய் வயிற்றில் உடன் பிறந்து உருவம் குணஞ் செயல்களில் வேறுபாடின்றி ஒருவரை ஒருவர் பிரியாமல் மிகக ஒற்றுமையோடு மேவியிருந்தாராதலால் கனகவிசயர் என ஒருமை நயந்தோன்ற யாவரும் இவரை உரிமையாக அழைத்துவந்தார். ஆரியவர்த்தத்தை யாண்டுவந்த குறுநில மன்னர் பலர்க்கும் முதன்மையெய்தி முடியுடை வேந்தாய் இவர் நிலவியிருந்தார். விந்தமலைக்கும் இமயமலைக்கும் இடையே கிடந்த பெருநில முழுவதும் ஆரியவர்த்தம் எனப் பேர் பெற்றிருந்ததாதலால் அதனை ஆண்டு வந்த இவர், ஆரிய மன்னர் என அழைக்கநின்றார். சிறந்த திருவோடமைந்திருந்தும் பெருந்தன்மையின்றிச் செருக்கும் சினமுங்

கொண்டு எவரையும் இவர் அவமதித்து வந்தார். தமிழ் வேந்தர்களை மிகவும் தாழ்வாக நினைந்து இகல் புரிந்து என்றும் இகழ்ந்து நின்றார். உத்தரன், விசித்திரன், உருத்திரன், பைரவன், சித்திரன், சிங்கன், தனுத்தரன் முதலிய ஆரிய அரசர் பலரும் இவருக்கு ஆருயிர்த் துணைவராயமைந்திருந்தாராதலால் எவரும் நிகரில்லையென்று அகஞ்செருக்கி இகலூக்கியிருந்தார். இங்ஙனம் மாறுபட்டு மீறிநின்ற இவரது நிலையினைச் சேரன் செங்குட்டுவன் என்னும் நம் மன்னர்பெருமான் மந்திரி மூலமாக அறிந்து சினந்தானாயினும் அமயம் நோக்கி அடங்கியிருந்து பின்பு கண்ணகியை வழிபடுதற்கு இமயமலையிலிருந்துதான் உருவச் சிலைகொண்டுவரவேண்டுமென்று இசைந்துப் படைகளோடு எழுந்து வடதிசை நோக்கிச் சென்றான். இடையேயிருந்த அரசர் பலரும் எதிர்வந்து கண்டு திறைகொண்டு தந்து உறவு செய்து நின்றார். இவர் யாத்திரம சிறிதும் மதியாமல் பகைமை மீக்கொண்டு தம் நாட்டுள் வந்த அவனுக்கு இடர்மிகச்செய்தார். அம்மன்னன் யாதும் அஞ்சாது உறுதியோடு சென்று இவரது இராசதானியை யணுகினான். இவர் கொடுஞ்சினங்கொண்டு பெரும்படையோடு எழுந்து அவன் மேல் முனைந்தமர்புரிந்தார். அதில் சிங்க ஏறுபோல் நின்று தன் சேனையைச் செலுத்தி அவன் செயிர்த்தமர்செய்து எதிர்த்துவந்த படைகளையெல்லாம் தொலைத்து இவ்விருவரையும் பிடித்துப் பிணித்தான். தன் மந்திரியாகிய வில்லவன்கோதைசெய்த சூழ்ச்சியை வியந்து புகழ்ந்து குறித்தபடியே இமயச்சிலையை இவர்தம் தலைமேலேற்றி இங்குக் கொண்டுவந்து கோயிலமைத்துத் தான் கருதியதை முடித்தபின் ஒருநாள் இவரை யழைத்து உரிமை செய்து வைத்து இனிமேலாவது என்னையும் என் நாட்டையும் இகல்செய்து இகழாதிருப்பீரா? என்று அவன் இன்னுரையாடினான். அவனது பெருந் தன்மையையறிந்து இவரும் அவன்பால் மிகு நண்பு கொண்டார். உடனே வேண்டிய வரிசைகளையெல்லாம் இவர்க்கு அவன் விரும்பிக்கொடுத்து மீண்டுபோய்த் தம் நாட்டையடைந்து அரசு செலுத்தும்படி அருள்செய்து விடுத்தான். அதன்பின் இகலொழிந்து அவனோடு உறவு புரிந்து இவர் அகமகிழ்ந்து திகழ்ந்தார். முன்பு கொண்ட இகலால் பொருள்

படை புகலிபன இழந்து துன்பமடைந்த இவர், பின்பு நகை புரிந்து நட்படைந்தபின் இன்பமிகவுடையராய் என்றும் மகிழ்வுற்றிருந்தார். இன்னதெல்லாம் இகலான் ஆம்; நன்னயம் என்னும் செருக்கு நகலான் ஆம் என்னும் உண்மையை உலகம் அறிய இவர் உணர்த்தி நின்றார். இவரியல்பினையும் இகல் புரிந்து நின்ற செயலினையும் தெரிந்து இளங்கோவடிகள் அழகுறக் கூறியுள்ளார். ஈண்டுச் சிறிது காட்டுதும்.

ஓங்கு நீர்வேலி உத்தர மரீஇப்
பகைப் புலம்புக்குப் பாசறையிருந்த
தகைப் பருந் தானை மறவோன் றன்முன்
உத்தரன் விசித்திரன் உருத்திரன் பைரவன்
சித்திரன் சிங்கன் தனுத்தரன் சிவேதன்
வடதிசை மருங்கின் மன்னவ ரெல்லாம்
தென்றமி ழாற்றல காண்குதும் யாமெனக்
கலந்த கேண்மையிற் கனகவிசயர்
நிலந் திரைத் தானையொடு நிகர்த்துமேல் வர
விரைதேர் வேட்டத் தெழுந்த அரிமா
கரிமாப் பெருநிரை கண்டுளஞ் சிறந்து
பாய்ந்த பண்பிற் பல்வேல் மன்னர்
காஞ்சித் தானையொடு காவலன் மலைப்ப
ஆரிய வரசர் அமர்க்களத் தழிய
றூழி லாட்டிய சூழ்கழல் வேந்தன்
போந்தையொடு தொடுத்த பருவத் தும்பை
யோங்கிருஞ் சென்னி மேம்பட மலைய
வாய் வாளாண்மையின் வண்டமி ழிகழ்ந்த
காய்வேற் றடக்கைக் கனகனும் விசயனும்
ஐம்பத்திருவர் கடுந்தே ராளரொடு
செங்குட்டுவன்றன் சினவலைப் படுதலும்
வடபேரிமயத்து வான்றரு சிறப்பிற்
கடவுட் பத்தினிக் கற்கால் கொண்டபின்
சினவேன் முன்பிற் செருவெங் கோலத்துக்
கனக விசயர்தங் கதிர்முடியேற்றிச்

செறிகழல் வேந்தன் தென்றமிழ் ஆற்றல்
அறியாது மலைந்த ஆரிய மன்னரைச்
செயிர்த்தொழில் முதியோன் செய்தொழில் பெருக.
(சிலப்பதிகாரம்).

மேற்குறித்த கனகவிசயர் இகலி நின்றதும், அதனாற் இன்னாத வெல்லாம் எய்தி நொந்ததும், பிறவும் இதனுள் விளங்குதல் காண்க.

யாரொடும் பகை கொள்ளிலன் என்றபின்
போரொடுக்கும்; புகழொடுங்காது; தன்
தாரொடுங்கல் செல்லாது; அது தந்தபின்
வேரொடுங் கெடல் வேண்டலுண்டாகுமோ. (இராமாயணம்).

இன்பமெலாம் எய்தும் இகலின்றேல் அஃதுண்டேல்
துன்பமெலாம் தோன்றும் தொடர்ந்து.

இகலினது இன்மையுண்மைகளே இன்பதுன்பங்கட்கு ஏதுவாம் எனபது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

இகல் என்பது ஒற்றுமையைச் சிதைத்து மக்களுக்குள் பிரிவினைகளை யுளவாக்கி ஒரு கொடுநோய்போல் நின்று மிகு துயர் விளைக்கும். அது, பிறர்க்குத் துன்பஞ்செய்யத் தூண்டும். அதனை உளத்தில் ஒட்டாதபடி ஒழித்துவிட்டால் உயர்புகழுண்டாம். இன்பமும் பெருகும். இகலினை ஏற்றுக்கொள்ளாதவனை உலகமெல்லாம் போற்றிப் புகழும். அதனை நன்று, என்று நயந்துகொண்டவன் குன்றி அழிவான். அவன் அறிவு குன்றி நன்மை தெரியாமல் புன்மை புறுவான். இகலை நீக்கி விடுதலே ஒருவனுக்கு ஆக்கமாகும். அதனைவிட்டு விலகாதவன் தப்பாது கெட்டுவிடுவான். இன்னாதவெல்லாம இகலால் உளவாம் ஆதலால் அதனை இகந்து விடுதலே மிகுந்த நன்மையாம் என்பதாம்.

அசு-வது இகல் முற்றிற்று.

---

# 87-ம் அதிகாரம் பகைமாட்சி.

அஃதாவது பகையினை மாண்புறச்செய்து மருவிக்கொள்ளுதல். என்றது தனக்கு வெற்றியுறுமாறு குற்றமிக்குள்ள பகைவரைக் குறிக்கொண்டு பொருது அரசன் சிறப்பெய்தவேண்டும் என்றவாறு. மேல், இகல் தீது என விளக்கி அதனை விலக்கிவிடுமாறு எல்லார்க்கும் பொதுவாக உணர்த்தினர்; இதில், நலம் பயக்கும் பகையை அரசர் நாடிக்கொள்ளவேண்டும் என்று சிறப்பாக உணர்த்துகின்றார் ஆகலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

861 அன்றெறன் வலியார்மேல் அச்சுவன்போ பேற்றழிந்தான்
குன்றுதகை வைவேற் குமரேசா—என்றும்
வலியார்க்கு மாறேற்ற லோம்புக ஓம்பா
மெலியார்மேன் மேக பகை. (க)

இ—ள்.

குமரேசா! தன்னினும் வலியாராய மன்னரோடெதிர்த்து அச்சுவன் ஏன் அழிவுற்றான் எனின், வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக; ஓம்பா மெலியார்மேல் பகை மேக என்க.

இது, வலியாரோடு பகை செய்பலாகாதென்கின்றது.

யாண்டும் எவ்வகையிலும் குன்றுதலின்றி என்றும் வென்றியோடு விளங்கிநின்று வருதலால் குன்றுதவேல் என்றும். இவ்வேற் படை எம்பெருமானுக்குத் தனியுரிமையாதலால் உடைமை நயந்தோன்ற அடையாய் நின்றது. வை = கூர்மை.

வலியார் என்றது பொருள், படை, அறிவு, ஆண்மை, கல்வி முதலியவற்றால் தம்மினும் வலியராயுள்ளாரை. மெலியார் என்றது அப்பொருள் முதலிய நலங்களில் தம்மைவிடத் தாழ்ந்துள்ளவரை என்க.

மாறு = பகை. மாறடு தானை எனவும், மாறுபடு மன்னர் வீறுகளைத் தொழிபவும் எனவும் வருவனவற்றுள் இது நின்றுணர்த்துதல் காண்க' ஏற்றல் — எதிர்த்தல்.

ஓம்புக = ஒழிக. பகையாய் எதிர்தலினின்றும் தன்னைப் பாதுகாத்துக்கொள்க என்பார் மாறு ஏற்றல் ஓம்புக என்றார். மூள்ளைப்பார்த்து நடமின் என்பதுபோல் இது அல்லல் நீக்கத் தோன்ற உணர்த்தியதென்க.

மேக = மேவுக; விரும்பிக்கொள்க என்றவாறு. மே என்பதே தனிமொழியாய் நின்று விருப்பத்தை யுணர்த்தும் நம்பும் மேவும் நசையா கும்மே என்றது தொல்காப்பியம்.

தன்னினும் வலியாரோடு பகையாய் எதிர்தலை ஒழிக: தம்மைக் காக்கலாகாத வினை மெலியாரோடு பகையாயெழுதலை விரும்புக என்பதாம். இனி, ஓம்பா என்பதை மெலியார்க்கு அடையாக்காமல் மேக என்பதனோடு கூட்டி ஒழியாது விரும்புக எனினுமாம்.

தனக்கு மாட்சியுறும்படி பகையை நோக்கிக்கொள்க என்று அரசற்கு இது உணர்த்தி நிற்கும் அழகைப்பார்க்க. பகைமாட்சி எனப் பெயரிட்டமைக்குப் பொருள் இது முதலாக இனி தறியலாம். மருவலர் நிலையினை வினவியறிந்து மெலிவிருந்தாலன்றி அவர் மேல் மாறேயறலாகாதென்க.

குலத்தினை வினவி, புள்ளக் கோளினை வினவி, வந்த
நிலத்தினை வினவிக், தொல்லோர் நெறியினை வினவிக், கொண்ட
சலத்தினை வினவிப், போர்செய்தானையை வினவி, அன்னார்
வலத்தினை வினவி யல்லால் மற்றொன்று மனங்கொள்வாரோ.
(கந்தபுராணம்).

வலியறிந்து மெலிவுநோக்கி மேவவேண்டுமென இது விளக்கி நிற்றல காண்க

வலியார்முன் தன்னை நினைக்க; தான் தன்னின்
மெலியார்மேல் செல்லு மிடத்து என்பதில் மெலியாரை நலியலாகாதென்று அருள்நலந்தோன்ற அருளிவிட்டு, ஈண்டு அவரைப் பகைத்து வெல்லுக என்றது மாறாகாதோ? எனின், ஆகாதென்க. என்னை? ஆண்டுத் துறவுக்குரிய அருளறங் கூறினார்; ஈண்டு அரசுக்குரிய முறைநலங் கூறுகின்றார் ஆதலால் என்க.

வலியாரை எதிர்த்தால் மலைமேல் அடித்த கோல்போல் தலைசிதறி நிலைகுலைந்து போவர் ஆதலால் வலியார்க்கு மாறு ஏற்றல் ஒழிக என்றார்.

வன்பாட் டவர்பகை கொள்ளினும் மேலையார்
புன்பாட் டவர்பகை கோடல் பயமின்றே
கண்பாட்ட பூங்காவிக் கானலந் தண்சேர்ப்ப
வெண்பாட்டம் வெள்ளந் தரும். (பழமொழி).

வெண்பாட்டம் என்றது கோடை மழையை. பாட்டம்—மழை பெய்தல். இப் பாட்டு, வலியாரோடு பகை கொள்ளினும் மெலியாரைப் பகைபாதே என்கின்றதே! நம் அடிகள் கருத்தோடு மாறுபடாதோ? எனின், படாதென்க. வலிந்துபோய் யாரோடும் பகைகொள்ளற்க என்று இப் பழமொழி குறித்துள்ளது; அது எதிர்ந்துள்ளாரது வலிநிலைகளை யறிந்து வலிமை கண்டால் விலகி மெலியராயின் மேவி வெல்க என்று பகைகடிந்து தன்னைப் பாதுகாக்கும் பொருட்டு அரசனுக்கு உணர்த்துகின்றதாகலான் மாறுபாடின்மை யுணர்க. "வந்த சண்டையை விடாதே; வலியச் சண்டைக்குப் போகாதே" எனப் பொதுவாக நாட்டில் வழங்கிவருவதும காண்க.

மெலியாரைப் பகைத்துச்சென்றால் தமக்கு யாதொரு நலிவுமின்றி எளிதாக வென்று புகழ் பொருள் முதலிய உயர் நலங்களையெல்லாம் இனிதாக எய்தலாம் ஆதலால் மெலியார்மேல் பகை மேக என்றார். வியங்கோள் இரண்டும் விதிப்பொருளில் வந்தன.

தம் மாட்சி சிதைவுறாது தாம் உயர்வுறும்படி எதிரிகளின் வலிவகைகளை நுணுகியறிந்து பகைமையை அரசர் ஆட்சிசெய்து கொள்ளவேண்டும் என்பது இதன் திரண்டபொருளாம்.

தன்னினும் வலியாரோடு பகைசெய்தெதிர்த்தவன் இழிவு பல எய்தி அழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அச்சுவக்கிரீவன்பால் உணரப்படும்.

## கதை.

அச்சுவக்கிரீவன் என்பான் இரத்தினபல்லவம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த ஓர் விஞ்சையர்குல வேந்தன். மயூரகண்டன் என்னும் மன்னனுடைய மகன். தாய்பெயர் நீலாங்கனை. இந்நிலவுலகத்தோடு வித்தியாதர மண்டலங்கள் முழுவதையும் தனக்கு உரிமையாக்கொண்டு பெருமைமீக்கூர்ந்து தன் ஆணையை

எங்குஞ் செலுத்தி எவரும் போற்ற இவன் இசைபெற்று நின்றான். மிக்க மெய்வலியுடையவன். கலைகள் பலவுங் கசடறக் கற்றவன். தக்க மந்திரிகளைப் பக்கம்வைத்துத் தன் ஆட்சியை இவன் அழகுற நடாத்தினான். இவனது அறிவு நலங்களையும் ஆற்றலையுங்கண்டு அரசர் பலரும் திறைகள் தந்து அடங்கியிருந்தனர். அக்காலத்தில் சச்சுதன் என்னும் ஓர் மதிமந்திரி தன் மன்னனுக்கு இவனுடைய தன்மைகளை விளக்கிக் கூறியுள்ளான். ஈண்டுச் சிறிது காட்டுதும். அடியில் வருவன காண்க.

பொன்னகர் தன்னையாள்வான் புரந்தரனனைய மாண்பின்
மன்னவன் மயூரகண்டன் மற்றவன் தேவிமாருள்
மின்னவிர் மருங்குல் நீலாங்கனையென விளங்கி நின்றாள்
அன்னவள் புதல்வன் கண்டாய் அச்சுவககிரீவன் என்பான் (க)

அதிர்கழல் அலங்கல்வேலோய் அச்சுவக்கிரீவன் என்னும்
பொதியவிழ் பொலங்கொள் பைந்தார்ப் புரவலன் திகிரியெய்தி
மதிதவழ் குன்றமெல்லாம் வணக்கியபின்றை மண்ணும்
கொதிதவழ் வேலினான்றன் குறிப்பொடு கூடிற்றன்றே. (உ)

சுற்றமாண் புடைமையாலும் சூழ்கதிர்த் திகிரியாலும்
கொற்றமாங் குடைமையாலும் குலத்தது பெருமையாலும்
கற்றமாண் விஞ்சையாலும் கருதிய முடித்தலாலும்
வெற்றிவே லவனே டொப்பார் வேந்தர்மற் றில்லை வேந்தே. (௩)
(சூளாமணி).

இங்ஙனம் நிகரற்ற தலைமையோடு இவன் நிலவியிருந்தான். வனசவிலோசனை, வசந்தசேனை, மாலினி முதலிய மங்கையர் எண்மர் இவனுக்கு மனைவியரா யிருந்தனர். அப்பேரழகிகள் பால் ஆராக்காதலுடையனாயமர்ந்திருந்து பெரும் போகங்களை நுகர்ந்து இனிய புதல்வர்களைப் பெற்று இன்புற்று வருங்கால் தன் செல்வப் பெருக்கையும் திறலின் நிலையையும் உறுதி யுயர்வுகளையும் நினைந்து உளஞ் செருக்கினான். இவனது நிலையினை யறிந்து போதனபுரத்து இளவரசனாகிய திவிட்டன் என்பவன் செயிர்த்திருந்தான். வரபலங்களோடு வாள் வலியிலும் தோள் வலியிலும் அவன் வல்லவன், போராற்றலிற் சிறந்தவன். அவனை அடக்கி விட வேண்டுமென்று இவன் துடுக்குமீக் கொண்டான். அவ

னுடைய நாட்டிலிருந்து அழகிய ஆயிரம் இள மங்கையரையும், விலையுயர்ந்த மணிகளையும், பலவகை அரிய பொருள்களையும் திறையாக வேண்டி வரும்படி தூதுவரை விடுத்தான். அவர் சென்று வேண்டத் திவிட்டன் சினந்து நோக்கினான். "என்னை மெலியன் என்று எண்ணியோ அவன் இவ்வாறு வீண் வினைபுரிந்தான்; புலியிடம் புல்வாய் புகுந்ததுபோல் இனி அவன் பொன்றி முடிவான்; நீவிர் நின்று பயன் என்? வீரனுயின் போரில் வந்து அவனை நேரச் சொன்மின்" என்று பொங்கி முழங்கினான். அன்று அவன் வீரமோடு நின்றுரைத்த தீரமொழிகளைப் பின்வந்த மன்னர் பலரும் மதித்துப் போற்றினர். தன்மதிப்புள்ளார் யாவரும் இன்றும் அவனிலையினை முன் மதிப்பாகக் கொண்டுள்ளார். அந்த அவன் உரைத்தவற்றுள் சில ஈண்டுத் தந்து காட்டுதும்.

"உழுதுதங் கடன்கழித் துண்டு வேந்தரை
வழிமொழிந்து இன்னணம் வாழு மாந்தர்போல்
எழுதிய திறை யிறுத்து இருந்து வாழ்வதே
அழகிது பெரிதுநம் அரச வாழ்க்கையே. (க)

நாளினும் திறை நுமக்கு உவப்பத் தந்துநா
டாளுதும்; அன்றெனில் ஒழிதுமே யெனின்
தோளினும், தொடுகழல் வலியினுனும், இவ்
வாளினும், பயனென்னை மயரி மாந்தர்காள் (உ)

விடமுடை எரிக்கொடி விலங்கு நோக்குடை
அடலுடைக் கடுந்தொழில் அரவினாழற்
படமுடை மணிகொளக் கருதிப் பார்ப்பதோர்
மடமுடை மனத்தன் அம்மயரி மன்னனே. (ங)

பாழியான் மெலிந்தவர் திறத்துப் பண்டெலாம்
ஆழியால் வெருட்டிநின் றடர்த்திர் போலுமங்
கேழைகாள் இனியொழித்திட்டுச் செவ்வனே
வாழுமா றறிந்துயிர் காத்து வாழ்மினே. (ச)

அன்றெனிற் றிறைகொளக் கருதி னங்கொரு
குன்றின்மேற் பெறுவதென் வந்துகொள்க யான்
நின்றுதன் நெஞ்சகம் நிறைய வீழ்வன
வென்றியம் பகழியும் விசும்பும் ஈவனே." (ரு)

என்று அவன் நின்று மொழிந்ததைக் கேட்டுத் தூதுவர் நிலைகலங்கி ஓடினர். இவனை பணுகி நிகழ்ந்ததை புரைத்தார். இவன் நெஞ்சங்கொதித்து வெஞ்சினமூண்டு வெம்போர் வேட்டு விரிந்த படைகளோடு அவன்மேல் விரைந்தெழுந்தான். அவ் எழுச்சியை அருகிருந்த அறிஞர் பலருந் தடுத்து அவனது வலியுடைமைகளைத் தெளிய உணர்த்தினர். இவன் யாதும் உணராளுய் ஊக்கிச் சென்றான். அறிவும் ஆண்மையும் துணைவலியும் போர்வலியும் உடைய அவன், மண்டியெழுந்து வல்லமர்புரிந்து வந்த படைகளையெல்லாம் சிந்த நூறி இவனையும் கொன்று முடித்தான். முன்பு மெலியாரையெல்லாம் வென்று மேன்மை யெய்தியிருந்த இவன், தன்னினும் வலியான்மேற் சென்றதால் இவ்வண்ணம் மாண்டு முடிந்தானென்று தின்றவர் மறுகி மீண்டார். மெலியாரோடு பகைபாய் மேவலாமேயன்றி வலியார்க்கு மாறு ஏற்றலாகாது; ஏற்றால் இழிந்தழிவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

6436 (364)

தம்மின் வலியாரைத் தாம்பகைத்தல் சாதற்கே
அம்மா புகுந்த தது.

மெலியாரையன்றி வலியாரை எதிர்க்கலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

24.cc + 643
1363

---

862 மண்டுதுணை யின்றிவந்த மாயாவி வாலிவரக்
கொண்டழிந்தான் என்னே குமரேசா—பண்டமைந்த
அன்பிலன் ஆன்ற துணையிலன் தான்றுவ்வான்
என்பரியு மேதிலான் றுப்பு. (௨)

இ—ள்.

குமரேசா! துணையின்றிப் பகைத்துவந்த மாயாவி வாலியை வெல்லமாட்டாமல் ஏன் விளிந்துபோனன் எனின், அன்புஇலன், ஆன்ற துணை இலன், தான் துவ்வான், ஏதிலான் துப்பு என்பரியும் என்க.

இது, துணைவலி யில்லாதவன் பகைக்கு எளியனாவன் என்கின்றது.

கொண்டு அழிந்தான் என்றது அவமாவெய்தி அழிந்தமை கருதி.

ஆன்ற = அமைந்த; அன்புடையராய்த் தனக்கு உறுதி பயக்குமாறு வலிநிறைந்த என்க. ஆன்றதுணை என்றது பாண்டவர்கட்குக் கண்ணன்போலவும், சுக்கிரீவனுக்கு அனுமசாம்பவந்தர்கள் போலவும் உறுதி அமைந்த துணைவரை.

துவ்வான் = வலியிலான். ஏதிலான் = பகைவன். துப்பு = வலி. என்பரியும் = யாங்ஙனம் தொலைக்கும்? வினா இன்மை குறித்து நின்றது. பரிதல்—அறுத்தல், அழித்தல். "பாங்கரிற் பழுங்கள் அய்ப்பப் பழவினை பரியும் அன்றே" என்றது சிந்தாமணி. அதில் இது, அழிவினை யுணர்த்தி நிற்றல காண்க. "கயிறு கால் பரிய வயிறு பாழ்பட்டாங்கு" என மணிமேகலையிலும். "மாணிழை மகளிர் புலந்தனர் பரிந்த பருஉக்காழாரம் சொரிந்த" என மதுரைக் காஞ்சியிலும் இதன் பொருளைக் காண்க.

மேல், மெலியார் பகையை மேவுக என்கின்றார்; இதில், அவரது இயல்பு எளிமைகளை இனிதாக உணர்த்துகின்றார்.

தன் சுற்றத்தார்மாட்டு அன்புஇலன்; அமைந்த துணையிலன்; தானும் வலியிலன்; இப்படிப்பட்டவன் பகைவன் வலியினை எப்படித் தொலைப்பான் என்பதாம்.

ஒருவனிடத்தில் அன்பு இல்லையாயின் உறவினர் நெருங்கார்; அதனால் அவன் கிளையற்ற மரம்போல் தனியே பொலிவற்று நிற்பன்; அந்நிலையாளனை எவரும் எளிதில் வெல்லலாம் ஆதலால் அவன் தொலைவிற்கு அவ்வின்மை முதன்மையாய் நின்றது.

அன்பு இன்மை, துணையின்மை, துவ்வின்மை ஆகிய இவ் இன்மைகள் எதிரிக்கு மிக நன்மையாகுமாதலால் அத் தன்மை புன்மைகளை யூன்றி நோக்கிப் பகைவர்மேல அரசர் ஊன்ற வேண்டுமென்றவாறு.

அன்பு முதலியன இல்லாதான் ஏதிலான் துப்பை என்பரியும்? என்றதனால் அன்புளன், ஆன்ற துணையுளன், தான் துவ்

வுளன் ஆகியவன் எதிரியின் துப்பினைத் தொலைக்க வல்லனாட் என்பது பெற்றாம். ஆகவே அவனை மலைக்கச் செல்லலாகாதென்க.

துவ் என்பது உண்டலை புணர்த்திவரும்; ஈண்டு அது, உணவின் பயனாகிய வலிமேல் நின்று, எதிர்மறையில் வந்துள்ளமையால் துவ்வான் என்பதற்கு வலியில்லான் என்று பொருள் கொள்ளப் பட்டது. நுகர்வில்லாதவன் என வறியனைக் குறித்துவரும் துவ்வான் எனபது இங்கு வலியில்லாதவன் என மெலியனைக் குறித்து நின்றதென்க. "துவ்வா நறவின் சாயினத்தானே" என்றது பதிற்றுப்பத்து.

உள்ளத்தில் அன்புட, புறத்தில் படைச் செருக்கும், தன் உடம்பில் ஆற்றலும் ஆகிய இவை இல்லாதானை எளிதாக வெல்லலாம் ஆகலால் அவனைப் பகையாககிக்கொண்டு மேற் செல்லுக என்பது குறிப்பு.

துணைவலி யில்லாமலும், தன் வலி தெரியாமலும், ஒருவன் பகைவன்மேல் வந்தால் அவன் பனைத்து மாய்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மாயாவிபால் உணரப் படும்.

கதை.

மாயாவி என்பவன் அசுரத்தச்சனான மயனுடைய மகன். துந்துபி என்பவனும் மண்டோதரியும் இவனுடன் பிறந்தவர். நிரம்பிய செல்வத்தோடு விரும்பிய போகங்களை இவன் நுகர்ந்து நின்றவன். பொறி நுகர்ச்சிகளில் பெரிதும் ஆழ்ந்து அருந்தவர்க்கெல்லாம் அல்லலாற்றி வந்தான். ஒருவரிடத்தும் உள்ளன்பில்லாதவன். பல்வகை மாயத்தொழில்களையும் பயின்று தெளிந்தவன். இவ்வாறு வஞ்சகங்களில் இவன் வல்லனேயன்றி நெஞ்சுறுதியில்லான். பொல்லாத செயல்களை புரிந்துவந்த இவனை நாரதர் ஒருமுறை கண்டார். யாரையும் அவமதித்து நிற்கும் இவன்பால் அவர் அன்புடன் நெருங்கி மனமகிழும்படி இன்புறப் பேசினார். தன்னைக்குறித்து மிகத் தருக்கி நின்ற இவன் அவரை நோக்கி என்னைப்பற்றி உலகோர் என்ன சொல்லுகிறார்

கள்? என்று இளித்து விறவினான். எல்லாரும் புகழ்ந்து சொல்லு கிறார்கள் உன் முன்னவனைக் கொன்ற வாலிதான் உன்னை இகழ்ந்து தள்ளுகிறான் எனத் தமது இயல்பின்படியே அவர் இகழுற இகல் மூட்டினார். சரி நீர் போம் என்றான். இனி இவன் இரான் என்று அவர் எழுந்து போயினர். அவர் போன பின்னர் மானங் கருதி இவன் மறுகி நின்றான். அவ்வானர வேந்தனது வலியுயர்வுகளையறிந்து நில்லாது அகந்தைத் துணிந்துவந்து போர்க்கு வலிந் தழைத்தான். படங்கலேறுபோல் அம்மன்னன் உடனே விரைந் தெழுந்து சினந்தமர் புரிந்தான். அவ் ஆண்டகையின் ஆற்றலைக் கண்டு ஆற்றமாட்டாமல் இவன் அஞ்சி ஓடி ஓர் பெரிய பிலத்து வாரத்துட் புகுந்தான். அவனும் விட்டுவிடாமல் விரைந்து தொடர்ந்தான்.

முட்டி நின்றவன் முரணுரத்தினேர்
ஒட்ட அஞ்சி நெடுந்தலைய ஓடினான்
வட்ட மண்டலத் தரிது வாழ்வெனா
எட்டரும் பெரும் பிலனுள் எய்தினான். (க)

எய்துகாலைப் பிலனுள் எய்தி யான்
நொய்தின் அங்கவற் கொணர்வென் நோன்மையாய்
செய்தி காவல் நீ சிறிது போழ்தென
வெய்தினெய்தினான் வெகுளி மேயினான். (இராமாயணம்) (உ)

இங்ஙனம் மேவிய அவன் முடிவில் இவனது ஆவியை முடித்து அடலோடு மீண்டான். அரிவாய்ப்பட்ட கரிபோல் அலமந்து நொந்து அப்பிலத்தினுள்ளேயே பதைத்தழிந்து இவன் பாழாய்க் கிடந்தான். அன்பு சிறிதுமின்றி வன்கண்ணனாய் நின்ற இவன் ஒரு துணையுமின்றி வறிதேவந்து மாண்டுபோனதை யறிந்து அமரரனைவரும் மிக மகிழ்ந்திருந்தார். குண நலமும், துணைவலியும், இல்லாதவனைப் பகைவர் எளிதிலழித்துவிடுவர் என்பதைக் குறித்து அக்காலத்தவர் உரையாடுங்கால் இவனையே முதலுரிமை யாகக் கருதி வந்தார். அன்பும், ஆன்றதுணையும், அடலும் இல்லாதான் ஏதிலான் துப்பினை யாதும் பரியான் என்னும் உண்மையை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான்.

சிறகிழந்த புள்ளேன்னத் தேம்பும் பகைமுன்
உறவுறுதி யில்லான் உறின்.

நன்மைவன்மைகளில்லானை வேறல் எளிதென்பது இதனால் கூறப்பட்டது.

---

863 ஓர்ந்தமையா விக்கிரமன் உற்றான் பகைக்கெளிதாய்க்
கூர்த்தழிந்தான் என்னே குமரேசா — சார்ந்தென்றும்
அஞ்சு மறியான் அமைவில னீகலான்
தஞ்ச மெளியன் பகைக்கு. (௩)

இ—ள்.

குமரேசா! ஆவதை அறிந்து அமையாமல் விரைந்து வந்த விக்கிரமன் ஏன் பகைவனுக்கு எளியனாய் விளிந்துபோனான் எனின், அஞ்சும் அறியான் அமைவுஇலன் ஈகலான் பகைக்கு தஞ்சம எளியன் என்க.

இது, தோல்விக்கு ஏதுவாய குற்றங்கள் இன்ன என்கின்றது.

அஞ்சும் = அஞ்சுவான்; துணிந்து செய்யவேண்டிய தன் காரியங்களில் பயந்து நிற்பவன் என்றவாறு. இக் கோழைக் குணம் அரசமாபிற் பிறந்தவனுக்கு மிகவும் இழிவாதலால் அந் நிலைமை தோன்ற அதனை முதலில் வைத்தார்.

அமைவு = அடக்கம், இணக்கம். அமைவு இலன் என்றது இடங்கண்டு அடங்கி இனியனாய்ப் பிறரோடு இசைந்து நில்லானை. ஈகலான் = ஈகையிலலான், உலோபன் என்க.

தஞ்சம் = எளிமை. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே என்றது தொல்காப்பியம். தஞ்சம் எளியன் என்றது மிகவும் எளியன் என்றவாறு. ஒரு பொருள்மேல் இங்ஙனம் இருமொழிகளை யூன்றியது உறுதி தோன்ற என்க.

பகைக்கு = பகைவர்க்கு. பகை என்னும் பண்புப் பெயர் ஆகு பெயராய் அதனை யுடையாரை உணர்த்தி நின்றது.

மேல், அன்பும் துணையும் இல்லாதாரைப் பகைத்துக்கொள்ளலா மென்றார்; இதில், அச்ச முதலியன உள்ளவனை எளிதாக வெல்லலாம் என்கின்றார்.

எதற்கும் அஞ்சுவான்; ஆவதனை ஆய்ந்தறியான்; நிலை தெரிந்து அமைவுறான்; யார்க்கும் ஈயமாட்டான்; இத்தன்மையானவன் பகைவர்க்கு மிக எளியனுவான் என்பதாம்.

தன் உள்ளத்தில் அச்சமுடையவனுக்குப் புறத்தில் எவ்வளவு துணைவலி யிருந்தாலும் பயனில்லை ஆகலால் அவனை எளிதாக வென்று கொள்ளலாம் என்பார் பகைக்கு அவன் எளியன் என்றார்.

அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்
எஞ்சாமை வேந்தற்கு இயல்பு

என்ற அவ்வுயர்நிலைக்கு மாறாய் அச்ச முதலிய இந்நான்கும் உற்றிருத்தலை ஊன்றி நோக்குக. அரசர் குலமாட்சிக்குச் சிறிதும் பொருந்தாத இக்குற்றங்கள் இருப்பின் அவர் குன்றி யழிவர் என்க.

அஞ்சுதலுடையான் றன்னை அரிவையர் தாமும் அஞ்சார்;
சஞ்சலம் அடையும்; நாளும் சாதலே வந்து சாரும்;
பஞ்செனை நினைந்து வந்து பகைவர்தாம் பற்றிக் கொள்வார்;
விஞ்சிய பழியாம் அஞ்சல்; வீரமே மேன்மையாமே.

இதனால் அஞ்சுவானது எளிமையும் அழிவும் இனிதுணரலாகும். அறிந்தடங்கிப் பிறரோடு பொருந்தி வாழானாயின் பின்பு கலிங்கன்போலத் தனியே நின்று கலங்கி மாள்வன் ஆதலால் அமைவின்மையும் எளிமைக்கு ஏதுவாமென்க. ஈயாத புல்லர் இருந்தென்ன? போயென்ன? என்றபடி உலோபமுடையானை யாரும் அணுகாது உவர்த்து விடுவாராதலால் ஈகலான் பகைக்கு எளியன் என்றார்.

பகைவரை வென்று உயர்புகழ் கொண்டு ஒருவன் மாட்சியுறவேண்டுமாயின் அஞ்சுதல் முதலிய புன் செயலுடையாரை நன்கு பகைத்துக் கொள்ளவேண்டும்; அங்ஙனம் கொண்டால்

தனக்கு யாதொரு வருத்தமு மின்றி அவரை எளிதில் வென்று கொள்ளலாம் என அரசுக்குரிய உபாயத்தை இதுணர்த்தியது.

பற்றுள்ளம் பயமுதலிய குற்றங்களுடையவன், பகைக்கு எளியனாய்ப் பட்டழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விக்கிரமன்பால் உணரப்படும்.

## கதை.

விக்கிரமன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னிருந்த ஓர் சோழ மன்னன். இவன் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்து அரசுபுரிந்தான். அக்காலத்தில் மதுரையிலிருந்து செங்கோல் செலுத்திவந்த வங்கியசேகரன் என்னும் பாண்டிய மன்னன்மீது இவன் பகைமைகொண்டு இடையிடையே பலவகைபல்லல்களையும் வஞ்சமாக விளைத்துவந்தான். நேரே சென்று அவனோடு அமராடுதற்கு அஞ்சிநின்ற இவன் இங்ஙனம் புன்செயல் புரிந்து வருதலை அப்பஞ்சவன் அறிந்தும் வெஞ்சினங் கொள்ளாமல் மிக்க பொறுமையோடு மேவியிருந்தான். செல்வம் சீர் முதலிய எல்லா நலங்களும் இசைந்திருந்தும், நல்ல அறிவும் நயத்தகு குணங்களும் இல்லாதவனாய் இறுமாந்திருந்த இவன் எவ்வகையிலாவது அவனை வென்றுகொள்ளவேண்டுமென்று விழைந்து நின்றான். வடநாட்டிலிருந்த ஆரியமன்னர் சிலர் முன்னதாகவே அத்தென்னவனோடு பகைத்து நின்றாராதலால் இவனுடன் வந்து கலந்துகொண்டார். அவர் உறவினை நினைந்து இகல் மிகுந்து படைகளோடு இவன் ஊக்கியெழுந்து மதுரையை நோக்கி வந்தான். இவன் வரவினையறிந்து அம்மன்னன் மனங்கொதித்துக் கன் இறைவனைப் போற்றி முரசறைவித்துப் படைகளுடன் மூண்டெழுந்து பொருகளம் புகுந்து உருமென உரறி உடன்றமராடினன். எந்தவேளையும் அவன் வந்தித்து வழிபடும் சுந்தரக்கடவுளும் ஓர் சேனைத் தலைவன்போல் தோன்றி வில்லும் பகழியும் ஏந்தி அவனுக்குத் துணையாய் நின்று இவன் தானைமீது சரமழை சிந்தினர். தன் படைபடும் பாட்டை இவன் பார்த்தான். இனி நின்றால் இறந்துபடுவேமென்றஞ்சி அனைவரையும்

விட்டு புனை முகத்தை யகன்று இவன் தனியாக ஓடினான். உறு துணையாக உடன்வந்த மன்னர் இவன் அஞ்சி ஓடுவதைக்கண்டு நெஞ்சங் கனன்று தலைவனாயுள்ள நீ இங்ஙனம் தளர்ந்து மீளலாமா? என்று உறுதிகூறித் தேற்றி உறுத்தி உடன் நிறுத்தினார். அவர் இவனை நோக்கி அன்று உரைத்ததும், உறுத்ததும், இதனடியில் வருவன காண்க.

"செருத்துணையாகி வந்த உத்தர தேயத்துள்ளார்
துருக்கர்; ஒட்டியர்; வேறுள்ளார் யாவருஞ் சூழ்ந்து நில்லென்
றுருத்தனர் வைது நீபோர்க் குடைந்தனை போதி யிதுன்
கருத்தெனின், ஆண்மையாவர் கண்ணது? உன் மானம் என்னாம்?
செல்லலை வருதி யென்னாச் செயிர்த் தெழுந் திடியினார்த்துக்
கல்லெழுவனைய திண்டோட் டெளிபன் படைமேற் சென்று
வில்லிற வலித்து வாங்கி வேறு வேறாகி நின்று
சொல்லினுங் கடியவாளி தொடுத்தனர் விடுத்தார் ஆர்த்தார்."

இவற்றால் இவனது அஞ்சலும் அறியாமையும் நன்கு அறியலாகும். வந்தவர் தேற்ற மனங்கலங்கி வந்து மறுகிநின்ற இவன் முடிவில் படை முழுதும் இழந்து பாண்டியன் கைப்பட்டுப் பதைத்து நொந்தான். இவனது நிலைமையை நோக்கி அனைவரும் நகைத்து நின்றார். அஞ்சும், அறியான், அமைவிலன், ஈகலான், தஞ்சம் எளியன் பகைக்கு என்னும் உண்மையை உலகம் அறிய இவன் உணர்த்தி நின்றான். இவனை வென்று கொண்டபோது பாண்டியனை வீரக்கோலத்தோடு அலங்கரித்துப் பட்டத்து யானை மேல்வைத்து மிக்க சிறப்புடன் சங்கு பேரிகைகள் எங்கும் முழங்க உலாவரச்செய்து மதுரை மாந்தரெல்லாரும் மகிழ்ச்சிமீக் கூர்ந்தார். இதனடியில் வருதல் காண்க.

பாடுவா யளிதேனூட்டும் பைந்தொடைச் செழியன் வென்றிக்
கோடுவாய் வைத்திட்டார்த்துக் குஞ்சர முகட்டிலேறித்
தோடுவாய் கிழிக்குங் கண்ணார் மங்கலந் துவன்றி யேந்த
நீடுவார் திரைநீர் வேலி நீண்மதி னகரிற் புக்கான். (திருவிளையாடல்)

அமைவின்றி அறியாது வந்த பகைவனை அவன் எளிதாக வென்று மகிழ்வுமீக் கொண்டமை யிதனால் இனிது அறியலாகும்.

ஆவ தறியான் அறம்புரியான் அன்னான்மேற்
போவ தினிது புகல்.

அச்ச முதலிய குற்றங்களுடையாரை எளிதில் வெல்லலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

864 அன்று வெகுண் டெழுந்த ஆருணிமன் எனெளிதாக்
குன்றி யழிந்தான் குமரேசா — என்றுமே
நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கும் எளிது. (௪)

இ—ள்.

குமரேசா! வெகுளி நீங்காது நின்ற ஆருணி யாசன் உதயணனமேல்வந்து பொருது ஏன் எளிதாக மாய்ந்தான் எனின், வெகுளி நீங்கான்; நிறை இலன, எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது என்க.

எளிதாக் குன்றி அழிந்தான் என்றது வலியனுய் நின்ற அவன் வெகுளி முதலிய குற்றங்களால் வீணே புகுந்து எளிதாக விளிந்து போனமை கருதி.

வெகுளி நீங்கான் = தான் கொண்ட கோபம் என்றும் ஒழியான். நாளும் குன்றாச் சினத்தன் என்றவாறு.

நிறை = நெஞ்சடக்கம். அஃதாவது தான் உள்ளியதொரு காரியம் உறுதிபெற முடியும் வரையும் பிறரறியாவண்ணம் அடக்கமுறப் பேணிவைத்தல் என்க. “நிறையெனப்படுவது மறை பிறரறியாமை” என்றது கலி. மறை = இரகசியம்.

நிறை இலன் என்றது நெஞ்சமைதி யின்றி மறையினை நேர்ந்தபடி வெளியிடுபவன் என்க. இவனை உளறுவாயன் என்பர்.

வெகுளி நீக்கமும் நிறையுடைமையும் ஒருவனுக்கு மிக்க உறுதியைப் பயக்குமாதலால் அவற்றைத் தமக்கு அணியாக அரசர் கொள்ளவேண்டும்; கொள்ளாரேல் எல்லாராலும் அவர் எளிதாக வெல்லப்படுவர் என இது விளக்கியதென்க.

மேல், பகைவர்க்கு ஒருவனை எளியனாக்கும் குற்றம் நான்கைக் குறித்துக் காட்டினார்; அவற்றோடு இணைத்தெண்ணும்படி இதில் இரண்டினை இசைத்துணர்த்துகின்றார்.

நீங்காத சினத்தனாய், நிறையிலனாயுள்ளானை எக்காலத்தும் எவ்விடத்தும் எல்லார்க்கும் வெல்லல் எளிதாம் என்பதாம்.

வினைக்கள் எஞ்சாமையையும், உம்மைகள் முற்றையும் உணர்த்தி நின்றன. இதிலுள்ள மூன்று படிகளின் நிலைகளை ஊன்றி யுணர்க.

தீராக் கோபம் போராய் முடிந்து, சோர்க் கெளியனாய் நீள நிறுத்தி, ஆராத் துன்பம் ஆக்குமாதலால் நீங்கா வெகுளியனை அரசன் ஒங்கலாகாதென்க.

உள்ளத்துள்ளதை வாயடக்கமின்றி எங்கும் ஒருவன் உளறித் திரியின் அவனது நிலைமை முழுதும் எவர்க்கும் தெள்ளிதிற் புலனாம்; ஆகவே ஆறம்பார்த்து அமயம் நோக்கி நிற்கும் பகைவர்க்கு அவ் வெள்ளை மகனை வெல்லல் மிகவும் எளிதாம் என்க.

தணியாத கோபனையும், மறைவெளிப்படுத்தி நிறையின்றி நிற்கும் வெறியனையும் வெல்லுதற்குக் காலங்கருதி இடந்தெரிந்து வலியறிந்து செல்லவேண்டா எக்காலத்திலும் எவ்விடத்திலும் யாரும் போய் மிக இலகுவாக வென்றுகொள்ளலாம் என்பார் எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது என்றார்.

என்றும் எவராலும் எவ்விடத்தும் ஒருவன் வெல்லப்படாமல் விளங்க வேண்டுமாயின் அவன் நிறையுடையனாய் நிலைதெரிந்து நீங்கிய வெகுளியனாய் நிற்கவேண்டும் என்பதாம். இத்தகையானை வெல்லலரிதாகுமாதலால் அவன்மேற் செல்லலாகாதென்பது கருத்து.

ஓயா வெகுளியும் உள்ளடக்கமின்மையு முடையானை வெல்லல் எளிதாமாதலால் அவனைப் பகையா யெதிர்த்தல் இனிதாம் என்பது குறிப்பு. நிலையறியாது என்றும் வெகுளிசெய்து நிற்பவன் பகைவரால் எளிதில் வெல்லப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆரணியால் உணரப்படும்.

## கதை.

ஆருணி என்பான் பாஞ்சாலதேயத்து மன்னன். இவன் அளவிடலரிய ஆற்றலுடையவன். மிகுந்த தோற்றப் பொலிவோடு சிறந்து நின்றவன். அகன்ற மார்பினன். திரண்ட தோளினன். எவரும் விழைந்து நோக்கத்தக்க நிமிர்ந்த நடையினன். உருவும் கல்வியும் திருவும் பொருந்தி இவன் உயர்ந்திருந்தான்; ஆயினும் உள்ளத்தில் ஆசை மிகுந்திருந்தான். ஊக்க மிக்க படைகளை ஆக்கிக்கொண்டு அரசர் பலரையும் அடக்கி நின்றான். ஒருமுறை படையெடுத்துச் சென்று கோசலதேசத்தை வென்று அவ்வரசனது நகரை யழித்து அவனுடைய மகளாகிய வாசவதத்தை முதலிய பேரழகிகள் பலரை வௌவிக்கொண்டு வந்து தன் உரிமை மகளிர்க்குத் தாதிகளாக அமைத்து ஊழியஞ் செய்யவைத்தான். இங்ஙனம் அடுந்திறலோடு கொடுஞ்சினமுமுடையனாயினும் எற்றவரெவர்க்கும் இல்லை யென்னாமல் ஈந்து வந்தமையால் இசைபெற்று நின்றான். "அளப்பருங் கடுந்திறல் ஆருணி" எனவும், "அடல்வேற்றானை ஆருணி" எனவும், "பலர்புகழ் விழுச்சீர்ப் பாஞ்சாலராயன்" எனவும், பலவகையாகப் புகழ் மிகப் பெற்று இவன் நிலவி நின்றான். தான் சென்ற இடமெல்லாம் வென்றியே கண்டு வியந்து வந்தமையால் மேலும் மேலும் ஊக்கி எங்கும் புகுந்து எவரையும் அடக்கி முடிவில் வந்து கோசம்பி நகரை முற்றுகை செய்து கைப்பற்றிக்கொண்டு முரசறைவித்து வெற்றித் திறம்விளங்க அந்நகரிலேயே அரசு புரிந்து இவன் வீற்றிருந்தான். இங்ஙனம் இருக்குங்கால் அந்நகருக்குரிய மன்னனாகிய உதயணன் என்பவன் இவனை வெல்லக் கருதித் தன் மந்திரிகளோடு ஆராய்ந்து வேவு பார்த்திருந்தான். தான் இல்லாத சமயம் வந்து தன் தம்பிமார்களை வென்றுகொண்டு இவன் வீற்றிருத்தலை நினைந்து நினைந்து அவன் வெய்துயிர்த்து வெஞ்சினங் கூர்ந்தான். தன் மந்திரிகளுள் ஒருவனாகிய வருடகாரகனை யழைத்து இவனது நிலையினையும் அந்தரங்கத்தையும் அறிந்துவரும்படி தந்திரமாக விடுத்தான். அவன் பாறுபடவந்து மிக விநயமாக நின்று இவனுக்கு இனியவன்போலப் புகுந்து உறவு செய்துகொண்டு உள்ளிருந்தே உளவுகளெல்லாவற்றையும் நன்கு

ஓர்ந்திருந்தான். இவன் தற்புகழ்ச்சியில் மிக்க விருப்பமுடைய னாதலால் தனது அக நிலைகளையெல்லாம் அவனிடம் அடக்கமின்றி உரைத்துவந்தான். மறை முழுவதையும் தெளிவுற அறிந்த பின்பு ஒருநாள் அவன் உறுதிசெய்பவன்போல் இவனது படைத் தலைவர்களாகிய கௌசிகன், சாயன், பிங்கலசாரணன், கும்பன் முதலாயினோரைத் தம் படைகளோடு சென்று அயலிடம் தங்கும்படி பணித்துவிட்டுத் தன் மன்னன் படைகளை உள்ளே புகுத்தினான். உடனே போர்ப்பறைகள் முழங்கின. இடை தெரியாமல் வந்து கடிதாய் எழுந்த அம் முழக்கினைக் கேட்டு இவன் கலக்கமீக் கூர்ந்தான்.

"கதுமெனை நிகழ்ந்த கலக்கமொடு கல்லென
மதிதவழ் புரிசை வளநகர் கலங்கப்
பெருமலை நடுவண் இருளிடை பெழுந்தோர்
கடுவன்போலக் காவலன் உரறி
மகிழ்ச்சி மெய்தி மாற்றோர் இல்லெனும்
இகழ்ச்சியேதந் தலைத்தது எனக்கு இன்றெனக்
கவலை கூராக் கலங்கினன்"

இங்ஙனமான இவன் பின்பு இருந்த படைகளோடு எழுந்து துணிந்து வந்து பொருது அனைவரையும் இழந்து முடிவில் நிலை குலைந்து அழிந்தான். தன் மீது என்றும் நீங்கா வெகுளியனாய் நின்ற இவனை உளவறிந்து வந்து எளிதாக வென்று உதயணன் பின்பு முடிபுனைந்தாண்டான். ஆற்றலிருந்தும் ஆராச் சினத்தோடு அடக்கமிலனாய் நின்று மறைவெளிப்படுத்தியதால் இவன் எளிதில் அழிந்தான் என அனைவரும் இகழ்ந்து நின்றார். நீங்கான் வெகுளி நிறையிலன் எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. அலமர லெய்தி அன்று இவன் அழிந்த வுண்மையை இதனடியில் வருவதால் இனிது காணலாம்.

கார்கடல் ஒலியெனக் கலந்துடன் கூடித்
திமிரம் பாய்ந்த அமர்மயங் கமயத்துச்
சிலைத்தன தூசி; மலைத்தன யானை;

ஆர்த்தனர் மறவர் ; தூர்த்தனர் பல்கணை ;
விலங்கின ஒள்வாள் ; இலங்கின குந்தம் ;
விட்டன தோமரம் ; பட்டன பாய்மாத் ;
துணிந்தன தடக்கை ; குனிந்தன குஞ்சரம் ;
அற்றன பைந்தலை ; இற்றன பல்கொடி ;
சோர்ந்தன பல்குடர் ; வார்ந்தன குருதி ;
குழிந்தது போர்க்களம் ; எழுந்தது செந்துகள் ;
அழிந்தன பூழி ; விழுந்தனர் மேலோர் ;
இப்படி நிகழ்ந்த காலை வெப்பமொடு
வேலிடை மிடைந்து வாளிடை மின்னக்
கணைத்துளி பொழிந்த கார்வரைச் சாரல்
ஒருபெருஞ் சிறப்பி னுதயன குமரன்
இமைப்போர்க் காறு இகற் றெழிற் றிரிவொடு
பலர்க்குப் பதமின்றிப் பாஞ்சால ராயனைத்
தனக்குப் பதமாத் தலைப்பெய் தேற்றலின்
கூர்கெழு வச்சிரம் கொண்டு வானவன்
கார்கெழு மாமலை கவினழித் ததுபோல்
தாரணி மாரயன் யானையை வீழாக்
கனல்சொரி மலையிற் கவிய தூறித்
தார்கெழு மார்புந் தலையும் தகர
முடியணி ஆரம் முத்து நிரை துளங்கத்
தொடியணி திண்டோள் துணிந்து நிலஞ் சோரப்
பணிவில னெறிதலிற் படைக்கலஞ் சோரத்
தறுகண் இமையான் தருக்கிறெ டுறுதி யேய்
பிறமுனை மருங்கி னேடுபடத் திருகி
மான்முதல் வகையி னுன்மறை யாளன்
மழுவே றுண்ட மன்னவன் போலக்
கொழுநிணக் குருதியுட் குஞ்சரத்தோடும்
அழிவுகொண்டு ஆருணி அவிந்தனன். (மகதகாண்டம்)

உதயன குமரன் எறிதலின், சோரத் திருகி ஆருணி அவிந்தனன் எனக் கூட்டி நோக்குக. நான்மறையாளன் = பரசுராமன். மழுவேறுண்ட மன்னவன் = கார்த்தவீரியன். அம் மன்னனை

இவனுக்கு ஒப்புக்கூறியிருத்தல் காண்க. இவனது உறுதி நிலையும், பொருதிறமும், இறந்துபட்டபோதும் விழித்தகண் இமையாமல் வீரப் பொலிவோடு விளங்கியிருந்த விதமும், பிறவும் இதனால் இனிது உணரலாகும். இத்தகைய வீரனுயிருந்தும் நிறையிலனுகி வெகுளியை நீளக்கொண்டு நின்றதால் எளிதில் மாளலானுன்; ஆகலால் அரசர் அவற்றை மருவலாகாதென்பதாம்.

வாயடங்கி நில்லாதான் வன்பகைவர்க் கின்பாகிப்
போயடங்கி நிற்பான் புலம்.

அடக்கமின்றி வெகுள்பவன் பகைவர்க்கு எளியனுய் அழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

865 ஏற்றதொன்றும் நோக்கா இடும்பனென் வந்துடனே
கூற்றின்வாய் நின்றான் குமரேசா—போற்றும்
வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான்
பண்பிலன் பற்றார்க் கினிது. (௫)

இ—ள்.

குமரேசா! நெறிமுறை நோக்காத இடும்பன் ஏன் வீமனோடு எதிர்த்து விரைவில் மாண்டான்? எனின், வழி நோக்கான், வாய்ப்பன செய்யான், பழி நோக்கான், பண்பு இலன் பற்றார்க்கு இனிது என்க.

இது, பகைவர்க்கு இனியனுவான் பான்மை கூறுகின்றது.

வழி என்றது அரசர்க்குரிய நீதி நெறியை. மனு முறையாய்த் தொன்றுதொட்டு அடிப்பட்டு வருதலால் இது வழி என நின்றது. "வழிவந்த வன்கண்" என்பதும் காண்க. இனி, வழி என்பதற்கு பின் என்று பொருள் கொண்டால் பின் வருவதை யெண்ணிப் பாரான் என்க.

வாய்ப்பன=பயனுறத்தக்க வினைகள். பண்பு=குணம்; அஃதாவது இனிய சீர்மையனுய்ப் பிறரோடு தாமறிந்தொழுகுந் தன்மை. பற்றார்=பகைவர்; பற்று உருதவர் என்றவாறு.

பற்று = பொருத்தம், அனபு இனிது என்னும் பயனிலைக் கேற்பப் பகை எனபது வருவிககப்பட்டது.

மேல், அமைதியும் அடக்கமும் இல்லாதான் பகைவர்க்கு எளியனாவன என்றா ; இதில், அவர்க்கு இனியனாவான் தன்மைகள் இன்ன என்கின்றார்.

நீதி நெறியை நினையான், ஊதியம் பயக்கத்தக்க வினைகளை ஓர்ந்து செய்யான், தனக்கு வருகின்ற பழிகளைப் பாரான், நல்ல துணை இல்லான், இப்படிப்பட்டவன்பகை, பகைவர்க்கு மிக இனிதாம் எனபதாம்.

வழி நோக்காமை முதலிய நான்கும் படை முதலியவற்றை இழப்பித்து ஒருவனை இழிநிலைப் படுத்திவிடும் ; விடவே பகைவர் வந்து அவனை எளிதாக வென்று எல்லா நலங்களையுங்கொண்டு இன்பமுறுவர் ஆதலால் அவன் பகை அவர்க்கு இனிது என்றார்.

வழி நோக்கி வாய்ப்பனசெய்து பழி நோக்கிப் பண்புளனாயின் எல்லா வலிகளுமுடையனாய் அவன் இசைந்திருப்பன் ; அவனை எவரும் வெல்லமுடியாது ஆதலால் அத்தன்மையான்மேற் பகைத்துச் செல்லலாகாதெனக.

வழி நோக்காமை, வாய்ப்பன செய்யாமைக்கும் ; அது, பழி நோக்காமைக்கும் ; அது, பண பின்மைககும ஏதுவாகுமாதலால் அந்நிலைமை தோன்ற நிரலே வைத்தார்.

நோக்குதல் என்பது கண்ணால் பார்த்தலையும், மனத்தால் நினைத்தலையும் குறித்துவரும்.

பொழிலை நோக்கும், பொழிலுறையும் புள்ளை நோக்கும், பூங்கொம்பின்
எழிலைநோக்கும், இளமயிலின் இயல்பை நோக்கும், இயல்பாளுள்
குழலை நோக்கிக் கொங்கையிணைக் குவட்டை நோக்கி அககுவட்டின்
தொழிலை நோக்கித் தன்னுடைய தோளை நோக்கி நாள் கழிப்பான்.
(இராமாயணம்.)

சீதையைப் பிரிந்து நின்றபோது இராமன் வருந்திநின்ற நிலையையும், நோக்குதலின் இயல்பையும் இதில் நோக்கலாகும். நினைப்பணி திகழ உணர்த்தி நிற்கும் இதன் அழகு இனிமை அருமைகளை ஆய்ந்து நோக்குக.

வழியறியாது வாய்ப்பன செய்யாது பழி மிகுந்திருந்தால் பகைவர்க்கு எளியனாய் அழிவுற நேருமாதலால் அங்ஙனம் நேரா வண்ணம் அரசன் நிலைத்திருக்க வேண்டும் என்பது குறிப்பு.

அழியநிலையுடையனாய்ப் பழிவினைகளைப் புரிந்து ஒருவன் இழிகுணம் மிக்கிருப்பின் அவன் பகைவர்க்கு இனியனாய் விரைவில் இறந்து படுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இடும்பன்பால் உணரப்படும்.

## கதை.

இடும்பன் என்பவன் இற்றைக்கு ஐயாயிரத்து முப்பது ஆண்டுகட்கு முன்னர் ஏகசக்கிரம் என்னும் வனத்திலிருந்த ஓர் அரக்கர் தலைவன். இரக்கமற்று எவ்வுயிர்க்கும் இடர்பல விளைத்தவன். கரிய வடிவும், நெடிய மயலும், கொடிய செயலும், படிய நின்றவன். படைவலியிலனாயினும் உடல்வலியில் மிகவும் சிறந்தவன். அரக்கர் அசுரர் அமரர் என்னும் இவர்களுள் அக்காலத்தில் சிறந்திருந்த உடல்வலியாளரெல்லாரோடும் இவன் மல்லாடியுள்ளான். வில்லாடலில் இந்திரசித்து விளங்கியிருந்ததுபோல் மல்லாடலில் இவன் வயங்கியிருந்தான். இங்ஙனம் ஆற்றலும் திருவும் அமைந்திருந்தும் அறிவு நலமில்லானாய் உறுதி யொன்றையும் பாராமல் உள்ளஞ்செருக்கி உயிர்கட்கு அல்லலான செயல்களையே ஊக்கி உருத்தி நின்றான். பழிபாவங்களை யெண்ணாமல் இழிவினைகளையே புரிந்து இவ்வாறு இவன் இருக்கும் நாளில் அரக்கு மாளிகையில் விளைந்த அல்லலினின்று தப்பித் தாயையும் துணைவர்களையும் அழைத்துக்கொண்டு வீமன் அங்கு வந்து ஓர் இனிய மலர்ச்சோலையில் தங்கிநின்றான். அவ்வமயம் இவன் தங்கையாகிய இடும்பி என்பவள் அவனைக்கண்டு பெருங்காதல்கொண்டு தன்னை மனைவியாகப் பேணிக்கொள்ளுமாறு நாணாது நின்று நயந்து வேண்டினாள். அவள் அரக்கியாயினும் எவரும் நயக்கத் தக்க அழகினையுடையவள். கருப்பிலேயும் மிக விருப்பமான எழில் இருக்குமென்பதை அவள் விளக்கி நின்றாள். அவளது இயற் பெயர் கமலக்கன்னி. அவள் காமப் பித்தேறி அவ்வாறு விழைந்து நிற்குங்கால் இயல்பாக வெளியில் வந்த இவன்

அந் நிலையினைக் கண்டு மிகவும் கனன்று விரைந்தோடி வந்து வீமனை வெகுண்டடித்தான். அவ் வீரன் விடுவனா? இவனை எதிர்ந்து துச்சி இறுகப் பற்றிப் பிதிர்ந்துகப் பொருது பினந் துயிர் குடித்தான். மடங்கல் வாய்ப்பட்ட மாடுபோல இவன் பாடழிந்து பகைக்குயிர் மாய்ந்தான். வகையறியாமல் இவன் வந்து மாண்டதைக் குறித்து வில்லிபுத்தூரார் அழகுறச் சொல்லி யுள்ளார். அடியில் வருதல் காண்க.

வாரடா வுனக்கி யாது தானர்தம் மகளடுக்குமோ வானமாதர் தோள்
சேரடாமலைந் துயிரை மெய்யினைத் தின்று தேவரும் சேருவிப்பன் யான்
போரடா துன்னோ டாள்பேறுபுன் பூனை சன்னுடன் பொர நினைக்குமோ
பாரடாவெனுஞ் சமைய யரக்கர்கைப் பட்டபோதில்யார் பரிவு வைகினர்.

என்று சீறிமற் றிவனடுத்தல் கண் டிணையிலா விறற் றுணைவர் நால்வரும்
நின்ற ஆயுமற் றொருபுறத்திலே நிற்க; மையல்கூர் நிருத வல்லியும்
வென்றி நல்குமா வந்த விந்தையோல் விழிபரப்ப; மேல் வீமசேனனும்
சென்று கைகளால் பற்கள் நாவுடன் சிசுறவாயினிற் சென்று குத்தினன் (உ)

குத்தினனிவன் குணபவல்சிதன் கூர்நகக்கரங் கொண்டு வீமன்மேல்
மொத்தினன் முனைந் திருவரும் பொருதா முரணுடன்சின மூள மூளவே
தத்தினர் பிடுங் கியமரங்களால் சாடினர் புய சயிலமோன் றொடொன்
றொதுதினரிரண் டம்புதங்கள் வானுருமெறிந்ததொத தோசைமிஞ்சவே (௩)

வளர்ந்ததிண்கருந குன்று காந்தளை மலர்வ தென்னவே வானகம்படக்
கிளர்ந்த செம்புனீர்பொசியுமெய்யினன் கேதநெஞ்சினன் கோதவாய்மையன்
தளர்ந்து வீழ்நிசாசரனும் ஆடகன் றன்னை யொத்தனன்; பின்னை முன்னுறப்
பிளந்த கோளரி தன்னை ஒத்தனன் பிரதையென்னுமின் பெற்ற காளையே.
(பாரதம்.) (௪)

யாதுதானர் = அரக்கர். குணபவல்சி = இடும்பன். ஆடகன் = இரணியன். கோளரி = நரசிங்கம். பிரதை = குந்தி. பிரதைபெற்ற காளை கோளரியை ஒத்தனன்; நிசாசரன் ஆடகனை ஒத்தனன் என்று காண்க. வருவதை ஓராது, வாய்ப்பன செய்யாது, பழி நோக்காது நின்று பண்பின்றி வந்து எதிரி கையிற் சிக்கி இவன் எளிதில் மாண்ட வுண்மையை இதன்கண் தெளிவுறக் காணலாம். வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்கான் பண்பிலன்

பற்றார்க்கு இனிது என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

> தீயசெயல் மிக்குநின்றான் தெவ்வர்க் கினியனாய்த்
> தேயுமே செல்வம் சிதைந்து

பயனறியாது பழிவினை புரிபவன் பகைவர்க்கு இனியனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

866 காமமே கன்றிநின்ற காம்பிலிமன் தன்பகையைக்
கோமகனேன் கொண்டான் குமரேசா—ஏமமிலாக்
காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும். (௬)

இ—ள்.

குமரேசா! காதல் மிக்கு நின்ற காம்பிலி மன்னன் பகையை உலோகமாபாலன் ஏன் உவந்து கொண்டான்? எனின், காணாச் சினத்தான், கழிபெருங் காமத்தான், பேணாமை பேணப் படும் என்க.

இது, காமியின் பகையைக் கருதிக் கொள்க என்கின்றது.

காம்பிலிமன் என்றது காம்பிலி தேசத்து மன்னனாகிய பாலகுமாரனை. கன்றி = மிகுந்து.

காணாச்சினம் = உறுதி நலங்களைக் கண்டறியா வண்ணம் மண்டி யெழுகின்ற கோபம். நெஞ்சில் கடுங்கோபம் எழுந்த பொழுது நினைப்பு நெறி நில்லாமல் நிலைகுலைந்து போம்; போகவே தன்னிலை, எதிரிநிலை முதலிய உறுதிநலங்களை உண்மையாக அறிய முடியாது ஆதலால் அக்கொடிய கோபத்தைக் காணாச் சினத்தான் என்றார். காணாத என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் ஈறுகெட்டு நின்றது.

கழிபெருங் காமத்தான் என்றது மிகுந்த மோகத் தன்மையுள்ளவன் என்றவாறு. கழி என்பது மிகுதியை யுணர்த்தி வரும். பேணாமை என்றது பகைமையை. பேணுதல் = விரும்புதல்.

மேல், வழிநோக்காமை முதலிய இழிகுணங்களுடையவன் பகைவர்க்கு எளியனாய் அழிவான் என்றார்; இதில், காம வெகுளிகளுடையானும் அவ்வாறே முடிவன் என்கின்றார்.

கொடுங்கோபன் கடுங்காமி என்னும் இப்படிப்பட்டவனது பகையை விரும்பிக்கொள்ளவேண்டும் என்பதாம்.

வரம்பு கடந்து சினந்து நிற்பவனுக்குச் செய்வன தவிர்வன தெரியாது; ஆதலால் அவனை எளிதில் வென்று கொள்ளலாம் என்பார் அவன பகை பேணப்படும் என்றார்.

ஆயசிந்தையும் அறந்துணிவு முண்டாயினுட
காயும் வெஞ்சினம்வரிற கற்றுணர்ந் தோர்களும்
தாயர், தந்தையர், பெருந் தமமுன், உற்றார், தமக்கு
எயநண்புடைய ரென் றெண்ணவுங் கூடுமோ. (க)

தெருளறக் கலையினிற் றிறனறச் சிந்தையு
டருளறப் பெரிதலைத்து அறிஞரா மவரையும்
குருடெனச் செவிடெனக் கொடியர் மற்றிவரெனப்
பொருடெரித் தழலெழப் புகலுவித் திடுவதால். (பிரபோதம்). (உ)

சினமானது உறுதி காணுவகை உணர்வைக் கெடுத்து உயிரைச் சிறுமைப்படுத்தும் என்பதை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

காமச்சுவையில் ஆழ்ந்து கிடப்பவன் வேறு காரியம் கருதானாதலால் எதிரிக்கு அவன் பகைமை இனிதாம் என்றார்.

நாகத்தால் விழுங்கப்பட்ட நகைமதிக் கடவுள்போலப்
போகத்தால் விழுங்கப்பட்டுப் புறப்படான்; புன்சொல் நாணான்;
ஆகத்தான் அமைச்சர் நண்ணூற் றோட்டியா லழுத்திவெல்லும்
பாகர்க்குந் தொடக்க கில்லாப் பகடுபோற் பொங்கியிட்டான். (க)

நுண்மதிபோன்று தோன்று நுணுகிய நுசுப்பினைசம் [illegible]
கண்வலைப் பட்டபோழ்தே கடுநவை அரவோ[illegible]
பெண்மையைப் பெண்மையென்னார் பேருணர் [illegible] தீரார்
அண்ணலைத் தெருட்டல்தேற்று தமைச்சரும் அ[illegible]விட்டார். (உ)

கற்சிறையழித்து வெள்ளம் கடற்கு அவர்யாங்கும் [illegible]
சொற்சிறை யழித்துவேந்தன் துணைமுலை துறந்த[illegible]
விற்சிறை கொண்டபோலும் புருவத்து விள்ங்கு [illegible]
நற்சிறைப்பட்டு நாடு நகரமும் காவல் விட்டான். ([illegible]). (ங)

சச்சந்தன் கழிபெருங் காமத்தால் நின்று பகைவன் வாய்ப் பட்டுப் பாடழிந்து போனதைக் குறித்து விசையை தன் மகனாகிய சிவகனுக்கு இவ்வாறு உணர்த்தியுள்ளாள். காமக்கேடு இதனால் இனிதறியலாகும்.

வெருவி காமங்களில் மிக்கவனைப் பகைவர் மிக எளிதாக வென்றுகொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாலகுமாரனால் உணரப்படும்.

## கதை.

பாலகுமாரன் என்பவன் காம்பிலிதேயத்து மன்னன். ஆண்மைத்திறத்தில் இவன் மிகவும் மேன்மை பெற்றவன். நல்ல அழகன். ஆயினும் தன் செல்வநிலைக்குத் தக்கவாறு கல்வியில் லாதவன். இவனது நாடு சுருங்கிய அளவினதாயினும் பெருகிய வளங்களோடு நிலவியிருந்தது. பெருநில மன்னரும் வியந்து விரும்பத்தக்க பெருந்திருவோடு இவன் விளங்கியிருந்தான். இருந்தும் குணநலம் இல்லாமையால் இவன் குன்றி நின்றான். மிகக் கொடுஞ்சினமுடையனாதலால் அறிஞர் பலரும் இவனை அணுக அஞ்சி அகன்று நின்றனர். செல்வக் களிப்போடு எல்லா இன்பங்களையும் நுகர்ந்து இவன் இன்புற்றிருந்தான். காம நுகர்ச்சியின் வரம்பு கடந்து விரைந்து மிகுந்தான். தனக்கு விழுமிய மனைவியர் மூவர் இருந்தும் அமையாமல் அழகிய காமக்கிழத்திகள் பலரைக் கலந்து நுகர்ந்து அரசபோகத்தையும் கருதாமல் அதிலேயே ஆழ்ந்து கிடந்தான்.

“பஞ்சிமேல் மிதிக்கிற் பனிக்குந் தகை
அஞ்சிலோதியர் அமமுலை நாஞ்சிலால்
மஞ்சு தோய்வரை மார்ப மடுத்துழத்
துஞ்சலோவுந் தொழிலினை யுயினன். (க)

வண்டுதோய் மது வாகக வள்ளத்தினுட்
கொண்டு கொம்பனையார்கள் கொடுப்ப அம்
துண்டு மற்றவ ரோண்டுவர் வாயொளித்
தொண்டையங்கனி யின்சுவை யெய்தினன். (உ)

தாமமென் குழலார் தடக்கண்மென் றோளுந்
தேமயங்கிய செங்கழு நீரணி
காமமென்பதோர் கள்ளது உண்டபோ
யாமமும் பகலும் அயர் வெய்தினான்." (ரு.)

என்றபடியே காம நிலையில் இவன் கன்றி நின்றான். இங்ஙனம் நின்றாலும் எங்கேனும் அரசிளங் குமரிகளுக்குத் திருமணமென்றால் அங்கு இவன் முந்துறச் சென்று விடுவான். கருதியது கூடாதாயினும் காட்சியின்பமேனும் கைவருமென்று கருதிச் செல்லும் இயல்பினனான இவன் இவ்வாறு களித்து வருங்கால் சீவகனுடைய மாமனாகிய கோவிந்தன் என்பவன் தன் மகள் இலக்கணைக்குச் சுயம்வரம் என்று ஓர் சூழ்ச்சி செய்திருந்தான். எல்லாரும் நம்பிச்சென்றதுபோல் இவனும் விரும்பிச் சென்று அங்குத் திரிபன்றி உருவமாக அமைத்துவைத்திருக்க குறியினை எய்யும்பொருட்டு விரைந்து புகுந்து வகைதெரியாமலேறி வழுவி வீழ்ந்தான். இவன் வீழ்ந்ததைக்கண்டு அரசர் முதலனைவரும் பெருநகை செய்தார். பலரும் நகைபுரிந்தபடி அன்று இவன் நவையுற்றதைக் குறித்துத் திருத்தக்கதேவர் அழகுறக் கூறியுள்ளார். அடியில் வருவது காண்க.

வார்மதத் தளிக்குமாலை மணிமுடித் தொடுத்து நாலக்
கார்மதங் கடந்தவண்கைக் காம்பிலிக காவல்மன்னன
ஏர்மதக கேழலெய்வான் ஏறலும் பொறியினோ டுண்
டார்மதக் களிற்றுவேந்தர்க் கருநகை யாகவீழ்ந்தான்.

இவ்வகையே கடுங்காமியும் கொடுங்கோபியுமாய் நின்ற இவன் பல்லவதேயத்து மன்னனாகிய உலோகபாலனோடு பகைமைசெய்து வந்தான். அவன் அறிவிலும் வினைத்திறத்திலும் மிகச் சிறந்தவன். இவனை வெல்லுதற்குரிய அமயம் நோக்கி விரும்பியிருந்தான். பின்பு இவன் கட்டியங்காரனோடு சேர்ந்து நின்று சீவகன் மீது போருக்கு வந்தபோது அவன் நேர்ந்துவந்து இவனை நிலை குலைத்து வென்றான். அன்று இவன் எய்த கோலை அவன் நெற்றியிலிருந்து பறித்தெறிந்துவிட்டு விரைந்து புகுந்து இவனைக் கொன்ற வுண்மையை இதனடியில் வருவதில் கூர்ந்து காண்க.

பற்றவன் உலோகபாலன் வயங்குபொற் பட்டமார்ந்த
நெற்றிமேல் வெய்தகோலைப் பறித்திட வமிழ்ந்த நெய்த்தோர்
உற்றவன் களிற்றிற் பாயத் தோன்றுவான் உதயத்துச்சி
ஒற்றைமாக் கதிரைநீட்டி பொன்சுடரிருந்த தொத்தான். (க)

கொடுமரங் குழையவாங்கிக் கொற்றவன் எய்த கோல்கள்
நெடுமொழி மகளிர் கோலநிழன்மணி முலைகள் நேர்பட்
டிடனுழ உவந்தமாரப மூழ்கலிற் சிங்கமேபோலக்
கடல்மருள் சேனைசிந்தக் காமபிலி மன்னன் வீழ்ந்தான். (உ)

(சிவகசிந்தாமணி).

ஆற்றலும் திருவும் அமைந்திருந்தும் கொடுஞ்சினமும் பெருங் காமமும் கொண்டு நின்றதால் இங்ஙனம் இவன குன்றியழிய அவன் வென்றுயர்ந்தான் என்று அனைவரும் அன்று வியந்துரைத்தார். காணுச்சினத்தனாய்க் கழிபெருங் காமத்தனாய் ஒருவன் இருப்பனாயின் அஃது அவன் பகைவர்க்கு மிக இனிதாம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

முயல்வேட்டை யாடல்போல் முற்ற லினிதே
மயல்வேட்டு நின்றானை வந்து.

காமியின் பகையைக் காமுறலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

867 பண்டெழுந்த தூர்த்தன் பகையைத் திவோதானன்
கொண்டுவந்தான் என்னே குமரேசா—அண்டிக்
கொடுத்துங் கொளல்வேண்டு மன்ற வடுத்திருந்தும்
மாணாத செய்வான் பகை. (எ)

இ—ள்.

குமரேசா! தூர்த்தமன் பகையைத் திவோதானன் ஏன் மிக விருமபிக்கொண்டான் எனின், அடுத்திருந்தும் மாணாத செய்வான் பகையை மன்ற கொடுத்தும் கொளல் வேண்டும் என்க. வேண்டும் என்றது உறுதிதோன்ற.

இது, வினைக்கேடன் பகையை விழைந்துகொள்க என்கின்றது.

கொடுத்தும் என்பதில உம்மை சிறப்புணர்த்தி நின்றது. கொளல் வேண்டும் என உறுதிதோன்ற விதித்தது அதனால் வெற்றி சித்தித்தல் முதலிய எல்லா நலங்களும் எளிதில் உளவாதல் கருதி. மன்ற என்பது மிகுதி, தெளிவுகளை உணர்த்திவரும்.

மாணாத = மாண்பு இல்லாதன; என்றது வினைக்கு வேண்டாத வினை செயல்களை. சாமம் பேதம் தானம் தண்டம் என்னும் இவற்றுள் ஒன்றைச் செய்யவேண்டிய இடத்தில் மற்றொன்றைச் செய்து கன்றி நிற்றல் என்க.

மேல், வெகுளி காமங்களில மிக்கவனது பகை விரும்பத்தக்கதாம் என்றார்; இதில், பருவமறிந்து வினை செய்யாதவனைப் பகைத்துக்கொள்க என்கின்றார்.

தான் விரைந்து செய்தற்குரிய வினை அணுகியிருந்தும் அதற்கு வேண்டியதைச் செய்யாமல் வேண்டாத வினை செயல்களைச் செய்து நிற்பவனது பகையை ஏதேனும் பொருள்கொடுத்தாயினும் ஒருதலையாகக்கொள்ளவேண்டும் என்பதாம்.

கொடுத்தும் கொளல் என்றது அககொள்முதலால் பின்பு பெருநியம் கொள்ளலாம் என்பது கருதி என்க.

உற்றுள்ள நிலையினை உய்த்துணர்ந்து உறுதிபெற வினைசெய்யாமல் மற்றொன்று புரிந்து நிற்கும் குற்றமுடையானைப் பகைவனாகக் குறித்துக்கொண்டால் வருத்தம் யாதுமின்றி விரைந்து வெற்றிபெற்று வேண்டியவெல்லாம் மேவிக்கொள்ளலாம் என்பார் அடுத்திருந்தும் மாணாத செய்வான் பகையைக் கொள்க என்றார்.

காரியங்களைப் பருவமறிந்து கருதிச் செய்யாமல் பராமுகமாயிருப்பானைப் பறவை விலங்குகளைப்போல் எளிதாகப் பற்றிக் கொள்ளலாம் ஆகலால் அவன் பகையைப் பற்றார் விழைந்து பெற்றுக்கொள்ளுமாறு இஃதுணர்த்தியதென்க.

செய்யவேண்டிய காரியத்தைக் காலமறிந்து கருதிச்செய்யாதவன், பகைவரால் உறுதியாக அழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துர்த்தமன்பால் உணரப்படும்.

கதை.

தூர்த்தமன் என்பவன் இற்றைக்கு மூவாயிர ஆண்டுகட்கு முன்னர் விந்தமலைச் சாரலில் விளங்கியிருந்த கதம்பசிகரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். மதனன் என்பவனுடைய புதல்வன். இளமையிலேயே படைக்கலங்கள் பலவும் பயின்று சிறந்த திறலோடு இவன் விளங்கியிருந்தான். இவனுடைய நாடு மலைவளமும், நிலவளமும், நீர் வளமும், பொருந்தி நிலவி நின்றமையால் பொருள் வளங்கள் எங்கும் பலிந்திருந்தன. "செந்நெல் வளா கரும்பேய்ச்சம் கழனிசெறாறும் திங்கள் வடம்பிட நீண்ட, கன்னல் கமழ்செழில்காட்டு உயர் கதம்பசிகரம்" என்று ஆதிபாகப் புலவர் பலரும் இவனது இராசதானியைப் புகழ்ந்து கூறியுள்ளார். மதனவல்லி எனனும் ஓர் அழகிய மங்கையை மணந்து இனியபோகங்களை நுகர்ந்து இவன் இறுமாந்திருந்தான். பெரிய திருவினனாயினும் கொடிய செயலினன். நீதி சிறிதுமின்றி யாரையும் பகைத்து மெலியவரை மிக நலிவுசெய்து வந்தான். அரசு முறையினை யாதும் கருதாமல் இரவும் பகலும் இன்ப நுகர்ச்சிகளிலேயே மிழ்ந்திருந்தான். மருவலர் பலர் இவன்மீது கறுவு கொண்டு அமயமறிந்து அழிவுசெய்யும்படி உறுதி சூழ்ந்து நின்றார். அவரது நிலையினையறிந்தும் அதற்கு ஆவன செய்யாமல் இவன் அவமதித்திருந்தான். இவனது புன்மையையும் தன்மையையும் திவோதானன் என்னும் மன்னன் அறிந்து வலிந்து பகைத்தான். இவனை அணுக அஞ்சி முன்பு அகன்றிருந்த பகைவர் சிலரைத் தந்திரியாகத் துணைக்கொண்டு அமயநோக்கி வந்து இவனகரை வளைந்துப் பொருதுவென்று பொருள் மிகப்பெற்று அவன் உயர்புகழ் கொண்டான். பகைவர் மெலியராய் அடுத்திருக்கும்போது ஒன்றுஞ் செய்யாது நின்றிருந்த இவனை வலிய வந்து பகைத்து அவன் வென்று சிறந்ததை அனைவரும் வியந்து புகழ்ந்தார். வினை அடுத்திருந்தும் மாறுகை செய்வான் பின்பு பகைவர்க்கு எளியனாய் விணுக அழிவான் என்பதும், அவன் பகையைக் கொண்டவர்க்கு இனிதாக வெற்றியுண்டாம் என்பதும் உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. செயல்வகை குன்றிச் சீரழிந்து நின்ற இவனைக் குறித்து அடியில் வருதல் காண்க.

தாதுசேர்ந் தினவண்டு துதைநறுந்தார்த் தூர்த்தமனுங் காவில்வேந்தன்
நீதுபூக் கருளவிந்த சிந்தையான்; வெங்கொடுங்கோலன்; தினமுமிக்க
எதிலார் மனை விழையும் இழுக்கை; அரு மறையி னெறி யிகழ்ந்த தீயோன்
போதுதுயச் சகரனைப்புண்டரிகக் கண்ணனைப் போற்றல் செய்யான். (1)

சிற்றினஞ்சேர்ந் திடுவதன்றி விழுமியோர் குழுவினிடைச்சேர்தல்செய்யான்
முற்றமிருந குடிகூவப் பொருள்வவ்வி முதுக்குறைவி லுளத்தனாகிக்
கற்றவரைக் காணடித்துக் கல்லாத புல்லருரை கசிந்துகேட்கும்
கொற்றவன் இவ்வுலகுதனை தடிப்படுத்திக் கொடுங்கோன்மை புரியுமாயில். (2)
(காசிகாண்டம்.)

நெறிமுறை புரியாது மாறுசெய்து அழிமதியுடையானுய் இவன் இருந்த வுண்மை இதன்கண்ணும் விளங்குதல் காண்க.

உறுவ தெதிரோர்ந் துறுதிசெய்யா தானைச்
செறுவ தெளிதாமே சேர்

செயல்வகையறியாரோடு பகை கொள்ளலாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

868 நீதியின னில்லா நெடிய விருத்திரனேன்
கோதுகொண்டு மாண்டான் குமரேசா—யாதும்
குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து. (அ)

இ—ள்.

குமரேசா! குற்றங்கள் மிகுந்த விருத்திரன் ஏன் இந்திரனால் விரைந்து கொல்லப்பட்டான்? எனின், குணன் இலனாய்க், குற்றம் பலவாயின், இனன் இலனாம்; மாற்றார்க்கு ஏமாப்பு உடைத்து என்க.

இது, குணக்கேடன் பகையைக் கொள்ளலாமென்கின்றது.

குணன் என்றது அரசர்க்குரிய குணங்களை. என்றது ஈகை, அறிவு, ஊக்கம், மானம், வீரம் முதலிய மாட்சிகளை என்க.

குற்றம் என்றது மேற்குறித்த மாட்சிகளுக்கு மாறுயுள்ள தாழ்ச்சிகள். அவை = அச்சம், உலோபம், அன்பில்லாமை, வன்

சொல்லாடல், காருச்சினம், கழிபெருங் காமம் முதலாயின என்க. மாற்றார் = பகைவர். மாறாய் நிற்பவர் என்பதாம்.

இனன் = இனநலம். அஃதாவது உறவினர் படைகள் முதலிய துணைவலிமை. துணை இனம் என்பன இறுதியில் னகரம் எய்தி நின்றன. இங்ஙனம் வருவதனை ஈற்றுப்போலி என்ப.

ஏமாப்பு = களிப்பு, காவல், வலி, சேமம். அவனது இன்மை நிலையை, உடைத்து என்னும் முற்றுக்கு எழுவாயாக வைத்தது எதிரிக்கு எளிமையும் இனிமையும் தோன்ற என்க.

மேல், வினைநலமில்லான் தான் பகையை விரும்பிக்கொள்க என்றார்; இதில், துணைநலமில்லானை எளிதில் வெல்லலாம் என்கின்றார்.

ஒருவன் யாதொரு துணையும் இல்லாதவனாய்க் குற்றங்கள் பல உடையனாயின் அவன் துணையிலனவன்; ஆகவே அவன் பகைவர்க்கு அது மிக்க வலியுடைத்தாம் என்பதாம்.

துணையிலிகளை வெல்வதற்கு வேறு துணைவலிகள் வேண்டா; அவ்வின்மை தானே பகைவர்க்கு மிக்க நன்மையாய் நின்று உறுதியை இனிது தவும் என்பார் மாற்றார்க்கு அது ஏமாப்பு உடைத்து என்றார்.

இலன் எனத் துணையின்மையை அவன்மேல் வைத்து, பல வாயின் என உண்மையைக் குற்றத்தின்மேல் நிறுத்திக் கூறியது பயிரையழித்துக் களையை வளரவிட்டாற்போல் குணங்கெட்டுக் குற்றமலிந்து நிற்கும் அவனது குறியநிலை தெளிய என்க.

காமம் உலோபம் முதலிய தீமைகளுடையார் பகைவர்க்கு எளியராய் அழிவாராதலால் அவரை விரைவில் விளியநூறி அரசன் விளங்கவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

வலி மிகவுடையனாயினும் குணநலமில்லாதவன் பகைவரால் குன்றியழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விருத்திரன்பால் உணரப்படும்.

## கதை.

விருத்திரன் என்பவன் துவட்டாவின் புதல்வன். அவன் செய்த கொடுவேள்வியின் பயனாகக் குலவித் தோன்றினான்.

பெருவலியுடையவன், அருள் அறம் முதலிய குணநலங்கள் யாதும் இல்லாதவன். உடையனாயிருந்து வஞ்சமாகக் கேடு சூழ்ந்த விச்சுவவுருவனை இந்திரன் கொன்றொழித்ததை நினைந்து எப்படியாவது பழிக்குப் பழி வாங்கவேண்டுமென்று அவன் மீது இவன் பகை சாதித்து நின்றான். அதற்கு வேண்டிய வலியுயர்வுகள் ஒன்றையும் கருதாமல் தன் உடலுறுதியையே கொண்டு கரவாக வந்து பொருமாறாற்றி ஒருமுறை வென்று அவ்வளவில் உவந்து போயினான். போனவன் பின்பு பெருங்களிப் பெய்தித் தானவம் என்னும் தன் நகரிலிருந்து வானவரெவர்க்கும் வன்றுயர் புரிந்தான். இவனது கொடிய செயல்களை நோக்கி அமரர் முதல அரசர் பலரும் முனிவுகொண்டிருந்தார். அவர் அங்ஙனம் முனிவுற இவன் செய்த துயரங்கள் பல.

“ அறங்கெட முயன்றவன்; அருளில் நெஞ்சினன்;
பிறன்கடை நின்றவன்: பிறரைச் சீறினோன்;
மறங்கொடு மன்னுயிர் கொன்று வாழ்ந்தவன்;
துறந்தமாதவர்க் கருந்துயரஞ் சூழ்ந்துளோன்.”

என யாவரும் காய்ந்திகழ இவன் நேர்ந்து திரிந்தான். தன் உறவினரிடத்தும் உரிமையிலனாய் உறுதுயராற்றித் திருவின் செருக்கால் செயிர்த்து நின்றான். அதனால் அவரும் இவனை அவமதித்து அகம் வெறுத்திருந்தார். துணைவலி யின்றித் தனி நிற்கும் இவனது நிலையினை யறிந்து தன் வச்சிரத்தைப் புதுக்கிக்கொண்டு இந்திரன் இவன்மேல் பொங்கிவந்து போர்தொடுத்தான். அந்தபோது எதிர்த்து நின்றானாயினும் அவனது ஆற்றலுக்கு ஆற்றாது அஞ்சி ஓடி அலைகடலுட் புகுந்து தலை மறைந்திருந்தான். நீருள் மூழ்கி மூச்சடக்கி மாயவலியோடு நின்ற இவனை மாய்க்கும் வழி நாடிப் பலரிடமும் ஆய்ந்து முடிவில் அகத்திய முனிவரிடம் வந்து அமைந்துள்ளதை அருள்வருமாறு அவன் அகங்குழைந்து உரைத்தான். கொடியவர்கள் இல்லாதொழிதலே இவ்வுலகிற்கு நல்லதாம் என்று அவர் குறித்தெழுந்து ஒளித்திருந்த இவனை வெளிப்படுத்த விரும்பி ஓதநீர் முற்றும் தம் மாதவ வலியால் உண்டுநின்றார். அதனை அவ் வானவர்கோன் கண்டு வியந்து முனிவரைப் புகழ்ந்து விட்டுப் பகைமேல் மண்டி ஓடி ஓர் மறைவிடத்தில் தவஞ்செய்

பவன்போல் வந்து பாகனாகி நின்ற இவனை உற்று நோக்கினான். அன்று இவன் இருந்த நிலையைக் குறித்துப் பரஞ்சோதி முனிவர் அழகுறக் கூறியுள்ளார். அடியில் வருதல் காண்க.

செருவினில் உடைந்து போன செங்கண்வா ளவுணனங்கோர்
அருவரைப் புதுகிற் கார்போல் அடைந்துவா ளுடா செய்த
உருகெழு பாவக்காரோனர் உருவெடுத்திருந்து நோற்று
பரிசென நோற்றான் இன்னும் பரிபவ விளைவு பாரான்.
(திருவிளையாடல்.)

இங்ஙனம் விளைவறியாது தவக்கொண்டிருந்த இவனை அவன் வச்சிரத்தால் புடைத்து வல்லுயிர் முடித்தான். தன் இழி குணங்களால் எவரும் இரங்காமல் நீங்க இனமின்றித் தனி நின்று பகைவனுக்கு எளிதாய் இவன் இழிந்து தொலைந்தான். ஒருவன் குணன் இலனாய்க் குற்றம் பலவாயின் அவன் இனன் இலனாம்; மாற்றார்க்கு ஏமாப்பு உடைத்து என்னும் உண்மையை இவன் உணர்த்தி நின்றான்.

பழிவிழைந்து தீக்குணமே பற்றினர் பற்றார்க்
கழிவார் அடைவார் அவம்.

இழி குணமுடையார் எளிதிலழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

869 நன்றறியா மாகர் நலிபகையால் என்பாதன்
குன்றாஇன் பற்றான் குமரேசா—சென்று
செறுவார்க் குச்சேணிகவா இன்பம் அறிவிலா
அஞ்சும் பகைவர்ப் பெறின். (௯)

இ—ள்.

குமரேசா! மாகர் பகையைப்பெற்றுப் பாதன் ஏன் பெருமகிழ்வுற்றான் எனின், அறிவிலா அஞ்சும் பகைவர்ப் பெறின் செறுவார்க்குச் சேண் இன்பம் இகவா என்க.

இது, அறிவிலிகளைப் பகையாக்கிக்கொள்க என்கின்றது.

செறுவார் = பகையாளர். தம்மைப் பகைத்துள்ளவரை வெல்லக் கருதி வினைமூண்டு நிற்போர் என்க. செறுத்தல் = கொல்லல், வெல்லல், அழித்தல்.

சேண் = உயரம், பெருமை, தூரங்களை யுணர்த்திவரும். சேண் இன்பம் என்றது உயர்ந்த இன்பம் என்றவாறு. இகவா = நீங்கா. இப்பன்மை முற்றுக்கேற்ப இன்பங்கள் என எழுவாய் விரித்துரைக்கப்பட்டது. இனி, சேண் இகவா என நேரே கொண்டால் செறுவாரை விட்டு இன்பங்கள் அகன்று நீங்கா; என்றும் அவர்க்கு நெருங்கியே அவை நிலைத்து நிற்கும் எனக் கொள்க.

பெறின் என்றது அறிவின்மையும் அஞ்சுதலுமுடையராய்ப் பகைவர் அமைதல் அருமையாம் என்பது கருத்து. அஞ்சுதல் = வினைகளைத் துணிந்து முடியாமல் பயந்து நிற்றல்

மேல், குணமில்லாதவனைப் பகைத்தால் நல்ல பயனுண்டாம் என்றார்; இதில், அறிவில்லாதவன் கிடைத்தால் அளவில்லாத இன்பம் உண்டாம் என்கின்றார்.

உறுதியை அறிதலில்லாத அஞ்சுதலுள்ள பகைவரைப் பெற்றால் அவரைத் தொலைப்பார்க்குத் தொலைவில்லாத பேரின்பங்கள் உளவாம் என்பதாம்.

மடமையும் அச்சமுமுடையார் பகைவராயமைவராயின் புல்வாய் முதலிய மெல் விலங்குகளைப்போல் மிக எளிதாக வென்றுவிடலாம்; ஆகவே அவர்மேற் சென்றவர் மெய்வருந்தாமல் நின்று வெற்றியும் செல்வமும் பெற்று மிக்கவும் மகிழ்வாராதலால் "அறிவிலாப் பகைவர்ப் பெறின் செறுவார்க்கு இன்பம்" என்றார்.

இன்பம் என்று உணர்த்தி இங்ஙனம் இனிப்புக் காட்டியது அப் புன்பகைவரைப் புறக்கணித்துவிடாது விரைந்து புகுந்து மேவிக்கொள்ள வேண்டி என்க.

நெறிமுறைகளை யறிந்து காரியங்களைக் கருதிச் செய்யாமல் வறிதே யிருப்பாரைப் பகையாக்கிக்கொண்டால் அவரை எளிதில் வென்று உறுபுகழோடு உயர்நலங்கள் பல இனிதினெய்தி இன்புறலாம் என்றவாறு.

எதிர்த்துவந்த பகைவர் அறிவிலராயின் அவரை அடர்த்து வெல்வார்க்கு மிக இன்பமாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாகர்பால் உணரப்படும்.

## கதை.

மாகர் என்பவர் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்ச் சிந்துநாட்டிலே தலைவராய் நின்றவர். மாகன், சாமன், காளன் என இவர் மூவராவர். முன்பு கந்தருவ வேந்தர்களுள் மாகன் என்னும் பெயரோடு சிறந்து நின்ற ஒருவனுடைய மரபில் வந்தமையால் உடன்பிறந்த இம்மூவரும் மாகர் என நின்றார். சிந்துநாட்டை மூன்றுவகையாகப் பகுத்துக்கொண்டு இவர் ஆண்டுவந்தார். கனகபல்லவம் என்னும் அழகிய நகரம் இவர்க்கு இராசதானியாக அமைந்திருந்தது. அந்நாடு மிக்க வளமுடையதாதலால் குடிகள் பலர் வந்து குழுமி நிற்ப இவர் பெருந்திருவுடையராய் விளங்கி நின்றார். செல்வம் பெருகப்பெருகச் செருக்கு மிகுந்து வான்முறை கடந்து அல்லல்பல ஆற்றி மேலும் மேலும் பொருள்மேல் அவாவி அருகமைந்திருந்த குறுநில மன்னர் பலரையும் தம் அடிப்படுத்தி மூன்றுகோடி மக்களுக்கு இவர் முதல்வராயினர். அறிவு இழந்து நின்று துன்னிய வினைகளைத் துணிந்து ஆற்றாராயினும் முன்னை வினைப்பால இங்ஙனம் மன்னினர் என மறுபுல மன்னர் பலரும் இவர்மேல் கறுவு கொண்டிருந்தார். ஒருமுறை இவர் கேகயதேசத்துட் புகுந்து அந்த அரசனாயிருந்த யுதாசித்தை வென்று அதனைத் தமக்கு உரிமைசெய்துகொண்டார். அங்குக் குலகுருவாயிருந்த காசிபர் என்பவர் அம்மன்னனுடைய மருமகனாகிய பரதனிடம் அந்நிலைமையைச் சொல்லும்படி திருவயோத்திக்கு வந்தார். அவ்வமயம் இராமபிரான் அசுவமேத யாகத்தை முடித்துவிட்டு அரசர்கள் புடைசூழ அரியணையிலமர்ந்திருந்தான். வந்த முனிவனைச் சிந்தை மகிழ்ந்து நோக்கி நன்கு உபசரித்திருத்தி எய்திய காரணம் என்னை? என்று இனிது வினாவினன். அவர், அங்கு நடந்துள்ளதை நயம்பட உரைத்தார். அடியில் வருதல் காண்க.

மொய்காமர் விழிபார்தம் முலைமுகடு பொருதடந்தோட்
கொய்கேய வரிமூரல்தார்க் கொடைப் பரதன் திருமாமன்
கய்கேயன் குலக்குருவாங் கலைமறைதேர் காசிபனும்
பொய்கேதமில்லாத புகழ்முனிவன் அவைபுகுந்தான். (க)

பூரணமா பகம்புறமும் புளகிப்பப் புனை துளப
நாரணன்றன் திருநாமம் நவின்றெருநால் மறவாத
ஆரணமா மறையோனை படிவணங்கி, நீவந்த
காரணமேது? உரையென்று கதிர்வடிவேலவனுரைத்தான். (2)

போதுபுனை கமழ்தாராய்! புகழ்புனைகாந் திருவர்களுன்
மாதுலனை அமரெரித்து வவ்வினரால் வளநாட்டை
எதிரினல் அவரை பெறிந்திணிதாள்கை இயல்பென்று
ஓதுமறை முறைதெரிந்த உயர்முனியும் உரைசெய்தான். (௩)
(உத்தரகாண்டம்).

இங்ஙனம் உரைசெய்தவுடனே இராமன் பாதனேவ, அவனும் அமர் அமைந்ததே யென்று மிக மகிழ்ந்து படையோடெழுந்து சிந்து நாட்டுள் வந்து இவரது நகரினை வளைத்தான். முதலில் செய்வதறியாது இவர் திகைத்து நொந்து பின்பு சேனையோடு வந்து செருமுகம் புகுந்தார். அவ் ஆண்டகையின் வில்லாற்றலால் படைகள் முழுதும் பாழுடைய இவர் பதைத்து வந்தார். அச்சம் நெஞ்சிலிருந்தாலும் ஆற்றமாட்டாமல் அமரேற்று நின்ற இவரை அவ் ஐயன் நோக்கி அருள் செய்து கூறினன். அன்று கூறியவற்றுள் ஒன்று ஈண்டுக் காட்டுதும்; காண்க.

"தந்திரமும் கரிபரியும் தாமமணித் தேருமிக
அந்தரமுற் றழிந்த செயல் அறிந்திருந்தும அறிகிலீர்!
உந்திறம்; மற்றுயிருந்தால் உழுதிருந்தும் உண்ணலாம்;
கந்திருவர்! போமின்; எனக்கனைத்துறுமி நகைத்தனனால்."

உணர விழுந்து இவர் உள்ளஞ்சி நின்ற நிலைமை இதனால் இனிது தெளியலாம். இவ்வாறு கூறியும் மீறி நின்றமையால் இவரைக் கொன்று தொலைத்து எல்லாச் செல்வங்களையும் அவ் வீரன் எய்தி மகிழ்ந்தான். அறிவில்லா அஞ்சும பகைவரைப் பெறின் அவரைச் செறுவார்க்கு மிக இன்பமாம் என்பதை உலகம் அறிய இவர் உணர்த்தி நின்றார்.

மூண்ட பகைவன்றான் மூடமுறின் முட்டினோர்க்
காண்டகைமை யாமே யது.

அறிவிலிகள்பகை மிக இனிதாம் என்பது இதனால் கூறப்பட்டது.

870 பொல்லாத காளன்மேற் போர்வேட்டு மித்திரனென்
கொல்ல எழுந்தான் குமரேசா—நல்லநூல்
கல்லான் வெகுளுஞ் சிறுபொருள் எஞ்ஞான்றும்
ஒல்லானை ஒல்லா தொளி. (?)

இ—ள்.

குமரேசா! கல்லாத காளகேதுவை வெல்ல மித்திர சித்து ஏன் கனன்று சென்றான்? எனின், கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை எஞ்ஞான்றும் ஒளி ஒல்லாது என்க.

இது, பகைவரை வெல்லாது விடல் பழியாம் என்கின்றது.

கல்லான் = கல்வியறிவிலலாதான்; அறிவுநூல்களைப் பயின்று அறியாதவன் என்க.

கல்லான் வெகுளும் சிறுபொருள் என்றது கல்லாதானை வெகுண்டு வென்று அதனால் எய்தும் எளிய பொருளை என்றவாறு.

சிறுமை = முயற்சியின் மேலது. அரிய முயற்சியால் அடைவதனை அரும்பொருள் என்றாற்போல் சிறிய முயற்சியால் உறுவதனைச் சிறுபொருள் என்றார்.

ஒல்லான் = பொருந்தாதான்; ஒல்லுதல் = பொருந்துதல், மேவுதல், அடைதல். ஒளி = புகழ். சிறிய முயற்சியால் எளிதாகப் பெரும்பொருள் கிடைப்பதாயிருந்தும் அதனைச் செய்து கொள்ளாமல் சிதைய விட்டவனைப் புகழ் ஒட்டாது என அச்சுறுத்தி ஊக்கி ஒல்லும்படி இஃது உணர்த்தி நிற்கும் அழகை யூன்றி நோக்குக.

இனி, கல்லானைய் வெகுளியனைச் சிறுபொருளனைய் என்றும் உரன் இல்லானுபுள்ளவனை ஒளி ஒல்லாது என ஒருவாறு இதற்கு உரைகொள்ளலாமாயினும் பொருள்நலமில்லையாம்.

மேல், அறிவில்லானைப் பகையாக்கிக்கொண்டால் இன்பமாம் என்றார்; இதில், அங்ஙனம் கொள்ளாது விடின் இழிவாம் என்கின்றார்.

கல்வியறிவில்லாதானைப் பகைத்து வென்று அதனால் வரும் சிறியபொருளைப் பொருந்தாதவனைப் புகழ்வந்து பொருந்தாது என்பதாம்.

எளிதில் வென்றுகொள்ளும்படியான நிலையிலுள்ள அறிவில்லாதாரை அமயமறிந்து பொருது கொள்ளாமல் அரசன் அகலவிட்டிருப்பானாயின் அவரை உலகம் பழிக்கும்; பொருளும் புகழும் பொருந்தாதொழியுமாதலால் கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை ஒளி ஒல்லாது என்றார்.

வலிநிலை தெரிந்து பகைவரை வென்றால் புகழ் பொருள் என்றும் நிலைபெறும் என்க.

அன்பின்மை, துணையின்மை, வலியின்மை, அச்சமுடைமை, அறியாமை, உலோபம், வெகுளி, நிறையின்மை, வழிநோக்காமை, வாய்ப்பன செய்யாமை, பழிநோக்காமை, பண்பின்மை, காணுச்சினம், கழிபெருங்காமம், இழிகொடுந்தீமை, மடி, மறதி, மடமை முதலிய கெடுதிகளை எடுத்துக்காட்டித் தம்மையுடையாரை அவை குன்றச்செய்யுமாதலால் அவற்றைக்கொண்டு நிற்பாரைக் கண்டு சென்று அரசன் வென்றுகொள்ளவேண்டும் என இதுவரை உணர்த்திவந்து அங்ஙனம் வெல்லாதொழியவிடின் அவனைப் புகழும் திருவும் புல்லி நில்லா; அவன் செங்கோலும் நன்கு செல்லாதென உறுதிபெற அறுதியிட்டு இதில் உணர்த்தியருளினர்.

மென்மை நிலையறிந்து பகைவரை வென்றுகொள்ளாவிடின் அரசர் குன்றிவிடுவாராதலால் என்றும் மாட்சியுறும்படி பகை கடிந்து அவர் நின்றுகொள்ளவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

அறிவில்லானைப் பகைத்து ஒருவன் வென்றுகொள்வனாயின் அவன் பின்பு குன்றாத புகழோடு என்றும் நின்று திகழ்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மித்திரசித்து பால் உணரப்படும்.

## கதை.

மித்திரசித்து என்பவன் உத்தரகோசலத்திலிருந்த ஓர் உத்தம வேந்தன். நல்ல சுத்த வீரன். உலகமுழுவதையும் தனக்கு உரிமையாக்கொண்டு காசியிலிருந்து உயிர்களின்புற இவன் உயர் கோலோச்சினன். கொடியரைத் தொலைத்துக் குடிபுறங்காத்துக் குற்றங்கடிந்து நற்றவரெவரும நயந்து போற்ற இவன் கொற்ற

மூற்று விளங்கினான். திருமாலிடத்து இவன் பெருமால் கொண்டவன். நூலறிவிற் சிறந்தவன். மாலடிக்கே மனம் தோய்ந்து விரத ஒழுக்கங்களிற் சிறந்து இவன் விளங்கியிருந்தான். இவனது ஆட்சிமுறை யாரும் வியக்கத்தக்கதாயமைந்திருந்தது. எல்லாரும் உவந்து விளங்க இவன் உயர்ந்து திகழ்ந்தான். "பாரேழு மதிநெடுவெண் குடைநிழற்றி வெயிலுமிழ்வெம் பரிதிபோலும் ஓராழி தனிசெலுத்து மித்திரசித்து என உளரோர் உாவுத் தோளான்" என இவனைக் குறித்து எம்பெருமானும் ஒருமுறை உரைசெய்துள்ளார். இங்ஙனம் இவன் விளங்கி வருங்கால் ஒரு நாள் நாரதமுனிவர் இவன்பால் வந்தார். அவரை உவந்து பணிந்து மிகுந்த அன்போடு உபசரித்து வைத்து உலக நிலைகளை ஓர்ந்து வினவினான். அதுபொழுது கங்காளகேது என்னும் ஓர் அரக்க வேந்தன் மலையகந்தினி என்னும் ஒரு கந்தருவ மங்கையைக் கவர்ந்துகொண்டுபோய்த் தன் நகரிடைவைத்து நயந்து நிற்றலையும், "இன்னநாள் வரையும் என்னை அணுகாது நிற்பின், பின்னை நான் உன்னைப் பேணிக்கொள்கின்றேன்; அதுகாறும் ஓர் பெரு விரதமுள்ளது" என்று அக்கன்னி செய்துவைத்துள்ள காரியநிலையையும், அம்முனிவர் மூலமாக இவன் இனிதுணர்ந்தான். ஆற்ற லுள்ளவனேயன்றி அறிவில்லாதவன் என்று அவ்வெறியன் இயல்பினை விளங்க அறிந்துகொண்டு வெகுண்டு பகைத்து வெம் போர் கருதி ஒருநாள் விரைந்து எழுந்தான். அவ்வெய்யவனது நகரம் சம்பகாபதி என்பது. அது, பாதலத்தின் ஓர் பகுதியிலுள்ளது. யாரும் எளிதில் அணுகமுடியாதது. அதில் யாதும் அஞ்சாளாய் இவன் தனியே புகுந்தான். அவ்வமயம் அரக்கன் அங்கு இல்லை. எழுநிலைமாடத்தில் அவ் அழகி மாத்திரம் தனியே யிருந்தாள். இவ் அழகனைக்கண்டபோது அவள் கொண்ட உவகைக்கு அளவேயில்லை. ஆயினும் அக்கொடியவன் கண்டால் கொன்று விடுவனே! என்று நெஞ்சங்கலங்கினாள். அவளது கட்டழகில் ஈடுபட்ட இவன் கிட்ட நெருங்கி "அஞ்சற்க வெஞ்சமராற்றி அவ் வஞ்சனை வென்றுவிடுவேன்" என்று விரகுடன் மொழிந்தான். அவள் வியந்து மகிழ்ந்தாள். "இன்று நீர் வரவில்லையாயின் நாளை யான் இறந்துபடுவேன்; ஏனெனில், என்னைக்கலந்து துய்க்க

அவன் கருதியுள்ள காலம் நாளையேயாகும், நல்லவேளையில் இங்கு வந்தீர்; ஓர் பெண்ணைக் காக்க புண்ணியத்தைப் பெறுவீர்: அவன் கைச் சூலத்தாலன்றி அத்திண்ணியனை வெல்லலரிது: இங்கு மறைந்திரும்: அவன் வந்து துயிலும்போது அதனைக் கவர்ந்து தந்துவிடுகின்றேன்" என்று அவள் உவந்து சொன்னபடியே ஒதுங்கியிருந்து அரக்கன் வந்து அயர்ந்தபோது அமயம் நோக்கி எழுந்து அமருக்கழைத்தான். அவன் கொதித்தெழுந்து கொடுஞ் சமர் விளைத்தான். இவன் எதிர்த்தமர் புரிந்து இறுதியில் அவனைக்கொன்று முடித்தான். பின்பு அவனது அரசதிருவுடன், அக்குமரியையும் உரிமைசெய்துகொண்டு தன்னகரடைந்து நன் மணம் புணர்ந்து இன்னிசை பொங்க இவன் இன்புற்றிருந்தான். இவன் வெகுண்டு சென்று அவனை வென்று வந்ததைக் குறித்து அதிவீரராம பாண்டியனார் அழகுறக்கூறியுள்ளார். அடியில் வருதல் காண்க.

யாழ்பயிலு மறைமுனிவ னோதுதலும் உளங்களித்து மெயிற்றினைந்தி
யாழியொரு கரத்தமைத்த குறுங்கழுத்த வெண்பன்றி யனிப்ப தங்கும்
தாழ்திரைய கருங்கடலினிடை யேகிச் சம்பகாபதியிற் சாரா
வெழுயர்மேல் நிலைமுகப்பிற் றனித்துறையு மடவரலையினிது கண்டான். (க

வேறு.

உலகமூன்றினுள் நல்லெழில் ஒருங்கெடுத் தினிதின்
மலரின மேலையோன் மனத்தினால் வகுத்த ஓவியங்கொல்
சிலைகொள் வேனில்வேள் இனியதேன் விழுதினிற் றீட்டி
நலமிறைக்கபூங் கொடிகொல் மற்றெனவுள நயந்தான். (உ)

அருப்புமென்முலை தாங்கிய அணிமயி லனையாள்
கருப்பு வில்லொழித் தெய்திய காளையை நோக்கி
விருப்ப மீக்கொளப் போந்ததென் வேந்தநீ காணின்
உருப்ப வெஞ்சினத் தவுணர்கோன் உயிர்குடித் திடுமால். (௩)

பொருவில் தன்கையிற் படையினாலலது உயிர் பொன்றான்
தருவல் நின்கையில் அவன்படை சற்றுகண் வளரவுணன்
வருமுன் இவ்வயின் மறைந் துறையென வுரைவழங்க
வெருவல் மாதெனப் பகர்ந்தவண் உறைந்தனன் வேந்தன். (௪)

தலைமண்டபம் அத்தமே வறாதலும் அவுணன்
உலைவெய்யெரி சூலவேல் திரித்தனன் போர்த்து
கலைவலாமயில் கடியணை நாளையென் றியம்பி
மலரடுக்கலூர் கவிசின்மேல் இனிதுகண் வளர்ந்தான். (௫)

துயிலொழிந்த வெண் மதிநிகர் முகத்தினன், அவுணன்
துயிறல் நோக்கி வெஞ்சூலவெம் படையினைத் தாங்கி
அயலுறைந்த வேலுழுவனை அழைத்தனன் கொடுப்ப
வெய்துயிழ்த்திடத் தளர்க்கினன் விடுதலை புரிந்தான். (௬)

(காசிகாண்டம்)

கல்லாதவனாய் நின்ற கங்காளகேதுவைப் பகைத்துச்சென்று பதமறிந்து வென்று மித்திரசித்து உயர் திருவோடு மிகு புகழ்கொண்ட அண்மை இதன்கண்ணும் விளங்கி நிற்றல் காண்க. அவனை வெல்லாது விட்டுநின்ற பற்ற மன்னர்களெல்லாரும் புகழ்பொருந்தாது நாண இவன் புகுந்து வென்று பெரும் புகழடைந்தான். கல்லாதானை வென்று அதனால் வரும் சிறுபொருளைக் கொள்ளாதவரை ஒளி இல்லாது; கொண்டவனையே அது கூடிநிற்கும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

சிறிய பகையெனினும் ஓம்புதல் தேற்றார்
பெரிதும் பிழைபா டுடையார்—நிறைகயத்
தாழ்நீர் மடுவில் தவளை குதிப்பினும்
யானை இழல்காண் பரிது. (நீதிநெறிவிளக்கம்.)

மெலியாரை நாடிவெல்லுக; வலியார் மேற்செலல் ஒழிக; மெய்யன்பும் வலியசுற்றத்துணையும் நிறைய நல்லறிவும் வண்மையும் வன்மையும் இலராய் நலிவுசெய் காமம் வெகுளி வெங்களிப்பு நண்ணிய நவையுளார் பகையைப் பொலிவுசெய் தலைப் பொருது வென்றிடினே பொருளொடு பொலங்குரற் புகழே.

புன்பகையை வெல்லாமல் போக்கிவிடின் ஆக்கமற்றுத்
துன்படமே துய்ப்பர் தொடர்ந்து

பருவமறிந்து பகையை வெல்லாதவனுக்கு உயர்புகழ் இல்லையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

தனக்கு நலிவு தோன்றாவண்ணம் வலியாரை யெதிர்த்து அரசன் மேற்செல்லவேண்டும். நல்ல துணையில்லாதவனை வெல்லல் எளிதாம். அச்சம் அறியாமை உலோபம் என்னும் இசைந்தகுணங்களுடையான் பகைக்கு எளியனாய்க் குன்றிவிடுவான். அடக்கமின்றி வெகுண்டு நிற்பவனை என்றும் எளிதாக வென்று கொள்ளலாம். வழிவகைகளை யறியாதவனை அழிவுசெய்தல் எளிதாம். கொடுங்கோபியும் கடுங்காமியுமாயுள்ளவனது பகையை உவந்து மேற்கொள்ளலாம். அடுத்திருக்கும் காரியங்களைக் கருதாமல் வீணே களித்திருப்பவன் பகையை ஏதேனும் கொடுத்தாயினும் கொள்க. சகை அறிவு முதலிய இனிய குணங்களில்லாதவன் எதிரிக்கு எளியனாயிழிந்துபடுவான். அறிவில்லாதவனைப் பகையாக்கிக்கொண்டால் அளவில்லாத இன்பமுண்டாம். கல்லாத பகைவனை அரசன் வெல்லாது விட்டால் ஒளி அவனை ஒல்லாதொழியும்; வென்றுகொண்டால் என்றும் புகழோடு அவன் நின்று விளங்குவான்.

அஎ-வது பகைமாட்சி முற்றிற்று.

---

# 88ம்-அதிகாரம்
# பகைத்திறந்தெரிதல்.

அஃதாவது பகையின்கணுள்ள பாகுபாடுகளை ஆராய்ந்து தெளிதல். பகையின் இயல்பு, அதன் ஒழிவால் உளதாம் உயர்வு, அதனை இதமாகக் கொண்டொழுகுமுறை, அதன் வழிபறிந்து விலகும் விதம், மெலிவறிந்து செய்யும் பான்மை, அது செய்யா வழி நேரும் தீமை, என்னும் இவை முதலிய கூறுபாடுகளைப் பகையிடத்துக் கூர்ந்தறிந்து குறிக்கொண்டு செய்யவேண்டும் என்று இஃதுணர்த்துகின்றது. மேல் தன் ஆட்சிக்கும் மாட்சிக்கும் நலிவு தோன்றாவண்ணம் பகைநிலையை அரசன் பார்த்துக்கொள்க என்றார்; இதில் அதன் வகைகளையெல்லாம் வழுவறத் தெளிந்து கொள்க என்கின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

871 வெள்ளல் மதிதயன்முன் வன்பகையை யாரோடுங்
கொள்ளாத தென்னே குமரேசா—என்றும்
பகையென்னும் பண்பி லதனை யொருவன்
நகையேயும் வேண்டற்பாற் றன்று. (க)

இ—ள்.

குமரேசா! மதிதயன் பகையினைச் சிறிதேனும் விரும்பி மேற்கொள்ளாமல் ஏன் அமைந்திருந்தான்? எனின், பகை என்னும் பண்பு இல் அதனை நகையேயும் ஒருவன் வேண்டற் பாற்று அன்று என்க.

இது, பகைமையை எவ் வகையிலும் விரும்பலாகாதென் கின்றது.

பகை என்பது பிறரோடு பிளவுபாட்டினை விளைத்து என்றும் செற்றமே பெருகநிற்கும் தீகுணம்.

பண்பு இலது குற்றம் என்க. பண்பு = குணம். பண்பு இல் அதனை என்று பகையினை எட்ட நின்று சுட்டியது கிட்டுதற்கரிய அதன் தீமை கிளத்தியவாறும். தன்னை விரும்பிக்கொண்டவனுக்குப் பெருங் கேடுகளையெல்லாம் ஒருங்கே விளைவிக்கும் கொடுந் தீமையுடையதாதலால் அது பண்பிலது என நின்றது.

நகை ஏயும் = விளையாட்டின் கண்ணேயாயினும். ஏகாரம் தெளிவு தோன்ற நின்றது. உம்மை இழிவு சிறப்பு.

வேண்டற்பாற்று அன்று = விரும்பும் பான்மையையுடையது அன்று. வெறுக்கத்தக்கதென்றவாறு.

பகை என்று சொல்லப்படும் தீமையை விளையாட்டிற்காயினும் ஒருவன் விரும்பிக்கொள்ளலாகா தென்பதாம்.

பகையினை விளையாட்டிற்காக மேற்கொண்டாலும் பின்பு அது வினையாய் முற்றி அழிவினை விளைக்குமாதலால் அதனை நகையேயும் வேண்டற்க என்றார்.

முன்னொரு காலத்துச் சிறுவர் சிலர் விநோதமாக இவர் துரியோதனன் வகையினர்; இவர் தருமன் உறவினர் எனப்

பகுத்துக்கொண்டு பொருது விளையாட முடிவில் அது கொடிதாய் மூண்டு எழுமாதலால் அதன் மூலமாகச் செற்றம் பெருகி அவ்வா றவர் பலர் மாண்டுபோக நேர்ந்ததை யீண்டு மனங்கொள்ளத் தக்கது. நகையிற் கொள்ளினும் பகை நாசப்படுத்தும் என்பதை இப் பழங்கதை நன்கு உணர்த்தி நிற்றல் காண்க.

பாம்பு புலி நஞ்சு முதலிய தீயவைகளை விளையாட்டிற்காக உடன்வைத்துப் பழகிவந்தாலும் பழகினவர் முடிவில் இறந்தொழிதற்கே அவை ஏதுவாய் நிற்கும்; அதுபோல் பகையும் படுத்தும் ஆதலால் நகையளவிலும் அதனை நயக்கலாகாதென்க.

பகை மிகத் தீயதாதலால் உளத்தில் அதனைத் தழைக்கவொட்டாமல் ஒழித்துவிடவேண்டும் என்பது கருத்து.

எவரிடத்தும் பகைமை கொள்ளாது ஒருவன் இனியனாய் நிற்பின் உலக முழுவதும் அவனுக்கு உரிமையாய் நிற்கும் என்பது இதில் உணர்த்தப்பெற்றது. இவ்வுண்மை மதிதயன்பால் உணரப் பெறும்.

## கதை.

மதிதயன் என்பவன் கன்னோசிநாட்டு மன்னன். கன்னமாபுரி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். கல்வியறிவிலும் நல்லொழுக்கத்திலும் சொல்வன்மையிலும் வில்லாண்மையிலும் வினைசெயல் வகையிலும் அக்காலத்திருந்தவரெவரினும் இவன் சிறந்து நின்றான். இவனுடைய மனைவி பெயர் கனகமாலை. அவள், அழகும், கற்பும், அறிவும், அருளும் அமையப்பெற்றவள். அப் புனிதவதியோடமர்ந்து இனியபோகங்களை நுகர்ந்து நெறி வழுவாமல்நின்று உலகம் இன்புற இவன் முறைசெய்து வந்தான். மணம்புரிந்து நெடுநாளாகியும் மக்களில்லாமையால் மிக்கவும் வருந்திப் பரமனை நினைந்து அரிய நோன்புகளாற்றி ஒரு புதல்வியைப் பெற்றான். பிறக்குமபொழுதே கழுத்தில் தாலியோடு அக்குழவி அமைந்து திகழ்ந்ததைக்கண்டு இவன் வியந்து திகைத்தான். அதுபொழுது "இம்மங்கல நாணைக் காண்பவனே இவளுக்கு மணமகனாவான்; வேறெவரும் இதனைக் காணமுடியாது;" என்று அசரீரியாக ஆகாயத்திலிருந்து ஓர் அருளொலி யெழுந்தது.

அதனைக்கேட்டு இறைவனருளைத் துதித்து இவன் அளவிலுவகை கொண்டான். அப்புதல்வியே பின்பு சந்திரமதி என்னும் பெயரினளாய்ச் சத்தியசீலனாகிய அரிச்சந்திரனுக்கு மனைவியாயினாள். தெய்வ அருள் கைவரப்பெற்று எவர்க்கும் இனியனாய் எங்கும் புகழ்பரவ இவன் செங்கோல் செலுத்தி வருங்கால் மருவலர் சிலர் இவனைப் பிரிந்து கறுவுகொண்டிருந்தார். அவ் இருப்பினை எதிர்ந்திருந்தும் அவர்மேற் பகைமைகொள்ளாது அமைதியுடனின்று ஆவன செய்தான். எவரையும் எளிதில் வெல்லவல்ல ஆற்றல் மேவியிருந்தும் பகையினை யாதும் பேணாமல் இவன் பண்புடன் அமர்ந்து வருதலை யறிந்து அவ்வரசரும் நண்பாயமைந்து திறைகள் தந்து இவனுக்கு மிக உரியராய் நின்றார். மன்னவர் மன்னனாய் இவ்வகையே இவன் மன்னி நிற்குங்கால் திருவயோத்தியிலிருந்து முனிவர் சிலர் மணவினை கருதி இவனகரினை யடைந்தார். அவ்வமயம் இவன் இருந்த இயல்பினை இதனடியில் வருவனவற்றால் இனிது காணலாம்.

மானவன் வதுவைகூட்ட மணமொழி வதற்கு நண்ணிப்
போனமா முனிவர்பூகப் பொழிலுடன் பொய்கை நீங்கிக்
கானமும் மலையும் யாறும் கடந்து கன்னோசி என்னும்
மாநகராகிக் கொற்ற மதிதயன் சபையிற் புக்கார். (க)

மேருவை வெளிசெய்தன்ன மேனிலை மணிமாடத்து
வாருதி யெழுந்ததென்ன வந்தவன் தாளைப் போற்றத்
தேரும் யானையு மிழிந்து திறையிடும் அரசர் நிற்கக்
காருநீள் கடலும் போலக் கதிர்மணி முரசமார்ப்ப (உ)

வெயில்விரி மகுடம்பொங்க விடுசுடர்க்கழல் விளங்கக்
கையில்விரி கடகமின்னக் கதிர்மணிக் குழைகள் தாழப்
பயில்மணி மரகதத்தால் பசுங்கதிர் பரப்பு மாடச்
சயில சாளரங்கள்தோறும் வலயத்தின் கிரணத்தாக்க. (௩)

சிகாமா முலையார் செம்பொற் செழுமணிக் கவரி வீசப்
புகரன அமைச்சர் போற்றப் புரிதவ முனிவர் வாழ்த்தப்
பகர்தரு மறையோர் சூழப் பாவலர் கவிகள் பாட
மகரதோரணக்கீழ் மன்னன் மடங்கலாதனத்திருந்தான் (௪)

(அரிச்சந்திரபுராணம்.)

இவ்வண்ணம் உயர்நிலையோடு விளங்கியிருந்த இவன் எவர்களொ டும் பகைமைகொள்ளாது பண்பாற்றிவந்தான். தன்னுடைய அருமைத் திருமகளை அரிச்சந்திரனுக்கு மணஞ்செய்து தர உளங்கனிந்திருந்தும் சுயம்வரம் என்று சொல்லி அரசர் பலரை அங்கு அழைத்திருந்தான். வேந்தர் பலரும் விழைந்து குழுமினர். சுந்தர மங்கையர் புடைசூழச் சந்திரமதியை ஓர் உயர்ந்தபீடத் தில் நிறுத்து அரச சபையை ஆய்ந்து நோக்கச் செய்தான். அது பொழுது அங்கிருந்த அரிச்சந்திரன் "கழுத்தில் தாலியுள்ளதே" என்று கலங்கிக் கூறினான். கருதியது அமைந்ததென்று இவன் பெரிதும் உவந்தான். ஆயினும் அவையினை நோக்கி "அரசர் காள்! உவன் உரைத்ததைக் கேட்டீர்களா? அது உண்மைகொலோ?" என்று மிக விநயமாக இவன் வினவினான். அவரனைவரும் விரைந்து "எங்கே காணும் உன் தாலியுள்ளது" என்று தனி நகை செய்து பொய்யன் எனப் பொங்கி நின்றார். அது பொழுது இவன் புன்னகைசெய்து உண்மையை உணர்த்தி உயர்மண முடித்து அம்மெய்யனை உவந்துகொண்டாடினான்.

"பொறுத்துமுன் மங்கலம் பூண்ட பேதையை
மறுத்திரண்டாவது மணமுடிப்பரோ
சிறுத்தவர் செய்தொழில் திரை வரைப்பிதில்
நிறுத்தினீர் நீரெனு நெடிது கூறினான். (க)

வள்ளலீ துரைத்தலும் மதிதயன் தன
துள்ளம்விட் டோங்கிய உவகை யம்பெரு
வெள்ளம் உள்ளடக்கியே வேந்தர்காள்! இவர்
கள்ளமோ? மெய்ம்மையோ? கட்டுரைத்தகே. (உ)

தையலாள கழுத்தினில் தாலி புண்டெனில்
கையினால் கண்ணுறக் காட்டு நீயெனச்
செய்யகை யறைத்தனி முககிற் சோத்தி, இவ்
ஐயனும் பொய்யனென் றரசர் கூறினா. (ங)

மண்டல வேந்தன், எம மடந்தை மங்கலம்
கண்டனம்; நீங்களதாம் கணடிலாததும்
திண்டிறலீர்! ஒரு தேவாசியம்
உணடென மதிதயன் உரைப்பதாயினான். (ச)

அண்டர் நாயகன் வரம் அளித்த நாளையில்
வண்டணி குழலியோ டுதித்த மங்கலம்
கண்டவர் பதி இவட்கு என்ற கட்டுரை
உண்டலஃதன்றி வேறுண்டு கேட்டிரால். (௫)

மஞ்சனச் சடையினன் வரத்தில் வந்தநாள்
கஞ்சனை நிழலிற் காண்ப தன்றியே
அஞ்சனக் கண்ணிக்கும் அங்கைக் கெய்திடா
தெஞ்சலில் யாவரும் யானும் கண்டிலேம்." (அரிச்). (௬)

மேற்குறித்த வுண்மையை இவை விளக்கி நிற்றல் காண்க. கருதியதைக் கடைபோக உறுதிபெற முடிக்கும் இவனது அறிவும் திறலும் அமைதியும் நிறையும் இதனால் இனிதுணரலாகும். எவரிடத்தும் எவ்வகையிலும் பகைமை கொள்ளாது நகை முகத்தோடு நயத்தகுமியல்போடு இவன் மிகச் சிறந்து நின்றான்: அதனால் அனைவரும் நயந்து போற்ற இவன் உயர்ந்து விளங்கினான். பகை என்னும் பண்பிலதனை நகையேயும் ஒருவன் விரும்பலாகாதென்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்

தன்னையுட் கொண்டார்க்குச் சாந்துயர மேதருங்காண்
அன்றே பகைதீ தகற்று.

யாதொரு வகையிலும் பகை கொள்ளலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

872 ஒன்னலரை வென்றநந்தன் ஓர்புலவனைப் பகைத்தே தன்
கொன்னே யழிந்தான் குமரேசா — துன்னரிய
வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை. (௨)

இ—ள்.

குமரேசா! வீரர் பலரை வென்றுவந்த நந்தன் வரருசி என்னும் ஓர் அறிஞனைப் பகைத்தமையால் ஏன் அடியோடு அழிந்தான்? எனின், வில் ஏர் உழவர் பகை கொளினும், சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க என்க.

இது, புலவர் பகை பொல்லாதென்கின்றது.

புலவன் = புலமையுடையவன்; என்றது வாருகின்றய. புலமை = அறிவு கொன்னே என்றது குறைபொன்றி அவன் அடையோடு வினையழிந்ததைக் குறித்து துன்னரிய = நெருங்குதற்கரிய.

வில் ஏர் உழவர் என்றது வீரரை: வில்லை ஏராகக்கொண்டு பகைவர்களாகிய புலத்திலே, பகழிகளாகிய வித்துக்களை விதைத்து வெற்றித்திருவை எய்தி மகிழும் வீர வாழ்க்கையர் என்பாரை மன்னரை வில்லேர் உழவர் என்றார்.

ஏர் வாழ்க்கையோடு ஒப்பவைத்து வீர வாழ்க்கையை உருவகஞ்செய்து விசேடித்து இதில விளக்கியிருக்கும் அழகைப் பார்க்க. கடலோட்டிய வெல்கெழு குட்டுவன் என்னும் சேரமானை குறித்துப் பாணர் பாடிய கவியில் இவ்வுருவகத்தை மிகத் தெளிவாக விரித்து விளக்கியுள்ளார். அடியில் வருதல் காண்க.

இருப்பு முகஞ்செறித்த வேந்தெழில் மருப்பிற்
கருங்கை யானை கொண்மூ வாக;
நீள்மொழி மறவர் எறிவன ருயர்த்த
வாள்மின் னாக; வயங்குகடிப் பமைந்த
குருதிப்பலிய முரசு முழக்காக;
அரசராப் பனிக்கும் அணங்குறு பொழுதின்
வெவ்விசைப் புரவி வீசுவளி யாக;
விசைப்புறு வல்வில் வீங்குநா ணுகைத்த
கணைத்துளி பொழிந்த கண்ணகன் கிடக்கை
ஈரச்செறுவயின் தேர் ஏராக;
விடியல் புக்கு நெடிய நீட்டி நின்
செருப்படை மிளிர்த்த திருத்துறு பைஞ்சாற்
பிடித்தெறி வெள்வேல் கணையமொடு வித்தி
விழுத்தலை சாய்த்த வெருவரு பைங்கூழ்ப்
பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு
கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்
பூதங்காப்பப் பொலிகளந் தழீஇப்
பாடுநர்க்கிருந்த பீடுடை யாள ! (புறம்.)

வில்லை ஏராகவுடைய வீரரது உழவுரிமைகளை இதில் ஊன்றி நோக்கி உணர்ந்து கொள்க. இதனை ஏரகளவுருவகம் என்பர். சயபர், அசபன்னனைக் குறித்துக் கூறுங்கால் "வில் என்னும் நெடுவளையால் வேந்தென்னும் கடல்கலக்கி" என்றார்.

"வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி" என்றார் முதுகூத்தனார்.
"வில்லேருழவினின் னல்லிசை யுள்ளி" என்றார் கல்லாடனார்.
"வில்லேருழவர் வெம்முனைச் சீறூர்" என்றார் இளங்கீரனார்.
"ஆளழிப்படுத்த வாளேருழவ" என்றார் கழாத்தலையார்.
"மாரிவளம்பெறா வில்லேருழவர்" என்றார் இளங்கோவடிகள்.

"கச்சையானைக் காவலர் நடுங்கக்
கோட்டுமாப் பூட்டி வாட்கோலாக
ஆளழிவாங்கி அதரி திரித்த
வாளேருழவன்" என்றதுங் காண்க.

வீர வாழ்வைக் குறித்துப் பண்டு நம்முன்னோர் கொண்டிருந்த பான்மையும், வில்லேருழவர் என வீரரை அடிகள் சுட்டியபடியே ஆன்றோர் பலரும் அடியொற்றி வந்திருக்கும் முறையும் இவற்றால் தெளிவுற அறியலாகும்.

சொல் ஏர் உழவர் என்றது அமைச்சர் புலவர் முதலிய அறிஞர்களை. நுண்மதியும் நூலறிவும் வாய்ந்து தம் சொல்வன்மையால் எவரையும் வசஞ்செய்து காரியங்களை நடாத்தும் சதுரர்களாதலால் இவர் இங்ஙனம் சாற்ற நின்றார்.

அறிவால் உழுதுண்ணும் அமைவினர் எனக் கற்றோரைக் குறித்துக் கிள்ளிவளவனிடம் கோவூர் கிழார் ஒருமுறை கூறுங்கால் புலனுழுதுண்மார் என்றார். புலன் = அறிவு.

மேல், பகையினை விளையாட்டுக்காயினும் விரும்பலாகாதென்றார்; ஒருவேளை விரும்பினும் உரையாடவில்வல்ல உணர்வுடையாரிடத்து எவ்வகையிலும் அதனைக் கொள்ளலாகாதென இதில் உணர்த்துகின்றார்.

வில்லை ஏராகவுடைய வீரரோடு பகைகொள்ளினும் சொல்லை ஏராகவுடைய அறிஞரோடு பகை கொள்ளலாகாது என்பதாம்.

வில்வல்ல வீரரைப் பகைத்தால் தனக்குமட்டுமே தோல்வியை விளைத்து அவ்வளவில் அது தொலைந்துபோம்; சொல்வல்ல மதிமான்களைப் பகைத்தால் கௌரவகுலம் கண்ணனால் கட்டழிந்ததுபோல் இவரது சூழ்ச்சியால் குடிமுழுதும் அடியோடழிந்துபோம் ஆதலால் அவரைப் பகைத்தாலும் இவர் பகையை அரசன் கொள்ளற்க என்றார். உம்மைசிறப்போடு எதிர்மறைப் பொருளையும் உணர்த்தி நின்றது. இங்ஙனம் வகுத்துக் கூறியதனால் வில்வன்மையும் சொல்வன்மையும் ஒருங்கேயுடையார் பகையைக் கனவிலும் கொள்ளலாகாதென்பது இனிது புலனாம்.

வில்லேருழவராகிய வீரர்களையெல்லாம் வென்று மேன்மையெய்திநின்ற வாலி, பின்பு சொல்லேருழவனாகிய அனுமானைப் பகைத்து அவன் செய்த சூழ்ச்சியால் அழிவுறலானதும் ஈண்டு அறியத்தக்கது.

வில்லம்பு சொல்லம்பு மேதக்கவே யானாலும்
வில்லம்பிற் சொல்லம்பு வீறுடைத்து—வில்லம்பு
பட்டதடா என்மார்பில் பார்வேந்தா நின்குலத்தைச்
சுட்டதடா என்வாயிற் சொல்.

என்று சொல்லேருழவராகிய கம்பர் வில்லேருழவனாகிய சோழனை நோக்கிச் சொல்லியுள்ளதுங் காண்க. வில்வல்லார் பகையினும் சொல்வல்லார் பகை மிகவும் கொடிதாம் ஆதலால் அதனை யாதும் கொள்ளலாகாதென்றவாறு.

ஒருமுறை எமனோடு நாரதர் பேசிக்கொண்டிருக்குங்கால் தன்னை வெல்லவல்லார் ஒருவரும் இல்லையென்று அவன் குறிப்பாலுரைப்ப, எல்லாம் வல்ல இறைவனொருவனைத் தவிர வேறெவர்க்கும் எதிரியுண்டு என்று முனிவர் எதிர்த்துரைத்தார்; என் ஆற்றல் உமக்குத் தெரியாது போம் என்று அவன் வெறுத்துவிடுத்தான். பகையோடு போன அவர் அமயநோக்கி நின்று பரமனிடம் வரபலங்களையடைந்து இராவணன் வருவதைக்கண்டு தக்க சூழ்ச்சிசெய்து எமன்மீது அவனைச்செலுத்திப் பொரும்படி செய்து பெருந்துயர் விளைத்தார். அடியில் வருதல் காண்க.

போரார் வெஞ்சிலை அரக்க! பொருளல்லா நரிபோடும் பொருமோ சீயம்
தீராத தீவினையா லடர்ப்பட்டு தின்பசிநோய் மூப்பினொந்து
சோரா இம்மானுடரைத் தொடர்ந்திறந்தா யெனக்கேட்டோம் துன்னார்
போரில், பேராத நிலைபுனுடையாய் பிணம்வெட்டி வாள்முறித்துப் பெறும்
பேறுண்டோ. (௧)

பெற்றதாய் புரண்டலறப் பிள்ளையுயிர் தான்கொண்டும், பெருகுங்காதல்
உற்றழ அப்பாலர் தமை யின்றெடுத்து வளர்த்தாரை யுயிரையுண்டும்
குற்றமானது பெருக்கும் கொடுமன்றன் வலைப்பட்டுக் குலைந்துவீழும்
மற்றோராதரமில்லா மானுடரைக் கொல்லல் வழக்கன்றே யென்றான். (௨)

என்றுமுனியிவைகூற இராவணன் கேட்டெம்பெருமான் இயம்பிற்றன்றோ
இன்றுசெயுமிதுவல்லால் யானறிவ தொன்றுண்டோ வென்றுகூற
நன்றுபெரிதெனமகிழ்ந்து நாரதமா முனிகூறும் நல்லையின்னே
சென்றுநமன் றன்னோடு செருச்செய்தி அவன்றோற்கை திண்ணம்என்றான்
(இராமாயணம்). (௩)

சொல்வல்லாரைப் பகைக்கலாகாது; பகைத்தால் எத்துணை வல்லவரும் அல்லலுற்றயர்வர் என்பதை இம்முனிவர் செயலால் இனிதறியலாம்.

சூழ்ச்சிவல்ல அறிஞரைப்பகைத்தவர் தாழ்ச்சியுற்றழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நந்தன்பால் உணரப்படும்.

## கதை.

நந்தன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னிருந்த மகததேசத்து மன்னன். பாடலிபுரம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். நல்ல கல்விமான்; ஆயினும் புல்லறிவுடையவன். முறையே வந்த உண்மையான நந்த வேந்தரைப் பேதித்து அரசினை இடையே இவன் வஞ்சித்துக் கொண்டானாதலால் நவநந்தன் என நாமம் எய்தி நின்றான். வில்லாண்மையிலனாயினும் வினையாண்மையில் வல்லவன். தன் காரியங்களைக் கருதி முடித்துக்கொள்வதில் இவன் மிகவும் சதுரன். வாருசி என்பவனைத் தனக்கு அமைச்சனாக முதலில் இவன் அமைத்திருந்தான். அவன் அரிய நூல்கள் பலவும் பயின்ற பெரிய புலவன். எவரும் வியந்து கேட்கத்தக்க சிறந்த சொல்

வன்மையுடையவன். பேரறிவாளனாய அவன் உறுதிபல சூழ்ந்து இவனை உவந்து பேணிவந்தான். வருங்கால் அழிமதியுடையனாய் இவன் இழிசெயல் புரிந்தான். நேரே வழிவழியாய் வந்த அரசமரபினனல்லனாதலால் அவ் அரிய பதவியைக் கண்டவுடனே சிந்தை திரிந்து செருக்கு மேற்கொண்டு கழிபெருங் காமியாய்க் கன்றி நின்றான். இவனது நிலையினையறிந்து உளமிக வருந்தி உழையிருந்து உறுதிகூறிய அவ்வரருசியை இவன் அறவே வெறுத்தான். தன் மனப்போகத்திற்கு இடையூறுள்ளானென்றெண்ணி அவனைக் கொன்றுவிடுமாறு இக்கொடியவன் துணிந்தான். அம்மதிமான் அதனையறிந்து விலகி நின்று இவனால் உலகிற்கு இடர் விளையுமாதலால் இவனை இல்லையாகச் செய்தலே நல்லதாம் என எண்ணிச் சூழ்ந்தான். இவனால் முன்னமே பகைத்துத் தள்ளப்பட்ட சகடாலன் என்னும் மதிமானுடன் சார்ந்து இவனை அழிவுசெய்ய ஆய்ந்தான். அவனோ சூழ்ச்சித்துறையில் மிகவும் மாட்சிமையுடையவன்; தனக்கு இழிவுசெய்த இவனுக்கு இழவு செய்யவேண்டுமென்று நெடுநாளாக எதிர்நோக்கி நின்றவனாதலால் அமயம் வாய்த்ததென்று வினைமுடிவினை விரைந்து துணிந்தான். படைவலியுடைமையால் அமர்புரிந்து வெல்லமுடியாதென்று தெளிந்து அமைதியுற நின்று சாணக்கியன் என்னும தந்திரியை ஏவினான். அவன் சென்று இவனைக் கொன்றுமுடித்துக் குடியையும் அடியோடு ஒழித்தான். வீரர்பலர் எதிர்க்கினும் வெல்லமுடியாதபடி வேந்தனாய் நின்ற இவன், அறிவுடையாரைப் பகைத்தமையால் அடியோடழிந்தான் என அனைவரும் இகழ்ந்தார். வில்லேர் உழவர் பகை கொளினும் சொல்லேர் உழவர் பகை கொள்ளலாகாது; கொள்ளின் குடிகெட்டுப்போம் என்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

நீரிலெதிர் நீந்தி நிலைக்கலாம் நீள்நெருப்பு
நேரிலுற லாமோ நினை.

சூழ்ச்சிவல்லாரைப் பகைக்கலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

873 மீண்டு வயவேங்கை மார்பன் பலர்பகையைக்
கொண்டழிந்தான் என்னே குமரேசா—தண்டாமல்
ஏமுற் றவரினும் ஏழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன். (௩)

இ—ள்.

குமரேசா! பலரோடும் பகைகொண்டு நின்ற வேங்கை மார்பன் பின்பு ஏன் பேதையாய் அழிந்தான் எனின், தமியனாய்ப் பல்லார் பகை கொள்பவன் ஏமுற்றவரினும் ஏழை என்க.

இது, பலர் பகைகொள்ளல் பாழாம் என்கின்றது.

தண்டாமல் = நீங்காமல். இடையே நீங்கும் பயித்தியமு முண்டு ஆதலால் இவ் அடை அதனை நீக்கி நின்றது.

ஏமுற்றவர் என்றது பித்துப்பிடித்தவர் என்றவாறு. ஏமம் உற்றவரென்பது இங்ஙனம் குறுகி நின்றது. காமம் ஐயம் என்பன உற்றாரோடு ஒட்டி வருங்கால் காமுற்றார், ஐயுற்றார் என அமைந்து வருதல்போல் இஃது இங்கு இசைந்து வந்தது. காவல், இரவு, களிப்பு, முதலியவற்றை உணர்த்திவரும் ஏமம் என்பது ஈண்டு மையலைக் குறித்து நின்றது.

இன்பமும் நீறும் பொன்னுங் காவலும
இரவும் சேமமும் ஏமப்பும மயக்கமும்
என்பன ஏமப் பெயரான வாகும். (பிங்கலந்தை.)

ஏழை = அறிவில்லான். அறிவின்மையை யுணர்த்தும் ஏழைமை என்னும் பண்புப பெயர் விகுதியின்றி வந்து அதனையுடையானை யுணர்த்தி நின்றது.

உற்றவரினும கொள்பவன் ஏழை என்றது குடிகெட்டு அடியோடு குன்றி இவன் அழிதல் கருதி. இன் உருபு எல்லைப் பொருளாகாய்ப் பணபளவு தோன்ற நின்றது.

மேல், சொல்வன்மையுள்ள அறிஞரைப் பகைக்கலாகாதென்றார்; இதில், பலரோடு ஒருவன் பகை செய்யலாகாதென்கின்றார்.

தான் தனியனாயிருந்துகொண்டு பலரோடு பகைகொள்வான் பித்துற்றவரினும் பேதை என்பதாம்.

பகைக்கோருக்குப் பயித்தியக்கோலை எடுத்துக்காட்டியது உறவொன்றையுங் கருதாமல் மூடமாய் உளங்களித்து நிற்கும் உரிமை கருதி என்க.

தனக்கு வருவதை யறியாமல் பொறிகலங்கிக் காரியக் கேடனைப் பித்தன் களித்துத் திரிந்தாலும் அதனால் அவனுக்கு அவ்வளவு தீமையுண்டாகாது; ஆனாலும் தன்னளவோடு ஒழிந்து போம்; தான் ஒருவனாயிருந்துகொண்டு பகைநிலை தெரியாமல் பலரோடும் பகைத்துச் செருக்கி நிற்பவனோ சீரழிந்து கெட்டுத் தன் வழியிலுள்ளார்கரும் இழிவு தருவனாதலால் அவனினும் இவன் ஏழை என்றார்.

ஊருடன் பகைக்கின் வேருடன் கெடும். (ஔவையார்).

பலரைப் பகைத்துக்கொண்டவன் எறும்புகளிடைப்பட்ட நாங்கூழ் போலப் பெருந்துயரடைந்து பேதுற்றழிவன் ஆதலால் அதனைக்கொள்ளலாகாதென இஃதுணர்த்தியதென்க.

தன் நிலைமையறியாமல் ஒருவன் பலரோடு பகைத்தால் அவன் பதைத்தழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வேங்கைமார்பன்பால் உணரப்படும்.

## கதை.

வேங்கைமார்பன் என்பவன் பாண்டிநாட்டிலே கானப்பேர் என்னும் ஊரிலிருந்து அரசுபுரிந்த ஓர் குறுநில மன்னன். இது பொழுது காளையார்கோயில் என்று வழங்கப்படும் பதியே அக்காலத்தில் கானப்பேர் என விளங்கி நின்றது. நில அரண், நீரரண் முதலிய பலவகை அரண் நிலைகளால் அது மிக வலிபெற்றிருந்தது. ஈழநாட்டு மன்னனாகிய பராக்கிரமபாகு என்பவனும் ஒருமுறை அதனை வந்துபார்த்து வியந்து சென்றான். பகைவரெவரும் அஞ்சுதற்குரிய அரிய அமைவுகளோடமைந்து நின்ற அந்நகரிலிருந்து இவன் தலைமைசெய்து வந்தான். இவன் சிறந்த கல்வியில்லாதவனாயினும் தான் கருதிய வினைகளைக் கண்ணூன்றி முடிக்கும் உறுதியுடையவன். யாதும் அஞ்சா நெஞ்சினன். எவரையும் மதியாத பெருமிதமுள்ளவன். யார் வந்து அடுத்துரைத்

தானும் தான் பிடித்த கொள்கையை நெகிழவிடாத பெற்றிமை வாய்ந்தவன். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்து வந்த உக்கிரப்பெருவழுதி என்னும் பாண்டிய மன்னனுக்குச் செலுத்த வேண்டிய திறையினை முறைப்படி செலுத்தாமல் சிறிது இகழ்ச்சி தோன்ற நிறுத்திவைத்திருந்தான். இவன் மானி நிற்றலை அவ் அரசர் பெருமான் அறிந்திருந்தும், முதலில் வெகுண்டெழாமல் இதம்பெற ஒரு தூதுவனை விடுத்து நீதியோடமைந்து ஒழுங்காக நடந்துகொள்ளும்படி உரைத்தனுப்பினான். இவன் சிறிது மதியாது பழையபடியே செருக்கி நின்றான். மாரிவெண்கோ என்னும் சேரமன்னனும், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி என்னும் சோழமன்னனும், அம்மன்னர் பெருந்தகைக்கு இனிய உயிர்த் துணைவராதலால் இவனைக் கொலைத்துவிட வேண்டும் என்று கறுத்து நின்றார். பெருவீரர்களாகிய அவர் இங்ஙனம் கறுவுகொண்டு நிற்றலை இவன் சிறிதும் கருதாது இறுகியே நின்றான். ஒருநாள் அவ்வழுதிவேந்தன் உருத்துவந்து படைகளை ஏவி அரண்களைச் சிதைத்து உடன்றமராடினான். அதில் இவன் உடைந்து நொந்து நடுங்கி நைந்தான். இவனது அரசுரிமையைத் தன்னடிப்படுத்தி வெற்றித் திருவோடு வீரமடங்கல்போல் அக்கொற்றவன் சென்றான். பித்தன்போல இவன் பேதுற்று நின்றான். தான் தனியனாயிருந்துகொண்டு வலியாரோடு பகைத்தழிந்தமையால் வகை தெரியாத மூடன் என அனைவரும் இவனை வைது பழித்தார். ஏமுற்றவரினும் ஏழை தமியனாய்ப் பல்லார் பகை கொள்பவன் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. இவனைக் குறித்து அடியில் வருதல் காண்க.

புலவரை யிறந்த புகழ்சால் தோன்றல் !
நிலவரை யிறந்த குண்டுகண் அகழி,
வான்றோய் வன்ன புரிசை, விசும்பின்
மீனபூத் தனன உருவ ஞாயில்,
கதிர் நுழைகல்லா மரம்பயில் கடிமிளை,
அருங்குறும் புடுத்த கானப் பேரெயில்,
கருங்கைக் கொல்லன் செந்தீ மாட்டிய
இரும்புண் நீரினும் மீட்டற்கு அரிதென

வேங்கைமார்பன் இரங்க: வைகலும்
ஆடுகொளக் குழைந்த தும்பைப் புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே!
இகழுநர் இசையொடு மாயப்
புகழொடு விளங்கிப் பூக்கநின் வேலே. (புறம்)

இது, ஐயூர் மூலங்கிழார் என்னும் புலவர் பெருமான் உக்கிரப் பெருவழுதியின் வெற்றித்திறத்தை வியந்து பாடியது. புலவரை இறந்தபுகழ் = பாடிய புலவரது அறிவின் எல்லையைக்கடந்த கீர்த்தி. கடிமிளை = காவற்காடு. குறும்பு = சிற்றரண். தோன்றல்! வேந்தே! என்று விளித்து, இகழுநர் மாய: நின் வேல் புகழொடு பூக்க என அவ் அரசனைப் புலவர் போற்றியிருத்தலை காண்க. நில எல்லையைக்கடந்து பாதலம் வரையும் ஆழ்ந்த அகழியும், வானளாவிய மதிலும், கூரிய கோணங்களும் நுழைகலாதபடி மரங்கள் செறிந்த காட்டரணும், வேறுபல சிற்றரண்களுங்கொண்டு கானப் பேரெயில் விளங்கியிருந்ததும், காய்ந்த இரும்பு உண்ட நீர் மீளினும் தனக்கு உரித்தாராமாயிருந்த அது இனி மீளாதென வேங் கைமார்பன் இரங்கி நொந்ததும், பயித்தியம் கொண்டவனைப்போல் மிகத் திமிர்ந்து நின்று பகைத்திறந்தெரியாமல் பட்டழிந்ததும், பிறவும் இதில் இனிதுணரலாகும்.

உரனில்லான் பல்லோ ருடன்பகைமை கொள்ளின்
அரவின்வாய்த் தேரை யவன்

பலரோடு ஒருவன் பகைக்கலாகாதென்பது இதனால் கூறப் பட்டது.

---

874 மாறகன்ற ஆயுமன்னன் வையமெலாங் கொண்டுபுகழ்
கூறநின்றான் என்னே குமரேசா—சீருடை
பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
தகைமைக்கட் டங்கிற் றுலகு. (௩)

இ—ள்.

குமரேசா! நீதிமானான ஆயுமன்னனது ஆட்சிக்குள் உலகமெல்லாம் ஏன் அமைந்திருந்தது? எனின், பகை நட்பாக்

கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகைமைக்கண் உலகு தங்கிற்று எனக.

இது, பகைமிகத் தொழுகும் பண்பு கூறுகின்றது.

மாறு அகன்ற ஆப்பு என்றது பகைவர் இகல் நீங்கி இனிய ராகத் தனது குண நலங்களால் அவன் உயர்ந்து நின்றமை கருதி.

மாறு = பகை புகழ்கூற = புலவர் புகழ்ந்துபாட.

தகைமை = தகுதியாந்தன்மை; பெருமை என்க.

தங்கிற்று = அடங்கினது; உரிமையாகவந்து பொருந்தி நிலைத்து நின்றது என்றவாறு. தங்குதல் = நிலைத்தல், அடங்குதல்.

மேல், பலரொடும் பகைத்தல் பழுதாம் என்றார்; இதில், சில முறையில் பகை தணித்தொழுகின் இனிதாம் என்கின்றார்.

பகைமையை நட்பாகச் செய்துகொண்டு நீதிவழி யொழுகும் தன்மையுடையானது தலைமையின் கண்ணே இவ் வுலகம் தங்கி நின்றதென்பதாம்.

எதிரி பகைத்து நின்றாலும் அதனை மிகுத்துப் பாராட்டாமல் மேவி நின்று அப் பகைமையை உறவாகப் பாவித்துக்கொண்டு அரசன் இனியனாய் ஒழுகுவனாயின் நில வொளியால் இருள் தேய்வதுபோல் அவனது குண வொளியால் பகை தேயும்; தேயவே யாவரும் உரிமையாளராய் உவந்து நிற்பர்; நிற்கவே எல்லா உரிமைகளையும் இனிதினைந்தித் தனித் தலைமையாளனாய் உலக முழுவதையும் தன் னடிப்படுத்தி அம் மன்னன் உயர்ந்து விளங்குவான் ஆதலால் அவன் தகைமைக்கண் உலகு தங்கிற்று என்றார். தங்கும் என்னாது தங்கிற்று என இறந்த காலத்தாற் கூறியது தெளிவும் துணிவும் தோன்றற்கென்க.

குற்ற மிகுபகையைக் கூர்ந்துகொளா தோர்ந்து நின்று
பற்றுமிகச் செய்தினிய பண்பனாய்—உற்றொருவன்
கொண்டு நடந்தால் துரைகடல்சூழ் ஞாலமெல்லாம்
கனாடு நடக்குமவன கண். என்பதுங் காண்க.

சினத்தைச் செய்து பகையை மிகுத்துவிடாமல் பகைவனை நயமாகத் தன் வசஞ்செய்து நண்பாக்கி ஒழுகும் நயனுடையானுக்கு வரும் பயன் இதனால் இனிதுணரலாகும்.

புகையுடைத் தென்னினுண்டு பொங்கனலன்றென்றுணா
மிகையுடைத் துலகம்; நூலோர் வினையமும் வேண்டற்பாற்றே;
பகையுடைச் சிந்தை யார்க்கும் பயனுறு பண்பிற் றீரா
நகையுடை முகத்தையாகி இன்னுரை நல்கு நாவால் (இராமாயணம்

இது, இராகவன் சுக்கிரீவனுக்கு அரசமுறையைத் தெளிவுறுத்துங்கால் அறிவுறுத்தியது. பகைவரும் நண்பராகும்படி பண்புற நின்று அரசன் ஒழுகவேண்டும் என இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

பகையைவிரும்பி மேற்கொள்ளாது அன்[illegible]லக்கியமைந் தொழுகும் வேந்தன் இவ்வுலக முழுவதையும் உரிமையாக் கொண்டு உயர்ந்து விளங்குவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஆயுவின்பால் உணரப்படும்.

கதை.

ஆயு என்பவன் இற்றைக்கு ஐயாயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னிருந்தவன். சந்திரகுலவேந்தனாகிய புரூரவாவினுடைய அருமைத்திருமகன். திருமாலின் அருள்வலியால் தோன்றிய உருப்பசியின் ஒளிர் வயிற்றில் பிறந்தவன். அத்தெய்வ மங்கையும், அம்மெய்ம்மை மன்னனும் மிக்க மாட்சியோடு இவனைப் பேணி வந்தனர். பருவமெய்தியபின் இறைமுறையெய்தி இவன் இசை பெற்று நின்றான். இவன் காமவேளும் காமுறத்தக்க கட்டழகுடையவன். பிரபை என்னும் ஓர் பேரழகியை மணந்து இனிய போகங்களை நுகர்ந்து நகுடன், சத்திரவிருத்தன், இரசி, இரம்பன், அநேநசன் என்னும் புத்திரர்களைப்பெற்று அரிய வேள்விகள் பல செய்து அமரரும் புகழ இவன் அரசு புரிந்தான். அசுரர் அரக்கர் விஞ்சையர் முதலிய துணிந்த நெஞ்சர்களும் அஞ்சத்தக்க அருந்திறலுடையவன்; ஆயினும் வெஞ்சினங்கொள்ளாதவன். ஆருயிர்கள்மீது பேரருளுடையவன். எங்கும் இரங்கி நின்று அளிசெய்தொழுகும் இவனது அமைதியை நோக்கி ஆற்றல் அறியாமல் குறுநில மன்னர் சிலர் குறும்புசெய்து வந்தார். நிலைதெரியாமல் பகைமை மீக்கொண்டு இடர்செய்து வரும் அவரது சிறுமையையறிந்து சீற்றக்கொள்ளாமல் உரிமைகள் செய்து

தன் ஆற்றலை அவர் உணர்ந்து தெளியும்படி சிலவகையில் உணர்த்தியருளினன். ஒருமுறை களிப்பேறி மீறிவந்த இரண்டு மதயானைகளை இவன் தனியாகப் புகுந்து எதிர்த்தடக்கினன். ஓர் கருங்கற்பாறையைத் தொளைத்துச் செல்லும்படி பகழிதொடுத்தான். மற்றொருமுறை யாவராலும் எய்து வீழ்த்தமுடியாதபடி மீன்வடிவமாக அமைத்து வைக்கப்பட்டிருந்த ஓர் அரிய குறியை ஒரே தொடையில் இவன் அற்றுவிழச் செய்தான். தம்மை எளிதில் வெல்லவல்ல அரிய ஆற்றல்களமைந்திருந்தும் அமைதியோடு நின்று அன்புசெய்து ஒழுகும் இவனது பண்புடைமையைக் கண்டு அப் பகைவரைவரும் நண்பராகி நயந்து நின்று இறை செலுத்தி ஒடுங்கிவந்து உரிமை செய்திருந்தார். உலக முழுவதையும் பொதுவறப் புரந்து தனிச் செங்கோல் செலுத்தி இவன் தலைமை எய்தி நின்றான். பகையை நட்பாக்கிக்கொண்டொழுகும் பண்புடையாளன் தகைமைக்கண் உலகம் தங்கி நிற்கும் என்பதை எவரும் இவன்கண் இனிது கண்டார். பல நூல்களும் இவனைப் புகழ்ந்து கூறியுள்ளன. ஈண்டுச் சில காட்டுதும்.

மாயனூருவில் வந்தருள் அந்தமோன் வயிற்றில்
ஆயு வென்றொரு செம்மலை அம்மகன் அளித்தான்
தேயுவும் பல தேவரும் பகிழுமற் றிவனே
மேயவண்புகழ் வேந்தரில் வேளவியால் மிக்கோன். (பாரதம்.)

சிந்துரப் பூத்த சிறுபிறை நெற்றிச் செவ்வரிக கருங்கயல் மழைக்கட், பந்தணி காந்தள் முகிழ்விரற் செவ்வாய் உருப்பசி படர்முலை தழுவி, அந்தமில் சீர்த்திப் புரூரவா வென்போன் அளித்தருள் வெற்றுடை மைந்தன், கந்தடு சீறறக் கடாககளிறனைய ஆயு வென்றுரைத்திடு காளை. (க)

ஆயுவென்றால கேத்திய அறைகழல் வேந்தன்
வேய்மருட்டுதோட் பிரபையென் றுரைத்திடு மேலோன்
சாயன மங்கைவெம் முலையணந் தின்றருள் தனையன்
மாயிரும் புவி வழுத்து சீர் மானவேல் நகுடன். (கூர்மபுராணம்) (2

வெய்யபகை மேவாத மேலோனை மேவிநிற்கும்
வையமெலாம் ஒன்ருக வந்து.

பகைவரை நட்பாக்கி ஒழுகல் நலமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

875 பண்டு மலையனையேன் பார்த்துப் பெருங்கிள்ளி
கொண்டான் துணையாக் குமரேசா—கொண்டாடுந்
தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவன்
இன்றுணையாக் கொள்கவற்றி னொன்று. (ரு)

இ—ள்.

குமரேசா! பெருநற்கிள்ளி மலையனை என் தனக்கு இனிய துணையாக அணைத்துக்கொண்டான் எனின், தன் துணை இன்று; பகை இரண்டு; தான் ஒருவன், அவற்றின் ஒன்று இன் துணையாக் கொள்க என்க.

இது, பகையைத் துணையாக்கும் பான்மை கூறுகின்றது.

இன்று, இரண்டு என்பவற்றிலுள்ள ஆல்கள் அசை.

அவற்றின் ஒன்று=பகையாயுள்ள அவ் இரண்டனுள் ஒன்றை. இன்துணை ஆ=இனிய துணையாக; அஃதாவது தனக்கு மிக உரிமையாய் நின்று உதவுதற்குரியதாக என்றவாறு. கொள்க என்னும் வியங்கோள் அவற்றின் என்பதோடு புணருங்கால் இடையே வகர வுடம்படு மெய்பெறாமல் அகரம் தொக்கு நின்றது. இங்ஙனம் வருவதனைச் செய்யுள் விகாரம் என்பர்.

மேல், பொதுவாகப் பகையை நட்பாக்கிக்கொண்டொழுகின் நலமாம் என்றார்; இதில், சிறப்பாக அங்ஙனம் செய்தற்குரிய அமைவுகளை உணர்த்துகின்றார்.

தானோ ஒருவன்; தனக்கோ நல்ல துணையில்லை; தன்னை நலிவுசெய்யும்படியான பகையோ இரண்டுள்ளன; எனின், உடனே அவற்றுள் ஒன்றனைத் தனக்கு இனிய துணையாக அரசன் ஆக்கிக்கொள்ளவேண்டும் என்பதாம்.

தக்க துணைவலியிலனாய்த் தனியே நிற்கும் ஒருவன் மீது இருவர் கறுவுகொண்டு பகைத்துநின்றால் அப்பொழுது அவன், அவ்விருவருள் ஒருவனைத் தனக்கு இனிய துணையாக விரகுடன் அணைத்துக்கொள்ளவேண்டும் என்பார் "அவற்றின் ஒன்று இன் துணையாக் கொள்க" என்றார். அங்ஙனம் கொள்ளின் பகைவலி

தேயும்; தன் வலி வளரும் ஆதலால் திறந்தெரிந்த வெல்வார்க்கு இம்நேர் உபாயமாய்ச் சிறந்து நின்றது.

துணைவலியின்றி நிற்பவன் பகைவரை வெல்லவேண்டிய வகை என்னை? என்பாரை நோக்கி இம்துணர்த்தியதென்க.

தன் காலில் தைத்துள்ள முள்ளை மற்றொரு முள்ளைக்கொண்டு களைந்தெறிதல்போல் தன்மேல் எதிர்த்துள்ள பகைவரைத் தம் முட் மோதித்து ஒருவரைக் கொண்டு ஒருவரை வென்றொழித்தல் அரசன் விரும்பத்தக்கதோர் வினையாம் என்க.

நீதியால் அறுத்து அந்நிதி யீட்டுதல்;
ஆதியாய அரும்பகை நட்டுதல்;
மோதி முள்ளொடு முட்பகை கண்டிடல்;
பேதுசெய்து பிளந்திடல்; பெட்டதே. (சிந்தாமணி)

நீதிநிலையில் நின்று பொருளை யீட்டுதல்; பழம் பகைவரை மறந்துவிடாமல நெஞ்சில் நிலைநிறுத்தல்; இளம் பகைவரை இனமறிந்து இன் துணையாக்கி ஒருவரைக் கொண்டு ஒருவரை வென்றொழித்தல்; ஒருமை யெய்தி உருத்து நிற்பாரைப் பிரித்து விடுதல் என்னும் இவை அரச தந்திரங்களாம என இம்துணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க. பெட்டது = விரும்பத்தக்கது.

தெள்ளி யுணரும் திறனுடையார் தம்பகைக்
குள்வாழ் பகையைப் பெறுதல் உறுதியே
கள்ளினற் கள்ளறுத்தல் காண்டும் அதுவன்றே
முள்ளினல் முட்களையு மாறு. (பழமொழி)

வேண்டியபொழுது பகைவருள் ஒருவரை உறவாக்கி நின்று உறுதி செய்துகொள்ளும்படி இதுவும் உணர்த்திநிற்றல் காண்க.

தன்னை இருவர் பகைத்து எதிர்த்து நின்றால் துணைவலி யில்லாதவன் தனக்கு நலமுறுமாறு அவருள் ஒருவரை நயமாக உறவாக்கிக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

எதிரியை வென்றுகொள்ளுமாறு இடங்கண்டு அரசன் துணைவரைச்சேர்த்துக்கொள்ளவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பெருநற்கிள்ளிபால் உணரப்படும்

கதை.

பெருநற்கிள்ளி என்பவன் உறையூரிலிருந்து அரசுபுரிந்த சோழமன்னன். இவன் பெரிய போர்வீரன், அரிய குணங்கள் பல அமையப்பெற்றவன். கருதிய வினைகளைக் கடைபோகச் செய்யும் உறுதியுடையவன். அரசர் பலரையும் வென்று தன் வெற்றித்திறம் விளங்க இராசசூயம் என்னும் அரிய வேள்வியை அமரரும் வியக்க இவன் அணிபெற முடித்தவன். அதனால் இராசசூயம் வேட்ட பெருநற் கிள்ளி என்று மிகு புகழ்பெற்று நின்றான். எங்கும் நல்ல இசை பரவி இங்ஙனம் இவன் நின்று வருங்கால் மாந்தரஞ்சேரலிரும்பொறை யென்னும் சேர மன்னன் இவன் மேற் பெரும் பகைகொண்டு அடுஞ்சமர்புரிய ஆய்ந்து நின்றான். குறுநில மன்னர் சிலரும் அவனோடு கூடிக் கறுவுகொண்டிருந்தார். அப்பகை நிலைகளை வகையுறத் தெரிந்து நின்று மலையமான் என்பவனை தனக்குத் உறுதித் துணையாகச் சூழ்ந்துகொண்டு பருவங் கண்டெழுந்து அப்பகைவரனைவரையும் வென்று தன் நகரினை யடைந்து வீரவிழாவொன்று சீருறச்செய்து இவன் சிறந்து வீற்றிருந்தான். இவனது அருந்திறலையும் பெருங்குணங்களையும் புலவர் பலரும் புகழ்ந்து பாடியுள்ளார். பாண்டரங்கண்ணனார் என்னும் புலவர் பெருமானார் ஒருமுறை இவனைக்குறித்துப் பாடிய பாடலொன்று இதனடியில் வருகின்றது.

புலங்கெட இறுக்கும் வரம்பில் தானைத்,
துணைவேண்டாச் செருவென்றிப்,
புலவுவாள், புலர்சாந்தின்,
முருகற் சீற்றத்து உருகெழு குரிசில்!
மயங்கு வள்ளை, மலராம்பல்
பனிப்பகன்றைக் கனிப்பாகற்
கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏமநன்னாடு ஒள்ளெரி யூட்டினை
நாம நல்லமர் செய்ய
ஓராங்கு மலைந்தன பெரும! நின்களிறே. (புறம்).

முருகக்கடவுளோடு ஒப்பவைத்து இவனது வீரத்திறத்தைக் கவி இதில் விளக்கியிருத்தல் காண்க. புலம் = இடம். தண்பணை = மருதநிலம். குரிசில், பெரும, நீ நல்லமாசெய்ப, நின் களிறு மலைந்தன எனக்கூட்டியுணர்க. முதலில் சிறிது மாறுபட்டிருந்தாலும் அதனைப் பொருட்படுத்தாமல் மலையமானை இனிய துணைவனாக அணைத்துச்சென்று பகைவரைவென்று உயர்புகழ்கொண்டு இவன் இனிதமர்ந்திருந்ததை அனைவரும் வியந்து புகழ்ந்தார். பகைவர்பலர் கடுத்து நின்றால் அவருள் சிலரைப் பேதித்துத் தனக்கு இனியதுணையாக அமைத்துநின்று அமயமறிந்து அரசன் அவரை வென்றுவிடவேண்டும் என்பதை உலகமகாண இவன உணர்த்தி நின்றான்.

கராவில்லாக் கவிவண்கையான்
வாழ்கவெனப் பெயர் பெற்றோர்
பிறர்க்கு உவமம் தான் அல்லது
தனக்கு உவமம் பிறரில்லென
அதுநினைந்து மதிமழுகி
யாங்கு நின்ற எற் காணூஉச்
சேய்நாட்டுச் செல்கிணைஞனை
நீ புரவலை எமக்கென்ன
மலைபயந்த மணியும், கடறுபயந்த பொன்னும்,
கடல்பயந்த கதிர் முத்தமும்,
வேறுபட்ட உடையும், சேறுபட்ட தசும்பும்,
கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப
நனவில் நல்கியோன், நகைசால் தோன்றல்,
நாடென மொழிவோர், அவன் நாடென மொழிவோர்;
வேந்தென மொழிவோர், அவன் வேந்தென மொழிவோர்;
(புறம்.)

எற்காணூஉ = என்னைக்கண்டு.

இது, இவனைக் குறித்து உலோச்சனார் என்னும் புலவர் திலகர் கூறியது. மணி பொன் முத்து உடை முதலியவற்றை எவர்க்கும் வியக்கும்படி பெருகக்கொடுத்தவன் எனவும், நிகரற்ற தலைவன் எனவும, புலவர் இவனைப் போற்றியிருத்தல் காண்க.

இதனால் இவனது குணமும் கொடையும் அறிவும் வீரமும் அமைதியும், பிறவும் இனிதுணரலாகும்.

இருவர் பகையா யெழுந்தால் இசைந்த
ஒருவனையுட் கொள்க வுடன்.

இடங்கண்டு எதிரியைத் துணைகொள்ளவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

876 திண்டோட் சதசித்தேன் தெவ்வரையுட் சேரமல்
கொண்டகன்றான் முன்னே குமரேசா—கண்டறிந்து
தேறினுந் தேறா விடினும் அழிவின்கட்
டேறான பகாஅன் விடல். (சு)

இ—ள்.

குமரேசா! தான் தளர்ந்து நின்றபொழுது எவரையும அணுகவொட்டாமல சதசித்து ஏன் அகலவிட்டிருந்தான் எனின், தேறினும தேறாவிடினும் அழிவின்கண் தேறான் பகாஅன் விடல் என்க.

இது, தளர்ந்தவிடத்துப் பகைவரை நம்பிச் சாரலாகாதென்கின்றது.

அழிவின்கண் = தளர்வு தோன்றியவிடத்து; அஃதாவது பொருள்நிலை முதலியன தேய்ந்து தனக்கு ஏதேனும் கேடு நேர்ந்தபோது என்றவாறு.

பகான் விடல் = நீககாது விடுக. பகுத்தல் = ஒதுக்குதல், நீக்குதல். அளபெடை இசை நிறைக்கவந்தது. அல் ஈற்று வியங்கோள் உடன்பாட்டில் வந்து விதியாய் நின்றது.

தேறினும், தேறாதே; தேறாவிடினும், பகாதே; என நிரல்நிறை நோக்குக. தேறான், பகான் என்னும் எதிர்மறை முற்றுக்கள் எச்சமாய் நின்றன.

மேல், அமயமறிந்து பகைவருள் ஒருவனைத் துணைக்கொள்க என்றார்; இதில், தனக்கேதேனும் அழிவுவந்தவிடத்து அங்ஙனம் கோடல் கூடாதென்கின்றார்.

பகையாய் நின்ற ஒருவனை முன்பு நன்றாகத் தெளிந்திருந்தாலும், தெளியாதிருந்தாலும் தனக்கு ஏதேனும் தாழ்வுவந்தவிடத்து அரசன் அவனைச் சேர்த்துக்கொள்ளாமலும் நீக்கிவிடாமலும் பொதுவாக விட்டுவைக்க வேண்டும் என்பதாம்.

அழிவு நேராதபோது அவரைத் தேர்ந்துகொண்டாலும் சேராது விட்டாலும் அவரால் யாதும்செய்ய இயலாதாதலால் அவர் செயல் எளிதிற் பலித்து நலிவுறுத்தும் என்பது கருதி அழிவின்கண் என்றார்.

கெடு உற்றவிடத்துப் பழம் பகைவரைக் கூடவிட்டால் அவர் உள்ளிருந்து கொண்டே விரைந்து கொலைத்து விடுவராதலால் தேர்ந்துகொள்ளாதே என்பார் தேறான் என்றும், அதுபொழுது இகழ்ச்சி செய்து சினத்தை மூட்டி அவரை அகற்றிவிட்டால் புறத்தே நின்று மிகவும் அழிவினை விளைப்பராதலால் அகலவிடாதே என்பார் பகான் விடல் என்றும் கூறினார்.

அழிவுறாத நல்ல காலத்தில் ஒருவனைத் தேர்ந்துகொண்டாலும் தேராது அகலவிட்டாலும் அவற்றால் யாதும் தீங்கில்லையாம்; தனக்கு ஏதேனும் அழிவுற்றகாலத்தில் அரசன் அங்ஙனம் செய்துகொண்டால் அச்செயல் எளிமையைப் புலப்படுத்தி மேலும் அழிவினை விளைக்குமாதலால் அதனை ஆற்றலாகாதென்றவாறு.

தானை தளர்வுற்றபொழுது பகைவரை நம்பி நெருங்காமலும் வெம்பி நீங்காமலும் பொதுவாக அரசன் நின்றுகொள்ளவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சதசித்துபால் உணரப்படும்.

### கதை.

சதசித்து என்பவன் சந்திரகுல வேந்தனாகிய சகத்திரசித்தினுடைய மைந்தன். "இந்திரற்கு இந்திரன்; எழுதலாகலாச் சுந்தரன்" என்றபடி இன்பச் சிறப்பிலும் அழகிலும் இவன் இசைபெற்றிருந்தான். அரிய வேள்விகள் மிக ஆற்றி அறம்பல புரிந்தான். அமரரும் அஞ்சத்தக்க பெருந்திறலுடையவன். நூறு போர்முனைகளில் வீரமோடுசென்று வென்றுவந்தானாதலால் அத்தீர

நிலைதோன்றச் சததித்து எனவிளங்கி இவன் சிறந்து நின்றான். விசயமாலை என்னும் அழகியை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து கேகயன் என்னும் ஓர் இனிய புதல்வனைப் பயந்து தன் செங்கோலெங்குஞ் செலுத்தி இவன் இன்புற்றிருந்தான். மறுபுலமன்னரும் திறைகள் தந்து வணங்க இறைமையெய்தி இவன் இசைபெற்று வருங்கால் தீயூழ்வலியால் ஓர் துயர மூண்டது. உட்கலாம்செய்து உறவினர் பிரிய, உறுபொருள் தேய, உடனேறைப் கொள்ள உறுதுயருழந்தான். அவ்வமயம் முனபு மாறுபிருந்த பிரபாகன், இளன், அனீகன் என்னும் மறுபுலத்து மன்னர் மூவர் தம் பகைமை நீங்கி இன்னுயிர் நண்பர்போல இவன்பால் இசைவுற்றிருந்தார். அவர் இனியர் என்று தெரிந்திருந்தாலும் தனக்குத் தாழ்வு நேர்ந்துள்ள அப்பொழுது அவரை நெருங்க விடாமலும், நேர்ந்ததை உணர்த்தாமலும் நொதுமலாளர்போல் பொதுவான நிலையிலேயே போற்றிவைத்திருந்தான். நாள்பல கழிந்தபின் ஊழ்நிலை நீங்கிச் சிறிது உறுதிபெற்று நின்றான்; அந்த நிலையிலுங்கூட அவரை அணுக ஒட்டாமல் அகலவிட்டிருந்தான். இவனது அருந்திறலடக்கத்தையும், பகைத்திறந்தெரிந்து நடந்த பண்பையும் வியந்து பலரும் புகழ்ந்தார். தேறினும் தேறா விடினும் அழிவின்கண், தேறான் பகாஅன்விடல் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. இவனது வீரத் திறத்தைக் குறித்து வியாச முனிவரும் வியந்து கூறியுள்ளார்.

மோட்டராமுடிக் கிடந்தயார் பரித்து மூவுலகும்
நீட்டு வண்புகழ்ச் சகத்திர சித்தெனும் திறலோன்
சேட்டிளம்பிறைக் கண்ணியோற் றொழுதருள் சிறுவன்
வாட்டிறற் சததித்தெனும் மன்னவர் திலகன். (க)

கெடுவெண் கவிகை நிலாக்கொழிப்ப நீணக்கால் வடிவேல் சத
சித்தன், அடுவெம்புலிப்போத் தனைய திறற் சிறுவன் அடற் கேக
யனவன் சேய், உடலஞ் செருவென் றுரைத்திடினும் ஒன்னாருதி
ரம் பருகியல்லால், தடறுபுகுதா தொளிர் வடிவாள் தருமன்
னன்னச் சாற்றுவரால். (கூர்மபுராணம்.)

வாள்வலியும் மதிவலியுமுடையனுய்ப் பகைநிலை யறிந்தடக்கி இவன் முதுநிலம் புரந்ததன்மை இதன்கண்ணும் விளங்குதல் காண்க.

பகையுறவாய் நின்ருலும் பற்றியபுன் கேட்டில்
நகையுரிமை கோள்ளல் நவை.

தாழ்வு நேர்ந்தபோது பகைவரைச் சாரலாகாதென்பது இத ளுல் கூறப்பட்டது.

---

877 வள்ளலுயர் நாஞ்சிலான் மாற்ருர்முன் மென்மையென்றும்
கொள்ளாதேன் நின்ருன் குமரேசா—உள்ளதொன்றும்
நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து. (எ)

இ—ள்.

குமரேசா! தன் மெலிவினைப் பகைவர் காணுவண்ணம் நாஞ்சிலான் ஏன் இனிது காத்துநின்ருன் எனின், நொந்தது அறியார்க்கு நோவற்க; பகைவர் அகத்து மென்மை மேவற்க என்க.

இது, பகைவர்பால் மெலிவு காட்டலாகாதென்கின்றது.

நொந்தது = வருந்துகின்ற வருத்தத்தை.

நோவற்க = நோவினைச் சொல்லற்க. நோவு என்னும் தொழிற் பெயர் விகுதி குன்றி நோ என முதனிலையளவாய் நின்று எதிர்மறை வியங்கோளோடு புணர்ந்து இங்ஙனம் விதிமுடிவு கொண்டது

மென்மை = மெல்லியதன்மை; அஃதாவது படைபொருள் முதலிய வலிநிலைகள் குன்றிநிற்கும் இயலபினை.

மேவற்க = வெளிப்படுத்திக்கொள்ளாதே. மேவல் = விரும்புதல், நிரப்புதல், பொருந்துதல். “ஆக்கந் தோம்பல் மேவற்ருகும்” என்புழி இது நின்றுணர்த்துதல் காண்க.

மேல், தனக்கு ஏதேனும் கேடு தோன்றியவிடத்துப் பகைவரை ஒருவன் கூடவிடலாகாதென்ருர்; இதில், தன் மெலிவினை அவர் யாதும் காணுதபடி பாதுகாக்கவேண்டும் என்கின்ருர்.

தான் நொந்துநிற்கும் நிலையினைத் தாமாக அறிந்துதவாத நண்பர்க்கு அதனைச் சொல்லலாகாது; தனக்கு நேர்ந்துள்ள மெலிவினைப் பகைவரிடத்துத் தோன்றும்படி ஒருவன் செய்யலாகாதென்பதாம்.

தன் வலிக் குறைவுகளைப் பகைவர் அறிந்துகொள்ளும்படி அரசன் மேலிட்டுக் கொள்ளலாகாது என்பார் பகைவர் அகத்து மென்மை மேவற்க என்றார். மேவின், மெலிவுபார்த்து நிற்கும் அவர் விரைந்து வந்து வளைந்து வென்று கொள்வர் எனக.

தான் நொந்து நிற்றலைத் தாமாகவே உணர்ந்து உதவாத நண்பர்க்குத் தன் வாய்திறந்து அதனை ஒருவன் சொல்லின் இழிவே யன்றி அதனால் ஒரு பயனும் இல்லையாம் ஆகலால் நொந்தது அறியார்க்கு நோவற்க என்றார். தோழனோடும் ஏழைமை பேசேல். என்றார் ஔவையாரும்.

ஒருவர் ஒருவரைச் சார்ந்தொழுக லாற்றி
வழிபடுதல் வல்லுத லல்லால்—பரிசழிந்து
செய்யீரோ என்னும் என்னுஞ்சொற் கின்னாதே
பையத்தான் செல்லும் நெறி. (நாலடியார்.)

தான் நொந்து நிற்றலைக் குறிப்பாலறிந்து உதவாதார்க்குத் தன் நோவினைச் சொல்லுதல் மிகவும் துன்பமாம் என இது உணர்த்தி நிற்றல் காண்க.

பகைவர்பால் தவிர்வது கூறுவார் நண்பரிடத்துத் தவிர்ந்தொழுக வேண்டியதையும் இங்ஙனம் உடன் கலந்து கூறியது என்னை? யெனின், அச்சொல்லால் இழிவு வருதல்போல் இச்செயலால் அழிவுவரும் என்பது தெளிவுற என்க.

"மாருதி யின்னும் செல்லின் மற்றிவன் அன்றிவந்து
சாருதல் வலியார் இல்லை யென்பது சாலுமன்றே" என்று
இராகவன் எதிரிகரு மெலிவு தோற்றவிடலாகாதென முன் எண்ணி நின்றதும் ஈண்டெண்ணத்தக்கது. மாற்றானுக்கு இடங் கோடேல். என்றார் ஔவையார்.

தன் படை முதலிய வலிமைகள் குறைந்து ஒரோவழித் தான் மெலிந்து நிற்பினும் அந்நிலையினைப் பகைவர் அறிந்து கொள்ளாவண்ணம் அறிவுடையரசன் பாதுகாத்து நிற்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நாஞ்சிலான்பால் உணரப்படும்.

## கதை.

நாஞ்சிலான் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னிருந்த ஓர் குறுநில மன்னன். அருமையான இனிய குணங்கள் பல அமையப் பெற்றவன். எவர்வந்து எதைக்கேட்டாலும் இல்லையென்றுரையாமல் உள்ளமுவந்து உதவிவந்த நல்ல கொடையாளி. படைகள் பலவும் நன்கு பயின்றவன். இவனது நாடு மிக்க வளமுடையது. அழகிய கனிமரங்களோடு பலவகை நலங்களுஞ் செறிந்த விழுமிய மலை ஒன்று இவன் நாட்டில் நிலவியிருந்தது. அம்மலைக்கு நாஞ்சில் என்று பெயர். அதனைத் தனக்கு உரிமையாகக்கொண்டு வளனுடைமையுடையனுயிருந்தமையால் நாஞ்சில்வள்ளுவன் என இவன் விளங்கி நின்றான். புலமையாளர் பால் பெருவிருப்புடையவன். கவிகள் பாடுவாரைக் கண்டால் அவரை மிகவும் நன்கு மதித்து அன்புடன் ஆதரித்து இவன் இன்பு செய்துவிடுவன். ஒருமுறை கவி ஒன்றுபாடிவந்து கொஞ்சம் அரிசி தரவேண்டுமென்ற பாணன் ஒருவனுக்கு இவன் ஓர் யானையைக் கொடுத்தான். இவனது அக்கொடையை வியந்து ஒளவையார் மனமுருகி மிக விநயமாக அழகுறப்பாடியுள்ளார். அடியில் வருதல் காண்க.

தடவுநிலைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
மடவன் மன்ற செந்நாப் புலவீர்!
வளைக்கை விறலியர் படப்பைக் கொய்த
அடகின் கண்ணுறை யாக யாம் சில
அரிசிவேண்டினே மாகத் தான் பிற
வரிசையறிதலின் தன்னுந் தூக்கி
இருங்கடறு வளைஇய குன்றத் தன்னதோர்
பெருங்களிறு நல்கி யோனே அன்னதோர்
தேற்றா ஈகையும் உளது கொல்!
போற்றார் அம்ம! பெரியோர்தமகடனே. (புறம்.)

தடவுநிலைப் பலவு = பெரிய நிலைமையையுடைய பலாமரம். கடறு = காடு. இதனால் இவனது வள்ளற் றன்மையும், உள்ளப் பெருமையும் உணரலாகும். ஒரு சிறைப் பெரியனார், மருதனிள நாகனார் முதலிய புலவர் பலரும் இவனைப் புகழ்ந்து பாடியிருக்கின்றார்கள். இவனது ஆண்மை அடக்கம் அறிவு முதலியவற்றை வியந்து சேர மன்னனும் இவன்பால் பேரன்பு செய்திருந்தான். சீர் மிகுந்து இங்ஙனம் சிறந்து நின்ற இவன்மேல குறுநில மன்னர் சிலர் பகைமைகொண்டிருந்தார். அவர் பல முறையாக இவனை வெல்ல முயன்றும் முடியாமல் முரணழிந்து நின்றார். என்றும் அவரை இவனே வென்று வந்தான். வருங்கால் தெய்வகதியாகத் தன் பொருள் வளங்குன்ற அதனால் இவன் படைவலி குறைந்தது. உறுதித் துணைவராய் உடனிருந்த சிலரும் உயிர் முடிந்தொழிந்தார். ஆயினும் இவன் உள உறுதி குன்றாமல் ஊக்கி நின்றான். தன் மெலிவினைச் சிறிதும் தோற்ற விடாமல் மிக்க திண்மையோடு இவன் விளங்கி நின்றதைக் கண்டு பகைவரும் அடங்கி நின்றார். மேவற்கமேன்மை பகைவரகத்து என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான் இவனைக் குறித்துக் கருவூர்க்கதப்பிள்ளை என்னும் புலவர் பாடிய கவி ஒன்று இதனடியில் வருதல் காண்க.

> தீஞ்சுளைப் பலவின் நாஞ்சிற் பொருநன்
> துப்பெதிர்ந் தோர்க்கே யுள்ளாச் சேய்மையன்
> நட்பெதிர்ந் தோர்க்கே அங்கை நண்மையன்
> அன்னன் ஆகன் மாறே இந் நிலம்
> இலம்படு காலை யாயினும்
> புலம்பல போயின்று பூத்தவென் கடும்பே. (புறம்)

துப்பு = வலி. எதிர்ந்தோர்க்கு உள்ளாச் சேய்மையன் = எதிர்த்த பகைவர்க்கு நினைக்கவும் எட்டாத நெடுந் தூரத்தன். என்றது யாரும் அணுகுதற்கரிய அருந்திறலாளன் என்றவாறு. பகைவர்க்கு இடங்கொடாமல் என்றும் வென்றியாளனாய் இவன் நின்றிருந்த பான்மையும், அடுத்தார்க்கெல்லாம் இனியனாய் நின்று கொடுத்துவந்த மேன்மையும், பிறவும் இதனால் இனிதறியலாம்.

உற்ற மெலிவை யுறுபகைக்குக் காட்டினுடன்
இற்று விழுவார் இடர்.

பகைவனுக்கு மெலிவு காட்டலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

878 மாலறிந்து காப்ப மதுகயிடர் மாய்ந்தாரேன்
கோலமுறிந்து குமரேசா—சாலும்
வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு. (அ)

இ—ள்.

குமரேசா! எதிர்வகையறிந்து இனிது காத்து நின்ற மாலிடம் பகைத்துவந்த மதுகயிடவர் ஏன் மாய்ந்துபோனார் எனின், வகையறிந்து தற்செய்து தற்காப்ப, பகைவர்கண் பட்ட செருக்கு மாயும் என்க.

இது, பகைநிலையறிந்து தன்னைப் பாதுகாத்துக்கொள்க என்கின்றது.

வகையறிந்து = வினைவகைகளைத் தெளிந்து; அஃதாவது பகைவரது வலிநிலைகளையறிந்து அவற்றிற்கு ஏற்ப ஆற்றவேண்டிய விதங்களை ஆராய்ந்து தெளிந்து என்றவாறு.

தற்செய்து = தன்னை வலிபெறச்செய்து; பொருள் படைகளால் தன்னை நிலைபெற உயர்த்தி என்றவாறு

தற்காப்ப = மடிமறதிகளால் சோர்வுறாது தன்னைப் பாதுகாத்து நிற்க.

காப்ப மாயும் என்றதனால் அங்ஙனம் காவாவழி அவர் மாயாது நின்று தன்னை மாய்ப்பர் என்பதாயிற்று.

மேல், பகைவர்க்குத் தன் மெலிவினை அரசன் புலப்படுத்தலாகாதென்றார்; இதில், அவர் செருக்கை யழித்தற்குரிய திறங்களிவையெனத் தெரித் துணர்த்துகின்றார்.

வினைசெயல் வகைகளை யறிந்து வலிமையுறத் தன்னைப் பெருக்கிக்கொண்டு மறதி புகாமல் தன்னை ஒருவன் பாதுகாத்து நின்றால் அவன் பகைவர் யாட்டுள்ள களிப்புத் தானாக அழிந்து போம் என்பதாம்.

அறிதலும் செய்தலும் காத்தலும் பகைவரது செருக்கை மாய்த்தற்கு முறையே காரணங்களாகுமாதலால் அவற்றை நிரலே காட்டியருளினார்.

தன்னை வெல்லக் கருதி வெகுண்டு நிற்கும் பகைவர் மிக வலியராயின் அவரை வெல்லுதற்கு ஏதேனும் வகையுண்டா? என்று ஒருவன் வினவ அவனை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்து கொள்க.

இயற்பகை வெல்குறுவான் ஏமாப்ப முன்னே
அயற்பகை தூண்டி விடுத்தோ—ஞயத்தாற்
கறுவழங்கிக் கைக்கெளிதாய்ச் செய்க; அதுவே
சிறுகுரங்கின் கையாற் றுழா. (பழமொழி)

பெரிய குரங்கு சிறு குரங்கின் கையைக்கொண்டு சுடு கூழைத் துழாவிச் சூட்டின நிலையறிந்து கொள்ளுதல்போல் பகைவரை வெல்லவேண்டியவன் வேறொரு வகையால் அவர் நிலையினை யறிந்து தன் நிலைமை குன்றாவண்ணம் நின்று வினைசெய்யவேண்டும் என இது விளக்கி நிற்கும் அழகைப் பார்க்க. கறுவழங்கி = உட்பகையாய் நின்று. ஏமாப்ப = தனக்கு உறுதியாக.

பகைவர் எளிதாக நினைந்து புகுந்துகொள்ளாதபடி துணை பொருள் படை முதலியவற்றால் தன்னை ஒருவன் வலியனாகச் செய்துகொள்ளவேண்டும்; அங்ஙனம் கொண்டு நின்றால் அவர் கருத்தொழிந்து செருக்கடங்குவர் என்பது இதன் திரண்ட பொருளாம்.

பருவந்தப்பாமல் பார்த்துப் பயிரைப் பாதுகாத்துவரின் களைகள் தாமாகவே பட்டழியும்; அதுபோல் எதிரியின் நிலையறிந்து சோர்வுறாமல் தன்னைப் பெருக்கிப் பேணி ஒருவன் நிற்பின் தாமாகவே பகைவர் நாணி நொந்து நைந்து போவர் என்றவாறு.

பகைவரை எவ் வகையில் வெல்ல முடியுமோ அவ் வகையில் தன்னை ஒருவன் ஆக்கிக்கொள்வனாயின் அவர் தாமாகவே அழிந்து தொலைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை மதுகைடவர்பால் உணரப்படும்.

## கதை.

மது கைடவர் என்பவர் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றியிருந்த அசுர வீரர்கள். மது, கைடவன் என்னும் இவ் விருவரும் உடன் பிறந்து உருவிலும் வலியிலும் ஒத்து விளங்கினமையால் மதுகைடவர் என ஒரு தொகையாகப் பெயரெய்தி நின்றனர். இவர், எவராலும் வெல்லமுடியாத அருந்திறலுடையவர். மிக்க நேர்மையாளர். வஞ்சம் புரிவோரை நஞ்செனவெறுப்பவர். அஞ்சா நெஞ்சினர். அசுரர் அரக்கர் அமரர் முதலிய அனைவரையும் வென்று அமரில் தமக்கு எவரும் நிகரில்லையென்று இறுமாந்திருந்தார். இவர் இங்ஙனம் இருந்து வருங்கால் நாரதர் வந்து "அசுரகுலகாலனாகிய திருமாலை வென்று கொண்டாலன்றி வலியுடையேம் என்று நீவிர் பெருமிதங்கொண்டிருப்பது தகுதியன்று" என நயமாகக் கலகமூட்டினார். அது முதல் பகைமை மேற்கொண்டு அம் மாயனை வெல்ல இவர் மனந்துணிந்தார். இவரது துணிவினை அம் மணிவண்ணன் எதிரறிந்து வர பலமுடைமையால் இவரை எளிதில் வெல்லமுடியாதென்று தெளிந்து உததி நாடிக் கடலிடை வந்து இனிதமர்ந்திருந்தான். இவர் அங்கு வலிந்துவந்து போருக்குத் துணிந்தழைத்தார். அப் பெருமான் சினந்தெழாமல் நாள் பல கழியும்படி வினோதமாகத் தொடர்ந்தமர் புரிந்து இறுதியில் தனது இயல் நலங் கனிய அழகொழுக நின்றான். அவ் எழிலுருவைக் கண்டு மிக மகிழ்ந்து நின்று உமக்கு வேண்டிய வரத்தைக் கேளும் விரைந்து தருகின்றோம் என்று இவர் விழைந்து மொழிந்தார். தன்னைப் பாதுகாத்து நின்ற அப் பின்னை கேள்வன் இவரை நன்னயமுற நோக்கி "நீவிர் இருவரும் என்னால் இறந்துபடவேண்டும்" என்று இசைந்து நின்றான். உடனே இவர் அவ்வாறே இசைந்து "நிலத்தில் நிறுத்தாமல் எம்மை உமது தொடையில் நிறுத்தி

யடித்தால் யாம் இறந்து படுவோம்" எனத் துணிந்து மொழிந்தார். அப்படியே செய்து தன்னைப் பாதுகாத்து அம் முதல்வன் பகைமுடித்தமையால் இவ்விருவரும் செருக்கடங்கி முடிந்தார். வகை அறிந்து தற்செய்து தற்காப்பப் பகைவர்கண்பட்ட செருக்கு மாயும் என்னும் உண்மையை இவர் மாய்ந்துணர்த்தினர். பேயாழ்வார், மூன்றுறையரையனார், கம்பர் முதலிய பெரியார் பலரும் இவரைக் குறித்துக் கூறியுள்ளார் அடியில் வருவன காண்க.

காய்ந்திருளை மாற்றிக் கதிரிலகு மாமணிகள்
ஏய்ந்த பணக்கதிர்மேல் வெவ்வுயிர்ப்ப—வாய்ந்த
மதுகைடவரும வயிறுருகி மாண்டார்
அதுகேடவர்க்கிறுதி யாங்கு. (இயற்பா)

திருமால் வகையறிந்து முன்னுறத் தன்னைப் பாதுகாத்து நின்றமையால் அவன் மேல்வந்த பகைவர் தாமாகவே மாய்ந்து போன வுண்மையை இதில் ஆய்ந்து கொள்க.

வாட்டிற லானை வளைத்தார்கள் அஞ்ஞான்று
வீட்டிய சென்றார் விளங்கொளி—காட்டப்
பொருவறு தன்மைகண் டஃதொழிகதார் அஃதால்
உருவு திருவூட்டு மாறு. (பழமொழி.)

வாள் திறலான் = திருமால். வளைத்தார்கள் என்றது மது கைடவரை. மாயனைக் கொல்லச் சென்றவர்கள் வகையறிந்து தன்னைப் பாதுகாத்து நின்ற அவனது போழ்கில் வீடுபட்டு அது செய்யாது தீர்ந்தொழிந்த உண்மையை இது தெரித்து நிற்றல் காண்க.

மதுகைடவர் என்பவர் வானவர்தம்
பதிகைகொடு கட்டவர்; பண்டொருநாள்
அதிகைதவர் ஆழி யனந்தனையும்
விதிகைம்மிக முட்டிய வெம்மையினார். (க)

நீராழி யிழிந்து நெடுந்தகையைத்
தாராய் அமரென்றனர் தாமொருநாள்
ஆராழிய அண்ணலும் அஃதிசைபா
வாரா அமர் செய்கென வந்தனனால். (உ)

வல்லாருரு வாயிரமாய் வரினும்
நல்லார் முறை விசி நகுந்திறலார்
மல்லால் இளைகாது மலைந்தனன் மால்
அல்லாயிரம் ஆயிரம் அலைகினவால். (௩)

தன்போல்பவர் தானும இலாத தனிப்
பொன்போ லொளிர் மேனியனைப் புகழோய்
என்போல்பவர் சொல்லுவ தென்னுடையார்
உன்போல் பவர் யாருளர் என்றுரையா. (௪)

ஒருவேம் உலகேழையும் உண் டுமிழ்வேம்
இருவேமொடு நீதனி யித்தனை நாள்
பொருவே மொடு நேர்பொரு தாய்புகழோய்
தருவேம் நின்மனத்தது தந்தனமால். (௫)

ஒல்லும்படி நல்ல துனக்குதவச்
சொலலும்படி என்றவர் சோறலுமே
வெல்லும்படி நும்மை விளம்புமெனக்
கொல்லும்படி யாவரி கூறுதலும். (௬)

இடையிற் படுகிற்கிலம் யாம்ஒருநின்
தொடையிற் படுகிற்றும் எனத்துணியா
அடையச்செய கிற்றிய தாளை யெனு
கடையிற்படு நீதியர் நல்குதலும. (௭)

விட்டானுல கியாவையும் மேலொடுகீழ்
எட்டா ஒருவன்றன் இடத்தொடையை
ஓட்டாதவ ரொன்றனை சூழ்வலியால்
பட்டாரிது பட்டது பண்டொருநாள். (இராமாயணம்)

இன்னவாறே பல நூல்களும் இம்மதுகைடவரைப்பற்றிக் குறித்துள்ளன. பகைநிலையறிந்து மூற்படத் திருமால் தற்செய்து நின்றதும், அதனால் செருக்கடங்கி இவர் தீர்ந்து மாய்ந்ததும் பிறவும் இவற்றால் இனிதுணரலாகும்.

ஒட்டார் உளமடங்கி யுட்க உறும்வகையை
ஒட்டி யொழுக வுயர்ந்து.

பகைவர் செருக் கொழியும்வண்ணம் தன்னைப்பெருக்கி யொழுகவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

879 சீர்த்தி மிருவீர சேனன் பகைவரேன்
கூர்த்திடு முன் கொன்றான் குமரேசா—ஆர்த்துள்
இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து. (கூ)

இ—ள்.

குமரேசா! பகைவர் கதித்தெழு முன்னரே வீரசேனன் ஏன் அவரைக் கொலைத்தொழித்தான் எனின், முள்மரம் இளைதாகக் கொல்க; காழ்த்தவிடத்துக் களையுநர் கை கொல்லும் என்க.

இது, மெலிந்துள்ள பொழுதே பகைவரைக் களைந்து கொள்க என்கின்றது.

இளைதாக = இளமையான பருவத்தே; சிறிய செடியாயிருக்கும்பொழுதே என்றவாறு. முள்மரம் = முட்களையுடைய மரம். என்றது கருவேல், உடை முதலிய காட்டுமரங்களை.

காழ்க்க இடத்து = முற்றியவிடத்து; முதிர்ந்து வயிரங்கொண்டபோது என்க. காழ்த்தல் = முற்றல், வயிரமேறுதல்.

மேல், பகைவர் செருக்கொழியும்வண்ணம் தன்னைப்பெருக்கிப் பாதுகாத்துக்கொள்க என்றார்; இதில், மெலியராயிருக்கும் போதே பருவந்தவறாமல் அவரை வென்றுகொள்க என்கின்றார்

இளைதாக இருக்கும்பொழுதே முள்மரத்தைக்களைந்து எறிந்துவிடுக; முற்றியபின்பு களையலுறின் களைவார்கையினை அது உளையச்செய்யும் என்பதாம்.

வேறு மரத்தைக்கூறாது முள்மரத்தைக்குறித்தது பகைவரோடு ஒப்பாதற்குரிய அதன் துயர இயல்புகருதி என்க. களைதற்குரிமைகாட்டியபடி. மா, பலா, தென்னை முதலிய நன்மரங்கள் இனியனவாக வைத்துப் பாதுகாத்துப் போற்றற்குரியனவாகுமாதலால் முள்மரம் கொல்க என்றார் கொல்கஎன்று வல்வினைதோன்றவைத்தது உள்ளூற ஊன்றிநிற்கும் நோக்கம் பகைமேலாகவின் அதற்கு இயைய என்க.

படை பொருள் துணைமுதலிய வலிகள் குன்றிப் பகைவர் மெலிந்திருக்கும் பருவம்பார்த்து விரைந்துசென்று அவரை அ

சன் வென்றுகொள்ள வேண்டும் என்று உணர்த்தவந்த அடிகள் முள்மரத்தின் இளமையை யெடுத்துக்காட்டிக் களைக என்றதனால் இது, பிறிது மொழிதல் என்னும் அலங்காரமாம் என்க.

இளைதாக யிருக்கும்பொழுதே முட்செடியைக் களைந்தெறிக என்று உழவனுக்கோர் உறுதியை உணர்த்துவதுபோல் காட்டிப் பருவமறிந்து பகை கடிந்துகொள்ளும்படி உலகையாளும் தலைவனுக்கு ஓர் தத்துவத்தை இதில் உணர்த்தியிருக்கும் அழகை உய்த்துணர்ந்து கொள்க.

முட்கொள் நச்சு மரமுளை யாகவே
யுட்கி நீக்கின் உகிரினும் கொல்லலாம்;
வட்கி நீண்டகற்பின் மழுவும், தறு
கட்குடாரமும், கார்களை கிற்பவோ? (சூளாமணி).

இனியவன் சின்னாட் செல்லின் எம்மனோர் வாழ்வுங்கொள்ளும்
துனைவரும் புரவித் திண்டேர்த் துணைவரும் சூரரானோ
முனைவரு கூர் முனை வேலை முளையிலே களையினல்லால்
நனிவர வயிரத்தக்கபோது நவியமும் மடியுமன்றே. (பாரதம்)

பருவங்கண்டு பகை களையும்படி அடிகள் காட்டியுள்ள கருத்தை இவை அடியொற்றி வந்திருத்தல் காண்க.

முட்செடி சிறிதாயிருக்கும் நிலையில் மிக எளிதாகக் களைந்துவிடலாம்; அங்ஙனமின்றிப் பெரிய மரமாய் முற்றிய பின்பு அதனைக் களையச் சென்றால் கோடரி அரிவாள் மண்வெட்டி முதலிய ஆயுதங்களையுந் தேய்த்துக் களைவார் கைகளையும் கனறச் செய்து கடுந்துயர் விளைக்கும்; அதுபோல் பகைவர் மெலியரா யிருக்கும்பொழுது அவரை எளிதாக வென்று கொள்ளாமல் வறிதே யிருந்துவிட்டு அவர் வலியராய் வளர்ந்தபின்பு வெல்லச் சென்றால் படைகளும் பொருளும் பல பாழ்பட்டுத் தானும் படாத பாடு படும்படி நேரும் ஆதலால் அங்ஙனம் நேராவண்ணம் பருவங் கண்டு திறந் தெரிந்து பகைவரை அறவே அரசன் கடிந்துகொள்ள வேண்டும் என்று உறுதிபெற இஃது உணர்த்தியதென்க.

முளைக்கும்போதே முள் மரத்தைப் பிடுங்கி யெறிகல் உழவனுக்கு இனிதாதல்போல் பகைவர் கிளைக்கும்போதே கடிந்துவிடல் அரசனுக்கு நன்றாம் என்பது கருத்து.

பகைவர் மிகக் கொடியவராயினும் பருவமறிந்து சென்றால் ஒருவன் அவரை முடியவென்றுகொள்ளலாம் என்பது இதில் உணரத்தப்பட்டது. இவ் வுண்மை வீரசேனன்பால் உணரப் படும்.

கதை.

வீரசேனன் என்பவன் கிடகநாட்டு மன்னன். சந்திரகுல திலகனாய் மிகக புகழோடு விளங்கிநின்ற மகா சேனன் என்பவனுடைய அருமைப் புதல்வன். இவன் சிறந்த போர் வீரன், பெருங் கொடையாளி. மிக்க அடக்கமுடையவன். பன்னிரண்டு ஆண்டுகளாகப் பரமபொருளை நோக்கி அருந்தவஞ் செய்து அமரரும் வியக்கத்தக்க வர பலங்களைப் பெற்று உலக முழுவதையும் பொதுவற ஆண்டவன். இவன் செஙகோல் செலுத்தி வருங்கால் எல்லா வுயிர்களும் எங்கும் இன்பமெய்தி நின்றன. இவனது குண நலங்களையும், ஆட்சித் திறங்களையும் வியந்து அறிஞர் பலரும் போற்றி நின்றனர்.

அஞ்சாமை யறிவூக்கம் அருளாண்மை முறைநீதி யமைதி வண்மை
துஞ்சாத வினைமாட்சி தோலாத சூழ்ச்சிநிறை தூய்மை வாய்மை
எஞ்சாதபடையுடைமை பொறையுடைமை எழிலுடைமை யெய்தியென்றும்
மஞ்சாரு முலகமெலா மகிழ்தூஙக, வளர் செஙகோல் செலுத்தி வந்தான்.

இங்ஙனம் சிறந்து நின்று இந்திரசேனை யென்னும் மங்கையை மணந்து நீதிமானுன நளனைப் பயந்து இசை திசை பொங்க இவன் இனிது வீற்றிருந்தான். ஒரு முறை சுகேசன் என்னும் அசுர வேந்தன் பெரும் படையோடு திரண்டு வந்து அமரரனைவரையும் வென்று அமராவதியைத் தன்வசம் செய்துகொள்ள, தேவர் கோனுன இந்திரன் அவனை யாதும் செய்யலாற்றுமல் அல்லற் பட்டு இவன்பால் வந்து குறையிரந்து நின்று அவனை வென்றுதர விழைந்து வேண்டினன். உடனே இவன் விரைந்து சென்று அவ் அசுரர்கோனைப் படைகளோடு வென்று இந்திரனுக்கு அர

உரிமையைத் தந்து அகமகிழ்வோடு புகழ் மலிந்து வந்தான். இந் நன்றியை அவ் வானவர்கோன் என்றும் மறவாமல் நின்று இவனை இன்னுயிர்த் துணைவனாக எண்ணிப் போற்றி இதஞ்செய்து வந்தான். அவன் தமயந்தியின் சுயம் வரத்தைக் கேள்விப்பட்டு காதலைமீக் கொண்டு விதர்ப்பதேயத்தை யணுகிய பொழுது அங்கு முன்னதாகவே வந்திருந்த நளனைக் கண்டு நம் குடியைக் காத்த கோமான் போன்றுள்ளானே என்று குறித்துணர்ந்தான்.

அரக்கருண் டொளிரும் வாள் அவுணர்ச் செற்று நம்
இருந்தக செல்வமும் சிறப்பும் நல்கிய
வினைத்துணை அலங்கலான் வீரசேனன் போன்று
இருத்தலால் இவன் நளன் என்ன வேண்டுமால். (நைடதம்)

என எண்ணி மொழிந்தான். தேவர்களாலும் வெல்லுதற்கரிய பகைவர்களை வென்று இந்திரனுக்கு இறைமையை நிலைநிறுத்திய தலைமையாளன் என இதில் அவனால் இவன் இசைக்கப் பெற்றிருத்தல் காண்க. இவ்வாறு பகை கடிந்து இவ்வுலகினை இனிது பாதுகாத்து வந்தான். வருங்கால் அசுரர் சிலரோடு மறுபுல மன்னர் சிலர் கலந்து நின்று இவன்மேல் பகைமைகொண்டார். அவரது நிலையினை இவன் உய்த்தறிந்து அவர் உருக்கொண்டு உருத்தெழு முன்னரே செறுத்தெழுந்துபோய் அவரனைவரையும் சிதற அடித்தான். அதனால் அவர் சீரழிந்தொழிந்தார். களை களைந்து உழவன் பயிர்களைக் காத்தல்போல் பகை கடிந்து இவன் உயிர்களைப் பாதுகாத்தான். பகைவர் கிளைத்தெழுந்தபொழுதே இவன் விரைந்து அழித்தொழித்து வந்தானாதலால் எய்யென எழுபகை எங்கும் இல்லை என இவன் நாட்டில் இசை பொங்கி நின்றது. இளைதாய் இருக்கும்பொழுதே முள் மரத்தை அகழ்ந்தெறிதல் இனிதாதல்போல் மெலிதா யிருக்கும்போதே பகைவரைக் களைந்தெறிதல் அரசர்க்கு நலமாம் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

எள்ளும் பகைவர் எழுமுன் அவர்தலையைக்
கிள்ளி யெறிக கிளர்ந்து.

வளர விடாமல் பகைவரைக் களையவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

880 அன்று செயிர்த்த அழிசியினால் ஏனபயன்
குன்றி யழிந்தான் குமரேசா — நின்றே
உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார். (ம)

இ—ள்.

குமரேசா! செயிர்த்து நின்ற அழிசி கொதித்தெழுந்த பொழுது அபயன் ஏன் குன்றி அழிந்தான்? எனின், செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார், உயிர்ப்ப உளரல்லர் மன்ற என்க.

இது, பகைவரை யடக்காது நின்றவர் பட்டழிவர் என்கின்றது.

செயிர்ப்பவர் = செயிர்த்து நிற்பவர்; அஃதாவது உள்ளே கறுவுகொண்டு பகைவராய்க் கனன்று நிற்பவர் என்க.

செம்மல் = தலைமை, செருக்கு. “ஊர்களிற்றன்ன செம்மலோரும்” எனப் பரிபாடலிலும், “செம்மற் றம்மநின் வெம்முனை யிருக்கை” எனப்புறத்திலும், “திளைத்தலிற் பெடையயில் தெருட்டும் செம்மற்றே” எனச் சிந்தாமணியிலும் இது நின்றுணர்த்துதல் காண்க.

சிதைக்கலாதார் = அழிக்கமாட்டாதார். சிதைத்தல் = அழித்தல், தொலைத்தல்.

உயிர்ப்ப உளர் அல்லர் = மூச்சுவிட்டு வாழும்படியான அவ்வளவும்கூட இருக்கமாட்டார்; இன்னல் மீக்கூர்ந்து இறந்துபடுவார் என்றவாறு. உயிர்த்தல் = மூச்சுவிடல்.

இனி, பகைவரை அழிக்காமல் விட்டிருந்தவர் பின்பு அவர் வலியாயபொழுது அவரது மூச்சுக்காற்றுக்குங்கூட ஆற்றமாட்டாமல் முடிந்து தொலைவர் எனவும் இது உணர்த்திட நின்றது.

மேல், பகைவர் மெலிந்திருக்கும் பருவத்தே விரைந்து களைந்தெறியவேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் செய்யவில்லையானால் பின்பு உய்தியில்லையென்கின்றார்.

தம்மீது கடுத்து நிற்கும் பகைவரது செருக்கினை அறத் தொலைக்காமல் இகழ்ச்சியால் கடக்கவிட்டிருப்பவர் பின்பு உயிர்த்துவாழ முடியாராய் ஒழிவர் என்பதாம்.

பகைவரது பெருமிதத்தை விரைந்து தொலைக்கவில்லையாயின் பின்பு அவர் பெருகிவிடுவர்; விடவே கிளர்ந்தெழுந்து தம்மை அவர் களைந்தெறிவர் ஆதலால் சிதைக்கலாதார் உளரல்லர் என்றார்.

உளரல்லர் என முன்னெச்சரிக்கையாக அச்சுறுத்தியது தெவ்வரை விரைந்து ஊக்கி வென்றுகோடற்கென்க.

காணம் தப்பினால் மரணம் என்பதுபோல் பகைவரைத் தாம் சிதையாவழித் தம்மை அவர் சிதைத்தழித்து விடுவர் ஆதலால் திறந்தெரிந்து பருவந் தவறாமல் உறுதியைச் செய்துகொள்ள வேண்டும் என்றவாறு.

வேலை வாய்த்தபோது வெட்டியெறியாமல் பகைவரை அரசன் விட்டுவைத்திருந்தால் பின்பு அவன் கெட்டுயிர்ப்போடுற்ற பிணமாய்க் கெட்டழிவான் என்பதாம்.

பகைமையைக் கொள்ளாது விடுதலே நல்லது; ஒருவேளை கொள்ளினும் சொல்வல்லாரோடும், பல்லாரோடும் கொள்ளலாகாது; அதனை விரும்பாதவனை உலகம் விரும்பும்; தான் விரும்பாதிருப்பினும் எதிரிகள் அதனை மேற்கொண்டு முனைந்துவரின் அமைந்த உபாயங்களால் அவரை அடக்கிவிடுக; அவரை நம்பிச் சாராற்க; உன் மெலிவினை அவர்க்குப் புலப்படுத்தற்க; வலியினை வளர்த்துப் பருவமறிந்து பகைவரைக் களைக; என இதுவரை உணர்த்திவந்து அங்ஙனம் களையாதுவிடின் அவர் அடியோடு அழித்துவிடுவாராதலால் ஆய்ந்து முடித்துக்கொள்க என்று உறுதி பெற அறுதியிட்டு இறுதியாக இதில் உணர்த்தியருளினார்.

வலிநிலையறிந்து பகைவரைத் தப்பாது அரசன் வென்று கொள்ளவேண்டும் என்பது கருத்து.

படைவலி சிறிதாயிருந்தாலும் பகைவனை வளரவிட்டிருந்தால் அவன் பின்பு விரைந்து வந்து வென்றுகொள்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அழிசிபால் உணரப்படும்.

## கதை.

அழிசி என்பவன் சோழநாட்டிலே ஆர்க்காடென்னும் ஊரி லிருந்து அரசுபுரிந்த ஓர் குறுநில மன்னன். சோழர் மரபினன். இவன் நல்ல கல்விமான். பல்வகைப் படைக்கலங்களிலும் வல்ல வன். மிக்க சூழ்ச்சியாளன். உள்ளியதை யுறுதிபெற முடிக் கும் ஒள்ளிய ரெல்லாரும் வியந்துபோற்ற நின்றான். இவன் அனங்கமாலை என்னும் ஓர் கன்னிகையை மணந்து மன்னிய போகங் களை நுகர்ந்து இன்னிசை யெய்தி யிருந்தான். இவனுக்கோர் புதல்வன் தோன்றினான். அவன் அழகிலும் அறிவிலும் மிகச் சிறந்தவன். அவனுக்குச் சேந்தன் என்று பெயர். தனக்கமைந் துள்ள சிறிய நிலமண்டலத்தைப் பலவகையிலும் வளமுறச்செய்து குடிகள் நலம்பெற இவன் அரசுபுரிந்து வந்தான். இவன் காலத் தில் உறையூரிலிருந்து அரசு புரிந்த முடி மன்னனாகிய அபயன் என்பவன் மீது இவன் பகைமைகொண்டிருந்தான். கடல் போன்ற பெருஞ் சேனையையுடையவனாயிருந்தும் அப்போரசன் மிக்க அமைதியாளனாதலால் இவனைப் பொருட்படுத்தாமல் புறக் கணித்திருந்தான். அவனுக்குச் செலுத்தவேண்டிய திறையை முறைப்படி செலுத்தாமல் நாளடைவில் இவன் நிறுத்திவைத் திருந்தான். செருக்கு மீக்கொண்டு இவன் செயிர்த்து வருதலை யறிந்தும் அவன் பொறுத்து நின்றான். இங்ஙனம் நின்று வருங் கால் காலவேற்றுமையால் அவன் நிலைதளர இவன் வலிமிகுந்தான். அமயம் நோக்கி நின்று ஒருநாள் படையெழுச்சி செய்துபோய் அவனது இராசதானியாகிய உறையூரை இவன் உற்று வளைத் தான். எதிர்பாராது நின்ற அவன் இவனது செயலினை யறிந்து மிக வெகுண்டுவந்து அமர் தொடங்கினான். தொடங்கியும் வலி யமைந்து முனைந்து மூண்டுநின்ற இவனை யாதும்செய்ய முடியா மல் முடிவில் மாண்டு விழுந்தான். உடனே அவனது அரசினைத் தனக்கு இவன் உரிமையாக்கிக்கொண்டு தன் மகனை அங்கு முடி சூட்டிவைத்துவிட்டுத் தன் நகரினை யடைந்து உவகைமிகுந்து வெற்றி விழாச் செய்து வியந்து வீற்றிருந்தான். வலியனாயிருக் கும் பொழுது இவனைச் சிதையாது விட்டிருந்தமையால் உயிரிழந் தொழிந்தான் என அவனை உலகம் பழிக்க இவன் உயர்ந்து விளங்

கினான். நின்றபகையின் நிலையறிந்து வெல்லாதான், என்றும் பழிமேலேழும்; என்றபடியே அவன் பொன்றி ஆழ்ந்தான்; இவன் பொங்கி வாழ்ந்தான். செயிரப்பவர் செம்மல் சிதைக்கலாதார் பின்பு உயிர்ப்ப உளரல்லர் என்பதை இவன் உயிர்த்துணர்த்தினான். இவனைக்குறித்துப் புலவர்பலர் பாடியுள்ளார். பரணர் பாடிய கவி ஒன்று இதனடியில் வருகின்றது.

> வாரல் எம்சேரி; தாரல் நின்தாரே;
> அலராகின்றாற் பெரும! காவிரிப்
> பலாறு பெருந்துறை மருதொடு பிணித்த
> ஏந்துகோட் டியானைச் சேந்தன் உறந்தை,
> அரியரி லம்புக இளங்கோட்டு வேட்டை
> நிரைய வொள்வாள் இளையர் பெருமகன்
> அழிசி ஆர்க்காடு அன்ன இவள்,
> பழிதீர் மாணலம் தொழுதனை கண்டே. (குறுந்தொகை).

வாரல் = வாராதே; தாரல் = தாராதே. உறந்தை = உறையூர். இது, வாயில் மறுத்துத் தலைமகனுக்குத் தோழி கூறியதாகத் துறைபமைத்துப் பாடியதென்க. அழிசியின் இராசதானியை ஒரு தலைமகளின் இன்பநலத்துக்கு உவமை கூறியிருக்கும் அருமையை உற்று நோக்குக. சேந்தன், உறையூரில் உறைந்ததையும், அழிசி ஆர்க்காட்டிலிருந்ததையும் இது உணர்த்தி நிற்றல் காண்க.

> நோயினி வாழிய நெஞ்சே மேவார்
> ஆரரண் கடந்த மாரி வண்மகிழ்த்
> திதலை எஃகிற் சேந்தன் தந்தை
> தேங்கமழ் விரிதார் இயல்தேர் அழிசி
> வண்டுமூசு நெய்தல் நெல்லிடை மலரும்
> அரியலங் கழனி ஆர்க்கா டன்ன
> காமர் பணைத்தோள் நலம்வீ றெய்திய
> வலைமான் மழைக்கட் குறுமகள்
> சின்மொழித் துவர்வாய் நகைக்குமகிழ்ந் தோயே. (நற்றிணை).

மேவார் = பகைவர். அரியல் = தேன். அழிசி ஆர்க்காடன்ன குறுமகள் நகைக்கு மகிழ்ந்தோய் என்று கூட்டிக்காண்க.

இது தலைமகளது இளமைநலனை நினைந்து தன் நெஞ்சிற்கு ஓர் தலைமகன் சொல்லியதாகத் துறையமைத்துப் பாடியது. பகைவருடைய பல அரண்களையும் வென்றவன்; மாரிபோன்று நின்று கைமாறு கருதாமல் வண்மைசெய்து வந்தவன்; சேந்தனுக்குத் தந்தை; தேன் கமழ்ந்த மலர்மாலையையும், அழகிய தேரினையும் உடையவன்; ஆர்க்காட்டு வேந்தன் என அழிசி இதில் போற்றப்பட்டிருத்தல் காண்க. தன்னைச் சிதையாது விட்டிருந்த உறந்தை மன்னனைச் செயிர்த்தழித்து உயிர்ப்பிலனாகச் செய்து இவன் உயர்ந்திருந்த உண்மை இதன் கண்ணும் உணரலாகும்.

கொல்லக் கருதிக் குறிபார்த்து நின்றுள்ள
பொல்லாப் பகைவர்தாம் பொன்றிவிழ—வல்ல
வகைசெய்து தற்காவா மன்னன்பின் அன்னார்
நகைசெய்ய வீழும் நலிந்து.

ஒல்லுங்கால் வெல்லா துறுபகையை விட்டுவைத்தல்
கொல்லும் பிணிவளர்த்த கோள்.

பகைவரைக் களையாதவன் பின்பு பாழ்படுவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

பகையினை எவ்வகையிலும் கொள்ளலாகாது. வில்வல்ல வீரரோடு பகைத்தாலும் சொல்வல்ல அறிஞரைப் பகைக்கலாகாது. பலர் பகைகொள்ளல் படுதுயராகும். பகைவரை நட்பாகக்கொண்டொழுகும் இயல்புடையானுக்கு உலக முழுதும் உரிமையாய் நிற்கும். இதமுறும்படி ஒரோவழி அவரைத் துணையாக அமைத்துக்கொள்ளவேண்டும். தனக்கு ஏதேனும் தாழ்வு நேர்ந்துழி அவரைச் சாரலாகாது. தன் மெலிவினை அவர்க்குப் புலப்படுத்தலாகாது. பகைவர் செருக்கொழியும் வண்ணம் தன்னைப் பெருக்கிப் பாதுகாத்துக்கொள்ளவேண்டும். மெலிந்திருக்கும் அமயத்தே அவரை வேரோடுங் களைந்தெறியவேண்டும். அங்ஙனம் அவரை அழிக்காது விட்டால் பின்பு தனக்கே அழிவுண்டாகும்.

அஅ-வது பகைத்திறந்தெரிதல் முற்றிற்று.

---

# 89-ம் அதிகாரம் உட்பகை.

அஃதாவது அகத்தே பகைமைகொண்டு புறத்தே அது தோன்றாவண்ணம் மறைத்துநின்று வெல்லும் வகைநாடி உறவினர்போன்று உள்ளாய் நிற்கும் பகை. இது, புறப்பகையினும் மிகக்கொடியதாம்; இதனை உய்த்தறிந்து விரைந்து ஒழிக்கவேண்டும் என உணர்த்துகின்றதாதலால் பகைத்திறந் தெரிதலின்பின் இது வைக்கப்பட்டது.

881 தன்றமரோன் றெண்ணான் தசமுகனேன் மைத்துனனைக்
கொன்று தொலைத்தான் குமரேசா—நன்றாம்
நிழனீரும் இன்னாத இன்னா தமர்நீரும்
இன்னாவாம் இன்னா செயின். (க)

இ—ள்.

குமரேசா! தன்னுடைய உறவினன் என்று எண்ணாமல் வித்தியுச்சுவனை இராவணன் ஏன் கொன்றொழித்தான் எனின், நிழல் நீரும் இன்னாத இன்னா; தமர்நீரும் இன்னாசெயின் இன்னாவாம் என்க.

இது, உட்பகையின் இயல்பு இன்னதாம் என்கின்றது.

நீர் இரண்டனுள் முன்னது தண்ணீரையும், பின்னது பண்பையும் உணர்த்தி நின்றது. தமர் = உறவினர். நீர் = இயல்பு, தன்மை. நிழலையும் நீரையும் எடுத்துக்காட்டியது மக்களது அனுபவங்களுக்கு இனிமையான பொருள்களாக அவை எண்ணப்பட்டுள்ளமையான் என்க.

தமர் நீர்மைக்கு இனமாக நிழல் நீர்களைக் குறித்தது இனிதென நயப்பச்செய்யும் இயல்புண்மை கருதி. நிழல் கொஞ்சம் எட்ட நிற்கும் சுற்றத்திற்கும், நீர், ஒரு குடியுட் பிறந்து ஞாதியராய் நெருங்கி நிற்கும் சுற்றத்திற்கும் உரிமையாக ஓர்ந்துகொள்க.

இனியவாய நிழலும் நீரும் நோய் செய்வனவாயின் இன்னாதனவாம்; அதுபோல் உரிமையான உறவினரியல்புகளும் இடர் செய்வனவாயின் இன்னாதனவாக எண்ணி உடனே அவரை ஒழித்துவிடவேண்டும் என்பதாம்.

நிழல் நீர்கள் பெரும்பாலும் என்றும் இனியனவேயாயினும் ஓரோவழி அவை இன்னாதனவாய் இடரும் விளைக்கும். சூரங் கண்டபோது புளியமர நிழலினும், கபம் கொண்டபோது புங்க நிழலினும் ஒருவன் அமர்வானாகில் துயர்மிகச் செய்யும் ஆதலான் அவை ஆகா என்பர். சில சுனைநீர், பருகினோர்க்குப் பெருவயிறு முதலிய பிணிகளைக் கொடுத்துவிடும் ஆதலால் ஆராயாது அதனைப் பருகலாகாதென்றவாறு. நிழல் புறத்தே கவிந்து நோய் செய்யும்; நீர் உள்ளே புகுந்து துயர்ப்படுத்தும் என்க.

நச்சுப்பொய்கை நீரை நல்லதென்று நம்பிப் பருகி வீமன் முதலிய நால்வரும் முன்பு துன்பமடைந்து துடித்து மாய்ந்தது போல் உள்ளே வஞ்சந்தோய்ந்து நிற்கும் சுற்றத்தாரை இனியர் என்று நம்பி அரசன் இசைந்து நின்றால் பின்பு அவன் தப்பாமல் அலமரலெய்தி அழிந்துபோவன் என்றவாறு

"இரவில் நிழல்தனிலமர்ந்தே யிருந்தக்கால் பெருந்துயராம் இன்னாதாகி, விரவுகொடு நோய்காட்டும் காலநிலை கருதாமல் மேவல் தீதாம்" என்றபடி இயற்கையில் இனிய பொருள்களும் காலபேதத்தாலும் இடவகைபாலும் சிலசமயம் நிலைமாறி நிற்குமாதலால் அவற்றின் இயல்புகளை இனிதறிந்து ஒழுகவேண்டும் என்க.

புறக்கோலங்கண்டு எவரையும இனியரென்று நம்பலாகாது; அவரவர் செயல் நிலைகளைகொண்டே தெளியவேண்டும்; செயல் இனியதாயின் உரியராயுணர்க; இன்னாதாயின் ஒன்னாராய்த் துணிந்துகொள்க என்பார "இன்னாசெயின் தமர் நீரும் இன்னாவாம்" என்றார்.

சுற்றத்தாரேயாயினும் குற்றமிகுந்து உள்ளே செற்றங்கொண்டிருப்பாராயின் பகைவரினும் மிகத் தீயாரகவேகருதி அவரைத் தீர்த்துவிடவேண்டும் என்க.

இம்மைப் பழியும், மறுமைக்குப் பாவமும்,
தம்மைப் பரியார் தமராய் அடைந்தாரின்
செம்மைப் பகைகொண்டு சேராதார் தீயரோ
மைம்மைப்பின் நன்று குருடு. என்றது (பழமொழி).

பரியார் = நீக்கார். பழிபாவங்களுக்கேதுவாய இழிகுணங்களையுடையராய் உள்ளே காவு கொண்டிருக்கும் தமரினும் நேரே பகைமைகொண்டு நிற்கும் பகைவர் நல்லர் என்று இஃதுணர்த்தி நிற்றல் காண்க. மைம்மைப்பு என்றது இருண்ட கண்களை: அஃதாவது ஒளிகெட்டுத் தடுமாறச்செய்யும் விழிகள் என்க. இவை மேட்டைப் பள்ளமாகவும் பள்ளத்தை மேடாகவும் காட்டி வீழ்த்தி யிடர்ப்படுத்துமாதலால் குருட்டுக் கண்ணைவிட இந்த இருட்டுக்கண் மிகக்கொடிதாம்என எடுத்துக்காட்டிப் புறப்பகைவரினும் உட்பகைவரின் கொடுமையைத் தெளிவுற விளக்கி இது நேர்ந்து நிற்கும் அழகைக் கூர்ந்து காண்க

அகநேர்மை குன்றி, பகைமையுட்கொண்டு சிலர் இருப்பாராதலால் அவரைத் தமர் என்று நம்பித் தழுவலாகாது; தழுவின் உயிர்க்கழிவாம் என்பது கருத்து.

உறவினராயிருந்தாலும் உள்ளே பகைமைகொண்டு ஒருவன் இடர் செய்வானானால் அவனைக் கொடிய பகைவனாகக்கருதி அரசன் கடியவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வித்தியுச்சுவன்பால உணரப்படும்.

## கதை.

வித்தியுச்சுவன் என்பான் காலகேயர் என்னும் அசுரர் மரபில் தோன்றியவன். தோயமாபுரி என்னும் அழகிய நகரிலிருந்து அரசு புரிந்தவன். மிக்க மெய்வலியுடையவன். சூழ்ச்சித் திறத்தில் சிறந்தவன். மல்லமரிலும் வில்லமரிலும் இவன் வல்லவன். கரிய பெரிய வுருவினன்; ஆயினும் நல்ல அழகன். இவனுடைய சிறிய தந்தையாகிய வனமாலன் என்பவனுடன் சேர்ந்து ஒருமுறை இலங்கையையடைந்திருந்தபோது இவனைச் சூர்ப்பணகை கண்டாள். தனக்குரிய நாயகன் இவனே என்று பெரிய காதல் கொண்டாள். பருவமெய்திக் காமச் செவ்வி கனிந்து தனியமர்ந்திருந்த அவள், இவனை மணமகனாக உரிமைசெய்து நிற்றலை இராவணனறிந்து அவ்வாறே மணமுடித்துத் தந்தான். இவன் நெடுநாள் அங்குத் தங்கி அவளோடு இணைபிரியாதிருந்து இன்ப நலங்களை நுகர்ந்து அன்புசெய்துவந்தான். இவனது உறவுரிமைகளை

யறிந்து இராவணன் மிக மகிழ்ந்து அளவில்லாத பொருள்களை வளமுறத் தந்து இவனை ஆதரித்து நின்றான். பின்பு இவன் மனைவியை யழைத்துக்கொண்டு தன் நகரினை யடைந்து அல்லெனப் பகலென அறிவுறாவகை அவளைப் புல்லி நுகர்ந்து போக நிலையில் பொங்கியிருந்தான். இடை யிடையே வந்து இராவணனைக் கண்டு உறவுரிமை செய்து நின்றான். அங்ஙனம் நின்று வருங்கால் தன் மாபினராகிய அசுரர்கட்கு உதவியாயமைந்து அவனுக்கு இடர்பல நினைந்தான். உள்ளிருந்துகொண்டே இவன் கள்ளஞ்செய்து வருதலை உய்த்துணர்ந்து மேல் அங்கு வாரா வகை அவன் உறுதிசெய்திருந்தான். இவனும் உறவினன் போலவே தோன்றிக் காவுகொண்டு வந்தான். ஒருமுறை அவன் அசுரரோடு மூண்டு போர் புரியுங்கால் இனியவன் போல் உடன் நின்று இவன் இன்னாதன புரிந்தான். இவன் நின்று புரிதலை அவன் நுணுகி நோக்கி முடிவில் இவனைக் கொன்று முடித்தான். அநுபவித்தற்குரிய நிழலும் நீரும் இனியவாக இலவாயின் அவற்றை அணுகாது அகலவிடுதல்போல் தழுவுதற்குரிய உறவினராயினும் உட்பகை கொண்டு இடர்விளைப்பாராயின அவரை ஒழித்துவிடவேண்டும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது. இவன் இறந்துபட்டபோது சூர்ப்பணகை வந்து அழுத வுண்மையை இதனடியில்வரும் பாடலால் இனிது காணலாம்.

காதலால் நீ யென்னைக் கைப்பிடித்த அன்றுமுதல்
பேதையென சொல்லியசொல பிழைத்தறியாப் போவுனே!
நாதனே! என்னைநீ நடுக்கங் காணாது ஊரில்
போதநீ எழுந்திராய் பொய்யுறக்கம் உறங்காதே. (க)

கைம்முறுக்கி வாய்மடித்து நீகிடந்த கருத்தறியேன்
மைம்முகத்துக் கருமனத்து வாளரக்கர் கோமானை
மெய்ம் முறிக்கப் பெற்றிலேன என நினைந்தோ? பேராளா
மொய்ம்முறிக்கும் ஆற்றலாய் காரணமென்! மொழியாயோ. (உ)

முன்னேதான் என்னை முறைமையாலே கொடுத்தப
பின்னெனைநூல் இழப்பித்த இராவணனும் என தமையன்
தன்னை மூவுலகாள யான்கண்டு தாயுணா
மன்னனே யுடல் சுமந்து வாழ்வேனோ! வாழ்வேனோ! (ங)

இவற்றால் சூர்ப்பணகைமீது இவன் வைத்திருந்தகாதலும், வாழ்ந்துவந்த பான்மையும் இனிது விளங்கும். இங்ஙனம் கலங்கி மழுத அவள் இலங்கை புகுந்து இராவணனடியில் விழுந்து புலம்பி புருண்டாள். அடியில் வருதல் காண்க.

சொல்லெடுத்துப் பழிதூற்றித் துன்பங்கொண் டென்வீடு
கலலெடுத்து கல்லுற்றார் கரைந்தேங்கக் கடைக்கால் நீ
வில்லெடுக்கை உன்னுடைய வீரத்துக் கழிவன்றே
அல்லெடுக்குந் தன்மையத்த அண்ணாவோ! அண்ணாவோ! (ச)

காசுக்கும் பொன்னுக்கும் ஆழிக்கும் கடுஞ் சொல்லின்
வாசிக்கும் காலுன்னு மணவாளப் பிள்ளைகளைப்
பூசிக்கை, பொருகளத்துக் கொன்று புரட்டிடுகையோ
ஆசைக்கும் புறஞ் செலுத்தும் அண்ணாவோ! அண்ணாவோ! (ரு)

மிகையெல்லாம் செய்தாரே யாயிடினும் விளையாட்டாம்
வகையல்லால் ஒருகாலு மைத்துனமார் தம்மோடு
பகையில்லை யென்னுமந்தப் பழமொழியுங் கேட்டிலையோ
அகையில்லான் வரையெடுத்த அண்ணாவோ! அண்ணாவோ! (சா)
(உத்தரகாண்டம்.)

பகைமையுட்கொண்டு உடனிருந்து இவன் மிகைசெய்து வந்ததும், அதனால் தமர் நீர்மையையும் பாராமல் இராவணன் இவனைத் தலை துணித்துவிட்டதும், பிறவும் இவற்றான் விளங்குவன காண்க.

உற்ற உறுப்பும் உறுநோய் உறுத்துமேல்
அற்றுவிடல் நன்றாம் அது.

உட்பகையாளரை ஓர்ந்து நீக்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

882 அன்றொருவன் பொய்த்தொடர்பை அஞ்சியேன் கோவிந்தன்
கொன்றொழித்தான் முன்னே குமரேசா—கன்றிநின்ற
வாள்போல் பகைவரை யஞ்சற்க அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு. (உ)

இ—ள்.

குமரேசா! புறப்பகைவரெவர்க்கும் அஞ்சாது நின்ற கோவிந்தன், உட்கரவு கொண்டிருந்த கட்டியங்காரனை ஏன் அஞ்சியழித்தான்? எனின், வாள்போல் பகைவரை அஞ்சற்க; கேள்போல் பகைவர் தொடர்பு அஞ்சுக என்க.

இது, உட்பகையின் கொடுமை கூறுகின்றது.

வாள்போல் பகை என்றது புறப்பகையை. வாளை எடுத்துக் காட்டியது நேரே தோன்றி நின்று வெட்டியெறிவேன் என வெளிப்படையாக விளங்குதல் கருதி.

கேள்போல் பகை என்றது உட்பகையை. புறத்தே கேளிர் போலக்கெழுமி நின்று அகத்தே பகையுற்று அமய நோக்கி அமைந்துள்ளவராதலால் இவர் இங்ஙனம் உரைக்க நின்றார். கேள் = சுற்றம். தொடர்பு = நட்பு. பார்வையில் கேண்மையும், மான்மையில்பகைமையும் கொண்டு நிற்கும் மட்டிமக்கள் தொடர்புபட்டழிதற்கு ஏதுவாகுமாதலால் அதனை அஞ்சி அகற்றவேண்டும் என்றவாறு.

வெளிக்கு உறவினர் போன்றிருப்பினும் உள்ளே பகைவராய் நின்று கெடுப்பாரும் இவ்வுலகிலுளராதலால் அவர் செயல் கண்டு விலகவேண்டும் என்று மேலுணர்த்தினார்; இதில் புறப்பகைவரினும் அவர் மிகக்கொடியர் என்கின்றார்.

வாள்போலப் புறத்தே வெளிப்பட்டு நிற்கும் பகைவர் மிகையை அஞ்சற்க; கேள்போல உள்ளே கரந்திருக்கும் பகைவர் தொடர்பினை அஞ்சி ஒழிக்க என்பதாம்.

புறப்பகைவரை அஞ்சுதல் பெரும்பாலும் இயற்கையாதலால் அவரினும் அஞ்சுதற்குரியார் உட்பகைவரே என உறுதி பெற உணர்த்தும்பொருட்டு அவரை அஞ்சற்க என்றார்.

கேள் என்று நம்பிப் பராமுகமாய்க் கவனியாதிருந்துவிட்டால் உள்ளிருந்துகொண்டே உயிரழிவு செய்துவிடுவாராதலால் அவர் தொடர்பினை அஞ்சுக என அறிவுறுத்தியருளினர்.

வாளைக்கைக்கொண்டு வெளிப்படையாய்ச் சினந்து நிற்கும் புறப்பகைவரினும் கோளை வாய்க்கொண்டு உட்கரந்து உறவுற்று உடனிருப்போர் குளிர்ந்த நஞ்சுபோல மிகக் கொடியவராதலால் அவரைவிட இவரை அஞ்சவேண்டும் என்றார். இத்தகைய உட்பகைவரை ஓர்ந்து ஒழித்துத் தன்னை அரசன் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்றவாறு.

புறப்பகை கோடியின் மிக்குறினும், அஞ்சார்;
அகப்பகை ஒன்றஞ்சிக் காப்ப;—அனைத்துலகும்
சொல்லொன்றின் யாப்பார், பரிந்தோம்பிக் காப்பவே
பல்லாரும் காமப் பகை. (நீதிநெறி விளக்கம்).

உலகமுழுவதையும் ஒரு சொல்லால் வெல்லவல்ல முனிவரும் அகப்பகையாகிய காமத்தை அஞ்சிக் காப்பர் என எடுத்துக்காட்டி உட்பகையை ஓர்ந்தொழிக்குமாறு இது உணர்த்தி நிற்கும் அழகைப் பார்க்க.

வெள்ளம் பகையெனினும் வேறிடத்தார் செய்வதென்?
கள்ள முடைத்தாகிச் சார்ந்தகழிகட்புப்
புள்ளொலிப் பொய்கைப் புனலூர! அஃதன்றோ
உள்ளிலுத் துண்ட தனிசு. (பழமொழி)

புறப்பகைவர் வெள்ளம்போல மிகப் பலராயினும் உறவினர் போன்று உடன் கரந்து நிற்கும் வஞ்சக்கொடியர்போல் அத்துணை வெந்துயரை விளைக்கமுடியாதென இது விளக்கி நிற்றல் காண்க. தனிசு = கடன். உள்வீட்டுக் கடன்போல் உட்பகை உறுதுயர் விளைக்கும் என விளக்கி அதன் நச்சுத்தன்மையை இஃது உணர்த்தி நிற்கும் அழகை யூன்றி நோக்குக.

அகத்தில் வஞ்சங்கொண்டு புறத்தில் உறவினன்போல் புகுந்திருந்த விச்சுவ வுருவினை இந்திரன் கொன்று நீக்கியதுபோல் உட்பகைவரை அஞ்சித் தம்மை அரசர் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்றவாறு.

உட்பகை கொண்டிருப்பாரது உறவினை ஒழித்துவிடவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கோவிந்தன்பால் உணரப்படும்.

## கதை.

கோவிந்தன் என்பவன் விதையதேயத்து வேந்தன். கமலவதி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். வினையாண்மைகளில் மிக்க சதுரன். உள்ளியதை உறுதிபெற முடிக்கும் ஒள்ளியன். அறங்கள் பல செய்தவன். சீவகன்தாயாகிய விசயையோடு உடன் பிறந்தவன். இவனுடைய மனைவிபெயர் பிருதிவிசுந்தரி. அப் பேரழகியோடமர்ந்து இனிய போகங்களைநுகர்ந்து தத்தன் என் னும் ஒரு மகனையும், இலக்கணை என ஓர் அழகியமகளையும் பெற்று உயிர்களின்புற இவன் அரசுபுரிந்துவந்தான். வருங்கால் கட்டியங் காரன் என்பவன் மிக்க நண்பன்போல் இவன்பால் அன்புசெய்து வந்தான். வஞ்சநெஞ்சனாகிய அவனது உறவினையஞ்சி உள்ளம் பொருந்தாமல் உரையளவில் நகையாடி இவன் எதிரநின்றான். இவனுடைய மைத்துனனாகிய சச்சந்தனை அவன் கொன்றொழிக்க வில்லையென்று எத்தனையோவிதமாக இசைத்து நெருங்கியும் இவன் இணங்காதிருந்தான். ஆயினும் அவனது கொடுமையை அஞ்சி வெளிப்படையாக வெறுத்தெழாமல் அமயநோக்கி நின்று தன் மருமகனாகிய சீவகன் பருவமெய்தித் தன்பாலடைந்தபோது அப்பகைவனை இவன் அழிக்க முயன்றான். அவனும் காவாகநின்று உறவுமுறைகூறி ஓர் ஓலை விடுத்தான். அதனைப்பிரித்து விரிசிகன் என்பவன் வாசித்தான். அதனுட்பொருளை உய்த்தறிந்து கேள் போல்நிற்கின்ற அப் பாழும் பகைவனைக் கொல்லுதற்கு இதுவே நல்லவழி யென்று சூழ்ந்தெழுந்து இராசமாநகரினையணுகி ஓர் உபாயஞ்செய்து அவனை வெளிவரச்செய்து சீவகனையேவி அவன் ஆவியை முடித்தான். அதன்பின் தன் அருமை மருமகனுக்கு முடிபுனைவித்தான். புறப்பகைவர் எத்துணையர் வரினும் அஞ்சாத நெஞ்சனாய இவன், உறவினன்போல் உட்பகையாய் நின்ற அவனை அஞ்சி நின்று அறவே தொலைத்து உறுதிபெறத் தன் அரசினைக் காத்த ஒண்மையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். வாள்போல் பகைவரை அஞ்சற்க; கேள்போல் பகைவர் தொடர்பினை அஞ்சுக; என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

கட்டியங்காரன் நம்மைக் காண்பதே கருமமாக
ஓட்டித்தான் விடுத்தஓலை புளபொருள் உரைமின் என்னத்
தொட்டுமேற் பொறியைநீக்கி மன்னனைத் தொழுது தோன்ற
விட்டலர் நாகப்பைந்தார் விரிசிகன் கூறுமன்றே. (க)

விதையத்தார் வேந்தன்காணக் கட்டியங்காரன் ஓலை
புதையஇப் பொழிலைப் போர்த்தோர் பொய்ப்பழி பரந்ததென்மேல்
கதையெனக் கருதல்செய்யான் மெய்யெனத் தானுங்கொண்டான்
சிதையவென் நெஞ்சம்போழ்ந்து தெளிப்பினும் தெளிகர்யாரே. (உ)

தனக்குயான் உயிரும்ஈவேன்; தான்வரப் பழியும்நீங்கும்
எனக்கினி இறைவன்றானே இருநிலக் கிழமைவேண்டி
நினைத்துத்தா னெடுத்தல்செல்லா தென்சொலே தெளிந்துநொய்தாச்
சினக்களி யானைமன்னன் வருகெனச் செப்பினனே. (ங)

ஓலையுட் பொருளைக்கேட்டே ஒள்ளெயி றிலகநக்குக்
காலனை அளியன்தானே கையினல் விளிக்கும் என்று
நூல்வலீர் இவனைக்கொல்லும் நுண்மதிச் சூழ்ச்சியீதே
போல்வதொன் றில்லையென்றான் புனைமணிப் பொன்செய்பூணான் (ச)

கள்ளத்தால் நம்மைக்கொல்லக் கருதினன் நாமுந்தன்னைக்
கள்ளத்தால் உயிரையுண்ணக் கருதினேம் இதனையாரும்
உள்ளத்தால் உமிழவேண்டா உறுபடை வந்துகூட
வள்ளுவார் முரசமூதூர் அறைகென அருளினனே. (ரு)

(சீவக சிந்தாமணி)

உள்ளே பகைமைகொண்டிருந்தும் உறவினன்போல் நின்று தன்பால் வரும்படி கட்டியங்காரன் கோவிந்தனுக்கு ஓலை விடுத்ததும், அதனை இவன் வாசித்தறிந்து அவனது நெஞ்சின் தீமையை நினைந்து நகைத்து வஞ்சவகையாக வந்து அவனை அஞ்சிக்கொன்றதும், கேள்போல் பகைவர் தொடர்பு மிக அஞ்சத்தக்கதாம் என அறிந்து நின்றதும், பிறவும் இவற்றால் இனிதறியலாகும்.

உள்ளே பகைகொண் டுறவினன்போல் வந்துநின்ற
கள்ளமுறு விச்சுவனைக் கண்டவுடன்—பொள்ளெனவே
வெட்டி அமரர்கோன் வீட்டினன் உட்பகையை
ஒட்டியுறல் தீதாம் ஒழி.

வெள்ளிடத்தே யானை வெருவார் வெருவுவார்
உள்ளிடத்தே பாம்போன் றுறின்.

உள்வஞ்சருறவு கொல் நஞ்சமாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

883 கண்டஞ்சி உட்பகையைக் காளனேன் தற்காத்துக்
கொண்டகன்றான் பண்டு குமரேசா—அண்டிநின்ற
உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும். (ங)

இ—ள்.

குமரேசா! உட்பகைவனாய் நின்ற புரோசனனை அஞ்சிக் காளன் ஏன் தன்னைப்பாது காத்துச் சென்றான்? எனின், உட்பகை அஞ்சித் தற்காக்க உலைவிடத்து மட்பகையின் மாணத் தெறும் என்க.

இது, உட்பகைவரை அஞ்சிக் காக்கவேண்டும் என்கின்றது.

தற்காக்க—தன்னைக்காத்துக்கொள்க. இரண்டாம் வேற்றுமையுருபு உயர்திணையிடத்துத் தொக்குநின்றது.

உலைவு—தளர்வு, மெலிவு, வறுமை. "உயங்குபடர் வருத்தமும் உலைவு நோக்கி" என்புழி இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

மட்பகை என்றது ஒருவகைக் கருவியை; அஃதாவது குயவர்கள் மண்ணைச் சேறாகக்குழைத்துச் சக்கரத்தின் மீதுவைத்து, குடம் சட்டி பானை முதலியன வனையும்போது அக்கலங்கள் உருக்கொண்டவுடன் கீழறுத்தெடுத்தற்கு உரிமையாகத் தகட்டுவடிவில்லமைக்கப்பட்டிருப்பது. மண்ணைப் பகுத்துவிட வல்லதாதலால் அது மட்பகை எனநின்றது.

மாண—நன்றாக, முடிவாக. தெறும்—அழிக்கும், கெடுக்கும். மாணத்தெறும் என்றது அடியோடு அழகாக அறுத்துவிடும் என்றவாறு. மாட்சியாவது தெறும்வகை தெரியாதபடி உறவுபோல் நின்று எளிதாகப்பிளவு செய்தல்.

மேல், உட்பகைக்கு அஞ்சவேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் அஞ்சித் தன்னைப் பாதுகாத்து ஒருவன் ஒழுகவில்லையானால் அதனால்அழிவு நேரும் என்கின்றார்.

உட்பகைவரை அஞ்சித் தன்னை நன்ருகப் பாதுகாத்துக் கொண்டு ஒருவன் ஒழுகவேண்டும்; இல்லையேல், தனக்கு ஏதேனும் தளர்ச்சிவந்த விடத்து மட்கலத்தை யறுக்கும் கருவிபோல் தப்பாமல் தன்னை அவர் அழித்து விடுவர் என்பதாம்.

தாயோடு பிள்ளை தலைக்கூட வொட்டாமல் உட்பகைவர் செய்துவிடுவர் என்பது இதில் பெய்து வைத்திருக்கும் உவமையால் இனிதுணரலாகும். புறப்பகைவரினும் உட்பகைவர் மிகக்கொடியவர்; அவரைக் காட்டிலும் அஞ்சி இவர்க்கு இடங்கொடாதபடி தன்னைப் பாதுகாத்துக்கொண்டு ஒழுக வேண்டும்; அங்ஙனம் ஒழுகாவழி இவர் தப்பாது கெடுத்தே விடுவர் என்று அடிகள் உணர்த்த அவ்வாறு கெடுக்க வருங்கால் அறிந்து தடுத்துவிட முடியாதா? என ஒருவன் எதிர்ந்துகேட்ப அவனைநோக்கி அது முடியாதென ஓர் உவமங்காட்டி இஃதுணர்த்திய தென்க.

தெறும்வகை தெரியாமல் கலந்து இருந்துகொண்டே உட்பகைவர் கழுத்தையறுத்துவிடுவர் என்பதை உவமையால் உய்த்துணரவைத்துத் தற்காத்து ஒழுகும்படி உறுதிபெற அடிகள் இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

உடனிருந்து தனக்கு இதஞ்செய்வதாகத் தடவி நின்று மட்பகை பிளவு படுத்துவதுபோல் உட்பகைவர் அழிவுபடுத்துவர்; ஆதலால் அவரை அணுகவொட்டாதபடி அகலவைத்துத் தன்னை அரசன் பாதுகாத்துக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

உள்ளே பகைமைகொண்டு வஞ்சமாக உடனுறைந்திருப்பாரை அஞ்சிக்காக்கவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காளன்பால் உணரப்படும்.

## கதை

காளன் என்பவன் அத்தினபுரியிலிருந்த ஓர் தச்சர் தலைவன். நல்ல தொழிலாளி. உண்மையும் துணிவும் உறுதியுமுடையவன். யாவரும் வியந்து நோக்குமாறு சிறந்த மாளிகைகளை விரைந்து செய்வதில் இவன் மிகவும் வல்லவன். சிற்பத்தொழில்களில் வல்லவரெல்லாரும் வணங்கிப்போற்ற நிரம்பிய புகழோடு இவன் விளங்கியிருந்தான். இவனுடைய முன்னோர் பலரும் சந்திரகுல வேந்தர்க்குச் சார்ந்த வினையாளராய் நின்று அவர் வேண்டியபடியெல்லாம்

விழைந்து வினைசெய்து வந்தார். அம்முறையே இவனும் பாண்டு மன்னனுக்கு உரிமை பூண்டிருந்தான். அவன் இறந்துபோன பின்பு விதுரன் இவனை ஆதரித்துவந்தான். அறிவிலும் ஆற்றலி லும் மந்திரிகளும் தந்திரிகளும் வியக்கத்தக்க மேன்மையோடு இவன் விளங்கிநின்றான். இங்ஙனம் நின்றுவருங்கால் பாண்டவர் களை வாரணாவதத்தில் வைத்துச் சதிசெய்யத் துணிந்து புரோசனன் என்னும் கொடிய அமைச்சனைத் திருதராட்டிரனுதியர் ஏவ அவன் உடன்புகுந்து அங்கு அழகிய மாடங்கள் பல சமைத்து அதற்கு வேண்டிய விதமாக அரக்கினால் ஓர் விசித்திர மாளிகையும் அமைத் தான். அவ் அமைவினை விதுரன் முன்னதாகவே உய்த்துணர்ந்து இவ்வித்தகனை அங்கு அனுப்பியிருந்தானுதலால் உடனமர்ந்து அக் கொடியவன் குறிப்பினை முடிய அறிந்து காவாக ஓர் சுருங்கைவழி அமைத்து யாரும் தெரியலாகாதபடி அதன்மேல் பெரிய ஒருதூணை நிறுத்தி உறவினன்போல் நிற்கும் அவ்வுட்பகைவனை அஞ்சி ஐவரையும் பேணித் தன்னையும் காத்து இவன் சார்ந்து நின்றான். ஒருநாள் வீமனைத் தனியாக அழைத்துத் தன் தன்மையையும் தான் செய்துவைத்துள்ள உண்மையையும் உரைத்து அவ்வஞ்சனை அஞ்சி விரைந்து நீங்கள் உய்ந்து போகவேண்டும் என்று உறுதி பெறவுணர்த்தி இவன் ஓர்ந்து சென்றான். இவன் உணர்த்திய படியே அவ்வுட்பகைவனை அஞ்சிநின்று அமயமறிந்து அவ்அரக்கு மாளிகையில் நெருப்பைவைத்து விட்டுத்தன் துணைவரையும் தாயை யும் அணைத்து எடுத்துக்கொண்டு ஆண்மையோடு வீமன் அகன்று போயினான். நெஞ்சில் வஞ்சங்கொண்டிருக்கும் உட்பகைவரை அஞ்சிக்காக்க வேண்டும் என்று இவன்காட்டி ஒழுகிய உண்மையை அனைவரும் கண்டு மகிழ்ந்தார். தற்காத்து நின்று உட்பகையை அஞ்சி உறுதிதோன்ற இவன் உரைத்த உண்மையை அடியில் வரு வனவற்றால் இனிது காணலாம்.

மன்னர் ஐவரும் வாரணா வதந்தனில் மருவித்
துன்னலார் தொழத் தொன்னிலம் புரந்திடுநாளில்
பின்னநெஞ்சுடைப் புரோசனன் பேதுறு மதியான்
முன்னமேயினி தமைத்திடு மனைச்செயல் முன்னு. (க)

ஐயமுற்றிவ ரிருப்புழி மயனினும் அதிகன்
சையமொத்த தோள் வலனுடைத் தபதியன் ஒருவன்
வையமுற்றுடை வீமனை யொருதனி வணங்கி
ஐயபட்டதை அறிந்தருளாமுறை யென்றான். (உ)

நுந்தை எவலிற் கம்மியர் தூதன மாக
இந்தமாநகர்த் திருமனை இயற்றிடு நாளில்
வந்தமந்திரி வஞ்சனை அறிந்து அறன்வடிவாம்
தந்தை, என்னையும் எவினன் தன்மையினுணர்ந்தே. (ங)

அடியனேனுமற் றவருடன் அரக்குமாளிகையிப்
படியினுலியற்றிய தொழிற் பயனெலாங்குறித்து
நெடியகானகத் தளவுநீள் நிலவறை நெறிபோய்
முடியுமாறொரு மண்டபங் கோட்டினேன் முறைபோல். (ச)

வேறொருத்தரும் அறிவுறா விரகினுல் ஒருதூண்
மாறுபட்டு நீ பறிக்கலாம் வகைவழி வகுத்தேன்
தேறுதற்கிது தகுமெனத் திருவுளத் தடக்கி
ஊறுபட்டபோ தெழுந்தருள் கெனப்பணிந் துரைத்தான். (ரு)

தச்சரிற்பெருந் தலைவனுக் குரிமையிற் றனங்கள்
பிச்சரிற்கொடுத் தவன்விடை கொண்டதன் பின்னர்
அச்சமற்றிவன் அம்மனைக் கம்மனை வழங்கும்
நிச்சமின்றுகொல்! என்றுகொல்! எனநினைந் திருந்தான். (பாரதம்) (சு)

அம் மனை—அந்த அரக்குமாளிகை. அம்மனை—நெருப்பு.

காளன் என்னும் இச்சிற்பியர் தலைவன் உட்பகையஞ்சித் புறங்காத்து நின்று ஐவரையும் உய்யவைத்த உண்மை இதன்கண் ஒளிர்தல் காண்க.

வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற
முகத்தவன் மக்களுள் முதியவன் புணர்ப்பினுல்
ஐவரென் றுலகேத்தும் அரசர்கள் அகத்தராக்
கைபுனை அரக்கில்லைக் கதழெரி சூழ்ந்தாங்குக்
களிதிகழ் கடாஅத்த கடுங்களிறு அகத்தவா
முனிகழை உயர்மலை முற்றிய முழங்கழல்
ஒள்ளுரு அரக்கில்லை வளிமகனுடைத்துத் தன்
உள்ளத்துக் கிளைகளோடு உயப்போகு வான்போல
எழுவுறழ் தடக்கையின் இனங்காக்கும் எழில்வேழம்.
(கலித்தொகை.)

வயக்குறு மண்டிலம்—விளங்குகின்ற ஒளிவட்டம். அஃதாவது கண்ணாடி. அதற்கு வடமொழியில் முகுரம் என்று பெயர். முகுரானனன் என்று திருதராட்டிரனுக்கு ஓர் பெயருண்மையால் முகத்தவன் என இங்ஙனம் குறிக்க நின்றான். ஆனனம்—முகம். பிறரெல்லாம் தன்னைக் கண்டு காரியம் கொள்ளத் தான்மாத்திரம் ஒன்றுங்காணுமல் கண்ணாடி நிற்றல்போல் இக்கண்ணில்லான் இருந்தமைகருதி இப்பெயர் அமைந்ததென்க. குருடன் என்பது தோன்றப் பெருங்கங்கோ என்னும் புலவர்திலகர் மிகநயமாக இவனைக்குறித்துவைத்திருக்கும் அழகை இதில் கூர்ந்து காண்க.

குன்றுறை குறவன்போகக் கூரெரி வளைக்கப்பட்ட
பஞ்சவர் போலநின்ற பகட்டினைப் பரிவுதீர்த்தான்.
(சிந்தாமணி.)

மும்மதக் களிவேழம் மூடிய இருளத்துச்
செம்மணிக் குகையுள்ளாற் சேவகம் கொண்டொழிந்து
சும்மைகொண் டொளிர்கிரணச் சோதியைத் தழலென்று
இம்மென வீமனைப்போல் இனத்தொடும் இரிவனவால்.
(பேரூர்ப்புராணம்.)

உட்பகை அஞ்சிநின்ற காளன் சொல்லால் உள்ளந்தெளிந்து வீமன் தற்காத்துச்சென்ற உண்மை இன்னவாறு பல நூல்களிலும் குறிக்கப்பட்டுள்ளது. சேவகம்—யானை தங்கும் இடம்.

நஞ்சேன்ன உட்பகையை நாடியகல் நண்ணினே
துஞ்சினுய் உண்மை துணி.

உட்பகைவரை யணுகவிடா தொழுகவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

884 ஏதமிக வெய்தியேன் ஏனுதி யார்நொந்தார்
கோதார் பகையால் குமரேசா—யாதும்
மனமாணு வுட்பகை தோன்றின் இனமாணு
ஏதம பலவுந் தரும். (௪)

இ—ள்.

குமரேசா! உடனிருந்த கொடிய பகைவனால் ஏனாதியார் ஏன் பலதுயரங்களை அடைந்தார் எனின், மனம் மாணா உட்பகை தோன்றின் இனம்மாணா ஏதம் பலவும் தரும் என்க.

இது, உட்பகை ஒன்றினால் பலகோடி துன்பங்கள் உளவாம் என்கின்றது.

கோதார் பகைஎன்றது அவன் நெஞ்சமிகத்தீதாய் நின்றமை கருதி. கோது—குற்றம். ஆர்—நிறைந்த.

மனம் மாணா—மனம் மாட்சிமைப்படாத; அஃதாவது நெஞ்சம் கொடிதான என்க. மாணுதல்—நலமுறத் திருந்துதல். மாண்பமைந்த நல்ல மனமுடையவன் ஒரோவழி உட்பகையாய்த் தோன்றினும் இனத்தைக்குலைத்து அத்துணை ஏதங்களை விளைக்க மாட்டான்; ஏனெனில் செம்மையான அம்மனம் புன்மையான இத்தொழில்களைச்செய்தற்கு இசையாது ஆதலால் இனத்தைப் பிரித்து ஏதம்பல தருதற்கு மனமாணாமை முதல் உரிமையாக முன்னுற ஈண்டு மூண்டுநின்றது.

மேல், உட்பகைவரை அஞ்சிக் காவாவழி உயிரழிவு செய்வர் என்றார்; இதில், அவர் இனத்தைக்கலைத்து இடர்பல விளைப்பர் என்கின்றார்.

மனந்திருந்தாத உட்பகை ஒருவனுக்கு உண்டாயின் அவன் இனம்பொருந்தாத படியான துயரங்கள் பலவற்றையும் அது கொடுக்கும் என்பதாம்.

நெஞ்சுதீதான கொடியவர் அரசனுக்கு உட்பகைவராய் நிற்பராயின் அவனுடைய இனத்தைப்பேதித்து இல்லாதன பல படைத்துக்கூறி அவன்மீது சினத்தை மூட்டிவிடுவர்; விடவே அவர் வெளிப்படையாகச் சீறிநிற்பர்; அவர் நிலையைக் கண்டு அரசன் உளவறியாமல் உள்ளந்திரிவன்; இங்ஙனம் திரிந்தபின்பு அவர் பொருந்தலாகாதபடி மேலும் மேலும் இகலைமிகுத்து இனநலத்தைக் குன்றச்செய்து இடர்பல விளைப்பர் ஆதலால் "மனம் மாணா உட்பகைதோன்றின் இனம்மாணா ஏதம்பலவும் தரும்" என்றார்.

பொறுத்தற்கரிய துன்பங்கள்பலவற்றையும் உட்பகையுடைய ஒருத்தன் விளைத்து விடுவனாதலால் அவ்வினைக்கேடனை நினைத்

தறிந்து அடியோடு வெறுத்தொழிக்கவேண்டும் என்பது கருத்து.

வஞ்ச நெஞ்சினரான கொடியவர் உட்பகைவராயின் அவரால் இறந்துபடும் படியான பெருங்கேடுகளெல்லாம் ஒருவனுக்கு ஒருங்கேஉளவாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை ஏனாதியார்பால் உணரப்படும்.

**கதை.**

ஏனாதியார் என்பவர் சோழநாட்டிலே எயினனூரிலே ஈழக் குலச் சான்றார் குலத்திலே பிறந்தவர். படைக்கலப் பயிற்சியில் சிறந்தவர். அக்காலத்திருந்த குறுநில மன்னர் பலரும் இவர்பால் பெருநண்பு கொண்டிருந்தார். விரும்பியடைந்தவர்க்கு வாட்படை பயிற்றுவித்து அதனால் வரும் ஊதியங்கொண்டு நீதிநெறியோடு நின்று இவர் இல்லறம புரிந்துவந்தார். ஆண்மையோடு அருளும் அமையப்பெற்ற நல்ல சீர்மையாளர். சிவவேடமுடையாரைக் கண்டால் மிக வணங்கி வாழ்த்தி அவர்க்கு வேண்டுவன யாவும் விரும்பியுதவுவார். திருநீற்றை எப்பொழுதும் மிகுதியாக அணிந்து கொள்ளுந் தகுதியுடையவர். நெற்றிக்கு அழகு நிமலன் நீறே; நீறுபூனவார் வினை நீறுபடுமே; என யாரிடமும் கூறி அதனை அணிந்துவரும்படி பணிந்து வேண்டுவர். இதம்பல புரிந்து இங்ஙனம் இவர் சிறந்து வருங்கால் அதிசூரன் என்னும் கொடியவன் ஒருவன் இவரது மரபில் இருந்தான். இவர் அடைந்துவரும் புகழையும் பொருளையுங்கண்டு பொறாமையடைந்தான். வாட்படை பயிற்ற லாகிய அத் தொழிலைத்தானும் கைக்கொண்டு ஆனவரையுமுயன்று இவர்க்குக் கேடுபல சூழ்ந்தான். சூழ்ந்தும் நாளும் இவர் மேன்மையடைந்துவந்தார். இவர்வரவினை நோக்கி அவன் வயிறெரிந்தான். இனியவன்போல இவரை அடுத்து நின்று இனத்தவர் பலரது மனத்தைக் கலைத்தான். முடிவில் வெளிப்படையாகத் தோன்றி வெல்லமுயன்றான். முடியவில்லை. முடிவில் வஞ்சமாக மறைந்து வந்து இவரைக் கொன்றுநின்றான். கொடியநெஞ்சனை அவனது உட்பகையால் இவர் உறவினரைப் பிரிந்து அல்லல் பல அடைந்து அழிவுற்றதை யறிந்து அனைவரும் வருந்தினார்

மனம் மாணு உட்பகைதோன்றின் இனம் மாணு ஏதம் பலவும் தரும் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலில்
தாழக் கதிர்ச்சாலி தானோங்குந் தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மனனியஅப் பொற்பதியில்
ஈழக் குலச்சான்றார் ஏனாதி நாதனார். (க)

தொன்மைத் திருநீற்றுத் தொண்டின் வழிபாட்டின்
நன்மைக்க ணின்ற நலமென்றுங் குன்றாதார்
மன்னர்க்கு வென்றி வடிவாட் படைபயிற்றுந்
தன்மைத் தொழில் விஞ்சையிற்றலைமை சார்ந்துள்ளார். (உ)

வாளின் படைபயிற்றி வந்த வளமெல்லாம்
நாளும் பெருவிருப்பா னண்ணுங் கடப்பாட்டில்
தாளும், தடமுடியும், காணுதார் தம்மையுந்தொண்
டாளும் பெருமான் அடித்தொண்டர்க்கு ஆக்குவார். (ங)

நள்ளார்க ளும்போற்று நன்மைத் துறையின்கண்
எள்ளாத செய்கை இயல்பி னொழுகுநாள்
தள்ளாத தங்கள் தொழிலுரிமைத் தாயத்தின்
உள்ளான் அதிசூரன் என்பான் உளனானான். (ச)

மற்றவனுங் கொற்ற வடிவாட் படைத்தொழில்கள்
கற்றவர்கள் தன்னிற் கடந்துள்ளார் இல்லையெனும்
பெற்றிமையான்; மாநிலத்து மிக்க பெருமிதம்வந்
துற்றுலகில் தன்னையே சால மதித்துள்ளான். (ரு)

தானுள் விருத்திகெடத் தங்கள்குலத் தாயத்தின்
ஆனாத செய்தொழிலாம் ஆசிரியத் தன்மைவளம்
மேனாளும் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலால்
ஏனாதி நாதர்திறத் தேலா இகல்புரிந்தான். (சா)

(பெரியபுராணம்)

மேற்குறித்த இவரது தன்மையையும், உட்பகையின் புன்மையையும் இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

உள்ளத்துள் இன்பம் ஒழித்துட் பகைதுன்ப
வெள்ளத்துள் வீழ்த்தும் விரைந்து.

கொடிய உட்பகைவர் குடியைக் கெடுத்துவிடுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

885 அன்றுறவோன் உட்பகையால் ஆண்மைப் பழையனுமேன்
குன்றிமிக நொந்தான் குமரேசா—நின்ற
உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறையான்
ஏதம் பலவுந் தரும். (ரு)

இ—ள்.

குமரேசா! திட்பம் மிக்க பழையனும் உட்பகையால் ஏன் ஊறுபட்டான்? எனின், உறன்முறையான் உட்பகை தோன்றின் இறல்முறையான் ஏதம் பலவும் தரும் என்க.

இது, உறவினன் உட்பகையானால் உறுதுயர் பெருகும் என்கின்றது. ஆண்மை என்றது அஞ்சாது நின்று யாண்டும் அமர் வென்றுவந்த அவனது அருந்திறல் கருதி.

உறன்முறை ஆன்—உறவுமுறையோடே. ஆன்—மூன்றனுருபு; ஓடு என்பதுபோல் உடனிகழ்ச்சிப் பொருளில் வந்தது.

உறல்—சேர்தல், பொருந்தல். உறன்முறை—சுற்றம். சிறிய தந்தை, பெரியதந்தை, அண்ணன், தம்பி, மாமன், மைத்துனன் என்னும் இவ்வுரிமைகளுள் ஏதேனும் ஓர் முறையினையுடையானை உறன்முறை என்பர்.

இனி, ஆன் என்பதனை உருபாகக் கொள்ளாமல் விகுதியாகக் கொண்டால் நெருங்கிய சுற்றத்தான் உட்பகையாகத் தோன்றினால் என்று கொள்க.

இறல்—இறுதல், கெட்டழிதல். ஏதம்—துன்பம், குற்றம். குற்றமும் துன்பமும் ஏத மாகும். என்றது (பிங்கலந்தை)

மேல், கொடியநெஞ்சினர் உட்பகைவராய் நிற்பராயின் அதனால் கொடுந்துன்பங்கள் பல நிகழும் என்றார்; இதில், உறவினர் அவ்வாறு அமைவராயின் உயிரழிவு முதலாகப் பல இழவுகள் விளையும் என்கின்றார்.

உறவுமுறையோடு கூடி ஒருவனுக்கு உட்பகை தோன்றின் அவன் சாகும்படியான கேடுகள் பலவற்றையும் அது தந்துவிடும் என்பதாம்.

புறத்தே உறவினனாயிருப்பினும் உள்ளே பகைமைகொண்டு ஒருவன் நிற்பனாயின் அவன் நிலையினை எவரும் காண வெளிப்படுத்

தித்தன்னை என்றும் அணுகவொட்டாதபடி அரசன் அவனை அகற்றிவிடவேண்டும் என்றவாறு.

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேருதல் வேண்டும்—கழிபெருங்
கண்ணேட்டஞ் செய்யார் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து (நீதிநெறிவிளக்கம்.

கிளைஞனுயினும் உட்பகையுடையனுயின் அவனை உள்ளே வைத்துக்கொள்ளாதே; கொண்டால் உயிர்க்கு அழிவுண்டாம் என்பதை ஓர் உவமையால் விளக்கி இஃது உணர்த்திநிற்கும் அழகை ஊன்றி நோக்குக. உட்பகையை உடற்புண்ணேடு ஒப்பவைத்தது ஒட்டிநின்று ஓயாத்துயரமும் உயிரழிவும் தருதல் கருதி. ஏதம் பல தருதற்குரிய இத்தீதுடையாரைத் தீநோய் எனக் கருதி உடனே அரசன் தீர்த்துவிடவேண்டும் என்பது கருத்து.

ஒருவனுக்கு உறவினராயுள்ளவர் உட்பகைவராய் நிற்பராயின் அவன் இறந்துபடும்படியான கொடுங்கேடுகள் பல எய்தி வருந்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பழையன்பால் உணரப்படும்.

கதை.

பழையன் என்பவன் பாண்டிநாட்டிலே மோகூர்என்னும் ஊரிலிருந்த ஓர் குறுநிலமன்னன். இவன் பெரிய போர்வீரன். அரியகுணங்கள் பல அமையப்பெற்றவன்; கோசர் என்னும் ஒருவகை வீரமரபினரைத் துணையாக அமைத்துக்கொண்டு முடிமன்னரும் வியந்துகொள்ளும்படி இவன் படிபுரந்து நின்றுன். அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த வீரசேகரன் என்னும் பாண்டியவேந்தன் பால் ஈண்டிய அன்பினனுய் இவன் இருந்துவந்தான். அம்மன்னனும் இன்னருள்செய்து உரியகாலங்களில் அழைத்து அரிய உதவிகள் பல இவனுக்கு ஆற்றிவந்தான். அதனுல் அவ்வழுதிமன்னனுக்கு வழிமுறையே உரிமையான வேம்பினைத் தனக்குக்காவல் மரமாகப் பாவித்துத் தன் நகரில்வைத்துப் பாதுகாத்து நீதிமுறையோடு நின்று தன் வெற்றித்திறத்தை யெங்கும் பரவச்செய்து இவன் இசைபெற்றிருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் தன்உறவினனும் தன்னைப்போல் ஒரு குறுநிலமன்னனுமாகிய

அறுகை என்பவன் இவன்மீது பகைமை கொண்டான். ஆயினும் வெளிப்படையாக அப்பொழுது இவனை அவன் யாதும் செய்ய முடியாதாதலால் அம்முடிவைமறந்து காவுடையனாய் இடையிடையேவந்து முகம் நகநின்று உளவறிந்து சென்றான். வந்து செல்லுங்கால் அங்கிருந்த துணைவர் சிலரைப்பேதித்து வலி நிலைகண்டு முடிவில் யாருக்கும் தெரியாமல் செங்குட்டுவன் என்னும் சேர மன்னனை இவன்மீது போருக்கு மூட்டிவிட்டான். தடுத்தற்கரிய பெருவீரனாகிய அவன் படைகளோடு வந்து இவனோடு கொடும் போர் செய்தான். மானமுடனின்று தன்னாலானவரையும் இவன் எதிர்த்துப் பொருதான். யாதும முடியாமல் முடிவில் முறிந்தான். அப்போரில் இவனுக்குண்டான பொருளழிவும் துயரங்களும் அளவிடலரியன. வெற்றிபெற்ற அம்மன்னன் இவன் வைத்து வளர்த்திருந்த காவல்மரத்தை யடியோடு வெட்டி இவனது பட்டத்து யானைகளைச் சகடர்க்கும் பகடுகளாகக் கட்டிக்கொண்டு போய் அதன் துண்டங்களைக்கடைந்து முரசங்கள் செய்து தன் வெற்றிக்கு அறிகுறியாக வீறுபெற முழக்கி விழாவுறவைத்தான். இவன் அதன்பின் போர் என்னும் ஊரில்போய் அதனைச் சீர்பெறச்செய்து நாணந்தலைக்கொண்டு அங்கு நண்ணியிருந்தான். வீரமும் நீதியுமுடையவனாயிருந்தும் உட்பகைவனால் இவன் துயரடைந்து நொந்ததை யறிந்து அறிஞர்பலரும் வருந்தினர். உறன்முறையான் ஒருவனுக்கு உட்பகையாய்த்தோன்றின் அவன் இறந்துபடும்படியான ஏதங்கள் பல எய்தியுழிவான் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. மாங்குடி மருதர், பரணர், மாமூலர் முதலிய புலவர் பெருமான்கள் 'பலரும் இவனைக் குறித்துக் கூறியுள்ளார். அடியில்வருவன காண்க.

மழையொழுக்கு அறாஅப் பிழையா விளையுள்
பழையன் மோகூர் அவையகம் விளங்க
நன்மொழிக் கோசர் தோன்றி யன்ன. (மதுரைக்காஞ்சி.)

மாரியம்பின் மழைத்தோற் பழையன்
காவிரிவைப்பிற் போஓர் அன்ன. (அகநானூறு.)

வெண்கோட்டியானைப் போஒர் கிழவோன்
பழையன் வேல்வாய்த்தன்ன நின்
பிழையா நன்மொழி. (நற்றிணை)

நுண்கொடி யுழிஞை வெல்போர் அறுகை
சேணனு மாயினும் கேளென மொழிந்து
புலம்பெயர்ந் தொளித்த களையாப் பூசற்
கரண்கடா வுறீஇ அணங்கு நிகழ்ந்தன்ன
மோகூர் மன்னன் முரசங் கொண்டு
நெடுமொழி பணித்தவன் வேம்புமுதல் தடிந்து
முரசுசெய முரச்சிக் களிறுபல பூட்டி
ஒழுகையுய்த்த கொழுவில் பைந்துணி. (பதிற்றுப்பத்து)

இவனது பேரும் சீரும் ஊரும் போரும் பல நூல்களிலும் இன்னனம் போற்றப்பட்டுள்ளன. இத்தகைய அரியவீரனும் உறவினுட்பகையால் உலைந்து நொந்தானுதலால் அதன் ஏதம் காண இங்கு இசைந்து நின்றான்.

எற்ற பகைவர் எழுகோடி வந்தாலும்
ஊற்றமுற நின்றொருக்கால் உய்யலாம்—தோற்றமுறு
உட்பகைதான் ஒன்றெனினும் உய்தலரி தையகோ
மட்பகைபோல் கொய்யு மதி.

கட்புகுந்த வெந்துகள்போல் காந்திக் கதித்தென்றும்
உட்பகைதுன் பாக்கும் உணர்.

உறவினன் உட்பகையானல் ஊறுபல நேரும் என்ப
இதனல் கூறப்பட்டது.

---

886 உற்ற உறவினர்தம் உட்பகையால் ஏனெழினி
கொற்றமற்று மாண்டான் குமரேசா—குற்றமிக்க
ஒன்றாமை யொன்றியார் கட்படின் எஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்றல் அரிது. (கா)

இ—ள்.

குமரேசா! பொருந்திநின்ற உறவினர் சிலர் பகைமை கொண்டிருந்தமையால் எழினி ஏன் அழிந்துபோனான்? எனின், ஒன்றியார்கண் ஒன்றாமை படின், எஞ்ஞான்றும் பொன்றாமை ஒன்றல் அரிது என்க.

ஒன்றாமை—பொருந்தாமை; பகைமை என்க. ஒன்றல்—பொருந்தல், கூடல். ஒன்றியார்—உரிமையாய்ப் பொருந்தி நின்றவர். பொன்றாமை—அழியாமை. ஒன்றல் அரிதாஎன்றது அழிவுறாமல் இருக்கமுடியாது என்றவாறு. அழிந்தே தீர்வன் என்பதாம்.

நட்பாய் ஒட்டிநின்றவன் உட்பகையானால் அவனை ஓர்ந்து உணர்ந்து உடனே வேந்தன்விலக்கிவிட வேண்டும்; இல்லையானால் உயிரழிவுக்கு விலகாதவனாய் அடியோடு ஒழிந்து போவன் என்றபடி.

மேல், உரிமையாய் நின்ற உறவினர் உட்பகைவராயின் உயிரழிவுக்கு ஏதுவான பல ஊறுபாடுகள்நேரும் என்றார்; இதில் அவரை ஓர்ந்து ஒழியாவிடின் உயிர் ஒழிந்துபோம் என்கின்றார்.

உறவாய்க்கூடிநின்றாரிடத்துப் பகைமையுண்டாயின் எக்காலத்தும் அழிவுண்டாதல் தப்பாது என்பதாம்.

ஒருவனோடு உரிமையாய்ப் பழகி நின்றவன் பின்பு அவனுக்கு உட்பகைவனாய்விடின் அவன் எத்துணை வலியுயர்வுகளைப் பெற்றிருப்பினும் தப்பாது இறந்தே போவன் என்பார் "ஒன்றியார்கண் ஒன்றாமைபடின் பொன்றாமை அரிது" என்றார்.

எஞ்ஞான்றும் என்றது பொருள் படை நட்பு அரண்முதலிய வலியுயர்வுகளால்பெரியனாய்மிகச்சிறந்திருந்தகாலத்தும் என்றவாறு.

இனி, சிலகாலம் தப்பியிருக்கலாமேயன்றி உட்பகையுடையவன் முழுவதும் இனியனாய் உயிர்வாழமுடியாது எனவும் இது பொருள்காண நின்றது.

ஒன்றிநின்ற சுக்கிரீவன் ஒன்றாமையால் வாலி பொன்றிவீழ்ந்தது போல் பெருவலியுடையாரும்பிளவுபாட்டால்அழிவுறநேரும் என்க.

குன்றாவலியுடையாரும் ஒன்றியார் பகையானால் பொன்றி வீழ்வராதலால் அவரை உய்த்துணர்ந்து கடிந்து தன்னை அரசன் காத்துக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

எவ்வளவு பெரிய வீரனாயிருந்தாலும் உற்றவர் உட்பகைவராயின் அவனுயிர் பிழையாது என்பது இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை எழினிபால் உணரப்படும்.

கதை.

எழினி என்பவன் சோழநாட்டிலே மதுகைஎன்னும் ஊரிலி ருந்த ஓர் குறுநிலமன்னன். வண்மையும் திண்மையும் வனப்பும் வாய்ந்தவன். நல்ல நீதிமான். யாவர்க்கும் பேருபகாரி. வழுக்கி யும்பொய்யாத ஒழுக்கமுடையவன். மழைமாறினும் மொழிமாறா தவன் என அனைவரும் புகழ்ந்துகூற வாய்மையில் இவன் விளங்கி யிருந்தான். கருதியதைக் கடைபோகச்செய்யும் உறுதியாளன். தமக்கு அமைந்திருந்த படைத்திறங்களை நினைந்து அக்காலத்தில் மிகச்செருக்கி நின்ற மண்டலீகர் பலரையும் இவன் வென்றடக்கி னன். நல்லவர்க்கு இனியனாய்த் தீயவர்க்கு இன்னாதவனாய்த் திகழ்ந்து நின்று நெறிமுறை வழுவாமல் இவன் முறைபுரிந்து வந்தான். வருங்கால் இவனோடு நண்பனாகி முன்பு ஒன்றிநின்ற நீலன் என்பவன் பின்பு சீலமில்லாதவனாய்ச் செற்றம்பெருக்கி இவன்மேல் குற்றம்புரிந்தான். ஆயினும் தனது புல்லிய நிலையினை வெளிப்படுத்தாமல் நல்லவன்போலவே உட்பகைகொண்டு அவன் நண்ணியிருந்து எண்ணிவிடாதபடி இடர்பல விளைத்தான். முடி வில் தகடூர்மன்னனைப்பகைவனாக்கி அவனோடு இவனை மூட்டிவிட் டான். இவன்மானமும் நேர்மையுமுடையவனாதலால் உடனே படையெழுச்சிசெய்து வலிந்துபோய் அந்நகரினைவளைத்து வல்லம ராடினன். எதிரி இடவலியால் இவன் படைமுழுவதையும் அழித் தான். அவ் அழிவினைக்கண்டு இவன் கனலெனப்பொங்கிக் கடுஞ் சமர்செய்து வழிவகையின்றி முடிவில் மடிந்தான். எங்கும் வெற் றியாளனாய் விளங்கிவந்த இவன், உற்றிருந்தவன் உட்பகையாய் உடற்றநின்றதால் உயிர்போய் முடிந்தான். ஒன்றாமை ஒன்றி யார் கண்படின் எஞ்ஞான்றும் பொன்றாமை ஒன்றல் அரிது என் பதை இவன் பொன்றி உணர்த்தினன். இவன் இறந்துபட்டதை யறிந்து அறிஞர் பலரும் வருந்தியழுதார். அரிசில்கிழார் என்னும் புலவர்பெருமானார் இவனைக்குறித்துப் பாடியபாடல் ஒன்று இத னடியில் வருகின்றது. அதன்பொருளை ஆய்ந்துகாண்க.

கன்றமர் ஆயம் கானத்து அல்கவும்,
வெங்கால் வம்பலர் வேண்டுபுலத் துறையவும்,
களமலி குப்பை காப்பில வைகவும்,

விலங்குபகை கடிந்த கலங்காச் செங்கோல்
வையகம் புகழ்ந்த வயங்குவினை யொள்வாட்
பொய்யா எழினி பொருதுகளஞ் சேர
ஈன்றோள் நீத்த குழவி போலத்
தன்னமர் சுற்றம் தலைத்தலை இனையக்
கடும்பசி கலக்கிய இடும்பைகூர் நெஞ்சமொடு
நோயுழந்து வைகிய உலகினும் மிகநனி
நீயிழந் தனையே அறனில் கூற்றம்!
வாழ்தலின் வரூஉம் வயல்வளன் அறியான்
வீழ்குடி உழவன் வித்து உண்டாஅங்கு
ஒருவன் ஆருயிர் உண்ணு யாயின்
நேரார் பல்லுயிர் பருகி
ஆர்குவை மன்னோ அவன் அமரடுகளத்தே. (புறம்)

கன்று அமர் ஆயம்—கன்றுகளைப்பொருந்திய பசுக்கூட்டம். வெங்கால் வம்பலர்—வழிநடந்தமையால் புழுதியடைந்து வெம்மையுற்ற கால்களையுடைய வழிப்போக்கர். அல்க—தங்க. இனைய—வருந்த. கன்றுகளோடு ஆனிரைகள் காட்டிடத்தே யாதும் தீதின்றிக் கிடப்பன; புதியராய் வழிப்போவார் விரும்பிய இடங்களிலே யாதொரு பயமுமிலராய் இனிதாகத் தங்கிச்செல்வர்; விளைபொருள்கள் பாதுகாவல் வேண்டாதபடி அங்கங்கே திரள்திரளாகக் குவிந்து திகழ்வன; என்று முதன்மூன்றடிகளில் குறித்து இவனது ஆட்சித்திறத்தை விளக்கி யிருத்தல் காண்க. வித்தினை வைத்திருந்து அதனால் உண்டாம் விளைவினையுண்ணுமல் அதனையே உண்ட மூடவுழவன்போல் ஓ புத்தியில்லாத எமனே! இவ் எழினியை உண்டுவிட்டாயே! இவனைஉண்ணுது வைத்திருந்தால் இவன் புக்க போர்க்களத்தில் எத்தனை உயிர்களை நீ உண்டு மகிழலாம்; உணராதொழிந்தாயே! என்று கவி கூற்றினை நோக்கி ஆற்றுமையோடு இரங்கிக் கூறியிருக்கும் அருமையை இதில் ஆய்ந்துநோக்குக. இவனது கோலின்செம்மையும், வேலின்வெம்மையும், கொடையின்பெருமையும், நடையின்அருமையும், குணங்களின்அமைவும், பிறவும் இதனால் இனிதுணரலாகும். வென்றியா

ஞய் இங்ஙனம் நின்றிருந்தவன் ஒன்றியானது உட்பகைமையால் பொன்றினுதலால் இங்கு உரிமையாகப் பொருந்தி நின்றான்.

புறப்பகைதான் எத்துணையும் போற்றலாம் பொல்லா
அகப்பகையேல் அந்தோ அழிவாம்—புறத்தமைந்த
கண்ணிமைமேல் புண்ணென்னிற் காக்கலாம் கண்ணுள்ளே
நண்ணிவிடின் என்னுமோ நாடு. (தருமதீபிகை)

ஒத்துநின்றான் உட்பகையேல் உற்றவன்றான் அப்போழுதே
சேத்தவனே யாவன் சிதைந்து.

நட்பாய் நின்றவன் உட்பகையானல் உயிரழிவுதப்பாதென்பது இதனல் கூறப்பட்டது.

887 கோடாத சென்னிகுடி கூடிநின்றும் உட்பகையால்
கோடிகொந்த தென்னே குமரேசா—வீடாத
செப்பின் புணர்ச்சிபோற் கூடினும் கூடாதே
யுட்பகை யுற்ற குடி. (எ)

இ—ள்.

குமரேசா! சென்னியின் குடி மிக்க ஒற்றுமையுடையதாயிருந்தும் உட்பகையால் ஏன் உலைந்துபோயது? எனின், உட்பகை உற்ற குடி, செப்பின் புணர்ச்சிபோல் கூடினும் கூடாது என்க.

இது, உட்பகையால் ஒற்றுமை சிதையும் என்கின்றது.

கோடாத என்றது நெஞ்சு நேர்மையுடையனாய் என்றும் அவன் நின்றிருந்தமைகருதி. பலர் அழிவுறும்படி நிலைதிரிந்து நெடுந்துயருழந்தமையான் குடிகோடி நொந்த தென்றாம்.

செப்பு என்பது மணி சாந்து குங்குமம் முதலிய இனியபொருள்களை வைத்தற்குரிய பேழை. இதன் சிறியவடிவம் சிமிழ்எனப்படும். "செப்பினுள் துகிலும் சாந்தும்" எனச்சிந்தாமணியிலும், "நிகரில் மாண்கலம் நிதியொடு நிறைந்த, ஆரியச்செப்பு" எனப் பெருங்கதையிலும், "சாந்தகத்துண்டென்று செப்புத்திறந்து" என நாலடியாரிலும், "சேம மணி நகைச் செப்பினுள் ஏந்துபு" எனச் சூளாமணியிலும், "வகைவரிச் செப்பினுள் வைகிய மலர் போல்" என மணிமேகலையிலும், "செப்பிடந்தன்ன நாற்றும்" என நற்றிணையிலும், இது வந்திருத்தல் காண்க.

மேல், உட்பகையால் உயிர்வாழ்க்கை பொன்றும் என்றார்; இதில், அதனால் குடிவாழ்க்கை குன்றும் என்கின்றார்.

உட்பகையமைந்த குடியிலுள்ளார் செப்பின் சேர்க்கைபோல் புறத்தே மிக ஒற்றுமையாகத் தோன்றினராயினும் அகத்தே தம்முள் கூடியிரார் என்பதாம்.

குடியின் ஒற்றுமைபுணர்ச்சிக்குச் செப்பின்புணர்ச்சியை ஒப்புக்காட்டியது பொருத்துவாயுங்கூடத் தெரியாதபடி பொருந்தி நிற்கும் அதன் பொருத்தம் நோக்கி என்க.

வயிற்றுநோய்போல் உட்பகைவர் உள்ளிருந்து கொண்டே பல்வகை அல்லல்களையும் விளைத்து ஒரு குடியின் நிலையைக் குலைத்துப் பிளவுசெய்து விடுவாராதலால் எத்துணைப் பெருந்தன்மையுடையதாயினும் அவருற்றகுடி ஒத்திருக்கமுடியாதென்பார் செப்பின்புணர்ச்சிபோற் கூடினும் கூடாது என்றார். ஏகாரம் தேற்றம். இரக்கத்தோடு அச்சமும் தோன்ற இஃது அமைந்து நின்றது.

வழிவழியாக மிகச் சிறந்து மேதகவோடு விளங்கியிருந்த தசரதன் குடியும் கூனிபுகுந்தமையால் குலைந்தலைந்ததுபோல் உட்பகைவர் புக்ககுடி எப்படிச்சிறந்திருந்தாலும் உளநிலை திரிந்து உலைந்துபோம் என்க.

உட்பகைவர், குடும்பங்களைப்பிரித்து இடும்பைகள் பல விளைத்துவிடுவாராதலால் அக்கொடும்பாவிகளை நெருங்கவொட்டாதபடி நிலையறிந்து நின்று அரசன் தன்னைப்பாதுகாத்துக் கொள்ள வேண்டும் என்பது கருத்து.

ஒருவனுக்குத்தாயாதியாயுள்ளவர் உட்பகைவராய் நிற்பராயின் அவன்குடி எவ்வளவு ஒற்றுமையுடையதாயிருப்பினும் உருக்கூடாது உலைந்துபோம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இளஞ்சென்னிபால் உணரப்படும்.

## கதை.

சென்னி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர் உறையூரிலிருந்த ஓர் சோழமன்னன். இவன் அருங்கலைவிநோதன்; பெரும்போர்வீரன், அழகமைந்த மேனியன். வேண்மாள் என்னும் அழகிய கன்னியை மணந்து

அரிய போகங்களை நுகர்ந்து இனிதிருந்தவன். குதிரையேற்றத்தில்வல்லவன், சித்திரவேலைகளமைந்த அற்புதத் தேர்கள் பலஉடையவன். அதனால் உருவப் பஃறேர் இளஞ்சேட்சென்னி என இவன் பெயர்பெற்று நின்றான். நால்வகைப்படைகளையும் நடத்திப் பல போர்முனைகளிலும் சென்று சென்று வென்றுவந்தவன். இவனது வெற்றித்திறத்தைக் குறித்துப் பரணர் பாடிய கவி ஒன்று இதனடியில் வருகின்றது.

வாள், வலந்தர மறுப் பட்டன
செவ்வானத்து வனப்புப் போன்றன;
தாள், களங்கொளக் கழல் பறைந்தன
கொல் லேற்றின் மருப்புப் போன்றன;
தோல், துவைத்தம்பிற் றுளைதோன்றுவ
நிலைக்கொராஅ இலக்கம் போன்றன;
மாவே, எறிபதத்தான் இடங்காட்டக்
கறுழ்பொருத செவ்வாயான்
எருத்து வவ்விய புலிபோன்றன;
களிறு, கதவெறியாச் சிவந்துராஅய்
நுதிமழுங்கிய வெண்கோட்டான்
உயிருண்ணுங் கூற்றுப் போன்றன;
நீயே, அலங்குளைப் பரீஇ இவுளிப்
பொலந் தேர்மிசைப் பொலிவுதோன்றி
மாக்கடல் நிவந்து எழுதரும்
செஞ்ஞாயிற்றுக் கவினை மாதோ
அனையை யாகன் மாறே
தாயில் தூவாக் குழவிபோல
ஓவாது கூஉம்நின் உடற்றியோர் நாடே. (புறம்.)

இவனது வாள், தாள், பரிசை, குதிரை, யானைகளின் வலியியல்புகளும், காலைப்பொழுதில் கடலின்கண் எழுந்து திகழும் சூரியன்போல் சீரியகோலத்தோடு தேர்மீது இவன் திகழ்ந்து நிலையும் இதில்விளங்குவன காண்க. இவனோடு மாறுபட்டாருடைய நாடு தாயிழந்த சிறுகுழந்தைபோல் நோயுழந்து கூவும் என்று விளக்கி இவனது போராற்றலைக் கவி உணர்த்தியிருக்கும் அழகை யூன்றிநோ

க்குக இங்ஙனம் விளங்கியிருந்தஇவ னேடு உடன்பிறந்த அண்ணன் ஒருவனிருந்தான். அவன்பெயர் பெருஞ்சேட்சென்னி. இவன் பால் மிக்க அன்புடையவன். அவன் அரசபதவிக்கு உரியவனுயி னும் ஆட்சிமுழுவதையும் இவனே மாட்சிபெற நடத்திவந்தான். வருங்கால் இவன் மனைவி வயிறு வாய்த்தாள். அவ்வாய்ப்பினைக் கண்டு மூத்தவன் மனைவியாகிய வாகினி என்பவள் மனம் பொரு ளாய் இனி அரசதிருமுழுதும் இவன் மகனுக்கே உரிமையாய் விடுமென்று உளங்கொதித்தாள், அவள் வஞ்சவுரைகளால் அவ னும் நெஞ்சம் திரிந்தான். அதன் பின் தன் மைத்துனன் முதலா யினுர் சிலருடன் கூடி உட்பகையாய் நின்று இவனை ஒழித்து விட முயன்முன். அதனை யறிந்து இவன் உளங்கனன்று ஓர்ந்து காத்து நின்றுன். நின்றும் ஒருநாளிரவு படுசூழ்ச்சிசெய்து அப்ப கைவர் சிலர் வந்து இவனைக் கொன்றே தீர்த்தார். தப்பிப்பிழை த்த இவனுடைய புதல்வனையும் அவர் கொல்லத்துணிந்தார். அவர் சூழ்ந்த அல்லல் எல்லாவற்றையும் கடந்து இறைவனருளால் அரசுரிமையெய்தி உலகமுழுவதையும் அவன் அழகுற ஆண்டான். அவனே கரிகால வளவன் என்று பின்பு பெரியபுகழோடுவிளங்கி னன். “வெல்வேல், உருவப்பல்தேர் இளையோன் சிறுவன், முரு கற்சீற்றத்து உருகெழு குரிசில், தாய்வயிற்றிருந்து தாயம் எய்தி, எய்யாத்தெவ்வர் ஏவல்கேட்பச், செய்யார்தேஎம் தெருமரல் கலிப்பப், பௌவ மீமிசைப் பகற்கதிர் பரப்பி, வெவ்வெஞ் செல்வன் விசும்பு படர்ந்தாங்குப், பிறந்து” என முடத்தாமக்கண்ணியாரும், “உருகெழு தாயம் ஊழின் எய்தி; எனக்கடியலூர் உருத்திரங் கண்ணனுரும், அவனைக்குறித்துக்கூறியுள்ளமை காண்க. தொன்று தொட்டு எவ்வளவோ ஒற்றுமையுடன் கூடியிருந்த இவ் அரச குடும்பம் இடையே கிளைத்த ஓர் உட்பகையினுல் அடியோடு குலை ந்து அல்லல் பல அடைந்தது. பிளவுபட்டமையால் இக்குடியி லிருந்தவர் பலரும் அழிவுபட்டனர். வேற்றுமை சிறிதும் இல் லாதிருந்த குடி வீற்று வீற்றுய் இங்ஙனம் விளிந்து நின்றதே என அக்காலத்திருந்தவரெல்லாரும் வருந்திநின்றுர். செப்பின் புண ர்ச்சிபோல் கூடினும் கூடாதே உட்பகை உற்ற குடி என்னும் உண்மையை உலகம் இவன் குடியில் நன்கு உணர்ந்து நின்றது.

உயிரும் உடலும்போல் ஒற்றுமையுற் றென்றும்
செயிர்தீர்ந் தமைந்து சிறந்த—உயர்குடியும்
உட்பகையொன் றுற்றக்கால் உள்ளழியும் கூனிநின்று
நட்பறுத்தா ளன்றே நயந்து. (தருமதீபிகை.)

ஒத்துநின்ற ஒண்குடியும் உட்பகையால் ஊனமாம்
வித்துள் நினைந்தக்கால் வேறு.

சிறந்தகுடியும் உட்பகையால் இழிந்துபடும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

888 மண்டுபுகழ் யாதவர்கள் மாண்குடித் தேய்ந் துட்பகைமீக்
கொண்டழிந்தார் என்னே குமரேசா—கொண்ட
அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி. (அ)

இ—ள்.

குமரேசா! யாதவர்கள் தமக்குள் பகைமையுற்றுப் பொருதமையால் குடியழிந்து ஏன் அடியோடு மாண்டார்? எனின், உட்பகையுற்றகுடி, அரம்பொருத பொன்போல் பொருது உரம் தேயும் என்க.

இது, உட்பகையால் குடிகெடும் என்கின்றது.

அரம் என்பது ஒருவகைக் கருவி. பொன் இரும்பு சங்குகளைத்தேய்த்துக் கூர்மையாக்கற்கும், செப்பனு செய்தற்கும் உரியது.

குடி உரம் தேயும் —குடியின்வலி குன்றும். என்றது குடும்பத்திலுள்ளார் பிளவுபட்டு ஒருவரோடு ஒருவர் கலாம் விளைத்து முடிவில் அடியோடு கெடுவர் என்றவாறு. இக்கேட்டிற்கெல்லாம் உட்பகை காரணமாகு மாதலால் அது, உற்றகுடி உரம் தேயும் என்றார்.

பொன் என்றது குடியின் உயர்நலந்தோன்ற. இனி, இரும்புக்குக் கரும்பொன் என்று பெயருண்மையாலும், அரம் என்ற குறிப்பினாலும் ஈண்டுப் பொன் என்றது இரும்பையே எனினும பொருந்துமாயினும் சிறந்தபயனில்லை.

மேல், உட்பகை குடியைக்குலைத்துவிடும் என்றார்; இதில் அதனை அடியோடு அழித்துவிடும என்கின்றார்.

உட்பகை பொருந்திய குடி அரத்தினால் அராவப்பட்ட பொன்போல அதனால் பொரப்பட்டு நாளடைவில் தேய்ந்துபோம் என்பதாம்.

பொன்னைப் பொருந்திநின்று உரிமையாக ஏதோ காரியஞ் செய்வதுபோல் செய்து முடிவில் அரம் அதன் உருவைத் தேய்த்து விடுதல்போல் உட்பகையாளன் ஒருகுடும்பத்தை அடுத்திருந்து அதற்கு உறுதி செய்பவன்பேல் உறவுபல செய்து அதிலுள்ளவர்களுக்குள் கலகத்தை மூட்டல், பிரிவினை நாட்டல், வரவுநிலை தாழ்த்தல், வல்வழக்கேற்றல் முதலிய கெடுகாரியங்களைச் செய்து இறுதியில் அதன்பெருமையைக் குலைத்து அடியோடு அழித்துவிடுவனாதலால் இவனுக்கு அது, உவமையாக நின்றது.

உட்பகைவன் உள்ளிருந்துகொண்டே ஒரு குடியில் கலகமூட்டி விடுவன்; விடவே போராடிய குடி புலையாடிப்போம் என்றபடி அதிலுள்ளவரனைவரும் செல்லரித்த மரம்போல் உள்வலி தேய்ந்து ஒழிந்து போவர் என்க.

இனியர்போன்று ஒட்டிநின்று உட்பகைவர் குடியைக் கெடுப்பராதலால் அந்நிலையினை உய்த்தறிந்து உடனே அரசன் அவரை ஒறுத்து ஒழித்து விடவேண்டும் என்பது கருத்து.

உட்பகைவர் காலம்வாய்க்கும் வரையும் கலந்திருந்துகொண்டு அது வாய்த்தால் பிறரை ஏவியோ, அல்லது தாமாகவோ அல்லல் பல ஆற்றிக் குடிமுழுதும் அழியுமாறு முடிவுபல செய்வராதலால் அக் கொடியரைக் கண்ணோடாது கடியவேண்டும் என்றபடி.

தமராயிருந்து புறப்பகையைச் சார்வாய்க் காலம் வருமளவும்
அமராநிற்கும் உட்பகையை அஞ்சிக்காக்க; உறிற்கடிக;
நமராமெனவே கண்ணோடின், நல்ல அமைச்சாதியைத் தேய்க்கும்;
நுமராம் இனத்தைத் தணப்பிக்கும்; நுன்னைக்குடியோ டொழிக்கும்.

என்றபடி உட்பகைவர் அழிவு செய்வராதலால் அவரை அடியோடு அரசன் ஒழிவுசெய்யவேண்டும் என்க.

ஒரு குடி எவ்வளவு மேன்மையுடையதாய் விளங்கியிருந்தாலும் அதில் உட்பகையுண்டாயின் தன் உருக்குலைந்து அஃது ஒழிந்துபோம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை யாதவர்பால் உணரப்படும்.

## கதை.

யாதவர் என்பவர் யதுமரபினர். யது என்பவன் சந்திரகுலத்திலிருந்துபிரிந்தவன். இவன்வழியில் அரசர்பலர் தோன்றிச் சீரும் செல்வமும் பேருங்கீர்த்தியும் பெற்று விளங்கினர்; சகத்திர சித்து,

குரோட்டு, விதர்ப்பன், சியாமகன், சசிபிந்து, சாத்துவதன் முதலிய சீர்த்தியாளர் பிறந்து எவரினும் சிறந்து இசை திசை பரப்பி இனிது வாழ்ந்திருந்தார். இவர்கள் மூலமாகப்பல கிளைகள் தோன்றின. போசர், அந்தகர், தாசார்கர், சாத்துவதர், மாதவர், அற்புதர், மாதுரர், மிதற்சனர் சூரசேனர் குகுரர் குந்தியர் எனப்பல பிரிவுகளாய்த் தனித்தனியே விரிந்து பெருகி விளங்கியிருந்தனர். இவர்கட் கெல்லாம்மூல முதல்வன யது மன்னனுதலால் அவன் தொடர்பால் இவரனை வருய் யாதவர் என நின்றனர். இங்ஙனம் சிறந்திருந்த இம்மரபு பின்பு புண்ணிய மூர்த்தியாகிய கண்ணனைப் பெற்று எண்ணரிய நலங்களோடு விண்ணவரும் புகழ இசை பெற்று நின்றது. நின்று வருங்கால் இக்குடியில் வேதன் விருதமன் சாமன் பிங்களன் பேதகன் நீதன் நந்தகன் முதலாயினர் தோன்றிக் கலை நலங்கருதாமல் மரபு நிலை திரிந்து உலக போகங்களை நுகர்ந்து உளங்களித்திருந்தார். ஒருவர்மீது ஒருவர் பொறாமை மீக்கொண்டார். சிலர் மிக உரிமையாளர் போல் நின்று இரவும் பகலும் கலைமூட்டி வந்தார். வஞ்சம் நெஞ்சேறினமையால் ஆண்மை நீதிகள் குன்றினர். வேறுபாடுகளோடு பல மாறுபாடுகளும் அவரால் விளைந்தன. முடிவில் மது மயக்கத்தால் மதிமயங்கி ஒருவரோடு ஒருவர் பொருது அனைவரும் அடியோடு மாய்ந்தார். என்றும் மிகச்சிறந்து வந்த யதுமரபின் இம் முதுகுடி உட்பகை கொண்டு நின்றஇவரால் அன்றுமுதல் குன்றியழிந்தது. அரம் பொருத பொன்போலத் தேயும் உரம்பொருது உட்பகை யுற்றகுடி என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. விரிவைப்பாகவதத்தில் காண்க.

> உதியிலிட்ட வெண்ணெய்போல் உறைந்தமைந் திருப்பினும்
> எரியிலிட்ட தன்மைபோல் இழிந்தழிந்து தொலைவரால்
> உரையிலிட் டுயர்ந்துநின்ற ஒண்குடிக்குள் உட்பகை
> புரையிலிட்டு மெல்லவந்து புக்குநின்ற போதினே.

> **உட்பிணியால் நின்ற உயிர்போன்றும் ஒண்குடியும்**
> **உட்பகையால் குன்றும் உணர்.**

உட்பகையுற்றகுடி ஒழிந்துபோம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

889 உற்ற சிறுகூனி யுட்பகையால் கோடிதுயர்
கொற்றவனேன் கொண்டான் குமரேசா—முற்றாத
எட்பக வன்ன சிறுமைத்தே யாயினும்
உட்பகை யுள்ளதாங் கேடு. (௯)

இ—ள்.

குமரேசா! சிறியகூனியின் பகையால் அரிய இராமனும் ஏன் அல்லலுற்றலைந்தான்? எனின், உள்பகை, எள்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும் கேடு உள்ளதாம் என்க.

இது, உட்பகை சிறிதாயிருந்தாலும் அதனை அஞ்சி நீக்க வேண்டும் என்கின்றது.

இராமனைக் கொற்றவன் என்றது யாண்டும் என்றும் நிகரில்லாத வெற்றிவீரனாய் நின்றிருந்தமை கருதி. முற்றாத என்றது எள்ளின் இளமை தோன்ற. பயன்படாத அதன் பருவத்தன்மையையுணர்த்தியபடி.

எள் என்றது பகையளவின் சிறுமையுணர நின்றது.

அளவு என்றது பகவு என்றது சிறுமையோடு தன்னால் யாதும் செய்யலாற்றாத இயல்பும் தோன்ற என்க. உருவிற் சிறுமையும் உள்ளீடின்மையும் உணர்த்தியவாறு. பகவு = பிளவு, பாதி. மிகச் சிறிய அளவினை உணர்த்தற்கு உரிமையாகவரும் நுண்பொருள்களுள் எள்ளும் ஒன்று ஆதலால் அஃது ஈண்டுஎடுத்துக்காட்ட வந்தது. கடுகு, அணு, இம்மி, முந்திரி, காணி என்பனவும் இவ்வகையில் வருவனவாம். சிறுமைத்தே ஆயினும் என்பதில் உம்மை இழிவு சிறப்பு. பகைசிறிதாயினும் பெரிய இழவுகளெல்லாம் அதனால் விளையுமாதலால் அவ்வுளவறிந்து அதனைக்களைக என்றவாறு.

மேல், உட்பகை யுற்றகுடி உருப்படாதென்றார்; இதில், அது சிறிதாயினும் பெருங்கேட்டை விளைத்துவிடும் என்கின்றார்.

உட்பகையானது எள்ளின்பிளவை யொத்த சிறுமையுடையதேயாயினும் சொல்லமுடியாத பெரியகேடு அதன்கண் உள்ளதாம் என்பதாம்.

உருவிற்சிறியனாய் உள்ளீடு இலனாயிருந்தாலும் உட்பகையுடையவன் காலம்வாய்த்தபோது கடுத்து வெளிப்பட்டுக் குடியைக்கெடுத்தே விடுவன் என்பார் "எள்பகவன்ன சிறுமைத்தேயாயினும் உட்பகை கேடு உள்ளதாம்" என்றார். உட்பகையுள்ளே கேடுஉள்ளதாம் என உணர்த்தியருளியது அதனை முன்னுற உய்த்துணர்ந்து காத்து ஒழுகவேண்டி என்க.

இவன் சின்னப்பயல்தானே; என்னசெய்து விடுவான் என்று இகழ்ந்துவிடப்பட்ட சாலிவாகனன் பின்பு விக்கிரமார்க்கனுக்குக் காலனானதுபோல் காலம்வாய்த்தபோது உட்பகைவர் உயிரழிவு செய்வர் என்க

எரியுந் தீத்திரள் எட்டுணைத் தாயினும்
கரியச் சுட்டிடும் காந்திக் கனலுமேல்
தெரியிற் றெல்பகை தான்சிறி தாயினும்
விரியப் பெற்றபின் வென்றிடு கிற்குமே. (சூளாமணி.)

நெருப்புப்பொறி சிறிதாயிருப்பினும் காலம் வாய்த்தபோது கனன்றெழுந்து காற்றுடன் கலந்துநின்று ஒரு பெரிய ஊர்முழுவதையும் எரித்துத் தொலைக்கும்; அதுபோல் பகைவன் சிறியனாயிருந்தாலும் சமயம்வாய்த்தபோது சினந்தெழுந்து வேறு பகைவருடன் கலந்துநின்று தம்மை வேரறக் கெடுத்துவிடுவன் என அரசர்க்கு அறிவுறுத்தி நம் அடிகள் கருத்தை இது தழுவிநிற்றலகாண்க.

அஞ்சனக் கோலின்ஆற்றா நாகம்ஓர் அருவிக்குன்றிற்
குஞ்சரம் புலம்பவீழக் கூர்நுதி எயிற்றிற் கொல்லும்
பஞ்சியின் மெல்லிதேனும் பகைசிறி தென்னவேண்டா
அஞ்சித்தற் காத்தல்வேண்டும் அரும்பொருளாக வென்றான்.
(சிந்தாமணி.)

இலைபோன்ற ஒரு சிறு கோலால் அடித்தற்கும் ஆற்றமாட்டாத பாம்பு மலைபோன்ற பெரிய யானையையும் கடித்துவீழ்த்தும். பஞ்சுபோல் மிக மெலியராயிருப்பினும் பகைவரைச் சிறியரென்றிகழ்ந்துவிடாதீர்! நஞ்செனக் கருதி அவரை யஞ்சிக்காக்கவேண்டும் என இது உணர்த்திநிற்கும் அழகை ஊன்றிப்பார்க்க.

உள்ளே பகைகொண்டுள்ளவன் எள் அளவிலும்கூடச் சிறியவனாயிருந்தாலும் அவனால் எல்லா இழவுகளும் உளவாம் ஆதலால் அவனை எதிரறிந்து நீக்கி அரசன் தன்னைக் காத்தொழுகவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

சிறிய உட்பகையும் பெரிய துயரை விளைத்துவிடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கூனிபால் உணரப்படும்.

## கதை.

இராமன் மிக இளமையாய் இருக்கும்பொழுது தன் மரபிற்கேற்றவாறு கையில் விநோதமாக ஒரு சிறுவில்லை வைத்துக்கொண்டு அந்தப்புரத்தை யடுத்திருந்த அழகிய பூஞ்சோலைக்குள் இளையவனோடு இனிதாக உலாவி நிற்குங்கால் அவ்வழி கூனிவந்தாள். இவள் கேகயதேசத்திலிருந்து வந்து கைகேசிக்குச் செவிலித்தாய் போன்று உடனமர்ந்து உறுதிசூழ்ந்துள்ளவள். மிகமுதியவள். முதுகில்சிறிது கூனுடையவள். அதனால் கூனிஎன்று ஓர் நாமம் எய்தினாள். இவளது இயற்பெயர் மந்தரை. சுமந்திரன் முதலிய சிறந்த மந்திரிகளுங்கூட இவளது மதிநலத்தை வியந்துள்ளார். படு சூழ்ச்சிசெய்வதில் இவள் மிகவும் கொடியவள். எப்படியும் வினை மூட்டிவைப்பாள்; இவள் கைகேசியின் இல்லைநோக்கிச் செல்லும் பொழுது இராமன் விளையாட்டிற்காகக் கையில் வைத்திருந்த மண்ணுண்டையை வில்லில் வைத்து இவள் முதுகை நோக்கி மெல்ல தெறித்துவிட்டான். அது போய்க் கூனில் பட்டது. இவள் திரும்பிப்பார்த்தாள். என்ன பாட்டீ என்று இராமன் சிரித்தான். ஒன்றும் சொல்லாமல் இவள் உள்ளே புகுந்தாள். "என்முதுகின் கூனலைக்கண்டல்லவா இந்தப்பிள்ளை இராமன் இங்ஙனம் எள்ளிச்செய்தான்" என்று எண்ணி யெண்ணி உள்ளங் கனன்றாள். சக்கரவர்த்தித் திருமகனாதலால் அப்பொழுது யாதும் செய்யமுடியவில்லை. இப்பகைமையை உள்ளங்கொண்டும் இனியவள்போன்று உடனமர்ந்திருந்தாள். யாரிடமும் யாதும்விள்ளவில்லை. ஆண்டுகள் பல கழிந்தன. இராமன் முடிசூடநேர்ந்தபோது இவள் சூழ்ந்துபோய்க் கைகேசியை வசப்படுத்தி அம்முடியைச் சூடவொட்டாதபடி தடுத்து நாடிழந்து தன் அருமைமனைவி

யோடு காடடைந்து வருந்தும்படி அவனை விடுத்தாள். உலகமுழுவதும் சேர்ந்து செய்தாலும் செய்யமுடியாத வினையை இக்கூனக் கிழவி செய்துவிட்டாளே என்று வானும் வையமும் வருந்திநின்றன. ஒரு பொருளாக மதிக்கப்படாது எளிதாய்நின்ற இவள் உள்ளிருந்துசெய்த பகையால் எல்லாம்வல்ல இராமனும் அல்லல் பல அடைந்தான். இவள்மூட்டிய வினையால் அந்நாடு அப்பொழுது பட்ட கேட்டினை யார்சொல்லவல்லார். எட்பகவன்ன சிறுமைத் தேயாயினும் உட்பகையால் பெருங்கேடுகள் விளையும் என்பதை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது.

சிறியரென்றிகழ்ந்து நோவு செய்வனசெய்யல்; மற்றிந்
நெறியிகந்து யானோர் தீமைஇழைத்தலால் உணர்ச்சிநீண்டு
குறியதா மேனியாய கூனியால் குவவுத்தோளாய்
வெறியனவெய்தி நொய்தின் வெந்துயர்க் கடலில்வீழ்ந்தேன்.

(இராமாயணம்.)

இது, இராமன் சுக்கிரீவனுக்கு அரசநீதி கூறுங்கால் உரைத்தது. "செல்வம் அதிகாரங்களை நினைந்து நாம் வலியுடையரா யிருக்கின்றோமென்று செருக்கி எளியவர்களுக்குத் துன்பம் செய்யலாகாது; இப்படி எண்ணுமல் இளமையில் யான் ஒரு இகழ்ச்சியைச்செய்து அதனால் அரசுமுதலிய வுயர்நலங்களெல்லாவற்றையும் இழந்து அல்லற்கடலுள் வீழ்ந்து அழுந்துகின்றேன்" என்று வீரவள்ளலாகிய அத்தருனமூர்த்தி தன் அனுபவத்தை எடுத்துக்காட்டி உட்பகை நேராவண்ணம அரசர் ஓர்ந்து வாழவேண்டும் என இதில் உணர்த்தி யிருத்தல் காண்க. உட்பகை கொண்டிருந்து காலங்கருதிநின்று சமயங்கண்டு வெளிப்பட்டுத் தனக்குக்கேடுவிளைத்திருந்தும் வெறுத்துக்கூறுமல் வியந்து நினைந்து கூனியைஉவந்து கூறி எவரையும் இகழ்ந்துகொள்ளலாகாதென உலகம் தெளியத் தன்னை உறுதிபெறக்காட்டி அருளியிருக்கும் அப்பெருமான்றன் உள்ளப் பெருமையை இங்கு ஊன்றி உணர்க.

ஊடிநின்ற உட்பகைதான் ஓரணுவே யானாலும்
கோடியினும் மிக்கதுயர் கூட்டுமே—கோடியபுன்
கூனியால் சிராமன் கோலிழந்து கொண்டதுயர்
வானளவோ! மண்ணளவோ மற்று. (தருமதீபிகை.)

**உட்போதிந்த ஓரேரியும் ஊரழிக்கும் பேரழிக்கும்**
**உட்பகையும் அற்றே உணர்.**

உட்பகைவரைச் சிறியரென்றிகழ்ந்து விடலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

890 ஒன்றியின்றார் தம்பகையால் உக்கிரசே னன்வாழ்க்கை
குன்றிநொந்தான் என்னே குமரேசா—என்றும்
உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று. (ம)

இ—ள்.

குமரேசா! மாறுபட்டாரோடு கூடிவாழ்ந்த உக்கிரசேனன் அரசசெல்வத்தை அடைந்திருந்தும் ஏன் துயரமுற்று நின்றான்? எனின், உடம்பாடு இலாதவர் வாழ்க்கை குடங்கருள்பாம் போடு உடன் உறைந் தற்று என்க.

இது, உட்பகைவர் பாம்போடொப்பர் என்கின்றது.

குன்றிநொந்தான் என்றது அவன் அரசதிருவினை யுடையனு யிருந்தும் உடனிருந்துகொண்டே இடர்பல செய்த கொடிய வர்களால் நாளும் நெஞ்சம்கலங்கி நைந்துநின்றமை கருதி.

உடம்பாடு = உள்ளப்பொருத்தம்; அஃதாவது வஞ்சம் யாது மின்றி நெஞ்சொத்திருத்தல்.

குடங்கர் என்னும் சொல் குடம் குடிசை முதலியவற்றை யுணர்த்திவரும். ஈண்டு அது, சிறுகுடிசையைக் குறித்து நின்றது. குடம் என்றே கொண்டால் என்னை? எனின், மனிதன் இருந்து வாழ்தற்கு அதில் இடமில்லை என்க.

மேல், உட்பகை உருவிற் சிறியதாயினும் பெருங்கேடுகளை விளைக்கும் என்றார்; இதில், அதனைப்பாம்பு என்று கருதி விரைந்து கடிந்து நீக்கவேண்டும் என்கின்றார்.

உள்ளம் பொருந்தாரோடு உடனமர்ந்து வாழ்தல் ஒரு குடிசைக்குள் பாம்போடு கூடி வாழ்ந்தது போலாம் என்பதாம்.

குடங்கரைக் குறித்துக் காட்டியது இடத்தின் சிறுமைகாண. உட்பகைவரைப் பாம்போடு ஒப்பவைத்தது உயிரழிவுசெய்யும் அவரது நச்சுத்தன்மை கருதி.

இடம்வாய்த்தால் பாம்பு கடித்துக்கொல்லும்; அமயம்வாய்த்தால் உட்பகைவர் கடுத்துக் கொல்லுவர் என்க.

பாம்போடு பழகேல் என்றார் ஒளவையார். அதனை இணைத்துக்காட்டி உட்பகைவரொடு அணுகேல் என அடிகள் இதில் உணர்த்தினர். சிறிய அறையில் கொடியபாம்புகளோடு ஒருவன் குடியிருக்கநேர்ந்தால் அவன் எப்படி துடிதுடித்து நிற்பனே அதுபோல் உட்பகையாளரையுடையவன் எப்பொழுதும் வெப்பமும் கலக்கமும் எய்தி வெய்துயிர்த்து நிற்பன் என்பார் "உடம்பாடு இலாதவர் வாழ்க்கை பாம்போடு உடனுறைந்தற்று" என்றார்.

குடங்கருள்ளே பாம்போடு ஒருவனைக் கூடநிறுத்தி அச்சந்தோன்றுமாறு அந்நிலையினைக்குறித்துக்காட்டி உட்பகைவரின் தீமையை விளக்கி அவரை அஞ்சி நீங்குமாறு அடிகள் இதில் அருளியிருக்கும் அழகை ஆய்ந்து காண்க.

உட்பகைவர் நச்சுப்பாம்போடு ஒப்பராதலால் அவரைக்கண்டவிடத்துக் கண்ணோடாது கொன்றொழிக்கவேண்டும் என்பது குறிப்பு.

தமராயிருப்பினும் உள்ளம்பகையாயின் அவரைத் தள்ளிவிடவேண்டும்; புறப்பகைவரினும் அவர் மிகக்கொடியர்; அடுத்திருந்து கொண்டே கெடுத்துவிடுவர்; இனத்தைப்பிரித்து, எதம்பலவிளைத்து, இழவுகூட்டிக், குடியைக்குலைத்து அடியோடு அழிப்பர் அவரைச் சிறியரென்று எண்ணிவிடாதே; கொடியபாம்பு என்றே கருதி யாண்டும் குறிக்கொண்டு நின்று சிறிதும் கூடாதபடி அவரைக்கடிந்துகாத்துத் தன்னை அரசன் பேணிக் கொள்ளவேண்டும் என உட்பகையின்ஒழிவினை அடிகள்இங்ஙனம் உணர்த்தியருளினர்

உட்பகையுடையவனுக்கு எப்பொழுதும் மிக்க துன்பமாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உக்கிரசேனன் பால் உணரப்படும்.

## கதை.

உக்கிரசேனன் என்பவன் யதுகுலமன்னனாகிய ஆகுகனுடைய அருமைத்திருமகன். வடமதுரையிலிருந்து அரசுபுரிந்தவன். அடக்கமும் அறிவும் ஆண்மையுமுடையவன். நல்ல நீதிமான். எல்லாக்கலைகளினும் வல்லவன். காஞ்சனை என்னும் ஓர் அழகிய

கன்னியை மணந்து கஞ்சன்முதலிய மக்கள் எண்மரைப் பெற்று மிக்க மகிழ்ச்சியோடு இவன் மேவியிருந்தான். உற்றவர்க்கு உதவிச் சுற்றந்தழுவி குற்றமறநின்று கோமுறை புரிந்தான். இவனுடன் பிறந்த அண்ணன் ஒருவனிருந்தான். அவன் பெயர் தேவகன். கண்ணனைப்பெற்ற புண்ணியவதியாகிய தேவகியைப்பெற்றவன். அவ்வுத்தமியைமணந்து எல்லா நற்குணங்களுமுடையராய் விளங்கியிருந்த வசுதேவரைத் தனக்கு மந்திரியாக அமைத்துக்கொண்டு ஆட்சியை அழகுறச் செய்து இவன் மாட்சிபெற்று வந்தான். வருங்கால் தன் தலைமகனாகிய கஞ்சன் பருவமெய்தி வஞ்சர் பலரைத் தொகுத்துக் கொண்டு வெஞ்செயல் புரிந்தான். அக்கொடியவர்களால் இவன் அடைந்த அல்லல்கள் அளவிடலரியன. தேனுகன், சாதுரன், கேசி, முரன், முசன் என்னும் இவர் இவனுக்கு இனியர்போல் நின்று உட்பகைகொண்டு உடனமர்ந்திருந்து இடர்பலவிளைத்தார். தீயனை கஞ்சனுக்கு இவன்மீது கொடுஞ்சினமுளுமாறு கோள்மிகமூட்டினார். ஒருமுறை அவன் கொதித்து வந்து இவனைக் கொல்லத்துணிந்தான். அக்கொடியவரனைவரையும் வெளிப்படையாக வெறுத்தொழிக்க முடியாமல் காலங்கருதி இவன் வெய்துயிர்த்துவந்தான். பெருந்திருவுடைந்திருந்தும் நெஞ்சம்பொருந்தாத அவ்வஞ்சமக்களால் நாளும் நாளும் தொடுந்துயரடைந்து முடிவில் அவரைக் கொன்று தொலைத்தலே நன்றாம் என்று இவன் குறிக்கொண்டு நின்றான். கண்ணனால் கருதியதை முடித்தான். அதன்பின்பு கவலைதீர்ந்து வாழ்ந்தான். உடம்பாடு இலாதவரோடு கூடி வாழ்தல் ஒருகுடி துள்ளே பாம்போடு ஒருவன் வாழ்தல் போலாம் என்பதை உலகமறிய இவன் உணர்த்தி நின்றான். விரிவைப் பாகவதத்தில் காண்க.

அலங்கல்வேற் கஞ்சன் றன்னை இனிதினி லளித்த வெற்றி
புலம்பொரு துயர்ந்த திண்டோள் உக்கிரசேனன் தன்னைப்
புலம்புறு காவல்நீக்கி யாதவர் பணிந்துபோற்ற
வலங்கெழு திகிரிமாயோன் மணிமுடி சூட்டினானே.

எதுகுலக் கிறைவனாக உக்கிரசேனன் என்னும்
மதுரைவேலரசற் கம்பொன் மணிமுடி புனைந்தபின்னர்ச்
சிதைவறு களிகொள்கேள்வித் திறல் வசுதேவன் தன்னை
விதிமுறை அமைச்சனாக விழுமிதி னிருத்தினானே. (கூர்மபுராணம்)

உக்கிரசேனனுக்கு உட்பகையாய் நின்று ஊறுவிளைத்து வந்த கஞ்சன் முதலாயினரைக் கொன்று கண்ணன் அவனை இன்புறவைத்த உண்மை இதன்கண்ணும் ஒளிர்தல் காண்க. உட்பகையாளரது கொடுமையினின்று தெய்வகதியாக இவன் தப்பிப்பிழைத்தானுதலால் நஞ்சமதை நாவிலிட்டு நண்ணல்போல் நாசமே வஞ்சமுடை நெஞ்சருடன் வாழ்வு என்று பின்பு யாண்டும் பிறரறிய வழுத்திநின்றான்.

எற்றெழு வன்னிமேல் இனிது துஞ்சலாம்;
தோற்றிய வெவ்விடம் எனினும் துய்க்கலாம்;
மாற்றலர் அலைத்திட வந்த வெந்துயர்
ஆற்றரி தாற்றரி தலமிப் புன்மையே. (கந்தபுராணம்.)

உள்ளம் பொருந்தா ருடன்கூடி வாழ்தலினும்
எள்ளு நரகம் இனிது.

உட்பகைவருடன் கூடி வாழலாகாதென்பது இதனுல் கூறப்பட்டது.

---

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

உறவினர்போன்று உள்ளிருந்துகொண்டே இடர்செய்வார் யின் அவர் உட்பகைவராதலால் அவரை ஓர்ந்து உடனே ஒழித்துவிடவேண்டும். வாள்போன்ற பகைவரினும் கேள்போன்ற அப்பகைவர் மிகக் கொடியராவர். அவரையஞ்சிக் காக்காவிடின் தப்பாமல் அழித்தேவிடுவர். அவரால் அல்லல் பல விளைவாம். பதைத்துச்சாகும்படியான கொடுந்துன்பத்தை அவர் விளைத்துவிடுவர் அக்கொடியரை வளரவிடின் அடியோடு அழிவுறநேரும். எவ்வளவு ஒற்றுமையுடைய குடும்பமாயிருந்தாலும் உட்பகைபுகுந்தால் அஃது உருப்படாது. அரம்பொருத பொன்போல் தேய்ந்து அது தொலைந்துபோம். உட்பகை சிறியதாயிருந்தாலும் அதனுல் பெரியகேடுஉண்டாம். உட்பகையாளரோடு கூடிவாழ்தல் உயிர் முடிவிற்கே ஏதுவாம் என்பதாம்.

அகூ வது உட்பகை முற்றிற்று.

# பெரியாரைப் பிழையாமை.

அஃதாவது அறிவு ஆற்றல்களால் சிறந்தமுனிவர் அரசர் முத லிய பெரியார்களை அவமதித்து ஒழுகாமை. பிழையாமை = தவறு செய்யாமை. பெரியாரைப்பேணல் என்று நேரே விதித்துவிடா மல் பிழையாமை என எதிர்மறையாக உரைத்தது என்னை? எனின், பிழைசெய்தொழுகல் பெரும்பாலும் மக்களிடை எளி தாக நிகழுமாதலால் அங்ஙனம் நிகழாது நின்று நிலையறிந்து ஒழுகு மாறு உறுதிபெற உணர்த்தற்கென்க. முன் நாற்பத்தைந் தாம் அதிகாரத்தில் பெரியாரைத் துணைக்கோடல் என்று குறித் திருத்தற்கும் இதற்கும் வேறுபாடு என்னை? எனின், அது, தன்னினு முதிர்ந்த அறிவுடையராய புலவர் அமைச்சர்முத லிய பெரியார்களைத் தன் ஆட்சிக்கு உறுதுணையாக உரிமைசெய்து அரசன் அணைத்துக்கொள்ள வேண்டும்என்று உணர்த்தியது; இது, தவம் தத்துவஞான முதலியவற்றால் பெரியராய மேலோர்களை இகழ்ந்துவிடாது புகழ்ந்து போற்றி அமைந்து ஒழுகவேண்டும் என உணர்த்துகின்றதாதலால் அதனோடு இதற்குள்ள உறவமைதிகளை உய்த்துணர்ந்து கொள்க. முதல் நாற்பத்தைந்தில் அதனைஇருத்தி இரண்டாவது சடு ஆகிய கூடில் இதனை நிறுத்தியது ஓர் உறுதியை உய்த்துணருமாறு உறுத்தியபடியாம். உட்பகைவரை யஞ்சி ஒழித்தொழுக வேண்டும் என மேல்உணர்த்தினர்; இதில் பெரியா ரையஞ்சிப் பேணி ஒழுகவேண்டும் என்று உணர்த்துகின்றார். அவரை ஒழித்தொழுகாவழி உயிர்க்கு அழிவாம்; இவரைப் பிழை த்தொழுகின் பின்பு பிழைப்பில்லையாம் என்க. பிழைப்பு = உயிர் வாழ்க்கை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

891 திண்டோட் பிரகத்தன் தேர்ந்திகழா தேன்போற்றிக்
கொண்டொழுகி நின்றான் குமரேசா—தண்டாமல்
ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை. (க)

இ—ள்.

குமரேசா! ஆற்றலுடைய வழுதியை யிகழ்ந்தமையால் நேர்ந்தபிழையினை யறிந்து பின்பு பிரகத்தன் ஏன் போற்றி ஒழுகி

ளுன்? எனின், ஆற்றுவார் ஆற்றல் இகழாமை போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை என்க.

இது, பெரியாரைப் பேணவேண்டும் என்கின்றது.

ஆற்றுவார் = செய்யவல்லவர்; அஃதாவது கருதியவினைகளைக் கடைபோக முடிக்கவல்லார் என்க.

போற்றுவார் = பேணுவார்; அல்லல்கள் யாதும் அணுகா வண்ணம் தம்மைப் பாதுகாத்து நிற்பார் என்றவாறு.

எடுத்த வினைகளைத் தவறாது முடிக்கவல்லாரது ஆற்றல்களை அவமதித் தொழுகாமை, அல்லலுறாது தம்மைக் காத்து நிற்பார் செய்யும் காவல்களெல்லாவற்றினும் சிறந்ததாம் என்பதாம்.

படை, அரண், பொருள், துணை, வலிமுதலிய பாதுகாவல்கள் பல இருந்தாலும் பெரியாரை இகழாமையாகிய இவ்வுயர்குணமொன்றே துயர் புகாவண்ணம் ஒருவனை நன்கு பாதுகாக்கும் என்பார் இகழாமை போற்றலுள் எல்லாம் தலை என்றார்.

மேற்குறித்த வலிநலங்களெல்லாம் ஒருங்கே யுடையனாயினும் தன்னினும் சிறந்த பெரியாரை அவமதித்து ஒழுகுவனாயின் அவர் வெகுளியால் அவைமுழுதும் பயனின்றி யிழிய அவன் அழிந்து ஒழிவான் என்க.

தம்மை வெகுளாதிருக்கும் வண்ணம் பெரியாரை இகழாதிருத்தலே அரசர்க்கு என்றும் நன்றாம் என்றபடி.

உற்றதற் கெல்லாம் உரஞ்செய்தல் வேண்டுமோ?
கற்றறிந்தார், தம்மை வெகுளாமை காப்பமையும்;
நெற்செய்யப் புற்றேய்ந்தாற் போல நெடும்பகை
தற்செய்யத் தானே கெடும். (பழமொழி)

இடர் புகாமல் பாதுகாத்துத் தன்னை அரசன் போற்றிக்கொள்ள விரும்பின், அவன் வேறு உபாயம் யாதும் செய்யவேண்டாம்; அறிவமைந்த பெரியோர்கள் தன்னை வெகுளாதிருக்கும்படி நெறியின் ஒழுகி அவரை இகழாது பேணிவருதலாகிய அந்நிலையொன்றே போதும் என எடுத்துக்காட்டோடு இஃதுணர்த்தி நிற்றல் காண்க. உரம் = வலி.

எவ்வளவு வலியுயர்வுகளை யுடையனுயினும் பெரியாரை இகழ்ந்து நின்றால் அவன் இழிந்து வருந்துவான் என்பது இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிரகத்தன்பால் உணரப்படும்.

## கதை

பிரகத்தன் என்பவன் ஆரியநாட்டு வேந்தன். சிந்துலம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். சிறந்த மதிமான். அரியகலைகள் பலவும் பயின்றவன். வடமொழியில் இவன் பெரிய புலவன். காவியப்புலமையோடு ஓவியப்புலமையிலும் சிறந்திருந்த அமரகன் என்னும் நுண்மதியாளனைத் தனக்கு அமைச்சனுக அமைத்துக் கொண்டு இவன் ஆட்சி செய்துவந்தான். வஞ்சம் புரியாதவன். நெஞ்சு நேர்மையன். இன்சொல் நீர்மையன். மறந்தும் பொய் பேசாச் சிறந்த வாய்மையன். இத்தகைய உயர்ந்த குணங்களை யுடைய இவன்பால் ஓர் இழிந்த குற்றமும் இசைந்திருந்தது. அஃதாவது எவரையும் மதியாத இழிதகைமை. தன்நாட்டினும் தன் அரசினும், தன்மொழியினும் சிறந்தன வேறு எந்நாட்டினும் இல்லை என எண்ணி இவன் இறுமாந்திருந்தான். இவன் காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த திண்டோட்செழியன்என்னும் பாண்டியமன்னன் இவனது இருப்பினையறிந்து மிகக்கடுத்து நின்றான். அவ்வீரவேந்தனைக் குறித்து ஒருமுறை இவனது அவையில் பேச நேர்ந்தபோது இவன் கூசாது இகழ்ந்தான். நிலையுணர்ந்துபேணுமல் நாளும் இங்ஙனம் இவன் தலைநிமிர்ந்து வருதலை அத்தென்னவன் தெளிந்து திரண்டபடைகளோடு சினந்து வந்து இவனது நகரினை வளைத்தான். அம்மன்னவன் அங்ஙனம் வளைந்தபோது உள்ளிருந்த இவன் துள்ளியெழுந்து உடன்றமர் செய்தான். அப்போரில் புகுந்தபடைகள் பல பொன்றி விழுந்தன. முடிவில் இவன் ஒன்றும் ஆற்றுமல் நின்றிருந்தான். படைத்தலைவர்கள் பற்றிக்கொண்டுபோய்ப் பாண்டியன் முன்விடுத்தார். அவ்வெற்றிவீரன் இவனை விட்டுவிடாமல் உடன்கொண்டு தன் நகரினையடைந்தான். இவனது புலமைத்திறத்தை யோர்ந்து நலமுறவைத்து நன்கு பேணி வந்தான். அவனது ஆற்றலையும் அறிவமைதிகளையுங் கண்டு பின்பு அவன்பால் இவன் அன்புமீக்கொண்டான். தான் இகழ்ந்து நின்

றமையால் தனக்குவந்த இழவுகளை நினைந்து இவன் இரங்கி வருந்தினன். இவனது நேர்மையையும கழிந்ததற்கிரங்கும் பான்மையையும் கண்டு பாண்டியன் உவந்து தேற்றினன். ஆரியத்தைவிடச் சிறந்ததில்லை யென்று அவமதித்திருந்த இவனுக்குத் தமிழின் பெருமையை அறிவுறுத்தும்படி கபிலரைத் தூண்டினன். அப் புலவர்பெருமான் பலவகை அழகுகளோடு நிலவிநிற்கும் தமிழின் அருமையை இவனுக்கு எளிதிலுணர்த்தினர். அங்ஙனம் உணர்த்துங்கால் அகப்பொருட்சுவை மிகப்பொருந்தி விளங்க இவன்பொருட்டு அவர் ஓர் பாடல் பாடினர். அது குறிஞ்சிப் பாட்டு என இது பொழுது வழங்கப்படுகின்றது. இவன் தமிழுணர்ச்சி எய்தி அதன் சுவை நுகர்ச்சியால் மேலும் விழைந்து நூல்பல பயின்று செய்யுள் இயற்றுந்திறனும் பெற்றான்.

"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை
குறுக லோம்புமின் சிறுகுடிச் செலவே." (குறுந்தொகை.)

என்பதாதியாகச் சில பாடல்களும் பாடினன். பின்பு பாண்டியன் பாடுசெய்து விடுப்ப இவன் நாடுபுகுந்து அரசினையடைந்து வலியாரது பீடறிந்து நின்று பேணி ஒழுகினன். அதன்பின் யாதொரு கேடுமின்றி யமைதியுற்று வாழ்ந்தான். படை அரண் முதலிய துணைவலிகள் பல இருந்தும் தன் இகழ்ச்சியுடைமையால் இழிந்து நின்ற இவன் பின்பு பெரியாரை இகழா தொழுகினமையால் இன்புற்றிருந்தான். ஆற்றுவாரது ஆற்றலை இகழாமையே தன்னைப்போற்றி நிற்பாரது போற்றல்களெல்லாவற்றினும் தலையாம் என்பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான்.

தகையுறு தம்முனைத் தாயைத் தந்தையை
மிகையுறு நரவரை உலகின் வேந்தனைப்
பகையுற வருதலுக் குறந்த பண்பிது
நகையுற லன்றியு நாக்கற் பாலதோ. (இராமாயணம்.)

தீதின்றி வாழநீ தேரிற் பெரியார்பாற்
கோதோன்றுங் கூறல் குறி.

பெரியாரை இகழலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

892 கொற்றச் சகுந்தனேன் கோசிகரைப் பேணாத
குற்றத்தால் நொந்தான் குமரேசா—உற்ற
பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா இடும்பை தரும். (உ)

இ—ள்.

குமரேசா! விசுவாமித்திரரைப் பேணி ஒழுகாமையால் சகுந்தன் ஏன் பெருந்துயரடைந்தான் எனின், பெரியாரைப் பேணாது ஒழுகின் பெரியாரால் போரா இடும்பை தரும் என்க.

இது, பெரியாரை இகழ்ந்தொழுகினால் பெருந்துன்பமுண்டாம் என்கின்றது.

பேணுதல் = நன்குமதித்துப் புகழ்ந்து போற்றல்.

பேராஇடும்பை = தீராததுன்பம். பேர்தல் = தீர்தல், நீங்குதல்.

மேல், பெரியாரைஇகழலாகாதென்றார்; இதில், இகழ்ந்தால் பெருந்துயராம் என்கின்றார்.

பெரியோர்களைப் புகழ்ந்து போற்றாமல் அரசன் அவமதித்து ஒழுகுவனாயின் அவரால் அவனுக்கு என்றும் நீங்காத துன்பங்களை அதுகொடுக்கும் என்பதாம்.

பெரியாரைப் பேணாது ஒழுகினால் இடும்பை தானாகவரும் என்பார் அதுதரும் என்றார். இடும்பைக்கு ஏதுவான அவ்இழிந்த ஒழுக்கத்தை யாதும் கொள்ளலாகா தென்றவாறு.

தனக்குக் குலகுருவாயிருந்த வசிட்டரைப் பேணாது நின்று சிறிது அவமதித்ததனால் தனது தலைமையையும் பெரிய அரசபதவியையும் அடியோடிழந்து புலைபுருக்கொண்டு நீங்காத்துயருடையனாய்த் திரிசங்கு நிலைகுலைந்திழிந்ததுபோல் பெரியாரைப் பேணாதொழுகினர் பெருந்துயர் அடைந்து ஒழிவர் என்க.

வியாழனைப் பேணாதொழுகினமையால் இந்திரன் காணியிழந்து கடுந்துயரடைந்ததும் ஈண்டுக்காணத்தக்கது.

பெரியாரை என்றும் பேணி ஒழுகவேண்டும் என்பது கருத்து.

ஒருவன் எவ்வளவு சிறந்தவனாயினும் பெரியாரை இகழ்ந்து ஒழுகுவனாயின் அவன் இடர்பல எய்திவருந்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சகுந்தன்பால் உணரப்படும்

### கதை

சகுந்தன் என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னாிருந்தவன். வாரணாசி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். முடிமன்னர் பலரும் அடிவணங்கி நிற்ப இவன் படிபுரந்து நின்றவன். அறிவும் ஆற்றலும் அழகும் ஆண்மையும் நெறிமுறை யொழுகும் நீர்மையுமுடையவன். கருதிய வினைகளை உறுதிபெற முடிக்கும் உரனுடையாளன் என எவரும் புகழ இவன் உயர்வுற்றிருந்தான். தனது கொலுமண்டபத்தில் ஒருநாள் இவன் வீற்றிருக்குங்கால் அங்கு நாரதர் வந்தார். அவரைஉபசரித்து ஓர் ஆதனத்தில் இருக்கச்செய்தான். ஆயினும் தனக்கமைந்துள்ள திருவுடைமையை நினைந்து இவன் செருக்கியிருத்தலை அவர் குறித்தறிந்து சிறிது வருத்தங்கொண்டார். மறுபுல மன்னர்களையும், முனிவர்களையும் குறித்து உரையாடி வருங்கால் விசுவாமித்திரர் எப்படிப்பட்டவர் என்று அவரை இவன் வினவினன். அவர் மிகப் பெரியவர் என்றார். என்ன பெரியவர்; வசிட்டரைவிடவா? என்றான். இங்ஙனம் ஊர்வம்பை வளர்த்துப்பேசிவிட்டு அமமுனிவர் போயினார். சின்னாட் கழித்து இவன் வேட்டைமேற் சென்றான். சில முனிவர்களுடைய தவச்சாலைகளைக்கண்டான். அங்கும் கோசிகரை அவமதித்து வந்தான். இவனது நிலையினைக்குறித்து அவரிடம் போய் நாரதர் மிக நளினமாக உரைத்தார். பொறுப்பரா அவர்? கொதித்தெழுந்தார். உடனே சபிக்கத்துணிந்தார். அடுத்துநின்ற கலகப்பிரியர் தடுத்து நிறுத்தினர். "நாம் ஒன்றும் செய்யலாகாது ஓர் அரசனைக்கொண்டே அவனை அழிவுசெய்யவேண்டும்" என்றார். அதனைக்கேட்டவுடனே தமது உயிர்த்துணைவனை இராமனிடம் அவர் விரைந்து வந்தார். அவர் திருவயோத்தியை அடைந்தபொழுது இராமன் மகிழ்ந்தெதிர்வணங்கி மிகுந்த அன்போடு பணிந்துபசரித்தான். "என்னை ஒருவன் இகழ்ந்துவிட்டான்; அவன் தலையை நீ அகழ்ந்தெறியவேண்டும்" என்று முனிவர் கோதண்டவீரனிடம் கொதித்துரைத்தார். அவரது நிலையினையும், தனக்குக் குருவென்ற முறையினையும் கருதி அவ்வீரவள்ளல் யாதும்பாராமல் "இன்று பரிதிவீழுமுன் அவன்தலையைப் பாரில்வீழ்த்துகின்றேன்" என்று உறுதிகூறினன். அங்கு முடிந்த முடிவினை மறுபடியும்

இவனிடம் வந்து நாரதர் முடவுறக்கூறினர். அவ்வமயம் இவன் அடைந்த துயரினை யார் அளவிடவல்லார்?. தனக்கு நேர்ந்துள்ள இடரினை நீக்குமாறு பலகோடி உபாயங்களை எண்ணினன். என் செய்வேன் என்று ஏங்கி இரங்கினன். முடிவில் அனுமனுதவியாலும், தெய்வத்திருவருளாலும் இவன் தப்பிப்பிழைத்து விரைந்து ஓடிவந்து முனிவர் அடியில் முடிபடிய விழுந்து வணங்கினன். அடியேன் பிழைத்ததைப் பொறுக்கவேண்டும் என்று போற்றிவேண்டினன். இவன் பேணி நின்ற நிலையினை அப்பெரியவர் கண்டார். பேரிரக்கங் கொண்டார். ஏ சகுந்தா!

கொல்லும் வெங்கொடுங் கூற்றினை யிகழினும் கூறும்
நல்ல நீரரை, நயந்தன யாவையும் முடிக்க
வல்ல வீரரை, மாதவத்தோர்களை, மதியிற்
செல்லும் தீரரைச் சிறிதும் நீ இகழ்ந்திடல் தெளிந்தோய்.

என மொழிந்து தேற்றி இவனை அவர் அருள் பொழிந்து விடுத்தார். பெரியாரைப பிழைத்தமையால் வந்த பிழையினையுணர்ந்து அன்று முதல் இவன் யாதும் பிழையாதொழுகினன். பெரியாரை ஒருவன் பேணுதொழுகினல் அச்செயல் அவனுக்குப் போாத பெருந்துன்பங்களைத் தந்துவிடும் என்பதை உலகம் காண இவன் நின்று உணர்த்தினன். விரிவை ஆனந்தராமாயணத்தில் காண்க.

நெறியா லுணராது நீர்மையு மின்றிச்
சிறியார் எளியார்க ளென்று—பெரியாரைத்
தங்கணோர் வைத்துத் தகவல்ல கூறுதல்
திங்களை நாய்குரைத் தற்று. (பழமொழி.)

திருவுந் தருவுந் திறலுங் குலிசப்
பொருபடை யாதிவலம் பூண்டும்—மருவிநின்ற
பொன்னனை இந்திரன்முன் போற்று திகழ்ந்தமையால்
என்ன துயரடைந்தான் எண். (தருமதீபிகை.)

எள்ளரிய மேலோரை எள்ளற்க எள்ளினே
தள்ளரிய துன்பந் தரும்.

பெரியாரை இகழ்ந்தால் பெருந்துயருண்டாம் என்பது இதனல் கூறப்பட்டது.

893 தீதார் துமிரனேன் தேருமல் அங்கதன்பாற்
கோதுசெய்து மாண்டான் குமரேசா—மோதிக்
கெடல்வேண்டிற் கேளாது செய்க அடல்வேண்டின்
ஆற்று பவர்கண் இழுக்கு. (௩)

இ—ள்.

குமரேசா! துமிரன் என்பவன் யாதுங் கேளாதுபோய் அங்கதனை அடித்ததனால் ஏன் உடனே மாண்டான்? எனின், அடல்வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு, கெடல்வேண்டின் கேளாது செய்க என்க.

இது, பெரியாரிடம் பிழைசெய்பவர் அழிவுறுவர் என்கின்றது

அடல் = கொல்லுதல். "அடல்-கொலை, வலி, போர் ஆகும்" என்பது நிகண்டு.

கேளாது செய்க என்றது முன்பின்ஆராய்ந்துபாராமல் செய்க என்றவாறு. இது துணிவும் விரைவும் மடமையும் தோன்ற நின்றது. ஒருவன் முறைகடந்து துடுக்காக ஒருகாரியத்தைச் செய்து விடுவனாயின் "நீயாரைக்கேட்டு இதுசெய்தாய்" என்று பிறரால் அவன் பின்பு சினந்துகேட்கப்படுதல் காண்க.

இனி, கேளாது என்றதற்கு நீதிநூல்களில் இது செய்யாதே என்று சொல்லியுள்ளதைக் கடந்து எனினுமாம்.

மேல், பெரியாரைப் போற்றவேண்டும் என்றார்; இதில், அவர் பால் யாதொரு இழுக்கும் செய்யலாகாதென்கின்றார்.

பகைவரை அழிக்கவேண்டின் அதனை அப்பொழுதே செய்ய வல்ல அரசரிடத்துப் பிழையினை ஒருவன் கெட்டொழியவேண்டின் கேளாமல் செய்க என்பதாம்.

தான்கெடுதற்கு யாரும் விரும்பமாட்டார் என்பது தோன்றக் கேடல் வேண்டின் என்றார். இங்ஙனம் வேண்டாததை வேண்டினால் அவன் மாண்டேபோவான் என்றபடி.

வலியார்க்கு மாறேற்றல் தீது என்பதாதியாக உறுதிபெற எவ்வளவோ உணர்த்தியும் உணராமல் அவர்மாட்டு அதனைச்செய்தல் கெடுநிலையாளர்க்கே முடியும் என அடிகள் முடிவுசெய்து நெடுது வாழவிரும்பினர் பெரியார்க்குப் பிழைசெய்யலாகாது என்று விழுமிதாக அறிவுறுத்தியிருக்கும் அழகை இதில் ஆய்ந்து பார்க்க.

தனக்கு நல்லவன் வல்லவர்க்கும் நல்லவர்க்கும் அல்லல் செய்யான் என்றவாறு.

கருதியதைக் கருதியபடியே முடிக்கவல்ல அடலுடையாரிடத்து அஃதில்லாதான் பிழைசெய்யலாகாது; செய்யின் அவன் சீரழிந்து சாவன் என்றபடி.

பெரியாரைச் சார்ந்தார்மேற் பேதைமைகந் தாகச்
சிறியார் முரண்கொண் டொழுகல்—வெறிபொலிக்கு
ஓநா யினம்வெரூஉம் வெற்ப புலம்புகின்
தீநாய் எடுப்புமாம் எண்கு. (பழமொழி.)

எண்கு=கரடி. தீநாய் என்றது கிடைநாயை. ஒருகாலத்தில் ஆட்டுக்கிடையைக் காத்துக்கிடந்த நாய் ஒருகாட்டுட்புகுந்து கரடியைக்கண்டு அதனை ஆடெனக்கருதி ஓடிமறித்து அதனால் உயிரழிந்ததுபோல் வலியுடையாரது நிலைதெரியாமல் அவர்பால் பிழைசெய்து சிறியார் அழிவுறுவார் என இது அறிவுறுத்திநிற்கும் அழகைப்பார்க்க.

காட்டுக் கரடிநிலை காணுமல் கௌவிமுன்
ஆட்டுக் கிடைநாய் அழிந்ததுபோல்—காட்டும்
பெரியார் நிலைகண்டு பேணுர் சிறியர்
உருவோ டழிவர் உடன். (தருமதீபிகை.)

என்பதும் ஈண்டு உள்ளத்தக்கது. பண்டு நிகழ்ந்த ஓர் கதையைத் தன்னகத்தே இது கொண்டுநிற்றல் காண்க. தனக்கு நாசகாலம் நேர்ந்தபோது தான் தன்னினும் வலியுடைய பெரியாரிடத்துக் கூசாமல் ஒருவன் குறும்புசெய்வான் என்பது குறிப்பு.

கேடுகள்யாதும் உறுமல் உயர்ந்தவாழ்வுடையனாய் ஒருவன் சிறந்து வாழவேண்டுமாயின் அவன் பெரியாரைப் பிழைக்கலாகாது என்பது கருத்து.

வல்லவற்கு அல்லல் செய்பவன் ஒல்லையிலழிவான் என்பது இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மைதுமிரன்பால் உணரப்படும்.

கதை

துமிரன் என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னிருந்த ஓர் அசுரவீரன். நருமதை நதிக்கு வடபாலிருந்த

பெரிய நிலப்பகுதியைத் தனக்கு உரிமையாக வுடையவன். கரிய உருவினன். நெடிய வடிவினன். கொடிய இயல்பினன். பெரிய வலியினன். அரிய வீரர் பலரோடும் அமர்புரிந்தவன். இவன் திருவும் திறலும் உடையனுயினும் அறிவும் அருளும் இல்லாதவன். நெஞ்சில் வஞ்ச மிலனுயினும் நஞ்சனைய வெஞ்செயலினன். எதிர் வதைஎண்ணுமல் எவரையும் எதிர்த்துவென்றவன். இவனது ஆட்சி யுட்புக அமரரும் அஞ்சினுர். அரக்கரும் குன்றினுர். யாவரும் நடுங்கி ஒடுங்குமாறு கொடுந்திறலுடையனுய் இவன் விளங்கி யிருந்தான்.

மலையே போல்வான்; மால்கடல் ஒப்பான்; மறமுற்றக்
கொலையே ஒப்பான்; கூற்றை நிகர்ப்பான்; கொடுமைக்கோர்
நிலையே போல்வான்; நீர்மைஇலாதான்; நிமிர்திங்கட்
கலையே போலும் காலஎயிற்றுன் கனல்கண்ணுன். (இராமாயணம்.)

என்பதாதியாக இவனைக்குறித்துக் கம்பர் கூறியுள்ளார். இங்ஙனம் இவன் இருந்து வருங்கால் அங்கதன்முதலிய வானர வீரர்கள் சீதையைத்தேடித் தென்திசை நோக்கி வந்தார். இவனது நகரருகேயிருந்த ஓர் இனிய நீர்நிலையை அணுகினுர். அது பொழுது சூரியன் மறைந்தான். இருள் கவிந்தது. விழுமிய அம்மலர்ப் பொய்கையைப் புடைசூழ்ந்திருந்த அழகிய சோலையில் அவரனைவரும் தங்கி அமர்ந்திளைப்பாறினுர். பின்பு அயர்ந்துறங்கினுர். இடையிருளில் இவன் அங்குவந்தான். யாதும் ஆராய்ந்து பாராமல், ஒருவரையும் ஒன்றும் கேளாமல் அங்கதன் மார்பில் விரைந்து ஓங்கி அடித்தான். அவ்வீரன் சிங்கஏறுபோல் சீறி எழுந்தான். கோபம் பொங்கிநின்ற இவனைக் குறித்து நோக்கினுன். இவன் இராவணனே? என்று முதலில் அவன் ஐயுற்றான். பின்பு இவனது நிலையினை நோக்கித் தெளிந்தான். உறங்கும் போது வந்து ஒன்றும் பேசாமல் மடமையோடு இங்ஙனம் அடித்த நீயாரடா? என்றுன். இவன் போரெதிர்ந்து பாரடா என்றுன். உடனே அவன் பாய்ந்தடித்தான். இடியுண்டமரம்போல் உடல் சிதைந்து இவன் மாய்ந்துவிழுந்தான். முறைகடந்துவந்து யாதும் கேளாமல் அங்கதன்பால் ஓர் இழுக்கைச் செய்ததால் இவன் இழிந்தழிந்தான். கெடல்வேண்டின் கேளாதுசெய்க; அடல்வேண்

டின் ஆற்றுபவர்கண் இழுக்கு என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

வல்லுநர்க் கல்லல் வருவித்தல் தன்னைத்தான்
கோல்லுதற் குற்ற குறி.

பெரியார்க்குப் பிழைசெய்ய லாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

894 கன்றிமுன் சானூரன் கண்ணனுக்குத் தீங்குசெய்தான்
குன்றியேன் மாய்ந்தான் குமரேசா—நின்றழலுங்
கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதார் இன்னா செயல். (ச)

இ—ள்.

குமரேசா! கண்ணனுக்கு இடர்செய்த சானூரன் ஏன் உடனே அவனால் மாண்டான்? எனின், ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல் கூற்றத்தைக்கையால் விளித்தற்று என்க.

இது, பெரியாரைப் பிழைத்தார்க்குப் பிழைப்பு இல்லையாம் என்கின்றது.

ஆற்றுவார் = வலியுடையார். ஆற்றாதார் = வலியில்லார்.

கூற்றம் = கூற்றுவன், எமன். அத்துச்சாரியை பெற்றுநின்றது. பலபெயர்களிருப்ப இங்கு இப்பெயரால் இவனைக்குறித்தது உயிரை உடம்பினின்றும் கூறுசெய்வோன் என்னும் விறுடைமை தோன்ற. கூறுசெய்தல் = பிரித்தல். கையால் விளித்தல் = கைகொட்டி அழைத்தல். அஃதாவது பராமுகமாய் முன்னோக்கிச் செல்கின்றவனை பின் நிற்கின்றவன் தனக்கு எதிர்முகமாகும் படி கையைத்தட்டி அழைத்தல் என்க. இங்ஙனம் அழைத்தல் இகழ்ச்சிக்குறிப்பாகும்.

மேல், வலியுடையார்க்கு இடர்செய்தல் கெடுதிக்கே ஏதுவாகும் என்றார்; இதில், அச்செயலுடையான் தப்பாமல் செத்தே தொலைவன் என்கின்றார்.

வலியுடையார்க்கு வலியில்லாதார் துன்பஞ்செய்தல் தானே

வந்து கொல்லவல்ல இயமனைக் கைதட்டி அழைத்தாற்போலும் என்பதாம்.

அறிவு ஆற்றல் தவம் பொருள் என்னும் இவற்றால் வலியராய்ச் சிறந்துள்ளாரை அவற்றில் மெலியராய் இழிந்திருக்கும் எளியவர் இகழ்ந்து இடர்செய்வராயின் உடனே அவர் கடுத்துவந்து இவரை அழித்தொழிப்பர் ஆதலால் இவர் செயல் கூற்றத்தைக் கையால் விளித்தற்று என்றார்.

வலியராய பெரியார்க்கு மெலியராய சிறியார் துன்பஞ் செய்வாராயின் அழிவுநேரும் என்பதனை உணர்த்தற்குக் கூற்றத்தை எடுத்துக்காட்டியது என்னை? எனின், தப்பாமல் அப்பொழுதே இவர் அழிந்துவிழ்வர் என்பதனை உறுதிபெற உணர்ந்துகோடற் கென்க.

இணையற்ற வீரனை இராமனுக்கு இன்னல்செய்து இராவணன் கூற்றின்வாய்ப்பட்டதுபோல் ஆற்றலுடையார்க்கு அல்லல்செய்பவர் தோற்றமறத் தொலைந்தேபோவர் என்றவாறு.

ஆற்றப் பெரியார் பகைவேண்டிக் கொள்ளற்க
போற்றாது கொண்டரக்கன் போரின் அகப்பட்டான்
தோற்ற பெருமை யுடையாரும் கூற்றம்
புறக்கொம்மை கொட்டினார் இல். (பழமொழி.)

இதில் அரக்கன்என்றது இராவணனை. தன்னைப் போரில்வென்ற கார்த்தவீரியனை நேரில்கொன்ற பரசுராமனையும் எளிதாக வென்ற அருந்திறலுடையான் என இராமனைஉணர்ந்து போற்றாமல் எதிர்த்து இன்னல்செய்து இலங்கையர்கோன் அழிந்ததை எடுத்துக்காட்டி ஆற்றுவார்க்கு இன்னா செயலாகாதென்பதை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. கூற்றம் புறக்கொம்மை கொட்டியதுபோல், அரக்கன் போற்றாது போரில் அகப்பட்டான் என அடிகள் சொற்பொருளை அடியொற்றி நிற்றலைப்பார்க்க. புறக்கொம்மை கொட்டல் = முதுகின் புறத்தேநின்று கையைத்தட்டியழைத்தல்.

தோற்றிலர் மகளிர் என்பார்; தோம்கண்டீர் தோள்கள் என்பார்;
கூற்றத்தைக் கொம்மை கொட்டிக் குலத்தொடு முடியும்என்பார்;
ஏற்றதொன் றன்று தந்தை செய்தவிக்கொடுமை என்பார்;
ஆற்றலன் சுநந்தை என்பார்; ஆகாது அரசே! என்பார்.
(சீவகசிந்தாமணி.)

முன் நின்று தன் தொடையைத் தட்டி "ஏ கள்ளக் கண்ணா! நீ வல்லவனானால் என்னுடன் மல்லமர் செய்யவா" என்று சொல்லித் துள்ளினான். கண்ணன் புன்னகைசெய்து வினயமாக ஓர் இன்னுரையாடிப் பின்பு வெகுண்டமர்புரிந்து அவனுயிரை விரைந்து விண்ணுலகேற்றினான். முன்னதாகவே கஞசன்முதலான கொடியர்களைக் கொன்றொழிக்கவேண்டும் என்று குறிக்கொண்டு நின்ற கண்ணனை வலிந்தழைத்து உடனே இவன் மடிந்துபோனதைக் கண்டு அனைவரும் இவனை இகழ்ந்து மகிழ்ந்தார். இவனுடன் வந்த முட்டிகன் என்பவனும் பலராமரால் முடிந்து தொலைந்தான். கூற்றத்தைக் கையால் விளித்தற்றால் ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னாசெயல் என்னும் உண்மையை உலகமகாண இவன் உணர்த்திநின்றான்.

தளையவிழ்ந்ததார்க் கண்ணனை யடைந்து சாணூரன்
களிமுகக் கடாக் களிற்றுவேற் காவலன் காண
விளையுமல்லமர் விளைக்குதும் யாமென விளம்ப
இளையமெனைய நின்னொடு பொருதுமென் றிசைத்தான். (1)

வருதிவல்லைநீ வருதிநின் மற்றொழில் விளங்கப்
பொருதியாலெனப் பொருப்புறழ் தோளினன் புகலக்
குருதிதோய்பிறைக் கோட்டி பிடுங்கிய கொற்றப்
பரிதிமார்பினன் ஏற்றனன் வேந்துளம் பனிப்ப. (பாகவதம்.) (2)

பொருநது சாணூரன் என்னும் பொருப்பினைத் தூசுவாரிக்
குருந்தின்மே விவர்ந்தகொண்டல் ஆருயிர் குடித்தானாக
திருந்தலர்க் குருமேறன்ன முட்டிகன் றன்னைசசீறி
அருந்திறலோடும் வெம்போ ரலாயுதன் கொன்றுவீழ்த்தான். (க)
(கூர்மபுராணம்.)

காலனைக் கைதட்டி விளித்ததுபோல் கண்ணனை இவன் வலிந்தழைத்து உடனே அழிந்த வுண்மை இவற்றின கண்ணும் விளங்குதல காண்க.

புல்லாய புலிமுன் புகுந்தற்றே போங்கியட
வல்லார்முன் மாட்டார் வரல்.

உயர்ந்தார்க்கு இடர்செய்தால் உடனே அழிவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

895 இன்டோள் அமரர்கோன் சீற மயனரணங்
கொண்டுமேன் மாண்டான் குமரேசா—தண்டாமல்
யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்பின்
வேந்து செறப்பட் டவர். (ரு)

இ—ள்.

குமரேசா! இந்திரனால் வெறுக்கப்பட்ட மயன் பாதலத்தில் புகுந்து மறைந்திருந்தும் ஏன் மாய்ந்துபோனன்? எனின், வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர் யாண்டுச் சென்று யாண்டும் உளராகார் என்க.

இது, வேந்தன் வெறுத்தால் பின்பு ஆந்துணையில்லை என்கின்றது. அரணம் கொண்டும் மாண்டான்என்றது யாரும் புகுதற்கரியபடி பெரிய அரணமைத்துப் பாதலத்தில் மறைந்திருந்தும் இறந்து பட்டமை கருதி. துப்பு = வலி.

அரக்கும் பவளமும் ஆயுதப் பொதுவும்
துணையும் வலியும் பொலிவும் நெய்யும்
அனுபவமும் தூய்மையும் துப்பேன லாகும். (பிங்கலந்தை.)

வெம் துப்பின் வேந்து = வெய்ய வலியினையுடைய அரசன். வலிக்கு வெம்மையாவது பகைவர் அஞ்சத்தக்க தன்மை.

"தீயெனக் கொடிய வீரச் சேவகச் செய்கை கண்டால்
நாயெனத் தகுதுமன்றே! காமனும் நாமுமெல்லாம்."

என்று இராமனது அழகையும் ஆற்றலையும் நேரில்கண்ட பின்பு தன் பாட்டனிடம்வந்து இராவணன் வியந்துகூறியுள்ளமை காண்க.

யாண்டும் உளராகார் = எவ்விடத்தும் உயிர்த்து நிலைத்திருக்க மாட்டார்; உயிரிலராய் ஒழிந்தே போவர் என்றவாறு. யாண்டும் என்பது ஈண்டு இடப்பொருட்டாய் நின்றது. உம்மை முற்றுப் பொருளது.

மேல், வலியுடையார்க்குப் பிழைசெய்தார் உடனே அழிவுறுவார் என்றார்; இதில், அவர் எங்கே ஓடி ஒளித்தாலும் உயிர் வாழ முடியாதென்கின்றார்.

வெவ்விய வலியுடைய அரசனால் வெறுத்து வெகுளப்பட்டவர் பின்பு எங்கேபோய் யாரிடம் ஒளித்திருந்தாலும் எவ்வகையிலும் பிழைக்கமாட்டார் என்பதாம்.

அருந்திறல்வாய்ந்த பெருந்திருவேந்தன் ஒருவனை வெறுத்துச் சினந்தால் எங்குப்போய் யாரைத்துணைக்கொண்டு எப்படி மறைந்திருந்தாலும் அவன் உயிரழிதல் தப்பாது என்பார் "வேந்து செறப் பட்டவர், யாண்டும் உளராகார்" என்றார்.

தீயன வல்ல திறல்வேந்தன் செய்யினும்
காய்வன செய்தொழுகார் கற்றறிந்தார்—பாயும்
புலிமுன்னர்ப் புல்வாய்க்குப் போக்கில் அதுவே
வலிமுன்னர் வைப்பாரம் இல். (பழமொழி.)

வேந்தன் செறும்வகை செய்யலாகாது; செய்தார் உய்யார் என இஃது உணர்த்திநிற்றல் காண்க.

வேந்தன் சீறின் ஆந்துணை இல்லை. (ஔவையார்.)

இராமனால் செறப்பட்ட சயந்தன் யாண்டுச்சென்றும் யாண்டும்உளனாகாமல் மீண்டுவந்து அவ் ஆண்டகையினடியில் விழுந்து வேண்டிநின்றபின் உயிர்பிழைத்திருந்தமை ஈண்டு உணரத்தக்கது.

அரசன் செறும்படியான பிழையினை மறந்தும் வரும்படி செய்யாமல் அவனைமதித்துப்பேணி ஒருவன் ஒழுகிவரவேண்டும் என்பது கருத்து.

அரசியற் பாரம்பூரித் தயர்ந்தனை இகழாதையன்
மரைமலர்ப் பாதநீங்கா வாழுதி; மன்னரென்பார்
எரியனற்குரியார் என்றே எண்ணுதி; எண்ணம்யாவும்
புரிதி; சிற்றடிமை குற்றம் பொறுப்பரென்றெண்ணவேண்டா
(இராமாயணம்.)

இது, இராமனைப்பேணி ஒழுகுமாறு சுக்கிரீவனுக்கு வாலி உரைத்தது. அரசரை நெருப்பு என்று நினைந்தொழுகவேண்டும். அவர் வெறுப்பன செய்யலாகாது; செய்யின் யாண்டும் உய்தி யில்லையாம் எனத்தம்பிக்கு அவன் உறுதிபெற இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றிப்பார்க்க. புரிதி = பேணிச்செய்.

மன்னன் ஒருவனை வெறுத்தால் பின்னர் அவனுக்கு எங்கும் பிழைப்பில்லையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பயன்பால் உணரப்படும்.

## கதை.

மயன் என்பவன் அசுரத்தச்சன். மிக்க தெய்வத்தன்மை வாய்ந்தவன். தேவசிற்பியாகிய விசுவகர்மனும் வியக்கத் தக்க வினைத்திற முடையவன். எனைத்துணை நகரங்களையும் நினைத்தவுடனே நினைத்தபடி படைக்கவல்லவன். அருந்தவஞ்செய்து எவரேனும் அசுரவேந்தர்களாய்த் தலையெடுத்தபொழுது இவனை விரும்பி அழைத்து உவந்துபசரித்துத் தமக்குவேண்டிய நகரங்களைப் படைத்தருளும்படி வேண்டுவர். அவ்வாறே இவன் ஆக்கியருளுவன். இவன் இயற்றியருளிய விசித்திரமான மாடமாளிகைகளும் மணிமண்டபங்களும் ஆடரங்குகளும் அமிர்தவாவிகளும் அழகிய பொய்கைகளும் அளவிடலரியன. பார்த்து திரியும்படி திரிபுரங்களை அற்புதமாகப் படைத்துத்தந்தவனும் இவனே. இவன் தருச்சனைஎன்னும் ஓர் அழகிய மங்கையை மணந்து விழுமிய போகங்களை நுகர்ந்து ஏமபுரி என்னும் இனிய நகரிலிருந்தான். மாயாவி துந்துபி என்பவர் இவன் புதல்வராவர். இவனுடைய அருமைத் திருமகளும் பேரழகியுமாகிய மண்டோதரி பருவமெய்தியவுடனே, அவளது தகுதிக்குத்தகுந்த மணமகனை நாடி மனமிக வருந்தினன். ஒருநாள் இராவணனைக்கண்டான். அவனது பெருமிதத்தையும் பொலிவையும் நோக்கித் தனக்கு அருமை மருமகனாக அவனை ஆக்கிக்கொள்ள இவன் ஆசைகொண்டான். தன் மகளை அவன் பார்க்கும்படி ஒரு சூழ்ச்சியைச்செய்தான். அவன் கண்டான் உடனே கரைகாணாத பெருங்காதல் கொண்டான். "இவள் யாவள்? நீ யார்?" என்று நேர்நின்று இவன்பால் நேசமிகுந்து அவன் வினவினான். அப்பொழுது அவனை நோக்கி இவன் கூறியன இதனடியில் வருகின்றன.

### மயன் உரைத்தது.

தாமநெடும் புயத்தோய்! யான்தயித்தியர்கோன் மகனென்னத்தகுவேன் பண்டு
மாமலர்மேல் திருவொக்கும் வடிவுடைய தருச்சனையை வானேரீய
எமபுரி என்பதெனக்கிருப்பாக யான்நிருமித்தவளும் நானும்
காமமெனும் பெருங்கடற்கோர் கரைகாணா தைஞ்ஞூறாண்டிருந்தகாலை.

அங்கவள்தன் மணிவயிற்றில் வந்துபிறந்தவள் மண்டோதரி என்பாளிம் மங்கையுடன் பிறந்தோர்கள் மாயாவி துந்துபியில் வலியில்மிக்கார் இங்கிவள்தன் குணத்துக்கும் எழிலுக்கு நிகரொக்கும் வரனைக்காணு தெங்குமுழன் றிவ்வனத்தி னிடைப்புகுந்தேன் என்றுரைத்திங்கிவை பின்சொல்லும்.

குலம்வேண்டும் என்றிருப்பார் குலத்துள்ளார்; கல்வியினால் குறையா ஞானப்
பலம்வேண்டும் என்றிருப்பார் தந்தைமார்; பரந்தபெருஞ் செல்வ முள்ள
தலம்வேண்டும் என்றிருப்பார் தாய்மார்கள்; யவ்வனமும் அழகும் சார்ந்த
நலம்வேண்டும் என்றிருப்பார் நாறுகுழல் நங்கைமார் நலத்தின் மிக்கார். (௩)

பண்புடைய குடிப்பிறப்பும், பழிப்பில்லாப் பேரழகும், பரந்த கேள்வி,
நுண்பொருளை நீரொழியப் பால்நுகரும் அன்னம்போல் நோக்கித்தீரும்
ஒண்பொருளும், இந்நான்கு முடையாரைக் கிடையாதிவ் வுலகந் தன்னில்
பெண்பெறுகை போலிந்தப் பெரியதுயர் தானுண்டோ பேசுங் காலே. (௪)

(உத்தரகாண்டம்.)

நல்ல பெண்மக்களைப்பெற்றுத் தக்க வரன்கிடையாமல் வைத்துக்கொண்டு வருந்தியிருப்பவரெவரும் இறுதியிலுள்ள இவ்விரண்டு கவிகளையும் மறந்துவிடார். இங்ஙனம் உறுதிநலங்களை மிக்க நயமாக இவன் இனிதுரைத்துத் தன் மகளை இலங்கை மன்னனுக்கு மணஞ்செய்து தந்தான். இவ்வாறு சிறந்த மதிமானாய் விளங்கியிருந்த இவன் இந்திரன் வெகுள்வதோர் பிழைபுரிந்தான். அவனது அரங்கக்கூத்திகளுள் ஒருத்தியாகிய ஏமை என்பவளைத் தனக்குக் காமக்கிழத்தியாக இவன் காதலித்துக்கொண்டான். இதனைச் சிறிதறிந்து அவன் வெகுண்டிருந்தான். இனி இங்கிருந்தால் இடர்செய்வன் என்றெண்ணி ஒருவரும் அறியாமல் அவளை உடனழைத்துக்கொண்டு இவன் அதலம்புகுந்தான். அங்கிருந்த அரசர் பலரும் இவன் இந்திரனால் வெறுக்கப்பட்டு வந்துள்ளான் என்று

தெரிந்து யாதும் விரும்பாது விடுத்தார். இவன் பின்பு பாதலத்தில் புகுந்து ஓர் அழகியநகரினை அமைத்து அங்கு அவளோடு அமர்ந்து இன்புற்றிருந்தான். அந்நகரின் அமைதியைக் குறித்துக் கம்பர் நன்கு கூறியுள்ளார்.

இந்திர நகரமும் இணையிலாதது
மந்திர மணியினிற் பொன்னின் மண்ணினில்
அந்தரத் தெழுசுட ரவையின் றியினும்
உந்தரும் இருள்துரந் தொளிர நிற்பது. (க)

கற்பகக் கானது கமலக் காடது
பொற்பெருங் கோபுரப் புரிசை புக்கது
அற்புத அமரரும் எய்த லரவது
சிற்பியாம் மயன் மனம் வருந்திச்செய்தது. (உ)

இங்ஙனம் செய்து அதில் இவன் இருந்து வாழ்ந்துவருங்கால் இந்திரன் மிகக்கொதித்துப் பல இடங்களிலும் தேடி முடிவில் அங்கு வந்து கண்டான். கடுத்துத் தன்கைக்குலிசத்தால் இவனைக் கொன்று முடித்தான். தன்னல் ஆனவரையுமுயன்று வானவர் கோனுக்குத்தப்பி ஓடி ஒளித்திருந்தும் இவன் உயிருய்யா தொழிந்தான். வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர் யாண்டுச்சென்று யாண்டும் உளராகார் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்திநின்றான். விரிவை இராமாயணத்தில் காண்க.

அடல்வேந்தர் சீறின் அவனியில்வாழ் வின்றாம்
கடல்கோதித்தால் மீனேன்னுங் காண்.

பெரியார் வெறுக்குமாறு நடக்கலாகாதென்பது இதனல் கூறப்பட்டது.

---

896 வாதாவி அண்ணனுடன் வந்தான் குறுமுனிக்கேன்
கோதுசெய்து மாண்டான் குமரேச—மோதும்
எரியாற் சுடப்படினும் உய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார். (ரு)

இ—ள்.

குமரேசா! தன் அண்ணனை வில்வலனேடு வந்து குறு

முனிக்கு ஓர் பிழைசெய்ததால் வாதாவி என் குன்றி அழிந்தான்? எனின், எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம்; பெரியார்ப் பிழைத்தொழுகுவார் உய்யார் என்க.

இது, தூயவர் வெகுளி தீயினும் கொடிதாம் என்கின்றது.

எரி = தீ. உம்மை, உய்வில்லாதபடி உயிரழிக்கவல்ல அதன் வெம்மைத்தன்மையை விளக்கி நின்றது.

உய்வு உண்டாம் = பிழைப்பு உண்டாம். உய்தல் = தப்பிப் பிழைத்தல்.

மேல், ஆற்றலால்பெரிய அரசர்க்குப் பிழைசெய்தவர் எங்கே போய் எவ்வாறு ஒளித்தாலும் அவர் பிழைக்கமாட்டார் என்றார்; இதில், தவத்தால் பெரியமுனிவர்க்குப் பிழைசெய்தவர் எவ்வாற்றானும் உயிருய்ய மாட்டார் என்கின்றார்.

தீயால் ஒருவன் சுடப்பட்டானாயினும் ஒருவகையில் உயிருய்தல் உண்டாம்;பெரியாரைப் பிழைத்தொழுகுவார் எவ்வகையிலும் உய்யமாட்டார் என்பதாம்.

பெரியாரை எரியோடிணைத்து வைத்தது எவரையும் எளிதழிக்கவல்ல அவரது தவவலிகருதி என்க. எரி உடம்பைப்பற்றி எரித்தழிக்கச் சிறிது காலம் வேண்டும்; அதனிடையில் விலகல், ஏற்ற பரிகாரம் செய்தல் முதலியவற்றால் தப்பினும தப்பலாம்; பெரியார்வெகுளி அங்ஙனமின்றிக் கபிலர் கனலச் சகரர் சாம்பலானது போல் அப்பொழுதே அழித்தொழிக்குமாதலால் அவர்பால் பிழை செய்தார் உய்யார் என்றார்.

பிழைத்தொழுகலாவது இளித்துக்கூறல், எதிர்த்து நிற்றல், எளியது மறுத்தல், இடருறச்செய்தல் முதலியன.

எரியிடைப்பட்டவராவது ஒருவாறு உய்யினும் உய்வர்; பெரியார் வெகுளியுட்பட்டவர் எவ்வாற்றானும் உய்யமுடியாதென்றது அவர்பால் யாதொருபிழையும் செய்யலாகாதென உணர்ந்து உய்தற் கென்க.

நீத்தவ ராகியோர் நெருப் புயிர்த்திடில்
காத்திடுங் கடவுளும் கலங்கும் ஆதலால்
எத்துவ மேதகடன் என்று மைந்தனே
அத்தர்கள் பொறுப்பரென் றவமதித் திடேல். (விநாயகம்.)

அகத்தியரைப் பிழைத்தொழுகினமையால் இந்திரத்துய்மன் தன்பதம் இழந்து உடனே யானையாய் இழிந்ததுபோல் இழிய நேருமாதலால் பெரியார்பால் என்றும் எவ்வகையிலும் பிழைபுற ஒழுகலாகா தென்க.

பெரியோர்கள் மனங்கன்றுமாறு ஒருவன் நின்றொழுகுவனு யின் அவன் அடியோடு பொன்றி வீழ்வன் என்பது கருத்து.

தீயினும் அஞ்சிப் பெரியாரைப் பேணி ஒழுகவேண்டும் என் பது குறிப்பு.

பெரியார்க்குப் பிழைசெய்தவன் ஒருபோதும் உயிருய்யமா ட்டான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வாதாவிபால் உணரப்படும்.

## கதை

வாதாவி என்பவன் அசமுகியின் புதல்வன். வில்வலனுக்குப் பின்னவன். இவன் மிகக் கொடியவன். வஞ்ச வினைகள் செய்வதில் வல்லவன். தனது தாய் மாமனாகிய சூரபதுமனுக்கு இனிய துணை வனாய் நின்று முனிவருக்கும் அமரருக்கும் இடர் பல செய்தவன். எவரும் அறியாதபடி மயல் வினை புரிந்து மாதவர் பலரை மாபோ ட்டழித்தான். இவனது கொடுமையை யஞ்சி அனைவரும் குடல் கலங்கி நின்றார். இங்ஙனம் இருந்து வருங்கால் ஒருநாள் விந்த மலைக் கருகே அகத்திய முனிவரைக் கண்டான். நல்லவன்போலக் கள்ள வேடங் கொண்டு தன் அண்ணனாகிய வில்வலன் அவர் முன் செல்ல இவன் ஓர் ஆடுபோலமர்ந்து அங்கு மேய்ந்து நின்றான். சென்ற அவன் வஞ்சமாக அவரை விருந்துக் கழைத்தான். அவர் இசைந்து வந்தார். உருமாறி நின்ற இவனை உண் பொருளாக்கி உணவுடன் கலந்து அவன் முனிவருக்கு ஊட்டினான். அவர் கர வொன்றுங் காணாது கனிந்து உண்டு ஓரிடத்தில் இனிதமர்ந்திருந் தார். அவன் வழக்கப்படி "தம்பி! வாதாபி! இங்குவா" என்று அழை த்தான். குறுமுனிவரது வயிற்றுக்குள்ளிருந்து இவன் குறு குறு வென்றான். "அண்ணு, இதோவருகின்றேன்" என்று உருவாகிஉறு மினான். அவர் அறிந்தார். இப்படியே முனிவர்பலரை வஞ்சித்து இவர்கொன்றுவந்ததைச் சிந்தித்துணர்ந்தார். வலதுகையால் தனது

வயிற்றைத் தடவினர். உடனே எரியுண்ட பஞ்சுபோல் அவர் வயிற்றிலிருந்தே இவன் எரிந்து தொலைந்தான். வில்வலன் வெகுண்டு மேல்வந்தான். ஓர் புல்லிய துரும்பையெடுத்து அவன்மேல் மெல்ல வீசினர். அது பொருபடைபோல் சென்று அவனைக் கொன்று தொலைத்தது. இவ்விருவரும் இறந்தொழிந்ததை யறிந்து எல்லாரும் இன்பமெய்தினர். முனிவர் சிறுநகைசெய்து தென்திசைநோக்கிச் சென்றார். அவரது பெருமையை வியந்து அமரர்முதலனைவரும் புகழ்ந்து போற்றினர். எரிபால் சுடப்படினும் உய்வுண்டாம்; பெரியாரைப் பிழைத்தொழுகுவார் உய்யார் என்னும் உண்மையை உலகங்காண இவர் உணர்த்திநின்றார்.

வேதாஅளித்த வரமுன்னியே வில்வலனென்னும் வெய்யஅசுரன்
போதாஇருந்த முனிஆவி கோடல் பொருளாக நெஞ்சில்நினையா
வாதாவிமைந்த இளையாய்விரைந்து வருகென்று கூற முனிவன்
தீதார்வயிற்றி னிடையே யெழுந்து திறல்மேடமாகி மொழிவான். (1)

எண்ணமிலே முன்பு கடலுண்டதேபோல எனதானுமுண்ட கொடியோன்
உண்ணுடு முயிர்கொண்டு வலிகொண்டு குழிதான உதரங் கிழித்து வருவன்
அண்ணாவிலவலனே யெனக்கூறியே தம்பி அரிபோல் முழங்கியிடலும்
மண்ணுடர்புகழ் கும்பமுனிநீயர் செய்திட்டமாயந் தெரிந்து வெகுள்வான். (2)

ஊன்கொண்டகறியாகி நுகர்வுற்றவாதாவி யுயிர்போகியுண்ட இயல்பே
தான்கொண்டுமுடி சென்று சடாத்தையொருகாலை தமிழ்வல்லமுனி தடவலும்
கான்கொண்டஎரி மண்டு சிறுபுன் புதர்போன்று கடியோனு முடிவாகவே
வான்கொண்டலென அங்கண்முன்னின் றவன் றம்பிமாய்வுற்ற துன்னி வருவான். (3)

மெய்க்கொண்டதொன்ன ளுருக்கொண்டு முனிதன்னை வெகுளுற்றெர் தண்டமதனைக்
கைக்கொண்டு கொலையுன்னி வருபோழ்தின் முனிவன்கரத்திற் றருப்பையொன்றை
மைக்கண்டர் படையாக நினைகுற்று விடவில்வலன்றனுமடி வெய்தலும்
அக்கண்டசுக்கள்வ ருறையுற்றவிடநீங்கி அப்பாலகன்றனனரோ. (4)

(கந்தபுராணம்.)

பெரியார்பாற் பிழைசெய்த அக்கொடியார் அழிந்த உண்மை இதன்கண் விளங்குதல்காண்க.

மாசில் பரீட்சித்து மன்னனேனோர் மாதவனை
ஆசில் இகழ்ந்துபிழை ஆற்றியதால்—தேசழிந்து
செத்தொழிந்தான் நற்றவர்க்குத் தீங்குசெய்த பின்பெவரே
இத்தரையில் வாழ்ந்தார் இனிது. (தருமதீபிகை.)

சேத்தோழிய வேண்டினோர் சீறிப் பெரியார்பால்
எற்றேனும் செய்வர் இழுக்கு.

பெரியாரைப் பிழைத்தால் பின்பு பிழைப்பில்லையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

897 தேர்ந்த துருவாசர் சீறினர் வான்வாழ்க்கை
கூர்ந்தழிந்த தென்னே குமரேசா—சார்ந்த
வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்
தகைமாண்ட தக்கார் செறின். (ர)

இ—ள்.

குமரேசா! துருவாசர் ஒருமுறை சினந்தவுடனே இந்திர வாழ்வெல்லாம் ஒருங்கே ஏன் ஒழிந்து போயின? எனின், தகைமாண்ட தக்கார் செறின், வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும் என்க.

இது, உயர்ந்தார் சினந்தால் சிறந்தவாழ்வும் சிதைந்து போம் என்கின்றது.

வகை மாண்ட வாழ்க்கை = பொன், மணி, நெல்முதலியவகைகளால் மாட்சிமைப்பட்ட வாழ்க்கை. படை, குடி, கூழ், அரண் அமைச்சு முதலிய வகைகளால் சிறந்த எனினுமாம்.

வான்பொருள் = மிகுந்தபொருள். வான்என்பது உயர்ச்சி பெருமை சிறப்புமுதலியவற்றை யுணர்த்திவரும். துறக்கப்பொருளையும் இது குறிக்க நின்றது.

தகை மாண்ட தக்கார் என்றது அடக்கம் அருள் அமைதி நடுநிலை முதலிய குணநலங்களால் சிறந்த பெரியார் என்றவாறு.

என்னும் என்றது அவ்வாழ்வும் பொருளும் யாதுமின்றி அடியோடு அழிந்துபோம் என்றவாறு.

தகுதிவாய்ந்த பெரியார் வெகுள்வராயின் மிகுதி வாய்ந்த உயர்ந்த வாழ்வும் சிறந்தபொருள்களும் ஒருங்கே அழிந்து போம் என்பதாம்.

தம்செல்வமுடைமை கருதிச் செருக்கி நின்று பெரியார்பால் அரசர் பிழைசெய்வராயின் அவர்வெகுளியால் நெருப்பிடைப்பட்ட துரும்பு போல் ஒருங்கேஅழிந்து ஒழிந்துபோம் ஆதலால் சேறின் என்னும் என உன்னியுணருமாறு உணர்த்தி யருளினர்.

"மணி பொன் அமைந்த மாளிகை வகையும்
அணிமலர்ப் பொய்கையும் அழகமர் சோலையும்
வாழைக் கானமும் பாளைக் கமுகும்
தேரும் களிறும் ஊரும் புரவியும்
கண்கவர் கலனும் கதிர்முத் தாரமும்
எண்புக லரிய பண்புயர் படையும்
நேரெதிரில்லா நிறைந்த வாழ்வினன்".

என்றபடிசிறந்து நின்ற கந்தருவவேந்தனாகிய நகு என்பவன் தூலசிரசு என்னும் முனிவர் சீறியவுடனே யாவும அடியோடு பூண்டு இழிந்தொழிந்ததும் ஈண்டுஎண்ணத்தக்கது.

செல்வச்செருக்கால் பெரியோரை அவமதிக்கலாகாதென்பது கருத்து. இந்திரவாழ்வெய்தியிருந்தாலும் பெரியாரை என்றும் வந்தித்துப் போற்றவேண்டும் என்பதுகுறிப்பு.

சிறந்தமுனிவர்கள் சினந்தால் உயர்ந்தஅரசவாழ்வும் ஒழிந்து போம் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை துருவாசர் பால் உணரப்படும்.

கதை.

துருவாசர் என்பவர் அத்திரி முனிவரது புத்திரர். தாய் பெயர் அநசூயை. இவர் கருவிலேயே பெருந்தவத்தினராய்ப் பிறந்திருந்தனர். இவர் இளங் குழந்தையா யிருக்கும் பொழுது சகபன் என்னும் ஓர் வேகன் வந்து தம தந்தையை இகழ்ந்து

பேசினன்; அருகிருந்த இவர் அவனைச் சினந்து நோக்க உடனே அவன் எரிந்து சாம்பலாயினன். இவரது பெருந்தவமுடைமையை அறிந்து அருந்தவரும் அஞ்சினர். எந்த முனிவருக்கும் கிடையாத ஓர் புதிய விந்தை இவர்க்குத் தனியுரிமையாயமைந்திருந்தது. சாபமும் கோபமும் தவத்தைக் குன்றச் செய்யும் தன்மையன. அவ்விரண்டும் இவர்க்கு மட்டும் தவத்தை வளர்க்கும் நன்மையுடையனவாய்ச் சார்ந்திருந்தன. அதனால் இவர் கோப முனிஎனக் கூற நின்றார். "சாபத்தாலும் சாபமொழி தன்னால் வளரும் தவத்தாலும் கோபத்தாலும் பேர் படைத்த கொடிய முனிவன் துருவாசன்" என வில்லியாழ்வார் இவரைக் குறித்துச் சொல்லியுள்ளார். கலகம்மூட்ட மூட்ட நாரதர் சிறந்து நின்றது போல் கோபம் காட்டக் காட்ட இவர் உயர்ந்து நின்றார். இவர் மனங்கோணுதபடி ஒருவன் அமர்ந்து நடந்தால் அவன் பின்பு சிறந்த பதத்தையடைந்து திகழ்வான். கருவாசம் கட்டறுந்த துருவாசர் என ஒருவாசகந்தோன்ற இவர் உயர்ந்து விளங்கினர். இங்ஙனம் விளங்கிநின்ற இவர் ஒருமுறை வானுலகையடைந்தார். அங்கு இசைநூல் வல்ல ஓர் விஞ்சையர்மங்கை திருமகள்முன் போய்ப்பாடி அவள் அருள்சுரந்து கொடுத்த மலர் மாலையைக்கைக் கொண்டுவந்தாள். இவரைக் கண்டு மகிழ்ந்தாள். அதனைத்தந்து போயினள். இவர் அம்மாலையுடன் அமராவதியை யடைந்தார். அதுபொழுது இந்திரன் ஐராவதத்தின்மேலமர்ந்து எதிரே பவனி வந்தான். அப்பவனிக் காட்சியை அடியில் காண்க.

## இந்திரன் பவனிச் சிறப்பு.

பெய்யுமாமுகில் வெள்ளியம் பிறங்கல்மீப் பிறழும்
செய்யதாமரை ஆயிர மலர்ந்துசெங் கதிரின்
மொய்யசோதியை மிலேச்சிய முறைமைபோன் ஞெளிரும்
மெய்யினேடையி ராவதக் களிற்றின்மேல் விளங்க. (க)

அரம்பைமேனகை திலோத்தமை உருப்பசி யனங்கன்
சரம்பெய் தூணியிற் றளிரடி நூபுரந்தழைப்பக்
கரும்பையும்சுவை கைப்பித்த குதலையர் விசரி
நிரம்புபாடலோ டாடினர் வீதிகள் நெருங்க. (உ)

நீலமால்வரை தவழ்தரு கதிர்நிலாக் கற்றை
போலவேயிரு புடையினுஞ் சாமரை புரளக்
கோல மாமதி குறைவற நிறைந்தொளி குலாவ
மேலிவர்ந்தெனு வெள்ளியந் தனிக்குடை விளங்க. (ஙு)

தழங்குபேரியும் குறட்டொடு பாண்டிலும் சங்கும்
வழங்குகம்பலை மங்கல கீதத்தை மறைப்ப
முழங்குநான்மறை மூரிநீர் முழக்கென வுலகை
விழுங்குமாவரும் விழாவணி கண்டுளம் வியந்தான். (சு)

இங்ஙனம் வியந்த இவர், உள்ளேபுகுந்து அருகே நெருங்கி நின்று தம்கையிலிருந்த மாலையை அவன் பெற்றுக் கொள்ளுமாறு பேணி நீட்டினர். அவன்செருக்கின் பெருக்கால்இவரை மதித்துப்பாராமல் இகழ்ச்சிக்குறிப்போடு அதனைத்தோட்டியால் வாங்கி யானைப்பிடர் மேல் வைத்தான். இவர் சித்தங் கொதித்தார். சீறிக்குதித்தார். பாரில்மிதித்தார். மாறிவிழித்தார். அப்பொழுது இவர்கொண்ட கோபத்தை யார்கூறவல்லார்? "ஏ இழிகண் இந்திரா! உன் செல்வச்செருக்கால்என்னைநீஅவமதித்தாய். உன்வாழ்வு முழுவதையும் இழந்துநீதாழ்வடைந்துபோக" என்றுபொங்கிச்சபித்தார். உடனே வானிலுள்ள வளங்களெல்லாம கடலிடைப்புகுந்தன. அவனும் கடுந்துயர மடைந்து கலங்கி யிழிந்தான். தகை மாண்ட தக்கார் செறின், வகைமாண்ட வாழ்க்கையும்வான் பொருளும் அடியோடு மாய்ந்துபோம் என்னும் உண்மையைஉலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. இவர்சினந்துசெய்த தன்மையைக் குறித்துக் கம்பர் நன்குகூறியுள்ளார். அடியில் வருவன காண்க.

துருவாசர்இந்திரனைச் சந்தித்தது.

தனையொவாதவன் மகிழ்ச்சியால் வாசவன் தன்கை
வனையுமாலையை நீட்டலும் தோட்டியால் வாங்கித்
துனைவலத்தயி ராவதத் தெருத்திடைத் தொடுதகான்
பனைசெய் கையினுல் பறித்தடிப் படுத்ததப் பகடு. (க)

துருவாசர் கொண்ட கோபம்.

கண்டமாமுனி விழிவழி யொழுகுவெங் கனலால்
அண்டகூடமும் சாம்பரா யொழியு மென்றழியா
விண்டுநீங்கினர் விண்ணவ ரிருசுடர் மீண்ட
எண்டிசாமுகம் இருண்டன சுழன்றதெவ் வுலகும். (உ)

### கோபநிலே.

*புகையெழுந்தன வுயிர்தொறும் எயில்பொடித் தவனின்*
*நகையெழுந்தன நிவந்தன புருவநன் னுதலிற்*
*சிகையெழுஞ்சுடர் விழியினன் அசனியுந் திகைப்ப*
*மிகையெழுந்திடு சதமக கேனென வெகுண்டான்.* (ரு)

### மாலேயின் வரலாறு.

*பூதநாயகன் புவிமகள் நாயகன் பொருவில்*
*வேதநாயகன் மார்பகத் தினிதுவீற் றிருக்கும்*
*ஆதிநாயகி விருப்புறு தெரியல்கொண் டணைந்த*
*மாதரான்வயின் பெற்றனன் முயன்றமா தவத்தால்.* (சா)

### சபித்தல்.

*இன்றுநின்பெருஞ் செல்விகண் டுவகையின் ஈந்த*
*மன்றலந்தொடை இகழ்ந்தனை நினதுமா நிதியும்,*
*ஒன்றலாதபல் வளங்களும், உவரிபுக் கொளிப்பக்*
*குன்றிநீதுயர் உறுகென உரைத்தனன் கொதித்தே.* (எ)

### வான்பொருள் போனமை.

*அரமடந்தையர், கற்பகம், நவநிதி, அமிர்தம்*
*சுரபிவாம்பரி மதமலே முதலிய தொடக்கற்*
*றொருபெரும்பொரு ளின்றியே யுள்ளன வெல்லாம்*
*வெருவி யோடிப்புக் கொளித்தன விரிதிரைக் கடலின்.* (கூ)

(இராமாயணம்.)

பெரியாரைப் பிழைத்தொழுகினமையால் இந்திரன் வகை மாண்ட வாழ்க்கையும், வான்பொருளும் போய் இங்ஙனம்நொந்துழந்தான் ஆதலால் அவர்பால் யாதும்பிழைபுரியாது யாண்டும் பேணி யொழுக வேண்டுமென்க.

சேஞ்சோன் முனிவர் சினந்தால் திருவெல்லாம்
பஞ்சேரியுட் பட்டதாம் பாழ்.

பெரியாரை இகழ்ந்தவர் திருவிழந்தொழிவர் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

898 அன்று மரீசி அகந்திரிந்தார் துங்கனேன்
குன்றி அழிந்தான் குமரேசா—என்றுமே
குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து (அ)

இ—ள்.

குமரேசா! மரீசிமுனிவர் கன்றி நினைத்தவுடனே சயதுங்கன் ஏன் நிலைதிரிந்து மாய்ந்தான்? எனின், குன்று அன்னார் குன்ற மதிப்பின் குடியொடு நின்றன்னார் நிலத்து மாய்வர் என்க.

இது, பெரியார் சினந்தால் குடி அடியோடழியும் என்கின்றது.

நின்றன்னார் என்றது என்றும் அழிவின்றி நெடுந்திருவோடு சிறந்து நிலைபெற்றாற்போல் நின்றவர் என்றவாறு.

குன்று அன்னார் = மலையை ஒத்தவர். என்றது பெரியாராகிய முனிவரை. திண்மை, தலைமை, வெயில் மழை முதலிய எவற்றிற்கும் சலியாது நிற்குந்தன்மை, உயர்பயனுடைமை, நிலைதிரியாமை முதலிய நலனுடைமை கருதி மலையை மாதவர்க்கு உவமையாக வைத்தார். குணமேன்னும் குன்று ஏறி நின்றார் என முன்குறித்துள்ளதும் காண்க.

அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரும் வண்மையும் மலைக்கே.

என விளக்கி நன்னூலார் இதனை நல்லாசிரியனுக்கு உவமையாக்கியுள்ளார்.

மல்லல் மலையனைய மாதவரை வைதுரைக்கும்
பல்லவரே யன்றிப், பகுத்துணைப் பாவிகளும்,
அல்குல் விலைபகரும் ஆய்தொடிய ராதியார்
வில்பொருதோள் மன்னா விலங்காய்ப் பிறப்பாரே.

(சீவகசிந்தாமணி.)

மலையை மாதவர்க்கு ஒப்பாகவைத்து அவரைப் பிழைத்தொழுகலாகாதென இதில் உணர்த்தியிருத்தல் காண்க. பெரியாரை இகழ்ந்தவர், பகுத்துஉண்ணாதவர், பரத்தையர் என்னும் இவ

பின்பு பழிவிலங்குகளாய்ப் பிறந்து உழல்வர் என இஃது அருளி நிற்கும் அழகைப் பார்க்க.

மலைபோன்ற அருந்தவர் கெடநினைப்பாராயின் இவ்வுலகில் நிலைபெற்றாற்போல் நிலவியிருந்த பெருஞ்செல்வரும் தம்குடியோடு மாய்ந்துபோவர் என்பதாம்.

மதிப்பின் என்றது அங்ஙனம் அவர் மதியாதுநிற்ற மாட்சி தோன்ற நின்றது. பேதையர்கள் அல்லல் பெருக விளைந்தாலும் மாதவர்கள் உள்ளம் மறுகார்காண் என்றபடி. அவர் மருவிநிற்பாராயினும் ஒரோவழி மறுகி நொந்தால் எவரும் நிலைகுலைந்து போவர் என்க. மோனமுனிவர் முனிந்து நினைந்தால் வானும் வையமும் குலைந்து குன்றும் என்பது குறிப்பு. "பேரியார்கள் திருவுள்ளம் பேதித்தால் எப்பொருளும் பேதியாதோ?" என்றது பாரதம்.

குணப்பெருங் குன்றராய்க் குலவியிருந்த கபிலர் குன்ற நினைத்தவுடனே நெடுந்திருவுடையராய் நிலைத்துநின்ற சகரர் அறுபதினாயிரவரும் அப்பொழுதே அடியோடு மாய்ந்துபோனதுபோல் பெரியாரைப் பிழைத்தொழுகுவார் குடியோடு மாய்ந்துபோவர் என்க. எனவே குடியோடு என்றும் நன்றாக நின்று வாழவேண்டுபவர் பெரியாரை யாதும் இகழாது பேணிநிற்கவேண்டும் என்பதாம்.

வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு முடையனாய் நிலவிநின்ற தண்டகன், சுக்கிரன் குன்றமதித்தபோது ஒன்றுமிலனாய்க் குடியோடு பொன்றி யொழிந்ததுபோல் பெரியாரைப்பிழைத்தவர் பொன்றுவர் என்பார் மதிப்பின், மாய்வர் என்றார்.

அருந்தவமுடையவர் சினந்து நினைந்தால் எவரும் அடியோடழிந்துபோவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மரீசியால் உணரப்படும்.

### கதை.

மரீசி என்பவர் ஓர் சிறந்தமுனிவர். பிரமனை நோக்கி நெடுங்காலம் இவர் அருந்தவம் புரிந்தவர். பெருந்தன்மை வாய்ந்த அரசர்களும் முனிவர்களும் அடி பணிந்துநிற்ப இவர் உயர்வடைந்துநின்றவர். உத்தமகுணங்களுக் கெல்லாம் இவர் உறையுளாயிருந்தார். இவரது தவமகிமையைக் கண்டு அமரரும் அஞ்சினர்.

கல்லென்னும் தமது அருமைத் திருமனைவியோடமர்ந்து முதலில் இல்லறம் புரிந்து பின்பு எவரும் வியந்து போற்றுமாறு சிறந்த தவமுடையாராய் இவர் விளங்கி நின்றார்.

"கண்முதற்புலன்கள் யாவையுமொடுக்கிக் கரணவாகுலமறக் கடிந்தங் குண்மைகாண் விருப்போடுயிர்க்கெலாம் பரிவுற் றுற்ற சிற்றின்பத்தை யுவர்த்து, வண்மையா முணர்வுவந்தவா கண்டு வாட்டமு மகிழ்ச்சியு மின்றித், தண்மையா முடம்புதான்தனு தென்னுத் தன்மையோன் தத்துவமுணர்வான்."

என்றபடி இவர் ஓர்ந்துணர்ந்து விளங்கினார். சாந்தகுணசீலராய் இங்ஙனம் இவர் விளங்கிவருங்கால் கலிங்கதேசத்திலே சயதுங்கன் என ஓர் அரசனிருந்தான். அவன் முடிமன்னர் பலரும் வணங்கத் தக்க பெருந்திருவுடையவன். அருந்திறலாளன். தன் பெயரியல் புக்கேற்றவாறே எங்கும் வெற்றியுடையனாய் அவன் விளங்கிநின்றான். ஒருநாள் வேட்டைமேலெழுந்து காட்டிடைப்புகுந்தான். அங் கோரிடத்தில் இவரது தவச்சாலையைக் கண்டான். அதனைப் புடைசூழ்ந்திருந்த இனிய கனிமரங்களை நோக்கி மனமிக மகிழ்ந் தான். தன் உடன்வந்த படைகளோடு அச்சோலையில் தங்கினான். வேண்டியகனிகளை வேண்டியவாறே பறித்துண்ணும்படி படைகளை நோக்கிப் பணித்தான். அவ்வாறே அவரும் செய்தனர். முடி வில் எழுந்துபோங்கால் இம்முனிவரை அவன் இகழ்ந்துசென்றான். தன்னைநோக்கி யாதுமபேசாமல் அமைதியுற்றிருந்த இவரது தகுதி யையறியாமல் ஒரு துறவிக்கு இவ்வளவு பெருமையா? என்று அவன் அவமதித்துப் போதலை இவர் அறிந்து புன்னகையோடு சிறிது சினந்தார். உடனே தனது திருவும் குடியும் ஒழிந்து அவ னும் அடியோடழிந்தான். இவரது பெருமையையறிந்து அனை வரும் வியந்தார். குன்றன்னார் குன்றமதிப்பிற் குடியொடு நின்றன் னார் மாய்வர் நிலத்து என்னும் உண்மையை உலகம்காண இவர் உணர்த்தி நின்றார்.

அன்று சகரர்போய் ஆராய்ந்து பாராமல்
கன்றிக் கபிலரைமுன் காய்ந்ததனால்—குன்றியுடன்
நீறானார் யாரே நெடுந்தவர்க்குத் தீங்குசெய்து
மாறாகி வாழ்ந்தார் மகிழ்ந்து. (தருமதீபிகை.)

விழுமிய நீரர் வெகுண்டால் எவரும்
குழுவோ டழிவர் குலைந்து

முனிவர் முனிந்தால் எவரும் அடியோடு முடிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

899 சீலமுற்ற கும்பமுனி சீற நகுடனேன்
கோலமற்று வீழ்ந்தான் குமரேசா—சாலவே
ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும். (கூ)

இ—ள்.

குமரேசா! அகத்திய முனிவர் சீறினவுடனே தன் பதத்தை இடையே யிழந்து நகுடன் ஏன் இழிந்து வீழ்ந்தான்? எனின், ஏந்திய கொள்கையார் சீறின் வேந்தனும் இடைமுரிந்து வேந்து கெடும் என்க.

இது, சுந்தரஞானியர் சீறின் இந்திரனும் இழிந்து விழுவான் என்கின்றது.

ஏந்திய கொள்கையார் = தாங்குதற்கரிய பெரிய விரதவொழுக்கங்களை ஏந்தியிருக்கும் இயல்பினர்; என்றது அருந்தவர்களை. சீறின் என்றது அவர்அங்ஙனம் சீறார் என்பது தோற்றி நின்றது.

இடைமுரிந்து = இடையே ஒழிந்து. முரிதல் = ஒடிதல், அழிதல்.

வேந்தன் என்றது இந்திரனை. இது பொதுவாக அரசனைக் குறித்துவருமாயினும் ஈண்டுச்சிறப்பாக இந்திரன்மேல் நின்றது. "வேந்தன் மேய தீம்புனலுலகமும்" எனத் தொல்காப்பியத்தில் இப்பொருணர்த்தி நிற்றல்காண்க. உம்மை சிறப்புணர நின்றது.

வேந்து = அரசபதவி. வேந்து என்வும் பாடம்.

மேல், பெரியார்சீறின் எவரும் குடியோடழிவர் என்றார்; இதில், இந்திரனும் அவர்வெகுளின்இழிந்தழிவன் என்கின்றார்.

அரியதவவொழுக்கமுடையவர் வெகுள்வராயின் இந்திரனும் தன்பதத்தை இடையே இழந்து கெடுவான் என்பதாம்.

இடைமுரியாது யாதொரு கேடுமின்றிஎன்றும் நீடிநிற்றற்குரிய பீடுடையஇந்திரனும் பெரியாரைப் பிழைத்தால் பாடழிந்து போவன் என அச்சுறுத்தியது அவர்பால்யாதும் பிழைபுரியாது அரசர் பேணி ஒழுகவேண்டி என்க.

அரசநீதியை வசிட்டர் இராமனுக்குக் கூறுங்கால் முதன்மையாகப் பெரியாரைப் பேணுதல் என்னும்இவ்வொழுக்கத்தையே வற்புறுத்தி யுரைத்துள்ளார். அடியில் வருதல் காண்க.

கரியமாலினும் கண்ணுத லானினும்
உரியதாமரை மேலுறை வானினும்
விரியும் பூதமொ ரைந்தினும் மெய்யினும்
பெரியர் அந்தணர் பேணுதி யுள்ளத்தால். (க)

அந்தணாளர் முனியவும் ஆங்கவர்
சிந்தையாலருள் செய்யவும் தேவரில்
நொந்துளாரையும் நொய்துயர்ந்தாரையும்
மைந்த எண்ண வரம்பும் உண்டாங்கொலோ. (உ)

அனைய ராதலின் ஐய! இவ்வையத்தி
வினையி னீங்கிய மேலவர் தாளிணைப்
புனையுஞ் சென்னியையாய்ப் புகழ்ந்தேத்துதி
இனியகூறிநின்று எயின செய்தியால். (ங) (இராமாயணம்)

ஈண்டுஅந்தணர் என்றது தூயசிந்தையராய் எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் மாதவர்களை என்க. இப்பெயர் ஒருசாதியைக் குறித்ததன்று; முற்றத்துறந்த முனிவர்களையே குறித்தது. இவ்வுண்மை வினையினீங்கியமேலவர் என்பதாதியாக இணைத்து அவரை இதில்உணர்த்தியிருக்கும் தன்மையான் உணரலாகும். இப்பெரியார் தேவரினும் மூவரினும் சிறந்தவர்; இவரது சாபத்தால்தாழ்ந்து வீழ்ந்த தேவர்களும், அருளால் உயர்ந்து சிறந்துள்ளவர்களும் அளவிடலரியர்; இவர் சீற்றங்கொள்ளா வண்ணம் என்றும் அரசர் போற்றி ஒழுகவேண்டும் என உறுதிபெற அறுதியிட்டு இஃது அறிவுறுத்தி நிற்றல் காண்க.

இறைவனைவிடப் பெரியாரை அஞ்சிப் பேணவேண்டும் என்க என்னை? அவனுக்குப் பிழைசெய்தாலும் பேரருளாளனாகிய அவன் முன் ஒருவாறு சிறிது வாழலாகும்; இவர்முன் அது முடியாதென்க.

ஈசனெதிர் நின்றாலும் ஈசனருள் பெற்றுயர்ந்த
நேசரெதிர் நிற்ப தரிதாமே;—தேசுவளர்
செங்கதிர்முன் நின்றாலும், செங்கதிர வன்கிரணம்
தங்குமணல் நிற்கரிதே தான். (நீதிவெண்பா.)

கடவுளின் சிற்றத்தைப் பொறுத்துக்கொள்ளலாம்; பெரியார் சீறின் அதனைப் பொறுக்கமுடியாதென்பதை ஓர் உவமையால் உறுதிசெய்து இஃதுணர்த்தி நிற்றலை ஊன்றி நோக்குக.

பெரியார் வெகுண்டால் பின்பு யாரும் பிழைக்க முடியாதாதலால்யாதும் பிழைபுரியாது அவரை என்றும் பேணி ஒழுகவேண்டும் என்பது கருத்து.

தவவொழுக்கங்களால் உயர்ந்தோங்கிய அருந்தவர் சினந்தால் சிறந்தவாழ்வுடைய இந்திரனும் இழிந்து வீழ்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நகுடன்பால் உணரப்படும்.

### கதை.

சந்திரகுல வேந்தனாகிய நகுடன் நூறு அசுவமேத யாகஞ் செய்து அதன்பயனாக இந்திரபதத்தை யடைந்தான். இந்நிலவுல கிலிருந்து பழுதுபடாமல் நூறு பரிவேள்வியை ஒருவன் செய்து முடித்தால் அவன் இந்திரபதவிக்கு உரியவனாவன். அதனால் இந் திரனுக்குச் சதக்கிரது என்று ஒரு பெயரமைந்துள்ளது. சதம் = நூறு. கிரது = மகங்களை யுடையவன். இங்ஙனம் இவன் அடை ந்து விண்ணுல கெய்தியபொழுது தகுதியைத்தெளிய முறைப்படி முனிவர் எழுவர் சிவிகை தாங்கிச்சென்றார். அகத்தியர், ஆங்கிர சர், கோதமர், காசிபர், புலத்தியர், மார்க்கண்டர், வசிட்டர் என் னும் இம்மாதவரெழுவரும் தாங்க மாமணிச் சிவிகைமீது இவன் மகிழ்ந்தமர்ந்து வந்தான். வருங்கால் அயிராணிமீது இவன் கடுங் காதல்கொண்டான். தாங்கிவருபவர் தன்மையை மறந்தான். விரைந்து செல்லுமின் என இகழ்ந்து மொழிந்தான். முந்துறச் சென்ற அகத்தியமுனிவர் சிந்தை திரிந்து சீறினார். உடனே இவ

னடைந்திருந்த பதவிமுழுவதும் இடையே அடியோடிழந்தான். பெரும்பாம்பாகிப் புரண்டு விழுந்தான். எய்தற்கரிய பெரிய தெய்வத்திருவினை எய்தியிருந்தும் பெரியாரை இகழ்ந்தமையால் அதனை இடைவழியே யிழந்து இழிந்து வீழ்ந்தான் என அனைவரும் இவனை இகழ்ந்து வைதார். ஏந்திய கொள்கையார் சீறின் இடைமுரிந்து வேந்தனும் வேந்துகெடும் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

சுகுடஞ்சேர் பரிமகம்நூறியற்றிவான் அரசுகன்னற் சுவைபோற் பெற்றான்
சகுடம்போல் அவன்மனதிற் சுசிகாமம் பிடித்தலைப்பத் தலைகீழாக
மகுடம்போய், வானகம்போய், வையகம்போய், அரசுபோய், மலைப்பாம்பாக
நகுடன்போய் வீழ்ந்ததனை அறியாயோ அறியாயோ நளினத் தாரோய்.

(திருக்குற்றாலப் புராணம்.)

விண்ணுலக வேந்தனான இவன் ஏந்திய கொள்கையாரை இகழ்ந்தமையால் இடைமுறிந்து வேந்து கெட்டவுண்மை இங்ஙனம் பல நூல்களிலும் குறிக்கப்பட்டுள்ளது.

கோலமுடி வேந்தும் குலைந்துகுடி யோடழியும்
சீலமிகு சான்றோர் சேறின்.

அருந்தவர் வெகுண்டால் இந்திரனும் அழிந்து வீழ்வான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

900 கோசிகர்முன் சீறக் குலைந்தேன மாவிமுன்னோர்
கூசி யழிந்தார் குமரேசா—தேசில்
இறந்தமைந்த சார்புடைய ராயினும் உய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின். (ய)

இ—ள்.

குமரேசா! சீர்த்திமாவி முதலிய வேந்தர் நால்வரும் மிக்க திருவுடையராயிருந்தும் கோசிகர் சினந்தவுடனே ஏன் இழிந்து ஒழிந்தார்? எனின், சிறந்து அமைந்த சீரார் செறின், இறந்து அமைந்த சார்பு உடையராயினும் உய்யார் என்க.

இது, உயர்ந்தோர் சினந்தால் உய்தி இல்லை என்கின்றது.

சீரார் = சீரினையுடையவர். சீர் என்றது தவச்சிறப்பினை.

இறந்து அமைந்த = மிகுந்து நிறைந்த. இறத்தல் = மிகுதல். மரணமுதலியவற்றை யுணர்த்திவரும்இறப்பு என்னும் இது, ஈண்டு மிகுதிமேல் நின்றது. மிகுதியும் மரணமும் போக்கும் இறப்பே (பிங்கலந்தை.) "இரைத்துநீர் கொழித் தின்பம் இறந்ததே" எனச் சிந்தாமணியிலும், "வியப்பு இறந்தன்றே" எனப் புறத்திலும், இஃதுணர்த்தி நிற்கும் பொருளை யுணர்க.

சார்பு = பற்றுக்கோடு; அஃதாவது பொருள் படை அரண் நட்பு முதலிய துணை நலங்கள்.

உய்யார் = உயிர்தாங்கியிரார்; தப்பிப் பிழைக்கமாட்டார் என்றபடி. உய்தல் = பிழைத்தல். "உண்ணுவ துங்கிம்பு உய்தல்வே ண்டின்" எனப்புறத்திலும், "உட்கரந்துறையும் உய்யா வரும்ப டர்" எனக் குறிஞ்சிப்பாட்டிலும், இதுநின்றுணர்த்துதல் காண்க.

மேல், பெரியார் சொந்தால் இந்திரனும் இழிந்து வீழ்வன் என்றார்; இதில் அவர்கடுத்தால் எவரும் பிழைத்திருக்க முடியா தென்கின்றார்.

சிறந்து உயர்ந்த தவத்தினையுடைய பெரியோர்கள் சினந்தால் மிகுந்து நிறைந்த வளத்தினையுடைய அரசரும் உய்ய மாட்டார் என்பதாம்.

தான் ஒருசார்பும் இல்லையினும் பெரியாரைப் பேணி யொழுகினன் பெருகிவாழ்வான்; எல்லாச் சார்புகளும் உடையனாயினும் அவரை இகழ்ந்து நின்றவன் அழிந்தேபோவன் எனறவாறு.

ஆற்றல்மிகுந்த வேந்தரையும் அரியதவத்து முனிவரையும்
போற்றியொழுகின் எப்பொருளும் போற்றலாகும்; அவமதிப்பின்
தேற்றமிகுஞ் சார்பினரேனும் சிதைவர்; திசழ்முப்புரர் சூரன்
சாற்றிந்திரன்மா வாதியரும் தளர்ந்தாரெனிற் சாற் றுவதென்னே.

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. அறிவு ஆற்றல்களில் பெரியார்களை அவமதிக்காதே; அன்புசெய்து பேணுக; பேணவில்லையா ஞல் கேடு உண்டாம்; கொல்லுதலில் கூற்றத்தினும் அவர் வல் லுநர்; அவர்க்குத்தப்பி யாண்டும் பிழைக்கமுடியாது; தீயிலுய்யி னும அவர் வாயிலுய்ய இயலாது; அவர்சினந்தால் குடியும் வாழ்

வும் அடியோடழிந்துபோம்; இந்திரபதமும் இடிந்து வீழும்; எவரும் எவ்வகையிலும் உய்யமுடியாதாதலால் யாதும் பிழை புரியாமல் அவரை என்றும் பேணி ஒழுகவேண்டுமென உறுதிபெற உணர்த்திப் பெரியாரைப் பிழையாது வாழுமாறு அடிகள் இங்ஙனம் அறிவுறுத்தி அருளினர்.

முனிவரால் வெகுளப்பட்டவர் எவ்வளவு வலிபுடையராயினும் உய்யமாட்டார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாலியால் உணரப்படும்.

கதை.

மாலி என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னிருந்தவன். அங்கதேசத்து மன்னன். இவன் பேரழகன். பெருங்கொடையாளி. அருந்திறலாளன். தனது நூனஞ்செயல்களால் மிகுந்த புகழோடு விளங்கியிருந்தாதலால் கீர்த்திமாலி என எங்கும் இவன் சீர்த்தி வெய்தி நின்றான். யானை தேர் குதிரை காலாள் என்னும் இந்நால்வகைப் படைகளிலும் இவன் மிக மேன்மைபெற்றவன். நிகரற்ற போர்வீரன் என்று யாண்டும் இவன் உயர்வுற்றிருந்தான். இவன் காலத்தில் கிடதம், காம்போசம், கொங்கணம், என்னும் தேசங்களுக்கதிபதிகளாய் நின்று முறையே அரசு புரிந்து வந்த மகேந்திரன், சானந்தன், விசாலநேத்திரன் என்னும் மூன்று மன்னர்களும் இவன்பால் ஆன்ற அன்புடையராயமர்ந்திருந்தனர். உருவம் பருவம் திரு முதலிய வற்றால் தன்னை யொத்திருந்த அம்மூவரோடும் இவன் மிக்க நண்புடையனாய் மேவியிருந்தான். இங்ஙனம் இருந்து வருங்கால்கோசல தேசத்து மன்னனாகிய கௌசிகன் என்பவன் தன்புதல்வியர் நால்வருக்கும் திருமணமுடிக்கும் பொருட்டுச்சுயம்வரங் குறித்திருந்தான் பல இடங்களிலுமிருந்து அரசர்கள்பலர்வந்து குழுமினர். இந்நால்வரும் அவணடைந்தார். பேரழகிகளாகிய அவ் அரசகுமரிகள் நால்வரும் முறையே இவர்களை விரும்பி மணம்புரிந்தார். அந்துச் சிலகாலம் தங்கியிருந்து பின்பு பலவகை வரிசைகளோடு தம்மனைவிமார்களை அழைத்துக்கொண்டு தமது நகரங்களை நோக்கி யெழுந்தருளினர். அவர்களுள் தலைமையெய்திநின்ற இவன் தனது நகரமா

கிய சிங்கபுரியில் வந்து முதலில் தங்கிப் போகும்படி வேண்டினான். அவரும் இசைந்தார். மகிழ்ச்சிமீக்கூர்ந்து இவன் அழைத்துவருங்கால் இடையே விசுவாமித்திரரைக் கண்டான் தேர்மேலமர்ந்து சீரியகோலத்தோடு படைகள் புடைசூழப் பல்லியங்கள் முழங்கச் சிறந்து செல்லுங்கால் அவ் அருந்தவரை உவந்துபேணாமல் இவன் இகழ்ந்துபோனான். அவர் இவன் போக்கை நோக்கினார். பொங்கி விழித்தார். புடை சூழ்ந்துவந்த படைமுழுதும் உடனே பொன்றி விழுந்து பொரிந்துநீறாயின. இவனும் உடன்வந்த மூவரும் தம்மனைவியரோடு நின்று மறுகி நடுங்கினார். நீவிர்அனைவீரும் விழியொளிபோய் வேடராகி விரைந்து தொலைமின் என வெறுத்து மொழிந்தார். அவ்வாறே இவராகியலைந்தார். படை பொருள் நட்புமுதலிய துணைவலிகள் பல இருந்தும் உய்விலராகிக் கோசிகர் கோபத்தால் இவர் ஒருங்கே யழிந்தார். சிறந்தமைந்த சீரார் செறின், இறந்தமைந்த சார்புடையராயினும் உய்யார் என்னும் உண்மையை உலகம்காண இவர் உணர்த்தி நின்றார். விரிவை உபதேசகாண்டத்தில் காண்க.

"வாம்பரித்தடந் தேருறை மன்னரு மனையார்
தேம்புசிற்றிடைத் தேவியார் நால்வருந் திரக்
கூம்புடைக்கொடித் தேர்முதற் சேனையும் சூழவும்
சாம்பராயின அருந்தவன் கடுஞ்சினத் தழலால். (1)
தெளித்தமாதவக் கோசிகன் அடுசினத் தீயால்
களித்தயானையுஞ் சேனையுஞ் சாம்பராய்க் கழிய
வெளிப்படும்புல னிழந்திரு செவிப்புலன் மீயாக்
குளிர்த்தகல்லரு விப் புனக்குறுகின ரிவர்கள்" (2)

எனவும்,

"விழிகள்போய்க் குருடாய் வெய்ய கானிடை
உழலுமின் நீரேன உருத்த போதவர்
எழின்முடி துறந்து கீழ் இழிந்து நால்வரும்
அழிதுய ரடைந்துபோய் அடவி சேர்ந்தனர்." (க)

எனவும் வரும்

இவற்றால் இவர் உய்வின்றி உலைந்தழிந்த வுண்மை உணரலாகும்.

விரிநிற நாகம் விடருள தேனும்
உருமின் கடுஞ்சினஞ் சேணின்று மூட்டும்
அருமை யுடைய அரண்சேர்ந்தும் உய்யார்
பெருமை யுடையார் செறின். (நாலடியார்.)

கூற்றங் கோதித்தாலும் கூடினின் றுய்யலாம்
நோற்றவர்முன் ஆமோ நுவல்.

பெரியார்க்குப் பிழைசெய்தவர் எவ்வகையிலும் உய்யமாட்டார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

பெரியாரைப் பேணி யொழுகவேண்டும். பேணுதொழுகின் பெருந்துயருண்டாம். வழுக்கியும் அவர்பால் இழுக்குச் செய்யலாகாது. அவர்க்கு இன்னா செய்தவர் உடனே இழிந்தழிவர். வேந்தன் சினந்தால் யாண்டும் ஆர்துணை யில்லை. பெரியாரைப் பிழைத்தொழுகினவன் பின்பு பிழைக்கமாட்டான். அவர் வெகுண்டால் பெருந்திருவெல்லாம் தகர்ந்தழிந்துபோம். அவர் குன்ற நினைத்தால் எவரும் குடியோடு குன்றியழிவர். அவர் சீறினால் இந்திரனும் இடைமுரிந்து வெந்து விழுவான். எவ்வளவு பெரிய சார்புடையராயினும் அவர் வெறுத்துரைத்தால் அடியோடு அழிந்தே போவர்.

கூடு வது பெரியாரைப் பிழையாமை முற்றிற்று.

---

# 91-ம் அதிகாரம் பெண்வழிச் சேறல்.

அஃதாவது பெண்டாட்டியின் சொற்படி நடத்தல். தன் வழி ஒழுகுதற்குரிய பெண்வழித் தான் ஒழுகல் ஓர் ஆண்மகனுக்குப் பேரிழுக்காதலால் அவ் வொழுக்கினை ஒழித் தொழுக வேண்டுமென இஃதுணர்த்துகின்றது. கழிபெருங்காமியாய் நின்று பழிமிகும்படி அவள் வழியமைந்தொழுகலாகா தென்றவாறு. பெரியாரைப் பிழைத் தொழுகுதல் அழிவுக்கேது வாதல் போல் பெண்விழைந் தொழுகல் இழிவுக்கு ஏதுவாகு மாதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

901 வென்றி யசோதரனேன் மிக்க மனைவிழைவால்
குன்றி யழிந்தான் குமரேசா—என்றும்
மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளு மது. (க)

இ—ள்.

குமரேசா! தன்மனைவியை மிக விழைந்திருந்த யசோதரன் ஏன் ஒரு நலமும் எய்தாதல் அவளால் இழிந்தழிந்தான்? எனின், மனைவிழைவார் மாண்பயன் எய்தார்; வினைவிழைவார் வேண்டாப் பொருளும் அது என்க.

இது, இல்லாளை மிகவிழைந்துநிற்றல் இழிவாம் என்கின்றது.

மனை = மனைவி. மனைக்கு உரியவள் என்றவாறு. மனை = வீடு. வினை என்றது பொருள் ஈட்டுதற்குரிய தொழில்களை.

மனைவிழைவார் என்றது போகம் காரணமாகத் தம் பெண்டாட்டியை முறைகடந்து மிகவும் காதலித்து நிற்பவர் என்க அது என்றது மனை விழைவினை.

மாண்பயன் என்றது ஆண் மகனாய்ப்பிறந்த ஒருவன் அப் பிறப்பில் அடையக்கூடிய மேன்மையான பயன்களை. அவைதாவது புகழ் புண்ணியங்கள் என்க. மாண்பயன் குன்றுவண்ணம் தன்மனைவியை ஒருவன் விழையலாமேயன்றி அவ்வெய்தாதொழியும்படி கடுமோகியாய் அவள்பால் இழிந்து நிற்கலாகாதென்றவாறு.

மனையாளை மிகவிழைந்து அவள் சொல்வழி நடப்பவர் அறமுதலிய நல்ல பயன்களை யடையார்; வினைநலங்களை விழைந்து நிற்பவர் அவ் இழிந்தநடையினை யாதும் விரும்பார் என்பதாம்.

தம் கருமமே கண்ணாய் நின்று உயர்நலங்கருதி ஊக்கி உறுதி பெற முயலும் அறிவுடையார் தமது மனைவிபால் ஈன இச்சையால் இழிந்து நின்று அவள் சொல்வழி ஒழுகார் என்பார் “வினைவிழைவார் வேண்டாப்பொருளும் அது” என்றார்.

நுகர்வினைநச்சி இடைவிடாது பெண்டாட்டியையே காத்துக்கிடக்கும் ஒருவனுக்குப் பொருளையுண்டாக்குதற்குரிய வினைத்

திறம் உண்டாகாது; ஆகவே பொருள்பயக்கும் இந்தக்கருமத்தில் கண்ணூன்றி நிற்பவன் அந்தக்காரியத்தை ஒருபொருளாகக் கருதி அவளைக் காதலித்து நில்லாறுதலால் வினைவிழைவார் மனைவிழையார் என்றார்.

இல்வாழ்க்கையில் உள்ளவ ரெல்லாரும் மனைவிழைவாரே யாவர்; அங்ஙனமிருப்ப அதனை வேண்டாப்பொருள் என எண்டு வெறுக்கக்குறித்தது என்னை? எனின், நன்றாகூறினாய்! காதலிருவர் கருத்தொத்து ஆதரவுடையராய் அமர்ந்து அறம்புகழ் முதலிய உயர்பயன்கள் விளையும்படி தகவோடு விழைந்து நிற்காமேயன்றி நுகர்வொன்றையே நச்சித் தகவழிய இழிந்து நிற்றல் மிக இழிவாகுமாதலால் அவ்விழைவு தீதென விலக்கினர் என்க.

இன்பமொன்றையே கருதித் தன் இல்லாள்பால் இழிந்து நிற்பவன் உயர்ந்த நலங்களை யடையாமல் அழிந்துபோவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை யசோதரன்பால் உணரப்படும்.

## கதை.

யசோதரன் என்பவன் அவந்திநாட்டு மன்னனாகிய அசோகனுடைய அருமைத்திருமகன். தாய்பெயர் சந்திரமதி. இவன் பருவமெய்திய வுடனே அமுதமதி என்பவளை மணந்து அரசுரிமையை யடைந்து இந்திரன்போல உந்துநீர்க்கடலுலகெலாம் அடிதொழ உயர்ந்திருந்தான். தந்தை தவநிலையை மேற்கொண்டு தனியகன்றான். இவனுடைய மனைவி மிக்க கட்டழகு வாய்ந்தவள். மாந்தளிரனைய மெல்லிய இனிய மேனியள். உயர்ச்சி பருமன் உறுப்பமைதி முதலிய எவற்றினும் மிகச் சிறந்தவள். அவளது போகவெள்ளத்தில் இவன் மூழ்கிக்கிடந்தான். அதனால் அரசமுறையை அறவே மறந்தான். மதிசேசனன் என்னும் மந்திரியே ஆட்சியை மாட்சியோடு ஆதரித்து வந்தான். காமச்சுவையிலழுந்தி இரவுபகலறியாது மனைவியோடு இவன் இணைபிரியாதிருந்தான். ஒருநாள் அமளியில் இருவரும் அவசமாகி யிருக்குங்கால் இவன் அயர்ந்து உறங்கினன். அதுபொழுது இவனது பட்டத்துயானை கட்டியிருந்த கூடத்திலிருந்து ஒரு வீணை

ஒலி எழுந்தது. அவ் இசையினை அவள் கேட்டாள். அதனை இசைத்தவன்மேல் இச்சை கொண்டாள். விடிந்தபின்பு தன் தோழியாகிய குணவதியை அழைத்து அக்கூடத்திலுள்ளவனைக் குறித்து வரும்படி விடுத்தாள். அவள் சென்றுகண்டாள். கறுப்பு நிறமும், உறுப்புக்குறைவும், வெறுப்பிற்குரிய நிலையுமுடையனாய் அவன் விளங்கியிருத்தலை யறிந்து விரைந்து மீண்டு அரசியிடம் ஒருகரவுமின்றி உற்றதை யுரைத்தாள். அவளிடம் ஒன்றும் விள்ளாது சரியென்று செல்ல விடுத்தாள். நடுநிசியில் அரசனை வஞ்சித்து அவ் யானைக்கூடத்தை யடைந்தாள். பாகன் அயர்ந்து உறங்கினன். கிட்ட அமர்ந்து தட்டி யெழுப்பினள். அவன் திடுக்கிட்டு விழித்தான். அரம்பைபோல் அருகிருப்பவளைக் கண்டான். மாயமோகினியோ! என்று முதலில் அவன் அஞ்சி யலமந்தான். அவ்வச்சத்தை நீக்கி அவனை ஆரத்தழுவி உண்மையை யுணர்த்தி அவள் உள்ளியதைமுடித்தாள். பாவம்! காமத்தின் புன்மைதான் என்னே! மன்மதன்போல் இன்னுயிர்க்காதலோடு மன்னன் இணை பிரியாமல் இசைந்திருப்பவும் அவள் இங்ஙனம் மானங்குலைந்து ஈனஞ்செய்தது நீச நிலைவாலன்றோ?

அன்புநூலாக இன்சொல் அலர்தொடுத் தமைந்தகாதல்
இன்பஞ்செய் காமச்சாந்திற் கைபுனைந் தேற்றமாலை
நன்பகற் சூட்டி விள்ளா தொழுகினும், நங்கைமார்க்குப்
பின்செலும் பிறர்கண்உள்ளம்; பிணையனார்க் கடியதன்றே.

(சீவக சிந்தாமணி.)

இது பொதுவாக மகளிர் மனநிலையைக் குறித்துச் சீவகன் உரைத்தது. இவ்வுரைக்கு அமுதமதி நிலை உரிமையாய் நிற்றல் காண்க. "ஆடவர் இலாமையின் அல்லால் நம்புதற்கு உளதோ?" நங்கைமார் நெஞ்சம் எனப் பாஞ்சாலி பரிந்து அருளியுள்ளதன் பொருளி னுண்மையையும் ஈண்டு ஊன்றியுணர்ந்து கொள்க. வெய்ய முடவன் வாயில் தெய்வ அமிர்தம் துள்ளி விழுந்ததுபோல் அப்புன்மகன் கனவிலும் எதிர்பாராத அரியஇன்பத்தை அடைந்து அகங்களித்திருந்தான். எவரும் அறியாதபடி இடையிடையே அவள் இவ்வண்ணம் நடை செய்து வந்தாள், அவள் நிலைதிரிந்து நிற்றலை யசோதரன் குறிப்பாலறிந்தும் அவள் தந்துவந்த காயக்களிப்பால்

கருத்தூன்றி நோக்காது கண்மூடியிருந்தான். ஒருநாள் நேரில் காண நேர்ந்தது. தன் மரபிற்குரிய இயல்பின்படி இவன் உளத்தில் வீரங்கிளைப்பக், கோபங் கொதித்தெழுந்தது. அரண்மனைக்குள்வைத்து வடி வாளை யுருவி அவளை அடியோடு அழிக்கத் துணிந்தான். ஆ! நாதா என்று அவள் விரைந்து மேல் விழுந்து மார்பிறுக இவனைத் தழுவிக்கொண்டாள். இவன் கோபந்தணிந்தான். இயற்கையாகவே மிக்க அருளுடையவனாதலால் அவளை யாதுஞ் செய்யாது விடுத்தான். விடுத்தாலும் விட்டானா? மேலும் விழைந்து நின்றான். அவளும் குழைந்து கூடிவந்து அமய நோக்கி ஒருநாள் நஞ்சினையூட்டி இவனைக் கொன்றே தீர்த்தாள். சிறந்த அரசனாயிருந்தும் வரம்புகடந்து மனைவியை விழைந்துநின்றமையால் அறம் புகழ் முதலியவற்றுள் ஒரு பயனையுமடையாமல், வினையாண்மையின்றி, மேன்மை குன்றி வீணே விளிந்தொழிந்தான். மனைவிழைவார் மாண்பயன் எய்தார் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்திநின்றான். (விரிவை யசோதரீயத்தில் காண்க.)

இன்பமே நோக்கித்தன் இல்லாளை நச்சிநிற்போன்
துன்பமே துய்ப்பன் தொடர்ந்து.

வரம்புகடந்து மனைவியை விழைந்து நிற்கலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

902. நாடாமல் பெண்விழைந்து நாணியேன் சந்தனுபின்
கோடியுள நொந்தான் குமரேசா—தேடிநின்று
பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்
நாணாக நாணுத் தரும். (உ)

இ—ள்.

குமரேசா! உறவுதொன்றையும் கருதாது கழிபெருங்காதலுடையனாய் மனைவியை விழைந்த சந்தனு பின்பு ஏன் பெருநாண் கொண்டு பேதுற்று நின்றான்? எனின், பேணாது பெண்விழைவான் ஆக்கம் பெரியதோர் நாணாக நாணுத் தரும் என்க.

இது, பேணாது பெண்விழைந்தவன் பின்பு நாணிவருந்துவன் என்கின்றது.

பேணாது = ஆண்மை மானங்களைப் பேணாமல். அஃதாவது தான் எந்தநிலையில் நின்றால் அவை நிலைக்குமோ அந்தநிலையில் நின்றுகொள்ளாமல் என்பவாறு.

நாண் ஆக = எல்லாரும் நாணும்படியாக. ஆக்கம் = செல்வம். புகழ் இன்பம் பெருமை முதலிய நலங்களைத் தருதற்குரிய ஆக்கம் பெண்விழைவானுக்கு நாணுத்தரும் என்றதனால் அவனது மானமின்மை புலனாம்.

மேல், மனைவியை விழைந்து நிற்பவனுக்குப் பொருளிட்டுதற்குரிய வினை விழைவுண்டாகாதென்றார்; இதில், இயல்பாகவே அவன் பொருளொட்டியிருந்தாலும் அது, அவனுக்கு இளிவையே விளைக்கு மென்கின்றார்.

ஆண்மை மானமுதலிய நலங்களைப் பேணாமல் வரம்புகடந்து தன் மனையாளை விழைந்து நிற்பவனது செல்வம் இவ்வுலகத்தில் எல்லார்க்கும் பெரிதானதோர் நாணம் உண்டாக அவனுக்கு மிக்க நாணத்தைக் கொடுக்கும் என்பதாம்.

காமத்துக்கு அடிமையாய் மனைவிவசப்பட்டு அவள் சொல் வழி நிற்பவன் எவ்வளவு செல்வமுடையனாயினும் அவ்வுடைமைக் கெல்லாம் அவளே தனிமுதல்வியாவள்; ஆகவே அவன் யாதும் அதில் எடுக்கக் கொடுக்க இயலாது; அவ் ஏலாமை கண்டு மற்ற ஆடவர்களெல்லாரும் நகையாடி நாணுவர்; என்னை? தம்மை யொத்த ஆடவன் ஆண்டன்மை இலனாய்ப் பெண்மை விழைந்து நிற்கும் பேதைமையை யறிந்தபோது இளவரிமையால் பெருநாண் எழும் என்க; "பெரும்பொருள் படைத்திருந்தும் இப்பேய்ப்பயல் ஒருபயனுமின்றிப் பெண்டாட்டிக்கு அடங்கி நிற்கும் பேடித்தனத்தைப் பார்த்தீர்களா?" என்று தம்முட்பேசித் தன்னை அவர் எசி நிற்றலைக் கேட்டு இவன் மிகவும் கூசி வருந்துவன் ஆதலால் பெண் விழைவான் ஆக்கம், நாணுக நாணுத்தரும்; என்றார்.

பெருஞ் செல்வமுடையனாயினும் பெண்வழிச் செல்வானுக்கு அதனால் ஒரு பயனும் இல்லையாம் என்றவாறு. அறம் புகழ் ஆண்மை மானம் முதலிய நலங்களைப் பேணாமல் காமங்கருதித் தன் மனையாள் ஏவிய படியெல்லாம் இழிந்து நடப்பவனை எல்லாரும்

இகழ்ந்து வைவாராதலால் நல்ல ஆண்மகனாய்ப் பிறந்தவன் அங்ஙனம் தாழ்ந்து விழைந்துநிற்க லாகாதென்பது கருத்து.

வரம்புமீறி இல்லாளை நத்திநிற்பவன் பின்பு வருந்தி நாணுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சந்தனு பால் உணரப்படும்.

கதை.

சந்திரகுல திலகனாகிய சந்தனுமன்னன் ஒருநாள் கங்கைநதிக் கரையில் உலாவிவருங்கால் அங்கோர் மங்கையைக் கண்டான். அழகொழுகநின்ற அவ்விழுமிய உருவைக் கண்டவுடனே கழிபெருங்காதலுடையனாய் இவன் காமுற்றுநின்றான். இவனது நிலையினை நோக்கி நெடுநாண்கொண்டு காதற்குறிப்போடு அவள் கனிந்து நடந்தாள். இவன் விரைந்து தொடர்ந்து எதிர்போய் நின்று என் பால் அருள்புரிய வேண்டுமென்று குழைந்து மொழிந்தான். பூணுறு முலைமுகம் பொருந்தநோக்கிய இவனை அவள் எதிர்ந்து நோக்கி யான் சொல்லியபடியெல்லாம் எப்பொழுதும் நீ நடந்து கொள்ள இசைந்தால் இப்பொழுது நீஎண்ணிய படியே இசைந்து கொள்வேன் என்றாள். கருதியபடியெல்லாம் நடந்து உன் உரை கடவாமல் நின்று ஒழுகிவருவேன் என்று இவன் உறுதி கூறினான். இவன் உரைத்ததைக்கேட்டுக் கங்கையே உருவாய்வந்த அவள் உள்ளூற நகைத்து வெளிப்படையாக மேலும் சில சொல்லினாள்.

இரிந்துமெய்ந் நடுங்கிட யாது யாதுநான்
புரிந்தது பொறுத்தியேல் புணர்வல் உன்புயம்;
பரிந்தெனை மறுத்தியேல் பரிவொ டன்றுனைப்
பிரிந்தகன் றிடுவனிப் பிறப்பு மாற்றியே. (க)

மெய்தரு விதியினேன் விரத மற்றிவை
எய்தரி தொருவரால், எய்த வல்லையேல்.
கைதரு கெனப்பெருங் காத லாளனும்
உய்வரிதென விசைந் துடன் படுத்தினான். (உ)

எனதுயிர் அரசவாழ் வென்ப யாவையும்
நினதுநின் ஏவலில் நிற்பனயாவும் என
வனிதையை மருட்டினான் மன்றல் எண்ணியே
தனதுளம் நெறியிலாத் தனமிபனே. (பாரதம்.) (ங)

மேல் ஆவதை அறியாமல் ஆசைவயத்தனாய் இங்ஙனம் அமைந்துநின்று அவளை மணம்புரிந்து அரியபோகங்களை நுகர்ந்து அமர்ந்து வந்தான். வருங்கால் அவள் வயிறு வாய்த்தாள். பருவம் நிரம்பி ஓர் ஆண் மகவினைப் பயந்தாள். உடனே அக்குழந்தையைக் கொன்று புதைத்தாள். அதனை இவன்கண்டு வருந்தினான்; ஆயினும் ஒன்றும் எதிர்பேசாது அஞ்சிவிழைந்து அடங்கியிருந்தான்.

கண்டுளம் வெருவிமுன் கதித்த வாசகம்
கொண்டுரை எதிர்த்திலன் கொண்ட காதலான்
ஒண்டொடி யுடன்மனந் துறந்த வைகினன்
பண்டையி னெழுமடி பரிவு கூரவே. (பாரதம்.)

இங்ஙனம் இவன் இருப்பப் பின்னரும் அவள் வயிற்றில் முறையே ஆறுபிள்ளைகள் தோன்றினர். அவரனைவரையும் அவ்வப்போது அழித்தொழித்தாள். இவன் யாதும் மறுத்துரைக்காமல் ஆராக்காதலுடன் அவள் சொல்வழி நடந்து இறுதியில் துணிந்து ஓர் மகவினைத்தடுத்து நிறுத்தினான். ஓர் உறுதியை நினைந்து தன் மனைவி மக்கள் எழுவரைக் கொன்றிருந்தும் இவன் ஆண்மை அருள் முதலிய மேன்மைகள் ஒன்றையும் பேணாமல் அவளது இன்ப நுகர்ச்சியினையே விழைந்து இழிந்து நின்றதையறிந்து எல்லாரும் மிகுந்த நாணமுடையராய் வருந்துகின்றார். அதனையுணர்ந்து மானத்தால் புழுங்கி நாணமீக்கூர்ந்து இவன் நைந்து நின்றான். பேணாது பெண் விழைவான் ஆக்கம் பெரியதோர் நாணாக நாணுத்தரும் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

பெண்டாட்டி சொல்லையே பேணிநிற்கும் பேடிபோல்
உண்டோவோர் பேதை யுரை.

கழிபெருங்காமிகளாய் மனைவிழைந்து நிற்பார் பழிபடுவார் என்பது இதனால் கூறப்பட்டது.

903. ஆசுமிகத் தன்மனைபால் ஆசைகொண்டான் புண்டரிகன்
கூசிநொந்தான் பின்பேன் குமரேசா—தேசமுறும்
இல்லாள்கட் டாழ்ந்த இயல்பின்மை யெஞ்ஞான்றும்
நல்லாருள் நாணுத் தரும். (௩.)

இ—ள்.

**குமரேசா!** தன் மனையாள்பால் மிக்க காதல்கொண்டிருந்த புண்டரிகன் பின்பு ஏன் எல்லாரும் இகழ இழிந்து நின்றான்? எனின், இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை எஞ்ஞான்றும் நல்லாருள் நாணுத்தரும் என்க.

இது, இல்லாள் சொல்வழி நிற்பவன் எல்லாராலும் எள்ளப் படுவான் என்கின்றது.

ஆசை மிக ஆசைகொண்டான் என்றது பழிச் சொற்கள் மிகப் பரந்துநிற்றலைப் பார்த்திருந்தும் கழிபெருங் காதலோடு அவளை அவன் கலந்து நின்றமை கருதி.

தாழ்ந்த இயல்பு இன்மை = தாழ்ந்தொழுகும் புன்மை. தன்னிடத்துத் தாழ்ந்து ஒழுகுதற்குரிய இல்லாள்கண் தான் தாழ்ந்து ஒழுகுதல் நல்ல ஓர் ஆண்மகனுக்கு இயல்பு ஆகாதாதலால் அதனை இயல்பின்மை என்றார். அறிவுகெட்ட கடுங் காமிகளே இவ் வுரிமை கெட்டு நிற்பர் என்றவாறு.

மேல், பெண்வழிச் செல்பவன் செல்வமுடையனாயினும் நல்ல பயன்கொள்ளான் என்றார்; இதில், எல்லாரிடத்தும் என்றும் அவன் குன்றி நிற்பன் என்கின்றார்.

தன் மனைவியிடத்து ஒருவன் மிக இழிந்து நிற்கும் புன்மை எக்காலத்தும்நல்லாருள்ளே நாணுதலைத் தரும் என்பதாம.

தன் மனைவிபால் அஞ்சித் தாழ்ந்துநின்று அவளருள்வழி ஒழுகி மருளுடையனாய்க் காமந் துய்க்கும் ஓர் பேதைமகன் மேதையர் குழாத்துள் புகின் இவனது புல்லிய இயல்பினைக் குறித்து அந் நல்லார் எள்ளி நகையாடாராயினும் தானாகவே தன் இழிவினை நினைந்து அவர் முன் தலைநிமிர்ந்து பேசக் கூசுவன் ஆதலால் "இல்லாள்கண் தாழ்ந்த இயல்பின்மை நல்லாருள் நாணுத் தரும்" என்றார்.

இத்தாழ்ந்த இயல்பினை மானங்கெட்ட புல்லரே பொருந்தி நிற்பர்; நல்லார் என்றும் அதனைக் கொள்ளார் என்பார் நல்லாருள் அது நாணுத்தரும் என்றார் எனினுமாம்.

6436 (364)



சிறந்த நோக்கத்தோடு உயர்ந்த நிலையில் நின்று நலங்கள் பல வளர இல்லாளைக் கலந்து வாழவேண்டிய ஆண்மகன், காமங்கருதி அவள்பால் தாழ்ந்து நிற்பனுகில் அந்நிலை எக்காலத்தும் அவனுக்கு இளிவையே விளைக்குமாதலால் அவ் இயல்பின்மை சிறிதும் தன் பால் உண்டாகாதபடி ஓர்ந்து ஒழுகவேண்டும் என்பது கருத்து.

மனைவி என்ன பிழைசெய்தாலும் எதிர்த்துப் பேசாமல் இன்பமொன்றையே கருதி அவள்பால் இழிந்து நிற்பவன் எல்லாராலும் இளிக்கப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை புண்டரிகன்பால் உணரப்படும். 24.00 + 0.63 / 363

கதை.

புண்டரிகன் என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்க் கோமேதகத் தீவிலே பூச்சக்கரம் என்னும் நகரிலிருந்தவன். வேதியர் மரபினன். இவனுடைய தந்தை பெயர் அரிசன்மன். தாய் பெயர் வனமாலை. இவன் பெருந்திருவுடையவன். நூல்சில பயின்று மாலடி வணங்கும் நேயமும் வாய்ந்தவன். சித்திரரேகை என்னும் ஓர் மங்கையை மணந்து அவளது இன்பச் செவ்வியில் இவன் இழிந்திருந்தான். அவள் மிக்க அழகுடையளாயினும் அறிவு நலங்குன்றிக் கழிபெருங்காமியாய் எவரையும் காதலித்து நின்றாள். அந்நிலையினை யறிந்தும் நெஞ்சொத்து நின்று போகம் ஒன்றையே பொருளெனக் கருதி அவள்பால் மோகமீக் கூர்ந்து இவன் மூகமுற்றிருந்தான். அவள் ஏவியபடியெல்லாம் இசைந்து திரிந்தான். காமஇச்சையில் இவன்கண்ணூன்றி நிற்றலைக்கண்டு அச்சம் யாதும் இன்றி நிச்சலும் இவனை அச்சுறுத்தி அவள் நிலைதிரிந்து வந்தாள். மரபுநிலை பாராது வரன்முறைஇன்றி நாளும் பலரை அவள் நயந்துவரினும் இப்பாழ்மகன் ஒன்றும் பேசாமல் உள்ளஞ்சி நின்றான். வெளியில் மாத்திரம் நல்லவன் போல விளங்கி வந்தான். இங்ஙனம் விளங்கிவருங்கால் துருவாசர் ஒரு நாள் தெய்வகதியாக இவன் இல்லை வந்தடைந்தார். அவரை இவன் உவந்துபசரித்து விருந்துசெய்ய விழைந்து அதற்கு இசைந்தருளும்படி மனைவியை நயந்து வேண்டினான். அவள் இசைந்து செய்தாள். அன்றிரவு முனிவர் தனித்

இருக்கும் இடத்தையணுகித் தான் நினைத்ததை முடிக்க விழைந்தான். தன்னைப் பொருந்தவேண்டுமென்று வலிந்துவந்து விரைந்து நிற்கும் அவனது இழிந்த நிலையினை அவ் அருந்தவர் தெரிந்தார். எதிர்ந்து சினந்தார். உடனே அவள் அஞ்சி ஓடி அருகே யிருந்த ஓர் ஆலமரத்தின் அடியினை யடைந்தாள். கடுங்காமியாய் நின்று அவள் புரிந்துள்ள புன்மையை வெளிப்படுத்தி உண்மையை இவனுக்கு உணர்த்த விரும்பி அம்முனிவர் ஓர் உபாயஞ்செய்தார். அவள் நின்ற இடத்தை விட்டுப் பெயராதிருக்கும்படி நினைந்தார். அவ்வாறே அவள் அசைவற்று நின்றாள். பொழுது விடிந்தது. ஒருவரும் காணுதபடி இல்லினையடைய விரும்பித் தனனாலானவரையும் அவள் அடிபெயர்த்துப் பார்த்தாள்; யாதும் முடியவில்லை. எல்லாரும் வந்து கண்டார். "என்ன! சித்திர ரேகை ஆலடியில் சித்திரம் போல் நிற்கின்றாள்" என்று ஊரவரெல்லாரும் வியந்துரையாடி உவந்து கூடினர். இவன் மிகுந்த நாணத்தோடு முனிவர் அடியில் விழுந்து அவளைத்தந்தருளும்படி தாழ்ந்து வேண்டினன். நீ சென்று அருகே நின்று இங்கு வா என்று அழைத்தால் அவள் வருவள் என்றார். அவ்வாறே போய் அழைத்தான். அவள் சிறிது பெயர்ந்து எழுடி நடந்தாள். அதன்மேல் கால் எழவில்லை. மறுபடியும் வந்து முனிவரை மறுகி வேண்டினன். உன்னைப்போலவே கலந்து அவள்பால் இன்பம் நுகர்ந்தவரெல்லாரும் வந்து வாவென்று சொல்லினல் வருவள் என்றார். பாவம்! அதனைக் கேட்டும் இப்பேதைமகன் அவளைப்பேணி நின்று, புல்லிநுகர்ந்தவர் யாவரும் வந்து சொல்லும்படி போய் நயந்து வேண்டினன். சிலர் நாணி ஒதுங்கினர்; பலர் அவ் அழகியை மருவிய பெருமையையாரும்காண நேரேவந்து காட்டினர். காட்டியும் அவள் வீட்டினருகே சேர்ந்தாளேயன்றி உள்ளே புகமுடியவில்லை; அம்முடியாமையை இவன் முனிவருக்கு உரைத்தான். அந்த வாரமல் அபலிடங்களிலுள்ள கள்ளக் காதலர்களது பெயர்களை யெல்லாம் எல்லாரும் அறியும்படி அவள் சொல்லிக்கொண்டால் இல்லுட் புகுவள் என்றார். அவ்வகையே சொல்லவும் செய்வித்தான். அதன்பின் அவள் இல்லினை யடைந்தாள். என்னமாப்போனாலும் தனக்கு அவள் கிடைத்தாளே என்று இவன் களித்துக்காதல் கொண்டான்;

ஆயினும் உளத்தில் மிக நாணி வெளிப்பட அஞ்சினான். பின்பு எல்லாரும் எள்ளித்தூற்ற இவன் இழிந்து தொலைந்தான். இல்லாளிடத்துத் தாழ்ந்து நிற்கும் இழிவுடையவன் எஞ்ஞான்றும் நல்லாருள் நாணுவன் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். விரிவை உபதேச காண்டத்தில் காண்க.

வினையில் என்மகன் றனுயிர் செறுசெயத்திரதனைக்
குனிசிலையின் நாளையுயிர் கோறல்புரி யேனெனில்
மனைவி அயலான்மருவல் கண்டும் அவர்கையால்
தினையளவும் ஓர்பொழுது நின்றவனு மாவேன். (பாரதம்.)

இது, அருச்சுனன் கூறிய வஞ்சின வுரை. தன்மகனாகிய அபிமன்னனைக்கொன்ற சயத்திரதனைக் குறித்தநேரத்துட் கொல்லவில்லையானால் மானமழிந்து மனைவிழைந்து நிற்கும் பழிமகன் போங்கதியில் போவேனாக என அவ் ஆண்டகை இதில் அறைந்திருக்கும் உறுதியை ஊன்றியுணர்க. நிலைதிரிந்தமையை நேரில் அறிந்திருந்தும் ஆண்மையொழிந்து இழிந்த இச்சையால் தன் இல்லாளிடத்துத் தாழ்ந்துநின்ற புண்டரிகன் நிலைமை எவ்வளவு இளிவினது என்பது இதனால் இனிதுணரலாகும்.

ஆடவனாய்த் தோன்றியுந்தன் ஆண்மைகுன்றிப் பெண்விழைவோன்
மூடர் தமக்குள் முதல்.

இல்லாள்பால் இழிந்து நிற்பவன் எல்லாராலும் எள்ளப்படுவன் என்பது இதனால் கூறப்பட்டது.

---

904. அன்று மனையாளை அஞ்சினான் சாமகன்பின்
குன்றினான் என்னே குமரேசா—நின்று
மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்தல் இன்று. (௪)

இ—ள்.

குமரேசா! தன் மனைவிக்குப் பயந்துநின்ற சாமகன் ஏன் வினைநலமின்றி விறழிந்து நின்றான்? எனின், மனையாளை யஞ்சும் மறுமையிலாளன் வினை ஆண்மை வீறு எய்தல் இன்று என்க.

இது, இல்லாளை அஞ்சுபவர் இருமையிலும் சிறுமையுறுவர் என்கின்றது.

வினை ஆண்மை = வினையை ஆளுந்தன்மை; அஃதாவது காரியங்களை முடிவுபெற இனிது நடத்தும் வன்மை.

வீறு = பெருமை. எய்தல் இன்று = உண்டாதல் இல்லை.

மனையாளை அஞ்சுகின்றவன் மறுமைக்கேதுவாகிய அறவினைகளை நன்கு செய்ய இயலாது; அதனால் அங்கு அவன் ஒரு நலமுமிலனாய் இழிவுறுவான் ஆதலால் அவனை மறுமையிலாளன் என்றார்.

மேல், இன்பங்கருதித் தன் இல்லாள்பால் இழிந்து நிற்பவனை எல்லாரும் இகழ்வர் என்றார்; இதில், அவளை அஞ்சுகின்றவன் ஆண்மையிலனாய் அவமுறுவன் என்கின்றார்.

தன் மனையாளை அஞ்சி ஒழுகுகின்ற மறுமை நலமில்லானது வினையாண்மை மேன்மையுறாதென்பதாம்.

பெண்டாட்டிக்குப் பயந்துநிற்கின்றவன் எந்தக் காரியங்களையும் தானாகத் துணிந்து செய்யமாட்டான்; ஆகவே பேடிகை வாள்போல் அவன் தொழில் பாடு பெறாது ஆதலால் அவனது "வினை ஆண்மை வீறு எய்தல் இன்று" என்றார்.

தன் மனைவியை அஞ்சும் சிறுமையுடையானுக்கு மறுமை இல்லையாம் என்று அச்சுறுத்தியது அவன் அங்ஙனம் அஞ்சாது ஆண்மையுடன் நின்று மேன்மைபெற வேண்டி என்க.

எவ்வளவு வினையாண்மைகளையுடையனாயினும் மனையாளை அஞ்சி நிற்பவனுக்கு மாண்பு இல்லையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாமகன்பால் உணரப்படும்.

### கதை.

சாமகன் என்பவன உருசகன் என்னும் அரசனுடைய குமரன். அறிவும் கல்வியும் அமையப்பெற்றவன். இவன் பெருந்திருவுடையனாய்ச் சிறந்திருந்து அரசுபுரிந்தான். இவனுடைய மனைவிபெயர் சயிப்பியை. அவள் கட்டழகியாயினும் கடுஞ் சினமுடையவள். அவளது இன்பச்செவ்வியில் இவன் மிகவும் ஆழ்ந்திருந்தான். அதனால் அரசமுறையினையும உரிமையோடு பாராமல் உறுதிநலங்களை

யும் ஓராமல உள்ளக்களிப்போடு அவள் சொல்வழியே நின்று ஒழுகிவந்தான். வருங்கால் பண்டுதொட்டே பகைவனாய் நின்ற சண்டசேனன் என்பவன் இவன்மேல் அமர்செய்ய அமயநோக்கி நின்றான். அந்நிலையினை யறிந்த அமைச்சர், உணர்ச்சிவர இவனை ஊக்கி உடனழைத்துக்கொண்டு பெரும்படையுடன் சென்று கொடுஞ்சமர் புரிந்து அப்பகைவனை வென்று அவனுடைய அருமை மகளாகிய கமலவதி என்பவளைச் சிறைபிடித்து வந்தார். வெற்றிக களிப்போடு இவன் அரண்மனைக்குட் புகுங்கால் அவ் அரசகுமரியையும் உடனகொண்டு சென்றார். அங்கிருந்த இவனது மனைவி "இவள் யார்?" என்று அவளைக் குறித்து வினவினாள். அதனைக்கேட்டவுடனே திடுக்கிட்டு யாது சொல்வனோ? என்று இவன் அகமிக அஞ்சி "உன் மருமகள்" என வாய்பதறிஉளறினான். "மகனே பிறக்கவில்லையே அதற்குள் எப்படி மருமகள் வீட்டுக்கு வந்துவிட்டாள்" என்று அவள் விரைந்து மொழிந்து வெகுண்டு பழித்தாள். உண்மையில் அதுவரையும் யாதொரு பிள்ளைப்பேறும் இல்லாதிருந்தும் இவன் உள்ளஞ்சியுரைத்த அச்சொல்லைக்கேட்டு எல்லாரும் சிரித்தார். நாளடைவில் அவளுக்கு இவன் அஞ்சிவந்த தன்மையை அறிந்து அனைவரும் இகழ்ந்தார். வினையாண்மையில் மிக்க மேன்மையுடையனாயிருந்தும் தன்மனையாளை அஞ்சிநின்றமையால் யாதொரு மாட்சியுமிலனாய் இருமையிலும் இவன் சிறுமையெய்தியிருந்தான். மனையாளை அஞ்சும் மறுமையிலாளன் வினையாண்மை வீறு எய்தல் இன்று என்னும்உண்மையை உலகம் காண இவன் உணர்த்திநின்றான் விரிவைப் பாகவதத்தில் காண்க.

பழியஞ்சான் வாழும் பசுவும்; அழிவினால்
கொண்ட அருந்தவம் விட்டானும்;— கொண்டிருந்து
இல்லஞ்சி வாழும் எருதும்; இவர்மூவர்
நெல்லுண்டல் நெஞ்சிற்கோர் நோய். (திரிகடுகம்.)

இல்லஞ்சி வாழ்வோன் இருத்தலினும் இல்லானேல்
சொல்லெஞ்சும் நீங்குந் துயர்.

இல்லாளை அஞ்சி நிற்போர் இருமையினும் இழிவுறுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

905. அஞ்சியேன் ஔவைக் கமுதளிக்கத் தன்மனையைக்
கொஞ்சினன் சாலன் குமரேசா—நஞ்செனவே
இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்றும்
நல்லார்க்கு நல்ல செயல். (ரு)

இ—ள்.

குமரேசா! ஔவைக்கு ஒருபொழுது அன்னமிட அஞ்சிச் சாலன் ஏன் தன் மனைவியைக் கெஞ்சினன்? எனின், இல்லாளை அஞ்சுவான் நல்லார்க்கு நல்ல செயல் எஞ்ஞான்றும் அஞ்சும் என்க.

இது, இல்லாளுக்குப் பயந்தவன் நல்லதொன்றும் செய்யான் என்கின்றது.

கொஞ்சினன் என்றது உள்ளஞ்சி அவளை இவன் கெஞ்சி நின்றமை கருதி. நல்லார் = நல்லகுணங்களையுடையார்; அவராவார் அருந்தவர், துறந்தவர், பெரும்புலமையாளர், சிறந்த விருந்தினர் முதலிய உயர்ந்தோர்கள் என்க.

நல்ல என்றது இனிய உதவிகளை.

செய்யான் என்னாது அஞ்சும் என்றது செய்தற்குமனமிருந்தாலும் அச்சத்தால் அது மாட்டான் என்பது தோன்ற என்க.

மேல், மனைவிக்குப்பயந்தவன் வினையாண்மை குன்றுவான் என்றார்; இதில், அவன் ஒருநன்மையும் செய்யமுடியாதாய் உயிர்ப் பிணமாய் ஒடுங்கி யிருப்பன் என்கின்றார்.

தன்மனையாளை அஞ்சிநின்றவன் எக்காலத்தும் நல்லார்க்கு நல்லன செய்தலை அஞ்சுவான் என்பதாம்.

நிரம்பிய பொருளுடையனாயிருந்தாலும் மனைவிக்குப் பயந்தவன் தன் தாய்தந்தையரையும் போற்றான், விருந்தினரைப் பேணான், துறவிகள் முதலிய பெரியார்கள் வரின் அவர்கட்கு உறுவன உதவான் என்பார் "இல்லாளை அஞ்சுவான் நல்லார்க்கு நல்ல செயல் அஞ்சும்" என்றார். அவ் அச்சம் எக்காலத்தும் நீங்காதென்பார் எஞ்ஞான்றும் என்றார்.

தான் ஒரு ஆண்மகனாயிருந்தும் பெண்ணினுக்கு அஞ்சி விருந்து புறந்தருதல் முதலிய நன்மைகளை யிழந்து இங்ஙனம் புன்மை

யெய்திநிற்பவனை எல்லாரும் ஈனமாக எள்ளி இகழ்ந்து கூறுவர் என்க.

இல்லாளை அஞ்சி விருந்தின்முகங் கொன்ற நெஞ்சிற்
புல்லாளனாக மறந்தோற்பின், எனப் புகைந்து
வில்லா ளழுவம் பிளந்திட்டு, வெகுண்டு நோக்கிக்
கொல்யானையுந்திக் குடைமேலும் ஓர் கோல்தொடுத்தான்.

(சீவகசிந்தாமணி)

இது போரில் எழுங்கால் ஒருவீரன் வஞ்சினங் கூறியது. இன்று யான் வெல்லேனாயின் இல்லாளை அஞ்சி நல்லது செய்யாத புல்லன்போங்கதியில் போவேனாக என்று அவன் பொங்கி மொழிந்திருத்தல் காண்க. பெண் அஞ்சிவாழும் பேடிகளின் புன்மையை வீரநோக்கோடு வெறுத்து விளக்கி நம் அடிகளின் கருத்தை இஃது அடிபொற்றி நிற்கும் அழகை ஆய்ந்து நோக்குக.

எவ்வளவு செல்வமுடையனாயினும் இல்லாளை யஞ்சிநிற்பவனுக்கு நல்ல விருந்தினரைப் பேணமுடியாது; ஆகவே எல்லாம் இருந்தும் ஒன்றும் இல்லாதவனாகி அவன் இழிவுறுவன் என்க.

அவள் இட்டால், உண்டு; இல்லையானால் இல்லை; என்று ஏங்கிப் பெண்டாட்டிக்குப்பயந்து திண்டாடி நிற்பவர் விருந்தினரைக் கண்டால் அவர் கொண்டுநிற்கும் கலக்கத்திற்கு ஓர் அளவுண்டா? சிலர், கூசிச்சென்று இச்சகம்பேசி அவளது உத்தரவுபெற்று, வெளியில் வந்து மிக ஆண்மையாளர்போல் நடித்து ஒருவேளை அன்னமுதவி விடுத்து அவ்வளவில் மகிழ்கின்றார்; சிலர், மறைவாகப் பொருள் கொடுத்து உணவு விலைப்படுத்தும் பொது நிலையத்துக்கு அனுப்பி விடுகின்றார்; சிலர், இனந்தெரியாமல் விருந்தினரையழைத்துவந்து வீட்டுக்குட்போய் விழிக்கின்றார்; சிலர், அவள் பாட்டுக்கு அஞ்சிப் பதறுகின்றார்; சிலர், புதியவர் யாரேனும் வந்துவிட்டால் அவர் எழுந்துபோம் வரையும் தாமும் பட்டினிகிடந்து பதைக்கின்றார்; இன்னவாறு பலவகையிலும் இல்லஞ்சிப் பலர் இக்காலத்தும் உளர் என்ப. முன்னம் ஒன்னன் என ஒருவன் இருந்தான். அவன் நல்ல குணங்களோடு பெருஞ்செல்வமு முடையவன். அவனுடைய மனைவி மிகப்பொல்லாதவள். அவள் சொல்வழிஒழுகி வல்வாய்க்கு அஞ்சி அவன் வாழ்ந்திருந்தான். ஒருநாள் மாலைப்பொழுதில் ஒரு புலவரைக் கண்டான். அவரது இனியசொற்களைக்கேட்டுஉவகை

மீக்கூர்ந்து உடனேவீட்டுக்கு வாருங்கள்என்று அழைத்துவந்தான். உள்ளேபுக அஞ்சிப் புறந்திண்ணையில் அவரை இருக்கவிட்டு மனைவியிடம்போய் ஒருபெரியவர் வந்துள்ளார், கொஞ்சம் உணவு இட வேண்டும் என்று மிகவிநயமாக வேண்டினன். அவள் முதலில் சீறி விழுந்தாளாயினும் பின்பு மாறியிரங்கி இலை இல்லை; அவை ரப்போய் வாங்கிவரச்சொல்லும் என்றாள். நல்லவேளை இவ்வளவாவது இரங்கினளே என்று அவனே விரைவாகக் கடைக்கு ஓடினன். அவள் உள்ளிருந்து எழுந்துவந்தாள்; வருங்கால் அங்குக் கிடந்த ஒரு கட்டை காலில் தட்டிவிட்டது; கால்வலி முழுவெகுளிக்கு ஏதுவாய் நின்றது; அவ்வலியோடு சினந்து வெளியேவந்தாள்; இருளில் தனியாயிருந்த புலவரைத் தன் கணவன் என நினைந்து இரு கன்னங்களையும் இறுகப்பிடித்துத் திருகி இனி "இந்தமாதிரி வந்தவனையெல்லாம் கொண்டுவராதே" என்று கூறி விடுத்தாள். புலவர் என்செய்வார் பாவம்! உம் உம் என்று ஊமைபோல் பேசாதிருந்தார். அவள் உள்ளே போனவுடனே ஒருவருக்கும் தெரியாமல் அவர் விரைந்து வெளியேறிப்போனர். இலை வாங்கிவந்தவன் அவர் எங்கே? என்றான். அப்பொழுதுதான் அவள் இனந்தெரியாது திருகிவிட்டதை உணர்ந்தாள்; ஆயினும் வருந்தவில்லை. பசி அதிகம்என்று உணவருந்திப் போய்விட்டார் என்று ஓங்கி உரைத்தாள். பின்பு ஒருகாலத்தில் அப்புலவரை மற்றோரிடத்தில் அவன் பார்த்தான். மகிழ்ந்துநின்று தன் மனைக்கு வரும்படி வணங்கி வேண்டினன். அதற்கு அவர் சொல்லியதை அடியில் காண்க.

உற்ற விருந்தென் றுணராது நீயென்று
பற்றித் திருகிப் படுநீலி—அற்றுநின்ற
வண்ணம் எவர்சொல்ல வல்லார்? இனி அண்ணா!
நண்ணேனின் ஊர்த்திசையும் நான். (முகரி.)

இல்லாளை அஞ்சி நிற்பவர்க்கு உளவாம் இளிவும் இன்னல்களும் இதனல் இனிது தெளிவாம்.

இல்லஞ்சி நிற்றல் ஈனமாகுமாதலால் அந்நிலையினை ஒழித்தொழுகவேண்டும் என்பது கருத்து.

பெருந் திருவுடையனாயினும் பெண்டாட்டிக்குப் பயந்தவன்

விருந்தினரைப் பேணான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சாலன்பால் உணரப்படும்.

### கதை.

சாலன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்க் கொங்குநாட்டிலே கொல்லன்துறை என்னும் ஊரி லிருந்தவன். ஏர் பலவுடையவன். சேர்போகின்ற நிலங்களைத் திருத்தி விளைபொருள்களை வளமாக உளவாக்குவதில் இவன் மிகவும் வல்லவன். பருவம்பார்த்துப் பயிர்செய்து வந்ததனால் திருமிக வுடையனாய்ச் சிறந்துநின்றான். உயர்ந்த கல்வியில்லாதவனாயினும் இயற்கையில் மிகவும் நல்லவன். இவன் நாகணி என்பவளை மணந்து அவளோடு நயந்திருந்தான். அவள் சிறிது அழகுடையவளாயினும் பெரிதும் கொடியவள். வன்னெஞ்சமுடையவள். யார்வந்து எவ் வளவு வருந்தி யிரந்தாலும் யாதும் இரங்கி யீயாள். நெடுஞ்சினங் கொண்டு எப்பொழுதும் கடுஞ்சொல்லாடுவாள். ஆயினும் இன்ப நலங்கருதி அவள் இச்சையின்படியே இவன் இசைந்தொழுகி வந் தான். நில் என்றால் நிற்பதும், செல் என்றால் செல்வதும் ஆகிய நிலையில் இவனை அவள் செய்துவைத்திருந்தாள். புலியைக் கண்ட புல்வாய்போல் அவள் ஒலியைக்கேட்டு இவன் ஒடுங்கி நின்றான். அவளுக்கு அஞ்சித் தன் தாய்தந்தையர்களையும் பேணாது இவன் தள்ளிவைத்திருந்தான். சிறந்த செல்வமுடையனாயிருந்தும் இல் லாளையஞ்சி இங்ஙனம் இவன் இழிந்து வாழ்ந்து வந்தான். வருங் கால் ஔவை ஒருநாள் அங்குவந்தாள். பெரியவள் என்பதை அறிந் திருந்தானாதலால் அந்த அம்மைக்கு விருந்துசெய்ய இவன்விரும்பி னான். தன்விருப்பத்தைப் பெண்டாட்டியிடம்போய் வெளிப்படு த்தினால் என்னாமோ? என்று எண்ணி விழித்தான். ஒருவாறு உள்ளந்துணிந்து மெல்ல நெருங்கினான். அவள் தலையைத் தடவி னான். ஈரும்பேனும் எவ்வளவுள்ளன என்று சிலவற்றை எடுத்துக் கொடுத்தான். கொஞ்சம் எண்ணெயைத்தடவிச் சீப்பிடுவதுபோல் வாய்ப்புறச்சொறிந்தான். காக்கைகள் உண்ணிகளைப் பொறுக்குங் கால் தலைசாய்ந்துகிடக்கும் மாடுபோல் அவள்பாடமைந்திருந்தாள். இதுதான் சமயம்; சுகமாக அமைந்துள்ளாள்; என்று இவன் இத மாகச் செருமினான்; அடியில் வருமாறு மெதுவாகக் கூறினான்.

"ஒருகிழவி வந்திருக்கிருள்; கல்வியில் வல்லவள்; மிகவும் நல்லவள்; உன்மீது ஒரு பாட்டு வேண்டுமாஞலும் பாடுவாள்; கொஞ்சம் பழங்கூழ் கொடுத்தாலும் போதும்; அருமையான விருந்து;" என்றுகூறி மேலொன்று சொல்லி முடிக்குமுன்னரே அவள் வெடுக்கென்று துள்ளியெழுந்தாள். அருகே கிடந்த ஒரு பழஞ்சுளகைப் பாய்ந்து எடுத்தாள். உனக்கு விருந்தும்கூடவா? இனி இப்படிச் சொல்லாதே! இவ்வாறு செய்யாதே! என்று குதித்துக் குதித்து அடித்தாள். பாவம்! இப்பேடிமகன் என்ன செய்தான்? வெளியே ஓடிஞன். அங்கே தெருத்திண்ணையிலிருந்த ஔவையைக் கண்டான். அப்பொழுது இவன் கொண்ட துயரினையார் கூறவல்லார்? அவ்அம்மையார் இவனது நிலையினை நோக்கி நெஞ்சம் உருகிஞர். தம்பசியையும் மறந்தார். இவனைப்பார்த்து ஒருபாட்டுப்பாடிஞர். அதனை ஈண்டுக் காட்டுதும்.

சண்டாளி சூர்ப்பநகை தாடகையைப் போல்வடிவு
கொண்டாளைப் பெண்டென்று கொண்டாயே—தொண்டா!
செருப்படிதான் செல்லாவுன் செல்வமென்ன செல்வம்
நெருப்பிலே வீழ்ந்திடுதல் நேர். (ஔவையார்.)

இதனைக் கேட்டவுடனே இவன் வாட்டமுற்று நாணிஞன். உனக்கு நாணமும் வேண்டுமோ? என்று அவர் நகைத்துப் போயிஞர். போகும் போதே இவன் வீட்டில் பட்டபாட்டை நினைந்து தமக்குள்ளேயே சிரித்துக்கொண்டார். கொள்ளவே குதித்தொரு பாடலும் எழுந்தது. அதனை அடியில் காண்க.

இருந்து முகந்திருத்தி ஈரொடுபேன் வாங்கி
விருந்துவந்த தென்று விளம்ப—வருந்திமிக
ஆடிஞள் பாடிஞள் ஆடிப் பழமுறத்தால்
சாடிஞள் ஓடிஞன் தான். (ஔவையார்.)

முறம் = சுளகு. சாடிஞள் = அடித்தாள்.

இல்லாளை அஞ்சி இவன் கெஞ்சி நின்றதும், அப்பொல்லாதவள் செய்ததும் ஆகிய நிலையினை என்றும் நிலைபெற விளக்கி இது நிலவி நிற்றல் காண்க. இப்பாடலை அக்காலத்தவர் பலரும் பாடஞ் செய்திருந்தார். சுளகடிபட்டதுமுதல் எதிரொன்றும் பேசாமல் இவன் உளமடங்கி யிருந்தான். பெருஞ்செல்வம் வைத்திருந்தும்

பெண்டாட்டிக்குப் பயந்ததனால் ஒருநலமும் செய்யானாய் ஒளியிழந்துபோனான். இல்லாளை அஞ்சுவான் எஞ்ஞான்றும் நல்லார்க்கு நல்லன செய்தலை அஞ்சுவான் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

கோண்டவளை யஞ்சுங் கோழுநன் விருந்தினரைக்
கண்டபோழு தென்செய்வான் காண்.

இல்லினை யஞ்சுவோனுக்கு நல்லது இல்லையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

906. பண்டுயர்வாழ் வுற்றிருந்தும் பாசன் மனையஞ்சிக்
கொண்டிழிந்தான் என்னே குமரேசா—தண்டாத
இமையாரின் வாழினும் பாடிலரே யில்லாள்
அமையார்தோள் அஞ்சு பவர். (சு)

இ—ள்.

குமரேசா! சிறந்த தெய்வவாழ்க்கையை அடைந்திருந்தும் இல்லாளை அஞ்சியதால் பிரபாசன் என் இழிந்து நின்றான்? எனின் இல்லாள் அமையார் தோள் அஞ்சுபவர் இமையாரின் வாழினும் பாடு இலர் என்க.

இது, இல்லாளை அஞ்சுபவர் இழிவர் என்கின்றது.

இமையார் என்றது தேவர்களை. கண் இமையாது நிற்கும் தன்மையராதலான் அவர் இங்ஙனங் கூற நின்றார்.

பாடு = பெருமை. இலரே என்பதில் ஏகாரம் தேற்றமும் இரக்கமும் தோன்ற நின்றது.

அமை = மூங்கில். திரண்டு உருண்டு மென்மையாய் ஒளியமைந் திருக்குந் தன்மைகருதிப் பெண்கள் தோளுக்கு இதனை உவமையாகக்கூறுவர். "அமைத்திரள் கொள் தோளியர்" என இராமாயணத்திலும் "வேயுறுதோளி" எனத்தேவாரத்திலும் இதுவந்திருத்தல் காண்க. வேய் = மூங்கில். ஆர் இதில் உவமையுருபாய் நின்றது.

மேல், மனையாளை அஞ்சுபவனுக்கு மறுமைநலம் இல்லை என்றார்; இதில், அவன் தேவன்போல் வாழ்ந்தாலும் இங்குச் சிறப்பு இல்லை என்கின்றார்.

தம்இல்லாளது வேய் போலும் மெல்லிய தோளை அஞ்சுகின்றவர் இவ்வுலகத்து அமரர் போலச் சிறந்து வாழ்ந்தாராயினும் சிறப்புறார் என்பதாம்.

இமையார் வாழ்வை எடுத்துக்காட்டியது அரமடந்தையர், கற்பகம், நவநிதி, அமிர்தம், சுரபி, முதலிய வளங்களின் உயர்வு கருதி. உம்மை அவ்வாழ்வின் எய்தற்கரிய சிறப்புணர நின்றது.

படைகுடி முதலிய உடைமையிற் சிறந்து குடைநிழலமர்ந்து குஞ்சரமூர்ந்து தடையற வுலகெலாந் தான் கைக் கொண்டு இவ்வுலகில் இந்திரன் போல வாழ்ந்தானாயினும் மனையாளை அஞ்சுபவனுக்கு மாண்பு இல்லையாம் என்பார் அஞ்சுபவர் வாழினும் பாடு இலரே என்றார்.

பெருந்திருவும் அருந்திறலும் புறத்தே யுடையனாயினும் அகத்தே இல்லாளை அஞ்சிநிற்பின் எல்லாராலும் அவன் அவமதிக்கப்படுவனாதலால் இளிவுக்கேதுவாகிய அவ் அச்சத்தை அறவே ஒழித்து ஆண்மையோடு ஒழுகவேண்டும் என்பது கருத்து.

யாரும் வியக்கத்தக்கபடி உயர்ந்த வாழ்வினையுடையனாயினும் பெண்டாட்டிக்குப்பயந்தவனுக்குப் பெருமை இல்லையாம்என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிரபாசன் பால் உணரப்படும்.

## கதை.

பிரபாசன் என்பவன் தெய்வகணத்துள் ஒருவகைப்பிரிவினன். வசுக்கள் எண்மருள் ஒருவன். சிறந்ததிருவும் உயர்ந்தசீரும் உடையனாய் இவன் விளங்கியிருந்தான். அமரர்கோனாகிய இந்திரனும் நண்பமர்ந்து நிற்பஇவன் பண்பமைந்து நின்றான். இவன் வசுமதி என்பவளைமணந்து இனிய போகங்களை நுகர்ந்து அவள்பால்பெரு மோகியாய் முறைகடந்து நின்று பிறிதொன்றையும் கருதாதுநிலை திரிந்திருந்தான். அவள்மிக்க அழகுடையளாயினும் அறிவுநலமில்லாதவள். காமஇச்சையில் இவன் காலாழ்ந்து நிற்றலை அவள் கண்

டறிந்துகொண்டு தான் ஏவியபடியெல்லாம் இசைந்து வரும்படி இவனை இசைத்து வைத்திருந்தாள். அவள் யாதுகூறினும் அதனை வேதவாக்கென விரைந்து முடித்து இவன் விழைந்து வந்தான். அவளை யஞ்சிநின்று அலமந்து இவன் ஆதரித்து வருதலைப் பிறர் இகழ்ந்தாராயினும் யாதும் நாணாது மேலும்நயந்து நின்றான். ஒரு நாள் காமதேனுவைக்குறித்து அரம்பையர் சிலர்புகழ்ந்து கூறினர்; அதனைக்கேட்டுநின்ற அவள் அத்தெய்வப்பசுவை எப்படியாவது கொண்டுவந்து தரவேண்டும்; இல்லையானால் தன்பால் வரவேண்டாம் என்று உறுதிதோன்ற இவனிடம் உரைத்து நின்றாள். அருந்தவக் குரிசிலாகிய வசிட்டருடைய இல்லில் அது அமர்ந்திருத்தலையறிந்து அங்குத்தனியேபோக அஞ்சித் தன்தோழராகிய அனலன்முதலிய எழுவரையும் தனக்குத் துணைவரும்படி வேண்டினான். நட்புரிமையால் அவரும் இசைந்தார். அவரை அழைத்துக்கொண்டு இரவில் கரவாகச்சென்று அதனைக் களவாடிவந்தான். இவன் செயலினை அச்செய்தவன் அறிந்து "எண்மரும் தெய்வபதவியை இழந்து மண்மிசை யிழிக" என எண்ணிச் சபித்தான். இல்லாளை யஞ்சி அவள் சொல்வழி ஒழுகிய இப்புல்லன் சொல்லைக்கேட்ட காலல்லவா! நமக்கும் இவ் அல்லல் வந்ததென்று அவ் எழுவரும் இவனை இகழ்ந்து வருந்தினர். பின்பு சாபத்தினின்று தம்மைக் காத்தருளும்படி கங்கையிடம் வந்து கரைந்து கூறினர். அடியில் வருதல் காண்க.

உற்றுறை எங்களுள் ஒருவன் றன்மனைப்
பொற்றொடிக்கு அழிந்தவன் புன்மை வாய்மையால்
சற்றுமெய் யுணர்வறத் தகாதொன் றெண்ணினான்
மற்றெழு வருமவன் வயத்த ராயினேம். (க)

தூநகை மொழிப்படி சோர ராகியே
வானவர் வணங்குதாள் வசிட்டன் வாழ்மனைத்
தேனுவை இரவினிற் சென்று கைக்கொளா
மீனெறி கரந்தென மீள ஏகினேம். (உ)

அன்புடை முனி முனிவாறி மானுடப்
புன்பிறப் பெழுவரும் புரிந்து மீளுதிர்
மின்புரை தெரிவைசொல் விழைந்த நீஅவண்
இன்பமற் றநேகநாள் இருத்தி யென்னவே. (பாரதம்.) (ங)

இவன், பெண்ணஞ்சி நின்று பெரும் பிழை செய்ததும், தான்

கெட்டதோடு தன்னைச்சேர்ந்தவரையும் கெடுத்து இழிக்கப்பட்டதும் இதனால் இனிதறியலாகும்.

உயர்ந்த தெய்வவாழ்வினை யடைந்திருந்தும் தனது மனையாளை அஞ்சி நின்றமையால் இவன் யாதொரு பெருமையும் இலனாய் இழிந்து நொந்தான். இமையாரின் வாழினும் பாடு இலரே இல்லாள் அமையார்தோள் அஞ்சுபவர் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

இந்திரவாழ் வெய்தி யிருந்தாலும் இல்லஞ்சும்
அந்தவாழ் வந்தோ அவம்.

பெண்ணினை அஞ்சிவாழ்வோன் பெருமை யடையான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

907. பேடியினும் பேதையெனப் பேசினர் பெண்விழைந்த
கோடகனை என்னே குமரேசா—நாடிநின்று
பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து. (எ)

இ—ள்.

குமரேசா! இல்லாள் சொல்வழியே நடந்த கோடகனை என் எல்லாரும் பழித்தார்? எனின், பெண்ஏவல்செய்து ஒழுகும் ஆண்மையின் நாண் உடைப்பெண்ணே பெருமையுடைத்து என்க.

இது, பெண்ஏவல்செய்பவன் பேடனினும் கேடனென்கின்றது.

பெண் இரண்டனுள் முன்னது மனையாளைக் குறித்தது. பின்னது பொதுவாகப் பெண்ணின் தன்மையை உணர்த்தி நின்றது.

ஏவல்செய்து = ஏவிய தொழில்களைச்செய்து. ஏவல் என்பது இன்னது செய்க என உயர்ந்தார் தாழ்ந்தார்க்கு இடும் கட்டளை. பணி, தொண்டு, ஆணை எனவும் அமைந்து இது தாழ்மைதோன்ற வரும். "ஆணை ஏவல்" என்றது பிங்கலந்தை.

ஆண்மை = ஆண்தன்மை. அடுத்தாரை அடக்கி ஆளும் தன்மை என இது தலைமைதோன்ற நின்றது. இன்உருபு எல்லைப் பொருளது. ஏகாரம் பிரிநிலை, தேற்றமுமாம்

பெண்மை = உவகைக்கேதுவாகிய அமைதித் தன்மை.

மேல், பெண்டாட்டிக்குப் பயந்தவன் எவ்வளவு செல்வங்களை யடைந்திருந்தாலும் அவன் பெருமையடையான் என்றார்; இதில், அவன் பிறப்பும் இழிக்கப்படும் என்கின்றார்.

தன் மனையாள் ஏவின தொழில்களைச் செய்து திரியும் ஒருவனது ஆண் தன்மையினும், நாணமுடைய பெண்தன்மையே மேன்மையுடையதாம் என்பதாம்.

பெண்ணுக்கு நாணமும் ஆணுக்கு மானமும் உயிராதாரமாயுள்ள உயர் குணங்களாம்; இவற்றை உயிரினும் சிறந்தனவாக அவர் போற்றவேண்டும்; இன்றேல் அவர் தோற்றம் வீணாம்; ஆகவே தன்னியல்பு குன்றாத நாணமுடைய பெண் பிறப்பினும் மானங்கெட்ட ஆண்பிறப்பு ஈனமாம் ஆதலால் இதனினும் அது பெருமையுடைத்தென்றார்.

தலைவனாய் நின்று ஆளுதற்குரிய ஆடவன் தன் நிலைமை திரிந்து அடிமையாய் அமைந்து பெண்ஏவல் செய்தொழுகல் பெரும் பிழையாம்; ஆகவே அப்பிழையுடையான் விழுமிய நலன்கள் யாதும் அடையானாய்ப் பழிமிகுந் துழல்வன் என்க.

\ தன்னுவாளப் படுமனைவி தன்னுவாளப் படுவானேல்
அன்னுற்கறனும் பொருளுமுளவாகா; தொலைப் பொருளானும்
மன்னுபயன்கள்; வினைமுடியா; மறுமையணுகாது; எப்பிழையும்
முன்னும்; பின்னும் பெருநாணும் மூவாப்பழியு ; அதிமைந்தா.

என்பதும் ஈண்டு அறியத்தக்கது.

இழிந்த இச்சையால் தன் மானங்குன்றி மனைவிபேச்சைக் கேட்டு மாண்பின்றி நடப்பவன் ஆண்டன்மை இலனாய் அவமுறுவன் என்பது கருத்து.

இல்லாள் ஏவியபடியெல்லாம் இழிந்து நடப்பவனை எல்லாரும் இகழ்ந்து பழிப்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை கோடகன்பால் உணரப்படும்.

## கதை.

கோடகன் என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர் உத்தரகோசலத்திலே சத்திபுரி என்னும் நகரிலிருந்தவன்.

மறையவர் மரபினன். இவன் முகுந்தை என்பவளை மணந்து இல் வாழ்க்கை புரிந்து எவர்க்கும் நல்லவனு யிருந்து வந்தான். சூது வாதுகள் யாதும் அறியாத சாதுவாயிருந்தும் இவன் வாழ்க்கை வருந்தத்தக்கதாயிருந்தது. இவனுடைய மனைவி மிகக் கொடியவள். அவள் பார்ப்பனியாயிருந்தும் இரக்கமுதலிய இனிய குணங்கள் ஏதுமிலளாய் இப்பார்ப்பானைப் படாதபாடு படுத்தி வந்தாள். வெறுத்த முகமும் கடுத்த சொல்லும் நாளும் அவள் தொடுத்து நின்றாள். என்ன செய்தாலும் இவன் எதிர் பேசாது அவள் சொன்னபடியெல்லாம் செய்தான். அவள் கொச்சைவாய்க்குப் பயந்து இச்சகம்பேசி இவன் இழிந்து நிற்றலைக்கண்டு எல்லாரும் இகழ்ந்து நின்றார். காமச்சுவையில் காலாழ்ந்து இங்ஙனம் இவன் காலங் கழித்து வருங்கால் திருவயோத்தியில் இராமபிரான் அசுவமேத யாகஞ்செய்தலைக் கேள்விப்பட்டுப் பரிசில் விழைந்து அங்குப் போகத்துணிந்தான். தன் விருப்பத்தை அவளிடம் அமயநோக்கி விளங்க வுரைத்தான். அவள் உவந்திசைந்தாள். இயல்பாகவே வறுமையும் மூடமும் உடையவளாதலால் வேறு பெரும்பொருளை விரும்பாமல் கலப்பயறு வாங்கி வாரும் என்று ஓங்கி யுரைத்தாள். இவன் அங்கு விரைந்து சென்று அவ் வீரமூர்த்தியைக்கண்டு பணிவோடு விழைந்து நின்றான். அவ்வள்ளல் இவனை நோக்கி உமக்கு என்ன வேண்டும்? என்றார். இவன் "கஞ்சிக்குக் கலப்பயறு" வேண்டும் என்றான். ஆசையில்லாதவன் என்று அவர் அகமிக மகிழ்ந்து அளவில்லாமல் பொருளை இவனுக்கு அள்ளிக் கொடுக்கும்படி அருள்புரிந்தார். இவன் இருகரங்களையுமேந்தி அருகில் நெருங்கி "ஐயனே! எனக்குப் பயறு தவிர வேறு யாதும் வேண்டாம்; வேறொன்றைக் கொண்டுபோனல் என் பெண்டாட்டி என்னைக் கொன்றுபோடுவாள்" என்றான். இவன் சொல்லைக்கேட்டு அப்பேரவையிலிருந்தவரெல்லாரும் எள்ளிச் சிரித்தார். இவனது வஞ்சமற்ற தன்மையும், மனைவிக்கு அஞ்சி நிற்கும் புன்மையும் நோக்கி அப்பெருமானும் புன்னகைசெய்து இவன் விரும்பியபடியே கொடுத்து விடுத்தார். அவ்வேள்வி வரலாற்றில் பெண்ணஞ்சிவந்த இவன் கேள்வி நிலையே அகப்பட்டிப்புடையதாய் நகைச்சுவைக்கேதுவாய் மிகச் சிறந்து நின்றது. அடியில் வருதல் காண்க.

மருடனைப்பெற்ற மாதாள் சீறிய பொழுது
கருடனைக் கண்டபாம்புபோற் கலங்குவோ னவள்தன்
அருடனைப்பெற்ற போதற வாழ்ந்துவீற் றிருப்பொன்
குருடனொப்ப அக்கொடியவள் படுகுழி வீழ்ந்தோன். (க)

தீதென் றுள்ளன எவற்றினும் சிந்தை செல்லாதோன்
சாது வேதியன் தன்மனை புகுந்துதான் கொண்ட
மாதாள்தனை வல்விரைந் தெய்தியான் பாதே
ஏதுவேண்டுமென் இராமனையென அவளியம்பும். (உ)

நெஞ்சிற் றூயனும் நிறைதனைத் திராமனைக் கண்டால்
அஞ்சிப் பல்லிளித் தடலையாய் அகல நில்லாதை
பஞ்சிப் பாழ்த்தகம் மிடிசொலிப் பலவும் வேண்டாதை
கஞ்சிக்குக் கலப்பயறு வேண்டிநீ கடிதென் றாள். (௩)

என்று கூறலும் இராமனை வேதியனெய்தி
நின்றபோதவன் வறுமையை நிமலனு நினைந்து
குன்று போற்றனங் கோநிரை கொடுத்திட இவையான்
ஒன்றும் வேண்டலேன் காரணங்கேளென வுரைக்கும். (௪)

மாரிகிட்டப் பெற்றும் பெறுவன்பயி ரெனவென்
பாரிகஞ்சிக்குப் பயறு வேண்டினள் கலமொழிய
வீரவீரனே! வேறொரு பொருளை வேண்டுவனேல்
சேரலாளவள் என்னொடுஞ் சீறிமென் றுரைப்ப. (௫)

(உத்தரராமாயணம்).

பான்மை திரிந்து, ஆண்மை குன்றி இல்லாள் ஏவியபடியே இவன இழிந்துநின்ற தன்மை இதன்கண் விளங்குதல் காண்க. பெண்ணஞ்சி வாழ்ந்த இவன் பிறப்பினை எல்லாரும் இகழ்ந்து கூறினர். பெண்ணேவல் செய்தொழுகும் ஆண்மையின், நாணுடைப் பெண்ணே பெருமையுடைத்து என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

பேடலியாய்த் தோன்றிப் பிழைத்தலினும் பெண்ணஞ்சும்
ஆடவனாய்த் தோன்றல் அவம்.

இல்லாள் ஏவல் செய்தொழுகல் ஈனமாமென்பது இதனால் கூறப்பட்டது.

---

908. காதலிதன் சொற்கேட்டுக் கைதவனும் நீதியின்றிக்
கோதேன் புரிந்தான் குமரேசா—ஏதேனும்
நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர். (அ)

இ—ள்.

குமரேசா! காதலி விழைந்தபடியே அமைந் தொழுகிவந்த வழுதிவேந்தன் ஏன் நண்பரைப் பேணுமல், நன்றுபுரியாமல் குன்றி நின்றான்? எனின், நல் நுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர், நட்டார் குறைமுடியார்; நன்று ஆற்றார் என்க.

இது, தம் காதலி சொல்வழி நடப்பவர் நீதிநலங்களைச் செய்யார் என்கின்றது.

கைதவன் என்றது இராசராசனை. மாறன் வழுதி தென்னவன் பஞ்சவன் என்பனபோல் ஏதுவோடு இப்பெயர் பாண்டியனைக்குறித்துவரும். உம்மை அவனது இயற்கையான சிறப்புணர நின்றது.

நட்டார் = நட்பு செய்தவர்; நண்பர்என்றவாறு.

குறை = நிறைவேறுது நிற்கும்காரியம்; அஃதாவது முடிக்க வேண்டியகாலத்தில் முடிக்கப்படாமல் முட்டுப்பாட்டால்தட்டுற்று நிற்பது. "குறைமுடித்தன்றிச் செல்லாக்கொற்றவன்" என்புழி இஃது நின்றுணர்த்துதல்காண்க. "குறைவேண்டுநர்"என்றதுபெரும்பாண், நல்நுதலாள் = நல்ல நெற்றியினை யுடையாள். என்றது மனையாளை.

மேல், அமையார்தோள் என்றதுபோல் இங்ஙனம் உறுப்பு நலந்தோன்றக் கூறியது இயற்கையாகிய அவரது மெல்லிய சிறப்பு நிலை விளங்க என்க.

பெட்டாங்கு = விரும்பியபடியே. பெட்டல் = விரும்பல்.

"பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி" எனப் புறத்திலும், "பெட்டாங்கொழுகும் பெண்டிர்" என மணிமேகலையிலும், "பெட்டாங்கொழுகும் பெருமகன்" எனப்பெருங்கதையிலும் இது வந்திருத்தல் காண்க.

மேல், பெண்டாட்டிக்குத் தொண்டுசெய்து நிற்பவனுக்கு எவ்வகையிலும் பெருமையுண்டாகாதென்றார்; இதில் யாதொரு நன்மையும் அவனால் செய்ய முடியாதென்கின்றார்.

தாம் விரும்பியவாறன்றித் தம்மனையாள் விரும்பிய படியே புரிந்தொழுகுபவர் தம்மோடு நட்புச் செய்தாரது குறைகளைத் தீர்க்கார்; அதுவேயுமன்றி நல்ல அறங்களைச் செய்யவு மாட்டார் என்பதாம்.

இல்லாள் விழைந்தபடியெல்லாம் இழிந்து நடப்பவர் தம்உள்ளம் விரும்பியபடி ஒன்றும் செய்துகொள்ள மாட்டார் என்பார் அவர் "நட்டார் குறைமுடியார்; நன்று ஆற்றார்" என்றார்.

தன்னுடைய நண்பர் வறுமை முதலிய இடர்ப்பாடுகளால் தளர்ந்து கருதியது முடியாமல் கலங்கித் தன் உதவியை நாடி நிற்பின் அப்பொழுது அவர்க்கு ஆதரவாய் நின்று ஆவன செய்தலே ஆண்மகனுக்குக் கடமையாம் ஆதலால் அவ்வுரிமையை எடுத்துக் காட்டிப் பெண்ணஞ்சி வாழ்வோன் அதனைமுடிக்கமாட்டாமல் விழிப்பன் என விளக்கி அவனதுஇழிநிலையை இதில் விளக்கியருளினர்.

உடைந்தவர்க்கு உதவானெனின், உள்ளதொன் றீயானெனின்,
அடைந்தவர்க்கு அருளானெனின் அறமென்னாம்? ஆண்மையென்னாம்?
(இராமாயணம்.)

இது, இராமன் கூறியது. தன்னை அடுத்தவர்க்கு உற்றகுறையைத் தீர்த்து ஆதரிக்க வில்லையானால் ஒருவன் ஆண்மைப் பிறப்பால் பயனில்லை என இஃது அறிவுறுத்தி நிற்றல் காண்க. இங்ஙனம் பிறப்பின் பயனாய்ச் சிறப்புற்று நிற்கும் உபகார நலங்களை மனையாள் சொல்வழி நடப்பவன் செய்யமுடியாது தேம்பி நிற்பனாதலால் அவ் இழி நிலையை ஒழித்தொழுகவேண்டும் என இஃதுணர்த்திய தென்க.

பெண்வழிச் செல்லுதல் நல்ல அறங்களையெல்லாம் கொல்லுதலாம் என்பது குறிப்பு.

இப்புல்லிய நிலையை யாதும் பொருந்தலாகாதென்பது கருத்து.

தன் காதலி விரும்பியபடியே அமைந்து நடப்பவன் சிறந்த செல்வங்களையுடையனாய் எவ்வளவு உயர்ந்திருந்தாலும் உற்றவர்க்கு ஒன்றும் உவந்து உதவாது உளந்திரிந்து நிற்பன் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை இராசராசன் பால் உணரப்படும்.

## கதை.

இராசராசன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்து அரசுபுரிந்த வரகுணபாண்டியனுடைய அருமைத் திருமகன். ஆட்சித்திறத்தில் இவன் மிக்க மாட்சியுடையவன். இவன் காலத்தில் இப்பாண்டிநாடு ஈண்டிய வளங்களோடு வேண்டிய நலங்கள் யாவும் பொருந்தி மிகச் சிறந்த நிலையில் விளங்கியிருந்தது. அமுதாங்கனை, குமுதவல்லி, சந்தி, பதுமை, வசுந்தரை, சாலினி, தருமசேனை, மானனீகை என்னும் கன்னியர் எண்மரை மணந்து முன்னிய போகங்களை நுகர்ந்து எங்கும் இன்னிசைபரப்பி இவன் இன்புற்றிருந்தான். அழகும் கற்பும் அமைந்த விழுமிய மனைவியர் இங்ஙன மேவியிருந்தும் காமக்கிழத்தியர் பலரைத் தனக்கு உரிமையாக இவன் கருதிக் கொண்டான். அவருள் வசந்தசேனை என்பவள்பால் மிகுந்த காதலுடையனாய் இவன் அமைந்து நின்று அவள் விரும்பியபடியெல்லாம் நடந்து வந்தான். அவள் எழிலோடு இசையினும் மிக்கவள். அந்நகரிலிருந்த பாணபத்திரன் மனைவிக்கும் அவளுக்கும் பாடல்வகையில் ஒருநாள் ஊடல் நேர்ந்தது. உத்தமியான அப்பாடினியை எப்படியும் அவமானப் படுத்திவிட வேண்டுமென்று இகல் மீக்கொண்டு அவள் இவனிடம் உரைத்தாள். இவன் உயர்ந்த அறிவுடையனாயினும் அவளது இன்பநுகர்ச்சியில் மிக இழிந்திருந்தானாதலால் அறநெறி துறந்து அதற்கும் இசைந்து பெரும்பொருள் செலவிடுத்து இசை வல்லளாய ஒருத்தியை இலங்கையிலிருந்து வரவழைத்தான். அவள் சொல்வழி நின்று இவன் அல்வழி நிமிர்ந்ததைக் குறித்துப் பரஞ்சோதிமுனிவர் மிக வருந்தி யுரைத்துள்ளார். அடியில் வருதல் காண்க.

அன்னபோக மடவாருள் ஒருத்தி அரசனுக்கமுதும் ஆவியுமாகும்
மின்னனாள்; மதுரகீத மிசைக்கும் விஞ்சையின் றுறைவலாள்; அவளுக்கும்
பன்னகாபரணன் இன்னிசைபாடும்பத்திரன் பொருவில் கற்புடையாட்கும்
முன்னுகீத வினையால் இகல்மூள வழுதிகாதன்மடமாதுபொருளாய். (க)

பாடினிக் கெதிரோர் பாடினிதனைப் பாடவிட்டிவள் படைத்த செருக்கை
வீடழிப்பலென எண்ணி யெழீஇத்தன் இறைமகற்கஃதிசைத்தலும் அந்தத்
தோடிறப்பொரு கயற்கணி நாதன் சேர்ந்தவா றெழுது மன்னவர் மன்னன்
நாடி அந்நகைய விறலியை ஈழநாட்டினும் வர வழைத்து விட்டான். (உ)

அங்ஙனம் அழைத்துவைத்து ஆவன வுணர்த்தித் தன் அரச சபையில் ஒருநாள் இருவரையும் பாடச்செய்தான். நகரமாந்தரும் மாதரும் அங்கு நயந்து கூடினர். இவன் உயர்ந்த ஆதனத்திலிருந்துகொண்டு அனைவரும் கேட்க ஓர் உறுதியைச் செய்தான். இன்று தோற்றவள் வென்றவளைத் தோளில்வைத்து இம்மன்றத்தை மும்முறை சுற்றிவரவேண்டும் என்று சூள்புகன்றான். அரசன் ஆதரவை நினைந்து அகமிகச் செருக்கி வந்தவள் முந்துறப்பாடினாள். அதன்பின்பு பாணன் மனைவி பாடத்துணிந்தாள்.

"வீணைவாங்கினள்; மாடகமுறுக்கினள்; விசித்து
வாணரம்பெறிந்து, இருசெவிமடுத்தனர் இயக்கர்
நாண, மெல்விரல் நடைவழி நாவினை அமுதம்
பாணாகோமகன் விறலியும் பலர்செவி நிறைத்தாள்."

இதனைக் கேட்டவுடனே பெருமகிழ்வடைந்து அனைவரும் பரவசராகி முன்னதையிகழ்ந்து இன்னதை வியந்தார். அரசன் சித்தந்திரிந்து "முன்னதே சிறந்தது; அவளே வென்றாள்" எனப் பெண்வழிச் சென்ற தன் புன்மை தோன்ற மொழிந்தான். ஆம் ஆம் என்று யாவரும் அஞ்சி இசைந்தார். "முன்னவன் அருளைப்பெற்று மும்மையும் துறந்தாரேனும் — மன்னவன் சொன்னவாறே சொல்வது வழக்காறன்றோ?" வாரங்கொண்டு பழி வளரும்படி இங்ஙனம் அழிவழக்குரைத்த இவன் அங்குநின்ற சிலர் நிலைமையை நோக்கி "இன்று ஒருநாளில் தோத்தக்கதோ இது?" மற்றொருநாள் வைத்து முற்றுந் தெளிவோம் என்று உற்றிருந்தவரெல்லாரையும் செல்லவிடுத்து மறுநாளே அவைகூட்டிப் பாடச்செய்து அன்றும் அவ்வாறே கோடி உரைத்தான். அப்பாணன் மனைவி பதைத்துத் தன் வித்தைவன்மையால் இவனை விரைந்து நோக்கி எதிர்ந்து நின்று

"தென்ன ரேறனையாய்! ஞால மனுவழிச் செங்கோலோச்சும்
மன்னரேறனையாய்! வாரவழக்கினை யாதலால் நீ
சொன்னவாறவையும் சொல்லத்துணிந்தது; ஐலோவன்ன
பன்னகா பரணர்முன்போய்ப் பாடுகேம்பாடு மெல்லை.

இருவரேம் பாட்டுங்கேட்டுத் துணிந்திவள் வென்றாளென்று
ஒருவர்சந்நிதியிற் சொன்னாற் போதும்; என்றுரைத்தாள்"

அவள் துணிவினை வியந்து அனைவரும் புகழ்ந்தார். இவனும் திகைத்திசைந்தான். உண்மையும் நேர்மையுமுடையார்க்கு யாண்டும் உறுதியும் ஊக்கமும் உளவாம் என்பதை அவளது உரை அன்று உணர்த்தி நின்றது. அடுத்தநாள் இறைவன் ஆலயத்துள் அழகியமண்டபத்துள் அவைகூடியமர மந்திரச்செல்வரும், தந்திர வல்லரும், அந்தணர் பிறரும் புடைசூழ இடையே இவன் அமர்ந்து வீற்றிருந்தான். இருவரும் முறையே பாடினர். அன்றும் ஈழப்பாடினியே இழிந்து தோற்றாள். பாணன் மனைவியே மாறுற வென்றாள். வென்றும் இவன் வியந்துகூறாது வேறுநினைந்தான். அப்பொழுது பரமன்செய்த அருளால் இவன் கொடுமூரண் ஒழிந்து உள்ளந்திரும்பிப் பத்திரன்பன்னியே வெற்றியடைந்தாள் என உள்ளபடி உவந்துரைத்து முன்குறித்த சூளின்படி திருத்தமுறச் செய்து பொற்பட்டாடைகள், மணியணிகள், முத்தாரங்கள் முதலிய வரிசைகள் பல தந்து அவளை வாழ்த்தி விடுத்தான். பண்டுதொட்டுத் தன் இடத்துக்கு உரிய பாடினியாயிருந்த உறவுநிலையும் பாராமல், உண்மையும் நேராமல், காமப் புன்மையால் காதலிசொற் கேட்டு நீதிகுன்றித் தீதுபுரிந்தேனே! என்று பின்பு இவன் தேறி வருந்தினன். நன்னுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர் நட்டார் குறைமுடியார்; நன்றுஆற்றார் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைத் திருவிளையாடலில் காண்க.

பெண்மொழியே கேட்டுப் பிழைப்பான் இழைப்பான்கொல்
எண்ணியதே தேனும் இனிது.

காதலி சொல்வழி செல்லல் தீதாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

909. துன்றி மனைவிழைந்த துத்தமனேன் நன்மையின்றிக்
குன்றி யழிந்தான் குமரேசா—நன்றாம்
அறவினையும் ஆன்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில். (க)

இ—ள்.

குமரேசா! பெண்வழி யொழுகிய துத்தமன் அறநலங்களை

யிழந்து ஏன் அவமடைந்தான்? எனின், அறவினையும் ஆன்றபொருளும் பிறவினையும் பெண் ஏவல் செய்வார்கண் இல் என்க.

இது, பெண்ஏவல் செய்வார் பிழைமிகப் பெறுவர்என்கின்றது.

அறவினை = அறச்செயல்; அஃதாவது இருமையும் பயக்கத் தக்க தருமகாரியங்கள் என்க.—

கார்கோ ளன்ன கயம்பல கிளைத்தல்,
கூவல் தொட்டல், ஆதுலர் சாலை,
அறங்கரை நாவின் ஆன்றோர் பள்ளி,
கடவுட் கண்ணிய தடவுநிலைக் கோட்டம்,
இனையவை முதலா நினைவருந் திறத்த
புரத்தன் மாதோ அறத்துறை. (ஞானமிர்தம்.)

மேற்குறித்த அறவினையை ஒருவாறு இது விளக்கி நிற்றல் காண்க. கார்கோள் = கடல்.

ஆன்றபொருள் = சிறந்தமைந்த செல்வம். ஆன்றல் = மிகுதல்.

பிற வினை என்றது இன்பச் செயல்களை. அறமும் பொருளும என முன்னர் உரைத்ததனால் அவற்றோடு தொடர்புள்ள இன்பத்தைப் பிற என்று குறித்தார்.

மேல், பெண்டாட்டி ஏவியபடி யெல்லாம் இழிந்து நடப்பவன் யாதொரு நன்மையும் யார்க்கும் செய்யமாட்டான் என்றார்; இதில், அறம்பொருள் இன்பங்கள் யாதும் இலனாய் அவன் இழிவன் என்கின்றார்.

தன்மனையாள் இட்டஏவலை இழிந்து செய்வாரிடத்து அறச்செயலும் அமைந்த பொருளும் இன்ப நுகர்ச்சியும் யாண்டும் உளவாகா என்பதாம்.

உயிர்க்கு உறுதிபயக்கத்தக்க அறங்கள் புரிதல், பெரும்பொருளீட்டல் முதலிய நலங்களைத் தானதுணிந்தபடியே செய்யும் ஆண்மகனுக்கே ஆற்றமுடியும்; அன்றிப் பெண் மனம் போல் நடக்கும் பேடிக்கு யாதும் முடியாதென்றவாறு.

“ஆதுலர்சாலை, சோலை, ஆவின்வாயுறை, கண்ணடி,
ஓதுவார்க்குணவு, தண்ணீருறுபந்தர், மடம், தாடகம்,

கோதிலாவுரிஞ்சி, சுண்ணம், கொலைபுயிர்விடுத்தலேறு
மாதலைக்கெண்ணெய், கண்ணோய் மருந்து, நன்மகப்பால்சோறு''

என்பன வாதியாகவுள்ள புண்ணியச்செயல்களைப் பெண்ணின்வழி நிற்பவன் தான் எண்ணியபடி செய்ய முடியாதாதலால் "பெண்ஏவல்செய்வார்கண், அறவினை இல்லை" என்றார்

அவ் ஏவலாளனுக்குப் பொருள்செயற்குரிய வினையாண்மையும் பயனும் இலவாம் ஆதலால் பொருளும் இல்லை என்றார்.

காமங்கருதி, அதுகாரணமாக அறம்பொருளாகிய நலங்களைத்துறந்து, இல்லாள் ஏவியவாறெல்லாம் இழிந்து நிற்பவன், தான் விழைந்தபடி ஐம்புல இன்பங்களையும் அவள்பால் ஆர நுகரமுடியாது ஆதலால் பிறவினையும் இல்லை என்றார்.

அறவினையும் ஆன்றபொருளும் இல்லையாம்படி செய்யவல்லை இல்லாள் சொல்வழி நடப்பவன் தனக்கு வேண்டிய உறுதிநலங்களெல்லாவற்றையும் ஒருங்கே இழந்து அறிவிலியாயிழிந்து என்றும் அவமதிக்கப் படுவன் என்பது கருத்து.

தையல்சொற் கேளேல். என ஔவை யருளிய நுட்பமும் ஈண்டு அறியத்தக்கது.

அறம் பொருள் இன்பங்களை அடையவிரும்புகின்றவன் தன் மனையாள் விழைந்தபடியெல்லாம் இழிந்து நடக்கலாகா தென்பது குறிப்பு

எவ்வளவு நல்லவனாயினும் இல்லாள் ஏவல் செய்துநடப்பவன் அறமுதலிய எல்லாநலங்களையும் இழந்து வருந்துவான் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை துத்தமன்பால் உணரப்படும்.

## கதை.

துத்தமன் என்பவன் விசுவாவசு என்னும் ஓர் கந்தருவ வேந்தனுடைய குமரன். இவன் அமரபல்லவமென்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தான். அழகும் திருவும் அமைந்திருந்தும் அவற்றை நன்குபயன்படுத்தாமல் அகங்களிப்புடையனாய் எவரையும் மதியாமல் இனிய போகங்களை நுகர்ந்து இறுமாந்திருந்தான். சயமதி, விசித்திரலீலை, அநங்கமாலை முதலிய மனைவியர் அறுவரை மணந்து

அவர்பால் கழிபெருங்காமியாய் நின்று அரசு முறைகளை முழுவதும் மறந்து இரவுபகலறியாது நுகர்வு நலங்களையே புதிது புதிதாக நோக்கி நுகர்ந்து மதுவுண்ட வண்டுபோல் மயங்கிக் கிடந்தான். அதனால் நூல்முறைமறந்து கோல்முறைதுறந்தான். அவர் விழைந்தபடியெல்லாம் இவன் இழிந்து திரிந்தான். ஒருநாள் அழகிய ஓர் மலர்வாவியில் அவர் நீராட விரும்பினர். அவர் ஏவிய வண்ணமே இவன் இசைந்துடன்வந்து ஆடைகளின்றி அவர்புடைசூழ நீருட்பாய்ந்து நீந்தி மகிழ்ந்தான். காமக்களிப்போடு இங்ஙனம் இவன் விளையாடி நிற்குங்கால் அங்கு வசிட்டர் வந்தார். அவரைக்கண்ட வுடனே அவரனைவரு நாணி விரைந்துபோய் உடைகள் புனைந்து விலகிநின்றார். இவன் யாதும் கூசாமல் அகஞ்செருக்கி அவமதித்து நின்றான். இவனது நிலையினை நோக்கி முனிவர் சினமிகப் பொங்கி அரக்கனாகி அலைந்துழலும்படி இவனை விரைந்து சபித்தார். அவ்வண்ணமே இவன் ஆகி யலைந்தான் சிறந்த நிலையினை யடைந்திருந்தும் மனைவியர் விழைந்தபடியே இழிந்து நின்றமையால் அறநிலையங்களுக் குரிய உயர் நலங்களெல்லாம் ஒருங்கேயிழந்து, உற்றபொருளும் ஒழிந்து, ஒருநலமுமின்றி இழி பிறப்படைந்து பழிமிகுந்து தொலைந்தான். பெண் ஏவல் செய்வார்கண் அறவினையும், ஆன்றபொருளும், பிறவினையும் உள வாகா என்பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான். இச்சை வயத்தனாய் இவ்வழியொழுகி இவன் இழிந்தொழிந்ததைக் குறித்து அனைவரும் இகழ்ந்து பழித்தார்.

ஒண்கந்தருவன் விசுவாவசுவின் ஒரு மைந்தன்
விண்கந்தரநேர் குழன்முத்தணியாம் வெண்பாலைத்
தண்கந்தரமூ கதமடவார் கட்டளை நீங்கா
வண்கந்திடறுங் கரியிற்றிரிவான் வலிமிக்கான். (க)

உத்தமன் என்பான் ஊர்த்தர் குழாத்துள் சுடர் போல்வான்
பைத்த நிதம்பப் பால்மொழி நல்லார் பலரோடு
மெய்த்துகில் இல்லாதாடலும் உச்சி வினைசெய்தற்
குத்தர மீனின் கொண்கனை முன்னோருடன வந்தார். (உ)

வந்தவர்தம்மைக் காணலும் நாணு மடமின்னார்
தந்தமருங்குற் காடைபுனைந்தார் தகை யில்லா
அந்தரில் வாளா உத்தமன் நின்றான் அதுகாணூஉ
முந்தை வசிட்டன் சிந்தைவெகுண்டான் மொழிகின்றான். (ங)

அறுவை யுடுத்திலை; அஞ்சிலை; அத்தம, அதனாலே
பெறுவை இராக்கத மேனியை இன்னே பெறுகென்று
மறுவை யொழிக்கும் திங்கள்முகத்தம்மயில் போலும்
செறுவையயிற்கண் மாதரை யும்பர்ச்செலு மென்றான். (௪)
(சேதுபுராணம்.)

உத்தரமீன் = அருந்ததி. கொண்கன் = கணவன். வசிட்டன் என்க. கடுங்காமியாய்நின்று பெண்ஏவல் செய்து அதனால் அறம் பொருளின்பங்களையிழந்து இவன் அழிந்தவுண்மை இதன்கண்ணும் விளங்குதல் காண்க.

**கோடி வைத்துப்பெண்ணஞ்சும் கோழையினும் ஆண்மையுடன்
ஓடெடுத்து வாழ்தல் உயர்வு.**

பெண்ணேவல் செய்யும் பேதையர் புண்ணிய நலங்களைப் பொருந்தார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

910. பேரழகு வாய்ந்திருந்தும் பெண்வழியிற் கேசினன்
கூரழியான் நின்றான் குமரேசா—சீரமைந்த
எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கெஞ்ஞான்றும்
பெண்சேர்ந்தாம் பேதைமை யில். (௰)

இ—ள்.

**குமரேசா!** பேரழகுடையனாயிருந்தும் தன்பெண்வழிச் செல்லாமல் வித்துக்கேசன் என் விளங்கி யிருந்தான்? எனின், எண் சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு எஞ்ஞான்றும் பெண் சேர்ந்து ஆம் பேதைமை இல்லை என்க.

இது, இல்லாள் சொல்வழி நல்லார் செல்லார் என்கின்றது.

எண் = ஆலோசனை; காரியங்களைஆராய்ந்தறியுந்திறன். "பெருமகன் எண்ணங் கொள்வான் அமைச்சரோ டேறினானே" எனச் சிந்தாமணியில் இது நின்றுணர்த்துதல் காண்க. "எண் பிறக்கொழிய இறந்தோய் நின்னடி" என்றது மணிமேகலை.

இடன்என்பது விரிவு, பெருமை, வலி, செல்வமுதலியவற்றை யுணர்த்திவரும். நெஞ்சத்து இடனுடையார் = உள்ளம் விரிவாக வுடையவர்; என்றது விரிந்த மனமுடைய பெருந்தகையாளரை.

நெஞ்சத் திடனுடையார் என்றுகொண்டால் மனவுறுதியுடையார் என்றுகொள்க. இனி, உள்ளவெறுக்கை என்றுசொல்லப்படுகின்ற ஊக்கமாகிய செல்வமுடையார் எனினுமாம்.

மேல், பெண்டாட்டிகளின் ஏவல் கேட்டுநடப்பவர்க்கு அறம் பொருள் முதலிய நன்மைகள் யாதும்உண்டாகாதென்றார்; இதில் அவ் இழிமடமையை அறிவாண்மையுடையார் ஒருபோதும் மருவார் என்கின்றார்.

சிறந்த சூழ்ச்சியுடைய விரிந்த மனத்தினையுடையார்க்கு மனையாள் ஏவியபடி நடக்கும் இழிந்தஅறியாமை எக்காலத்தும் இல்லை என்பதாம்.

மேல் உறுவதை உணராமல் தாம் கருதியதையே செய்துதரும்படி மகளிர் பிடிவாதமாகச் சொல்வர்; அவர் சொல்வழி நடந்தால் அல்லலும் அழிவும் உளவாம்; அவ்வுண்மையை நுண்ணறிவாளர் முன்னுற எண்ணியறிவாராதலால் அம்மடவார் மொழிவழி அவர் நடவார் என்க.

வனப்புமீக் கூர்ந்து மனக்கினி தாகி
மருவியிருந்த மனைவிதன் சொல்லைக்
கேட்டுக் கேடெனக் கேகயன் வெகுண்டு
என்னுளப் படியலால் நின்மொழிப்படியான்
செல்லேன் பொல்லாய் நில்லா தேகென
எள்ளி விடுத்த அவ்வொள்ளியோன்போலத்

தெள்ளியோர் நன்கோர்ந்து தள்ளிவிடுவாராதலால் யாண்டும் பெண் சேர்ந்தாம் பேதைமையைக் கொள்ளார் என்க.

குதிரை இருப்பு அறியும்; கொண்ட பெண்டாட்டி குணம் அறிவாள்; என்னும் பழமொழிப்படி தன்மீதமர்ந்து தன்னையூர்பவனது நிலைமையறிந்து அதற்கேற்ப அது அமைந்துநடக்கும்; அதுபோல் தன்னைக்கொண்டவனது இயல்பினை உணர்ந்து அதற்கிசைய இல்லாள் இசைந்துநடப்பாள்; இங்ஙனம் கொண்டானது குணமறிந்து நடக்கும் அவள்பால் தன் ஆண்மைதோன்றநடவாமல் இச்சையால் பல்லிளித்துக் கொண்கன் இழிந்து நிற்பனாகில் அவன் இகழ்ந்து நின்று தன்மனம்போல் நிமிர்ந்து திரிவள்; அதனால் பல தீங்குகள்

நேரும்; அத்தீமைக் கெல்லாம் இவனே காரணனுவ ஞதலால் பெண்டாட்டியை வைத்துப் பிழைக்கத்தெரியாத பேதை எனயாவ ரும் இவனை இகழ்ந்து பழிப்பர்; இவ்இழிநிலையை உணர்வுடையார் ஒருபோதும் கொள்ளார் என்பார் பெண்சேர்ந்தாம் பேதைமை, எண் சேர்ந்தார்க்கு எஞ்ஞான்றும் இல்லை என்றார்.

இல்லாள்பால் இழிந்து நில்லாதே; நின்றால் உறுநலங்கள் பொன்றும்; உயர்வுகுன்றும்; இருமையிலும் இழிவாம்; செல்வ மிருந்தாலும் நலைது செய்யமுடியாது; யாவரும் இகழ்வர்; பாபமு மாகும்; அம்மூடநிலையை உணர்வுடையார் கொள்ளார் எனஉறுதி பெற விளக்கிப் பெண்வழிச் சேறலின் பிழையினை அடிகள் இவ் வாறு உணர்த்தியருளினர்.

தற்காலத்தில் சிலர் இவ்வதிகாரத்தைக் குறித்துச் சிறிதுவாதா டுகின்றார். மனையாளை விழையாதவர் யார்? அவள்சொல்லைக்கேட்டு நடவாதவர் யார்? பெண்வழிச்செல்லாதே என்னும் இது நம் அனு பவத்துக்கு ஒல்லுமா? எனஅவர் ஆட்டம் இவ்வகையில் நீட்டம் பெறுகின்றது. பாவம்! கருத்தை ஆழ்ந்து நோக்காமல் அவர்இங் ஙனம் வீழ்ந்து படுகின்றார். மாண்பயன் எய்தல், ஆண்பயன் கோடல், நல்லோர்க்கு நல்லன செய்தல், அறவினைபுரிதல், பிறவினை பெறுதல்முதலிய நலங்களை யெடுத்துக்காட்டி அவையிழந்து போ ம்படி விழைந்துநின்று கேட்டிற்கு ஏதுவாய்ப் பெண்வழியில் இழி ந்து செல்லலாகாதென அடிகள் உணர்த்தியிருக்கும் அருமையை உய்த்துணரின் உண்மைவிளங்கும்.

வைதாலும் அடித்தாலும் வணங்கியுனை வாழ்த்திநிற்பேன்; மாயக்கோடி செய்தாலும் மனம்போலத் திரிந்தாலும் தெரிந்தாலும் சீறேன்; உன்றன் மெய்யானபோகமொன்றே விழைந்துள்ளேன் அதையருளி எனைமேலா ள்வாய், பொய்யாமிவ் வுலகமென்னசொன்னாலும் பொருட்படுத்தேன் போற்றுவாயே.

பெண்வழிச்சென்ற ஒருவன் தன்மனைவியை நோக்கி உரைத் திருக்குந்தன்மையை இஃது உணர்த்தி நிற்றல் காண்க. இந்தஇழி வழிச்சேறலை எந்தஆண்மகன்தான் இனிதென இசைந்து கொள் வான்? என இச்சையால் மானங்குன்றிக் கொள்வானாயின் ஆண் டன்மையின் நின்றும் அறவே அவன் தள்ளுண்டவனுவான் என்க.

பெண்ணேவல் செய்தொழுகும் பேதையர்கள் எத்தனைபேர்
கண்ணனைய தாயரையும் கைவிட்டார்—உண்ண
உணவும் கொடாமல் ஒழிகின்றார் இந்தப்
பிணமக்கட் கேதோ பிழைப்பு.

பெண்வழிச் சேறலால் விளையும் பெரும் பழியை இது விளக்கி நிற்றல் காண்க. "பெண்மொழிகேளார் என்றும் பெரியவரெனக் கொண்டிருந்த—மண்மொழி வார்த்தை பொய்யோ" எனத் துரோபதை ஒருமுறை இரங்கிக்கூறியதும் ஈண்டு எண்ணத்தக்கது.

அங்கவர் திறத்தினானே அல்லலும் பழியுமாதல்
எங்களிற் காண்டியன்றே இதனின்வே றுறுதியுண்டோ.
(இராமாயணம்,)

இது, மங்கையரைக்குறித்து இராமன் கூறியது. இல்லாள் சொல்வழி சென்றதால் தனக்கு நேர்ந்த அல்லலை நினைந்து அவ்வள்ளல் உள்ளங் கொதித்து உரைத்திருக்கும் அழகை இதில் ஊன்றிநோக்குக.

பழியும் துன்பமும் விளையும்படி மனையாள் வழிநின்று ஒழுகலாகாதென்பது கருத்து.

இல்லாள் சொல்வழி நின்று இழிந்து நடக்கும் புன்மையை நல்ல ஆண்மகன் கொள்ளான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வித்துக்கேசன்பால் உணரப்படும்.

கதை.

வித்துக்கேசன் என்பவன் அரக்கர்குல முதல்வனாகிய, ஏதியினுடைய அருமைத்திருமகன். இவனுடைய தாய்பெயர் காலபாகினி. இவன் அறிவிலும் ஆண்மையிலும் சிறந்தவன். தனது மதிமாட்சியால் அரசுரிமையை நிலைபெற அடைந்து சாலகடங்கடை என்னும் பேரழகியை மணந்து அரியபோகங்களை நுகர்ந்து யாவரும் வியக்க இவன் ஆட்சிசெய்து வந்தான். கருமச்சூழ்ச்சியில் இவன் மிகவும் வல்லவன். கருதியதைக் கருதியபடியே செய்து உறுதியுடன் நின்று தமர்புடை சூழ்ந்து புகழ்ந்து மகிழ இவன் உயர்ந்து விளங்கினான். இங்ஙனம் விளங்கிவருங்கால் இவன் மனைவி வயிறு

வாய்த்தாள். அவள் அழகிலும் அன்பிலும் இனிய குணங்கள் முதலிய நலங்களெவற்றிலும் சிறந்தவள். உயிரும் உடலும்போல் ஒருமையெய்தி இருவரும் உளமகிழ்ந்திருந்தார். அவளது போக வெள்ளத்தில் இவன் ஆழ்ந்திருந்தாலும் வினையாண்மை களில் யாதும் தாழாமல் நீதியோடு நின்று நெறிமுறைசெய்தான். பருவ முதிர்ந்து அவள் கருவுயிர்த்தாள். அருமையான ஓர் ஆண்மகன் பிற ந்ததைக்கண்டு அளவிடலரிய பெருமகிழ்ச்சியுடையனாய் இவன் அமர்ந்திருக்குங்கால் மறுபுல மன்னர் சிலர் இவனது உதவியை நாடி நின்றார். அவர்க்கு இதஞ்செய்யும்பொருட்டு இவன் எழுந்து சென்றான். இதுபொழுது செல்லலாகாதென அவள் எதிர்ந்து சொன்னாள். யான்உள்ளியபடி செல்வனேயன்றி நீசொல்லுகின் றபடி நில்லேன் என்றுஇவன் துணிந்து போனான். அவளும் பிள் ளையைத் தனியே விடுத்து இவன்பின் தொடர்ந்து சென்றாள். கரு தியகருமம் முடித்தபின்பு அவளோடுமருவிவந்து மகிழ்ந்திருந்தான். பெண்மொழி கேளாமல் தன்ஆண்மையோடு சென்ற இவனது தன் மையை வியந்து அகத்தியமுனிவர் முதலியஅருந்தவர்பலரும் புகழ் ந்துள்ளார். எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க்கு எஞ்ஞான் றும் பெண்சேர்ந்தாம் பேதைமை இல்லைஎன்பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான்.

> எத்திக்குந் திறல் எய்திய எதிக்குப்
> பத்திச் செம்மயிரான் பயை பாரு
> அத்திக்குங் கொடியாள் தன் வயிற்றிடை
> வித்துக் கேசன் பிறந்தனன் வீரனே. (க)
>
> இந்திரற்குச் சசி போல் எழிலுடை
> அந்த வீரற் கணிமணிப் பூண்முலைக்
> கந்தவார் குழற் சால கடங்கரிற்
> சந்திதன் மகள் தாரம தாயினள். (உ)
>
> நீடுவார் குழல் நேரிழை யாளும்வண்
> டாடுதார் திகழ் அந்த அரக்கனும்
> கூடு மாவியும் கூடிய அன்றிலும்
> பேடு மென்னப் பிரியல ராயினர். (ங)

ஆயபேதை அரிஇனி லீன்ற தன்
சேயை நீத்துச் சிறந்தோர் காதலன்
போய தெவ்விடம் அவ்விடம் புக்கனள்
கேய மோரிடத்தே யன்றி நிற்குமோ. (௬)

(உத்தரராமாயணம்.)

தான் பெண்வழிச் செல்லாது அவளைத் தன் வழியொழுக்கி முன் இவன் இருந்தவுண்மை இதன் கண்ணும் விளங்குதல் காண்க.

ஆழி விரற்றுணையா ஆக்குப; அங்குலியை
ஆழி யளவாக்கார்; அஃதொப்ப ஆடூத்தான்
வீழு மவளைத்தன் இச்சைவழி வீழ்த்தலன்றித்
தாழுமோ பெண்மனம்போற் சார்ந்து. (இன்னிசை)

இல்லாளை யஞ்சும் இழுதையும் எதிலான்
நல்லாளை நாடும் நடலையும்—கல்லாமல்
காலங் கழிக்குங் கலதியும் இம்மூவர்
ஞாலம் பழிக்கு நவை. (தருமதீபிகை.)

மான முடையார் மதியழிந்து பெண்வழிநின்
றீனமுற வாழார் இசைந்து.

பெண்வழிச் சேறல் பேதைமையாம் என்பது இதனால்கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

தன்மனைவியை முறைகடந்து விழைபவன் ஒருபயனும் எய்தாமல் இழிவே அடைவான். கழிபெருங்காமியாய் மனைவிழைந்து நிற்பவன் பழியடைந்து வருந்துவான். எல்லாரும் இகழ அவன் என்றும் நாணுவான். அவனுக்கு இருமையிலும் பெருமையிராது. இல்லாளை அஞ்சுகின்றவன் நல்லவை செய்யான். இந்திர வாழ்வினையுடையனுயினும் யாரும் அவனை மதியார். அவன்பிறப்பும் இழிக்கப்படும் இல்லாள் சொல்வழி நடப்பவனுக்கு நல்வழி இல்லை அறமும் பொருளும் அவனை விட்டகலும். பெண்டாட்டிக்கு அஞ்சிஒழுகும் புன்மை அறிவுடையார்கண் யாதும் உண்டாகாது சுகவது பெண்வழிச் சேறல் முற்றிற்று.

# 92 ம் அதிகாரம் வரைவின் மகளிர்.

அஃதாவது பொதுப்பெண்டிரது இயல்பு. ஒருவனைத் தமக்கு உரிமையாக வரைந்துகொள்ளாமல் பொருள்கொடுப்பவரெவர்க்கும் போகம் தந்து நிற்கும் பொதுநிலையாளராதலால் இவர் வரைவில் மகளிர் என நின்றார். வரைவு = அளவு, எல்லை, மணம். கணவன் ஒருவனென்னும் வரையறையும், மணமும் இல்லாதவர் என்க. மேல், குலமகளிராகிய மனைவியர்பால் நிலைதிரிந்து தாழாமல் தலைமையோடு நின்று ஒழுகவேண்டும் என்றார்; இதில், விலைமகளிர் பால் யாதும் வீழாமல் விலகவேண்டும் என்கின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

911. வேசையரின் சொற்கேட்டு வெம்பியேன் பாசதரன்
கூசி யழிந்தான் குமரேசா—ஆசகன்ற
அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்
இன்சொ லிழுக்குத் தரும். (க)

இ—ள்.

குமரேசா! பொதுமகளிர் சொற்கேட்டுப் பாசதரன் ஏன் பழிமிகுந்து நொந்தான்? எனின், அன்பின்விழையார் பொருள் விழையும் ஆய்தொடியார் இன்சொல் இழுக்குத் தரும் என்க.

இது, வேசையர் இன்சொல் நாசமுறு நஞ்சாம் என்கின்றது. தொடி = வளையல். இது பெண்கள் முன்கையில் அணியும் அணி.

சரியுந் தொடியும் சூடகமும் சங்கும்
குருகும் வண்டுங் கன்றும் கைவளை. என்பது (பிங்கலந்தை)

ஆய் என்றது ஆராய்ந்து இயற்றிய என்றவாறு. இது, அத்தொடியின் விழுமிய நிலைமையை விசேடித்து நின்றது. இவைதாம் எமக்குத்தகவுடையன என்று அவர் ஆய்ந்தெடுத்து அணிந்த எனினுமாம்.

உண்மையான விழைவுக்கு அன்பு காரணமாகுமாதலால் அதனை முன்பு குறித்தார். குலமகளிர் அன்பினால் விழைவர்; விலைமகளிர் பொருளினால் விழைவர் என்க.

பொருள் விழையும் என்றது பொருளின்பொருட்டே ஒருவனை விரும்பும் என்றவாறு. இன் உருபு இதில் தொக்கு நின்றது. இழுக்கு = கேடு, துன்பம்.

எவரையும் அன்பினால் விரும்பாமல் பொருள் கருதி விரும்பும் பொதுமகளிரது இனிய சொல் பின்பு கொடிய துன்பத்தைப் பயக்கும் என்பதாம்.

விழையார் தொடியார் இன்சொலார் என்றதனால் முறையே அவரது மனம், மெய், மொழிகளின் நிலைமை புலனாம். உள்ளத்தில் வஞ்சமும், மேனிமினுக்கும், பசப்பு வார்த்தையும் உடையவரென்றபடி.

அழகு கல்வி இளமை ஆண்மை அமைதி மேன்மை முதலிய உயர்நலங்கள் யாவும் ஒருங்கேயுடையனாயினும் பொருள் இலனாயின் வேசையர் அவனை ஒருபொருளாகக்கருதி விரும்பார்; பழிவடிவும் இழிகுலமும் கழிபெருமுதுமையும் கொடுநோயுமுடைய முழுமூடனாயினும் பொருளுடையனாயின் அவனை மிக விழைந்து அவர் தழுவுவார் என்றவாறு.

> இளமையே, கவினே, கீர்த்தி, எழில், கலை, இங்கிதத்தின்
> வளமையே, அன்பே, நல்லவருணமே, ஏகபோகம்
> விளைவுசெய்திறனே, மற்றுமிக்குள ரேனும், பொன்னில்
> தளர்வினராயின், நஞ்சே இருமனத் தையலார்க்கு.
> (பேரூர்ப்புராணம்.)

விலைமகளிர் தன்மையும், அவர்பொருள்விழைந்து நிற்கும் புன்மையும் இதனால் இனிதுணரலாகும்.

ஒருவன்கையில் பொருள் இருக்கும் வரையும் மிகஉரிமையாளர்போல் நடித்து "என்னுருயிரே எனக்கிசைந்த தெள்ளாமிர்தே மன்னு உனைப்பிரிந்து வாழ்வேனோ" என்பனவாதியாக இனியன பல கூறி, அவன்விழைந்தபடியெல்லாம் இசைந்துநடப்பார்; அதனைக்கவர்ந்து கொண்டபின்பு "பேயே சவமே பிழைப்பின்றி வந்துபுகும்—நாயே இனியிங்கு நண்ணுதே" என்று அவனை நடுத்தெருவில் கடத்து விடுவார்; ஆதலால் அவர் இன்சொல் இழுக்குத் தரும் என்றார். எனவே அவரை நஞ்சென நினைந்து நணுகலாகாதென்பதாம்.

முன்பு இனியது போன்றிருந்து பின்பு இன்னுமையைப் பயக்குமாதலால் அந்த வஞ்சகிகள் சொல்லைக் கொஞ்சமும் நம்பலாகாது; நம்பினுல் எல்லாரும் இகழ்ந்து பழிக்கும்படி இழிந்து கழிவர் என்க.

ஆமாபோல் நக்கி அவர்கைப் பொருள்கொண்டு
சேமாபோல் குப்புறூஉம் சில்லைக்கண் அன்பினை
ஏமாந் தெமதென் றிருந்தார் பெறுபவே
தாமாம் பலரால் நகை. (நாலடியார்.)

ஆமா = காட்டுப்பசு. சேமா = எருது. குப்புறுதல் = கவிழ்ந்து படுத்தல், குதித்துச் செல்லல். சில்லை = சிறிய தன்மையையுடையவர்; என்றது வேசையரை. உடம்பை இனிமை யுற நக்கி உயிரைக்கொல்லும் காட்டுப்பசுவைப்போல் முன்புஇன்புறப்பேசி எல்லாவற்றையும் கவர்ந்துகொண்டு பின்பு உழவுக்கு வராத சண்டி மாடுபோல் அழிமதியுடையராய் விலைமகளிர் துன்பப்படுத்துவர் எனவும், அவர் சொல்லை நம்பினுர் பின்பு எல்லாராலும் எள்ளப்படுவர் எனவும் இது உணர்த்திநிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

நாவார வேண்டும் விதஞ்சொல்லுவார்; உனைநான்பிரிந்தால்
சாவேன் என்றேயிருந் தொக்க வுண்பார்கள்; கைதான்வறண்டால்
போய்வாருமென்று நடுத்தலைக்கே குட்டும் பூவையருக
கீவார் தலைவிதியோ! இறைவா கச்சி யேகம்பனே. (பட்டினத்தார்.)

முன் இன்சொல்லாடிப் பின் தமக்கு இழவுகூட்டும் பரத்தையர்க்குத் தாம் ஈட்டியவற்றையெல்லாம் நீட்டி நிற்கும் மாட்டுமக்களை நோக்கி இப்பாட்டு இரங்கி நிற்றல் காண்க.

விலைமகளிர் உள்ளன்பில்லாத கள்ளிகளாதலால் அவர் சொல்லை எள்ளளவும் கொள்ளலாகாதென்பது கருத்து.

கணிகையர் சொல்லை நம்பிநின்றவன் பின்பு வறுமையும் பழியுமடைந்து வருந்தி யழிவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாசதரன்பால் உணரப்படும்.

## கதை.

பாசதரன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர்க் கோதாவரி நதியின் வடகரையிலிருந்த தருமசாலை என்னும் நகரிலிருந்தவன். மறையவர் மரபினன். இவனுடைய

தந்தைபெயர் கன்மடன். தாய் சுசீலை. இவன் செல்வத்திலும் அழகிலும் சிறந்தவனாயினும் நல்ல அறிவில்லாதவன். பருவமெய்தியவுடனே பெருமோகியாய்த்திரிந்து பொதுமகளிர்பலரைமருவிக்களித்துத் தன்கையிலிருந்த பொருள் முழுவதையும் தொலைத்தான். பின்பு களவுமுதலியகொடிய தொழில்களைச்செய்து அவற்றால் கிடைத்த வற்றையெல்லாம் பரத்தையரிடம் கொடுத்துக் காமநுகர்ச்சியில் இவன்கருத்தழிந்து நின்றான். இவனது நிலையினைநோக்கிஅவ்வூரிலுள்ளவரனைவரும் இவனைஇகழ்ந்துவெறுத்தார்.

"கயல்விழி விலைமின்னார்கள் கண்வலைப் பட்டுளத்தின்
மயல்மிக வறுமையெய்தக் கொடுத்திட வகையுமின்றி
அயல்மனைப் பொருள்கவர்ந்து கொடுத்திட அவரறிந்து
துயருற விழிவுசெய்தே யூர்விடத் துரத்திவிட்டார். (க)

பசிபசி யுற்றுளோர்க்குப் பாகமாஞ் சுவையுமின்றாம்;
துகளறு கல்விவேட்டோர் சுகமொடு துயிலும்இன்றாம்;
நிகழ்பொருள் இச்சையோர்க்குக் குருவொடு நேசர்இன்றாம்;
இகழ்மின்னார் ஆசையுற்றோர்க்கு இலச்சையும் பயமுமின்றாம். (உ)

ஆதலால் நாணமானம் அச்சமும் அகன்றான்சாதி
நீதமுமிழந்தான் சென்றான் ஊர்தொறு நெடிதலைகி
ஏதமார் களவுசெய்தும் வழிப்பறி பறித்து மீந்து
மாதரார் இன்பந்துய்த்து வருணமில்லானை யொத்தான்." (ஈ)

காமப்பித்தேறி இங்ஙனம்இவன் ஊர்கடோறும் திரிந்துமுடிவில் மதுரையையடைந்து கணிகையர் வீதியுட்புகுந்து அங்குவாசந்தமோகினி என்னும் ஓர் அழகியவிலைமகளைக் கண்டு கழிபெருங் காதல்கொண்டு அவளைக்கலந்து மகிழ்விழைந்து இரவில்மறைந்து சென்று பொருளைக்கவர்ந்து வந்துதந்து கருதியபடி நுகர்ந்து அவளிடத்தேயே அமர்ந்திருந்தான். சின்னாட்கழிந்தபின் ஒருவகையிலும் பொருள்வரவில்லாமையால் இவனைஅருகுவரவொட்டாமல் அவள் அவமதித்து விடுத்தாள். இவன் அலமந்து அகன்றான். அதன்பின் புதுவைநகரடைந்து சௌந்தரவல்லி என்பவள்பால் மிகுந்தகாதலுடையனாய் எவ்விபடியெல்லாம் கடந்துளய்திய யாவும் தந்து இன்பம் நுகர்ந்திருந்தான். அவள் இவனை என்னும்கைவிடு

வதில்லைஎன்று இனியனபலகூறி உறுதிசெய்துநின்றாள். அடியவன் போல் ஆவனசெய்து இவன் மேவி வருங்கால் வறியனென்றுகருதி இவனை அறவே துறந்து மற்றொருவனை மருவியிருந்தாள். உழு வலன்பினன்போல் ஊழியம் பல புரிந்துவந்த இவனை ஒதுக்கிவிட் டுப் பொருளுடைய பிறரை அவள் பொருந்தி வருதலை நினைந்து இவன் பொருமி ஏங்கினான். அவள் பொருட்டுத் தான் தாழ்ந்து செய்து வந்த செயல்களையெல்லாம் சிந்தித்து நொந்தான்.

“மறையவ னுயஎன்னை மாபாவி ஏவல்கொண்டு
முறையுடன் மொழிந்தவுண்மை நீத்தெனை மோசஞ்செய்தாள்
நிறையிலார்; நேசமில்லார்; நெறியிலார்; நெஞ்சுளன்போ
டறிவிலார்; விலைமினுரென் றறைவதற் கையமின்றே.”

என வைது புலம்பி வாய்விட்டழுதான். வறுமையும் பழியும் மரு விவளர இவன் மறுகி யலைந்தான். விலைமகளிர் சொல்லை நம்பி விழைந்து நின்றதால் தன் குலநலமழிந்து குற்றமேற் கொண்டு குன்றி மடிந்தான். அன்பின் விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார் இன்சொல் இழுக்குத்தரும் என்பதை உலகம் இவன் பால் உணர்ந்து நின்றது. விரிவைப் புதுவைப் புராணத்தில் காண்க.

வேசையர்சொல் மெய்யென்று மேவினால் வெம்பழியும்
நாசமும்பின் னின்று நகும்.

வேசையரை இனியரென்று விரும்பலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

912. உற்றறிந்து தச்சயன்பின் ஓர்ந்தான் பரத்தைநலங்
குற்றமென்றேன் விட்டான் குமரேசா—முற்றும்
பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல். (உ)

இ—ள்.

குமரேசா! பரத்தையர் இயல்பினைப் பகுத்தறிந்த பின் தச்சயன் ஏன் அவரை வெறுத்து விடுத்தான்? எனின், பயன் றூக்

கிப் பண்பு உரைக்கும் பண்பு இல் மகளிர் நயன்தூக்கி நள்ளா விடல் என்க.

இது, கணிகையருறவைக் கனவிலும்கருதலாகாதென்கின்றது.

உற்றுஅறிந்து ஓர்ந்தான் என்றது அவன்பொருந்தி நுகர்ந்து போகமகளிர் இயல்பினை நன்கு அறிந்து தெளிந்தமை கருதி.

தூக்கி = சீர்தூக்கி நோக்கி; நன்றாகக் கூர்ந்து பார்த்து என்க. பண்பு=குணம். உரையளவிலே பண்பும், தம் உள்ளத்தில்அஃதி ல்லாமையும் உடையரென்பார் பண்புரைக்கும் பண்பில் மகளிர் என்றார்.

நள்ளாவிடல் = நட்புக் கொள்ளாதுவிடுக. தமக்குப் பொருள் வருவாயாகிய பயனிருக்கும் வரையும் பண்புபாராட்டி இன்புறப் பேசுவர்; அஃதுஇல்லையாயின் அவன் எவ்வளவு நல்லவனாயினும் அவனை எள்ளிவிடுவாராதலால் அக்கள்ளிகளை நள்ளாவிடல்என்றார்.

விளக்கொளியும் வேசையர் நட்பும் இரண்டும்
துளக்கற நாடின் வேறல்ல—விளக்கொளியும்
நெய்யற்ற கண்ணே யறுமே யவர்நட்பும்
கையற்ற கண்ணே யறும். (நாலடியார்.)

என்றதும் கண்டுக்காணத் தக்கது.

மேல், விலைமாதர் சொல் கேடுவிளைக்கும் என்றார்; இதில், அவரைச்சிறிதும் அணுகலாகா தென்கின்றார்.

தனக்குவரும் பயனை எதிர்நோக்கி ஆராய்ந்து குணம்பொருந் தச் சொல்லும் குணமில்லாத மகளிரது நலத்தை ஆராய்ந்து பார் த்து அவரைச்சாராது விடவேண்டும் என்பதாம்.

தம் ஆசைவலையிற் சிக்கிய ஆடவாது பொருளின் அளவையும், அதனைக்கவர்தற்குரிய வழிவகைகளையும், நன்குஆராய்ந்துகொண்டு அஃதெய்தத்தக்கதையும் இனிமையாகக் குழைந்து பேசும் இயல் புன்மை கருதிப் பயன்தூக்கிப் பண்புரைக்கும் எனவும், அக்குழை வும் இனிமையும் உரையளவிலுளவாமன்றி உண்மையில் இலவாமா தலால் பண்பு இல் மகளிர் எனவும் கூறினர்.

இப்படிப்பட்ட உரைப்பசப்பிகளின் உள நிலைகளையும், அவர்

பால் நுகரும் இன்பங்களையும், அதனால் விளையும் துன்பங்களையும் இழவுகளையும் ஊன்றி யுணர்ந்து அவர் நினைவினை அறவே ஒழிக்க வேண்டும் என்பார் நயன் தூக்கி நள்ளாவிடல் என்றார்.

தூக்கு இரண்டனுள் முன்னது பரத்தையர்க்குரியது; பின்னது அவர்வலைப்படா தகல்வார்க்குரிய தென்க.

பண்டமாற்றுச் செய்யும் வணிகர் தாம்கொள்ளும் பொருளுக்கு ஏற்பத் தம்பொருளைக் குறைவற நிறுத்துக்கொடுத்தல்போல் தம்பால் வந்தார் தந்த பொருளளவுக்குத் தக்கபடி தம் போகத்தை விலைமகளிர் தருவர் என்பது தூக்கி என்பதனால் நோக்கலாகும்.

> "இழிபவர், உயர்ந்தோர், மூத்தோர், இளையவர்; கழியா நோயாற்
> கழிபவர், யாவரேனும் கண்வலைப்பட்டு நெஞ்சம்
> அழிபவர், பொருள்கைக்கொண்டு எள்ளுக்கு எண்ணெய்போல் அள
> ந்துகாட்டிப், பழிபடுபோகம் விற்பார்ஆவணப் பண்பு சொல்வாம்."

எனப் பரஞ்சோதிமுனிவர் இப் பண்பின் மகளிர் பான்மையை வணிகநிலையில் வைத்து விளக்கியிருத்தல் காண்க.

சிறையகம் ஒருவார்; முதற்பொருள் வேண்டார்; சினைப்பொருளே நொடு விற்பார்;- குறைமொழி கிளவார்; கடனெனல் குறியார்; கூட்டெனல் கனவிலு மறியார்;- அறைபொருளளவைக் கதிக நூனஞ்சாராதருபத்தையே அளப்பார்;- உறைபிவர்புரிவாணிகமிணையில தென்றெப்பில் வாணிகரும் உள் வியப்பார். (தியாகராசலீலை.)

விலைமகளிரின் வியாபாரத்தை இதில் விளக்கி யிருத்தல் காண்க. கைமுதல் முதலியன யாதும் இல்லாமலே பொய்நலம் விற்றுப் பொருளீட்டும் இவரது வாணிகம் மற்ற வணிகரினும் வியக்கத்தக்க வேறுபாடுடையதெனக் கூறியிருக்கும் இக்கவியின் அழகைக் கூர்ந்து பார்க்க. நூனம் = குறைவு.

> விற்றிடு மல்குல்தன்னை மீளவுந் தமதேயாக்கி
> மற்றையாளும் விற்கும் வரைவிலார் வீதி, யிச்சீர்
> சற்றிலா வணிகமாக்கள் ஆவணக் கவினைநோக்கிப்
> பற்றுவெண் டரளக்கோவைப் பத்தியாற் சிரிக்குமன்றே.

> இருமைவா ணிபத்திற் கூர்த்த மதியரும் இறும்பூதெய்த
> அருவமாம் இன்பந்தன்னை இம்மியினளவும் எஞ்சாது
> உருவமாம் பொருளுக்கேற்ப நிறுத்துவிற் றெழுகவல்ல
> இருமனப் பெண்டிர்தம்முள் தருக்கிவாழ் இருக்கையீதால்.

(காஞ்சிப்புராணம்.)

தம்பால் உள்ள பொருள் ஒன்றுங் கொடாமல் பிறர் பொருளைக் கொள்ளைகொள்வார் என இம்மகளிரின் வணிகநிலையை இதுவும் விளக்கிநிற்றல் காண்க. வேசையர் உள்ளன்பில்லாத கள்ளிகளாதலால் அவர்பால் நட்புக் கொள்ளலாகாதென்பது கருத்து.

பொதுமகளிர் நிலையினை உணர்ந்து தெளிந்தவர் அவரோடு உறவு கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துச்சயன்பால் உணரப்படும்.

## கதை.

துச்சயன் என்பவன் சந்திரகுலவேந்தனாகிய அனந்தனுடைய அருமைத்திருமகன். இவன் வன்மையும் திண்மையும் வனப்பும் வாய்ந்தவன். தருமசீலை என்பவளை மணந்து அரிய இன்பங்களை நுகர்ந்து தன் ஆணையை எங்கும் செலுத்தி இசைதிசை பரப்பி இவன் அரசுபுரிந்தான். இவனுடைய மனைவி அழகிலும் கற்பிலும் அன்பிலும் மிக்கவள். இவனை உயிரினும் அருமையாக அவள் உவந்து பேணினாள். அமைந்து நின்ற இவனும் அவள்பால் மருவிய காதலோடு மகிழ்ந்திருந்தான்.

கருப்புவெஞ்சிலை அகற்றிய காமனென் றெவரும்
விருப்பமெய்துறு துச்சயன் விழிகவர் வனப்பின்
அருப்பவெம்முலை அம்பலைத் தொழுதுமாட் டடக்கட்
டிருக்கண்டன்னவோர் சேயிழை முகிழ்முலை மணந்தான். (௧)

கற்பின்வீக்கமும் கதிர்முலைவீக்கமும் கவின்செய்
பொற்பின்வீக்கமும் பூத்தமென் பொலங்கொடி தடந்தோள்
அற்பின்வீக்கமுற் றணைந்திடு நாளில் மற்றொருநாள்
வெற்பின்வீங்கிய திரள்புயன் யமுனை மேவினனால். (கூர்மம்.) (௨)

இங்ஙனம் மேவிய இவன் அந்நதியினருகே யிருந்த ஓர் இனிய பூஞ்சோலையில் தனியே உலாவிவருங்கால் தேவதாசியாகிய ஊர்வசியைக் கண்டான். உடனே கழிபெருங் காதலோடு வழிமொழிந்து நின்று அவளைக் கலந்து மகிழ்ந்து பின்பு அங்கோர் இனிய மாளிகையமைத்து இன்புற்றிருந்தான். அவள் ஏவிய படியெல்லாம் இசைந்து ஆவலொடு செய்து காமநலங்களைக் கருத்துமுற்ற நுகர்ந்தான். நுகர்ந்துவருங்கால் அற்றம் நோக்கி ஒருநாள் அவள் அகன்றுபோ

ளான். இவன் காளிவருந்தித் தன் நகரினைமேவி அந்தப்புரத்தில் தன்அருமைத்தேவி அமர்ந்திருக்கும் பள்ளியறையை யடைந்தான்.

அடைந்தமன்னவன் வேனில்வேள் அங்கையால் வருந்திக்
கடைந்துசெப்பெனக் கதிர்முலைப் பணைமருள் கழைத்தோட்
குடங்கையுள்ளமைந் தடங்கலாக் குவளையந் தடங்கண்
மடந்தைவைகிய உவளகத் தடைந்தனன் மாதோ. (கூர்மபுராணம்)

கற்பரசியாகிய அவள் இவனைக் கண்டவுடனே விரைந்தெழுந்து வணங்கி நின்று இத்துணை நாளும் பொதுமகளிரைத் தீண்டியிருந்த தாங்கள் இந்த நிலையில் என்னைத் தீண்டலாகாது; அத்தீட்டுக்கழிய நமது குலகுருவாகிய கண்ணுவமுனிவரிடஞ் சென்று உண்மையையுரைத்துக் கழுவாய்செய்து வருக என்றாள். அறிவறிந்த அவளது உறுதி மொழிகளைக்கேட்டு உள்ளங்கூசி உண்மைதான் என்று உணர்ந்து திரும்பி முனிவரிருக்கையை நோக்கி நடந்தான். அங்ஙனம் இவன் செல்லுங்கால் இமயமலையருகே மறுபடியும் அவள் எதிரே வந்தாள். அவளைக் கண்டதும் தான் கொண்ட கருத்தை மறந்து கூடியிருந்தான். நாள்பல கழிந்தன. தான் கருதியபயனைக் கைக்கொண்டபின் தாளுகைவே இவன் நெஞ்சுநோம்படி பல வஞ்சங்கள் புரிந்து மறைந்து சிரித்து பிரிந்து சென்றாள். இவன் வருந்தி நின்று வைது புலம்பினான்.

வள்ளல்பெட்பற வேற்றுருக் கொண்டிடு மடந்தை
யுள்ளநோக்கி வெங்கூத்திய ருளத்திடைக் குனிக்கும்
கள்ளம் வேதனும் கணிப்பரிதென நகைநீங்கி
வெள்ளிவீழென அருவிதூங் கிமையவெற் படைந்தான். (கூர்மம்)

அங்குக் கண்ணுவரைக் கண்டு வணங்கினான். கருதி வந்ததையுரைத்து அவரருளால் புனிதனாகி மீண்டு வந்து மனைவியை யடைந்து மகிழ்ந்து வீற்றிருந்தான். உறுபயன்கருதிஇனியர் போன்று நடிக்கும் வஞ்சகிகள் என்று கணிகையரை அன்றுமுதல் அணுகா தொழித்தான். பயன் தூக்கிப் பண்புரைக்கும் பண்பில் மகளிர் நயன் தூக்கி நள்ளா விடல் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. (விரிவைக் காசிமான்மியத்தில்காண்க.)

புதுப்புனலும் பூங்குழையார் நட்பும் இரண்டும்
விதுப்புற நாடின் வேறல்ல—புதுப்புனலும்
மாரி யறவே யறுமே அவரன்பும்
வாரி யறவே யறும். (நாலடியார்.)

விலைமாதர் இன்பம் விழையின் விளையும்
தொலையாத துன்பந் தொடர்ந்து.

வேசையருறவுறின் நாசமுறும் என்பது இதனால் கூறப்பட்டது

---

913. கோடி யருவருக்கும் கோணுதேன் மோகினிமுன்
கூடி யிருந்தாள் குமரேசா—நாடும்
பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்டறையி
லேதில் பிணந்தழீஇ யற்று. (ந)

இ—ள்.

குமரேசா! தனக்குள்ளே அருவருத் திருந்தும் அனங்க மோகினி என் வந்தவரை முயங்கி யிருந்தாள்? எனின், பொருட் பெண்டிர் பொய்மை முயக்கம் இருட்டு அறையில் ஏதில்பிணம் தழீஇ அற்று என்க.

இது, பரத்தையர் கலக்கும் பான்மை கூறுகின்றது.

பொருட்பெண்டிர் = வேசையர். பொருளையே கருதித் தம் போகத்தை விற்கும் இயல்பினராதலால் அவர் இன்னனங் கூறு கின்றார். முயக்கம் = தழுவுதல், பொருந்துதல்.

ஏதில் = அயல், அன்னியம். ஏதும் தொடர்பில்லாத என்ற வாறு. "காதலம்அல்லமேனுட்கழிந்தகம் பிறவிதம்முள், ஏதிலம்" என அயலாந்தன்மையைக் குறித்துச் சிந்தாமணியில் இதுவந்தி ருத்தல் காண்க.

மேல், வேசையரது சொல்லின் தன்மையை யுணர்த்தினார்; இதில், அவர் செயலின் புன்மையை யுணர்த்துகின்றார்.

பொருளையே கருதும் பொதுமகளிரது பொய்யுடை முயக் கம் இருட்டறையுள்ளே கிடக்கும் அயற்பிணத்தைத் தழுவினாற் போலும் என்பதாம்.

இனி, பொருட் பெண்டிரை ஒருவன் முயங்கும் முயக்கம் இருட்டறையுள் பிணத்தைத் தழுவுவது போலாம் எனஉரைப்பாருமுளர். அது, அப்பொல்லாமயக்கிகளது உள்ளப் புன்மையை உணர்த்தாமல் எவ்வழப்பாடு முடையதாப்பெரருளொடு பொருந்தாமல் வறிதே நிற்றலை ஊன்றி யுணர்ந்து கொள்க.

“மன்னவன் மார்பின் மின்னென ஒடுங்கி
அச்ச முயக்கம் நச்சுவனர் விரும்பி
அமிழ்துபடு போகத்தற்புவலைப்படுத்த மாதர்” (பெருங்கதை)

என்றபடி குலமகளிர் உள்ளன்போடு தம் கணவரை உவந்துதழுவுவார்; விலைமகளிர் அங்ஙனமின்றி எவரையும் கள்ளமோடு புல்லிக் கழித்து விடுவர் ஆதலால் அவரது பொருட்கலைப் பொய்ம்மை முயக்கம் என்றார். இங்ஙனம் விசேடித்து விளக்கியது அம் முயக்கின மயக்கப் புன்மையை உணர்ந்தொழிக்க வேண்டி எனக.

“ஒல்லா முயக்கு” எனப் புறத்திலும், “வேளா முயக்கம்” எனக்கலியிலும் இது வந்திருத்தல் காண்க. வேளா = விரும்பாத.

இருட்டறையுள்ளே இழந்து கிடக்கும் ஓர் அநாதிப்பிணத்தைப் பிணத்தூக்கிப் பிழைப்போர் கூலிபெற்று எடுக்கப் புகுந்தால் எப்படி மனம்பொருந்தாமல் அருவருத்து நின்று முகமகவிழ்ந்தெடுப்பரோ அப்படியே பொருள் கொடுத்தாரை விலைமகளிர உள்ளம் பொருந்தாமல் கள்ளமுற நின்று புல்லி விடுவர் என்பார் “பொருட் பெண்டிர் முயக்கம் இருட்டறையில் ஏதில்பிணந்தழீஇ அற்று” என்றார்.

ஏதில் பிணம் என்றது ஞாதியுள்ள பிணமாயின் பாடைமுதலியன கட்டி உறவினர் தாங்கிச் செல்வர்; அங்ஙனம் ஒரு ஞாதியுமின்றி வறிதே விளிந்து கிடப்பதென அப்பிணத்தின் பேரிழிவு தோன்ற எனக.

விலைமகளிரைப் பிணத்தூக்கிகளோடு ஒப்பவைத்தது பழிமிக்க அவரது பிழைப்பின் இழிநிலை விளக்க.

பொருளைநோக்கிப் புல்லுவரேயன்றி மனங்கனிந்து யாரையும் உள்ளன்போடு வேசையா உவந்து தழுவார் என்றவாறு.

இவள் மிகச் சிறந்தவள். தனது நடையுடை பாவனைகளாலும் இசை நலத்தாலும் குறுநிலமன்னர் பலரையும் தன் வசப்படுத்தி இவள் மிகப் பெருமை பெய்தி நின்றாள். விளக்கொளியைக்கண்டு வீழ்ந்து மாயும் விட்டில்கள்போல் இவளது வடிவழகைக் கண்டு பெருமோகங்கொண்டு தாங்கரிய பொருள்களெல்லாவற்றையும் உவந்து தந்து ஒழிந்தவர் பலர். "முத்துநகை, காட்டி வளை காட்டி நடைகாட்டி இடைகாட்டி நயங்காட்டி இளையோர்க்காசை காட்டுவாய், கோட்டுமுலை—சாய்ந்தால் முகந்திரைந்தால் சல்லிக்கா சொன்றும் உனக்கு ஈந்தாதரிப்பவரார் எந்திழையே—ஆய்ந்த பஞ்சப் பெட்டிபோலே நரைத்த பெண்கள் கையில் என்னவரும் சட்டி சுறண்டவரும் தையலே—கட்டழகின் வாலிபத்தே தேட்டில் மனம்வைத்தால் பொற்றகட்டால் வேலியிட்டுக் கட்டலாம் வீடெல்லாம்" என்றபடி. நாடெல்லாம் நினைந்து தம் இளமை எழில் கலை வளம்பெறப் பண்படுத்தி வந்த விலைமகளிரெல்லாரும் தலைவணங்கி நிற்ப இவள் நிலையுயர்ந்து நின்றாள். பலவகையிலும் சிறந்து இங்ஙனம் நிலவிநின்ற இவள் ஒருமுறை ஓர் அரசமாளிகையில் நடனம் புரிந்தாள். சிறந்த செல்வர்களெல்லாரும் அங்கு வந்து நிறைந்திருந்தார். இவளைக் கண்டு கண்டு அவர் கருதிக்கொண்ட களிப்பினை யார் கணிக்கவல்லார்? தத்தளாங்க தாளங்களெனத் தாளம் முறை முறை முழங்க ஒத்த அமைவோடு நின்று இவள் சதுர்திரிந்து வருங்கால் அவையிருந்த அனைவரும் மயல்மிகுந்து நிமிர்ந்தார்.

கொட்டமிடு மன்னரெலாம் கொம்பனாள் இசைவலையில்
பெட்டலையும் இருசெவியாம் அசுணமாப் பிரித்தாலும்
கட்டழகா மதுவீழ்ந்த கண்வண்டு பிரித்தாலும்
வட்டமுலைக் கிடைநுழைந்த மனம் பிரிக்கமாட்டாரால். (௧)

அச்சிருந்த தேவரம்பை அனங்காமோ கிளிபார்வை
நச்சிருந்த கணைகாதில் கொப்பிருந்து நனிதடுப்ப
எச்சிருந்த கொடியிடையை யிடைய வருத்திய முலையைக்
கச்சிருந்து தடுக்கதனால் பிழைத்தனர் காவலரெல்லாம். (௨)

(திருக்குற்றாலத்தல புராணம்.)

இங்ஙனம் தன் எழிலாடல்களால் பெரும் பொருளீட்டிப் பேர்பெற்று நின்ற இவள்பால் தருமசாமி என்னும் மறையவ

914. காமகலை காதலித்துங் காதலுறு தேனொழித்தான்
கோமான் மணிமான் குமரேசா—தோமாம்
பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொரு
ளாயு மறிவி னவர். (௪)

இ—ள்.

குமரேசா! காமகலை காதலித்து நின்றும் மணிமான் ஏன் அவளைத் தோயாது வெறுத்தான்? எனின், அருட்பொருளை ஆயும் அறிவினவர், பொருட்பொருளார் புன்னலம் தோயார் என்க.

இது, விலைமகளிரை அருள்நலமுடையார் அணுகாரென்கின்றது.

கோமான் என்றது பூமிமுழுவதும் புகழ்மணங் கமழ அவன் பொருந்தி ஆண்டமை கருதி.

பொருட்பொருளார் = பரத்தையர். அன்பு சீலமுதலிய குண நலங்கள் ஒன்றையும் விரும்பாமல் பொருளையே உறுதியாக விழைந்து நிற்பார் என்றவாறு.

அங்கண் விசும்பின் அமரர் தொழப்படுஞ்
செங்கண்மால் ஆயினும் ஆகமன்—தங்கைக்
கொடுப்பதொன் றில்லாரைக் கொய்தளி ரன்னார்.
விடுப்பர்தங் கையால் தொழுது. (நாலடியார்.)

அழகு, மேன்மை, ஆண்மை, போகம், அறிவு முதலிய விழுமிய நலங்கள் எதனையும் கருதாமல் பொருளொன்றையே விழைந்து விலைமகளிர் இழிந்து நிற்பர் என்பதை விளக்குதற்குத் திருமாலை இணைத்துக்காட்டி இஃதுணர்த்திநிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

அருளாவது சார்ந்த வுயிர்களுக்கு இரங்கியருளுந் தன்மை. இதனைப் பொருள் என்றது உயிர்க்கு உறுதிபயக்கும் உரிமை கருதி. அருட் செல்வம் செல்வத்துட் செல்வம் என்றதும் ஈண்டு அறிக.

மேல், பொதுமகளிர் உள்ளன்போடு யாரையும் பொருந்தார் என்றார்; இதில் அவரை நல்லறிவுடையார் தீண்டார் என்கின்றார்.

பொருளையே பொருளாகக் கருதும் பொது மகளிரது புல்லிய நலத்தை அருளையே பொருளாக ஆராயும் அறிவினையுடையார் மருவார் என்பதாம்.

எள்ளரியவகைமையினால் அனையவர்க்கும் எழிற்படிவ மியற்றிப்பின்னுந்,
தெள்ளுபுனற் றடங்கூடந் தேவர்பிரான் திருமுடியிற் சேர்த்தற் காகும்,
கள்ளவிழு மலர் நிறையு முய்யான முதற்பலவுங் கவினவாற்றி
வெள்ளமுடித்தவர்க்கினிதாந் திருவிழவாதியமுறையின் விளக்கச்செய்தான்.

(திருவிடையூர்ப்புராணம்.)

இன்னவாறே பல உயர் நலங்களையும் உலகம் இன்புற இவன் உவந்து செய்து வந்தான். இத்தகைய இவன்மீது காமகலை என்னும் கணிகை ஒருத்தி காதல்கூர்ந்து நின்றாள். அவள் எழிலோடு நல்ல இசையுமுடையவள்.

"ஆவி முடித்திளைஞர் ஆவி முடிக்கவெனச்
சீவி முடிக்க திருக்குழலாள்—பூவுலகில்
ஆற்றுவன் காமுகர்தம் ஆயுள்நாள் எண்ணியெண்ணிக்
கூற்றுவன் பார்க்கப் பார்க்கும் கூர்விழியாள்—சாற்றரிய
கைசிவகக் காமவேள் கண்சிவக்க ஆடவர்தம்
மெய்சிவக்க வாய்சிவக்கும் மெல்லிதழாள்—மொய்ம்முனிவர்
சாபம் பறக்கத் தவம்பறக்க மால்பிறக்கச்
சோபம் பெறப்பிறக்கும் சொல்லினாள்—கோபமதன்
போர்வளர நாணுசை போய்வளரப் பேராசை
வேர்வளர மேல்வளரும் வெம்முலையாள்" என்றபடி அவ் விலைமகள் நிலைநின்றாள். தனது ஆடல் பாடல் அழகு என்பவற்றால் பலவகையிலும் அவள் இவனை வசப்படுத்த முயன்றாள். யாதொன்றும் இவன் யாதும் இசையாது அறிவோடமைந்து நெறியே நின்றான். யாவரும் மிக வியந்து பார்க்கத்தக்க சிறந்த அழகுடைய அவள் விழைந்து நின்றும் அவளைச் சிறிதும் விரும்பாமல் நெறியோடு இவன் அமைந்து நின்ற தன்மையை அனைவரும் புகழ்ந்து போற்றினர். 'அருட் பொருள் ஆயும் அறிவினவர், பொருட் பொருளார் புன்னலந் தோயார்' என்னும் உண்மையை உலகம் இவன் பால் உணர்ந்து நின்றது.

அருளுடைய மேலோர் அணுகார் பொருள்கோள்
மருளுடைய மாதர் மருங்கு.

அருள் நலமுடையார் விலைமாதரை அணுகார் என்பது இதனால் கூறப்பட்டது.

915. மாதர் வளைக்கும் மருவாதேன் வீரசித்து
கோதென்று நீத்தான் குமரேசா—தீதாம்
பொதுநலத்தார் புன்னலம் தோயார் மதிநலத்தின்
மாண்ட அறிவி னவர். (ரு)

இ—ள்.

குமரேசா! அழகிய பொதுமாதர் பலர் வந்து வளைந்தும் வீரசித்து ஏன் அவரை மருவாது அகன்றான்? எனின், மதிநலத்தின் மாண்டஅறிவினவர் பொதுநலத்தார் புன்னலம் தோயார் என்க.

இது, நல்ல மதிமான்கள் கணிகையரை நாடார் என்கின்றது.

மாதர் வளைக்கும் நீத்தான் என்றது தன்மையைத் தழுவிக்கொள்ளும்படி அழகிய மகளிர் பலர் வந்து வளைந்து சூழ்ந்தும இவனை இவன் இகழ்ந்து விட்டமை கருதி. உம்மை சிறப்புணர நின்றது.

பொதுநலத்தார் = கணிகையர்; பொருள்கொடுப்பார்க்கெல்லாம் பொதுவாகி நின்று தம்நலத்தைப் பொருந்தச்செய்வார் என்னும் ஏதுவான் வந்தது.

புன்னலம் = புல்லிய நலம். அந்நிலையது பொது மகளிரது போகம். அதனது புன்மையாவது பலரும் பற்றி நுகர்ந்து பாசில் பட்டு இழிந்திருக்குந் தன்மை.

மதி என்றது இயற்கை அறிவினை. பின்னரும் அறிவு என்றது நூலறிவாகிய செயற்கை அறிவினை. இது பயிற்சியத்தால் வருவது. அது முற்பிறப்பில் செய்த புண்ணிய வசத்தால் கருவிலேயே திருவாய் அமைவது. இந் நூலறிவு விளக்கத்தக்க விதமாக மாண்புற வேண்டுமாயின் அந் நுண்மதி இன்றியமையாது வேண்டப்படுமாதலால் "மதிநலத்தின் மாண்ட அறிவினவர்" என்றார். மதிநுட்பம் நூலோடுடையார் என்றதும் காண்க

மேல், பொதுமகளிர் உள்ளன்பில்லாத கள்ளிகள் என்ருர்; இதில், அவரை நல்ல அறிவுடையார் நள்ளார் என்கின்ருர்.

மதிநலத்தால் மாட்சிமைப்பட்ட மெய்யறிவுடையவர் பொது மகளிரது புல்லிய நலத்தைப் பொருந்தார் என்பதாம்.

நூலறிவோடு கூடிய நுண்ணறிவாளர் எப்பொருள்களேயும் செப்பமுற உய்த்துணர்ந்து கொள்வர்; அவர்க்கு விலைமகளிரின் பழிநிலையும், இழிதகைமையும் நன்கு தெளிவாமாதலால் இவ்வரை அவர் தோயார் என்ருர்.

''முகத்துலக்கிகள்; ஆசார வீணிகள்;
விலைச்சிறுக்கிகள்; தோராத நாரிகள்;
முழுச்சமர்த்திகள்; காமாவிகாரிகள்;—மூந்தகுகு
மொழிப்பாத்தைகள்; காசாசையால் முலை
பலர்க்கும் விற்பவர்; நாணுதணுகிகள்;
முழுத்தபெட்டிகள்; மோகா மூதேவிகள்;—செஞ்சொலாலே
செகத்திலெத்திகள்; கூசாது பேசிகள்;
திருட்டு மட்டைகள்; மாயாசொரூபிகள்;
சிரித்துருக்கிகள்; ஆகாவெனு நகை—சிந்தைமாய
மயற்புகட்டிகள்; கோலாலமாய் நட
நடித்த சட்டைகள்; மாபாவிகள்.'' (திருப்புகழ்.)

எனப்பொதுமகளிரை மதிநலமுடையார் தெளிவாதலால் அவர் புன்னலத்தைக் கனவிலும் எண்ணுர் என்க.

மதிநலமும் மாண்புமில்லாத முழுமூடர்களே விலைமாதரைத் தழுவிமகிழ்வர் எனக் குறிப்பாலுணர்த்தி அவரது சேர்க்கையின் தீமையை அடிகள் இதில் விளக்கியிருத்தல காண்க.

பேரறிவுடையார் ஈரமற்ற பொதுமாதரை யாதும் விரும்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீரசித்து பால் உணரப்படும்.

## கதை.

வீரசித்து என்பவன் இற்றைக்குப் பன்னீராயிரம் ஆண்டு கட்கு முன்னிருந்தவன். ஏமகூடம் என்னும் நகரிலிருந்து அர சுபுரிந்த வீரசேனன் என்னும் அரசனுடைய அருமைத்திருமகன்.

தாய்பெயர் வீரசூ. இவன் கல்வியறிவிலும், செல்வ நிலையிலும், நல்லொழுக்கத்திலும் அக்காலத்திலிருந்தவரெவரினும் சிறந்திருந்தான். கண்டவரெவரும் காதல் கொள்ளத்தக்க கட்டழகு வாய்ந்தவன். இவனுடைய மனைவி பெயர் கமலலோசனை. அவள் கற்பும் பொறையும கவினுமுடையவள். அவளோடமர்ந்து விழுமிய போகங்களை நுகர்ந்து எவரும் இன்புற இவன் அரசுபுரிந்து வந்தான். நெறி வழுவாமல் நின்று முறைசெய்து வருங்கால் இறைவனை நினைந்து இவன் மிகவும் உருகினான். அதனால் உலக பாரத்தை அமைச்சரிடம் வைத்துவிட்டுச் சிறிதுகாலம் ஓர் இனிய பூஞ்சோலையில் தனியமர்ந்திருந்தான். அங்கே அனங்கலீலை என்னும் ஓர் அழகியமங்கை வந்தாள். தன்னைத்தழுவ விழைந்து பலவகையிலும் முயன்று கனிவுதோன்ற இனிது மொழிந்தாள்.

"இளமையிக்குளீர்! திருவுநல்லுருவுமே யினைந்தீர்!
தளவவார் குழற்றருணியர் இளநலந் தனையோட்
டுளம் விருப்புறு போகம் நீத்திவணுற லாமோ?
வளமையெளவனத் திவ்வனத் தெவ்வணம் வந்தீர்." (சிவரகசியம்)

என்பதாதியாக நேசமொழிகள்பல பேசி நெருங்கினாள். அவளைநோக்கி அறிவுரைகள் பலகூறி இவன் உறுதிநிலையுணர்த்தினான். உணர்ந்தியும உணராமல் இவன்மேல் மூண்டிய காதலால் அவள் மருவவிரைந்தாள். நில்லென நிறுத்தி இவன்நீதிகள் பல சொல்லினான். சில அடியில் வருவனகாண்க.

ஆசையுற்றெவ னேனுமே அயல்மாதரைப் புணர் வென்னுமோவான்
அரியதன்பிதிர் வர்ககமோடெரி கும்பிபாகம் தடைகுவான்
நேசமுற்றவர் வதனநன்றுறு கின்றதென்றெதிர் நோக்குவோன்
நெறிகளற்றொரு கற்பகாலம் வெந்நிலையமுற்று வருந்துவான்
சீசிமற்றவர் மலசலக்குழி யானயோனியி லிச்சையே
செய்துளோன் பரலோகசிந்தனை யற்றபாமரனாகுவான்
நாசிகாதுகண் முலையுருண்டு திரண்டு நீள்சதைக்கட்டியாம்
நகமுறும்பொழு தலைசெந்நீருறாம் நச்சுவாயுகென் கொலோ?
(சிவரகசியம்.)

இன்னவாறு பலவுரைத்து உண்மைநிலையை விளக்கி அவளை மறுத்தொழித்தான். பின்னொருமுறை சவுந்தரவல்லி என்னும்

தாசி ஒருத்தி நேசமீக்கூர்ந்து ஆசைமொழிகள்பல கூறி இவனை அணையவிழைந்தாள். அவளையும் வெறுத்து அகலவிடுத்தான். சிறந்த அழகும், தகுந்த இளமையும், நிறைந்த திருவும், மிகுந்த ஆண்மையும் அமைந்திருந்தும் எழில்நலங்களோடு வலியவந்தமாதரை இவன் சிறிதும் மதித்துநோக்காது இளிவென இகழ்ந்துவிடுத்தான். பிறமகளிரையாதும் விரும்பாமல் நிறைநலத்தோடு நின்றஇவனது மதிநலத்தையும் மாண்மையும் அனைவரும் வியந்து புகழ்ந்தார். மதிநலத்தின் மாண்ட அறிவினவர் பொதுநலத்தார் புன்னலந்தோயார் என்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைச் சிவரகசியத்தில் காண்க.

நாயும் போல்வர் பல்லெச்சிலும் நச்சலால்
தீயும் போல்வர் செய்ந்நன்றி சிதைத்தலால்
நோயும் போல்வர் நுகர்தற் கருமையால்
வேயும் போல்வர் இவ்வேனெடுங் கண்ணினார். (வளையாபதி)

ஒதலுமொன்று உளமொன்றுச் செய்கை யொன்றுப்
பேதைநிலைமை பிடித்துப் பெரும்பவஞ்செய்
மாதர் வலைப்பட்டு மயக்குற்று றல்லரோ
சாதல் பிறப்பில் தடுமாறு கின்றுரே. (கந்தபுராணம்)

ஏமாந்த போழ்தின் இனியார்போன் றின்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடாம்—மாணோக்கின்
தந்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்துமென் பார். (நாலடியார்.)

தொழுநோய் முதற்பல சூழும்; நிரப்பாம்;
இழுதையென் றெள்ளுவ ரின்றுரும்; கற்புப்
பழுதுறு மாமனைக்குப்; பண்புடை யாளர்
ஒழிகபொருட் பெண்டிர் உறவு. (இன்னிசை)

பழிவறுமை யீயும் பரத்தையருக் கன்பாய்
முழுமூடர் ஈவார் முதல்.

விலைமகளிரை அறிவுடையார் விரும்பார் என்பது இதனல் கூறப்பட்டது.

916. தள்ளாத மங்கையர்முன் சார்ந்தும் புரஞ்சயனேன்
கொள்ளாது நீத்தான் குமரேசா—உள்ளுணர்ந்து
தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்
புன்னலம் பாரிப்பார் தோள். (ரு)

இ—ள்.

குமரேசா! மதனவல்லி முதலிய பொதுமகளிர் பலர்வந்தும் தன்னை விழைந்தும புரஞ்சயன் ஏன அவரை வெறுத்து விட்டான்? எனின், தகைசெருக்கிப புல் நலம் பாரிப்பார தோள், தம் நலம் பாரிப்பார் தோயார் என்க.

இது, ஒழுக்கமுடையார் பொதுமகளிரை வழுக்கியும் தீண்டார் என்கின்றது.

தம் நலம் பாரிப்பார் = குணநலங்களால் தமது புகழை உலகில் பரப்புவார். பாரித்தல் = பரப்புதல், விரித்தல்.

தகை செருக்கி—தமது அழகு முதலியவற்றை மிகுதியாக்கு களித்து. ஆடவரை வசப்படுத்தற்கு ஏதுவாகிய இயல்வகைகளைத் தகை என்றார்.

“தாள்வீசும் பவுரிதொறும் சரிவீசும் மணிச்சிலம்பு
வேள்வீசும் பொருகணைக்கு வில்வீசும் குனிபுருவம்
தோள்வீசுந் தொறுகனகத் தொடிவீசுங் கதிர்ப்பிரபை
வாள்வீசுங் கயைவிழி வலைவீசுந் தவத்தோரை.” என்றபடி

மினுக்கும் குலுக்கும் மிலுக்குமுடையராய்த் தம் இளமை எழில்களை வெளிக்குக்காட்டிக் களித்துத்திரிவராதலால் தகை செருக்கி என விலைமகளிர நிலையை விளக்கி வைத்தார்.

மேல், மதிநலமுடையார் விலைமாதரைத் தீண்டார் என்றார்; இதில், நெறியுடையார் அவரை நினையார் என்கின்றார்.

அழகிகள் எனத் தம்மைத்தாமே வியந்துகளித்துத் தமது போகநலத்தை யாவருக்கும் போகவிடுக்கும் பொதுமகளிரது தோளைக் குணநலமுடைய சீர்த்திமான்கள் சேரார் என்பதாம்.

“வானமும் திசையும் பொங்கும்புகழ்மையும் வானம்பேறும்
ஞானமும் பொறையும் குன்றுநன்றியு ஊக்கப்பாடும்

தானமும் கொடையும்அன்பும் வரிசையும் தகைசால் நண்பும்
மானமும் தவஞ்செய்தீன்ற மகவு போல் வளர்க்கவல்லார்.''

என்றபடி குணநலங்களை நன்கு வளர்த்துத் தம்முயிர்க்கு நன்மையை நாடிநிற்கும் மேலோர் புன்மையை நாடாராதலால் அவர் இப்புல்லிய மகளிரைக் கூடார் என்றார்.

அருளுடையார், அறிவுடையார், நெறியுடையார் என்னும் இவர் இல்லாதாரை விரும்பார் என முறையே மூன்று பாட்டானும் தொடர்பாக வைத்து உணர்த்தியிருத்தலைக் காண்க.

"மேலோராயினும், நூலோராயினும்,
பால்வகை தெரிந்த பகுதியோராயினும்
பிணியெனக் கொண்டு பிறக்கிட்டொழியும்
கணிகையர் வாழ்க்கை கடையே'' (சிலப்பதிகாரம்.)

பிறக்கிட்டு ஒழிதல் = முகம் பாராது ஒதுங்கிப் போதல். மேற்குறித்த முறைவைப்பை அடியொற்றி வந்து இஃது உணர்த்தி நிற்றலை நுனித்துணர்க.

பஞ்சியொளிர் விஞ்சுகுளிர் பல்லவம் அனுங்கச்
செஞ்செவிய கஞ்சநிமிர் சீறடியளாகி
அஞ்சொலிள மஞ்ஞையென, அன்னமென, மின்னும்
வஞ்சியென, நஞ்சமென, வஞ்சமகள் வந்தாள். என்றபடி

வந்து தகைசெருக்கி நின்ற சூர்ப்பணகையை இராமன் சேராதகன்றதுபோல் சீலமுள்ள மேலோர் பொதுமாதரைப் பாராதகல்வர் என்பார் "புன்னலம் பாரிப்பார் தோளை தந்நலம் பாரிப்பார் தோயார்" என்றார்.

தன்மீது பெருங்காதல் கொண்டு தான் இருந்த இடத்திற்கு இரவில் தனியே வந்த தேவதாசியை விசயன் நீண்டாதொழிந்ததும், அதனால் அவன் புகழ் யாண்டும் பரவி நின்றதும் ஈண்டு எண்ணத்தக்கன.

நெறியுடைய மேலோர்கள் கணிகையரை நெஞ்சிலும் நினையார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புராண சரிதையால் உணரப்படும்.

கதை.

புரஞ்சயன் என்பவன் சிந்துநாட்டு மன்னன். இற்றைக்கு ஐயாயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னர்க் குஞ்சரபுரி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். அருங்கலை விநோதன். பெருங் கொடையாளன். நிறையும் பொறையும் நீதியு முடையவன். குதிரையேற்றத்தில் இவன் மிக்க விருப்பமுடையவன். எழிலமைந்தவும் விலையுயர்ந்தவு மாகிய விழுமியகுதிரைகள் பல வைத்திருந்தான். அதனால் பரிபுரஞ்சயன் எனப்பகரநின்றான். வசந்தசேனை என்னும் அழகிய கன்னியை மணந்து அரிய இன்பங்களை நுகர்ந்து எங்கும் புகழ்மணங் கமழ இவன் செங்கோல் செலுத்தினன். இவன் காலத்தில் உலகம் மிகச் செழித்திருந்தது. குடிகள் பெருமகிழ்வுடையராய் அடிதொழுதன்புசெய்து வர அவர்பால் இவன் அருள்சுரந்து வந்தான். இவனது இராசதானிநகரம் அழகியமணி மாடங்களாலும், விழுமிய நீர்நிலைகளாலும், நறுவிய பூஞ்சோலைகளாலும் சிறந்து அமரரும் விரும்பும்படி விளங்கியிருந்தது.

அரிபுரந்தரன் விரும்பும்அந் நகரளிப்பவன் தோ
லுரிபுரந்தரித் துயர்வட வரைகுழைத் தருக்குத்
திரிபுரஞ்சுடு சிவனடி சிந்தைசெய்பவன்றாட்
பரிபுரந்திகழ் திருவுறை பரிபுரஞ்சயனே. (1)

காந்து செம்மணிச் சேடனும், கமடமும், கடம்பா
யேந்து கோட்டுமோட் டிபங்களோ ரெட்டும், எண்கிரியும்,
நாந்தகத்தொடு சமரமேற் றெதிருற நணுகும்
வேந்தருஞ் சுமை யாறிட மேதினி பரிப்போன். (2)

வேதநூல்முறை திறம்பிடா தெங்கணும் விளங்க
மாதர் கற்பெனும் வரம்பழியாமல் மாநிலத்தோர்
பாதகம்பழி பயின்றிடா தருள்விழி பரப்பி
ஆதரத்துடன் அறப்பயிர் வளர்த்தர சளித்தான. (3)

(சிவராத்திரி புராணம்.)

அறிஞர் பலரும் இன்னணம் இவனைப் புகழ்ந்து போற்றியுள்ளார். அறிவொழுக்கங்களிற் சிறந்து உறுதி நலங்களைப் புரிந்து இவ்வாறு இவன் உயர்ந்திருக்குங்கால் மதனவல்லி, தனவதி, சுகசோகை, காமவல்லி என்னும் பொதுமகளிர் நால்வர் அந்நாட்டில்

அழகு முதலியவற்றில் மிகு புகழுடையாராய் மேவியிருந்தார். ஒருமுறை இவனது அரசசபையில் வந்து அவர் நடனம் புரிந்தார். பொருள்மிகத்தந்து போகவிடுத்தும் அவர் போகாமல் அங்குத்தங்கி யிங்கிதங்கள் பலசெய்து இவனை வசஞ்செய்ய முயன்றார். முயன் றும் முடியாமையால் மூவரும் போயினர். முன்னவள் மாத்திரம் நின்று தன்னாலானவரையும் இம்மன்னன்மேல் மயல் விளைத்து வந்தாள் விளைத்தும் அவளையாதும் விழைபாது நீதியோடுபொருந்தி இவன் நிலைகுலையாது நின்றான்.

"எண்ணமதலாமை பண்ணும்; இறப்பிறப் பிடியநாறும்;
மண்ணியபுகழை மாய்க்கும்; வரும்பழிவளர்க்கும்; மானத்
திண்மையையுடைக்கும்; ஆண்மை திருவொடு சிதைக்கும்; சிந்தை
கணமொடு கலக்கும்மற்றிக கடைப்படுகாம மென்றான்."
(யசோதர காவியம்.)

என்றபடி அவளது புல்லிய போகநிலையினை உள்ளுற உணர்ந்து எள்ளி விடுத்தான். இளமை இசைமுதலிய நலங்கள் கனிந்து எழில் மிகுந்த அவள் தழுவவிழைந்தும் விலைமகள் முயக்கம் வழு வென இகழ்ந்து இவன் செறியமைந்து நின்றான். இவனது உறுதி நிலையினையும், உணர்வொழுக்கங்களையும வியந்து அனைவரும் புகழ்ந்தார். புன்னலம் பரிப்பார் தோளைத் தந்நலம் பரிப்பார் தோயார் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

இலைநல வாயினும் எட்டி பழுத்தால்
குலைநல வாங்கனி கொண்டுணவாகா
முலைநலங் கொண்டு முறுவல் செய்வார் மேல்
விலகுறு நெஞ்சினை வெய்து கொள்ளீரே. (திருமந்திரம்)

காண்டகு மென்றோட் கணிகைவா யின்சொல்லும்
தூண்டிலி னுட்பொதிந்த தேரையும்—மாண்டசீர்க்
காழ்த்த பகைவர் வணக்கமும் இம்மூன்றும்
ஆழ்ச்சிப் படுக்கும் அளறு. (திரிகடுகம்.)

நலமகன்ற புல்லரே நாணார் புகுவார்
விலைமகளிர் இல்லுள் விரைந்து.

சீலமுடையார் வேசையரைச் சிறிதும் நினையார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

917. உள்ளிப் பொதுமகளிர் உற்றுநின்றும் மித்திரனேன்
கொள்ளான் வெறுத்தான் குமரேசா—கொள்ளும்
நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்
பேணிப் புணர்பவர் தோள். (எ)

இ—ள்.

குமரேசா! காமதிலகம் என்பவள் கருதிவந்தும் தேவமித்திரன் ஏன் அவளைச் சேராது விடுத்தான்? எனின், பிறநெஞ்சிற் பேணிப் புணர்பவர் தோள் நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர் என்க.

இது, புலங்கெட்ட புல்லரே பொதுமகளிரைப் பொருந்துவர் என்கின்றது.

பிறபேணி = மற்றப் பொருளை விரும்பி. புணர்ச்சியின் பயனாகிய இன்ப நுகர்ச்சிகளை விழையாமல் வேறொன்றை விழைந்து என்றவாறு.

அன்பு கருதியோ, இன்பம் நினைந்தோ, கனிந்த காதலோடு எவரையும் வேசையர் முயங்கார்; பொருள் வருவாய்களைத் தம்முள்ளத்துள் விரும்பிக்கொண்டு உடலால் மட்டும் தழுவுவர் ஆதலால் "நெஞ்சில் பிறபேணிப் புணர்பவர்" என அவர் பெயர் பெற்று நின்றார்.

நிறை = நிலைதிரியாத நெஞ்சடக்கம். "நிறையெனப்படுவது மறைபிறரறியாமை" என நல்லந்துவனாரும், "காப்பன காத்துக் கடிவன கடிந்தொழுகும் ஒழுக்கம்" எனப் பரிப்பெருமாளும், "ஐம்பொறிகளையும் அடக்குதல்" எனப்பேராசிரியரும், இதனைக் குறித்துரைத்துள்ளார். "அறிவோடமைந்து ஐம்பொறியடக்கி நெறியமைந்தொழுகல் நிறையெனப்படுமால்" என்பதுங் காண்க.

இது, ஆண்மைக்குரிய நால்வகைக் குணங்களுள் ஒன்று.

அறிவு நிறை ஓர்ப்புக் கடைப்பிடி என்னத்
தகுமிவை ஆடவர் தங்குண நான்கே. (பிங்கலந்தை.)

இது, பெண்மைமேல் வருங்கால் கற்பு எனப்பொருள்படும்.

மேல், குணநலமுடையார் வேசையரைக்குறுகார் என்றார்; இதில், மனநலமில்லாரே அவர்பால் மயங்குவர் என்கின்றார்.

உள்ளத்தில் பிறபொருள்களை விரும்பிக்கொண்டு உடம்பால் மட்டும்தழுவி நிற்கும் கணிகையர் தோள்களை நிறையமைந்த நெஞ்சமில்லாத சிறியரே தழுவுவர் என்பதாம்.

உணர்வுநலமில்லாத ஓட்டைநெஞ்சினரே புணர்ந்துபொருள் பறிக்குங் கேட்டைகளைப் பொருந்தியழிவர் என்பார் நிறைநெஞ் சமில்லவர் தோய்வர் என்றார்.

தம்மீது மோகமாய் மயங்கியுள்ள மருளுடையாரது பொரு ள்முழுவதையும் கவர்ந்து கொள்வதிலேயே கருத்தூன்றி நின்று தரவோடு குழைந்து தழுவி வேசையர் குடியைக் கெடுத்துவிடுவர் என்றவாறு.

குனித்தவிற்றிறல் அரசிளங் குமரராங் குடத்தை
அனிச்சமெல்லடிக் குவியிளமுலையவள் அழகாம்
தனிக்கயிற்றினிற் பூட்டிவிட் டனுதினந் தாழ்ந்த
மனைக்கிணற்றினிற் பொருட்சலம் வறந்திடமுகப்பாள்.
(சீகாளத்திப் புராணம்.)

தம் அழகால் இளைஞரைப் பிணித்துப் பொருள் முழுவதை யும் வேசையர் உறிஞ்சிவிடுவரென உருவகஞ் செய்து இஃதுணர் த்திநிற்கும் அழகை யூன்றிப்பார்க்க.

வீபொருளானை யகன்று பின்னு மோர்
மாபொரு ளான்பக்கம் மாண நயத்தலின்
மேய்புலம் புல்லற மற்றோர் புலம்புகு
மாவும் புரைப மலரன உண்கணார். (வளையாபதி.)

கூடிற் கைப்பொருள் யாவையும் கொள்ளுவர்
வீடில் ஆருயிர் தன்னையும் வீட்டுவார்
ஆடவர்க்கிவ் அரிவையர் ஒப்பதோர்
கேடு முண்டோ முழுதுங் கெடுக்கவே. (குறுந்திரட்டு)

அம்பொற் றுகிலோதஞ்சிறை வண்டிமிர்
வம்புலாங் குழல் மாத ரெனப்படும்
பைம்புல் மூசிய பாழ்ம்பெருங்கூவலில்
நம்பி வீழும் அவனி நகைக்கவே. (பாகவதம்)

பரத்தையர் இயல்பும், அவர்தம் செயலும், பொருளையே நெஞ்சிற் பேணிநிற்கும் வஞ்சமும், அவரை நம்பி நணுகினோர் நாச மடைவரென்பதும், பிறவும் இவற்றுள் விளங்குவன காண்க.

செல்வனொருவன் ஓர் பொதுமகளை மிகவிழைந்து தனக்குரியளாக உவந்து கொண்டிருந்தான். அவளும் இனியனபல செய்து அவனை இன்புறுத்தி வந்தாள். ஒருநாள் உடனிருக்கும் பொழுது "உங்களைப்பிரிந்தால் யான் இறந்து படுவேன்; ஆதலால் என்னை என்றும் பிரியாமல் நீங்கள் இசைந்திருக்கவேண்டும்" என உரிமை தோன்ற வுரைத்து அவனிடம் உள்ளவற்றையெல்லாம் உறிஞ்சினாள். தனக்கிருந்த பொருள் முழுவதையும் தான் பொருந்திநின்ற அவளுக்கே அம்முழுமகன் பொருந்தவைத்துப் பின்பு பெருங்கடன் வாங்கித்தந்தான். முடிவில் அதுவும் முடியாமையால் களவாடச்சென்றான். அங்கு அகப்பட்டுக் கொண்டான். அரசன் தண்டனையால் அவனைக் கொலைக்களத்துக்கு இழுத்துச் சென்றார். செல்லுங்கால் முன்பு புல்லி நின்ற அவளது இல்வழியே செல்ல அவளும் பின்தொடர்ந்து வந்தாள். தன்னைப்பிரிந்தால் இறந்து படுவதாக முன்னம் இசைத்தபடியே உடன் இறக்கவருகிறாள் போலும் என்று அப்பேதை மகன் எண்ணிச் சாகும் இடத்தைநண்ணி மோகமுடன் அவள்முகத்தை நோக்கினான். அவள்நிமிர்ந்து பார்த்து "நம்இருவருக்கும் உயிர் ஒன்றே; நீர் இறந்தால் நானும் இறந்ததோடு ஒக்கும்; ஆதலால் மிஞ்சியுள்ள அந்தக்கோவணத்தைக் கொடுங்கள் யான் கொண்டு போகின்றேன்" என்றாள். அதனைக்கேட்டவுடனே அவன் கெடுக்கலங்கினான். தன்னைப் பேணாமல் நெஞ்சில்பிறபேணி நின்ற அவளது பேய்த்தன்மையை யுணர்ந்தான். பேதுற்றிறந்தான். இறக்குங்கால் அவன் ஏங்கி உரைத்தபடியை இதனடியில் காண்க.

"நேரிழைநம்முடனிறப்பன் எனமுன்னம் உரைசெய்தாள்; நிருபனம்மை
யீரவெனக் கொலைக்களத்திற் கிழுக்கஅடிபற்றிப்பின் இரங்கிவந்தாள்;
காரிகையை நோக்கினேன் மிஞ்சியஅக்கோவணத்தைக் கருதிவந்தேன்
ஓருயிர் நம்இருவருக்கும் நீவீயின் நானிறந்த தொக்குமென்றாள்."

இதனால் இவ்வஞ்சமகளிரின் நெஞ்சின் கொடுமையும், வஞ்ச நிலைமையும் உணரலாகும். இவ்வாறு பொருளையே கருதி அருளற்று நிற்கும் பொதுமகளிரை மருள் மனத்தரே மருவி விழைவர் என்று குறித்து அவரது இருள்படு போகத்தின் இழிவினை விளக்கி அவரை ஒழிவு செய்தொழுகுமாறு இஃது உணர்த்தியதென்க.

நெறிநின்றொழுகும் அறிவுடையார் விலைமகளிரை எவ்வகையினும் யாதும் விரும்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தேவமித்திரன்பால் உணரப்படும்.

## கதை.

தேவமித்திரன் என்பவன் இற்றைக்கு மூவாயிரத்திருநூறு ஆண்டுகட்குமுன்னர்ப் பாண்டி நாட்டிலே பாடலி என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த ஓர் குறுநிலமன்னன். இவன் அறிவுநலமுடையனாய் நெறிமுறை நின்று முதுநிலம் புரந்தவன். யானை தேர் முதலிய நால்வகைச் சேனைகளும் நன்கு அமையப்பெற்றவன். உயிர்கள் மாட்டுப் பேரருளுடையனாயினும் பகைவர்பால் யாதும் இரங்காமல் மிகுதிறலோடு அடலூற்று நின்றவன். தன்னினும் சிறந்தமன்னனொருவன் மீது பன்னிருமுறை படையெடுத்து வந்த மறுபுல மன்னர் இருவரை இவன் ஒருமுறையில் சென்று வென்று உயர்புகழ்கொண்டான். தாயென நினைந்து குடிகள்யாவரும் இவன்மேல் நேயமிக்கிருந்தார். இவன் இருந்து அரசுசெய்த நகரம் பலவகைநலங்களாலும் நிரம்பி மிகச் சிறந்த நிலையில் விளங்கியிருந்தது. அதன்பெருமையை அறிஞரனைவரும் புகழ்ந்துள்ளார்.

"விளம்பிய நகராள் தேவமித்திர னுமவேந்தன்
களங்கமில் கருணைமேய கருத்தினன் அருத்தியோடும்
அளந்திடற் கரியசேனை நால்வகை யனைத்துமுள்ளோன்
துளங்குறு பகைவர்கூட்டம் துணிபடத் தூக்குஞ்சூரன். (1)

ஈன்றரு ளன்னைபோலும் இருநிலத் துயிரை அன்பு
தோன்றிடப்புரக்கும் தூயன்; சொல் தவறுதவாயன்;
சான்றசோறென்ன வேற்றோர் காரிகை பொருள்விரும்பான்
ஆன்றதன் சரணடைந்தோர்க் காருயிர் அளித்துக்காப்போன்." (2)
(புதுவைப் புராணம்.)

இன்னவாறு இவனது குணநலங்களை வியந்து அக்காலத்தவர்பலரும் புகழ்ந்து போற்றியுள்ளார். கனகசுந்தரி என்னும் ஓர் அழகிய மங்கையை மணந்து அரிய போகங்களை நுகர்ந்து அறங்கள்பல புரிந்து அரசு முறையை இனிது பேணி இவன் அகமகிழ்ந்திருந்தான். இங்ஙனம் இருந்து வருங்கால் சோழ நாட்டிலே காம திலகம் எனப் பேர்பெற்றிருந்த ஓர் பொதுமகள் இவனை வச

ப்படுத்த விழைந்து தக்கசூழ்ச்சியாளரோடு வந்து இவனகரில் தங்கியிருந்தாள். அவள்,

"தாது நெகிழூஞ் சதகோடி செங்குமுதம்
வாதிலழியச் சிவந்த வாயினுள்,—பூதலத்தோர்

முன்னூசல் கொண்டுமன மோக முறவேண்டும்
பொன்னூசல் அன்னமணிப் பொற்குழையாள்,—மன்னும்

அலகில் மறையோர் அறிவி னுயர்வோர்
உலைய உலகம் உலைய—நலமகலச்

செங்கோ லொழித்தெவர்க்குந் தீங்கு புரிவேந்தர்
வெங்கோ லினுங்கொடிய வேற்கண்ணாள்,—பொங்கி

மலையைக் கடிந்தெடுத்து வச்சிரத்தா லோங்கி
உலைவில் மகத்துக் குரித்தாய்ப்—பகைண்

படைத்துக் கருகிப் பணைக்களிற்றின் மேலாய்ப்
மடற்கொத்து மாலை வணைந்து—கிடத்தால்

புரந்தரனைப் போலப் பொலிந்து முனிவோர்
முரண் கெடுக்க விம்மு முலையாள்"

என்றபடி பேரழகோடு நிலவி நின்றாள். தனது இளமை எழில் இசை முதலியவற்றால் பலவகையிலும் அயலிருந்து இவனை வசஞ் செய்யமுயன்றாள் முயன்றும்யாதுமுடியவில்லை; பின்புஅமயம்வாய்த்த போதெல்லாம் அந்தப்புரத்துள் வந்து தேவியை உறவுசெய்துகொண்டு இனியவள் போலவும் அடியவள் போலவும் நடித்து அழகுகனிய அலைந்துதிரிந்தாள். இவளது உள்ளக்கருத்தையும்கள்ள நிலையையும் இவன் ஊன்றி யுணர்ந்தான்.

"மாமனம் நிறைவில்லாத மனிதராம் புட்பிடிக்கக்
காமனும் வேடன்வீசும் வலையோப்பார் கருங்கண்மாதர்"

என இவன் தெளிந்திருந்தானாதலால் அவள்செய்துவந்தவஞ்சகங்களில் சிக்காமல் உய்திபெற்று நின்று உறுதியை உணர்ந்தி அவளை அங்கு உறுவகை ஒழித்தான். புரைபடாத இவனதுமன நிலையைக்கண்டு அவளும் பொங்கியொழிந்தாள். நிறையழிந்த அவள்பால் நெஞ்சழிந்து நகர்ந்த அரசர்பலரும் இவனது நெஞ்சுறுதியை யுணர்ந்து மிகவியந்து புகழ்ந்தார். பிற நெஞ்சில் பேணிப்

புணர்பவர் தோளை நிறைநெஞ்சமில்லவரே தோய்வர்; நிறையுடையார் யாண்டும் எவ்வகையிலும் தீண்டார் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது

மெய்வருபோகம் ஒக்கஉடனுண்டு விலையும் கொள்ளும்
பையரவல்குலார்தம் உள்ளமும் பளிங்கும் போல
மையரி நெடுங்கண் நோக்கம்படுதலும் கருகிவந்து
கைபுகிற் சிவந்துகாட்டும் கந்துகம் பலவுங்கண்டார். (இராமாயணம்.)

விலைமாதரது நெஞ்சின் கொடுமையையும், சமயத்துக்குத்தக் கபடியெல்லாம் நடித்து நிலைமாறி நிற்கும் அவர்தம் வஞ்ச நிலைமையையும் ஓர் இன்ப விளையாட்டு நிகழ்ச்சியில் ஒப்பவைத்துக் கம்பர் இதில் உணர்த்தியிருத்தல் காண்க. கந்துகம் = பந்து.

தலையும் ஆகமுந் தாளுந் தழீஇ அதன்
நிலைநிலாது இறை நின்றது போலவே
மலையினுள்ள வெளைக் கொண்டு மண்டலால்
விலையின் மாதரை ஒத்ததவ் வெள்ளமே. (இராமாயணம்)

வேசையர் ஒருவனைத் தழுவித்தடவி அவன்பால் உள்ளவற்றையெல்லாம் கொள்ளைகொண்டுபோவர் என்னும் உண்மையை மலையினின்றிழியும் வெள்ளத்தோடு ஒப்பவைத்துச் சிலேடை நயந்தோன்ற இஃதுணர்த்தி நிற்றல் காண்க. அவரது உறவுநிலைகளைப்பொழுதுங்கூட உண்மையாக நிலைத்திராது என்பதை இறை நின்றது போலவே எனக் கனி ஒன்ற வைத்துணர்த்தி யிருக்கும் அழகை யூன்றிப் பார்க்க.

ஊறுசெய் நெஞ்சந்தம் உள்ளடக்கி யொண்ணுதலார்
தேற மொழிந்த மொழிகேட்டுத்—தேறி
எமரென்று கொள்வாரும் கொள்பவே யாக்கும்
தமரல்லர் தம்முடம்பி னார். (நாலடியார்.

நாச முறுவாரே நாடாமல் வேசையர்தோள்
ஆசை யுறுவார் அறி.

நலமுடைய விரும்பினர் விலைமகளை விரும்பார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

918. முன்னொருத்தி தன்னை முயங்கச் சுநந்தனேன்
கொன்னே மடிந்தான் குமரேசா—உன்னிமேல்
ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு. (அ)

இ—ள்.

குமரேசா! பிங்கலை என்பவளை முயங்கும் பொருட்டுச் சுநந்தன் ஏன் தன் உயிரையும் விடுத்தான்? எனின், மாய மகளிர் முயக்கு ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்க.

இது, பெரும் பேதைகளே விலைமகளிரிடம் மயங்கி நிற்பர் என்கின்றது.

அறிவினரல்லார் என்றது மூடர்கள் என்றவாறு.

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசி நல்லவர் போல் நடித்துப் பல்வகை வஞ்சங்களையும் செய்ய வல்லவராதலால் வேசையரை மாயமகளிர் என்றார். மாயம் = வஞ்சம், களவு, தீமை, பொய்.

அணங்கு என்னும் சொல் ஆசை, நோய், வருத்தம், முதலியவற்றை யுணர்த்திவரும். ஈண்டுக்காமிகளை மயக்கி உயிர் வாங்கும் மோகினியைக்குறித்து நின்றது. இத்தெய்வமகளைக் கொல்லிப்பாவை என்பர். "பாணுட்கொண்ட கங்குலிடை யது—பேயும் அணங்கும் உருவுகொண்டு" (மதுரைக் காஞ்சி) என்புழியிஃதுணர்த்தி நிற்றல் காண்க.

தெய்வமும் தெய்வத் துவமைசொல் மாதரும்
மையல் நோயும் வருத்தமும் கொலையும்
அழகும் ஆசையும் அணங்கு என்றமே. (பிங்கலந்தை

மேல், நிறையில்லாதவரே விலைமாதரை மருவுவர் என்றார்; இதில், அறிவில்லாதவரே கடுமோகிகளாய் அவரைக் காதலித்து அழிவர் என்கின்றார்.

ஆராய்ந்தறியும் அறிவினையுடையரல்லார்க்கே வேசையரது முயக்கம் உயிர்போக்கும் வருத்தமாம் என்பதாம்.

விலைமகளிர் முயக்கம் அறிவிலிகளுக்கு அணங்கு என்றதனால் அவ்விணக்கத்தால் அவர்அடியோடு நாசமடைவர் என்பதாயிற்று.

என்னை? அணங்கு என்பது காமரூபியாய் நின்று தன்னை நோக்கு வாரைத் தன்வசப்படுத்தி முடிவில் உயிரைப் போக்கிவிடும்; அது போல் அமமாயமகளிரும் தம்மை முயங்கினாரை மீளவிடாதபடி மயக்கி உடல் பொருள் ஆவியாவும் உறிஞ்சிவிடுவர் எனக.

இத்தகைய பழிகாரிகளை முழுமூடர்களே தழுவவிழைவர்; அவ்விழைவு அவர்க்குத் தப்பாமல் இழவு கூட்டிவிடும எனவுணர்த்தி அமமாயமயக்கிகளைக்கண்டு யாண்டும மயங்காது அறிவுடையார் தப்பிப் பிழைக்கவேண்டும் என்று அடிகள் அருளியிருக்கும அழகை இதில் ஆராய்ந்துப் பார்க்க.

வானகமின்னுக் கொடிகள் வந்திழிந்தா லெனவந்து
தானநிறை சுருதிகளில் தருமலங்காரத் தன்மை
கானவமுதம் பரப்பும் கனிவாயி லொளிபரப்பப்
பானல்நெடுங் கண்கள் வெளி பரப்பியிசைபாடுவார். (1)

ஆடுவார் பாடுவார் அலர்மாரி மேற்பொழிவார்
கூடுவார் போன்றணைவார் குழலவிழ இடைநுடங்க
ஓடுவார் மாரவேள் உடன்மீள்வார் ஒளிபெருக
நீடுவார் துகிலசைய நிற்பாரு மாயினர். (பெரியபுராணம்.) (2)

என்றபடி தம்முன்வந்து மயக்கி நின்ற மாயமகளிரை யாதும் நோக்காது அப்பர் அமைந்து நின்றதுபோல் ஆயும் அறிவுடையார் தெளிந்துநிற்பர் ஆதலால் அவ்அறிவு இல்லார்க்கு அவர் முயக்கம் அணங்காய் அமைந்து நிற்கும் என்றார்.

பகுத்தறிவில்லாத மூடர்களே பரத்தையரை மிகவிழைந்து நிற்பர் என்பது கருத்து.

அறிவிலிகளே பெருமோகங்கொண்டு விலைமகளிரைத்தழுவ விழைந்து அதனால்தம் உயிரையும் இழப்பார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுநந்தன்பால் உணரப்படும்.

## கதை.

சுநந்தன் என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்குமுன்னர்ச் சோழநாட்டிலே பூரிசம் என்னும் ஊரிலிருந்தவன் வணிகர் மரபினன். தனது இளமைப் பருவத்திலேயே இருமுதுகுரவரோடு பொருள்வள முழுவதையும் இழந்து வறுமையுற வளர்ந்

தான். பின்பு பெரிது முயன்று சிறிது பொருளடைந்து கனக மதி என்பவளை மணந்து மாமன் உதவியால் இவன் வளமிகப்பெற்ருன். பெற்றும் பெண்மயக்கில் இவன் பெரும்பேதையாயிருந்தானுதலால் பொருளையெல்லாம் அம்மருள்வழியில் தொலைத்தான். செல்வம் இலனுயினும்நல்ல அழகன். இயற்கையி லமைந்திருந்த தன் உருவநலனைக்கண்டு உருகி நின்ற பருவமங்கையர் பலரை இவன்மருவிக்களித்தான். இனிய சொல்லினன்; இரக்க முள்ளவன். யாருக்கும் இரங்கி உபகரிக்கும் இயல்பினன். ஆயினும் அறிவுநலம் சிறிது மில்லாதவன். வீதியில்செல்லும்அழகியமாதர் யாவராயினும் கழிபெருங் காதலோடு தங்கிக் கண்ணிமையாது பார்த்து நிற்பன். இங்ஙனம் கடுங்காமியாய் நின்றஇவன் ஒருமுறை பிங்கலை என்னும் ஓர் பொதுமகளைக்கண்டான். அவள் மிக்க கட்டழகுடையவள்.

"தூயசிலை கரும்புவரும்; தோளிணைகள் கரும்புருவம்;
தேயுமிடை தடித்துவரும்; திரளுமுலை தடித்துவரும்;
காயுமதனெடு பிறந்தாள்; கமடமுது கிருபுறந்தாள்;
சாயலொரு மேனகையாள்; தளவரும்பு மேனகையாள்."

என்றவாறு மேனி மினுக்கோடு அவள் மேவியிருந்தாள். அவளை மேவவிழைந்தவர் பலர் தாம்மேவியிருந்த பொருள் யாவையும் இழந்தார். பேரிழவடைந்தும் மேலும் பெருகி வருதலைநோக்கி நாள் ஒன்றுக்கு நூறுபொன் தந்தாலொழியத் தன்னலம் தருவதில்லை என்றுஅவள் உறுதிசெய்து நின்ருள். அங்ஙனம் நின்றும் ஒருநாளும் வீண்படாமல் அவள்மேம்பட்டு வந்தாள். அவள்பால் வந்த பெருஞ் செல்வரும் குறுநிலமன்னரும் பின்பு வெறுஞ்செல்வராகி வெய்துயிர்த்துநின்ருர்.

"காதல்மதம மீறிவரும் காமுகராம் யானைகளைக்
கோதுமட உகிரங்குசத்தால் குத்தியிதம்—ஓதியந்த

மாரன் அரண்மனைகருள் வைத்தணைத்துச் சேர்ந்துராகசாரக் கரும்பு தனையூட்டி—மூரல்வாய்த்

தம்பற் கவளம் தனைக்கொடுத்துக் கும்பமுலைக்
கம்பத் துடன்பிடித்துக் கட்டினுள்—அம்பரத்தி

மூட்டுவிக்கும் யோக முனிவோரை யும்பொம்மல்
ஆட்டுவிக்கும் தோலுருப்போல் ஆக்கினுர்—தீட்டியவேல்

வண்ணக் குடையரசர் மாநிதியா முந்நீரை
உண்ணக் குறுமுனியை ஒப்பானாள்"

என்றவண்ணம் அவள் ஓங்கியிருந்தாள். எட்டாப் பழத்துக்குக் கொட்டாவி விட்டதுபோல் அக்கட்டழகிபால் இவன் கடுங்காதல் கொண்டான். நூறில் ஒன்று குறைந்தாலும் கிட்டநெருங்கவொட்டாத அவளை வெறுங்கையனாய இவன் முயங்கமுனைந்து பலவகையிலும் மூண்டு முயன்று யாதும் முடியாமையால் முடிவில் மயங்கி நின்றான். அடுத்தபிறவியிலாவது அவளைக்கலந்து மகிழ வேண்டுமென்று நினைந்து கொண்டு ஆழ்ந்திருந்த ஓர் நீர் மடுவில் இவன் வீழ்ந்து மாய்ந்துபோனான். காமப்பித்தேறி இங்ஙனம்வீணாகச்செத்தொழிந்த இவனை உய்த்துணர்வில்லாத பேதையென யாவரும்இகழ்ந்துவைதார். மாயமகளிர்முயக்கு ஆயும்அறிவினரல்லார்க்கு அணங்காம் என்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான். விரிவைப் பவாநிகூடற்புராணத்தில் காண்க.

எனையன்றி மற்றோரைச் சேர்ந்தறியே னென்றகன்னி இருதிங்கட்குள்
தனையன்ஈன்றாள்; புதுமைஎன்?என்றேன் நினைஉம்மை தழுவியிச்சேய்
சினையாய்என் மதியிலிறந்தேன இகத்தும் உனைப்புணரச் செய்தனோன்பால்
முனையல்கும் இருமாதநிறைந்துடனிம் மகவீன்றேன் முதல்வஎன்றாள். (1)

வண்ணமலரமளியின்மேல் இருக்கையிலோர் பரபுருடன் வரவுநோக்கிப்
பண்ணமருமொழியினாள் விளையாடல்போல் தனைப் பதுமத்தாலென்
கண்ணதனைமூடிவிட்டேனென நகைத்தாள்; வேற்றுளார்?கள்ளி! என்றேன்
கண்ணடிபோல் திகழுமென்றன் கபோலமதில் உன்னுருவைக் கண்டா
யென்றாள். (நீதிநூல்.) உம்மை—முற்பிறப்பு (2)

தன்னைத்தவிர வேறொருவரும் கைவைத்தறியாத கன்னியென எண்ணிச்செருக்கி ஓர் பொதுமகளைப் புல்லிக்கிடந்த செல்வக்களியனொருவனை அவள் பலவாறு வஞ்சித்துப் பலரையும் முயங்கிமாயஞ்செய்து வந்ததும், அப்பேயன் அவள்பால் நேயமிக்கிருந்து பின்பு கூசியழிந்ததும் இதில் குறித்திருத்தல்காண்க. இத்தகைய மாயமகளிரை ஆயும் அறிவிலிகளே மேவிஅழிவரென்றதனால் அவரது பாவநிலைபுலனாம்.

மைவிழியார்தம் மனையகன் றொழுகு. (ஔவை.)

நுண்பொருளாளை நுகர்ந்திட்டு வான்பொருள்
நன்குடையானை நயந்தனர் கோடலின்

வம்பிழி மென்முலை வாணெடுங் கண்ணவர்
கொம்பிடை வாழுங் குரங்கும் புரைப. (வளையாபதி.)

செத்தபிண மாறும் சேர்ந்து தழுவுவார்
ஒத்த பொருளொன் றுளதாயின்—வித்தமின்றேல்
காம னெனினுங் கருதார் இவரிடம்போய்
ஏம மடைந்தார் எவர். (தருமதீபிகை.)

பொய்தீண்டி மெய்தீண்டும் பொல்லார்தோள் தீண்டினோர்
கைதீண்டார் தீண்டார் கதி.

மூடமக்களே விலைமகளிரைக் கூடவிழைவர் என்பது இதனாற் கூறப்பட்டது.

---

919. பண்டிழிந்த வாணன் பரத்தையரால் ஆழ்ந்துநோய்
கொண்டழிந்தான் என்னே குமரேசா—கொண்ட
வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்கள் ஆழு மளறு. (௯)

இ—ள்.

குமரேசா! அறிவில்லாத வாணன் ஏன் விலைமகளிரையே விழைந்து திரிந்து விளிந்தான்? எனின், வரைவு இலா மாண் இழையார் மென்தோள் புரைஇலாப் பூரியர்கள் ஆழும் அளறு என்க.

இது, நீசமக்களே வேசையரை நினைந்து நிற்பர் என்கின்றது.

மாண் இழை என்றது சிறந்த அணிகலன்களை. மணிகள் அழுத்தி எழில்பெற இழைக்கப் படுதலின் ஆபரணங்கள் இழை என நின்றன. இழைத்தல் = செய்தல்.

உயர்ந்தார் இழிந்தார் என யாதும் பாராது பொருள் கொடுப்பார் யாவராயினும் வரன்முறையின்றி அவரைப் புணரும் புன்மையும், அழகிய அணிகளைப் புனைந்து மயல்விளைக்கும் தன்மையும் உடையராதலால் கணிகையரை வரைவிலா மாணிழையார் என்றார்.

தந்தையும் மைந்தனுமாகிய இருவரையும் ஒருவரை ஒருவர் அறியாவகை தன்பால் வரும்வகை செய்து ஓர் கணிகை மருவி வந்தாள். அக்கிழவன் ஒருநாள் அவ்வில்லுட் புகுங்கால் அவள் அங்கு ஒரு வாலிபனோடு கொஞ்சி உரையாடிக் கொண்டிருந்தாள். போனவன்

நேரேபுகாமல் அயலே விலகி மறைந்துகொண்டு நிகழ்வதை நெஞ்சூன்றி ஓர்ந்தான். உள்ளிருப்பவன் தன் மகன் என்று உணர்ந்து வருந்தினான். அவ்வமயம் அச்சிறுவனை நிறையப்பொருள்கொண்டு வரும்படி அவள் தூண்ட அதற்கவன் என்தகப்பன் இறந்தபிற்பாடு உள்ளபொருளெல்லாம் உனக்குத்தானென்றான். அப்படியானால் இன்றிரவு உறங்கும்போது அவன்தலையில் பெரிய கல்லைத் தூக்கிப் போட்டுக் கொன்றுவிட்டுவா பின்புதான் இன்பந்தருவேன் என அவள் உரைத்தாள். அதனைக்கேட்டு அயல்நின்ற அவன் உள்ளநடுங்கி "அந்தோ! இந்தக்கொலைகாரியையும நம்பிக் கூடியிருந்தேனே" என்று வெம்பிப்போனான். அவன் அன்று குலைந்து கூறியபடியை அடியில் காண்க.

"தையல்இல்லம் புகும்போதென் சுதன்குரலைக் கேட்டொதுகிநித் தாழ்வாரத்தில்
பையஒதுநிச் செவிகொடுத்தேன்; பையனைப்பார்த்தக்கோதை பணமீயென்றாள்;
ஐயனிறந்திடினெல்லா முனதென்றான்; அவன்தூங்கும் அமயம்பார்த்தோர்
சையமெடுத் தவன்தலைமேல்போட்டுவா போடுமுன் நான் தழுவேனென்றாள்."

இதனால் வேசையரது வரைவின்மையும், வன்கண்மையும், பொருளையே கருதிநிற்கும் புன்மையும் இனிதுணரலாகும்.

புரை என்னுஞ்சொல் உயர்ச்சி, மேன்மை, உவமை முதலியவற்றை உணர்த்திவரும். "புரைத்தோல் வரைப்பு" என மலைபடுகடாத்திலும, "நின்னைப் புரைநினைப்பின் நீயல துணர்தியோ" எனப்பரிபாடலிலும் இஃதுணர்த்திநிற்றல் காண்க.

உவமை குற்றம் உயர்வே யுட்டொளைப்
பொருளென் றின்னவை புரை எனலாகும. (பிங்கலந்தை)

உரு உட்காகும; புரை உயர்வாகும். (தொல்காப்பியம்)

பூரியர் = கீழ்மக்கள். புரைஇலாப்பூரியர் என்றது உயர்வுக்குரிய அறிவுநலம் யாதுமில்லாத நீசர்என்றவாறு. அளறு = நரகம். மேல், பூகமில்லாத மூகர்களே வேசையர்பால் மோகங்கொள்வர் என்றார்; இதில், நீசர்களே அவரை நேசித்தழுந்துவர் என்கின்றார்.

வரம்பில்லாமல் எவரையும் முயங்கும் விலைமகளிரது மெல்லிய தோள் அறிவில்லாத கீழ்மக்கள் அழுந்தும் நரகம் என்பதாம்.

உயர்வுதாழ்வுமுதலிய இதரயங்களைச் சிறிதும்பாராமல் பொருளொன்றையே கருதிநின்று அதனைக் கொடுப்பார்க்கெல்லாம் தம் போகத்தைப் பொருந்தக்கொடுக்கும் இழிநிலையாளர் என விலைமகளிரை உயர்ந்தார் உணர்ந்து தெளிவராதலால் அவர்பால் நெருங்கார்; உணர்வில்லாத இழிந்தமக்களே அவரை விழைந்து விழுந்து மீளாததுன்பத்தில் அழுந்துவர் என்றவாறு.

ஒருமுறையையும் கருதாமல் வருபவர்கெல்லாம் உரிமையாய் நிற்கும் பொதுமகளிரைத் தோய்ந்தவர் பழியும் பாவமுமடைந்து இம்மையிலேயே நரகதுன்பத்தை நுகர்வர் என்பதாம்.

மிக்கசெல்வமுடைய ஒருவன் ஓர் பொதுமகளைத் தனக்குத் தனியுரிமையாகக் கருதி வைத்திருந்தான். முழு ஒப்பந்தமாக அம் முழுமகன் நினைத்திருந்தாலும் அவள் பலரையும் தழுவிப்பொருள்தொகுத்து வந்தாள். ஒருநாளிரவு அவள் அடிக்கடி வெளியே போய்வந்தாள். அவளது போக்குவரவுகளில் ஐயமுற்று அப்பொழுது அவன் மறைந்துநோக்கினன். அவ்வமயம் பின்புறத்தில் ஓர் இளைஞனோடு அவள் மருவியிருந்தாள். அவன் சினந்துபாய்ந்து அச்சிறுவனை அடித்தான். உடனே அவன் இறந்து வீழ்ந்தான். வீழ்ந்தவனை உற்றுநோக்கினன்; அவன் தன் அருமை மகனாயிருப்பக் கண்டான்; ஐயகோ! என்று அலறியேங்கி அழுது சோர்ந்தான். அதனை இதனடியில் காண்க.

“இரவினிலென்னுடன் துயின்றகோதை, யடிக்கடிவெளியே
யேகி மீண்டாள்;
கரவறிவான் பின்தொடர்ந்தேன்; கொல்லையிலோர் காளையொடுங்
கலந்து நின்றாள்;
அரவமெனச்சீறி அவ்வாண் மேல்வீழ்ந்து தாக்கவுயிர்
அற்றுவீழ்ந்த
வுருவையுற்றுப் பார்க்களன்றன் ஒருசேயென்றறிந்துநெஞ்ச
முருகினேனே.”

வரன்முறையின்றி இங்ஙனம் மாயம்புரிந்து நிற்கும்வேசையர்பால் அசையுறுவார் நீசமுற்று நெடும்பழி புரிந்து நாசமடைவார்

என்பதைக் குறிப்பா லிந்நுணர்த்தி நிற்றல் காண்க.

"புல்லுவிற்றுங் கீரைவிற்றும் பொன்கொடுப்பார்காணமக்குக்
கொல்லிமலைப் பாவாய் குலதெய்வம்—பல்விழுந்த
கூனக் கிழவன் கொடுக்கும் பணமதிலே
நானக்குழலே நரையுண்டோ—மானமின்றி
அப்பன் வருவான் அதன்பின் மகன்வருவான்
தப்புமுறை என்றுநீ தள்ளாதே."

எனத்தழுவிநிற்கும் இழிநிலையாளரான இப் பொல்லாப் பதகிகளை உயர்நலமொன்றுமில்லாத கல்லாக்கயவரே கலந்திழிந்து கழிவர் என்பார் "புரைஇலாப் பூரியாகள் ஆழும் அளறு" என்றார்.

வரைவிலார் தோளை அளறுஎன்றது அதனைத் தழுவினவர் கழிபெருந்துன்பங்களை யடைந்து என்றும் மீளாமல் அழிவுறுதல் கருதி.

உள்ளபொரு ளெல்லாம ஒருங்கு தந்தார்க்குத்
தள்ளரும் பிணியும் எள்ளரு கவலையும
பொய்யும் களவும் புலையும் கொலையும்
பழியும் சிறுமையும் பகையும் வறுமையும்
ஒழிவற உதவி அழிதுயர் செய்யும்

இழிநிலையாளராதலால் விலைமகளிரை நரகமெனக் குறித்துஅவரை அணுகாதகலுமாறு உறுதிபெற இஃதுணர்த்தியதென்க.

உணர்வில்லாத புன்மக்களே வேசையரை உவந்துநிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வாணன்பால் உணரப்படும.

## கதை.

வாணன் என்பவன் இற்றைக்கு ஆயிர ஆண்டுகட்குமுன்னர் மணப்பாரை என்னும் ஊரிலிருந்து அரசுபுரிந்த குறுநிலமன்னன். இவன்கடுங்காலன் என எவரும் நடுங்கி அயரும்படி நின்ற கொடுங்கோலன். வாளொடு நின்று காட்டில் வழிப்பறிபறிக்கும் வன்கண்ணர்போல் கோளொடு நின்று நாட்டில் இவன் கேடுகள்பல செய்துவந்தான். இவனதுஆட்சிக்குள் இருந்தகுடிகள மானமும் பொருளும் இழந்து நாளும் மறுகியிருந்தார். கல்லாக்கயவர் பலரைத்துணைக்கொண்டு எல்லாத்துயரும்செய்து நின்ற இவன் காமநு

கர்ச்சியில் கண்ணூன்றி யிருந்தானாதலால் தான் தீயவழியிலீட்டிய பொருள்களை மாய மகளிருக் கீத்தந்து மருவி மகிழ்ந்தான். புதிது புதிதாக வரவழைத்து அழகியமாதர் பலரைத் தழுவிக்களித்தான். மேலும் எழிலுடையாரைநாடி அயலிடங்கட்குஞ் சென்று இளமங்கையர்பால் இன்னலந்தோய்ந்து முடிவில்வந்து மதுரையை அடைந்தான். "அந்நகர் தனிலிருந்தே அங்குள விலைமின்னார்கள்—புன்னிலைப்போகந் துய்த்தான்; ஆலயஞ்சென்று போற்றான்—தென்னவன் கூடல்தன்னில் வேட்கையாச் சின்னாள் வைகி—நன்னகர் கடந்து தென்பால் நடந்தனன் கொலைக்கு நாதன்" இங்ஙனம் கடுங்காமியாய் நுகர்ந்து திரிந்தஇவன் புதுவையம்பதியில் அழகிய பொதுமகளிர் பலருளரென்பதைக் கேள்வியுற்று அங்குவந்து தங்கியிருந்தான். இவன் வரவினையறிந்து அங்கிருந்த வரவின்மகளிர் யாவரும் மிகமகிழ்ந்தார். ஒவ்வொருவரிடமும் போய் உறுசலவையார்த்து இவன் உளங்களி கூர்ந்தான இரவெனப் பகலெனயாதும்அறியாது வரன்முறையின்றி அவரைப் புடைசூழ வைத்துக்கொண்டு கழிபெருங் காதலோடு இவன் இடையமர்ந்திருந்து கொடிமொழி பகர்ந்து நவமுறநாளும் நகைசெய்து கழித்தான்.

"இன்னணம் வியந்து வாணன் விலைமின்னார்க்கினியவார்த்தை
பன்னினன்; அவருகந்து துகளறு பாடலாடல்
நன்னலம் பெற இயற்றி நடஅபி நயமுமாற்றச
சொன்னமும் பணியுந்தூசும் அளவில தொகைகள்நல்கி. (1)

கலவையின் சாந்தம் வீசுமான்மத நறுநகத்தூரி
பலமலர்ச் சுகந்த மற்றும் வேண்டுவ பரிவினீந்தே
அலகில் நட்பாளரியாரும் அவ்வவர் வேட்டமின்னார்
நலனுறத்தானும் நல்லார் நசையுறும் இன்பத் தாழ்ந்தான். (2)

அல்லொடு பகலிவ்வண்ணம் அனுதினம் இடையறாது
வல்லிநுண்ணிடை மின்னார்கள் அளவிலர் வந்துசூழப்
பல்லியல் சூதினோடு மதுரவாய்ப்பாடல் ஆடல்
புல்லிய சரசவார்த்தை இவைகளால் போதுபோக்கி. (3)

காட்டெறி நிலவுபோலும் கானல்பெய் மழையேபோலும்
நாட்டினிற் றீங்கினீட்டு நசையுறு பொருளையெல்லாம்
கோட்டிளங் கொங்கையார்க்கே குவைகுவையாக வீந்தே
யீட்டினன் மறுமையோடும் இம்மையு மற்ற பாவம்." (4)
(புதுவைப் புராணம்.)

கழிபெருங்காமியாய் வரைவின்மகளிரோடு இவ்வாறு மருவி யிருந்தஇவன் இறுதியில் இறைவனருளால் தலைவெடித் திறந்தான் அதன்பின் அரசுங்குடியும் அடியோடழிந்தன. பழியும்பாவமும் வழிவழி நின்றன. நெறியின்றி வேசையரைத்தோய்ந்து நிலைகுலை ந்தழிந்த இவனை எல்லாரும் நீசனென்றிகழ்ந்தார். வரைவிலாமா ணிழையார் மென்தோள், புரையிலாப் பூரியர்கள் ஆழும்அளறு என்பதைஉலகம்காண இவன்உணர்த்திநின்றான். விரிவைப் புது வைப்புராணத்தில் காண்க.

சுவையுணவு தானிருக்க மலந்தேடியோடுகின்ற சுணங்கன்போலும்
குவையதனிற்கிடந்து நல்விடநீங்கித்திரிகின்ற கோகு போலும்
நவைதீர்தண் ணதிநீ ரருந்தாது அங்கணநீரை நாடல் போலும்
சிவையனையகாந்தையரை வெறுத்தசடர் வேசையரைச்சேர்வர்மாதோ.
(நீதிநூல்.)

பொதுமாதர் இல்லுட் புகுவார் புகுந்தார்
முதுமா நரகுள் முனைந்து.

இழிந்தமக்களே விலைமகளிரை விழைந்தழிவர் என்பது இத னால் கூறப்பட்டது.

---

920. அன்று கணிகையரை ஆதரித்தான் னதர்மன்
குன்றினன் செல்வம் குமரேசா—என்றும்
இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு. (ம)

இ—ள்.

**குமரேசா!** பொதுமகளிரை விழைந்து நின்றஅதாமன் ஏன்பொருள்முழுவதையும் இழந்து இழிந்தான்? எனின், இரும னப்பெண்டிரும் கள்ளும் கவறும திருநீக்கப் பட்டார்தொடர்பு என்க.

இது, விலைமகளிரை விரும்பினால் மலர்மகள் நீங்கிவிடும் என் கின்றது.

இருமனப் பெண்டிர் = கவர்பட்ட மனமுடையமகளிர். ஒரு மனமாக எவரையும் உவந்துமுயங்காமல் உடலளவில் தழுவுதலும், உள்ளத்தில்தழுவாமையும் ஆகியஇருவகைநிலைமைகளையும் ஏககா

லத்திலுடைய இழிநெஞ்சினராதலால் பொதுமகளிரை இருமனப் பெண்டிர் என்றார்.

கவறு=சூதாடுங்கருவி. தாயக்கட்டைஎன்ப. இது, ஆகுபெய ராய்ச் சூதினையுணர்த்தி நின்றது.

திரு—இலக்குமி; செல்வத்தின் அதிதேவதை என்க.

மேல், இழிந்தமக்களே வேசையரை விழைந்து நிற்பரென் றார்; இதில், அவரைத்தீண்டினுரைத் திருமகள் தீண்டாள் என்கி ன்றார்.

கணிகையரும் கள்ளும் சூதும் ஆகிய இம்மூன்றும் திருமக ளால் வெறுத்து நீக்கப்பட்டார்க்கு உறவாம் என்பதாம்.

விலைமகளை விழைந்துநின்றவன் வேறுயாதொரு காரியமும் பாராமல் அவளது போகக்களிப்பிலேயே மூழ்கிக்கிடப்பன்; கிட க்கவே கரடி புற்றில் வாய்வைத்ததுபோலவும், பூனை பாலில் வாய் வைத்ததுபோலவும் அவனுடைய பொருள் முழுவதையும் அவள் உறிஞ்சி விடுவள்; விடவே வறுமையும் பழியுமடைந்து இருமையு மிழப்பனுதலால் திருநீக்கப்படுதற்கு அவன் உரியவனுயினன்.

அருள்நிறை சிறிதுமில்லார் அளவிடலரிய நெஞ்சர்
பொருள்நிறை யளவிற்கேற்பப் போகம்விற்றுண்ணும் பொல்லா
மருளுடை வஞ்சர்தம்மை மருவினர் திருவழித்தே
இருமையும்சிறுமை செய்வர் இழிவிலை மகளிரம்மா. என்பதும்

ஈண்டெண்ணத்தக்கது. வேசையர்பால் ஆசைகொள்பவர் அக்கங் கெட்ட மூதேவிகளேயாவர் என்பார் இருமனப்பெண்டிர் திருநீக்க ப்பட்டார்தொடர்பு என்றார். தொடர்பு=நட்பு.

“உண்ணுமல் இரவலர்க்குமீயாமல் பூமிதனிலொளித்த பொன்னைக்
கண்ணுளன் தனக்கீயவேண்டியதைத் தோண்டுகின்ற காலந்தன்னில்
மண்ணுளனைநோக்கி எனக்கீந்த பொருளையினி வாங்காநின்ற
பெண்ணுளனைபுன்வாய் கொட்டுவளென்றே நகைத்துப்பேசினனே.”

யாருக்கும் ஒன்றுமுதவாதுநின்ற உலோபி ஒருவன் ஒர் வே சைபால் ஆசைகொண்டு அவளுக்குக்கொடுக்கும் பொருட்டுத்தான் புதைத்துவைத்திருந்த பொருளைத் தோண்டியெடுக்குங்கால் அவ ...ந்துப் பூமிதேவி நகைத்து “ஏ! மதிகெட்ட மடையா! ...ில் அவள் மண்ணைப்போட்டு விடுவாள் போ” என்று

இதில் உரைத்திருத்தல் காண்க. பொருட்பெண்டிரைத் தழுவ விரும்பினால் விளையும் இழவு இதனால் இனிதுணரலாகும்.

பிறகணிகையர் போலாது உள்ளன்போடு உவந்திருந்த மாதவியை மருவியதால் கோவலனே திருவிழந்து தீர்ந்தானென்றால் பொருளையே கருதி நிற்கும பாவகாரிகளாகிய விலைமகளிரைத் தழுவினார் திருமகளின் அருளற்று இருமையும்இழப்பர்என்பதையீண்டு உணர்த்தவும் வேண்டுமோ?

வேசையர் உள்ளன்பில்லாத கள்ளநெஞ்சினர்; அவர்சொல்லை நம்பலாகாது; எவரையும அவா மனமபொருந்தி முயஙகாா; அருள் அறிவுசீலமுடையமேலோர்அவரையாதும்அணுகார்;நிறைபுணர்வில்லாத நீசமக்களே அவர்பால் ஆசைபுற்றழிவர்; என இதுவரை உரைத்துவந்து அவரைமருவினவர் திருவிலிகளாய்இருமையுமிழந்து இழிந்துழல்வரென உறுதிபெற அறுதியிட்டு இறுதியாக இதில் உணர்த்தியருளினர்.

வரைவின்மகளிரைப் பற்றிய இவ்வதிகாரத்தில் கள்ளையும் சூதையும் உடன்கூறியது அவர் போலவே தம்மைத்தொட்டாரை ஒட்டக்கெடுக்கும் அவற்றின் உறவுநோக்கி என்க. வருகின்ற அதிகாரங்களுக்கும் இது தோற்றுவாய் செய்த படியாம்.

புலைமயக்கம் வேண்டிப் பொருட்பெண்டிர்த் தோய்தல்
கலைமயககம் கள்ளுண்டு வாழ்தல்—சொலைமுனிந்து
பொய்மயக்கம் சூதின்கட் டஙகல் இவைமூன்றும்
நன்மையி லாளர் தொழில். (திரிகடுகம்.)

அடிகள் வைப்பு முறையை இஃது அடிபொற்றி வந்திருத்தல் காண்க. கரவுநிலை பெரிதும் அறியாத இளமங்கையான கணிகையொருத்தி முதன்முறை தன்னை முயங்கினவன் பெரும்பொருள் கொடுத்துச்சென்றதை நினைந்து வியந்தாள். கொழுத்த செல்வர் பலர் அடுத்தடுத்துவந்து எழில்நலங்கனித்த அவள்பால் இன்பம் நுகர்ந்து அன்புசெய்துபேணிச் செம்பொன் தந்துபோவதைக் குறித்துச் சிந்தித்துநின்று ஒருநாள் தன்னினத்தில் கைதேர்ந்து நின்ற சௌந்தரவல்லி என்பவளைச் சந்தித்து “என்னையே புணருவோர்கள் எனக்குமோர் இன்பநல்கிப்—பொன்னையுங்கொடுத்துப் பாதப்போதினில் வீழ்வதேனோ?” என்று விநயமாக வினவினாள்.

அதற்கவள் புன்னகை செய்து நன்னயமுற நன்குசொல்லினள். அடியில்வருதல் காண்க.

"பொம்மெனப் பணைத்துவிம்மிப் போர்மதன் வணங்கிநிற்கும்
கொம்மைசேர் முலையினளே! கூறுவதொன்று கேளாய்!
செம்மையாய் அறஞ்செயாதார் செழும்பொருள் சிதையவேண்டி
நம்மையும் கள்ளும் சூதும் நான்முகன் படைத்தவாறே."

இருமனப்பெண்டிரோடு இணைத்துச் சொல்லியுள்ள கள்ளும் கவறும் என்னும் இரண்டையும் தம்முடன் கண்டு அவள் குறித்துக்கொண்டிருத்தல்காண்க. பரத்தையரை விழைவோர் பாவிகளே யாவர் என இஃதுணர்த்தி நிற்றலையூன்றிப் பார்க்க. வேசையர்பால் விருப்பங்கொண்டவர் மூதேவிக்கு இருப்பாவர் என்பது குறிப்பு.

செவ்வையுறு பொருள்கவர்ந்த பின்னரெனைக் கைவிட்ட தேனைநோக்கிக்
கொவ்வைவாய் மயிலேஇச் சினமேதென்றேன வனசக்கோயில்மேவும்
அவ்வையைமுன் சேர்ந்தபிழை பொறுத்தவளை யென்னகத்துக்கழைததேன்
அன்னாள், தவ்வையையும் மருவினீர் இனிப்பொறேன் என்றாடிச் சலங்
கொண்டாளே. (நீதிநூல்.)

ஓர் பொதுமகளைத் தோய்ந்து நின்றவன் பின்பு திருமகள் அருளற்றுப் பொருள்முழுதும்போய் வறுமைமிக்கு மூதேவிக்கிருப்பிடமாயதை அவள்வாய்மொழியில் வைத்துமிகவிசித்திரமாக இஃது உணர்த்திநிற்கும அழகை யூன்றிப் பார்க்க.

விலைமாதரை விழைந்தால் உள்ளபொருளெல்லாம் இழந்து, அல்லல் பல அடைந்து எள்ளல்மிக்கூர்ந்து இருமையிலும் இழிவுற நேருமாதலால் அவ்விழைவினைக் கனவிலும் கொள்ளலாகாது என்பது கருத்து.

பொதுமகளிரை விழைந்து நின்றவர் வறுமையும்பழியுமடைந்து வருந்தியழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அதர்மன்பால் உணரப்படும்.

## கதை.

அதர்மன் என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்குமுன்னர் நருமதை நதியினருகேயிருந்த வேதபுரியென்னும் நகரில்இருந்தவன். வேதியர் மரபினன். இவனுடைய தந்தைபெயர் சிரியம்பகன். அவன் மிக்கசெல்வத்தோடு தக்க கல்வியுமுடையவன். தன்முதுமைப்பருவத்தில் பிறந்த ஒருமகனுதால் இவனை மிக

அருமையாகவைத்து அவன உவந்துபேணிவந்தான். இவன்பருவ மெய்தினன். தன்மரபுநிலை திரிந்து இழிகுணமுடையனாய்ச் சிறியனபலசெய்து திமிர்ந்து திரிந்தான். காமங்கன்றி மாமதங்கொண்டு வரன்முறையின்றி மங்கையர்பலரை மருவிக்களித்தான். நல்ல மரத்தில் புல்லுருவி தோன்றியதுபோல் அப்புனிதவேதியனபால் இப்புன்மகன் பிறந்தானே! என்று ஊரவரனைவரும உள்ளங்கொதித்தார.

> "அந்தமகன் செயல்நோக்கி அதர்மனெனப் பெயரிட்டார்
> சநதமிகும் அந்நகரார்; அப்பெயர்தாங்கிய கொடியோன்
> கந்தடுவெங களியானை கடங்கொண்டு திரிவதென
> எந்தஇடனுந் திரிவான்; எந்தவிடனும் பொருவான்."
>
> (திருப்பெருந்துறைப்புராணம்.)

இந்தவண்ணம் அக்காலத்திருந்தவரெல்லாரும் இகழ்ந்து பழிப்ப இவன இழிந்து திரிந்தான், கணிகையரில்லமே காணியாக்கொண்டான், கையிலிருந்த பொருள்களையெல்லாம் அப்பொய்மை முயக்கிகள்பால் பொருந்தக்கொடுத்தான். தன்னையொத்த தூர்த்தர்களோடு சேர்ந்து எப்பொழுதும காமக்களிப்பான வார்த்தைகளாடி வன்பொழுது போக்கினன். இப்போக்காளன் போக்குவாவு செய்திருந்த ஓர் பொதுமகள்பால் போய்வந்த பலரும ஒருநாள் ஓரிடத்தில் ஒருங்கு கூடினார. வறுமையும் பிணியும் மருவியிருந்தும் மனந்தளராமல் ஒருவரோடு ஒருவர் உவந்துரையாடி உளங்களிகூர்ந்தார். அவர் கூர்ந்தபடியை அடியில்காண்க.

"பொருளொன்று நாம்தந்த திவட்கு அதற்கு இல்லாமை பிணி பொய்புரட்டு—மருளொன்றுங காமம் கொலைகளவு சூதுவசை மரணத்தோடும் —இருளொன்று நரகமஇன்னும் இவள்பால்நாம் கொண்டதற்கோர இலக்கமுண்டோ—தெருளொன்று பாரில்நம்போல் சமத்தாக்கொண்டு எவர் வணிகம் செய்யவல்லார்."

தாமகொடுத்துக்கொண்ட கொள்முதலைக்குறித்து இன்னவகையில் பன்னிப்பாடி இழிந்து செருக்கினர். இவ்வாறு இழிநிலையாளரோடு கலந்து காமநுகர்ச்சியில் தன் பொருள்முழுவதையும இழந்து அழிதுயரடைந்து அலமந்துழன்று அருளற்ற மூதேவியென யாவரும் இகழப் பாவமும் பழியும் பற்றி இவன் பாழாய்மாண்

டான். இருமனப்பெண்டிரைத் தீண்டினூர் திருநீக்கப்பட்டுத் தீதடைந்து மாய்வர் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

பொய்யேந்து மனவேசைக் காத்திருடிக்கையிரண்டும் போக்கிக்கொண்டேம்
மையேந்து விழிமனையாட் கிடையேந்துந் துகிலின்றி மானந்தன்னைக்
கையேந்தும்; இரக்கவோ கையிலளானுள்; எக்கையை யேந்திச்
செய்யேந்து முலகத்தில் பலியேந்தியுண்ணுவம்யாஞ் செப்பாய்நெஞ்சே.
(நீதிநூல்.)

விலைமகளை முயங்கிநின்ற ஒருவன் பொருள்முழுதும் இழந்து பின்பு அவள்பொருட்டுக் களவுசெய்யப்போய்க் கையையும்போக்கி இறுதியில் உடுக்கவோர் உடையுமின்றி மனைவியும் தானும் மறுகி யலைந்த கொடுமையை நினைந்து மனமுடைந்து வயிறெரிந்து அவன் உருகி யுரைத்திருத்தலை இதில் ஊன்றி யுணர்க.

நெஞ்சினும நினைப்பரோ நினைந்துளார் தமை
எஞ்சிய துயரிடை யீண்டையுய்த்து மேல்
விஞ்சிய பவக்கடல் வீழ்த்தும் ஆதலால்
நஞ்சினுந் தீயது நலமில் காமமே. (கந்த புராணம்.)

பொருளழியும் பூண்ட புகழழியும் போற்றும்
அருளழியும் அல்லல் அடையும—மருளடைந்த
வேசையரைச் சேர விழையின் வினையுமே
நீசமெலாம் ஒன்றாய் நிமிர்ந்து. (தருமதீபிகை.)

மெய்விசு நாற்றமெல்லா மிக்கமஞ்ச ளால்மறைத்துப்
பொய்விசும் வாயார் புலேயொழிவ தெந்நாளோ.
கண்டுமொழி பேசிமனங் கண்டுகொண்டு கைவிலையாக்
கொண்டுவிடு மானூர்பொய்க் கூத்தொழிவ தெந்நாளோ.
(தாயுமானவர்.)

எத்தனைபேர் நட்டகுழி எத்தனைபேர் தொட்ட முலை
எத்தனைபேர் பற்றி இழுத்த இதழ்—நித்தநித்தம்
பொய்யடா பேசும் புவியின்மட மாதரைவிட்
டுய்யடா வுய்யடா வுய். (பட்டினத்தார்.)

வேசையரைச் சேர விழைதல் விளியாத
நீசநர கேறல் நினை.

விலைமகளிரை விழைந்தால் திருவிழந்து கெடுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

இதனடியில் வரும்பெயர்கள் வரைவின்மகளிரைக் குறித்து முறையே இவ்வதிகாரத்தில வந்துள்ளன.

1. அன்பின்விழையார் பொருள்விழையும் ஆய்தொடியார்.
2 பயன்தூக்கிப் பண்புரைக்கும பண்பின் மகளிர்.
3. பொருட்பெண்டிர்.
4. பொருட்பொருளார்.
5. பொதுநலத்தார்.
6. தகைசெருக்கிப் புன்னலம்பாரிபபார்.
7. பிறநெஞ்சிற்பேணிப புணாபவா.
8. மாயமகளிர்.
9. வரைவிலாமாணிழையார்.
10. இருமனப்பெண்டிர்.

விலைமகள், கணிகை, வேசி, பரத்தை என எளிதில்வழ ங்கும்படி சுருக்கியிடாமல் இங்ஙனம்நெடும்பெயரிட்டு அக்கொடும் பாவிகளின் கடுந்துயர்நிலையைக் கருதித் தெளிந்து உறுதிகொள்ளு மாறு அடிகள் உணர்த்தியிருக்கும் அழகை யூன்றி உணர்க.

## இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

பொருளின் பொருட்டன்றி எவரையும் விலைமகளிர் அன் போடு விரும்பார். அவர்சொல்லைநம்பி நண்பு கொள்ளலாகாது. மனம் பொருந்தாமலே பிணந் தழுவுவதுபோல் பணந்தந்தவனை அவர் முயங்கிவிடுவா. அருளுடையபெரியோர் அவரைச் சிறிதும் அணுகார். அறிவுடையார் அவரை யாண்டும் தீண்டார். ஒழு க்கமுடையவர் அவரது முகத்தைக்கூடப்பாரார். முழுமூடர்களே அவரைத்தழுவ விழைவார். பகுத்தறிவில்லாத புன்மக்களே அவ ரைப்புல்லித்திரிவார். அவரது போகம் நரகமேயாகும். அவரை விரும்பினவரைத் திருமகள் வெறுத்து விடுவாள் என்பதாம்.

௯௨-வது வரைவின்மகளிர் முற்றிற்று.

# 93-ம் அதிகாரம் கள்ளுண்ணாமை.

அஃதாவது கள்ளினை யுண்ணாதிருக்குந் தன்மை. வறுமையும் பழியும்வளர்த்து இருமையுங்கெடுக்கும் இயல்பினதாதலால்இதனை உண்ணலாகாதென்க. பொருள் புகழ் முதலிய நலங்கள்யாவையும் ஒருங்கே கெடுத்துப் பெருங்கேடு விளைக்கும் வேசையர்போல இதுவும் நீசமுடையதாதலின் அவரோடு அடுத்து எண்ணநின்றது. "இருமனப் பெண்டிருங் கள்ளும்" என முன் அதிகாரத்தின் இறுதியில் உரைசெய்தபடியே முறைசெய்து அதன்பின் இது வைக்கப்பட்டது. பொருந்தலால் வரும் பேரிழிவினை அதில்உணர்த்தினார்; அருந்தலால் வரும் சீரழிவினை இதில் உணர்த்துகின்றார் என்க.

921. அன்றுகள் ளார்வமுற்ற அங்கி வருணனொளி
குன்றினன் என்னே குமரேசா—நின்றெவரும்
உட்கப் படாஅர் ஒளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார். (க)

இ—ள்.

குமரேசா! கள்ளை விரும்பி நின்ற அங்கிவருணன் ஏன் உள்ள புகழெல்லாம் இழந்து உறுதிகுன்றி யிருந்தான்? எனின், கள் காதல்கொண்டு ஒழுகுவார் எஞ்ஞான்றும் உட்கப்படார்; ஒளி யிழப்பர் என்க.

இது, கள்ளருந்தினால் புகழழியும் என்கின்றது.

உட்க = அஞ்ச. உட்கு—அச்சம். "பிறந்தஞான்றே நின்னை உட்கி எனப்" பரிபாடலிலும், "முருகியநிறத்துமுரணினர் உட்க" எனத்திருமுருகாற்றுப் படையிலும, "உடலுநர் உட்க" எனப் புறத்திலும், "ஒடிவறுபேரொளி உட்கத்தக்கதே" எனச் சிந்தாமணியிலும் இது நின்றுணர்த்துதல் காண்க.

ஒளி—புகழ். அளபெடை இசைநிறைக்க வந்தது.

கள்ளின்மேல் காதல் கொண்டொழுகுவார் எக்காலத்தும்பிறரால் அஞ்சப்படார்; எய்திநின்ற புகழையும் இழப்பர் என்பதாம்.

கள்ளுண்பவர் அறிவிலராவராதலால் அவர் எவ்வளவு வலியுயர்வுகளையுடைய ராயினும் பகைவர் என்றும் அவருக்கு அஞ்சார் என்பார் கட்காதல் கொண்டொழுகுவார் உட்கப்படார் என்றார்.

உட்கப்படார்—பிறர் அஞ்சும்படியான நிலேயில் அவர் அமை ந்திரார் என்றவாறு. எல்லாராலும் அவமதிக்கப்பட்டு இழிவுறு வர் என்பதாம.

படைவலி, பொருள்வலி, உடல்வலிமுதலியன ஒருவனுக்கு மிக அமைந்திருந்தாலும் அவன் கள்ளுண்பானுயின் இந்தக்குடி காரமட்டையால் என்னசெய்யமுடியும் என்று யாரும் எளிதாக எள்ளி நிறபாராதலால் பிறர் அஞசத்தக்க தன்மை அவன்பால்இல் லையாம் எனக.

புகழைக் கெடுத்துப பழியை விளைத்து இகழ்வு மீப்படுத்து இழிவுறுத்து மாதலால் கள்ளினையாதும் என்றும உள்ளலாகா தென்பது கருத்து.

நிறைந்தபடையும் சிறந்தவீரமும் ஓர் அரசன்உடையனுயிரு ந்தாலும் அவன் குடியனுயிருப்பின் புகழும் வெற்றியும் பொருந் தான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அங்கி வருணன்பால் உணரப்படும்.

**கதை.**

அங்கிவருணன் என்பவன் சூரியகுலத்து மன்னனுகிய சுதர் சனனுடைய அருமைத்திருமகன். இவன் அழகிலும் வலியிலும் கலேயிலும சிறந்தவன். யாவர்மாட்டும பேரன்புடையவன; இன் சொல்லாளன்; என்றும் எவர்க்கும் இதஞ்செய்யு மியல்பினன். பருவமெய்தியவுடனே அரிதமனுடைய அருமைத் திருமகளாகிய சுதமதி என்பவளே மணந்து இவன அரசுரிமையை யடைந்தான். தந்தையிருக்கும் வரையும மிகச் சீலமுடையனு யிருந்த இவன் அவன் காலமானபின்னாக கோலமகுலேந்தான். அறிவுநிலேதிரிந்து உறுநிலங்களேமறந்து இரவுபகலறியாமல் இன்பநுகர்ச்சியில் இழி ந்திருந்தான். தன்மனேவி பேரழகியா யிருந்தும் அவளளவிலமை யாமல் வேறுபலமாதரையும் இவன்விழைந்து நுகர்ந்தான். காமச் சுவையில் இங்ஙனம் மிகுந்துநின்ற இவன் பின்பு கணிகையர் பல ரையும் கலந்து களித்து அவர்தம ஆடல் பாடல்களிலேயே எப் பொழுதும் அழுந்தியிருநதானுதலால் அரசுமுறையை அறவே துற ந்தான். பின்புகறவும் அருந்தினுன். விடரும் தூர்த்தரும் நடரு மாகிய இழிநிலேயாளர் பலரையும் புடைசூழ வைத்துநாளுமகளி

மயக்குடையனாய் இவன்காலங்கழித்து வந்தான். இவனது நிலையினை யறிந்து குறுநிலமன்னரும் பெருநகை செய்தார். தாம்செலுத்திவந்த திறைகளையும் முறைப்படி செலுத்தாதொழிந்தார். அரசழிந்து போம்என இரங்கிப்பலவகையிலும் உணர்ச்சிவரஅமைச்சர் உறுத்தியுரைத்தும் இவன் உணராதே தூங்கினான்.

"உள்ளுண்மை யோரார்; உணரார் பசுபாசம்;
வள்ளன்மை நாதன் அருளினின் வாழ்வுறார்;
தெள்ளுண்மை ஞானச் சிவயோகம் சேர்வுறார்;
கள்ளுண்ணு மாந்தர் கருத்தறி யாரே." (திருமந்திரம்.)

என்றபடி இவன் களித்தே நின்றான். இவன் நிலையினைநோக்கி மறுபுலவேந்தரும் மதியாதிருந்தார். முன்பு அஞ்சியிருந்த பகைவரனைவரும் அச்சம்யாது இலராய்இவன்முன் அடங்காது நின்றார். பொருள் படைமுதலியன மிகச்சிறந்திருந்தும் ஒருபயனுமின்றி எவரும் இகழ இழிந்துநின்று முடிவில் கயநோயடைந்து இவன்கழிந்து மாண்டான். வழிவழியாகப் புகழ்மிகுந்து வந்த உயர்குடியில் பிறந்தும், எழில்நலங்களோடு அரசமைந்து நின்றும், கள்ளுண்டதனால் எள்ளப்பட்டு இங்ஙனம் இவன் தள்ளுண்டழிந்தான். இவன் இழிந்தழிந்ததை நினைந்துநல்லோரும் இரங்கிவருந்தினர். கட்காதல்கொண்டொழுகுவார், உட்கப்படார்; ஒளியிழப்பர் என்னும் உண்மையை உலகம இவன்பால் உணர்ந்து நின்றது.

ஒளியும், ஒளிசான்ற செய்கையும், சான்றோர்
தெளிவுடையர் என்றுரைக்குந் தேசும்,—களியென்னுங்
கட்டுரையாற் கோதப் படுமேல் இவையெல்லாம்
விட்டொழியும் வேறாய் விரைந்து. (அறநெறிச்சாரம்.)

**உள்ளசீ ரெல்லாம் ஒருங்கழியும் ஓர்சிறிது**
**கள்ளருந்த வுள்ளங் கொளின்.**

கள்ளுண்பவர் புகழிழந்திழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

922. கள்ளுண்ணேன் என்றேன் கதிரோன்சேய் வில்லியுளங்
கொள்ள மொழிந்தான் குமரேசா—எள்ளளவும்
உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரான்
எண்ணப் படவேண்டா தார். (உ)

இ—ள்.

குமரேசா! இனிக் கள்ளுண்பதில்லையென்று இராமனுள்ளங் கொள்ளும்படி சுக்கிரீவன் ஏன் உறுதிசெய்துநின்றான்? எனின், கள்ளை உண்ணற்க; உணில் சான்றோரான் எண்ணப்படவேண்டாதார் உண்க என்க.

இது, கள்ளுண்பவர் எல்லாராலும் எள்ளப்படுவர் என்கின்றது. வில்வலியிற் சிறந்தவனாதலால் இராமன் வில்லி என நின்றான். சான்றோர் = அறிவொழுக்கங்களிற் சிறந்தமேலோர். எண்ணப்பட = நன்குமதிக்கப்பட. வேண்டாதார் = விரும்பாதார். வேண்டுதல் = விரும்புதல்.

உண்ணற்க = உண்ணாது ஒழிக. ககரஈற்று வியங்கோள் விதிப்பொருட்டாய் மறைக்குறிப்பில் வந்தது.

மேல், கள்ளுண்டவர் புகழிழந்திழிவர் என்றார்; இதில், நல்லோரால் அவர் தள்ளுண்டொழிவர் என்கின்றார்.

கள்ளினை உண்ணுதொழிக; உண்ணவிரும்பின் மேலோரால் மதிக்கப்படவேண்டாதார் உண்ணுக என்பதாம்.

கள்ளானது தன்னைக்குடித்தவனைச் சிறுமைக்குள்ளாக்கிப் புகழறங்களைக் கெடுத்துப் பலவிதத்திலும் இழிவு படுத்துமாதலால் அதனை யாண்டும் உண்ணலாகாதென்று அடிகள் உணர்த்த நெடுநாளாக உண்டுபழகின ஒருவன், என்னநேர்ந்தாலும் யான் அதனை உண்ணுதிருக்க முடியாதென்றான்; அப்படியானால் உண்க அதனால்வரும் பேரிழவு இன்னதாம் என முன்னுற உரைத்து அவன் உன்னித்திருந்துமாறு உணர்த்தியதாக இதனை ஓர்ந்துகொள்க.

அறிவொழுக்கங்களிற் சிறந்தமேலோரால் நன்கு மதிக்கப்படுதலே ஒருவன் பிறப்பினடையவேண்டிய பெரும் பேறுகுமாதலால் அப்பேற்றினை எடுத்துக்காட்டிக் கள்ளுண்பவனுக்கு அது கிடையாதெனத் தெளித்து விளக்கி அத்தீமையை ஒழித்தொழுகுமாறு இஃதுணர்த்தியதென்க.

சான்ஹேர் போற்றத் தலைமை யெய்திநின்று உலகம் காக்கும் மன்னர், இப்புலைமதுவைக் கனவிலுங்கூடக் கருதலாகா தென்பது கருத்து.

மாலைப் பந்தும் மாலையுமேந்தி மதுவார்பூஞ்
சோலைம் மஞ்ஞைச் சூழ்வளையார்தோள் விளையாடி
ஞாலங் காக்கு மன்னர்களாவார் நறவுண்ணுச்
சீலங் காக்குஞ் சிற்றுபகாரம் முடையாரே. (சீவகசிந்தாமணி)

கள் என்னும் தீயதை அரசர் சிறிதும் தீண்டலாகாது என இஃதுணர்த்திநிற்றல் காண்க. மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழிஎன்றவண்ணம் தான்குடியனுயின் தன்குடியிலுள்ளாரனைவரும் குடியராகிக் கெடுவராதலால் அக்கொடியதை உண்ணுமையே சீலம் எனவும், சிற்றுபகாரம் எனவும் குறித்துணர்த்தி நறவின் தீமையை இங்ஙனம் விளக்கியருளினுர்.

கள்ளானது நல்லோரால் எள்ளப்படுமாதலால் நலமுறவேண்டினுர் அதனை யாதும் உள்ளலாகா தென்பது குறிப்பு.

உயர்ந்தோர்முன் ஒருவன் மதிப்படையவேண்டின் கள்ளுண்டலை அவன் ஒழித்துவிடவேண்டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுக்கிரீவன்பால் உணரப்படும்.

## கதை.

சுக்கிரீவன் இராமனுதவியால் வாலியைவென்று தன் அரசினையடைந்தபோது சீதையைத் தேடுதற்குரிய படைகளோடு இன்னநாளில் வந்து சேருவல் என அவ்வீரவள்ளலிடம் உறுதிசெய்து சென்றுன். அம்மூர்த்தி தன் தம்பியோடு அங்கோர் மலைச்சாரலில் தங்கி யிருந்தான். சென்ற இவன் அரசபோகங்களை நுகர்ந்து முறைகடந்து மூழ்கிக்கிடந்தானுதலால் உறுதி செய்திருந்தபடி வந்து சேரவில்லை. குறித்தகாலம் கழிந்தும் வரவில்லை யென்ற உடனே இராமன் கொதித்தெழுந்து என்னகாரணத்தால் முன்சொன்னவண்ணம் இவன் இன்னமும் வராதிருக்கிறுன் என எண்ணி வெகுண்டு உளவறிந்து வரும்படி இளையவனை விடுத்தான். அச் சுமித்திரைச் சிங்கம விரைந்து சென்று கிட்கிந்தையை அடைந்த பொழுது இவன் கள்ளுண்டு அயர்ந்துகிடந்தான். பொங்கிவந்து அங்கதன் எழுப்ப இவனைவிழித்தான். நிகழ்ந்ததை யறிந்துநெஞ்

சங்கலங்கினன். என் ஐயன் செய்த வுதவியை மறந்து நன்றி கொன்று இங்ஙனம் குன்றிநின்றேனே யென்று கன்றி யிரங்கினன். இது, குடியால் வந்த குடிகேடெனக் குலைந்து நடுங்கினன். "நற வுண்டநான் இனி நாணுது போய் அவரை எப்படிக் காணுவேன்? களியனை என்னை அப்பெரியர் கண்ணெடுத்துப்பார்ப்பாரா? பஞ்சபாதகங்களுள் ஒன்றெனக் கருதப்பட்டதும், நஞ்சினும் கொடியதுமாகிய நீசக் கள்ளைக்குடித்து மோசம் போனேனே! இனி இதனை நெஞ்சினும் நினைக்கலாகுமா! நினைத்தேனாயின் இராமனது செஞ்சரண்சிதைத்த பாவம் என்னைச் சேர்வதாக" என ஆணையிட்டு யாவரும் அறிய உறுதிசெய்தான். அன்று இவனகூறியவற்றுள் சில இதனடியில் வருவன காண்க.

தெளிந்து தீவினையைத்தீர்ந்தோர் பிறவியிற்றீர்வ ரென்று
விளிந்திலா வுணர்வினேரும் வேதமும் விளம்பவேயும்
நெளிந்துறை புழுவைநீக்கி நறவுண்டு நிறைகின்றேனல்
அளிந்தகத் தெரியுந்தீயை நெய்யினுல் அவிக்கின்றுமால். (க)

ஏயின இதுவலால் மற்றேழைமைப்பால தேவனே?
தாய்இவள்; மனைவிஎன்னும் தெளிவின்றேல் தருமமென்னும்!
தீவினைஐந்தின் ஒன்றும்; அனதியுந்திருக்கு நீங்கா
மாயையின் மயஙகுகினறும் மயக்கின்மேல் மயக்கும்வைத்தாம். (உ)

வஞ்சமும், களவும், பொய்யும், மயக்கமு மரபில்கொட்பும்,
தஞ்சமென்றுரை நீக்குந்தன்மையும், களிப்பும், தாக்கும்;
கஞ்சமெல்லணஙகுந தீரும் கள்ளினல்; அருந்தினரை
நஞ்சமும் கொல்வதல்லால் நரகினைநல்கா தன்றே. (ங)

கேட்டனன் நறவாற் கேடுவருமெனக், கிடைதத அச்சொல்
காட்டியது; அனுமன் நீதிக்கல்வியால் நடந்ததல்லால்
மீட்டினி யுரைப்பதென்னே? விரைவின்வந் தடைந்தவீரன்
மூட்டிய வெகுளியால் நான்முடிவது மையமுண்டோ? (ச)

ஐய! நான் அஞ்சினேன் இந்நறவினின் அரியகேடு;
கையினுனென்றியேயும் கருதுதல் கருமம் அன்றால்;
வெய்யதா மதுவையின்னும விரும்பினேனென்னின், வீரன்
செய்தா மரைகளன்ன சேவடிசிதைக்க வென்றன். (ரு)

(இராமாயணம்.)

கள்ளின் தீமையும், அதனுல் தனக்கு சேர்ந்த அல்லலும், அதனை உண்ணுதொழித்தற்கு இவன் செய்துகொண்ட உறுதியும், பிறவும் இதனுல் இனிதுணரலாகும். இங்ஙனம் ஆனபின் இலக்கு

வனோடு வந்து இராமனைக்கண்டான். அருள்நிறைந்த அப்பெருந் தகையும் இவன் களிமயக்கொழித்ததையறிந்து பிழைபொறுத் துப்பின்பு இவனை மிகமதித்துப் பேணிக்கொண்டான். கள்ளுண் டல் மிகக்கொடியதோர் இழிவென்பதும், சான்றோரால் எண்ணப் பட வேண்டுபவர் தம் உள்ளத்திலுங்கூட அதனை உள்ளலாகாது என்பதும் உலகம் காண இவன் உணர்த்திநின்றான்.

உயர்வழியும் திண்மை யுருவழியும் என்றும்
துயர்விளையும் கள்வாய் தொடின்.

கள்ளுண்டவர் தள்ளுண்டழிவர் என்பது இதனால் கூறப் பட்டது.

---

923. தேசிகர்முன் ஏனோ செவிபுதைத்தார் கள்ளெனவே
கூசி வெறுத்தார் குமரேசா—பாசமிகு
ஈன்றாள் முகத்தேயும் இன்னாதால் என்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி. (௩)

இ—ள்.

குமரேசா! கள்ளருந்திநின்ற தருமசாமியை மாணகர்முத லிய ஞானசீலர்கள் ஏன் இரக்கமின்றி முன்புவெறுத்தொழித்தார்? எனின், ஈன்றாள் முகத்தேயும் களி இன்னாது; மற்றுச் சான்றோர் முகத்து என்? என்க.

இது, கள்ளுண்பவன் முகத்திலுங்கூடப் பெரியோர்கள் விழிக்க மாட்டார் என்கின்றது.

மாணகர் முதலிய ஐவரும் ஞான ஆசிரியராய் நின்றிருந்தமை கருதித் தேசிகர் என்றும். பாசம் = அன்பு. ஈன்றாள் = பெற் றதாய். அன்னைமுதலிய வேறுபெயரால் கூறாது இன்னணம் குறி த்தது வயிறுளைந்துபெற்ற அவ்வுரிமை தோன்ற என்க.

முகத்தேயும் = முன்னிலையிலும்.

இன்னாது = துன்பந்தருவது. ஆல் அசை. சான்றோர்முக த்து—மேலோர்முன்பு. களி—கள்ளுண்டுகளித்தல். என் என்னும் வினா மிக்கவும் இன்னாதாயிருக்குமென்பதை உணர்த்திநின்றது.

மேல், கள்ளுண்டவன் எல்லாராலும் எள்ளப்படுவன் என்றார்.

இதில், பெற்றதாயும்கூட அவனை வெறுத்துத் தள்ளிவிடுவள் என்கின்றார்.

கள்ளுண்டு களித்தல் தாய் முன்னும் துன்பமாம்; ஆகவே யாதொரு பிழையும் பொறாத மேலோர்முன் அது யாதாம் என்பதாம்.

பொறுத்தற்கரியதோர் பெருந்துன்பமாயிருக்கு மென்றபடி.

தன்பிள்ளை என்னபிழைசெய்தாலும் பொறுத்துக்கொள்ளும் இயல்புள்ள தாயும் அவன் கள்ளுண்ணக் கண்டால் பொறுக்கமாட்டாள்; வெறுத்துவிடுவள் என்பார் ஈன்றாள் முகத்தேயும் களி இன்னாது என்றார். உம்மை அவளது உரிமையின் சிறப்புணர நின்றது.

ஈண்டுச் சான்றோரை இணைத்துக் காட்டியது அவர் தூயராதலின் தீயன சிறிதும் பொறார் என்பது கருதி என்க.

"துயிலிடைஎழுப்பல்; புல்நுகர்ஆனைஒட்டுதல்; தூங்கிருட்காலை
தயிர்நறு வெண்ணெய் எடுத்தமோர் பருகல்; சாலவுந்துய்த்திடல்;யாழில்
பயிலு நாடகத்தில் மிகமனஞ் செலுத்தல்; பகற்பொழுதுறங்குதல்; காலை
வெயிலிடையிருத்தல்; நகம், மயிர்கடித்தல்; விரிகுழல்நடைப்புழியுளர்தல்; (க)

உடைந்திடு கலத்திலுண்டல்; கைசென்னி காரணமின்றியேயுதறல்;
அடைந்தஆசனத்தைக் காலினால்அகற்றல்; நகத்தினை நகத்தினால்உரிஞ்சல்;
குடங்கையில் அடிசில்கொண்டினிதருந்தல்; குலவியபள்ளிமீதிருந்து
தடம்புனல் பருகல்; துய்த்திடல்; செபித்தல்; நின்றுதண்ணீர் குடித்திடுதல்;

வாயிலல்லாத வழியிடைச்சேறல்; வாண்முகம், அகனை, மென்மலர்த்தாள்,
தோய்புனல் புலராதுறங்கல்; தாளிணையில் தொடுகழல்கிடப்ப ஆசமனம்
மேய்வுறப்புரிதல்; மிச்சிலோடேகல்; இரவினில் பாசடகருந்தல்;
சேயதன்கைகால் முகத்தினில் தெண்ணீர் சேர்த்துறுது இன்னமுதருந்தல்"

என்னும் இன்னவகையான சிறியபிழைகளைக் கண்டாலும் பெரிதும் வருந்தும் இயல்பினையுடைய மேலோர்கள் கடும்பாவமாகிய கள்ளருந்தலைக் கண்டால் உள்ளந்துடித்து உறுகண்புதைத்துப் பொள்ளெனத் தூரம் போவராதலால் "சான்றோர் முகத்துக் களி என்" என்றார்.

கள்ளுண்டவரை மேலோர் காணவும் கூசுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மானகர்பால் உணரப்படும்.

## கதை.

மானகர் என்பவர் இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்குமுன்

னர் பாண்டி நாட்டிலே புனல்வாய் என்னும் ஊரிலிருந்தவர். உயர்ந்த தவவொழுக்கமுடையவர். கல்வியறிவில் மிகச்சிறந்தவர். வடமொழி தென்மொழி என்னும் இருவகை மொழிகளிலும் கவி செய்யும் வன்மை வாய்ந்து யாருக்கும் நன்மைகளைப் போதித்து நல்ல தன்மையாளராய் இவர் நண்ணியிருந்தார். இவர்காலத்தில் வேதமுதலிய கலைகளை நன்கு ஓதியுணர்ந்து சிறந்த ஞானசீலராய் விளங்கியிருந்த சவுனகர், விருசிகர், சதானிகர், சாண்டிலியர் என்னும் இந்நால்வரும் இவரோடு மிக்க நேசமாய் மேவியிருந்தார். அறநூலிலேனும், பொருள்நூலிலேனும், அரசநீதியிலேனும், ஏதாவது முரண் தோன்றுமாயின் அக்காலத்திருந்த அரசரனைவரும் இவ் ஐவரிடமே வினவி ஐயந்தீர்ந்து வந்தார். சூநீதி முறைகளை உறுதிபெற உணர்த்தி மறுமைநோக்கோடு இங்ஙனம்இவர் நெறியமைந்து வருங்கால் தருமசாமி என்னும் மறையவனொருவன் மதிமறந்து மதுபானம்பண்ணி அதன்கழுவாய் கருதி இவர்பால் வந்தான்.

"பாக்கியமா மறைவல்லீர்! பாலெனவும், நறவெனவும்
தேக்கிய பாத்திரபேதம் தெரியாமல் மதுநுகர்ந்தேன்;
வாக்கியமா மனுநெறியால் வல்வினையேன் பெரும்பாவம்
போக்கியவா றருள்புரிவீர்சரணமெனப்போய்ப்பணிந்தான்".

இங்ஙனம் பணிந்து வீழ்ந்த அவன் கள்ளுண்டேன் என்று சொல்லியதைக் கேட்டவுடனே இவர் உள்ளங்குலைந்தார். செவிகளைக் கைகளால் சேரப்பொத்திச் சிவசிவ என்றார். இந்த அவமொழி கேட்க நேர்ந்ததேயென்று அழுன்று கொதித்தார்.

"நண்ணியசீர் மறைக்குலத்தோர் நறவுண்டேன் எனவுரைக்கும்
தண்ணியசொற் கேளாமுன் தடங்கையாற் செவிபுதைத்துப்
புண்ணியர்வாழ் மன்றகத்து வருவாய்கொல்! புலைநெறியோய்
கண்ணினெதிர் நில்லாதே கடிதகல்வா யெனமுனிந்தார்."

இவ்வண்ணம் முனிந்து வெறுத்தும் அவன் அகன்றுபோகாமல் மீளவும் குழைந்து நின்று "பிள்ளைமையேன் அறியாதுபிழைத்தமையைப் பொறுப்பதினித்—தெள்ளிமையோர் கடனென்னத்திரும்பவுஞ் சென்று அடிபணிந்தான்". அவனது நிலையினைக் கண்டு பின்பு இவர் நெஞ்சமிரங்கினர். கள்ளுண்டபாவம் மிகக் கொடியதாயிற்றே! அதனைப் போக்கும் வழி யாது? எனஒருவரை

ஒருவர் நோக்கி யுணர்ந்தார். நூல் விதிகளை ஊக்கி ஆராய்ந்தார். அங்ஙனம் இவர் ஆராயுங்கால் இக்குடியின் கொடுமையை நினைந்து நினைந்து குலைந்து கூறியபடியைச் சிறிது அடியில் காண்க.

"வீறாய பவக்கடலில் வீழ்ந்தவரைத் தவவரம்பில்
ஏறாமல் அழுத்துசுழி; அறிவுவெளிக் கிருட்படலம்;
நாறாயகொடுநரகின் அழுத்திவிடுந் தோட்டி; கதி
பேறான வழியடைக்கும் கதவமே பெருநறவுண். (1)

எவ்வமுற நுகர்ந்தாரை இயம்புவதென்! ஆங்கவரைக்
கவ்வையுறப் புகன்றாலும், கண்டாலும் பெரும்பாவம்;
மெய்வளரும் நெறியோர்கள் விலக்குவது; விலக்காத
பொய்வழியை விரும்பினரும் விரும்பாத புலைமதுவே. (2)

பின்னவர்உண்டால் அவரே பெரும் புலையர்; வணிகரொடு
மன்னவரும் உண்டாரேல் மற்றையரினுங் கடையர்;
அன்னவர்க்கே அவையாகில் அம்புவிக்குக் கடவுளராம்
முன்னவர்க்கு மதுவருந்தல் முறைமையோ மடமையோய். (3)

வெய்யகுல மூவரைப்போல் வேதியரைச் சிரந்துணித்தல்
வைதிகத்தின் முறையன்றால்; மறையவர்போல் விழிகுறைக்கில்
கையகலாது இப்பாவம்; கள்ளுண்ட வாய் நிறைய
நெய்யை நெருப் பெழக்காய்ச்சி உண்ண நீங்கிடுமென்றார்." (4)
(திருக்குற்றாலப்புராணம்.)

கள்ளின் தீமையும், அதன்பெயரையுங் கூடமேலோர் சொல்லக்கூசி உள்ளங் குலைவர் என்பதும், கொலைமுதலியபாவங்களினும் அதுகொடிதாம் என்பதும், பிறவும் இவற்றால் இனிதுணரலாகும். இங்ஙனம் நீசமான அந்நாசமதுவைக் குடித்தவன்வாயில் நெய்யை நெருப்பெழக்காய்ச்சி விடுதல்வேண்டுமென்று தண்டநூல் விதித்து நிற்கின்றதே இதற்கென்செய்வது? என இவர் இரங்கினின்றார். அவன் தாயும் வந்து அவனைப்பார்த்து அடாபாவி! என்றுபதைத்து நின்றாள். களியால் வந்த இப்பழியினை நீக்குதற்கு வேறுவழியில்லையா? என்றுவாய்திறந்தழுதாள். கள்ளினும்பாவியை உள்ளிநிற்றலும் தள்ளரும்பாவம் என ஆன்றோரனைவரும் எள்ளிச் சென்றார். சான்றோர் முகத்துக் களிமிக இன்றாம் என்னும் உண்மையை உலகம் இவர்பால் அன்று உணர்ந்து நின்றது.

கிளைஞர்க் குதவாதான் செல்வமும்; பைங்கூழ்
விளைவின்கட் போற்றா னுழவும்;— இளையனைக்

கள்ளுண்டு வாழ்வான் குடிமையும்; இம்மூன்றும்
உள்ளனபோன் றில்லாப் பொருள். (திரிகடுகம்.)

நாசமெலாஞ் சேர்ந்தோன்றாய் நண்ணுமே கள்ளென்னும்
நீசன்மெய் தீண்டி விடின்.

கள்ளானது யாவரும் வெறுக்கத்தக்க ஈனமுடையதென்பது இதனால் கூறப்பட்டது.

---

924. நாணுமல் ஏனோ நளகூபன் கள்ளருந்திக்
கோணு தழிந்தான் குமரேசா—மாணமைந்த
நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்
பேணுப் பெருங்குற்றத் தார்க்கு. (ச)

இ—ள்.

குமரேசா! கள்உண்டதனால் நளகூபரனும் ஏன்தன் நாணமழிந்து நின்றான்? எனின், கள்என்னும் பேணுப்பெருங்குற்றத்தார்க்கு நாண் என்னும் நல்லாள் புறங் கொடுக்கும் என்க.

இது, கள்ளுண்பார்க்கு நாணம் இல்லையாம் என்கின்றது.

நாண் = இலச்சை. அஃதாவது இளிந்த கருமங்களைத்துணிந்து செய்யாமல் உள்ளங்கூசி ஒடுங்குதல். இதனை நல்லாள் என்றது தன்னையுடையானுக்கு நன்மைபயக்குந் தன்மை கருதி. உயிரினும சிறந்ததாக இகுணம் உயர்ந்தோரால் போற்றப்படும். "உயிரினுஞ்சிறந்தநாண்" எனநற்றிணையில் தொச்சிநியமங்கிழாரும், "தாயிற் சிறந்தன்று நாண்" எனத் திருக்கோவையாரில் மாணிக்கவாசக சுவாமிகளும் இதனைக்குறித்துக் கூறியுள்ளமை காண்க.

"உயிரினும் சிறந்தன்று நாணே" என்றது (தொல்காப்பியம்.)

புறம் கொடுக்கும் = பின்காட்டிப்போம்; முகத்தில் விழிக்காமல் வெறுத்துவிட்டுப் போம் என்றபடி.

மேல், பெற்றதாயும் கள்ளுண்டமகனை எள்ளித்தள்ளி விடுவள் என்றார்; இதில், உள்ளிருக்கும் நாணமும் அவனை விட்டொழியும் என்கின்றார்.

கள்ளுண்டல் என்னும் வெறுக்கத்தக்க பெருங் குற்றத்தையுடையார்க்கு நாணம் என்று சொல்லப்படுகின்ற நல்லவள் புறங் காட்டிப் போம் என்பதாம்.

களவு கொலை என்னும் கொடுந்தீமைகளைச் செய்யும் படுபாவிகளா யினும் இவள் தாய்; அவள் தங்கை; உவள் மனைவி என்னும் வேற் றுமையுணர்வுடையராய் முறைதெரிந்து போற்றி நடப்பர்; கட்குடி யரோ ஒருணர்ச்சியுமின்றி உள்ளத்தகாத படுபழியையும் ஊக்கி நின்று ஆற்றிவிடுவராதலால் இவர்பிழைநிலை கழுவாயில்லாத வோர் கழிகேடுடையதென்பார் கள் என்னும் பேணுப் பெருங் குற்றம் என்றார்.

கள்ளானது தன்னைக் குடித்தவனை நாணத்தைக் கெடுத்துப் பலவகையிலும் ஈனப் படுத்தும் என்றவாறு.

"உடுத்த உடைபோயினும், அடுத்தவர் காயினும்,
மங்கையர் சூழினும், தங்கையர் சேரினும்,
உள்ளங் கூசார் கள்ளுண் மாந்தர்
சந்தியில் விழுந்து சவம்போல் கிடப்பர்" என்றபடி

குடியர் கிடந்துழல்வராதலான் அவர்க்கு நாணம் இல்லையாம் என்க.

"மலந்தனை அமுதென மாந்தச் செய்திடும்;
அலர்ந்த பூ என, அனல் அள்ளச் செய்யும்;வெஞ்
சலந்தரும்; பகைவர்கை தனக் குள்ளாக்கும; நன்
னலந்தனை யழித்திடும்; நறவு நெஞ்சமே,,

என்றவாறு அறிவு நாண் முதலிய உயிர் நலங்களை யெல்லாம் அறவே அழித்துப் பழி பல விளைத்து இழிவுறுத்தும் ஆதலால் கள்ளினையா ரும் கொள்ளலாகா தென்பது கருத்து.

ஒருவன் எவ்வளவு உயர்ந்தவனாயிருப்பினும் கள் அருந்து வனாயின் அவன் மதியழிந்து மானங் கெட்டு நிற்பன் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை நளகூபரன் பால் உணரப்படும்.

## கதை.

நளகூபரன் என்பவன் அளகை வேந்தனாகிய குபேரனுடைய அருமைத் திருமகன். தாய் பெயர் சித்திரரேகை. இவன் பலகலை களிலும் வல்லவன். அறிவிலும் ஆண்மையிலும் சிறந்தவன். யாரும் வியந்து பார்க்கத்தக்க பேரழகு வாய்ந்தவன். தன் குலத்த வரான இயக்கரனைவரும் இவனைக் காமதேவன் என உவந்து போ ற்றி வந்தார். இந்திரன் மகனாகிய சயந்தனும் ஒருமுறை இவனது எழில் நலங்களை நோக்கி வியந்து தன் தந்தையிடம் போய் இவனைக் குறித்து மிகப்புகழ்ந்து கூறியுள்ளான். உருவிலும் திருவிலும் சிற

ந்து இங்ஙனம் உயர்ந்திருந்த இவன் வசந்தரேகை என்பவளை மண ந்து அரியபோகங்களை நுகர்ந்து எவர்க்கும் இனியனாய் நின்று இதம் பலபுரிந்து அருந்திறலோடு விளங்கியிருந்தான். இருந்தும் சின்னாட் கழிந்தபின் தன் செல்வக் களிப்பால் நெறிதிறம்பி அமரமங்கையர் பலரை மருவினான். அவருள்ளே கட்டழகியாகிய அரம்பை ஒரு த்தியைத் தனக்கு இனியகாமக்கிழத்தியாக உரிமை செய்துகொண்டு நாளும் உவந்து நுகர்ந்து வந்தான். இங்ஙனம் வருங்கால் ஒருநாள் இவனது அரண்மனையை நோக்கி அவள் தனியே வந்தாள். இடையே இராவணன் கண்டான். காதல் மீக்கொண்டு அவளைக் கலந்து நுகர விரைந்து நெருங்கினான். அவள் இணங்காமல் வெறு த்தும் அவ் வணங்காமுடியோன் வலிந்து புல்லி நுகர்ந்துபோனான். அவன் செய்து போனதை இவனிடம் வந்து அவள் வைதுரைத் தாள். இவன் கடுஞ்சினங்கொண்டு அவனைக் கடுத்துச் சபித்தான். உள்ளங்கொதித்து அன்று இவன் சொல்லியபடியை அடியில் காண்க.

"நல்லார் புகழு நளகூபர னொருவன்
இல்லாளைத் தேராது நீண்டும் இராவணனும்
பொல்லா ஒழுக்கத்தான் பொன்முடிக ளோடுதலை
எல்லாம் பொடியாகி வீழ்க வெனச் சபித்தான்."

(உத்தர காண்டம்.)

இவ்வண்ணம் அருந்தவக் கொள்கையில் திருந்தியிருந்த இவன் பொருந்தி நின்ற சில புல்லர் தள்ளுதலால் கள்ளும் அருந்தினான் சிறிதுகாலம் மறைந்துண்டு பின்பு வெளிப்படையாகவும் குடிக்கத் துணிந்து பெருங்குடியன் எனப் பிழைபட்டு நின்றான். ஒருநாள் நிறையக் குடித்துவிட்டுத் தன் தம்பியாகிய மணிக்கிரீவனோடு அர ம்பையர் சிலரை அழைத்துக்கொண்டு சைத்திரரதம் என்னும் தனது இனிய பூஞ்சோலையி னருகேயிருந்த ஓர் அழகிய பொய்கை யில் போய்ப் புனலாடிக் கொண்டிருந்தான். அவ்வமயம் அங்கு நாரதர் வந்தார். அம்மாதவரைக் கண்டவுடனே மங்கையரனைவரும் ஆடைபுனைந்து கரையில்வந்து அகலநின்றார். வெறியரா யிருந்த படியால் இவனும் தம்பியும் அம்முனிவரெதிரே ஒருநாணமுமின்றி நிருவாணமாய் நின்றார். அந்நிலையினை நோக்கி அவர் நெஞ்சுங்கன ன்றார்; மரம்போல் நிற்கின்றீரே! இனிநீர் மரமாய் முடிவீர்" என வைது போனார். இவர் அவ்வாறே மண்ணுலகத்தில் நந்தகோ

பன் வீட்டு முன்றிலில் இரண்டு மருதமரங்களாய்த் தோன்றி நெடுங்காலம் நின்றார். பின்பு கண்ணன் உரலோடு தவழ்ந்து வந்து தம்மை நண்ணியபொழுது உருமாறி இவர் புண்ணிய நிலையையடைந்தார். குடிவெறியால் இவர் படிமாறிபதையறிந்து குபேரன் பெருந்துயரடைந்து கள் என்பது தன் எல்லையிலுங்கூட இல்லையாம்படி செய்தான். சிறிது கள் உண்டதால் அழகு அறிவு கல்வி செல்வம் ஆண்மை முதலிய எல்லா நலங்களையும் இழந்து உள்ள நாணமும் போய் எள்ளப்பட்டு இங்ஙனம் இழிந்தொழிந்தாரே யென்று விஞ்சையரனைவரும் நெஞ்சழன்று கள்ளின் கொடுமையை எள்ளியிருந்தார். "நாண் என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் கள் என்னும் பேணாப் பெருங்குற்றத்தார்க்கு" என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

நந்தாத வென்றி நளகூபன், நான்று தேன்சோர்
மந்தார மாலை புனைமார்பன் மணிக்கிரீவன்
செந்தா மரைமேல் திருவிற்றிகழ் மாதரோடும்,
அந்தா துயிர்க்கும் அலர்ப்பூம் புனலாடுவாரால். (க)

விரைநாறு தேறல் மதுமாந்தி மென்தூசிநீங்கி
அரமாதரோடு களியாற் புனலாடல் நோக்கி
மரனாக என்று சபித்தான் மலர்வாயவிழ்ந்து
சொரி தேறலென்னச் சொரியாழிசைச் சூழ்சமிக்கோன். (உ)

உயர்தெய்வ ஆண்டி னொருநூறுநின் றொற்றையாழிப்
புயல் வண்ணன் தன்னை அடைவுற்றுழிப் போவதாகச
செயிர் மன்னு சாபமெனச செப்பினன்; செப்புமாறு
வெயில்மன்னு செக்கர் மணிமார்பன் விலக்கலுற்றான். (பாகவதம்)(ங)

நளகூபரன் கள்ளுண்டதும், அதனால் நாணங்கெட்டு நவை புரிந்து மேன்மைகுன்றித் தன் தமபியோடு அவன் வெம்பியழிந்ததும் இதன்கண்ணும் விளங்குதல் காண்க.

வள்ளத் துள்ளகள் வாய்வைத்த போதினே
உள்ளத் துள்ளநாண் ஓடி ஒழியுமே
எள்ளத் தகுகபுல் லினர் புகுந்திடின்
உள்ளத் தூயர் ஒதுங்குதல் போலவே.

மானம் அழியும் மதியழியும் மாண்பழியும்
ஈனமுறுங் கள்வா யிடின்

குடியானது நாணழித்து நாசப்படுத்தும் என்பது இதனால் கூறப்பட்டது.

925. கள்ளுண்டல் பாவமெனக் கண்டவுடன் சண்டகனேன்
கொள்ளான் விடுத்தான் குமரேசா—உள்ளபடி
கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல். (ரு)

இ—ள்.

குமரேசா! கள்ளுண்டலானது அறியாமையால் வந்த நெறிகேடென்று சண்டகன் ஏன் கண்டு விடுத்தான்? எனின், பொருள்கொடுத்து மெய்யறியாமை கொளல் கையறியாமை உடைத்து என்க.

இது, குடியானது முழுமடமையான படுகேடென்கின்றது.

கொள்ளான் விடுத்தான் என்றது முன்பு குடித்துவந்த அவன் பின்பு அறவே அதனை ஒழித்துவிட்டமை கருதி.

கையறியாமை = செய்வகைதெரியாமை. கையென்னுஞ்சொல் செயல், ஒழுக்கம், பயன், இழிவுமுதலியவற்றை யுணர்த்திவரும். "கையறியா மாக்கள் இழிப்பும் எடுத்தேத்தும்-வையார் வடித்தநூலார்" என நாலடியாரிலும், "மையன்மாலையாம் கையறு பிணைய" எனப் புறத்திலும், "கடவுள் வழங்குங் கையறுபிணைய" என மதுரைக்காஞ்சியிலும், "கைவரைநில்லாக் கையறு கவற்சி" எனப் பெருங்கதையிலும், "மையலுற்ற மகன் பின் வருந்திக் கையறு துன்பங்கண்டு" என மணிமேகலையிலும் இது நின்றுணர்த்துதல் காண்க. "கையறியாப் பேதை" என முன்வந்திருத்தலையும் ஈண்டெண்ணிக்கொள்க.

மெய் = உடம்பு. அறியாமை என்றது களிமயக்கால் அயர்ந்து உணர்ச்சியற்றுக் கிடக்கும் சிறுமையை.

மேல், கள்ளானது நாணழித்து நவைப்படுத்தும் என்றார்; இதில், பயனறியாத படுபாவிகளே அதனை நயந்துகொள்வர் என்கின்றார்.

தன் பொருளைக்கொடுத்து மெய்மறந்து வீழ்தற்கேதுவாகிய கள்ளினை ஒருவன்கொள்ளல் செயல்வகையறியாத தீவினைப்பயனே யாம் என்பதாம்.

அறம்பொருள்களை வளர்த்து நல்ல இன்பங்களை யநுபவித்தற்கு உரிமையாக அமைந்துள்ள அரியபொருளைக்கொடுத்துப் பாவம் வறுமை பழிமுதலிய இழிநிலைகளை விளைத்துப் பல்வகைத்துன்பங்

களையும் ஒருங்கே பயக்கும் கொடுங்கேடுடைய கள்ளினைக் கொள்ளு தல் எள்ளத்தக்கதோரா இழிமடைமையாம் என்றவாறு.

சிறந்த பொருளைக்கொடுத்து இழிந்தகள்ளை வாங்கி உவந்து குடித்துக் கழிந்த பிணங்கள்போல் சிலர் வீழ்ந்து கிடக்கின்றாரே! இதற்குக் காரணம் என்னை? என்று ஒருவன் கருதியினவ அவனை நோக்கி அடிகள் உணர்த்தியதாக இதனை உணர்ந்துகொள்க.

உணர்ச்சியற்று மெய்மறந்து அயர்ந்துகிடக்கும்படி கள்ஆக்கி விடும் என்பதை அறிந்திருந்தும் அதனைப் பொருள்கொடுத்து வாங் கிக்குடிப்போர் இருள்படுமனத்தராய் என்றுந் தீர்விலா மருளுறு மடையரேயாவர் என்பார் மெய்யறியாமை கொளல் கையறியாமை யுடைத்து என்றார்.

தன்னைக்குடித்தவனைச் செத்தபிணம்போல் படுத்திவிடும் தீய கள்ளை ஞானமில்லாத ஈனமக்களே நக்கிநிற்பர் என்றபடி.

பரந்தஅறிவு சிறந்திருந்தாலும் கள்ளின்பக்கம் சாரார் என்பது கருத்து.

களவு, கொலை முதலிய பழிவினைகளுக்கேனும் வறுமை, பகை முதலிய சிலகாரணங்கள் உள்ளன; கட்குடித்தல்என்னும் இவ் இழி வினைக்கு யாதொருகாரணமுமில்லை; அக்குடிகேடனது முழு மூட மேயாம் என அடிகள் உளம்கரைந்து உரைத்திருத்தல் உடைத்தே என்னும் ஏகாரத்தால் உணரலாகும்.

"வறுமையால், களவுசெய்வர்; மையலால், காமத்தாழ்வர்;
குறுமைசேர் பகையினால், வெங்கொலைசெய்வர்; வசையினோடும்
சிறுமைதந்து, உயிரிருந்தும் செத்தவராக்கி, இம்மை
மறுமையை அழிக்குங்கள்ளை மாந்தல் எப்பயன்வேட்டம்மா!"

என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது. மாந்தல்—குடித்தல்.

"நறவுண்டு மறந்தேன்காண நாணுவன் மைந்த" என்று சுக்கி ரீவன் நைந்து நின்றதுபோல் குடியர் எவ்வளவு வலியுடையராயி னும் அறிவுகேடராய்ப் பின்பு கழிவிரக்கங்கொண்டு கலுழ்வராத லால் அக்கொடியதைக் கனவிலும் கருதலாகாதென்பது கருத்து.

உண்டவரைப்பிணமாக்கி ஒழித்திழிக்கும் படுகள்ளை உணர் வுடையார் உண்ணார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வு ண்மை சண்டகன்பால் உணரப்படும்.

## கதை.

சண்டகன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்துத் தொளாயிரம் ஆண்டுகட்கு முன்னிருந்த ஓர் குறுநிலமன்னன். வேடர் மரபினன். அரணபாதம் என்னும் மலையினருகே கிடந்த சேனம என்ற சிறியநாட்டைத் தனக்கு உரிமையாக்கொண்டு அப்பக்கங்களிலிருந்த வேடர்களுக்கெல்லாம் இவன் தலைவனாய் நின்றான். யாதும் அஞ்சா நெஞ்சினன்; வெஞ்சினமுடையவனாயினும் வஞ்சமில்லாதவன். குலத்தில் வேடுவனாயினும் குணத்தில் சிறந்தவன். தன் உயிரைக்கொடுத்தாயினும் அடுத்தவரை ஆதரிக்கும் ஆண்மையாளன். இறுதிவரினும் தான் உரைத்ததனை உறுதிபெறமுடிக்கும் இயல்பினன். இங்ஙனம் சிறந்தகுணங்கள் அமைந்திருந்தும் கள்ளருந்தல் என்னும் இழிந்தகுற்றமும் இவன்பால் மிகுந்திருந்தது. ஒருநாள் தன் மனைவியோடு இவன் ஓர் மலைச்சாரலின் வழியே வந்துகொண்டிருந்தான். அப்பொழுது தெய்வாதீனமாக அங்கே வந்த ஏமாங்கதநாட்டு மன்னனாகிய சீவகன் இவனைக்கண்டான். வில்லுங்கையுமாய் வியத்தகு திறலோடு விளங்குகின்ற இவனது நல்லியல்புகளை முகக்குறிப்பாலறிந்த அவன் இவனை நயந்துநோக்கி நீ யார்? எங்கிருந்து வருகின்றாய்? என்று இனிது வினவினான். அதற்கு இவன் "அதோ தோன்றுகின்ற அரதமலையில் வசிக்கின்ற குறவர் தலைவன்" என்று கூறி நின்றான்.

"கொடிமுதிர் கிழங்குதீந்தேன் கொழுந்தடி நறவோடேந்திப்
பிடிமுதிர முலையினாள்தன் தழைத்துகிற் பெண்ணணிநோடும்
தொடும்அரைத்தோலன்; வில்லன்; மரவுரிஉடையன்; தோன்ற
வடிநுனை வேலினான்கண்டு எம்மலை யுறைவது? என்றான்." (௧)

"மாலைவெள் ளருவிசூடி மற்றிதா தோன்றுகின்ற
சோலைசூழ் வரையினெற்றிச் சூழ்கிளி சுமக்கலாற்றா
மாலையந் தினைகள்சாய்க்கும் வண்புன மதற்குத் தெனமேன்
மூலைய குவட்டுள்வாழும் குறவருள் தலைவன்என்றான்." (௨)
(சீவகசிந்தாமணி.)

இவ்வாறு சொல்லியபொழுது முறையாக "நீர் உண்டுவரும் உணவு எத்தகையது? என அவ்வித்தகன் கேட்டான். இவன் அவனைநோக்கி "தோழ! யாம் பெரிதும் உண்டும் தோண்டிக் கள் இதனை" என்றான். உண்டும் என்றது உண்போம் என்றபடி. இங்ஙனம் இவன் கரவின்றி உரைத்த இந்நறவுரையைக் கேட்டபொ

முது பெரிதும் இரங்கி "அந்தோ! தன்னை உண்டவரை நரகத்தில் கொண்டுவிடும் நீசக்கள்ளை உண்டு வாழ்கின்றேன் என்கின்றாயே! இது எவ்வளவு நாசமான காரியம்! இயற்கையாகவே மடமைய மைந்துள்ள நீ இக்குடியையும் கொண்டுநின்றால் இனி உறுதிகண்டு உய்திபெறுவது என்றோ?" என அவன் உளங்கரைந்துரைத்தான். அவனருளுரையைக் கேட்டவுடனே இவன் அறிவுடையனாகி "ஐயகோ! இருமையும் கெடுக்கும் என்பதையறியாமல் என்பழ வினைவசியால் இவ்இழிகள்ளை இதுவரையும் குடித்து வந்தே னே! என் குடிகேடு இருந்தபடி என்னே எனக்கலங்கி வருந்தி இன்றுமுதல் இனி அதனையான் கனவிலுங்கருதேன்" என்றுஉறு திசெய்து தந்தான். உணர்வுடையனாகிக் கழிந்ததற்கிரங்கி இவ ன்மொழிந்ததைக் கேட்டு அவன் மிகமகிழ்ந்து சென்றான். தன் குடியைக் கெடுக்கவந்த குடியை இவன் அறிவடைந்தபின் அடியோ டொழித்தான். தீவினையாளராய அறிவிலிகளே களளை ஆதரித்து நிற்பர்; நல்லஅறிவு சிறிதுடையராயினும் அதனை அணுகாதகல்வர் என்பதை அக்காலத்திருந்தவர் பலரும் இவன்பால் அறிந்து மகிழ் ந்தார். "பொருள் கொடுத்து மெய்யறிமை கொளல், கையறியாமை யுடைத்து" என்பதை உலகம்காண இவன் உணர்த்திநின்றான். (விரிவைச் சிந்தாமணியில் காண்க.)

ஈக்கள் வண்டொடு மொய்ப்ப வரம்பிகந்
தூக்கமே மிகுந்து உட்டெளி வின்றியே
தேக்கெறிந்து வருதலிற் றீம்புனல்
வாக்கு தேனுகர் மாக்களை மானுமே. (இராமாயணம்.)

இது, கள்ளுண்பாரை வெள்ளத்தோடு ஒப்பவைத்துச் சிலே டை நயந்தோன்ற உரைத்துள்ளது. ஈக்கள் முதலிய இழிந்தன மொய்ப்ப, பல்லியநாற்றம் புறத்தேவீச, உள்ளுணர்வின்றிக்குடியர் தள்ளுண்டுழல்வர் என இஃதுணர்த்தி நிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க. வரம்பு இகந்து = முறைகடந்து.

தங்குடிக்கு நாசம் தமக்கு முழுநீசம்
வெங்குடியர் செய்வர் விரைந்து.

கொடியமடையரே குடியராவரென்பது இதனால் கூறப்பட்டது.

926 கள்ளுண்டேன் வீரை கருத்தழிந்தான் யானைமுன்போய்க்
கொள்ளுண்டு மாண்டான் குமரேசா—தள்ளுண்டு
துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர். (ரு)

இ—ள்.

குமரேசா! கள்ளுண்டதனால் வீரை ஏன் மதியழிந்து மாண்டான்? எனின், துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும் நஞ்சு உண்பார் கள் உண்பவர் என்க.

இது, கள்ளானது நஞ்சினும் தீயதென்கின்றது.

துஞ்சினார் = உறங்கினார். துஞ்சுதல் = உறங்குதல். "மலர்ந்த மார்பின் பாயல் துஞ்சிய" எனஐங்குறுநூற்றில் இது நின்றுணர்த்துதல் காண்க.

உறக்கத்திற்கும் சாவுக்கும் வேறுபாடுண்டெனப் பொதுநோக்கில் உலகம் கொண்டிருக்குமாதலால் அதனைநோக்கி வேறல்லர் என்றார்.

மேல், அறிவைமயக்கும் கள்ளைப் பொருள்கொடுத்து வாங்கல் முழுமூடமாம் என்றார்; இதில், அதனை அருந்தினவர் இறந்தவர் போலவே இழிந்து கிடப்பர் என்கின்றார்.

உறங்கினார், உணர்விழந்திருத்தலால் இறந்தாரோடொப்பர்; அதுபோல், கள்ளுண்பவர் எக்காலத்தும் மதி மறந்திருத்தலால் நஞ்சுண்பாரோ டொப்பர் என்பதாம்.

உறங்கியுள்ளார்க்கும் செத்துக்கிடப்பார்க்கும் வேற்றுமை யாது? எனின், உயிர்ப்பு உண்மையும், அஃதின்மையுமேயாம். ஆயினும் உணர்விழந் திருக்குந்தன்மையில் அவ்விருவரும் வேறல்லர்; ஒரு நிலையாளரேயாவர்; அதுபோல் கள்ளுண்பாரும் நஞ்சுண்பாரும் தம்முள் வேற்றுமை யுடையராயினும் அறிவிழந்து மரணம் பழுத்திருக்குந்தன்மையில் ஒத்துள்ளார் ஆதலால் இவர்க்கு அவரை ஒப்புக்காட்டி இங்ஙனம் உணர்த்தியருளினார்.

நஞ்சு உண்டவர் ஒருபடியாகச் செத்தொழிவர்; கள் உண்டவர் அங்ஙனமின்றி நித்தலும் செத்துச் செத்து எழுவர் என்றபடி. இங்ஙனம் உய்த்துணருமாறு இவ்வுவமை புணர்த்தி வைத்திருக்கும் அருமையை ஊன்றிப்பார்க்க.

" செத்தபிணம் வீழ்ந்தவன்றே தீர்ந்தொழியும்; கள்ளுண்போர்
நித்தம் பிணமாய் நிலைத்துமே—இத்தரையில்
உள்ளவரை பேரிழவே ஓங்கநிற்பார்; இப்பிணங்கள்
கொள்ளஇட மில்லையோ கூற்று."

குடிகாரப் பிணங்கள் நித்தமும் இழவுகூட்டி இவ்வுலகிற்கோர் தீராத பெருந்தீட்டாயுள்ளன என்று உள்ளங்கொதித்து இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

இனி, நஞ்சுண்பவராவது மருந்து முதலியவற்றால் ஓரோவழி பிழைத்தெழுவர்; கள்ளுண்பவரோ எவ்வாற்றானும் என்றும் திரும்பி உய்யாமல் ஒழிந்தேபோவர் எனவும் இது உணரநின்றது.

கள்ளுண்பவன் ஒருகாலத்திலும் விளங்கமாட்டான்; பழியும் பாவமும்விளைத்து அநியாயமாக அழிந்தேதீர்வன் என்றவாறு.

தீய நஞ்சினும் கள் மிகத்தீயது என்றுகாட்டி அதனை ஒழித்தொழுகுமாறு அடிகள் இங்ஙனம் உணர்த்தி யருளினர். "நஞ்சமும் கொல்வதல்லால் நரகினை நல்காதன்றே" என்று சுக்கிரீவன் அஞ்சி நின்றதும் ஈண்டு அறியத் தக்கது.

"சித்தமும் அவசமாம்; செயல் விகற்பமாம்;
நித்தமும் மரணமாம்; நெடிய துன்பமாம்;
அத்தமும் நாசமாம்; அவிழ்தம் இன்மையால்
பித்தினும் நஞ்சினும் பெரிது கள்ளரோ" என்பதுங்காண்க.

கட்குடியானது குடியைக்கெடுத்து அடியோடழித்து விடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீரையால் உணரப்படும்.

## கதை.

வீரை என்பவள் இற்றைக்கு இரண்டாயிரத்திருநூறு ஆண்டு கட்குமுன்னர் அவந்திநாட்டிலே கச்சயமென்னும் நகரிலிருந்து அரசுபுரிந்த துச்சயன் என்னும் அரசனுடைய அருமைத்திருமனைவி. இரவிவன்மனுடைய இனிய புதல்வி. தாய்பெயர் அமுதபதி. தமக்கைபெயர் தாரை. தங்கை இலக்குமி. இவள் மிக்க கட்டழகுடையவள். அருந்திறலும் பெருந்திறலும் உடையனாய் விளங்கியிருந்த தன் கணவனுக்கு இன்னுயிர்த்துணைவியாய் நின்று பலவகையிலும் அவனை இவள் இன்புறுத்தி வந்தாள். அம்மன்

னும் மன்னிய காதலோடு இவளுடன் மருவியிருந்து இனிய போகங்களை நுகர்ந்து உலகம் இன்புற முறைசெய்து வந்தான். கல்வியறிவிலும், வெல்பெரும் படையிலும் அவன் மிகச்சிறந்தவன். பகைவர்பலர் மிகவருந்தி முயன்றும் வெல்லமுடியாமல் வெள்கி ஒழியத் தன்பெயர் நிலைக்கத்தக்கபடி வெற்றித்திருவோடுஅவன்விள ங்கி யிருந்தான். சீரும் பேரும்பெற்று இங்ஙனம் சிறந்துவருங்கால் கள்ளிற் சிறிது அவன் காதல்கொண்டான். அவன் மனைவியாகிய இவளும் அதனை மகிழ்வுடன் மாந்தினள். நாளடைவில் அக்குடி யில் இவள் தலைமையெய்தினள் அரசியானதால் பலவகையான உயர்ந்த பானங்களையெல்லாம் வரவழைத்துத் தோழிகளைப் புடை சூழ வைத்துக்கொண்டு பலர்க்கும் உதவிப் பருகி வந்தாள்.

"தேங்கி னூறலும், தேமபிழித் தேறலும்,
தாங்கரும் பெண்ணைப் பூங்குலை யமுதமும்,
மதுவும், சீதமும், புதுமலர் வேரியும்,
உக்கிர ஊறலும், சிக்கரத் தெளியலும்,
கருமபின் ஊறலும், பெரும் பொதித் தேனும்,
இவையும் பிறவும் சுவைதெரி யாளர்
விட்டுணலாற்று மட்டுமலி நறுங்கள்
பெய்ம்மின! தம்மின்! ஈமின்! பிறர்க்கெனத்
தம்மில் தோறும் உண்மகிழ்ந் துரைக்கும்
கள்ளுண் ணளர் ஒள்ளொலிக் கம்பலும்."

என்றபடி இவளரண்மனையில் எப்பொழுதும் குடிமுழக்கம் பெரி தாயிருந்தது. ஊறல் = ஊறிவரும்நீர். பெண்ணை = பனை. சிக்கரம் — உசலம் பட்டை. இங்ஙனம் இருந்து வருங்கால் ஒருநாள் மிக க்குடித்துவிட்டு உணர்ச்சி யாதுமின்றிப் பிணம்போல் ஓய்ந்து கிடந் தாள். சிறிதுபொழுது கழிந்தபின் புரண்டெழுந்தாள். தள்ளா டித் தளர்ந்து நடந்து பட்டத்துயானை கட்டியிருந்த கூடத்தை யணுகினள். அங்கே புதிதாகப் பிடித்துவைத்திருந்த மதத்தயானை முன்போய் மயங்கி விழுந்தாள். அது வெருண்டு மிதித்தது. உட னே இவள் இறந்துபோனாள். விடிந்தபொழுது அரசன்கண்டு அலறி த்துடித்தான். இவளுடன் பிறந்தவளாகிய தாரை என்பவள் இவ ளைப் பிரிந்த துன்பத்தைப் பொறுக்கமாட்டாமல் ஓர் உயர்ந்தமாளி கையின்மீதேறி விழுந்து மடிந்தாள். நல்லஅழகும், நயந்தகுமேன் மையும், மல்லல்வளனும், மருவியிருந்தும் கள்ளைக் குடித்ததனால் உள்ள அறிவெல்லாம் ஒருங்கேயிழந்து இவள் உயிர்போய் ஒழிந்

தாள். "துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; கள்ளுண்பவர் எஞ்ஞான்றும் நஞ்சுண்பவரே யாவர்" என்னும் உண்மையை உலகம் இவள்பால் உணர்ந்து நின்றது. களிமயக்கத்தால் அறிவிழந்து இவள் அழிந்துபோனதை நினைந்து கணவன் மிகவருந்தி ஓர்பொழிலிடைத் தனியகன்றிருந்தபொழுது அங்கு வந்த அறவணர் என்னும் பெரியத்த முனிவரிடம் இக்குடியின் கொடுமையை அவன் உரைத்துநொந்தான். அடியில் வருதல் காண்க.

"கச்சயம் ஆளும் கழற்கால வேந்தன்
துச்சயன் தன்னையோர் சூழ்பொழிற் கண்டேன்
மாபெருந் தானை மன்ன! நின்னொடுந்
தேவியர் தமக்குந் தீதின் றேவெனை
அழிதக வுள்ளமொ டரற்றின னாகி
ஒழிவிழை மாதர்க்கு உற்றதை யுரைப்போன்
புதுக்கோள் யானைமுன் போற்றாது சென்று
மதுக்களி மயக்கத்து வீரை மாய்ந்ததூஉம்,
ஆங்கது கேட்டு ஓர் அரமியத் தேறித்
தாங்காது வீழ்ந்து தாரை சாவுற்றதூஉம்,
கழிபெருந் துன்பம் காவலன் உரைப்பப்
பழவினைப் பயனீ பரியலென் றெழுந்தேன்" (மணிமேகலை.)

இது, மேற்குறித்த முனிவர் மணிமேகலையிடம் உரைத்தது. கள்ளின் தீமையும், அதனைக்குடித்தாரை அறிவைக்கெடுத்து அடியோடு அஃது அழித்துவிடும் எனபதும், பிறவும் இதனால் இனிதுணரலாகும்.

உண்டவரைக் கொல்லும் உறுநஞ் சிழிநரகம்
கொண்டுபோய் ஆழ்த்துங் குடி.

கள்ளருந்தினவர் உள்ளுணர்வு கெட்டு ஒழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

927. கள்ளிற் களித்த கபனையேன் எல்லாரும்
கொள்ளச் சிரித்தார் குமரேசா—விள்ளாமல்
உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்
கள்ளொற்றிக் கண்சாய் பவர். (எ)

இ—ள்.

குமரேசா! கள்ளுண்டு களித்துக்கிடந்த கபனை ஏன் எல்லா

ரும் பழித்து நகைத்தார்? எனின், என்ஞான்றும் கள் ஒற்றிக்கண் சாய்பவர்; உள் ஒற்றி உள்ளூர் நகப்படுவர் என்க.

இது, குடிகாரனை எல்லாரும் இகழ்ந்து சிரிப்பர் என்கின்றது.

கொள்ளச் சிரித்தார் என்றது எல்லாரும் இகழ்ந்து கொள்ளும்படி ஊரார் எள்ளிச் சிரித்தமை கருதி.

உள் ஒற்றி = உள்ளே நிகழும் நிகழ்ச்சிகளை ஊன்றி உணர்ந்து. அஃதாவது அகத்தது புசெயல்களை ஆராய்ந்து அறிந்து என்றவாறு. ஒற்று இரண்டனுள் முன்னது ஒன்றிநோக்குதல்; பின்னது உண்டு நிற்றல் என்க.

உள் ஊர் என்றது ஊரிலுள்ளவரை. இடத்தின் பெயர் அதி லுள்ளவரை உணர்த்தி நின்றதனால் இது, இடவாகு பெயர்.

கள் ஒற்றி = கள்ளை அருந்தி. கண் சாய்தல் = அயர்ந்து வீழ் தல். எத்துணை அறிவுடையவனாயினும் குடித்தவுடனே நிலைதளர் ந்து பித்தன்போல் புலம்புவனாதலால் கண்சாய்தற்கும், ஊர் சிரித் தற்கும் கள் ஒற்றுதல காரணமாய் நின்றது. "கள்ளுண்பான் கூறும் கருமப்பொருள் இல்" என்றார் கபிலரும.

மேல், கள்ளுண்பவர் நஞ்சுண்பவர்போல் நாசமடைவர் என் றார்; இதில், எல்லாராலும் எள்ளப்பட்டு அவர் இழிந்தழிவர் என் கின்றார்.

எக்காலத்தும் கள்ளைமறைந்து குடித்துக் கண்ணயர்ந்து கிடப் பவர், உள்ளதை யுய்த்துணர்ந்து உள்ளூரரால் எள்ளப்படுவர் என்பதாம.

கள்ளுண்டவர் தளர்ந்து தள்ளாடி விழுந்துபுரண்டு கண்கள் சுழன்று வாய்க்கு வந்தபடியெல்லாம புமைபிக் கிடப்பராதலால் "கள் ஒற்றிக் கண்சாய்பவர் உள்ளூர் நகப்படுவர்" என்றார்.

தன்னைக் குடித்தவனை அறிவைக்கெடுத்து, ஆண்மையைப்பொ ழித்து, நாணத்தை யழித்து, யாரும் இகழ்ந்து சிரிக்கும்படி இழிவு பலவிளைதது ஈனப்படுத்துமாதலால் கள்ளினை என்றும எள்ளளவும் கொள்ளலாகா தென்றவாறு.

"அறிவை யழிக்கும; செயலழிக்கும; அழியாமானந் தனையழிக்கும்; செறியும அறிஞர் மதியாத செருக்கை விளைக்கும்; என்றானும் முறியும் வெறுபபு மிகவிளைக்கும; முனிவு விளைக்கும்; பழிபஞ்சாக் குறிகள் விளைக்கும்; நகைவிளைக்கும; கொள்ளேல் கள்ளுண்டலை மைந்தா" என்பதும் எண்ணத் தக்கது.

குடியால் மனமொழி மெய்கள் நிலைகுலையும்; அதனால் உணர் விழந்து உயிரழிய நேரும் என்க.

"கடாஅ யானைமுன் கட்கா மூற்றோர்
விடாஅது சென்றதன் வெண்கோட்டு வீழ்வது
உண்ட கள்ளின் உறு செருக்காவது
கண்டும் அறிதியோ காரிகை நல்லாய்." (மணிமேகலை.)

பண்டுபலர் குடிவெறியால் மதிமறந்து மதயானைமுன் வீழ்ந்து மாண்டொழிந்த உண்மையை இது, உணர்த்தி நிற்றல் காண்க.

தன்னை யுண்டவரைக் கொன்றொழிக்கவல்ல பொல்லாக்கள்ளை எள்ளளவும் உட்கொள்ளலாகா தென்பது கருத்து.

எவ்வளவு வலியுடையராயினும் குடியரை எல்லாரும் எள்ளிச் சிரிப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கபன் பால் உணரப்படும்.

## கதை.

கபன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுக ட்குமுன்னர்க் காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்தவன். நிறைந்த செல்வமுடையவன். உடல்வலியில் மிகச்சிறந்தவன். வாள் முத லியபடைக்கலங்களைப் பலர்க்கும் பயிற்றிவந்தவன். உயர்வு பருமன் திண்மை முதலிய உறுப்புநலங்கள் சிறப்புறப்பெற்றவன். யாருக் கும் இரங்கி உபகரிக்கும் இனிய இயல்பினன். புராண இதிகாசங் களில் நல்லபயிற்சியுள்ளவன். எப்பொழுதும் நெற்றிநிறைய நீறணி ந்து அடியார்கள்பால் பற்றுமிக்குடையனாய் இவன் உற்று விளங்கி னான். இங்ஙனம் இனியநிலையில் விளங்கியிருந்தும் கொடிய கள்ளை இவன் மறைந்து குடித்துவந்தான். யாரும் அறியாவண்ணம் முத லில் அதனைச் செய்துவந்தும் நாளடைவில் தன்னையறியாவண்ணம் இவன் பெருங்குடியனாயினான். இவன் களித்திருக்கும்பொழுது துற விகள் யாரேனும் எதிர்ப்படுவராயின் விரைந்துபோய் அவரடியில் விழுந்து ஆதரித்து வழக்கம்போல் அழைத்துவந்து உபசரித்துவை ப்பினும் முடிவில் குடியின் பெருமையைக் கூறிநிற்பன். இவனது நிலையினைக்கண்டு பலரும் நெஞ்சிரங்கி நீங்கினர் ஒருமுறை தருமசீலர் என்னும் சைனமுனிவரொருவர் உறி, கமண்டலம், பீலி, பிரம்பு முதலியவற்றைக் கையில்கொண்டு அந்நகரின் தெருவில் சென்றார். அவரை இவன் கண்டான். அவ்வமயம் களிமயக்கங்

கொண்டிருந்தா னாதலால் கடுத்துத் தொடர்ந்து அடுத்துநின்று "சுவாமிகாள்! நில்லுங்கள்! நான்சொல்வதைக்கேளுங்கள்: கள் மிக நல்லது; அதனைஉண்டால் இம்மையிலும் மறுமையிலும் இன்பம் உண்டாம்; அது கொலையினுல் வருவதில்லை; பனை தென்னைகளிலிரு ந்து ஊறுகின்றது; ஈறிலின்பந்தருவது; கொஞ்சம் குடித்துப்பாருங் கள்; பின்பு அதனஇன்பநதெரியும்;" என்று இன்னவகையில் பல னிப்பாடி அவரைஎதிர்மறித்து நிறுத்தி இவன் இரங்கியுரைத்தான் அன்று இவன் உரையாடிய படியை அடியில்காண்க.

"சிமிலிக் கரண்டையன், உறைகோற் பிரம்பினன்,
தவலருஞ் சிறப்பினர் ஆந்தாணத் துளோன்,
நாணுறும் உடையும் நன்கன நீத்துக்,
காணு வுயிர்க்குங் கையற் றேங்கி,
உண்ணு நோனபொடு உயவல் யானையின்
மண்ணு மேனியன் வருவோன் தன்னை
வந்தீர் அடிகள் நும் மலரடி தொழுதேன்
எந்தம் அடிகள் எம்முரை கேண்மோ!
அழுக்குடை யாக்கையிற் புகுந்த நும்முயிர்
புழுக்கறைப் பட்டோர் போன்றுளம் வருந்தாது
இம்மையும மறுமையும் இறுதியி லின்பமும்
தன்வயின் தருஉமெனன் தலைமகன் உரைத்தது
கொலையு முண்டோ கொழுமடல் தெங்கின்
விளையூந் தேறலின் மெய்ந்தவத் தீரே!
உண்டு தெளிந்திவ் யோகத் துறுபயன்
கண்டால் எம்மையும் கையுதிர்க் கொண்மென
உண்ணு நோன்பி தன்னொடுஞ் சூளுற்று
உண்மென இரக்கும ஓர் களிமகன்" (மணிமேகலை.)

சிமிலி = உறி. ஆந்தாணம் = தவப்பள்ளி. மண்ணுமேனி = கழுவாதஉடம்பு. தவத்தீர், தேறல் உண்ணும் என ஓர் களிமகன் இரக்கும் என்று கூட்டிநோக்குக. இங்ஙனம் பலவகையிலும் நிலை திரிந்து பலருங்கண்டு நகையாடும்படி களிமயக்கோடு இவன் வழி மறித்திருந்தான். நல்ல கல்வியாளனுயிருந்தும் கள்ளுண்டதனுல் தன் செல்வமுழுவதையும் இழந்து பின்பு அல்லல்பலஅடைந்தான். வெறிமிகுந்து இவன் அயர்ந்து புலம்புங்கால் ஊரவரெல்லாரும் உவ ந்துகூடி இவனுடைய உரைகளால் உள்ளநிலையை உற்றுணர்ந்து எள்ளி நகைத்தார். உள் ஒற்றி உள்ளூர் நகப்படுவர் எஞ்ஞான்றும்

கள் ஒற்றிக் கண்சாய்பவர் என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

"கள்ளும் பொய்யும் காமமும் கொலையும்
உள்ளக் களவுமென் றுரவோர் துறந்தவை," (மணிமேகலை)

பொய் கொலை முதலிய பாவங்கட் கெல்லாம் கள்ளுண்டல் காரணமாதல் தோன்ற இதில் அது முதலில் நின்றுள்ளமை காண்க.

நற்பெருங் கல்விச்செல்வ நவையறு நெறியைநண்ணி
முற்பய முணர்ந்ததூயோர் மொழியொடும் பழகி முற்றிப்
பிற்பய னுணர்தல்தேற்றாப் பேதைபோல், வஞ்சன்செய்த
கற்பனை யென்னஓடிக் கலந்தது கள்ளின் வேகம்.
(இராமாயணம்.)

கள் வெறியானது உள்ளடங்காது விரைந்துமேலோடி உணர்வற ஒழித்துத் துயர்மிகவிளைக்கும் எனவும், தனக்குத்தானே கேடு விளைக்கும் மூடமக்களே இக்குடியைக் கூடிநின்று அடியோடு கெடுவர் எனவும் இது குறித்திருத்தல் காண்க. இக்குடியின்கேட்டினை விளக்குதற்குக் கவி இதில் இணைத்திருக்கும் உவமைகளையும், அவற்றின் உள்ளுறை நயங்களையும் உய்த்துணர்ந்து கொள்க.

உண்டவர் உணர்வற ஒழித்து, நன்பொருள்
மண்டருள் மாண்பெலாம் மாய்த்து, வந்தயல்
கண்டவர் நகைத்திடக் காட்டிக், காய்நரகு
குண்டு மீளாவகை பூட்டும் கள்ளரோ.

எள்ளல்மீக் கூர இழிபழிகீழ்த் தள்ளுமே
கள்ளார்வ முற்றக் கடை.

கள்ளுண்டவனை எல்லாரும் எள்ளிப்பழிப்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

928. அன்று மறைத்துமேன் அங்கா ரகன்களியால்
குன்றிவெளி யானான் குமரேசா—என்றும்
களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉம் ஆங்கே மிகும். (அ)

இ—ள்.

குமரேசா! மிக்க வுணர்வோடு தன்னுள்ளத்தில் மறைத்து வைத்திருந்ததைக் களிமயக்கால் அங்காரகன் ஏன் வெளிவிடுத்தான்?

எனின், களித்து அறியேன் என்பது கைவிடுக; நெஞ்சத்து ஒளித்தது உம் ஆங்கே மிகும் என்க.

இது, குடியை மறைக்க முடியாதென்கின்றது.

களித்து என்றது கள்ளுண்டு என்றவாறு. காரணம் காரியத்தால் கூறப்பட்டது. கள் உண்டலால் உண்டாம் காரியம் களிப்பு; அது, உண்டலாகிய தன் காரணத்தின் மேல் நின்றது.

என்பது கைவிடுக = என்று சொல்லுதலை ஒழித்துவிடுக. மறைக்க முடியாததை மறைக்கும்படி முனைந்து நிற்பவனைப் பார்த்து "அந்த எண்ணத்தைத் தூரத் தப்பிவிடு" என்பது போல இது தணிவு தோன்ற நின்றது,

இனி, "களித்து அறியேன்" என்பது நான் கள்ளுண்டாலும் மற்றக்குடிகாரர்கள்போல் அறிவுமயங்கேன் எனவும் பொருள்படும்.

நெஞ்சத்து ஒளித்ததும் = உள்ளத்தில் மறைத்து வைத்ததும். அளபெடை இன்னிசை தோன்ற நின்றது.

மேல், கள்ளுண்டவர் உள்ளூரார் எல்லாராலும் எள்ளப்பட்டு இழிந்து கிடப்பர் என்றார்; இதில், அவர் உள்ளத்தில் ஒருமறையும் அமைந்து நில்லாமல் உலைகறியக் கெடுவர் என்கின்றார்.

மறைத்துக் குடித்துவைத்து யான் கள்ளுண்டறியேன் என்று பிறர்மதிக்கச் சொல்லுதலை ஒழிக; உள்ளத்தொளித்த அக்கள்ளம் உண்ட அப்பொழுது எப்படியும் வெளிப்பட்டு விடும் என்பதாம்.

கள்ளானது தன்னைக்குடித்தவன் எவ்வளவு வலியுடையனாயினும் அவனை மயக்கி விடும்; விடவே அவனது மனம் மொழி மெய்கள் நிலைகுலையும்; குலையவே வாய்க்கு வந்தபடியெல்லாம் புலம்பி உருண்டு கிடப்பன்; கிடக்கவே தான் உண்ணுதபொழுது நல்லொழுக்க முள்ளவன்போலப் பிறர்மெச்சச் சொல்லாடியவெல்லாம் உண்டபொழுது "சீ இவன் குடிகாரப்பயல்" என்று எல்லாருக்கும் தெளிவாக வெளிப்பட்டுவிடும் ஆதலால் கள்ளுண்டல் என்னும் இப் பொல்லாப் பிழையை மறைக்க முடியாதென்பார் "களித்து அறியேன் என்பது கைவிடுக" என்றார்.

கள்ளுக்குச் சோல்விளம்பி என்று ஒரு பெயருள்ளமையால் அதனைக் குடித்தவனைத் தன்னையறியாது புலம்பச் செய்யும்; முன்பு உள்ளத்தில் அவன் மறைத்து வைத்திருந்த வெல்லாம் யாதும்

மறையாமல் அப்புலப்பத்தில் வெளியே புலப்படுமாதலால் "ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்" என்றார். கள்ளுண்டவன் தன்னாடித் தளர்ந்து உள்ளவற்றையெல்லாம் உளறி விடுவன் என்றபடி.

"களித்தோன் அவிநயம் கழறுங் காலை
ஒளித்தவை ஒளியான் உரைத்த லின்மையும்
கவிழ்ந்துரு சோர்தலும் தாழ்தலும் தளர்தலும்
வீழ்ந்த சொல்லொடு மிழற்றிச் சாய்தலும்
களிகைக் கவர்ந்த கடைக்கண் ணோக் குடைமையும்
பேரிசை யாளர் பேணினர் கொளலே" (அவிநயம்.)

கட்குடியனது இழிநிலையையும், பழியியல்பையும், உள்ளடக்கமின்றி ஓட்டை நெஞ்சனாய் அவன் உளறிவழிதலையும், உணர்விழந்து தொலைதலையும், குறித்து இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

"ஒளித்தவ ருண்டு மீண்டிவ் வுலகெலாம் உணரவோடிக்
களித்தவ ரெய்திநின்ற கதியொன்று கண்டதுண்டோ"
(இராமாயணம்.)

அறைக்குள் வைத்து மறைத்துக்குடித்தாலும் பின்பு உலகறிய வெளிப்பட்டுக் குடியர் ஒழிவர் என உணர்த்தி நிற்கும் இதனழகை ஊன்றிப்பார்க்க.

கட்குடியானது எவ்வகையிலும் மறைக்கமுடியாத ஓர் பெருங் குற்றமாதலால் அதனை அறவே ஒழித்தொழுகவேண்டும் என்பது கருத்து.

உடல்வலியிலும், மனத்திண்மையிலும், எவ்வளவு உயர்வுடையராயினும் குடியர் மதிகெட்டு மடிவர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை அங்காரகன்பால் உணரப்படும்.

## கதை.

அங்காரகன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத் தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர் அவந்திநாட்டின் வடபே லெல்லையிலிருந்த சையம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். தெய்வ அருள் கைவரப்பெற்றவன். மிக்க மெய்வலியுடையவன். இவன் சித்திராவதி என்பவளை மணந்து, அரிய இன்பங்களை நுகர்ந்து, ஓர் புதல்வியைப்பெற்று, அவளுக்கு அங்காரவதி என்று பெயரிட்டு எங்கும் புகழ்பரப்பிப் பொங்குமகிழ்வோடு தங்கியிருந்தான். பெரியபோர்முனைகளில் சென்று பகைவர் பலரையும் வென்று நிகரற்ற

வீரனென்று இவன் உயர்வுற்று நின்றான். குறுநில மன்னரும் மறுபுல வேந்தரும திறைகொணர்ந்து தர இவன் முறைபுரிந்து வந்தான். மயிர் நுனியினும் மிக நுணுகிய சிறியதுளை ஒன்று இவனது இடக்கரத்தில் உண்டு. அதனைக் குறிபார்த்து அடித்தாலன்றி இவன் அழிவுறுவதில்லை. அத்தகைய உயிர்ப்பாதுகாப்பைச் சத்தியினருளால் பெற்றிருந்தான்; அதனால் யாண்டும வெற்றியுடையனாய் விளங்கிநின்றான். இங்ஙனம் அரியநலங்கள்பல அமைந்திருந்தும் இடையில் ஒருமுறை சிறிது நறவருந்தினான். இயற்கையில் மிக நல்லவனாதலால் நாளடைவில் அதனை மறைத்துக் குடித்துவந்தான். இவ்வாறு இவன் நிலைதிரிந்து வருதலைக் குறிப்பாலுணர்ந்து இவனது குலகுருவாகிய சதசீலர் என்பவர் ஒருநாள் இவனிடம் வந்து "மதுவுண்டல் உண்டோ?" என்று மிகவிநயமாக வினவினார். தீதுடையஅதனை யான் யாதும் கண்டறியேன் என்று இவன் துணிந்து கூறினான். அவர் அகன்றுபோயினார். ஒருமுறை அவந்தி மன்னனாகிய சண்டமகாசேனன் என்பவன் வேட்டைக்கு வந்தஇடத்தில் ஓர் இனிய பூஞ்சோலையில் தனியேநின்றான். அதனை இவன் மகளாகிய அநங்காரவதி கண்டாள். பெருங்காதல் கொண்டாள். தன்னைக்கலந்து மகிழும்படி காதற்குறிப்போடு இனியன பலமொழிந்து விழைந்துநின்றாள் அவனை இன்னானுடைய மகளென்று அம்மன்னன் தெரிந்துகொண்டு அவளால் இவனது உண்மை நிலையையோர்ந்துகொள்ள ஓர் உபாயஞ்சூழ்ந்தான். அவள் சென்று தந்தாய்! "இதுவரையும் வந்தவர்களெல்லாரையும் வென்றிருக்கிறீர்கள்; இனி எவரேனும் பலர் திரண்டு உங்களைவெல்ல வந்தால் நீங்கள் என்செய்வீர்கள்!" என்று தன் செய்கைபோல் இரங்கிக்கேட்டாள். அவ்வமயம் களிமயக்கோடு இருந்தானாதலால் அவளது மொழியைக் கேட்டவுடனே விழிசிவந்து முனைந்தெழுந்து "பேதாய்! என்னை வெல்லவல்லவன் யாவன்? யாண்டும் எனக்கு எதிரியில்லை; மிக நுட்பமாக ஊன்றிநோக்கினாலன்றி யாருக்குந் தோன்றாத அணுமையான சிறிய துவாரம் என் இடக்கையில் உள்ளது; இதோபார்! குறிப்பாக இதில் அடிப்பவன் எவனோ? அவனே என்னை முடிப்பவனாவான்" என்று இவன் முழங்கிமொழிந்தான். குடிவெறியினால் இங்ஙனம் இவன் மதிமறந்துரைத்ததை அவன் மறைந்து கேட்டு இடைதெரிந்து வந்து ஒரேதொடையில் குறிதவறாமல் எறிந்து நின்றான். உடனே இவன் இறந்துவிழுந்தான். யாருக்குஞ் சொல்லாமல் மிக

அடக்கமாகத் தன்நெஞ்சில் ஒளித்து வைத்திருந்த அரிய மறையினைக் களிமயக்கால் வெளியிட்டு இவன் அழிவுற்றதையறிந்து அனைவரும் வருந்தினர். "களித்தறியேன் என்பது கைவிடுக; நெஞ்சத்து ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்" என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

"ஆற்றல் மிகுந்திருந்தும் அங்கா ரகன்மறையைப்
போற்றா துரைத்ததனாற் பொன்றினன்—மாற்றமொன்றே
கொன்றழிக்கும்; நின்றுநலம் கூட்டும்; குறித்தென்றும்
நன்றறிந்து சொல்க நயந்து."

உளத்தில் ஒளித்திருந்ததை வெளிப்படுத்தி இவன் உயிரழிந்த உண்மை இதன் கண்ணும் விளங்குதல் காண்க.

விள்ளுறு நாணினர்; விரகத் தீயினர்;
உள்ளுறும் உயிர்ப்பினர்; உலையு நெஞ்சினர்;
தள்ளுறு தம்முணர் வின்றிச் சாம்பினர்;
கள்ளினும் உளதுகொல்! கருத்தழிப்பதே. (க)

பளிக்கறை யன்னதோர் படுகர்ப் பாங்கினும்
தளிர்ப்புறு செருவினும் தவறுற் றேகுவார்;
தெளிப்பவ ரின்மையின நெறியிற் சென்றிலர்;
களிப்பவர் தமக்கும் ஓர் கதியுண்டாகுமோ. (கந்தபுராணம்)

கள்ளானது தன்னை மறைக்க முடியாதபடி அறிவைக் கெடுத்துச் சிறுமைப்படுத்து மென்பதை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

பளிக்கு வள்ளத்து வார்த்த பசுநறுந் தேறல்மாந்தி
வெளிப்படு நகையவாகி வெறியன மிழற்றுகின்ற
ஒளிப்பினும் ஒளிக்கமாட்டா ஆடலை யுணர்த்துமாபோல்
களிப்பினை யுணர்த்துஞ்செவ்விக் கமலங்கள் பலவுங்கண்டார்.
(இராமாயணம்.)

கள்ளருந்தினவர் உள்ளுணர்வழிந்து, உரைபலபிதற்றி, தள்ளருமறையைத் தாம் வெளிப்படுத்தி எள்ளல் மீக்கூர இழிந்து களிப்பரெனக் குடியின் விளைவினை இது விளக்கி நிற்றல் காண்க. "நெஞ்சத்து ஒளித்ததூஉம் ஆங்கே மிகும்" என அடிகள் சுட்டியுள்ளதை அடியொற்றி "ஒளிப்பினும் ஒளிக்கமாட்டா" எனக் கவி இதில் உணர்த்தியிருத்தலை யூன்றிப்பார்க்க.

கயல்வரு காலன்கைவேல் காமவேள் கணையென்றாலும்
இயல்வரு கிறகிலாத நெடுங்கணார் இணைமென் கொங்கை

துயல்வரு கனககாணும், காஞ்சியும், துகிலும், வாங்கிப்
புயல்வரு கூந்தற் பாரக் கற்றையிற் புனைய லுற்றார்.
(இராமாயணம்.)

இது களித்து நின்றபோது சிலஅரக்கியர் செய்த செயலைக் குறித்து வந்தது. களித்தவர் நெஞ்சம் நிலையழிந்து ஒளிக்கவேண்டியவற்றையும் ஒளியாராய் இளிப்புறுவர் என்பதை விளக்கி நகைச்சுவைததும்ப இஃதுணர்த்திநிற்கும் அழகை ஊன்றி நோக்குக.

குன்றுக் குடியன் குடித்திலேன் என்றுரைத்தல்
என்றாய் மலடி யெனல்.

மறைப்பினும் கட்குடி மறைபடாதென்பது இதனால் கூறப்பட்டது.

929. கள்ளருந்தல் தீமையெனக் காட்டியுமேன் காதலனாய்
கொள்ளாது நின்றான் குமரேசா—அள்ளிக்
களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று. (௯)

இ—ள்.

குமரேசா! கள்ளுண்டல் தீமையென ஏதுவோடெடுத்துக்காட்டியும் காதலன் ஏன் யாதும் உணராது அதில் ஊக்கிநின்றான்? எனின், களித்தானைக் காரணம் காட்டுதல் நீர்க்கீழ்க் குளித்தானைத் தீத்துரீஇ அற்று என்க.

இது, குடியனைத் திருத்தமுடியாதென்கின்றது.

காரணம் காட்டுதல் என்றது கள் தீயது என்று நீதிநூல் முதலிய ஏதுக்களை எடுத்துக்காட்டிக் குடியனுக்கு உணர்த்துதல் என்றவாறு. கீழ்நீர்க்குளித்தானை = நீரின்கீழ் மூழ்கிக்கிடப்பானை. ஊருள் என்பது உள்ளூர் என நிற்றல்போல் நீர்க்கீழ் என்பது கீழ்நீர் என நிலைமாறி நின்றது.

தீ என்றது விளக்கினை. துரீஇ = நாடுதல், தேடுதல். துருவி என்பது துரீஇ என அளபெடுத்து நின்றது. இது சொல்லிசை அளபெடை.

மேல், கள்ளருந்தினவன் அறிவுகேடனாய் இழிவுறுவன் என்றார்; இதில், ஒருவாற்றானும் அவனுக்கு உணர்வு கொளுத்தமுடியாதென்கின்றார்.

கள்ளுண்டு களித்துக் கிடப்பானைக் காரணங்காட்டித் தெளிவித்தல் நீரின்கீழே மூழ்கியிருப்பானை விளக்கினால் தேடுதலை ஒக்கும் என்பதாம.

இருளில் மறைபட்டுக் காணாமல் ஒழிந்துகிடக்கும் பொருளைக் கையில் விளக்கை யெடுத்துக்கொண்டுபோய்த்தேடுதல் வழக்கமாதலால் அவ்வுலக வழக்கைத் தழுவி இவ் வுவமை கூறினர்.

கள், பஞ்சமா பாதகங்களுள் ஒன்று; அதனைக் குடித்தால் அறிவுகெடும்; ஆற்றல்குன்றும்; யாவரும் இகழ்வர்; திருவும் தேசும் உருவற ஒழியும்; பழியும் பாவமும் பகையும் வளரும்; அழிதுயர் அடையும்; இழிநரகெய்தும் என்பனவாதியாக நூல்விதிகளையும், அநுபவங்களையும் வடித்தெடுத்துக்காட்டி இடித்து இடித்து வற்புறுத்தி யுணர்த்தினாலும் குடியன் யாதும் உணரானாய்த் தன்தீதின் கண்ணேயே திமிர்ந்து நிற்பன்; எவ்வகையிலும், எவரும் அவனைத் தெளிவித்துத் திருத்த முடியாது என்பார் "களித்தானைக் காரணம் காட்டுதல், கீழ்நீர்க் குளித்தானைத் தீத் துரீஇ அற்று" என்றார்.

கள்ளுண்டவன் உள்ளமயங்கி உணர்வழிந்திருப்ப னாதலால் நல்ல அறிவு சொல்லினும் செவிடன்காதில் ஊதிய சங்குபோல் அவனுள்ளத்தே சிறிதும் செல்லாதென்பதை உணர்த்தற்கு உவமைபுணர்த்தியிருக்கும் அழகை இதில் ஊன்றிப் பார்க்க.

நீருள் மூழ்கிக்கிடப்பானை விளக்கைக்கொண்டு தேடுதல் யாண்டும் இல்லையாதலால் இஃது இல்பொருளுவமையாம்.

விளக்கு அணுகியபொழுதே நீர்ப்பெருக்கு அதனை அவித்துவிடுதல்போல் நல்லுரைசொல்லிய பொழுதே களிமயக்கு அதனை அழித்துவிடும என்றபடி.

விளக்கொளி நீருட்செல்லாதவாறு போல் உணர்வுரை, குடியன் உளத்துட் புகாதென்பதாம். கள், நீருக்கும்; களித்தான், குளித்தானுக்கும; காரணம, விளக்கிற்கும்; காட்டுதல், துருவுதற்கும; ஒப்பாய் நின்றன. காரணத்தை விளக்கோடு ஒப்பவைத்தது மனவிருள் ஒழித்துத் தெளிவுறுத்தி நிற்கும் அதன் மாட்சி கருதி. கள்ளருந்தி நிற்கும் களிகளுக்கு நல்ல அறிவுகளை நன்கு எடுத்துக் காட்டி நயந்து ஊட்டினாலும் உள்ளங் கொள்ளாராய் அதன்கண்ணேயே ஊக்கி நின்று ஒழிந்து போவர் என்றவாறு.

நீதிநலங்களை எவ்வளவு ஓதியுணர்த்தினும் குடியன் உணர்

ந்து தெளியான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காதன்பால் உணரப்படும்.

## கதை.

காதன் என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர்க் கீழ்கடலிடையிருந்த ஒரு தீவில் இருந்தவன். அங்கு வாழ்ந்திருந்த நாகர் என்னும் சாதியாருக்குத் தலைவன். நெடியவடிவும், கரியநிறமும், பெரியவுருவும், கடியமொழியும், படிய நின்றவன். மேடுகொண்டு திரண்டுருண்ட சிவந்த கண்ணினன். வஞ்சம் இலனாயினும் தன் நெஞ்சு போனபடியே வெருசெயல் புரிந்தவன். கொலையும் புலையு மிகுந்து கொடியரான தன்மரபினர் புகழ்ந்து போற்ற இவன் பொங்கியிருந்தான். இவன்காலத்தில் காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த சாதுவன் என்னும் வணிகர் தலைவன் கப்பலேறிச் செல்லுங்கால் இடையே அது, உடைந்துபோக அவன் கடலில் வீழ்ந்து தெய்வ கதியாத் தப்பி இவனிடம் வந்துசேர்ந்தான். அவ்வமயம இவன் குடித்துவிட்டுக் கட்குடத்தைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு தன் மனைவியோடு உல்லாசமாய் மகிழ்ந்திருந்தான். அவனைக்கண்டதும் "இங்கு நீ வந்தகாரணம என்னை?" என்று இவன் கடுத்துக்கேட்டான். இவன்பேசுமொழியை அவன் நன்கு தெரிந்திருந்தானாதலால் இனிது பதிலளித்தான். கரிமுகக் கோடு விழிசிவந்து இவனிருந்த நிலையினை நோக்கி முதலில் அவன் நெஞ்சம் கலங்கினான்.

> "கள்ளடு குழிசியும, கழிமுடை நாற்றமும்,
> வெள்ளென் புணங்கலும, விரவிய இருக்கையில்
> எண்குதன் பிணவோ டிருந்தது போலப்
> பெண்டுட னிருந்த பெற்றி நோக்கிப்
> பாடையிற் பிணித்து" (மணிமேகலை.)

அவன் பரிந்து நின்றான். அவனது அழகையும் மொழியையும் கேட்டு இவன் உவப்பிக மகிழ்ந்து உறவு செய்துகொண்டு சில நாள் அங்கு வைத்து அவனை நன்கு பேணினான். தனக்கு நேசனான இவன், நீசக்கள்ளினை நித்தலும் குடித்து வருதலைக்கண்டு வருத்தங்கொண்டு அடுத்து நின்று பலமுறையாக நீங்கலை அவன் எடுத்துக்காட்டி இதம்பெற இனிதாக இடித்தறிவூட்டினான். அன்று அவன் ஊட்டிய பயனால் திருந்தியது இதனடியில் வருதல் காண்க.

"மயக்குங் கள்ளும், மன்னுயிர் கோறலும்,
கயக்கறு மாக்கள் கடிந்தனர் கேளாய்!
பிறந்தவர் சாதலும் இறந்தவர் பிறத்தலும்
உறங்கலும் விழித்தலும் போன்ற துண்மையின்
நல்லறஞ் செய்வோர் நல்லுல கடைதலும்
அல்லறஞ் செய்வோர் அருநர கடைதலும்
உண்டென உணர்தலின் உரவோர் களைந்தனர்"
(மணிமேகலை.)

என்பது ஆதியாக இங்ஙனம் காரணங்கள் பலகாட்டி உறுதி தோன்ற அவன் கூறுதி உணர்த்தியும் யாதும் கொள்ளானாய் அக்கள்ளினையே இவன் உவந்து கொண்டான்.

"கள்ளும் ஊனும் கைவிடின் இவ்வுடம்பு
உள்ளுறை வாழுயிர் ஓம்புதல் ஆற்றேன்"

என்று உறுத்திச் சொல்லி அவனை இவன் வெறுத்து விடுத்தான். தனது அறிவுரை இவன்பால் யாதும் செல்லாதென்று அவன் அறிந்தடங்கி அகன்றுபோனான். கள்ளின்தீமையை உறுதிபெற ஏதுவோடு எடுத்துக்காட்டியும் ஒருசிறிதும் உணராமல் அதனையே விழைந்து நின்றதை நோக்கி அனைவரும் இவனை இகழ்ந்து நின்றார். "களித்தானைக் காரணம் காட்டித் திருத்தமுடியாது" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

வள்ளத் தேயுற வாக்கு மதுநுகர்ந்
துள்ளத் தேயுணர் வோடிட ஓடிவீழ்ந்
தள்ளற் பள்ளத் தழுந்தினர் மள்ளராம்
கள்ளுண் பார்க்குக் கதியுமுண் டாங்கொலோ.
(திருப்பூவணப்புராணம்.)

தீமையயக்குஞ் சுராபானம் செய்தபாவி மலம் புசித்துத்
தூய்மையடையா வுடல்வீக்கித் துக்கத்துழலு முயிர்களா
நாமதடையும் பறவைகளா நலமில் கிருமி கீடமாத்
தோமதுறு பல் பவமெடுத்துச்சுழன்று திரிவான் பற்பலநாள்.
(சூதசங்கிதை)

செத்தபிணம் வீழ்ந்தவன்றே தீர்ந்தொழியும் கள்ளுண்போன்
நித்தம் பிணமாம் நிலைத்து.

குடியனுக்கு அறிவு கொளுத்தமுடியாதென்பது இதனால் கூறப்பட்டது.

930. கண்டுந் தெளியாமல் கங்கனேன் வெங்களிமீக்
கொண்டு மடிந்தான் குமரேசா—ஒண்டியே
கள்ளுண்ணுப் போழ்திற் களித்தானைக் காணுங்கால்
உள்ளான்கொல் உண்டதன் சோர்வு. (ய)

இ—ள்.

குமரேசா! கள்ளின் சிறுமையை நேரில்கண்டும் கங்கன் என் ஒன்றுந்தேராமல் அதனை உண்டுழின்முன்? எனின், கள் உண்ணுப்போழ்தில் களித்தானைக் காணுங்கால் உண்டதன் சோர்வு உள்ளான் கொல்? என்க.

இது, குடிகாரன் என்றும எவ்வகையிலும் தன் கெடுநிலையைக் கண்டு தெளியான் என்கின்றது.

களித்தானை = கள்ளுண்டு களித்துக்கிடப்பானை. உள்ளான் கொல் = நினையான்போலும். உள்ளுதல் = நினைத்தல், கருதல். உள்ளினல் கள்ளின்தீமையை உணர்ந்து ஒழித்திருப்பான்; அங்ஙனம் யாண்டும ஒழிக்காமல் மீண்டு மீண்டும் களித்து நிற்றலால் உள்ளான்கோல்? என்முர். கொல் என்னும் இடைச்சொல் ஐயத்தோடு அகவிஞவும் அமைய நின்றது.

மேல், குடியனை எவ்வாற்ருனும எவராலும் தெளித்துத்திருத்தமுடியாதென்முர்; இதில், தானகவும தெளிந்து திருந்தான் என்கின்முர்.

ஒருவன் கள்ளுண்ணுதபொழுது அதனை உண்டுகளித்து உழலுகின்றவனைக் கண்டபோதேனும் தான் உண்டகாலத்து உளதாம் தன் இழிநிலையை உணரமாட்டான்கொல்? என்பதாம.

கள்ளின் புன்மையையும், தன்னைக் குடித்தவரை அடியோடு அது கெடுத்துவிடும் என்பதையும் விளக்கிக்காட்டி அதன் தீமையைக்குறித்து விரித்திருக்கும நூல்களைக் கண்டு தெளியானுயினும் அதனையுண்டவன் படுமபாட்டைக் கண்கூடாக நேரேகண்டபொழுதாவது கருதியுணாரது குடியன் அதனைக் குடியா தொழிக்கலாகாதா! என அடிகள்உளங்கரைந்து இதில் உரைத்திருத்தல் காண்க.

காணுங்கால் உள்ளான் கோல்! என்றது கருதலளவைக்குக் காட்சிமுதலில் ஏதுவாகு மாதலால் அந்நிலைமைகருதி என்க.

கள்ளுண்டு பழகினவன் பின்பு தன் இழிநிலையை எள்ளளவும்

உணராதாய் இழிந்தே ஒழிவான் என்பது கருத்து. பெருங்குடிய னொருவன் ஒருநாள் மிகக் குடித்துவிட்டுத் தனியே காட்டுநெறியில் பிணம்போல் விழுந்து கிடந்தான். அவ்வழியே வந்த ஒருவன் இவனை அணுகி நோக்கினான்; உருட்டிப்பார்த்து உயிரில்லையென்று துணிந்தான்; அநாதிப்பிணத்தை அடக்கஞ்செய்தல் அறமாமெ ன்று அவன் அறிந்திருந்தானாதலால் இருவரைத் துணைக்கூட்டி இவனை எடுத்துக்கொண்டுபோய்ச் சுடுகாட்டில் கட்டையடுக்கி அத ன்மேல் வைத்து அடியில் நெருப்பை மூட்டினான். மூட்டியதீ உடலில் பற்றியவுடனே மயக்கந் தீர்ந்து இவன் விழித்தெழுந்து "ஓ! உறங்கிவிட்டேனே!" என்று விரைந்தெழுந்து வெருண்டு சென்று அடுத்திருந்த கட்குடிசையுட் புகுந்தான். அங்கமர்ந்தி ருந்து கள்ளருந்தினான். அவர் உள்ளம் வியந்து ஒதுங்கிப்போயினார்.

"நரிநாய் பறவை சூழவழி நடுவில் கிடந்த சவ மதனை
உரியார் இலரென் றிடுகாட்டுக் குடன்கொண்டேகிக் கட்டையில்வைத்து
எரியாகின்றேன்; பிணம்விழித்திங் கின்றேன்மயக்கென் றியம்பி மெய்கொள்
அழலை அவிக்குமுன்ன மெழுந்து அயற் கட் கடையுட் புகுந்ததுவே."

இதனால் மேற்குறித்த வுண்மையும், குடியின் கொடுமையும், அதன் ஒழிவருந்தன்மையும், உணரலாகும்.

கள், மிகத்தீயது; அதனை உண்டவர் ஒளியிழந்திழிவர்; உய ர்ந்தோரால் மதிக்கப்படார்; பெற்றதாயரும் அவரை வெறுத்தி கழ்வர்; அவர்க்கு நாணம் இல்லையாம்; மூடமேமிகும்; அவர் செ த்தவரேயாவர்; எல்லாரும் அவரை எள்ளிச்சிரிப்பார்; அவர் உள்ள த்தை உளறித்துள்ளியழிவர்; உணர்வின்றிக்கழிவர்; ஒருவகையா னும் உய்யாதொழிவர் எனக்குடியின் கொடுமையை விளக்கி அதனை மறந்துந்தீண்டலாகாதென அடிகள் இங்ஙனம் உணர்த்தியருளினார்.

கட்குடியன் தன் கெடுநிலையை ஒருகாலத்தும் உணர்ந்து திருந்தான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கங்கன் பால் உணரப்படும்.

## கதை.

கங்கன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர் அவந்தி நாட்டிலே உச்சைனி என்னும் நகரிலிருந்தவன். நறவர் மரபினன். ஓர் குறுநில மன்னனுக்கு

நெருங்கிய உறவினன். பெரும் பொருளுடையவன். இருண்ட குஞ்சியும், திரண்ட தோளும, அகன்ற மார்பும், மருண்ட பார்வையும், வெருண்ட சீர்மையு மேவி நின்றவன். இவன் நெஞ்சில் வஞ்சமிலனுயினும் வெஞ்செயலுடையவன். யாவர் மாட்டும் வன் சொல்லாடும புன்செயலாளன். தனக்கமைந்திருந்த செல்வச்செருக் கால்புல்லர்சிலருடன் கூடிக் கள்ளருந்தி எப்பொழுதும் களித்திருந் தான். கள்ளானது இருமையும் கெடுக்கும் சிறுமை யுடையதென்று அறிஞர் சிலமுறைஅணுகியுரைத்தும யாதும தேராமல் அத்தீதின் கண்ணேயேஇவன் திமிர்ந்து நின்றுன். மிக்க உடல்வலி யுடையனுத லால் இவன் குடிவெறியுற்றிருக்குங்கால் யாரும் அருகே செல்ல அஞ்சி அகல்வர். ஒருமுறை சிலமுள்ள வேதியனெருவன் வழியே செல்லுங்கால் களிமயக்கோடிருந்த இவன் இடையே சென்று அவனை எதிர்மறித்து நின்று இடர்மிகச் செய்தான். அன்று இவன் செய்தபடியைக் கொங்குவேளிர் என்னும் புலவர் பெருமா ஞர் அழகுறக் கூறியுள்ளார். அடியில் வருதல் காண்க.

"சுழலுங் கண்ணினன்; சோர்தரு மாலையன்;
அழல்நறுந் தேறல் ஆர மாந்திக்;
காழக மீககொண் டாழுந் தானையன்;
வாழ்க வாழ்கஎம் மதிலுஞ் சேனை
மட்டுண் மகளிர் சுற்றமொடு பொலிகெனத்
துட்டக் கிளவி பெட்டவை பயிற்றிக்;
கட்பகர் மகடூஉக் கட்குடை யோசையும்
கன்னமர் பள்ளிக் கம்மியர் இடிக்கும்
பன்மலர்க் காவி னம்மனை வள்ளையும்,
குழலும் யாழும் மழலை முழவமும,
முட்டின் றியம்பும பட்டினம் ஒரீஇத்,
துறக்கம் கூடினும் துறந்திவண் நீங்கும்
பிறப்போ வேண்டேன் யானெனக் கூறி,
ஆர்த்தவாயன்; ஊக்களி மூர்க்கன்;
செவ்வழிக கீதம் சிதையப் பாடி,
அவ்வழி வரும் ஓர் அந்தணாளனைச்
செல்லல்! ஆணை; நில்! இவண்; நீஎன

எய்தச் சென்று வைதவண் விலக்கி
வழுத்தினேம் உண்ணுமிவ் வடிநறுந் தேறலைப்
பழித்துக் கூறுநின் பார்ப்பனக் கணம; அது
சொல்லாயாயிற் புல்லுமென் யானெனக்
கையலைத் தோடும் ஓர் களிமகன் " (பெருங்கதை)

உஞ்சேனை = உச்சயினிநகரம். அழகிய மதில்களால் நலமுறச் சூழப்பட்டிருந்த தாதலின் அது "மதில் உஞ்சேனை" என நின்றது. "கண்ணினன், மாலையன், தானையன், வாயன், மூர்க்கன் ஆய ஓர்களிமகன், ஓர் அந்தணாளனை நில் என வைது விலக்கிப்புல்லுவன யானெனக் கையலைத் தோடும்" என்று கூட்டிக் காண்க. அச்சாது வேதியனை வழிமறித்து நின்று களிமயக்கோடு இவன் மொழிபலபிதற்றி நகைச்சுவைக கேதுவாய் நவைபுரிந்தயர்ந்ததும, பிறவும இதன்கண உணரலாகும. இங்ஙனமவெறிககக்குடித்துககளித்துத்திரிந்தஇவன் இறுதியில் செல்வமுழுவதையும இழந்து அல்லல் பல அடைந்தான். அடைந்தும அக்குடியின் தீமையை உணராமல் மிகமீறியே நின்றான். ஒருநாள் இவன் குடிக்கச் செல்லுங்கால் இடையே ஒருவன கள்ளுண்டு களித்துக் கிடந்தான்.

"அலருற; ஈ எறும்பு ஆயத்; தேளொடும்
பல்விலங் கணுகுறப் படுத்த பாயலின்
மலசல வாந்தியும மயக்கும் கோடலால்
நிலமதில் நரகமே நிதம் கள்உண்பர்க்கே."

என்றபடி ஈனங்கள் பல சூழ இழிந்த பிணம்போல் நடுவே அவன் அயர்ந்து கிடந்தான். அந்நிலையினைக் கண்டும் இவன் நெஞ்சுணர்ந்து திரும்பாமல் புலை மயக்கோடுபோய்ப் புகுந்து குடித்தான். யாருரையுங் கேளாமல், எவ்வகையிலுந் தேராமல் குடிமீறிநின்றதால் இவன அடியோடழிந்தான். கள் உண்ணும் போழ்தில் களித்தானைக் காணுங்காலும் உண்டதன் சோர்வை உள்ளானாய்இழிமகன் ஒழிவனென்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

கோத்தமே கலையினோடுந் துகில்மணிக் குறங்கைக்கூடக்
காத்தன கூந்தற்கற்றை யற்றவத் தன்மைகண்டு
வேத்தவை கீழுளோரும் கீழ்மையே விளைத்தார்; மேலோர்
சீர்த்தவர் செய்யத்தக்க கருமமே செய்தார் என்ன.

(இராமாயணம்.)

கள்ளைக் குடித்துநின்ற ஒருத்தி தான் உடுத்தியிருந்த உடை மேகலையோடு நழுவி இடையில்விழவும்அறியாளாய் அயர்ந்து நிற்ப அவள் விரித்த கூந்தல் வந்து மானத்தை மறைத்து நின்றது எனக் களிமயக்கால் நேரும இழிவிழிவுகளை இது விளக்கி நிற்றல் காண்க உறவிலராய் மேலோர் அகன்றிருப்பினும ஆபத்தில்வந்து மானங் காத்து உதவி நிற்பர்; நெருங்கிய உறவினராய் அடுத்து நிற்பினும கீழ்மக்கள் சமயத்தில் கைவிட்டு அகலப்போவர்; என உவமை புணர்த்தி இக்களிநிலையிலுங்கூட ஓர் உயரிய உறுதிநலனைக் கவி இதில் உணர்த்திவைத்திருக்கும் அருமையை ஊன்றிப்பார்க்க.

கள்விலைபகர்வோர் கள்ளினைநுகர்ந்தோர், கள்ளருந்துதற்குடன்படுவோர், கள்ளருந்தினரை மகிழ்நர், நரகிற் கற்பகாலங் கிடந்தழுந்தி, எளருந்துந்தீய மலப்புழுவாகி மலத்தினை நுகர்ந்து பின் இறந்து, விள்ளருங் கொடிய ரவுரவ நரகின் மீட்டு மீட்டுமூன்று நாள் கழிப்பர். (கூர்மபுராணம்)

உள்ளநல மெல்லாம் ஒழித்துப் பழிவளர்த்து
வெள்ளமென அல்லல் விளைக்குமே—கள்ளென்னும்
பாவியொடு சின்னாட் பழகினால் ஐயகோ
ஆவியொடு மாழ்த்தும் மளறு. (தருமதீபிகை.)

வலியினை யழிக்கும்; மரபினைக் கெடுக்கும;
பொலிவுறு திருவையும் புகழையும் போக்கும்;
மெலிவினை விளைக்கும்; நலிவினை வளர்க்கும்;
பழிநோய் பாவம் அழிசா வனைத்தும்
குழுவொடு கூட்டும்; இழிவுமே னீட்டும்;
பொல்லாக் கள்ளென நல்லா ரறிந்து
சொல்லால் அதன்பெயர் சொல்லவுங் கூசுவர்;
கல்லாக் கயமைப் புல்ல ரதனைப்
புல்லிப் பருகி அல்லல்மீக் கூர்ந்து
பழியும் பாவமும் படர்ந்து
அழிநர காழ்ந்து ஒழிகுவர் மாதோ.

கள்ளின் தீமையும், அதனை உண்டார்க்கு உளவாம் இழிவுகளும், இழவுகளும், துயரங்களும் இவற்றால் இனிதுஉணரலாகும்.

புன்னறவை வாய்வைத்த புல்லியரை அன்னதுபின்
வேந்நரகில் வைத்து விடும்

கள்ளுண்டவர் எவ்வாற்றானும் உய்வின்றி ஒழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

கள்ளினை அருந்தினவர் புகழையும் மதிப்பையும் பொருந்தா தொழிவர். பெரியோர்கள் அவரைச் சிறிதும் மதியார். எல்லாராலும் அவர் எள்ளப்படுவர். நாணமின்றி அவர் நலிந்துழல்வர். கள்ளுண்பவர் ஆக்கங்கெட்டு அறிவிழந்திழிவர். அவர் செத்த பிணம்போல் தேம்பிக் கிடப்பர். ஊரரெல்லாரும் அவரைக் காறி யுமிழ்வர். உள்ளடக்கமின்றி அவர் உளறி யலைவர். நல்லோர் உறுதிசொல்லினும் அதனை அவர் ஓர்ந்து கொள்ளார். எவ்வகை யினும் தெளிவுறாமலே அவர் இழிவுற்றழிவர்.

கூங-வது கள்ளுண்ணாமை முற்றிற்று.

---

# 94-ம் அதிகாரம் சூது.

அஃதாவது சூதாடலின் தீமை. வேசையும், கள்ளும்போல் இதுவும் நாசம்பயக்கும் ஆதலால் அவற்றோடு நேசமுற நின்றது "இருமனப்பெண்டிரும், கள்ளும், கவறும் திருநீக்கப்பட்டார் தொடர்பு" என முன் தொடர்புசெய்து சுட்டியபடியே இறுதி யில் இது வைக்கப்பட்டது. கூடல் குடித்தல் ஆடல் என்னும் இவை இன்பம்போல் தோன்றிப் பின்பு பல்வகைத்துன்பங்களோடு பழிபாவங்களையும் விளைத்து இருமையையும் இழப்பித்து இழிவுறுத்துமாதலால் இவற்றை யாதும் தீண்டாமல் அறவே ஒழித்தொழுகவேண்டுமென்று ஓரினம்பட நிறுத்தி உறுதிதோன்ற அடிகள் இங்ஙனம் உணர்த்தியருளினார்.

931\. சூதாடல் தீதென்றேன் சொன்னான் சுசீதன்முன்
கோதை நளன்பாற் குமரேசா—யாதுமே
வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉம்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. (க)

இ—ள்.

குமரேசா! சூதாடலை விரும்பலாகாதென்று பார்த்தன் என் னிடம் வற்புறுத்தி உரைத்தான்? எனின், வென்றிடினும் சூதினை வேண்டற்க; வென்றதூஉம் தூண்டில்பொன் மீன் விழுங்கி அற்று என்க.

இது, சூதாடல் கேடாம் என்கின்றது.

வென்றிடினும் என்பதில் உம்மை ஐயந்தோன்ற நின்றது. என்னை? தோற்றொழிதலே யன்றி வெல்லுதல் பெரும்பாலும் அதில் இல்லை யாகலான் என்க.

வென்றதும் = வென்றுவந்த பொருளும். அளபெடை இன்னிசை தரவந்தது.

தூண்டில் = மீன்பிடிக்கும் கருவி. பொன் என்றது அக்கருவியின் நுனியில் இரையைத்தற்காக வளைத்து அமைத்திருக்கும் இரும்பினை. தூண்டுதற்கு இடமாயுள்ளதனால் இது தூண்டில் எனநின்றது. ஏதுப்பெயர். தூண்டுதல் = ஏவுதல். இங்கு யாதொரு விருப்புமின்றி அமைதியாயிருப்பதனை தன்பால் வந்து சாயச்செய்தல். இத்தன்மை இம்மாய பொறிக்கண் உள்ளமை காண்க. இது மூங்கிற்கோலால் செய்யப்படும். "நெடுங்கழைத் தூண்டில் விடுமீன்" என்றது புறம்.

வெல்லுதலில் வல்லனாயினும சூதாடலை விரும்பா தொழிக; அங்ஙனம் வென்றுவந்த பொருளும தூண்டிலிரும்பினை மீன் விழுங்கியது போலாம் என்பதாம்.

சூதில்வரும் பொன்னைத் தூண்டிற்பொன்னோடு ஒப்பவைத்தது என்னை? எனின், தன்னைக்கொண்டாரை மீளவிடாதபடி நீங்காமல் கொண்டு கெடுக்கும் அதன் தன்மை கருதி என்க.

"தூண்டி லிரையிற் றுடக்குள் ளுறுத்துத்
தேன்தோய்த் தன்ன தீஞ்சொல் அளைஇப்
பொருளெனக் கருதிப பொன்னிவண் விடுத்தோன்"
(பெருங்கதை.)

அகலவிடாது அகப்படுத்தற்குரிய வஞ்சச் சூழ்ச்சியைத் தூண்டிலிரையோடு ஒப்பவைத்து இம் துரைத்துள்ளமை காண்க.

மீன்பிடிப்போர் தூண்டிற்கயிற்றின் நுனியிலிருக்கும் இரும்பு முளைனை இரையால் மறைத்து நீரில் வீசுகிறப அதனை இனிய இரை

6436
(364)



யென்று கருதி மீன்வந்து கவ்வும்; கவ்வவே அக் கருவிமுள் அதன் வாயிற் பற்றிக்கொள்ளும்; அதனால் வெளியே இழுக்கப்பட்டு இறந்து படும்; அதுபோல் சூதாட்டத்தில் வென்றுவரும் பொருள் இனிபதுபோல் நின்று தன்னைக்கொண்டவனைப் பின்பு அகலவிடாதபடி இறுகப்பற்றி மேலும் மேலும் அதன்கண் ஆசையை விளைத்து முடிவில் அடியோடு நாசப்படுத்து மாதலால் "வென்றதூஉம் தூண்டிற்பொன் மீன் விழுங்கி அற்று" என்றார்.

சூதாட்டத்தைத் தூண்டிலுக்கும், அவ் ஆடலில் வரும்பொருளை அப்பொறியிலுறும் இரைக்கும், அதனை விரும்புவோனை மீனுக்கும் ஒப்பாகவைத்து இஃதுணர்த்திநிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

நிலையாகக் கைதேர்ந்து சூதாடுவோனைத் தூண்டிற்காரனோடு நேரவைத்தது கொலையாளனுய அவன்போல் குடிகெடுத்து நிற்கும இவன் கொடுமை நோக்கி என்க.

அப்பா, அரசே, ஐயா ஆடு; ஒருகை போடு; என்று குழைந்து கனிந்து முன்பு இனிக்கப்பேசிப் பின்புபொருள் கைவந்தவுடன் போடாபோ என்று சூதாடுவார் தலைநிமிர்ந்து போவார் என்பது இவ் வுவமக்குறிப்பாலுணரலாகும்.

24.10.1043

1363

"சிலம்பின் வெதிரத்துக் கண்விடு கழைக்கோல்
குரங்கின் வன்பறழ் பாய்ந்தென இலஞ்சி
மீனெறி தூண்டிலின் நிவக்கு நாடன்
உற்றோர் மறவா நோய்தந்து
கண்டோர் தண்டா நலங்கொண்டனனே."

(ஐங்குறுநூறு.)

குரங்கு, தன்மேல் இருந்தபொழுது வளைந்து அது பாய்ந்து போனவுடன் நிமிர்ந்து நிற்கின்ற மூங்கில்போல் முதலில் தாழ்ந்து நின்று மீன் கவர்ந்தவுடன் தூண்டில் மேலெழுந்து ஓங்கி நிற்கும என இதில் உரைத்திருத்தல் காண்க. முன்பு வளைந்து வளைந்து வந்து தன் நலத்தை நுகர்ந்த தலைமகன் பின்பு வராமல் ஒளித்திருக்குந்தன்மையை நினைந்து உளங்கொதித்துத் தூண்டிலின் நிவக்கும் நாடன் என உள்ளுறை நயந்தோன்ற ஓர் தலைமகள் சொல்லியிருக்கும் அழகை இதில் ஊன்றிப்பார்க்க.

தூண்டிற் பொன்னைக் கவர்ந்தமீன் துடித்தழிதல்போல் சூதாடலை விரும்பினோன் பெருந்துயருழந்து இழிந்தொழிவன் என்றபடி.

பகுவாய் வராஅற் பல்வரி யிரும்போத்துக்
கொடுவா யிரும்பின் கோளிரை துற்றி
ஆம்பல் மெல்லடை கிழியக், குவளைக்
கூம்புவிடு பன்மலர் சிதையப், பாய்ந்தெழுந்
தரில்படு வள்ளை யாய்கொடி மயக்கித்,
தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது,
கயிறிடு கதச்சேப் போல, மதமிக்கு
நாட்கயம் உழக்கும் பூக்கேழ் ஊர. (அகம்.)

தூண்டிலிரையைக் கவர்ந்து ஓர் மீன்பட்டபாட்டை நக்கீரர் இதில் விளக்கியிருத்தல் காண்க.

விடக்கதிர்வேற் காளை இவன்கண்டாய் மீனின்
கொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டில்—மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன். (நளவெண்பா.)

தூண்டிலைக் குறித்துப் புலவர் பலரும் இங்ஙனம் விளக்கியுள்ளார்.

தன்னைத்தொட்டாரை ஒட்டக்கெடுக்கும் தீதுடையதாதலால் சூதாடலையாண்டும் தீண்டலாகாதென்று அடிகள் அருள அதனைக் கேட்ட சிலர் ஐயா, வகைதெரியாமல் போய் அதில் தோல்விய டையும் பேர்வழிக்காயின் நீங்கள் சொல்வதுசரி; கைதேர்ந்துவெ ன்றுகொள்ள வல்லார்க்கு அதிலிருந்து பொருள்வருமாகலான் அவர் அதனை விரும்பலாமென்றார்; அவரைநோக்கி "வென்றிடி னும் சூதினை வேண்டற்க" என்று வற்புறுத்திபுரைத்தார்; உரைத் தும் உணராது விருப்பத்தால் திகைத்து நிற்ப "வென்றதூஉம் தூண்டில் பொன் மீன் விழுங்கியற்று" என்று அதன் உள்ளுறை நாசத்தை இங்ஙனம் உணர்த்தியருளினார் என்க.

சூதில் ஒருவன் சிறிது வரவடைந்தால் அவனுக்குப் பேரிழவு வந்த தென்பது கருத்து.

சூதாடுதல் தீதுஎன்று அறிவுடையார் தெளிந்திருப்பாராதலால் அதனையாண்டும் வேண்டாது வெறுத்தொழிப்பரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுநீதன்பால் உணரப்படும்.

## கதை.

சுநீதன் என்பவன் சிந்து நாட்டிலே மாவிந்த புரியிலிருந் தவன். பெருந்திருவமைந்தவன். நீதி நூல்கள் பலவும் ஓதியுணர ந்தவன். [illegible] தண்ணளியுடையவன்.

நளமன்னனுடைய மதிமந்திரிகள் எண்மருள் ஒருவன். தன்பெயரியல்புக்குத் தக்கபடி நீதிமுறைகளை யாவரும எளிதிலுணர்ந்து தெளிந்திருந்துமாறு மொழிந்து வந்தான். சுநீதன் என்பதற்கு நல்ல நீதிகளையுடையவன் என்பது பொருளாதலால் அவ்வுரிமையை அக்காலத்திருந்த அரசர் பலரும இவன்பாலறிந்து மகிழ்ந்தார். நளனது முதல் மந்திரியாகிய சுணசீலனும் இவனது மதிநலத்தை வியந்து மகிழ்ந்து புகழ்ந்துளான். "மதியமை சூழ்ச்சியும் முதுமொழிமாட்சியும், பதியருள் பான்மையும கதியுறுமேன்மையும், உற்றவாக்குறுதியும் உண்மையுமுடையவன், கொற்றவற்கமைந்த நற்றவக்குரிசில்" எனயாவரும்போற்ற இவன் அமைந்திருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் நளன் கலிவயத்தலைப் புட்கரனோடு சூதாடத்துணிந்தான். அப்பொழுது அடுத்துநின்ற அமைச்சர்கள் தடுத்து மொழிந்தார். மொழிந்தும் அவன் அடங்காதொடர்ந்தான். அவ்வமயம் வெளியேபோயிருந்த இவன் விரைந்துவந்து சூதாடல் தீது; அதனைதொடலாகாது; தொடின் படுகேடு விளையும்; என ஏதுக்கள் பலவும் எடுத்துக்காட்டி இடித்தறிவுறுத்தினான். இவனது உறுதியை நோக்கி அருகிருந்த அவரும் ஒத்துணர்த்தினர். அன்று கூறியபடியை அடியில் காண்க.

"காதல் கவறுடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதல் மறுத்தல் இவைகண்டாய்—போதிற்
சினையாமை வைகுந் திருநாடா! செம்மை
நினையாமை பூண்டார் நெறி. (க)

அறத்தைவேர் கல்லும்; அருநரகிற் சேர்க்கும்;
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ? வெனறுர் தெரிந்து. (உ)

உருவழிக்கும்; உண்மை யுயர்வழிக்கும்; வண்மைத்
திருவழிக்கும; மானஞ் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கும் ஒன்றல்ல சூது
பொருவரோ? தக்கோர் புரிந்து. (ங)

ஆயம் பிடித்தாரும, அல்லற் பொதுமகளிர்
நேயம் பிடித்தாரும், நெஞ்சிடையே—மாயம்
பிடித்தாரின் வேறல்லர்; என்றுரைப்ப தன்றே
வடித்தாரின் நூலோர் வழக்கு." (நளவெண்பா) (ச)

இன்னவாறு நீதிமுறைகளை முன்னுற நின்று இவன் சொல்லி வேண்டியும் அவன் தீயூழ் வலியால் தெளிந்து நில்லாமல் அவ்வல்வினை வலிந்து ஆடினான். அதனால் செல்வமுழுவதும் சோர இழந்தான். தூண்டில் இரையை மீன்விழுங்கியது போல் அவன் சூதினைவிழைந்து தீண்டியுழந்தான். வேண்டாதேயென்று இவன் மொழிந்தும் அதனை அவன்வேண்டியழிந்தமை நினைந்து அனைவரும் வெய்துயிர்த்திரங்கினார். சூதின் நிலைமையைநேரில்கண்டு இவனும் துன்பமீக்கூர்ந்தான். "வேண்டற்க வென்றிடினும் சூதினை; வென்றதூஉம் தூண்டிற்பொன் மீன் விழுங்கியற்று" என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

எள்ளுக சூதினை இகலி வென்றதூஉம்
கள்ளமேற் கொடுவலை கரந்து வேட்டுவர்
உள்ளுற அமைத்திடும் உணவை ஓகையாய்ப்
புள்ளினம் அருந்தின போலும் என்பவே. (நைடதம்)

அடிகள் அருண்மொழியை இஃதடியொற்றி வந்திருத்தல்காண்க.

தீண்டினார் தம்மைத் திருவழிக்கும் வெஞ்சூதை
வேண்டல் விடலே விடல்.

சூதாடலை மறந்துந் தொடலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

932. ஒன்றெய்தி மூர்க்கரிடம் உற்றவெலாம் தோற்பரேன்
குன்றினார் சூதர் குமரேசா—நின்றுமுன்
ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொல்
நன்றெய்தி வாழ்வதோ ராறு. (உ)

இ—ள்.

குமரேசா! மூர்க்கரிடம் வந்து சூதாடினவர் முதலில் ஒன்றைப் பெற்றுப் பின்பு ஏன் எல்லாவற்றையும் இழந்தார்? எனின், ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் உண்டாங்கொல் நன்று எய்தி வாழ்வது ஓர் ஆறு என்க.

இது, சூதாடுவோர் நிலைகேடடைவர் என்கின்றது.

சூதர் என்றது நவன் கேசன் என்னும் இருவரை.

ஒன்று நூறு என்பன பொருளளவின் சிறுமை பெருமைகளைக்

குறித்து நின்றன. முதலில் சிறிது வரவுதோன்றினும் பின்பு பெரிய இழவு தப்பாது வரும் ஆதலால் "ஒன்றெய்தி நூறிழக்கும்" என்றார்.

நன்று = நன்மை. அஃதாவது அறம்பொருள் இன்பங்களாகிய நலங்கள். ஆறு = நெறி.

அறம் இழந்து, பொருள் அழிந்து, இன்பநுகர்ச்சிகள் இன்றி, என்றுந்துன்பவழியில் வீணே இழிந்து சூதா கழிவர்என்பார் அவர்க்கு "நன்றெய்தி வாழ்வது உண்டோ?" என்றார்.

உண்டாகுமோ என்றது உண்டாகா தென்றவாறு

மேல், சூதாடல் தீதாம் என்றார்; இதில், அதனை ஆடுவோர் என்றும் கேடுறுவர் என்கின்றார்.

முன்பு ஒருபொருளைப் பெற்றுப் பின்பு நூற்றினை யிழக்கும் சூதாடிகளுக்கும் நலமடைந்து வாழ்வதொரு வழியுண்டாமோ? என்பதாம்.

தூண்டிலில் நின்ற இரையைக் கௌவி மீன் அழிவது போல் முதலில் ஒன்றைப்பற்றிப் பின்பு எல்லாவற்றையும் சூதாடிகள் இழந்தொழிவராதலால் எய்தி யிழக்கும் சூதர் என்றார். முதலில் ஒருமுறை வென்றாராயினும் பின்பு பலமுறையும் தோற்றொழிவர் என்றபடி.

இழவு வீட்டில் விழவு காணமுடியாதவாறு போல் சூதாடிகள் பால் இன்பவாழ்வு யாதும் எய்தாதென்பது கருதி, இழக்கும் சூதர்க்கும் எய்தி வாழ்வதுண்டோ? என்றார். இதிலுள்ள உம்மை நிலையையூன்றி யுணர்க. களவுமுதலிய தீதுடையார்க்கேனும் ஒரோவழி நன்று எய்தி வாழ்வதோர் ஆறு உண்டாம்; சூதாடிகளாகிய இவர்க்கு யாண்டும் அஃது இல்லையாம் என்றபடி.

கள்ளானது வெறியைக் கிளப்பி அறிவை யழிப்பதுபோல சூது, அவாவை விளைந்து உயிரைப்பாழாக்கு மாதலால் அதனை மறந்தும் தொடலாகாதென்பது கருத்து.

சூதாட்டத்தில் ஒன்று எய்தியவுடனே அகன்றுபோய்விடின் நூறு இழக்கநேராது; ஆதலால் அமயமறிந்து தப்பிவிட வல்லவர் அதனை ஆடலாம் எனின் அங்ஙனம் தப்பமுடியாதென்பது உணர்தற்கன்றோ "வென்றதூஉம் தூண்டில்பொன் மீன் விழுங்கி யற்று" என முன்னர் ஒப்புறவைத்து உணர்த்தியருளினார்.

தன்னைக் கொண்டவனது செல்வமுதலிய எல்லா நலங்களையும் தொலைத்து என்றும மீளாதபடி சூது அவனை ஈனப்படுத்து மாத லால் அதனை கனவிலும கருதலாகாதென்பது கருத்து.

சூதாடிகள் உறுதி நலங்களை யடைந்து என்றும இனிது வாழார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நவ கேசர்பால் உணரப்படும்,

கதை.

நவகேசர் என்பவர் தொண்டைமண்டலத்திலே காஞ்சிபுரத் திலிருந்தவர். இவர் நவன் கேசன் என்னும் இருவர்; வடிவிலும் செயலிலும் ஒத்துத்தம்முள்மிகக நட்புடையராய் மேவியிருந்தா ராதலால் நவகேசர் என ஒருதொகையாக இவர்உரைக்க நின்றார். சூதாடுதலில் இவர மிகவும் வல்லுநராதலால் யாவரும இவரைச் சூதர் எனச் சொல்லி வந்தனர். வல்லாடலில்இவரை வெல்லமுடி யாமையால் வந்தவரெல்லாரும் தம செல்வமிழந்து சென்றார். இவர் செருக்கிவாழ்ந்தார. வஞ்சமும் சூதும பொய்யும் மாயமும் பயின்ற நெஞ்சராய இவர் பின்பு கும்பகோணத்தில் குடியேறினார். அங்கோர் தனியிடத்தை யமைத்துக்கொண்டு தம சூதுத் தொழி லைத் தொடர்ந்து செய்துவந்தார். இங்ஙனம் வருங்கால் தொண் டைநாட்டிலே வேப்காடு என்னும ஊரிலே மூர்கக நாயனார் என் பவர் ஒருவரிருந்தார. அவர் வண்மையும திண்மையும் ஒண்மையு முடையவர். யாருக்கும இரங்கி உபகரிக்கும் இயல்பினர். துற வோர் முதலிய அறவோர்க்கெல்லாம் அன்போடு நாளும் அன்ன மளித்து இன்னருள் செய்தார்.

"தூய அடிசில் நெய்கன்னல் சுவையின் கறிக ளவையமைத்து
மேய அடியார் தமைப்போற்றி விருப்பாலமுது செய்வித்தே
ஆய பொருளும் அவர்வேண்டும் படியா லுதவி அன்புமிக
எபுமாறு நாடோறும் இனியபணிசெய் தின்புற்றார்."

என்றபடி இல்லறத்திலிருந்து நல்லறங்கள் பலசெய்து அவர் இசைபெற்று வருங்கால் இழவூழ்வலியால் பொருள்வளங் குன்றி யது. அதனால் உதவுவதற்கு ஒருவகையும காணாராய் உளமிகநொந் தார். இளமையிலேயே பழகியிருந்த சூதாடலை மேற்கொண்டு உளவறிந்து கும்பகோணத்தை யடைந்தார். வம்பமாக்களோடு மருவியிருந்து நாளும சூதில் பெருகிவரும் இவரை வந்தபேணிக்

கண்டார். அவரைக்கண்டவுடனே இவர் பெருங்களிகொண்டார் "வந்தமைந்தான் வாய்ப்பாக" என்று சிந்தை மிகுந்து இவர் சிந்தித்தனபல. மறுநாள்முதல் ஆயமுருட்டி ஆடத்தொடங்கினார். முதலில் சிறிது தோற்றுப் பின்பு பெரிதும் அவர்வென்று நின்றார். அவ்வாடல் நாளும் தொடர்பாக நடந்தது. இடையறாது அவ்வாறேதடையற வென்று அவர் பொருள்மிகக்கொண்டார். கவறில் இவர் வெல்லமுடியவில்லை; ஆதலால் வலிந்து பற்றி ஒருநாள் அவரைக் கொல்லத்துணிந்தார் அவர் நல்லவீரராதலால் தமதுஉடைவாளை உருவிச் சிலரைக் குத்தி வீழ்த்தினார். பலரை அச்சுறுத்தி ஓட்டினார். அதன்பின் உற்றபொருளோடு தம் ஊரினை யடைந்து உவந்து வாழ்ந்தார். நல்லவராயிருந்தும சூதில் இங்ஙனம மூண்டு வென்றதால் நற்சூதர் மூர்க்கர் என அவர் நாமம்பெற்றார். அவரிடம முன்பு ஒன்றைப்பெற்றுப் பின்பு தமக் குள்ளஎல்லாவற்றையும் இவர் இழந்துபோனார். அதன்பின்யாதொருநன்மையுமடையாராய் அலைந்துதிரிந்து இழிந்தே தொலைந்தார். ஒன்றேய்தி நூறிழக்கும் சூதர்க்கு நன்றேய்தி வாழ்வதோராறு என்றும உண்டாகாதென்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

இருளாரு மணிகண்ட ரடியார்க்கின் னமுத ளிக்கப்
பொருளாயம் எய்துதற்குப் புகழ்க்குடந்தை யம்பலத்தே
உருளாய்ச் சூதாடி யுறும்பொருள்வென் றனநம்பர்
அருளாக வேகொண்டங் கமுதுசெய்வித் தின்புறுவார். (க)

முற்சூது தாம்தோற்று முதற்பணையம் அவர்கொள்ளப்
பிற்சூது பலமுறையும் வென்றுபெரும் பொருளாக்கிச்
சொற்சூதால் மறுத்தாரைச் சுரிகையுருவிக் குத்தி
நற்சூதர் மூர்க்கரெனும் பெயர்பெற்றார் நானிலத்தில். (உ)

(பெரியபுராணம்.)

மேற்குறித்த சரிதவுண்மையை இதுவும் விளக்கி நிற்றல்காண்க

வேடன் வலையிரையை மேவியபுள் ளென்னப்
பாடழிவார் சூதர் பரிந்து

வல்லாடுவார்க்கு நல்வழி யில்லையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

933. உற்றபொரு ளெல்லாம் ஒருங்கிழந்து புட்கரனேன்
குற்றமுற்றான் சூதிற் குமரேசா—பற்றும்
உருளாய மோவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும். (௩.)

இ—ள்.

குமரேசா! சூதாடலை என்றும் விரும்பிகின்ற புட்கரன் என் தன் செல்வமபோய்க் குன்றினான்? எனின், உருள் ஆயம் ஓவாது கூறின் பொருள் ஆயம் போஒய்ப் புறமே படும் என்க.

இது, வல்லாடுவார் கையில் செல்வம் நில்லாதென்கின்றது.

ஆயம் = சூதாடு கருவி. அது கட்டை பளிங்கு முதலியவற்றால் அழகுறச் சித்திரிதனுச் செய்யப்பட்டிருக்கும். அரங்குகளமைத்து அக்கவறுகளை உழக்கிவிட்டுப் பந்தயங்கூறிச் சூதா உருட்டியாடுவாராதலால் அஃது உருளாயம என நின்றது. இங்கு ஆயம் என்றது அதனால் எய்தும ஆதாயத்தை.

பலகை செம்பொனாகப் பளிங்கு நாயாப் பரப்பி
அலவனோடும் வகைபோல் அரும்பொற் கவறங் குறுளக்
குலவும் பவழ வுழுக்கிற் கோதை புரளப்பாடி
இலவம்போதேர் செவ்வாயிளையோர் பொருவார்க் காண்மின்.
(சீவகசிந்தாமணி.)

கடகமும் குழையும் பூணும் ஆரமும் கவிக்க நுண்ணூல்
வடகமும் மகரயாழும் வட்டினி கொடுத்து வாசத்
தொடையலங் கோதைசோரப் பளிங்குநாய் சிவப்பத்தொட்டுப்
படைநெடுங் கண்ணார் வட்டாட் டாடிடம் பலவுங்கண்டார்.
(இராமாயணம்.)

கவளமான பணையின் யாளி கால் வகுத்த பலகையின்
பவளமான நீலமான கருவிமுன் பரப்பினார்
தவளமான கவறுகை தரித்துமெய் தரிக்கதார்
துவளமான நிருபர்தம்மில் ஆடவே தொடங்கினார். (பாரதம்)

ஆயங்கூறிச் சூதாடும்பான்மையை இவற்றால் ஆய்ந்து பார்க்க. முதலில் உள்ள கவியிரண்டால் திருத்தக்கதேவரோடு கம்பர் கருத்தொத்து நிற்றலும் அவரது கவித்திறநிலையும் காணலாகும்.

ஓவாது = இடைவிடாது. ஓவுதல் = இடையொழிதல். "மூவா மரபும், ஓவா நோன்மையும்" என்றது (பரிபாடல்.)

பொருள்ஆயம் = பொருளும், ஊதியமும். ஆதாயம் என்பது ஆயம் எனநின்றது. ஆதாயம் = இலாபம். வரிவாங்கிய பொருளை வரவு செய்தற்குரிய இடத்தை ஆயத்துறை என்ப.

மேல், சூதாடிகளுக்கு அறத்தோடமைந்த நல்வாழ்க்கை அமையாதென்றார்; இதில், பொருள்வரவுகள் யாதும அவரைப் பொருந்தாதென்கின்றார்

உருளுகின்ற தாயத்தை அரசன் ஓயாது கூறின், பொருளும வரவும் அவனைவிட்டுப் புறத்தேபோய்த் தொலையும எனபதாம்.

எப்பொழுதும் சூதாட்டத்திலேயே மனத்தைச் செலுத்தியிருப்பவர்க்குப் பொருளீட்டல் முதலிய வேறு நாட்டங்கள்யாதும இல்லையாம்; ஆகவே உளளபொருளைப் பாதுகாத்தற்கும் உறும் பொருளைப் பெருக்கித்தொகுத்தற்கும் முடியாது; அங்ஙனம் புகுயவே எல்லாச் செல்வங்களும உறங்கினவன் மடிப்பொருள்போல் தானே அகன்றும, பகைவர் கைப்பட்டும் ஒழிந்துபோம ஆதலால் "பொருளாயம் போய்ப் புறமே படும்" என்றார். அளபெடைஇசைநிறைக்க வந்தது. ஏகாரம தெளிவுதோன்ற நின்றது.

சூதர்கள் சூதாடுங்கால் "அடிதாயம்; பிடி பகடை; படி பன்னிரண்டு; கடிஎட்டு;" என இன்னவகையான குழூஉக்குறிகள் பலபன்னியும் பந்தயங்கூறியும் ஆயமுருட்டி ஆடுவராதலால் உருளாயம் ஓவாது கூறின் என்றார். ஓவாது எனறதனால் மாதிரிபார்ப்பதற்காக ஒருமுறை தொட்டு விடுவனாயின் அங்ஙனம் போய்ப படாதென்பதாயிற்று.

பஞ்செனை வுரைசெய்வர்; பாலெனபர்; ஈ
ரஞ்செனை மொழிவா; அருசெனபா; அன்றியும
துஞ்சலில் நடமனபர்; துருதகி யிதெனபர்;
விஞ்சிய மகிழ்வொடு வெடியென வோதுவார். (க)

அடியிது, பொட்டையி தென்பர்; அஃதென
முடிவில குழூஉக்குறி முறையின முந்துறக்
கடிதினிற கழறினர்; கவறு சிந்தினர்;
நொடிதரு கருவிகள எதிரி ராக்கினா. (உ)

(கந்தபுராணம்)

வல்லாடுங்கால் சூதர் சொல்லாடுந் திறங்களை இது விளக்கிற்றல் காண்க. வல்லிற் பொருள பெறவிரும்பின உளளபொரு

ளெல்லாம்ஒருங்கே ஒழிந்துபோம் என்றவாறு.

"வித்தமே மிகுமென வெஃகிச் சூதினில்—அத்தம்ஆர் அந்தமும் அழித்தல், தீட்டிய—சித்திரமாதெழில் நம்பிச் சேர்ந்ததற்—பந்தி னிதனையகல் பான்மை யொக்குமே" என்பதுங் காண்க. அத்தம் இரண்டனுள் முன்னது கை. பின்னது பொருள்.

பொருள் முழுவதையும் புறத்தேபோக்கிச் சூது புன்மையை விளைக்குமாதலால் அப்பொல்லாத்தீதினை யாதும பொருந்தலாகா தென்பது கருத்து.

சூதாடலை இடைவிடாது விழைந்து நிற்பவன் எய்திநின்ற பொருளையெல்லாம் இழந்து வருந்துவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை புட்கரன்பால் உணரப்படும்.

## கதை.

புட்கரன் என்பவன் நிடதநாட்டின் வடமேல் எல்லையிலிருந்த ஓர் குறுநிலமன்னன். மிகக் கொடியவன். பேராசையுடையவன். வஞ்சமும் பொறாமையும் மருவிய நெஞ்சினன். எப்படியாவது மிகுதியாகப் பொருளைத் தொகுக்கவேண்டுமென்று மருளுற்றிருந்த இவன் கலியினுதவியால் நளனுடன் வந்து சூதாடி அரசுமுழுவதை யும் கவர்ந்து கொண்டான். நீதிமன்னனாகிய அவ் வீரவள்ளல் நாடிழந்த வுடனே தன் மனைவி மக்களோடு வெளியேறினான். "மென்காற் சிறையன்னம் வீற்றிருந்த மென்மலரைப், புன்காகங் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கால், பொடியாடத் தேவி யொடும் போயினு னன்றே - கொடியானுக்கு அப்பார் கொடுத்து" என்றபடி அப்பெருமான் விடுத்தேகுங்கால் நகரமாந்தரனைவரும் அழுது புடைசூழ்ந்து தொழுது பின்சென்றார். அங்ஙனம் அவனை நயந்து செல்லலாகாதென்று குடிகளெல்லாரையும் இவன் இகழ்ந்து வெருட்டினான். தனக்கு ஒருமுறையில் உறவினனாயிருந்தும் அத்திருமகன் பால் சிறிதும் பரிவின்றி இவன் சினந்து மொழிந்த கொடுமையை அடியில் காண்க.

"வண்டாடுந் தார்நளனை மாநகரில் யாரேனுங்
கொண்டாடி னார்தம்மைக் கொல்லென்று—தண்டா
முரசறைவா யாங்கென்றான் முன்னே முனிந்தாங்
கரசேற்யா வேந்தன் அறன்று."

இங்ஙனம் இழிந்துநின்ற இவனது கொடுமையையும் மடமையையும் கண்டு அனைவரும் கொதித்து நின்றார். பேராசை கிடைத்திருந்தும் இவன் சீரடையாமல் சிறியனவே சிந்தித்துத் தீங்கடைகின்றான். சூதில் இவன் சுவைகண்டபடியால் அதன்கண்ணேயே யழுந்தியிருந்தான். அதில் வல்லாரை யழைத்து எப்பொழுதும் இவன் வல்லாடி வந்தான். நாளும் இவ்வாறு இவன் நவைபுரிந்து வந்தமையால் நாடும் வளமும் கேடடைந்திருந்தன. ஆண்டுகள் பல கழிந்தபின் கலி நீங்கி நளன் அங்கு மீண்டுவந்தான். மறுபடியும் அம்மன்னனோடு இவன் சூதாடவிரும்பினான். அவ்வீரவள்ளலும் இவனைமோதி வெல்ல நினையாது சூதில் வெல்லவே இசைந்து யாது பந்தயம்? என்றான். அந்நீதிமான் கேட்டபோது இத்தீதுடையான் சொன்னதை அடியில் காண்க.

"வயிரவாட்படை மன்னவர் மன்னநீ தோற்பின்
முயலிலாமதி பூத்திடு முழுநெறிக் குவளை
அயரநீண்ட கட்டேவியை அளித்தி; யான்தோற்பின்
உயிரினோடு நின் னுலகெலாந் தருவனென் றுரைத்தான்."

இக்கொடுமொழியைக் கேட்டு அவன் கொதித்தானாயினும் சரி என்று அமைந்து ஆடினான். அதில் இவன் தோல்வியடைந்தான். அதனால் எய்திநின்ற அரசு முழுவதையும் இழந்துபோனான். அவன்பெற்று மகிழ்ந்து பெருஞ்சிறப் புற்றான்.

அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும—ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையான்
வென்றானை வென்றான் அவ் வேந்து.

அந்த வளநாடும் அவ்வரசும் ஆங்கொழிய
வந்தபடியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லான் நளனென்று போற்றிசைக்குங்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து. (நளவெண்பா.)

என்றபடி இக்கொடியவன் விடுத்தொழிய அக்குலமகன் கோலேந்தி வாழ்ந்தான். விடாது சூதாடியதனால் செல்வம் இவனை விட்டொழிந்தமையின எல்லாரும் சொல்லியிகழ்ந்தார். இவன் அல்லலுழந்தான். உருளாயம் ஓவாது கூறின் பொருளாயமபோய்ப் புறமேபடும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

உற்றதிரு வெல்லாம் ஒழிந்து பெரும்பழியே
பற்றுவார் சூதர் பரிந்து.

ஆயப்பொருள் விரும்பின் தாயப்பொருள் போம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

934. பண்டு நளன்சூதால் பாரிழந்து சீரழிந்து
கொண்டுநொந்தான் என்னே குமரேசா—மண்டு
சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில். (ச)

இ—ள்.

குமரேசா! ஒருமுறை சூதாடியதால் தன் அரசு முழுதும் போய் நளன் ஏன் வறுமையடைந்து நொந்தான்? எனின், சிறுமை பலசெய்து சீர் அழிக்கும் சூதின் வறுமை தருவது ஒன்று இல் என்க.

இது, சூதாட விரும்பினர் செல்வமிழந்து சீரழிவர் என்கின்றது.

சிறுமை என்றது துன்பங்களை. அவை ஒண்பொருளழிவு, வன்பகை மருவல், புன்பழி விளைதல், உள்ளக்கவலை, எள்ளல்மீக்கூரல் முதலிய அல்லல் பாடுகளென்க.

சீர் = கீர்த்தி. அஃதாவது வண்மை வீரமுதலிய குணங்களால் எய்தும் புகழுடைமை என்க.

"ஒன்னலா மணிமுடி புரிந்த தாளினன்;
கன்னவில் தோளினன்; கமலக் கண்ணினன்;
தன்னுயிரா மென வுலகில் தங்கிய
மன்னுயி ரனைத்தையும் புரக்கு மாட்சியான்; (க)

பொருசிலை வேளின்வே ளனைய பொற்பினன்;
அருவரை யாமென அகன்ற மார்பினன்;
கரைபொரு முடைத்திரைக் கடலந் தானையான்;
திருகு வஞ்சினக் களிறனைய சீற்றத்தான்; (உ)

வெங்கதி ரிருள்கெட வெண்ணிலா வுமிழ்
திங்களங் கவிகையான்; திகிரி யொன்றினால்
அங்கண்மா நிலமுழு தளிக்கும் ஆற்றலான்;
மங்குலின் எழுமடங் கருதவும் வண்மையான்; (ங)

அருளின துறையுள்; நல்லறத்தின்வேலி; சொறு
மொருளுறு கல்வியந் தெய்வ மாக்கடல்;
குரைகடற் புவிபுகழ்குணக் குன்றம; சுடர்
எரிதவழ் அலங்கல்வே லரசரே றனன்." (நைடதம்.) (ச)

என நளன் சீரடைந்துள்ளமை காண்க. இத்தகைய சீர் முழுவதையும் சேரஅழித்து வறுமையாக்கிச் சிறுமைபல செய்து சூது இவனைத் தேமபவிட்டமை பின் தெளியலாகும்.

சூதின் = சூதுபோல. இன்னுருபு ஒப்புப்பொருளது.

மடிமுதலிய வேறு தீமைகளும் மிடியைத்தருமாயினும் இச் சூதுபோல ஒரே அடியாக ஒருவனைவறியனாக்கி அடியோடு கெடுத் துவிடமாட்டா ஆதலால் "சூதின் வறுமை தருவது ஒன்றுஇல்லை. என்றார்.

மேல், சூதாடலானது பொருளைப் போக்கிவிடும என்றார்; இதில், அது வறுமை பழிமுதலிய துன்பத்தொகுதிகளையெல்லாம் ஒருங்கே புகுத்திவிடும் என்கின்றார்.

சிறுமைகள் பலவற்றையுஞ் செய்து சீரினை யழிக்குஞ்சூது போல வறுமையைத்தரவல்லது வேறு இல்லை என்பதாம்.

சிறுமை, சீரழிவு, வறுமை என்பன யாவரும் வெறுக்கத்தக் கனவாதலால் அவற்றைச் சூதுவிளைத்துவிடும் என எடுத்துக்காட்டி அதன் தீமையை இங்ஙனம் விளக்கி யருளினர்.

ஒருவன் எவ்வளவு பெருந்திருவினையுடையனாயினும் சூதாட த்துணிவானாயின் அவ் அனைத்தையும் அடியோடிழந்து அவன அல்லலுழப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நளன் பால் உணரப்படும்.

## கதை.

அறிவும நீதியும் ஆற்றலும் வென்றியும் நெறிமுறையொழு கும நீர்மையு முடையனாய் நின்று, நளன் அரசுபுரிந்து வருங கால் பழவினைப் பயனால் புட்கரனோடு சூதாடத் துணிந்தான். அங்ஙனந் துணியுங்கால் அது தீது என்று ஏதுக்கள் பல எடுத்துக் காட்டி அறிந்துநின்ற அமைச்சர் தடுத்தார். தடுத்தும நில்லாமல் அதில் இவன் விரைந்து புகுந்தான். இவன் முறுகி நின்றதை நோக்கி அறிஞரனைவரும் மறுகி நொந்தார். மாற்றானது வஞ்சநிலை யையும் தம் அரசனது நெஞ்சின் உலைவையும் நினைந்து பதைத்தார்.

"நஞ்சினிற் கொடியவன் புணர்ப்பில் நமயிறை
வஞ்சகச் சூதினில் மனம்வைத்தா னென
அஞ்சினர் அமைச்சர் அவ்அரசா கோமகன்
செஞ்சரண் தொழுதிவை செப்பல் மேயினர்.

கள்ளுண் விரும்புதல்; கழகஞ்சேர்தல்; மால்
உள்ளுறப் பிறர்மனை நயத்தல்; ஒன்னலர்க்கு
எள்ளுற நாட்பினுள் இரியல் செய்திடல்;
வள்ளியோய் அறநெறி வழுக்கும் என்பவே."

என அன்புடனடுத்து அறிவுரைகள்பல கூறியும் இவன்யாதும் அடங்காமல் மீறியெழுந்தான். "தீது வருக; நலம் வருக; சிந்தையாற்—சூது பொரஇசைந்துசொல்லினேம்—யாதும்— விலக்கலிர்நீர் என்றான்; வரால் ஏறமேதி—கலக்கலை நீர் நாடன் கனன்று" இங்ஙனம இவன் கனன்றவுடனே அவர் மனநைகவென்று நின்றார். இவன்முனைந்து சூதாடினான்; அதில்முழுதும் தோற்றான்

"கழைசுளி புகர்முகக் களிறு தேர்பரி
இழைதவழ் இளமுலை மகளிர் ஈட்டிய
விழுநிதிக் குப்பைகள் வேலைசூழ் புவி
முழுவதும் தோற்றனன் முழுவுத் தோளினான்."

இவ்வகையாக யாவும் இழந்தபின் தன்தேவியையும் மக்களையும் அழைத்துக்கொண்டு அந்நகரை விட்டு வெளியேறினான். அவ்வமயம் குடிகளனைவரும் அழுது புடைசூழ்ந்தார். "ஆருயிரின் தாயே! அறத்தின் பெருந்தவமே!—பேரருளின் கண்ணே! பெருமானே! பாரிடத்தை—யார்காக்கப் போவது நீ யாங்கென்றார்; தங்கண்ணில் நீர் வார்த்துக் கால்கழுவா நின்று" என்று இன்னவாறு பல பன்னிப்புலம்பி இரைந்து வந்தவரெல்லாரையும் நில்லுங்கள் நில்லுங்கள் எனக்கையமர்த்தி நிறுத்திவிட்டு இவன் நெடுவனம புகுந்தான். இடையில மனைவியையும் பிரிந்தான். அக்கொடுங்கானில் படாதபாடுகள் பட்டான். அங்கு இவனடைந்த துயரங்களை யார கூற வல்லார்? அழகுபோய் ஆற்றல் போய்முடிவில் தன்உருவுமாறி இருதுபன்னனுக்குத் தேரும் ஓட்டினான். நல்லமேன்மையும நயந்த செல்வமும் வெல்லும் வீரமும மேலாசாட்சியுமாகிய எல்லாமிழந்து இவன் அல்லல்பல அடைந்தான். சிறிது வல்லாடியதால் இச்செல்மைகன் இங்ஙனம் சீரழிந்தானே யென்று எல்லாரும் இரங்கினர். சிறுமைபல செய்து சீரழிக்கும்

சூதின் வறுமைதருவது ஒன்றில்லை என்பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான்.

"வல்லாடு ஆயத்து மண்ணர சிழந்து
மெல்லியல் தன்னுடன் வெங்கானடைந்தோன்
காதலிற் பிரிந்தோன் அல்லன்; காதலி
தீதொடு படூஉந் சிறுமையள் அல்லள்;
அடவிக்கானகத் தாயிழை தன்னை
இடையிருள் யாமத் திட்டு நீக்கியது
வல்வினை யன்றோ?" (சிலப்பதிகாரம்.)

நளன் சூதாடிச் சீரழிந்த வுண்மை இதன் கண்ணும் விளங்குதல் காண்க. இந் நீதி மன்னன் சூதால் நிலைகுலைந்ததைக் குறித்துப் பல நூல்களும இங்ஙனம் பரிந்து கூறியுள்ளன.

நின்ற திருவழியும் நீள்புகழ்போம் பார்ப்பழிவந்
தோன்றுமே சூதோன் றுறின்.

சூதாடுவார் சீரழிந்து சிறுமையுறுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

935. ஒன்றார் இலனாய் ஒழிந்தனனே சாதுவன்முன்
குன்றினன் சூதாற் குமரேசா—என்றும்
கவறும் கழகமும் கையுந் தருக்கி
இவறியார் இல்லாகி யார். (ந)

இ—ள்.

குமரேசா! சூதை விரும்பியதால் சாதுவன் ஏன் யாதும் இலனாயிழிந்துபோனான்? எனின், கவறுங் கழகமும் கையும் தருக்கி இவறியார் இல்லாகி யார் என்க.

இது, சூதாடலில் கன்றி நிற்போர் ஒன்றுமிலராய்க் குன்றி யழிவர் என்கின்றது.

கவறு = சூதாடுகருவி. கழகம் = சூதாடும் இடம். கை என்றது தவறு படாவண்ணம் கவறு பிடித்தெறியும் கைத்திறம். இங்ஙனம் விசித்திரமாக ஆடவல்லவனைக் கைகாரன் என்பர்.

தருக்கு என்றது அவ் ஆட்டத்தில் கைதேர்ந்திருத்தலால் உண்டாம் செருக்கினை. தருக்கி இவறியார் = வெற்றிகொள்வே

மென்னுஞ் செருக்கால் மேலாக்கி நிற்பார். "வாதுகொண்டு காதல் கூரும் மாமனோடு வஞ்சனைச்—சூது கொண்டு பொருதழிந்து தோல்வியெய்த வேண்டுமோ?—தாதுகொண்டு தேனிரங்குதாம மார்ப நெஞ்சினீர்,—ஏது கொண்டது துமக்கு அளிப்பன் இம்பர்" எனத் தருமர் பெருந்தன்மையோடு உரைத்து நின்ற பொழுது சகுனி எதிர்த்துவந்து,

"நீடுகின்ற தருமநீதி நிருபகேள்! விழைந்துநாம்
ஆடுகின்ற சூதில் வெற்றி அழிவு நம்மில் ஒக்குமால்
வாடுகின்ற மிடியர்போல வஞ்சமொன் றுரைத்த நீ
ஒடுகின்ற தொட்டுகின்ற ஒண்பொருட்கு உலோபியோ?"

யான்எறிந்த கவறுவெல்லின் இசைவெனக் களித்துநீ
தான்எறிந்த கவறுவெல்லின் அகிலரட்டி தருதியேல்
தேன்எறிந்து தேனுகர்ந்து தேனிருந்த மாலையாய்!
ஆன்எறிந்த கொலைஞர்போல அஞ்சல் வருதிஆடவே."
(பாரதம்.)

என்று இன்னுரையை இனிக்கப்பேசி வலிந்தழைத்தது போல் கவறின்கட் கைத்தருக்குடையார் இங்ஙனம் இவறி நிற்பர் என்க. இவறுதல் = மேற்கொண்டு மிகுதல்.

மேல், சூது சிறுமையும் வறுமையும் தரும் என்றார்; இதில், அதனைக் கொண்டவரை அது குடியைக்கெடுத்துவிடும் என்கின்றார்.

கவற்றையும், அஃதாடும் இடத்தையும், அதற்குரிய கைத் தொழிலையும் மேற்கொண்டு எப்பொழுதும் சூதாடி நிற்பார்யாரும் இல்லாராய் இழிந்து தொலைவர் என்பதாம்.

எப்பொழுதும்சூதாடி நிற்பவர் கைப்பொருளனைத்தும் தோற்று இழந்து உயிர் இருந்தும் இல்லராய்க் காந்து போய்க் கடுந்துயருழப்பர் என்பார் "இவறியார் இல்லாகியார்" என்றார்.

"இவறலே தந்து, இழிவையுந்தந்து, பின்
தவறுயாவையும் தந்து நெஞ்சத்தனைக்
கவறென் மேவிக் கலக்கங் கொடுத்தலால்
கவறெனும் பெயர் காரண நாமமே."

என்பதும் ஈண்டுக் காணத்தக்கது. இவறல் = பேராசை. ஆசையை விளைத்து, அருமபொருளழித்து, நீசமிகச்செய்து துயர்நாசப்படுத்துமாதலால் அதனை யாதும் நாடலாகாதென்பது இதன் திரண்ட பொருளாம்.

வல்லாடலையே எப்பொழுதும் மருவிநின்றவன் உள்ளபொருளெல்லாவற்றையும் இழந்து ஒழிந்துபோவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாதுவன்பால் உணரப்படும்.

## கதை.

இற்றைக்கு இரண்டாயிர ஆண்டுகட்கு முன்னர்க் காவிரிப்பூம்பட்டினத்தில் சாதுவன் என்னும்பெயரோடு ஓர் வணிகர்தலைமகன் விளங்கியிருந்தான். இவன் பெருஞ் செல்வமுடையவன். நல்ல அழகன். மறுபுலன்களிலும் சென்று மிகுபொருளீட்டி வணிக முறையில் நனிசிறந்திருந்த இவனது உறவினர் பலரும் இவனை உவந்து பேணி வந்தார். இங்ஙனம் சீருமசிறப்போடு நிகழ்ந்து நின்ற இவன் புல்லர் சிலருடன் கூடிவல்லாடி வந்தான. முதலில் அதனை இவன் விநோதமாகச் செய்தான். நாளடைவில் மிகவிழைந்து அதன் வஞ்சவகைகள் யாவும் நெஞ்சுறப் பயின்று அவ் ஆடலில் இவன் வல்லவனுயினுன். செல்வனுதலால் நல்ல இடத்தை அமைத்துக்கொண்டு சூதில் வல்லவரனைவரையும் அங்குவந்துஆடச்செய்தான். இடைவிடாது எப்பொழுதும் இவன் கவறுடி வந்தான். அதனல பொருள் வருவாய் முதலியன யாவும் பொன்றியொழிந்தன. சேர்ந்திருந்த செல்வமுழுவதையும் சேரஇழந்து யாதும் இலனுய் இவன் சீரழிந்து நின்றுன். யாதும் இல்லான் என்று அறிந்தவுடனே முன்பு இவனைப் புல்லியிருந்ததனவதிஎன்னும் தாசி பின்பு எள்ளித் தள்ளி விட்டாள். இவன் அல்லல்பல அடைந்து அலமந்து நின்று ஒரு நாள மறுபுலம் செல்லும் வணிகர்சிலருடன் சேர்ந்து கலமேறிச் செலறுன். இடையே அக்கப்பல் உடைந்துபோக அதிலிருந்தவரனைவரும் கடலில் விழுந்தார். இவன் மட்டும் திருவருளால் தப்பி ஒருகரையினை யடைந்தான். கடுந்துயருழந்தான். அங்கு இவன் இங்ஙனமாக ஊரிலிருந்த இவனது மனைவியாகியஆதிரை என்பவள்மாதுயரடைந்தாள் அவள் மிக்க கற்புடையவளாதலால் கணவன் இறந்துபட்டான் என்று கருதித்துடித்துமுடிவில் சுடலையிற்போய் ஒருபடுகுழியமைத்து எரியினை வளர்த்து அதில் விரைந்துபாய்ந்தாள். அவளது புண்ணியப்பேற்றுல் அச்சுடுகனல்யாதும் சுடாமல தண்ணிதாகஅடங்கி அவிந்தது. தலைவனைஇழந்துஇனி எவ்வாறு தரித்திருப்பேனென அவள் அலறி நின்றுள். அப்பொழுது ஓர் அசரீரி தோன்றி அவளை

ஆற்றியகன்றது. இப்படிக் கற்புடைமனைவியும், பொற்புறு செல்வமும் பொருந்தியிருந்தும் கவறாடலால் யாவுமிழந்து யாதும் இலனாய் இவன் இங்ஙனம் தீதடைந்தானே என்று அனைவரும் சீறியிகழ்ந்தார். கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார் இல்லாகியார் என்னும்உண்மையை உலகம்காண இவன்உணர்த்தி நின்றான்.

"சாதுவன் என்போன் தகவில னாகி
அணியிழை தன்னை அகன்றனன் போகிக்
கணிகை ஒருத்தி கைத்தூண் நல்க,
வட்டினுஞ் சூதினும் வான்பொருள் வழங்கி,
கெட்ட பொருளின் கிளைகே டுறுதலிற்
பேணிய கணிகையும் பிறர்நலங் காட்டிக்
காணம் இலியெனக் கையுதிர்க் கோடலும்;
வங்கம் போகும் வாணிகர் தம்முடன்
தங்கா வேட்கையிற் றானுஞ் செல்வுழி;
நளியிரு முந்நீர் வளிகலன் வெளவ
ஒடிமரம் பற்றி யூர்திரை யுதைப்ப
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சார்ந்தவர் பான்மைய னாயினன்
நாவாய் கேடுற நன்மரம் பற்றிப்
போயினன் தன்னோ டுயிருயப் போந்தோர்
இடையிருள் யாமத் தேறிதிரைப் பெருங்கடல்
உடைகலப் பட்டாங் கொழிந்தோர் தம்முடன்
சாதுவன் தானும் சாவுற்றா னென
ஆதிரை நல்லாள் ஆங்கது தான் கேட்டு
ஊரீ ரேயோ! ஒள்ளழல் ஈமந்
தாரீ ரோவெனச் சாற்றினள் கழறிச்
சுடலைக் கானிற் றொடுகுழிப் படுத்து
முடலை விறகின் முளியெரி பொத்தி
மிக்கவென் கணவன் வினைப்பயன் உய்ப்பப்
புக்குழிப் புகுவேன் என்றவள் புகுதலும்
படுத்துடன் வைத்த பாயற் பள்ளியும்
உடுத்த கூறையும் ஒள்ளெரி யுறாஅது
ஆடிய சாந்தமும் அசைந்த கூந்தலிற்

சூடிய மாலையும் தொன்னிறம் வாடாது
விரைமலர்த் தாமரை ஒருதனி யிருந்த
திருவின் செய்யோள போன்றினி திருப்பத்
தீயுங் கொல்லாத் தீவினை யாட்டியேன்
யாது செய்கேன என்றவள் ஏங்கலும்
ஆதிரை, கேள்! உன்அரும்பெறற் கணவனை
யூதிரைக் கொண்டாங் குய்ப்பப் போகி
நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்
பக்கஞ் சேர்ந்தனன் பல்லியாண் டிரான்
சந்திர தத்த னெனும்ஓர் வாணிகன்
வங்கந் தன்னொடும் வந்தனன் தோன்றும்
நின்பெருந் துன்பம் ஒழிவாய் நீயென
அந்தரந் தோன்றா அசரீரி அறைதலும்
ஊரி யுண்கண் அழுதுயர் நீங்கிப்
பொய்கைபுக் காடிப் போதுவாள் போன்று
மனக்கவல் வின்றி மனையகம் புகுந்து"

காணம்இலி = பொருள் இல்லாதவன். (மணிமேகலை.)

சாதுவனது அருமைத் திருமனைவியின் பெருமையும், அற்புதக்கற்புடைய அவளையும் பிரிந்து வேசை வலையிற் சிக்கிச் சூதாடல் புரிந்து யாவையும் இழந்து இவன் அல்லலுழந்ததும, பின்பு ஒன்று மில்லாஞய் ஓடிமறைந்ததும், கவறில் "இவறியார் இல்லாகியார்" என்பதற்கு இலக்கியமாக இவன் இருந்ததும், பிறவும் இதனுல் இனிதுணரலாகும்.

பொய்யொடு மிடைந்தபொரு ளாசை யுருளாயம்
மைபடும வினைத்துகள் வழக்குநெறி மாயம்
செய்தபொருள் பெய்தகலன் செம்மைசுடு செந்தீக்
கைதவ நுனித்தகவருடல் ஒழிகென்றான். (சீவகசிந்தாமணி.)

சூதாடுங் கையர் துயராட லன்றிநல
மீதாடல் என்று மிலை.

சூதாடலை விரும்பினோர் யாதும் இலராய் இழிந்தொழிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

936. கோடியல்லல் கொண்டு குணநிதியேன் வெஞ்சூதைக்
கூடி யழிந்தான் குமரேசா—நாடி
அகடாரார் அல்ல லுழப்பர்சூ தென்னும்
முகடியான் மூடப்பட் டார். (சு)

இ—ள்.

குமரேசா! சூதாடி நின்ற குணநிதி ஏன் அல்லல் பல அடைந்து அழுந்தினன்? எனின், சூது என்னும் முகடியான் மூடப்பட்டார் அகடு ஆரார்; அல்லல் உழப்பர் என்க.

இது, சூதாடுவார் துன்பத்திலேயே அழுந்துவர் என்கின்றது.

அகடு = வயிறு. "குருகுடைத்துண்ட வெள்ளகட்டியாமை" (ஐங்குறுநூறு) என்புழி இது நின்றுணர்த்துதல் காண்க.

குக்கி துதந்தம் மடிவயின் உதரம்
மோடு சடரம் அகடும் வயிறே. (பிங்கலந்தை.)

அகடு ஆரார் என்றது வயிறார உண்ணமாட்டார் என்றபடி.

முகடி = மூதேவி. "கழுதை யூர்தி காக்கைக் கொடியாள் முகடி தௌவை கலதி மூதேவி." என்றது (பிங்கலந்தை.)

சூதினை முகடி என்றது செல்வத்தை யிழப்பித்து வறுமை யுறுத்தும் உரிமை கருதி. மூடப்பட்டார் = விழுங்கப்பட்டார். அறிவுகெட்டு மடமைப்பட்டார் எனவும் இது பொருள்பட்டு நிற்றல் காண்க.

மேல், சூதாடுவார் யாதும் இலராய் இழிவர் என்றார்; இதில், பட்டினி கிடந்து அவர் பதைத்துழல்வர் என்கின்றார்.

சூது என்னும் மூதேவியால் மூடப்பட்டார் வயிறாரஉண்ணப் பெறாராய்த் துன்பத்திலழுந்தித் துடிப்பர் என்பதாம்.

சூதாட்டத்தில் தோல்வியும் வெற்றியும் தொடர்ந்து வரும் ஆதலால் தோற்றபோது இழந்தபொருளை எய்திவிட வேண்டுமென்று ஏங்கி ஆடுவர்; வென்றபோது இன்னும் ஒருகை ஆடுவோம்; மேலுமொன்று பெறலாமென்று முனைந்து ஆடுவர்; இவ்வாறு மாறிமாறித் தம்மை மீளவிடாதபடி அது பிணித்து நிற்கும்; நிற்கவே உணவுமுதலிய நுகர்வுநலங்கள் ஒன்றையும் கருதாது கவற்றின்கண்ணேயே சூதர் கண்ணூன்றி நிற்பர் ஆதலால் அவர் "அகடு ஆரார்" என்றார்.

ஒருகாலத்தில் ஒருவன் சூதாடிக்கொண்டிருக்கும்பொழுது அவனைப் பெற்ற தாய் இறந்துபோனாள் என்று உற்றவர் வந்து சொல்லினார்; அச்சொல்லைக்கேட்டும ஆடித்தொழாமல் "சவத்தைத்தூக்கிக்கொண்டு வாருங்கள்; இந்தவழிதானே வரும்; அப்பொழுது உடன் வருகின்றேன்'' எனக் கூறிவிட்டுப் "போடு பகடை" என்று அவ் ஆட்டத்திலேயே மூண்டு அவன் முனைந்திருந்தான்.

"பெற்றதாய் செத்தும் பெயரான உலகன்முன்
உற்றசூ தாடியே ஊக்கிநின்றான்—முற்றும
அறிவுபாழ் போன அழிமகனுக் குண்டோ
உறுநிலம் ஏதேனும் ஒன்று."

இதில் அப்புன்மகன் பேரும் பழியும் பிறங்கிநிற்றல் காண்க.

பண்டு மிகச் சூதாடிவந்த ஒருவன் தன் பெண்டாட்டி இறந்து போனபொழுது அவள் தாலி பந்தயம் வைத்தற்கு ஆகுமெனக் கொண்டாடி நின்றான் என்பர். அடியில் வருதல் காண்க.

"கவறினை ஆடுவோன் காந்தை வீயினும்
சவமதிவ் வழிவரும் என்று தானெழான்
அவள்புனை தாலி பந்தயத்துக் காமென
உவகை பூத் தாடுவான் உயர்வுறு னரோ."

சூதாட்டத்தின் தொடர்பும் உள்ளங்கவர்ந்து மக்களைக் கொள்ளைகொண்டு நிற்கும் அதன் கொடுமையும் இதனால் இனிதுணரலாகும்.

தன்னைத் தொட்டாரை யாதொரு கருமங்களிலும் செல்லவொட்டாதபடி சூதாட்டம் பிணித்து நிற்கும ஆதலால் அதனை யாண்டும் தொடலாகாதென்றவாறு. சூதாடுவார் பொய்யும் களவும் புலையுங்கொண்டு பொங்கி நிற்பராதலால் அத்தீவினைப்பயனால் இங்கும் அங்கும் என்றும் துன்பங்களிலேயே அழுந்துவர் என்பார் "சூதென்னும் முகடியால்மூடப்பட்டார் அல்லலுழப்பர்" என்றார்.

கவற்றினைக் கைக்கொண்டால் வயிற்றினில் தீவிழும் எனஉணர்த்திச் சூதின் உள்ளுறுந்தீமையை இது தெளிதருநிற்றல்காண்க.

உடல் நலத்தையும் உயிர்நலத்தையும் ஒருங்கே கெடுத்துச் சூதாட்டம் பெருந்துயர் விளைக்குமாதலால் அதனை மறந்துந் தீண்டலாகாதென்பது இதன் திரண்டபொருளாம்.

சூதாடுவார் எல்லா நலங்களையும் இழந்து அல்லல் உழந்து அழிந்து ஒழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குணநிதியால் உணரப்படும்.

### கதை.

குணநிதி என்பவன் இற்றைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர்க் காம்பிலி நாட்டிலே கமலபுரி என்னும் நகரிலிருந்தவன். மறையவர் மரபினன். இவனுடைய தந்தை பெயர் வேள்விதத்தன். தாய்பெயர் சன்மினி. இவன் நல்ல அழகுள்ளவன். ஒரே மகனாதலால் பெற்றோர் இவனை மிகப்பேணி வளர்த்து மானகை என்பவளை மணம்புரிவித்து இல்லற நெறியில் இனிதமைத்து வைத்தார். செல்வமும் இன்பமும் சேரப்பெற்று இவன் சிறந்திருந்தான். இங்ஙனம் இருந்துவருங்கால் சில காலங்கழிந்தபின் புல்லர் சிலருடன் கூடி இவன் சூதாடி நின்றான். தந்தை மிகச் சீலமுள்ளவனாதலால் தன் தீதாடலை அவன் யாதும் அறியாவண்ணம் இவன் மறைத்துச் செய்து வந்தான். தாய் அறிந்து தடுத்தும் இவன் சிறிதும் கேளாமல் அத்தீமையில் மூண்டு நின்று நாளும் பொருள்களைப் பாழாக்கி வந்தான். வேறொன்றனையும் நாடாமல் இரவிலும் பகலிலும் எப்பொழுதும் அவ் ஆடலிலேயே இவன் அழுந்தியிருந்தான். ஆடை அணிகள் முதலியன யாவும் தோற்றான். உண்ணும் உணவுந் துறந்து பருகு நீரும் மறந்து அதன்கண்ணேயே கண்ணும் கருத்தும் ஊன்றிக் காலாழ்ந்திருந்தான். ஒருநாள் தாய் உறங்கும் பொழுது அவள் கைவிரலிலணிந்திருந்த மோதிரத்தைக் கவர்ந்து கொண்டுபோய்க் கவறில் இழந்தான். இவன் இழந்து போன அதனை வென்றவன் கையிலிட்டு ஒருநாள் வெளியே வந்தான். அந்த ஆழியைத் தந்தை கண்டான். தன் மனைவியிடம் அவன் தந்து வைத்திருந்தானாதலால் அதனைக் கண்டவுடனே கருத்தழிந்தான்; கருதாதனவெல்லாம் கருதிக் கடுங்கவலைகொண்டு முடிவில் துணிந்து உனக்கு இது, எப்படிக் கிடைத்தது என்று எதிர்ந்து கேட்டான். அவன் உள்ளதை உணர்த்தினான். தந்தை ஒருவாறு தேறி உள்ளங்கொதித்தான். உடனே மனைவியையும் மகனையும் வெறுத்துவிட்டு அவன் மறுபுலம் புகுந்தான். இவன் தாய் மறுகியழிந்தாள். இப் புன்மகன் கவலை சிறிதும் கொள்ளாமல் களவு முதலியன செய்து மேலும் கவறாடி வந்தான். பின்பு

உண்ண வுணவுமின்றி உறுதுயரடைந்தான். இறுதியில் அயலிடம்புகுந்து களவுசெய்யப்போய்த் தலையறுபட்டு நிலை குலைந்தழிந்தான். தான்பிறந்த குடியைக் கெடுத்துச் செல்வ முழுவதையும் தொலைத்துச் சூதால் அல்லல் பல அடைந்து இவன் அழிந்தொழிந்ததை நினைந்து எல்லாரும எள்ளிப்பழித்தார். "சூது என்னும் முகடியால் மூடப்பட்டார், அகடு ஆரார்; அல்ல லுழப்பர்" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

இன்பமுறு றன்னை தந்தை இல்வயி னிருக்குமன்னாள்
மன்பதை மதிக்குஞ்சீர்த்தி வளர்குண நிதியாமைந்தன்
புன்புலமீதூர்ந் தூழின் பொறித்திடு விதியின்கொட்பால்
துன்பமும் பகையுநல்குஞ் சூதின்மேல் மனம்வைத்தானே. (க)

அற்புளனுய தந்தை அறிவுறுவண்ணம கல்விச்
சொற்பயி லாதாரோடு துன்னிவெங் கழகந்தன்னில்
நற்பக லிரவெபபோதும நன்மதி மருட்சிகூர்ந்து
பொற்கலன் கலைபொற்காசு பொருதுநாடோறுந் தோற்பான் .(உ)

தனையன்யாண் டுற்றானென்று தாதைகேட்டிடும் போதெல்லாம்
அனைமிகவெருவி ஓதற்ககன்றனன் என்று தீய
வினையமதான சூது மறைத்தனள் விளம்ப முந்நாள்
வனைதரு மார்பன்சற்றும உணர்ந்திலன் வாழுநாளில். (ங)

ஆய்மகன் தன்னைவாவென் றழைத்துநீ இழைக்குமிந்தத்
தீயசூது உந்தை தேரி னுனையுமிங் கெனையும் சீறிக்
காய்வனென றுள்ளத்தஞ்சிக் கவறுகள் தவறுசெய்யுந்
தாயநீ யாடுஞ்சூது தனையொளித் துரைத்தேன் முற்றும். (ச)

உந்தைதன் ஒழுக்கநீதி யுணர்ந்திலை; அந்தணாளர்
மைந்தர்கள் நடக்கைகண்டு மதிக்கலை; என்றுமாழ்கிக்
கந்தமைக் குவளைவாட்கண் கலுழ்ந்தவ ளுரைக்குமாற்றம்
சிந்தையிற்கொள்ளான் வஞ்சக்கணிகையர் திறத்திற்சோவான். (ரு)

வாட்டடங் கருங்கட்குனை மகளிர்மேல் மனம்வைப்போரைக்,
கோட்டரு களனு நாளுங் குடிப்பவர் தம்மைக், கூடி
யீட்டரும பொருளவாவுற றிருங்கவ றாடுவோரை,
வேட்டமேல் மனமவைப்போரை யாவரே விலக்கவல்லார். (சு)

இனையநீர்மையின னென்று மிசைந்துளா னில்லினோர்நாள
அனைதுயி லைமையநோக்கி அத்தன்முன் அவள்பால் நல்கும
புனைமணி யாழிதன்னைப் பொருக்கெனத் திருடிப்போகி
வினையவெங் கவற்றினாடித் தோற்றனன் வெறுன்றில்லான். (எ)

அந்தமோ திரத்தைக்கையி லணிந்துளான் ஒருவன்றன்னைத்
தந்தையாம வேள்விதத்தன் தனித்தொரு மறுகிற்கண்டு
சிந்தையிற் கவலைகூர்ந்து தெளிந்துபின அறிவனென்றுங்
கிந்தமா மணிப்பொன்னாழி யாருனக் கீந்ததென்றான். (அ)

அரவின்மேற் கிடந்தவையத் தமரர்கள்பதியே, யானுங்
கரவினிற் கொண்டதன்றான் காதல்கூர் மைந்தன்சூது
பொரவிருப் புடையோ னேற்றென் புட்டகம் வென்றான்; இன்றிவ்
விரல்மணி யாழிதோற்றானை; மேவுவ னாளையின்னும். (௯)

ஓதுநூற் கலைவல்லாய்நின் னொருமகன விலையிலாமென்
போதுபோற் கோசிகஞ்செம் பொன்புனை கலனைகள்யாவும்
சூதுபோர் பொருதுநாளும் தொழிலிது வாகத்தோற்பான்
ஈதுநீ உணராய்போலும் என்றவனெடுத்துக் கூற. (௰)

கன்னபாகத்திற் காய்ந்த கதிர்நுனிச் சலாகையிட்ட
தென்னவெந் துருகியிற்பா லெய்தியில் லவனைநோக்கி
உன்னதா ருயிரொப்பான புதல்வனெவ் வுழையிலுற்றான்?
என்ன; மற்றவனீராட நீர்த்துறை புகுந்தா னென்றாள். (௰௧)

என்னலும் நென்ன லுன்பால் எண்ணெய் யாட்டயர்போதீந்த
வன்னநன் மணிப்பொன்னாழி தருகென மறையோன் கேட்பக்
கன்னவிற கனிந்தமூரல், பகற்கடன் கழித்துத் துய்த்த
பின்னர்யான் தருவலென்று பெட்புறப் பேசலோடும். (௰௨)

நெறியில்பொய் புகன்றுகற்பி னீரலசெய்தாள்; மைந்தன்
அறிவில னாகிவெஞ்சூ தாடியே படிறனானான்
குறியுடைப் பெரியோர்நூலிற் கூறிய நீதிநோக்கிற
பொறியிலா இவனைவிட்டுப் போவதே கடனெனவெண்ணி. (௰௩)

பற்றொரு சழுறுமின்றிப் பாசிழைப் பவளச் செவ்வாய்ப்
பொற்றொடி தன்னையுமபெற்ற புத்திரன் தன்னையு நீத்தான
உற்றொருபதியினெய்தி உயர்குண வேளவிதத்தன்
மற்றொரு மடந்தைதனை மணவினை முடித்துவாழ்ந்தான். (௰௪)
(சிவராத்திரி புராணம்.)

குணநிதி சூதாடித் துயருழந்த வுண்மையை இதுவும் விளக்கி நிற்றலை காண்க.

சூதென்னு மூதேவி தோட்டக்கால் அப்போழுதே
தீதெல்லாஞ் சேருந் திரண்டு.

அல்லல் பலவும அடைந்து சூதர் அழிவரென்பது இதனாற் கூறப்பட்டது.

---

937. அன்று கழகம் அடைந்தான் தருமனிலை
குன்றினன் என்னே குமரேசா—நின்று
பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங
கழகத்துக் காலை புகின். (எ)

இ—ள்.

குமரேசா! கழகம் புகுந்ததனால் தருமன் ஏன் தனது விழுமிய செல்வத்தை யிழந்து மேன்மை குன்றினன்? எனின், கழகத்துக் காலைபுகின், பழகியசெல்வமும் பண்பும கெடுக்கும் என்க.

இது, ஆயம்புகுர்தால் தாயம்போம் என்கின்றது.

பழகிய செல்வம் என்றது தொன்றுதொட்டுத் தலைமுறை தலைமுறையாகப் பயின்றுவந்த செல்வம் என்றபடி.

பண்பு = நல்லகுணங்கள். அவை, அருள் அடக்கம் நேர்மை அமைதி முதலிய இனிய நீர்மைகள் என்க.

கழகம் = சூதாடும் இடம். காலை = பொழுது. காலைபுகின் என்றது அதிகாலையில் புகுவனாயின் என்றவாறு. அஃதாவது காலமுழுவதும் சூதாடுகளத்திலேயே கழியவிடுவனாயின் என்றபடி.

மேல், சூதாடலால் அல்லல்பலநேரும் என்றார்; இதில், அது செல்வத்தைக் கெடுத்துத் தீதையை விளைக்கும் என்கின்றார்.

சூதாடும் இடத்துக்கு ஒருவன் நாளும் புகுவனாயின் அது பரம்பரையாகவந்த செல்வத்தையும் அவனுடைய சிறந்த குணங்களையும் அழித்துவிடும் என்பதாம்.

விடிந்தெழுந்ததும் சூதாடுவதே வேலையாகத் தன் காலமுழுவதையும் அதில் செலுத்துவனாயின் அவன் உள்ளம் வேறொன்றினும் செல்லாது; ஆகவே அவனிடம் அமைந்திருந்த பொருளெல்லாம் கரையிழந்த குளநீர்போல் பலபடச் சிதைந்து கழிந்து அடியோடு ஒழிந்துபோம் ஆதலால் கழகத்துக் காலைபுகின் பழகிய செல்வம் கெடும் என்றார்.

அன்பு இரக்கம் நடுநிலைமை முதலிய இன் குணங்களெல்லாம் சூதாடுவார்க்கு இல்லையாம் ஆதலால் அது பண்பும் கெடுக்கும் என்றார்.

உள்ள செல்வத்தையும் நல்லகுணங்களையும் ஒருங்கே கெடுத்

துச் சூது பெருங்கேடுவிளைக்குமாதலால் அத்தீவினை மறந்துந் தீண்டலாகாதென்பது இதன் திரண்டபொருளாம்.

எவ்வளவு நல்லவனுயிருந்தாலும் அரசன் வல்லாடும் இடம் புகுந்தால் அவன் செல்வமெல்லாம் இழந்து அல்லலுற நேரும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தருமன்பால் உணரப்படும்.

## கதை.

குணசீலராகிய தருமரை வரவழைத்து வைத்து வஞ்சனை புரிந்து சூதாடி அரசு முழுவதையும் வௌவிக்கொள்ள வேண்டுமென்று துரியோதனன் சகுனி முதலாயினோர் சேர்ந்து சதியாலோசனை செய்து அவரைச்சதுரடன் அழைத்து வரும்படி விதுரனை விடுத்தார். அவன் சென்று இந்திரப்பிரத்தத்தையடைந்து பஞ்சவரைக் கண்டு வந்துள்ள காரியத்தைத் தெரியக்கூறினான். அதனைக்கேட்டவுடனே தருமர் வாட்டமிக்கூர்ந்தார். அவ்வஞ்சர் நிலையையறிந்து நெஞ்சங்கலங்கினார். "தீவினையாளரான பாவிகள் பயிலும் மாயச் சூதினை ஆடுதற்கு என்னையோ அவர் எதிராக எண்ணி நேர்ந்தார்!" என என்னுதனவெல்லாம் எண்ணி வருந்தினார். அன்று இவர் உரைத்தவற்றுள் சில இதனடியில் வருவன காண்க.

"அடியும் ஆண்மையும் வலிமையும் சேனையும் அழகும் வென்றியும் தத்தம், குடியும் மானமும் செல்வமும் பெருமையும் குலமும் இன்பமும் தேசம், படியுமாமறை ஒழுக்கமும் புகழும் முன் பயின்ற கல்வியும் சேர, மடியுமால் மதியுணர்ந்தவர் சூதின்மேல் வைப்பரோ? மனம் வையார். (1)

குழகரா யிளமடந்தையர்க்கு உருகுவோர் குறிப்பிலாமையினோடும்
பழகுவார்மிகச் சிந்தைநோய் தாங்களே படுக்குமாறுணராமல்
அழகுபோரதில் வாகவே கொண்டவர் அறத்தொழில் புரியாமல்
கழகம்ஆடவும் பெறுவரோ? இதனினும் கள்ளுணல் இனிதன்றே

மேதகத்தெரி ஞானநூற்புலவரும் வேத்துநூல் அறிந்தோரும்
பாதகத்தில் ஒன்றெனவே முன்னமே பலபடப் பழித்திட்டார்
தீதகப்படு புனதொழில் இளைஞரிற்சிந்தனை சிறிதின்றித்
தோதகத்துடன் என்னையோ! சகுனிதன் சூதினுக்கு எதிர்என்றான்."

(பாரதம்.)

இங்ஙனம் சூதின் தீதினையஞ்சி இவர் நெஞ்சமெலிந்து கூறியும் மூத்த தந்தையாகிய திருதராட்டிரனுடைய வார்த்தையைத் தட்டலாகாதென்று துணிந்து தம்பியரை உடனழைத்துக்கொண்டு

அத்தினபுரியை யடைந்தார். அங்கு உறவாடியிருந்து மறுநாட் காலையில் புதியமண்டபத்துள் புகுந்தார். அரசர்குழாம புடைசூழ அமர்ந்திருந்தபொழுது சகுனி மிக விநயமாக இவரைச் சூதாட அழைத்தான. இவர் முதலில் மறுத்தார். பின்பு அவன் கூறிய வஞ்சவுரைகளால் நெஞ்சுமாறி அவ் வெஞ்சூதாட இசைந்தார். ஆடுந்தோறும அத்தீயவன் வென்றுவந்தான்; இத்தூயவர் தோற்று நின்றார்; வைத்தவெல்லாம் இழந்தும் அதில் இவர் சித்தமூண்டு முனைந்தார்.

"தேர்கொடுத்த பின்னும், மாறு செட்பியுள்ள தேர்மதக்
கார்கொடுத்தும்; எண்ணிலாத கவனமாக்கொடுத்தும்; அப்
பார்கொடுத்தும்; அரசுகூர் பதங்கொடுத்தும; உரியதம்
ஊர்கொடுத்தும்; அதனினுள்ளம் ஒழிவுறும லோடவே"

என்றபடி இவர் ஓடிநின்றாராதலால் அவ் ஆடலில் யாவையும் இழந்து மேவியிருந்த தமமேன்மையும் குன்றினார். தமக்குயாதொரு வென்றியும் தராமல் அவ் வஞ்சனுக்கே அக்கவறு வசமாய் நின்று தம்மைக கெடுத்ததை நினைந்து இவர் கடுத்தார்.

காயமுற்றும் வஞ்சமே கலந்ததன்ன கள்வன்மேல்
நேயமுற்று நினறுதானு நிகர்பிடித்த தெனனவே
மாயமுற்ற கவறுமந்த மாமன் வல்லபந்தனிலே
தாயமுற்றிடங்கொடாது தருமனைச சதித்ததே. (1)

இன்னதாயம வேண்டுமென் றெறிந்தபோது மற்றவன்
சொனனதாய மேபுரண்டு சோர்விலாமல் வருதலில்
தன்னதாய அரசுவாழ்வு தரணிமனன னல்கினான
அன்னதாய போதுநெஞ் சசைந்திலான் அசஞ்சலன். (2)
(பாரதம்)

தம் செலவமுழுவதையும் இவ்வண்ணம் சூதில் தோற்றுத் துயர் மிகுந்திருந்தும் வினை விளைவென்று தேறித் தம்பியருடன் வனமடைந்து வருந்தியிருந்தார். சூதாடும் இடத்தில் புகுந்ததனால் அரச திருவெல்லாம் இழந்து இங்ஙனம் இவர் நிலைகுலைந்தொழிந்தாரே யென்று அனைவரும் உளமிக வருந்தினார். "பழகிபசெல்வமும் பண்பும் கெடுக்கும் கழகத்துக் காலை புகின்" என்னும் உண்மையை உலகம் இவரால் உணர்ந்து நின்றது.

சீல மழித்துத் திருவொழித்துத் தீநரகின்
பாலழுத்துஞ் சூது படல்.

திருவும் சீலமும் சூதால் சேரகெடும் என்பது இதனால் கூறப் பட்டது.

---

938 வென்றி உருக்குமனேன் வெஞ்சூதால் அல்லலெய்திக்
குன்றி மடிந்தான் குமரேசா—நின்ற
பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள்கெடுத்
தல்ல லுழப்பிக்குஞ் சூது. (அ)

இ—ள்.

குமரேசா! உருக்குமன் சூதாடியதால் பொருளழிந்து அருள்கெட்டு ஏன் அல்லல் உழந்தான்? எனின், சூது, பொருள் கெடுத்துப் பொய்மேற் கொளீஇ அருள் கெடுத்து அல்லல் உழப்பிக்கும் என்க.

இது, சூதாடுவார்க்கு அருளும் பொருளும் இல்லையாம் என்கின்றது.

பொய்மேற்கொளீஇ = பொய்யை மேற்கொள்ளப் பண்ணி. அஃதாவது பொய்யினைத் தனக்கு உரிமையாகப் பொருந்தச்செய்து என்றவாறு பொய் இல்லையானல் சூதாடல் செல்லாதாகலின் இதற்கு அது இன்றியமையாது வேண்டப்படும் என்க. பொய் பேசி அறியாதவனும் சூதாடப்புகுந்தால் அதனைப்பேசியே தீரு வன் என்றபடி.

அல்லல் உழப்பிக்கும் = துயரம் உழலச்செய்யும்; துன்பங்களில் அழுந்தச்செய்யும் என்றபடி.

மேல், சூதாடின் செல்வத்தோடு நல்ல குணங்களெல்லாம் சேரப்போம் என்றார்; இதில், அதனால் அல்லல் பலசேரும் என் கின்றார்.

சூதானது தன்னைத்தொட்டவனைப் பொருளைக் கெடுத்துப் பொய்மையை மேற்கொள்ளப்பண்ணி அருளைக்கெடுத்து அல்லற் படுத்தும் என்பதாம்.

பொருள் கெடுத்து என்றதனால் இவ்வுலக இன்பங்களையும்,

அருள் கெடுத்து என்றதனால் அவ்வுலக நலங்களையும் அறவே சூது அழித்துவிடும் என்பதாயிற்று. என்னை? "அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை; பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகியாங்கு" எனமுனைமை அருளி யுள்ளமை காண்க.

வல்லாடினார் பொருளழிவோடு அல்லல் பலவும் பொருந்தி யழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உருக்குமன்பால் உணரப்படும்.

## கதை.

உருக்குமன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர்ப் போசகூடம் என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். விதர்ப்ப நாட்டைத் தனக்கு உரிமையாகவுடையவன். அக்காலத்தில் யாதவர் குலத்திலிருந்த குறுநில மன்னர் பலரினும் இவன் மிகச் சிறந்தவன். கண்ணனுக்கு ஒரு முறையில் இவன் மாமன் மகனாவான். சிறந்த அழகியாகிய உருக்குமணியோடு இவன் உடன் பிறந்தவன். ஊக்கமும் உறுதியுமிக்கவன். சொல்வன்மை யுடையவன். எவரையும் தன்வசப்படுத்தி ஆளுந் தன்மையன். தனது அருமைத்திருமகளாகிய சாருமதி என்பவளுக்குச் சுயம் வரம் நாட்டித் தன் அணிநகருக்கு அரசர் பலரை வரவழைத்தான். அதில் பிரத்யும்மனன் அவளைப் பெற்றுச் சென்றான். சிசுபாலனோடு இவன் மிக நட்பினனாதலால் கண்ணன் முதலானவர்களை ஒரு பொருளாக எண்ணாதிருந்தான். திருவும் திண்மையு முடையவனாய் இங்ஙனம் சிறந்திருந்த இவன் சூதாட்டத்தை மிக விழைந்துவந்தான். அதில் தனது பொருள் பலவுந் தோற்றானாயினும் வல்லாடலில் வல்லுநனென்று எல்லாரும் சொல்ல இன்புற்று நின்றான். இயற்கையில் நல்லவனாயிருந்தும் சூதினை மேற்கொண்டதனால் பொய்யும் புன்மையும் பொருந்திப் புலைமிக்கிருந்தான். ஒரு முறை பலராமர் இவனிடம் வந்தார். அநிருத்தனது மணத்தின் பொருட்டு வந்த அரசர் பலரும் அங்குக் குழுமியிருந்தார். மண வினை முடிந்தபின் தனிமையான இடத்தில் அரசர் சிலருடன் இவன் இருந்துகொண்டு பலராமரைச் சூதாட அழைத்தான். கரவறியாத அவர் சரியென இசைந்து இவனெதிரமர்ந்து கவறாடினார். அதில் இவன் கைதேர்ந்தவனாதலால் அவரைப்பலமுறையும் வென்றான். ஒருநாம உண்மையில் அவர் வென்றிருந்தும் அதை இல்

லையென அழித்துச்சொல்லி அவரை இளித்துரைத்தான். உடனி ருந்தபலரும இவன் பக்கமே உற்றுரையாடினர். வாரமகொண்டு அவர் கூறி நின்றதையும, சிறிதும இரக்கமில்லாமல் சிரித்திகழ்ந்து இவன் மீறியுள்ளதையும நோக்கி அவர் சீறி யெழுந்தார். கையிலி ருந்த தடியால் கடுத்தடித்தார். இவன் துடித்திறந்தான். அடுத் திருந்த சிலரையும் அடித்துத் துரத்தி விட்டு அவர் அகன்றுபோ னார். பொருளும்போய் உயிரும்போய்ச் சூதால் இங்ஙனம்இவன் பொன்றி முடிந்ததைக் குறித்து எல்லாரும் நின்று பழித்தார். "பொருள் கெடுத்துப் பொய்மேற்கொளீஇ அருள் கெடுத்து அல் லல் உழப்பிக்கும சூது" என்னும்உண்மையை உலகம இவன்பால் உணர்ந்து நின்றது.

மோடுசால் மன்றலாற்றி முருகனு றுறையுநாளில்
பீடுசால் பிறைவெண்கோட்டுப் பிணர்ப்படு பனைக்கைகால்வாய்
ஓடைவேய் களிறலயானை உருக்குமி தனனோடின்புற்
றாடினன சூதுவென்றி அலப்பறை அண்ணல் மன்னோ. (1)

மூன்மொழிற் றணங்கினன்னார் முகிழ்முலைக் கோடியாய
ஒள்ளிணர் கிழித்தலைந்தார் உருக்குமி இருகால்வெல்ல
வெள்ளியங் குன்றம போலும விமலநோனி மேனியானை
தெள்ளொளி முறுவல்தோன்றச் சிரித்தனன களிக்கவெய்தவே. (2)

சூழுதமெனை முகைவாய்வின்னக் குருஉச்சுடாக கற்றைவாகாலா
அமுக வெண்டிகளைன அளிறொளி விரிக்கமேனி
விமலன்மற றெருநாள் வெல்ல வெனறனையனோனய
உமிழ்கதிர்ப் பரிதிவைவேல் உருக்குமி உரைசெய்தானல். (3)

சந்தனப்படப்பை வேலித் தண்பணை விதர்ப்ப வேந்தன்
மைந்தன்மேல் வெனறநாட்டி மன்னவ ருரைத்தாராக
வெந்திறல் நாந்சில்தாங்கு விமலனை வென்றுவென்று
அந்தாவானி மற்றொன் றுயிடை யறைந்தானோ. (4)

நீணிறப்பரவைவேலி நெடுநிலம புரக்கும் வேந்தர்
பாணமையில் ஆடலுற்ற பல்பகைத் தொழிலும, சூதும்,
ஆணைமபுரந்து காவசேர் ஆயர் நன்கறிவாமொன்றுங்
கூறுதுகுடுமி வேறகை உருக்குமி அசிசெய்தானே. (5)

இருட்டறச் சுடர்நெறியி னெழுந்தரும் பசும்பொற்குன்றம
வெருட்டிய புவனத்தின்கண் டோனை வெந்திறல் இராமன்சிறிச்-
சுருட்டிடப் பாகன்வெந்த சுமந்தபார் மன்னரநட்க
உருட்டினை கழவிதைல் அல்லுருக் குமி உவப்புமன்னோ. (பாகவதம்)

உருக்குமன் மைந்தன் ஒருமகள் தன்னை
அரத்த வடிவேல் அநிருத்தன் என்போன்
விருப்பொடு வேட்டபின் வெள்ளை நிறத்துப்
பொருப்பொடு சூதுப போர் முனைந்திட்டான். (1)

ஓர்குறை வள்ளல் உருக்குமன் தன்னொடும்
ஆர்வ மிகுந்திடச் சூதாட்டயர் வழிப்
பார்புகழும் பல பத்திரன் தோற்றனும
சீர்சால் உருக்குமன் எள்ளிச் சிரித்தான். (2)

சிரித்த உருக்குமன் சென்னி சிதற
விரித்த பலகையின் வெண்ணிறத் தன்னால்
உரப்பி அடித்தவன் ஆருயிர் உண்டுப்
பரித்த கலிங்கர்கோன் பல்லுகுத் திட்டான். (3)

(கூர்மபுராணம்.)

சூதால் அல்லலுழந்து இவன் அழிந்த உண்மை இவற்றின் கண்ணும் விளக்கப்பட்டுள்ளமை காண்க.

நல்ல குணங்களெல்லாம் நாசப் படுத்துமே
பொல்லாத சூது புகின்.

எல்லா நலங்களையுமழித்துச் சூது இழிவுறுத்துமு என்பது இதனால் கூறப்பட்டது.

---

939 அன்றேன உணவும் அடையாமல் மாகநந்தன்
நன்றினன் சூதில் குபேரசா—நன்றாம்
உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்தும்
அடையாவாம ஆயங் கொளின். (க)

இ—ள்.

குபேரசா! மாகநந்தன் ஏன் உணவுஉடை முதலிய நலங்கள் ஒன்றும அடையாமல் சூதால் அல்லலுழந்தான்? எனின், ஆயம்கொளின் உடை செல்வம் ஊண் ஒளி கல்வி என்று ஐந்தும அடையாவாம எனக.

இது, சூதர் ஒருநலமும அடையார் என்கின்றது.

உடை உடுக்கப்படுவதென்னும் ஏதுவான வந்தது. இதனை முறைபடவைத்தது மக்களது மானத்தைக் காத்துநிற்கும அதன் மாட்சி கருதி. அன்றியும அதன் இன்றியமையாமை தோன்றவு

மாம். என்னை? உணவில்லையாயினும யாதும் கூசாமல் நாளும் உலாவலாம; உடையில்லாவிடின் ஒரு கணமுங் கூட வெளியே தலை நீட்டலாகாதன்றே?

ஊண் = உணவு; உண்ணப்படுவதென்பதாம். ஒளி = புகழ் கல்வியைப்பின்நிறுத்தியது எல்லாவற்றிற்கும் ஆதாரமாய் நிற்கும் அதன்சிறப்பு நோக்கி என்க.

மேல், சூதாடுவார் கெட்டுழல்வர் என்றார்; இதில், அக்கேடுகள் சிலவற்றை விளக்கி யருள்கின்றார்.

சூதாடலைக் கைக்கொண்டால் உடையும் செல்வமும் உணவும் புகழும் கல்வியும் என்னும் இவ்வைந்தும் பொருந்தா என்பதாம்.

உடைமுதலியன அடையா என்றதனால் உண்ண வுணவும் உடுக்க உடையும் இன்றிப், பழிவறுமைகளை அடைந்து முழுமூடராய்ச் சூதாடிகள் உழல்வர் என்பது பெறப்பட்டது.

"வென்றிவரினும் அதனுள்முன்மேவுமொன்றற் காயிரம்பின் மன்ற இழக்கும்; அதுவன்றி வைத்தபொருளும் வருவாயும், அன்றி யனைத்தும் பகைகொள்ளும்; அமைச்சராதியுறுப்பொழியும்; ஒன்றும் ஒளிகல்விகள் மறுமையுறுதியிலையாம; சூதாடேல்". என்றபடி எல்லா நலங்களையும் ஒருங்கே தொலைத்துப் பெருங்கேடு விளைக்கும் கொடுந்தீமையுடையதாதலால் இச்சூதாடலைக் கனவிலுங் கருதலாகாதென்பது கருத்து.

சூதினை விரும்பினவன் வறுமையும் பழியுமெய்தி இருமையும் வருந்துவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மாகந்தன்பால் உணரப்படும்.

## கதை.

மாகந்தன் எனபவன் இறைக்குப் பல்லாயிர ஆண்டுகட்கு முன்னர் அவந்தி நாட்டிலே நந்திகேசி என்னும் நகரிலிருந்தவன். நருமதன் எனனும் வேதியன் புதல்வன். இவன்பிறந்தபோதே சிறந்த வளங்களோடு விளங்கியிருந்தான். பல நூல்களையும் பயின்று திகழ்ந்தான. செல்வத்திலும் கல்வியிலும் இங்ஙனம் இவன் சிறந்து வருங்கால் தந்தையிறந்து போயினன். அதன்பின் மனம் போனபடியெல்லாந் திரிந்து ஓர் மங்கையை மணந்து பொறியின் பங்களை நுகர்ந்து தீயோர்பலருடன் சேர்ந்து சூதுத் தீக்கூர்ந்து

தீங்கூக்கி நின்றான். தன்னை மிக நம்பியிருந்த நண்பர்களுடைய மனைவியர்களையும் கரந்து தழுவி கருதியவாறே நுகர்ந்து காமக்களிப்பில் இவன் கண்ணூன்றி வந்தான். பின்பு களவு வஞ்சமுதலிய இழிவினைகளையும் செய்யத் துணிந்தான. இவனுடைய செயல் வகைகள் சிலவற்றை யடியில்காண்க.

"மறைதேர்வாழ்க்கை மாகநந்தன் என்பானொருவன் வான்கலையின்
துறைபோய் உலகிற்பலகலைக்கும் ஒருவனென்னுந் துணிவெய்தி
யுறையு நாளில் அவன்றாதை யிறப்பக் காமமீதூர்ந்து
பிறன்மற் றொருவனொடுந்தீரா நண்புநாளும் பெரிதோங.

நண்பிற் றீரான்போன்றவனிற் கிழத்திமுலைமென் னலநுகர்ந்தும்
பண்பிற்றிரிந்தும கொலைகளவு முதலபாவம் பலபயினறும்
வண்சொற் பயிலுமறைநெறியின் வழுக்கிக காமவயததனுய்த
திண்பொற்றடந்தோள் எறுழ்வலியால் பிறர்பாற் பொருள்களினங்
கவர்ந்தும்.

பாகவதரோடியைந்து சைவநெறியைப் பழிததும; சைவநெறி
போகுமவாபா லியைந்தினம் பாகவதரைப் புறம்பழிததும்;
யாகமுனிவர்க் கிடர்விளைத்தும்; யாவர்பொருள் நல்கினரவாகட்
காகநெறியிற் கரிநாளும்பகர்ந்தும்; பதிதனுயினனுல்." (காசிகாண்டம்)

இவ்வண்ணம தீயனுன இவன் பாபகாரியங்கள் பல புரிந்து படு சூதாடினுன் அவ் ஆட்டத்திலேயே எப்பொழுதும நாட்டஞ் செலுத்தினுன். தனக்கிருந்த பொருள் எல்லாவற்றையும் அதில் ஒருங்கே யிழந்தான். இழந்தும் விட்டு நீங்காமல் பழிவினைகள் பலசெய்து அதனைப் பயின்று வந்தான். வரவே முடிவிலயாதும் இல்லையினுன். உடுக்க நல்ல உடையும உண்ண உணவுங்கூட இல்லாமல் உள்ளங் கலங்கி அயலிடஞ்சென்று இடைவழியில் கள்ளர் கையில் சிக்கிக் கொலையுண்டிறந்தான். "உடை செல்வம் ஊண் ஒளி கல்வி எனைறைந்தும் அடையாவாம் ஆயம் கொளின்" என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

ஓதலும் ஓதி யுணர்தலும் சான்றோரான்
மேதை யெனப்படு மேன்மையும—சூது
பொருமென்னுஞ் சொல்லினல் புல்லப் படுமேல்
இருளாம ஒருங்கே யிவை. (அறநெறிச்சாரம்.)

ஓதுநல மெல்லாம் ஒழியும் உறுதுயராம்
சூதென்னும் தீது தோடின்.

நுகர்வொன்று மின்றிச் சூதர் துயரொன்றி நிறபர் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

உடம்பைப் பற்றிநின்று உயிர் துன்பங்களை யனுபவித்தாலும் அதனை அது எப்படி அபிமானித்து நிற்குமோ? அப்படியே சூதாட்டத்தைப் பற்றிநின்று சூதர் பொருளிழந்து படினும் அதனை அவர் காதலித்து நிற்பர் எனவும் இது காணப்படும்.

சூதாட்டமானது தன்னைத்தொட்டாரை மீளவிடாதாதலால் அதனை யாண்டும் தொடலாகாதென்பது கருத்து.

உள்ளசெல்வமெல்லாம் இழந்து அல்லல்பல அடைந்தாலும் சூதாடிகள் அவ் ஆட்டத்தைக் கைவிட்டு உய்யமாட்டார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கலிங்கன்பால் உணரப்படும்.

## கதை.

கலிங்கன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னிருந்தவன். கலிங்கநாட்டைத் தனக்கு உரிமையாக் கொண்டவன் போசகடத்து மன்னனாகிய உருக்குமன் என்பவனோடு மிக்க நண்பினன். இவன் மிகுந்த செல்வமுள்ளவனாயினும் தகுந்த கல்வியில்லாதவன். எவரையும் மதியாத இழிதகைமை யுடையவன். பழிவினையாளர் பலரைத் தழுவிநின்றவன். துரியோதனனுக்கு உதவியாய்நின்று பாண்டவர்க்கு எதிர்செய்து வந்தவன். நெறிதிறம்பி நின்று மனம்போனவாறே பொறியின்பங்களை நுகர்ந்து இவன் செருக்கியிருந்தான். இங்ஙனம் இருந்த இவன் சூதாடலை மிக விரும்பி நின்றான். நாளும்பலருடன் அதனை நயந்தாடிவந்தான். அவ் ஆட்டத்தில் சகுனிக்கு அடுத்தபடி என அக்காலத்திருந்தவரனைவரும் இவனை வியந்துநின்றார். அதன் வஞ்சவகைகள் முழுவதும் அவ்வஞ்சனிடமிருந்தே தெரிந்துவைத்திருந்தான். சூதினுல் பலர் பழிசொல்லக்கேட்டாலும் இவன் இன்பமீதூர்ந்தெழுவான். ஒருமுறை உருக்குமனும் பலராமரும் சூதாடிக்கொண்டிருக்கும் பொழுது இவன் அருகேயிருந்து அவனுக்கு ஆவன செய்தான். பலராமரை வெல்லவொட்டாதபடி அல்லல் பல ஆற்றி எள்ளிச் சிரித்தான். முடிவில் அவர் உள்ளங்கடுத்து உருத்தெழுந்து உருக்குமனை அடித்தார். அவன் உயிர்துறந்தான். அடுத்துநின்ற இவன் அஞ்சியோடினன். அவர் விடாமல் தொடர்ந்து விரைந்துபோய்ப் பிடித்து "நகைத்தவாய் இதுதானே" என்று இவன் முகத்தில் குத்தினர். அதனல் இவன் வாயிலிருந்து இரத்தம் சொரிந்தது. பற்

கள் எல்லாம் பாரில் உதிர்ந்தன. உட்கி மறைந்து இவனை உலாவடைந்தான. பனி யணி புனைந்து அழகனாயிருந்த இவன் அன்று அவமாந் தேடியதைக் குறித்துப் பலரும் சிரித்தார் அடியில் வருவதும் காண்க.

சூடாமணிக் குழலில் வீசிச் சுழன்றெறுத் தலைப்பக்கமா
கடிமலர்க் கண்ணிசிந்தக் கலிங்கனுங் கோடுவானை
அடியொரு பத்திரபற்றி அணிமணிக் கடகக்கையால்
படரொளி முத்தமன்ன பல்நிரை உகுதல்செய்தான். (பாகவதம்)

இங்ஙனம் பல்லுடை பட்டுப்போன இவன் இக்காலத்துச் சிலர்போல் ஒட்டுப்பற்களைக் கட்டிக்கொண்டு அவ்வூனம் தெரிய வொண்ணாதபடி அளவோடு பேசிவந்தான். வல்லாட்டத்தில் தனக்கு இவ்வளவு அல்லல் வந்தும் மேலும் அதனை விடாமல் ஆடினான். அரசுமுறையைக் கருதாமல் எப்பொழுதும் அதனைக் கண்ணோடி ஆடி நின்றிருந்தானாதலால் தன் அரியசெல்வமுழுவதும் இழந்து வறியவனாயினான். ஆயினும் அவ் ஆட்டத்தை ஆசையால் செய்து அதிகங்களித்து நின்றான். சூதாடலால் பல்லுடைபட்டும் செல்வம் கெட்டும் யாதும் உணராது நீங்காமல் அதன்மீதே இவன் ஆசையுற்று நின்றதை யறிந்து யாவரும் இகழ்ந்தார். இழந்தொறும் சூதர் சூதினைக் காதலித்து நிற்பர் என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான.

சூதும் வாதும் வேதனை செய்யும். (ஔவை)

தீதெடுத்த வஞ்சனாகி வெகுளிசெய்தல்; பிறர்பொருள்
கோதெடுத் துரைத்தல்; கண்டுகொண்டயிர்த்தல்; கொடியவெஞ்
சூதெடுத்து விழைதல்; உற்றருள் பிழைத்தல்; இன்னவே
தீதெடுத்த நூலின்முன்பு தீயவென்று செப்பினார். (பாரதம்)

சூதென்ற சொல்லே துணுக்க மிகச்செய்து
தீதென்று காட்டிநின்றுந் தேராமல்—ஏதங்கொண்
டாடி அதனுள் அழுந்துவார் பாழ்ங்கேடு
கூடி யழிவார் குலம். (தருமதீபிகை)

பட்டாழ்ந்த போதும் படுசூதைக் காதலித்துக்
கெட்டொன்றா வீழுமே கீழ்.

சூதர் உய்வின்றி ஒழிவர் என்பது இதனால் கூறப்பட்டது

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

சூதாடலை யாதும் விரும்பலாகாது. அதனைத்தீண்டினோர் தீதேயடைவார். அதில் பொருள்பெற விரும்பினால் உள்ளபொருளெல்லாம ஒருங்கே ஒழிந்துபோம். அது சிறுமைபலசெய்து சீரழித்து வறுமையை விளைத்துவிடும். நன்றென்று அதனை நயந்து நின்றவர் பின்பு ஒன்றுமிலராய்க் குன்றியழிவார். அல்லல் பல அடைந்து அலமந்துழல்வார். நெடுநாள் பழகிய செல்வமுழுவதும் அதனை ஒருநாள் தொடின் ஒழிந்தேபோகும. பொய்யும புலையும் பெருக்கி அது புன்மையுறுத்தும. அது புல்லின கல்வி புகழ் முதலிய நல்லனவெல்லாம் இல்லாதொழியும. அதனைத் தொடடவா பின்பு என்று மீளாமல இழிந்தே தொலைவர்.

௯௪-வது சூது முற்றிற்று.

---

# 95—ம் அதிகாரம் மருந்து.

அஃதாவது நோய்தீர்க்குந் திறன். சூது, கள் முதலியன துன்புறுத்துமாகலான் அவற்றை யாண்டுந் தீண்டலாகாதென முன்னர் உணர்த்தினார்; இதில் இன்புறும்படி உணவுசெயல்களை ஓர்ந்துகொண்டு உடம்பைப் பாதுகாத்து ஒழுகவேண்டுமென்று உணர்த்துகின்றார் விலக்கி ஒதுக்கப்பட்ட. ஆட்டம் குடி கூட்டம் என்னும் அவற்றோடு இவ் ஊட்டத்தை ஒட்டிவைத்தது விதித்துத் தழுவப்பட்டமையான் என்க. அளவறிந்து கொள்ளுதற்குரிய தாதலான் அறவே தள்ளுதற்குரிய அவற்றின்பின் இது வைக்கப் பட்டது.

941. கொண்ட வுணவு குறைந்திடநோய் கொண்டானே
குண்டோ தரனென் குமரேசா—உண்டி
மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா எண்ணிய மூன்று. (க)

இ—ள்.

குமரேசா! உண்டி குறைந்ததனால் குண்டோதரன் என் நோய்கொண்டு வருந்தினான்? எனின், நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்றும் மிகினும் குறையினும் நோய் செய்யும் என்க,

இது, நோய்வரும் வகை கூறுகின்றது.

நூலோர் என்றது ஆயுர்வேத நூல் வல்ல மேலோரை.

வளி என்றது வாதத்தை. காற்றை யுணர்த்திவரும் வளி என்னும் சொல் ஈண்டு அதன்பரியாயமாய் வாதத்தைக் குறித்து நின்றது.

வளிமுதலா எண்ணிய மூன்று என்றது வாதம், பித்தம், சீதம் என நூலோரால் எண்ணப்பட்ட மூன்றும் என்றவாறு. முற்றும்மை தொக்கு நின்றது. சீதத்தைச் சிலேட்டுமம் எனவும் ஐ எனவும் கூறுவர்.

உணவு உறக்கம் செயல்கள் ஒருவன் நிலைமைக்கு மிகுமாயினும் குறையுமாயினும் வாதம் பித்தம் சீதம் என்னும் மூன்றும் அவனுக்குத் துன்பஞ்செய்யும் என்பதாம்.

மிகுதல், குறைதல் என்பவற்றிற் குரிமையாக உணவு முதலியன வருவிக்கப்பட்டன. இங்ஙனம் அவாய்நிலையில் வருவியாமலே நூலோர்வளிமுதலா எண்ணிய மூன்றும் மிகினும் குறையினும் நோய்செய்யும் என நோக்கினு மமையும். வாதம் பித்தம் சீதம் என்பன உடம்பின் குணதோடங்களை யறிதற்குக் கருவிகளா யமைந்துள்ளவை. முன்கையின் மேற்புறத்தின் நரம்பின் துடிப்பால் இவற்றின் தரந்தெரிந்து கூறப்படும். வாதநாடி, பித்தநாடி, சீதநாடி என மருத்துவர் இவற்றை வழங்கிவருவர். இவை தத்தமக்குரிய நிலையிலமைந்திருந்தால் உடம்பு சுகமா இனிது நிலவும். நிலை மாறி நின்றால் நோய்மீக்கூர்ந்து உடல் பாழ்வாய்ப்படும். இறுதியிலுள்ள சீதநாடி மேலோடின் மரணம் கூடும் என்பர். "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐமேலுந்தி, அலமந்தபோதாக அஞ்சேல் என்று அருள்செய்வான்" (தேவாரம்.) எனவரும் இதில் இதன் நிலை யுணர்த்தப்பட்டிருத்தல் காண்க.

உணவையும் தொழிலையும் தம் நிலைமைக்குத்தக்கபடி அளவறிந்துகொண்டு நோயணுகாவண்ணம் உடம்பைப் பாதுகாத்து மக்கள் வாழவேண்டுமென இஃதுணர்த்தியதென்க.

உண்டிமுதலிய நுகர்வுநலங்கள் ஒருவனது பகுதிக்குக் குறையுமாயின் அவனுக்குத் துன்பமுண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குண்டோதரனால் உணரப்படும்.

கதை.

குண்டோதரன் என்பவன் பூதகணத்தவருள் ஒருவன். இவன குறுவடிவும் பெருவயிறும் வாய்ந்தவனாயினும் உடல்வலியில் மிகச் சிறந்தவன். செறிந்தடர்ந்த சிகையினன்; திரண்டமைந்த தோளினன். சிவபெருமானுக்குக் குடைபிடிக்கும் உயர் பதமுடையவன். அப்பரமன் தடாதகைப்பிராட்டியை மதுரையில் திருமணஞ்செய்தபொழுது இவனும் அங்கு உடன்வந்திருந்தான். நெடுது நேரம் உணவின்றி யிருந்தமையால் பசிப்பிணியைப் பொறுக்க மாட்டாமல் பதைத்து நின்றான். உடனே பெருமான் ஏவலால் பிராட்டி இவனுக்கு அன்னமிடப் பணித்தாள். அங்ஙனம் இட்டவுணவு இவன் வயிற்றுக்குப் போதாமையால் பொங்கியெழுந்தான். பிரானிடம் வந்து பொருமி யழுதான்.

நட்டமாடிய சுந்தரா! நங்கையெம்பிராட்டி
அட்டபோனகம் பணிவரை யனையவாய்க் கிடந்த
தொட்டுவாய் மடுத்திடவும் என் சுடுபசிதணியாது
இட்டுணாதவா வயிறுபோல் காந்துவ தென்றான.

கையர்முப்புரத திட்டதீ கடுமபசி யுருவாய்ப்
பொய்யனேன் வயிற்றிடைக் குடிபுகுந்ததோ! என்னும
கையெறிந்திடும்; அண்டங்கள் வெடிபடக் கதறும்
ஐயகோவெனும்; உயிர்த்திடும்; ஆவிசோர்ந் தயரும.
(திருவிளையாடல்.)

குறைந்த உணவினால் இங்ஙனம் இவன் வருந்தியழுவதைக கண்டு ஓர் நிறைந்த அன்னக்குவியலைப் பரமன் இரங்கியருளினன். அவ்வுணைத்தையும் ஆர்வத்தோடு இவன் எடுத்தருந்தினன். அதனால்பசிநோய் நீங்கினன்; ஆயினும் பெருமயக்க முடையனாய்ப் பாரில் விழுந்தான். வாதபித்தங்கள் தத்தம நிலைமாறி மிக்க துயா விளைத்தன. முதலில் உணவின் குறைவினால் உளைந்து துடித்தான்; பின்பு அதன் மிகுதியால் வெந்துயரடைந்தான். "மிகினும் குறையினும நோய்செய்யும் நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்று" என்னும் உண்மையை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

வாதபித்தஞ் சீதநிலை மாறிநின்றால் இவ்வுடலம்
ஏதமிக் கின்ன லெழும்.

பிணியுறுவண்ணம் உடம்பினைப்பேணிக் கொள்ள வேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

942. ஓமருந்துங் கொள்ளார் உயர்மா ளிகையாரேன்
கூர்விருந்தாய் நின்றார் குமரேசா—சாருமே
மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின். (உ)

இ—ள்.

குமரேசா! திருமாளிகைத்தேவர் ஏன் ஒரு மருந்துங்கொள்ளாமல் இனிது வாழ்ந்தார்? எனின், அருந்தியது அற்றது போற்றியுணின் யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம் என்க.

இது, நோயின்றி வாழ்தற்குரிய உபாயம் கூறுகின்றது.

அருந்தியது = முன்பு உண்ட உணவு. அற்றது = முற்றும் தீர்ந்தபடியை. போற்றி என்றது அற்றபடியை ஆய்ந்தறிந்து காலநேரம் நன்கு பாதுகாத்து என்றபடி. உணின் என்பது அங்ஙனம் உண்ணுதலின் அருமையை உணர்த்தி நின்றது. உணின் மருந்து வேண்டா என்றதனால் அவ்வாறு உண்ணாவழி நோய்வாய்ப்பட்டு நொந்து தவித்துக் கண்டமருந்துகளையெல்லாம் உண்டு கழிந்து கிடப்பர் என்பதாயிற்று.

மேல், உணவின் ஏற்றத்தாழ்வுகளால் நோய் உண்டாம் என்றார்; இதில், அதனை ஆய்ந்து நின்று அளவறிந்துண்டால் யாதொரு நோயும் இல்லையாம் என்கின்றார்.

முன் உண்ட உணவு முற்றும் அற்றபடியை ஒருவன் உணர்ந்து பின் உண்ணுவனாயின் அவன் உடம்புக்கு மருந்தென்று ஒன்று யாண்டும் வேண்டாவாம் என்பதாம்.

பசித்துண்டால் மருந்தருந்த வேண்டாம் என்றது அங்ஙனம் உண்பவர் நோயிலராய் என்றும் இனியராய் இருப்பர் என்பது கருதி என்க.

யாதொருநோயும் அணுகாமல் நல்ல சுகசீவியாய் ஒருவன் இருக்கவேண்டுமாயின் அவன் பசியாதிருக்க உண்ணலாகா தென்பார் "அற்றது போற்றி உணின் மருந்து வேண்டா" என்றார்.

பெருங்காலம் நீட்டு வாழுபந்தைந்து வயதுவரையும் யாதொரு

மருந்தும் அருந்தாமல் முன்பு ஒருவன் இருந்து வந்தான். அம்மு தியவனை அந்நாட்டுமன்னன் வரவழைத்து வைத்து வியந்துநோக்கி "என்ன உபாயத்தால் நோயின்றி இன்னவாறு இனிது வாழ்ந்து வருகின்றீர்?" என்று இதமுற வினவினன். அதற்கு அவன் "நான்குமுறைகளைக் கடைப்பிடித்துள்ளேன்" என அடுத்து விடை பிறுத்தான். அவை எவை? என்றவுடன் அவன் அடியில் வருமாறு உரைத்தான்.

ஓரடி நடவேன்.
ஈரடி கிடவேன்.
இருந் துண்ணேன்.
கிடந் துறங்கேன்.

என இன்னவாறு பகர்ந்தபொழுது இவற்றின் பொருளை உய்த்துணர்ந்து அவ்வேந்தன் உவந்து புகழ்ந்தான். தன்நிழல் தன் அடியிலிருக்கும் அமயம் அஃதாவது உச்சிப்பொழுதில் ஒருவழியும் நடவேன; ஈரமுள்ள இடத்தில் படேன்; முன்பு உண்டஉணவு செரியாமல் வயிற்றிலிருக்க மேலும் உண்ணேன்; படுக்கையில் கிடந்துகொண்டு உறக்கத்தை வருவியேன்; அஃதாவது அயர்ந்தபோதன்றி அமாந்து உறங்கேன; ஆதலால் மருந்தொன்றும் வேண்டாது நோயின்றி இங்ஙனம் இருந்துவருகின்றேன் என அவன் மொழிந்ததைக்கேட்டு அரசன் மகிழ்ந்தனுபபினன். அருந்தியது அற்றது போற்றி புணின பின்பு என்றும ஒருவன் மருந்துண்ணவேண்டாம் என்னும் உண்மை இதன்கண் விளங்கியுள்ளமை காண்க.

பசியறிந்து உணவினை ஒழுங்காக ஒருவன் ஓர்ந்துண்டு வந்தால் அவன் பிணியின்றி யினிது வாழ்வான் எனபது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை திருமாளிகைத தேவர்பால் உணரப்படும.

## கதை.

திருமாளிகைத்தேவர் என்பவர் இற்றைக்குப் பலநூற்றாண்டுகட்கு முன்னர்த் திருவாவடுதுறையிலிருநதவா. திருந்தியபண்பும அருந்தவ வொழுக்கமும் வாய்நத பெருந்தகைமையாளர் போகா என்னும ஞானசித்தரிடம் நவலுபதேசம் பெற்றவர். கருவூர்த் தேவர் முதலிய சித்தாகள் பலருளளும இவர் மிகச் சிறந்தவர் பாமனமீது பேரன்போடு பல பாடல்கள் பாடியுள்ளார். அவை

திருவிசைப்பா என வழங்கப்படுகின்றது. இவர் பேரழகுடையவர். ஆயுள்வேதத்தை நன்கு ஆய்ந்து தெளிந்தவர். நோய் நிலைகளையும் அவற்றின் மூலகாரணங்களையும் நுனித்தறிந்து எல்லாரும் இனியராய் வாழ இதமபலசெய்தவர். உயிர்க்கு நிலைக்களனாயுள்ள உடம்பைப் பாதுகாக்குமுறையைப்பற்றிச் சில அரிய உண்மைகளைப் பலரும் அறிய விளக்கியுள்ளார். உணவு நீர் காற்று என்னும் இம்மூன்றும் உயிராதாரங்களாயுள்ளன என்றும், இவற்றுள் முன்னதை நுண்ணிதாக நோக்கி உண்ணவில்லையானால் எண்ணரிய நோய்கள் நண்ணுமென்றும் மன்னர்குழுமிய அவையில் ஒருமுறை தண்ணளிததும்ப இவர் தனியுரையாடினர். உணவுகொள்வதில் இவர் மிக்கநியமமுடையவர். குறிக்கோளோடு குறித்தகாலத்தில் உண்பதன்றி வேறு யார்! எவ்வளவு! சிறப்புடையன தரினும் சிறிதும் கொள்ளார். ஒருமுறை கருவூர்த்தேவா தமது சித்தின் மகிமையால் சத்தியை நோக்கிச்செய்த ஓர் உத்தம உணவை இவரிடம் உண்ணக்கொடுத்தார். இவர் உண்ணேன் என்றார்; அவர் உள்ளங் கடுத்தார். வாய்க்கிடங்கோடேத்தால் நோய்க்கிடமாம் என்று இவர் உண்மையை உணர்த்தினர்; அதன்பின் அவர் உவந்து சென்றார். கடும்பசி கண்டபின்னரே உண்டுவந்தமையால் கொடும்பிணி யாதுமின்றி இவர் நின்றுவந்தார். இவரது உணவு நிலையையும் உணர்வின திறத்தையுங் குறித்து அக்காலத்திருந்த அறிஞர்பலரும் வியந்து புகழ்ந்தார். உறுபசியோர்ந்து உறுதியோடு உண்டுவந்ததனால் தமது வாழ்நாளில் யாதொருமருந்தும் உட்கொள்ளாமல் அடலமைந்த மேனியராய் இவர் நெடிது வாழ்ந்திருந்தார். "மருந்தெனை வேண்டாவாம் யாக்கைக்கு அருந்தியது அற்றது போற்றி யுணின்" என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்தினனார்.

> திண்ண மிரண்டுள்ளே சிக்க அடக்காமல்
> பெண்ணின்பால் ஒன்றைப் பெருக்காமல்—உண்ணுங்கால்
> நீர்கருக்கி மோர்பெருக்கி நெய்யுருக்கி உண்பவர்தம்
> பேருரைக்கிற் போமே பிணி. (தேரையர்.)

> பசித்துண்ணு ராயின் பலமருந்துண் டின்னல்
> புசிக்க விழுவார் புரண்டு.

பசித்துண்டால் நோயுண்டாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

943. அன்றேன் அளவாக ஆய்ந்துண் டமித்திரனார்
குன்றா திருந்தார் குமரேசா—நன்றாக
அற்றா லளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு. (ங)

இ—ள்.

குமரேசா! அமித்திரமுனிவர் ஏன் அளவறிந்து உண்டு நெடிதுவாழ்ந்தார்? எனின், அற்றால் அளவறிந்து உண்க; அஃது உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு என்க.

இது, நெடிது வாழுந் திறங் கூறுகின்றது.

அற்றால் என்றது முன் உண்டவுணவு முற்றும் தீர்ந்தால் என்றவாறு. அளவறிந்து = பின்புஎளிதாகச் சீரணிக்கும் அளவினை யுணர்ந்து. முன் உண்டது ஒழிந்த படியையும், மேல் உண்ணுவது இனிதாகஒழியும் விதத்தையும் ஓர்ந்து என்க. அஃது என்றது அளவறிந்துண்டலை. உய்க்கும் ஆறு = செலுத்தும்வழி.

அருந்தி உண்டாலும், அளவறியாது தின்றாலும் கொடுநோய் கட்கு இடமாகுமாதலால் அறுதலையும், அளவறிதலையும் ஈண்டுணர்த்தியருளினார். அளவாவது அரைவயிறு அன்னமும், கால்வயிறு நீரும் உட்கொண்டெழுதல். இதிற் கொஞ்சம் கூடினுமாம்; வயிறு முட்டக்கொட்டல் மிகக் கெட்டதாம். நன்றாகப் பசித்தபின்னரே உண்ணவேண்டும்; அங்ஙனம் உண்ணுங்கால் மேலும் எளிதாகப் பசியுண்டாகுமாறு முக்கால்வயிறே கொள்ளவேண்டும் என்பார் "அற்றால் அளவறிந்து உண்க" என்றார்.

மேல், உண்டது முடிந்தபடியை உணர்ந்துண்ண வேண்டுமென்றார்; அங்ஙனம் உண்டால் உறும்பயனை இதில் உணர்த்துகின்றார்.

முன் உண்டது அற்றால் பின்னும் அளவறிந்து உண்ணுக; அங்ஙனம் உண்டல் உடம்பு பெற்றவன் அதனை நெடுங்காலம் கொண்டு செலுத்தும் நெறியாம் என்பதாம்.

உடம்பு என்றது இம்மானுட யாக்கையை. பெற்றான் என்றது பெறுதற்கரிய அதன் பெற்றிநோக்கி என்க. என்னை? புல் பூடு புழு மரம் விலங்கு பறவை முதலிய வேறுபல இழிந்த உடம்புகளில் தோன்றாமல் சிறந்த இம்மக்கள் உடம்பினைப் பெறுதல் மிக

வும் அருமையாகு மாதலால் அப்பெருமைதோன்றப் பெற்றான் என்றார்.

பாவைவெண் டிரை வடகடற் படுநுகத் துளையுள்
திரைசெய் தென்கடல் இட்டதோர் நோன்கழி சிவணி
அரச! அத்துளை அகவயிற் செறிந்தென அரிதால்
பெரியயோனிகள் பிழைத்திவண் மானிடம் பெறலே.
(சீவகசிந்தாமணி.)

வடகடலில் கிடந்த ஓர் நுகத்தடியின் துளையுள் தென்கடலில் இட்ட ஓர் சிறுகழி சென்று செறிந்ததுபோல் இவ்வுலகில் மானுடயாக்கை பெறுதல் மிக அரிதாம் என இது உணர்த்தி நிற்கும் அழகை ஊன்றியுணர்க.

வினைபல வலியினாலே வேறுவேறி யாக்கையாகி
நனிபல பிறவிதன்னுள் துன்புறூஉம் பல்லுயிர்க்கு
மனிதரின் அரியதாகும் தோன்றுதல்; தோன்றினாலும்
இனியவை நுகரவெய்தும் செல்வமும் அன்னதேயாம்.
(வளையாபதி.)

அண்டசம், சுவேதசங்கள், உற்பிச்சம், சராயுசத்தோ
டெண்டரு நாலெண்பத்து நான்குநூறாயிரத்தால்
உண்டுடல் யோனியெல்லாம் ஒழிந்துமானுடத் துதித்தல்
கண்டிடில் கடலைக்கையால் நீந்தினன் காரியங்காண்.
(சிவஞான சித்தியார்.)

இவ்வுடம்பு பெறுதலரிதென்பதை இவையும் உணர்த்தியிருத்தல் காண்க. பெறுதற்கரியதென்பதை உணர்த்தற்கு இதனில் புணர்த்தியிருக்கும் உவமையை ஊன்றி நோக்குக.

"எண்ணரியபிறவிதனில் மானுடப்பிறவிதான யாதினும் அரிது அரிதுகாண், இப்பிறவிதப்பினால் எப்பிறவிவாய்க்குமோ! ஏதுவருமோ? அறிகிலேன்" என்றபடி பெறுதற்கரியதும், அறம்பொருளின்பங்களை அடைந்தனுபவித்து இறுதியில் பேரின்பம் பெறுதற்கேதுவாயுள்ளதுமாகிய இவ்வுடம்பினைப் பெற்றவன் நோயின்றி நெடுங்காலம் இனிது வாழவேண்டுமாயின் நன்றாகப் பசித்தபின்னரே அளவோடு அவன் உண்டு வரவேண்டும் என்று இஃதுணர்த்தியதென்க.

அளவறிந்து ஒருவன் உண்டுவந்தால் அவன் ஒருபிணியும் உறாது நீடுவாழ்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அறிஞர்பால் உணரப்படும்.

## கதை.

அமித்திரர் என்பவர் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னிருந்த ஓர் முனிவரர். அக்காலத்தில் காமிய வனத்திருந்த முனிவர் பலரினும் விரத வொழுக்கங்களால் இவர் மிகச்சிறந்தவர். தத்துவ நூல்களை முற்றவும்பயின்ற வித்தகராயினும் இவர் முன்கோபமுடையவர். சிறிது பிழை கண்டாலும் பெரிதும் வெகுண்டு எவரையும் பேணுதகல்லா. தமது பெயரியல்புக்குத்தக்கபடி உலகியலை வெறுத்து ஒருவரையும அணுகவொட்டாது தனியமர்ந்திருந்தார். மிக்க நியமமுடையவர். உணவு நிலைகளைக் குறிகொண்டு நோக்கி இளமைமுதற்கொண்டே அளவறிந் துண்டுவந்தார். ஒருமுறை இடும்பவனத்தில் இவர் உலாவி வருங்கால் அருமையான ஓர் நெல்லிக்கனியைக் கண்டார் அவ்வமயம் மிகப் பசித்திருந்தாராதலால் அதனை யெடுத்துண்டார். நவைதீர்ந்திருந்த அதன் சுவை வீரியங்களை நாடியறிந்தார். அன்றுமுதல் வேறொன்றனையும் உட்கொள்ளாமல் பருவநோக்கிவந்து அதனையே உட்கொண்டு நின்றார். இடையில் யாதொன்றும் அருந்தாமல் நெடுநாட் பட்டினி கிடப்பர். ஆண்டுக்கொருமுறை அருமையாகக்கனியும் அக்கனியை முயற்சியோடு இவர் இனிது நுகர்ந்து வருங்கால் இடையே ஒருநாள் துரோபதைகண்டு தூண்ட விசயன் அதனை வில்லால் வீழ்த்தினன் அந்தோ இவருக்கு உரிமையானதென்று முனிவர்பலரும் அவனிடம் வெருவிக்கூற அவ் வில்வீரன் விரைந்துபோய்த் தனைவர்களிடம் நிகழ்ந்ததை யுரைத்தான். தருமர் வருந்தினர்.

> அவ்வுரை வீமன்கேட்டாங்கு அமித்திரன் வந்தபோதே
> இவ்வுரை கேட்கின்நம்மை எரியெழச் சபித்தல்திண்ணம
> வெவ்வுரை யுரையாமுன்னம் மெய்ம்முனி தன்னைப்போற்றிச்
> செவ்வுரை கூறின்நம்மைச் சீறுமோ? சீறல்செய்யான.
>
> (பாரதம்.)

என இங்ஙனம் வீமன் கூறப் பின்பு யாவரும் தேறிக் கண்ணனருளால் அக்கனியை முன்பு நின்றவண்ணமே நிற்கச்செய்தார். அதன்பின குறித்தகாலத்தில் வந்து அதனை இவர் உண்டுபோனர். ஒருமுறை முனிவர் பலர் கூடி அரியவேள்வியொன்றைச் செய்து முடிவில் அதிலமைந்த அவியினை இவர்பால் உண்ணகொடுததார். இவா அதனை உண்ணுதொழிந்தார் அமுதனைய இப்புனித அவியை இங்ஙனம் அவமதிக்கலாமா? என்று அவரனைவரும் அகந்திரிந்து

கேட்டார். இவர் அவரை எதிர்ந்து நோக்கி "எனக்கு இதுபொழுது பசியில்லையாதலால் புசியாதொழிந்தேன். உண்டது உள்ளிருக்கக் குடலில் உணவேறினால் உடலில் நோய் ஏறும். பசியில்லாமல் உணவை உட்கொள்பவன் தனது உயிரைக் கொல்பவனாகின்றான். உண்டி நிலையே உயிர்நிலையாம்" எனத்தாம் கொண்டுள்ள உறுதியை அவருணர்ந்துகொள்ளுமாறு பல உணர்த்தி விடுத்தார். பசி உற்றபடியை யறிந்து என்றும ஒருபடியாக இவர் உண்டுவந்ததனால் நோய்திரை யாதுமின்றி இவர் நெடிது வாழ்ந்தார். "அற்றால் அளவறிந்து உண்க; அஃதுடம்பு பெற்றான் நெடிதுய்க்குமாறு" என்னும் உண்மையை உலகமகாண இவர் உணர்த்தி நின்றார்.

நோயின்றி வாழநீ நோக்கிற் பசியறிந்து
வாயடங்கி யுண்டு வரல்.

குடல் காய்ந்துண்டால் உடலோங்கிவாழும் என்பது இதனால் ரப்பட்டது.

---

944. பண்டுயர்ந்த சக்கரனென் பட்டினிசெய் தற்றறிந்து
கொண்டுண்டு வந்தான் குமரேசா—உண்டதுமுன்
அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து. (௪)

இ—ள்.

குமரேசா! நிலையறிந்து முறைதவறாது மிகப் பசித்தபின் ஏன் சாதுசக்கரர் உண்டுவந்தார்? எனின், அற்றது அறிந்து கடைப்பிடித்து மாறு அல்ல துவரப்பசித்து துய்க்க என்க.

இது, நன்றாகப் பசித்தபின்னரே உண்ணவேண்டும் என்கின்றது.

மாறல்ல என்றது தன் உடல்நிலைக்கு ஒவ்வாததும், காலநிலைக்கு ஒவ்வாததும், சுவை வீரியமுதலிய குணவகைகளால் தம்முள் ஒவ்வாததுமாகிய உணவுகளை என்க.

அற்றது அறிந்து = முன் அருந்திய உணவு அற்ற நிலையை உணர்ந்து. அஃதாவது முன்னதாகச் சாப்பிட்ட அன்னம் சீரணித்தவுணமையைத் தெளிந்து என்க.

கடைப்பிடித்து = குறிக்கொண்டு. கடைப்பிடியாவது கருதி

த்துணிந்த காரியத்தை யாண்டும் நழுவவிடாதபடி கடைபோகச் செய்தல். "கடைப்பிடி யுள்ளமொடு மடப்பிடி கடைஇ" (பெருங் கதை.) என்புழி இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

துய்க்க = உண்க. துவர = மிக, முற்ற. "துன்னற்சிதாஅர் துவர நீக்கி" (பொருநராற்றுப்படை);"மகரப்பகுவாய்தாழமண்ணு றுத்துத் துவர முடித்த துகளறுமுச்சி" (திருமுருகாற்றுப்படை) இவற்றுள் இது நின்றுணர்த்துதல் காண்க.

முன்பு உண்ட வுணவு அற்றபடியையறிந்து பின்பு அறும் அள வினைக் குறிக்கொண்டு மாறுபடாத உணவுகளை மிகப்பசித்து உண் ணுக என்பதாம்

அற்றதறிந்தாலும் குறிக்கோளோடு கடைபோகச்செய்யாமல் இடையே தவறவிடின் அதனாற்பயனில்லையாதலால் கடைப்பிடி த்து எனவும், அவ் அறிவும், கடைப்பிடியும் இருப்பினும் மாறுபட் டவுணவருந்தினால் ஊறுபாடு உண்டாம ஆதலால் மாறல்ல எனவு கூறியருளினார்.

அற்றது அறிந்து என்றதோடு அமையாமல் துவரப்பசி த்து என்றது என்னை? எனின் முன்துய்த்தது அற்றதாயினும் அதனை சாரத்தின் தொடர்பு அறாதிருக்குமாயின் நோய்க்கிடமாமாதலால அதுவும முற்றும் அற்றபடியை உய்த்துணர்ந்து மேலும சிறிது போது பொறுத்திருந்து அதன் பின்னரே துய்க்க வேண்டும் என் பது தோன்ற என்க.

கள்ளப்பசி, இளம்பசிகளுககு இடங்கொடாமல் கடும்பசி கண்டபின்னரே உண்ணவேண்டும என்றபடி.

அற்றது அறியாமலும், கடைப்பிடியாமலும், மிகப்பசியாம லும், ஒவ்வா உணவுகளை உண்ணின் வெவ்வியநோய்கள் விளையுமா தலால் அறிந்து பிடித்து பசித்து மாறல்ல துய்க்க என்றார். பசி த்து என்னும வயிற்றினவினை கருத்தாவின்மேல் நின்றது.

தகுதியான உணவைக் குறிக்கோளோடு பசித் துண்ணவேண் டும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாதுசக்க ரர்பால் உணரப்படும்.

## கதை.

சாதுசக்கரர் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண் டுகட்கு முன்னிருந்த ஓர் பௌத்த முனிவர். அருயிர்க்கிரங்கும்

பேரருளுடையவர். அருளொழுக்கங்களை யாவரும் உணர்ந்து கைக் கொள்ளுமாறு உரைத்துவந்தவர். புத்தராது உத்தம குணங்களை உள்ளுந்தோறும் உளமுருகி நின்றவர். உயிர்களை மூடியிருந்த மூடஇருள் ஒழியும்வண்ணம் ஞானபானுவாய் வந்த தீனதயா பரன் என்று மனமொழிமெய்களால் அவரைத் தினமும் துதித்த வர். "உயிர்களெல்லாம் உணர்வுபாழாகிப்—பொருள்வழங்கு செவி த்துளைதூர்ந் தறிவிழந்த—வறந்தலை யுலகத் தறம்பாடு சிறக்கச்—சுடர்வழக்கற்றுத் தடுமாறு காலையோர்—இளவளஞாயிறு தோன் றியதென்ன—நீயோதோன்றினை; நின்னடி பணிந்தேன்" என இன்னவகையாக அவ் அருள்வள்ளலது அற்புதத்தன்மையை என் றும் புகழ்ந்து போற்றிவந்தார். கல்வியறிவோடு சொல்வன்மையி லும் சிறந்து ஞானசீலராய் இவர் விளங்கியிருந்தார், உணவின் பேதத்தால் உணர்வு பேதமாமென இவர் ஓர்ந்திருந்தாராதலால் அதனை அளவறிந்து குறிகொண்டு உண்டுவந்தார். பெரும்பாலும் கூட்டி னியிருந்து குறித்தகாலங்களில் குறிக்கோளோடு உண்டுவந்த ப்பர் பசியின் தன்மையையும் உடலைப் பாதுகாக்கு முறையையும் பலர்க்கு அறிவுறுத்தி வந்தார். ஒருகாலத்தில் கோபிலம் என்னும் இடத்தில் கூடியிருந்த ஓர்பெருஞ்சபையில் உலகு உயிர்களின் நிலை களைக் குறித்து இவர் பிரசங்கம் செய்புங்கால் பசியின் பெற்றியைப் பற்றி எவரும் வியந்து நோக்குமாறு விரித்துரைத்தார். "பசியா னது கடவுட்கூறாய் நின்று உயிர்களை இயக்குகின்றது. அஃது இல் லையானல் யாதொரு முயற்சியுமுள்ளாமல் உயிர்கள் யாவும் செய லற்றிருக்கும். அதிசயமான உடம்பில் நிற்றலான உயிர் முறை நின்று வினைப்பயன்களை நுகர்ந்துவருதற்கு இப்பசியே அமைந்த துணையாய் நின்று ஆற்றிவருகின்றது. இறைவனுருவாய் நின்று உயிர்களை ஊட்டி வருகின்ற இதனை நிலையறிந்து போற்றாவிடின் யானை அவை தலையழிந்து தாழ்ந்துபோம். தனை மயிற்றிலுள்ள கசடுகளைப் பசித்தீயால் எரிக்கக்கொடாதவன் தனது உடலினை விரைவாகச் சுடலையில் எரிக்கக்கொடுப்பான். ஒருவன் நீடுவாழ வேண்டுமாயின் பசியினை அளவோடு அவன் நாடிவாழவேண்டும்." என இன்னவாறு இதன் நன்னயங்களையெல்லாம் யாரும் நயந்து கொள்ளுமாறு மொழிந்து நின்றார். "உற்றநோய் நோன்றல்; உயிர்க்கு உறுகண் செய்யாமை; அற்றே தவத்திற்கு உரு" என் னும் அருளுரைக்குப் பொருளாய் நின்ற இவர் நமது தமையனை

யால் வான்வழிசெல்லும் மேன்மை பெற்றிருந்தார். ஒருமுறை விசும்பாறுகச் சென்றுவருங்கால் உணவருந்தும் அமயம் நேர்ந்தது. எதிரேதோன்றிய ஓர்பனிமலர்ச்சோலையில் தனிஇறங்கினர். கடும்பசியுடையராய் இனிய கனி ஒன்றை நாடினர். அப்பொழுது அங்குத்தன் கணவனோடு வந்திருந்த இலக்குமி என்னும் அரசி இவரைக்கண்டு வணங்கித் தான் கொண்டுவந்துள்ள உண்டியை உதவி உண்ணும்படிவேண்டினள். இளங்குமரியாயிருந்தும் பேரன்போடு உவந்துபசரித்த அவளது இயல்பினை வியந்து இவர் உண்டு மகிழ்ந்தார். தவக்கோலத்தோடு அழகொழுக வீற்றிருந்து இவர் உண்ணுங்கால் தன்கொழுநனுகிய அரசன்வந்து கண்டு வணங்காது நிற்ப இவரது பெருமையையுணர்த்தி வணங்கச்செய்து அவள் வாழ்த்திச்சென்றாள். இவர்க்கு ஒருபொழுது உணவிட்ட புண்ணியத்தால் அவள் மறுபிறப்பில் மணிமேகலையென்னும் பெயரோடு பிறந்து சிறந்து தத்துவஞான முடையளாய் முத்தியை யடைந்தாள். விரதவொழுக்கங்களில் உயர்ந்து தகுதியறிந்து குறிக்கோளோடு பசிநோக்கி உண்டுவந்தமையால் என்றும் இளமைப் பொலிவோடு நின்று யாதொருநோயுமிலராய் இவர் நீடுவாழ்ந்தார். "அற்றதறிந்து கடைப்பிடித்து மாறல்ல துய்க்க துவரப்பசித்து" என்னும் உண்மையை உலகுகாண இவர் உணர்த்தி நின்றார்.

"சாது சக்கரன் மீவிசும்பு திரிவோன்
தெருமர லொழித்தாங் கிரத்தின தீவத்துத்
தருமசக்கர முருட்டினன் வருவோன்
வெங்கதி ரமையத்து வியன்பொழி லகவயின்
வந்து தோன்றலு மயங்கினை கலங்கி
மொல்லியல் கண்டனை மெய்ந்நடுக்குற்றனை
நல்கூர் நுசுப்பினை நாணினை யிறைஞ்ச
இராகுலன் வந்தோன் யாரென வெகுளலும்
விராமலர்க் கூந்தல் அவன்வாய் புதையா
வானூ டிழிந்தோன் மலரடி வணங்காது
நாநல கூர்ந்தனை யென்றவன் றன்னொடு
பகையறு பாத்தியன் பாதம் பணிந்தாங்
கமரகேள்! நின் தமால மாயினும
அந்தீங் தண்ணீர் அமுதொடு கொணர்கேம்
உண்டி; யாமுன் குறிப்பினம் என்றலும்
எமமனை! உண்டேன் ஈங்குக கொணர்கென

அந்நா ளவனுண் டருளிய அவ்வறம்
நின்றுங் கொழியாது நின்பிறப் பறுத்திடும்" (மணிமேகலை.)

இம்முனிவரது பெருமையும், இவருக்கு ஒருபொழுது உணவிட்டதால் மறுபிறப்பற்றதும், பிறவும் இதன்கண்ணும் விளங்குதல் காண்க.

கடும்பசிகண் டென்றுங் கருதியோர்ந் துண்டால்
அடும்பிணியின் காறு ரவர்.

அதிகமாகப் பசித்தபின்னரோ அளவோடு உண்ணவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

945. ஊறுபா டொன்றும் உறுமலேன் போகர்முன்
கூறுகொண்டு நின்றார் குமரேசா—தேறிநின்று
மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணின்
ஊறுபா டில்லை யுயிர்க்கு. (ரு)

இ—ள்.

குமரேசா! யாதொரு ஊறுபாடும் இலராய்ப் போகர் என் அமைந்து வாழ்ந்தார்? எனின், மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின் உயிர்க்கு ஊறுபாடு இல்லை என்க.

இது, மாறுபட்டஉணவால் ஊறுபாடு உண்டாம் என்கின்றது.

மாறுபாடு = ஒவ்வாமை. ஊறுபாடு = துன்பம். மாறுபாடு இல்லாதஉண்டி = சுவை வீரியங்களால் தம்முள் மாறுபடாதஉணவு. நெய்யும் தேனும் தனித்தனி இனியதே எனினும் அவை ஒத்த அளவாய்த் தம்முட் கலந்தால் நஞ்சாம்; ஆதலால் அதுபோல்வன உண்ணலாகாதென்க ஒரே உணவிலும் வேறுபாடு உண்டு. வெள்ளரிக்காயில் பிஞ்சு நல்லது; முதிர்ந்த கடுங்காயும், நைந்தபழமும், விதையும் நன்றல்ல. "பிஞ்சுவெள்ளரிக்காயக்குப் போசநிரோடப்போம; வஞ்சியரே முற்றியகாய் வாதமாம்; நைஞ்சகனி, உண்டாற சயித்தியமாம்; உள்ளிருக்கும் அவ்விதையைக் கண்டாலும் நீரிறங்குங் காண்" என்பதுங் காண்க.

மேல், பசியளவறிந்து மாறுபாடில்லாத உணவை உண்ணவேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் உண்டுவந்தால் அவ்வுயிர்க்கு

யாதொரு துன்பமும் பின்பு உண்டாகாதென்கின்றார்.

மாறுபாடில்லாத உணவை உணர்வோடமைந்து ஒருவன் உண்டுவருவனாயின் அவன் உயிர்க்கு யாண்டும் துன்பம் இல்லையாம் என்பதாம்.

மாறுபடாத வுண்டியேயாயினும் மனம விரும்பியபடியெல்லாம் அதனை வாரி விழுங்காமல் பின்பு அறும்வகை தெரிந்து, உடல்நிலையோர்ந்து, அளவறிந்து, அறிவோடமைந்து உண்ணவேண்டும் என்பார் "மறுத்து உண்ணின்" என்றார். மாறுபாடில்லையெனினும் மறுதுண்டால் அதனால் பயனில்லையாதலால் மறுத்து என்றார். அங்ஙனம் உண்டால் யாதொரு நோயும் இலனாய் இன்புற்று அவன் நீடுவாழ்வன் என்பார் "உண்ணின் உயிர்க்கு ஊறுபாடு" இல்லை என்றார்.

உண்டியை உணர்வோடமைந்துண்டால் ஊறுபாடில்லை என்றது என்னை? யெனின், வாயடங்கினால் நோயடங்கும் என்றபடி எல்லாப் பிணிகளும் பெரும்பாலும் உணவின் திரிபினாலேயே ஓங்கி வருமாதலால் அதனை ஓர்ந்துண்டால் அவையாதும் உறாதொழியும்; ஒழியவே நோயினால் வருந்துன்பம் யாதும் இன்றி ஆயுள் விருத்தியோடு உயிர் நீடுவாழும் ஆதலால் அதற்கு ஊறுபாடில்லை என்க.

"பாலுண்போம்; எண்ணெய்பெறின் வெந்நீரிற் குளிப்போம்;
பகற்புணரோம்; பகற்றுயிலோம்; பயோதரமுன் மூத்த
ஏலஞ்சேர் குழலியோ டிளவெயிலும் விரும்போம்;
இரண்டடக்கோம்; ஒன்றைவிடோம; இடதுகையிற் படுப்
போம்; மூலஞ்சேர் கறிநுகரோம்; மூத்ததயிர் உண்போம்;
முதல்நாளிற் சமைத்தகறி அமிர்தெனினும் அருந்தோம்;
ஞாலந்தான் படைத்திடினும் பசித்தொழிய உண்ணோம்;
நமனார்க்கிங் கேதுகவை நாமிருக்கும் இடத்தே. (1)

உண்பதிரு பொழுதொழிய மூன்றுபொழு துண்ணோம்;
உறங்குவது இராவொழியப் பகலுறக்கஞ் செய்யோம்;
மண்பரவு கிழங்குகளில் கருணையன்றிப்புசியோம்;
வாழையிளம்பிஞ்சொழியக் கனியருந்தல் செய்யோம்;
பெண்கள்தமைத் திங்களுக்கோர் காலன்றி மருவோம்;
பெருந்தாகமெடுத்திடினும் பெயர்த்து நீர் அருந்தோம்;
நண்புபெற வுண்டபின்பு குறுநடையுங் கொள்வோம்;
நமனார்க்கிங் கேதுகவை நாமிருக்கு மிடத்தே. (2)

ஆறுதிங்கட் கொருதடவை அவனமருந் தயில்வோம;
அடர்நான்கு மதிக் கொருகாற் பேதியுறை நுகர்வோம்;
தேறுமதி ஒன்றரைக்கோர் தரகசியம் செய்வோம்;
திங்களரைக் கிரண்டுதரம் சவரவிருப் புறுவோம்;
வீறுசதுர் நாட்கொருகால் நெய்முழுக்கைப் பெறுவோம்
விழிகளுக் கஞ்சன மூன்று நாட்கொருகா லிடுவோம்;
நாறுகந்தம் புட்பமிவை நடுநிசியில் முகரோம்;
நமனூர்க்கிங் கேதுகவை நாமிருக்கு மிடத்தே'' (3)
(பதார்த்தகுணசிந்தாமணி.)

இங்ஙனம் செய்துவந்தால் நோய்கள் இல்லையாம்; ஆகவே அகாலமரணங்கள் நேரா; ஆதலால் யமனுக்கு இவ்விடத்தில்வேலை இல்லையென்பார் ''நமனூர்க்குஇங்கு ஏது கவை?'' என்றார். கவை = காரியம். உண்டிமுதலியவற்றை மாறுபடா வகை ஓர்ந்து குறிக்கொண்டு உண்டு வந்தால் அவ்வுயிர்க்குஊறுபாடு யாதும் உண்டாகாது என்பதை இவை உணர்த்தி நிற்றல் காண்க.

சுவைதீர்ந்த உணவை நன்கு நாடி உண்டுவருபவர் என்றும இன்பமுடையராய் இனிது வாழ்வர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை போகர்பால் உணரப்படும்.

## கதை.

போகர் என்பவர் யோகசித்தியிற் சிறந்த ஓர் பெரியவர். உயிர்பரங்களின் நிலையியல்களை யுய்த்துணர்ந்த தத்துவஞானிகள் பலரும் இவரது புத்திநிலையை வியந்து சித்திரநாதன் என்று இவரைப் புகழ்ந்துள்ளார். அணிமா மகிமா முதலிய எண்வகைச்சித்திகளும் இவர் இனிதுபெற்றவர். உயிர்க்கு நிலைக்களனுயுள்ள உடம்பினைப் பாதுகாத்து ஐம்புல இன்பங்களையும் ஆரத்துய்த்து நெடிது வாழுதற்குரிய அரியமுறைகளை முனிவர்பலருக்கும் தெளிவுற இவர் அருளியுள்ளார். அவ் வுண்மையோடு பல நன்மைகளையும் விளக்கி 7000 பாடல்களால் ஓர் நூலை இயற்றினார். அது போகர் ஏழாயிரம் என இவர் பெயரால் வழங்கப்படுகின்றது. துறந்தவராயிருந்தும் இந்திரன்போல உயர்ந்தபோகங்களை அனுபவித்துச் சிறந்திருந்தாராதலால் இவர் போகர் எனப்பெற்றார். சட்டமுனி, மச்சமுனி, சபலமுனி, நந்தீசர், கொங்கணர், கருவூர்த்தேவர்முதலிய பெரியார் பலரும் இவர்பால் அருளுபதேசம் பெற்று அருமை மாணாக்கராயமைந்திருந்தனர். இவர் பேரழகுடையவர். இவரது சிவந்த

உருவும் அகன்றமார்பும் திரண்டுருண்ட திண்டோள்களும் பரந்து திகழ்ந்த திருமுகமும் கண்டவர் உள்ளங்களையெல்லாம் கவர்ந்திருந்தன. நரை திரை மூப்புக்கள் அணுகாவண்ணம் உடம்பைப்புனிதமுற இவர் போற்றிவந்தார். யாதொருநோயுமிலராய்த் தூயமேனியோடு இவர் துலங்கிநிற்றலைக்கண்டு கமலநாதர்என்னும் முனிவர் ஒருநாள் இவரை உவந்து நோக்கி "என்னகாரணத்தால் என்றும் இளமைப்பொலிவோடு இன்னணம் இருந்துவருகின்றாய்" என்று இனிது வினவினார். அதற்கு இவர் "மாறுபடாத உணவினையோர்ந்து வயிறறிந்து உண்டுவருகின்றேன் ஆதலால் இங்ஙனம் உற்று நிற்கின்றேன்" என்றார். அவர் உவந்து சென்றார். மாறுபாடில்லாத உண்டி மறுத்துண்ணின் உயிர்க்கு ஊறுபாடில்லை என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

தீயின் அளவைத் தெரிந்தளவோ டுண்டேவந்தால்
ஆயு ளளவமின்ப மாம்.

வயிறறிந்துண்பார் துயரகன்று வாழ்வார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

946\. அன்று மிகவுண் டருந்திநின்ற சோமனேன்
குன்றிநோய் கொண்டான் குமரேசா—என்றும்
இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபே ரிரையான்கண் நோய். (சு)

இ—ள்.

குமரேசா! பேருண்டிகொண்டுநின்ற சோமசருமன் ஏன் மிகுநோய்கொண்டு நொந்தான்? எனின், இழிவறிந்து உண்பான் கண் இன்பம்போல் கழிபேர் இரையான்கண் நோய் நிற்கும் என்க.

இது, பேருண்டி பெருங்கேடென்கின்றது.

இழிவு = குறைவு. இழிவு அறிந்து என்றது குறைவாக உண்டலே நன்றென்று உணர்ந்து என்றவாறு.

கழிபேர் இரையான் = மிக அதிகமாக உண்பவன். பேருண்டியாளன் என்றபடி. உணவு என்னாது இரை என்றது அவனது இழிவு தோன்ற. என்னை? ஆடு மாடுகள் முதலிய விலங்குகளின்

உணவே இரையெனப்படுமாதலால் அவைபோல் கண்டமட்டும் தின்று கண்மூடிக்கிடக்கும் அவனிழிநிலை கருதி என்க. பெருந் தீனி தின்பவனை "இவன் என்ன! மாடுபோல் தின்கின்றான்" என்று பிடழியப் பேசுதல் காண்க.

மேல், தகுதியான உணவை அளவறிந்து உண்ணவேண்டும் என்றார்; இதில், அளவுமீறி மிகுதியாக உண்ணலாகாதென்கின்றார்.

பசியறிந்து அளவாக உண்பவன்பால் இன்பம் உண்டாதல் போல் மிகுதியாகத் தின்பவன்பால் நோய் உண்டாம் என்பதாம்.

அற்றதறிந்து அளவோடு உண்ணுக; அங்ஙனமின்றி அதிக மாக உண்ணற்க; என விதி விலக்குகளை ஒருங்கே இதில் உரைக்க வந்த அடிகள் அவற்றை உவமையும் பொருளுமாக வைத்து இங் ஙனம் உணர்த்தியருளினார்.

வயிறுநிறையஉண்டான் துயரம் நிறையக்கொண்டான் என்ற படி பெருண்டியாளன் கொடுநோய்கள் பல கொண்டுவருந்துதலால் "கழிபேரிரையான்கண் நோய் நிற்கும்" என்றார்.

நீரானது பயிர்களுக்கு இனிய உணவேயெனினும் அதனை மிகுதியாகக்கொண்டால் அவைவெளுத்துக் குன்றி வீழ்ந்துபோம்; அதுபோல் உணவு உயிர்களுக்கு உறுதியேயாயினும் அதனை அள வுமீறிக்கொண்டால் உளவுறுதிகுன்றி அவை உலைந்துபோம் என்க.

"கனிநிழல் புனல்கொள் பைங்கூழ் நாசமாம்; மிகவேயுண்ணினும்
இனியபாமருந்து நஞ்சாம்; இன்பமு மிகின் துன்பமாம்;
பனிபிணி படைமை மகதம் பழியெல்லாம் மாமிசமனைத்தும்
கனியொடு மழைகதந்துதாம கழியபேருண்டி மகிமை"

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. கலி = மிகுதி.

பையுள் பஞ்சைத் திணிப்பதுபோல் வயிற்றுள் சோற்றைத் திணிக்குமாக்கள் அசீரணத்தால் அடிக்கடி நோய்வாய்ப் பட்டு நொந்து தவிப்பர் ஆதலால் அவ்வணம் உணர்ச்சிகெட்டு உண்ண லாகாதென்பது கருத்து.

அளவறிந்து நில்லாது உணவினை மிகுதியாக உண்பவர் பிணி மீக்கூர்ந்து பெருந்துயரடைவர் என்பது இதில் உணர்த்தப்பட் டது. இவ்வுண்மை சோமசருமன்பால் உணரப்படும்.

## கதை.

சோமசருமன் என்பவன் இற்றைக்கு மூவாயிரத்து முந்நூறு ஆண்டுகட்குமுன்னர் நருமதை நதியினருகேயிருந்த மருவாய் என்னும் நகரிலிருந்தவன். மறையவர் மரபினன். விண்டுசருமனுடைய புதல்வன். இவன் மிக்க கல்வியில்லாதவனாயினும் தக்க சொல்வன்மையுடையவன். பொறியின்பங்களை நெறிகடந்து நுகர்ந்து இவன் அறிவழிந்திருந்தான். தன் காரியத்தில் கண்விழிப்புடையவன். யாவரிடமும் வலிந்து வாதாடும் இழிந்த இயல்பினன் "கடவுள் உண்டென்று சொல்லி, முத்தியுண்டென்று நம்பி வெம்பி யுழல்வோரினும் விரும்பிய போகங்களை விரும்பியபடியே துய்த்து மகிழ்ந்திருப்போரே இவ்வுலகிற்சிறந்தவராவர்" என யாண்டுந் துணிந்துரையாடி இவன் திரிந்துவந்தான். இவனது அண்ணனான அக்கினிசருமன் இருவகைப்பற்றுக்களையுந் துறந்து விரத வொழுக்கங்களிற்சிறந்து விளங்கியிருந்தான். அவனை இவன் இகழ்ந்துநின்றான். உணவு நிலை திரிந்தால் உணர்வு நிலை திரியும் என அவன் உணர்ந்திருந்தானாதலால் அதில் மிக நியமமுடையனாய் நின்றுவந்தான்.

"ஞானசாதகன்மற் றுதயமாதியினுணவைக்கொளான்; மயக்கமாதலினும்
ஈனமார் விந்துமிகுமென அகன்றோரிகழ்ந்து கைவிடுத்த வாதலினும்
தானிரவொருபோழ் தருந்திடும உணவுஞ் சமமலால் தாழினுமிகினும்
ஊனதாருடற்கணநோயுறும்; அற்றைக்கு உறக்கமு மிகுந்திடுமன்றே."

என்றபடி உண்டியால் நேரும் பேதநிலைகளைக்கண்டு தெளிந்து தனது உடல் நிலையோர்ந்து பசியளவாய்ந்து குறிக்கோளோடு அவன் உண்டுவந்தான். அதனால் யாதொரு பிணியுமிலனாய் என்றும் இன்ப நிலையில் இனிதமர்ந்திருந்தான். இவன் மனம் போனபடி பிதற்றித்திரிந்து வாய்க்கு அடிமையாய் வயிற்றை வளர்த்துவந்தான். எங்கேனும் சிறந்த விருந்துநடந்தால் அங்கு இவன் முதலாளாகப்புகுந்துவிடுவான். அவந்தி மன்னன் ஒருமுறை ஓர் அரிய வேள்வியை முடித்து முடிவில் விருந்து நடத்தியபொழுது அதில் இவன் கலந்து பலமுறையும் கருத்துமுற்ற நுகர்ந்தான்.

"கைகவி நறுநெய்பெய்து கன்னலைக்குடங்கள் கூட்டிப்
பெய், பெய், எனவுரைப்பயாவும பெருங்கடல் வெள்ளிக்குன்றம

பெய்து தூர்க்கின்றவண்ணம் விலாப்புடை பெரிதும்வீங்க
ஐயனதருளினால்யான் அந்தணர் தொழிலே னானேன்."
(சீவகசிந்தாமணி.)

என்று அச்சணந்தி சொல்லியவண்ணம் அங்கிவன் வயிறு வீங்கத்தின்றுவந்தான். இவன் வீதிவழியே போகக்கண்டால் பகாசுரன் போகின்றான் என யாவரும் பையப்பேசிப்போவர். இன்னவாறு பேருண்டியாளனாய்ப் பெருகிநின்ற இவன் பின்பு கொடு நோய்கள் பல கொண்டு மறுகி நின்றான். அளவறிந்து புனிதநிலையில் நின்று உணவைப் போற்றிவந்த முன்னவன் இனிது வாழப் பின்னவனான இவன் பெருந்தீனியால் பிணிகள் மீக்கூர்ந்து இன்னல் பலகொண்டு இடையே இறந்தொழிந்தான். "இழிவறிந்து உண்பான்கண் இன்பம்போல் கழிபேரிரையான்கண் நோய் நிற்கும்" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது. விரிவைக் காசிரகசியத்தில் காண்க.

உன்வரவை நோக்கி உணர்ந்திருந்து வந்தபின்பு
இன்வரவா எண்ணியுட னேத்தியுண்டால் —பின்வருநோய்
ஒன்றேனும் உண்டோ? ஒளிர்பசியே நீயின்றேல்
பொன்றுவார் நோய்வாய்க்குட் போய். (தருமதீபிகை.)

குடலழுகத் தின்றான் கொடுநோய்கொண் டென்றும்
உடலழுகத் துன்ப முறும்.

உணவுமிகுந்தால் பிணிகள்மிகும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

947. தின்டோ னயரங்கி தேரான் பெரிதுண்டு
கொண்டானேய் என்னே குமரேசா —உண்டான
தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணின்
நோயள வின்றிப் படும். (எ)

இ—ள்.

குமரேசா! அதிகமாக உண்டதனால் அக்கினி ஏன் கொடு நோய்கள் பலகொண்டு நொந்தான்? எனின், தீ அளவன்றித் தெரியான் பெரிது உண்ணின் நோய் அளவின்றிப் படும் என்க.

இது, மிகுதியாக உண்டால் நோய் தொகுதியாக வரும் என்கின்றது.

தீ என்றது பசியை. புறத்தில் உறுபொருள்களை எரித்தழிக்

கும் தீபோல் வயிற்றினுறும் உணவினை எரித்தொழிக்குமாதலால் பசி தீ என நின்றது. வயிற்றுத்தீ எனவும், பசித்தழல் எனவும், உதராக்கினி எனவும் இஃது உரைக்கப்படும்.

தெரியான் = அறியானாய், முற்று எச்சமாய் நின்றது; தெரிதலாவது மாறல்லன அறிதல். படும் = உண்டாம்.

பசித்தாலும் பசியாதிருந்தாலும் கண்டவற்றையெல்லாம் வாரி விழுங்கி வயிற்றைப்பெருக்கிப்பார்த்துச் சிலர் மகிழ்ச்சியுறுகின்றார். உயிர் இனிதுவாழ்தற்கு உணவென்றுணராமல் உண்ணுதற்காகவே பிறந்துள்ளவர்போன்று உண்டு கழிந்து நோய்பலகொண்டு ஒழிந்து போகின்றாராதலால் அங்ஙனம்போகாதபடி அளவறிந் துண்ணவேண்டுமென்றார்.

மேல், பசியினளவறிந்து உணவினைச் சுருக்கியுண்ணவேண்டும் என்றார்; இதில், அங்ஙனமறியாது பெரிது உண்டார் பிணிவாய்ப்பட்டு வருந்துவரென்கின்றார்.

பசியளவறியாது ஒருவன் மிகுதியாக உண்ணுவனாயின் அவனுக்குப்பலநோய்கள் உளவாம் என்பதாம்.

தன்பசிக்கு மிஞ்சி ஒருவன் உண்பானாயின் உரியகாலத்தில் சீரணியாது; ஆகவே வழக்கப்படி மேலும் மேலும் உண்ணத்தொடங்கி நாளடைவில் வயிற்றுத்தீயைக் கெடுத்துவிடுவன்; அதனால் பின்பு பல கொடும்பிணிகள் வந்து கூடுமாதலால் அங்ஙனம் உண்ணலாகாதென்க.

"அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சமாம்" என்பதைக் கழிபேரிரை கொள்ளும் முழுமக்கள் எளிதில் உணராராதலால் அவர் உணர்ந்து திருந்துமாறு "உண்ணின் நோய்அளவின்றிப் படும்" என அச்சுறுத்தி இங்ஙனம் உணர்த்தியருளினார்.

தன்பசியினளவறியாமல் அதிகமாகவுண்டவன் பின்பு கொடு நோய்கள் பலகொண்டு வருந்துவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அக்கினியால் உணரப்படும்.

## கதை.

அக்கினி என்பவன் ஐம்பூதங்களுள் ஒன்றின் அதிதேவதையாய் நின்று எங்கும் தன்னொளி பரப்பி உலக ஒழுக்கிற்கு உறுதுணையாயமைந்து என்றும் இனிது நிலவும் புனிதனாதலால் பாவனன் என

மேவி நின்றான். இவன் வானத்தில் சோதியாகவும், மேகத்தில் மின்னலாகவும், உலகத்தில் தீயாகவும், கடலில் வடவையாகவும், உடலில் பசியாகவும், நின்று யாண்டும் பரவியுள்ளவன். இறைவனுக்கு விழியொளியாக இவன் இசைந்திருத்தலால் திருமணம் முதலிய இனியகாரியங்களைச் செய்யுங்கால் இவனைச்சாட்சியாகவைத்து யாவரும் நடத்துகின்றனர். உலகர்க்கு ஐயந்தோன்றிய பொழுது பொய்மை மெய்மைகளை விளக்கிக் கற்பு முதலிய நல்லறங்களை இவன் காத்து நிற்பன். இராமன் இகழ்ந்து நீக்கியபொழுது சீதையை உவந்து ஏந்திவந்து அவளது சிறந்த மேன்மையை உலகம் அறிய இவன் உரைத்து நின்றான். அன்று இவன் உரைத்தவற்றுள் சில அடியில் வருவன காண்க.

"அங்கி யான்; என்னை இவ் அன்னை கற்பெனும்
பொங்குவெந் தீச்சுடப் பொறுக் கிலாமையால்
இங்கணந் தேன்;உறு மிபற்கை நோக்கியும்
சங்கியா நிற்றியோ? எவர்க்குஞ் சான்றுளாய்.

வேட்பதும், மங்கையர் விலங்கினாரெனின்
கேட்பதும், பல்பொருட் கையங்கேடற
மீட்பதும், என்வயின் என்னுமெய்ப்பொருள்
வாட்பெருந் தோளினாய்! மறைகள் சொல்லுமால்.

ஐயுறு பொருள்களை ஆசின் மாசொரீஇக்
கையுறு நெல்லியங் கனியிற் காட்டுமென்
மெய்யுறு கட்டுரை கேட்டு மீட்டியோ
பொய்யறு மாருதி உரையும் போற்றலாய்.

தேவரும முனிவரும் திரிவ நிறபவும்
மூவகை யுலகமுங் கண்கள் மோதிநின்று
ஆவெனக் கேட்கிலை அறத்தை நீக்கிவே
றேவமென் றொருபொருள் யாண்டுக் கொண்டியோ.

பெய்யுமே மழை; புவிபிளப்ப தன்றியே
செய்யுமே பொறை; அறம் நெறியிற் செல்லுமே;
உய்யுமே உலகிவள் உணர்வு சீறினால்
வைய்யுமேல் மலர்மிசை அயனுமாயுமே" (ரு)

(இராமாயணம்.)

இவ்வண்ணம் யாண்டும் அமையுஞ் சான்றாய் நின்று உண்மை நிலைகளை யாவர்க்கும் உறுதிபெற இவன் உணர்த்தி வந்தான். வருங்கால் சுவேதகி என்னும் மன்னன் ஒரு பெரு வேள்விசெய்

தான். அதனை நாரதர் இனிது நடத்தினார். பன்னிரண்டு வருடம் அது நடைபெற்றது. அதில் இடைவிடாது அவ் அரசன் நெய்யை ஆகுதி செய்தான். யாண்டும் எனறும் கண்டிராதபடி மிகுதியாகப் பொழிந்த அந்நெய்முழுவதையும் அவ்வேள்வித்தீயில் நின்று இவன் விழைந்து உண்டான். பின்பு அது செரிக்காது நின்றதால் வயிற்றில் மந்தங்கொண்டது. அதனால் நோய்பலகொண்டு நொந்து துடித்தான். உடல்மெலிந்து ஒளிகுன்றிப் பல்லாண்டுகளாகப் பாடழிந்து கிடந்தான். தன்பசியளவறியாமல் ஒருவன் மிக உண்பனாயின் படுநோய்களைகொண்டு அவன்பாழ்படுவான் என்பதைக்குறித்து அக்காலத்திருந்த ஆயுளவேதமுடையார் உரையாடுங்கால் இவனை உதாரணமாக எடுத்துக்காட்டி உரைத்து வந்தார். "தீயளவன்றித் தெரியான் பெரிதுண்ணின் நோயளவின்றிப் படும்" என்னும் உண்மைக்கு இத்தீக்கடவுளே கரியாய்நின்ற தன்மையைக் கண்டு முனிவரும் வியந்தார். விரிலைவப் பாரதத்தில் காண்க.

"வெற்றிச் சுவேகிதன் வேள்வியிடை நெய்யைமிகப்
பற்றி யருந்தியதால் பாடழிந்து—முற்றியநோய்
கொண்டுநொந்தான் தீத்தேவும்; கொள்ளாரோ தம்பசியைக்
கண்டுண்ணார் மண்டுபிணி கள்."

இதன்கண்ணும் இவன் சரிதம் குறிக்கப்பட்டிருத்தல் காண்க.

நெடுந்துயில்பே ருண்டி ஒழிந்துண்ட நீங்கப்
படுந்துணையும் உண்ணார் மருந்தெனினும்; பண்பான்
விடுந்தகைய மூன்றினொன் று மிக்குவிடார்; காலை
ஒடுங்கார் நோய் என்று முறார். (இன்னிசை.)

நோய்க்கிடங் கொடேல். (ஔவை)

வயிறு பசியாமுன் வாரி விழுங்கின்
துயரம் விழுங்குந் தொடர்ந்து.

மிகுதியாக உண்ணலாகாதென்பது இதனால் கூறப்பட்டது

---

948. தேர்ந்துநோய் நாடித் திலக வதியார்முன்
கூர்ந்துசெய்தார் என்னே குமரேசா—சார்ந்துநின்ற
நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல். (அ)

இ—ள்.

குமரேசா! தம் தமபிக்குற்ற நோயின் மூலத்தை ஆராய்ந்து திலகவதியார் ஏன் அமையச் செய்தார்? எனின், நோய்நாடி நோயமுதல்நாடி அதுதணிக்கும் வாய்நாடிவாய்ப்பச் செயல் என்க.

இது, உற்றநோய் தீர்க்கும் உபாயங் கூறுகின்றது.

நோய் நாடலாவது இது, என்ன நோய், எவ்வளவு நிலைமை யுள்ளது என இன்னவாறு அதன் இயல்பினை எண்ணியறிதல். நோய் என்பது நொய்யச் செய்வதென்னும் ஏதுவான் வந்தது. இளைத்து வருந்தச் செய்யும் திறத்தது என்றபடி.

நோய்முதல் நாடலாவது இந்த நோய் வருதற்குக் காரணம் யாது? என ஆராய்ந்துணர்தல். முதல் = காரணம்.

வாய் = வழி. அதனைதாவது நோயைப்போக்கத்தக்க உபாயம். "கழுவாய்" என்றது புறம. கழுவிநீக்கும் வழி எனக் கொண்டு ஆலத்தூர் கிழார் இதனை உரைத்துள்ளமை காண்க.

வாய்ப்ப = தப்பாமல். "வாய்ப்பதாக என வேட்டோமே" (ஐங்குறு நூறு) என்புழி இது நின்றுணர்த்துதல் காண்க.

மேல், பசியின் அளவறியாது மிகுதியாக உண்டால் பல நோய்கள் உளவாம் என்றார்; அங்ஙனம் நேர்ந்தநோயை நீக்குந்திறத்தை இதில் உணர்த்துகின்றார்.

மருத்துவனானவன் ஒருவனுக்குப் பிணி தீர்க்கப் புகுந்தால் முதலில் நோய்நிலையைத் தெரிந்து அது வருதற்குரிய காரணத்தை ஆராய்ந்தறிந்து அதனைத் தீர்க்கும் உபாயத்தைத் தெளிந்து வழுவாமல் செய்யவேண்டும் என்பதாம்.

தன்னை நாடிவந்தநோயாளியின் நோய்நிலையினை மருத்துவன் முதலில் நாடியறியவில்லையாயின் தலைவலிக்கும் போது வயிற்றுவலிக்கு மருந்துகொடுத்தவன் போல் அவன் மருத்துவம் முற்றும் பிழையாய் இழிக்கப்படுமாதலால் முன்னுற நோய் நாடி என்றார்.

நோய்நிலையை நாடியறியினும் அது வருதற்குரிய மூலகாரணத்தைத் தெரியானாயின் அதனை முற்றும் நீக்க முடியாதாதலால் நோய்முதல் நாடி என்றார்.

உணவின்பேதம் உள்ளக்கவலை செய்கைக்கேடு முதலியன நோய்வருதற்குக் காரணங்களாம்.

"கல்லினால், மயிரினால், மீ தூ ண் விரும்பலால், கருதிய விசாரத்தினால், கடுவழி நடக்கையால், மலசல மடக்கலையால், கனிபழுகறி யுண்ணலால், செல்லினால், உமியினால், உண்டபின் மூழ்கலால், நித்திரைகளில்லாமையால், நீரப்பகையினால், பனிக் காற்றில் உடல் நோதலால், நீடுசருகு இலை யூறலால, மெல்லி நல்லார்கலவி யதிகமுள் விரும்பலால், வீழ்மலஞ சிக்குகையினால், மிகுசுமை எடுத்தலால், இளவெயிற் காய்தலால், மெய் வாட வேலை செயலால், வல்விரவிலே தயிர்கள் சாகாதியுண்ணலால், வன் பிணிக்கு இடமென்பர்காண்" என்பதும் காண்க.

நோய்நாடினும், நோய்முதனாடினும் வாய் நாடவில்லையாயின் நெருப்பை அவிக்கத்துணிந்தவன அதில் நெய்யை வார்த்தது போல் செய்வகைதெரியாமையால் தீங்கு மிகுமாதலால் அதுதணிக்கும் வாய்நாடியென்றும், இங்ஙனம் எல்லாமநாடினும்கண்ணூன்றிக்கருதிச்செய்ய வில்லையாயின் குறிபிழைத்த கோல்போல் யாவும் பிழைபடும் ஆதலால் வாய்ப்பச் சேயல் என்றும் கூறினார்.

இங்ஙனம் இதநலங்களை உணர்ந்து செய்யாமல் "வாய்த்தால் நமக்கு; வாய்க்காவிட்டால் எமனுக்கு" என்று மடமையோடு துணிந்துசெய்வோரை மருத்துவர் என்று இனந்தெரியாமல் நம்பி நோயாளி அவரை அடைந்து நிற்கலாகாதென்பது குறிப்பு.

மருந்து என்னும் இவ்வதிகாரத்தில் முன்னதாக உணவு நிலைகளை யுரைத்து இறுதியில் நோயைக்குறித்தது என்னை? எனின் அளவோடு ஒழுங்காக உண்டுவந்தால் நோய் இல்லையாம்; ஒழுங்கு தவறி ஒவ்வாவுணவுகளை உண்டால் அஃதுண்டாம் ஆதலால் அந் நோய்க்கு மூலமாய் நிற்கும் அதன் முதன்மை கருதி என்க.

சத்துவ குணத்தோருண்டி உரைத்திடில் அழகு சார்ந்து
தித்தித்த சுவையவாகி நெய்த்துச் சிக்கெனவு சேர்ந்து

வத்தித்து வலிநோயின்மை அறிவுநல் ஆயுவின்பம்
வத்திக்கச் செய்யும் இந்த உணவுகள் மடங்கலன்னாய். (க)

இப்படி யன்றி வேறும் இராசதர் உணவு கேட்கிற்
கைப்பன புளிப் புவர்ப்புக் கூர்ப்பன கடிய வெயது
நெய்ப்பயில் நெருப்புப் போலச் சுடுவன இவற்றினாலே
மெய்ப்படு நோயும் நெஞ்சத்து இடும்பையும் விளைவவேலாய் (உ)

ஆசினையடைந்த நெஞ்சிற் றமதர் உணவு கேட்கில்
ஊசின பழஞ்சோறெச்சில் உம்பர் பூசனைக்காகாமை
ஏசின வெந்திலாத வினையன இவற்றினாலே
காய்சின முதலாயுள்ள தயமெலாம் விளைவகண்டாய்." (ங)
(பகவற்கீதை.)

உடலுறுதி, உணர்வின் திறம், நோயுறாமை, ஆயுள்விருத்தி முதலிய நலங்களெல்லாம் தூய உணவால் உளவாம் என்பதும், அது மாறுபட்டால் ஊறுபாடு பலவிளையும் என்பதும் இதன் கண்ணும் உணர்த்தப்பட்டுள்ளமை காண்க.

"வைகறை யாமந் துயிலெழுந்து நீர்மாந்திப்
பைய நடந்தொழிப்ப பற்றற நீக்கித்தான்
செய்வினையூண் ஒக்குந் திறன்தெரிந்து கொள்ளுமேல்
உய்யும் நெடுநாள் உடல்." என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

நோய் உறாதபடி உண்டி முதலியவற்றை ஓர்ந்து கொள்ளவே ண்டும்; ஒருவேளை அஃது உற்றதாயின் உறுதற்குரிய காரணத்தைக் கண்டுதெளிந்து அதனைக் கடியவேண்டும் என்பது கருத்து.

ஒருவன் நோயடைந்திருந்தால் அந்நோயின் இயல்பினை நுணுகிநோக்கி மீண்டும் அணுகவொட்டாமல் அதனை ஆய்ந்தொழி ப்பவரே உயர்ந்தமருத்துவராவர் என்பது இதில் உணர்த்தப்பட் டது. இவ்வுண்மை திலகவதியார் பால் உணரப்படும்.

கதை.

திலகவதியார் என்பவர் திருமுனைப்பாடி நாட்டிலே திருவா மூரிலேயிருந்தவர். அப்பரோடு உடன்பிறந்த அருமைத் தமக் கையார். இவர் அழகும் அறிவும் அமையப்பெற்றவர். பன்னிர ண்டுவயது நிரம்புமுன்னரே பெற்றோர் இவரைக் கலிப்பகையார் என்பவர்க்கு மணஞ் செய்துதர உறுதிசெய்திருந்தார். மணமக

னுகவரைவுசெய்திருந்த அவர் சேனுதிபதியாயிருந்தா ராதலால் மறுபுலத்தெழுந்த ஒருபொருமுனைக்குத் தம்படைகளோடு போகும்படி நேர்ந்தது. போனவர் பொருது அப்போரில் மாண்டார். அவர் அங்கு இறந்துபடுதற்குச் சில திங்கட்குமுன்னர் இவரது தந்தையும தாயரும் விதிமுடிவால் இங்கு இறந்துபோயினர். அவரை யிழந்தமையால் அருந்துயருழந்து தம்பியைத் தேற்றி இவர் உயிர் தாங்கியிருந்தார். இத்துன்ப நிலையில் இருக்குங்கால் அன்பராய் நின்ற அவரும் இறந்துபோனுர் என்பதைத்தெரிந்தார். உடனே இனி நமக்கு இங்கு என்ன வாழ்வு என்று இவர் இறக்கத் துணிந்தார். அவ்வமயம் தம்பியார் வந்து தாளைத் தழுவித் தவித்தழுதார். கொழுகொம்பில்லாக் கொடிகள்போன்று இவ் இளங்குழந்தைகள் அன்று உளங்கரைந்து துடித்ததை யார் அளந்துரைக்க வல்லார்! தம்பியை நினைந்து பின்பு சிறிதுதேறித் தம்உயிரை இவர் தாங்கி யிருந்தார்.

"வெம்முனைமேற் கலிப்பகையார் வேல்வேந்தன் ஏவப்போய்
அம்முனையிற் பகைமுருக்கி அமருலக மாள்வதற்குத்
தம்முடைய கடன்கழித்த பெருவார்த்தை தலஞ்சாற்றச்
செம்மலர்மேல் திருவனைய திலகவதியார் கேட்டார்."

எந்தையும் எம் அனையும்அவர்க் கெனைக்கொடுக்க இசைந்தார்கள்
அந்தமுறை யாலவர்க்கே யுரியதுநா னாதலினுல்
இந்தஉயிர் அவருயிரோ டிசைவிப்ப னெனத்துணிய
வந்தவர்தம் அடியிணைமேல் மருணீக்கியார் விழுந்தார்.

அந்நிலையின் மிகப்புலம்பி அன்னையுமத்தனு மகன்ற
பின்னையுநா னுமைவணங்கப் பெறுதலினுல் உயிர்தரித்தேன்
என்னையினித் தனிக்கைவிட் டேகுவீ ரெனில்யானும்
முன்னமுயிர் நீப்பனென மொழிந்திடரின் அழுந்தினர்.

தம்பியா ருளராக வேண்டுமென வைத்ததயா
உம்பருல கணையவுறு நிலைவிலக்க உயிர்தாங்கி
அம்பொன்மணி நூல்தாங்கா தனைத்துயிர்க்கும் அருள்தாங்கி
இம்பர்மனைத் தவமபுரிந்து திலகவதியார் இருந்தார்".
(பெரியபுராணம்.)

இங்ஙனம் இவர் இருந்துவருங்கால் தம்பியார் பருவமெய்திப் பலகலைகளையும் பயின்று உயர் புலமையடைந்து சமணமதத்

தைச் சார்ந்து அங்குப்பெருஞ்சிறப்போடு விளங்கி நின்றார். தாம் சார்ந்துள்ள சைவமதத்தில் நில்லாமல் இங்ஙனம் போந்துள்ளானே யென்று வெம்பி வருந்தி அவரை இவர் வெறுத்திருந்தார். சின்னாட் கழிந்தபின் அவர்க்கோர் கொடுஞ் சூலைநோய் தோன்றியது. அதனால் அவர் கடுந்துயரடைந்தார். பலமருத்துவர் வந்து பார்த்தார். ஒன்றும் பலிக்கவில்லை. நோய் மூலத்தை நாடி யறியாமல் செய்தமையால் அப்பிணி மேலும்மேலும் மிக அவர் வெந்துயர் கூர்ந்தார்.

"அச்சமயத் திடைத்தாமுன் அதிகரித்து வாய்த்துவரும்
விச்சைகளால் தடுத்திடவும் மேன்மேலும் மிகமுடுகி
உச்சமுற வேதனைநோய் ஓங்கியெழ ஆங்கவர்தாம்
நச்சரவின் விடந்தலைக்கொண் டெனமயங்கி நவையுற்றார்"

ஒருநாளிரவில் ஒருவரும் அறியாவண்ணம் இவர்பால் வந்து அவர் துயர் மிகுந்து நின்றார். அவர் நிலையினைக்கண்டு இவர் நெஞ்சமுருகினார். அவரது நோயின் நிலையினை நுணுகி நோக்கினார். அது வருதற்குரிய காரணத்தையும் கருதி யோர்ந்தார். பரமன் அருள் வலியாலன்றி வேறொரு வழியாலும் அது தீராதென்று தெளிந்தார். அதன்பின் அது தீரும்வகைநாடித் திருநீறளித்து திருவதிகை என்னும் திருத்தலத்தில் போயிருக்கும்படி பணித்தார். அவ்வாறே சென்றிருப்ப அந்நோய் முழுதும் தீர்ந்தது. அதனால் அவர் கழிபேருவகையெய்தி இவரது விழுமிய உணர்வினை வியந்து துதித்தார். நாடாமல் பல செய்தும் போகாதிருந்தநோய் இவர் நாடிச்செய்த ஒன்றால் நவையறப் போனதை யறிந்து அனைவரும் புகழ்ந்தார் "நோய்நாடி, நோய் முதல் நாடி, அது தணிக்கும் வாய்நாடி, வாய்ப்பச் செயல்" என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

உற்ற பிணிநிலையை யுய்த்துணர்ந்து நன்மருந்தைக்
குற்றமறச் செய்க குறித்து.

நோயை நீக்குமாவகை இவையென்பதூஇதனால் கூறப்பட்டது.

949. அன்று பிணிநிலையை ஆராய்ந்து தேரையரேன்
குன்றமல் செய்தார் குமரேசா—கன்றியே
உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல். (௯)

இ—ள்.

குமரேசா! பிணியாளியின் நிலையை நுணுகியறிந்து தேரையர் ஏன் அன்று இனிதாகச் செய்தார்? எனின், உற்றான் அளவும் பிணி அளவும் காலமும் கருதிக் கற்றான் செயல் என்க.

இது, மருத்துவன் செய்யவேண்டிய மரபு கூறுகின்றது.

உற்றான் என்றது நோயாளியை. நோயுற்றவன் என்றபடி. பிணி = நோய். பிணித்துநிற்பது என்னும் ஏதுவான் வந்தது. பிணித்தல் = கட்டுதல். இனியநிலையில் திரிய ஒட்டாதபடி உயிரைத் துயர்நிலையிலழுத்தி நிற்பதென்க. பிணிஅளவு ஆவதுநோய் தோன்றியகாலம், அஃது ஊன்றிநிற்கும் திறம், அதன்மிகுதி, தணிவு முதலிய நிலைகள்.

காலம் ஆவது குளிர் பனி வெயில் முதலிய பருவங்கள், காலை உச்சி மாலை முதலிய சமயங்கள் என்க. இராகுவேளை, தீயவோரை முதலிய நியமங்களும் கருதப்படும்.

கற்றான் என்றது ஈண்டு வைத்தியனை. ஆயுள்வேதங்களைக் கற்றறிந்தவன் என்றபடி. ஆயுள்வேதமாவது உடம்பு ஊறுபாடுறாது உயிர் நீடுவாழுதற்குரிய முறைகளைத் தெளியவிளக்கும் அரியகலைகள் என்க.

மேல், நோய்வந்த காரணத்தைக் கண்டுபிடித்து வைத்தியம் வழுவாமல் செய்க என்றார்; இதில் நோயாளி நிலை முதலியவற்றையும் கருதிச்செய்க என்கின்றார்.

நோயுற்றவனது நிலையையும், நோயினியல்பையும், கால நிலையையும் நுணுகி ஆராய்ந்து மருத்துவன் மருந்தைப் பொருந்தச் செய்ய வேண்டும் என்பதாம்.

நோயுற்ற ஒருவனை மருத்துவன் குணப்படுத்தப் புகுங்கால் முன்னதாக அவனது பருவம், தன்மை உடல்நிலை முதலியவற்றை நுணுகியறிந்து, பின்பு அவனைப் பற்றி நிற்கும் நோயினது

மென்மை வன்மைகளை உய்த்துணர்ந்து அவற்றிற்கேற்ப மருந்து கொடுக்கவேண்டும் என்பார் "உற்றான் அளவும், பிணி அளவும் கருதிச் செயல்" என்றார்.

கால வேற்றுமையால் எல்லாப்பொருள்களும் கலங்கிவேறும்; ஆகவே அதனைக் கருதிச் செய்யாவழி மருந்து சிறந்து பயன்படாமையோடு பிணியும் பிறழ்ந்து மாறுபடுமாதலால் "காலமும்" கருதுக என்றார்.

இங்ஙனம் எல்லாம் கருதிலும வைத்தியன் கல்லாதவனாயின் ஒன்றிருக்க ஒன்றைச்செய்து கொன்றுவிடுவானாதலால் அவன் கற்றவனாக இருக்கவேண்டும் என்றார்.

உணவு முதலியவற்றை அளவறிந்துகொண்டு உடம்பினைப் பாதுகாத்து வருக; ஒரோவழி வழுவிப் பிணியுறின் தெளிந்த மருத்துவரால் தீர்த்துக்கொள்க என இங்ஙனம் உணர்த்தியருளினர்

"மனமெய்ம்மொழிகள் வருந்தாமல்வருத்துத் தொழிலை மாறுபடா
இனியவுணவை மிகப்பசித்த விடத்திலுடற்குப் பொருந்தவுண்ண
முனிசெய்பிணிகட் கிடனின்றாம்; முறைகள் பிறழ்ந்துவந்துவிடின்
புனிதமுடைய வயித்தியரால் வழிகின றவற்றைப் போக்குகவே"

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

நோய்நிலை முதலியவற்றை நுணுகியறிந்து எளிதில் குணமுறும்படி இதம்பெற இனிது செய்வோரே சிறந்தமருத்துவராவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தேரையர்பால் உணரப்படும்.

## கதை.

தேரையர் என்பவர் ஆயுர் வேதத்தை நன்கு தெளிந்து மிகுந்த புகழோடு விளங்கியிருந்த ஓர் பெரியவர். உய்த்துணர்வும் உள்ளத்துணிவுமுடையவர். மருத்துவமுறைகளில் மிகச்சிறந்தவர். உயிர்க்கு நிலைக்களனாயுள்ள உடலோம்பலைக் குறித்துப் பல நூல்கள் அருளியுள்ளார். இவர் இளைஞராயிருக்கும்போது தருமசௌமியர் என்னும முனிவரை அணுகித் தேக தத்துவங்களை நுணுகியுணர்ந்தார். அவர் வைத்தியத்தோடு யோகசித்தியிலும் இரசவாதத்திலும் சிறந்தவர். நல்ல சீலமுள்ளவர். அவர்பால் பேரன்புடையராய் இவர் பேணி வந்தார். வருங்கால் காசி மன்னனுகிய மான

வர்மன் என்பவன் தலைநோயால் மிக வருந்திப் பல மருத்துவர்களை யும்கொண்டு பார்த்து முடியாமல் முடிவில் இவருடைய குருவினைக் கண்டு தனது நோயைப் பார்த்தருளும்படி பணிந்துவேண்டினன். அவர் நோய் நிலையை உற்றுநோக்கி உள்ளே ஒருதேரையிருப்பதா கத்தெளிந்து கபாலத்தை மெல்லப் பிளந்தார். மூளையைப்பற்றிக் கொண்டு அது பதிந்திருந்தலைக்கண்டு வியந்து விரைந்து தம்கை யால் அதனைச் தொட்டெடுக்கச் சென்றார் அருகுநின்ற இவர் ஒருசிறிய தாலத்தில் நீரைக்கொணர்ந்து அதன்முன்னே நீட்ட அதில் அது பொள்ளெனத் துள்ளி வீழ்ந்தது அவர் பெருமகிழ் ச்சிகூர்ந்து இவரது மதி நுட்பத்தை வியந்தார். அதுமுதல் இவருக் குத் தேரையர் என்று பெயர் வந்தது. இவர் இயற்பெயர் இராம தேவர் என்பர். மேற்குறித்த கதை எவ்வாறாயினும்இவர் நுண்மாண் நுழைபுலமுடையராய் நின்று பிணிகள் பல தீர்த்து உயிர்களைப்பே ணிவந்தார் என்பது இவர் செய்துள்ள நூல்களால் இனிது தெளிய லாம். நாண்மாலை, மிகாவண்ணம, சிகாமணிவெண்பா, நீர்நிறக்குறி, நெய்க்குறி, தினக்கிரமாலங்காரம், கரிசல், சிகிச்சைக்கிரமம், பதா ர்த்தகுண சிந்தாமணி, நோய் மருந்தளவை, குணமூலித்தரு, வயித் தியப்பள்ளு, மருத்துப்பாரதம், முதலாக இருபத்தொரு நூல்கள் இவரால் செய்யப்பட்டுள்ளன. அரிதிற் பொருள்காணும்படியான குழூக்குறிகள் பல இவர் பாடல்களிற் பயின்றிருக் கின்றன.

"நமனுக்கொரு நமன்வெற்றியை நறுக்கிப்பிழி மூக்கில்
நளிரும், சுரகுளிரும், தலைநடுக்கும், பிணிவிடுக்கும்"
(கரிசல்நசியம்.)

மூக்கிலிடும் மருந்தாகிய நசியத்தைக் குறித்துக் கூறுங்கால் இவர் இங்ஙனம் கூறியிருக்கின்றார். இதில் வெற்றி என்றது தும் பையை. "நோயற்ற வாழ்வே குறைவற்ற செல்வம்" என்பதை உல கர்க்கு உணர்த்திப் பிணியிருள் நீக்கி இலகொளி ஞாயிறுபோல் இவர் இனிதிருந்தார். பலநூல்களையும் பயின்று பேரறி வுடைய ராய் நின்ற இவர் பிணியாளி நிலையை முன்னதாக நுணுகி நோக் கிக் கால நிலையோர்ந்து நோயியல் பறிந்து மருந்தருளி வந்தாராத லால் யாதொரு வழுவுமின்றி யாண்டும் யாவரும் குணமேயமை ந்து வந்தார். இவரது பேரை நினைந்து பலர் சீரடைந்து நின்றார்.

"தேரான் புகுந்தால் ஊறங்கில்லை" என்பது உலகெங்கும் பரவ மருத்துவ நிலையில் இவர் உயர்ந்து விளங்கினர். "உற்றான் அளவும், பிணியளவும், காலமும், கற்றான் கருதிச்செயல்" என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

நோய்நிலையை முன்னுக நோக்கான் மருந்துதரல்
மாய்நிலையி லுய்க்கும் வழி.

பிணிநிலையறிந்து மருத்துவன் பிழையறச் செய்யவேண்டும் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

950. சார்ந்த மருந்திருந்தும் சட்டமுனி நோயினைமுற்
கூர்ந்துகொண்டார் என்னே குமரேசா—நேர்ந்துபிணி
உற்றவன் தீர்ப்பான் மருநதுழைச் செல்வானென்
றப்பானற் கூற்றே மருந்து. (ய)

இ—ள்.

குமரேசா! சிறந்த மருந்து தம் கையிலிருந்தும் சட்டமுனிவர் ஏன் பிணியாளியியல்பினை நுணுகி யறிந்துஇனிது புரிந்தார்? எனின், உற்றவன் தீர்ப்பான் மருந்து உழைச்செல்வான் என்று அப்பால் நாற்கூற்றே மருந்து என்க.

இது, மருந்து இன்னதாம் என்கின்றது.

உற்றவன் = நோயாளி. தீர்ப்பான் என்றது மருத்துவனை. நொய்களைத்தீர்ப்பவன் என்றபடி. தீர்த்தல் = நீக்குதல். மருந்து = நோய்நீக்கும் பொருள். உழைச்செல்வான் = பக்கம்வருபவன். தேர்ந்தவைத்தியனேடு சிற்றாளாய்ச்சார்ந்து நிற்பவன்என்க.

அப்பால் நாற்கூற்றே மருந்து = அவ்வகையான நான்குபகுதிகளை யுடையதே மருந்தாம் என்றவாறு.

மேல், மருத்துவன் நோயைத்தீர்க்கும் விதத்தை யுணர்த்தினர்; இதில், மருந்தின் பான்மையை யுணர்த்து கின்றார்.

நோயுற்றவன் மருத்துவன் மருந்து பக்கம்நிற்பவன் என்னும் இந்நான்கு கூறுபாடுகளை மருந்து உடையதாம் என்பதாம்.

நோய் என்னும் கொடு விலங்கைக்கொல்ல சூழ்ந்தகோளரிபா

கிய மருந்து இந் நான்கையும் தனக்குக்கால்களாகக் கொண்டுநடக்கும்என்க. மருந்து முதலியன சிறந்திருந்தாலும் நோயாளி திருந்தி நில்லானாயின் நோய் நீங்காதாதலால் அதன் நீக்கத்திற்கு உற்றவனும் ஒருவகை மருந்தாம் என்றார்.

உற்றிருக்கும் நோய்நிலையை உணர்ந்துரைத்தல், மருத்துவன் சொல்வழி நடத்தல், மனத்திண்மை, பொருளுடைமை முதலிய நலங்களை யுடையனாய் நோயாளி யிருத்தல் வேண்டும்.

கல்வியறிவு, நல்லொழுக்கம், அமைதி, அருளுடைமை, தெய்வசிந்தனை, பிணி நிலைகளைப் பிழையறத்தெளிதல், துணிவுடைமை என்னும் இத்திறங்களை மருத்துவன் உடையனாதல் வேண்டும்.

ஆசிரியனது குறிப்பறிந்து செய்தல், கலங்காமை, மருந்தின் பாகங்களை மாண்புறத் தெளிதல், திருந்தியபண்பு என்னும் இவை உழைச்செல்வானுக்கு உரியனவாம்.

சுவை வீரியங்களுடைமை, நவைதீர்ந்திருத்தல், பலநோய்களையும் பற்றத்தொலைத்தல், எளிதிலமைதல், இனியதாதல் என்பன மருந்தின்கண் அமைந்திருத்தல் வேண்டும.

இங்ஙனம் இந்நான்கும் செவ்விதாக அமையுமாயின் எவ்வகைநோயும் நாடாதொழியுமாதலால் அப்பால் நாற்கூற்றேமருந்து என்றார். ஒருநோய் தீர்தற்கு இந்நான்கு பாகங்களும ஏகமாயமையவேண்டுமென்ற தென்னை? எனின், இச்சமுதாயமே அதன் முடிவுக்கு முடிவாயுள்ளமை கருதி யென்க. உற்றவன், மருத்துவன், மருந்து, உழைச்செல்வான் என்னும் இவர் ஒன்றுபடாமல் தனித்தனியிருப்பின் ஒருபயனும் படாதென்பது கருது.

வாய் முதலியவற்றை யடக்கி உறுதியோடு தாம் சொல்லியவழியில் திருந்தி நில்லாத நோயாளிக்குச் சிறந்த மருத்துவர் மருந்து கொடார் என்பது கருத்து. இவ்வுண்மை சட்டமுனிபால் உணரப்படும்.

## கதை.

சட்டமுனி என்பவர் சித்தர்களுள் ஒருவர். மெய்த் தவமுடையவர். மருத்துவகலையில் இவர் மிகத்தெளிந்தவர். தேகதத்துவங்களை நன்குணர்ந்து அமைந்து என்றும் இனியநிலையிலிருக்க

இயல்வகை செய்தவர். போகர், மச்சமுனி, கோங்கணர், கோரக்கர் முதலிய யோகசித்தர்களெல்லாரும் இவரது காயசித்தியை நோக்கிப் பெரிதும் வியந்தார். மருந்து நிலைகளைக் குறித்து இவர் தெரிந்து வைத்துள்ள முறைகள் மிகச்சிறந்தவை. சரக்கு வைப்பு மருத்துவ தீபம் என இரண்டு நூல்கள் இவரால் செய்யப்பட்டுள்ளன. வேறு ஆயிரத்து நானூறுபாடல்களால் சித்தமார்க்கத்தைப்பற்றி மற்றிருநூல்கள் செய்துள்ளார். அவை சட்டமுனி ஞானம் என இவர் பெயரால் வழங்கப் படுகின்றன. வைத்தியத்தில் சிறந்த சீர்த்தியோடு இவர் விளங்கிநின்றார். இவர் காலத்தில் ஆயுர் வேதத்தை மிகத்தெளிந்திருந்த உரோமகர் என்னும் முனிவர் ஒருநாள் இவரை வந்து கண்டார். மருந்தின் திறங்களையும் நோயின் தீர்வுகளையும் குறித்து நெடிது நேரம் இவ் இருவரும் உரையாடிக்கொண்டிருந்தார். மருந்தொன்று சிறந்ததாயின் ஒன்றும் தெரியாதவனும் உயர்ந்தவனாவான் என்னும் பொருள்படச் "சரக்கு நல்லதாயின் செட்டியாரும் வல்லவர்தான்" என்று அவர் சொல்லாடினார். இவர் அதனை மறுத்தார். "செட்டியார் சிறந்தவராயில்லையாயின் பேடிகை வாள் போல் மருந்து பீடழிந்து போம்"என்றார். அவர்மேலும்எதிர்ந்துவாதித்தார்.உமதுகருத்தின்படி மருந்தும், எமது குறிப்பின்படி மருத்துவனும் சிறந்திருந்தாலும் நோயன் பேயனானால் யாதும் பயனில்லையே என்று இவர் எதிர்த்துரைத்தார். அவர் மறுத்தும் நோக்கி முன்னர் ஒன்றைத் தாழ்த்தினீர் இப்பொழுது இரண்டையும் வீழ்த்திவிட்டீரே இஃதென்னை வம்பு? பிணியன் எப்படியிருந்தாலென்ன! மணியனும் மருந்தும் மாண்புடையனவாயின் யாண்டும் மாட்சியுறலாம் என்றார். இவர், குருட்டு விழிக்குத் துளியிட்டால் யாதும் ஒளியிடாது அது போல் மருத்துவன்மொழி கேட்டு நில்லாத மருட்டு மாக்களுக்கு மருந்திட்டால் அது பயன்படாதென்றார். எங்கும்தடைபடாது நின்ற அவர் இங்குத்தடைபட்டவுடனே கொஞ்சம்பொங்கிவெகுண்டார். இவர் பொறுத்துப் பார்த்தார். முடியவில்லை. முடிவில் அடியில்வருமாறு கூறினார்.

"கடல் குடித்த மலையமுனி கருதிவந்து தந்தாலும்
குடல்கெடுக்க நாவெடுத்த குணமிலிதன் பிணிபுகுந்த

உடல்கெடுத்துள் உயிர்குடித்த போதன்றி ஒழியாதே
மடல்கெடுத்த மயிர்முனியே! மதிகெடுத்த வாதேங்காண்"

என்று இவர் மீதோங்கியுரைத்தார். உடனே அவர் வாயடங்கிச் சென்றார். இங்ஙனம் மருத்துவேந்தராய் இவர் மாட்சியுற்று நின்றார். அவ் அரியவித்தையைப் பலர் இவர்பால் பயின்று வந்தார். அவருள் பாலசித்தன் என்பவன் மிகச்சிறந்து நின்றான். மருந்தின் திறந்தெரிந்து நுண்ணுணர்வோடு சிறந்திருந்தானாதலால் அன்புமீக்கூர்ந்து எங்கும் அவனை இவர் உடனழைத்துச் சென்றார். கொடுஞ்சூலை நோயால் மிகவருந்தி நின்ற சிந்து மன்னன் இவரை வணங்கி அழைத்து வரும்படி மந்திரிகளை விடுத்தான். அவர்வந்து பணிந்து வரும்படி வேண்டினார். உங்கள் வேந்தன் இன்பநுகர்ச்சியில் மிக ஆழ்ந்துள்ளவன்; யாம் சொல்லிய நிலையில் நில்லான்; ஆதலால் அவனுக்கு மருந்துதர முடியாதென்று மறுத்து விடுத்தார். அதனை அவர் அரசனுக்குணர்த்தினார். அரசன்வந்து பணிந்து யாது சொல்லினும அவ்வழி அமைந்திருக்கின்றேன்; என் பிணியை அகற்றியருளவேண்டும் என்று மிகப்போற்றி வேண்டினான். அதன்பின் அதனை நீக்கியருளினார். யாவராயினும் நோயுற்றுள்ளவரது இயல்பினை நுணுகியறிந்தபின்னரே இவர் மருந்தருளிவந்தார். அதனால் எங்கும் குணஞ்செய்து நின்றார். இவர்மாணவனாகிய பாலனும் அவ்வாறே மாண்புற்று நின்றான். மருந்து, மருத்துவன், மருங்கன், பிணியன் என்னும் இவர் இனிதாக ஒருங்கமைந்தால் உடனே நோய் ஒழிந்து போம் என எவர்க்கும் இவர் உணர்த்தி வந்தார். "உற்றவன் தீர்ப்பான் மருந்து உழைச்செல்வான் என்றுஅப்பால் நாற்கூற்றே மருந்து" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

மருந்தும் மருத்துவனும் மாண்புறினும் நோயன்
பொருந்திநில்லா னுயிற் புரை.

மருந்தின் திறம் இதனால் கூறப்பட்டது.

---

இவ் வதிகாரத்தின் தொகைப் பொருள்.

உணவு செயல்களை ஓர்ந்துகொண்டு அளவோடு நின்று உடமையைப் பாதுகாக்கவேண்டும். ஒருவன் நன்றாகப் பசித்துண்டால்

பின்பு அவன் என்றும் மருந்துண்ணவேண்டாம். அவனுக்கு நீண்ட ஆயுள் உண்டாம். கடும்பசி கண்டபின் தகுதியானஉணவைக் குறிக்கோளோடு உண்ணவேண்டும். அங்ஙனம உண்டுவரின் யாதொரு பிணியும் உண்டாகாது. பசியளவறிந்து சிறுக உண்டுவந்தால்இன்பமுண்டாம்; பெருக உண்டால் பெருந்துன்பமாம். கொடுநோய்கள்பல அவனைக் கொன்று தின்னும். நோய்தோன்றினல் அதன் காரணத்தைக் கருதி நோக்கி விரைவில் நீக்குக. நோயாளி இயல்பையும் பிணிநிலையையும் ஆராய்ந்து பருவத்தோடு செய்க. பிணியுற்றவன், மருத்துவன், மருந்து, பக்கநிற்பவன் என்னும் இந்நான்கு பகுதிகளும் தகுதியுடையனவாய் அமைந்து நின்றால் நோய் ஒழிந்துபோம்.

கூ௫-வது மருந்து முற்றிற்று.

ஆறுவது நட்பியல் முற்றிற்று.

---

# ஏழாவது ஒழிபியல்.

அரசியல், அமைச்சியல், அரணியல், பொருளியல், படையியல், நட்பியல் என இதன்முன் ஆறு இயல்கள் அமைந்துளளன ஆதலால் இஃது ஏழாவதென நின்றது. "குடி பதின்மூன்று" என்று போக்கியார் குறித்தபடி முதலில் இது குடியியல் என இருந்தது. பின்பு அமைச்சு முதலிய ஐந்தையும் ஒன்றாகச் சேர்த்து அங்கவியல் எனவும, அரசுமுதலாக முன்மொழிந்தவற்றுள் அடங்காமல் முடிவில் ஒழிந்தன கூறுதலின் இதனை ஒழிபியல் எனவும் உரைகோளாளர் வழிசெய்துகொண்டனர். குடிமை முதல் கயமை ஈறாகப்பதின்மூன்று அதிகாரஙகள் இதில் அடங்கியுள்ளன. விலைவரம்பில்லாத விழுமிய மணிகள் ஓர் உயரிய மன்னன் திருமுடியிலமைந்து ஒளிவீசுவனபோல் இவை இப்பாலின் முடிவில் நின்று உணர்வொளி பரப்பி அழகுற ஒளிர்தருகின்றன. அரசியல்பும், அவனுடனிருந்து துணைசெய்யும அங்கவியல்பும் ஐம்பத்தேழு அதிகாரங்களால் இதுவரைகூறியருளினார்; இனி, அவன்குடைக்கீழிருந்து வாழும குடிகளின் இயல்பு கூறுகின்றார் என்க.

# 96-ம் அதிகாரம் குடிமை.

அஃதாவது குடிப் பிறந்தாரது தன்மை. குடியாவது பழி படாத விழுமிய மரபுடைமை. மன மொழி மெய்கள் நேர்மையுடைய புனிதமான இனியமக்கள் தோன்றி வருதற்கு இடனாய்நிற்றலால் இது குடிஎனநின்றது. குலம் எனவும் கோத்திரம் எனவும் இது கூறப்படும். அந்தணர் அரசர் வணிகர் என இன்னவாறு பன்னூறு வகையாய்ப் பெருகி நிற்கும் சாதிகள் என்னும் வனங்களுள் இடையிடையே இனிய கனிகளையுதவும் அழகிய மரங்கள் போல் இக்குடிப்பிறப்பு அருமையாய் ஆங்காங்கு இனிது நிலவி நிற்கும். அதில் பிறந்து வருவோர் மக்கட் பரப்பில் சிறந்து நிற்பர்; அவர்போல் அனைவரும் இனியராய் உயர்ந்து அமைந்து நிற்க வேண்டும் என்று உணர்த்துகின்றாராதலால் முன்மாதிரியாயுள்ள இது இவ்வியலில் முன் வைக்கப்பட்டது.

951. நீடிக் கவுமாரன் நின்றான் உலுண்டனேன்
கோடினை செம்மை குமரேசா—கூடியுயர்
இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு. (க)

இ—ள்.

குமரேசா! இளையனாயிருந்தும் கௌமாரன் செம்மையுடையனாய்த் திகழ்ந்து நின்றான்; உலுண்டன் முதியனாயிருந்தும் என் உள்ளங்கோடி இழிந்தான்? எனின், இயல்பாகச் செப்பமும் நாணும் ஒருங்கு இற்பிறந்தார் கண் அல்லது இல்லை என்க.

இது, குடிப்பிறந்தாரது குணநலங் கூறுகின்றது.

செப்பம் = செம்மை. அஃதாவது கோட்ட மின்மை; மனம் மொழி மெய்களின் நேர்மை என்க.

நாண் = பழிபாவங்களுக்குக் கூசி யொடுங்குதல்.

இயல்பு ஆக = இயற்கையாக. வருந்தி முயன்று கொள்ளாமல் தானாகவே பிறப்பில் அமைந்திருப்பதென்க. இற்பிறந்தார் கண்ணேதான் உண்டு என்னாது அல்லதில்லை என இரண்டு எதிர் மறைகளை இணைத்து வைத்தது உறுதிதோன்ற.

செப்பமும் நாணும் ஒருங்கே நல்ல குடிப்பிறந்தார் மாட்

டல்லது பிறர் மாட்டு இயல்பாக உளவாகா என்பதாம்.

செப்பத்தை முன்வைத்தது மனம் மொழி மெய்கள் என்னு மூன்று கரணங்களிலும் ஊன்றி நிற்கும் அதன் உயர்வு கருதி. "சொற்கோட்டம் இல்லது செப்பம்; ஒருதலையாவுட் கோட்டமின் மைபெறின்" என்றதும் ஈண்டெண்ணத் தக்கது.

தமது எண்ணம், சொல், செயல் என்னும் இவற்றில் என்றுங் கோடாமல் குலமக்கள் நின்று நிகழ்வர்; இழிமக்கள் தாம் நினைப் பது ஒன்று, சொல்வது மாறு, செய்வது வேறாய்த்திரிந்து நிற்பர் என்றவாறு.

பருவத்திற் சிறியராயும், வறியராயும் இருப்பினும் குலமக்களி டத்தில் இயற்கையாகச் செம்மையும் நாணமும் சேர்ந்திருக்கும்; வற்புறுத்திக்கற்பித்து வைத்தாலும், பெருஞ்செல்வமடைந்திருந் தாலும் புன்மக்களிடத்தில் அவை பொருந்திநில்லா என்பார் "இற் பிறந்தார்கண் அல்லது இயல்பாக இல்லை" என்றார்

சான்றாண்மை, சாயல், ஒழுக்கம், இவைமூன்றும்
வான்றோய் குடிப்பிறந்தார்க்கு அல்லது—வான்றோயும்
மைதவழ் வெற்ப படாஅ; பெருஞ் செல்வம்
எய்தியக் கண்ணும் பிறர்க்கு. (நாலடியார்)

இது, அடிகள் கருத்தை அடியொற்றி நிற்றல் காண்க.

"சீரியர் செம்மை திறம்பார் மிடியினும்;
பூரியர் செல்வம் பொருந்தினும் என்பயன்?
சீரிற் சிறந்து, மிடியிற் சிதையுமே
பாரின்இடையாயார்பண்பு", என்பதுமீண்டெண்ணத்தக்கது.

நேர்மையும் நாணமுமுடையனாய் எவன் நிலவிநிற்கின்றானோ அவனே குலமகனாவான்; அவை இல்லாதவன் எவ்வளவு நிலைய டைந்திருந்தாலும் அவன் இழிமகனேயாவன் என்பது கருத்து.

குலமகன் நேர்மையும் நாணமுமுடையனும் யாண்டும் நீதி யோடு நிலைத்து நிற்பன்; இழிமகன் எவ்வளவு செல்வமுமுடையனாயி னுப் செம்மையின்றிப் புன்மை புரிந்துபொங்கிநிற்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை கௌமாரன் கண்ணும், உலுண்டன் பாலும் உணரப்படும்.

கதை.

கௌமாரன் என்பவன் மதுரையிலிருந்து அரசுபுரிந்தவரதுங்க பாண்டியனுடைய அருமைத் திருமகன். இவன் அழகிற் சிறந்தவன். அரிய குணங்கள்பல அமையப் பெற்றவன். இளைஞனாயிருக்கும் பொழுதே தந்தை இறந்துபோனானாதலால் பருவம் நிரம்பு முன்னரே அரசபாரத்தை இவன் அடைய நேர்ந்தது. சிறந்த மதி மந்திரிகளை உடன் வைத்துக்கொண்டு அரசினை இனிதாக நடத்தி வந்தான். நீதியும் செம்மையும் நிலைத்த நெஞ்சினன். யாவரிடமும் இன்சொலாளன். தன்குடிகளிடத்து மிக்க அருளுடையனாய் இவன் குலவியிருந்தானாதலால் அனைவரும் இவனைத் தமது உயிரெனப் போற்றிவந்தார். வருங்கால் பாண்டிநாட்டின் கீழெல்லையில் பரிமங்கலம் என்னு நகரில் குறுநிலமன்னனொருவன் இருந்தான். அவன் குறுப்ப வேளாளர் என்னும் சாதியாருக்குத் தலைவன். அவன் பெயர் உலுண்டாக்கன். அவனுடைய முன்னோர் காலந் தொடங்கி மதுரை மன்னருக்குத் திறைசெலுத்தி வந்திருந்தாராதலால் அமமுறைப்படி செய்து அடிக்கடி இம்மாரனை வந்து கண்டு மிக உறவு செய்துகொண்டான். அவன் மிகக் கொடியவன். ஆசையும வஞ்சமும அமைந்த நெஞ்சினன். தன் எல்லைக்குள்ளிருந்த மக்களைப் பல வகையிலும் அல்லற்படுத்திப்பொருளை ஆக்கிவந்தான். முடிவில் திருப்பெருந்துறை என்னும் சிறந்த ஊரையும் தனக்கு உரிமையாகக் கவர்ந்து கொண்டான் அது, இவனது முன்னோனாகிய சுகுணபாண்டிய மன்னனால் முந்நூறு வேதியர்களுத் தானமாகக் கொடுக்கப்பட்டது. அந்த உண்மை முறியையும் பறித்து அவன் எரித்துவிட்டான். அந் நகரிலிருந்த மறையவரனைவரும் மறுகி நொந்தார். என்செய்வோம் என்று கலங்கி ஏங்கினார். ஒருநாள் ஒருங்கு திரண்டார். உறுவதை எண்ணி உளைந்து ஆராய்ந்தார். "நமது மன்னனிடம் போய்ச் சொல்வோம என்றால் அவனோ இளையவனாயிருக்கின்றான்; அதுவுமன்றி அக்கொடியவன் அவனைமிக நட்புச் செய்துகொண்டுள்ளான்; அரசர்யாதும் செய்யார் என்ற துணிவினாலன்றோ அத்தீயவன் இங்ஙனம் தீங்கு செய்து நிற்கின்றான்" என இன்னவாறுபல பன்னி அவர் ஏங்கி வருந்தினர். தாங்கருந்துயரோடு தவித்துழைந்தார். அன்று அவர் உன்னி உளைந்தவற்றுட் சில இதனடியில் வருவன காண்க

"வழுதியோ இளையன்; அன்னான்மாட்டதி நட்புப்பெற்றான்
பழுதுசெய் குறும்பர்தோன்றல் பாதகம் புரிநுண்டாக்கன்;
எழுதரும் புகழான் முன்னே ளியைதர நமக்களித்த
முழுவதுங் கவர்ந்தான் யாம்செய் முறை யிலிதென் றுதேரேம் (க)

மறையவர் நிலமென்றேதா வணமும் கைக்கொண்டான்; ஆட்சி
முறைதனதாகச் செய்தான்; முற்றிய வயலார் காட்சித்
துறையையும் தவிர்ப்பான்; என்னசெய்யலாமதுணிபென்னேயெம்
இறையவர் ஆன்மநாதர் திருவுளம் என்னே என்பார். (உ)

மறைவழி இயற்றுஞ்சந்தி வந்தனை தவிர்ந்து ளோமோ?
குறைபசி யொன்றடைந்த குணத்தரை விலக்கினோமோ?
அறைபர தனங்கொண்டோமோ? ஆன்மநா யகர்தம்பந்தித்
துறையினிற் றப்பினோமோ? சூழ்ந்ததித் தீமை என்பார் (ந)

அய்யரே! பெமமையாளும் ஆனமநாயகரே! மேனிச்
செய்யரே! என்றுந்தீராச் செல்வரே! மழுமானேந்துங்
கையரே! காலற்காய்ந்த காலரே! எக்காலத்தும
மெய்யரே! எளியோமென்னே பிழைந்தனமவிளம்பீரென்பார்.(ச)

வழுதிஅருளா நமக்கு வருவாயோர் குறையின்றாகத்
தொழுதுதவிய விதத்தால துயரறத் துய்த்தல் செய்து
பழுதற ஆன்மநாதர் பணிவிடைசெய்து வந்தோம்
முழுவதும கவர்ந்தான்பாவி முன்னி என்னுவ தென்பார். (ரு)

செழியன் மற்றினையனாக இருக்கினும், செழியனுக்குக்
கழியுநட் பாளனாக இருக்கினும கடியபாவி,
ஒழிவிலச் செழியன் முன்போய் உறறதை யுரைப்போமாயின்
வழிவிடுந் தெய்வம என்னுமறையவர் ஒருப்பட்டாரே" (சு)
(திருப்பெருந்துறைப்புராணம்.)

இவ்வண்ணம் ஒருப்பட்டு ஒருங்குசேர்ந்து மதுரையையடைந்து மன்னனைக்கண்டு மனங்குழைந்து வாழ்த்தினர். அவன்இன்னருளோடு நோக்கி இன்சொலியம்பி இருக்கையிந்து என்னகாரியமாக வந்ததென்றான். அவர் உற்றதை உரைத்தார் இக்கொற்றவன் இரங்கினான். அக்குறும்பனை வரவழைத்து நேர்வைத்து உண்மையை உசாவினான். அவன் வணங்கி நின்று அரசே அவ்வூா வழிமுறையாக எனக்கு உரிமையானதே; இம் மறையவர் சொல்வது பெருமோசம் என்றான். அதற்கு என்ன ஆதாரம என்று இம மன்னன கேட்டான. "பனையாவு தோண்டிற

லும் ஒருதுளி நீர்கூட ஊறாது" அதுதான் அடையாளம் என்றான். உண்மையில் மணற்பாங்கான நிலமாதலால் இங்ஙனம் அவன் துணிந்து கூறினான். ஆயினும் அரசன் இருதிறத்தாரையும் அழைத்துக்கொண்டு குறித்த இடத்திற்கு வந்து வெட்டச்சொன்னான். அவனே கருவியைக்கொண்டு ஓர் மேட்டிடத்தில் போய் வெட்டினான். தெய்வத் திருவருளால் வெட்டுவாயிலிருந்து நீர் பீறிட்டெழுந்து அவன் முகத்தில் அறைந்தது. அனைவரும் வியந்தார். அரசன் நகைத்துச்சினந்து அவனை உருத்துநோக்கினான். "பெருஞ்செல்வம் வைத்திருந்தும் ஒருசிறிதும் நாணமல் உள்ளங்கோடி இங்ஙனம் ஊறுசெய்தாயே" என்று சீறி இகழ்ந்து அவனைச் சிறைக்களம் புகுத்தி மறையவர்க்கு அந்த வளநகரை விடுத்து மேலும் பலபொருள்களை நல்கி மீண்டு தன் நகரினை மேவி நின்று நீதியோடு இவன் அரசாண்டு வந்தான். முதியவனாயிருந்தும் கொஞ்சமும் நாணமல் கோடிநின்று கொடுமை செய்தானே என்று அவ் வஞ்சனை அனைவரும் வைது பழித்தார். இளையவனாயிருந்தும் பழகினவன் என்னும் பாராமல் நடுநிலையில் நின்று இக்குலமகன் முறை செய்தமையை நினைந்து நினைந்து புகழ்ந்து போற்றினார். "இற்பிறந்தார்கண் அல்லது இல்லை இயல்பாகச் செப்பமும் நாணும் ஒருங்கு" என்னும் உண்மையை உலகம் அன்று இவ்விருவர்கண்ணும் உணர்ந்து நின்றது.

நீதி அறவொழுக்கம் நேர்மை நடுநிலைமை
கோதில் குடிப்பிறந்தார் கோள்.

நாணமும் செம்மையும் நற்குடிப் பிறந்தார்க்குப் பூணும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

952. ஓரிழுக்குஞ் சாரா துயர்தரும தத்தனேன்
கூரொழுக்கில் நின்றான் குமரேசா— நேரும்
ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்றும்
இழுக்கார் குடிப்பிறந் தார். (உ)

இ—ள்.

குமரேசா! இழுக்கம் யாதுமின்றி என்றும் ஒழுக்கமு

டையனும் தருமதத்தன் ஏன் உயர்ந்து நின்றான்? எனின், ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் குடிப்பிறந்தார் இழுக்கார் என்க.

இது, குடிப்பிறந்தார் நெறிதவறார் என்கின்றது.

ஒழுக்கம் ஆவது பிறர்மனைவிழையாமை, பிறவுயிர் சிதையாமைமுதலிய அறநெறியில் யாதும் பிறழாது நடத்தல். பெரியோர்வழிமுறை ஒழுகுதலால் இது, ஒழுக்கம் என நின்றது. "பிறர்மனைவிழைதல், நிலைபிழைத்தொழுகல், பொய்ம்மொழி பிதற்றுதல், சிற்றம்,—மறமிகு வயிரம், குறளை, ஏலாதமொழியினை நவிலுதல், மரபை—இறிபகர்ந்தொழுகல், ஆய ஒன்பானும் கீழ்மையோர் ஒழுக்கம் இல்வாழ்வின், உறைகுநர் இவற்றை விடுகவென்றினிதினுரைத்தனர் நான்முறை உணர்ந்தோர்" எனவரும் இதில் கீழோர் நிலையும், மேலோர் பான்மையும் உணரலாகும்.

வாய்மை = மெய்யேபேசுதல். வாயின்கண் நிகழ்வதாகலான் வாய்மை என நின்றது.

நாணத்தை முன்னர்க் கூறியாயிற்றே ஈண்டும் அதனை இசைத்ததென்னை? எனின், குடிப்பிறந்தாருளத்தில் இயற்கையாக அமைந்திருக்கும் இரண்டுகுணங்களை ஆண்டு எடுத்துக்காட்டினார்; இதில் அவரதுமெய்யும் மொழியும் மனமுமாகிய மூன்றின் நீர்மையும் தோன்றக் கூறுகின்றாராதலால் முறைப்படி முடிவில் அதுவும் தோன்றவைத்தார் என்க.

இழுக்கார் = தவறார். இழுக்கல் = தவறல், வழுவல்.

மேல், குலமக்கள் நேர்மையும நாணமுமுடையராய் நிலவி நிற்பர் என்றார்; இதில் ஒழுக்கம் உண்மைகளில் என்றும் அவர் குன்றார் என்கின்றார்.

உயர்ந்தகுடியிற் பிறந்தவர் ஒழுக்கம் சத்தியம் நாணம என்னும், இம் மூன்றின் கண்ணும் யாண்டும் வழுவாது நிற்பர் என்பதாம்.

ஒழுக்கத்தை முன்வைத்தது குடிப்பிறப்பிற்கு உயிர் நிலையாய் நிற்கும் அதன் உரிமை கருதி. என்னை உரிமை எனின்? "ஒழுக்கமுடைமை குடிமை; இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்" என முன் இசைத்துள்ளமை காண்க.

நல்லகுடிப்பிறந்தார் இழுக்கத்தின் ஏதப்பாட்டை அறிந்திருப்பாராதலால் என்றும் அவர் ஒழுக்கத்தின் ஒல்கார் என்க.

தான்உரைத்த வாய்மையை இழுக்கிவிடும்படி விசுவாமித்திரர் வந்து வெகுண்டு, வெருட்டி இடர்பலவிளைத்துத் துயர்மிகச் செய்தும் அரிச்சந்திரன் யாதும் இழுக்காமல்,

'எந்தநல்லுயிரும், என்கிளைஞரின்னுயிரும், மன்னுயிர்களும்
நந்தினும்; உடல்பதைக்க நரகத்தினிலிருத்தி விடினும்
முந்தவந்தனை ரறிந்திட மொழிப்பட யளித்த பொருளைத்
தந்ததில்லையென வுன்றனெதிர் நின்றுரை செயத் தகுவதோ"

என்று வியத்தகுதிறனோடு விளங்கிநின்றதுபோல் நல்லகுடிப்பிறந்தார் என்ன அல்லல் வந்தாலும் தம் வாய்மையை வழுவாது காத்து நிற்பாராதலால் அவர் இழுக்கார் என்றார்.

ஒழுக்கமும் சத்தியமு முடையவர் எவரோ அவரே நல்ல குல மக்கள் என்பது கருத்து

இந்தச் சீலமும் மெய்மையும் இல்லாதவர் எவ்வளவு மேலான செல்வத்தை வைத்திருந்தாலும் அவர் இழி மக்களேயாவர் என்பது குறிப்பு.

உயர்ந்த குடிப்பிறந்தார் உண்மை ஒழுக்கங்களைக் கடைப்பிடித்து உறுதியாக நிற்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை தருமதத்தன்பால் உணரப்படும்.

## கதை.

தருமதத்தன் என்பவன் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த ஓர் வணிகர் தலைமகன். இவன் சிறந்த அழகன். அன்பும பணிவும அடக்கமுமுடையவன். இவனுக்குச் சோமதத்தன் என ஒரு மாமன் இருந்தான். அவன் பெருந்திருவுடையவன். அவனுக்கு ஓர் அருமைத்திருமகள் பிறந்திருந்தாள். அவள் பெயர் விசாகை உருவிலும் அறிவிலும் அவள் மிகச்சிறந்தவள். அவளை இவனுக்குத் திருமணஞ்செய்து தருவதாக அவன் உறுதிசெய்திருந்தான். அவள் பருவமடைந்து எழில்நலமகனிந்து இனிது விளங்கியிருந்தும நல்ல முகூர்த்தத்தை எதிர்நோக்கி ஓராண்டு கழியவேண்டுமென்று அவன் கருதிநின்றான். உருவம் பருவம் அழகு அமைதி முதலிய நலங்களெல்லாம் ஒத்த அளவாய்த் தம்முள் ஒருங்கே

அமைந்திருந்த வதுவரர்கள் இருவரும் கனிந்த காதலோடு ஒருவரை ஒருவர் மிக விழைந்திருந்தனர். திங்கள் ஒன்பது கழிந்தன. நிரம்பிநிற்கும் நீர்ப்பெருக்குப்போல் அன்பு ததும்ப இவர் நின்று வருங்கால் கந்தருவமுறையில் கலந்துவிட்டார் என ஒரு பழிமொழியைச் சிலர் எழுப்பிவிட்டார். அதனால் ஊரெங்கும் அலர் பரந்தெழுந்தது. "ஆக்கப்பொறுத்தவர் ஆறப்பொறுக்கலாகாதா? இவ்வளவு அவசரமா? ஊராறியக் கைதீண்டுமுன்னர் இங்ஙனம் மெய்தீண்ட லாமா? ஆண்மகன் தான்மீறிவிட்டாலும் அந்த இளங்குமரி தடுத்து அடக்கி யிருக்கலாகாதா?" என இன்னவகையில் பலவும் பன்னி நின்றனர். உண்மையில் ஒரு பிழையு மின்றி இருவரும் நெறிநின்றொழுகினராதலால் அந்நிலையினையறிந்து நெஞ்சங் கவன்றார். ஒருநாள் விசாகை ஊரம்பலம் புகுந்து கந்திற்பாவை முன் நின்று "யான் பிழைசெய்திருந்தால் என்னைக் கொன்று விடுக; இல்லையென்பது நீ தெளிந்தால் ஊரவர் கூறும் பழிமொழியை உன் உரையால் ஒழித்தருள்க" என்று உளமுருகி உரைத்தாள். கந்திற்பாவை என்பது அந்நகரின் பொதுவிடமாகிய சக்கர கோட்டத்திலே அழகியகோயில்முன் நிற்கும் ஓர் விழுமிய தூணிலே மயனால் செய்யப்பட்டுள்ள தெய்வப் பிரதிமை. அரசனாவது அறவோராவது போய் நின்று உண்மை நிகழ்ச்சிகளை உணர்த்துமபடி கேட்டால் யாவரும் தெரிய உரைத்துவிடும். அந்த அற்புதப் பாவை அன்று இவளது கற்புண்மையை ஊரெங்கும் கேட்க உரைத்துநின்றது. எல்லாரும் வியந்து அவளைப்போற்றிப் புகழ்ந்தார். இத் தெய்வப்பாவை தெளிவித்திராதாயின் என்மேல் ஏறியபழி இறங்கியிராதே! என்று இரங்கி வருந்தி உலகநிலையைவெறுத்து எனக்கு இல்வாழ்க்கை வேண்டாம்; அடுத்தபிறவியில் எனதுஅருமைக் காதலனைக் கலந்து வாழ்வேன்; என்று உறுதிசெய்துகொண்டு கன்னிமாடம் புகுந்து கடுந்தவம் புரிந்தாள். இவனும் அவளையன்றி வேறு எவளையும் மணப்பதில்லை என்று உறுதிசெய்துவிட்டுத் தாயையும் தந்தையையும் அழைத்துக்கொண்டு மதுரையையடைந்து வணிக முறையில் பெரும் பொருளீட்டி எட்டிப் பட்டம் பெற்று இனிது வீற்றிருந்தான். வயது அறுபதாயிற்று. முதியனான இவன் ஓர் அந்தணன் ஏவலால் தன் நகரினையடைந்தான். இவனது வரவினையறிந்து அவ்விசாகை விரைவினில் வந்து

பார்த்தாள். "அந்தோ! நம் இளமை எங்கே? அழகெங்கே? ஒரு வரை ஒருவர் பருகலாம்படி உருகிநின்ற நம் உள்ளக்காதலெங்கே? எல்லாம் போயினவே! நான் பழுத்த கிழவியாயினேன்; நீர் பெருத்த கிழவராயினீர்; முன சூழ்ந்துகொண்ட வாய்மையின்படி அடுத்தபிறவியில் நாம் அமர்ந்து வாழ்வோம்; எடுத்த இப்பிறவி இவ்வளவிலொழிக; தாம் ஈட்டிவந்த பொருளையெல்லாம் தருமஞ்செய்து விடுங்கள்" என்று அறிவுறுத்தினள். அவ்வாறே இவன் செய்து முடித்தான். இவர்களது ஒழுக்கத்தையும் சத்தியத்தையும நாணத்தையும் பிறப்பின் பெற்றியையும் குறித்து எல்லாரும் புகழ்ந்து போற்றினர். ஒழுக்கமும் வாய்மையும நாணும இம்மூன்றும் இழுக்கார் குடிப்பிறந்தார என்பதை உலகம் இவர்பால் உணாந்துநின்றது. இவரது பான்மையை வியந்து அக்காலத்திருந்த ஞானிகளும் வியந்தார் நெடுமுடிக்கிள்ளி என்னும் மன்னனிடம் இவரைக்குறித்து ஒரு முனிவர் கூறியபடியை இதனடியில்காண்க.

"தருமதத்தனும், தன்மாமன்மகள
பெருமதர் மழைக்கண் விசாகையும், பேணித்
தெய்வங் காட்டுந் திப்பிய ஓவியக்
கைவினை கடந்த கண்கவர் வனப்பினர்;
மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக
கொத்தன ரென்றே யூர்முழு தலரெழப்
புனையா ஓவியம் புறம்போந் தென்ன
மனையக நீங்கி வாணுதல் விசாகை
உலக வறவியி னூடுசென் றேறி
இலகொளிக் கந்தி னெழுதிய பாவாய்!
உலகர் பெரும்பழி ஒழிப்பாய் நீயென
மாநகருள்ளீர்! மழைதரும இவளென
நாவுடைப் பாவை நங்கையை எடுத்தலும்
தெய்வங் காட்டித் தெளித்திலே னாயின்
மையலூரோ மனமா சொழியாது
மைத்துனன் மனையாள் மறுபிறப் பாகுவேன்
இப்பிறப் பிவனொடும கூடே னென்றே
நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி

மற்றவள் கன்னி மாடத் தடைந்தபின்
தருமதத்தனும் தந்தையும் தாயரும்
பெருநகர் தன்னைப் பிறகிட்டேகித்
தாழ்தரு துன்பம் தலையெடுத்தா யென
நாவுடைப் பாவையை நலம்பலவேத்தி
மிக்கோ ருறையும் விழுப்பெருஞ் செல்வத்துத்
தக்கண மதுரை தான்சென் றடைந்தபின்
தருமதத்தனும் தன்மாமன்மகள்
விரிதரு பூங்குழல் விசாகையை யல்லது
பெண்டிரைப் பேணேன் இப்பிறப்பொழிகெனக்
கொண்டவிரதம் தன்னுட்கூறி
வாணிகமரபின் வருபொரு ளீட்டி
நீணிதிச் செல்வனாய் நீணில வேந்தனின்
எட்டிப்பூப் பெற்று இருமுப்பதிற்றியாண்டு
ஒட்டிய செல்வத் துயர்ந்தோ னாயினன்;
அந்தணாளன் ஒருவன்சென றீங்கு
என் செய்தனையோ இருநிதிச் செல்வ,
பத்தினிஇல்லோர் பலஅறஞ் செய்யினும்
புத்தேளுலகம் புகாஅ ரென்பது
கேட்டு மறிதியோ? கேட்டனையாயின்
நீட்டித் திராது நின்னக ரடைகெனத்
தக்கண மதுரை தான்வறிதாக
இப்பதிப் புகுந்தனன் இருநிலவேந்தே!
மறறவ னிவ்வூர் வந்தமை கேட்டுப்
பொற்றொடி விசாகையும் மனைப்புறம்போந்து
நல்லாள் நாணாள் பல்லோர் நாப்பண்
அல்லவை கடிந்த அவன்பாற் சென்று
நம்முள்நாம் அறிந்திலம் நம்மை முன்னாள்
மம்மர் செய்த வனப்பியாங் கொளித்தன
ஆறைந் திரட்டி யாண்டுனக் காயது; என்
நாறைங் கூந்தலும் நரை விராவுற்றன
இளமையும் காமமும் யாங்கொளித் தனவோ
உளனில் லாஅ எனக்கிங் குறையாய்

இப்பிறப் பாயினியானின்னடி யடையேன்
அப்பிறப் பியானின் அடித்தொழில் கேட்குவன்
இளமையும் நில்லா; யாக்கையும் நில்லா;
வளவிய வான்பெருஞ் செல்வமும் நில்லா;
புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்;
மிக்க அறமே விழுத்துணை யாவது
தானஞ் செய்யெனத் தரும தத்தனும்
மாமன் மகள்பால் வான்பொருள் காட்டி
ஆங்கவன் அவளுடன் செய்த நல்லறம்
ஓங்கிரு வானத்து மீனினும் பலவால்" (மணிமேகலை)

ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இழுக்காராப் இவர் நின்றொழுகிய திறமும், குடிப்பிறப்பின் நலமும் இதனால் இனிதுணரலாகும்.

கயவரைக் கையிகந்து வாழ்தல்; நயவரை
நள்ளிருளும் கைவிடா நட்டொழுகல்; தெள்ளி
வடுவான வாராமல் காத்தல்; இம்மூன்றும்
குடிமாசி லார்க்கே யுள. (திரிகடுகம்)

வெள்ளமேன அல்லல் விளைந்தாலு மேன்மக்கள்
உள்ளந் திரியார் உடைந்து.

குலமக்கள் நிலை வழுவார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

953. ஈதும் இகழார் இடங்கழியார் இன்சொலொடு
கோதறவேன் தந்தார் குமரேசா—போதும்
நகையீகை யின்சொல் இகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு. (௩)

இ—ள்.

**குமரேசா!** கள்வர் என்று கண்டும் இடங்கழியார் எள்ளாது இன்னுரையாடி ஏன் ஈந்தார்? எனின், நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வாய்மைக்குடிக்கு வகைஎன்ப என்க.

இது, குடிப்பிறந்தார் எவர்க்கும் இனியரா யிருப்பரென்கின்றது.

நகை என்றது முகமலர்ச்சியை. இதனை முதலில் வைத்தது ஈகை முதலிய செயல்வகைகட்கெல்லாம் இனிய ஏதுவாய் முன்னதாகத்தோன்றி நிற்கும் அதன் தன்மை கருதி என்க.

இகழாமை = இகழ்ந்து பேசாமை. இதனை இறுதியில் வைத்தது முன்னருள்ள மூன்றும் விதியாயும், இது மறையாயும் நிற்றல் கருதி.

வாய்மைக்குடிக்கு = உண்மையான குடிப்பிறந்தார்க்கு. உண்மையாவது நிலைதிரியாதிருக்குந் தன்மை. குடி ஆகுபெயர். வகை என்ப = உரிமை என்று சொல்லுவர் நூலோர். உடற்கு உறுப்புப்போல் நகை முதலிய நான்கும் அவர்க்கு அங்கமாக அமைந்திருக்கும் என்பார் வகை என்றார். வகை = கூறுபாடு, இனம்.

மேல், குடிப்பிறந்தாரின் இயல்பு கூறினார்; இதில், அவரது செயல்வகை கூறுகின்றார்.

நகையும் ஈகையும் இன்சொல்லும் இகழாமையுமாகிய இந்நான்கும் நல்லகுடிப்பிறந்தார்க்கு உரிமையாக உள்ளன என்பதாம்.

சிறந்தகுடிப்பிறந்த நன்மக்கள் இரவலர் தூரவரும்போதே முகமலர்ந்து நோக்கி, அவர் நெருங்கியவுடனே வேண்டியவற்றை விரும்பிக் கொடுத்து, இனிமையாகப்பேசி விடுப்பர்; யாரையும் அவமதித்து இகழ்ந்து கூறார்; என்பார் "நகை ஈகை இன்சொல் இகழாமை" நான்கும் அவர்க்கு வகை என்றார்.

நகைமுதலிய நான்கையும் குடிப்பிறப்பாளர்க்கு வகைமையாகவைத்ததென்னை? எனின், இவை அரிய செயல்களாதலால் அப்பெருமையாளர்க்கே உரியனவாம்; சிறியர்பால் உளவாகா என்க.

"கருங்கடற்பிறப்பினல்லால் வலம்புரி காணுங்காலைப்
பெருங்குளத்தென்றுந் தோன்றா; பிறைநுதற்பிணையனீரே!
அருங்கொடைத்தானம, ஆய்ந்தஅருந்தவம், தெரியினமண்மேல்
மருங்குடை யவர்கட்கல்லால் மற்றைபர்க் காவதுண்டே. (க)

மருங்கு—குலம். "சூர்மருங்கறுத்த மொய்ம்பின் மதவலி" (திருமுருகாற்றுப்படை) எனபுழிக் காண்க.

"அட்டுநீ ரருவிக் குன்றத்தல்லது வைரம் தோன்றா;
குட்டநீர்க் குளத்தினல்லால் குப்பைமேற் குவளைபூவா;

விட்டுநீர் வினவிக் கேண்மின் - விழுத்தகையவர்களல்லால்
பட்டது பகுத்துண்பாரிப் பார்மிசை யில்லை கண்டீர்." (2)
(சீவகசிந்தாமணி.)

வலம்புரிச் சங்கும், வைரமும், குவளையும் உயர்ந்த இடங்களில் தோன்றுமேயன்றி இழிந்த இடங்களில் தோன்றா; அதுபோல் ஈகை இரக்கங்கள் நல்ல குடிப்பிறந்தார் பாலன்றிப் புல்லர் பால் அமையா என இஃதுணர்த்தி நிற்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

குலமக்கள் எவரையும் பழித்துரையார்; தமயால் இயன்ற வரை இன்சொல்லோடு உதவி நிற்பர் என்பது கருத்து

கடுத்தமுகமும் உலோபமும் வன்சொல்லும் இகழ்தலும்எவன் பாலுள்ளனவோ அவன் இழிமகனேயாவன் என்பது குறிப்பு. உயர்ந்த குலத்தேம் என்று வீணுகச்செருக்கி நிற்பவர் இந்தஅரு மைத்திருக்குறளை நாளும் சிந்தித்து வரவேண்டும்.

உயர்ந்த குடிப்பிறந்த மேன்மக்கள் யாதும் இகழ்ந்து கூறாமல் இன்முகத்தோடு யார்க்கும் உவந்துகொடுப்பர்என்பது இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இடங்கழியார் பால் உணரப்படும்.

## கதை.

இடங்கழியார் என்பவர் கோனாட்டிலே கொடும்பாளூரிலே யிருந்து அரசுபுரிந்த குறுநில மன்னர் சூரியகுலத்து அரசர் மரபைச் சார்ந்தவர். பெருந்தன்மை வாய்ந்தவர். இவரது முன்னோர் பலரும் உலகமெங்கணும் அறங்கள்பல செய்துவந்துள்ளார். அவருள் ஆதித்தன் என்பவன் சிதம்பரத்தில் பரமன திருக்கோயிலைப் பொற்றகட்டால் வேய்ந்து வேறுபல அரிய பணிகளும்ஆக்கினன். இங்ஙனம் அறக்கொடைகளால் விளங்கி வழிவழி சிறந்து நின்ற உயர் குடியிற் பிறந்த இவர் குடிகள்பால் மிக அருளுடையராய் அரசினை இனிது பேணிவந்தார். அறிவொழுக்கங்களில் இவர்மிகச் சிறந்தவர். யாவரிடமும் இன்சொல்லாடும் இனிய நீர்மையர். இரவலரைக்கண்டால் அகமுவந்து முகமலர்ந்து மிக உபசரித்து வேண்டியதைக் குறிப்பறிந்து விரைந்து உதவி வந்தார். "இன்சொல்விளைநிலமா, ஈதலே வித்தாக, வன்சொற்களைகட்டு, வாய்மை எருவட்டி, அன்பு நீர்பாய்ச்சி, அறக்கதிரீனுமோர், பைங்கூழ் சிறுகாலைச் செய்" என்றவண்ணம் இவர் செய்து வருங்கால் ஒருநாளி

சவுசிவனடியார்போல் வேடந்தரித்து ஒருவன் இவரது நெற்பொதியிற் புகுந்து கொள்ளை செய்தான். காவலாளர் அவனைக்கண்டுபிடித்துக் கட்டிக் கொணர்ந்து இவர்முன் விட்டார். இவர் பெரிதும் இரங்கிக்கட்டவிழ்த்துவிடும்படி செய்து "எதற்காக என் நெல்லைக்கவர்ந்தீர்! சொல்லும்" என்றார். அவன் வறுமையால் அது செய்தேன் என்றான். இவர் புன்னகைசெய்து இவரன்றோ எமக்குப் பண்டாரம் என்றார். பண்டாரம் என்பது பல பண்டங்கள் நிரம்பியிருக்கும் கருவூலத்தையும், வேடந்தரித்த பரதேசியையும் குறிக்குமாதலால் இங்ஙனம் சிலேடையாகக் கூறி நம் நாட்டில் சிலர் வறுமையால் வருந்துகிறார்கள் போலும்; நம்நிதியறையைத் திறந்து வேண்டியவர்கள் வேண்டியவாறே முகந்துகொண்டுபோம்படி பறையறையப்பண்ணுமின் என்று அருகிருந்த அமைச்சரிடம் பணித்தார். மறுமொழி யாதுமின்றி அவரும் அவ்வாறே செய்தார். ஊருணி நீர்போல்பலரும் இவர் பெருந்திருவை உவந்து நுகர்ந்தார். இவரது ஈகைநலங்களை நோக்கி எல்லாரும் வியந்தார்.

"இடங்கழியார் எனவுலகில் ஏறுபெரு நாமத்தார்
அடங்கலர்முப் புரமெரித்தா ரடித் தொண்டினெறியன்றி
முடங்குநெறி கனவினினும் முன்னுதார் எந்நாளும
தொடர்ந்தபெருங் காதலினால் தொண்டர் வேண்டியசெய்வார். (1)

சைவநெறி வைதிகத்தின் தருமநெறி யொடுந் தழைப்ப
மைவளருந் திருமிடற்றார் மன்னிய கோயில்களெங்கும்
மெய்வழிபாட் டர்ச்சனைகள் விதிவழிமேல் பேல்விளங்க
மொய்வளர் வண்புகழ்பெருக முறைபுரியும் அந்நாளில். (2)

நிறையழிந்த வுள்ளத்தா னெற்பண்டாரமும் அன்றிக்
குறைவில் நிதிப்பண்டாரமான வெலாங் கொள்ளைமுகந்
திறைவனடி யார்கவர்ந்து கொள்கவென எம்மருங்கும்
பறைபறையப் பண்ணுவித்தார் படைத்தநிதிப் பயன்கொள்வார்"
(பெரியபுராணம்)

இன்னவாறு புலவரெல்லாரும் போற்ற இசைநிசை பரப்பி இவர் இனிது வீற்றிருந்தார். களவு செய்தவரிடத்தும் கனிவு தோன்ற இனிது கூறி இன்னகைசெய்து இரங்கி ஈந்து எவரையும் இகழாமல் பெருந்தன்மையோடு விளங்கி நிற்கும் இவரது குண நலங்களைக்குறித்து மறுபுலமன்னரும் வியந்து புகழ்ந்தார். "நகை ஈகை, இன்சொல், இகழாமை, நான்கும் வாய்மைக்குடிக்கு வகை

என்ப" என்னும்உண்மையை உலகம் இவர்பால்உணர்ந்துநின்றது.

இனநன்மை யின்சொலொன் றீதல்மற் றேனை
மனநன்மை யென்றிவை யெல்லாம்—கனமணி
முத்தோ டிமைக்கு முழங்குவரித் தண்சேர்ப்ப
இற்பிறந்தார் கண்ணே யுள. (நாலடியார்)

சொல்வழுவார் யார்க்கும் துயரிழையார் ஈந்தருள்வார்
நல்ல குடிப்பிறந்தார் நன்கு.

உயர்குடிப்பிறந்தவர் எவரையும் இகழாது இதஞ் செய்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

954. தாவரிய பேராசைத் தாய்தந்தும என்பரதன்
கொள்ளாது நீத்தான் குமரேசா—வெள்ளம்
அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர் (ச)

இ—ள்.

குமரேசா! பேராசு கிடைத்தும் பிழை என்று பரதன் ஏன் அதனை வெறுத்து விடுத்தான்? எனின், அடுக்கியகோடி பெறினும் குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர் என்க.

இது, உயர்ந்தகுடிப்பிறந்தார் இழிந்தன செய்யாரென்கின்றது

அடுக்கிய கோடி என்றது கோடி கோடியாக அடுக்கிய பொருள் என்றவாறு. அளவிறந்தமை கூறியபடி. கோடிபெறினும் என இங்ஙனம் பொருள்மிகுதியை யெடுத்துக்காட்டியது அது எவரையும் நிலைகுலையச் செய்யும் ஆதலால் அதன் நிலைமை நோக்கி என்க. "வான்கவிந்த—வையகமெல்லாம் பெறினும் உரையற்க—பொய்யோடிடைமிடைந்த சொல்" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. குன்றுவ என்றது தாழ்தற்குரதுவான செயல்களை. அவையாவன பொய்த்தல் வஞ்சித்தல் முதலிய புன்மைகள் என்க.

மேல், நல்ல குலமக்கள் யாரையும் இகழாமல் இன்சொல்லோடு ஈவர் என்றார்; இதில், அவர் இழிவினைகளை யாதும்செய்யார் என்கின்றார்.

பலகோடி பொருள்கள் எய்துவதாயினும் உயர்ந்தகுடியிற்பிறந்தார் இழிந்தசெயல்களைச் செய்யார் என்பதாம்

அளவிடலரிய பெரும்பொருள்கள் வருவன வாயினும் அது கருதி மேன்மக்கள் இழிவான காரியங்களைச் செய்ய இசையார் என்றவாறு.

நல்ல குடிப்பிறந்தார் என்றும் உயர்ச்சிக்குரிய எழுச்சியுடைய ராயிருப்பரேயன்றி பொருள்வருவாய்கருதி ஆசையாலோ, பிறர்க் கடங்கி அச்சத்தாலோ இகழ்ச்சிக்கு ஏதுவான செயல்களை யாண் டும் யாதும் செய்யார் என்க.

"உயர்நிலை யுலகம் அமிழ்தொடு பெறினும்
பொய்சேண் நீங்கிய வாய்நட்பினையே,
முழுதகுகடலேணி மலாதலை யுலகமொடு
உயர்ந்த தேஎத்து விழுமியோர் வரினும்
பகைவர்க்கஞ்சிப் பணிந்தொழுகலையே,
தென்புலமருங்கின் விண்டு நிறைய
வாணன் வைத்த விழுநிதி பெறினும்
பழிநமக் கெழுக வென்னாய், விழுநிதி
ஈதலுள்ளமொடு இசைவேட் குவையே" (மதுரைக்காஞ்சி)

இது பாண்டியனைக்குறித்து மாங்குடி மருதனார் கூறியது.

அக்குலமகன் தன்மையும் குன்றாச் சிறப்போடு நின்றிருந்த குடிப்பிறப் புண்மையும் இதில் இனிது உணரலாகும்.

"புகழெனின் உயிரும் கொடுக்குவர்; பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்" (புறம்)

"உறையார் விசும்பின் உவாமதி போல
நிறையா நிலவுத லன்றிக்—குறையாத
வங்கம்போழ் முந்நீர் வளம்பெறினும் வேறுமோ?
சங்கம்போல் வான்மையார் சால்பு" (புறப்பொருள்)

"கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த தண்ணு திறக்கும்—இடமுடைய
வானகம் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின்" (நாலடியார்.)

இவை ஈண்டு எண்ணற்குரியன.

இனி, "பெறினும்—செய்தல் இலர்" என்பதற்குச் சிறந்த செல்வங்களைப் பெற்றிருந்தாலும் செருக்கு முதலியவற்றால் மிகு ந்து இழிந்தவினைகளைக் குடிப்பிறந்தார் செய்யார் என்றுகொண்

டால் என்னை? எனின், அங்ஙனம் கொள்ளின் பொருட்சிறப்பில்லையாம். அடிகளுக்கு அது கருத்தாயின் அடுக்கிய கோடிய ரேனும் என அருளியிருப்பர்; அங்ஙனம் இன்றிப் பெறினும் என்றதனுல் அப்பொருள் படாமையு மறிக.

எவ்வளவு பெருஞ்செல்வமாயினும் பழிபடவருமாயின் நல்ல குலமக்கள் அதனை யாதும கொள்ளாது தள்ளி விடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரதன்பால் உணரப் படும்.

கதை.

பரதன்என்பவன் தசரதமன்னனுடைய புதல்வர்நால்வருள் ஒருவன். முதல்வனுன இராமன்பால் பேரன்புடையவன். அழகு அறிவு அமைதி வீரம் முதலிய குணநலங்களில் இராமன் ஒருவனைத்தவிர வேறெவரும் தனக்கு நிகரில்லாதவன். நெறிமுறை வழுவாதநீதியாளன்.

"தள்ளரிய பெருநீதித் தனியாறு புகமண்டும்
பள்ளமெனுந் தகையானைப் பரதனெனும் பெயரானை
எள்ளரிய குணத்தாலும் எழிலாலும் இவ்விருந்த
வள்ளலையே அனையானைக் கேகயர்கோன் மகள்பயந்தாள்"

என்று விசுவாமித்திரரால் வியந்து சொல்லநின்றவன். தன்பாட்டன் விரும்பியபடி ஒருமுறை கேகயநாட்டிற்கு இவன் போயிருந்தான். அவ்வமயம் திருவயோத்தியில் இராமனுக்கு மணிமுடி சூட்ட மன்னன் விழைந்தான். அதனைத் தடுத்து நிறுத்திக் கூனி சூழ்ச்சியால் அரசினைக் கவர்ந்து தன் பிள்ளைக்காகுமென்று கைகேசி உள்ளங்களித்து இராமனை வனம்போகப் பணித்தாள். அவ்வள்ளல் "என் பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்ற தன்றோ? என்னினி உறுதியப்பால் இப்பணி தலைமேற்கொண்டேன்—மின்னெளிர் கானம் இன்றே போகின்றேன் விடையும் கொண்டேன்" என்று யாதொரு தடையுமின்றி விரைந்து போயினன். அவன் பிரிந்துபோனதால் அரசனும் ஆருயிர் துறந்தான். யார் போனுலும் பேரரசு தன்மகனுக்குக் கிடைத்ததென்று அவள் மகிழ்ந்திருந்தாள். ஒன்றுமறியாத இவன் முடிவில் வந்து நிகழ்ந்ததையறிந்தான். நெஞ்சம் பதைத்தான் வஞ்சம் புரிந்த அவளை

வைது பழித்தான். கோசலை காலில் போய்க் கூவி விழுந்தான். ஐயகோ என அலறி யழுதான்.

"எந்தை எவ்வுலகுளான்? எம்முன் யாண்டையான்?
வந்தது தமியென் இம்மறுக்கங் காணவோ
சிந்தையி னுறுதுயர் தீர்த்திராலெனும்
அந்தரத் தமரரும் அழுது சோரவே" (இராமாயணம்)

இன்னணம் பலவாறு துயருழந்து துளங்கிப் பின்பு துணிந்தெழுந்தான். இப்பெருந் திருவினையான் விரும்புவனென்றோ இக் கொடும பழியினைச் செய்தாய்! என்று தாயைக் கொதித்து நோக்கினன். அவள் விளைத்த விளைவினை நினைந்து நினைந்து வெய்துயிர்த்தான். இவன் அன்று வருந்தியுரைத்தவற்றுட் சில அடியில் வருவன காண்க.

"பாரோர் கொள்ளார்; யானுயிர்பேணிப் பழிபூணேன;
தீராதென்றோ துன்பமிவ்வூரில் திருநில்லாள்;
ஆரோடெண்ணிற் றாருரை தந்தாய்! அறமெல்லாம
வேரோடுங் கேடாக முடித்தென் விளைவித்தாய். (க)

கொனமே னுனென் தந்தையை மற்றுன் கொலைவாயால்
ஒன்றோ கானத் தண்ணலையுய்த்தேன்; உலசாள்வான்
நின்றேனென்றால் நின் பிழையுண்டோ! பழியுண்டோ
என்றேனுந்தா னென் புகழ்மாயு மிடமுண்டோ. (உ)

கண்ணாலே யென் செய்வினை இன்னுஞ் சில காண்பார்
மண்ணோர் பாராது எள்ளுவர்; வாளா பழிபூண்டாய்
உண்ணு நஞ்சம் கொல்கிலதென்னும் உரையுண்டென்
றெண்ணு நின்றேன் அன்றியிரேன் என்னுயிரோடே. (ந)

என்றுன் பாவிக் கும்பிவயிற்றி னிடைவைகித்
தோன்றுந் தீராப் பாதகமற் றென் துயர் தீரச்
சான்றுந் தானே நல்லறமாகத் தகை ஞாலம்
மூன்றுங் காண மாதவம் யானே முயல்கின்றேன்" (பரதன்)

என இன்னவாறு பல கூறி அவளை வெறுத்திகழ்ந்துவிட்டு அண்ணனைக் கொண்டுவருவேன் என்று விரைந்தெழுந்து போனான். இவனது மனப் பான்மையையும் பெருந்தன்மையையும் வியந்து மாந்தரனைவரும் தொடர்ந்து சென்றார். பெறுதற்கரிய பெருந் திருவினையும் பிழையென வெறுத்து விடுத்து அவ் அழகனைக் காண விழைந்து வழியமைந்துவந்த இவனை இடையே குகன் கண்டான். உருவ நிலையை உற்று நோக்கி உள்ளமுருகினான். முதலில் மாறு

பட எண்ணிய அவன் பின்பு தேறி இரங்கினான். "துன்பம் ஒரு முடிவில்லை; திசை நோக்கித் தொழுகின்றான்;— எம்பெருமான் பின்பிறந்தார் இழைப்பரோ பிழைப்பென்றான்." என்றவன் விரைந்து ஓடிவந்து வணங்கிநின்றான் எய்தியவுண்மையைத் தெளிந்து ஏங்கியழுதான். இறுகத் தழுவினான்.

"தாயுரை கொண்டு தாதை உதவிய தரணி தன்னைத்
தீவினை என்ன நீத்துச் சிந்தனை முகத்தில் தேக்கிப்
போயினை யென்ற போழ்து புகழினோய் தன்மை கண்டால்
ஆயிரம் இராமர் நின்கேளாவரோ தெரியினம்மா! (க)

என் புகழ்கின்ற தேழை எயினனேனெள் இரவியென்பான்
தன்புகழ்க்கற்றை மற்றை யொளிகளைத் தவிர்க்குமாபோல்
மன்புகழ் பெருமை நுங்கள் மரபினோர் புகழ்களெல்லாம்
உன்புகழாக்கிக்கொண்டாய் உயர்குணத்துரவுத்தோளாய்" (உ)

என உவந்து புகழ்ந்தான. பின்பு இவன அவனைக் கடந்துபோய்ச் சித்திர கூடத்திலிருந்த இராமனைக் கண்டு உள்ளமும் உடலும் உருகிப் பணிந்து கரைந்தழுது அரசினைவந்து காத்தருளும்படி போற்றி வேண்டினான். பதினான்கு ஆண்டுகள பொறுத்து வருவதாக அம்மூர்த்தி அருள்செய்து ஆணைத்துவிடுப்ப அவ் ஆணையை மறுக்க அஞ்சி இவன் மறுகிவந்து விரதமேற்கொண்டு வேறோரிடத்தில் மேவியிருந்தான். உலகமுழுவதும் பொதுவறப் புரந்து இனிது நிலவி நிற்கும் அரிய அரசபதவி அடைந்தும் அது தவறென்று தள்ளிவிட்டு நிலைதிரியாது நின்ற இவனது தலைமையைக் கண்டு உலகமெல்லாம இவனைப் போற்றிநின்றது. "அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார் குன்றுவ செய்வதிலர்" என்னும் உண்மையை எவரும் காண இவன் உணர்த்தி நின்றான்.

நரம்பெழுந்து நல்கூர்ந்தா ராயினும சான்றோர்
குரம்பெழுந்து குற்றங்கொண் டேறார்—உரங்கவறு
உள்ளமெனும் நாரினால் கட்டி உளவரையால்
செய்வர் செயற்பா லவை. (நாலடியார்)

வையமோடு வானமெலாம் வந்தாலு மானமுளார்
செய்யார் பழிசேர் செயல்.

பழிப்புறுஞ் செயலைக் குடிப்பிறப்பாளர் யாதும் செய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

955. நின்ற வளங்குறைந்தும் நீள்வல்லான் கிள்ளியன்று
குன்றுதேன் தந்தார் குமரேசா—என்றும்
வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று. (ரு)

இ—ள்.

குமரேசா! வல்லாளனும் துணையிளங்கிள்ளியும் பொருள் வளங் குறைந்திருந்தும் ஏன் நிலை திரியாது நின்று நலம்புரிந்தார்? எனின், வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி பண்பில் தலைப்பிரிதல் இன்று என்க.

இது, வறியராயினும் குடிப்பிறந்தார் உரியன செய்வரென்கின்றது.

வழங்குவது = கொடுப்பது. என்றது பொருளை.

உள்வீழ்தல் = சுருங்குதல், மேலெழுதல், பெருகுதலாம். ஆதலால் சுருங்குதல் இங்ஙனம் சொல்ல நின்றது.

பண்பு = குணம். அஃதாவது ஈகை, நகை, இரக்கம், இன்சொல், செம்மை, வாய்மை முதலிய தன்மைகள் என்க.

தலைப்பிரிதல் இன்று = விட்டு நீங்குதல் இல்லை.

வளமெல்லாம் தேய்ந்தொழிந்தக்கண்ணும் என்னாது "வழங்குவது" என்றது என்னை? எனின், குலமக்களுக்கு வறுமையாவது குடிக்கக்கஞ்சியும், உடுக்க உடையும் இல்லாமையன்று; பிறர்க்குக் கொடுக்க முடியாமையே யாம் ஆதலால் அதனை எடுத்துக் காட்டி இங்ஙனம் உணர்த்தியருளினார் என்க.

மேல், கோடிகொடுத்தாலும் குடிப்பிறந்தார் கோடார் என்றார்; இதில், அவர்செல்வங்குறைந்தாலும் நல்லியல்பு குன்றாரென்கின்றார்.

தாம் கொடுக்கும் பொருள் குறைந்த விடத்தும் பழைமையான குடியிற்பிறந்தார் தம்பண்புடைமை நீங்கார் என்பதாம்.

செல்வம் சுருங்கிய பொழுதும் நல்ல குலமக்கள் தம் உள்ளம் சுருங்கார்; யாவர் மாட்டும் இன்சொல்லாடுவார்; இரங்கியருள்வார்; இயன்றவரை ஈவார்; நேர்மை நீங்கார்; வாய்மை வழுவார்; ஆண்மை குன்றார்; என்பார் "வழங்குவது உள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி பண்பின் தலைப்பிரிதல் இன்று" என்றார்

அட்டாலும் பால்சுவையில் குன்றாது; அளவளாய்
நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர்;
கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே; சங்கு
சுட்டாலும் வெண்மை தரும். (மூதுரை)

ஆற்றுப் பெருக்கற் றடிசுடும்அந் நாளுமவ்வா
றாற்றுப் பெருக்கால் உலகூட்டும்—ஏற்றவர்க்கு
நல்ல குடிப்பிறந்தார் நல்கூர்ந்தா ரானாலும்
இல்லையென மாட்டார் இசைந்து. (நல்வழி)

உடுக்கை யுலறி உடம்பழிந்தக் கண்ணும்
குடிப்பிறப் பாளர்தம் கொள்கையிற் குன்றார்
இடுக்கண் தலைவந்தக் கண்ணும் அரிமா
கொடிப்புற் கறிக்குமோ மற்று. (நாலடியார்)

மாடம் அழிந்தக்கால் மற்றும் எடுப்பதோர்
கூடம் மரத்திற்குத் துப்பாகும் அஃதேபோல்
பீடில்லாக் கண்ணும் பெரியார் பெருந்தகையர்
ஈடில லதற்கில்லைப் பாடு. (பழமொழி)

இவை அடிகள் கருத்தை அடியொற்றி வந்துள்ளன காண்க. உள்ளபொருளெல்லாம் போய் ஒடுங்கியிருந்தபொழுதும் இரகு மன்னன் தன் உள்ளங்குன்றாது ஊக்கியெழுந்து தன்பாலுற்ற வனுக்கு உதவிபுரிந்து இதமுற நின்றதுபோல் வழி வழி வந்த விழு மிய நீர்மையர் யாண்டும தம் பான்மை குன்றாது நிற்பர் என்க. குமணன் பாரிமுதலிய சீரியர்களையும் ஈண்டுச் சிந்திக்க வேண்டும்.

பொருள்வளங் குறைந்தாலும் குலமக்கள் தம் குணநலங் குன்றார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வல் லாளன் கண்ணும், துணையிளங்கிள்ளி பாலும் உணரப்படும்.

கதை.

வல்லாளன் என்பவன் தொண்டை நாட்டிலே மாவளம என்னும் ஊரிலிருந்தவன். வேளாண் மரபினன். உழவுதொழி லால் வளமிகப்படைத்து மன்னரும விரும்பு மாண்புற்றிருந்தான். இவன் அன்பும் பணிவும் அடக்கமு முடையவன். நல்லகொடை யாளி. விருநதினரைப்பேணி அருந்தவரை ஆதரித்து அறம் பல புரிந்தான். வருந்திவந்தவரெவாககும் இவன ஓர் பெருந்துணை யாய் நின்றான் இங்ஙனமநின்று வருங்கால் காலகதியால் இடை

யே இவனது பொருள்வளங் குறைந்தது. குறைந்தாலும் மன மொழி மெய்களால் இயன்றவரையும் பிறர்க்கு இவன் இதஞ்செய்தே வந்தான். செல்வஞ்சுருங்கியும் உள்ளஞ்சுருங்காது உதவிவரும் இவனது வள்ளன்மையை வியந்து அந்நாட்டுவேந்தன் தன்பால் வந்து போம்படி ஒருமுறை இவனை அழைத்திருந்தான். இவன் அங்குச்சென்றான். இடைவழியில் ஒரு புலவன்கண்டு "எனக்கு உடுக்க நல்ல உடையில்லை உங்களைத்தேடித்தான் வருகின்றேன்" என்றான். உடனே தான் உடுத்தியிருந்த ஆடைகளை அவனுக்கு அவிழ்த்துக்கொடுத்துவிட்டு அடுத்திருந்த ஓர் குளத்து நீருள் கோவணத்தோடு போய்த்தனித்திருந்தான். பின்பு அவ்வழியில் வருபவர்களையழைத்துத் தன் வீட்டில் போய் ஆடைகொண்டுவரச் செய்து புனைந்தெழுந்து அரசவைக்குச்சென்றான். கையில் வகை யில்லாதிருந்தும் இயல்பு குன்றாமல் நின்று இவ்வகைசெய்து வந்தானே என்று அரசன்முதலனைவரும் இவனைப்புகழ்ந்துபோற்றினார். "வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும் பழங்குடி பண்பிற்றலைப்பிரிதல் இன்று" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது.

> "உளத்துத் தயையுற்ற ஓர்புலவோனுக்கு உடையுதவிக்
> குளத்துப் புனலை யுடுத்துநின்றே பின்புகூலிஅவைக்
> களத்துப் புகுதக் கலையுடுத் தேகரை யறிவந்த
> வளத்துப் புகழ்பெற்ற வல்லாளனுந் தொண்டைமண்டலமே"
> (தொண்டைமண்டல சதகம்)

இதன்கண்ணும் இவன்சரிதம் குறிக்கப்பட்டிருத்தல் காண்க

## கதை 2.

துணையிளங்கிள்ளி என்பவன் காஞ்சிபுரத்திலிருந்து அரசுபுரிந்தவன், தொடுகழற்கிள்ளி என்பவனுடைய தம்பி. இவன் சோழர் மரபினன். நல்ல சீலமுள்ளவன். அருளமைந்த நெஞ்சினன். அடுத்தவர் இன்புறவாழ்தலே தான் எடுத்த பிறப்பின் பயனாக இவன் எண்ணி நின்றான். பெரும்பொருள் செலவிட்டுப் புத்தருக்கு ஓர் அழகிய கோயிலமைத்தான். "தொடுகழற்கிள்ளி துணையிளங்கிள்ளி, செம்பொன் மாச்சினைத் திருமணிப்பாசடைப் பைம்பூம் போதிப் பகவற் கியற்றிய சேதியம்" என யாவரும் வியந்து புகழ அது விளங்கிநின்றது. சேதியம் = கோயில். புகழ் புண்ணியங்களைச் செய்து தகவோடு இங்ஙனம் இவன்விள

ங்கிவருங்கால் மழைவளங் குறைந்தது. அதனால் வறுமைமீக்கூர்ந்தது. உயிர்கள் பல மறுகி மாண்டன.

"தேவர் கோமான் காவல் மாநகர்
மண்மிசைக் கிடந்தென வளந்தலை மயங்கிய
பொன்னெயிற் காஞ்சி நாடுகவின் அழிந்து
மன்னுயிர் மடிய மழைவளங் கரத்தலின்
அந்நகர் மாதவர்க்கு ஐயம் இடுவோர்
இன்மையின் இந்நகர் எய்தினர் காணு" (மணிமேகலை.)

என்றபடி இவனதுநாடும் நகரமும்பீடழிந்திருந்தன. அத்தகைய அல்லற்காலத்திலும் தன்பால் வந்தவர்க்கெல்லாம் இன்சொல் இயம்பி இவன் ஈந்துவந்தான். வழங்குதற்குரிய வளங்குன்றியிருந்தும் உளங்குன்றாது ஊக்கிநின்று உவந்துபகரித்து நிலைதிரியாமல் இவன் அமைந்திருந்ததைக் குறித்து மறுபுலத்தவரும் புகழ்ந்து போற்றினர். வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும் பழங்குடியாளர் பண்பு திரியார் என்பதை உலகமகாண இவன் உணர்த்தி நின்றான்.

செய்கை யழிந்து சிதல்மண்டிற் றாயினும்
பெய்யா ஒருசிறை பேரில் உடைத்தாகும்
எவ்வம் உழந்தக் கடைத்தும் குடிப்பிறந்தார்
செய்வர் செயற்பா லவை. (நாலடியார்)

அலமுற் றரும்பொருள்கை யற்றாலும் குன்றார்
குலமக்கள் தங்கள் குணம்.

குலமக்கள் யாண்டும் தம் குணமுடைமை குன்றார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

956. அன்று கவன்றுநின் றும அல்லதொன் றும் செய்திலரேன்
குன்றார் கிழார்முன் குமரேசா—ஒன்றும்
சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார். (சு)

இ—ள்.

குமரேசா! பெருங்குன்றூர் கிழார் மிக வருந்திநின்றும் தகாதன யாதும் செய்யாது ஏன் சால்பமைந்திருந்தார்? எனின், மாசு அற்ற குலம்பற்றி வாழ்தும் என்பார் சலம்பற்றிச் சால்பு இல செய்யார் என்க.

சலம் = வஞ்சம், பொய். பற்றி = பொருந்தி.

சால்பு இல = தகுதியில்லாத செயல்களை. மாசு = குற்றம்.

மேல், நல்கூர்ந்தாலும் குடிப்பிறப்பாளர் தம் நல்லியல்பு குன்றார் என்றார்; இதில், அவர் அல்லலுறினும் பொல்லாதன செய்யார் என்கின்றார்.

குற்றமற்ற தம் குலத்தைப் பின்பற்றி வாழ்வேம் என்பார் வஞ்சத்தைப் பொருந்தி நின்று தகாத காரியங்களைச் செய்யார் என்பதாம்.

வறுமையுற்றிருந்தாலும், அல்லது பிறர் அல்லற்படுத்தினாலும் அவைகாரணமாக நெஞ்சுதிரிந்து வஞ்சமுடையராய் நின்று இழிந்தகாரியங்களை உயர்ந்த குடிப்பிறந்தார் செய்யமாட்டார் என்பார் "சலம்பற்றிச் சால்பில செய்யார்" என்றார். செற்றமும் வறுமையும் சால்பில்லாத செயல்களைச் செய்யத்தூண்டு மாதலால் சலத்தை எடுத்துக்காட்டிக் குலத்தின் தனைமையை இங்ஙனம் விளக்கி யருளினார்.

குலநலமில்லாதவர் பொய்யும் வஞ்சமும் பொருந்தி நின்று இழிந்த செயல்களைத் துணிந்து செய்வராதலால் "குலம்பற்றி வாழ்தும் என்பார் செய்யார்" என்றார்

தனது அருமைத் திருமகன் மணிமேகலையை விரும்பிக் காஞ்சனனால் கொலையுண்டபொழுதும தான் நிலைபிறழாது நின்று,

"சோழிக ஏனாதி தன்முகம் நோக்கி
யான் செயற்பாலது இளங்கோன் தன்னைத்
தான்செய்ததனால் தகவிலன் விஞ்சையன்
மகனை முறைசெய்த மன்னவன் வழி ஓர்
துயர் வினையாளன் தோன்றினன் என்பது
வேந்தர் தம்செவி உறுவதன் முன்னம்
ஈங்கிவன தன்னையும் ஈமத் தேற்றிக்
கணிகை மகளையும் காவல் செய்'' (மணிமேகலை)

என நெடுமுடிக்கிள்ளி நினைந்து செய்தபடி தம் குலம்பற்றி வாழ்வோர் சலம்பற்றித் தாழாது சால்புற நிற்பர் என்க.

தம உள்ளந்தாழ்ந்து புல்லிய செயல்களை நல்ல குடிப்பிறந்தார் யாண்டும செய்யார் என்பது கருத்து. அங்ஙனம் செய்வார் இழிமககளே யாவர் என்பது குறிப்பு.

எவ்வளவு இடரடைந்தாலும் உயர்ந்த குலமக்கள் இழிந்த காரியங்களைச் செய்ய இசையார் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை பெருங்குன்றூர் கிழார்பால் உணரப்படும்.

**கதை.**

பெருங்குன்றூர் கிழார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சேரநாட்டிலே பெருங்குன்றூர் என்னும் ஊரிலிருந்தவர். வேளாண் மரபினர். வழி வழியாகப் புகழடைந்துவந்த உயர்குடியிற் பிறந்தவர். இவர் அருங்கலை விநோதர்; பெருந்தன்மையாளர்; நெறியும நீர்மையும் இறை வழுவாதவர். இவர் சங்கப்புலவருள் ஒருவர். அறிவும் சீலமு முடைய புலவர் பலரும் இவர்பால் மிக நட்புக்கொண்டிருந்தார். அறிவுடை யரனர், இளந்திருமாறனர், மருதனிள நாகனர், சேந்தம்பூதனர், சிறுமேதாவியர், என்னும் பேருமேதாவிகளோடு அளவளாவியிருந்து அருந்தமிழாராய்ந்து இவர் அகமகிழ்ந்து வந்தார். பெரும்புலவராயிருந்தும் இவர் மிகவறுமையடைந்திருந்தாராதலால் குடக்கோச்சேரலிரும்பொறை என்னும் சேரமன்னனிடம் பரிசில் கருதிச் சென்றார். அவன் இவரது அருமையறிந்து உதவி செய்யாமல் அன்பின்றி யிருந்தான் அவனது நிலையினைநோக்கி இவர் நெஞ்சம் இரங்கினர்; உணர்வு வருமாறு தம் உரிமையை புணர்த்தினர் அடியில் வருதல் காண்க.

மன்பதை காக்குநின் புரைமை நோக்காது
அன்புகண் மாறிய அறனில் காட்சியொடு
நும்ம னோருமற் றினைய ராயின்
எம்மனோரிவட் பிறவலர்; மாதோ!
செயிர்தீர் கொள்கை எம்வெங் காதலி
உயிர்சிறி துடைய ளாயின், எம்வயின்
உள்ளாதிருத்தலோ அரிதே! அதனால்
அறனில் கூற்றம திறனின்று துணியப்
பிறனாயினன் கொல் இறீஇயரென் உயிரென
நுவல்வுறு சிறுமையள் பலபுலந்துறையும்
இடுகண் மனையோள் தீரிய இந்நிலை
விடுத்தேன்; வாழியர் குரிசில உதுக்காண்!
அவல நெஞ்சமொடு செல்வல்; நிற்கறுத்தோர்
அருங்கடி முனைஅரண் போலப்
பெருங்கை யற்றஎன் புலம்புமுந் துறுத்தே. (புறம்)

புரைமை = உயர்ச்சி. தீரிய = தீர்க்கும் பொருட்டு.

"கொடியஎமன் என்உயிரைக் கொண்டுபோகாதிருக்கின்றனே என்று மிகப் புலம்பி மனங்கலங்கி வறுமைத்துன்பத்தை நினைந்து என்மனைவி உயிரை வெறுத்து நிற்பள்; அவள் இடுக்கணைத் தீர்க்க வேண்டி யான் இதோ செல்கின்றேன்; நீ சுகமாக இருப்பாயாக; உன்போல்வார் இவ்வாறு வன்கண்ணராயின், என்போல்வார் இவ்வுலகில் பிறவாதிருத்தல் நல்லது;" எனஇவர் உள்ளங்கொதித்து இதில் சொல்லியிருக்கும் அருமையை யூன்றிப்பார்க்க. அறிவுடையாரை ஆதரிக்கவேண்டியது திருவுடையாரது கடமை என்பதை இவர் தெளிவுறுத்தியவுடனே அவன் சிறிது தெளிந்து இவரை ஒருவகையாக உபசரித்திருத்தினன். பல தருவதாக உறுதிகூறிச் சிலநாள் இவரை அங்குத் தங்கச் செய்தான். இவரும் தங்கி இனிய உறுதிகள பல இயப்பிவந்தார். நாள்சில கழிந்தன. பழையபடியே மனநிலைபிறழ்ந்து ஒன்றும உதவாமல் வஞ்சநிலையோடு அவன் ஒன்றியிருந்தான். இவர் கன்றி யெழுந்தார். அவனியல்பினைக் கடிந்து மொழிந்தார்.

அஞ்சுவரு மரபின் வெஞ்சினப் புயலேறு
அணங்குடை அரவின் அருந்தலை துமிய
நின்றுகாண் பன்ன நீள்மலை மிளிரக்
குன்றுதூ வெறியும் அரவம் போல
முரசெழுந் திரங்குந் தானையொடு தலைச்சென்று
அரைசுபடக் கடக்கும் உரைசால் தோன்றல்! நின்
உள்ளிவந்த ஓங்குநிலைப் பரிசிலென்
வள்ளியை ஆதலின் வணங்குவன இவனெனக்
கொள்ளா மாந்தர் கொடுமை கூறநின்
உள்ளியது முடித்தோய் மன்ற முன்னாள்
கையுள்ளது போற் காட்டி வழிநாட்
பொய்யொடு நின்ற புறநிலை வருத்த
நாணு யாயினும் நாணக்கூறி, யென்
நுணங்குசெந்நா வணங்க வேந்திப்
பாடப் பாடப் பாடுபுகழ் கொண்டநின்
ஆடுகொள் வியன்மார்பு தொழுதனென் பழிச்சிச்
செல்வலத்தை யானே வைகலும்
வல்சி இன்மையின் வயின் வயின் மாறி
இல்லெலி மடிந்த தொல்சுவர் வரைப்பின்
பாஅல் இன்மையிற் பல்பாடு சுவைத்து

முலைக்கோள் மறந்த புதல்வனொடு
மனைத்தொலைந் திருந்தஎன் வாணுதற் படர்ந்தே. (புறம்)

"அஞ்சத்தக்க இயல்பினையுடைய வெஞ்சின இடியேறு போல முரசுமுழங்கச் சென்று பகையரசரை வெல்லும் தோன்றலே! உயர்ந்த பரிசிலனாகிய எனக்கு நீ வணங்கிவந்து மகிழ்ந்து நல்குவாய் என்று உன்னை மதித்து வந்தேன்; நீ ஏதோ கொடுப்பதுபோல் காட்டிப்பொய்யனாய்க் கொடாது நின்றாய்; உன்நிலையை நினைந்து நீ நாணவில்லையாயினும் நான் நாணக்கூறிப் போகின்றேன்" என இதில் இவர் உரைத்திருத்தல் காண்க. பால் இல்லாமையால் பலபடி சுவைத்து முலையுண்டலை வெறுத்தபிள்ளையுடனே இல்லின் கண் இருக்கும் என்மனைவியை நினைந்து செல்கின்றேன் என இவர் உருகிமொழிந்துள்ள இதன்கண்ணும் தம் வறுமையைப் புலப்படுத்தியிருக்கும் அருமையைப் பார்க்க இங்ஙனம் கொடுமிடி உற்றிருந்தும் தம் தகுதி குன்ற மிகுதி ஒன்றுஞ் செய்யாமல் விரைந்து போய் அமைந்ததைக் கொண்டு இல்வாழ்க்கையை ஆதரித்து வந்தார். இவர் திரும்பிவந்த பத்தாம்நாளில் அவ் அரசன் செத்தே போனான். அதன்பின் அவனுடைய தம்பியாகிய குடக்கோச்சேரலிளம்பொறை பட்டத்துக்கு வந்தான். இவரது குணநலங்களை உசாவியறிந்தான். இவர் உள்ளங்கன்றிச் சென்றதனாலேயே தன் அண்ணன் அங்ஙனம் துள்ளித்துடித்துக் கொள்ளை போயினான் என அவன் உள்ளங் கொண்டான். உடனே தக்க மதிப்போடு இவரை அழைத்துக்கொண்டுபோய்த் தன் பக்கல்வைத்து ஒக்கலனைவரும் உவந்துபோற்ற மிக்கவும் உபசரித்து வந்தான். இயல்பாகவே அவன் அருளும் ஈகையு முடையவனாதலால் இவர் அன்பு மீக்கூர்ந்து அவனது வள்ளன்மை உள்ளப்பான்மை முதலியவற்றைக் குறித்துப் பத்துப்பாட்டுகள் பாடினார். அதற்காக இவர்க்கு அவன் முப்பத்தீராயிரம் பொன்கொடுத்தான். பின்னரும் "ஊரும் மனையும் வளமிகப்படைத்து, ஏரும் இன்பமும் இயல்வரப் பரப்பி, எண்ணற்கு ஆகா அருங்கல வெறுக்கையொடு பன்னூறாயிரம பாற்பட வகுத்தான்." இவ்வாறு பெருந்திருவடைந்தாலும் அடக்கமும் பணிவும் அமைதியு முடையராய்ப் பகுத்துதவி யாவரும் இன்புற இவர் மேவியிருந்தார். முன்பு இவர் மிக வறுமையுற்றிருந்தும் நச்சிநின்று இச்சகம் பேசாமலும், அம்முன்னவன் சஞ்சலம் விளைத்திருந்தும் அதுபற்றி அவனைத் தகவழியக் கூறும

லும், பிழையொன்றுஞ் செய்யாமலும் மேதகவோடு மேவிச்சென்றதை நினைந்து இவரது பெருந்தன்மையை வியந்து அனைவரும் புகழ்ந்து போற்றினர். "சலம்பற்றிச் சால்பில செய்யார் மாசற்ற குலம்பற்றி வாழ்து மென்பார்" என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

உன்னல் மொழிதல் செயல்மூன்றொத்தொழுக்கம் வாய்மை நாணி லூக்கார், மன்னு மனையிற் பிறந்தார்கள்; மலர்தலீகை யிகழாமை நன்னர் மொழியு மவர்க்கேயாம்; நன்மை பயவா வினைவறுமை யின்னலிடத்தும் புரியார்கள் ஏமகண்டா இனி யறிமோ.
(விநாயகபுராணம்.)

தண்மதிபோல் யாண்டுந் தகநின்று நல்லறமே
பண்ணுவார் மேலோர் பரிந்து.

வறியராயினும குடிப்பிறந்தார் சிறியன செய்யார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

957. பண்டு வளவனயன் பற்றியவோர் குற்றமெஙகும
கொண்டுயர்ந்த தென்னே குமரேசா—கொண்ட
குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து. (எ)

இ—ள்.

**குமரேசா!** சோழன், பிரமன் என்னும் இவர்பால் அன்று தோன்றிய குற்றம் ஏன் யாண்டும் பரந்து விளங்கியது? எனின், குடிப்பிறந்தாரகண் குற்றம, விசுமபின் மதிக்கண் மறுப்போல் உயர்ந்து விளங்கும் என்க.

கண் = இடம். ஏழனுருபு.

விசும்பு = வானம். மதி = சந்திரன். மறு = களங்கம். சந்திரனிடத்திலே தோன்றுகின்ற கருமையை மறு என்பர். "திங்களும் மறுவும் எனச் சேர்ந்தது—நுங்கள் அன்பு" என்றது (சீவகசிந்தாமணி.)

மேல், குடிப்பிறந்தார் எவ்வகையிலும் தகாத செயல்களைச் செய்யலாகாதென்றார்; இதில், அவர் சிறுபிழைசெய்தாலும் உலகமெஙகும் அது பரந்து தோன்றும் என்கின்றார்.

உயர்ந்த குடிப்பிறந்தாரிடத்து உளதாம் குற்றம் வானத்தில் சந்திரனிடத்து மறுப்போல ஓங்கித்தோன்றும் என்பதாம்.

விசும்பு, குடிக்கும்; அதில் விளங்கும் சந்திரன், அக்குடியிற் பிறந்தார்க்கும்; அவன்கண் அமைந்த களங்கம், அவர்பால் நின்ற குற்றத்திற்கும் முறையே இதில் உவமையாக நின்றன.

குடியை விசும்போடு ஒப்பவைத்தது அதன் உயர்ச்சி கருதி. 'வான்தோய் குடிப் பிறந்தார்" என்பதுங் காண்க.

குலமக்களைத் திங்களோடு ஒப்பவைத்தது தண்மை இனிமை ஒண்மை உதவி முதலிய தன்மைகளைநோக்கி. என்னை? "நின், தண் மையும் சாயலும் திங்களுள" (பரிபாடல்) எனறபடி எவர்க்கும் இனியராய் என்றும் அவர் நின்றுவருவர் என்க.

"ஒருபுடை பாம்பு கொளினும் ஒருபுடை
அங்கண்மா ஞாலம் விளக்குறூஉம்—திங்கள்போல்
செல்லாமை செவ்வனேர் நிற்பினும் ஒப்புரவிற்கு
ஒல்கார் குடிப்பிறந் தார்." எனவும்,

"தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறைதீர்க் கிற்பார் விழுமியோர்—திங்கள்
கறையிருளை நீக்கக் கருதா துலகில்
நிறையிருளை நீக்குமேல் நின்று" எனவும்,

"அங்கண் விசும்பின் அகனிலாப் பாரிக்கும்
திங்களும் சான்றோரும் ஒப்பர்மன்—திங்கள்
மறுவாற்றும் சான்றோர் அஃதாற்றார் தெருமந்து
தேய்வர் ஒரு மாசுறின்" எனவும், வருவன காண்க.

மேன்மக்கள் ஒரு சிறுபிழை செய்யினும் உடனே அது உலகெங்கும் பரவி அலரெழுமாதலால் "குடிப்பிறந்தார் குற்றம் விசும்பின் மதிக்கண் மறுப்போல் விளங்கும்" என்றார்.

"அந்தி மாலை நீங்கிய பின்னர்
வந்து தோன்றிய மலர்கதிர் மண்டிலம்
சான்றோர் தங்கண் எய்திய குற்றம்
தோன்றுவழி விளங்குந் தோற்றம் போல
மாசறு விசும்பின் மறுநிறங் கிளர
ஆசற விளங்கிய அந்திந் தண்கதிர்" (மணிமேகலை)

இது, அடிகள் குறித்த கருத்தை அடியொற்றி வந்து உவமையும் பொருளும் உறழ்ந்துகொண்டு விளங்குதல் காண்க.

மன மொழி மெய்கள் இனியரா யமைந்து நல்ல குலமக்கள் மிகத் தூயராயிருப்பாராதலால் அவர் ஒரோவழி நிலைபிறழ்ந்து ஏதேனும் ஒரு சிறுபிழை செய்து விடினும் அது மிகப் பெரிதாய் எங்கும்பரவி எல்லார்க்கும் தோன்றிவிடும் என்க. "தருமன் ஒரு பொய் சொன்னான்; இந்திரன் அகலிகையை இச்சித்து இழிகண்ணுபினன்; சந்திரன் குருவின் மனைவியைத் தழுவி ஏகினன்;" என இம்மேன்மக்கள் பிழை எங்கும் ஓங்கி இன்றும் விளங்குதல் காண்க.

குணநலங்க ளுடையராய்ப் புகழொளிபரப்பி விளங்கிநிற்கும் மேலோர் சிறிது வழுவினும் அது பெரும்பிழையாய்ப் பிறங்கிவிடுமாதலால் யாண்டும் வழுவுறாமல் நெறியோடமைந்து அவர் ஒழுக வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

உயர்ந்த குடிப்பிறந்தார் குற்றம் எங்கும் மிகுந்து தோன்றும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராசராசன் கண்ணும், பிரமணிடமும் உணரப்படும்.

கதை.

இராசராசன் என்பவன் இற்றைக்கு எழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டை ஆண்டிருந்த ஓர் சோழ மன்னன். இவன் உயர்ந்த அரசதிருவினை யடைந்திருந்தும் சிறந்த வினையாண்மைகள் இலனாய்ப் புலனுகர்ச்சியில் மிக இழிந்து நின்றான். இவன் காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த மாறவர்மன் என்னும் பாண்டியமன்னன் இவன்மீது படையெடுத்து வந்தான். பெருமபோர் மூண்டது. அவ் ஆண்டகையோடு சிறுது நேரங்கூட எதிர்நின்று போராற்ற முடியாமல் இவன் புறங்காட்டி ஓடினன். அவன் வெறற்முழக்குடன் இவனரசினைக் கைப்பற்றி அணிநகர் புகுந்து வீரமாட்சிதோன்ற மணிமுடிபுனைந்து சின்னாட் கழிந்தபின் அந்நாட்டினைச் சுற்றிநோக்கிப் பொன்னமராவதி என்னும் நன்னகரின்கண் மன்னிய திறலோடு மகிழ்ந்து வீற்றிருந்தான். அவன் நெறியும் நேர்மையுமுடையவனாதலால் நேரேபோய்ப் பணிந்து கொண்டால் அரசினைத் தந்துவிடுவான் என்று கருதி யாதும் நாணுமல் தன் மனைவி மக்களுடன் அவன் முனம் புகுந்து மனங்குழைந்து வணங்கி நின்றான. அவ்வீரவள்ளல் உடனே உள்

ளம் இரங்கி அரசினை இவன்பால் அருளி அகன்றான். இவன் அடைந்த படியை அடியில் காண்க.

"வாங்குசிறை அன்னம் துயிலொழிய வண்டெழுப்பும்
பூங்கமல வாவிசூழ் பொன்னம ராவதியில்
ஒத்துலகந் தாங்கும் உயர்மேருவைக் கொணர்ந்து
வைத்தனைய சோதி மணிமண்ட பத்திருந்து
சோலை மலிபழனச் சோணாடும், தானிழந்த
மாலை முடியும், தரவருக என்றழைப்ப
மான நிலைகுலைய வாழ்நகரிக் கப்புறத்துப்
போன வளவன் உரிமையொடும் புகுந்து
பெற்ற புதல்வனை நின் பேரென்று முன்காட்டி
வெற்றி அரியணைக்கீழ் வீழ்ந்து தொழுதிரப்ப
தானேடி முன்னிகழ்ந்த தன்மையெலாம் கையகலத்
தானேதகம் பண்ணித் தண்டார் முடியுடனே
பொங்குதிரை ஞாலத்துப் பூபாலர் தோள்விளங்கும்
செங்கயல்கொண் டென்றும் திருமுகமும், பண்டிழந்த
சோழபதி என்னும் நாமமும், தொன்னகரும்
மீள வழங்கி விடைகொடுத்து விட்டருளி" (மெய்க்கீர்த்தி)

என்றபடி அவன் விடுத்தகல இவன் அரசினை மேவியிருந்தான். சிலகாலங் கழிந்தபின் அந் நன்றியையு மறந்து மீண்டும் அவன்பால் இவன் கன்றி நின்றான். அவன் கடுத்துவந்து கனன்று வென்றான். இவன் பழையபடியே ஓடி மறைந்தான். வழி வழியாகச் சிறந்துவந்த வீரக்குடியில் பிறந்திருந்தும் இங்ஙனம் இழிந்து போனானே என்று உறவின ரனைவரும் உளங்கொதித்து வருந்தி நின்றார். அன்றிவன் இழிந்தொழிந்த பழி மதிக்கண் மறுப்போல் உலகமெங்கும் பரந்தெழுந்தது.

## கதை 2.

பிரமதேவர் சிறந்த பதத்தில் திகழ்ந்திருந்தும் பண்டொருகாலத்தில் இந்திரபோகத்தை விழைந்தார். அப்பதவியை அடைதற்குரிய முறையில் தனியமர்ந்து அருந்தவம் புரிந்தார். அப்புரிவினை இந்திரன் அறிந்து தன் குருவினிடம் கூறினான். அவர் நாரதருடன் கலந்து சூழ்ந்து திலோத்தமையை இவர்முன் செல்ல விடுத்தார். அவள் வந்து இனிய கானங்களைப்பாடிக் காமநலங்கள் கனிந்துதோன்ற அழகொழுக நின்றாள். இவர் கண்டு கடுங்காதல் கொண்டார். உடனிருந்த முனிவர் காணுவண்ணம் ஒருமுகத்

தைப் படைத்துக்கொண்டு உளமுருகிப்பார்த்தார். அவள் ஒல்கி ஒசிந்து வலப்புறத்தில் மெல்ல மறைந்தாள்; இவர் மற்றொருமுக த்தை ஆக்கிக்கொண்டு ஆர்வத்தோடு அங்கு நோக்கினர். அவள் பின்புறத்தில் வந்து இன்புற நின்றாள்; இவர் மீண்டும் ஒருமுகத் தைமேவிக்கொண்டு விழைந்து விழித்தார்; அவள் தன்னலங்கனி யப் புன்னகையோடு இடப்புறத்தை இனிதின் அடைந்தாள்; இவர் பின்னும் ஒருமுகத்தைப் பேணிக்கொண்டு பெட்புடன்நோக் கினர். உடனே அவள் மிகுந்து மேலெழுந்து விளங்கி நின் றாள்; இவர் மற்றொருமுகத்தை முற்றச்செய்து உச்சியில் உற் றுப்பார்த்தார்; அவள் மேகத்துள் மின்னலெனவிரைந்து மறை ந்துபோயினள். இவர் மோகத்துள் மூழ்கி முனைந்தெழுந்தார். இவர்நிலையினைநோக்கி அமரரனைவரும் பெருநகைசெய்தார். அத னால் இவர்தலைமையை இழந்து தாழ்ந்து நின்றார். அன்று இவர் பால் மேவிய அப்பழி உலகமெங்கும் அறிய ஓங்கிநின்றது. "குடி ப்பிறந்தார்கண் குற்றம் விசும்பின் மதிக்கண் மறுப்போல் உயர்ந்து விளங்கும்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. (விரிவைத் தருமபரீக்ஷையில் காண்க.)

> பெரும்பெயர்ப் பிரமன்என்னும் பீடுசால் பெரியசீரான்
> அரும்பிய முலையினளைக் கணிமுகம நான்குதோன்ற
> விருமபியாங் கவளைய்தான் விண்ணகமிழந்த தன்றித்
> திருந்தினாற் கின்றுகாறும் சிறுசோல்லாய் நின்றதன்றே.
> (சீவகசிந்தாமணி.)

மேற்குறித்த உண்மையை இதுவும் விளக்கிநிற்றல் காண்க.

யாதொரு வழுவும உறுவண்ணம் தம்மைப் பாதுகாத்துக் கொண்டு உயர்ந்த குடிப்பிறந்தார் ஒழுகவேண்டும்; அங்ஙனம் ஒழு காது சிறிது இழுக்கினும அது பெருபபழியாய் நின்று என்றும் இழிவுறுத்தும் என்பது இதனால் இனிது உணரலாகும்.

> "மண்ணுளார் தம்மைப்போல்வார் மாட்டதே யன்றுவாய்மை
> நண்ணினார் திறத்தும் குற்றம் குற்றமே; நல்லவாகா;
> விண்ணுளார் புகழ்தற்கொத்த விழுமியோன் நெற்றிபோழ்ந்த
> கண்ணுளான் கண்டந்தன் மேற் கறையையார் கறைநன்றென்பார்?"
> (குண்டலகேசி)

எவ்வளவு உயர்ந்தவர்களாயிருந்தாலும் குற்றம் செய்வராயின், உலகம் அதனை மறைத்துநில்லாது; மிகுத்தே சொல்லும் என்ப

ணத உணர்த்தற்கு இதில் இணைத்திருக்கும் பொருளையும் அழகை யும் ஊன்றிப் பார்க்க.

பெருவரை நாட பெரியோர்கட் டீமை
கருநரைமேற் சூடேபோல் தோன்றும்—கருநரையைக்
கொன்றன்ன இன்னா செயினும் சிறியார்மேல்
ஒன்றானுந் தோன்றா கெடும். (நாலடியார்.)

நரை = வெண்மை. ஈண்டு அது வெள்ளை எருதை யுணர்த்தி நின்றது. நல்லோர்பாலுள்ள பிழை வெள்ளை மாட்டின்மேலிட்ட கருப்புப் புள்ளிபோல் விளங்கித் தோன்றுமென இது விளக்கி நிற்றல் காண்க.

கன்றி முதிர்ந்த கழியப்பன் ஞாள்செயினும்
ஒன்றும் சிறியார்கண் என்னானும் தோன்றாவாம்;
ஒன்றாய் விடினும் உயர்ந்தார்ப் படுங்குற்றம்
குன்றின்மேல் இட்ட விளக்கு. (பழமொழி)

தேள்ளு முகத்தில் திகழ்வடுப்போல் மேலோர்பால்
உள்ளபிழை தோன்றும் உயர்ந்து.

குடிப்பிறந்தார் குற்றம்செய்யலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

958. வள்ளன்மை யின்றிநின்ற வச்சிரனை ஏன்குலத்துட்
கொள்ளா திகழ்ந்தார் குமரேசா—உள்ளும்
நலத்தின்கண் நாரின்மை தோன்றின் அவனைக்
குலத்தின்கண் ஐயப் படும். (அ)

இ—ள்.

குமரேசா! உள்ளன்பில்லாத வச்சிரனை ஏன் எல்லாரும் ஐயுற்று இகழ்ந்து பழித்தார்? எனின், நலத்தின்கண் நார் இன்மைதோன்றின் அவனைக் குலத்தின்கண் ஐயப்படும் என்க.

இது, அன்பில்லாதவன் குலமகனுகான் என்கின்றது. நலத்தின்கண் = நல்லகுடிப்பிறப்பின்கண், நார் = அன்பு, இரக்கம்.

தோன்றின் என்றது அங்ஙனம் தோன்றாமை தோன்றுகின்றது.

ஐயப்படும் = சந்தேகமுறும். இதற்கு எழுவாயாக உலகம என்பதை வருவித்துக் கொள்க. படல் என்று பாடங்கொண்டால் படுக என விதியாய் நிற்கும்.

மேல், குடிப்பிறந்தார் குற்றஞ்செய்யலாகாதென்றார்; இதில், அவர் இரக்கமுடையரா யிருத்தல் வேண்டும் என்கின்றார்.

நல்ல குலத்தின்கண் ஈரமில்லாத ஒருவன் தோன்றுவனாயின் அவனை அப்பிறப்பின்கண் உலகம் ஐயப்படும் என்பதாம்.

இன்சொல் ஈகை முதலிய இதநலங்கள் வழி வழியாக வருகின்ற நல்ல குடியில் இடையே இரக்கமற்ற பொல்லாத ஒருவன் தோன்றுவனாயின் அவன் தோற்றம் எல்லார்க்கும் கலக்கத்தை விளைக்கும்; "நூற்றைக் கெடுக்கும் குறுணி என்பதுபோல் இவன் அக்குலத்தைக் கெடுக்கவந்திருக்கிறான்; இந்தப் பயல் யாருக்குப் பிறந்தானோ? எப்படி வந்தானோ?" என இன்னவாறு அவனைக் குறித்து உலகர் பல பன்னிப் பேசுவராதலால் "குலத்தின்கண் ஐயப்படும்" என்றார்.

குணத்தைக்கொண்டு குலத்தைத் தீர்மானிக்கவேண்டும் என இங்ஙனம் கூறியது என்னை? எனின், "குலத்தளவேயாகும்குணம்" (ஔவையார்) என்றபடி குணமுண்மைக்குக் குலமுண்மை இன்றியமையாது வேண்டப்படுமாதலால் என்க.

இனி, நல்லவர்களிடத்தில் நல்லகாரியங்களில் ஒருவனுக்குப் பிரியந் தோன்றவில்லையாயின் அவனைப் புல்லிய குலத்தன் என்று அறியவேண்டும் எனவும் இது பொருள்தோன்றநின்றது. தான் பிறந்தகுடிக்கும் அமைந்த நிலைக்கும் இசைந்தகுணம் ஒருவனிடமில்லையாயின் அவன் நிலையினை எவரும் எண்ணி நோக்குவர்; விசுவாமித்திரர் இரக்கமின்றி அரிச்சந்திரனை வருத்திநின்றதைக் கண்டு காசி மன்னன் வருந்தி "அருந்தவர்தம்பால் ஐய! அறமலால் மறமு முண்டோ? வருந்திட இவர் பால் இந்த வன்கண்மை செய்ய வுள்ளம் பொருந்தியவாறேது?" என்று ஐயப்பட்டு வசிட்டரை நோக்கி வினவினான்; அதற்கு அவர் குடிப்பிறப்பையே எடுத்துக்கூறினார். அடியில் வருதல்காண்க.

"நிலத்தியல்பற்றே கொண்டநீரியல்பு; அதனால் தங்கள்
குலத்தியல்பு எவர்க்குமன்றோ! வாழினும் கெடினும் குன்றா;
தலத்தரசகன்று நீங்கித் தவத்தனானாலும் தொல்லை
நலத்ததுபோமோ? என்று நரபதிக்கினி துரைத்தான்"
(அரிச்சந்திரபுராணம்)

அரசகுலத்தனாதலால் துறவடைந்திருந்தாலும அந்தணத்

தன்மை யாகிய செந்தண்மையைக் கோசிகன் அடையாமல் வன் கண்மையோடே அமைந்திருந்தான் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

இரக்கம் இன்சொல் ஈகைமுதலிய நலங்களை ஒருவன் இழந்தானாயின் அவன் குலங்கெட்டவனாவான் என்பது குறிப்பு.

நல்லகுடியில் ஒருவன் பிறந்திருந்தாலும் அதற்கேற்ற குணம் இல்லையாயின் எல்லாரானும் அவன் இகழப்படுவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வச்சிரன் பால் உணரப்படும்.

## கதை.

வச்சிரன் என்பவன் நன்னன் மரபைச் சார்ந்த ஒரு குறுநில மன்னன். விச்சி மலைக்குத் தலைவனாகிய விச்சிக்கோ என்பவனுக்குத் தம்பியாதலால் இளவிச்சிக்கோ என எல்லாரும் இவனை அழைத்துவந்தார். இவன் திருவிலுயர்ந்தவனாயினும் அறிவிலிழிந்தவன். ஆசையும் வஞ்சமும் அமைந்தநெஞ்சினன். பொறியின்பங்களை நெறிகடந்து நுகர்ந்து அறிவும் அன்புமின்றி இவன் பெருகி நின்றான். தன்னையாவரும் வணங்கிப்போற்ற வேண்டும் என்னும் அகந்தைமேற்கொண்டு துடுக்கும் பிலுக்கு முடையனாய் இவன் மிடுக்குற்றிருந்தான். மிக உபகரிப்பவன்போல் வாய்குளிரப்பேசினனே யன்றி யார்க்கும் யாதும் உதவிசெய்திலன். மாமூலர் என்னும் புலவர் ஒருவர் பரிசில் கருதி ஒருநாள் இவன்பால் வந்தார். அவர்வரவினை யறிந்து விரைவில்போய்க் கதவினை யடைத்துவிட்டு இவன் வீட்டுக்குள் புகுந்துகொண்டான். இவனது போக்கினை யறிந்து அவர் பொங்கி நின்று புல்லன் என இகழ்ந்து போனார். அதன்பின் புலவரனைவரும் இவனைப்பழித்து நின்றார். "புல்லுக்கட்டும் விறகும் சுமந்தபேர் பூர்வகாலத்துப் புண்ணியப் பேற்றினால்—நெல்லுக்கட்டும் பணக்கட்டுங் கண்டபின் நீலக்கல்லுக் கடுக்கனும் போடுவார்—சொல்லுக்கட்டும் புலவரைக் கண்டக்கால் துழிப்பாய்ந்து கதவை அடைத்தெதிர்—மல்லுக் கட்டும் மடையரைப் பாடவோ? மலையச்சாரலில் வாழ்பெரி யம்மையே" என்று பின்பு வந்த புலவரும் முன்பு நின்ற இவன் போல்வாரை நேர்ந்துகண்டபோது நினைந்துபாடத் தேர்ந்தனர். புன்பழி வளர்த்து வன்கண்மையோடிருந்த இவன் ஒருமுறை கள்ளரிபின் தம்பி

யாகிய இளங்கண்டீரக்கோ வோடு அவனரண்மனையில் ஒருங்க மர்ந்திருந்தான். அவ்வமயம் அங்குப் பெருந்தலைச்சாத்தனார் சென்றார்; மகிழ்ந்து நெருங்கி அவ்வள்ளியோனை மார்பு றுகப் புல்லிப் புகழ்ந்தார்; இவனைத் தழுவாது எள்ளியிருந்தார். தன்னை உவந்து புல்லாமல் இகழ்ந்துள்ளதை நினைந்து அவரை இவன் சினந்து நோக்கினான். "என்னை ஏன் புல்லாதொழிந்தீர்" என்று பொங்கி வினவினான். "எம்மனோரைக் கண்டு கதவடைப்பாரை யாம் எப்படிக் கருதி அடுப்பேம்" என்று அவர் இவனை எதிர்ந்துரைத்து அவன் பெருமையை வியந்துணர்த்தினார். அடியில்வருதல் காண்க.

"பண்டும் பண்டும் பாடுநர் உவப்ப
விண்டோய் சிமைய விறல்வரைக் கவாஅன்
கிழவன் சேட்புலம் படரின், இழையணிந்து
புன்தலை மடப்பிடி பரிசி லாகப்
பெண்டிரும் தம்பதம் கொடுக்கும் வண்புகழ்க்
கண்டீரக்கோ னாகலின் நன்று
முயங்கலான் றிசின் யானே; பொலந்தேர்
நன்னன் மருகன் அன்றியு நீயும்
முயங்கற் கொத்தனை மன்னே; வயங்குமொழிப்
பாடுநர்க்கு அடைத்த கதவி னாடுமழை
அணங்குசா லடுக்கம் பொழியு நும்
மணங்கமழ் மால்வரை வரைந்தனர் எமரே." (புறம்)

கவான் = பக்கம். பிடி = பெண்யானை. அவனை மதித்துத் தழுவியதற்கும், இவனை மதியா தொழித்ததற்கும் காரணங் கூறிப் புலவர் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றிப்பார்க்க. நல்லகுலத்தில் பிறந்தும் இரக்கமும் ஈகையும் இல்லாததனால் இங்ஙனம் எள்ளப்பட்டு இவன் இழிந்து நின்றான். இன்சொல் அன்பு முதலிய குண நலங்களமைந்து சிறந்த கொடையாளியாய் விளங்கியிருந்த நன்னன்வழியில் ஈரமற்ற இவன் எப்படித்தோன்றினான் என எல்லாரும் ஐயுற்று இவனை இகழ்ந்து பழித்தார். "நலத்தின்கண் நார் இன்மை தோன்றின் அவனைக் குலத்தின்கண் ஐயப்படும்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

விரும்புங் குடியின்கண் வெவ்வினையோன் தோன்றல்
கரும்பின்கண் வேம்புறலே காண்.

இரக்க முடையவரே குடிப்பிறப் பாளர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

959. ஊறுபல நேர்ந்தும் உரோகிதன்முன் இன்சொல்லே
கூறிநின்றான் என்னே குமரேசா—நாறும்
நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டும்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல். (௯)

இ—ள்.

குமரேசா! அல்லல் பல நேர்ந்தும் இளமையிலேயே உரோகிதன் ஏன் இன்சொல்லோடு அமைந்திருந்தான்? எனின், நிலத்தில் கிடந்தமை கால்காட்டும்; குலத்தில் பிறந்தார் வாய்ச் சொல் காட்டும் என்க.

இது, குலநலமுடையாரை அறிதற்கோர் கருவி கூறுகின்றது. கிடந்தமை = உண்மையாக அமைந்துள்ள தன்மை. கால் = முளை.

இயற்கையாகச் சத்தமைந்ததாய்த் தொடர்ந்து உரமேறி வந்துள்ள நிலத்தில் வித்திட்டால் முளைத்தெழுந்தபோதே செழித்துவிளங்கு மாதலால் அம்முளையால் அந்நிலத்தின் நலத்தைக் கண்டு கொள்ளலாம்என்பார் "கால் காட்டும்" என்றார். பரம்பரையாகக் குணநலங்க ளமைந்துள்ள குடியில்பிறந்தவர் பிள்ளைப்பருவத்தராயிருக்கும் பொழுதே வாய்மை காத்து இன்சொல் இசைத்து இனிது தோன்றுவர்; அவர் சொல்லால் அக்குலத்தை யறிந்துகொள்ளலாம் என்பார் "சொல் காட்டும்" என்றார்.

மேல், ஒருவன் நல்ல குலமகனானால் அவன் நெஞ்சில் இரக்க முள்ளவனா யிருப்பன் என்றார்; இதில், அவன் வாயில் இன்சொல்லுடையனா யிருப்பன் என்கின்றார்.

நிலத்தின் தன்மையை அதில் தோன்றிய முளை காட்டும்; அதுபோல் குலத்தின் நன்மையை அதில் பிறந்தார் வாய்ச் சொல் காட்டும் என்பதாம்.

பயிர், செடி, இலை, காய், கனி முதலியவற்றுள் ஒன்றையுங் கூறாமல் கால் காட்டும் என்றது "விளையும் பயிர் முளையிலே தெரியும்" என்ற பழமொழிப்படி முளை கிளைத்தெழுந்தபொழுதே அந்நிலத்தின் இயல்பினை அஃது உணர்த்திவிடு மாகலான் என்க.

ஒருவனை நல்ல குலத்தில் பிறந்தவன் என்று அறிதற்கு அவன் செயல் முதலியன காண வேண்டா; அவன் வாய்ச் சொல்லேபோதும் என்பது இவ் வுவமக் குறிப்பால் உணரலாகும்.

உயர்ந்த குடிப்பிறந்தவர் குழந்தைப்பருவத்தரா யிருப்பினும் வன்சொல் வழங்கார்; யாவரிடமும் அன்புதோன்ற இன்சொல் லாடுவர் என்பது முன்னை என்றதனால் தெளிய நின்றது.

சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமன் மிக இளைஞனா யிருக்கும் பொழுது இராசவீதியில் எதிர்ப்பட்ட மாந்தரை அருள் ததும்ப நோக்கி என்ன! சுகமா? மனைவி மக்கள் அனைவரும் நலமா? என இனிது வினவினர். அவர் வினவியபடியைக் கம்பர் வியந்து கூறியுள்ளார். அடியில் வருதல் காண்க.

"எதிர்வரு மவர்களை எமையுடை இறைவன்
முதிர்தரு கருணையின் முகமல ரொளிரா
எதுவினை? இடரிலை? இனிதின்நும் மனையும்?
மதிதரு குமரரும் வலியர்கொல்? எனவே." (இராமாயணம்)

இராமனது பெருந்தன்மையும், இன்சொல் இரக்க முதலிய உயர் நலங்களெல்லாம் இளமையிலேயே அவன்பால் இயற்கையி லமைந்திருந்தன என்பதும் இதனால் இனிதுணரலாம்.

குலத்தை யறிதற்கு நிலத்தை எடுத்துக்காட்டி அடிகள் இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றிப் பார்க்க.

நிலநலத்தால் நந்திய நெல்லேபோல் தத்தம்
குலநலத்தா லாகுவர் சான்றோர்—கலநலத்தைத்
தீவளி சென்று சிதைத்தாங்கு சான்றாண்மை
தீயினம் சேரக் கெடும். (நாலடியார்)

அடிகள் சுட்டியபடியை அடியொற்றி இது வந்துள்ளமை காண்க.

நல்ல குலமக்கள் என்றும் நிலைதிரியாது இன்சொல்லுடையராய்இசைக்கிருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை உரோகிதன்பால் உணரப்படும்.

## கதை.

உரோகிதன் என்பவன் சத்திய சீலனாகிய அரிச்சந்திரனுடைய அருமைத்திருமகன். எழிலமைந்த உருவும் தெளிவமைந்த அறிவும் அசையாத ஆண்மையும் இசையப் பெற்றவன். என்றும் பிறர்க்கு இதஞ்செய்யும் இயல்பினன். பெருந் திருவுடையனா யிருந்தும் பெருமிதம் யாதுமின்றி யாண்டும் பணிவும் இன்சொல்லுமுடையனாய் இவன் இனிதமைந்திருந்தான். விசுவாமித்திர

ரது வஞ்சனையால் அரசுமுழுவதையும் இழந்து தன் தந்தை காசிக்குச் செல்லுங்கால் தாயோடு இவனும் உடன் சென்றான். உண்மையைக் கடைப்பிடித்து நிற்கும் அப்புண்ணிய வீரனுக்கு அம முனிவன் பண்ணிய துன்பங்கள் அளவிடலரியன. அவற்றையெல்லாம் உடனிருந்து பொறுத்துப் பெற்றோ ரிருவருக்கும் உற்ற துணையாய் இவன் உறுதிசூழ்ந்து நின்றான். அம் மாதவன் ஏவலால் இடையே காட்டுவழியில் ஒரு பெருநெருப்புத் தோன்றி இவர்க்குக் கொடுந்துயர் விளைத்தது. அதில் விழுந்து இறந்துவிடத்துணிந்த அரிச்சந்திரன் விரைந்தான். அவனது நிலையினை நோக்கி ஐயகோ! என்று அலறித் துடித்து அதில் முந்தி வீழச் சந்திரமதி ஓடினாள். அம்மா! நில் என்று அவளைத் தடுத்துவிட்டு இவன் முந்துறப் பாய்ந்தான். இப்பிள்ளையின் உள்ளப் பான்மையைநோக்கி அக் கொடிய முனிவனும் உள்ளமுருகினான். உற்ற தீயை ஒழிய எண்ணினான். மிக இளைஞனுயிருந்தும் அன்றிவன் உரைத்த மொழியினைக்கேட்டுப் பெற்றோர் அணைத்தெடுத்து உச்சி மோந்து அழுது தேமபினர். அடியில் வருதல் காண்க.

"அன்னைதான் ஏக; மைந்தன் அலறிச்சென் றடிவீழ்ந்தன்னாய்!
எனனைநீ பயந்தீர உங்கள் இடுக்கணுக்கு உதவஅன்றோ?
முன்னையூழ் விதியினாலே முந்தயான் தழலில்வீழ்வேன்
பின்னைநீ பிழைமின்என்றான் பெருகுநீர் அருவிக்கண்ணான். (1)

தையலாள் அச்சொற்கேட்டுத் தனையனைத் தழுவிமோந்து
செய்யவாய்ப் பல்வீழ்ந்தில்லாய்! செழுமுலை மறந்தாயல்லை!
ஐய! இத்துணிவும், இந்த அறிவுமெங் கடுத்ததென்னக்
கையினால் முகத்தில்மோதிக் கண்ணினீ ரருவி சோர்ந்தாள்." (2)

(அரிச்சந்திரபுராணம்.)

இன்னவாறு சின்ன வயதிலேயே நன்னயம் புரிந்து நின்ற இவன் அவ் அன்னை தந்தையருடன் சென்று நீதியின் பொருட்டு அருந்துய ருழந்தான். மிக முயன்றுபார்த்தும் அம்மன்னனைப் பொய்யனாக்க முடியாமையால் முனிவர் வெய்துயிர்த்து நின்றார்; முடிவில் இப்பையனையாவது பேதித்து விட்டால் போதும் என்று இவன் பக்கல் வந்தார். ஒருபொய் சொல்லும்படி தம்மாலான வரையும் அசைத்துப்பார்த்தார்; இவன் யாதும் அசையவில்லை. உன் தந்தை தந்த நாட்டைத் தரவில்லை என்று அந்த ஒரு சொல்லைமட்டும் சொல்லிவிடு; பின்பு நீங்களெல்லாரும் போய் அரசுபுரி

ந்து சுகமாக வாழலாம் என முனிவர் மிக நயமாகக் கூறினர். அவ்வமயம் அவரது முகமண்டலத்தை எதிர்ந்து நோக்கித் தன் உள்ளக்கிடக்கையை அவருளங்கொளச் சொன்னன். அதனை இதனடியில் காண்க.

"என்னை யீன்றருள் தந்தையுந்தாயு நிற்கஞ்சிச்
சொன்ன வாய்மையிற் றுளங்கினும், சுடர்மதிஇரவி
பின்னமாகி, இப்பாரெலாம் பேரினும், பெரியோய்!
அன்னவெஞ்சொலை மறந்தும்நான் அறைந்திடேன்என்ருன்."

இவனது அசைவின்மையைக் கண்டு "விதையொன்றுபோட்டால் செடியொன்று முளைக்குமா?" என்று தலையை அசைத்துக் கொண்டு அவர் அகன்று போனர். யாண்டும் இன்சொல்லுடையனாய்த் தன்வாய்மையை என்றும் நிலைநிறுத்தி இளமையிலேயே இவன் நின்றிருந்த தன்மையை வியந்து இவனது குடிப்பிறப்பையும் குணத்தையும் புகழ்ந்து அனைவரும் கொண்டாடி நின்றார். நிலத்தில் கிடந்தமையைக் கால்காட்டுதல் போல் நல்ல குலத்தின் இயல்பை அதில் பிறந்தாரது சொல் காட்டும் என்பதை உலகம் இவன்பாலுணர்ந்து நின்றது.

கலம் சுரக்கும் நிதியம்; கணக்கிலா
நிலம் சுரக்கும் நிறைவளம்; நன்மணி
பிலம் சுரக்கும்; பெறுதற் கரியதம்
குலம் சுரக்கும் ஒழுக்கங் குடிக்கெலாம். (இராமாயணம்)

செல்லா விடத்துங் குடிப்பிறந்தார் செய்வன
செல்லிடத்துஞ் செய்யார் சிறியவர்—புல்வாய்
பருமம் பொறுப்பினும் பாய்பரி மாபோல்
பொருமுரண் ணாற்றுதல் இன்று. (நாலடியார்)

தத்த நிலைக்குங் குடிமைக்குந் தப்பாமே
ஒத்த கடப்பாட்டிற் றூளுன்றி—எய்த்து
மறங்கடையிற் செல்லார் பிறன்பொருளும் வெஃகார்
புறங்கடைய தாகும் பொருள். (நீதிநெறிவிளக்கம்)

காக்கைகுயில் வாயினல் காணலாம் நற்குலத்தை
வாக்கா லறியலாம் வந்து.

உண்மையும் இன்சொல்லு முடையவரே குலமக்க ளாவர் என்பது இதனல் கூறப்பட்டது.

---

960. பண்டு கறுப்பன் பணிவால் உயர்நலமீக்
கொண்டுநின்றான் என்னே குமரேசா—தண்டா
நலம்வேண்டி னாணுடைமை வேண்டும் குலம்வேண்டின்
வேண்டுக யார்க்கும் பணிவு (ய)

இ—ள்,

குமரேசா! திருமிக்கிருந்தும் கறுப்பன் ஏன் பணிவுற்றிருந்தான்? எனின், நலம் வேண்டின் நாணுடைமை வேண்டும்; குலம் வேண்டின் யார்க்கும பணிவு வேண்டுக என்க.

இது, குடிப்பிறப்பிற்கு வேண்டியதோர் குணச்சிறப்புக்கூறுகின்றது.

நலம் என்றது புகழ் புண்ணியங்களை. இம்மை மறுமை என்னும் இருமையிலும் ஒருவன் அடையவேண்டிய நலங்களெல்லாம் இவ் இரண்டனுள் அடங்குமாதலால் இவை நலம் என நின்றன.

வேண்டும் என்றது விதிப்பொருட்டாய்த் துணிவு தோன்ற நின்றது.

வேண்டுக என்றது குறிக்கோளோடு உறுதியாகக் கைக்கொண்டு ஒழுகுக என்றவாறு.

மேல், உயர்ந்த குடிப்பிறந்தார் வாயில் இனியசொல் அமைந்திருக்கு மென்றார்; இதில், அவர் மெய்யில் பணிவுடைமை பதிந்திருக்கு மென்கின்றார்.

ஒருவன் நலமடைய விரும்பின் அவன் நாணுடையனா யிருத்தல் வேண்டும; குலமுடையனாக வேண்டின் யாவர்க்கும்பணிவுடையனாய் ஒழுகவேண்டும் என்பதாம்.

பணிதல் என்பது யாரைக்கண்டாலும் கூழைக்கும்பிடு போட்டு வஞ்சமாக நாளைக்கழிப்பதன்று; தம்மினும் பெரியாரைக் கண்டவிடத்து அவர்பால் அன்பும் வணக்கமுமுடையராய் அடங்கிநடத்தலும், மெலியாரைக் கண்டவிடத்து இன்சொல்லும் இரக்கமுமுடையரா யிசைந்திருத்தலுமாம் என்க. 'அற்றாயின் யார்க்கும்' என்றது என்னை? எனின், பணியத்தக்கவரெவர்க்கும் என்றபடி. அவராவார் அறவோர் துறவோர் முதலிய பெரியோர்கள் என்க.

“அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர்
தந்தைதாய் என்றிவர்க்குத் தார்வேந்தே—முந்தை

வழிநின்று பின்னை வயங்குநீர் வேலி
மொழிநின்று கேட்டல் முறை." (புறப்பொருள்)

என்பது ஈண்டெண்ணத்தக்கது.

ஒருவன் குலமகனாகவேண்டின் அவன் பணிவுடையனாய் இருத்தல் வேண்டும் என்பது என்னை? குலத்திற்கும் பணிவிற்கும் என்ன சம்பந்தம்? இதனால் அது எப்படி எய்தும்? எனின், பணிவென்பது பெருந்தன்மையான ஓர் உயர்ந்த குணமாதலால் அதனை யுடையவர் உயர்ந்தகுலத்தவராய்ச் சிறந்து எல்லாராலும் மதிக்கப்படுவர் என்க.

நேர்மை, நாணம், ஒழுக்கம், வாய்மை, ஈகை, நகை, இன்சொல் முதலிய குணநலங்களை யுடையார்; பழிவினைகளை நினையார்; யாண்டும் பண்பு குன்றார்; பாடறிந் தொழுகுவார்; குற்றங் கொள்ளார்; பணிவமைந்து எவர்க்கும் இதம்புரிந்து நிற்பார் எனக் குலமக்கள் நிலைகளை விளக்கிக் குடிமையை இங்ஙனம் உணர்த்தியருளினர்.

நடுவு நிலைமை முதலிய புனித நீர்மைகளமைந்து உலகிற்கு இனிமையுற நிற்போரே உயர்குடிப்பிறப்பாளர் என்பது கருத்து.

பணிந்து ஒழுகுபவர் உயர்ந்த குலத்தராவரென்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை கறுப்பமுதலியார் பால் உணரப்படும்.

## கதை.

கறுப்பமுதலியார் என்பவர் தொண்டைநாட்டிலே மாவை என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பிறந்தவர். இவருடைய தந்தையார் பெயர் கஸ்தூரிமுதலியார். சங்கரன், சோமநாதன் என்னும் தம்பியர் இருவர் இவர்பால் மிக்க அன்புடையராய் உடனமர்ந் திருந்தனர். இவர் ஏர்பலவைத்துச் சீருடன் வாழ்ந்து யாரையும் போற்றி ஆதரித்து வந்தார். நிலவளங்களோடு பலவளங்களுமுடையராய் இவர் நிலவிநின்றார். இன்சொல்லும் பணிவும் இரக்கமு முடையவர். சடையப்பபிள்ளையின் குணநலங்களையும், இராமாயணம் என்னும் காவிய அமுதத்தை உலகுண்ணும்படி கம்பர் மூலமாக அவர் உபகரித்து நின்றதையும், அவரது வள்ளற் குணத்தையும் இவர் நினைந்து நினைந்து புகழ்ந்து வந்தார். உள்ள

முருகி எவர்க்கும் உதவிசெய்துவந்த இவரது வள்ளன்மையை வியந்து புலவர் பலரும் இவரைப் போற்றி நின்றார். தாம பிறந்த நாட்டின் பெருமைகளை விளக்கி ஓர் நூல் இயற்றித்தரும்படி படிக்காசுப் புலவரை அடிக்கடி இவர் விரும்பி வேண்டினர். அவர் அவ்வாறே ஆக்கித்தந்தார். அது தொண்டைமண்டல சதகம் என இதுபொழுது வழங்கப்படுகின்றது. இந்நூலை முடித்து அரங்கேற்றியபொழுது பல்லாயிரம் பேருக்கு விருந்து செய்து அப்புலவருக்குப் பெரும்பொருள் கொடுத்து அதனோடு அவரைப் பல்லக்கில் வைத்து ஊர்வலம் செய்வித்தார். இடையில் வரும்போது அன்பு மீதூர்ந்து சிறிதுதூரம் இவரும் அப் பல்லக்கைத் தாங்கிவந்தார். இவரது பண்பையும் பணிவையும் நோக்கி அனைவரும் வியந்தார். புலவர் உள்ளங்கனிந்து புகழ்ந்து இவரை உவந்துபாடினர்.

"காவைவென் றிடுகத்தூரி கண்மணி கறுப்பன் என்னும்
மாவையம் பதியான் தொண்டை மண்டலசதகம் கேட்டு
நாவலர் புகழ்ந்துமெச்ச நவநிதி பொழிந்து நன்றாய்ப்
பூவுலகெங்கும போற்றப் புகழ்நிலை நிறுத்தினனே." (1)

எல்லப்ப னம்மையப்பன் தருதிருவேங்கடநாதன் எழிற்சீராமன்
வல்லக்கொண்டையனமாதைவேங்கடேசுரன்போலவரிசைசெய்தே
செல்வத்தமபியருடனே கத்தூரிமகன் கறுப்பன் தெருவீதிக்கே
பல்லக்குந் தான்சுமந்தான் அதுநமக்கோராயிரம்பொன் பரிசுதானே.
(படிக்காசுப்புலவர்.)

இங்ஙனம் பணிவுடையராய்ப் புகழொளிபரப்பி இவர் நிலவி நின்று புலவர் பலரையும் வரும்படி செய்து பரிசில் பல தந்து போற்றி வந்தார். வருங்கால் சொக்கநாதப் புலவர் ஒருநாள் இவர் பால் வந்தார். அவரை அகமகிழ்ந்து தழுவி மிக உபசரித்து வேண்டிய யாவும் விழைந்து கொடுத்தார். இவருடன் பலநாளிருந்து பழகிப்பார்த்தும் ஒரு குறைவுமின்றிக் குணநிறைந்திருத்தலைக்கண்டு அவர் மனமுருகித் துதித்தார்.

"சீர்கறுத்த முகிற்கரத்தான் கஸ்தூரிபூபனருள் சேயா! என்றும்
ஓர்கறுப்பு மில்லாத தொண்டைவள நாட்டிருக்கு முசிதவேளே!
யார்கறுப்பன் என்றுசெல்லி அழைத்தாலும் நாமுன்னையன்பினாலே
பேர்கறுப்பன், நிறம்சிவப்பன், கீர்த்தியினால் வெளுப்பனெனப
பேசுவோமே."

"பிள்ளைவய தினிற்கல்வி கற்றோம்; பின்பு
பெரியகா வாகனமும் பெற்றோம்; பூமி
உள்ளளவும் கீர்த்திநிலை நிறுத்திக் கொண்டோம்;
ஒருகுறையு மில்லையினி யுரைப்பக் கேண்மோ!
தெள்ளிலகு சிதம்பரத்தைத் தெரிசித்தோம்; பின்
சேற்கருங்கட் டளவநகைத் தெய்வயானை
வள்ளிபுணர் சிவப்பனையும் துதித்தோம்; எங்கள்
மாவை வளர் கறுப்ப னுன்னை வாழ்த்தினோமே"
(சொக்கநாதப்புலவர்.)

இன்னவாறு பலரும் போற்ற இவர் உயர் நலமுடையராய் நிலவி நின்றார். தலைமக்களெல்லாரும் இவரைக் குலமகன் என்று துதித்தற்குரிய இவ்வுயர்நிலைக்கு இவரது பணிவுடைமையே காரணமாய்நின்றது. நாணமும் பணிவுமுடையராயிருந்தமையால் நலமும் குலமும் இவர் அடைந்து விளங்கினர். நலம்வேண்டின் நாணுடைமை வேண்டும்; குலம்வேண்டின் யார்க்கும் பணிவுவேண்டுக என்பதை உலகம் காண இவர் உணர்த்திநின்றார்.

இருக்கை யெழலும் எதிர்செலவும் ஏனை
விடுப்ப ஒழிதலோ டின்ன—குடிப்பிறந்தார்
குன்றா ஒழுக்கமாக் கொண்டார் கயவரோ
டொன்றா வுணரற்பாற் றன்று. (நாலடியார்)

இன்சொல் பணிவீகை யில்லான் குலநலனை
என்சொலினும் எண்ணல் இறை.

பணிவுடைமையே குலமுடைமையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

உயர்ந்த குடிப்பிறந்தார் செம்மையும் நாணமு முடையராய்ச்சிறந்திருப்பர். ஒழுக்கத்திலும் உண்மையிலும் அவர்என்றும் வழுவார். இன்சொல்லுடையராய் ஈந்தருள் புரிவார். கோடிவரினும் குன்றுவனசெய்யார். செல்வம்குறைநினும் தம் உள்ளங் குன்றார். வஞ்சம்பொருந்திப் புன்செயல் செய்யார். அவர் குற்றம் மதிக்கண் மறுப்போல் வெளிப்படத் தோன்றும். உள்ளத்தில் இரக்கமில்லாதவர் நல்ல குலமக்களாகார். குடிநலமுடையார் கொடுமொழி கூறார். அவர் பணிவுடையராய்ப் பண்பமைந் திருப்பர்.

௯௬-வது குடிமை முற்றிற்று.

---

# 97-ம் அதிகாரம் மானம்.

அஃதாவது தமது நிலைமை குன்றாமல் எஞ்ஞான்றும் நெறியோடமைந்து நிற்குமேன்மை. மக்களை மிக உயர்ந்த நிலையிலுயர்த்த வல்ல இவ் வுயர்குணம் குடிப்பிறப்பாளருக்கு அடிப்படையாக அமைந்திருக்க வேண்டுமென்று உணர்த்துகின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

961. மண்டுமிடி யுற்றிருக்குமம மாசென்று சாத்தர்தாம்
கொண்டிலரேன் விட்டார் குமரேசா—கண்டென்றும்
இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல். (க)

இ—ள்.

குமரேசா! பெற்றாலொழிய உயிர்வாழ முடியாதென்னும்படி மிடியுற்றிருக்கும அவமதிப்போடு தந்ததென்று கருதி வந்ததை ஏன் சாத்தர் விலக்கிவிட்டார்? எனின், இன்றி அமையாச் சிறப்பின வாயினும் குன்ற வருப விடல் என்க.

இது, இழிவுறு செயலை மானிகள் எண்ணலாகாதென்கின்றது.

சாத்தர் என்றது பெருந்தலைச் சாத்தனாரையும், பேரிசாத்தரையும். மாச என்று விட்டார் என்றது தந்த பொருள் அவமதிப்போடு வந்ததென்று கொள்ளாதொழித்தமை கருதி.

இன்றி அமையாச்சிறப்பின = இல்லாமல் முடியாது என்னும்படியான உயர்வினையுடையன. அமைதல் = அடங்கல், பொருந்தல் முடிதல். சிறப்பின என எடுத்துக்காட்டியது குன்றி நின்று எவரும தம்மைக் கொள்ளுமபடி கூட்டவல்ல அவற்றின் நாட்டங் கருதி என்க.

குன்ற வருப = தாழ்வுறும்படி வருவன. என்றது பழியமைந்துவரும் இழிசெயல்களை. விடல் = விடுக. உடன்பாட்டுவியங்கோள்.

என்றும் தம் நிலைமை குன்றாமல் மேலோர் நின்று திகழ்தற்குரியராதலால் அவர் குன்றவருபவிடல் என்றார்.

இன்றியமையாத சிறப்பினை யுடையனவே யெனினும் தம் பெருமை குன்றவருவனவாயின் அவற்றைக் கொள்ளாது விடுகஎன்பதாம.

அதனைச் செய்தாலொழியத் தாம் உயிர்வாழமுடியாதென்னும் படியான அவ்வளவு முடிவானகாரியமே யாயினும அது தமக்கு இகழ்ச்சியைத் தருவதாயின் நல்ல குலமக்கள் அதனை யாதும் நீண்டாது ஒழித்துவிடவேண்டும் என்பார் "இன்றியமையாச் சிறப்பினவாயினும் குன்றவருப விடல்" என்றார்.

பல்லைக்கடித்துக்கொண்டு பட்டினி கிடந்தாலும் தம்மால்இயன்றவரையும் நல்லவழியில் முயன்று வாழவேண்டுமே யன்றி இழிவான புல்லிய செயல்களை யாண்டும் பொருந்தலாகா தென்றவாறு.

பொய்க்கரி புகன்றும், இச்சகம் பேசியும், வேறு பல இழிவுகளை இழைத்தும் வயிறுவளர்ப்போர் ஈனமககளே யாவராதலால் மானமக்கள் அங்ஙனம் செய்யார் என்க.

> தனக்குத் தகவல்ல செய்தாங்கோ ராற்றல்
> உணற்கு விரும்பும் குடரை—வனப்புற
> ஆமபறருள் வாடலே போல அகத்தடக்கித்
> தேம்பத்தாங் கொள்வ தறிவு. (முனைப்பாடியார்)

> பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை பேசுங்கால்
> இச்சைபல சொல்லி இடித்துண்கை—சிச்சீ
> வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது
> உயிர்விடுகை சால வுறும். (ஔவையார்)

இழிவுற நின்று உயிர்வாழ்தலை ஒழிய விடுக என்னும் அடிகள் கருத்தை இவை அடியொற்றி நிற்றல் காண்க. இச்சகவாழ்க்கைக்குக் கிழவியார் இதில் இட்டிருக்கும் பெயரழகைப் பார்க்க.

உயிராதாரமாயுள்ள பெரும்பொருளே யாயினும மானங்கெட வருவதாயின் அதனைச் சிறிதும் மருவலாகா தென்பது கருத்து.

எவ்வளவு வறுமையுற்றிருந்தாலும் அவமதிப்போடு வரும் பொருளைக் குடிப்பிறப்பாளர் கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது, இவ்வுண்மை பெருந்தலைச் சாத்தனார் கண்ணும், பேரிசாத்தனார் பாலும் உணரப்படும்.

## கதை.

புலவர் திலகராகிய பெருந்தலைச்சாத்தனார் மிக வறுமையுற்றிருந்தாராதலால் பரிசில்கருதிக் கடியநெடுவேட்டுவன் என்னும் குறுநில மன்னனிடம் ஒருமுறை சென்றார். கோடமலைக்குத் தலைவ

னை அவ் வேடர் முதல்வன் நல்ல கொடையாளியா யிருந்தும் இவரை உவந்துபசரித்து நயந்து பேணுமல் சிறிது பொருள்கொடுத்தனுப்பினன். தனனை மதியாது இகழ்ந்து தந்தான் என்று இவர் சினந்து நின்று அதனைக் கொள்ளாது விடுத்தார். அவனை நோக்கிச் சில உரைகள் புகன்று விரைவில் திரும்பினர். அன்றி வர் கூறியன அடியில் வருவன.

முற்றிய திருவின் மூவ ராயினும்
பெட்பின் றீதல் யாம்வேண் டலமே;
விறற்சினந் தணிந்த விரைபரிப் புரவி
உறுவர் செலசார் வாகிச் செறுவர்
தாளுளந் தபுத்த வாள்மிகு தானை
வெள்வீ வேலிக் கோடைப் பொருந!
சிறியவும் பெரியவும் புழைகெட விலங்கிய
மான்கணந் தொலைச்சிய கடுவிசைக் கதநாய்
நோன்சிலை வேட்டுவ நோயிலை யாகுக
ஆர்கலி யாணர்த் தரீஇய கால்வீழ்த்துக்
கடல்வயிற் குழீஇய அண்ணலங் கொண்மூ
நீரின் று பெயரா ஆங்குத் தேரொடு
ஒளிறுமருப் பேந்திய செம்மற்
களிறின்று பெயரல பரிசிலர் கடும்பே. (புறநானூறு)

பெட்பு = விரும்பிப்பேணுதல். தாள் = முயற்சி. உளம்தபுத்த = உள்ளக்கிளர்ச்சியைக் கெடுத்த. வீ = பூ. ஆர்கலி = கடல். யாணர்த்தரீஇய = புதிய மழையைத்தரவேண்டி. கொண்மூ = மேகம். கடும்பு = சுற்றம். வெள்ளிய பூக்களமைந்த முல்லை வேலியையுடைய கோடைமலைக்குத் தலைவனே! நிறைந்த திருவினையுடைய சிறந்த மூவேந்தரே யாயினும் எம்மைப் போற்றித் தராத பொருளை ஏற்றுக்கொள்ளோம்; உலகிற்கு மழை தரும்பொருட்டு நீரைக்கொள்ளக் கடலில் புகுந்த மேகம் வீணே மீளாது; அது போல் பரிசிலரது சுற்றத்தார் தேர்யானை முதலிய சீர்களை எய்திச் சிறந்துமீள்வரே யன்றி வறிதே மீளார்; என இவர் அவனுக்குத் தமது உளவுறுதியை அறிவுறுத்தி மீண்டிருக்கும் துணிவை இதில் ஆய்ந்துபார்க்க. கடல்நீரை மொண்டு இனிதாக்கி மேகம் உலகிற் பெய்தல்போல் அரசர் பொருளைப் பரிசிலாகப் பெற்றுப் புலவர் பிறருக்குதவுவர் என இதனுள் இவர் உவமை கூறியிருக்கும் அழகும், இவரது மனப்பான்மையும் மானங்கருதியுள்ள மேன்மையும

இனிது உணரலாகும். இங்ஙனம் மீண்ட இவர் மூவன் என்னும் சிற்றரசனிடம் சென்றார். அவனும் இவரைமதித்துப் போற்று மல் அருகு நின்றவரிடம் சிறிது கொடுத்து விடுத்தான். இளிவுடன் வந்ததென்று அதனையும் இவர் கொள்ளாது தள்ளிவிட்டு இல்லினையடைந்தார். தம் மனைவி மக்களோடு தாம் பலநாள் பட்டினிகிடந்து பதைத்திருந்தும் உள்ளந்தாழாமல் மானம்பேணி இவர் உயர்ந்து நின்ற தனமையை அனைவரும் புகழ்ந்து போற்றினர். எவ்வளவு தேவையாக இருந்தாலும இளிவுற வருமாயின் குலமக்கள் அதனை ஒழிய விடுவர் என்னும உண்மையை உலகம் காண இவர் உணர்த்திநின்றார்.

## கதை 2.

பேரிசாத்தனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னரிருந்தவர். இவர் அரிய கலைகள் பலவும் பயின்ற பெரிய புலவர். அழகியவுருவினர். எவரையும் இகழாது இனிதுரையாடும் தகவினையுடையவர். மானகை என்பவளை மணந்து இவர் இல்லறம் புரிந்து வந்தார். வருங்கால் பொருள்வளங் குறைந்தது. வறுமை மிகுந்தது. அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த நன்மாறன் என்னும பாண்டிய மன்னன் இவர்பால் ஈணடிய அன்போடிசைந்து நின்றுஞதலால் அவனைக் கண்டால் வேண்டியவெல்லாம பெறலாம் என்று விரும்பிச் சென்றார். அவன் அருந்திறலாளன். பெருங்கொடையாளன். அவனை இவர் வந்து கண்டார். சில நாள் அங்குத் தங்கி யிருந்தார். முதலில் இவரை அவன் உபசரித்து வைத்தான். பின்பு யாது காரணத்தாலோ யாதும் கவனியாமல் வேறு நாட்டமாய் பாறியிருந்தான். தம்மை அவன் அவமதித்துள்ளான் என்று இவர் மனந்திரிந்தார். சிறிது தாமதித்தால் பெருஞ செல்வம் பெறுவதா யிருந்தும் இவர் அதனைப் பேணுதெழுந்தார். அவன் காணுமாறு சிலகூறி வந்தார். அவனை நோக்கிஅன்றிவர் கூறியபடியை அடியில் காணக.

அருவி தாழ்ந்த பெருவரை போல
ஆரமொடு பொலிந்த மார்பிற் றண்டாக்
கடவுள் சான்ற கற்பிற் சேயிழை
மடவோள் பயந்த மணிமரு ளவ்வாய்க்
கிண்கிணிப் புதல்வர் பொலிகென் றேத்தித்

திண்டேர் அண்ணல்! நிற்பாராட்டிக்
காதல் பெருமையிற் கனவினும் அரற்றுமென்
காமர் நெஞ்சம் ஏமாந் துவப்ப
ஆலமர் கடவுள் அன்னநின் செல்வம்
வேல்கெழு குருசில் கண்டேன்; ஆதலின்
விடுத்தனென் வாழ்கநின் கண்ணி தொடுத்த
தண்டமிழ் வரைப்பகம் கொண்டி யாகப்
பணித்துக் கூட்டுண்ணுந் தணிப்பருங் கடுந்திறல்
நின்னோ ரனைநின் புதல்வர் என்றும்
ஒன்னார் வாட அருங்கலம் தந்துநும
பொன்னுடை நெடுநகர் நிறைய வைத்தநின்
முன்னோர் போல்கிவர் பெருங்கண் ணோட்டம்
யாண்டு நாளும் பெருகி யீண்டு திரைப்
பெருங்கடல் நீரினும், அக்கடல் மணலினும்,
நீண்டுயர் வானத் துறையினு நன்றும்
இவர்பெறும் புதல்வர்க் காண்டொறு நீயும்
புகன்ற செல்வமொடு புகழினிது விளங்கி
நீடு வாழிய நெடுந்தகை! யானும்
கேளில் சேஎய் நாட்டின் எந்நாளும்
துளிநசைப் புள்ளினின் அளிநசைக் கிரங்கிநின்
அடிநிழற் பழகிய அடியுறை
கடுமான் மாற மறவா தீமே. (புறநானூறு)

கடுமான் = கடிய வேகத்தையுடைய குதிரைகள். கொண்டியாக = கொள்ளையாக் கொண்டு. மறவாதீம் = மறவாதிருப்பீராக. திண்ணியதேரையுடைய அண்ணலே! உன்மார்பில் என்றும் வேட்கை தணியாத உனது மனைவி பயந்த அழகிய புதல்வர்வாழ்க என்றேத்தி நின்னைப் புகழ்ந்து நின்ற என் நெஞ்சம் இன்புற்று மகிழ நின் பெருஞ்செல்வத்தைக் கண்டிருந்தேன்; யாதும் கொண்டிலேன்; மக்கள் ஒக்கலோடு பெருகி நாளும் நீ இனிது வாழ்க; துளியை நச்சியுள்ள வானம்பாடிப் புள்ளைப்போல் உன் அளியை நச்சி, யாதொரு உறவுமில்லாத தூரமான நாட்டிலே போய், யான் இனிது வாழ்வேன் இதோ கடிது செல்கின்றேன்; விரைந்து செல்லும் குதிரைகளையுடைய மாறனே! எனஅவனை நோக்கி இவர் உரைத்திருக்கும் அருமையை இதில் ஊன்றிப் பார்க்க. கொண்டுவந்தால் உண்டு; இல்லையானால் இனிது வாழ்தல் இல்லையென்னும்படி அவ்வளவு கொடிய மிடியினை எய்தியிருந்தும் இளிவுற வந்ததென்று பொருளை இகழ்ந்து விடுத்துத் துணிவுடன் வந்த இவ

ரது மேன்மையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். எவ்வளவு அல்லல்கள் நேர்ந்தாலும் நல்ல குலமக்கள் தம் மானங்குன்றி வாழ இசையார் என்பதைக்குறித்து உரையாடுங்கால் இவ் விருவரையும் முதலில் எடுத்துக்காட்டி அக்காலத்தவர் உரைசெய்து வந்தார். “இன்றியமையாச் சிறப்பின வாயினும் குன்ற வருபவிடல்” என்னும் உண்மையை உலகம இவர்பால் உணர்ந்து நின்றது

பறைபட வாழா அசுணமா; உள்ளம்
குறைபட வாழார் உரவோர்; நிறைவனத்து
நெற்பட்ட கண்ணே எதிர்சாம்; தமக்கோர்வ்வாச்
சொற்பட்டாற் சாவது சால்பு (நான்மணிக்கடிகை.)

வான முறினும் மருவார்நன் மானமுள்ளார்
ஈன முறவு தேனின்.

மானங்குன்றாமல் வாழவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

962. பண்டுயர்ந்த சங்கனேன் பண்பல்ல செய்திலன்சீர்
கொண்டுவந்த போதும் குமரேசா—கொண்டாடும்
சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர். (உ)

இ—ள்.

குமரேசா! சங்கவண்ணன் யாண்டும் இழிந்தசெயல்களைச் செய்யாமல் ஏன் அமைந்திருந்தான்? எனின், சீரொடு பேராண்மை வேண்டுபவர் சீரினும் சீர் அல்ல செய்யார் என்க.

இது, குடிப்பிறப்பாளர் பழிப்பனசெய்யார் என்கின்றது.

சீர் = புகழ், திரு. “சீர்நிரந்தேந்திய குன்று” (பரிபாடல்) “உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர்” (திருமுருகாற்றுப்படை.) இவற்றுள் இஃதுணர்த்திநிற்கும் பொருளை யுணர்க.

சீரினும் = சீரிய் செயல்களினும். புகழுக்குரிய அறநலங்களை ஆற்றுமிடத்தும் என்க. உம்மை சிறப்புணர நின்றது.

சீர் அல்ல = இகழ்ச்சியானவற்றை; என்றது இழிவுக்கேதுவான வசையுறு செயல்களை.

பேராண்மை = பெரிய ஆண்டன்மை. அஃதாவது குன்றாத வீரமுடைமை. "பேராண்மை என்ப தறுகண்; ஒன்றுற்றக்கால் ஊராண்மை மற்றதன் எஃகு" என்பதற்கு இலக்கியமாய் நின்று இன்றுபோய் நாளைவா எனப் போரில் இரங்கிப்பகைவனைச் சீர்செய்து விடுத்த இராமன் போன்ற குலமக்களிடத்து நிலவியிருக்கும் தலைமைக்குணமாகிய இது, ஈண்டு மானத்தைக் குறித்து நின்றது. இங்ஙனம் கொண்டது அதிகாரத்தான என்க. மானம் என்பது என்றும் நிலைகுலையாது நிற்கும்திண்மையாதலால் இங்ஙனம் வீரப் பெயரால் அது விளங்கி நின்றது.

மேல், யாண்டும் எவ்வகையிலும் மானங்குன்றாமல் நிற்க வேண்டும் என்றார்; இதில், மேலோரென்றும் அதனைப்பாதுகாத்து நிற்பர் என்கின்றார்.

புகழோடு பெரிய ஆண்டன்மையை விரும்பிநிற்பவர் இகழ்ச்சிக்கேதுவான சிறிய செயல்களை யாண்டும் செய்யார் என்பதாம்.

சீறினும் என்று பாடங் கொண்டால், குலமக்கள் சினந்தாலும் சீரழியச் செய்யமாட்டார் எனறு கொள்க.

சிறந்த கீர்த்தியோ அல்லது உயர்ந்த பதவியோ வருவதாயினும் மானத்தை விரும்பி நிற்கும் மேன்மக்கள் அவற்றை விழைந்து இழிவான செயல்களைச்செய்துவிடார் என்பார் "பேராண்மை வேண்டுபவர் சீரினும் சீரல்லசெய்யார்" என்றார். ஏகாரம் தெளிவு தோன்ற நின்றது. வேண்டுபவர் செய்யார் என்றதனால் வேண்டாதவர் வேண்டியவாறே சீர்கேடான செயல்களைச் செய்வர் என்பதாயிற்று. புகழைமாத்திரம் விரும்பி நிற்பவன் சீர் அல்லன சில செய்தேனும் அதனைச்சேர நிற்பன்; அதனோடுமானத்தையும் கருதி நிற்பானாயின் வானம் வருவதாயினும் ஈனமுற அவன் இசையான் என்க.

இனி, சிறந்த செல்வம் நிரம்பியிருந்தாலும் அதனால் களிப்பு மீக்கூர்ந்து இளிப்புறு செயல்களை மேன்மக்கள் செய்யார் எனவும் இது தெரிய நின்றது. பெறலருந்திரு உற்றால் எவரையும் சித்தத்தைத் திரித்துச் சீரல்லன செய்யத் தூண்டுமாதலால் அச்சீரினும் குலமக்கள் யாதொரு சிறுமையும் செய்யார் என்றபடி.

எவ்வளவு உயர் நலங்கள் எய்துவனவாயினும் இளிவுதரும் வினைகளைச் செய்யலாகாதென்பது கருத்து.

இளிவுறு செயல்களை மானிகள் எவ்வாற்றானும் செய்யார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சங்கவண்ணன் பால் உணரப்படும்.

## கதை.

சங்கவண்ணன் என்பவன் பயாபதி என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். தாய் பெயர் மிருகாபதி. இவன் அறிவும் மானமும் ஆண்மையும் அடக்கமும் நெறியும் பொறையும் நேர்மையுமுடையவன். புண்ணிய நீர்மையனான இவன் வெண்ணிறத்தனாதலால் சங்கவண்ணன் என விளங்கி நின்றான். இவனுக்கு விசயன் எனவும் ஓர் பெயருண்டு. இவன் என்றும் பிறர்க்கு இதஞ்செய்யும் இயல்பினன். வஞ்சம யாதும இல்லாதவனாதலால் சிறிது முன்கோபமுடையவன். அருந்திறலாளனாகிய திவிட்டனுக்கு இவன் மூத்தவன். எவர்க்கும் அடங்காமல் பெருவீரனாய் விளங்கி நின்ற அவன்மேல் பகைமைகொண்டிருந்த அச்சுவக்கிரீவன்என்னும் விஞ்சையர் வேந்தன் வஞ்சமாக ஒருமுறை ஓர் மாயச் சிங்கத்தை ஏவினான். அது வநது இவன் நாட்டிலுள்ள ஓர் குன்றில் நின்று அல்லல்பல செய்தது. அதனைக் கொன்றுவர அவன் கொதித் தெழுந்தான். அவனோடு படைவீரர்கள் பலர் திரண்டெழுந்தனர். என்வலியினை அறிய அது வந்துள்ளது ஆதலால் ஒருவரும் உடன்வரலாகாதென்று அவ்வுயர் வீரன் உறுத்து நிறுத்தினான். தம்பியைத் தனியேவிட மனமிசையாமையால் இவன்மட்டும உடன் சென்றான். தன்மீது வந்துள்ளமையால் தான் ஒருவனே பொருதுவெல்ல வேண்டுமென்று அவன் உறுதி கூறினமையால் சரிஎன இவன் அருகு நின்றான். அவன்சென்று பொருது அதனைக்கொன்று நின்றான். வெற்றித்திருவோடு விளங்கி நின்ற அவனை இவன் விரைந்துபோய் மார்பிறுகத்தழுவிப்புகழ்ந்து போற்றினான். அவ்வமயம் இவன் புகன்றபடியை இதனடியில் காண்க.

"குன்றிற்கு மருங்குவாழுங் குழூஉக்களிற்றினங்களெல்லாம்
அன்றைக்கன் றலறக் கொன்றுண் டகலிடம் பிளப்பச்சீறி

வென்றிக்கண் விருப்புநீங்கா வேங்கண்மா விதனைக்கொன்றாய்
இன்றைக்கொண் டுலகமெல்லாம் இனிதுகண் படுக்குமன்றே.

உரைசெய்நீ ளுலகின்வாழ் முயிர்களுக் குறுகண் கண்டால்
வரைசெய்தோள் மைந்தர்வாழ்க்கை மதிக்கிலார் வனப்பின்மிக்கார்;
திரைசெய்நீ ருலககாக்கும் செய்கைமேற் படைக்கப்பட்ட
அரசர்தம புதல்வர்க்கையா! அறம்பிறி ததனினுண்டோ?

கற்றவா, கடவுட்டானஞ் சேர்ந்தவர், களைகண் இல்லார்,
அற்றவா, அந்தணாளர் அன்றியும் அனையநீரார்க்கு
உற்றதோர் இடுக்கண் வந்தால் உதவுதற்குரித்தன்றாயிற்
பெற்றஇவ்வுடம்பு தன்னால் பெறுபயன் இல்லைமன்னே.

மன்னுயிர் வருத்தங்கண்டும் வாழ்வதே வலிக்குமாயின்
அன்னவன் ஆண்மையாவது அலிபெற்ற அழகுபோலாம்
என்னையான்கொடுத்தும்வையத்துஇடுக்கணேய்கெடுப்பனென்னும்
நின்னையே போலுநீரார் நிலமிசைநிலவி நின்றார்." (சூளாமணி)

இவனது மனப்பான்மையும், மானங்கருதி நின்ற மேன்மையும், அடுத்தாரை ஆதரித்த ஆண்மையும், மன்னுயிர் ஓம்பிய மாட்சியும் பிறவும் இதனால் இனிதுணரலாகும். இதம்பலபுரிந்து இங்ஙனம் இவன் இசைவளர்த்து வந்தான். வருங்கால் முன்குறித்த பகைவேந்தன் படைகளோடெழுந்து பொரவந்து வளைந்தான் இவன்பொங்கியெழுந்தான். கடல் வண்ணனை திவிட்டனும் அடல்குறித்தெழுந்தான். தம்பியாகிய அவன்முன் அன்று இவன் நின்றுரைத்த நிலையை அடியில் காண்க.

"அலைகடல் வண்ணன் தம்முன் அலர்குழை புரளுங்காதிற்
சிலைபடு வயிரத்தோளான் செங்கதிர்முறுவல் தோன்றி
இலைபடு வயிரப்பைம்பூண் இமையவரல்லராயின்
மலைபடு கிருமியோ நம மாறுநிற்பன! மற்றென்றான்.

வானவர்மருள நாஞ்சில்மற்றிது மடுத்து, மாற்றார்
தேனமர் அகலமென்னும் செறுவுசெஞ்சால்கள போக்கி,
ஊனமர் குழம்புபொங்க உழுதிட்டு, வென்றிவித்தி,
ஏனவர் செவிகளார இரும்புகழ் விளைப்பன்; என்றான்"

என்றவன் படைக்கடலுள் பாய்ந்து புகுந்தான். சாரிதிரிந்து நேரலர் யாரையும் நூறிவந்தான். வருங்கால் அரிசேனன் என்னும் பெருவீரன் எதிர்ந்து கடுஞ்சமர் புரிந்தான். முடிவில் அவன்படை

முழுதும் இழந்து தனியே தளர்ந்து நின்றான். அந்நிலையினை நோக்கி இவன் நெஞ்சம் இரங்கினான். அவனைக் கொலைபுரியாது சில கூறிவிடுத்தான். "இன்றுபோய்நாளைவா" என்று இராமன் இராவணனைப் போகவிட்டதுபோல் அன்றிவன் பேராண்மை செய்து விட்டபெற்றியை நோக்கி அனைவரும் புகழ்ந்தார். வெற்றிச்சீர் தனக்குக் கிடைப்பதாயிருந்தும் படையிழந்தவனைக்கோறல் குற்றமாம் எனக்குறித்து யாதுஞ் செய்யாது இவன் அமைந்து நின்றமை யைமறுபுலத்தவரும் வியந்து போற்றினர். "சீரோடு பேராண்மை வேண்டுபவர், சீரினும் சீரல்ல செய்யார்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

கடமா தொலைச்சிய கானுறை வேங்கை
இடம்வீழ்ந்த தண்ணு திபக்கும்—இடமுடைய
வானகங் கையுறினும் வேண்டார் விழுமியோர்
மான மழுங்க வரின். (நாலடியார்)

பாழேந்தக் கண்ணும் பழிவருவ செய்யாரே
பீடமைந்த நீரர் பிறழ்ந்து.

ஈனமான செயலை மானமுடையார் யாதும் செய்யாரென்பது இதனால் கூறப்பட்டது.

---

963. தேர்ந்த முதுகூத்தர் தேய்ந்தும் உயர்வுமீக்
கூர்ந்துநின்றார் என்னே குமரேசா—ஆர்ந்த
பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு. (௩)

இ—ள்.

குமரேசா! கூத்தர் பொருள் குன்றியிருந்தும் ஏன் உயர்வு கொண்டிருந்தார்? எனின், பணிதல் பெருக்கத்து வேண்டும்; உயர்வு சிறிய சுருக்கத்து வேண்டும் என்க.

இது, செல்வ வறுமைகளில் செய்யவேண்டிய திறங்கூறுகின்றது.

பெருக்கம் என்றது செல்வத்தை. பெருகிநிற்பது என்னும் ஏதுவான் வந்தது. சுருக்கம் என்றது வறுமையை. நுகர்வு நலங்கள் சுருங்கியிருப்ப தென்பதாம்.

வேண்டும்என்பது ஈரிடத்தும் விதிப்பொருட்டாய்த் துணிவு தோன்ற நின்றது.

மேல், மானமுடையார் ஈனமுறுவன செய்யார் என்றார்; இதில், அவர் வறுமையுறினும் சிறுமையுறார் என்கின்றார்.

செல்வம் பெருகியுள்ள காலத்து யாக்கும் பணிவுடையனாய் அமைந்தொழுக வேண்டும்; சிறுமையான வறுமையுற்றகாலத்தில் யாண்டும் பணியாது தலைமையோடு உயர்ந்துநிற்கவேண்டும் என்பதாம்.

நிரம்பிய செல்வமுடைய ஒருவன் பணிவுடையனா யமைந்திருந்தாலும் அச்செல்வம் அவனை உயர்ச்சிகண்ணேயே யிருத்திவைக்கும்; என்னை? அவ் ஒண்பொருளை நோக்கி எல்லாரும் அவனை நன்குமதித்துப் போற்றுவர்; போற்றவே அப்பணிவு மேலும் அவனுயர்ச்சிக்கே அணிசெய்து நிற்குமாதலால் "பெருக்கத்துப் பணிதல்வேண்டும்" என்றார்.

வறுமை யுடையவன் பணிந்து நடந்தால் இல்லாமையால் அங்ஙனம் இழிந்து நிற்கின்றான் என எவரும் பொதுவாக எண்ணிவிடுவர்; விடவே எல்லாரும் அவனை இகழ்ந்துகொள்ளத் துணிவாராதலால் அங்ஙனம் கொள்ளா வண்ணம் தன்னைப் பாதுகாத்து எளிமையுற்றபோது தளர்ந்து வணங்காமல் தன் நிலைமைதோன்றக் குலமகன் ஒழுகவேண்டும் என்பார் "சிறிய சுருக்கத்து உயர்வு வேண்டும்" என்றார். உயர்வு என்றது மதமீறித் தலைநிமிர்ந்து நிற்றல் அன்று; பொருள்நிலை குறைந்தவிடத்துத் தனது உளநிலை குன்றாமல் தனது பழைய நிலைமையான தகைமையின்கண்ணேயே குலமகன் தங்கி நிற்றலாம் என்க.

செல்வக்காலத்தும், அல்லற்காலத்தும நல்லகுலமக்கள் நடந்துகொள்ளவேண்டிய திறங்களை யுரைத்து யாண்டும் மானத்தைக் காத்துவரும்படி இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

"பெருக்கத்துயர்வாம்பணிவொழியல் பேணுப்பணிவுசுருக்கத்திற்
செருக்கலின்றி யமையாத சிறப்பிற்றேனும் உயர்மானம்
முருக்கும்வினையைச்செயநினையல்; மொய்ம்பார்மானங்கெடவாழ்வந்
துருக்குமெனிற் சாமரை மானையுன்னல் ஏமகண்டனே"
என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

செல்வம் வந்து தன்னை உயர்த்தும் போது தான் தாழ்ந்திருக்கவேண்டும்; வறுமை புகுந்து தாழ்த்தும்போது உயர்ந்து நிற்க வேண்டும் என இஃதுணர்த்திநிற்கும் அழகை யூன்றிப்பார்க்க.

அறந்திறம்பாவண்ணம் என்றும் மானங்காத்து நின்று உயர்ந்தொழுக வேண்டும் என்பது கருத்து.

வறுமையுற்றிருந்தாலும் மேன்மக்கள் யாண்டும் தம் பெருமைகுன்றாது நடப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கூத்தர்கண் உணரப்படும்.

## கதை.

கூத்தர் என்பவர் சோழநாட்டிலே உறையூரிலிருந்தவர் இவர் பெரும்புலமையுடையவர். சேரசோழபாண்டியர் என்னும் அரசர் மூவராலும் நன்கு ஆதரிக்கப்பெற்றவர். இளம்புலவர் பலரும் வணங்கிப்போற்ற அறிவில் முதிர்ந்து உயர்ந்த புகழோடு இவர் விளங்கி நின்றாராதலால் உறையூர் முதுகூத்தனார் என எவரும் இவரை உரைசெய்து வந்தார். இவர் சங்கப்புலவருள் ஒருவராய்த் தங்கியிருக்குங்கால் அங்குவந்த திருக்குறளை ஆராய்ந்து பார்த்தார். நமது வள்ளுவப்பெருந்தகையின் தெள்ளிய புலமையை நினைந்து நினைந்து வியந்தார். உணர்ந்துணர்ந்து உள்ள முருகினார்; அதனை உவந்து துதித்தார். அன்று இவர் துதித்தபடியை அடியில் காண்க.

தேவிற் சிறந்த திருவள்ளுவர் குறள்வெண்
பாவிற் சிறந்திடுமுப் பால்பகரார்—நாவிற்
குயவில்லை சொறசுவை யோர்வில்லை மற்றுஞ்
செயலில்லை என்னுந் திரு. (முதுகூத்தனார்)

திருக்குறளைப் பயிலாதவர்களுக்கு மனமொழி மெய்கள் புனிதமாகா; திருமகளும் அவரைச்சேராள்; என இதில் இவர் அருளியிருக்கும் அருமையையும் அதன் உரிமையையும் ஊன்றி யுணர்க. இங்ஙனம உண்மையும் செம்மையும் உறுதியுமுடையராய் நிலவி நின்ற இவர் காலகதியால் வறுமையடைந்தார். அடைந்தும் தம் உள்ளந்தாழாது இவர் உயர்ந்திருந்தார். முன்பு பரிசில்கருதி அரசர்களிடம் சென்ற இவர் பின்பு வலிந்தழைத்தாலும் செல்லாமல் அவர் வந்து பார்க்கும்படி நின்றார். செல்வம் இல்லாதிருந்

நும் யாண்டும் செல்லாதிருக்கின்றீரே அதனை எப்படிச் செய்து கொள்வீர் என்று குறுநில மன்னனொருவன் ஒருமுறை இவரை வினவியபோது தம்பெருமைதோன்ற இவர் பேணியுரைத்தார்.

கல்லறுத் தியற்றிய வல்லுவர்க் கூவல்
வில்லேர் வாழ்க்கைச் சீறூர் மதவலி
நனிநல் கூர்ந்தன ளாயினும் பனிமிகப்
புல்லென் மாலைச் சிறுதீ ஞெலியும்
கல்லா இடையன் போலக் குறிப்பின்
இல்லது படைக்கவும் வல்லன்; உள்ளது
தவச்சிறி தாயினும் மிகப்பலர் என்னாள்
நீணெடும் பந்தர் ஊண்முறை யூட்டும்
இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில
வரிசையினளிக்கவும் வல்லன்; உரிதினிற்
காவன் மன்னர் கடைமுகத் துகுக்கும்
போகுபலி வெண்சோறு போலத்
தூவவும் வல்லனவன் தூவுங் காலே. (புறநானூறு)

கல் அறுத்துக் கட்டிய புல்லிய கிணறுடைய சிற்றூரின் கண் வில்லையே ஏராகக்கொண்டு வாழும் வலியினை யுடையோன் வறியனாயினும், கல்லைத்தட்டிக் காட்டில் தீயை ஆக்கிக்கொள்ளும் இடையன்போல வேண்டியபொருளை வேண்டியபோது படைத்துக்கொள்ளவும் வல்லன்; உள்ளது சிறிதாயினும் நல்ல குலமகள் போல் வந்தவர்க்கெல்லாம் உணவு இடவும் வல்லன்; அது பெரிதாயகாலத்து அரசன்போலயாவும்பெரிதாத் தூவவும்வல்லன்; என இதில் இவர் உணர்த்தியிருக்கும் அழகை யூன்றிப்பார்க்க. இதனால் இவரது மனப்பான்மையும், மானம்பேணி நின்றமாட்சியும் இனி துணரலாகும். செல்வம் பெருகியிருந்த காலத்தில் பணிவுடையராயிருந்த இவர் அது சுருங்கியபோது யாண்டும் பெருமிதமுடையராய்த் துணிவு தோன்ற நின்றார். பெருக்கத்து வேண்டும் பணிவு; சிறிய சுருக்கத்து வேண்டும் உயர்வு; என்னும்உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

ஈனமாய் இல்லிருந் தின்றி விளியினும்
மானம் தலைவருவ செய்பவோ—யானை
வரிமுகம் புண்படுக்கும் வள்ளுகிர் நோன்றாள்
அரிமா மதுகை யவர். (நாலடியார்)

இன்மை யுறினும் இடர்மிகினும் மானமுளார்
தன்மை திரியார் தளர்ந்து

நிலைதாழாமல் யாண்டும் நிற்கவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

964. திண்டோள் விதுரமன் சிறிதுநிலை தாழ்ந்ததனால்
கொண்டான் இழிவேன் குமரேசா—கொண்ட
தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை. (ச)

இ—ள்.

குமரேசா! விதுரமன் சிறிது நிலை தாழ்ந்ததனால் பிரப என் பெரிதும் இழிந்து பேதுற்றான்? எனின், மாந்தர் நிலையின் இழிந்தக் கடை தலையின் இழிந்த மயிர் அனையர் என்க.

இது, நிலை தவறின் சீசமுறும் என்கின்றது.

தலை என்றது நிலையின் உயர்ச்சி தோன்ற நின்றது.

இழிந்தக்கடை = தாழ்ந்தவிடத்து. தாழ்தலாவது பழி மிகும் படியான இழிவினைகளில் இறங்குதல்.

நிலை என்றது தம்தம் தகுதிக்கேற்ப அவரவர் நிற்கு நிலையினை. வருணம், ஆச்சிரமம், பதவி, தொழில் முதலியனவாக அது பல திறப்படும். பிரமச்சாரி ஒருவன் தன் நிலைக்குரிய விரத ஒழுக்கத்தில் வழுவாது நின்றால் எல்லாராலும் அவன் புகழ்ந்து போற்றப்படுவான்; நிலை தவறிக் கூடா வொழுக்கத்தனாய்ப் பெண் விழைந்து இழிந்துவிடின் உடனே அவன் இகழ்ந்து தூற்றப்படுவான் ஆதலால் அதுபோலப் பிற நிலையாளரையும் ஓர்ந்துகொள்க.

மேல், நிலை தவறாமல் யாண்டும் நிற்கவேண்டும் என்றார்; இதில், அங்ஙனம் தவறினால் தாழ்ந்தொழிவர் என்கின்றார்.

சிறந்த மக்கள் தமக்குரிய உயர்ந்த நிலையை விட்டுத் தாழ்ந்தாராயின் தலையை விட்டு வீழ்ந்த மயிர்போல்வர் என்பதாம்.

நிலையின் இழிந்தவரை மயிரனையர் என்றது உரியவரானும் அருவருத்து அவர் ஒதுக்கப்படுவர் என்பது கருதி.

மயிர் தலையிலுள்ளபொழுது பூச்சூடுதல், சீப்பிடுதல், தைலந் தோய்தல், மணிமுடி புனைதல் முதலிய அணிகலங்களெல்லாம் அமையப்பெறும்; அந்நிலை நீங்கிச் சிறிது அகன்றுவிடின் உடைய வனும்கூடத் தீண்டக்கூசி அதனை ஒழித்துவிடுவன்; அதுபோல் குல மக்கள் தமக்குரிய நிலையில் நிலைத்து நின்றால் ஐயா! அரசே! என்று எல்லாரும் ஏத்தித் துதிப்பர்; நிலை நழுவி இழிவினைக்கட் புகின் பெற்றோரும் உற்றோரும் கூட அவரைப் பேணுதிகழ்ந்து விடுவர் ஆதலால்" மாந்தர் நிலையின் இழிந்தக்கடை தலையினிழிந்த மயிரனையர்" என்றார்.

சிறந்த நிலையில்நின்ற இந்திரன் சிறிது தாழ்ந்து அகலிகையை விழைந்ததனால் பூனையாயிழிந்து என்றும் பழியோடு குன்றி ஒழிந் ததுபோல் எவ்வளவு உயர்ந்த குல மக்களாயிருந்தாலும் நிலைதவறி னால் அவர் மிக இழிக்கப்படுவர் என்க. "இழுக்கத்தின் எய்துவர் எய்தாப் பழி" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

தலை நீங்கிய மயிரை எடுத்துக்காட்டி நிலை நீங்கினார் நிலையைத் தோன்றச் செய்து மாந்தர் என்றும் நிலைகுலையாது நின்றுவரும் படி எச்சரித்து அடிகள் இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன் றிப்பார்க்க.

உயர்ந்த மக்களுக்கு இழிந்த மயிரை இங்ஙனம் ஒப்புக்காட் டியது அவர் இழிநிலை விளங்க என்க.

குலமக்கள் நிலை நீங்கினால் தலை நீங்கிய மயிர்போல் இழிக்கப் படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை விதூ மன்பால் உணரப்படும்.

## கதை.

விதூமன் என்பவன் ஓர் சிறந்த அரசன். வசுக்கள் மரபைச் சார்ந்தவன். சிறந்த வரபலங்களை யுடையவன். மண்ணுலகத்தும் விண்ணுலகத்தும் எண்ணிய எவ்விடங்கட்கும் எண்ணியபடியே யெழுந்து செல்ல வல்லவன். பேரழகன். சாரிகை என்பவளை மணந்து சீரியபோகங்களை நுகர்ந்து செங்கோல் வேந்தனாய் இவன் சிறந்திருந்தான். திருவிலும் உருவிலும் திறலிலும் அறிவிலும் இவன் உயர்ந்திருந்தானாதலால் அயனும் இவனை அடிக்கடி பேணி யழைத்துப் பேருரையாடிச் சீர்பல செய்துவந்தான். இங்ஙனம்

வருங்கால் ஒருமுறை அப்பிரமனுலகில் ஓர் பெரு விழா நிகழ்ந்தது. இந்திரன் முதலிய தேவகணத்தவர் யாவரும் அங்கு மேவியிருந்தனர்.

"முன்னை நாளுல குதவிய முண்டக மூர்த்தி
மன்னு நாமகள் மருங்குசா சாவித்திரி வயங்கப்
பொன்னினுடை வேந்தனும் புலவரும் போற்றப்
பன்னும் ஏழிசை யாணருஞ் சித்தரும் பாவ" (சேது)

சத்திய வுலகத்தில் சிறந்த மணி மண்டபத்தில் உயர்ந்த ஆதனத்தில் அவன் விளங்கியிருந்தான். மேனகை திலோத்தமை முதலிய வானர மங்கையர் கானங்கள் பாடி நடம் புரிந்தனர். அவருள் **அலம்புசை** என்பவள் முறைப்படி சதிமிதித்து அரங்கிடை யேறி ஆடிவந்தாள். அவள் அழகிலும் இசையிலு மிகச் சிறந்தவள். அரிய மாட்சியோடு அங்கு மருவியிருந்த இவன் அவளது உருவ எழில்களை நோக்கி உள்ளமுருகினன். அவள் ஆடிவருங்கால் காற்றின் செயலால் ஆடை விலகியது. விலகவே அவள் போகவுறுப்புப் புறத்தேதோன்றியது; அவையிலிருந்த அனைவரும் தலைகவிழ்ந்திருந்தனர்; இவன்மட்டும் அவளைப் பருகலாம்படி உருகிப்பார்த்து நின்றான். அவளும இவனைக் கனிந்த காதலோடு நோக்கி நடனத்தை யூக்கிவந்தாள். அவள் உள்ளந்திரியும்படி இவன் கள்ளப்புரிந்து நிற்றலை நானமுகன் கருதி நோக்கினன். தன்னையு மதியாமல் இப்பேரவையில இன்னவாறு இவன் இழிந்து நின்றனே என்று அவன் சினந்து நோக்கி "ஏ விதூமா! நீ மனிதனாகி மண்ணில் மாறிப்போயிரு" என்று சீறிச் சபித்தான். அவளையும் அவ்வாறே வைது விடுத்தான். இவன் தனது சிறந்த நிலையினை இழந்து இங்கு இழிந்து வீழ்ந்தான். தன்மை திரிந்து இவன் தாழ்ந்தபோது முனபு புகழ்ந்திருந்த அனைவரும் இவனை இகழ்ந்து நின்றார். "மாந்தர் நிலையினிழிந்தக்கடை, தலையினிழிந்த மயிரனையர்" என்பதை உலகம் காண இவன் அன்று உணர்த்தி நின்றான். நிலைதாழ்ந்திழிந்த இவனது நிலையினைக் குறித்துப பல நூல்களும் பகர்ந்துள்ளன. விரிவைச் சேது புராணத்தில் காண்க.

மான மழிந்துபின் வாழ்வார்போ லிவ்வுலகில்
ஈன முறுவா ரேவர்.

நிலைமை குன்றினல் தலைமை பொன்றுவார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

965. வென்றிப் பிரதத்தன் மேவியவோர் புன்செயலால்
குன்றினன் என்னே குமரேசா—நின்றுயர்ந்த
குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின். (ரு)

இ-ள்.

**குமரேசா!** ஒரு சிறு செயலால் பிரதத்தன் ஏன் அன்று குன்றி இழிந்தான்? எனின், குன்றுவ குன்றி அனைய செயின், குன்றின் அனையாரும் குன்றுவர் என்க.

இது, சிறு பிழை செய்யினும் மேலோர் சீரழிந்தொழிவர் என்கின்றது.

குன்றின் அனையாரும் = மலைபோல் உயர்ந்து நிற்போரும். இன் உருபு ஒப்புப் பொருளது. உம்மை சிறப்புணர நின்றது. மலையை மேன்மக்களுக்கு ஒப்புககூறியது குல நல முதலியவற்றாற் சிறந்து சலியாது உயர்ந்து நிற்குந் தலைமை கருதி. "குன்றனன் சிந்திக்கின்றான்" எனச் சீவகனைக் குறித்திருத்தல் காண்க.

குன்றுவர் = தாழ்வர். குன்றுதல் = தாழ்தல்.
குன்றுவ என்றது தாழ்தற்கேதுவான செயல்களை.
குன்றி என்றது குன்றி மணியை.

"புறங்குன்றி கண்டனையரேனும் அகங்குன்றி மூக்கிற் கரியா ருடைத்து" எனக் கூடா வொழுக்கத்தாருக்கு முன் இது ஒப்புக் காட்டப்பட்டுள்ளமை காண்க கடுகு உழுந்து எனபனபோலச் சிறிய அளவுக்கு இஃது உவமையாகவரும். "குறையா நிறையின் ஒரு குன்றியும் காமமில்லை" (சீவக சிந்தாமணி), "இன்புற விடுதியா யிற் சிறிது குன்றியும் கொள்வல்" (புறநானூறு) இவற்றுள் இஃது துணர்த்தி நிற்றல் காண்க.

மேல், நிலை திரிந்தால் தலை பிரிந்த மயிர்போல் இழிந்தொழி வர் என்றார்; இதில், மிக மேலான நிலையில் நின்றாலும தாழ்வான செயலைச் சாரின் உடனே தாழ்ந்து போவர் என்கின்றார்.

மலைபோல உயர்ந்தவரேயாயினும் இழிவுக்கேதுவான செயல் களைக் குன்றியளவே செய்யினும அவர் குனறி ஒழிவர் என்பதாம்.

குடிப்பிறப்பு, கல்வி, செல்வ முதலியவற்றால் சிறந்து மிக

உயர்ந்திருந்தாலும் பழிபடு செயலைச் சிறிதுசெய்வாராயின் உடனே அவர் தாழ்ந்தொழிவர் என்பார் "குன்றுவ குன்றி அனைய செயின் குன்றின் அனையாரும் குன்றுவர்" என்றார்.

குன்றம்போன்ற உயர்விளையுடையார் ஒரு குன்றிமணியளவு குற்றஞ் செய்தால் அதனால் அவர் எப்படித் தாழ்ந்துவிடுவர்? எனின், நிறைந்த பாலில் ஒரு துளி நஞ்சு விழுந்தால் அது முழுவதும் நிலைகுலைந்துபோம்; அதுபோல் குண நலங்களால் உயர்ந்துள்ளோர்பால் சிறிது புன்செயல் சேரின் உடனே அவர் சீரழிந்து போவர் என்க.

இளிவுக்கேதுவான செயலை யாதும் செய்யலாகாதென்பது கருத்து.

எவ்வளவு உயர்வுடையராயினும் இழிவுறு செயல் சிறிது செய்வராயின் அவர் இழிந்து தாழ்வர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை பிரதத்தன்பால் உணரப்படும்.

## கதை.

பிரதத்தன் என்பவன் இற்றைக்கு நாலாயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர்க் காசியிலிருந்து அரசுபுரிந்த ஓர் சூரியகுலத்து மன்னன். அறிவிலும் திருவிலும் ஆற்றலிலும் இவன் மிகச் சிறந்தவன். மிகுந்த படைச் செருக்குடையவன். நல்ல அழகன். உயர்ந்த கொடையாளி. உலக நிலைகளை நுணுகியறிந்து குடிகளின்புற இவன் படி புரந்தான். குறுநிலக் கிழவரும் மறுபுல மன்னரும் திறை கொணர்ந்து தர முறை புரிந்து எங்கும் புகழ் பரவச் செங்கோல் செலுத்திவந்த இம் முடிமன்னன் ஒருமுறை சோழ மண்டல முதலிய இத் தென்னாடுகளைக் காண விரும்பினான். அரச திருவோலக்கமைந்தெழுந்தான். அருணையம்பதியை யடைந்தான். பொருபடையோடு திகழ்ந்த இவனது பெருமிதத்தை நோக்கி அனைவரும் வியந்தார்.

"முன்னமே ஒருநாள் வடதிசைக்கு இறைவன்; முழுமணிக்
கங்கைநீர்த் துறைவன்;
இந்நிலத் திழிந்த இந்திரன் அனையான்;
ஆண்டகை முருகவேள் நிகர்வான்;
மன்னவர் நிறைந்த மகுட கோடிகளின்

வயிர நாயகங்களால் தேய்ந்த
பொன்னவிர் கழலான்; தருமமும் கழலான்;
புகழ்ப் பெயர் பிரதத்தன் என்பான். (க)

காலனேர் விழியார் முகமென விளங்கிக்
களங்குமைத தொழுக்கிய மதிபோல்
நீலமாமணிக் காமபிசைந்த வெண் கவிகை
நெடுநிலப் பரப்பெலாம் நிகழ்த்தச்
சாலவே பணியா அரசர்கள் இவன்பொற்
சரணமே படிந்துயிர் பெறுமென்
றேலவே யழைக்கும் தருமதேவதை போல்
இரண்டு சாமரைக ளார்த்திடவே. (உ)

வருண மண்டலத்தில் புரவிபோல் கிளர்ந்த
மரகதக் குரகதம் வயங்க
அருண மண்டலத்தை அளவிடுங் கொடித்தேர்
அடவிகள் புடவியை அடைப்பக்
கிரண சிந்தூரத்துப் புகர்முக மருப்பிற்
கிம்புரிக் கரிநிசை கிளரத்
தரணிபர் நடுங்க மந்திரி கணத்தோ
டெழுந்தனன் தண்ட யாத்திரையே. (ங)

அங்கர்புற்றேற, யவனர் வெற்படைய,
அவந்தியர் வில்லிணுண் கௌவச்,
சங்கிலித் தொடக்காய் மற்ற மண்டலிகர்
தம் இறை தாங்களே சுமக்கச்,
சிங்கவே றெனவே சோழநா டணைவான்
திருநதி கடந்துதென் அருணைக்
கங்கைவார் சடையான் கோயிலிற் புகுந்தான்
கங்கையும் காசியும் புரப்பான்". (ச)
(அருணாசலப் புராணம்)

இங்ஙனம் பெருஞ் சிறப்போடு புகுந்து பரமனைப் பணிந்து பின்பு தனியான ஓரிடத்தில் படமாடமமைத்து உடன்வந்த பரிபரிசனங்களோடு அங்கு இனிதமைந்திருந்தான். இவனது மேன்மையை வியந்து அனைவரும் புகழ்ந்திருந்தார். மறுநாள் அமைச்சர் சிலருடன் ஆலயம் அடைந்தான், உள்ளே புகுங்கால் கனகம் என்னும் ஓர் தாசியைக் கண்டான். அவள் மிக்க கட்டழகுடையவள். "இரும்பையும் உருக்கும் இசையினாள்" என இசையில் அவள் இசைபெற்றிருந்தாள். அவள்மீது இவன்

நசைமீக்கூர்ந்தான். நாணாது நெருங்கினான். கடவுள் பணிக்குரிய கணிகை எனவும் கருதாமல் தன் அணி நகருக்கு அவளை உடன் அழைத்துக்கொண்டுபோக இவன் உள்ளந் துணிந்தான். உடனே இவன் குரங்குமுகமாய்க் குன்றிநின்றான். அருகு நின்ற மந்திரிகள் பார்த்து அச்சமெய்தி "அரசே! நீ கருதிச் செய்த காரியம் என்னை?" என்று கடுத்துக் கேட்டார். இவன் உள்ளிய வுண்மையை உள்ளம் நாணி ஒளியாதுரைத்தான். உடனே சிவிகை தேர் முதலிய அரச செல்வ முழுவதையும் பரமனுக்குச் செலுத்தித் தம அரசனை மன்னித்தருளும்படி அவர் பணிந்து வேண்டினார். அவ்வாறே அப்பெருமான் அருள்புரியப் பழைய படியே இவன் தன் முகமெய்தினான். அன்றிவன் செய்தெய்திய படியை இதனடியில் காண்க.

"அன்னமோ? கிளியோ? அமிர்தமோ? திருவோ
அமிர்தமன் றமரருக் களித்த
வன்ன மோகினியோ இரதியோ பிரமன்
மனத்தினால் வகுத்த மேனகையோ
என்ன மோகமதாய்த் தனது நாட்டினிற் கொண்
டேகுவா னினைந்தன னதற்கு
முன்னமே குரங்கு முகமதாயிருந்தான்
முறுவலாயின தெவர் முகமும். (க)

மந்திரிக் கிழவர் அரசனை வினவி
மன்னவா நினைத்தவா றதனால்
வந்த இத்துயரந் தவிர்ந்திட மலைமேல்
மருந்தினைப் பணியென அவனும்
சிந்துரக்குவடும, கவனவாம பரியும,
செம்பூமணிச் சிவிகையும, தேரும்,
சந்தன மணியும் தனத்தினர் பலரும்
தமணிபக் கோயில் முன் விடுத்தான்". (உ)

இன்னவாறு விடுத்துப் பணிந்து போற்றிய பின் இறைவனருளால் தனது அழகிய திருமுகத்தை யடைந்து அணிநகர் போய்ச் சேர்ந்தான். சிறந்த முடிமன்னனாயிருந்தும் சிறிய ஓர் பிழை புரிந்ததனால் எல்லாரும் இகழ்ந்து நகைத்தார் தன் செயலால் இழிந்த படியை நினைந்து இவன் இரங்கியிருந்தான். "குன்

றுவ குன்றி யனைய செயின் குன்றின் அனையாரும் குன்றுவர்'' என்பதை உலகம இவன்பால் உணர்ந்து நின்றது.

எள்ளும் பழிவினையோர் எள்ளளவே யானாலும்
கோள்ளின் ஒழிந்தாய் குலம்.

இழிவினையை எண்ணவும கூடாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

966. பண்டு மதியாரைப் பாராமல் தேரையார்
கொண்டு நின்றார் என்னே குமரேசா—கொண்ட
புகழின்றாற் புத்தேளுட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை. (௬)

இ—ள்.

குமரேசா! தம்மை உவந்து கொள்ளாதார்பின் நயந்து செல்லாமல் தேரையார் என அமர்ந்து நின்றார்? எனின், புகழ் இன்று; புத்தேள் நாட்டு உய்யாது; மற்று என் இகழ்வார் பின் சென்று நிலை என்க.

இது, தன்னை நயவாதாரை நயக்கலாகாதென்கின்றது.
புத்தேள் நாடு = தேவவுலகம். என்றது சுவர்க்கத்தை.
புத்தேள் = தெய்வம். ஆல் இரண்டும் அசைநிலை.

"புத்தே ளுலகத் தற்றெனக் கேட்டு" (புறம்) "புத்தேளுலகம் புதல்வரும தாரார்" (மணிமேகலை) "புருகூதன் முதலாய் மூப்பத்து முக்கோடி புத்தேளிரும்" (பாரதம்) இவற்றுள் இதன் பொருளை யுணர்க. "புத்தே ளுலகத்தும் ஈண்டும் பெறலரிதே" என முன்பு வந்துள்ளதும காண்க.

உய்யாது = செலுத்தாது. உய்த்தல் = செலுத்தல்.

புகழுடையார்க்குரிய புண்ணியவுலகமாகிய அந்நாட்டில் இகழுடையார்க்கு யாதும் இடமில்லையாமாதலால் உய்யாதென்றார்.

மானங்கெட்டு வாழ்வார்க்குப் புகழும் புத்தேள் நாடும் இல்லையாம என்றதனால் பழியும பாவமும் அவர்க்கு உளவாம் என்பது தாயிற்று.

மேல், தாழ்தற்கேதுவாகிய செயல்களைச் செய்யலாகாதென்றார்; இதில், அங்ஙனம செய்யின் இருமையும இழந்து இழிவர் என்கின்றார்.

தன்னை இகழ்ந்து நிற்பார் பின் மானத்தை இழந்து சென்று ஒருவன் தாழ்ந்து நிற்கு நிலே, புகழை யுண்டாக்காது; புத்தேளுலகத்துஞ் செலுத்தாது; இங்ஙனமிருப்ப அதனை அவன் ஏன் செய்கின்றான்? என்பதாம்.

தன்னை அவமதித்து நிற்பாரை மிக மதித்துப் போற்றி இச்சகம் பேசி ஒருவன் நச்சிநிற்பனுயின் "மானங்கெட்டு இப்படி வாழ்வதைக் காட்டிலும் இந்தப் பயல் செத்துப்போனாலென்ன" என இவ்வுலகில் எவரும் அவனைப் பழிப்பர்; அதுவுமன்றி அவ்வுலகத்திலும் அவனுக்குநல முண்டாகாது; என்னை? மானம் வீரம் கோடை முதலிய உயர்நிலை யுடையார்க்கே அஃது உரிமையுடையது; இழிநிலையாளர்க்கு யாதும் இடந்தராது ஆதலால் "இகழ்வார் பின் சென்று நிலே புகழ் இன்று; புத்தேள் நாட்டு உய்யாது" என்றார்.

இங்ஙனம் ஈரிடத்தும் பேரிழவு கூட்டும் அச்சீரழிந்த நிலையினை ஆறறிவுடைய மனிதன் அறிந்து தள்ளாமல் செறிந்து கொள்ளுதல் யாது பயன் கருதியோ? என்பார் "மற்று என்" என வியந்து வினவி இகழ்ந்து வைத்தார்.

மானங் கெட்டு வாழ்வோர் இம்மை மறுமை என்னும் இருமையும் கெட்டு இழிவுறுவர் என்பது கருத்து.

மானங் கெடாது நிற்பவர் இம்மையில் புகழும் மறுமையில் இன்பமும் எய்தி என்றும் சிறந்து விளங்குவராதலால் அந்நிலையினை நினைந்து யாண்டும் நிலே தாழாமல் நின்று ஒழுகவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

கெடுவல் எனப்பட்டக் கண்ணும் தனக்கோர்
வடுவல்ல செய்தலே வேண்டும் — நெடுவரை
முற்று நீராழி வரையகத் தீண்டிய
கற்றேயும்; தேயாது சொல். (பழமொழி).

வடுவின்றி வாழ்வோரே நெடும் புகழோடு நிலைத்து நிற்பர் என மான வாழ்க்கையைக் குறித்து இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

வீர மரபினராகிய அரசர்கள் இம்மானத்தைத் தம் முயிரினும் பெரிதாகப் பேணிக் காப்பர்; "மறன் இழுக்கா மானமுடைய

தரசு" என அடிகள் முன் உரைத்துள்ளதுங் காண்க. மானம் உடையது அரசு என்றதனால் அஃதில்லாதவன் அரசனாகான் என இப்பொய்யா மொழி இதன் பெருமையை உணர்த்தி நிற்கும்அருமையை ஊன்றி யுணர்க.

"இம்மையும் நன்றாம் இயனெறியுங் கைவிடாது
உம்மையும் நல்ல பயத்தலால்—செம்மையின்
நாணங் கமழும் கதுப்பினாய் நன்றே காண்
மானமுடையார் மதிப்பு" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

தம்மை மதியாதார் வாசலில் மானமுடையார் மிதியார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தேரையார்பால் உணரப்படும்.

## கதை.

தேரையார் என்பவர் பாண்டி நாட்டிலே ஐயாதி என்னும் ஊரிலிருந்தவர். வெண்ணிறத்தினர். அதனால் ஐயாதிச் சிறு வெண்டேரையார் என இவர் அழைக்கப்பட்டார். இவர் அழகிய வுருவினர். விழுமிய நீர்மையர். சிறந்த கலைகள் பலவும் பயின்று தெளிந்தவர். புலமையும் சீலமுமுடையராய் இவர்விளங்கியிருந்தார். இங்ஙனம் பெரும் புலவராய்ச் சிறந்திருந்தும் பரிசில் கருதி எவரையும் வியந்து பாடாமல் வேறு வழியில் முயன்று வாழ்ந்தார். இவர் காலத்தில் வசுகன் என்னும் குறுநில மன்னனொருவன் பெருந் திருவோடு விளங்கியிருந்தான். அவன் சிறிது கல்வியுடையனாயினும் செருக்குமிக்குள்ளவன். தன்னைப் புகழ்ந்து போற்றாதார் எவராயினும் அவரை இகழ்ந்து தூற்றும் இழிந்த இயல்பினன். புல்லிய பாடகர் பலர் வந்து தன்னைப் புகழ்ந்து பாடிப் பொருள் பெற்றுச் செல்ல இவர் மாத்திரம் யாதும பாடாமல் நிமிர்ந்துநிற்கின்றாரே யென்று அகந்தை மேற்கொண்டு அகந்திரிந்து அவன் சினந்து நின்றான். இவர்க்கு இடர் பல விளைத்தான். என்ன விளைத்தாலும் யாதும் பொருட்படுத்தாமல் இவர் பொறுமையுடனிருந்தார். அதனால் வறுமையும் உழந்தார். உழப்பினும் அவன் பக்கம் செல்லாமல் பண்புடனின்றார். இவரது மன நிலையையும் மானம் கருதி நிற்கும மாட்சியையும் நோக்கி அவனும் மனம கலங்கினான். அவன் உணர்ந்து திருந்துமாறு

குறிப்பாகச் சில வுறுதி நலங்களை இவர் உணர்த்தி யருளினார். ஒருமுறை இவரருளிய படியை அடியில் காண்க.

"இருங்கட லுடுத்தஇப் பெருங்கண் மாநிலம்
உடை இலை நடுவணது இடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும பலரே; சுடுபிணக
காடுபதியாகப் போகித் தததம்
நாடு பிறர்கொளச் சென்று மாய்ந்தனரே;
அதனால், நீயும் கேண்மதி யத்தை வீயாது
உடம்பொடு நின்ற உயிரும் இல்லை;
மடங்க லுண்மை மாயமோ அன்றே
கள்ளி வேய்ந்த முள்ளியம் புறங்காட்டு
வெள்ளில் போகிய வியலுள் ஆங்கண்
உப்பிலாஅ அவிப் புழுக்கல்
கைக்கொண்டு பிறக்கு நோக்காது
இழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலம் கலனாக விலங்குபலி மிசையும்
இன்னா வைகல் வாரா முன்னே
செய்ந்நீ முன்னிய வினையே
முந்நீர் வரைப்பகம் முழுதுடன் துறந்தே." (புறநானூறு)

உடைமரத்தின் இலையளவுங்கூடப் பிறர்க்கு உரிமையின்றி உலகமுழுவதையும் தனியரசாண்ட முடிமன்னர் பலரும் அடியோடு மாண்டொழிந்தார்; அங்ஙனம் அரசிழந் தொழிந்தவரை அளவிடமுடியா; அவர் கடல் மணலினும் பலர்; இறவா திருந்தவர் எவருமிலர்; யமன் வருதலுண்மை; சுடுகாட்டில் பறையனிடும் பலியைப் பசாசநிலையிலுண்ணுமுன்னே நல்லதைச்செய்து உய்க; என இவர் அருள்கூர்ந்து உணர்த்தியிருக்கும் அருமையை இதில் ஊன்றிப்பார்க்க. இதனால் இவரது அறிவின்திறனும், நெறிநின்றொழுகிய நலனும், நிறையும், பிறவும் இனிதுணரலாகும். இடர்மிக அடைந்தாலும் பிறர்பின் சென்று இழிந்து நில்லாமல் மானம்பேணி இவர் இருந்த மாண்பினை மறுபுலத்தவரும் வியந்து புகழ்ந்தார். இகழ்வார்பின் சென்று நின்றால் புகழ் இல்லையாம்; புத்தேள் நாட்டும் உய்யாது; ஆதலால் அங்ஙனம் செல்லலாகாதென்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

ஒற்கந்தா முற்றவிடத்தும் உயர்ந்தவர்
நிற்பவே நின்ற நிலையின்மேல்—அற்பத்தால்
தன்மேல் நலியும் பசிபெரி தாயினும்
புன்மேயா தாகும் புலி. (பழமொழி)

திருத்தன்னை நீப்பினும், தெய்வஞ் செறினும்,
உருத்த மனத்தோ டுயர்வுள்ளி னல்லால்
அருத்தஞ் செறிக்கும் அறிவிலார் பின்சென்று
எருத்திறைஞ்சி நில்லாதே மேல். (நாலடியார்)

மான மிழந்துயிர் வாழ்கின்றான் வையமோடு
வான மிழந்து விடும்,

இகழ்வார்பின் செல்லலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

967. அன்று பகைவர் அடர்ந்தும் அருக்கனிலை
குன்றுமேதன் நின்றான் குமரேசா—என்றுமே
ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுதல் நன்று, (எ)

இ—ள்.

குமரேசா! பகைவர் மிகத் திரண்டு அச்சுறுத்தியும் அவர் பின் அடங்கி வாழ நினையாமல் அருக்க கீர்த்தி ஏன் ஆண்மையோடு அமைந்து நின்றான்? எனின், ஒட்டார்பின்சென்று ஒருவன் வாழ்தலின் அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்றுஎன்க.

இது, மானங்கெட்டு வாழ்தல் ஈனமென்கின்றது.

ஒட்டார்=பொருந்தார். அஃதாவது பகைமை கொண்டு அவமதித திருப்பார் என்க. ஒட்டுதல்=பொருந்துதல்

அந்நிலையே என்றது சென்றுவாழாமல் மானமோடு நின்ற அந்நிலையின் கண்ணேயே என்றபடி. இனி, அப்பொழுதே எனினுமாம. கெட்டான் என்றதற்குப் பொருள் கெட்டு வறியனானான் என்பதோடு நில்லாமல் அறவே அழிந்தான் என அதன் முடிவி லேற்றிக்கொள்க.

வாழ்தலின், படுதல் நன்று=மானங்கெட்டு வாழ்தலினும் அது கெடாமல் சாதல் நல்லது. இன் உருபு எல்லைப்பொருளது.

அவ்வாழ்வினும் இக்கேடு நல்லது என்றது பின் இதனால் எய்தும் பீடு கருதி என்க.

மேல், மானங்கெட்டு ஒருவன் வாழவிரும்பின் புகழும் அறமும் அவனைப்பொருந்தா என்றார்; இதில், மானங் கெடாமல் நின்று இறந்தபடின் அஃது அவனுக்கு நன்றாம் என்கின்றார்.

தன்னை இகழ்ந்து நிற்பார்பின் சென்று ஒருவன்நயந்து வாழ்தலினும் அங்ஙனஞ்செய்யாது அப்பொழுதே இறந்துபட்டானெனப் பேசப்படுதல் அவனுக்கு நல்லது என்பதாம்.

தன்னைநயவாது நிற்கும் பகைவரை ஒருவன் நயந்து வாழின் மானங்கெட்டவன் என எல்லாரும் அவனை இகழ்ந்து கூறுவர்; அதுவுமன்றி அப்பழியால் இழிந்த பிறப்பினனாய் என்றும் தாழ்ந்துபோவன்; அங்ஙனம் போகாவண்ணம் முன்பு நின்ற நிலையிலேயே நின்று மானத்தோடு இறந்துபடுவனாயின நல்ல ஆண்டகை என்று வானவரும் புகழ்வர்; மேலும் மானிகளுக்குரிய வானுலகமும் பெற்று மாண்புற்று வாழலாம்; ஆதலால் "ஒட்டார்பின் சென்றுவாழ்தலினும் அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று" என்றார். "நிலையிற்பிரியேல்" என்றபடி குலமக்கள் என்றும் தம் தலைமையோடு நிலவி நிற்கவேண்டுமேயன்றி நிலைகுலைந்து தாழலாகாதென்பது கருத்து.

மேன்மக்கள் உயிரைவிட்டாலும் விடுவரேயன்றி மானங்கெட்டு நின்று தமபகைவரைப் பின்பற்றி வாழமாட்டாரென்க.

உற்ற விடத்தில் உயிரவழங்குந் தன்மையோர்
பற்றலரைக் கண்டால் பணிவரோ?—கற்றூண்
பிளந்திறுவ தல்லாற் பெரும்பாரந் தாங்கின்
தளர்ந்து வளையுமோ தான். (ஔவையார்)

பற்றலர் = பகைவர். பற்று இல்லாதவர் என்றபடி. பற்று = அன்பு. நல்ல மானிகளின் உள்ளப்பான்மையைக் குறித்து உவமை புணர்த்தி விளக்கி இஃதுணர்த்திநிற்கும் அழகை யூன்றிப் பார்க்க.

இழித்தக்க செய்தொருவன் ஆர வுணலிற்
பழித்தக்க செய்யான் பசித்தல் தவறோ
விழித்திமைக்கும் மாத்திரை யன்றோ ஒருவன்
அழித்துப் பிறக்கும் பிறப்பு. (நாலடியார்)

மானங்கெட்டு வாழ்தலைவிட உயிரை விடுதல் நல்லது என்று ஒருகுலமகன் இதில் குறித்திருத்தல் காண்க.

இராமனோடு சேர்ந்துகொண்டால் இலங்கை அரசு முழுவதும் பெற்றுச் சிறந்துவாழலாம்; நீ விரைந்து வந்து சேரவேண்டும்; என விபீடணன் கும்பகருணனை வேண்டி நின்றபோது "தம்பி! அது மானங்கெட்ட பிழைப்பல்லவா" என்று அவன் மறுத்துரைத்தான் தன் ஆண்டன்மைதோன்ற அன்றவன் உரைத்தபடியை அடியில் காண்க

"செம்பிட்டுச் செய்தவிஞ்சித் திருநகர்ச் செல்வந்தேறி
வம்பிட்ட தெரியல்எம்முன் உயிர்கொண்டபகையைவாழ்த்தி
அம்பிட்டுத் துன்னங்கொண்ட புண்ணுடை நெஞ்சோடைய
தும்பிட்டு வாழ்கிலேன்யான் கூற்றையும் ஆடல்கொண்டேன்"
(இராமாயணம்.)

ஓட்டார்பின் சென்று வாழ்தல் ஈனமென இதில் அவன் உரைத்துள்ள மானமொழிகளையும் மனப்பான்மையையும் ஊன்றியுணர்க.

எவ்வளவுதான் பேணிவைத்தாலும் உயிர் என்றேனும் ஒருநாள் ஒழிந்துபோம்; மானமோ என்றும்அழியாது நின்று நிலவும்; இங்ஙனம் நிலையற்ற அவ்வாழ்வின் பொருட்டு நிலையான இம்மானத்தை இழத்தல் கூடாதென்பது கருத்து.

"சாவது நேர்ந்திட்டாலும், சலம்பல விளைந்திட்டாலும்
மேவிய மானந்தன்னை விடுவரோ மேன்மையாளர்;
ஆவியென்றேனும் ஓர்நாள் அழிந்திடும்; அரியமானம
லீவதின்றாகி நின்று மெய்ப்புகழ் விளைக்குமன்றே"

இறந்துபட நேர்ந்தாலும் சிறந்த மேன்மக்கள் தம்பகைவரைப்பணிந்து வாழார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அருக்ககீர்த்தியால் உணரப்படும்

## கதை.

அருக்ககீர்த்தி என்பவன் இரதநூபுரத்திரத்திலிருந்து அரசுபுரிந்த சடி மன்னனுடைய அருமைத் திருமகன். இவன் பேராண்மையுடையவன். வில்வவியில் நல்ல பயிற்சியுள்ளவன். அறிவிலும் அழகிலும் மிகச்சிறந்தவன். மானத்தை உயிரினும் பேணி

ஊக்கி நின்றவன். தன்னுடன்பிறந்த தங்கையாகிய சயம்பிரபை என்பவளை அச்சுக்கிரீவன் எனனும் முடிமன்னன் மணந்துகொள்ள விழைந்து நின்றான். தன் தந்தை அதற்கு இசைந்து கொள்ளாமையால் அவன் சிந்தை திரிந்து சினமீக் கொண்டு இடையூறுகள் பல இயற்றிவந்தான். அவன் அருந்திறலோடு பெரும்படையுடையவன், பகைவர் பலரையும் வென்று அரசரனைவரும் வணங்கத் திசைகளெங்கும் தன் ஆணையைச் செலுத்தி யுள்ளவன். இங்ஙனம் உயர்ந்து நின்ற அவன் இவனது அரசினை கவர்ந்து கொள்ளக் கருதிக் காலம்நோக்கி விரைந்திருந்தான். அமர்புரிந்து அழிவுசெய்ய அவன் துணிவுகொண்டிருத்தலை இவன் எதிரறிந்தும் யாதும் அஞ்சாது ஆண்மையோடு அமர்ந்திருந்தான். பல்வகை அல்லல்களையும் ஆற்றிவந்த அவன் முடிவில் படைகளோடு போர எழுந்தான். இடையே சில அறிஞர்கள் வந்து அவனோடு சமாதானமாய் அமைந்து வாழ்தலே நலமாமென்று இவன் தந்தையிடம் தகவுடன் கூறினார். அவன் பேரருடையனுதலால் தன் பிள்ளையைநோக்கி என்ன செய்வதென்றான். இவன் வணங்கியெழுந்து தந்தைமுன் வயங்கி நின்றான்; "பகைவரைப் பணிந்து வாழ்தலினும் உடனே இறந்துபடுதல் நன்று; மானம் அழிந்தபின் வாழலாகுமா? என் வில்லால் பகைவரை வென்றுவிடுவேன்; வேறொன்றும் கருதவேண்டாம்;" என்று அன்று பல உறுதிகள் கூறினான் சில அடியில் வருவன காண்க.

"உயிரினு மதிக்கற்பாலது; உள்ளப்பே ருறையினுள்ளது;
அயிறரும பனிக்குந்திண்மை மானநாணத்தனை யேற்றி
வயிரவில் மனத்ததாகக் கையது வையங்காககும்
செயிரில்வில்லதனைநோக்கிச்செங்கதிர்ப்பெயரன்சொன்னான்.

அடுக்திறல் வெருளிக்காற்றோடு அருக்கப்பேருடைய மேகம்
கொடுஞ்சிலை குலவகக்கோலிக குருதிநீர் வெள்ளமோடக்
கங்கணை யென்னுந்தாரை கலந்துமேற் பொழிய வேந்தர்
நடுங்கினர் பணிக்கும பொழ்தில் நம்மையுமஅறிவதென்றான்"
(சூளாமணி)

மானமாகிய நாணேற்றிய வயிரவில்லினை இவன் மனத்தில் வைத்திருந்ததும், உயிரினும் பெரிதாக அதனை மதித்து வந்ததும் புறத்தே தன்கையிலுள்ள வில்லைநோக்கி வீரமொழிகள் பலசொல்

விநின்றதும். பிறவும் இவற்றுள் விளங்குவன காண்க. இங்ஙனம் யாண்டும் தன் நிலைதாழாமல் தலைமையோடு இவன் நின்று நிலவினன். ஆனவரையும் முயன்று பார்த்தும் பகைவரை அடுத்து நில்லாமல் கடுத்து வென்று மானமோடு நின்று இவன் மாண்புற்றுவந்ததை வியந்து வானவரும் புகழ்ந்துபோற்றினர். கெட்டாலும் ஒட்டார்பின்சென்று ஒருவன் வாழலாகாதென்பதை உலகம் காண இவன் உணர்த்திநின்றான்.

மன்னுயிரா மானமா மற்றிவ் விரண்டனுள்
முன்னுயர்வேதென்று மொழிவையேல்—மன்னுயிரை
மாட்சிபெறச் செய்து வளர்த்தலான் மானமதன்
ஆட்சியுறு தாயாம் அறி. (தருமதீபிகை)

கூனொடு வெதிரேபங்கு குருடுபே ஆமையானோர்
ஊனம தடைந்த புன்மை யாக்கையோடொழியுமம்மா
மானம தழிந்து தொல்லை வலிபிழந் துலகில்வைகும்
ஏனையர் வசையின்மாற்றம் எழுமையும் அகல்வதுண்டோ.
(கந்தபுராணம்)

தம்முடை யாற்றலு மானமும் தோற்றுத்தம
இன்னுயிர் ஓம்பினும் ஓம்புக—பின்னர்ச்
சிறுவரை யாயினும் மன்ற தமக்காஞ்
சிறுவரை இல்லை யெனின். (நீதிநெறிவிளக்கம்)

மான மழிந்து மருவலர்பின் சார்தலினும்
ஈனமற மாய்தல் இனிது.

மானங்கெட்டு வாழலாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

968. ஊனோம்பல் கைவிட் டுயிர்துறந்தான் மானமெண்ணிக்
கோன்பொறையன் என்னே குமரேசா—வான
மருந்தோமற் றாமேனும் வாழ்க்கை பெருந்தகைமை
பீடழிய வந்த விடத்து. (அ)

இ—ள்.

குமரேசா! பெருந்தாகமெடுத்தும் இரும்பொறை ஏன் பகைவர் தந்த நீரை அருந்தாதொழிந்தான்? எனின், பெருந்தகை

மைபீடழிய வந்த இடத்து ஊன் ஓம்பும் வாழ்க்கை மருந்தோ? என்க.

இது, ஊனழிய நேர்ந்தாலும் மானமழியலாகாதென்கின்றது.

பெருந்தகைமை என்றது மேன்மையை. அஃதாவது குடிப்பிறப்பு குணச்சிறப்பு முதலிய நலங்களால் உயர்ந்திருக்குந் தன்மை.

பீடு என்பது பெருமை, வலிமைகளையுணர்த்திவரும். ஈண்டு மானத்தைக் குறித்துநின்றது. பெருந்தகைமைக்குஉயிராதாரமாயுள்ள மானம் அழியவந்த விடத்து உயிர்வாழலாகா தென்பதாம். பீடுபெற நில் என்றபடி என்றும் பெருந்தகைமையோடு சிறந்து நிற்கவேண்டுமேயன்றி இழிந்துபட லாகாது; காலகதியால் ஓரோவழி இழிவுறநேரின் உடனே இறந்துபடவேண்டு மென்றவாறு.

ஊன் என்றது உடம்பினை. ஓம்பல் = பாதுகாத்தல்.

வாழ்க்கைமருந்தோ என்றது மானங்கெட்டு வாழ்வது பின்பு என்றும் சாவாமைக்கு மருந்தாகுமோ? என்றவாறு. ஆகாதென்பது கருத்து. இனி மருந்து என்பதைச் சாவாமருந்தாகிய அமிர்தம் என்று கொண்டால் அவ்வாழ்க்கை என்ன அவ்வளவு இனிமையா? என்றுகொள்க.

மேல், பகைவர்பின் சென்று மானமழிந்து உயிர்வாழலாகா தென்றார்; இதில், அங்ஙன மானமிழந்து வாழ்தல் ஈனமாமென்கின்றார்.

மேன்மைக்கு நிலையாயுள்ள மானம் நிலைகுலையவந்தவிடத்து உடனே இறந்துபடாமல் உடம்பினைப் பேணிநிற்கும வாழ்க்கை பின் என்றும் இறவாமைக்கு மருந்தாமோ? என்பதாம்.

மருந்தாகாதென்பது தெளிந்த உண்மையாதலால் மானங்கெட்டு வாழ்வோரை இகழ்ந்து கூறியபடியிது.

வினைப்போகங்களை நுகரும்பொருட்டே உயிர் உடம்பிலமர்ந்துள்ளது; அவ்வினை முடிந்தால் தினைப்போதளவும் தேகம் நில்லாது; இங்ஙனம் நிலையற்றவாழ்வை நிலையாக நம்பி என்றும் நிலைத்ததுணையான மானத்தை யிழந்துவாழ்தல் மடமையாம்என்க.

மானமழிந்தாலும் ஊனோம்பி வாழலாம் அவ்வுடல் என்றும் அழியாது நின்று வருமானால்; அப்படி அது நிற்பதில்லையே; அங்ஙனமிருந்தும் சிலர் மானங் கெட்டு வாழ்கின்றார்களே; இஃதென்னே? அவர் வாழ்வது இனிச் சாவோம் என்று கருதியோ என்பார் ஊன்ஓம்பும் வாழ்க்கை மருந்தோ? என்றார்.

தன் மானம் அழியவந்தவிடத்து ஒரு குலமகன் உயிர்வாழ்க்கையை வெறுத்தான்; அப்பொழுது சிலர் வந்து தடுத்தார்; உங்கள் விருப்பின்படி யான் உடலோம்பி நிற்கின்றேன்; ஆனால் இவ்வாழ்க்கை எனக்கு இனி என்றும் இறப்பின்மையைத் தருமாயின்; அங்ஙனம் தாராததலால் நீர் தடாதொழிமின் என அவரை நோக்கித் துணிந்துரைத்ததாக இஃதனமந்துள்ளமை காண்க.

மான அருங்கல நீக்கி இரவென்னும்
ஈன இழிவினால் வாழ்வேன் மன்—ஈனத்தால்
ஊட்டியக் கண்ணும் உறுதிசேர்ந் திவ்வுடம்பு
நீட்டித்து நிற்கு மெனின். (நாலடியார்)

மானமழிந்து ஊனோம்பலாகாதென அடிகள் சுட்டியுள்ள படியை இதுவும் ஒட்டி நிற்றல் காண்க.

மானம் புகழுடம்பை வளர்த்து என்றும் நிலைபெறுத்த வல்லது ஆதலால் நிலையில்லாத இகழுடம்பை எந்திநிற்கும் உயிரைவிட உயர்வாகக் கருதி அதனை ஓம்பவேண்டும் என்பது கருத்து.

மானங்கெட்டு மேன்மக்கள் உயிர் வாழார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கணைக்காலிரும்பொறைபால் உணரப்படும்.

## கதை.

கணைக்காலிரும்பொறை என்பவன் ஓர் சேர மன்னன். தொண்டி, மகோதை எனனும் இரு பெரு நகரங்களும் இவனுக்கு இராசதானிகளா யமைந்திருந்தன. இவன் பேரறிவுடையவன். அரியகலைகள் பலவும் பயின்றவன. சிறந்த வண்மையும, உயர்ந்த வுண்மையும், திருந்திய பண்பும், அருந்திறலாண்மையும் இவன் பொருந்தியிருந்தான், பகையிருள்கடிந்து உலகினைப் பாதுகாத்து

இலங்கொளி ஞாயிறுபோல் நிலவிநின்ற இவன்மேல் செங்கணான் என்னும் சோழமன்னன் பகைமீக் கூர்ந்து பொங்கிநின்றான். அவனது நிலையினையறிந்து இவன் நெஞ்சங் கொதித்தான். அஞ்சாமையும் ஊக்கமும் யாண்டும் எஞ்சாது நின்றுதலால் தன் படைகளோடு சென்று அவன்மேல் வெஞ்சமர் தொடங்கினான். முதலில் கழுமலம் என்னும் நகர்ப்புறத்தில் கடும் போர் நடந்தது. பின்பு போர் என்னும் இடத்தில் இருவரும் பெரும் போர் புரிந்தார். அதில் உடன்வந்த படைகளழிந்தும் ஊக்கங் குன்றாது நின்று இவன் உடன்று பொருதான். வாள் வேல் முதலிய படைக் கலங்கள் யாவுமிழந்து முடிவில் இவன் உளங் கனன்று தளர்ந்து நின்றான். அவ்வமயம் அவ்வளவன் வந்து இவனைப் பற்றிக்கொண்டு போய்த் தன் அணி நகரின் மேல்பால் ஓர் தனி இடத்தில் காவலர் பலர் சூழச் சிறையிடை வைத்தான். வலையுட்பட்ட வீர மடங்கல் போல் வெகுண்டு வெய்துயிர்த்து உணவு முதலியன யாதொன்றும் உட்கொள்ளாமல் மானத்தால் புழுங்கி அங்கு இவன் அடங்கியிருந்தான். நாள் பல கழிந்தன. உடம்பு உலர்ந்தது; உள்ளந் தளர்ந்தது; உயிரிளைத்திருந்தது. அவ்வமயம் அருகுநின்ற கொடிய காவலாளர் சிறிது இரங்கிக் கொஞ்சம் தண்ணீர் கொண்டுவந்து தந்தனர். முதலில் அதனை இவன் அவாவுடன் வாங்கினான்; "இதனைக் குடித்து இனி உயிர்வாழவும் வேண்டுமோ?" என்று பின்பு நினைந்து கைக்கொண்ட கலத்தைக் கடுத்து வீசினான். அடுத்தொரு பாடலைத் தொடுத்து முடித்தான். அது இதோ வருவது.

"குழவி இறப்பினும், ஊன் தடி பிறப்பினும்,
ஆளன் றென்று வாளிற் றப்பார்;
தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய
கேளல் கேளிர் வேளாண் சிறு பதம்
மதுகையின்றி வயிற்றுத்தீத் தணியத்
தாம் இரந்துண்ணும் அளவை
ஈன்ம ரோஇவ் வுலகத் தானே" (கணைக்காலிரும்பொறை)

கேளல் கேளிர் என்றது சிறைக்காவலாளரை. உள்ளத்தே உரிமையின்றி உறவினர் போன்று அருகு நிற்றலால் அவரை இங்ஙனங் கூறினான். வேளாண் சிறுபதம் என்றது அவர் உதவியால்

வந்த தண்ணீரை. சிறு குழந்தை இறந்தாலும், தசைப் பிண்டம் பிறந்தாலும் அவற்றைக்கூட ஆளல்லவென்று தள்ளிவிடாமல் வாளாற் பிளந்தே அரசகுலத்தவர் புதைப்பர்; ஏனெனில் வீர மரபினராதலால் பொருது புண்படாமல் வறிதே மாண்டால் அவர்க்கு அது பேரிழிவாமென்பது கருதி. அத்தகைய அரசகுலம், சங்கிலியால் பிணிக்கப்பட்ட நாய்போல் சிறைப்பட்டு ஒட்டார் தந்த தண்ணீரைப் பருகி உயிர்வாழும்படியான ஒருவனைப் பெறுமோ? என்று உருகி உரைத்து மானங் கருதி இவன் ஊன் வாழ்க்கை துறந்தான் அன்று பட்டிருந்த பாட்டை இப்பாட்டில் விளக்கி இம்மன்னன் இறந்து பட்டிருக்கும் அருமையையும் ஆண்மையையும் ஊன்றி நோக்கி உணர்ந்துகொள்க. மானம் பேணி நின்ற இவனது மன நிலையை வியந்து மாநிலம் புகழ்ந்தது பெருந்தகைமை பீடழிய வந்தவிடத்து உயர்ந்த குலமக்கள் உயிர் வாழ்ந்திரார் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

விஞ்சுவான் மழையின் மேல் அம்பும் வேலும் படச்
செஞ்செவே செருமுகத் தமர் செயுந் திறனிலா
வஞ்சர்தீ வினையினல் மானமா மணி யிழந்து
அஞ்சினர் நெஞ்சுபோல் என்றுமா றுதரோ.
(இராமாயணம்)

நேர் நின்று பொருது வெல்லாமல் வஞ்சமாகப் பகைவர் கைப்பற்றிக் கொண்டபோது மானமிழந்தமையை நினைந்து மேன்மக்கள் உள்ளங் கொதித்தலைப் பாலைவனத்தோடு ஒப்பவைத்து இஃது உணர்த்தி நிற்கும் அழகை யூன்றிப்பார்க்க.

மானம் அழியவரின் மன்னுயிரை முன்னீக;
தானம் எனிற்சிறிது தந்திடுக;—வானம்
வருவதே யானாலும் வாங்கற்க; என்றும
தருவதே நன்றதையே சார். (தருமதீபிகை)

உயிரழிய நேர்ந்தாலும் ஒண்மான நீங்கார்
செயிர்தீர்ந்த மேலோர் சிறந்து.

மானத்தை, உயிரினும் பெரிதாப் பேணவேண்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

969. போரிலொரு புண்முதுகிற் பூண்டதென ஆதனேன்
கூருயிரை நீத்தான் குமரேசா—பாரில்
மயிர்நீப்பின் வாழாக் கவரிமா வன்னார்
உயிர்நீப்பர் மானம் வரின். (கூ)

இ—ள்.

குமரேசா! போரில் எய்திய சிறு புண்ணையும் பெரிதாக எண்ணிச் சேரலாதன் ஏன் உயிர்நீத்தான்? எனின், மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் மானம் வரின் உயிர்நீப்பர் என்க.

இது, மேன்மக்கள் மானமழிந்து உயிர்வாழார் என்கின்றது.

மயிர் நீப்பின் = ஒரு மயிர் நீங்கினும். நீத்தல் = துறத்தல், நீங்கல், தீர்தல். நீப்பினும் என நிற்கவேண்டிய இதில் இழிவு சிறப்பும்மை தொக்கு நின்றது.

மானம் வரின் = மானம் அழிய வந்தால். அஃதாவது அவமானம் நேர்ந்தால். ஒரு சிறுபிழை நேரினும் உயிர்விடுவர் என்பது மயிர் என்ற உவமையால் உணரநின்றது.

மேல், மானம் அழியவந்த விடத்து உயிரை வைத்திருத்தலாகாதென்றார்; இதில், அங்ஙனம் வையா தொழித்துவிடுவார் குலமக்கள் என்கின்றார்.

தன் மயிர்களுள் ஒன்று நீங்கினும் உயிர்வாழாத கவரிமானை ஒப்பார் மானம் நீங்கநேர்ந்தால் உடனே தம் உயிரை நீக்கி விடுவர் என்பதாம்.

கவரிமா என்பது மானினத்தைச்சார்ந்த ஓர் அழகிய மிருகம். கலைமான் பிணைமான் என்பனபோல இஃது இனஞ்சுட்டி நின்றது. இதன் ஆண் ஒருத்தல் எனவும், பெண் பிணையெனவும் கூறப்படும்.

புல்வாய் நவ்வி யுழையே கவரி
சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே. (தொல்காப்பியம்)

இது, கறுத்து நெய்த்து நெரிந்து செறிந்த மயிர் முடி யுடையது. வனத்தில் திரியுங்கால் தன் மயிர்த்திரளில் ஒரு மயிர் செடியில் சிக்கிக்கொண்டாலும் அவ்விடத்தைவிட்டு அகலாது நின்றபடியே நின்று பட்டினி கிடந்து இறந்துபடும். ஒருமயிரை நீக்

கச்சகியாமல் தன் உயிரை நீக்கும் இயல்பினதாதலால் இது, தம் குணநலங்களுள் ஏதேனும் ஒருசிறிது குன்ற நேரினும் உடனே உயிர் பொன்றிவிடுமியல்பினரான மேன்மக்களுக்கு உவமையாக வந்தது.

"வான்மயிர் துடக்கிற் றனுயிர் வாழாப்
பெருந்தகைக் கவரியன்ன பீடழிந்து" (பெருங்கதை)

"மானம் நோக்கிற் கவரிமாவனைய நீரார்" (இராமாயணம்)

உதயணனுக்கும், சமந்திரன் முதலிய மந்திரி மார்களுக்கும் கவரிமாவை இவற்றுள் உவமை கூறியிருத்தல் காண்க

மான மாமணி வீழ்த்துயிர்க்கு
ஊன மாமென ஓடுவீர்
ஈன வோர்மயிர்க் கேதமாம்
கானமாவது காணுமே. (சூளாமணி) என்பதுங்காண்க.

இத்தன்மை யுடைமையால் இதனை மானமா என்பர்.
"எகினம் மானமா பட்டம் கவரிமா" (பிங்கலந்தை)
"மானக்கவரி மணிவண்டகற்ற" என்றது சிந்தாமணி.

இதன் மயிர்முடி பெண்கள்கூந்தலுக்கு உவமை கூறப்படும். "கவரிமுச்சிக் கார்விரி கூந்தல், ஊசன் மேவற் சேயிழை மகளிர்" என்றது பதிற்றுப்பத்து. குறைந்தமயிருடையார் நிறைந்தமுடியுடையாரெனத்தோன்ற விரும்பி இதன் ஒட்டுமயிரையும் இக்காலத்தில் கட்டிமுடித்துக் கொள்வர்.

கவரிமா அன்னார் நீப்பர் என்றதனால் அல்லாதார் என்ன அவமானம் வந்தாலும யாதும் நாணாராய் நிமிர்ந்து திரிவர் என்பதாயிற்று. "மானமுள்ளோர்கள் தம் ஓர் மயிரறின் உயிர்வாழாத கானுறு கவரிமான் போல் கனம்பெறு புகழே பூண்பார்; மானமொன்றில்லார் தாமும் மழுங்கலாய்ச் சவுங்கலாகி—ஈனமாங் கழுதைக்கொப்பாய் இருப்பரென்றுரைக்கலாமே" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. நல்ல மானமுள்ளவனைக் "கவரிமான்கன்று" எனவும், மானங்கெட்டுத் திரிவோனை "அது கழுதை" எனவும் பொதுவாக உலகம் வழங்கிவருவதும் காண்க.

மெல்லிய நெஞ்சும், நல்லியல்புமுடைய இக் கவரிமா மலைப் பக்கங்களில் அருமையாகத் தங்கியிருக்கும். "நரந்தை நறும்புல் மேய்ந்த கவரி குவளைப் பைஞ்சுனை பருகி, அயல தகரத்தண் ணிழற் பிணையொடு வதியும்" (புறநானூறு) எனவும், "ஈரமில் குற வர் இதண்மிசைப் பொத்திய, ஆரத்தணியொடு காரகில் கழுமிய கொள்ளிக் கூரெரி வெள்ளி விளக்கிற், கவரிமானேறு கண்படை கொள்ளும்" (பெருங்கதை) எனவும்,

"சிறுகண் யானை யினஞ் சேர்ந்து சேவகங் கொளத்
துறுகல் என்றுணர்கலாத் துள்ளி மந்திம மக
நறிய சந்தின்றுணி நாற வெந்தனகள் கொண்
டெறிய வெள்கிம் மயிர்க்கவரிமா இரியுமே" (சீவகசிந்தா மணி) எனவும்,

"மெல்விரல் மெலியக் கொய்த குளநெல்லும் விளைந்தஆம்பல்
அல்லியு முணங்கு முன்றில் அணில்விளித்திரிய; ஆமான்
புல்லிய குழவித் திங்கட் பொழிகதிர்க் குப்பை போலும்
நல்லெழிற் கவரி யூட்ட நம்பியை நினைக்குமன்றே"
எனவும்,

"கற்புடை மாதர் கொங்கை, கவரிமான் மயிரின் கற்றை,
வெற்புறு வேங்கையின் தோல், வீரன்கை வெய்ய கூர்வேல்,
அற்பர்தம் பொருள்கள் தாமும், அவரவர் இறந்தாலன்றி
பொற்புறு திண்டோள் வேந்தே பொருந்திடலரியவன்றே"

எனவும் வருவனவற்றால் இம்மானமாவின் இயல்பும், நிலையும் உணரலாகும்.

பிறர் உணர்த்த வேண்டாமல் தாமாகவே உயர்குல மக்கள் மானத்தைக் காக்கும்பொருட்டுத் தம் உயிரை உகுத்து விடுவர் என்பது உவமையால் உணரநின்றது. மயிரறநேரின் கவரிமான் இயல்பாக மாண்டொழிதல்போல் மானம் அழிய நேரின் மாண் புடையார் தாமாக உயிரொழிவர் என்க.

மானம் நின்றால் உயிர்போய்விடும்; உயிரிருந்தால் மானம் போம் என்னும்படியான நிலை நேர்ந்தால் அப்பொழுது குலமகன் அவற்றுள் எதனை விரும்பிக்கொள்வன்? எனின், மானத்தையே விரும்பிக்கொள்வன். ஏனெனில் உயிர் என்றேனும் ஒருநாள் ஒழிந்துபோப; மானம் என்றும் அழியாது நின்று புகழ் விளைக்

கும் என அவன் நன்குணர்ந்திருந்தலாமெனக.

ஊனமேயான ஆனிடை யிருக்கும் உயிரினைத் துறந்தும் ஒண்பூணும்
மானமேபுரப்ப தவனிமேல்எவர்க்கும் வரிசையும், தோற்றமும்மரபும்
ஞானமேயான திருவடியுடையாய் ஞாலமுள்ளளவு நிற்றலினால்
ஈனமேயுயிருக்கியற்கை யாதலினால் என்றனன் வீமனுக்கிளையோன்.
(பாரதம்)

இது, தன் உள்ளக் கிடக்கையை உரையென்றபோது கண்ணனிடம் விசயன் சொன்னது. மானத்தை உயிரினும் சிறந்ததாக அம்மன்னன் மதித்திருந்த உண்மையையும், அவன் திண்மையையும் இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

உயர்ந்த உயிரினும் மானம் சிறந்ததாதலால் அதனை மிக உரிமையோடு பாதுகாக்கவேண்டுமென்பது கருத்து

சிறிது அவமானம் நேர்ந்தாலும் பெரியோர் தம் உயிரை ஒழித்து விடுவர் என்பது இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேரலாதன்பால் உணரப்படும்.

## கதை.

சேரலாதன் என்பவன் சேரநாட்டிலே மாக்தை என்னு நகரிலிருந்து அரசுபுரிந்த சேரமன்னன். இவன் சிறந்த போர்வீரன். பெருங்கொடையாளன். அருங்கலை விநோதன். குடிகளின்புறலே தன் கோலின் பயனெனக் குறித்து நின்றவன். உள்ளத் திண்மையிலும் உடல்வலியிலும் இவன் மிக உயர்ந்திருந்தானாதலால் சேரமான் பெருஞ்தோளாதன் என விளங்கி நின்றான். இங்ஙனம் அருந்திறலாளனாய்ப் பெருந்திருவோடமர்ந்து எங்கும் இசைபரப்பிச் செங்கோல் செலுத்திவருங்கால் கரிகாலன் என்னும் சோழமன்னனுக்கும் இவனுக்கும் இடையே கடும்பகை மூண்டது. இருபெருவேந்தரும் ஒருவரையொருவர் வென்றுகொள்ள அமயநோக்கி ஊக்கிநின்றார். வெண்ணிப்பறந்தலை என்னும ஊர்ப்புறத்தைப்போர்க்களமாகஅவன் குறித்திருந்தானாதலால் தன் பெரும்படையோடு இவன் பொங்கியெழுந்து அங்குப்புகுந்தான். இருதிறப் படைகளும் கைகலந்து கடும்போர் புரிந்தன. தனக்கு உறுதியில்லாத அவ்விடத்தில் இவன் ஊக்கிநின்று பொருது வருங்கால் அவ்வளவன் இவனது நெஞ்சைக் குறிவைத்து வாய்ப்புற நோக்கித்

தன் கூரியவேலைச் சீறியெறிந்தான். அது விரைந்துவந்து பட்டுக்கவசத்தையும் பிளந்து மார்பைத்துளைத்து முதுகுவரையும் ஊடுருவி நின்றது. அதனால் சிறிது இவன் அயர்ந்து மூர்ச்சித்தான். உடனே தெளிந்து அவ் வடிவேலை மார்பிலிருந்து பறித்துக்கொண்டு விரைந்து அவன்மேல் வெகுண்டுபாய முனைந்தெழுந்தான்; எழுங்கால் முதுகிலிருந்து உதிரஞ் சொரிந்தது; இடது கையால் தடவிப்பார்த்தான். புறத்தில் புண்பட்டதே என்று பொங்கி நாணினன்; சீ இனிப் போரும்வேண்டுமோ? என்று புலம்பிநின்று பிடித்த வேலை அயலே கடுத்து வீசிவிட்டு உயிரைவிடத் துணிந்து தன் உடை வாளுடன் போய் வடக்கமர்ந்திருந்தான். மானத்தால் உயிரை நீக்கக் கருதி இவன் அங்ஙனம் இருந்தகாலத்தில் இவனது நாடும் நகரமும் குடிகளும் நிலைகுலைந்து கலங்கியிருந்த படியைப் புலவர் பலரும் இரங்கிப் பாடியுள்ளார். கழாத்தலையார் பாடிய பாடலொன்று இதனடியில் வருதல் காண்க.

மண்முழா மறப்பப்; பண்யாழ் மறப்ப;
இருங்கட் குழிசி கவிழ்ந்திழுது மறப்பச்;
சுரும்பார் தேறல் சுற்ற மறப்ப;
உழவர் ஓதை மறப்ப; விழவும்
அகலுள் ஆங்கட் சீறூர் மறப்ப;
உவவுத்தலை வந்த பெருநாளமயத்து
இருசுடர் தம்முள் நோக்கி ஒருசுடர்
புன்கண்மாலை மலைமறைந் தாங்குத்
தன்போல் வேந்தன் முன்புகுறித் தெறிந்த
புறப்புண் நாணி மறத்தகை மன்னன்
வாள்வடக் கிருந்தனன்; ஈங்கு
நாள்போற் கழியல ஞாயிற்றுப் பகலே. (புறநானூறு)

முழவு யாழ் முதலியன ஒலியாமல், விழவு முதலியன இன்றி இவன நாடிருந்த படியை நோக்கி நொந்து தமக்கு இனி ஒரு நாளும் இனிமையாய்க் கழியாது என இவனது பிரிவினை நினைந்து புலவர் புலம்பியிருக்கு நிலையினை இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. வெண்ணிக் குயத்தியார் என்னும் பெண்மணியார் இவன் [illegible] கருதி நிறை மாட்சியை வியந்து கரிகால் வளவனிடஞ் சென்று ஓ வேந்தே! வெற்றிபெற்றதாகக் களித்துநிற்கும் உன்னைக்காட்டிலும் உன் வேல்பட்ட புண்ணை நாணிப் பொன்ற நிற்கும் புண்ணியன மிகச் சிறந்தவனேயாவன் என மானத்திறத்தினை வியந்து இவனைப் புகழ்ந்து கூறியுள்ளார். அடியில் வருதல் காண்க.

"களியியல் யானைக் கரிகால் வளவ,
சென்றமர்க் கடந்த நின் ஆற்றல் தோன்ற
வென்றோய்! நின்னினும் நல்ல னன்றே?
கலிகொள் யாணர் வெண்ணிப் பறந்தலை
மிகப்புக ழுலக மெய்திப்
புறப்புண் நாணி வடக்கிருந் தோனே." (புறநானூறு.)

இன்னவாறு அறிஞர் பலரும் புகழ்ந்து போற்ற இவன் மானங் காத்து மன்னுயிர் நீத்தான். "மயிர் நீப்பின் வாழாக் கவரிமா வன்னார், மானம்வரின் உயிர் நீப்பர்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

இவன் இறந்துபட்டபொழுது இவனுடைய படைத் தலைவர்களும் மந்திரிகளும் தாமும உயிர் தாங்காது உடனிறந்து வீர சுவர்க்கம் அடைந்தனர். அவர் அடைந்தபடியை மாமூலனார் என்னும் புலவர் அகப்பொருட்டுறையில் வைத்து மிக உருக்கமாக உரைத்துள்ளார். அதனை யீண்டுத் தருதும். பொருளை யூன்றி யுணர்ந்துகொள்க.

காய்ந்துசெலற் கனலி கல்பகத் தெறுதலின்
ஈந்து குருகுருகும் என்றூழ் நீளிடை
உளிமுக வெம்பரல் அடிவருத் துறலின்
விளிமுறை யறியா வேய்கரி கானம
வயக்களிற் றன்ன காளையொடு என்மகள்
கழிந்ததற் கழிந்தன் றோ விலனே! ஒழிந்தியான்
ஊதுலைக் குருகி னுள்ளுயிர்த் தசைஇ
வேவது போலும் வெய்ய நெஞ்சமொடு
கண்படை பெறேன் கனவ, ஒண்படைக்
கரிகால் வளவனொடு வெண்ணிப் பறந்தலைப்
பொருதுபுண் நாணிய சேர லாதன்
அழிகள மருங்கின் வாள்வடக் கிருந்தென
இன்னா இன்னுரை கேட்ட சான்றோர்
அருமபெற லுலகத் தவனொடு செலீஇயர்
பெரும் பிறி தாகி யாங்குப் பிறிந்திவட்
காதல் வேண்டிஎற் றுறந்து
போதல் செல்லா என்னுயிரொடு புலந்தே. (அகம்)

இது, தலைமகனோடு கலந்து நின்று தன் மகள் கரந்து சுரம்போனதையறிந்து நற்றாய் இரங்கியதென்க. இன்னா இன்னுரை என்

றது தம் மன்னன் இறந்துபடுதலால் துன்பமும், மானங்கருதியுள்ளமையால் இன்பமும் ஒருங்கே கொண்டமை தோன்ற நின்றது.

ஓர்பிழைசற் றாறினுமே உள்ளங் குலையுமேல்;
கூர்பழியெற் றேனுமகிழ் கோடாதே—ஓர்மயிர்தான்
பட்டால் கவரிமான் பட்டழியும்; ஓட்டவால்
கட்டாலும் போங்கழுதை கண்டு. (தருமதீபிகை)

மான மழியவரின் மன்னுயிரை ஓர்மயிர்போல்
தானே விடுக தவிர்ந்து.

மானமுடையார் ஈனமுற வாழார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

970 பண்டேன் சலபோசன் பாடழிந்த தென்றிறந்தான்
கொண்டுதொழ நின்றான் குமரேசா—கண்டீ
இளிவரின் வாழாத மான முடையார்
ஒளிதொழு தேத்து முலகு. (ம)

இ—ள்.

குமரேசா! நிலையழிந்ததென்று உயிர் துறந்த சலபோசனை உலகமெல்லாம் ஏன் தொழுது நின்றது? எனின், இளிவரின் வாழாத மானம் உடையார் ஒளி தொழுது ஏத்தும் உலகு என்க.

இது, மானத்தால் இறந்தவரை வையத்தார் போற்றுவரென்கின்றது.

இளி = இழிவு. வரின் வாழாத என்றது வந்தவுடனே இறந்துபடும் இயல்பினையுடைய என்றபடி.

ஒளி = புகழ். உலகு = உலகத்தார். ஏத்தும் = துதித்துப் போற்றுவர்.

மேல், ஏதேனும் ஓர் இளிவுறின் மானமுடையார் உயிர் வாழார் என்றார்; இதில், அத்தகையோர் என்றும் அழியாத புகழுடையராய் எல்லாராலும் போற்றப்படுவர் என்கின்றார்.

தமக்கோர் இழிவுவந்தவழி உயிர் வாழாத மானமுடையாரது புகழினை உலகத்தார் தொழுது எத்தித் துதிப்பர் என்பதாம்.

ஏதேனும் தாழ்வு நேர்ந்தபோது அதனைப் பொறுத்து நில்லாமல் மானத்தால் ஒருவன் இறந்துபடுவனாயின் அவன் சிறந்த புகழுடையனாய் விளங்கி நிற்பன்; அவன் நிலையினை நோக்கி உலகத்தார் என்றும் மதித்துப் போற்றுவர் ஆதலால் "மானமுடையார் ஒளி, உலகு தொழு தேத்தும்" என்றார்.

மானமுடையாரைத் தொழும் என்னாது அவர் ஒளியை எத்தும் என்றது என்னை?எனின், முன் நின்ற பூதவுடம்பு பொன்றி விடுமாதலால் பின் கொண்டு நிற்கும் புகழுடம்பினையே உலகத்தா ரெல்லாரும் போற்றிவருவர் எனக.

ஓர் மயிர் படினும் உயிர் வாழாத கவரிமான்போல் சிறிது இளிவுறினும் மானிகள் இறந்து படுவர் என முன் மொழிந்ததை நினைந்து அங்ஙனம்படுவதினால்வருபயன்என்னை? என்று ஒருவன் எதிர்ந்து கேட்க, என்றும் பொன்றாதஉயர்வாழ்வினைஎய்தி எல்லாரும் புகழ்ந்து போற்ற அவர் உயர்ந்து நிற்பர் என அவனை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்து கொள்க

இளி வந்தபோது இறந்துபடாமல் மானங்கெட்டு உயிர் வாழ்ந்திருந்தாலும் என்றேனும் ஓர்நாள் அழிந்துபோவர்; அங்ஙனம் போங்கால் ஒளியொன்றுமின்றிப் பழியோடுதான் பிறர் ஒழிந்து தொலைவர் ஆதலால் என்றும் அழியாதபடி ஒளியினை நிறுத்தி அழிவினையடைதல் மானமுடையார்க்கே அமையும் என்க.

அழிவுறவரினும் பழிவருவ செய்யார்; யாண்டும் புகழே புரிவார்; இன்மையுறினும் புன்மையுறார்; நிலை தவறார்; என்றுங் குன்றாது நிற்பர்; இகழ்வார் பின் செல்லார்; ஒட்டாரை ஒட்டார்; இழிந்து வாழார்; ஏதேனும் ஊனமுற நேரின் உடனே உயிரை விடுவர்; ஒளியோடுயர்வர் என மேன்மக்களது பான்மையை விளக்கி மானத்தை இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

மானமானது இருமையினும் பெருமை தரத்தக்கதோர் அருமைக் குணமாதலால் அதனை உயிரினும் இனிதாக மக்கள் பேணி வாழவேண்டும் என்பது கருத்து.

தாழ்வு நேர்ந்தவிடத்து மானமுள்ளார் உயிர் வாழார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சலபோசன்பால் உணரப்படும்.

## கதை.

சலபோசன் என்பவன் கோசலநாட்டின் மேல்கோடியிலிருந்த சிந்தூபம் என்னும் நகரிலிருந்தவன். இவன் அரிய கலைகள் பலவும் பயின்றவன். திருந்திய பண்பும் அருந்தவவொழுக்கமும் பொருந்தி நின்றவன். சதசிகை என்பவளை மணந்து நெறிவழுவாமல் நின்று இல்லறம் புரிந்து நெடுங்காலம் கழிந்தபின் ஓர் அருமைத் திருமகனைப் பெற்றான். அவனுக்குச் சுரோசனன் எனப் பெயரிட்டு இனிது பேணி வந்தான். மானமும், நேர்மையும் மருவி, ஞானசீலனாய் நிலவி இம்மனம் இவன் வாழ்ந்து வருங்கால் வானம் மூவாண்டு மழைபொழியாது நின்றது. அதனால் மாநிலம் வறந்தது. இடையே வினைவயத்தால் இவனது இரு விழிகளும் ஒளி மழுங்கின. முதிர்ந்த பருவத்தில் இவ்வாறு தளர்ந்து நின்ற இவனை அத் தவமகன் மிகத் தழுவிப் போற்றி வந்தான். இருமுதுகுரவரையும் உடனழைத்துக்கொண்டு அயலிடம் போகத் துணிந்த அவன் இடையே ஓர் அழகிய வனத்தையடைந்தான். தவநிலைக்கு இனிதாயிருந்தமையால் அதில் சிலகாலம் மூவரும் தங்கியிருந்தார். அங்கு ஒருநாள் தசரதன் வேட்டைக்கு வந்தான். கொடிய மிருகங்கள் பலவற்றையும் வேட்டையாடி முடிவில் ஓர் நீர் நிலையை நெருங்கி நின்றான். அவ்வமயம் குறுகிய வாயினையுடைய ஒரு சிறு கலசங்கொண்டுவந்து அவ் வாவியில் குனிந்து அம்மகன் நீர் மொண்டுகொண்டிருந்தான். நேர்முகங்கொண்டு காணுமல் அயலே அகன்று நின்ற அம்மன்னன் மதகரி ஒன்று வந்து நீரருந்துவதாகக் கருதி அவ் ஒலிவழியே தன் வடிக்கணையை விடுத்தான். அது விரைந்து சென்று அவன்மேல் விழுந்தது. பாவம் ! அக்குலமகன் அலறி உருண்டு அயலே வீழ்ந்தான். தவறு

நேர்ந்ததென்று கவலைமேற்கொண்டு அரசன் கடுகிவந்தான். கணை யோடுருண்டு கிடக்குமவனைக் கண்டான். உற்றதை வினவி உள் ளங் கலங்கினன். தான் சாவதற்கு நோவாமல் தன் தந்தைக்கு நீர் கொண்டுபோய்த் தருபடி அம்மைந்தன் வேண்ட அவ்வாறே மன்னன் கொண்டு மறுகி வந்தான். "வருவது யார்?" என இவன் உருகி வினவினன். அவன் உண்மையை உணர்த்தினன். உடனே ஓ வென்றலறி இவன் உருண்டு புரண்டான். துணைவியும் இவனும் அன்று பட்ட பாட்டை யார் சொல்ல வல்லார்? அரசன் இவன டியில் முடிபடிய விழுந்தான். "ஐயனே! நான் உங்களுக்குப் புதல்வனாய் நின்று வேண்டிய ஊழியங்களைச் செய்கின்றேன்; எனது அரண்மனைக்குக் கொண்டு போகின்றேன்; அங்கிருந்து இனிது வாழலாம்" என உருகியுரைத்தான். இங்ஙனம் தாழ்வு நேர்ந்தபின் இனி வாழ்வும் வேண்டுமோ? என்று இவன் மறுகி யுரைத்து மன்னனை நோக்கினன். அறியாது செய்தேன் என்று உரை செய்தபடியால் எமபோல் பிள்ளையை இழந்து நீ இறந்து படுவாய் என மொழிந்துவிட்டு மனைவியோடு இவன் உயிரை விடுத் தான்

"தாவா தொளிரும் குடையாய்! தவறிங்கிதுநின் சரணம்
காவா யென்றாய் அதனால் கடியசாபம் கருதேம
ஏவா மகவைப் பிரிந்தின றெடபோல் இடருற்றனைநீ
போவா யகலவான் என்னாப் பொன்னாட்டிடை போயினரால்"

இங்ஙனம் இவன் மொழிந்துபோன வுரையினை நினைந்து முதலில் வருந்தினனாயினும் அதுவரை பிள்ளைப் பேறில்லாதிருந்தமையால் ஒருவாறு உள்ளந்தேறி ஊழ்வினையை நொந்து அரசன் அயோத் தியை யடைந்தான். பின்பு இராமனைப் பெற்றுப் பிரியும்போது கோசலையிடம இவ்வுண்மையை அவன் உளைந்துரைத்துள்ளான். எம் போல் விடலை விளிய என்னுது பிரிய என்று இவன் முன் பேணி யுரைத்தமையால் இராமன் பிழைத்து நின்றான் என உலகம் தழை த்து நின்றது. அரசாக்கரசனாயிருந்தும் மறைவில் நிகழ்ந்ததைத் நிகழ்ந்து செருக்கிச்செல்லாமல் சலபோசன் காலில்போய்விழுந்து உண்மையை யுரைத்துப் பிள்ளையாய் நின்று பேணுகின்றேன்; பிழைபொறுக்கவேண்டுமென்று வணங்கிநின்ற பெருந்தன்மையும்,

அரசனை யாதும் இகழாமலும் தான் இறந்துபடுவதற்கு வருந்தாமலும் தண்ணீரைக் கொண்டுபோய்க் கொடுத்துத் தந்தையைப் போற்றும்படி சுரோசனன் உரைத்து நின்ற உறுதியும், உலகமுழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளும் உயர்வினையுடைய வேந்தன் வந்து புதல்வனாய் நின்று பணிபுரிந்து பாதுகாக்கின்றேன் என்று பணிந்துரைத்தும் இவன் மானங்கருதி வாழ்வொழித்து நின்ற மாட்சியும், பிறநலங்களும் இதில் ஒளிர்ந்துள்ளன வூன்றியுணர்ந்து கொள்க. முன்பு நிலைதாழாது நின்றும், பின்பு வறுமை வந்தவழி இழிந்தனயாதும் செய்யாமல் இயன்றவரை முயன்று வாழ்ந்தும், முடிவில் ஊழ்வினையால் நேர்ந்த தாழ்வினை நினைந்து உடனே உயிர் விடுத்தும் இவன் ஒளிசெய்துபோன அருமையை வியந்து உலகமெல்லாம் தொழுது நின்றது. "இளிவரின் வாழாத மானமுடையார் ஒளிதொழு தேத்தும் உலகு" என்னும் உண்மையை எவரும் காண இவன் உணர்த்தி நின்றான். (விரிவை இராமாயணத்தில் காண்க).

மானங் கருதித்தம் மன்னுயிரை நீத்தாரை
வானந் தொழுதேத்தும் வந்து.

மானம் பேணி மாண்டாரை வானம் பேணும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

மானமுடையார் என்றும் நிலைதாழாமல் நின்று திகழ்வர். சீரல்லாத செயல்களை யாண்டும் செய்யார். வறுமை யுறினும் சிறுமையுறாது அவர் பெருமை தோன்றவே நிற்பர். நிலை நீங்கினோர் தலைநீங்கிய மயிர்போல் தாழ்த்தப் படுவார். மலைபோல் பெரியராயினும் சிறிது பிழை செய்தால் அவர் சீரழிந்து போவார். தன்னை இகழ்வார்பின் சென்று வாழலாகாது. அங்ஙனம் வாழ்தலினும் இறந்துபோதல் நல்லது. பெருந்தன்மை யழியாதபடி பேணி வாழவேண்டும். மானங்கெட வந்தால் உடனே உயிரை ஒழித்துவிட வேண்டும். அங்ஙனம் மானம்பேணி ஒழிந்தாரை வானமும் வையமும் வணங்கிப் போற்றும்.

௯௭-வது மானம் முற்றிற்று.

# 98-ம் அதிகாரம் பெருமை.

அஃதாவது பெரியாரது தன்மை. அவராவார் செயற்கரிய செய்வார். அவையாவன பொறிகளை யடக்கி நெறிநின்றொழுகல், புகழ்புரிந்தெழுதல், பிறர்வசைபுரையாமை, எவர்க்கும் இதஞ்செய்தல், செருக்குமுதலிய சிறுமைகள் உறாமை என்க. இத்தலைமைக்குணங்கள் நிலை தாழாதுள்ள மானமுடையார் கண்ணே நிலைத்து நிற்குமாதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

971. உள்ளத்தே அச்சுவன்முன் ஊக்கி உயர்புகழ்மீக்
கொள்ளநின்றான என்னே குமரேசா—கொள்ளும்
ஒளியொருவற் குள்ள வெறுக்கை யிளியொருவற்
கஃதிறந்து வாழ்து மெனல். (க)

இ—ள்.

குமரேசா! அச்சுவப் பெருமகன் மிக வூக்கிநின்று அளவிறந்த உதவிகளை ஏன் பிறர்க்கு ஆக்கி வந்தான்? எனின், ஒருவற்கு ஒளி உள்ள வெறுக்கை; ஒருவற்கு இளி அஃது இறந்து வாழ்தும் எனல் என்க.

இது, பெரியார் என்றும ஊக்கிநின்று உதவுவார் என்கின்றது.

ஒளி = புகழ், பெருமை. இளி = பழி, சிறுமை.

உள்ளவெறுக்கை என்றது ஊக்கமிகுதியை. செல்வத்தை உணர்த்திவரும் வெறுக்கை என்பதை உள்ளத்தோடு இங்ஙனம் பொருத்தியது, புறத்துறு பொருள்போல் பொன்றி யொழியாது அகத்துள் நிலைத்து எல்லா ஆக்கங்களையும் விளைத்து நிற்றல் கருதி என்க. எல்லாச் செல்வங்களையும் எளிதிற் பயக்கும் இயல்பினதென்பது கருதி "இதனைத் தைரிய இலக்குமி" என்பர். அஃது இறந்து வாழ்தும எனல் = ஒளிக்கேதுவாகிய அவ்வுள்ளவெறுக்கையை யொழித்து வீணே உண்டு வாழ்வேம் என்று உள்ளி நிற்றல்.

ஒருவனுக்குப் புகழாவது அவனுள்ளத்து ஊக்கமே; அவ்வூக்கம இழந்து வீணாக வாழ்வேம் என்று கருதுதல் ஒருவனுக்கு இழிவாம் என்பதாம்.

ஒருவன் என்றதற்கு ஏற்ப வாழ்வேன் என்னாது வாழ்தும் எனப் பன்மையில் கூறியது என்னை? யெனின், உள்ளவெறுக்கையின்றி வெள்ளியனா யிருப்பினும் தன்னை உயர்ந்தவனாகவே அப்

புன்மகன் உள்ளே உள்ளியிருப்பனாதலால் அவ் ஈன இருப்பின் இயல்பு தோன்ற என்க. செயற்கரிய செயல்களைச் செய்வேம் என மேனோக்கி யெழுந்தன்மை ஊக்கமுடையானுக்கே உண்டாம்; அதனால் பிறரெவரும் வியந்துபோற்றற்குரிய சிறந்த வினைகளைச் செய்து மிகுந்த புகழோடு உயர்ந்து விளங்குவர்; அவ்விளக்கத்திற் கெல்லாம் இவ்வூக்கமே காரணமாகுமாதலால் "ஒளி ஒருவனுக்கு உள்ள வெறுக்கை" என்றார்

பெருமை என்னும் இவ்வதிகாரத்தில் முதன்மையாக ஊக்கத்தைக் குறித்தது என்னை? எனின், "உள்ளத் தனையது உயர்வு" என்றபடி எல்லாப் பெருமைக்கும் ஏதுவாய் நிற்கும் அதன் இயல்பு நோக்கி என்க.

பெருமை என்பது உயர்ந்த தன்மை ஆதலால் அஃது ஆண்டகையார்கே அமைவதாகும்.

"பெருமையும் உரனும் ஆடூஉ மேன" (தொல்காப்பியம்)

பெருமை ஆடவர்கண்ணது என ஆசிரியர் தொல்காப்பியனார் இதில் அருளியுள்ளமை காண்க. "அறிவும் கொடையும் ஆற்றலும் பொறையும்—செறிவும் நிறையும் செம்மையும் திண்மையும்—சிறுமை கூறாமையும் அருமைகூர்ந்தாய்தலும்—உரிமையோர்க்கருளலும் உள்ளியது முடித்தலும் இருமை தேர்ந் தெழுதலும் இன்னணம் வருவவும்" பெருமையின் பெற்றிகளாம் என்க.

ஊக்கமுடையராய் நின்று அரிய காரியங்களை ஆற்றி ஆக்கம் பெருக்கி யார்க்கும் உதவி இனியராய் வாழ்வோரே புகழ்நிலையெய்திப் பெரியராய் நிற்பர்; அங்ஙனமின்றி "வெந்ததைத் தின்போம், விதிவந்தால் சாவோம்" என உள்ளங்குன்றி வீணே யிழிந்து திரிவோர் ஒரு நலமும் அடையாமல் பழியோடொழிந்து போவராதலால் உள்ள வெறுக்கை ஒருவற்கு ஒளி; அஃது இறந்து வாழ்தும் எனல் ஒருவற்கு இளி; என்றார் "உரம் ஒருவற்கு உள்ள வெறுக்கை; அஃதில்லார் மரமக்களாதலே வேறு" என முன் கூறியிருத்தலும் காண்க. "உள்ளம் இலாதவர் எய்தார் உலகத்து வள்ளியம் என்னும் செருக்கு" என்பதையும் ஈண்டுச் சிந்தித்துக் கொள்க.

செயற்கரியன செய்வேம் என யாண்டும் அறிவோடமைந்து ஊக்கி நிற்போரே பெரியோராவர் என்பது கருத்து.

பெருமை என்னும் அருமைப் பதவியை ஒருவன் அடைய வேண்டுமானால் அவன் உள்ளக் கிளர்ச்சியுடையனாய் உயர்ந்திருக்க வேண்டும் என்பது குறிப்பு.

உள்ளத்தில் ஊக்கமுடையராய் நின்று அரிய உதவிகளைப் பிறர்க்கு உரிமையோடு செய்வோரே பெரியர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அச்சுவப்பெருமகன்பால் உணரப்படும்.

## கதை.

அச்சுவப்பெருமகன் என்பான்கேகய நாட்டு மன்னன். இவன் பெரியபோர்வீரன், மானமும் நேர்மையும் பருவியநெஞ்சினன். எத்துணை அரிய காரியங்களையும் எளிதில் முடிப்பேம் என்னும் எழுச்சியுடையனாய் இவன் உயர்ச்சியுற்றிருந்தான். யார்க்கும் இரங்கி உதவும் சிறந்த இயல்பினன். மகத தேயத்து மன்னனாகிய தருசகனுக்கு இவன் மிக நெருங்கிய உறவினன். அவனபால் மிகுந்த அன்பினன். அவனுடைய அருமைத் தங்கையாகிய பதுமாபதியை இவன் திருமணஞ்செய்யக் கருதியிருந்தான். அவள் அழகு குடிகொண்ட விழுமிய வுருவினள். வனப்பும் கல்வியும் வண்மையும் திண்மையும் மனக்கினிதாகிய மாண்புமுடையனாய் இவன் வயங்கியிருந்தானாதலால் அவளும் இவனை உவந்துகொண்டிருந்தாள். தருசகனும் தருவதாக உறுதிசெய்திருந்தமையால் இனிய நாளொன்றில் பரிச முதலியன கொண்டு உரிமையாளரோடு இவன் மகத நாடணுகித் தன் வரவினை அம்மன்னனுக்கு உணர்த்தினான். உணர்த்தவே அவன் மகிழ்ச்சி கூர்ந்து மிக்க சிறப்போடு வந்து இவனை எதிர்கொண்டழைத்தான். அன்று அவன் அழைத்தபடியை அடியில் காண்க.

"மின்னுறழ் சாயற் பொன்னுறழ் சுணங்கிற்
பண்ணுறும் இன்சொற் பதுமா நங்கை
ஆகந் தோய்தற்கு அவாஅ நெஞ்சமொடு
பாசிழை நன்கலம் பரிச முந்துறீஇக்

கேழ்கிளர் மணிமுடிக் கேகயத் தரசன்
அளவிலாற்றல் அச்சுவப் பெருமகன்
மகதம் புகுந்து மன்னிய செங்கோற்
றகைவெந் துப்பிற் றருசகற் கிசைப்ப
ஏற்றெதிர் கொள்ளும் இன்பக் கம்பலைக்
கூற்றெதிர் கொள்ளாக் கொள்கைத் தாகப்
புரவியும் யானையும் பூங்கொடித் தேரும்
விரவிய படையொடு தருசகன் போதரப்
போது பிணைத்தன்ன மாதர் மழைக்கண்
நன்றொடு புணர்ந்த நங்கை மணமகன்
இன்றிவண் வருமென இல்லந்தோறும்
எடுத்த பூங்கொடி இருங்கண் விசும்பகம்
துடைப்ப போல நடுக்கமொடு நுடங்கத்
தேர்செலத் தேய்ந்த தெருவுகளெல்லாம்
நீர்செல் பேரியாறு நிரந்திழிந் தாங்குப்
பல்லோர் மொய்த்துச் செல்லிடம் பெறாஅது
ஒல்லென் மாக்கடல் உவாவுற் றன்ன
கல்லென் நகரங் காண்பது விரும்பி
மழை நிரைத் தன்ன மாடந் தோறும்
இழை நிரைத் தில்லக வேறி இறைகொள
மலைதலைத் தொகை யன்ன மாட மாநகர்
தலைத்தலைப் போந்து தலைப்பெய் தீண்டி
இடுமணி யானை இரீஇ யிழிந்து தன்
தொடியணி தடக்கை தோன்ற வோச்சி" (பெருங்கதை)

என்றபடி இவனை ஆன்ற பெருமையோடு அவன அழைத்துச் சென்றான். இங்ஙனம் இவன் அங்குச் சென்றிருந்தபொழுது முன்னரே பகைகொண்டிருந்த அரசர் அம்மன்னன்மேல் படையெடுத்து வந்து அயலிடத்தே பாசறைசெய்து நின்றார். அந்நிலையினையறிந்து உதயணன் முதலிய உரிமையாளரையும் படைகளையும் அவன் ஊக்கி விடுத்தான். இவனும் உடன் செல்வேன் என்று உள்ள வெறுக்கையோடு துள்ளி எழுந்தான். மணமகனைப் புதுவதாக வந்துள்ளமையால் செல்லலாகாதென எவ்வளவோ சொல்லித் தடுத்தும் யாதும் நில்லாமல் போர்மேல் பொங்கி யெழுந்தான். இவன் எழுந்

கால் எண்ணிச் சொல்லியபடியை அனைவரும் எண்ணி வியந்தார். இவன் அன்று கருதியன அடியில் வருவன காண்க.

"கலிகெழு மைத்துனன் கருத்து நோக்கி
முற்கிளை வேண்டுநர் மற்றவர்க் கியைந்த
வெற்றந் தீர்க்கினது பிற்பயம் பெருகும்
மற்றுமன் றிப் பற்று மன்னர்
மேல்வந் திறுப்ப வெல்பல படையொடு
மாயா திருப்பிற் கிளையோ? மற்றிவன்,
வேற்றோ னெனவும், மாற்றான் எனவும்,
போற்று மன்னர் புறஞ்சொற் படுமெனக்
கேகயத் தரசனும் கிளந்துபல எண்ணிக்
காவல் வேந்தனைக் கண்டுகை கூப்பி
வானோர் பெரும்படை வந்ததாயினும்
யானே அமையும் அடிகள் என்னை
விடுத்தற் பாற்றென" (மகத காண்டம்)

இங்ஙனம் எடுத்து இவன் இசைப்ப அவன் இசைந்து விடுத்தான். இவன் விரைந்து சென்று முனைமுகத்தில் முனைந்து புகுந்தான். ஆளமரமுவத்துள் கோளரிபோல் பாய்ந்து கொடுஞ்சமர் புரிந்தான். அரிய வெற்றிகள் பல ஆற்றி முடிவில் முடிந்தான். இவன் இறந்து பட்டதையறிந்தபோது தருசகன் மிக வருந்தியழுதான். எவ்வழி பொருது இவன் எவ்வழி மடிந்தான் என உடன்போயிருந்த உதய குமரன்பால் விழைந்து வினவி உண்மையை யோர்ந்து அவன் உள்ளமுருகினான்.

"எடுத்த பெரும்படை எழுச்சியும் இறுதியும்
பரப்பும் சுருக்கும் பாழியும் அறியான்;
விலக்கவு நில்லான்; தலைக்கொண் டோடித்
தமரையுந் தீர்ந்து நமரையு நண்ணான்,
கேளல் மன்னன் வாள்வாய்த் துஞ்சி
மாக விசும்பின் இன்றுயில் ஏற்றனன்
கேகயத் தரசன்; எனவது கேட்டே
என்கடன் தீரேனாயினேன்; அவன்
தன்கடன் தீர்ந்து தக்கது ஆற்றினன்."

இவன் பொருதுபட்ட படியை உதயணன்பால் கேட்டுத் தருசகன் உளைந்துரைத்த உண்மையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. ஊக்கி யெழுந்து உதவிநின்ற இவனது உள்ளப் பெருமையையும் வள்ளற் குணத்தையும் அனைவரும் போற்றிப் புகழ்ந்தார். நிறையுடைய ஞாய் நெறியோடு அமர்ந்து செயலருஞ் செயல்களைச் செய்து நின்ற மையால் பெரியோனென இவன் சிறந்து திகழ்ந்தான். ஊக்க மிழந்து ஒளிகெடுந்தவர் இளிந்து மறையத் தன் உள்ளவெறுக் கையால் ஒளிமிகப் பெற்று இவன் உயர்ந்து விளங்கினான். "ஒளி ஒருவற் குள்ள வெறுக்கை; இளி ஒருவற்கு அஃதிறந்து வாழ்தும் எனல்" என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

மண்டு புகழ்செய்து வாழும் பெருமைகீழ்
உண்டு புலையும் உடல்.

அரியன செய்து அருள்புரிதலே பெருமையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

972. சேர்ந்தா ரிழிந்துநின்றார் செய்வினையால் சம்புவனேன்
கூர்ந்து சிறந்தான் குமரேசா—சார்ந்த
பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான். (உ)

இ—ள்.

குமரேசா! உடன்பிறந்தா ரெல்லாரும் இழிந்து நிற்பச் சம்புவன் ஏன் தன் செயலால் சிறந்து நின்றான்? எனின், எல்லா உயிர்க்கும் பிறப்பு ஒக்கும்; செய்தொழில் வேற்றுமையான் சிறப்பு ஒவ்வா என்க.

இது, பெருமை பெறுதற்குரிய உரிமை கூறுகின்றது.

பிறப்புஎன்றது மக்கட்பிறப்பை. சிறப்பு = பெருமை. எல்லா உயிர்க்கும் என்பதில் உம்மை எஞ்சாமையை உணர்த்தி நின்றது.

செய்தொழில் என்றது மக்களால் செய்யப்படுங் கருமங்களை.

பிறப்பு இறைவனருளால் எல்லாருக்கும் பொதுவாக இயற்கையிலமைந்துள்ளது; சிறப்பு அங்ஙனமின்றி மக்கள் முயற்சியால்

உண்டாம் ஆதலால் அதனைப் பெறுதற்குச் செய்தொழிலை எதுவா களடுத்துக் காட்டினர். ஈண்டுப் பிறப்பினை இழுத்தது எற்றுக் கெனின், "அரிதரிது மானுடராதல் அரிது" என்றபடி அருமை யான இம்மக்கட்பிறவியைப் பெற்றதனால் மட்டும் பெருமையை அடைந்துவிட முடியாது; அதனை அடைதற்கு வேறு சிறந்த வினைகளைச் செய்தாகவேண்டும் என்பது தெளிவாக விளங்க என்க.

மேல், பெருமை உள்ளத்தில் உள்ளதென்றார்; இதில், அது செயலால் எய்தும் என்கின்றார்.

எல்லா மக்களுக்கும் பிறப்பியல்பு ஒத்திருக்கும்; ஆயினும் செய்கின்ற தொழில்களின் வேறுபாட்டால் சிறப்பியல்புகள் ஒவ் வாஎன்பதாம்.

உருவத்திலும், கைகால் முதலிய உறுப்புக்களிலும், உண் ணல் உறங்கல் உடுத்தல் முதலிய நிலைகளிலும் மக்களெல்லாரும் ஒரே தன்மையராய் ஒத்திருக்கின்றனரே; இவருள் இவர், பெரியர்; இவர், சிறியர்; என ஒருவரை எவ்வாறு தரங்கண்டு தெரிவது? எனின், எவர் புகழறங்களுக் கேதுவாகிய சிறந்தசெயல்களைச் செய் கின்றாரோ அவரை உயர்ந்தோர் எனவும், அல்லாதாரை இழிந் தோரெனவும் தெளிந்துகொள்ள வேண்டுமென்றபடி.

தோற்றமும் ஏற்றமும் வேறு வேறும் என்பது இது தோன்ற நின்றது.

உப்பும், கர்ப்பூரமும் நிறத்தில் ஒத்திருந்தாலும் தரத்தில் ஒவ்வாது; அதுபோல் மக்கள் பிறப்பில் ஒத்திருந்தாலும் சிறப்பில் ஒவ்வார்.

கற்பூரம் போலக் கடலுப் பிருந்தாலும்
கற்பூர மாமோ கடலுப்பு—பொற்பூரும்
புண்ணியரைப் போல இருந்தாலும் புல்லியர்தாம்
புண்ணியரா வாரோ புகல். (நீதிவெண்பா.)

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

சிறப்புறுதற்கு வேறுகூறாது செயலை யுணர்த்தியது "பெரு மைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம் கருமமே கட்டளைக்கல்" என்றபடி பெருமை அவரவர் செய்கையாலேயே எய்து மாதலால் என்க.

ஒத்தபிறப்பினையுடைய மக்களாயிருந்தும் சிலர் தத்தம் சித்தநிலையாலும் செயல் நலங்களாலும் சிறந்து விளங்குகின்றார்; பலர் அங்ஙனமின்றி இழிந்துபடுகின்றார்; ஆதலால் பிறப்புற்றாலும் சிறப்புறுதற்கு வேறுசெய்து தீரவேண்டும் என இஃதுணர்த்தி நிற்கும் அழகை யூன்றி யுணர்க.

குமணனும் அமணனும் ஒரேதாய்வயிற்றில் பிறந்தவராயிருந்தும் முன்னவன் தனது அரியசெயலால் பெருமை எய்தினன்; பின்னவன் சிறுமை யுற்றே யிருந்தான்; ஆதலால் பெருமையுற வேண்டின் அருமையுடையன ஆற்றவேண்டும் என்க.

நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும், தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும்—நிலையினும்
மேல்மேல் உயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான். (நாலடியார்)

உயர்வுந் தாழ்வும் அவனவன் கையகத்தே யுள்ளன என இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

பெறுதற்கரிய மக்கட்பிறப்பைப் பெற்றிருந்தாலும் பெருந்தன்மையிலராயின் அவர் இழிக்கப்படுவர் என்பது குறிப்பு

பிறப்பில் ஒருவன் தாழ்ந்தவனா யிருந்தாலும் அறங்கனிந்த சிறந்த செயல்களைச் செய்வானாயின் எவரினும் அவன் உயர்ந்து விளங்குவான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சம்புவன்பால் உணரப்படும்.

## கதை.

சம்புவன் என்பவன் மகதநாட்டின் வடகீழிருந்த அமரகம் என்னும் நகரிலிருந்தவன். இவன் மறவர் மரபினன். ஊக்கமும் துணிவும் உண்மையுமுடையவன். பல நூல்களிலும் நல்ல பயிற்சியுள்ளவன். தனது அருந்திற லாண்மையால் பெரும்பொருளீட்டிக் குறுநில மன்னனாய் மறுபுல வேந்தரும் புகழப் பெரு மகிழ்வோடு இவன் விளங்கியிருந்தான். இங்ஙனம் நிறைந்த திருவமைந்து சிறந்திருந்தும் செருக்கு முதலிய சிறுமைகள் யாதும் இலனாய் யாவர்க்கும் இதம்பல புரிந்தான். இவனது பெருந்தன்மையையறிந்து அருந்தவர் பலரும் இவன்பால் அன்புமீக் கூர்ந்தார். எண்ணிய யாவும் எய்திப் புண்ணிய நீரனாய் இன்னணம் புரிந்து

வருங்கால் இவ்வுலக நிலையை வெறுத்து அரிய விரத வொழுக்கங்களை மேற்கொண்டான். பின்பு அடவியை யடைந்தான். உடலோடு துறக்கம் அடையவேண்டும் என்னும் உறுதி பூண்டான்; கனி காய் சருகுகளையும் துறந்து பருகு நீரையு மறந்து அரியமாதவ புரிந்தான். பன்னெடுங் காலங் கழிந்தும் தன்னுளங் குன்றாமல் உன்னியதையே யுன்னித் தலைகீழாய் நின்று உறுதவ முஞற்றினான். அககாலத்தில் ஓர் முனிவன் புதல்வன் இளமையில் இறந்துபோனான். பெற்றோ ரிருவரும் அவனை யெடுத்துக்கொண்டு திருவயோத்தியை யடைந்து இராமன் திருமுன் வைத்து மறுகி யழுதார். "தந்தைதாய் யாமிருப்பத் தனயன் இவ்வாறிறந்தொழிதல் தகவோ தேவர்—சிந்தையுறு துயர்நீத் திருநகரந் தீர்ந்தளித்த தேவே!" என்று அவர் தேம்பி நின்றார். அவரது மறுக்கத்தைநோக்கி இராமன் இரக்கமீக்கொண்டு இவ்வண்ணம்முறைகேடு நேர்ந்ததற்குக் காரணம் யாதென்று அருகிருந்த நாரதரை வினவினான். அவர் முன்னதாகவே இவன்மேல் பகைமை கொண்டிருந்தார். சூத்திரனாய்ப் பிறந்திருந்தும் அந்தணரும் ஆற்றமுடியாத அரிய தவத்தைச்செய்து பெரியவனா யுள்ளானே யென்று அவர் கருவுற்றிருந்தமையால் அந்த இழவுக்கு இவனே காரணமென இசைத்துரைத்தார். வருணாச்சிரமதருமங்கள் மாறுபட்டால் நாட்டில் ஊறுபடும் என்று அவர் வேறுபட்டுரைத்ததைக் கேட்டு அவ் வீரமூர்த்தி உண்மையை யுய்த்துணர்ந்து இந்த நிறைதிறத்தும உறுதியை நாடினான். மனித வுடம்போடு தெய்வ உலகத்தை யடைய வேண்டுமென்று இவன் எண்ணி நின்றான; அவ்வாறு எய்தலரிது ஆதலால் அதற்கு ஏற்றவண்ணம் செய்ய எண்ணி அவ்வேந்தல் எழுந்தான். செம்பொற்றேரிலேறி இவன்பால விரைந்தடைந்து சில வினவி யறிந்தான். பின்பு தனது உடைவாளையுருவி இவனது தலையற வீசினான். உடனே இவன் தெய்வயாக்கையோடு திகழ்ந்து தோன்றி "ஐயனே! நீ செய்தது மிகச் சிறந்தது; வரன்முறையைப் பேணி எனக்கு உறுதியைவிளைத்தாய்; உனக்கு வேண்டிய வரம் யாது?" என இவன் விழைந்துகேட்டான. இறந்த அக்குழந்தையை எழுந்து வரும்படி அவ்வள்ளல் குழைந்து வேண்டினான. அவ்வாறே அருள்புரிந்து இவன் அயனுலகடைந்தான். தன் மரபினர் முதலாக இவன்காலத் திருந்தவரெ

வரினும் பனைநலத்தானும் வினைநலத்தானும் மேன்மை யெய்தி இவன் விளங்கி நின்றான். ஒத்த பிறப்பினராய் நின்ற அனைவரும் இவன் உயர்வினை வியந்து உவந்து போற்றினர். எல்லாவுயிர்க்கும் பிறப்பு ஒக்குமேனும் செய்தொழில் வேற்றுமையான் சிறப்பு ஒவ்வா என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். இவன் பெருமையைப் பல நூல்களும் புகழ்ந்துள்ளன. அடியில் வருவதும் காண்க.

குடதிசையும் வடதிசையும் குணதிசையும் குறிக்கொண்டு நாடிப்பின்பு
திடமிசையுங் காகுத்தன் தென்திசைமேல் மாதவனைத் தேடிச்செல்வான்
புடைபரந்த புண்டரிகப் பூவணைமேற் பேடையொடும் அன்னம் வைகும்
தடமருங்கு கான்மேலாய்த்தலைகீழாய்த்தவஞ்செய்வான் றன்னைக்கண்டான்.

சிறைவாவல் தூங்குகின்ற சேதியென்னத் தூங்குமவன் றன்னைச்சேர்ந்து
குறையாதபேரழகுக் கொண்டல்நிறக் கருணைநெடுங் கோமான் கூறும்
மறையவனோ? மன்னவனோ? வைசியனோ? சூத்திரனோ? வாக்காற்பொய்ம்
மை, அறையாதிக் குனையுள்ளபடியெல்லாம்பகர்தியென அவனும்பன்னும்.

தும்பைமலர்த் தொடையவினாய்! சூத்திரயோனியில் வந்துதோன்றியுள்ளேன், சம்புவன் என்பேர்; இக்குத்தவஞ்செய்யும்காரணம் இச்சரீரத்தோடும், உம்பருறை பொன்னுலகுமுறவென்றான்; உறைவாளை யுருவியோச்சிக்
கம்படியில் விழவெறிந்தான் கருமுகில்போற்றிருமேனிக் கமலநாபன். (௩)

விண்ணவர்பூ மழைபொழிய, வேதியராசிகள்கூற, வேலைசூழ்ந்த
மண்ணதனில் நிகழ்வருண தன்மத்தை வரம்பழித்து நின்மைமாண்டேன்.
புண்ணியஞ்செய் தோரெண்ணும் பொன்னுலகும் புகலரிது புரைதீர் நின்
னுள், கண்ணியதோர் வரம்வேண்டிக் கொள்ளென்னக் கார்மேனிக்
கண்ணன் கூறும். (௪)

மறுகுபெருந்து பருடைய மறையவன்சேய் அத்தலத்தின் மாண்டோனுவி
பெறுவகைவேண்டுவனென்னப்பெருந்தவனும் ஆவனுவிபெற்றானென்றுன
செறு வி இந்திரனுதிதேவர்களும், சீதரனும் தீயபாவம்
குறுகரியமாதவரும் குறுமுனிவாழ் தவவனத்தைக் குறுகினரால். (௫)
(உத்தரகாண்டம்)

இவனது வினைத்திறமும், மனப்பான்மையும், வியத்தகுபெருமையும் இதன்கண்ணும் குறிக்கப் பட்டிருத்தல் காண்க.

நின்ற குலத்தால் நிறைதிருவால் நற்பெருமை
ஒன்று துளத்தால் உறும்.

சிறப்புறு செயலாலன்றிப் பிறப்பினால் மட்டும் பெருமையுண்டாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

973. சார்ந்துகீழ் நின்றும் சடையன் வழுதியினும்
கூர்ந்துயர்ந்தான் என்னே குமரேசா—சேர்ந்துபோய்
மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர். (௩)

இ—ள்.

குமரேசா! தாழ்ந்திருந்த சடையன் உயர்ந்திருந்த வழுதியினும் ஏன் சிறந்து விளங்கினான்? எனின், மேல் அல்லார், மேலிருந்தும் மேல் அல்லர்; கீழ் அல்லவர், கீழிருந்தும் கீழ் அல்லார்; என்க.

இது, அருமைக் குணமுடைமையே பெருமைக்கிடமா மென்கின்றது.

மேல் அல்லார் = மேன்மையான குணங்களில்லாதார்; கீழ்மையோர் என்றபடி. அவராவார் புன்மையும் வஞ்சமும் பொருந்திய நெஞ்சம், வன்மையும் பொய்மையும் மருவியசொல்லும், நன்மையவா நவையுறு செயலுமுடைய வெம்மையாளர் என்க.

கீழ் அல்லவர் என்றது மேலோரை. அவராவார் கொடுத்து உவத்தல், அடுத்தவர்ப் புரத்தல், கடுத்துரையாமை, இனித்தசெயல் இன்னருள்புரிதல் முதலிய உயர்குணங்களை யுடையோர் என்க.

மேல், சிறப்பான செயலாலன்றிப் பிறப்பினால் மட்டும் பெருமையை ஒருவன் அடைந்துவிட முடியாதென்றார்; இதில், செல்வ அதிகாரங்களாலும் அதனைச் சேர இயலாதென்கின்றார்.

பெருந்தன்மையில்லார் உயர்வான இடத்திலிருந்தாராயினும் அவர் பெரியராகார்; அத்தன்மையுள்ளார் தாழ்வான இடத்திலிருந்தாராயினும் அவர் சிறியராகார் என்பதாம்.

மேல் என்றது உயர்ந்த பதவியை. அஃதாவது உன்னதமான ஆதனங்களமைந்த சாதன நிலைகள் என்க.

கீழ் என்றது தாழ்ந்தவறுநிலத்தை.

செல்வம் அதிகாரங்களையடைந்து உயர்ந்த அமளியின்கண் நிமிர்ந்திருந்தாலும் உள்ளத்தே இழிகுணங்களை உடையராயின் அவர் சிறியரேயாவர் என்பார் "மேல் இருந்தும் மேல்அல்லார் மேல் அல்லர்" என்றார்.

புறத்தே பொருள்நிலைகுன்றி வறுமையுற்று வறுநிலத்திலிருந்தாலும் அகத்தே பெருந்தன்மை யுடையாராயின் அவர் எவரினும் பெரியராக மதிக்கப்படுவர் என்பார் கீழிருந்தும், கீழ்அல்லார் கீழ் அல்லவர்; என்றார்.

பெரியோர் சிறியோர் என்பன பெருமை சிறுமை என்னும் இயல்நலங்களால் கணிக்கப்படுமே யன்றி இடநிலையால் கணிக்கப் படாதென்றபடி.

குலத்தாலும் செல்வத்தாலும் சிறந்து, புறத்தில் மிக உயர்ந்திருந்தாலும் அகத்தில் பெருந்தன்மை யில்லாதானைப் பெரியனாக அறிஞர் மதியார் என்க.

"ஐதுகுடியிற் பிறந்தருநூல் ஆய்ந்து செல்வத்துயர்ந்ததனால்
எய்தலரிது பெருமை; அஃதெய்தும் கொடைஒப்புரவாதி
செய்தற்கரிய செய்து, பிறர்செயிர் கூறாமல், தருக்காமல்,
உய்திநெறியிற் பிறழாமல், ஒழுகுவார்க் குள்ளுறிமைந்தா"

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

புனித நீர்மையோடு எவர்க்கும் இனியராய் நின்று அரியன செய்வோரே பெரியராவராதலால் அங்ஙனம் செய்து உயரவேண்டும் என்பது இதன் திரண்டபொருளாம்.

செல்வம் அதிகாரமுதலியவற்றால் சிறந்திருந்தாலும் பெருந்தன்மையிலராயின் அவர் பெரியராகார் என்பதும், அதனையுடையவர் அவற்றிற் குறைந்திருந்தாலும் எவரினும் அவர் உயர்ந்து விளங்குவர் என்பதும் இதில் உணர்த்தப் பட்டன. இவ்வுண்மை சடையநாதன் பால் உணரப்படும்.

## கதை.

சடையநாதன் என்பவன் தொண்டைநாட்டிலே புழற்கோட்டத்திலே அயன்றை என்னும் ஊரிலிருந்தவன். இவன் பெருந்தன்மை யாளன். வருந்திவந்தவரெவர்க்கும் அருந்துணையாய் நின்று விருந்துபுறந்தந்து விரும்பியயாவும்உதவி இரும்புகழ் படைத்தவன். புலவர்கள்பால் பேரன்புடையவன். உலகம் நலமுற அரிய நிதிகளை இனிது விதிக்கும் அதிபதிகளென அவரை இவன் கருதிப்போற்றினன். தனக்கமைந்திருந்த பொருள்வள முழுவ

தையும் இரவலர்க்கே இவன் உளமுவந்து தந்தான். "உள்ளி உள்ளமெலாம் உவந்தீயும் நல்வள்ளியோன்" என யாவரும் வாழ்த்தியேத்த இவன் வாழ்ந்து வந்தான். யாதும் இல்லையென்னாமல் ஈந்துவந்த இவனது வள்ளன்மையை வியந்து மறுபுலத்தவரும் புகழ்ந்து துதித்தார். இவன்றன் வண்மையைக் குறித்துப் புலவரொருவர் புகன்றுள்ளபடியை அடியில் காண்க.

> "இரவ லாளரே! பெருந்திரு வுறுக;
> அரவுமிழ் மணியும், அலைகட லமுதும்,
> சிங்கப் பாலும், திங்கட் குழவியும்,
> முதிரை வாலும், குதிரை மருப்பும்,
> ஆமை மயிரும், அன்னத்தின் பேடும்,
> ஈகென இரப்பினும் இல்லெனல் அறியான்;
> சடையனை அயன்றைத் தலைவனை
> உடையது கேண்மின் உறுதியாராய்ந்தே"

இல்லையென்று ஒன்றும் சொல்லமாட்டான் ஆதலால் இவ்வுலகில் உள்ளபொருளை யன்றி இல்லாததொன்றை இவனிடம் போய்க்கேட்டுவிடாதீர் என இரவலரை நோக்கி அப்புலவர் இதில் இரங்கியுரைத்துள்ளமை காண்க. இதனால் இவனது மனப்பான்மையும் மாட்சியும் இனிதுணரலாகும். இவன் காலத்தில் வழுதி மரபைச் சார்ந்த அரசன் ஒருவன் இருந்தான். அவன் அநுலோமர்வழியில் வந்தவன். ஓர் பாண்டிய மன்னனுக்குப் பணிப்பெண்டிர்பால் பிறந்தவன்கால்வழி வந்தவன். "உயர்ந்தஆணினும் இழிந்தபெண்ணினும்—வியந்த கூட்டத் தவரநு லோமர்" என்பதுங் காண்க. இங்ஙனம் வந்த அவன் ஈண்டிய திருவினனாய் இருநிலம் புரந்து வேண்டிய போகங்களை நுகர்ந்து விளங்கியிருந்தான். நாடகம் கூத்துமுதலிய காட்சி யின்பங்களிலும் காமச்சுவையிலும் கண்ணூன்றி நின்றான். அக்காலத்தில் காமினி என்னும் கழைக்கூத்தி அவ் ஆட்டத்தில் மிகக் கீர்த்தி பெற்றிருந்தாள். அவள் கூத்தியாயினும் குணநலமுடையவள். பல நூல்களும் பயின்று புலமை வாய்ந்திருந்தாள். அவளது அருந்தொழிலைக் கண்டு இச்சடையன் பெரும்பொருள்கொடுத்துப் பேணி நின்றான். அவளும் இவனைக் குலதெய்வமாகக் கொண்டாடி வந்தாள். வருங்கால் ஒருநாள்

அவளைத் தன்முன்வந்து ஆடும்படி அம்மன்னன் பணித்தான் அவ்வாறே அங்கு அவள் சென்று ஆடினாள். ஆடுங்கால் விச்சுளிப் பாய்ச்சல் என்னும் ஓர் அரிய தொழிலை அவள் அழகுறச் செய்தாள். அஃதாவது உயர்ந்த கழைநுனியிலிருந்து தன் காதணியாகிய வைர த்தோட்டைக் கழற்றி எறிந்து அது கீழ்விழு முன்னம் விரைந்து பாய்ந்து தன்காதில் கோதிக்கொண்டு மீண்டு மேல்நோக்கி யெழுந்து முன்னிருந்த இடத்தில்போய் அமர்ந்திருத்தல். மீன்கொத்திப் பறவைபோல் தான்கொத்திச்சென்று வான்தொத்தியிருக்கும் அவ் வருந்தொழிலை அவள் ஆற்றுங்கால் அவன் அருகிருந்த காமக்கிழத்தி மேல் கண்செலுத்தி யிருந்தானாதலால் அவ்வருமைக் காட்சியைக் காணாதொழிந்தான். மறுபடியும் அதனை ஆடிக்காட்டும்படி அவளை வற்புறுத்தினான். அருமையறியாமல் அகஞ்செருக்கிக் கூறும் அவனது சிறுமைக்கிரங்கி அவள் சிந்தை நொந்தாள். "ஆறுமாதம் இடைகழிந்தாலன்றி அதனை ஆற்றமுடியாது; அது வாயுத்தம்பன த்தால் அமைவது; உடனே இனி வலிந்துசெய்வனேல் உயிர் பிழையாது; இறந்துபடுவேன்" என எவ்வளவோ அவள் வருந்தியுரைத்தும் அவன்யாதும் உணராமல் "சும்மா செய் பார்ப்போம்" என்று செம்மாந்திருந்தான். அவள் சினந்து மேலேறினாள் தன்கூத்தருமை யறியாத அக்கூத்தியர்கோலன்முன் தான் சாகும்படி நேர்ந்ததே என வேகின்ற சிந்தையளாய் வெய்துயிர்த்து அந் நெடிய கழைநுனியில் அவள் நிமிர்ந்து நிற்குங்கால் இச்சடையனை நினைந்தாள். தனது அருமையறிந்து பேணிய இவனது பெருமையையெண்ணி யெண்ணிக் கண்ணீர் மல்கினாள். தான்படும் பாட்டை இவனிடம் கூறும்படி அடுத்துப்போகும் பறவைகளைப் பார்த்துப் பாட்டொன்று பாடினாள். அடியில் வருவது காண்க.

"மாகுன் றனையபொற் றோளான் வழுதிமன்
வான்கரும்பின்
பாகென்ற சொல்லியைப் பார்த்தென்னைப் பார்த்திலன்;
பையப் பையப்
போகின்ற புள்ளினங்காள்! புறக்கோட்டம்
புகுவ துண்டேல்
சாகின்றன ளென்று சொல்லீர் அயன்றைச்
சடையனுக்கே." (காமினி)

அவனது சிறுமை கண்டபோது இவனது பெருமையை நினைந்து அவள் இங்ஙனம் உளமுருகி யுரைத்துப் பின்பு உயிர் துறந்தாள். அவள் சாருந்தருவாயிலுரைத்த அம்மேன்மை மொழியின் மான் மையை யுணர்ந்து அவன்முதலாக அனைவரும் இவனை உவந்து புகழ்ந்தார். சிறந்த அரசனாய் உயர்ந்த சிங்காதனத்தி லிருந்தும் அரியன செய்யாமையால் அவன் சிறுமையுற்றிருந்தான்; ஒரு குடி யானவனாய் வறுநிலத்திருந்தும் தருக்கின்றி பிறர்க்கிதம் புரிந்து அரியனசெய்து வந்தமையால் பெரியவன் என எவரும் போற்ற இவன் பெருமை பெற்றிருந்தான். மேல் அல்லார் மேலிருந்தா லும் மேல் ஆகார்; கீழ் அல்லார் கீழ் இருந்தாலும் கீழ் ஆகார்; என்பதை உலகம் காண அன்று இவன் உணர்த்தி நின்றான்.

பாகொன்று சொல்லியைப் பார்த்தமையாலன்று பாண்டியன்முன்
நோகின்ற சிற்றிடை வேழம்பக் கூத்தி கொடிவரையில்
சாகின்ற போது தமிழ்ச்சேரயன்றைச் சடையன் றன்மேல்
மாகுன் றெனச்சொன்ன பாமாலையுந் தொண்டை மண்டலமே.
(தொண்டைமண்டல சதகம்)

மேற்குறித்த இவன் சரிதவுண்மை இதன் கண்ணும் குறிக் கப்பட்டிருத்தல் காண்க.

உள்ளத்தே மேன்மை யுறுதான் புறத்துயர்வு
வேள்ள முறினுமேன் வீண்.

செய்கையாலன்றிச் செல்வத்தால் பெருமை யெய்தாதென் பது இதனால் கூறப்பட்டது.

---

974. பண்டு தனைக்காத்துப் பண்பமைந்த சங்கன்சீர்
கொண்டுயர்ந்தான் என்னே குமரேசா—கொண்ட
ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு. (ச)

இ—ள்.

குமரேசா! தன்னைக் காத்து ஒழுகிவந்த சங்கவருணர் சிறந்த பெருமையை ஏன் அடைந்து விளங்கினர்? எனின், ஒரு

மைமகளிரே போலப் பெருமையும் தன்னைத் தான்கொண்டு ஒழுகின் உண்டு என்க.

இது, ஒழுக்க முடையவன் உயர்வான் என்கின்றது.

ஒருமை மகளிர் என்றது கற்புடைய மாதரை. யாண்டும் மனந்திரியாது கொண்டானே தெய்வமென்று குறிக் கோளொடு ஒருமுகமாய் நின்றொழுகும் இயல்பின ராதலால் இவரை ஒருமை மகளிர் என்றார். வரைவின் மகளிரை இருமனப் பெண்டிர் என முன் இசைத்திருத்தல் ஈண்டு எண்ணத் தக்கது.

ஒழுகின் என்பது அங்ஙனம் ஒழுகுதலின் அருமை தோன்ற நின்றது. தான் என்றது பெருமை பெறுதற்குரிய மகனை. ஒழுக்கமுள்ள அம்மகளிர்க்குக் கற்புண்டாதல்போல் இவனுக்குப் பெருமையுண்டாம் என்றபடி. உம்மை, அக்கற்பைக் கருதியுள்ளமையால் இறந்தது தழுவிய எச்சஉம்மையாம்.

மேல், குலத்தாலும் செல்வத்தாலும் பெருமை யுண்டாகா தென்றார்; இதில், அஃது ஒழுக்கத்தால் உண்டாம் என்கின்றார்.

பதிவிரதைகள்போல் நிறைவழுவாமல் நின்று தன்னைத்தான் காத்துக்கொண்டு ஒருவன் ஒழுகுவானாயின் அவன்கண் பெருமை யுண்டாம் என்பதாம்.

மனம்மொழி மெய்களை அல்வழிக்கட் செல்லவொட்டாதபடி அடக்கி, நல்வழிக்கண் நின்று ஒருவன் ஒழுகுவனாயின் பெரியவன் என அவனை எவரும் போற்றுவராதலால் "தன்னைத் தான்கொண்டொழுகின் பெருமை உண்டு" என்றார். ஒழுகின் உண்டு என்றதனால் அங்ஙனம் ஒழுகாவழி அஃது இல்லையாம் என்பது பெறப்பட்டது.

ஒருவன் நெறிநின்றொழுகுதற்குக் கற்புடை மகளிரை இங்கு ஒப்புக்காட்டியது என்னை? எனின், "தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற—சொற்காத்துச், சோர்விலாள் பெண்" என்றபடி திண்மையோடு அவர் நின்றொழுகுந் திறங்கருதி என்க.

"கற்புறு சிந்தைமாதர் கணவரை யன்றிவேறோர்
இற்புறத்தவரை நாடார்; யாங்களும் இன்பவாழ்வும்

தற்பொறியாக நல்கும் தலைவ! நின்னலதோர் தெய்வம்
பொற்புறக் கருதோம் கண்டாய் பூரணானந்தவாழ்வே"

என இவ் ஒருமை மகளிரைத் தம் அருமை ஒழுக்கத்திற்கு உவமையாகத் தாயுமானவர் இதில் உரைத்துள்ளமை காண்க.

ஒருவன் பெருமையடைய வேண்டுமாயின் அவன் நெறிநின்று ஒழுகவேண்டு மென்பது கருத்து.

புறத்தில் எவ்வளவு சிறப்புடையராயினும் அகத்தில் ஒழுக்க மிலராயின் அவர்க்குப் பெருமை இல்லையாம் என்பது குறிப்பு.

ஒழுக்க முடையவர்க்கு எல்லாப் பெருமைகளும் தாமாக வந்தெய்தும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண் மைசங்கவருணர்பால் உணரப்படும்.

## கதை.

சங்கவருணர் என்பவர் கடைச்சங்கப் புலவருள் ஒருவர். இவர் கருவிநூற் புலமையோடு தத்துவக் கலைகள் முற்றவும் பயின்ற வித்தகக் கலைஞர். தம் பெயரியல்புக்கேற்ப வெண்ணிறமே னியராய் இவர் விளங்கியிருந்தனர். இவர் யாவர்மாட்டும் தண்ணளியுடையவர்; புண்ணிய நீர்மையர். புலவராயிருந்தும் பரிசில் கருதி எவரிடமும் செல்லாதமைதியெய்தி யிருந்தார். மனமொழி மெய்கள் புனிதராய் என்றும் இனியநிலையிலமர்ந்து ஒழுகிவந்தாரா தலால் இவர் புகழ் உலகமெங்கும் பரவிநின்றது. இவரது அருமையறிந்து நந்துமாறன் என்னும் குறுநில மன்னன் இவர்பால் வந்து போயிருந்தான். அவன் பெருங்கொடையாளி. இவரது குணநலங்களை உடனிருந்து தெளிந்து மிக மகிழ்ந்து நின்றான். இடையிடையே தனது அரண்மனைக்கு இவரை உடனழைத்துச் சென்று பணிவுடையனாய் உபசரித்து வந்தான். அவனது அன்பின் திறத்தை வியந்து இவர் இன்பமீக்கூர்ந்தார். அமயம் வாய்த்தபோதெல்லாம் உறுதி நலங்களை அவனுக்கு உரைசெய்து வந்தார். உலகநிலையையும், உயிரினியல்பையும், மனிதனாகப் பிறந்தவன் இங்கு உறுதியாக ஓர்ந்து ஒழுகவேண்டிய திறங்களையுங் குறித்து இவர் கூறியுள்ள அறவுரைகள் பல. ஒருமுறை அவனை நோக்கி இவர் உரைத்த உறுதிநெறியை அக்காலத்திருந்த அரசர்

பலரும் உணர்ந்து புகழ்ந்தார். அதனை இதனடியில் காட்டுதும். பொருளை ஆய்ந்து காண்க.

“பெரிதாராச் சிறு சினத்தர்,
சிலசொல்லாற் பல கேள்வியர்,
நுண்ணுணர்வினாற் பெருங் கொடையர்,
கலுழ் நனையால் தண்டேறலர்,
கனிகுய்யாற் கொழுந் துவையர்,
தாழுவந்து தழூஉ மொழியர்,
பயனுறுப்பப் பலர்க்காற்றி
ஏமமாக இந்நில மாண்டோர்,
சிலரே; பெரும! கேளினி நாளும்
பலரே தகையஃ தறியாதோரே;
அன்னோர் செல்வமும் மன்னி நில்லாது;
இன்னும் மற்றதன் பண்பே; அதனால்,
நிச்சமும் ஒழுக்கம் முட்டிலை பரிசில்
நச்சுவர் கையி னிரப்ப வோம்புமதி! யச்சுவரப்
பாறிறை கொண்ட பறந்தலை மாகத
கள்ளி போகிய களரி மருங்கின்
வெள்ளி னிறுத்த பின்றைக் கள்ளொடு
புல்லகத் திட்ட சில்லவிழ் வல்சி
புலைய னேவப் புன்மேல் அமர்ந்துண்டு
அழல்வாய்ப் புக்க பின்னும்
பலர்வாய்த் திராஅர் பருத்துண்டோரே” (புறநானூறு)

தகையஃது = மேற்கூறிய அத்தன்மையை. வெள்ளில் = பாடை.

சினமின்மையும், நூற்கேள்வியும், நுண்ணுணர்வும், பெருங் கொடையும், வணங்கிய மொழியும, உடையராய் நின்று பலர்க்கும் உபகரித்துத் தமக்கு நலத்தைச் செய்துகொண்டவர் இவ்வுலகத்தில் சிலரேயாவர்; பலர் அங்ஙனமின்றிப் பழுதே கழித்துப் பாடையில் போய்ச் சுடுகாட்டு எரியில்புக்கு ஒரு நலமுமிலராய் ஒழிந்துபோயினர்; பெரும! நீ நல்லொழுக்கத்தைக் கடைப்பிடித்து ஏழைகளை ஆதரித்து ஈதலைச்செய்து இனிதுவாழ்க; அதுதான் உன்உயிர்க்கு ஊதியமாகும் என அவனைநோக்கி இவர் உணர்த்தி

யிருக்கும் அருமையை இதில் ஊன்றி யுணர்க. இதனால் இவரது மனத்தூய்மையும், மெய்யுணர்வும், நெறிநின்றொழுகிய திறமும், பிறவும் இனிதுணரலாகும். நிலைதவறாமல் யாண்டும் தன்னைப் பாதுகாத்து நிறையுடையராய் ஒழுகி நின்றமையால் பெரியர் என இவர் பேர்பெற்று விளங்கினர். "ஒருமை மகளிரே போலப் பெருமையும் தன்னைத்தான் கொண்டொழுகின் உண்டு" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது

தற்கொண் டொழுகுந் தகவுடைய ரேபெருமை
முற்கொண்டு நிற்பர் முதல்.

சீலமுடையவரே பெருமை யடைவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

975. நன்றறிந்த தாயனார் நல்கூர்ந்தும் உள்ளியதைக்
குன்றாதே தன் செய்தார் குமரேசா—என்றும்
பெருமை யுடையவ ராற்றுவா ராற்றின்
அருமை யுடைய செயல். (ரு)

இ—ள்.

குமரேசா! தாயனார் மிக வறுமை யடைந்தும் அரிய செயலை ஏன் நெறியே ஆற்றிநின்றார்? எனின், பெருமையுடையவர் அருமையுடைய செயல் ஆற்றின் ஆற்றுவார் என்க.

இது, அரிய செயல்களைப் பெரியர் செய்வர் என்கின்றது. ஆற்றின் = நெறியே. செய்யத்தக்கவழியில் வழுவாமல் என்றபடி. ஆற்றுவார் = செய்வார். ஆற்றுதல் = செய்தல்.

மேல், ஒழுக்கமுடையவரே பெருமைக்கு உரியவரென்றார்; இதில், அரிய செயல்களையும் அவர் செய்து முடிப்பர் என்கின்றார்.

பெருமையாளர் வறுமையுற்றிருப்பினும் அருமையான செயலை நெறியே நின்று செய்வர் என்பதாம்.

ஒத்தபிறப்பினையுடைய மக்களுள் பெரியராயுள்ளாரை எப்படித் தெரிவது? என ஒருவன் வினவ, அதற்கு அருமையுடைய செயல்களை எவர் ஆற்றுகின்றனரோ அவரே பெரியர் என்று உண

ர்ந்துகொள்ள வேண்டுமென அவனைநோக்கி உணர்த்தியபடியிது. "செயற்கரிய செய்வார் பெரியர்" என முன் உரைத்துள்ளதுங் காண்க. அது பொறியடக்கித் தன்னை யொடுக்கி நெறிநின்றொ ழுகும் அருந்தவக் கொள்கையைக் குறித்தது; இது, வறுமையுறி னும் யாண்டும் மனநிலை குன்றாமல் ஊக்கிநின்று பிறர்க்கு உதவி யருளும் ஒப்புரவு ஈகைகளை யுணர்த்தி நின்றது.

புறவின் எடைக்குத் தன் உடல் கொடுத்தும், புலவன் ஒருவ னுக்குத் தலைதனைக் கொடுத்தும், முதுகென்பருளியும், பதிமனை விற்றும், தாம் கருதிய உறுதியைக் கடைபோகச் செய்த பெரி யார்போல அரியனசெய்வார் பெரியராவர் என்க

"முடிவிளக்கு எரித்தும், கடிமலர்க் கோதைச்
சுரிகுழற் கருங்கட் டுணைவியை யளித்தும்,
அருமகள் நறும்பூங் கருமயி ருதவியும்,
தென்முனைவாரி யின்னமு தருத்தியும்,
கோவண நேர்தனை நிறுத்துக் கொடுத்தும்,
அகப்படு மணிமீன் அரற்கெனவிடுத்தும்,
பூட்டி அரிவாள் ஊட்டி அரிந்தும்,
தலையுடை யொலிக்கும் சிலையிடை மோதியும்,
மொய்ம்மலர்க் கோதை கைம்மலர் துணித்தும்,
தந்தையைத் தடிந்தும், மைந்தனைக் கொன்றும்,
குற்றஞ் செய்த சுற்றங் களைந்தும்,
பூக்கொளு மாதர் மூக்கினை யரிந்தும்,
இளமுலை மாதர் வளமை துறந்தும்,
பண்டைநாள் ஒருசிலர் தொண்ட ராயினர்" (நான்மணிமாலை)

எனவரும் இதில் அருமையுடைய செயல்களும், அவற்றை ஆற்றிநின்ற பெருமையுடையார் இயல்களும் ஒருவகையில் உண ர்த்தப்பட்டுள்ளன காண்க.

எவ்வளவு இடர்வந்தாலும் தாம் கருதி மேற்கொண்ட அரு ஞ்செயல்களைப் பெருந்தன்மையாளர் கடைபோகச் செய்வர் என் பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தாயனார்பால் உணரப்படும்.

976. பீடுடைய ஔவையையும் பேணான் அசிதனன்று
கோடிநின்றான் என்னே குமரேசா—கூடும்
சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு. (சு)

இ—ள்.

குமரேசா! அறிவுடைய ஔவையாரையும் அசிதன் என் பேணாமல் அவமதித்திருந்தான்? எனின், பெரியாரைப் பேணிக் கொள்வேம் என்னும் நோக்கு சிறியார் உணர்ச்சியுள் இல்லை என்க.

இது, பெரியாரைப் பேணாதவர் சிறியராவர் என்கின்றது.

பீடு உடைய என்றது முடிமன்னரும் அடிவணங்கும்படி உயர்புகழுடையராய் அவர் விளங்கியிருந்தமை கருதி. உம்மை சிறப்புணர நின்றது.

நோக்கு = கருத்து. பேணுதல் = உவந்துபோற்றி உபசரித்தல். நோக்கு இல்லை என்னும் சொற்போக்கால் அவர்தம் குருட்டுத் தன்மை வெளிப்பட்டு நின்றது.

மேல், பெரியார் செயலினை யுணர்த்தினார்; இதில், சிறியார் இயல்பினை யுணர்த்துகின்றார்.

பெரியாரைப் பணிந்து போற்றிக்கொள்வேம் என்னும் கருத்து, சிறியார் உளத்தின்கண் உளதாகாதென்பதாம்.

உணர்ச்சியுள் இல்லை எனவே அவர் உரையிலும் செயலிலும் அஃது இல்லையென்பது சொல்லவேண்டா வாயிற்று.

பெரியாரைப் பேணிக்கொள்ளுதல் பெருந்தன்மையாளர்க்கே அமையும்; ஏனைச் சிறுமையுடையார்க்கு அஃதமையாது; ஏனெனில் "அரியவற்றுள் எல்லாம்அரிதே பெரியாரைப்பேணித் தமராக் கோளல்" என்றபடி அது செயற்கருஞ் செயலாதலால் அருமையுடைய செயல் ஆற்றும் பெருமையுடையார்க்கே அஃது அமையும் என்க. கண்ணனைக் கண்டபொழுது வீடுமரும் துரோணரும் எழுந்து பணிந்து உவந்துபோற்றச் சிசுபாலனும், துரியோதனனும், சகுனியும் யாதும் மதியாமல் அவனை இகழ்ந்திருந்ததும் ஈண்டு எண்ணத்தக்கது.

சிறியார் செருக்கு மீக்கூர்ந்து, உளத் திமிர்கொண்டு, மதத்திருப்ப ராதலால் பெரியாரைக் கண்டபோது இருக்கைஎழுதல், எதிர்செலல், உருக்கமொடுரைத்தல், உவந்துபேணல் முதலிய உபசாரங்கள் ஒன்றும் செய்யாராய் மிண்டி நிற்பர் என்பார் பெரியாரைப் பேணும்நோக்கு அவர் உணர்ச்சியுள் இல்லைஎன்றார்

இங்ஙனம் சிறியாருணர்ச்சியுள் பெரியாரைப் பேணிக்கொள்ளும் நோக்கம் இல்லாமற் போனதற்குக் காரணம் இவரது அருமையறியுந் தன்மை தம்பால் இல்லாமையோடு தம்மை அவர் மிக வியந்திருத்தலுமா மெனக.

மணமாலை அருமையைப் புனைவர்களே யறிவர்;
மட்டிக்குரங் கறியுமோ?
மக்களுடை அருமையைப் பெற்றவர்களே யறிவர்;
மலடிதான் அறிவதுண்டோ?
கணவருடை அருமையைக் கற்பான மாதறிவள்;
கணிகையா னவள் அறிவளோ?
கருதுமொரு சந்தியின் பாண்டமென்பதை வரும்
களவான நாயறியுமோ?
குணமான கிளியருமை தனைவளர்த்தவ ரறிவர்;
கொடிய பூனையும் அறியுமோ?
குல்வுபெரி யோர்அருமை நல்லோர்களே யறிவர்;
கோடூழடர் தாமறிவரோ?" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. ஒருவன் பெரியனாகவேண்டின் தன்னினும் பெரியாரைப் போற்றி ஒழுகவேண்டும் என்பது கருத்து.

பெரியாரைப் பேணியொழுகும் தன்மை சிறியார்க்கு உண்டாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அசிதன்பால் உணரப்படும்.

## கதை.

அசிதன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னர்க் கொங்குநாட்டிலே அயிரை என்னும் ஊரிலிருந்த ஓர் குறுநில மன்னன். நிலவளங்களோடு பல நலங்களும் நிறையப்பெற்று இவன் உயர்வுற்றிருந்தான். இங்ஙனம் திருவமைந்திருந்தும் அறிவமைவின்றி இழிவழிகளில் பெருகி நின்றான். சிறிது

கதை.

தாயனார் என்பவர் சோழநாட்டிலே கணமங்கலம் என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பிறந்தவர். இவர் பெருந் திருவுடையராய்க் குறுநில மன்னர்போல் அந்நகரில் விளங்கியிருந்தார். அன்பும் பணிவும் அடக்கமும் உடையவர். கருதிய எதையும் உறுதிபெற முடித்து வாய்மைகாத்துத் தூய்மையோடு இவர் துலங்கிநின்றார். தம்பெயரியல்புக்குத் தக்கபடி யாவர்மாட்டும் அருள்புரிந்து இவர் இனிதொழுகி வந்தார். வருங்கால் செங்நெல்லரிசி, செங்கீரை, மாவடு இம்மூன்றையும் அருமையாகப் பக்குவஞ் செய்து இனியஅமுதாக்கிப் பரமனுக்குக் கொண்டுபோய்ப் படைத்துப் பூசனைபுரிந்தபின்னரே இவர் உணவருந்ுவதாக உறுதிசெய்து கொண்டார். அவ்வாறே நாள்தோறும் நெறிவழுவாமல் செய்து, வருபவர்க்கெல்லாம் உதவி, அறிவொழுக்கங்களில் சிறந்து இவர் அமர்ந்துவாழ்ந்தார். செந்நெல் அமுது இறைவனுக் கானமையால் தாம் அதனை உண்ணலாகாதென வுளங்கொண்டு காரரிசி அன்னமே இவர் உண்டுவந்தார். இடையே இறைவன் சோதனையால் இவர் செல்வமுழுதும் சிதைந்துபோயது. அதன்பின் உணவுங் கூடக் கிடையாதபடி இவர் மிகவறியராயினர். ஆயினும் குறித்த விரதத்தைக் குன்றாது செய்துவந்தார்.

"மேவுசெல்வம் களிறுண் விளங்கனி
யாவதாகி அழியவும், அன்பினால்
பாவை பங்கர்க்கு முன்பு பயின்றவித்
தாவில் செய்கை தவிர்ந்திலர் தாயனார்"

இவ்வாறு தூயராகி நேயமெய்தி நின்று துணிந்து முடித்து வந்தார். வந்தும் முடிவில் யாதும்முடியாமல் கூலி வேலி செய்து சாலிநெற் கொண்டு அதனைத் தளராது செய்தார். உணவின்றி ஒருநாள் பட்டினி கிடந்தார். அவ்வமயம் இவருடைய மனைவியார் இலைக்கறியை அட்டு இட்டுபசரித்தார். பின்னர் அதுவும் கிடையாமையால் தண்ணீரை உண்டு இவர் தங்கியிருந்தார். இங்ஙனம் இருந்தும் பரமனுக்கு உரிமையாகத் தாம் மேற்கொண்டிருந்த அவ் அரியசெயலை யாதுந் தவறாமல் ஆற்றிவந்தார். ஒருநாள்

முன் குறித்த மூன்றையும் பாகஞ்செய்து கூடையில் வைத்துக் கோயிலை நோக்கிச் செல்லுங்கால் பசிக்களைப்பினால் கால்தடுமாறிக் கீழே வீழ்ந்தார் உடன்சென்ற மனைவியார் அணைத்துப்பிடித்தும் நிலைகொள்ளாமல் அவ் உணவுமுதலியன நிலத்தில் சிந்திப் பிலத்தில் இழிந்தன. இவர் மிக வருந்தினார். ஊன்றிய வினை ஊறு பட்டதே யென்று தம் முள்ளங் குழைந்தார். உடனே தம் உடையிலிருந்த வாளையுருவி யூட்டியை அரிந்தார். அவ்வமயம் "தாயரோ! பொறும் பொறும்" என்று பேரொலிசெய்து சிந்திய மாவடுவை வாயில்கௌவிக்கொண்டு அந்நிலப்பிளப்பிலிருந்து கையைநீட்டிக் கண்ணுதற் பரமன் கடிதில்தோன்றினார். இவர் ஐயனே என்று அழுதுதேம்பினார். அவர் அருள்புரிந்தகன்றார்.

"அடியனேன் அறிவிலாமைகண்டும் என்னடிமை வேண்டிப்
படியிசைக் கமரில்வந்திங் கமுதுசெய் பரனேபோற்றி
துடியிடை பாகமான தூயநற் சோதி போற்றி
பொடியணி பவளமேனிப் புரிசடைப் புராணபோற்றி"

என அப்பெருமானது பேரருளை இவர் வியந்து போற்றிச் சிறந்தபுகழோடு பின்பு விளங்கி வாழ்ந்தார். அரிவாள் பூட்டித் தம் ஊட்டியை அரிந்ததனால் அரிவாட்டாயநாயனார் என்று பெரும்பெயர் பெற்றார். வறுமைமீக்கூர்ந்து கடுந்துயரடைந்தும் தாம் கருதி மேற்கொண்ட அரிய அறச்செயலைக் கடைபோகச் செய்து முடித்த இவரது பெருமையை வியந்து அனைவரும் புகழ்ந்தார் "பெருமையுடையவர் ஆற்றுவாா ஆற்றின் அருமையுடையசெயல்" என்பதை உலகம் காண இவர் உணர்த்திநின்றார். விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

உறுபுனல் தந்துல கூட்டி யறுமிடத்தும்
கல்லூற் றுழியூறு மாறேபோல்—செல்வம்
பலர்க்காற்றிக் கெட்டுலந்தக் கண்ணும் சிலர்க்காற்றிச்
செய்வர் செயற்பா லவை. (நாலடியார்)

ஆற்றற் கரிய அருவினையும் ஆற்றியிசை
போற்றும் பெருமை புரிந்து.

பெருந்தகையாளர் அருஞ்செய்ல் புரிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

கல்வியுடையனாயினும் செருக்கும் புன்மையும் சேர்ந்த நெஞ்சினன். தன் செல்வத்தையும் தனக்குக் கிடைத்துள்ள பதவியையும் நினைந்து நினைந்து களித்துப் புல்லர் சிலருடன் பொருந்தி அல்லல்புரிந்து வந்தான். எவரையும் மதியாமல் பொறியின்பங்களையே வரம்புகடந்து நுகர்ந்து அறிவுகுன்றி நின்ற இவன்பால் ஔவை ஒருநாள் வந்தாள். இவனது செல்வநிலையையும் உருவப் பொலிவையும் பார்த்து அக்கல்விச்செல்வி மகிழ்ந்து நல்ல அறவுறுதிகளமைந்த இனியபாடல்களை அருகுசென்று இனிது இயம்பினாள். அதனைக்கேட்டும் இவன் யாதும் நயந்து கொடாமலும் உவந்து சொல்லாமலும் அப்பாட்டியை இகழ்ந்துரைத்தான். தன்னைச் சிறிதும்பேணாமல் இவன் செருக்கி இகழ்ந்ததைநோக்கி அவள் சீறியெழுந்தாள். சினந்தொன்றுரைத்தாள். அதனை அடியில்காண்க.

“எம்மிக ழாதவர், தம்மிக ழாரே;
எம்மிகழ் வோரே, தம்மிகழ் வோரே;
எம்புகழ் இகழ்வோர், தம்புகழ் இகழ்வோர்;
பாரி, ஓரி, நள்ளி எழினி,
ஆஅய், பேகன், பெருந்தோள் மலையன், என்
றெழுவருள் ஒருவனும் அல்லை; அதனால்,
நின்னை நோவ தெவனே! புறவட்
டாற்றுக் குறை கட்டி போல
நீயு முளையே நின்னன் னோர்க்கே;
யானும் உளனே எம்பா லோர்க்கே;
குருகினும் வெளியோய் தேத்துப்
பருகுபாலன்ன என்சொல் உகுத்தேனே” (ஔவையார்.)

நல்ல பருகுபாலை ஒத்த என் அரியபாடலை வெள்ளறிவுடைய சிறியனாகிய உன்னிடம் சொல்ல நேர்ந்ததே என்று அவ்வம்மை உள்ளம் நொந்து இரங்கி இதில் உரைத்துள்ளமை காண்க. பெரியாரைப் பேணிவந்த பெருந்தகையாளர் எழுவரை யெடுத்துக் காட்டி இவனது சிறுமையைப் புலப்படுத்தி, மிகநயமாக இடித்துரைத்திருக்கும் அருமையையும், அப்பெரியவளது பிற நலங்களையும் உணர்த்திநிற்கும் இப்பாட்டினழகை யூன்றிப் பார்க்க. அங்கதமாக இங்ஙனம் பாடிச்சென்ற பின் சின்னாளில் இவன் செல்வ

முழுவதும் இழந்து சீரழிந்திழிந்தான். பெரியாரைப் பேணுமை யால் வந்த பேரிழவு என்று எல்லாரும் இவனைப்பேசி ஏசினர். இன்றும் இங்கு இவன்பேச நின்முன். பெரியாரைப் பேணிக் கோள்வேம் என்னும் நோக்கு, சிறியார் உணர்ச்சியுள் இல்லை என்பதை உலகம் இவன்கண் உணர்ந்து நின்றது.

கற்ற அறிவினரைக் காமுறுவர் மேன்மக்கள்
மற்றையர்தாம் என்று மதியாரே—வெற்றிநெடும்
வேல்வேண்டும் வாள்விழியாய்! வேண்டா புளிங்காடி
பால்வேண்டும் வாழைப் பழம். (நன்னெறி)

வண்டறியு நன்மலரின் வாசம் வசையீதான்
கண்டறியு மோவதனைக் காண்.

சிறுமை யுடையார் பெருமை யறியார் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

977. மண்டுசீர் கண்டு மழவரங்கன் புன்செருக்குக்
கொண்டிழிந்தான் என்னே குமரேசா—மிண்டி
இறப்பே புரிந்த தொழிற்றுஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின். (எ)

இ—ள்:

குமரேசா! பெருஞ்செல்வத்தைக் கண்டவுடன் அளவ றத்தருக்கி மழவரங்கன் ஏன் இழிந்தொழிந்தான்? எனின், சிற ப்பும் தான் சீரல்லவர்கண் படின், இறப்பே புரிந்த தொழிற்றும் என்க.

இது, சிறியார் செருக்கு மீக்கூர்வர் என்கின்றது.

மண்டுசீர் என்றது பெருந்திருவுடையனுய் அவன் பிறங்கி நின்ற பெற்றிநோக்கி. புன்மையாவது வரம்புமீறியிருக்குந்தன்மை.

சிறப்பு என்றது செல்வம் கல்வி அதிகார முதலியவற்றுனெய் தும் உயர்வு. உம்மை அதனருமை தோன்ற நின்றது.

சீர் அல்லவர் = சிறியர். பெரியர் சீருடையவர் ஆதலால் சிறியரைச் சீரல்லவர் என்றுர்.

இறப்பு = செருக்கு, மிகுதி. ஏகாரம் தேற்றம்; பிரிநிலையுமாம்.

தொழிற்று ஆம் = செயலேயுடையதாம். ஏதேனும் ஓர் சிறந்தபதவி சிறியாரிடத்தே பொருந்துமாயின் உடனே அவர் மிகுந்த செருக்குடையராய் மீறிக் களிப்பர் என்றவாறு.

மேல், பெரியாரைப் பேணியொழுகும் பெற்றி சிறியார்பால் இல்லை என்றார்; இதில், அவர்பால் உள்ளதை யுணர்த்துகின்றார்.

சிறப்புத்தானும் சிறியாரிடத்தே பொருந்துமாயின் அது செருக்கே மிகுத்த செயலினை யுடையதாம் என்பதாம்.

பெருமைக்குரிய செல்வம் கல்வி முதலிய நலங்கள் ஏதேனும் சிறுமையுடையாரிடத்தே சேர்ந்துவிடுமாயின் அவர் அளவிறந்த செருக்கினை யுடையராய்த் தீயசெயல்களைச் செய்வராதலால் படின் இறப்பே புரிந்ததொழிற்றும் என்றார்.

படின் என்னும் சொல்லாற்றலால் அஃது அங்ஙனம் படலாகாதென்பது தோன்ற நின்றது.

தேளுக்கு அதிகாரம் வந்தால் அது நாள்முழுதும் கொட்டும் என்றவண்ணம் சிறியார்க்குச் சிறப்பு நேர்ந்தால் அவர் தீமையே மிகுப்பர் என்க.

சீருடைய பெரியார்க்குரிய சிறப்பினைச் சீர்கெட்ட சிறியார்க்குச் செய்தால் அதனால் இடர்பலவிளையும் என்றபடி.

"பெரியார்க்குச் செய்யும் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்து விடுதல்—பொறிவண்டு
பூமேல் இசைமுரலும் ஊர அதுவன்றே
நாய்மேல் தவிசிடு மாறு" எனவும்,

"உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமில் உள்ளத்த ளுகி—நடக்கையின்
ஒள்ளியன் அல்லான்மேல் வைத்தல் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல். எனவும், வரும் பழமொழிகள் ஈண்டெண்ணற்குரியன. சிறியாரை நாயோடும், குரங்கோடும் ஒப்பவைத்து இவை உணர்த்தி நிற்குங் குறிப்பை யூன்றி யுணர்க.

சிறியார்க்குச் செல்வமிகுந்தால் எவரையும் மதியாமல் மிகுதியாக அவர் தருக்கிநிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மழுவரசன்பால் உணரப்படும்.

கதை.

மழவரங்கன் என்பவன் இற்றைக்கு நூற்றைம்பது ஆண்டு கட்கு முன்னர்த் தொண்டை நாட்டிலே வங்கபுரி என்னும் ஊரி லிருந்தவன். இவன் பள்ளியர் என்னும் மரபினைச் சேர்ந்தவன். விளைநிலங்களாலும் வேறுவழிகளாலும் பெரும்பொருளீட்டிச் சிறந்த செல்வமுடையனாய் இவன் விளங்கியிருந்தான். நாளடை வில் பலவகை அதிகாரங்களும் வந்துசேர்ந்தன; பின்பு இவன் ஓர் குறுநில மன்னன்போல் பெருகி நின்றான். நின்றும் கல்வி யறிவு நன்கில்லாதவனாதலால் பொல்லாத செயல்களையே புரிந்து வந்தான். கல்லாதவர் பலர் இவனைப் புடைசூழ்ந்து உடல்வணா ங்கித் தலை குனிந்து வாய்புதைத்து வீண்புகழ்ச்சி செய்து மிகப் போற்றி நின்றார். அதனால் எவருந் தனக்கு நிகரில்லை யென்று இவன் இறுமாப்பெய்தினான். "ஆதிவீரமழவாங்கபூபன்" எனத் தன் பெயரை நீட்டிவைத்துக்கொண்டு இவன் நிமிர்ந்து நின்றான். தன்பெயர்க்கு முன்னும் பின்னும் அடைமொழிகளைச் சேர்த்துக் கொண்டதுபோல் தனக்கு முன்னும் பின்னும் படையாளர்களைச் செல்லும்படி செய்து செருக்கிச் சென்றான். எத்தகைய பெரி யோரையும் சிறிதும்மதியாமல் இகழ்ந்து திமிர்ந்து நின்ற இவன் பால் இராமச்சந்திர கவிராயர் என்னும் புலவர் ஒருவர் ஒருநாள் வந்தார். அவ்வமயம் இவன் உயர்ந்தஆதனத்தி லமர்ந்திருந்தான். அவரை வாரும் என்றுகூடக் கேளாமல் நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு மௌனத்தோடு மதத்திருந்தான். அங்ஙனம் இருந் தும் அவர் இன்முகத்தோடு ஓர் இனிய பாடலைப் பாடினார். அதனைக்கேட்டும் இவன் அன்புகொள்ளாமல் வலிப்பு வந்தவன் போல் இகழ்ச்சியோடு தலையை யசைத்து "சரி தெரியும்போ" என்று கடுத்து மொழிந்தான். அடுத்து நின்றவருடன் தன் பெருமை தோன்றப் பலபேசிப் பெருமிதத்தோடு அகன்றுபோ னான். இவனது இழிசெருக்கையும், அழிமதியையும் புலவர் கண்டு பொங்கி யெழுந்தார். அங்கோர் காளிகோவிலின் புறச்சுவ ரில் கரியினால் இவனைக்குறித்து ஒரு கவி எழுதினார். அது வரு மாறு காண்க.

"கள்ளிக்கேன் முள்வேலி? கழுதைக்கேன் கடிவாளம்?
கறுப்பில்லாத

உள்ளிக்கேன் பரிமளங்கள்? உவர்நிலத்துக்கேன் விதைகள்?
ஒடித்துப் போடும்
சுள்ளிக்கேன் கோடாலி? துடைப்பத்திற்கேன் கவசம்?
சும்மாபோகும்
பள்ளிக்கேன் அதிவீர மழவரங்க பூபன் எனும்
பட்டந் தானே''
(இராமச்சந்திரகவிராயர்)

இங்ஙனம் எழுதிச்சென்ற அவர் மறுபடியும் இவனது சிறுமைச் செயல்களை நினைந்து நினைந்து வருந்தினர். முடிமன்னரும் புகழ்ந்து போற்றப்பெற்ற தமது பெருமையை இவன் அறியாது இகழ்ந்துவிட்டானே யென்று எண்ணி யெண்ணி யேங்கினர். இவன்பால் வந்து பாடவும் நேர்ந்ததே என்று பரிந்துநொந்தார். சிலநாள் கழிந்தபின்பு திருப்பரங்குன்றத்துப் பெருமான் முன் வந்து ஒருபாடலும் பாடினர். அதில் அவர் நிலையையும், இவன் செயலையும்இனிதுகுறித்துவைத்துள்ளார். அடியில்வருதல்காண்க.

''வணக்கம்வரும் சிலநேரம்; குமரகண்ட வலிப்புவரும்
சிலநேரம்; வலியச் செய்யக்
கணக்குவரும் சிலநேரம்; வேட்டை நாய்போல் கடிக்க
வரும் சிலநேரம்; கயவர்க்கெல்லாம்
இணக்கம்வரும் படிதமிழைப் பாடிப்பாடி
எத்தனைநாள் திரிந்து திரிந் திளைப்பேனையா?
குணக்கடலே, அருட்கடலே, அசுரரான
குரைகடலை வென்றபரங் குன்றுளானே''
(தனிப்பாடல்)

அப்பெரியார் கரியாலெழுதி இவ்வாறு பாடிச் சென்றதால் இவன் பாடழிந்து பருவரலுற்றான். சிறந்தசெல்வஞ் சேர்ந்தவுடன் செருக்கி யிழிந்ததைக் குறித்து அக்காலத்திருந்தவரெல்லாரும் இவனை வெறுத்திகழ்ந்தார். சிறப்பு சீரல்லவர்கட் படின் அது இறப்பே புரிந்த தொழிற்றும் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

பொங்கித் தருக்குவார் புல்லர் புனிதர்சீர்
தங்கிப் புரிவார் தகை.

செருக்குவார் சிறியராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

**978.** பண்டு வெளிமான் பணிந்தான் இளையோனேன்
கொண்டு வியநதான் குமரேசா—கண்டு
பணியுமாம் என்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து. (அ)

இ—ள்.

**குமரேசா!** வெளிமான் பெரியாரைப் பணிந்திருந்தான் இளையவன் ஏன் செருக்குற்று மிகுந்திருந்தான்? எனின், பெருமை என்றும் பணியும்; சிறுமை தன்னை வியந்து அணியும்என்க.

இது, பணிநதொழுகலே பெருமையாம் என்கின்றது.

பெருமைஎன்றது பெரியாரை. சிறுமைஎன்றது சிறியாரை. பெரியார் பணிந்தமர்வார்; சிறியார் வியந்து அணிவார் என்றபடி. குணியின்தொழில்கள் குணத்தின்மே லேற்றப் பட்டன.

வியத்தல்= தானே தன்னைப் புகழ்ந்து நிற்றல். அணிதல் பிறர் புகழ்நதுகொள்ளும்படி பிலுக்கோடு புனைந்து தோன்றல்.

மேல், சிறியார் செருக்கிநிற்பர் என்றார்; இதில், அவரோடிணைத்துவைத்துப் பெரியார் பெற்றி கூறுகின்றார்.

பெருந்தன்மையுடையார் என்றும் பணிவுடையராயிருப்பர்; ஏனைச் சிறுமையுடையார் என்றும் தம்மை வியந்துகொண்டு தருக்கி நிற்பர் என்பதாம்.

தாம் ஒரு நலமும் இலராயிருந்தாலும் தம்மைத் தாமே புகழ்ந்து கொண்டாடி மிகுந்த ஆடம்பரங்களோடு நிமிர்ந்து தோன்றிச் சிறியார் யாண்டும் செருக்கித் திரிவர் என்பார் "சிறுமை என்றும் வியந்து அணியும்" என்றார்.

"ஆசாரத்தில், கொடையில், அறிவில், விவகாரத்தில், அன்பிற்சொல்லும்—வாசாலகத்தில், உயர்மதியில், நிறை சம்பத்தில், வாய்மைதன்னில், கேசாதிபாதம்வரை வடிவழகில், பெரும்புகழில், கெம்பீரத்தில், ஏசாத பெரும்புவனத்து எமக்கு இணையாயினரொருவர் எவரோ?" என்று பண்டொரு இடம்பன் பகர்ந்து நின்றபடி சிறியார்யாண்டும் தம்மை வியந்து நிற்பர் என்க.

பெருமை என்னும் இவ்வதிகாரத்தில் அச் சிறுமையையும் உடன் கூறியது இதன் அருமை தோன்ற.

நிறைந்த திருவோடு சிறந்தபதவிகளை யடைந்திருந்தாலும் பணிவும இன்சொல்லு முடையராய் என்றும் பெரியார் இனிது அடங்கியிருப்பர் என்றவாறு.

ஒருவன் பெரியவனுகவேண்டுமாயின் அவன் பணிவுடைய ஞய் அமைந்தொழுகவேண்டும் என்பது கருதது.

எவ்வளவு உயர்நிலைகளை யடைந்திருந்தாலும் பெரியார்யாண்டும் பணிவுடையராய் அமைந்திருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வெளிமான்பால் உணரப்படும்.

கதை.

வெளிமான் என்பவன் நீதிமானுன ஒரு சிற்றரசன். பல நூல்களையும் ஓதியுணர்ந்தவன்: மிகுந்த படைவலியுடையவன். சிறந்தகொடையாளன். அறிவும் திருவும் ஆற்றலும்வாய்ந்துநெறி யமைந்து நின்று இவன் முறைபுரிந்தான். அருள்மிக வுடையனுய்ப் படிபுரந்தமையால் குடிகள் இவன்மேல் பேரன்பு கொண்டிருந்தார், சுற்றந்தழுவி மற்றவர்ப்பேணி அற்றவர்க்குதவி நற்றவர்க்கினியனுய் உற்றிருநதமையால் இவன் நொற்றமும் புகழும் எங்கும் பெற்று விளங்கினுன். இவனது குணநலங்களையறிந்து புலவர்பலர்வந்து கண்டுமகிழ்ந்து கனிந்துரையாடிப் பரிசில்பலகொண்டுசென்றுர். யாவர்வரினும் அன்புகூர்ந்து இன்சொல்லியம்பி இனிது ஈந்துவந்தான்; ஒருநாள் பெருஞ்சித்திரனுர் என்னும் புலவர் வந்தார். அவரைக்கண்டவுடனே இவன் விரைந்தெழுந்து மகிழ்ந்து தழுவிப் பணிந்துபசரித்துச் சிலநாள் தன்னுடன் இருக்கவைத்து இதம்பலசெய்தான். இவனது பெருந்தன்மையை வியந்து சிலபாடல்களை அவர் உவந்துபாடி விடைபெற்று அகன்றுர். அவரது அறிவுரைகளைக்கேட்டு இவன் அகமகிழ்ந்திருந்தான். சின்னுட்கழிந்தபின் மறுபடியும் ஒருமுறை அவரை வந்து போம்படி அழைத்துநின்றுன். இங்ஙனம நிற்குங்கால் இடையே திடீரென்று ஒரு கொடுநோய்தோன்றியது. அதன் கடுவேகத்தையறிந்து இனி முடிவாக முடிந்துபோவேம் என்று தெரிந்து தன தம்பியை அழைத்து அப்புலவருக்கோர் பெருந்தொசைப் பொருளைப் பணிந்துகொடுக்கும்படி பணித்து உடனே இறந்து போனுன். மறுநாள் புலவர் வந்தார்; நிகழ்ந்ததையறிந்து நெடுந்

துயர் கூர்ந்தார். கடும்பரிவோடு கலங்கியழுதார். அவ்வமயம் அவர் கூறிய கவி ஒன்று இதனடியில் வருவது.

"கவிசெந் தாழிக் குவிபுறத் திருந்த
செவிசெஞ் சேவலும், பொகுவலும், வெருவா
வீய்வன் காக்கையும், கூகையும், கூடிப்
பேஎய் ஆயமொடு பெட்டாங்கு வழங்கும்
காடுமுன் னினனே கட்கா முறுநன்;
தொடிகழி மகளிரிற் றொல்கவின் வாடிப்
பாடுநர் கடும்பும் பையென் றனவே;
தோடுகொள் முரசும், கிழிந்தன கண்ணே;
ஆளில், வரைபோல் யானையு மருப்பிழந்தனவே;
வெந்திறற் கூற்றம் பெருப்பே துறுப்ப
எந்தை யாகுல அதற்பட லறியேன்
அந்தோ அளியேன் வந்தனன் மன்ற
என்னாகுவர் கொல்? எற்றுன்னியோரே;
மாரி இரவின் மரங்கவிழ் பொழுதின்
ஆரஞ் ருற்ற நெஞ்சமொ டொராங்குக்
கண்ணி லூமன் கடற்பட் டாங்கு
வரையளந் தறியாத் திரையரு நீத்தத்து
அவல மறுசுழி மறுகலிற்
றவலே நன்றுமற் றகுதிபு மதுவே" (புறநானூறு)

"வீரபானத்தைக் காமுறுவானுகியஎந்தை, கழுகும் காக்கையும் கூகையும் கூடிப் பேயினத்தோடுதிரியும் சுடுகாட்டை யடைந்தனனே; என்னைச்சேர்ந்தவர் கதி இனிஎன்னும்? அந்தோ! மழைக்காலஇருளில் நடுக்கடலிடையே மரக்கலம் உடைந்தபொழுது அதிலிருந்த கண்ணில்லாதஊமன் ஒருவன் கலங்குவது போலத் துயர்க்கடலுட்பட்டுக் கொடுந்திரை பெற்றத் தூங்கு வதினும் இறந்துபடுதலே நன்று" என அவர் அன்று உளங்கரைந்துரைத் திருக்கும் அருமையை இதில் ஊன்றிநோக்குக. இங்ஙனம் அழுதுபோன அவர் சிலநாட்கள் கழிந்தபின் இவன் தம்பியாகிய இளவெளிமானைக் காணவந்தார். அண்ணன் இறந்தபின்பு அரசதிருவினை யடைந்தமையால் அவன் பெருங்களிப்புக்கொண்டு எவரையுமமதியாமல் தலைநிமிர்ந்து நின்றான். அவன் இயல்பினையறியா

மல்புலவர் நனிவிரும்பி நின்றார்; நின்றும் அவரைச் சிறிதும் பாராமல் செருக்கியிருந்து கொண்டு அருகு நின்றவரிடம் சிறிது கொடுத்து விடுத்தான். அவர் அதனைக் கொள்ளாது இகழ்ந்தார். பணிந்து பேணிவந்த இவனது பெருந்தன்மையையும், அவனது சிறுமையையும் நினைந்து நினைந்து வருந்தினர். அவ்வருத்தத்தோடு ஒரு பாட்டும் பாடினர். அடியில் காண்க.

"நீடுவாழ்கென்று யான் நெடுங்கடை குறுகிப்
பாடி நின்ற பசிநாட் கண்ணே
கோடைக் காலத்துக் கொழுநிழலாகிப்
பொய்த்தல் அறியா வுரவோன் செவிமுதல்
வித்திய பனுவல் விளைந்தன்று நன்றெனா
நச்சி யிருந்த நசை பழுதாக
அட்ட குழிசி அழற்பயந் தாஅங்கு
அளியர் தாமே ஆர்க வென்னா
அறனில் கூற்றம் திறனின்று துணிய
ஆழினுருப்ப வெருக்கிய மகளிர்
வாழைப் பூவின் வளைமுறி சிதற,
முதுவாய் ஒக்கற் பரிசிலர் இரங்கக்,
கள்ளி போகிய களரியம் பறந்தலை
வெள்வேல் விடலை சென்று மாய்ந்தனனே;
ஆங்கது நோயின்றாக ஓங்கு வரைப்
புலிபார்த்து ஒற்றிய களிற்றிரை பிழைப்பின்
எலிபார்த்து ஒற்றாதாகும்; மலிதிரைக்
கடல்மண்டு புனலின் இழுமெனச் சென்று
நனியுடைப் பரிசில் தருகம்
எழுமதி நெஞ்சே! துணிபுமுர் துறுத்தே"

(பெருஞ்சித்திரனார்.)

சோறு வருமென்று எதிர்பார்த்திருந்த உலையிலிருந்து எரி புறப்பட்டதுபோல் இவனை இழந்தமையால் தமக்குத் துயர் புறப்பட்டதெனவும், இப்பெரியோனை யானையாகவும், அச்சிறியோனை எலியாகவும், தம்மைப் புலியாகவும் புனைந்துவைத்துக் குறிப்பாக அவனை இகழ்ந்துகொண்டு மனத்தைமுன்னிலைப்படுத்திப் புலவர் இதில் உரைத்திருக்கும் அழகை ஊன்றுப்பார்க்க. இதனால் இவ

னது பெருமையும், அவன் சிறுமையும் இனிதுணரலாகும். பணிந்து நின்றதால் பெரியன் என எவரும் இவனைப் புகழ்ந்து போற்றினர்; பணிவின்றித் தன்னை வியந்து செருக்கி நின்றதால் சிறியன் என அவனை இகழ்ந்து தூற்றினர். பெருமை என்றும் பணியும்; சிறுமை என்றும் தன்னை வியந்து அணியும்; என்பதை உலகம் இவர் பால் முறையே உணர்ந்து நின்றது.

மாண்புடையான் யாண்டும் வணங்கிநிற்பான் மாண்பில்லான்
வீண்பெருமை காட்டி விடும்.

பணிவுடையார் பெரியராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

**979.** வள்ளலுயர் வஞ்சன் வளமிருந்தும் புன்செருக்குக்
கொள்ளவில்லை என்னே குமரேசா—உள்ளும்
பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல். (௯)

இ—ள்.

குமரேசா! சிறந்த செல்வத்தை யடைந்திருந்தும் வஞ்சன் ஏன் பெருமிதமின்றி அடங்கி யிருந்தான்? எனின், பெருமை பெருமிதமின்மை; சிறுமை பெருமிதம் ஊர்ந்துவிடல் என்க.

இது, பெருமை சிறுமைகளின் பெற்றி கூறுகின்றது.

பெருமிதம் என்றது செருக்கினை. வரம்புகடந்து நிற்றலால் செருக்கு, பெருமிதம் என நின்றது.

ஊர்ந்து விடல் = மிகுதியாக மேற்கொண்டு நடத்தல்.

பெருமிதம் இன்றி இருப்போரே பெருமை யடைவர்; அதனை மேற்கொண்டு நிற்போர்க்குச் சிறுமையே யுண்டாம்; ஆதலால் பெருமையுற வேண்டுவோர் யாண்டும் அதனைக் கொள்ளலாகாதென்றபடி.

மேல், பெரியார் பணிவுடையராய் அமர்ந்தொழுகுவர் என்றார்; இதில், செருக்கின்றி அவர் அடங்கியிருப்பர் என்கின்றார்.

பெருமைக்குணமாவது செருக்கின்றி யிருத்தலே; மற்றைச் சிறுமைக்குணமாவது செருக்குமீக்கூர்ந்து நிற்றலே என்பதாம்.

செல்வம் கல்வி அதிகாரமுதலிய உயர்நிலைகளால் தமக்குஎவ்வளவோ மேன்மை யெய்தியிருந்தாலும் மேலோர் அதனைக்கண்டு செருக்குக்கொள்ளார்; தம்மினும் உயர்ந்துளார் பல்கோடியர் உளரெனவும், அத்தன்மையின் எல்லையற்ற நிலைமையையும் எண்ணி நோக்கி உண்மைநோக்கோடு உளமடங்கி இனிதமர்ந்திருப்பராதலால் பெருமை பெருமிதமின்றி இருக்கும் என்றார்.

சிறியார் ஏதேனும் ஒரு சிறுபதவி யெய்தினும் உடனே களிப்புமீக்கொண்டு மிகத்தருக்கி நிற்பர்; ஏனெனில் அறிவு, எங்குச் சிறிதாகவுளதோ? அங்கேதான் பதவிகள் பெரிதாகத்தோன்றும்; ஞானசூனியராய் ஈனமுற்றிருக்கும் அவர் ஓர் புதிய வுயர்வு வரக் கண்டால் வெறிகொண்ட குரங்குபோல் தலைகால்தெரியாமல் நிலை பிறழ்ந்து நீளச்செருக்கி நிற்பராதலால் சிறுமை பெருமிதம் ஊர்ந்துவிடும் என்றார்.

"சக்கரச் செல்வம் பெறினும் விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச்சொல்—எக்காலும்
முந்திரிமேல் காணி மிகுமாகில் கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும்" (நாலடியார்)

சக்கரச் செல்வம் = அரசதிரு. ஆழிபுருட்டி உலகமுழுதும் ஆளும் அரசபதவி யெய்தினும் பெரியார் பெருமிதம் கொள்ளார்; சிறியார் சிறிதுபெறினும் செருக்குமீக் கொள்வர் என இஃதுணர்த்திநிற்றல் காண்க. "பொல்லார்க்குக் கல்விவரிற் செருக்குண்டாம் அதனோடு பொருளும் சேர்ந்தால்—சொல்லாததுஞ் சொல்வர்; சொற்சென்றாற் குடிகெடுக்கத் துணிவர் கண்டாய்—நல்லார்க்கிம் மூன்றுகுண முண்டாகில் அருள் ஈகை ஞானமுண்டாம்—எல்லார்க்கும் உபகார ராயிருந்து பரகதியை யெய்துவாரே" என்பதும் ஈண்டெண்ணத் தக்கது.

பெருந்தன்மையாளர் யாண்டும் தருக்கின்றி யிருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வஞ்சன்கண் உணரப்படும்.

கதை.

வஞ்சன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர் மலைநாட்டிலே மகோதை என்னும்ஊரிலே யிருந்

தவன். சேரர்மரபினன். இவன் சிற்றரசனுயினும் பேரரசரும் வியக்கத்தக்க பெருங் குணங்களுடையனுய் விளங்கி யிருந்தான். படைக்கலப்பயிற்சியில் இவன் மிகத் தேர்ந்தவன். குதிரையேற் றத்தில் எவரும் தனக்குநிகரில்லாதவன். பெருந்தன்மையாளன் நல்ல கல்விமான். என்றும் நகைமுகத்தனுய் எவர்க்கும் உவகை யுடன் ஈந்துவந்தான். அறநிலையாளர்க்கு இங்ஙன மிகஇனியனு யினும் மறநிலைகொண்டு முறுகி மாறு பட்டவர்க்கு அரியேறு போன்று இவன் அடலாற்றி நின்றுன். இனமறியாது எதிர்த்த பகைவர் பின்பு புலிகண்ட புல்வாய்போல் இவன் நிலைகண்டு ஒது ங்கி ஒழிந்தனர். அருந்திறலும், பெருந்திருவும், ஒருங்கமைந்து நிறைந்தபுகழோடு உயர்ந்திருந்தும் பெருமிதம் என்பது சிறிதுமி ன்றிப் பணிவும் பண்பும் உடையனுய் இவன் அடங்கியிருந்தான். அறிஞர்களைக் கண்டால் அன்புமீக் கூர்ந்து மிக வணங்கி நின்று அவர்வாய்திறந்து உரையாமுன்னரே குறிப்பறிந்து உதவிவந் தான். ஒருநாள் திருத்தாமனுர் என்னும் புலவரொருவர் இவன் பால் வந்தார். அவர் வறுமை நீங்க உதவி உரிமைசெய்து விடுத் தான். இவன் ஆதரித்துதவிய அருமையைவியந்து ஆர்வமீதூர் ந்து அவர்பலபாடல்கள்பாடினுர். ஒன்று அடியில்வருவதுகாண்க.

"வரிசையி னிறுத்த வாய்மொழி வஞ்சன்
நகைவர் குறுகினல்லது பகைவர்க்குப்
புலியினமடிந்த கல்லளை போலத்
துன்னல் போகிய பெரும்பெயர் மூதூர்
மதியத் தன்னவென் னரிக்குரற் றடாரி
இரவுரை நெடுவா ரிப்ப வட்டித்
துள்ளிவருநர் கொள்கல நிறைப்போய்!
தள்ளா நிலையை யாகியர் எமக்கென
என்வரவு அறீஇச்
சிறிதிற்குப் பெரிதுவந்து
விரும்பிய முகத்த னுகி என் அரைத்
துரும்புபடு சிதாஅர் நீக்கித், தன்அரைப்
புகைவிரிந் தன்ன பொங்கு துகிலுடீஇ
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி ஒளிர்வரும் அரவுற ழாரமொடு
உரைசெல அருளியோனே" (புறநானூறு)

அப்புலவரை அணைத்து ஆதரித்துத் தான் புனைந்திருந்த

பொன்னுடையும் மணியாரமும் பிறவும் கொடுத்து இவன் விடுத்திருக்கும் உண்மையை அவர் இதில் விளக்கியிருத்தல் காண்க. இதனால் இவனது அருமையும் பெருமையும் இனிதறியலாகும். வண்மையாளனாய் இவ்வண்ணம் பெருஞ்சிறப்புற்றிருந்தும் இவன் அமைதியுடனிருந்தான். இவன்காலத்தில் சாமன் என ஒருவன் இருந்தான். அவன் சிறிதுசெல்வமுடையவன். அதனை நினைந்து அவன் மிகத்தருக்கிநின்றான். அவனது புல்லிய நிலையைநோக்கி எல்லாரும் பழித்தார். இவனது பெருநதகைமையை வியந்து துதித்தார். "பெரியார் பெருமிதமின்றி யிருப்பர்; சிறியார் பெருமிதம் ஊர்ந்து நிற்பர்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

சீறிச் செருக்கும் சிறுமை பெருமைதான்
தேறிப் பணியுந் தெளிந்து.

செருக்குற லாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

**980.** உற்ற தவளகிரி யூறுமறைததான் மருதன்
குற்றமேன் சொன்னன் குமரேசா—முற்றுக
அற்ற மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும். (0)

இ—ள்.

**குமரேசா!** தவளகிரிமுதலியார், யாரையும் வசையுரையாது அடங்கியிருந்தார்; மருதன் ஏன் பிறர்குற்றம் கூறிநின்றன்? எனின், பெருமை அற்றம் மறைககும்; சிறுமைதான் குற்றமே கூறிவிடும் என்க.

இது, பெரியார் பிறர்வசை யுரையார் என்கின்றது.

அற்றம் என்னும்சொல் இடக்கரடக்கராய்நின்று மறைத்தற்குரிய இடத்தை யுணர்த்திவரும். "அற்றம் மறைத்தலோ புல்லறிவு; தம்வயிற்குற்றம் மறையாவழி" என்புழிக்காண்க. அஃது ஈண்டு அவமானத்தைக் குறித்து நின்றது. அஃதாவது வெளிப்படுத்தினல் பிறர்க்கு இகழ்ச்சியைத் தரத்தக்க குறைகளை என்க. இங்ஙனம் பிறர்குறை கூறல் அறிவற்ற சிறியர் செயலாம்

என்றவாறு. "அற்றம் பார்க்கும் செற்றச் செய்தொழிற் பற்று மாந்தர்" (பெருங்கதை) "அற்றந்தான் வார்த்தையின் உணர்த்துதல் வறிது" (இராமாயணம்) என வருவன காண்க.

மறைக்கும் என்றது ஒருவன் குற்றத்தைப் பிறரறியும்படி பெரியோர் வெளிப்படுத்தார் என்றவாறு. "அறிவோர் பிறர்பழி யாண்டும் இசையார்—உறுதி யுற அருளானுன்னின் அவர்முற்—செறலோடு சொல்லினுஞ் சொல்பவே யன்றிக்—குறை புறன் கூறுர் குறித்து" என்பதுங் காண்க.

மேல் பெரியாரின் மனநிலை கூறினர்; இதில், அவர் மொழி நலங் கூறுகின்றார்.

பெருந்தன்மை யுடையார் பிறர் வசையை மறைத்து இசையையே கூறுவர்; மற்றைச் சிறுமையுடையார் பிறர் குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறிவிடுவார் என்பதாம்.

பெரியார் என்பார் சிறியன சிந்தியாத இயல்பின ராதலால் பிறருடைய சிறுமைகளை அவர் கருவி நோக்கார்; ஒருவேளை அவை அவர்நோக்கிற்படினும் "நன்றல்லதன்றே மறப்பதுநன்று" என்றபடி மறந்து போக்கி விடுவரேயன்றித் தம் புனிதவாயால் அவற்றை ஊக்கி உரையார் என்க. கரும்பில் வேம்பு விளையாததுபோல் தூயநாவில் தீயசொல் நுழைபாதென்க.

எவ்வுயிர்க்கும் இதஞ்செய்தொழுகும் பெருந்தன்மை யாளர் பிறருடைய இழிவுகளை எடுத்துமொழியார் ஆதலால் "பெருமை அற்றம் மறைக்கும்" என்றார். இங்ஙனம் மறைப்பாரைப் பெரியர் என்றது அடுத்தாரை அவமானப்படுத்தாமல் உயர்த்திவிடும் அருமை கருதி என்க. "பிறர்வசையுரைத்தல் பெருமையன்று" என வீமனுரைத்துள்ளதுங் காண்க. பிறரது குணங்களை மட்டும் கூறிக் குற்றங்களை யுரையாதொளித்தலே பெருந்தன்மைக்கு அழகாம் என்றபடி. இத்தன்மை யுடையார் யாண்டும் நன்மையாளராய்ப் போற்றப்படுவர்.

"பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல்" (நீதிநெறிவிளக்கம்)

தாம் பெருமையடையவேண்டுவோர் பிறர் சிறுமை கூறலாகாதென, இஃதுணர்த்திநிற்றல் காண்க.

பிறருடைய குணங்களை விடுத்துக் குற்றங்களை மட்டும் கொழித்தெடுத்துச் சிறியர் கூறுவர் என்பார் "சிறுமை குற்றமே கூறிவிடும்" என்றார். ஏகாரம் பிரிநிலை.

"உண்டு குணமிங் கொருவர்க் கெனினுங்கீழ்
கொண்டு புகல்வதவர் குற்றமே—வண்டுமலர்ச்
சேக்கை விரும்பும் செழும்பொழில்வாய் வேம்பன்றே
காக்கை விரும்புங் கனி. (நன்னெறி)

இனியன நுகரும் வண்டைப் பெரியர்க்கும்; இன்னாதன தின்னும் காக்கையைச் சிறியர்க்கும் ஒப்பாக வைத்து அவர்தம் பெருமை சிறுமைகளை முறையே இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

உள்ளம் புனிதமாய் ஊக்கிநின்று உபகரித்தல்; என்றும் நல்லன செய்தல்; யாண்டும் மேன்மையோடு மேவிநிற்றல்; நெறிநின்றொழுகல்; அரியன புரிதல்; பெரியாரைப் பேணல்; செருக்கின்றி யிருத்தல்; பணிந்தமைதல்; தம்மைவியந்துகொள்ளாமை; பிறரை இகழ்ந்துசொல்லாமை; என்னும் இன்னவகையான நன்னயங்களை யுடையாரே பெரியாராவர் என விளக்கிப் பெருமையை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

தாம் புனிதராய்நின்று என்றும் பிறர்க்கு இனியன செய்வோரே பெரியர் என்பது இதன் திரண்டபொருளாம்.

பெரியார் பிறர் குற்றங்களை மறைத்துக் குணத்தையே கூறுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை தவளகிரி முதலியார்பால் உணரப்படும்.

கதை.

தவளகிரி முதலியார் என்பவர் தொண்டைநாட்டிலே வெண்குன்றம் என்னும் ஊரிலே வேளாளர் குலத்திலே பிறந்தவர். இவர் சிறந்த செல்வத்தோடு நிறைந்தகல்வியு முடையராய் விளங்கியிருந்தார். இவர் முன்னோர் பலர் வழி வழியாகச் சோழமன்னர்க்கு உசாததுணைவராயமைந்து வந்துளார். இவரும் அவ்வாறேகுலோத்துங்கன் என்னும் வளவன் அவையில் வினைபுரிந்து வந்தார். இவர் உண்மையும் உறுதியும் ஊக்கமுமுடையவர். மற

ந்தும் புறங்கூறாப் பெருந்தன்மையாளர். யாவர்மாட்டும் இன்சொல்லாடும் இனியசீர்மையர். புலவர்பால் பெருவிருப்புடையராதலால் நாளும் பலரை வரவழைத்து அவரை நன்கு போற்றிவந்தார். வருங்கால் ஒருநாள் அங்குக் கம்பர் வந்தார். மிகுந்தமகிழ்ச்சியுடன் வணங்கிஉபசரித்து அவருக்குச்சிறந்த விருந்துசெய்ய விழைந் திருந்தார். இங்ஙனம் இருக்குங்கால் தம் புதல்வனாகிய சேதிராயன் என்பவன் அடுத்திருந்த வாழைத் தோட்டத்துட் போய்வருங்கால் பாம்புகடித்து இறந்துபோயினன். இவர் அறிந்து மிகவருந்தினர்; ஆயினும் விருந்தருந்தல் சிதைந்துபோமே என்று கலங்கி அதனை வெளிப்படுத்தாமல் மறைத்து வைத்துவிட்டு அக் கவிச் சக்கரவர்த்தியை உணவருந்தும்படி கனிந்தமுகத்தோடு வந்து உவந்து வேண்டினர். அவர் குறிப்பாக அவ் இறப்பினை எப்படியோ அறிந்துகொண்டு பையன் எங்கே? என்றார். இவர் செப்வகைதெரியாது தியங்கி விழித்தார். அப்புலவர்பெருமான் விரைந்தெழுந்து போய் அவன் கிடந்த இடத்தில் நின்றுகொண்டு கலைமகளை நினைந்து அடியில்வருமாறு பாடினர்.

வெண்பா.

"ஆழியான் பள்ளி யணையே! அவன்கடைந்த
வாழி வரையின் மணித்தாம்பே—பூழியான்
பூணே, புரமெரித்த பொற்சிலையே பூட்டுகின்ற
நாணே, அகல நட. (க)

மங்கை யொருபாகன் மார்பிலணி யாரமே
பொங்கு கடல்கடந்த பொற்கயிறே—திங்களையும்
சீறியதன் மேலூரும் தெய்வத் திருநாணே,
ஏறிய புண்பே யிறங்கு. (2)

பாரைச் சுமந்த படவரவே, பங்கயக்கண்
வீரன் கிடந்துறங்கும் மெல்லணையே,—ஈரமதிச்
செஞ்சடையான் பூணும் திருவா பரணமே
நஞ்சுடையாய் தூர நட" (கம்பர்) (3)

இங்ஙனம் பாடியவுடனே அம்மையின் திருவருளால் அவன் உயிர்பெற்றெழுந்தான். அவனைக் கண்டபொழுது இவர் கொண்டவுவகையை யார்சொல்ல வல்லார்? உடனே கம்பரது அடியில் விழுந்து அன்புமீதூர்ந்து அகமுருகிப்போற்றினர். அவர் விருந்துண்டு இவரை ஆதரித்திருந்தி அகன்றார். யாரையும் யாண்

டும் யாதோர் வழுவுரையும் கூருமல் அமைதியுற்றிருக்கும் இவரது அருமையைவியந்து அரசர்முதலிய பலரிடமும் அவர் உரை செய்து வந்தார். அவரை அடிக்கடி கண்டு அன்புரையாடி இவர் இன்பமீக்கூர்ந்தார். தாம் மிக உரிமையாக்கொண்டிருக்கும் ஏரின்பெருமையைக் குறித்து அப்புலவர் பெருந்தகையைப் பாடும்படி வேண்டினர். அவர் எழுபதுகவிகள் பாடினர். அது, ஏரெழுபது என வழங்கி வருகின்றது. யாரும் நலமுறச் சீர்பலசெய்து ஏர்வளம் பேணி இவர் இசைபெற்றிருந்தார். இவர் காலத்தில் மருதன் என்பவன் ஒருவனிருந்தான். அவன் யாரையும் வசைபுரைக்கும் வல்வாயினன். குறுநிலமன்னன்போல் பெருஞ்செல்வமுடையனயிருந்தும் பிறர்குற்றமே கூறிக்களித்தான். அப்புல்லியசெயலால் இழிமகன் என எல்லாரும் அவனை எள்ளிப்பழித்தார். பிறர்பிழை கூருமல் எவரிடமும் இனியவுரைகளாடி வந்தமையால் பெரியர் என இவர் உயர்வுற்றிருந்தார். பெருமை அற்றம் மறைக்கும்; சிறுமை குற்றமே கூறும்; என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. பெருந்தன்மைவாய்ந்த இவரைக்குறித்துப் புலவர்பலரும் போற்றியுள்ளார்.

> "அழுவதுங் கொண்டு புலம்பாமல் நஞ்சுண்டதுமறைத்தே
> ரெழுபதுங் கொண்டு புகழ்க்கம்பநாடன் எழுப்பவிசை
> முழுவதுங்கொண்டொரு சொற்பேச நெய்யின்முழுகிக்கையின்
> மழுவதுங்கொண்டுபுகழ்கொண்டதாற் றொண்டைமண்டலமே"
> (தொண்டைமண்டல சதகம்.)

இவரது அருமைச்செயல்கள் இதன்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளன காண்க. நான்கு தலைமுறைக்குப் பின்னர் இவர் மரபில் தோன்றிய ஒருவனுக்கு இவர் பெயரிடப் பெற்றிருந்தது. அவனும் இவர்போலவே பெருந்தன்மையுடையனு யமைந்திருந்தான். ஒருமுறை அறிஞர் பலர் கூடியிருந்த அரசசபையில் இவரது பெருமையைப் பற்றிப் பேச நேர்ந்தது. அவ்வமயம் அங்கு முதன்மையாய் வீற்றிருந்த அரசன் மாறுபட்டான். நெறிவழுவாது நின்று இவ்வளவு அருமையுடைய செயல்களை இவர் ஆற்றியிருப்பரோ? என்று ஐயுற்று அவன் மறுத்துரையாடினன். இவர் பெயர்கொண்டு அருகே நின்ற அவன் என் முன்னேர் செய்தது உண்மையேயாம் என ஊக்கி மொழிந்து பலருமறியக் காய்ச்சிய நெய்யில் முழுகிக் கையில் மழுவேந்தி யுணர்த்தினன்.

"விழுமியசொற் கவிக்கம்பற் கிறந்தசேய் தனைமன்றத்து
விருந்து செய்தே
ரெழுபதொடச் சேயுயிரும் பெற்றனர்தம் மரபினரென்
றியம்பச் சோழன்
பழுதிதுகற் பனையெனத் தான்பண்ணுவன் சத்தியமெனத்தீ
பறக்கு நெய்யின்
முழுகிமழு வேந்திநின்றான் வெண்குற்றத் தவளகிரி
முதன்மை யோனே"

மேற்குறித்த வுண்மையை இதுவிளக்கி நிற்றல் காண்க. அரியனசெய்து அற்றமறைத்து யார்க்கும் இனியராய் அமைந்திருந்தமையால் பின்வந்தவரெவரும் பெரியர் எனப் போற்றப் பெரும்புகழோடு இவர் விளங்கியிருந்தார். பெருமையடையவேண்டுவோர் பிறர்வசையுரையாமல் தம்மைப் பேணி ஒழுக வேண்டும் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

என்றும் பிறர்குற்றம் எண்ணார் பெரியர்கீழ்
கன்றி மொழியுங் கடுத்து.

பெரியர் சிறியர்களின் இயல்பு இதனால் தொகுத்துக் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

உயர்நிலையில் ஊக்கிநின்று அரியன செய்வோரே பெரியராவர். அருமைச்செயலே பெருமைக்குஏதுவாம். செல்வஅதிகாரங்களில் சிறந்திருந்தாலும் பெருந்தன்மை யிலாராயின் அவர் பெரியராகார். நெறிநின் றொழுகுவார்க்கே உயர்வுண்டாகும். அருமையுடைய செயல்களை ஆற்றுவோரே பெருமையடைவார். பெரியாரைப் பேணாதவர் சிறியரே யாவர் அவர் செல்வமிக எய்தின் அல்லல் பல விளையும். பெரியார் பணிவுடையரா யமைந்தொழுகுவார். சிறியார் செருக்கி நிமிர்ந்து திமிர்ந்து திரிவார். பெரியார் பிறர்வசையுரையார்; சிறியார் அதனையே தெளித்துக் கூறுவர்.

கூஅ-வது பெருமை முற்றிற்று.

---

# 99-ம் அதிகாரம் சான்றாண்மை.

அஃதாவது சால்பினை ஆளுந்தன்மை. சால்பாவது குணங்களின் நிறைவு. இரக்கம், பணிவு, ஈகை, இன்சொல், நேர்மை, மான முதலிய குணநலங்களா னிறைந்து யாண்டும் நெறி வழுவாது நின்றொழுகும் ஆன்ற அறிவுடையாரின் அமைதி கூறுகின்றா ராதலால் இது பெருமையின் பின் வைக்கப்பட்டது.

**981.** மண்டு புகழயிந்தன் மாண்குணங்க ளெல்லாமேற்
கொண்டிருந்தான் என்னே குமரேசா—கொண்ட
கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு. (க)

இ—ள்.

**குமரேசா!** அயிந்தன் என்பவன் நல்லகுணங்களெல்லாவற்றையும் ஏன் ஒருங்கே கொண்டிருந்தான்? எனின், கடன் அறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு, நல்லவை எல்லாம் கடன் என்ப என்க.

இது, சான்றோர்க்குரிய தகைமை கூறுகின்றது.

நல்லவை என்றது நல்ல குணங்களை. தீயனவும் உளவாதலால் இனம் விலக்கி இங்ஙனம் நல்லவை என்றார். எல்லாம் என்றது எஞ்சாமை தோன்ற நின்றது.

அறிந்து கொள்பவர்க்கு நல்லவை கடன் என்றதனால் அங்ஙனம் அறியாதார் அவற்றைக் கடனாகக் குறியார்என்பதாயிற்று.

தங்கடமையை உணர்ந்து சான்றாண்மையைத் தாங்கி நிற்பவர்க்கு நல்லகுணங்களெல்லாம் இயல்பாக அமைந்திருக்கவேண்டுமென்று நூலோர் சொல்லுவர் என்பதாம்.

கடன் அறிந்து என்றது மக்கட்பிறப்பின் அருமையையும், அதனைப்பெற்றார் அமைந்திருக்கவேண்டிய உரிமையையும் ஓர்ந்து உணர்ந்து என்றவாறு. இவ்வுணர்ச்சியின்றேல் சான்றோராய் நின்றொழுக அமையாதாதலால் அவ் ஒழுக்கத்திற் கேதுவாக அறிந்து என அவ் அறிவினைமுந்துற வூன்றி வைத்தார்.

சான்றோர் என்று தலைநீட்டி நிற்பார் குணநலங்களெல்லாம் ஒருங்கேயுடையராய்ச் சிறிதும் தவறின்றி யாண்டும் பெருந்தன்

மையோடு அமைந்திருக்க வேண்டும் என்பார் "சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு நல்லவை எல்லாம் கடன்" என்றார்.

இவ் வுண்மை பண்டுதொட்டே மேலோர் எல்லாராலும் குறிக்கப்பட்டுள்ளதே யன்றி யான் புதுவதாக உரைத்ததன்றென்பார் என்ப எனத் தெரித்து நின்றார்.

சான்றாண்மை என்னும் சொல்லுக்கே குணங்களால் நிறைந்தமைந்திருக்குந் தன்மை என்பது பொருளாதலால் அதனை மேற்கொள்பவர்கு நல்லவை எல்லாம் கடனும் என்க. கடன் என்றது இன்றியமையா தியல்பாயிருக்கவேண்டிய உரிமை கருதி. காலைக்கடன், மாலைக்கடன், பிதிர்க்கடன் என்பனபோல இதனை இயற்கைக் கடனுக் கொள்க.

விழுமிய குணங்களுடையராய் யாதும் வழுவாமல் மேலோர் ஒழுகிவரின் அதனுல் அவரை வியந்து புகழவேண்டிய தில்லை; ஏனெனில்? வானம் இனிதாய் நின்று மழைபொழிவது போலவும், மதி, கலைகள் நிரம்பி ஒளிசெய்வது போலவும் அஃது அவர்க்கு இயல்பாகிய கடமையாதலின் என்க. அந்நிலையில் ஏதேனும் வழுவிச் சிறிது பிழைசெய்வராயின் உடனே அவர் பழிதூற்றப் படுவர்; ஆதலால் என்றும் அவர் குணநிலையமாய் நின்று விளங்க வேண்டு மென்று இஃதுணர்த்திய தென்க. இதனுல் இதன் அருமையும், பெருமையும் இனிது புலனும.

நல்லவை செய்யின் இயல்பாகும்; தீயவை
பல்லவர் தூற்றும் பழியாகும; எல்லாம்
உணருங் குடிப்பிறப்பின் ஊதியம் என்றே.
புணரும் ஒருவர்க் கெனின். (நாலடியார்)

சான்றோர்க்கு அமைந்திருக்கும் பொறுப்பை விளக்கி மிக வினயமாக அவர் நிலையினருமையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

நல்லவை என்றதோடு அமையாமல் மேலும் எல்லாம் என்றது என்னை? எனின், சில இல்லை என்று சொல்லாதபடி குணங்கள் நிரம்பிப் பரிபூரணசீலராய் அவர் இருக்கவேண்டும் என்பது கருதி என்க.

மனம் மொழி மெய்கள் என்னும் முக்கரணங்களும் நற்குணங்களா பூரிக்கப்பட்டுச் சான்றோர் இருப்பர் என்றபடி. இக்குணநலங்கள் சில இதனடியில் வருவன காண்க.

மனம்.

"உள்ளச் செய்தி தெள்ளிதிற் கிளப்பின்
இருள்தீர் காட்சி அருளொடு புணர்தல்
பெரும்பொறை தாங்கல், பிறன்பொருள் விழையாமை,
செய்தநன் றறிதல், கைதவங் கடிதல்
பால்கோடாது பகலிற் றோன்றல்
மானமதாணி ஆணியிற் றுங்கல்
அழுக்காறின்மை அவாவிற் றீர்தல்
அருந்துயர் உயிர்கட் கிருந்த காலை
அழல்தோய் வுற்ற மெழுகே போலக்
கழலு நெஞ்சிற் கையற் றினைதல்
பன்னருஞ் சிறப்பின் மன்னுயிர்த் தொகைகட்கு
அறிவும் பொறியும் கழிபெருங் கவினும்
பெறற்கருந் துறக்கமும் இறப்ப வூங்குத்
தம்மினும் வேண்டுமென் றெண்ணும் பெருங்குணம்;

வாக்கு.

வாக்கொடு சிவணிய நோக்கின் மீக்கொள
அறம்பெரி தறைதல், புறங்கூறாமை,
வாய்மை, கல்வி, தீமையிற் றிறம்பல்,
இன்மொழி யிசைத்தல், வன்மொழி மறுத்தல்,
அறிவுநூல் விரித்தல், அருமறை கழறல்,
அடங்கிய வுறைதல், கடுஞ்சொல் விடுத்தல்;

காயம்.

காயத் தியைந்த வீயா வினையுள்
அருந்தவம் தொடங்கல் திருந்தியதானம்
கொடைமடம் படுதல் படைமடம் படாமை
அமரர்ப் பேணல் ஆகுதி அருத்தல்
ஒழுக்கம் ஓம்பு விழுப்பெருங் கிழமை
உடம்பிடி ஏந்தி யுடல்தடிந் திடுமா
றடைந்த காலை அவணியல் துயரம்
தேரா ரல்லர் தெரிந்தும் ஆருயிர்
பெரும் பிறிதாக விரும்பிணை மிசைஞரின்
ஓராங்குப் படரா மாசில் காட்சி
ஐம்பெரும் பாதகத் தாழி நீநதல்
இந்திரியப் பெரும்படை இரிய நூறும்
வன்றறுகண்மை வாளிட் டாங்கு
நோவன செய்யினும் மேவன செய்தல்

நரு தவச்சிறி தாயினும் மிகப்பல விருந்து
பாத்தூண் செல்வம் பூக்கமழ் இரும்பொழில்
தன்மனைக் கிழத்தி யல்லதை பிறர்மனை
அன்னையிற் றீரா நன்ன ராண்மை'' (ஞானமிர்தம்.)

எனவரும் இந் நல்லவை யெல்லாம் தமக்கு உரிமையாக அமையப்பெற்றுச் சான்றோர் இருப்பர் என்க.

அகிலமங்கள குணகண சொரூபிகளாய் அமைந்திருப்போரே சான்ருேராவர் என்பது கருத்து.

பெருந்தன்மையாளரான மேன்மக்கள்பால் எல்லாச் சிறந்த குணங்களும் நிறைந்திருக்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அபிரதன் பால் உணரப்படும்.

கதை.

அபிரந்தன் என்பவன் தொண்டைநாட்டிலே ஆலஞ்சேரி என்னும் ஊரிலிருந்தவன். வழிவழியாகச் சிறந்து வந்த உயர்ந்த குடியில் பிறந்தவன். நிலவளங்களால் மிகுந்த செல்வங்களை யடைந்து இவன் சிறந்திருந்தான். பெருந்தன்மையாளன், வருந்தி வந்தவர்க்கெல்லாம் அருந்துணையாய் நின்று அனைவரையும் இவன் ஆதரித்துவந்தான். நல்ல கல்வியறிவுள்ளவனுதலால் புலவர்பால் பெருமதிப்புடையனுய் நிலவி யிருந்தான். மூடவிருளை நீக்கும் பீடுடையாரென அவரை இவன் நாடியிருந்தான். யாரையும் எவ்வகையினும் இகழ்ந்துரையாதவன். இவனது சிறந்த இயல்பினையறிந்து அருந்தவரும் புகழ்ந்துளார். அருள், ஈகை, அடக்கம், பணிவு, உண்மை, திண்மை முதலிய உயர் குணங்களெல்லாம் இவன்பால் ஒருங்கே குடிகொண்டிருந்தன. தான்வருந்தினும் தன்னை யடுத்தாரை ஆதரிக்கும் பெருந்தகை யாளனுய் இவன் விளங்கிவருங்கால் இவ்வுலகில் ஓர் கொடும்பஞ்சம் தோன்றியது. அவ்வற்கடம் பன்னிருவருடம் தொடர்ந்துநின்றமையால் மன்னுயிர் பல மடிந்தொழிந்தன. அக்காலத்தில் மதுரையிலிருந்து அரசுபுரிந்த பாண்டியமன்னனும் நிலம்படு நிலையை நினைந்து நெஞ்சங்கலங்கினன். வழிவழியாக நன்கு பாதுகாத்து வந்த தன் சங்கப்புலவரை அதுபொழுது தாங்கமுடியாமல் தயங்கினன். ஒருநாள் மிகவருந்தி அவரனைவரையும் அழைத்தான்; புலவீர்!

"இதுபொழுது நிலை சரியில்லையே! என்செய்வது?" என்று இரங்கியுரைத்தான். அவன் உள்ள நிலையைநோக்கிப் புலவரெல்லாரும் ஒருங்கேதிரண்டு உளமிரங்கி அரசே! வருந்தல்; "பழுத்த மரத்தை நாடிச் செல்லும் பறவைகள் போல இப்பொழுது செழித்தநாட்டை யாங்கள் தேடிச்செல்கின்றோம்; பின்பு உலகம் செழித்துத் திருவருள் கூட்டிவைத்தால் மீண்டும் நின்பால் வந்துசேர்கின்றோம்" என்று விடைபெற்றுச் சென்றார். சென்றவர் பலவிடங்களிலும் திரிந்து முடிவில் இவனிடம் வந்துசேர்ந்தார். அவரைக் கண்டபோது அன்புகூர்ந்து இவன் அகமிக மகிழ்ந்தான். ஆதரித்திருத்தினன். வேண்டிய வசதிகளைக் குறிப்பறிந்து நாளும் விருப்புடன் செய்துவந்தான். வருங்கால் வான்வளஞ்சுரந்தது; கொஞ்சம் பஞ்சம் நீங்கியது; உடனே அவர் கூடியெழுந்து இவனிடம் நயந்து விடைபெற்று அப்பஞ்சவனை யடைந்தார். அவன் இவரைப்பார்த்துமகிழ்ந்து "இத்துணைக்காலமும் எவ்வுழியிருந்தீர் எப்படிப்பிழைத்தீ"? என வியந்து வினவினன். அப்பொழுது அவர் செப்பியபாடலொன்று அடியில் வருவது காண்க.

"காலை ஞாயிறு கடுங்கதிர் பரப்பி,
வேலையும் குளனும் வெடியடச்சுவறித்,
தந்தையை மக்கள் முகம்பாராமல்,
வெந்த சாகம் வெவ்வே றருந்திக்,
குளமுள தனையும கொடுத்து வாழ்ந்த
கணவனை மகளிர் கண்பா ராமல்,
விழித்த விழியெல்லாம் வேற்றுவிழி யாகி,
அறவுரை யின்றி, மறவுரை பெருகி,
உரைமறந் தொழிந்த வூழி காலத்தில்,
தாயில் லவர்க்குத் தாயே யாகவும,
தநதையில் லவர்க்குத் தந்தையே யாகவும்,
இநத ஞாலத் திடுக்கண் தீர
வநதுதோன் றினன் மாநிதிக் கிழவன்,
நீலஞ்சேரும் நெடுமால் போல்வன்
ஆலஞ்சேரி அயிந்தன் என்பான்
தன்குறைசொல்லான்; பிறர்பழி யுரையான்;
மறந்தும் பொய்யான்; வாய்மையுங் குன்றான்;
இறந்து போகா தெம்மைக் காத்தான்;
வருந்தல் வேண்டாம் வழுதி!
இருந்தனம் இருந்தனம் இடர்கெடுத்தனனே" (சங்கத்தார்)

அப்பஞ்சத்தின் கொடுமையையும், அதன்கடு நிலையையும், அக்காலத்தில் தம்மைப் பாதுகாத்த இவனது பான்மையையும் அப்புலவர் பெருமக்கள் உளமுருகித் தெளிவாக இதில் உரைத்திருத்தல் காண்க. இதனால் இவனது அருங் குணங்களும், பெருஞ் செயல்களும் இனிதறியலாம். அவ் வேநதனும் இவ் வந்தலை விபந்து புகழ்ந்து நயந்திருந்தான். சிறந்த குணங்களெல்லாம் இயற்கையாகவே இவன்பால் அமைந்திருந்தமையால் குணக்கடல் என அனைவரும் இவனை அழைத்து வந்தார். "கடனறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு நல்லவை யெல்லாம் கடனென்ப" என்பதை உலகம்காண இவன் உணர்த்தி நின்றான்.

தண்ணொளிசார் நன்மதிபோல் தக்கார்தா நற்குணங்கள்
நண்ணி யிருப்பர் நயந்து.

சான்றோர் இயல்பு இதனால் கூறப்பட்டது.

---

**982.** ஆர்ந்த குணத்தின் அமைதியால் அந்துவனார்
கூர்ந்துநின்றார் என்னே குமரேசா—சார்நத
குணநலஞ் சான்றோர் நலனே பிறநலம்
எந்நலத் துள்ளதூஉ மன்று. (உ)

இ—ள்.

**குமரேசா!** எழில்நல மில்லாதிருந்தும் அந்துவனாரது குணநலம் கண்டு எல்லாரும் ஏன் அவரைக் கொண்டாடி நின்றார்? எனின், சான்றோர் நலன் குணநலனே; பிறநலம் எந்நலத்தும் உள்ளது அன்று என்க.

இது, குணமுடைமையே சான்றோர்க்கு அணிஎன்கின்றது. உள்ளதூஉம் என்பதிலுள்ள உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது. அளபெடை இன்னிசை தோன்ற நின்றது.

உள்ளது அன்று = இல்லை என்றபடி. ஒரு பொருளாகக் கருதி மதிக்கப்படுவதில்லை என்பதாம்.

பிறநலம் என்றது உடல்நலமாகிய அழகினை. உயிர்நலமாகிய குணத்தை முன்னர்ப் பிரித்தமையான் அதனோடு உடனெ

ண்ணப் படுகின்ற உடல்நலத்தைப் பிறநலம் என்று குறித்தார்.

எந்நலம் என்பதில் எகரவினா, சிறப்போடு எஞ்சாமையையு முணர்த்தி நின்றது. கல்விநலம், செல்வநலம், கொடைநலம், குலநலமுதலாகப் பல நலங்களுள்ளன ஆதலால் அவை முழுவதையும் வரைந்துகொள்ள இஃதமைந்து வந்தது.

மேல், சான்றோர்க்குரிய தகுதியை யுணர்த்தினார்; இதில், அவர் தன்மையை உணர்த்துகின்றார்.

சான்றோர் நலனாவது குணநலங்களாலாய நலமே; மற்ற எழில் நலம் ஒருநலத்துள்ளும் வைத்து மதிக்கப்படுவதில்லை என்பதாம்.

நல்லவை என்று சொல்லப்படுகின்ற எல்லாவற்றையும் தமக்கு உரிமையாக்கொண்டு சான்றோர் அமைந்திருக்க வேண்டும் என முன்விதித்ததைநோக்கி அப்படியாயின், அழகும் நல்லது தானே? அஃது அமையப் பெறாதவர் சான்றோராக அமைந்திருக்கமுடியாதன்றோ? என்று அழகை விரும்பிநின்ற ஒருவன் எதிர் லாதஞ்செய்ய, ஒருநோக்கில் அது நல்லதேயாயினும் கல்விமுதலிய நலங்கள்போல் அவ்வளவு சிறந்ததாக மேலோர் அதனை நயந்துகொள்ளவில்லை யாதலால் சான்றாண்மைக்கு இன்றியமையாத ஒன்றாக அந்நலம் உள்ளதன்று என்று அவனைநோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்து கொள்க.

அழகு என்பது பெறுதற்குரியதோர் அருமையுடையதேயாயினும் குணத்தோடுபொருந்தாவழி அது மாமபெறாதென்க.

புறநலமாகிய அழகினும் அகநலமாகிய குணத்தையே மேலோர் மிகமதித்திருப்பர் என்றபடி.

குணநலமே சான்றாண்மைக்கு ஊன்றுகோலா மென்பது குறிப்பு.

சிறந்த அழகனாயிருந்தாலும் அமைந்த குணமில்லையானால் சான்றோனாதற்கு அவன் தகுதியவனாகான் என்பது கருத்து.

குண நலங்களையே தமக்கு அணிகலன்களாக்கொண்டு சான்றோர் அமைந்திருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அந்துவனார் பால் உணரப்படும்.

கதை.

அந்துவனார் என்பவர் இற்றைக்குஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே மதுரையம்பதியி லிருந்தவர். இவர் அந்தணர் மரபினர்; செந்தண்மையாளர். பலநூல்களையும் வழுவறப்பயின்று தெளிந்த புலமையுடையராயமைந்திருந்தராதலால் சங்கப்புலவருள் ஒருவராய்ச்சிறந்து இவர் விளங்கியிருந்தார். தலைமையான நூலறிவோடு நிலைமையான சீலமும்வாய்ந்து இவர் நிலவிநின்றார். நல்லச்சுதனார், நப்பண்ணனார், கேசவனார், நல்வழுதியார் முதலியபுலவர்பலரும் இவரைப்போற்றி வந்தார். இங்ஙனம் வருங்கால் அங்கு அரங்கேற்றவந்த நம்பெருமான் திருக்குறளை நோக்கி அதன் அருமை பெருமைகளை யுணர்ந்து ஆர்வமீக்கூர்ந்து அக மகிழ்ந்து துதித்தார். அன்று இவர் பாடியபடியை அடியில்காண்க.

"சாற்றிய பல்கலையும் தப்பா அருமறையும்
போற்றி யுரைத்த பொருளெல்லாந்—தோற்றவே
முப்பால் மொழிந்த முதற்பா வலரொப்பார்
எப்பா வலரினும் இல்." (நல்லந்துவனார்)

இன்னவாறு செம்மையும் உண்மையும் செறிந்த நெஞ்சராய் இவர் திகழ்ந்திருந்தார். உயிர்க்கு உறுதி பயக்கத்தக்க அரிய நீதிகளை இனிய கவிகளிலமைதது இவர் இசைபெற வைத்தார். குறித்த பொருள்களை விளக்குதற்கு இவர் எடுத்துக் கூறும் உவமைகள் மிக வியக்கத்தக்கன. சில அடியில் வருவன காண்க.

"அருள்தீர்ந்த காட்சியான், அறநோக்கான், நயஞ்செய்யான்
வெருவுற வுய்த்தவன் நெஞ்சம்போற் பையய
இருள்தூர்பு புலம்பூரக் கனைசுடர் கல்சேர;
உரவுத்தகை மழுங்கித்தன் இடும்பையால் ஒருவனை
இரப்பவன் நெஞ்சம்போல் புல்லென்று புறமாறிக்
கரப்பவன் நெஞ்சம்போல் மரமெல்லாம் இலைகூம்ப;
கற்பித்தான் நெஞ்சழுங்கப் பகர்ந்துண்ணான் விச்சைக்கண்
தப்பித்தான் பொருளேபோல் தமியவே தேயுமால்;
ஒற்கத்துள் உதவியார்க் குதவாதான் மற்றவன்
எச்சத்து ளாயினும் அஃதெறியாது விடாதேகாண்;
கேளிர்கள் நெஞ்சழுங்கக் கெழுவுற்ற செவங்கள்
தாளிலான் குடியேபோல் தமியவே தேயுமால்;

சூள்வாய்த்த மனத்தவன் வினைபொய்ப்பின் மற்றவன்
வாள்வாய் நன்றாயினும் அஃதெறியாது விடாதேகாண்''
(கலித்தொகை)

அருள் அறங்களில்லாதான் நெஞ்சுபோல் இருள் பரந்ததெனவும், வறுமையால் அறிவுமழுங்கி இரத்தலை மேற்கொண்டவனது உள்ளம்போல் மரங்களில் இலைகள் கூம்பின எனவும், கல்வி கற்பித்தவனுக்கு உதவிசெய்யாதவன்செல்வமும் அறிவும் தேயும் எனவும், நன்றிமறந்தவன் எச்சம் குன்றும் எனவும், தமர்க்கு உதவாதான் செல்வம் மடியுடையான் குடிபோல் அடியோடுகெடும் எனவும், பொய்த்தலுடையான் என்றும் எய்த்திழிவான் எனவும் இதில் இவர் உரைத்திருத்தல் காண்க.

சான்றோர் தன்மைகளைக் குறித்து இவர் உணர்த்தியிருக்கும் உண்மைகள் உணர்ந்து மகிழத்தக்கன.

"பிறர்நோயும் தந்நோய்போல் போற்றி அறனறிதல்
சான்றவர்க் கெல்லாம் கடன்''

"திங்கள் அரவுறிற் றீர்க்கலா ராயினும்
தங்காதல் காட்டுவர் சான்றவர்'' (நெய்தற்கலி)

இதனால் இவர் எய்தியிருந்த சால்புநிலை இனிது புலனாம்.

அன்பு ஈகை முதலிய அறவுரைகளுக்கு இவர் பொருள் விரித்துரைத் துள்ளார்.

"ஆற்றுதல் என்பது ஒன்றலந்தவர்க்கு உதவுதல்
போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை
பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்
அன்பெனப் படுவது தன்கிளை செறாஅமை
அறிவெனப் படுவது பேதையார் சொல்நோன்றல்
செறிவெனப் படுவது கூறியது மறாஅமை
நிறையெனப் படுவது மறைபிற ரறியாமை
முறையெனப் படுவது கண்ணோடாது உயிர்வெளவல்
பொறையெனப் படுவது போற்றாரைப் பொறுத்தல்''
(நெய்தற்கலி)

இங்ஙனம் நீதிமுறைகளுக்கு இவர் கூறியுள்ள துணிவுரைகளை அக்காலத்திருந்த அறிஞரெல்லாரும் ஓதி மகிழ்ந்து மேற்கோளாக எடுத்து உரைத்துவந்தார். இவர் மொழியைப் பொன்னேபோல் மறுபுலமன்னரும் போற்றிநின்றார். எம்பெருமானை முருகப்பிரான்பால் பேரன்புடையராதலால் பரிபாடலில் அம்

மூர்த்தியை மிக உருகிப் பாடியுள்ளார். "சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல், சீர்மிகுமுருகன் தண்பரங்குன்றத்து, அந்துவன் பாடிய சந்துகெழுநெடுவரை" (அகம்) எனமருதனிளநாகனார் என்னும் புலவர் திருப்பரங்குன்றத்தைக் குறித்து இவர் பாடியிருத்தலை ஓர் பீடுடைமையாக இவ்வாறு எடுத்துக் காட்டியுள்ளார். புலவரெல்லாரும் போற்றும் தலைமையுடையராய் நிலவிநின்ற இவரது சான்றாண்மையின் நிலைமையை நோக்கிப் பாண்டிய மன்னனும் ஈண்டிய அன்பினனாய் இவரை வேண்டியிருந்தான். இவர் நிலைமைக்குத் தக்கபடி இவர்பால் உருவப்பொலிவு அமையவில்லை. அழகில்லையாயினும் அருள் அடக்கம் அமைதி முதலிய குணநலங்கள் யாவும் ஒருங்கே வாய்ந்து நல்ல சீலமும் நயத்தகு பான்மையுமுடையராய் விளங்கியிருந்தாராதலால் நல்லந்துவனார் என யாவரும் இவரை யழைத்துவந்தார். சான்றோர்நலன் குணநலமேயாம் என்பதை உலகம் காண இவர் உணர்த்திநின்றார்.

"நெடிய மொழிதலும் கடிய வூர்தலும்
செல்வம் அன்று; தன் செய்வினைப் பயனே;
சான்றோர் செல்வம் என்பது சேர்ந்தோர்
புன்கண் அஞ்சும் பண்பின்
மென்கட் செல்வம் செல்வம் என்பதுவே" (நற்றிணை)

சான்றோர் செல்வம் இன்னதென இஃதுணர்த்திநிற்றல்காண்க.

கோடி யுறினும் குணமிலார் எஞ்ஞான்றும்
பீடு பெறுத லிலை.

குணநலமுடையோரே சான்றோராவரென்பது இதனால் கூறப்பட்டது.

**983.** பண்டிரக்கம் வாய்மை பணிவன்பு கல்லாடர்
கொண்டுநின்றார் என்னே குமரேசா—தண்டாத
அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்.

இ—ள்.

**குமரேசா!** வாய்மை அன்பு முதலிய இனிய குணங்களைக்கொண்டு கல்லாடர் என் அமைதியெய்தி யிருந்தார்? எனின், அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோடு ஐந்து சால்பு ஊன்றிய தூண் என்க.

இது, சான்றாண்மைக்குரிய தலைமைக் குணங்கள் இவை யென்கின்றது.

ஒடு என்னும் இடைச்சொல் எண்ணுப்பொருளில் வந்தது' அன்பு முதலியவற்றோடுந் தனித்தனி கூட்டிக் கொள்க.

அன்பு முதலிய குணங்கள் ஐந்தையும் தூணாக இங்ஙனம் உருவகஞ்செய்தது தாழாது தாங்கி நிற்கும் தன்மை கருதி. இவை தூண் என்றதற்கு ஏற்பச் சால்பு மாளிகை என நின்றது. இங்ஙனம் ஒருபாகமட்டும் உருவகிக்கப்பட்டு எஞ்சி வருவதனை ஏகதேச வுருவகம் என்ப. வாய்மையை இறுதியில் வைத்தது உரிமை கருதி; என்னை உரிமை? எனின், "சான்றோர்க்குப் பொய்யா விளக்கே விளக்கு" என முன் விளக்கியுள்ளமையான் அப்பழமையின் சிறப்பு நோக்கி என்க.

மேல், குணநலமே சான்றாண்மைக்கு உயிர்நிலை என்றார்; இதில், அதனை விரித்துணர்த்துகின்றார்.

அன்பும், நாணும், ஒப்புரவும், கண்ணோட்டமும், வாய்மையும் ஆகிய இவ் ஐந்தும் சால்பு என்னும் அழகிய மாளிகையைத் தாங்கியுள்ள விழுமிய தூண்களாம் என்பதாம். "அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்றபடி தன்னையுடையாரைத் தமக்கென வாழாப் பெருந்தன்மையாளரா உயர்த்திவிடுமாதலால் அவ்வுறுதிநோக்கி அன்பினை முன்புவைத்தார்.

அன்பு, எவர்க்கும் இனியனாய் ஒருவனைக் கனிவுறச்செய்யும்'

நாண், பழிபாவங்களில் புகுதவொட்டாதபடி புனிதனாக்கும்;

ஒப்புரவு, உலகநிலையையறிந்து, காலம் இடம் கருதி யாண்டும் பிறருக்கு இதமே புரிந்து "ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான்" என்றபடி உயர்வாழ்வருளும்;

கண்ணோட்டம், எவ்வுயிர்க்கும் இரங்கி இன்புறுத்தும்;

வாய்மை, தீமைசிறிதும் சேராதகற்றித் தூய்மையாக்கி; உலகத்தார் உள்ளங்களெல்லாம் உள்ளும்படி ஒளிசெய்து நிற்கும்;

இத்தகைய இவ்வைந்தும் சான்றாண்மைக்கு இன்றியமையாது வேண்டப்படும் என்பார் ஐந்து சால்பு ஊன்றிய தூண் என்றார். உம்மை கொடாது விட்டது பிறர்தீமை சொல்லாமை முதலாக வேறு சிலவும் உள்ளமை கருதி. இவற்றுள் ஒப்புரவினை

நடுநாயகமாக இடையே நிறுத்தியது அதன் திட்ப நோக்கி. என்னை? முன்னிற்பன இரண்டும் நெஞ்சினும், பின்னுள்ளன கண்ணினும் நாவினும் கலந்து கருத்தளவில் நிற்ப இது கையில் நின்று செய்கையாய் வெளிப்படடுச் சீர்மிகச் செய்து சிறந்து நிற்குந் திறங்கருதி என்க. இக்குணங்களுள் ஒன்று குன்றினும் கால் ஒடிந்தவன்போல் சால்பு வீழ்ந்துபடும் என்பது தூண் என்றதனால் தோன்ற நின்றது.

அடுத்தாரை ஆதரித்து, பிழைபுகாவண்ணம் தன்னைப் பேணிக்காத்து, உலகியல் அறிந்து உறவுதோர்ந்து உவந்துதவி, ஆருயிரோம்பி, யாண்டும் மெய்ம்மையுடையராய் மேவி ஒழுகுவோரே சான்றோராவர் என்பது இதன் திரண்டபொருளாம்

அன்பு நாணமுதலிய இனியகுணங்களமைந்து சான்றோர் என்றும் புனிதராயிருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கல்லாடர்பால் உணரப்படும்.

கதை.

கல்லாடர் என்பவர் இற்றைக்குப் பலநூற்றாண்டுகட்கு முன்னரிருந்தவர். கல்லாடம் என்னும் ஊரிற் பிறந்தவர். "கல்லாடத்துக் கலந்தினி தருளி" என மணிவாசகப் பெருந்தகை மொழிந்துள்ள அத்திருப்பதி இவர்க்குப் பிறப்பிடமா யிருந்தமையால் கல்லாடர் என இவர் சிறப்புற்று நின்றார். இவர் பல்வேறு வகைப்பட்ட நூலகளை யெல்லாம் ஒருங்கே படித்த பெரும் புலமையாளர். அருங்குணங்கள் பல அமையப்பெற்றவர். எதனையும் நுட்பமாக நோக்கித் திட்பமுற உரைக்கும் திறமிக வுடையவர். செப்பமும் ஒட்பமும் உடையராய்த் திகழ்ந்து நின்ற இவர் எப்பொழுதும் அருங்கலை விநோதராய் அமர்ந்திருந்தார். தலைமையான புலமையோடு உலகியலறிவும் ஒருங்கே வாய்ந்து இவர் நிலவி நின்றாராதலால் அக்காலத்திருந்த அரசர் அமைச்சர்முதலிய அறிஞர் பலரும் இவர்பால் அன்புமீக்கூர்ந்து நண்புற்றிருந்தார். பரம்பொருளிடத்து இவர் பதிந்த அன்பினர். கண்ணப்பரது அன்பின் திறத்தை நினைந்து நினைந்து புகழ்ந்து உருகினார். "பரிவின் தன்மை உருவுகொண்டனையவன், திருவேட்டுவர்தம் திருவடிகை தொழக், கருவேட்டுழல்வினைக் காரியங்கெடுமே" என அவர் பேரியல்பை வியந்து இவர் கனிந்து பாடியுள்ளார். இறைவனை

ஏத்தித் துதிக்கும் நோக்கத்தோடு அகப்பொருட் டுறைகளைத் தழுவி மிகச் சுவைபயப்ப ஓர் நூலை இவர் இயற்றி யருளினார். அது, இவர் பெயரால் கல்லாடம் என வழங்கப் படுகின்றது. சொல்லினும் பொருளினும் சுவைமிகச் சுரந்து பல்வகை நயங்களும் பண்புறப் படிந்துள்ள அவ் இன்ப நூலைப் பாடி முடித்தவுடன் சங்கப்புலவர் அறிய மதுரைப் பரமன் திருமுன் வைத்து இவர் அரங்கேற்றினார். நூறு அகவற்பாக்களையுடைய அதனை முறையே இவர் ஓதிவருங்கால் ஒவ்வொரு பாட்டின் முடிவிலும் கண்ணுதற்பெருமான் மணிமுடி துளக்க அங்கு நண்ணியிருந்த புலவர் பெருமக்க ளெல்லாரும் கனிந்த அன்புடையராய்க் கண்ணீர் மல்கிக் கைகுவித்திருந்தனர்.

"வாய்ந்தபொருட் கொருபொருளாய்க் கலைவாணிக் கருள்
கொழிக்கு மன்பாய்ப் பாரின்
ஆய்ந்தமுது தமிழ்வடித்துக் கல்லாட மென வொருநூல்
அருளி யிட்டார்
தேய்ந்தமதிச் சடைப்பரமர்கருணைபெறச் சங்கமுது
செல்வர் வாழ்த்தக்
காய்ந்த புலன் அடக்கியுயர் பெருஞானம் பழுத்தருள்
கல்லாடனாரே."

வெண்பா.

கல்லாடர் செய்பனுவற் கல்லாட நூறுநூல்
வல்லார்சங் கத்தில் வதிந்தருளிச்—சொல்லாயும்
மாமதுரை யீசர் மனமுவந்து கேட்டுமுடி
தாமசைத்தார் நூறு தரம்." (அபியுக்தர்)

இவற்றால் மேற்குறித்த வுண்மையும், இவரதருட்டன்மையும் இனிதறிய லாகும். இவர் யாவர்மாட்டும் பேரிரக்கமுடையராதலால் உயிர்க்கு உறுதிபயக்கத் தக்க அரிய நீதிகளைத் தமது இனிய நூலில் இடங்கடோறும் அழகிய உவமைகளில் அமைத்து வெகுநயமாக விளக்கிவைத்துள்ளார். சில அடியில்வருவன காண்க.

"அருள்நிறைந் தமைந்த கல்விய ருளமெனத்
தேக்கிய தேனுடன் இருள்மதி கிடக்கும்"

"வள்ளியோர் ஈதல் வரையாது போல
எண்டிசைக் கருவிருந் தினமழை கான்றது;
வெண்ணகைக் கருங்குழற் செந்தளிர்ச் சீறடி
மங்கைய ருளமெனக் கங்குலும் பரந்தது;

தெய்வங்கருதாப் பொய்யினர்க் குரைத்த
நல்வழி மானப் புல்வழி புரண்டது;''

"கல்லாக் கயவர்க் கருநூற் கிளமறை
சொல்லினர் தோமெனத் துணைமுலை பெருத்தன;
பலவுடம் பழிக்கும் பழியூன் உணவினர்
தவமெனத் தேய்ந்தது துடியெனு நுசுப்பே;
கடவுட் கூறுர் உளமெனக் குழலும்
கொன்றைபுற வகற்றி நின்றவிருள் காட்டின;''

"பகுத்துண் டகுநர் நிலைத்திரு முன்னர்
இல்லெனுந் தீச்சொல் இறுத்தனர் தோமும்,
அனைத்துயி ரோம்பும் அறத்தினர் பாங்கர்க்
கோறலென் றயலினர் குறித்தனர் குற்றமும்,
நன்றறி கல்வியர் நாட்டுறு மொழிபுக்
கவ்வரண் இழந்தோர்க் கருவிட மாயதும்
ஒருகணங்கூடி யொருங்கே
இருசெவி புக்க தொத்தன இவட்கே''

"உயிர்புகுஞ் சட்டகம் உழிதொறும் உழிதொறும்
பழவினை புகுந்த பாட்கம் போல
முதிர்புயல் குளிறும் எழுமலை புக்க
கட்டுடைச் சூருடல் காமங்கொண்டு
பற்றியுட் புகுந்து பசுங்கடல் கண்டு
மாவொடுங் கொன்ற மணிநெடுந் திருவேல்''

"மறைவழி ஒழுகா மன்னவன் வாழும்
பதிநாட் டார்ந்த பாவம்போலச்
சேர மறைத்த கூரிருள் நடுநாள்'' (கல்லாடம்)

மழை பெய்தது, இருள் பரந்தது, புல்லால் வழிமறைந்தது என்பன முதலிய வற்றிற்கு உவமை புணர்த்தி இவற்றுள் இவர் உணர்த்தியிருக்கும் நயங்களை யூன்றியுணர்க. இவரருளியுள்ள அந்நூல் பல்லோராலும் போற்றப்பட்டுள்ளது. "கல்லாடம் கற்றவனிடத்தே சொல்லாடாதே'' என்றொருபழமொழி பண்டு தொட்டு வழங்கிவருகின்றது. இதனால் அதன் அருமையும் இவர் பெருமையும் இனிது விளங்கும்.

பல்கோடி எண்ணங்களை விரைக நினைத்து, வினைகளை வளர்த்துத் தாமே தமக்குப் பிறவிச்சிறையை மக்கள் விளைத்துக்கொண்டு வீடுகாணாது விழித்திருக்கின்றனர் என இவர் உரைத்திருக்கின்றனர்.

"வரியுடல் சூழக் குடம்பைநூல் தெற்றிப்
போக்குவழி படையாது உள்ளுயிர் விடுத்தலின்
அறிவுபுறம் போய வுலண்டது போலக்
கடற்றிரை சிறுக மலக்குதுயர் காட்டும்
உடலெனும் வாயிற் சிறைநடுவு புக்குப்
போகா துணங்குறும் வெள்ளறி வேம்" (கல்லாடம்)

வீடுகட்டி, மாடுகட்டி, மெய்யிறுகக் கட்டும் வினைப் பூடுகட்டி என்றபடி பலவகையாக மனக்கோட்டை கட்டித் தனக்குத்தானே பிறவிக்கூட்டை உலண்டுப் பூச்சிபோல் மனிதன் கட்டிக்கொண்டுள்ளான் என இதில் இவர் உணர்த்தி யிருக்கும் அழகைப்பார்க்க தத்துவதரிசிக ளெல்லாரும் வித்தகர் என வியந்துபோற்ற ஞான சீலராய் இங்ஙனம் இவர் மேன்மை யெய்தியிருந்தார். கல்வியாளரினும் ஒழுக்க முள்ளவரையே இவர் மிக மதித்து வந்தனர். "சமயக்கணக்கர் மதிவழி கூறாது—உலகியல் கூறிப் பொருளிது வென்ற வள்ளுவன்" என நமது வள்ளலை இவர் உள்ளமுருகி உவந்து போற்றியுள்ளார். பழிவினைகள் சிறிதும் புகாவண்ணம் நெறிநின்றொழுகி எவ்வுயிர்க்கும் இதஞ்செய்து அன்பும் பணிவும் அடக்கமும் இரக்கமும் வாய்மையும் பொறையும் தூய்மையும் வாய்ந்து இவர் வாழ்ந்திருந்தா ராதலால் சான்றோர் என யாவரும் இவரை வாழ்த்தி நின்றார். அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை என்னும் இவ்வைந்தும் சால்புக்கு ஆதாரமாக அமைந்துள்ளன என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

உண்மை யிரக்கம் உதவியிலார் சான்றோரா
எண்ணப் படாஅ ரிவர்.

இரக்கம் வாய்மை யீகை முதலிய குணங்களை யுடையோரே சான்றோராவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

**984.** என்றுங் கொலைதீமை எண்ணாமல் மானரேன்
குன்றாமல் நின்றார் குமரேசா—கன்றியுயிர்
கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு. (ச)

இ—ள்.

குமரேசா! கொலை தீமைகளைக்கனவிலும் கருதாமல் வர்த்தமானர் ஏன் நிலை செய்திருந்தார்? எனின், நோன்மை, கொல்

லாநலத்தது; சால்பு, பிறர்தீமை சொல்லா நலத்தது என்க.

இது, சால்பின் உயிராதாரம் இது வென்கின்றது.

கொலை தீமை எண்ணுமல் நின்றார் என்றது யாதொன்றை யும் கொல்லாமலும், யாண்டும் பிறர் தீமை சொல்லாமலும் என் றும் நெறியோடு அவர் நின்றிருந்தமை கருதி.

நலம் இரண்டனுள் முன்னது அறத்தைக்குறித்தது. பின் னது குணத்தை உணர்த்தியது.

நோன்மை = தவம். பொறுமையோடு நின்று மிக வருந்திச் செய்யுந்தன்மையது என்பதாம். நோன்பு என்பதும்து. இது, தொழிற்பெயராய் நோன்றல்,நோற்றல் எனவும் வரும். நோன் = வலி, பொறுமை. "நொந்தார் குடிச்செல்வர் நோன்மை நுகம் பூண்டார்" என்றது சிந்தாமணி.

பிறர் குற்றம் என்றது தீமை என்றது பழிபாவங்களு க்கேதுவாயுள்ள அத்தீதுடைமையின் திறந்தோன்ற என்க.

மேல், சால்பு நிலைத்து நிற்றற்குரிய நிலைகளையுணர்த்தினர்; இதில், அது தலைமையோடு நிலவி நிற்கும் நீர்மையையுணர்த்து கின்றார்.

தவமானது ஒருயிரையும் கொல்லாத நலத்தின் கண்ணது; அதுபோல் சால்பு, பிறர் குற்றத்தைச்சொல்லாத குணத்தின் கண்ணது என்பதாம்.

சால்பு நிலையை உணர்த்துதற்குத் தவநிலையை இங்ஙனம் எடுத்துக்காட்டியது, தகவுடைமை கருதி. என்னே தகவு? எனின் இது, சொல்லால் நிகழ்வது; அது, செயலாலுறுவது; ஆதலால் வாக்கோடு காயத்திற்குள்ள அத்தொடர்பினை நோக்கி என்க. அக் கொலையாடல் உயிர்களைத் துடிக்கச் செய்வது போல் இச்சொல் லாடலும் பிறரைப் பதைக்கச் செய்யுமாதலால் இது சொற்கொலை எனப்படும். "வில்லாலும் வாளாலும் வெய்யவடி வேலாலும்— கொல்லா ரெனினும் கொலைஞரே—சொல்லாலே, மற்றவர்கள் உள்ளம் மறுகித் துயருற—எற்றேனும் சொல்வ ரெனின்" (தருமதீபிகை.) இதனுல் சொல்லின் நிலைமை புலனும்.

தவத்திற்குப் பல நலங்களும் வேண்டியிருப்ப இங்குக்கொல் லாநலத்தைக் குறித்தது தலைமைநோக்கி என்க.

"மக்களை மனைவியை ஒக்கலை ஒரீஇ,
மனையும் பிறவுந் துறந்து, நினைவருங்
காடு மலையும் புக்குக், கோடையிற்
கைமேல் நிமிர்த்துக் காலொன்று முடக்கி
ஐவகை நெருப்பின் அழுவத்து நின்றும்,
மாரி நாளிலும் வார்பனி நாளிலும்
நீரிடை மூழ்கி நெடிது கிடந்தும்,
சடையைப் புனைந்துந், தலையைப் பறித்தும்,
உடையைத் துறந்தும், உண்ணாதுழன்றும்,
காயும் கிழங்கும் காற்றுதிர் சருகும்
வாயுவும் நீரும் வந்தன அருந்தியும்
களரிலுங் கல்லிலுங் கண்படை கொண்டும்,
தளர்வுறும் யாக்கையைத் தளாவித் தாங்கவர்
அம்மைமுத்தி அடைவதற் காகத்
தம்மைத் தாமே சாலவும ஒறுப்பர்"

(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை)

என இன்ன வகையான அறச் செயல்கள் பல உற்ற நோப் நோன்றல் என்றபடி தவத்திற்கு உறுப்பாக அமைந்துள்ளனவா யினும் அவ்வெல்லாவற்றுள்ளும் உயிர்க்கு உறுகண் செய்யாமை யாகிய இக்கொல்லாமையே மிகச் சிறந்ததாதலால் "நோன்மை, கொல்லா நலத்தது" என்றார். "நோன்பென்பதுவே கொன்று தின்னாமை" என்றார் ஔவையாரும்.

அன்பு நாண் ஈகை இரக்கம் வாய்மை தூய்மை அடக்கம் அமைதி பணிவு துணிவு முதலிய குணங்கள் பல சால்புக்கு வேண்டியிருப்ப ஈண்டுச் சொல்லைமட்டுங் குறித்தது என்னை? எனின், அவ்வெல்லாம் அமைந்திருப்பினும் பிறர்குற்றம் சொல் லுவனுயின் புறஞ்சொல்லும் புல்லியன் என எள்ளப்படுவனே யன்றிச் சான்றோன் என்று ஏத்தப்படான் ஆதலால் "சால்பு, பிறர் தீமை சொல்லா நலத்தது" என்றார். "ஒழுக்கமுடைய வர்க்கு ஒல்லாவே தீய வழுக்கியும் வாயாற் சொல்லல்" என முன் சொல்லியுள்ளதும் ஈண்டு உள்ளத் தக்கது.

தவம், பிறவுயிரைக் கொல்லாமையில் உள்ளது;
சால்பு, பிறர் தீமையைச் சொல்லாமையில் உள்ளது;

என்று உணர்த்தி அவ்விருவகை நிலைகளையும் வழிதெரிந்து எளிதாக அடைந்துகொள்ளும்படி தெளிவாக அடிகள் இதில் அருளியிருக்கும அழகும் அருமையும் ஆய்ந்து பார்க்க. குற்றமே கூறுதல் சிறியர் தொழிலாதலால் குண நலமுடைய பெரியார்க்கு அது சிறிதும் கூடாதென்றபடி. அப்படியாயின் மக்கள், மாணவர், ஒக்கல் முதலாகத் தம்மைச் சுற்றியுள்ளார் குற்றஞ் செய்பினும் அவர் தீமையை யெடுத்துச் சொல்லலாகாது; 'எனனே? சொல்லின் சால்பு இல்லையாம் அன்றே?' எனின், நன்று சொன்னாய்! தமராகிய அவரைத் திருத்தும்பொருட்டு இடித்துரைத்தல் கடமையாம் ஆதலால் அது குற்றமாகாது; செற்றம் கொண்டு பிறர் சீரழியச் செப்பலே குற்றமாம் என்க. இவ்வேறுபாடு தோன்றவே பிறர் என விதந்து கூறியுள்ளமையான் மாறுபடாமை காண்க.

சான்றோனாக ஒருவன் சிறந்து விளங்கவேண்டுமாயின் பிறரை யாண்டும் அவன் குறைகூறலாகாதென்பது குறிப்பு.

அறிவமைந்த சான்றோர் பிறர் வசைகளை யுரையார் என்பது இதில் உணர்ததபபட்டது. இவ்வுண்மை வர்த்தமானர் பால் உணரப்படும்.

## கதை.

வர்த்தமானர் என்பவர் இற்றைக்கு இரண்டாயிரத்து நானூற்று நாற்பது ஆண்டுகட்கு முன்னர் விதேக நாட்டிலே குண்டலபுரத்திலிருந்து அரசுபுரிந்த சித்தார்த்தன் என்னும் அரசனுடைய அருமைப் புதல்வர். தாய் பெயர் பிரியகாரணி. இவர் பிறந்தபொழுது இவ்வுலகிற் பல நற்குறிகள் கிளர்ந்து தோன்றின. பரந்த முகமும், அகன்ற மார்பும், திரண்ட தோள்களும், சிவந்த மேனியும் அமைந்து நின்றனர். அழகு குடிகொண்ட விழுமிய வுருவினராய் விளங்கிநின்ற இவரைக் கண்டவுடனே தேவகுமாரனே இப்பாவ வுலகில் இங்ஙனமேவியுள்ளான் என யாவரும் வியந்து புகழ்ந்தனர். இளமையிலேயே பல கலைகளையும் வழுவறப் பயின்று சிறநத மதிமானாய் இவர் திகழ்ந்திருந்தார். பருவமெய்தியவுடன் தந்தை விரும்பியபடி அரச பதவியை மேற்கொள்ளாமல் உயிர்க்கு உறுதியான உண்மை நலம்

யாது? என உணர்ந்துகொள்ள விழைந்தெழுந்து தனியிடமொன்றில் அருந்தவக்கொள்கையோடு இவர் இனிது அமர்ந்திருந்தார். சிலகாலம் கழிந்தபின் உலகமெல்லாந் தொழும்படியான அரிய ஞானியாய் அமைந்தெழுந்தார். தாம் தெளிந்த வுண்மையை உயிர்களுக்கு உணர்த்தவேண்டுமென்று உறுதிபூண்டார். நாடு நகரங்கள்தோறும் போய் மக்களுக்கு ஞான நலங்களைப் போதித்தார். இவரது போதனையால் பல்லாயிரக் கணக்கான மக்கள் அறிவுதெளிந்து உறுதிநலம் பெற்று உயர்நிலையடைந்தார். மனம் மொழி மெய்களால் யாதொரு தீங்கையும் எவ்வுயிர்க்கும் எவ்வகையினும் யாண்டும் செய்யலாகாதென்பதே இவரது போதனைகளுள் முதன்மையாக நிலவிநின்றது. கொல்லாமை ஒன்றே எல்லா அறங்களையும் இனிது பயக்கும் என உலகம் கொள்ளும்படி நிலை நிறுத்தினர் ஆதலால் கொல்லாவிரதி என்று எல்லாரும் இவரைப் புகழ்ந்து போற்றினர். தமது சொல் வன்மையால் 'எல்லாரையும் வயப்படுத்தி நல்வழியில் செலுத்தி எவரும் நிகரில்லாதவண்ணம் உயர்ஞான வள்ளலாய் இவர் உயர்ந்து விளங்கினர். அதனால் மகாவீரசுவாமி என மாண்புற்றிருந்தார். இவர் அருள் நெறியே சைன மதம் எனப் பின்பு தழைத்து நின்றது. இவரது மேதாவிலாசத்தின் மெய்ச்சாயையாகவே அம்மதம் இன்றும் மேன்மை பெற்றுள்ளது. சித்த சுத்தி, மெய்யுணர்வு, செவ்விய ஒழுக்கம் என்னும் இம்மூன்றுமே முத்திக்குரிய உத்தம சின்னங்கள் என இவர் உணர்த்தியுள்ளார். இவற்றை நற்காட்சி நன்ஞானம் நற்சீலம் என்பர். "நற்காட்சி, நன்ஞானம் நல்லொழுக்கம் இம்மூன்றும், தொக்க அறச்சொற் பொருள்" (அருங்கலச்செப்பு) என்பதும் ஈண்டெண்ணத் தக்கது.

"காட்சி நன்னிலையின் ஞானக் கதிர்மணிக் கதவு சேர்த்திப்
பூட்சிசால் ஒழுக்கமென்னும் வயிரத்தாழ் கொளுவிப் பொல்லா
மாட்சியில் கதிர்களெல்லா மடைத்தபின் வரம்பி லின்பத்
தாட்சியி லுலகமேறத் திறந்தனன் அலர்ந்ததாரான். (ச)

பவழவாய்ச் செறுவுதன்னுள் நித்திலம் பயில வித்திக்
குழவிநா றெழுந்து காளைக் கொழுங் கதிரீன்று பின்னைக்

கிழவுதான் விளக்கும் பைங்கூழ் கேட்டிரேல் பிணிசெய்பன்மா
வுழவிர்காள் மேயுஞ்சீல வேலியுய்த் திடுமி னென்றான்''. (உ)

(சீவகசிந்தாமணி)

ஞாலமுய்ய இவரருளிய சீலங்களைப் பின்வந்துள்ள சைன சீலர்கள் தழுவிப் போற்றி ஒழுகிநின்ற நிலைகளை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. சீலவேலி கோலுமின் என உய்வுக்கு வழி யுணர்த்தியிருக்கும் அருமையை யிதில் ஊன்றிப் பார்க்க. இங் ஙனம் உலகம்போற்றத் தலைமையோடு சிறந்து நின்ற இவர் பல் வகைக் குணங்களானும் நிறைந்துநின்றார்.

"குலனும், குணனும், குரவரைப் பேணும்
நலனும், கடவுளை நயத்தலும், கருணையும்,
புலனவித்தொழுகலும், பொறையும், தோற்றமும்,
உலகிய லறிந் துயிர்க் குறுதி கோடலும்,
கற்றவர் காமுற வாழ்தலும், காந்தியும்,
மதிநிகர் கல்வியும், கதிர்நிகர் வளவாம்
வாய்மையும தூய்மையும் வழுவுதல் இன்றாய்,
வாடாக் கற்பக மணமலி பொற்பூக்
கோடாச் செங்கோற் கொற்றவனிதியறை
வான்சுவை மருநதா யிரவாய்ச் சேடனிற்
கற்றன யாவும கழகத் துதவும்
பெற்றியன், மறந்தும் பிறன்பழி கூறான்,
சதிருடையேனெனத் தற்புகழ்ந் தறியான்''

என்னும் இன்ன வகையானநன்னயங்கள் யாவும் ஒருங்கே வாய் ந்து பெருங் குணக்குரிசிலாய் இவர் உயர்ந்து விளங்கினார். இன் சொல்லையன்றி வன்சொல்லை மறந்தும் பேசாத மாதவர் என மறுபுலத்தவரும் இவரை வாழ்த்திநின்றார். கொல்லுதல்மட் டும் கொலையன்று பிறருள்ளம் நோகச் சொல்லுதலும் கொலை யேயாம் என இவர் கூறிவந்தார். மதசம்பந்தமாய் இவரோடு மாறுபட்டிருந்த பார்சுவநாதன் என்னும் பெரியாரைக் குறித்துச் சிலர் இவரிடம் வநது ஒருமுறை சிறிது குறைத்துப் பேசினர். உடனே செவிகள் இரண்டையும் சேரப்பொத்தி "என்னை ஏன் இப்படித் தீங்குபடுத்துகிறீர்கள்?'' என்று இவர் வருந்திநோக்கி னர். அவர் நடுங்கி நின்றார். "பிறர் குற்றத்தைச சொல்லு தலையன்றிக் கேட்டலும் பாவமாம. அங்ஙனம் சொல்வோனுக்

குக் கேட்போன் ஊன்றுகோலாய் நிற்றலால் அப்பாவம் இரு வர்க்கும் பகுக்கப்படுகின்றது; அதனால் அவ்விருவரும் இழிவு படுகின்றார். பிறர் தீமைகூறல் கீழ்மையாம்; குணங்காண்டல் மேன்மையாம்; முன்னது அதோகதியில் ஆழ்த்தும்; பின்னது உன்னத நிலையில் உய்க்கும்; எவன் பிறர் பிழை உரையாதவனே அவனே பிழைபடாதவனாய் உயர்நிலையடைகின்றான்; ஊனமுற்ற வுயிர்களைக் கண்டபோது உள்ளம் இரங்கி உதவியருளவேண்டும்;'' என அவர் உணர உணர்த்தினார். கொல்லாமை, புறங் கூறாமைகளைக் குறித்து நம் அடிகள் அருளியுள்ள உறுதி நிலைகளுக்கு இப்பெரியார் ஓர் உயிர் நிலையாப் முன்னமைந்திருந்துள்ளமை யூன்றி யுணரத்தக்கது. கொல்லா விரதத்தை உலக மெங்கும் பரப்பித் தம் சொல்லால் எல்லா அறங்களையும் வளர்த்துநல்லிசைலராய் உயர்ந்திருந்த இவரதுபெருந்தன்மையை அனைவரும் புகழ்ந்துபோற்றினார். புத்தர்போலவே எத்திசைகளிலும் இவர் புகழ் பரப்பி நின்றார். சிறந்த அரசகுலத்திற் பிறந்தும் உலக இன்பங்களை வெறுத்துத் தம் சொல்லாலும் செயலாலும் உயிர்களுக்கு இதம்புரிந்து வான்றோய் புகழோடு இவர் மருவி விளங்கினார். இவரது சான்றாண்மையை வியந்து ஆன்றோர் பலரும் அகங்கனிந்து துதித்தார். இன்றும் இவரைக் கருணைத் தெய்வம் எனச் சைனர்கள் ஏத்தித் தொழுகின்றார். ஒருயிரையும் கொல்லாமையே தவம்; பிறர்தீமை சொல்லா நலதே சால்பு; என்பதை உலகம் காண இவர் உணர்த்தினின்றார்.

தீமை கண்டோர் திறத்தும் பெரியோர்
தாமறிந் துணர்க என்ப மாதோ. (நற்றிணை)

கொண்டு பிறர்குற்றங் கூறாரே சான்றோராக்
கண்டு கொளத்தக்கார் காண்.

பிறர் குற்றம் சொல்லாமையே சால்பாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

**985** பண்டு பரிமான் பணித லணியாகக்
கொண்டுயர்ந்தான் என்னே குமரேசா—மண்டியெங்கும்
ஆற்றுவா ராற்றல் பணிதல் அதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை. (ரு)

இ—ள்.

குமரேசா! பணிதலை என்றுந் தனக்கு அணியாகப் பரிமான் என் கொண்டிருந்தான்? எனின், ஆற்றுவார் ஆற்றல் பணிதல் அது சான்றோர் மாற்றாரை மாற்றும் படை என்க.

இது, பணிவுடைமையே சான்றாண்மைக்கு அணியாமென்கின்றது.

ஆற்றுவார் = வினைசெய்ய வல்லார்; காரியங்களைக் கருதி முடிக்கும் உறுதியாளர் என்றபடி. அவராவார் அமைச்சர் முதலிய மதிமான்கள் என்க. ஆற்றுவார் என்னும் எதிர்கால வினைமுற்றிற்கு ஏற்ற செயப்படுபொருள் இதில் வருவிக்கப்பட்டது. சான்றோர் பணிவுடையராயிருக்கவேண்டுமென்று உணர்த்தவந்த அடிகள் ஆற்றுவாரையும் இங்கு உடன் இணைத்தது திண்மையாளர் தண்மையாளர் எனனும் எவர்க்கும உண்மையாகஅதுஉறுதி பயந்து நிற்கும் உரிமை தோன்ற. "எல்லார்க்கும் நன்றாம் பணிதல்" என முன்னிசைத்துள்ளதுங் காண்க.

மாற்றார் = மாறுபட்டு நிற்பார்; பகைவர் என்றபடி.

மாற்றாரைமாற்றும் = பகைவரதுபகையைநீக்கும். படை = ஆயுதம், கருவி. வாள் வேல் முதலிய படைக் கலங்களுள் ஒன்றைக் குறித்துக் கூறாமல் பொதுவாகப் படை என்றது மாற்றாரை யாதொரு ஊறும் படுத்தாமல் நேர்படுத்தி நிற்கும அதன் நிலைமை கருதி.

ஆற்றல், பணிதல் என முன்னர் உரைத்திருத்தலால் பின்னர்ப் படையும் அது என உமமைகொடுதது உரைக்கவேண்டும்; அங்ஙனம்வேண்டிய உம்மை ஈண்டு விரிநதுநில்லாமையால் இறந்தது தழுவிய எச்சவுமமை தொக்கு நின்றதெனக.

மேல், ஒருவன் சான்றோனாகவேண்டுமாயின் பிறர் தீமையை யாண்டும் அவன் சொல்லலாகாதென்றார்; இதில், அவன் பணிவுடையனாயிருக்கவேண்டும் என்கின்றார்.

கருதிய வினையைக் கடைபோகச் செய்ய வல்லாரது வன்மையாவது அதற்கு உறுதியாவாரைப் பணிந்து துணையாக அமைத்துக்கொள்ளுதலே; இனி அப்பணிவு சான்றோர் தம் பகைவரைப் பகைமை ஒழிக்கும் கருவியும் ஆம் என்பதாம்.

பணிதலை ஆற்றல் எனவும், படை எனவும் குறித்தது தன்னையுடையானுக்கு வெற்றிதரும் அதன் திறங் கருதி என்க. பணிதல் சான்றோர்க்குப் படை என்றதனால் அஃது இலராயின் வெறுங் கையராய்ச் சென்ற வீரர்போல் வெற்றியின்றி வீணே இழிந்துபடுவரென்பதாயிற்று.

பணிதலாவது செருக்கின்றி யடங்கியிருக்குந்தன்மை; அது எவரையும் தன்வயப்படுத்தும் இயல்பினது; அதனைத் தமக்கு என்றும் உடைமையாக வுடைய சான்றோர்க்கு யாரும் பகைவராயிரார்; அவரது உண்மை நிலையை யுணராமல் ஒரோ வழிச் சிலர் மாறுபட்டுப் பகைமையுற்றிருப்பினும் நாளடைவில் அவர் தந் தகைமையை ஓர்ந்து தாமாகவே அப்பகைமை நீங்கி இன்னிசை கேட்ட அரவுபோல் அடங்கிப் போவராதலால் "பணிதல் சான்றோர், மாற்றாரை மாற்றும் படை" என்றார்.

எவ்வளவு குணநலங்களையுடையராயினும் பணிவின்றி அகங்கரித்து நிற்பின் அதனால் அந்நலமுழுதுங் குன்றிப் பகையும், பழியும பல பொங்கி யெழும் ஆதலால் பணிதலைச் சான்றோர் யாண்டும் தமக்கு அணியாகக்கொண்டிருக்கவேண்டும் என்றபடி.

சான்றோர்க்குப் பணிவு உறுதியாக அமைந்திருக்கவேண்டும்; இல்லையாயின் அவர் இழிக்கப்படுவர் என்பது கருத்து.

பணிவுடையார்க்குக் கருதிய வினைகளெல்லாம் இனிது முடிவதோடு யாண்டும் பகைமையில்லையாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பரிமான்பால் உணரப்படும்.

கதை.

பரிமான் என்பவன் உறையூரிலிருந்து அரசுபுரிந்த சோழ மன்னன். இவன் நூலறிவு மிக்கவன். யானை தேர் முத

விய நால்வகைப்படைகளும் நன்கு வாய்ந்தவன். எண்ணிய எதையும் நுண்ணிதாக ஓர்ந்து திண்ணிதாகச்செய்யுந திற மிகப்பெற்றவன். கொடையும் வீரமும் தயவும் அன்பும் இவ னுக்குப் பிறவிக்குணங்களா யமைந்திருந்தன. எதனையும் எதி ரறிந்து காதது வினைக்குரியாரைத் தனக்கினியராக நாடி முனை த்திற முறுக்கி ஆட்சியை இவன் மாட்சிபெற நடத்தினன். இனிய நீர்மையனுய் எங்கும் இசைபரப்பி இங்ஙனம் இவன் முறைபுரிந்து வருங்கால் தன்படைகளோடு ஒரு முறை திரு ப்பனந்தாளை யடைந்தான். அப்பதியிலுள்ள பரமனைப் பணிநது தொழவிழைந்தான். தன்பரிசனங்களுடன் ஆலயத்துள்புகுந்தான். சிவலிங்கப்பெருமானை மனமுருகித் தொழுதான். தொழுங்கால் அம்மூர்த்தி தலைசாய்ந்திருக்கக்கண்டான். அங்ஙனம் சாய்ந்தி ருத்தற்குக் காரணம் முன்னொருகாலத்தில் தாடகை என்னும் பேரன்புடையா ளொருத்தி அப்பெருமானைப் புனைந்து போற்றி ஓர் பூமாலையை இருகையாலும் எடுத்துச் சாத்துதற்காக எழுந்த பொழுது தன் அரையில் கட்டியிருந்த ஆடை அவிழ்ந்து போயது; உடனே அதனை நழுவவிடாமல் முழங்கைகளால் தழுவிக்கொண்டு சாத்த முயன்றாள்; முயன்றும் முடியெட்டா மையால் மறுகி வருந்தினாள்; அவளது அரிய அன்பிற்கிரங்கிப் பரமன் முடியைச்சாய்த்து அம்மாலையை ஏற்றருளினர். அன்று முதல் அம்மூர்த்தி அவ்வாறே வளைந்த நிலைமையிலமைந்து நின்றது.

> "திருப்பனந் தாளிலிங்கம் திண்கலைச்சிக் காக
> விருப்பினுடன் சாய்ந்த விதம்போல்—பருப்பதம்போல்
> இன்னம்பருக்கில் இடைதாங்குந் தாங்காதென்
> றன்னி அதுபார்க்க உற்றதுபோல்" (திருப்பூவணருலா)

எனப்பேரிளம்பெண்ணின் கொங்கையைக்குறித்துக்கூறுங் கால் ஓரன்பர் இதனைக்குறித்திருத்தல் காண்க. இன்னவாறு வளைந்திருந்த அம் மூர்த்தியை நிமிர்ந்த நிலையில் வைத்து வணங்க வேண்டுமென்று அம்மன்னன் எண்ணித் தன்னாலான வரையும் முயன்றும் முடியாமையால் பின்பு யானைகளைக்கட்டி யும் ஈர்த்துப் பார்த்தான். பார்த்தும் பலனில்லாமை கண்டு பட்டினிகொண்டு பதைததிருந்தான். கருமமே கண்ணாய்க்கருதி

யிருக்கும் இவனுறுதியைக் குங்கிலியக் கலையனார் அறிந்துவந்து தம் கழுத்தில் கயிறு பூட்டி யிழுத்தார். அவ்விலிங்கம் நேரே நிமிர்ந்து நின்றது. அரசன் கண்டு ஆனந்தமடைந்து துதித்து வேண்டிய திருப்பணிகளை விரைந்து செய்து கலையனாரையும் பணிந்து போற்றினன்.

செங்கண் வெள்ளேற்றின் பாகன் திருப்பனந்தாளில் மேவும்
அங்கணன் செம்மைகண்டு கும்பிட அரசன் ஆர்வம்
பொங்கித்தன் வேழமெல்லாம் பூட்டவும் நேர்நில்லாமைத்
தங்குலும் பகலுந் தீராக் கவலையுற் றழுங்கிச் செல்ல (க)

மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலயனார்தாம் நாதனை நேரே காணும்
அந்நெறி தலைநின்றோனன் றரசனை விரும்பித் தாமும்
மின்னெறித் தனையவேணி விகிர்தனை வணங்க வந்தார். (உ)

சேனையு மானைபூண்ட திரளுமெய்த் தெழாமை நோக்கி
யானும் இவ்விளைப்புற் றெய்க்கு மிது பெறவேண்டுமென்று
தேனலர் கொன்றையார்தந் திருமேனிப் பூங்கச்சேய்ந்த
மானவன் கயிறுபூண்டு கழுத்தினால் வருந்தலுற்றார். (ந)

நண்ணிய ஒருமையன்பின் நாருறு பாசத்தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி யிளைத்தபின் றிறம்பிநிற்க
ஒண்ணுமோ கலயனார்த மொருப்பாடு கண்டபோதே
அண்ணலார் நேரே நின்றார் அமரரும் விசும்பிலார்த்தார். (ச)

பார்மிசை நெருங்க வெங்கும் பரப்பினர் பயில் பூமாரி
தேர்மலிதானை மன்னன் சேனையுங் களிறுமெல்லாம்
கார்பெறு கானம்போலக் களித்தன கைகள் கூப்பி
வார்கழல் வேந்தன் தொண்டர் மலரடி தலைமேல் வைத்து (ரு)

விண்பயில் புரங்கள் வேவ வைதிகத் தேரின் மேருத்
திண்சிலை குனிய நின்றார் செந்நிலை காணச் செய்தீர்
மண் பகிர்ந்தவனுங் காணா மலரடி யிரண்டும் யாரே
பண்படை யடியரல்லாற் பரிந்துநேர் காணவல்லார். (சு)

(பெரியபுராணம்)

இங்ஙனம் அவரைப் புகழ்ந்து போற்றி இவன் எழுந்து சென்று தன் இன்னகரடைந்தான். முன்னொருத்திக்கு வளைந்தும், பின்னொருவர்க்கு நிமிர்ந்தும் பரமன் அமர்ந்து நின்ற தன்மையை நினைந்து நினைந்து இவன் நெஞ்சமுருகினன்.

"சிலைச் சிக்கு மதனெரிய விழி திறந்த திருப்புனைதாட் சிவனே மாய்
வலைச் சிக்கு விட நினையேன் உம்மையு நான் வயப்படுத்த மாட்டே னந்தோ
குலைச்சிக் கோர் அன்ன மின்னுங் காணாத சடை மௌலி குலைந்துபோன
கலைச் சிக்கு வளைந் ததுவும், கலைய னுக்கு நிமிர்ந் ததுவும் கண்டுந்தானே"

என்று இன்னவாறாக அம்முன்னவன் அருளை நாளும் இவன் கருதித் துதித்து உறுதி நலங்களை நாடி உலகிற்கு இதம் பல புரிந்தான். முன்னர் மாறுபட்டிருந்த குறுநில மன்னர் சிலர் இவனது தகைமையை யறிந்து தம் பகைமையை ஒழித்துப் பண்புடையராய்ப் பணிபு இவன்பால் நண்புற்றிருந்தார். அமைதி முதலிய குணநலங்களால் எவரையும் தன்வயப்படுத்தி இவன் உயர்ந்து விளங்கினன். இவனது சான்றாண்மையை வியந்து ஆன்றோரனைவரும் புகழ்ந்து மகிழ்ந்தார். பணிதலானது மாற்றாரை மாற்றும் படையாகவும், கருதிய வினைகளை ஆற்றும் திறனாகவும் அமைந்துள்ளதென்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

ஓர்ந்து பணிவா ருயர்வ ருளஞ்செருக்கிக்
கூர்ந்தா ரிழிவார் குலைந்து.

பணிவுடையரே உயர்வுடையர் என்பது இதனால் கூறப்பட்டது.

**986** மண்டுபுகழ்ச் சாபாலி மாண்பில்லார் மாட்டுமேன்
கொண்டிருந்தார் தோல்வி குமரேசா—கொண்டுநின்ற
சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல். (௬)

இ—ள்.

குமரேசா! சாபாலி, இழிந்தாரிடத்தும் தோல்வியை ஏன் ஏற்றிருந்தார்? எனின், சால்பிற்குக் கட்டளை யாது? எனின், துலை அல்லார் கண்ணும் தோல்வி கொளல் என்க.

இது, சால்பின் தனிநிலை கூறுகின்றது.

கட்டளை = உரைகல். பொன் முதலிய உயரிய பொருள்களை உரைத்தும், நிறுத்தும், அளந்தும் நோக்கித் தரந் தெரிதற்கு உரிமையாக அமைந்திருக்குங் கருவி. உற்ற பொருளின் உண்மை நிலையை யுணர்த்தி நிற்கும் இயல்பினதாதலால் இது "கட்டளை" என நின்றது. "கட்டளை, துலாமும் நிறையறி கருவியும், உரையறி கருவியும் அளவும் ஒப்புமாம்" (பிங்கலந்தை)

துலை = ஒப்பு, சமம். துலை அல்லார் = ஒப்பாகாதார். தாழ்ந்தவர் என்றபடி. கண் = இடம். கண்ணும் என்பதில் உம்மை இறந்தது தழுவியதோடு இழிவுந் தோன்ற நின்றது.

துலையுள்ளார் கண்ணும், உயர்ந்தார் கண்ணும் தோல்விகொளின் அது பெருந்தன்மையாகச் சிறந்து தோன்றாதாதலால் துலையல்லாரை இங்ஙனம் குறித்துணர்த்தினர்.

தோல்வியுறல் என்னாது கொளல் என்றது, தமக்கு உண்மையில் தோல்வியிலலாதிருநதும் எதிரிக்கு ஏற்றங்கொடுக்கும்பொருட்டு அதனை வலிந்து ஏற்றுக்கொள்ளுதலாகிய இசைவுதோன்ற என்க.

மேல், பணிவுடைமையே சான்றோர்க்கு வலியாம் என்றார்; இதில், தாழ்வுடைமையே அவர்க்கு உயர்வாம் என்கின்றார்.

சால்புண்மையை யறிதற்கு உரைகல் யாது? எனின், தோல்வியைத் தம்மினுந் தாழ்ந்தார்மாட்டும் தழுவிக்கொள்ளுதல் என்பதாம்.

வெற்றி, விரும்பத்தக்கது; தோல்வி,வெறுக்கத்தக்கது; அங்ஙனமிருப்ப இத்தோல்வியை விரும்பிக்கொள்க என்றது என்னை? எனின், சால்பு தரும அருள் தன்மை கருதி என்க.

தோல்வி என்பது ஒருவரோடு எதிர்த்து நின்று வெல்ல முடியாமல் மெல்லியராகி இழிந்து படுவது; இது, விற்போர், சொற்போர் என்னும் ஈரிடத்தும் நேர்வதாம். முன்னது ஆண்டிகையாது; என்னை?'யாண்டும எவ்வகையினும் தோல்வியை வீரர் விழைந்து கொள்ளார்; தோல்வி பொன்றுறுவ தென்று தோன்றினும வீரர் பொங்கி, மேலுறும் உயிரை வேண்டார்; வெறுத்தொழித்துயர்வர்;" என்றபடி வெற்றியின் கண்ணேயே யென்றும் அவர் உயிர வாழ்ந்து நிற்பர்; ஆதலால் பின்னதே இங்குப்

பொருந்தும் என்க. அங்ஙனமாயின், விசயனோடு வில்லாடல் புரிந்த போது,

"உழுந்துருளும் எல்லைதனில் வில்லினொடு நாணற வுரத் தொடெதிர் ஓடி வரிவிற், கழுந்துகொடு மாமுடியின் மோது முன் இழந்த துயர் கண்ணிபடு பீலி மதியின், கொழுந்முது சோர, விடநாகர் சுடிகைத்தலை குலைந்து மணி சிந்த, நதியாள், எழுந்து தடுமாறி யகல் வாணிலுற, வேடனும் இளைத்தவசம் உற்றனனரோ" (பாரதம்)

என்ற வண்ணம் அவனுக்கு வெற்றியைக் கொடுத்துக் கண்ணுதற்பெருமான் தோல்வியை விழைந்து கொண்டதுபோல் துலையலலார்கண் தோல்வியை வீரர் தொடர்ந்து கொள்ளா ரோ? எனின், தமது அன்பனோடு விநோதமாக ஆடி மகிழ வேண்டிக் கடவுள் செய்த லீலை யாதலால் மானுட வீரர்க்கு அத்தன்மை அமையாதென்க.

சாந்த சீலர்களான ஆன்றோரது மனவமைதியே இங்கு இனமாக இனிது அமைவதாம்.

அன்பு இரக்க முதலிய குணநலங்களோடு அமைந்து நிற் கும் சான்றோர், தம்மோடு எதிர்ந்து வாதாடுவோர் தம்மினும் தாழ்நதவராயினும் தாம் கூறும் உறுதிப்பொருளை உணர்ந்து கொள்ளாமல் செருக்கு மீக்கொண்டு தீசிமுன் தக்கன் எழுந்த துபோல் மிகுந்து நின்று வெல்லுவதொன்றையே கருதி அவர் சொல்லுவதையே சொல்லுவராயின் உடனே இவர் "நீங்கள் சொல்லுவதுதான் சரி; யான் இதுவரை இந்த வுண்மையை அறி யாதிருந்தேன்; பொறுத்துக்கொள்ளுங்கள்;" என்று வருத்தம் யாதும் இன்றி உரைத்து விடுவராயின் அஃது இவரது உள்ளப் பெருமையையே உணர்த்திவிடும் ஆதலால் அப்பெருந்தன்மை யை வியநது எல்லாரும் இவரை ஏத்தித்துதிப்பர் என்க. இவ் வகையான தோல்வியை எவரும் எளிதில் கொள்ளமுடியாது; மெய்யுணர்வுடையராய்ப் புகழ்ச்சி யிகழ்ச்சிகளைச் சமமாககருதி ஒன்றையும் பொருட்படுத்தாமல் அருட்பெருக்கோடு அமைந்து யாண்டும் நிலைதாழாது சான்றாண்மையின் முடிவான நிலையில் நிலைதது நிற்கும் மேலோர்க்கே முடியும் என்க.

பொன்னை உரைகல்லில் தேய்த்து மாற்றறிவதுபோல் சான்றோரை இத்தோல்வியில் தோய்த்து அவர்தம் சால்பினை அறியலாம என்பார் "தோல்வி கொளல், சால்பிற்குக்கட்டளை" என்றார்.

ஈதல் இரக்கல் இன்னுரையாடல் முதலிய நன்னயங்களெல்லாம ஒருங்கேயமைந்து சிறந்த சான்றோரா யுயர்ந்திருந்தாலும் தம்மினும் தாழ்ந்தாரொருவன் முன் பலரறியத் தம்மைத்தாழ்த்திக் கொள்ளுந்தன்மை எளிதிலமையாதென்பது தெளிவாம்; ஆகவே இத்தகைய கடுஞ்சோதனையில் வீழ்ந்துவிடாமல் பெருந்தன்மையோடு தேறி நிற்பாராயின் அவர், சால்புடையாரெவரினும மிக மேலோராக யாவராலும் மதித்துத் துதிக்கப்படுவர் ஆதலால் இத்தோல்வியை எடுத்துக்காட்டி இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

பாடமே ஓதிப் பயன்தெரிதல் தேற்றாத
மூடர் முனிதக்க சொல்லுங்கால்—கேடருஞ்சீர்ச்
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே மற்றவரை
ஈன்றாட் கிறப்பப் பரிந்து. (நாலடியார்)

இழிந்தார் துணிந்து ஒன்றுசொல்லுங்கால் சான்றோர் இன்னவகையில் அமைந்து நிற்பரென இஃதுணர்த்தி நிற்கும் அழகை யூன்றிப்பார்க்க.

அன்பு முதலிய உயர் குணங்களெல்லாம் ஒருங்கேயமைந்து யாண்டும் பண்புகுன்றாராய்ப் பணிவும் அமைதியுமுடையராய் இனிதமர்ந்திருப்போரே சான்றோராவர் என்பதாம்.

சிறியார் செருக்கி எதிர்ப்பாராயின் அவரை அடர்த்து வெல்லவேண்டு மென்று கருதாமல் தாமடங்கி ஒதுங்குதலே சால்புடையார்க்கு அழகாம் என்பது கருத்து.

"அன்பொப்புரவு கண்ணோட்டம் அழியாவாய்மை நாணுதி, இன்பம்பெருக்கு நற்குணங்கள் எல்லா நிறைந்த சான்றோர்கள், துன்புற்றவர்க்கும் இனியனவே சூழ்வர் துணையின் வினை முடிப்பர், வன்பிற்றளரார் நட்டார்க்கு மடங்கித்தோற்றறனாரே" (விநாயகபுராணம்) என்பதும் ஈண்டு எண்ணத்தக்கது.

சான்றோர் யாண்டும் அமைதியுடையராய் அடங்கி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சாபாலியால் உணரப்படும்.

கதை

சாபாலி என்பவர் இருடிகணங்களுள் ஒருவர். இவர் வேதமுதலிய கலைகள்பலவும் நன்கு ஓதியுணர்ந்தவர், நீதி நிலைகளையும் அரசுக்குரிய நெறிமுறைகளையும் அறநுணுக்கங்களையும் வழுவறத் தெளிந்தவர் எவ்வுயிரையும் தம்முயிர்போல் எண்ணி யொழுகிய தண்ணளியாளர். மாதவர்களெல்லாரு மதித்துப் போற்று மேதகவுடையவர். கொடிய பாவியரும் இவரை ஒருமுறை கண்டால் அவர் கொடும் பவநீங்கிப் பெரும் பதமடைவர். "சாபாலி அருள் நோக்கம் சார்ந்தார் பின் பிறவியிடை மேவாராய் மெய்யுணர்வு மேவியுயர் வீடடைவர்" என யாவரும் பாடியேத்த இவர் பீடுபெற்று நின்றார். இவர் தனியே யமர்ந்து தவம் புரிந்திருக்கையில் மிக்க தீவினைபுரிந்து அதனால் வெந்துயரடைந்து வெதும்பியுழன்ற அதர்மன் என்னும் வேதியனொருவன் ஒருநாள் வந்து இவர் முன் எதிர்ப்பட்டான். அவனது நிலையினைத்தமது தவமகிமையால் நுணுகி நொக்கித் தம்கமண்டலத்திலிருந்த நீரைச்சிறி வாரி அவன் முகத்தில் தெளித்தார். உடனே அவன் நல்லுருவடைந்தான். அக்காலத்தில் காம்பிலி நாட்டிலே ஆம்பூரிலே கோபாலசாமி என்னும் ஓர் வேதியனிருந்தான். அவனுடைய மனைவி மிக்க அழகுடையளாயிருந்தும் அறிவின்றிக் காமச்சுவையிலாழ்ந்து தான் கருதியபடி யெல்லாம் திரிந்து காமுகர் பலரை மருவிக்களித்தாள். தன் கூடா வொழுக்கத்திற்குக் கொழுநன் இருப்பது கேடென்று துணிந்து அவனைக் கொன்று முடித்தாள். அக்கொலைப் பாவத்தால் அவள் கொள்ளிவாய்ப் பேயாகிக் கொடுந்துயர்புரிந்து காடெங்குங்கொதித்துத் திரிந்தாள். அங்ஙனந்திரிந்து வருங்கால் அவ்அதர்மனைக்கண்டு அழல்வாய் திறந்து ஆர்த்துவந்தாள். இவர் அரட்டி நிறுத்தினார். பின்னர் அவ்விருவரும் இவரது அருட்பார்வையால் சிறந்த வடிவடைந்து உயர்ந்து போயினர்.

"குலவுயாம் பிலிவளர் கோபால சாமி யெனும்
நிலவு வயினாவ மறையோன் நிசமுமவன் மனைக் குரியாள்

இலவுபுரை செவ்வாயாள் இலக்குமியென் றொருபெயராள்
கலவுகொடுங் குணம்பூண்டாள் கணவன்மனமழிந்திருந்தான்.

அயலார் தோள்கலப்புறும்பே ராசையுளாள் பணிவாள
னியலார் நன்னய மொழிகளெள்ளவுங் கொள்ளாளாய்
வியலார்தன் புன்றொழிலே மேற்கொண்டாளது கண்டு
மயலார் மற்றவட்கினந்தான் வைணவனும் அக்கொழுநன்.

ஊறாக நீயிருந்தால் ஒன்றுமுற்று தெனநகென்று
மாறாக நஞ்சூட்டி மடித்தாளக் கணவனைப்பின்
வேறாகத் தன்செயலேமேற்கொட்டலைந் தொழிந்தத்ற்குப்
பேறாகக்கொள்ளி வாய்ப் பேயாகி யுழிதருவாள்.

அந்தவனத்தகஞ்சார்ந்தாள்அந்தணன்முன்பணிந்து நிற்கும்
பந்தமிகும் அதர்மன்முகம் பார்த்தனள் பற்றுறநினைந்து
முந்தவிழல் வாய்திறந்து முடுகுதலும் அவனடுங்கச்
சந்தமுனி யுங்காரஞ் செய்து தடைப் படுத்தினன்.''
(திருப்பெருந்துறைப்புராணம்)

இதனால் மேற்குறித்த உண்மை இனிதறியலாம். இன்னவாறு அருந்தவத்திற்சிறந்து யார்க்கும் பேருதவி புரிந்து பெருந்தகையாளராய் இவர் விளங்கி யிருந்தார். அமைதி அருள்முதலிய உயர்குணங்களெல்லாம் ஒருங்கே வாய்ந்து ஞானசீலராய் நிலவி நின்ற இவர்மேல் சிந்துபன் என்னும் மந்திரவாதி ஒருவன் செயிர்த்து நின்றான். அவன் இரச வாதத்திலும் யோகமுறைகளிலும் நல்ல பயிற்சி யுள்ளவன். அதனால் குறுநில மன்னர் பலரையும் தன்வசஞ்செய்து கொண்டு பெருஞ்செருக்கோடு பெருகி நின்றான். முனிவரும் மன்னரும் வணங்கியேத்தச் சிறந்த புகழோடு இவர் விளங்கி வருதலை நினைந்து பொறாமையால் அவன் இகழ்ந்து வந்தான். அந்நிலையினையறிந்தும இவர் யாதும் வருந்தாமல் அவன்பால் அன்பு செய்தே வந்தா. ஒருமுறை பலர் குழுமி யிருந்த அவையில் ஞானயோகத்தைப் பற்றி இவர் உரையாடிக்கொண்டிருந்த பொழுது அவன் இடையே புகுந்து மாறுபாடான சில கேள்விகளை முரணோடு கேட்டான். இவர் யாதும் வேறுபடாமல் புன்னகையோடு அவனைப்புரிந்து நோக்கி "யோகநூலறிவில் இவர் மிகஉயர்ந்தவர்'' என அங்கிருந்தவர்களிடம் இனிது புகன்றார். தமமுள்ளத்துள் அவனை எள்ளியிருந்தாலும் இவரது சொல்லுக்

கடங்கி அவர் யாதும் சொல்லாதிருந்தார். தன்னை வியந்து கொண்டு அவன் வெளியே போனன். இவரது பொறுமையை அறிந்து அவனும் பின்னுளில் அடங்கிப் பணிந்தான். அவன் குற்றம்புரிந்து வந்தும் யாதும் இவர் செற்றம் புரியாது நிற்ற லைத்தெரிந்து எல்லாரும் இவரைப் புகழ்ந்து போற்றினர். "செற் றம் நீங்கிய மனத்தினர், யாவதும் கற்ருேரறியா அறிவினர், கற் ருேர்க்குத்தாம் வரம்பாகிய தலைமையர், காமமொடு கடுஞ்சின நீங்கடிந்த காட்சியர், இடும்பையாவதும் அறியா இயல்பினர், மேவரத்துனியில் காட்சி முனிவர்;" என்னுந்தனிப்புரையின்படி இவர் புனிதராகி நின்றார். தம் ஒரு சொல்லால் உலகை யெல் லாம் வெல்லவல்லராயிருந்தும் புல்லியரிடத்தும் தோல்வியைப் புல்லிக்கொண்டு பொறுமை யுற்றிருந்த இவரது அருமையை வியந்து மறுபுலங்களிலிருந்தவரெல்லாரும் புகழ்ந்து துதித்தார். துலையல்லார் கண்ணும் தோல்வி கொளலே சால்பிற்குக் கட்ட ளையாம் என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது. அக் காலத்திலிருந்தஆன்ருேர்பலரும்இவரைச "சான்ருேர் தலைவன்" என ஆர்வத்தோடு போற்றி நின்றார். சான்றாண்மையில் இங் ஙனம் தலைசிறந்து வான்ருேய் புகழோடு வயங்கி இவர் மாண் புற்று நின்றார்.

> மாற்ருராய் நின்றுதம் மாறேற்பார்க் கேலாமை
> ஆற்ருமை யென்னர் அறிவுடையார்—ஆற்ருமை
> நேர்த்தின்னு மற்றவர் செய்தக்கால் தாமவரைப்
> பேர்த்தின்னு செய்யாமை நன்று. (நாலடியார்)

> பேதையரைக் கண்டால் பெரியோர் வழிவிலகி
> நீதியொடு போதல் நெறியன்ருே—காதுமத
> மாகரத்த யானை வழிவிலகல் புன்மலந்தின்
> சூகரத்துக் கஞ்சியோ சொல். (நீதிவெண்பா)

> சீறிச் செருக்கிநில்லார் செல்லிடத்துஞ் சான்ருேர்தாம்
> ஆறிப் பணிவ ரமைந்து.

யாண்டும அடங்கியமைதலே சால்பாம் என்பது இதனல் கூறப்பட்டது.

**987.** மண்டுதுயர் செய்தாற்கு மாறி வயிரப்பன்
கொண்டு செய்தான் இன்பேன் குமரேசா—மிண்டியே
இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு. (எ)

இ—ள்

குமரேசா! தனக்குக் கொடுந்துயர் செய்தானுக்கு வயிரப்பன் ஏன் இதஞ்செய்து விடுத்தான்? எனின், இன்னா செய்தார்க்கும் இனியவை செய்யாக்கால் சால்பு என்ன பயத்ததோ? என்க.

இது, சால்பின் பயன் கூறுகின்றது.

இன்னா = துன்பங்கள். இனிய என்றது இன்பங்களை. ஏகாரம் பிரிநிலை. செய்தார்க்கும் என்பதில் உம்மை இனிய செய்யாமைக்கு அவர் இடனுயுள்ளமை தோன்ற நின்றது.

என்ன பயத்ததோ = வேறு யாது பயனையுடையதோ? ஒரு பயனும் இல்லை என்பது உணர நின்றமையின் ஓகாரம் எதிர்மறை என்க. மெய்ப் பொருள் நாயனார் போலத் தமக்கு இடர் செய்தார்க்கும் சான்றோர் இதஞ்செய்தேவிடுவர்என்றவாறு.

மேல், இழிந்தார் கண்ணும் தோல்வியை ஏன்று கொள்வோரே சான்றோராவர் என்றார்; இதில், இன்னாசெய்தார்க்கும் அவர் இனியனவே செய்யவேண்டும் என்கின்றார்.

தமக்குத் துன்பங்களைச் செய்தார்க்கும் சான்றோர் இன்பங்களைச் செய்யாத விடத்து அவர் சால்பு வேறு என்னபயனையுடையது? என்பதாம்.

தனக்கு இடர் செய்தார்க்கும் இதஞ்செய்தலே ஒருவனது சால்புடைமைக்குப் பயனும் என்ற இதனால் அவ்வுடைமையின் இயல்பும் அருமையும் உணரலாகும்.

தமக்கு ஒருவன் இடர் செய்வனுயின் அதனைத் திருப்பிச் செய்து விடாமல் பொறுத்துக் கொள்வதோடு மேலும் அவனுக்கு இதஞ்செய்து விடுதலே சால்புடைமைக்கு அழகாம் என்றபடி.

இங்ஙனம் இடம் வாய்த்தபோது உடனே தம்தகுதியைச் செய்து காட்டாமல் சான்றோர் தாழ்ந்திருப்பராயின் அவர் சால்பு

உலோபிகைப் பொருள் போல் இழிந்துபடுமாதலால் "செய்யாக் கால் சால்பு, என்ன பயத்ததோ?" என்றார்.

இன்னாமைசெய்தார்க்கு மாறி இன்னா செய்தல் இழிவாம்; அங்ஙனம் செய்யாமல் பொறுத்திருத்தல் உயர்வாம; அவ்வாறு பொறுத்தலோடுமேலும் அவருக்கு இனியனசெய்தல் மிகமேலாகிய சால்பாம என்க.

"இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்பமேல்;
இன்னாவே செய்யும் இனியசெய் தார்க்குங்கீழ்;
இன்னாதசெய்தார்கரு இகலா, இனியசெயும
இன்னாத செய்யார்க்கு இடை." (இன்னிசை)

உத்தமர், அதமர், மத்திமர் என்னும் இவர் இயல்பினைக்குறித்து முறையே இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

இன்னா செய்தார்க்கு இனியன செய்வோரே சான்றோராவர் என்றபடி. இதனால் சான்றாண்மையின் பொறுப்பும், அதனைப் பொறுத்திருப்பாரது சிறப்பும அறியலாகும.

கறுத்தின்னா செய்தவக் கண்ணும் மறுத்தின்னா
செய்யாமை மாசற்றார் கோள். (குறள். 312)
இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயஞ் செய்து விடல். (குறள். 314.)

என முன்னர் உரைத்துள்ள வற்றிற்கும் இதற்கு முள்ள வேறு பாட்டினை யூன்றி யுணர்ந்து கொள்க.

பிறர் எவ்வளவு இடர் செய்தாலும் பொறுத்துக் கொண்டு என்றும் இதமே செய்து யாண்டும பெருந்தன்மையோடு சான்றோர் அமைந்திருக்கவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

என்றும் எவர்க்கும் இதம் செய்து வாழ்தலே சான்றாண்மைக்குப் பயனாம என்பது கருத்து.

தமக்கு அல்லல் செய்தார்க்கும சான்றோர் நலலதே செய்வர் என்பது இதில் உணாத்தபபட்டது. இவ்வுண்மை வயிரபப முதலியார் பால் உணாபபடும.

கதை.

வயிரப்ப முதலியார் என்பவர் இற்றைக்கு ஐந்நூறு ஆண்டு கட்கு முன்னர்த் தொண்டை மண்டலத்திலே குன்றக் கோட்டத் திலே மெய்யூர் என்னும் ஊரிலிருந்தவர். இவர் கல்வியறிவிலும் நல்லொழுக்கத்திலுமிகச் சிறந்தவர். நிலவளங்களோடு பலவகை நலங்களும் நிறையப் பெற்று இவர் நிலவியிருந்தார். யாவர்மாட் டும் பேரன் பாளர்; என்றும் இதஞ்செய்தலே தமக்கு இயல் பாக வுடையவர். பயிர்களைப் பேணி உயிர்களை ஓம்பி உயர்குண சீல ராய் விளங்கி நின்றார். இவரது மனவமைதியையும் குணநலங்க ளையும் அறிந்து மறுபுலத்தவரும் பெருவிருப் புடையராய் இவர் பால் உரிமைபாராட்டி வந்தார். அருளும் பணிவும் அடக்கமும் பொறையும் துணிவும் செம்மையும் தூய்மையும் தமக்கு அணி யெனக் கொண்டு இனிதமர்ந்திருந்தார். இவரது பண்ணையாட்களு ள் கண்ணன் என ஒருவனிருந்தான். அவனுக்குச் சில பன்றிகளிரு ந்தன. அவற்றுள் ஒன்று ஒருநாள் வெளியே சென்றிருந்த பொழு து ஒருவன் புலத்துட்புகுந்தது. அவ்விளை நிலம் மலையன் என்னும் ஓர் புலவனுக்குரியது. அவன் நல்ல கல்வியில்லாதவனாயினும் புல்லியகவிகளை நரர் மீது புனைந்து பாடிச் சிறிது பொருள் சேர்த் து அதனால் தன்னைப் பெரிதும் வியந்து சிறுமையில் மிகப்பெரு கி நின்றான். இன்கவிகளுக் கெல்லாம் ஓர் வன்களையாய் இழிவி னை விளைத்துப் பழிமிகுத்திருந்த அவன் அப்பன்றியைக் கண் டான். தன்புலத்தைக் கெடுத்ததென்று பொங்கிப் பாய்ந்து அதனைக் கொன்றான்; கொல்லவே அக்கண்ணன் அங்கு ஒல்லையில் ஓடி வந்தான். அவனையும் தன்கையிலிருந்த மண்கருவியால் மண்டி வெட்டினான்; உடனே அவன் மாண்டு விழுந்தான். தம் அடியவனையும் பன்றியையும் அடியோடு அழித்து விட்டான் என்பதைக் கேள்விப்பட்டு இப்பேரருளாளர் விரைந்து வந்தார். உதவிக்கு வந்துள்ளார் என்று சினந்து அக்கொடியவன் இவரை யும் கன்னத்தில் ஓங்கி அடித்தான். அடிக்கவே அவனை அணை த்துப் பிடித்துப் பிழையைப் "பொறுத்துக் கொள்ளுங்கள்" என்று பேணி மொழிந்தார். அவன் நாணி நின்றான். அவனை நயந்து தேற்றித் தமது விளைநிலங்களுள் அதுபொழுது கதிர்க ளோடு செழித்து நின்ற ஓர்சிறந்த வயலை அவனுக்கு உவந்து

கொடுத்தார். இவரது பெருந்தன்மையை நினைந்து நினைந்து நின்று அப பழிமகன் நெஞ்சமுருகினான். தமக்குப் பெருநதுன் பத்தைச செய்திருந்தும் யாதும் இகழ்ந்து சொல்லாமல் அவனுக்கு இவர் இதஞ்செய்தமையை யறிநது அக்காலத்திருந்தவரெல்லாரும் இவரைப் புகழ்ந்து துதித்தார். இவரது சால்பினைக்குறித்து நூல்களும் எழுதினர். இவரால் அந்நாடும் நகரமும் பாடல் பெற்றன. இன்னவாறு புலவர்பலர் இவர்செய்த நிலையினைக்குறித்துப்பல கவிகள் பாட இவர் பாடுபெற்றுநின்றார். இன்னாமைசெய்தானுக்கும் இனியனசெய்து நின்ற இவர் சால்பினையறிநது அந்நாட்டு மன்னனும் இவர் மேல் மருவிய நண்பனாய் மாண்பு செய்திருந்தான். "இன்னா செய்தார்க்கும இனியவே செய்யாக்கால் என்னபயத்ததோ? சால்பு" என்னும் உண்மையை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

பயிரைப் பெரும்பன்றி தின்றதற்காகப் பரிசனத்தோ
ருயிரைப்பருகி யுடலவர்கீய ஒருபுலவன்,
செயிரைப் புடைத்ததுந தானேபொறுத்தநதச செய்புதவு
வயிரப்பனென்பவன் வாழ்வானது தொண்டைமண்டலமே.
(தொண்டை மண்டலசதகம்.)

மேற்குறித்த இவர் சரிதவுண்மை இதன் கண்ணும் குறிககப் பட்டிருத்தல் காண்க. இதனால் இவரது சான்றாண்மையின் ஆன்றநிலை இனிதறியலாகும்.

செற்றாரைச செறுத்தலின் தற்செய்கை சிறந்தன்று.
(முதுமொழிக்காஞ்சி)

உபகாரஞ் செய்ததனை யோராதே தங்கண்
அபகாரம் ஆற்றச் செயினும—உபகாரம
தாஞ்செய்வ தல்லால் தவற்றினால் தீங்கூக்கல்
வான்றோய் குடிப்பிறந்தார்க் கில். (நாலடியார்.)

தீர்வரும் இன்னல் தம்மைச் செய்யினும் செய்யசிந்தைப்
பேரருளாளர் தத்தஞ்செய்கையிற் பிழைப்ப துண்டோ?
கார்வரை நிறுதநித் தன்னைக் கனலெழக் கலக்கண்டும்
ஆகலி அமரருய்ய அமிழ்து பண்டளித்தகக தன்றே
(இராமயாணம்)

தமக்கு எவ்வளவு இடர் செய்தாலும் சான்றோர் பிறர்க்கு இதமே செய்வர் என உவமை புணர்த்தி இஃதுணர்த்தி நிற்கும் அழகை யூன்றிப் பார்க்க.

கொல்லப் புகுந்த கொடியோர்க்குஞ் சான்றோர்கள்
நல்லதே செய்வர் நயந்து.

இன்னா செய்தார்க்கும் இனிய செய்வோரே சான்றோர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

988. அன்று வறுமை யடைந்திருந்தும் பூசலார்
குன்றவில்லை சீரேன் குமரேசா—என்றுமே
இன்மை யொருவற் கிளிவன்று சால்பென்னுந்
திண்மையுண் டாகப் பெறின். (அ)

இ—ள்.

குமரேசா! பூசலார் வறுமை யடைந்திருந்தும் இளிவுறாது ஏன் ஏததப்பட்டார்? எனின், சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின் இன்மை ஒருவற்கு இளிவன்று என்க.

இது, சால்பின் பெருமை கூறுகின்றது.

இன்மை = வறுமை. பொருளில்லாமை என்னும் ஏதுவான் வந்தது. இன்மை என்பது இளிவு என்று பொதுவாக எல்லாராலும் எண்ணப் பட்டிருத்தலால் அதனை எடுத்துக்காட்டி அங்ஙனம் அன்று என இங்ஙனம் உணர்த்தியருளினார்.

சால்பைத் திண்மை என்றது சலியாது நிற்கும் தன்மை கருதி. பெறின் என்றது அஃதுண்டாகும் அருமை தோன்ற நின்றது.

மேல், சால்பின் தலைமையான நிலைமை கூறினார்; இதில், அதனை யுடையாரது நலங்கூறுகின்றார்.

சால்பு என்று சொல்லப்படுகின்ற திண்மை ஒருவனுக்கு உண்டாகப் பெறின் வறுமை அவனுக்கு இளிவாகாதென்பதாம்.

வறுமையானது தன்னையுடையார்க்கு எல்லாச்சிறுமைகளையும் ஒருங்கே விளைக்கும்; "இல்லாரை எல்லாரும் எள்ளுவர்" என்றபடி அவரை எவரும் ஒரு பொருளாக மதியார்; இகழ்

ந்தே விடுவர்; அத்தகைய புல்லியவறுமையைச் சான்ரோர் புல்லி இருப்பினும் அவரை எலலாரும் போற்றி நிற்பர் ஆதலால் "சால்பு உண்டாகப் பெறின் இன்மை இளிவன்று" என்றார். இன்மையோடு இணைத்து வைத்துச் சால்பின் தன்மையை அடிகள் இதில் உணர்த்தியிருக்கும் அழகை யூன்றிப் பார்க்க.

புறத்தே பொருளில்லாதிருந்தாலும் அகத்தே சால்புடையராயின் அவர் மிக மேலாக மதித்துப்போற்றப் படுவரென்றபடி. இதனால் சால்புடைமையின் தனி நிலை இனிது புலனும.

இன்மை யுற்றிருநதும் குசேலர் எந்தப் பட்டதுபோல் சான்ரோர் எளியராயினும் போற்றப்படுவர் என்க. பொருளைக் காட்டிலும் சால்பினையே ஒருவன் போற்றி ஒழுக வேண்டும் என்பது கருத்து. செல்வன் எனச்சிறந்து நிற்றலினும் சான்ரோன் என விளங்கி நிற்றலே ஒருவனுக்கு உயர்நததாம் என்க.

"சான்ரோன் எனத்திரி" (ஔவையார்)

சால்பானது எல்லா நலங்களையுந் தந்து தன்னையுடையானை மிகவுன்னத நிலையிலுயர்த்தி விடுமாதலால் அதனை உறுதிப் பொருளாக்கருதிக் கொள்ள வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

வறுமையுற்றிருந்தாலும் சான்ரோர் பெருமை பெற்றுயர்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பூசலார் பால் உணரப் படும்

கதை

பூசலார் என்பவர் தொண்டை நாட்டிலே திருநின்றை என்னும் ஊரிலே வேதியர் குலத்திலேபிறந்தவர். வேத முதலிய கலைகள் பலவும் ஓதி யுணர்ந்தவர். இவர் அருளும் பொறையும் அமைதியு முடையவர். என்றும் பிறருக் கிதமேசெய்யும் இனிய நீர்மையர். நருமதை என்பவளை மணந்து நெறி முறை வழுவாமல் நின்று இவர் இல்லறம் புரிநதார். புரிந்து வருங்கால் பொருள் வளங்குறைநதது. குறைந்தும் இவர் அரிதின்முயன்று அடியவரெவர்க்கும் ஆர்வ மோடு உதவி செய்து வநதார். முடிவில் கொடிய வறுமை இவரிடம் குடிபுகுந்து நிறைநதது. இறைவனுக்கு ஓர் ஆலயம அமைக்க வேண்டும் என்று முன்னமே

கருதியிருந்தாராதலால் அக்கருத்து வறுமையால் நிறைவேரு மையால் இவர் மறுகியிருந்தார். புறத்தே வறுமை நலியினும் அகத்தே அந்நினைப்பை ஒழியாமல் நாளும் நினைந்து நெஞ்சுருகி நின்றார். அவ்வமயம் காடவன் என்னும் மன்னன் காஞ்சி புரத்தில் ஓர் அழகிய திருக்கோவில் கட்டி முடித்து அதில் பரமனை எழுந்தருளப் பண்ணுதற்குரிய நன்னாளை உறுதி செய்து எதிர் நோக்கியிருந்தான். ஒருநாளிரவில் இறைவனருளால் அவன் ஓர் கனவு கண்டான். "நீ குறித்துள்ள சமயத்தில் பூசலார் திருக்கோவிலுள் நான் எழுந்தருள வேண்டியிருத்தலால் வேருரு நாளை நீ தெரிந்து கொள்ள வேண்டும்" என்று அப் பரம்பொருள் வந்து உரை செய்த விதமாக அக்கனவு நிலவி யிருந்தமையால் மறுநாளே அவ்வேந்தன் விரைந்தெழுந்து இவர் நகரை வந்தடைந்து இவரை விழைந்து தேடினன். அவ்வூரி லுள்ளவர் இவரது சீரினை யறியாமல் "அவன் யாதொன்றும் இல்லாதவன்; பெரியவறியன்; இங்கேயே கூட்டி வருகின்றோம்" என்று ஒருமையிற் கூடியுரைத்தார். அவர்தம் வாயினை யடக்கி அரசன் இவர் வாயிலையடைந்தான். உற்றதை உசாவி உண் மையை யுணர்ந்து உள்ள முருகி உவந்து பணிந்து இவரது பெருந்தன்மையை வியந்து அவன் அகன்று போனன். அன்று முதல் எல்லாரும் இவர் சால்பினைத் தெளிந்து சாலப்பணிந்தார். மன்னனும்அடிக்கடி வந்து இவர்தம் மாணடி வணங்கி மாட்சி பல செய்தான். வறுமை யுற்றிருந்தும் தம் சால்புடைமையால் இவர் பெருமை பெற்று நின்றார். இவரது குணநலங்களை அக் காலத்திலிருந்தவரெல்லாரும் புகழ்ந்து போற்றினர். "சால் பென்னும் திண்மையுண்டாகப்பெறின், இன்மை யொருவற்கு இளிவன்று" என்பதை உலகம இவர் பால் உணர்ந்து நின்றது. விரிவைப் பெரிய புராணத்தில் காண்க.

இல்லா ரெனினும் இயலமைந்த சான்றோரை
எல்லாரும் கைதொழுவார் என்று.

வறுமை யுறினும் சான்றோர் பெருமை பெறுவர் என்பது இதனல் கூறப்பட்டது.

**989.** நேர்ந்து புலத்தியனார் நின்றநிலை பேராது
கூர்ந்திருந்தார் என்னே குமரேசா — ஆர்ந்துபோய்
ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார். (௯)

இ—ள்.

குமரேசா! புலத்தியனார் யாண்டும் நிலைபெயராது சால்போடு என் இனிதமைந்திருந்தார்? எனின், சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார், ஊழி பெயரினும் தாம் பெயரார் என்க.

இது, சான்றோர் யாண்டும் நிலை திரியார் என்கின்றது.

ஊழி = யுகமுடிவு. அஃதாவது பல்லாயிரம் ஆண்டுகள் கழிந்தொழிந்தபின் முடிந்து நிற்கு காலநிலை. இவ்வகையான ஊழிமுடிவில் நீர், தீ, காற்று முதலியவற்றுள் ஏதேனும் ஒன்று பொங்கி யெழுந்து உலகினையழித்து நிலைபினைமாற்றும். அவை ஊழிக் கடல், ஊழித்தீ, ஊழிக்காற்று என இதன் தொடர்பாகப் பெயர் பெறும். "பசும்பொன் னுலகமும், மண்ணும் பாழ்பட — விசும்பி னூழியூழ் செல்லக் — கருவளர் வானத் திசையிற் றோன்றி — யுருவறிவாரா வொன்றனூழியும், முந்துவளி கிளர்ந்த வூழூழி யும், செந்தீச்சுடரிய வூழியும், பனியொடு — தண்பெயறலைஇய வூழியும் அவையிற் — றுண்முறைவெள்ள மூழ்கியார்தருபு — மீண் டும் பீடுயர் பீண்டி யவற்றிற்கும் — உள்ளீடாகிய இருநிலத்தூழி யும் — நெய்தலுங் குவளையும் ஆம்பலும் சங்கமும் — மையில்கமல மும் வெள்ளமுந் நுதலிய — செய்குறியீட்டம் கழிப்பிய வழிமுறை — கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய — வூழியொருவினையு ணர்த்தலின் முதுமைக்கு — ஊழியாவரும் உணரா — வாழி முதல்வ" (பரிபாடல்)

நிலைதிரிந்து ஊழிநீங்கி உத்தரகுருவுமாகிக்
கொலைகடிந்திவறலின்றிக் கோதறொழில் நடாத்துமன்றே.
(சிந்தாமணி)

"தொல்லூழி தடுமாறித் தொகல்வேண்டும் பருவத்தாற்
பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்"
(கலித்தொகை)

"ஆழிப்புனல் எரிகால்நிலம் ஆகாயமும் அழியும்
ஊழிக்கடை முடிவிற்றிரி உடைமைகேள்வனே" (இராமாயணம்)

ஊழியைக்குறித்து இவை உணர்த்தி நிற்றல் காண்க.

ஊழி பெயரினும்—ஊழிக்காலத்தில் கடல் தன் நிலை கடந்து திரிந்தாலும். கடல் என்பது இதில் வருவிக்கப் பட்டது. இங்ஙனம் கொண்டது இடம் நோக்கி என்க.

சான்றாண்மை = சால்பினை ஆளுந்தன்மை. அஃதாவது குணங்களால் நிறைந்து அவற்றை நலமுறப்பண்படுத்தி என்றும் நிலைதிரியாதமைதியுற்றிருக்கும் நீர்மை.

இச்சால்பினையுடையாரை ஆழி என்றது உலகம் இன்புற உறுதிபல செய்து, இனிய நீர்மையாற் பெருகி, அளவிடலரியபடி அமைதியுற்று நிலவி நிற்கும் அருமை கருதி என்க.

ஆழி = கடல். ஆழமுடைய தென்னும் ஏதுவான் வந்தது.

மேல், சால்பானது தன்னையுடையாரை மிக உன்னத நிலையில யாண்டும் உயர்த்திவைக்கும் என்றார்; இதில், அதனையுடையார் என்று நிலை திரியாது நின்று விளங்குவரென்கின்றார்.

சான்றாண்மைக்குக் கடலென்று சொல்லப்படுவார் ஊழி காலத்தில் கடல் பொங்கி நிலைதிரிந்தாலும தாம் நிலைதிரியார் என்பதாம்.

ஆழி என்பதற்குக் கரை என்று பொருள் கொண்டு பரிமேலழகர் உரைத்தபடியே உரைத்தால் என்னை? எனின், அது, பொருளொடு பொருந்துமா? என்பதை யூன்றியுணர்ந்து கொள்க.

நீர்க்கடல் யுகாந்தத்தில் நிலைதிரிந்தாலுந்திரியும்; குணக்கடலாகிய சான்றோர் என்றும் தமது நிலைதிரியார் என்றபடி.

இனி, கடலை இடையே வருவியாமல் ஊழி பெயரினும் என்பதற்கு யுகமுடிந்து நிலைதிரிந்தாலும் என்று கொண்டு அம்முடிவிலும் சான்றோர் தம் நிலைதிரியாது நிலைத்து நிற்பர் எனினுமாம.

தன் புடைபெயர்ச்சியால் எல்லாவற்றையும் நிலைபெயரச் செய்யும் இயல்பினதாய ஊழியிலும் சான்றோர் நிலைபெயராது நிற்பர் என்ற இதனால் அவரது தன்மையும், சலியாது நிற்கும்

வன்மையும் இனிதுபுலனும். சான்றோர் என்றும் நிலைதிரியார் என்பதற்கு ஊழி நிலையை இங்ஙனம் இணைத்து உணர்த்தியது யாண்டும் நீர்மை பெயராது நிற்கும் அவர்தம பேராண்மையின் பெற்றி தோன்ற என்க.

"ஊழி திரியுங்காலத்தும் உலையா நிலைய ஒரு கிரியும்" (இராமாயணம்) என மேருமலையைக் குறிததுக கமபர் கூறியிருத்தல் காண்க.

"நிலந்தி ·ம் பெயருங் காலை யாயினும்
கிளந்த சொன்னீ பொய்ப்பறி யலையே" (பதிற்றுப்பத்து.)

வாழியாதனைக் குறித்துக் கபிலர் இங்ஙனங்கூறியுள்ளார். இதனால அவன் சான்றாண்மைக்கு ஆழி எனநின்றுள்ளமை அறியலாகும.

வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுது நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செமமை புரை திறமபாச செய்கை
யழிவரோ செங்கோ லவர். (நளவெண்பா)

மேலோர் எவ்வகையினும் தம்நிலைகுலையாது நிற்பரென்பதைபுணர்த்தற்கு வேலை, வேதம, ஞாலங்களை எடுத்துக் காட்டி இஃதுணர்த்தி நிறறல்காண்க.

யாண்டும் நிலைதிரியாமல் சான்றோர் நிலைத்து நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புலத்தியர்பால் உணரப்படும்.

கதை.

புலத்தியர் என்பவர் சிறநத முனிவரர். ஐம்புலங்களையுமடக்கி அருந்தவம் புரிநது பேரறி வாளராய்த் துலங்கி யிருந்தா ராதலால் புலததியர் என இவர் விளங்கி நின்றார். புலம = அறிவு. இவர் இளமையாயிருக்கும் பொழுதே அரிய விரத வொழுக்கங்களை மேற்கொண்டு மேரு மலைச் சாரலிற் போய்த் தனியே அமர்நது தவஞ் செய்திருநதார். ஆண்டுகள் பல கழிநதும் இவர் ஆண்டே அமைதியுற்று நின்றார். அரம்பையர் முதலாக அழகிய மகளிர் பலர் வந்து நின்று இவரைத் தம வசஞ் செய்ய முயன்றார். என்ன வகையாக முயன்றும் தமநிலைமை திரியாமல் முன்னிய தவநெறியில் இவர் மன்னியிருநதார். இவரது நிலையினையறிந்து அமரரும் வியந்தார்.

"நாக கன்னியர், நான் மறை முனிவர் கன்னியர்கள்
போக மேவிய பொன்னுலகத்து மங்கையர்கள்
பாகு போன்மொழிப் பங்கய முகத்தியர் அந்தப்
பூக நீடிய பொழில்வன நாடொறும் புகுந்து. (க)

பாடுவார், புனல் ஆடுவார், பன் மலர் பறித்துச்
சூடுவார், மலர் நாடுவார், தோழியர் தம்மைத்
தேடுவார், அவர்க் கூடுவார், தேவருந் திகைப்ப
ஆடுவார், விளையாடுவா ராயின ரடங்க" (உ)

இன்னவகையாக நாளும் வந்து அவர் நாடி யாடி நயந்து நின்றும இவர் யாதும் பேசாமல் தவநிலையில் அமர்ந்திருந்தார். தாம் யாது செய்யினும் இவர் தீது புரியார் என்று அவர் தெளிந்து கொண்டமையால் மேலும் ஓயாது திரண்டு வந்தார். ஒருநாள் அவரை இவர் எதிர் நோக்கி "இனி இங்கு எவர் வரினும் அவர் வயிற்றில் விருப்ப மில்லாத ஓர் கருப்ப முண்டாகும்" என்று கடுத்து மொழிந்தார். அன்று முதல் யாரும் அங்கு நெருங்காமல் அஞ்சியகன்றார். இவ்வுண்மையை யறியாமல் ஒரு நாள் அங்கோர் கன்னி வந்தாள் இவர் முன்னஞ் சொல்லியிருந்தபடியே அவள் சூலடைந்தாள். அவள், திரணபிந்து என்னு முனிவனுடைய அருமைத் திருமகள். அழகும் அறிவும அமைதியு முடையவள். வயிறு கனத்ததைக் கண்ட வுடனே அவள் வருந்தி ஓடித் தந்தையை யடைந்து நடந்தபடியை நடுங்கி யுரைத்தாள்.

"மேனியானது வெளுத்துத்தன் விழிகளும் பசப்ப
மானினேக்கினள் மற்றதன் காரணம அறியாள
தான் விரைந்து போய்த் தநதையை வணங்க அத்தன்மை
ஆனகாரண மாங்கவ னென்னென அறைவாள். (க)

பாங்கி மார்களைத் தேடியான் படர்வன மெய்தி
ஓங்கு மாதவப் புலத்தியனுறை விட முற்றேன்
ஈங்கென் மேனி போய் இவ்வண்ண மாயினதென்ன
ஆங்கி யோகத்தினிருந்தவன் புகுந்த வாறறிந்தான். (உ)

அறிந்த மாமுனி அரும்பெறற் கன்னியையுடன் கொண்
டிறந்த மாதவப் புலத்திய னிருப்பிட மெய்த
நிறைந்த கேள்வியாய்! நினக்கிவள் தாரமாகுகைக்குச்
சிறந்துளாள் குணவதி யெனச்செப்பினன் கொடுத்தான். (ங)

கொடுத்த நாள்முதற் கொம்பனுள் கோதறு முனிவற்கு
அடுத்த ஏவல் செய்தாங்கினி தொழுகிட வந்தக்
கடுத்த வெவ்வினை கடிந்தவன் காதலி தன்மேல்
அடுத்த பேரருளுடையனு யிவ்வுரை யியம்பும். (ச)

காதன்மேவு நின் தோழியராய கன்னியரைச்
சூத நீடு பூஞ்சோலையிற்றேடி,யான் சொல்லும்
வேத வோசை நீ கேட்டலின் விச்சிரவாவென்
றோது நீதியான் ஒருவனைப் பெறுதி யாலென்றான்." (ரு)

(இராமாயணம்)

இன்னவாறு அவளை இனிய மனைவியாகக் கொண்டு விச்சிரவசு என்னும் ஓர் அருமை மகனைப் பெற்று இவர் நெறியமர்ந்திருந்தார். அருளும் அமைதியு முடையராய்ப் பிற வுயிர்களுக்கென்றும் இதமே புரிந்து முனிவர்களுள் முதன்மை யெய்தி நின்றார். இங்ஙனம் நின்று வருங்கால் பராசர முனிவர் பழம் பகை கருதி அரக்கர் பலர் மாளும்படி ஒரு படு வேள்வி செய்தார். அதனை ஒழித்து விடும்படி அவரை இவர் உணர்த்தி யருளினர். செற்ற மின்றி யிருத்தலே நற்றவர்க்கழகு என முற்றவுணர்த்திய இவரது உறுதி மொழிகளைக் கேட்டு உள மிரங்கி அன்று முதல் ஒருயிர்க்கும் ஊறு புரியாது அவர் தேறி யிருந்தார். இன்னவாறு ஆருயிர்க்கெல்லாம் அருள் புரிந்து யாண்டும் நிலை திரியாது இவர் நிலைத்து நின்றார். இவரது குண நலங்களையும், அமைதியையும், நெறி தவறாது நிற்கும் சீர்மையையும் வியந்து அக்காலத்திருந்த அரசரும் முனிவரும் இவரை அகமகிழ்ந்து புகழ்ந்தார். பலமுறை பலவகையான சோதனைகள் புரிந்தும் தம் நிலை திரியாமல் நின்றமையால் ஞானவாரிதி என இவரை வானவரும் போற்றினர். "சான்றாண்மைக்கு ஆழி எனப்படுவார், ஊழி பெயரினும் தாம் பெயரார்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

திங்கள் நிலைதிரிந்து தீபிடினும் சான்றோர்கள்
தங்க ணிலைதிரியார் தாழ்ந்து.

சான்றோர் யாண்டும் நிலை திரியார்என்பது இதனல் கூறப்பட்டது.

---

**990.** நன்றறிந்த அங்கீரர் நன்னீர்மை என்றுமேன்
குன்று திருந்தார் குமரேசா—நின்றுயர்ந்த
சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலந்தான்
தாங்காது மன்னோ பொறை. (0)

இ—ள்.

குமரேசா! அங்கீரர் யாண்டும் தம் சால்புடைமை குன்றுமல் ஏன் அமைந்திருந்தார்? எனின், சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலம்தான் பொறை தாங்காது என்க.

இது, சான்றோருண்மையானே இவ்வுலகம் உள்ளதென்கின்றது. நன்றறிந்த என்றது அறநெறிகள் முழுவதையும் வழுவறத் தெளிந்திருந்த அவரது உணர்வுடைமை கருதி.

இருநிலம் = பெரியவுலகம். இருமை பெருமையை யுணர்த்தி வரும். "இருநிலத்தன்ன நோன்மை" (புறநானூறு) என்புழி இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

பொறை தாங்காது = தன்பாரத்தைத் தாங்கி நில்லாது. தளர்ந்துபடும் என்றபடி. நிலம் எப்படி நிலைதிரியாமல் பொறைதாங்கி நிலைத்து நிற்கின்றதோ அப்படியே சான்றோர் யாண்டும் தம் நீர்மை குன்றுமல் நிலைத்து நிற்பர் என்பதாம். குன்றின் என்பது அவர் அங்ஙனம் குன்றூர் என்பதைக் குறித்து நிற்றலால் மன், ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் வியப்பும இரக்கமும் விளைத்து நின்றது. சான்றோரோடு இணைத்து வைத்து நிலத்தை இங்ஙனம் உணர்த்தியது பொறுமை திண்மை முதலிய உயர்குணங்களெல்லாம் இயல்பாக அமைந்து எவர்க்கும் ஆதாரமாயினிதமர்ந்திருக்கும் அதன் தகுதி கருதி என்க.

"தெரிவரும் பெருமையும் திண்மையும் பொறையும்
பருவ முயற்சி அளவிற் பயத்தலும்
மருவிய நன்னில மாண்பாகும்மே" (நன்னூல்)

"நிலத்தின் இயல்பே நினைக்குங்காலைப்-பொறையுடைமையொடு செய்பாங் கமைந்தபின் — விளைதல் வண்மையும் போய்ச் சார்ந்தோரை—இடுதலும் எடுத்தலும் இன்னணமாக

இயையக் கூறுப இயல்புணர்ந்தோரே '' என்பதுங்காண்க.

மேல், சான்றோரைக் கடலோடிணைத்துணர்த்தினார்; இதில், அவரை உலகோடு பிணைத்துணர்த்துகின்றார்.

சான்றோர் தமது சால்பு நிலை குன்றுவராயின் பெரியஇவ்வுலகம் தனது பொறையைத் தாங்காது பொன்றுமென்பதாம்.

ஊழி பெயரினும், சான்றோர் தம் உறுதி பெயரார்; என முன் உணர்த்தியதையறிந்து அங்ஙனம் நிலைதிரியா ராயினும் தாம் நின்ற நிலை குன்றுவரோ? என்று ஒருவன் குறித்து நோக்க அவனை நோக்கி இஃதுணர்த்தியதாகக் கொள்க.

சால்புடையார் என்றும் தம் இயல்பு குன்றார் என்பதற்கு ஏதேனும் தகுந்த சான்று உண்டா? எனின், இந் நிலவுலகம் நிலைகுலையாது நின்றிருத்தலே அதற்கு நிலையான சான்று என அவ்வினாவிற்கு விடை பகர்ந்த படியாக அமர்ந்து நிற்கும இதன் அழகை ஆய்ந்து பார்க்க.

சானறவர் சான்றாண்மை குன்றுவராயின் இருநிலம் பொறை தாங்காது என்றது என்னை? எனின், அவர் நிலைகுலைந்து போவாராயின் உயிரிழந்த உடல்போல் இவ்வுலகம் பொலிவிழந்து பொன்று மாதலி னென்க.

ஓ நிலமே! நீ நாடாயிருந்தாலும், காடாயிருந்தாலும், பள்ளமாயிருந்தாலும், அல்லது மேடாயிருந்தாலும் எவ்விடத்து நல்லவராகிய சான்றோ ருளரோ அவ்விடத்து நீ நல்லை யாயுள்ளாய்! அவர் இல்லையாயின் நீ அங்ஙனம் இல்லையாகின்றாய்; இங்ஙனமாயின் உனக்குத்தனி மாண்பு எங்ஙனம் அமையும்? என நில மகளை நோக்கி ஔவையார் ஒரு முறை விநயமாக வினவி யுள்ளார். (புறம்—187)

இதனால் சான்றோர்க்கும் நிலத்திற்கும் உள்ள உரிமை இனிது புலனும்.

சான்றோர் தம் தன்மை குன்றின் அது, உலகிற்கே ஒரு பெருங்கேடாம; என்னை? மலர்தலை உலகினுக்கு உயிரென நிற்கும் அவர் நிலைகுலைவராயின் பிறரும் அவரைப் பின்பற்றிப்பிழை பல புரிவர்; அதனால் பழி பாவங்கள் மிக விளையும்;

விளையவே அவ் இழி நிலையைத் தாங்க மாட்டாது உலகமாதா தயங்கி நிற்பள் ஆதலால் சான்றவர் குன்றின் நிலம் பொறை தாங்காது'' என்றார்.

நல்லார் ஒருவர் பொருட்டே இவ்வுலகம் பல்லாரையும் தாங்கி நிற்கு மாகலின் அவர் நன்மை குன்றுவாராயின் அது, தன் தன்மை குன்றும் என்க.

சான்றோர் தம் சால்புடைமை குன்றுவாராயின் அது நிலம் பொன்றுதற்கு ஏதுவாகுமாதலால் அவர் யாதும் நிலை குன்றாது தலைமையோடு நின்று திகழ வேண்டும் என்பது குறிப்பு.

''அடினும் ஆவின்பால் தன்சுவை குன்றாது;
சுடினும் செம்பொன் தன்னொளி கெடாது;
அரைக்கினும் சந்தனம் தன் மணம் அறாது;
புகைக்கினும் காரகில் பொல்லாங்கு கமழாது;
கலக்கினும் தண்கடல் சேறாகாது;'' (நறுந்தொகை)

என்றபடி என்ன துன்பம் எய்தினும் சான்றோர் தம் தன்மை குன்றார் என்க.

சான்றோர் யாண்டும் தம் சால்பு குன்றலாகாது: குன்று வாராயின் அது, உலகம் நிலைகுலைந்தது போன்றதோர் பெருங் கேடாய்ப்பிறர்க்கு அல்லலையும், தமக்கு எள்ளலையும் ஒருங்கே விளைக்கும் என்பதாம்.

''முத்தினும் மணியினும் பொன்னினும் அத்துணை
நேர்வருங் குரைய கலங்கெடின், புணரும்;
சால்பும் வியப்பும் இயல்பும் குன்றின்
மாசறக்கழீஇ வயங்குபுகழ் நிறுத்தல்
ஆசறுகாட்சி ஐயர்க்கும் அந்நிலை
எளிய வென்னார் தொன்மருங்கறிஞர்,, (குறிஞ்சிப்பாட்டு)

தம் சால்பு குன்றுவாராயின் எத்தகையோராயினும் அவர் புகழ் பொன்றியிழிவர் என இஃது உணர்த்தி நிற்றல் காண்க. அணிகலங் கெடினும் இகழ்வுறாதபடி ஒருவாறு மீள இசை வெய்திநிற்கும்; குணநலமுடைய சான்றோர் கெடின் பின்பு

அவர் புகழோடு தோன்றி எழார் என உவமையோடு வைத்து இது, உணர்த்தி நிற்கும் அழகை ஊன்றியுணர்க. யாண்டும் தம் நீர்மை குன்றாமல் நெறியமைந்து சான்றோர் நிலைத்து நிற்க வேண்டும் என்பது கருத்து.

எல்லா நல்ல குணங்களும் இயல்பாக அமைந்து பிறர்க்கு இதஞ் செய்தலே தமக்குக் கடமையாகக்கருதி எவர் இனித மர்ந்துள்ளாரோ அவரே சான்றோராவர். குணநலமே அவர்க்கு உயிர்நலமாகும். அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை தூய்மை முதலிய இனியநலங்கள் வாய்ந்து, யாதும் கொல்லாது, பிறர் தீமை சொல்லாது, என்றும் பணிவுடையராய் யாண்டும் அமைதியாளராய் அவர் அடங்கிநிற்பர். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்வர்; எவ்வகையினும் இளிவு படார்; ஊழி திரியினும் தம் உள்ளந் திரியார்; என்றும் நிலைதாழாது உலகம்போல் அவர் நின்று திகழ்வர்; எனச்சால்புடையாரின் நிலைகளை விளக்கிச் சான்றாண்மையை இங்ஙனம் உணர்த்தியருளினர்.

சான்றோர் என்றும் நெறிதவறாமல் எவர்க்கும் இனியராய் நிலைத்து நிற்பர் என்பதுஇதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அங்கிரர்பால் உணரப்படும்.

கதை.

அங்கிரர் என்பவர் பிரமாவினுடைய மானசபுத்திரருள் ஒருவர். அருந்தவர்களுள் இவர் மிகச்சிறந்தவர். அருள் பொறை வாய்மை தூய்மைமுதலிய குணநலங்களெல்லாம் ஒருங்கே யமைந்த பெருந்தகைமையாளர். இவருடைய அருமை மனைவி பெயர் ஸ்மிருதி சிவை. அப் பதிவிரதையோடமர்ந்து முதலில் இல்லற நெறியிலிருந்து நல்லறங்கள் பலபுரிந்து பிருகற்பானன், பிரகச்சோதி, பிருகன்மதி, பிருகன்முகன் என்னும் புதல்வர்களையும், அநுமதி, இராகை, குகு, சினிவாலி, மகாமதி என்னும் புதல்விகளையும் பெற்று மனுகுலந்தொழ இவர் மாண்புற்றிருந்தார். பின்னர் தனிநிலையில் நின்று உயர்தவம் புரிந்து முனிகுலந்தொழ முதன்மையெய்தி இனிய நீர்மையோடு இசை பெற்று நின்றார். இங்ஙனம் எங்கும் இசைபரப்பிப் புனிதநிலை

யில் இனிதமர்ந்திருந்து எவ்வுயிர்க்கும் இவர் இதஞ்செய்து வந்தார். அதனால் புண்ணிய வுருவினரென எவரும் இவரையெண்ணி யிறைஞ்சினர். உயிர்க்கு நிலைக்களமாகிய உடலை எழுவகைத் தாதுக்களால் இயைந்து நிற்றல் போல் இவ்வுலகம் இருடிகள் எழுவரால் அமைந்துள்ளதென அமரர்கோன் அவையில் ஒருமுறை முனிவர் பலர் முடிவு செய்தனர். அவ்வமயம் அவ் எழுவருள் இவரும் ஒருவரா எண்ண நின்றனர். அங்ஙனம் எண்ண நின்றவரது பெயரையும் முறையையும் பின்னர் வந்தவரெவரும் நெறியே பேணி வந்தனர்.

"அகத்தியன் புலத்தியன் அங்கிரா கௌதமன்
வசிட்டன் காசிபன் மார்க் கண்டேயனென்
றிசைந்த இவர்தாம் ஏழிருடிகளே" (பிங்கலந்தை)

இருடி கணங்களுள் ஒருவராய் உலகமெல்லாம் தொழுதேத்த இங்ஙனம் இவர் நிலவிநின்றார். தவத்திலும் உருவத்திலும் சிறந்து தம் பெயர்நிலைக்கேற்பப் பேரழகோடு விளங்கி நின்ற இவரைப் பகுரதன் என்னும் அரக்கர்வேந்தன் ஒருமுறை வனத்திற்கண்டான். அவன் திருவிலும் வலியிலும் மிகச் சிறந்தவன். இவர் அருகில் வந்துநின்று நீர் யார்? என்று வினவினான். அதற்கு மாறொன்றுங் கூறாமல் மௌனநிலையில் இவர் மன்னியிருந்தார். பின்னரும் பன்னி யார் நீர்? பேரென்ன? கூறும் என்றான். இவர் அதற்கு விடையாக "உன்னைப்பார்" என்றார். உன்னை அறிந்துகொண்டால் பின்னர் என்னை அறியவேண்டாம்; எல்லாம் அறிவாய்; என்று தத்துவக் குறிப்பில் இவர் சாற்றி நின்ற வித்தகவுரையின் மெய்ம்மையை யுணராமல் வெகுண்டு வைதான். இவர் புன்னகைசெய்து அவனைப் புரிந்துநோக்கி அமைதியோடு பொருந்தியிருந்தார். தன்னை யிகழ்ந்து சிரித்தார் என்று மேலுங் கனன்று தன் கையிலிருந்த வில்லை வளைத்துக் கடுங்கணைகள் பல அவன் கடுத்து விடுத்தான். அவை யாவும் யாதொரு ஊறும் படுத்தாமல் பாரில் மாறிவிழுந்து மறைந்து போயின. போகவே தன் உடைவாளை யுருவி விரைந்தெழுந்து இவரை வெட்டவந்தான். அங்ஙனம் பாய்ந்துவருங்கால் பூமி பவர் என்று வெடித்தது. அப்பேரொலியைக் கேட்டு அவன் பயந்து நடுங்கினான்; உடனே அப்பிளப்பில் அமிழ்ந்தி இறப்பில்

ஆழ்ந்தான். அதனைக்கண்ட இவர் ஐயகோ! என்று இரங்கி யெழுந்து விரைந்து வந்தார். அதன்முன் மண்ணில் அவன் மறைந்துபோனான். இவர் மறுகிநின்றார்; அவனை அருள்செய்து வெளியே விடும்படி நிலமகளைத் தொழுதுவேண்டினார். இவரது பேரருளை வியந்து அப்புண்ணியவதி அவனைப் புறத்தே தள்ளினாள். இவர் பேரந்து தழுவினார். உடனே அவன் மெய்யுணர்வுடையனாய் இவரடியில் விழுந்து ஐயனே என்று அலறி அழுதான். அவனை ஆற்றி விடுத்துப் பழைமைபோல அருந்தவநிலையில் இவர் அமர்ந்திருந்தார். "அகழ்வாரைத்தாங்கும் நிலம்போலத் தம்மை இகழ்வார்ப்பொறுத்தல் தலை" என்னும் அருநிலையுடையாரெவரினும் மேனிலையாளராய் நிலைத்துநின்ற இவரது பொறுமையின் பெருமையை வியந்து வானிலையாளரும் வழுத்தியேத்தினார். நிலைதிரியாமல் நிறைகுணத்தராய் இவர் நின்றிருத்தலினாலேதான் நிலமகள் இனியளாய் நிலைத்திருக்கின்றாள் என எங்கும் பொதுவாக வுரையெழ இவர் உயர்வுற்றிருந்தார். சான்றவர் சான்றாண்மை குன்றின் இருநிலம் பொறை தாங்காது என்னும் உண்மையை யாரும் காண இவர் உணர்த்திநின்றார்.

> வான்மாறி வீழ்ந்தாலும் மண்ணிடிந்து தாழ்ந்தாலும்
> கான்மாறார் சான்றோர் கலுழ்ந்து.

நீர்மை குன்றாமையே சான்றோர்க்குச் சீர்மையாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

நல்லகுணங்களெல்லாம் இயல்பாக ஒருங்கே அமைந்திருப்போரே சான்றோராவர். குணநலமே அவர்க்கு உயிர்நிலை. அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை முதலிய இன்குணங்களால் நிறைந்து என்றும் அவர் நின்று விளங்குவர். பிறர் பிழை பேசார். யாண்டும் பணிவோடமைந்து நிற்பர். தம்மினும் தாழ்ந்தாரிடத்தும் அவர் தாழ்ந்துகொள்வர். தமக்குத் துன்பஞ்செய்தாரக்கும் இன்பமேசெய்வர். வறுமையுறினும் அவர் பெருமைபெறுவர். ஊழிபெயரினும் அவர் உள்ளம் பெயரார். நிலைமைகுன்றாமல் என்றும் தலைமையோடு அவர் நின்று திகழ்வார்.

கூகூ-வது சான்றாண்மை முற்றிற்று.

---

# 100-ம் அதிகாரம் பண்புடைமை

அஃதாவது நல்லியல்புடையராய் நயந்தெரிந்தொழுகல். தாம் நெறிவழுவாமல் நின்று பிறர்நிலை தெரிந்தொழுகும்இவ்வுயர் குணம், பெருமை சான்றாண்மை களை யுடையார்க்கே இனிதமை யுமாதலால் அவற்றின் பின் இது வைக்கப்பட்டது.

991. திண்டோள் நரசிங்கர் தேர்ந்தெண் பதமென்றும்
கொண்டுநின்றார் என்னே குமரேசா—நண்டுவக்கும்
எண்பதத்தால் எய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை என்னும் வழக்கு. (க)

இ—ள்.

குமரேசா! நரசிங்கமுனையரையர் யாண்டும் எளிய செவ்வியராய் ஏன் இனி தமர்ந்திருந்தார்? எனின், யார்மாட்டும் பண்புடைமை என்னும் வழக்கு எண்பதத்தால் எய்தல் எளிது என்ப என்க.

இது, பண்புடைமை எண்பதத்தாலெய்தும் என்கின்றது.

தேர்ந்து எண்பதம் என்றும் கொண்டுநின்றார் என்றது சிறந்த அறிவுடையராய்த் திகழ்ந்து யாரோடும் எளிய செவ்வியராய் அமர்நது யாண்டுமஇனியனபுரிந்து அவர் இருந்தமை கருதி.

எண்பதம் = எளியசெவ்வி. அஃதாவது காட்சிக்கு எளியனாய் நின்று யாவரோடும் இன்னுரை யாடி இனிது அளவளாவி நிற்கும் தன்மை. தன்னை அரியனாக்கிக் கொள்ளாமல் யாவரும் எளிதிற்காணும்படி இனியனா யென்றும் இசைந்திருத் தலால் இது, எண்பதம் என நின்றது.

பதம் = செவ்வி, பக்குவம், சமயம். "செவ்வியரும்பின் பைங்காற்பித்திகத்து, அவ் இதழ் அவிழ் பதம் கமழ" (நெடுநல் வாடை) "அவற்பதம் கொண்டன அம்பொதித்தோரை" (மலை படுகடாம்) "நீங்கும் பதத்தால் உருமுப் பெயர்த்தநது" (பரிபாடல்) "கடுநதிண்டேர் வரு பதம் கண்டு" (கலித்தொகை) "கதங்கொள் சீற்றத்தை யாற்றுவான் இனியனகழறிப் பதங்கொள்பாகனும் மந்திரியொத்தனன்" (இராமாயணம்) இவற்றுள் இஃதுணர்த்திநிற்றல் காண்க. எய்தல் = அடைதல்.

பண்பு = சிறந்தகுணம்; அஃதாவது உலகநிலையை ஓர்ந்தொழுகுந் தன்மை. "பண்பெனப்படுவது பாடறிந் தொழுகல்" (கலித்தொகை) என்பதும் ஈண்டுணரத்தக்கது.

பண்புடைமையை வழக்குஎன்றது மக்கட்குஉரிமையாக வழிமுறையே தழுவப்பட்டு வரும இயல்புகருதி. வழக்கு = உலகியலால் அமைந்த வுறுதிநிலை. அஃதாவது மனிதனாய்ப் பிறந்தவன் இன்னவகையி லமைந்து நின்று தனக்கும் பிறர்க்கும் இனியனாய் ஒழுகவேண்டும் என முன்னோர் காலந்தொடங்கி முடிந்த நெறி என்க. வரம்புகொண்டு வழங்கப்படுதலால் வழக்கு எனநின்றது. "மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனும்—இத்திறம் தத்தம் இயல்பினிற்காட்டும" (மணிமேகலை) "அருமறை விதியும் உலகியல் வழக்கும்—கருத்துறை பொருளும் விதிப்பட நினைந்து" (கல்லாடம்) இவற்றுள் வழக்கு வழங்கிநிற்கும் பொருளை யுணர்க

யாவர்மாட்டும் எளிய செவ்வியராய் ஒழுகுதலால் பண்புடைமை என்று சொல்லப்படுகின்ற அரிதாய பொருள் எளிதாக எய்தும் என்பதாம.

ஒருவன், எவரோடும் இனிய முகத்தனாய் இன்னுரையாடி எளிதாகக் கலந்து அளவளாவி வருவனாயின் அவன் உலகியலறிவும் உயர்குண வியல்பும் நலமுறவடைந்து எல்லாராலும் உவந்து போற்றப்படுவன்என்பார் "பண்புடைமை எண்பதத்தால்எய்தல் எளிது" என்றார்.

அருஞ்செவ்வியும் கடுமுகமுமுடையனாய் ஒருவன் இருப்பனாயின் அவனைப்பெருமைபேப் என்றுகருதி ஒருவரும நெருங்கார்; ஆகவே தான் கண்டதையே பெரிதாக் கொண்டு நின்று அவனேபோல உலகநிலைதெரியாமல் ஒழிந்துபோவனாதலால் அங்ஙனம் போகாதபடி என்பதமுடையனாய் இசைந்து நின்று பண்படையவேண்டும என இங்ஙனம் உணர்த்தியருளினார்.

எளிதாக எவரோடும் இனிதுறவாடுவானை உயர்வாகமதித்து எல்லாரும உவந்து துதிப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நாசிகேதனையுரையர்பால் உணரப்படும்.

## கதை.

நரசிங்கமுனையரையர் என்பவர் திருமுனைப்பாடி நாட்டிலே யிருந்த குறுநிலமன்னர். இவர் கல்வி கேள்விகளில் மிகச்சிறந்தவர். நல்ல சீலமும் நயத்தகு பான்மையும் வெல்லுமேன்மையும் மேவிநின்றவர். யாவர்வரினும் இல்லையென்னுமல் இனிதுதவும் வள்ளன்மை வாய்ந்தவர். இவர் முன்னோரெல்லாரும் வழி வழியாகச் சிறந்துநின்று முறைபுரிந்து வந்துள்ளார். அவரெவரினும் ஒழுக்கநெறியில் இவர் உயர்ந்து விளங்கினர். பூதி யணிந்து சிவ வழிபாடு செய்து நாளும் குடிகளை இவர் நன்கு பேணி வந்தார். திருவாதிரைதோறும் சிவனடியார்களுக்குப் பெருவிருந்து செய்து நூறு நூறு பொன் ஒவ்வொருவர்க்குந் தனித்தனி வாரிக்கொடுத்து இனித்த முகத்துடன் இசைத்துவிடுத்து இடைவிடாது இவர் இசைபுரிந்து நின்றார். உள்ளே ஒரு நீர்மையுமிலராயினும் புறத்தே திருநீறு புனைந்தவரைக் கண்டால் சிந்தை மகிழ்ந்து செம்பொன் தந்து இவர்சீர்செய்து வருதலைத் தெரிந்து சாரன் என்னும் வஞ்சனொருவன் ஒருநாள் உடம்புமுழுதும் பூதி யணிந்து மிக நீதிமான்போல் அப்பந்தியுட்புகுந்து உணவருந்தி உறுபொருள்பெற ஊக்கி முந்தினன். அவன் நிலையினைக்கண்டு “கள்ளன் இவன்” என அருகில்நின்றவர் இவ் வள்ளலிடம் வந்து வணங்கியுரைத்தார். இவர் உள்ளமுவந்து உடனே அவனை அருகழைத்துவைத்து இருநூறு பொன்கொடுத்து “இனி நாளும் நீறுபுனைந்து நீர் நன்றாற்றிவரவேண்டும்” என்று நயமொழிகள் பல கூறி நயந்து விடுத்தார். அன்று விடுத்தபடியையும், கொடுத்த நிலையையும் அடுத்துவரும்பாடலால் இனிதறியலாகும்.

“சோடாத நெறிவிளக்குங் குலமரபி னரசளித்து
மாடாக மணிகண்டர் திருநீறே மனங்கொள்வார்
தேடாத பெருவளத்திற் சிறந்ததிரு முனைப்பாடி
நாடாளுங் காவலனார் நரசிங்க முனையரையர். (க)

ஆரணிந்த சடைமுடியார்க் காதிரைநாள் தொறுமென்றும்
வேறுநிறை வழிபாடு விளங்கிப் பூசனைமேவி
நீரணியுந் தொண்டரணைந்தார்க் கெல்லா நிகழ்பசும்பொன்
நூறுகுறையாமலளித் தின்னமுது அகர்விப்பார். (உ)

ஆனசெயன் முறைபுரிவார் ஒருதிருவா திரைநாளில்
மேன்மைநெறித் தொண்டர்க்கு விளங்கியபொன் னிடும்பொழுதின்

மானநிலை யழிதன்மை வருங்காமக் குறிமலர்ந்த
ஊனநிகழ் மேனியராம் ஒருவர் நீறணிந்தணைந்தார்.

மற்றவர்தம் வடிவிருந்த படிகண்டு மருங்குள்ளார்
உற்றவிகழ்ச்சியராக ஒதுங்குவார் தமைக்கண்டு
கொற்றவனார் எதிர்சென்று கைவிகுத்துக் கொடுபோந்தப்
பெற்றியினார் தமைமிகவுங் கொண்டாடிப் பேணுவார். (௪)

சீலமிலரேயெனினும் திருநீறு சேர்ந்தாரை
ஞாலமிகழ்ந் தருநரகம் நண்ணாமல் எண்ணுவார்
பாலணைந்தார் தமக்களித்த படியிரட்டிப் பொன்கொடுத்து
மேலவரைத் தொழுதினிய மொழிவிளம்பி விடைகொடுத்தார். (௫)
(பெரியபுராணம்.)

இதனால் இவரது பெருந்தன்மையும், உயிர்கள்மாட்டு அருள் புரிந்து எண்பதமுடையராய் நின்று இனிதொழுகிவந்த பண்பும், நன்கறியலாகும். இங்ஙனம், யாரிடத்தும் நெருங்கியுறவாடி அவர்க்கு ஆவனசெய்து இவர் அருள்புரிந்து வந்தார். இவரது குணநலங்களையறிந்து மறுபுலத்தவரும் புகழ்ந்தார். அரிய திருவோடு பெரியபதவியை யடைந்திருந்தும் யாண்டும் எளியசெவ்வியராய் நின்று இதஞ்செய்து வந்தாராதலால் உலகமெங்கணும் இவர் புகழ் பரவிநின்றது. இவரது பண்புடைமையை வியந்து அருந்தவரும இவர்பால் நண்புகூர்ந்திருந்தார். பண்புடைமை என்னும வழக்கு எண்பதத்தால் எளிதாக எய்தும் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

பண்புடைமை வேண்டின் பணிவோ டெளிதமைந்து
நண்புடைய ராக நயந்து.

பண்புடைமையை யடைதற்குரியவழி இதனால் கூறப்பட்டது.

---

992\. அன்று வழுதியேன் அன்புடைய னாயென்றுங்
குன்றாமல் நின்றான் குமரேசா—நன்றான
அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் இவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு. (௨)

இ—ள்.

குமரேசா! யாண்டும அன்புடையனா யமைந்து நின்ற பெருவழுதி ஏன் என்றும் பண்புடையனாய் விளங்கியிருந்தான்?

எனின், அன்புடைமை ஆன்றகுடிப்பிறத்தல்இவ் இரண்டும் பண்புடைமை என்னும் வழக்கு என்க.

இது, பண்புடைமைக்குரிய அமைதி கூறுகின்றது.

ஆன்றகுடி = பெருந்தன்மை நிறைந்தகுடி. செருக்கு முதலிய சிறுமைகளில்லாத சிறந்தகுடியில் பிறந்தார்கு உயர்ந்தகுணங்கள் இயல்பாக அமைந்திருக்குமாதலால் இவ்வுடைமைக்கு அப்பிறப்பு உரிமையாக வுள்ளநின்றது.

இரண்டும் வழக்கு என்றதனால் இவற்றுள் ஒன்று குறைந்தாலும் அவ்வழக்கு நன்கு வாய்க்காதென்பதாயிற்று. உம்மை முற்றுப்பொருளது.

நிறைந்த அன்பும், உயர்ந்தகுடிப்பிறப்பு முடையவரே சிறந்தகுணமுடையராய் விளங்கி நிற்பர் என்பார் "இவ்விரண்டும் பண்புடைமை என்னும் வழக்கு" என்றார்.

ஆகும் என்னாது என்னும் என்றது முன்னமே எல்லாராலும் இங்ஙனம் எண்ணப்பட்டுள்ளதென்பது தோன்ற.

மேல், எளிய செவ்வியராய் யாரோடும் இனிது அளவளாவி இசைந்திருப்பராயின் அவர் பண்புடையராய் உயர்ந்து நிற்பர் என்றார்; இதில், அதற்கு அன்பும் குடிப்பிறப்பும் அமைந்திருக்க வேண்டுமென்கின்றார்.

அன்புடைமையும் சிறந்த குடிப்பிறப்பும் ஆகிய இவ் இரண்டும் பண்புடைமை என்று சொல்லப்படுகின்ற இன்பநெறியாம் என்பதாம்.

பண்புடையனாதற்கு அன்புவேண்டும் என்றது என்னை? எனின், ஒருவனிடம் அன்பு இல்லையாயின் அவன் யாதும் இரங்காமல் வன்கண்ணனாயிருப்பான; இருக்கவே எளியசெவ்வியனாய் நின்று எவரோடும் இனிதுறவாடும் இயல்பு அவனுக்கு இல்லையாம்; ஆகவே எண்பதத்தால் எய்தற்குரிய பண்புடைமையை அவன் எய்தப்பெறுனு யிழிந்து நிற்பனாதலால் அவ்வுடைமையை அடைதற்கு அன்புடைமை உறுதியாகவேண்டும என்க. இதனை முன்புவைத்தது "அன்புடையார் என்பும் உரியர் பிறர்க்கு" என்றபடி உலகநன்மையில் அது நிலவிநிற்கும் தலைமைகருதி என்க.

இரங்கிய நூல் இன் னுரையாடல் அறம்புரிசெம்மை புறங்

கூருமை முதலிய பெருந்தன்மைகள் யாவும் நல்ல குடிப்பிறந்தார்க்கே நன்கு அமையுமாதலால் பண்புடைமைக்கு ஊன்றுகோலாக ஆன்ற குடிப்பிறத்தலை ஈண்டு அமையவைத்தார்.

உள்ளத்தில் அன்பும், புறத்தில் நல்லகுடிப்பிறப்பும் இல்லாதவர் பண்புடையராய் நில்லார் என்றபடி. இதனால் பண்புடைமையின் பெருமையும் அருமையும் அறியலாகும்.

ஒருவன் பண்புடையனாகவேண்டுமாயின் எல்லாரிடத்தும் அவன் அன்புடையனாயமைந்தொழுகவேண்டும் என்பது கருத்து.

அன்பும் குடிப்பிறப்புமுடையவர் சிறந்த பண்புடையராய் உயர்ந்து விளங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இளம்பெருவழுதிபால் உணரப்படும்.

கதை.

இளம்பெருவழுதி என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர் மதுரையிலிருந்தவன். பாண்டிய மன்னர் மரபிற் பிறந்தவன். ஈண்டிய செல்வமும் வேண்டிய கல்வியுமேவியிருப்ப யாண்டும் ஆண்டகைமையோடு இவன் அமர்ந்திருந்தான். இவன் சிறந்த அழகன். இளம்பருவத்திலேயே பேரறிவாளனாய் விளங்கியிருந்தானாதலால் "இளம்பெருவழுதி" என எல்லாரும் இவனை வழங்கினின்றார். யாவர்மாட்டும் அன்பும் பணிவுமுடையனாய் இவன் இன்புசெய்துவந்தான். பிறவுயிர்கள் சிறிது வருந்தினும் இவன் பெரிதும் இரங்கி அவற்றைப் பேணி நின்றான். மறுமைநோக்கோடு நின்று மக்கள் உணர்ந்துய்யவேண்டிய அரிய நீதிகளை அமயம் வாய்த்தபோதெல்லாம் தெளிவுறவுரைசெய்துவந்தான். சோலைமலையிலெழுந்தருளியுள்ள திருமாலை உளமுருகி நினைந்து பலபடியாகப் புகழ்ந்து பாடி அப்பெருமானை வழிபட்டு உய்யும்படி உலகத்தாரை உவந்து நோக்கி இவன் உணர்த்தியுள்ளான். அங்ஙனம் உணர்த்துங்கால் நினைப்பிற்கொள்ளும் வண்ணம் இவன்பாடியுள்ள கவிகள்பல. அவற்றுள் ஒன்று பரிபாடலில் சேர்ந்துள்ளது. அதில் ஒருபகுதியை இதனடியில் தருதும். பொருளை ஆய்ந்துகாண்க.

"அலங்கு மருவி ஆர்த்திமிழ் பிழியச்
சிலம்பா றணிந்த சீர்கெழு திருவிற்

சோலையொடு தொடர்மொழி மாலிருங் குன்றம்
தாம்வீழ் காமம் வித்துபு விளைக்கும்
நாமத் தன்மை நன்கனம் படியெழ
யாமத் தன்மையில் வையிருங் குன்றத்து
மன்புனை விளவெயில் வளாவலிருள் வளர்வெனப்
பொன்புனை யுடுக்கையோன் புணர்ந்தமர் நிலையே
நினைமின் மாந்தீர்! கேண்மின் கமழ்சீர்!
தைய லவரொடும், தந்தா ரவரொடும்,
கைம்மக வோடும், காதலவ ரொடும்,
தெய்வம் பேணித் திசைதொழுதனிர் சென்மின்!
புவ்வத் தாமரை புரையுங் கண்ணன்
வெளவற் காரிருள் மயங்குமணி மேனியன்
எவ்வயி னுலகத்துந் தோன்றி யவ்வயின்
மன்பது மறுக்கத் துன்பங் களைவோன்
அன்பது மேஎ யிருங்குன் றத்தான்'' (பரிபாடல்)

இதனால் இவனது அறிவும் அன்பும் உயிர்களுக் குதவி நின்ற உறுதிநிலையும் உணரலாகும். பிறர்க்கு இதஞ் செய்தலே தனக்கு இயல்பாக்கொண்டு நாளும் நலம்புரிந்து வந்தானாதலால் இவன் புகழ் உலகமெங்கும் பரவி நிலவி நின்றது. இவனது பெருந்தன்மையை வியந்து அருந்தவரனைவரும் புகழ்ந்திருந்தார். சினமாசொழித்து, மனமாசு தீர்த்து, அறச்செவி திறந்து, மறச்செவியடைத்து, ஆருயிரோம்பிச் சீர்புரிந்து நின்ற இவனை நல்லிசைப்புலவர் பலர் நயந்துசூழ்ந்து மகிழ்ந்திருந்தார். யாவரோடும் என்பதமுடையனுய் இவன் பண்பமைந்து வருங்கால் ஒருநாள் பலர் குழுமிய அவையில் இவ்வுலகம் இனிது நிலைபெறுதற்கு உறுதியாவார் யார்? என வினவிநின்றான். அங்கிருந்த புலவரெல்லாரும் தத்தமக்குத் தோன்றியவாறே வேறு வேறு கூற இவன் முடிவில் ஒரு கவி கூறினான். அதன் பொருளருமையை நோக்கி அவரனைவரும் பெருமகிழ்ச்சி யடைந்தார். அக்காலத்திருந்தவர் பலரும் அப்பாடலை யுளத்திற் பதித்துக்கொண்டு நாளும் உணர்ந்து மகிழ்ந்தார். உயர்ந்து திகழ்ந்தார். அதனை அடியில் காண்க.

''உண்டா லம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமிய ருண்டலும் இலரே; முனிவிலர்;

துஞ்சலுமிலர் பிறர் அஞ்சுவ தஞ்சிப்;
புகழெனின் உயிருங் கொடுக்குவர்; பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்; அயர்விலர்;
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே'' (புறநானூறு)

முயலுநர் உண்மையானே இவ்வுலகம் உண்டெனக் கொண்டு காண்க. பண்புடையார்ப் பட்டுண் டுலகம் என அடிகள் சுட்டியபடியை இஃது ஒட்டிநிற்றலறிக. அமிர்தம் கிடைத்தாலும் அதனைத் தனித்து உண்ணார்; பகுத்தே உண்பர்; அல்லல்கட்கு அஞ்சார்; சோம்பியிரார்; மறதியுறார்; கவலைகொள்ளார்; புகழையேபேணுவார்; பழிக்கு நாணுவார்; பண்பமைந் தொழுகுவார் என்னும் இத்தகைய விழுமியோராலேதான் இவ்வுலகம் அழகிதாக அமைந்துள்ளது; என இதில் இவன் உணர்த்தியிருக்கும் அருமையை ஊன்றி யுணர்க. இவனது தலைமையும் நிலைமையும் புலமையும் இதனால் இனிது புலனும். பிறர் இன்புறும்படி அன்புசெய்து வந்தமையால் பண்புடையான் எனப் பலரும் இவனைப் பாராட்டி வந்தார். இவன் குணச்சிறப்பையும், குடிப்பிறப்பையும் மறுபுலத்தவரும் மதித்துத் துதித்தார். அன்புடைமையும் ஆன்ற குடிப்பிறப்பும் பண்புடைமைக்கு உறுப்பாம் என்பதை உலகம் இவன்பா லுணர்ந்து நின்றது.

அன்பும் தகவும் அமைதியிலார் பண்பமைந்
தின்பராய் நிற்றல் இலர்.

அன்பும் குடிப்பிறப்பும் பண்புடைமைக்கேதுவாம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

993. உற்றமுல்லான் போல வுறுப்பொக்கும் சிங்கனேன்
குற்றமுற்று நின்றான் குமரேசா—பெற்ற
உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதாம் ஒப்பு. (௩)

இ—ள்.

குமரேசா! முல்லான்போல் உருவத்தில் ஒத்திருந்தும் சிங்கன் ஏன் குணமின்றி யிழிந்திருந்தான்? எனின், உறுப்பு

ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று; வெறுத்தக்க பண்பு ஒத்தல் ஒப்ப தாம் ஒப்பு என்க.

இது, பண்புடையோரே மக்களாவர் என்கின்றது.

உறுப்பு = அங்கம். கை கால் முதலிய அவயவங்கள் என்க.

பண்போடு உறுப்பினை இணைத்து இங்ஙனம் உடன்புணர்த்தி வைத்தது அகத்தும் புறத்தும் முறையே அவை அமைந்து நிற்கும் உறவு நோக்கி என்க.

ஒப்பது ஆம் ஒப்பு = பொருந்துவதாய பொருத்தம். அஃதாவது உண்மையாக ஒத்திருக்குந் தன்மை.

வெறுத்தக்க = மிக விரும்பத்தக்க. வெறுத்தல் என்பது வெறு என நின்று இங்ஙனம் புணர்ந்தது. வியத்தக்க, நயத்தகக என்பனபோல இதனை விரித்துக்கொள்க. வெறுத்தல் என்னும் சொல் விருப்பிற்கு எதிராய் நின்று வெறுப்பினை யன்றே உணர்த்திவரும்; ஈண்டு மிகுதி என்றது என்னை? எனின், அங்ஙனம் பெருவழக்காக வரினும் மிகுதி, செறிவு என்னும் பொருள்களில் அஃது அருகி வழங்கும் என்க. "செறுத்தசெய்யுட் செய்செந்நாவின்—வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன்" (புறநானூறு) "வெறுத்த வேட்கைத் தாயுஞ் சிறப்ப" (பெருங்கதை) "வேயெழில் வென்று வெறுத்த தோள்நோக்கி" (பரிபாடல்) இவற்றுள் இஃதுணர்த்திநிற்கும் பொருளை யுணர்க.

மேல், அன்புடையார்க்கே பண்பமையும் என்றார்; இதில், அத்தகைய பண்பினை ஒருவனெய்தவில்லையானல் அவன் பிறப்புப் பயன் இல்லை என்கின்றார்.

உறுப்புக்களால் ஒத்தல் மக்கள் ஒப்பாகாது; விரும்பத்தக்க பண்பால் ஒத்தலே தகுதியான ஒப்பாம் என்பதாம்.

உறுப்பு ஒவ்வாதொழிதலினும் பண்பு ஒவ்வா தொழிதலே மக்கட்குப் பேரிழவாம் ஆதலால் அவ் இழவு தமக்கு உண்டாகாதபடி ஒவ்வொருவரும் பண்பினை ஓர்ந்துகொள்ளவேண்டும் என்றபடி. உறுப்பு, உடம்பைச் சார்ந்தது; பண்பு, உயிரைச் சார்ந்தது; அழிந்தொழிந்து போகும் இயல்பினதாய உடலுறுப்புக்கள் சிறிது குறையினும் அத்துணை இழிவாகாது; உயிருறுப்பாகிய இப்பண்புகுன்றுதலே மககட்குப்பெரும்பழியாம் என்க.

அங்கங்கள் யாவும் யாதொரு பங்கமின்றி நன்கு அமைந்து புறத்தில் மிக்க எழிலுடையனாய் ஒருவன் இசைந்திருப்பினும் அகத்தே பண்பில்லையாயின் அவன் மண்பாவைபோல் இழிக்கப் படுவானே யன்றி ஏத்தப்படான் என்பார் "உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று" என்றார்.

உருவத்தில் ஒத்திருந்தாலும் நன்மக்கட்குரிய பண்பு ஒருவன் உள்ளத்தில் இல்லையாயின் அவன் எள்ளப்படுவான் என்றவாறு.

மின்னுந் தமனியமும் வெற்றிரும்பும் ஓரினமாய்ப்
பொன்னின் பெயர்படைத்தாற் போலவே—தொன்னே
ஒளிப்பாரு மக்களாய் ஒல்லுவ தாங்கே
யளிப்பாரு மக்களா மாறு. (பெரும்பொருள்விளக்கம்)

வள்ளன்மையாகிய நல்ல பண்புடையானையும், அஃதில்லாதானையும் உறுப்பொப்புமையால் ஒருபடியாக மக்கள் என உரைத்தல் தங்கத்தையும் இரும்பையும் பொன் என்றல் போன்றதோர் புரையாமென இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

"பொய்காட்டி யுள்ளம் புரைகாட்டப் பூதலத்தில்
மெய்காட்டி ஓர்மகன்றான் மேவிநிற்றல்—கைகாட்டி
மாமரம்போ லாமவன்றன் மக்க ளுருவமைந்த
பாமரமென் றோர்க பரிந்து" என்பதும் ஈண்டறிந்துகொள்க.

பெறுதற்கரிய மக்கட்பிறப்பை பெற்றிருந்தாலும் அதற்குரிய நற்குணத்தைக் கொள்ளவில்லை யாயின் அப்பிறப்பால் பயனில்லை என்பது குறிப்பு.

மிக்க அழகுடையனாய்ப் பாரிலொருவன் பாரித்து நின்றாலும் பண்பில்லையாயின் பாடுபெறுதலால் அதனை நமக்குறுதியாக நாடிக்கொள்ளவேண்டுமென்பது கருத்து.

ஒத்த பிறப்பினை யுடையராயினும் பண்புடையாரே இவ்வுலகத்தில் உயர்ந்து விளங்குவர்; அல்லாதார் இழிந்து கழிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை முல்லான் கண்ணும், சிங்கன் பாலும் உணரப்படும்.

கதை.

முல்லான் என்பவன் சோழநாட்டிலே ஆழூர் என்னும் நகரிலிருந்தவன். இவன் இனிய சீர்மையன். ஏர்த்தொழிலால்

பெரும்பொருள் படைத்து வருந்திவந்தவர்க்கெல்லாம் உவந்து கொடுத்து மிகுந்த புகழோடு இவன் விளங்கியிருந்தான். அறங்கள் பல புரிந்தவன். பெருந்தனைமையாளன். பிறர் பிழைகளை மறந்தும பேசான். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் புல்லருங்கூட இவன் முன் வந்தபொழுது நல்லவராகி நயந்து நின்றனர். யாவர்மாட்டும் அன்பு பாராட்டி, இன்னுரையாடி, இதங்கள் புரிந்து, முன்னியபோகங்களை நுகர்ந்து நன்னயமுடையனாய், மன்னரும் விரும்ப இவன் மன்னிநின்றான். இங்ஙனம் நிற்குங்கால் இவன் ஊர்வழியே ஒருநாள் ஔவை வந்தாள். அந்த அம்மையைக் கண்டு மிகுந்த வணக்கத்தோடு பணிந்து உபசரித்தான். சிலகாலம் அங்குத் தங்கியிருக்கும்படி தாழ்ந்துவேண்டினன். அவ்வாறே அத்தவமூதாட்டி அங்குத் தங்கியிருந்தாள். இவனது குணநலங்களையும், மனமொழிமெய்கள் புனிதமெய்தியாதொரு மாறுபாடுமின்றிச் சொல்லிலும் செயலிலும்என்று நேர்மையோடு நிலவிநிற்கு நீர்மையையும் அறிந்து அப் பேரறிவாட்டி பெருமகிழ்ச்சி யடைந்தாள். பின்பு விடைபெற்றகன்றாள். அகன்றவள் அயலேயிருந்த புலியூரென்னும் நகரினையடைந்தாள். அங்கே ஒரு குறுநில மன்ன னிருந்தான். அவன் பெயர் சிங்கன். நல்லஅழகன். சிறந்தஉருவும் நிறைந்த திருவும் அமைந்திருந்தும் இழிந்த குணமுள்ளவனாய்ச் செருக்குமுதலிய சிறுமைகளில் மிகுந்திருந்தான். அழிவழக்குகளிலும் பழிவினைகளிலும் அவன் ஆர்வமெய்தி நின்றனாதலால் யாண்டும் அல்லலும் தோல்வியுமே அடைந்து வந்தான்.

> "சிங்கனெனப் பேர்கொண்டும் சென்ற விடமெல்லாம்
> பங்கமே கண்டிழிந்து பாடழிந்தான்—அங்கமிவன்
> மேவி யிருப்பதிம் மேதினிக்கோர் வெந்சுமையே
> பாவி யிவன்வாழ்வு பாழ்" எனப் பலரும் தூற்ற அவன்

பாழ்பட்டிருந்தான். அங்ஙனம் பொல்லாதவனாயிருந்தும் அந் நல்லாளைக் கண்டபோது நயமபடப் பேசினன். உவந்து பணிந்து தன் இல்லிற்கு உடனழைந்துச் சென்றான். சென்றவன் அன்றே அன்பு குன்றி வேறு வினையாளருடன் கூடிப் பழைமை போல் மாறுபட்டு நின்றான். பலரும் அவ்வாறே பல விடங்களிலும் நிலைமாறி நிற்றலை நேர்ந்து தெளிந்தாள். என்றும் நிலைமா

றாது நின்று திகழ்ந்த இம்முல்லானை நினைந்து நினைந்து மகிழ்ந்தாள். ஒருமுறை சோழமன்னன் அவையில் அரசர் பலர் கூடியிருந்தார். அங்கு ஔவை சென்றாள். அரசன் உபசரித்து அருகிருத்தி இப்பூமண்டலத்தில் இதுவரையும் நீர் கண்டறிந்தவர்களுள் நல்லவர் யார்? என அவன் மிக விநயமாக நயந்து வினவினான். அவ்வமயம் அக்கல்விச் செல்வி இவனையே சொல்லிப் புகழ்ந்தாள். அன்று அவள் கூறியபடியை அடியில் காண்க.

"காலையிலொன் றாவர் கடும்பகலில் ஒன்றாவர்
மாலையிலொன் றாவர் மனிதரெலாம்—சாலவே
முல்லானைப் போல முகமுமக மும்மலர்ந்த
நல்லானைக் கண்டறியோம் நாம்" (ஔவையார்)

இதனைக் கேட்டவுடனே அங்கிருந்தவரனைவரும் ஒருவகையில் நாணினராயினும் இவனது மாணுடைமையைத் தெரிந்து மகிழ்ந்து புகழ்ந்தார். தனக்குத் தலைவனாயிருந்த சிங்கன் என்பவன் உருவிற் சிறந்திருந்தும் உள்ளத்தில் நல்லகுண மில்லாமையால் இழிந்துநிற்பத் தன்பண்புடைமையால் இவன் உயர்ந்துநின்றான். 'உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பன்று; பண்பு ஒத்திருப்போரே நன்மக்களாவர்' என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

பண்பமையான் ஓர்மகன்போல் பாரில் திரிந்தாலும்
மண்பாவை யற்றே மதி.

பண்பில்லையானல் மக்கட் பிறப்பால் பயனில்லை என்பது இதனால் கூறப்பட்டது.

— —※——

994. மண்டுபுகழ்ச் செங்கண்ணன் மாண்பினையேன் எல்லாரும்
கொண்டாடி நின்றார் குமரேசா—கொண்ட
நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு. (ச)

இ—ள்.

குமரேசா! கோச்செங்கண்ணனுடைய குண நலங்களை எல்லாரும் ஏன் புகழ்ந்து கொண்டாடினார்? எனின், நயன் ஒடு நன்றிபுரிந்த பயனுடையார் பண்பு உலகு பாராட்டும் என்க.

இது, பண்புடையாரை உலகம் போற்றும் என்கின்றது.

உலகு பாராட்டும் = உலகத்தார் உவந்து கொண்டாடுவார். உலகு ஆகுபெயர். பாராட்டுதலாவது ஒன்றின் நயங்கண்டபொழுது அதனை வியந்து கொண்டாடல். "குலாவல் பாராட்டுக் கொண்டாடுதலே" என்றது பிங்கலந்தை. "தையெனக் கோவலர் தனிக்குழல் இசைகேட்டுப்—பையென்ற நெஞ்சத்தேம் பக்கம் பாராட்டு வாய்" (கலித்தொகை). நயன் = நீதி, இதம். நன்றி என்றது அறவினைகளை.

நயன் இன்றி நன்றிபுரியின் அஃது அவ்வளவாக நன்கு மதிக்கப்படாதாதலால் "நயனொடு" என அதனை முதன்மைதோன்றவைத்தார். நன்று புரிவோர் முன்னதாகத் தாம் நயனுடையராயிருத்தல் வேண்டும்; இன்றேல் அவர் பயனுடைய ராகார் என்க. கடைத்தேங்காயைக் களவாக எடுத்து வழிப்பிள்ளையார்க்கு அழகாக உடைத்தான் என்றபடி தாம் நெறியில்லாமலே சிலர் அறவினைகள் புரிவர்; அச்செயலால் அவர்க்குப் பயனில்லையாதலால் பயனடையவேண்டின் முதலில் தாம் நயனுடைய ராக வேண்டு மென்றவாறு.

மேல், சிறந்த மக்கட்பிறப்பை யடைந்திருந்தாலும் பண்பில்லாதவர்பாடுபெறுர் என்றார்; இதில், அதனை யுடையவரை உலகம்போற்றும் என்கின்றார்.

நீதியுடையராய் நின்று அறநலங்களைச்செய்த பயனுடையாரது குணநலத்தினை உலகத்தார் உவந்துபோற்றுவர் என்பதாம்.

தான் நெறியுடையனாய் நின்று ஒருவன் அறம் புரிவனாயின் அவன் பிறந்த பயனை யடைந்த பெரியோன் எனச் சிறந்து விளங்குவன்; பிறவுயிர்களும் அவனால் பெருமகிழ்வடையும்; இங்ஙனம் தனக்கும் பிறர்க்கும் பயன்பாடுடைய அவனது குணநலங்களை எவரும் வியந்துபோற்றுவராதலால் "பயனுடையார் பண்பு உலகுபாராட்டும்" என்றார்.

அன்பு இரக்கமுதலிய இனிய குணங்களோடமைந்தொழுகி இதம்புரிவராயின் அவரை உலகம் உவந்து போற்றும் என விளக்கி அப்பண்புடைமையை யடைந்துகொள்வதில் மக்கட்கு மிகுந்த எழுச்சி தோன்றும்படி இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

"ஆன்றகுடிஅன் பெண்பதநல் லறநீதிகளில் வழுவாமை
சான்றமக்கட் பண்பாகும்; தன்னையுடையார் நகையானு
மான்றுயிகழார்; பகையிடத்து மதியாரவர்த நற்குணமே
என்றுலகம் பாராட்டும்; எல்லாப் பயனும் அவர்மாட்டாம்"
என்பதுங் காண்க.

உயர்குணமுடையரா யினிதமைந் தொழுகி அறவினை புரிந்து அரியபண்பாளராய் மனிதர் உயர்ந்து திகழவேண்டுமென்பது இதன் திரண்ட பொருளாம்.

நெறியோடு நின்று ஒருவன் நலம்புரிவனாயின் அவனை எல்லாரும் உவந்து போற்றுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை செங்கண்ணன்பால் உணரப்படும்.

## கதை.

செங்கண்ணன் என்பவன் உறையூரிலிருந்து அரசுபுரிந்த சோழமன்னன். இவனுடைய தந்தைபெயர் சுபதேவன். தாய் பெயர் கமலவதி. இவன் அருந்திறலும் பெருங்கொடையும் மருங் கமைவும் ஒருங்குடையவன். அறிவும் திருவும் கருவிலே யமை யப்பெற்று உருவும் குணமும் நெறியு மமைந்து இவன் உயர்ந்து விளங்கினன். இவன் பிறப்புநிலை மிக வியக்கத்தக்கது. முற் பிறப்பில் சிலந்திப்பூச்சியாயிருந்து பண்டுசெய்த தவப்பேற்றால் பரமனை இவன் வழிபட்டுவந்தான். ஒருநாள் அது காவிரி நதி யருகே யிருந்த குளிர்ந்த பூஞ்சோலை ஒன்றினிடையே நின்ற வெண்ணாவல் மரத்தின் கீழ் விளங்கியிருந்த சிவலிங்கத்தைக் கண் டது. அதன் முடிமீது சருகு முதலியன வுதிராவண்ணம் ஓர் வலை தெற்றிவைத்தது. அம்மூர்த்தியை நாளும் முறையே வழி பட்டுவந்த யானை ஒன்று வழக்கப்படி வந்தபொழுது அவ்வலை யைக் கண்டது. வெறுத்துச் சிதைத்து விரும்பியபடி அக் கரி வணங்கிச்சென்றது. மறுநாள் அச்சிலந்தி வந்து தான் ஆக்கிவை த்தவலை அழிந்து போனதைக் கண்டு வருந்தியிரங்கி மறுபடியும் படைத்து மறைந்திருந்தது. அம்மதகரிவந்து முன்போல சிதை த்தது. இதுமூண்டு பாய்ந்து அதன் துதிக்கையுள் புகுந்து மடுத்துக் கடித்தது. அதனைப் பொறுக்க மாட்டாமல் துடித்துத் துள்ளிக் கையை நிலத்தில் அடித்தது. அதனால் அவ் யானை மாண்டது; அக்கையுள்ளிருந்த இதுவும் சேர்ந்து மாய்ந்தது.

இங்ஙனம் கடவுள் வழிபாட்டால் முடிவுநேர்ந்தமையால் பின்னர் முடிமன்னனாகிப் படிமிசை வந்தது. அப்படி வந்த வேந்தனே இவ் எந்தல் என்க. இவ்வண்ணம் தெய்வ அருளோடு சேர்ந்து தோன்றிய இவன் பிறந்தபோது கண்களிரண்டும் சிவந்திருந்தன ஆதலால் செங்கண்ணான் எனச் சிறந்து நின்றான். கோச்செங் கட் சோழன் எனவும் கூர்ந்து விளங்கினான். இவன் பகைவரை அடக்கி நகைமுகத்தனாய் நின்று நலம்பலசெய்தான். அம்பர், அழுந்தூர், வெண்ணி முதலிய நன்னகரங்கள் பலவற்றுள்ளும் நண்ணியிருந்து எண்ணரிய புண்ணியங்களைச் செய்து கண்ணை இமைகாப்பதுபோல் உலகினை இவன் காத்துவந்தான். யானை வழிபட்டுவந்த காரணத்தால் திருவானைக்கா என்று பெயர் பெற் றுள்ள அத்திருத்தலமே இவன் உயர்நலமெய்தற்கு நிலையமாயிரு ந்ததாதலால் அதனை நினைந்து அங்குச் சிறந்தகோவிலும், உயர் ந்த மதில்களும் செய்வித்து மிகுந்த அன்போடு பணிந்து வந் தான். சிவபெருமானுக்குப் பலவிடங்களிலும் இவன் அமைத் துவைத்துள்ள திருக்கோவில்கள் எழுபதுக்கு மேற்பட்டன வாம். ஆயினும் மதவேற்றுமை சிறிதுமின்றித் திருமாலுக்கும் பெருமாளிகைகள் பல சமைத்து வருமானங்கள் மிக மருவச்செய் துள்ளான். நீதிவழுவாமல் நெறிமுறைசெய்து அறம்பல புரிந்து சிறந்துநின்ற இவனது பெருந்தன்மையை அருந்தவ ரனைவரும் வியந்து புகழ்ந்துள்ளார். யாவர்மாட்டும் நண்புகூர்ந்து யாண்டும் பண்புடையனாய் நின்று நயனும் நன்மையும் புரிந்துவந்தமையால் உலகத்தாரெல்லாரும் இவனை உயிரென மதித்துஉவந்து போற்றி னர். "நயனொடு நன்றிபுரிந்த பயனுடையார் பண்பு பாராட்டும் உலகு" என்பதற்கு இலக்கியமாக இவன் நிலவி நின்றான். அக் காலத்திருந்த அறிஞர் பலரும் இவனைப் புகழ்ந்து போற்றியுள் ளார். சில அடியில் வருவன காண்க.

"செங்கட் பெயர்கொண்டவன் செம்பியர்கோன்
அங்கட் கருணை பெரிதா யவனே
வெங்கண் விடையாய் எம்வெண் ணாவலுளாய்
அங்கத் தயர்வா யினளா யிழையே" (திருஞான சம்பந்தர்)

"புத்தியொடு சிலந்தியுந்தன் வாயினூலாற்
பொதுப்பந்த ரதுவிழைத்துச் சருகால் மேய்ந்த

சித்தியினு லரசாண்டு சிறப்புச் செய்யச்
சிவகணத்துப் புகப்பெய்தார் திறலான் மிக்க
வித்தகத்தால் வெள்ளானை வின்ளாவன்பு
விரவியவா கண்டதற்கு வீடுகாட்டிப்
பத்தர்களுக் கின்னமுதாம் பாசூர் மேய
பரஞ்சுடரைக் கண்டடியேன் உய்ந்தவாறே'' (திருநாவுக்கரசர்)

"தெருண்ட வாயிடைநூல்கொண்டு சிலந்தி
சித்திரப் பந்தர் சிக்கென வியற்றச்
சுருண்ட செஞ்சடை யாயது தன்னைச்
சோழனாக்கிய தொடர்ச்சிகண் டடியேன்
புரண்டு வீழ்ந்துநின் பொன்மலர்ப் பாதம்
போற்றி போற்றியென் றன்பொடு புலம்பி
அருண்டென மேல்வினைக் கஞ்சிவந் தடைந்தேன்
ஆவடுதுறை யாதி யெம்மானே'' (சுந்தரமூர்த்தி)

மைவைத்த கண்டனெறியன்றி மற்றோர் நெறிகருதாத்
தெய்வக்குடிச் சோழன்முன்பு சிலந்தியாய்ப் பந்தர்செய்து
சைவத் துருவெய்தி வந்துதரணிமீ டாலயங்கள்
செய்வித்தவன் திருக் கோச்செங் கணானெனுஞ் செம்பியனே.
(நம்பியாண்டார்.)

வெண்ணாவ லிறைக்கொளிநூற் பந்தர்செய்த வியன்சிலம்பியது
வழித்த வெள்ளானைக்கை
யுண்ணுடிக் கடித்தவுடலொழியச் சோழ னுயர்குலத்துச்
சுபதேவன் கமலத்தோங்கும்
பெண்ணாகி யவள்வயிற்றில் வைகிச் செங்கட்பெருமானாய்த்
தெனனவராய்ப் பெருங்கோவில்பலவும்
கண்ணார்வித் தயர்தில்லை மறைபவர்க்கு முறையுள்கனகமய
மாக்கியருள கைக்கொண்டாரே. (உமாபதிசிவம்.)

கோதைவேலான கோச்செங்கட் சோழனாமுனிக் குலயத்தில்
ஆதிமூர்த்தி யருளான்முன்னறிந்து பிறந்து மண்ணாள்வான
பூதநாதன் றானமகிழ்ந்து பொருந்தும் பெருந்தண்சிவாலயங்கள்
காதலாலெம் பலஎடுக்கும் தொண்டுபுரியுங் கடன்பூண்டான். (1)

ஆனைக்காவில் தான்முன்னம் அருள்பெற் றதனையறிந்தங்கு
மானைத்தரித்த திருக்கரத்தார் மகிழுங்கோயில் செய்கின்றுன்
ஞானச்சார்வாம் வெண்ணாவலுடனே கூட நலஞ்சிறக்கப்
பானற்களத்துத் தம்பெருமான் அமருங்கோயிற் பணிசமைத்தான்.
(பெரியபுராணம்) 2.

சம்புவி னீழலார்க்குத் தக்கவாகமத்திற் செய்யும்
நம்புநித் தியமேயாதி நவையறு பூசையெல்லாம்
உம்பரும் வியையவாறறுக் குரியவா றம்மைநாடி
இம்பரி னிருத்துவாமென் றெண்ணினர் இகல்வேன்மன்னர் (க)

காசிகேதாரங் காஞ்சிக் கடிநக ராதிமூதூர்
மாசுதீர் குலத்தினமேலாய் வளர்சிவத் துவிசர்தம்மை
நேசமோ டழைத்தப் பார்த்து நிதிநிலம் சுதந்திரங்கள்
வசுதீர் மனைகண்மற்று மீந்தனர் தாபித்திட்டார் (உ)
(திருவானைக்காப்புராணம்)

அம்பரமும் பெருநிலனுந் திசைகளெட்டும் அலைகடலும் குலவரையும் உண்டகண்டன்
கொம்பமரும் வடமரத்தி னிலைமேற்பள்ளி கூடினன் திருவடியே கூட கிற்பீர்
வம்பவிழுஞ் சண்பகத்தின் வாசமுண்டு மணிவண்டு வகுளத்தின் மலர்மேல் வைகும்
செம்பியனகோச் செங்கணான் சேர்ந்தகோயிற் றிருநறையூர் மணிமாடஞ் சோமின்களே. (1)

முருக்கிலங்கு கனித்துவர்வாய்ப் பின்னைகேள்வன் மண்ணெல்லா முன்னவியச் சென்றுவென்றிச்
செருக்களத்துத் திறலழியச் செற்றவேந்தன் சிரந்துணித்தான் திருவடிநுஞ் சென்னிவைப்பீர்
இருக்கிலங்கு திருமொழிவா யெண்டோளீசற் கெழின்மாடம் எழுபதுசெய் துலகமாண்ட
திருக்குலத்து வளச்சோழன் சேர்ந்தகோயிற் றிருநறையூர் மணிமாடம் சேர்மின்களே. (திருமங்கையாழ்வார) (2)

இன்னவாறு களவழி முதலிய பலநூல்களிலும் இவன் புகழ் கூறப்பட்டுள்ளது. நயமொடு நன்றிபுரிந்து பயனும் பண்புமுடையனாய் இவன் நிலவியிருந்ததும், உலகம் இவனைப் பாராட்டிவந்ததும் பிறவும் இவற்றால் இனிதறியலாகும்.

பண்புடைய ராகிப் பயன்புரிவார் தம்மையென்றும்
ஒண்புவிநின் றேத்தும் உவந்து.

பண்புடையாரை உலகம் பாராட்டுமென்பது இதனால் கூறப்பட்டது.

---

995. நன்றிப் பகைத்துமேன் காவட்டர் பண்புடைமை
குன்று திருந்தார் குமரேசா—நின்ற
நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு. (ரு)

இ—ள்.

குமரேசா! காவட்டர் பகையுற்றிருந்தும் பண்புடையராய் ஏன் அமைந்து நின்றார்? எனின், இகழ்ச்சி நகையுள்ளும்

இன்னாது; பாடு அறிவார்மாட்டுப் பகையுள்ளும் பண்புஉள என்க.

இது, பண்புடையாரது பான்மை கூறுகின்றது.

நகை என்றது விளையாட்டினை. கேலிசெய்து நகைத்து விளையாடுமிடத்தும் ஒருவனை இகழ்ச்சிசெய்தால் அது, அவனுக்கு வருத்தத்தை விளைக்குமாதலால் "இகழ்ச்சி, நகையுள்ளும் இன்னாது" என்றார். உம்மை இன்னாமைக்கு இடமின்மையாகிய அதன் இயல்பு தோன்ற நின்றது.

இகழ்ச்சியாவது பலர்நடுவே வைத்துக் குறிப்போடு ஒருவனைப் பழித்துரைப்பது. இன்னாது = துன்பந்தருவது.

பாடு என்னும் சொல் குணம், பக்கம், பெருமை, கடமை முதலியவற்றை யுணர்த்தி வரும். பாடறிவார் என்றது பிறரது நிலைகளையும் உலக இயல்பினையும் நுணுகியறிந்து அவற்றிற்குத் தகவொழுகும் தகவுடையார் என்றவாறு. "பாடறிந்து ஒழுகும் பண்பினோரே" (புறம்) என்புழி இப்பாடுணர்த்திநிற்கும் பொருளையுணர்க.

மேல், பண்புடையார், நயனொடு நன்றி புரிவர் என்றார்; இதில், பிறர் இயல்பறிந்து என்றும் இனியராய் அவர் ஒழுகுவர் என்கின்றார்.

சிரித்து விளையாடுமிடத்தும் இகழ்ச்சி துன்பந்தரும் ஆதலால் முறைதெரிந்தொழுகும் நெறியுடையாரிடத்துப் பகைமிகுந்தபோதும் அஃதுண்டாகாது; இனிய பண்புகளே உளவாம் என்பதாம்.

பகையுள்ளே பொதுவாகத் துன்புண்டாகுமேயன்றிப் பண்புஉண்டாகாது; அங்ஙனமாயினும் அப்பகை இனிய சீர்மையராகிய அறிவுடையாரிடத்தே படுமாயின் தன் நிலைமைமாறி நலம் பயந்துநிற்கும் என்பார் "பாடறிவார் மாட்டுப் பகையுள்ளும் பண்புள" என்றார். உம்மை இழிவு சிறப்பு. இதனால் பாடறிவாரது பீடுடைமை புலனும். பண்பில்லாதவர் நண்புடையராகி நகைத்து விளையாடினும் ஆண்டு நவையே யுண்டாம்; பண்புடையார் பகைத்து நிற்பினும் அவர்பால் இனிய சீர்மைகளே உளவாம் என்றபடி.

இகழ்ச்சியானது பிறர்க்குத் துன்பந் தருவதோடு தன்னை யேந்திநிற்பானையும் இழிந்தவ னாக்கிவிடும் என்பதை அறிவுடையார் நன்கு அறிந்திருப்பாராதலால் தம் பகைவர் மீதும் அதனைப் பற்றிவிசார்; தம்இயல்பின்படி இதங்களையேசெய்துநிற்பர் என்க.

தம்மை நிலைகலக்கிப் பிறர் எவ்வளவு இடர் விளைத்தாலும் தாம் நிலைதிரியாது நின்று மேலோர் நலமே புரிவர் என்பதாம்.

"பொன்னுங் கரும்பும் புகழ்பாலும் சந்தனமும்
சின்னம் படவருத்தஞ் செய்தாலும்—முன்னிருந்த
நற்குணமே தோன்றும் நலிந்தாலும் உத்தமர்பால்
நற்குணமே தோன்றும் நயந்து" (நீதிவெண்பா)

படாதபாடு படுத்தினாலும் பாடறிவார் தம் பண்புடைமை குன்றாது இன்பமே செய்வரென உவமைகளோடு புணர்த்தி இஃ துணர்த்தி நிற்கும் அழகை யூன்றிப்பார்க்க.

எள்ளி இகழ்தல் முதலிய இழிந்தசெயல்களை யாண்டுஞ் செய்யாது தம்மாலியன்றவரை என்றும் உயிர்களுக்கு நலஞ்செய்து நிற்போரே பண்புடையாராவர் என்பது இதன் திரண்ட பொருளாம்.

பகைமையுற்றவிடத்தும் பண்புடையார் இதமே செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை காவட்டனார் பால் உணரப்படும்.

## கதை.

காவட்டனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத் தெண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே மாரன்குடி என்னும் ஊரிலிருந்தவர். இவர் பேரறிவுடையவர். சங்கப்புலவருள் ஒருவர். கருவி நூல்களோடு அறிவுநூல்கள் பலவும் வழுவறப் பயின்று விழுமிய நிலையில் இவர் விளங்கியிருந்தார். திருந்திய பண்பும் பெருந்தகைமையும் வாய்ந்தவர். அருள் பொறை அடக்க முதலிய குணநலங்களெல்லாம் இவரிடம் ஒருங்கே குடிகொண்டிருந்தன. இல்லறவாழ்க்கையிலிருந்தும் அரிய விரதவொழுக்கங்களை மேற்கொண்டு துறவியரும் வியக்கத்தக்க நெறியுடையராய் இவர் நிலைத்து நின்றார். உலக இயல்பினையும் உறுதி நிலைகளையும் நுணுகியுணர்ந்து இனிதுமொழிந்து எவ்வுயிர்க்கும் இர

ங்கி இதம்புரிந்து வந்தார். சிறுமை என்பதைச் சிறிதும் சிந்தியாது மறுமை நோக்கோடு இவர் மருவியிருந்தார். இவர்காலத்தில் அந்துவன்கீரன் என்னும் ஓர் குறுநிலமன்னன் பெருந்திருவோடு விளங்கியிருந்தான். அவன் அருந்திறலாளன். தான் பெரும்புகழுடையனாயிருந்தும் தன்னை இவர் விரும்பிவந்து உவந்துரையாடி நயந்துகொள்ளவில்லையென்று அவன் நினைந்திருந்தான் அதனால் பகைமைமீக்கொண்டு உள்ளே சினந்து நின்றான். அவனது நிலையினையறிந்து இவர் நெஞ்சம் இரங்கினார். தனக்கு அமைந்துள்ள திருவினை நினைந்து இங்ஙனம் இறுமாந்துள்ளான் என்று தெளிந்து நின்றாராதலால் அவன்மேல் யாதும் சினந்து கொள்ளாமல் இனிய நீர்மையோடமைதியா யிவர் அடங்கி யிருந்தார். அவன் நாளும்பகைத்து நீள நவையூக்கி வந்தான். இவர் யாதும் வருந்தாது அன்பூக்கி நின்றார். முடிவில் உண்மை நிலை தெளிந்து அவன் உய்வுபெறும்படி இவர் செய்யநினைந்து ஒருநாள் ஒரு செய்யுளை எழுதி அவன்பால் சேரவிடுத்தார். அன்று இவர் விடுத்தகவி அடுத்து வருவது காண்க.

"பாறுபடப் பறைந்த பன்மாறு மறுங்கின்
வேறுபடு குரல வெவ்வாய்க் கூகையொடு
பிணந்தின் குறுநரி நிணந்திகழ் பல்ல
பேஎய் மகளிர் பிணந்தழூஉப் பற்றி
விளருன் தின்ற வெம்புலான் மெய்யர்
களரி மருங்கிற் கால்பெயர்த் தாடி
ஈம விளக்கின் வெருவரப் பேரும்
காடு முன்னினரே! நாடு கொண்டோரும்;
நினக்கும் வருதல் வைகல் அற்றே!
வசையும் நிற்கும்; இசையும் நிற்கும்;
அதனால், வசை நீக்கி இசை வேண்டியும்
நசை வேண்டாது நன்று மொழிந்தும்
நிலவுக் கோட்டுப் பலகளிற் றொடு
பொலம் படைய மா மயங்கிட
இழைகிளர் நெடுந்தேர் இரவலர்க் கருகாது
கொள்ளென விடுவை யாயின் வெள்ளென
ஆண்டுநீ பெயர்ந்த பின்னும
ஈண்டுநீடு விளங்குநீ எய்திய புகழே." (புறநானூறு)

பண்டு நாடுகொண்டிருந்தவர் யாவரும சுடுகாட்டை யடைந்து அடியோடு மறைந்தனர்; நீயும அவ்வாறே ஆசப்போகின்

றாய்; ஆதலால் அங்ஙனம் போகுமுன் பிறவிப்பயனாகிய புகழைப்பேணிக்கொள்க; அவ்வண்ணம் கொண்டால் என்றும் புகழுடம்போடு ஈண்டு நின்று விளங்குவாய்; என உண்மைநிலையை உறுதிபெற அவனுக்கு இவர் இதில் உணர்த்தியிருக்கும் அருமையை ஊன்றியுணர்க. இவரது உணர்வுரையைக் கண்டு அவன் உள்ளந் தெளிந்தான். தான் பகைமையுற்றிருந்தும் தன்பால் நண்புகொண்டு இங்ஙனம் பண்புசெய்தாரே! என்று அவன் நினைந்து நினைந்து புகழ்ந்து விரைந்துவந்து இவரைப் பணிந்து போற்றினான். பண்புடையராய் நின்று எவர்க்கும் இனிமைசெய்து வந்த இவரது பெருந்தன்மையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். "பாடறிவார்மாட்டுப் பகையுள்ளும் பண்புள" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

என்றும் பிறரை யிகழ்ந்துரையார் பண்புடையார்
நன்றே புரிவர் நயந்து.

பண்பாளர் யாண்டும் இன்பே செய்வரென்பது இதனால் கூறப்பட்டது.



996. பண்டு வியாசர் பதஞ்சேர ஞாலஞ்சீர்
கொண்டிருந்த தென்னே குமரேசா—கொண்டாடும்
பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன். (சு)

இ—ள்.

குமரேசா! வியாசரை மேவி நின்றதால் இவ்வுலகம் என் மேன்மை எய்தியிருந்தது? எனின், உலகம் பண்புடையார்ப் பட்டு உண்டு; இன்றேல் அது மண்புக்கு மாய்வது மன் என்க.

இது, பண்புடையார் இல்லையானால் உலகம் நில்லாதென்கின்றது. உலகம் என்றது உலகியலை. அஃதாவது மக்களுடைய ஒழுகலாற்றின் விழுமிய நிலை என்க. தன்னைக்குறியாமல் தனனில் நிகழும் நிகழ்ச்சியை உணர்த்தி நிற்றலால் உலகம் இங்கு ஆகுபெயராய் நின்றது. பட்டு = பொருந்தி, சார்ந்து. பட்டு உண்டு என்றதனால் படாதாயின் உலகியல் இல்லை என்பதாயிற்று.

இன்றேல் = அங்ஙனம் படாதாயின். அது = இவ்வுலகநிலை. மண்புக்குமாய்வது என்றது கண்ணுக்குத் தெரியாதவண்ணம் மண்ணுக்குட் புகுந்து மறைந்தொழிந்துபோம் என்றவாறு. மன் ஒழியிசைக்கண் வந்தது.

மண்புக்கு மாயாமல் உலகம் இன்புற்றிருக்கவேண்டுமாயின் பண்புற்றாரை அது பற்றிநிற்கவேண்டும் என்றபடி. இதனால் உலகநிலைக்கு உயிர்நிலையாயுள்ள அவரது உயரிய நிலை இனிது புலனும்.

மேல், பகைபுறினும் பண்புடையார் இன்புசெய்வர் என்றார்; இதில், அவர் இருத்தலாலேதான் உலகம் இருக்கின்றது என்கின்றார்.

பண்புடையாரைச் சார்ந்துதான் இவ்வுலகியல் நிலைத்துள்ளது; அங்ஙனம் சாரவில்லையாயின் மண்ணுட்புகுந்து அது மாய்ந்துபோம் என்பதாம்.

குணநலமுடைய மேலோர் இவ்வுலகிற்கு உயிராதாரமாயுள்ளவராதலால் அவரோடு பொருந்தி நின்றபோதுதான் இது சிறந்து விளங்கும்; இல்லையாயின் உயிரொடுபடாத உடம்புபோல் செயிர்பல பட்டு விரைந்திழிந்து ஒழிந்துபோம என்பார் "பண்புடையார்ப் பட்டு உலகம் உண்டு; இன்றேல் அது மண்புக்கு மாய்வது" என்றார். மாய்வது = மாய்ந்துபோகும் இயல்பினையுடையதாம். ஆம் என்னும் முற்றுச்சொல்லை இதில் வருவித்துக்கொள்க.

பண்புடையாரோடு பொருந்தியிருந்தாற்றான் இவ்வுலகம் சிறந்து நிற்கும்; இல்லையாயின் அடியோடு அது இறந்துபோகும் என்ற இதனால் அவரது தன்மையும் நன்மையும் இனிது உணரலாகும்.

உலகம், பண்புடையாரொடு படாதாயின் மண்புக்கு மாய்ந்துபோம் என்றது என்னை? எனின், அறமுதலிய உறுதிப்பொருள்களை இனிதுணர்த்தி உயிர்களை உயர்ந்தநிலையிற் செலுத்தும இயல்பினராய அவர் நிலவவில்லையாயின் களையடர்ந்த காடுபோல் பொலிவிழந்து இந்நிலம் நிலைதலைந்துபோம் என்பது கருதியென்க.

"உண்டா லம்ம இவ்வுலகம்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுந ருண்மை யானே" (புறம்) என்பதும் ஈண்டொன்றாக்கத்தக்கது. அடிகளாருரையை இஃது அடிபொற்றி வந்துள்ளமை காண்க.

"காதலிற் புகழ்ந்து பன்முறை பழிச்சிக்கரையின்மா பூவினை சிறப்பித்து, வரமதகற்றி யுலகினுக்குயிரா யிருந்தனன் இறைகுலோத்துங்கன்" (திருவிளையாடல்) என்றபடி உலக நிலைக்குப் பண்புடையார் உயிர்நிலையாய் நின்று வருவர் எனக.

பண்பிலார் பலகோடியரிருந்தாலும் அவர்மேற்படாமற்பண்புடையார் கண்ணேயே உலகியல் பட்டுநிற்கும் என்க.

"வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான." (தொல்காப்பியம்)

மேற்றே யெனத் தேற்றேகாரந் தந்து உலகவுண்மைக்கு உரிமையாளரை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

குணமுடைய நல்லோரைப் பொருந்தவில்லையாயின் இவ்வுலகம் மணமிழந்த மலர்போல் மாண்பிழந்துபடும் என்பது கருத்து.

பண்புடையாரைச் சார்ந்து நின்றபோதுதான் இவ்வுலகம் இன்புடையதாயினிதமர்ந்திருக்குமென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வியாசர்பால் உணரப்படும்.

## கதை.

வியாசர் என்பவர் பராசர முனிவருடைய அருமைப் புதல்வர். தாய் பெயர் சத்தியவதி. பரிமளகந்தி எனவும் பெயர். இவர் பிறப்பு மிக வியக்கத்தக்கது. ஒருநாள் பராசரர் காளிந்தி நதியைத் தோணியேறிக் கடந்து வந்தார். வருங்கால் அத்தோணித் தலைவனாகிய மச்சகனுக்கு மகளாய் அருகே நின்ற சத்தியவதியைக் கண்டார். அவ்வமயம் அவளைக் கலந்தால் உலகமெல்லாம் போற்றத்தக்க ஓர் குமரன் தோன்றுவான் என்று அதை ஓர்ந்திருந்தபடியால் அவளைக் கூர்ந்து நோக்கினார். அவளும் அவரது குறிப்பினையறிந்து விருப்புடனின்றாள். உடனே அவளை இனிதழைத்துக் கொண்டுபோய் ஒரு தனியிடத்தில் வைத்துப் புனித நினைவோடு பொருந்தி நுகர்ந்தார். இருவரும் நினைத்

தெழுந்தபின் அம் முனிவர் அகன்று போனார். விரும்பியபடியே அவளிடம் இவர் அரும்பி யெழுந்தார். அடியில் வருதல் காண்க.

"பருதிதந்தமா நதிமருங் கொருபகற் பராசரன் மகப்பேறு
கருதிவந்துகன் னிடன்னையும் எனதுமெய்க்கமழ்புலவையுமாற்றிச்
சுருதிவாய்மையின் யோசனைப் பரப்பெழு சுகந்தமுமெனக்கீந்து
வருதியேயெனப் பணியினன் மறைத்தொரு வண்டுறைக்குறைசேர்ந்தான்.

முரணிறைந்தமெய்க் கேள்வியோனருளினல் மூஞ்சியும் புரிநூலும்
இரணியஞ் செழும் கொழுந்துவிட்டனவென இலங்குவேணியுந் தானும்
தரணியெங்கணும் வியாதனென்றுரைகெழு தபோதன முனியப்போ
தரணியின்புறத் தனனென என்வயின் அவதரித் தன னம்மா" (பாரதம்)

அந்த அம்மாள் இவரைப் புதல்வராகப் பெற்றுள்ள உண்மையைக்குறித்து வீடுமரிடம் பின்பு இங்ஙனம் கூறியுள்ளாள். இவர் அரியகலைகள் பலவும் பயின்று அருந்தவர்களும் வியந்து புகழத்தக்க சிறந்த தவவொழுக்கமுடையராய் விளங்கியிருந்தார். பின்பு கிருதாசி என்பவளிடம் இவருக்குச் சுகமுனிவர் பிறந்தார். அத்தத்துவ ஞானியின் உத்தமநிலைகளைக் கண்டு உவகைமீக்கொண்டார். உலகம் நலமுற இவர் உறுதிபல சூழ்ந்தார். வேதங்கள் உயிர்களுக்கு எளிதில் போதமாகாதபடி யிருந்த நிலைக்கண்டு சில திருத்தங்களைச்செய்து அவற்றை இவர் தெளிவுற வைத்தார். தைத்திரியம், பௌடிகம், தலவகாரம், முதலாகப் பேர்பெற்றிருந்த அவ்வேதங்கள் இவர் திருத்தியபின்பு இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என இசைந்து நின்றன. வேதங்களை இவ்வண்ணம் விளக்கிவைத்தமையால் பின்பு இவர் வேத வியாசர் என விளங்கினார். அங்ஙனம் விளக்கி வைத்தும் மக்கள் விரைந்து பயன்படாமையையறிந்து அவ்வேதக்கருத்துக் களைக் கதைகளோடு புணர்த்திப் புராணங்களாக வெளியிட்டார். அவை பிரமம், பதுமம், வைணவம், சைவம், பாகவதம், பௌடியம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தனம், இலிங்கம், வராகம், காந்தம், வாமனம், மச்சம், கூர்மம், காருடம், பிரமாண்டம் எனப் பதினெண்வகையா யுள்ளன. பின்பு இதிகாசமாகிய பாரதத்தைச் செய்தார். இன்னணம் உலகுய்யுமாறு பல நூல்களைச் செய்து நிலவிநின்ற இவர் ஒருமுறை காசியம்பதியை யடைந்தார். முனிவர் பலர் புடைசூழ இவர் இனிதமர்ந்து வருங்கால் இறைவன் சோதனைபால் ஒருநாள் இவர்

க்கு உணவூற தொழித்தது அவ்வமயம் இறைவி தூய் விழுமிய கன்னிபோலத் தோன்றித் தன் இல்லில் வந்து விருந்தருந்திப் போகவேண்டுமென விரும்பி வேண்டினாள்.

உமையருளியது.

"நடைத்த செப்பனைய வீங்கு கதிர்முலை முசிவன் பாவைசீர்
முகைத்தனைத் தனைப்பனுவன்றனைத்தி பூசனை செய்தலால்
தொடர்ந்தபே ருவகையுள்ளந் தூண்டஎம் ஐயனேறப்
படர்ந்திடு மனையோடும் பழமறை வியாதன் கூறும்"

வியாசர் உரைத்தது.

"பற்பல கலையும் எம்பாற் பயிலுநர் அனைவரோ யாம்
மற்றவர் தம்மோடன்றி யருந்திலம் மாதே! என்ன
அப்புமீதூர யாருமடைதிரென நுரைத்தலோடும்
தற்பதந் தொழுமாணுக்கர் தம்மொடும் வியாசன சார்ந்தான்,"

(காசிகாண்டம்)

இவ்வாறு உலகமாதா உவந்து அன்னமிட இவர் உண்டு மகிழ்ந்து உண்மை தெளிந்து உளங்குளிர்ந்து போற்றினர். உரோமகர், சைமினி, பைலர், வைசம்பாயனர், முதலிய முனிவர் பலர் இவரது புனிதபோதனைகளை உலகமெங்கும் பரப்பினர். தாம் பண்புடையரா யிருந்து எல்லாவுயிர்களிடத்தும் அன்பு செய்து அறிவொழுக்கங்களைப் பரப்பி இவர் நெறிபுரிந்து வந்தமையால் இவ்வுலகியல் இனியநிலையில உயர்வடைந்து வந்தது. துவாபர யுகத்தின் இறுதியில் நேர்ந்த அல்லல் பலவற்றையு மகற்றி இந்நிலத்தை இவர் நல்ல நிலையில் நிறுத்தியருளினர். ஓர் குலமகனால் அவன்பிறந்த குடி சிறந்து நிற்பதுபோல் இத்தலைமகனால் நிலமகள் உயர்ந்து நின்றாள் என அமரரும உளமகிழ்ந்து இவரைப் புகழ்ந்து போற்றினர். இவர் தோற்றம் உலகிற்கோர் பேரொளி தந்தை யுதவியுள்ளது. பண்புடையார்ப்பட்டு உலகம் உண்டு என்பதை எவரும் இவர்பால் உணர்ந்து நின்றார்.

மதியுடையா வான்போல் மருளுமே வையம்
மதியுடையார் மேவா வழி.

பண்புடையாரைப் பொருந்தவில்லையாயின் இவ்வுலகம் சிறந்து நில்லாதென்பது இதனால் கூறப்பட்டது.

997. தேர்ந்த அறிவிருந்தும் சீலமிலாச் சேனரன்று
கூர்ந்திழிந்தார் என்னே குமரேசா—தீர்ந்த
அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர். (எ)

இ—ள்

**குமரேசா!** சிறந்த அறிவுடையராயிருந்தும் சேனர் ஏன் இழிந்தொழிந்தார்? எனின், அரம்போலும் கூர்மையர் ஏனும் மக்கட் பண்பு இல்லாதவர் மரம்போல்வர் என்க.

இது, பண்பில்லானறிவு பாழாம் என்கின்றது.

அரம் = ஒருவகைக்கருவி, பொன்முதலியவற்றைத் தேய்த்து ஒளிமிகச் செய்வது. அராவுதற்குரியதாதலால் இது, அரம் எனநின்றது. அராவல் = உருப்புதல், தேய்தல். "அரம் போழ் அவ்வளைக்குறுமகள்" (ஐங்குறுநூறு.) "அரம் சுட அழுணிமிர் அலங்கல்வேலினை" (இராமாயணம்) இவற்றுள் இவ் அரம் குறித்து நிற்கும் பொருளை யுணர்க.

அரம்போலும் கூர்மை என்றது அரத்தின் கூர்மைபோலுங் கூரிய அறிவினை. அறிவின் கூர்மைக்கு அரத்தை இங்ஙனம் உவமை குறித்தது என்னை? எனின், தான் தேய்வின்றி நின்று தன்னைத் தோய்ந்த பொருள்களைத் தேய்த்து ஒளிமிகச் செய்யும இயல்பு கருதி என்க.

"தாரதலத்தி லுள்ள தமிழ்க்குற்ற மெல்லாம
அராவும் அரமாயிற் றன்றே—இராவணன்மேல்
அம்புநாட் டாழ்வான் அடிபணியும் ஆதித்தன்,
கம்பநாட் டாழ்வான் கவி" (இராமாயணப்பாயிரம்.)

கம்பன் கவியை அரம் என்று இதில் குறித்திருத்தல் காண்க. தான் ஒளியுடையனுய் நின்று இருளை நீக்கி உலகை விளக்கும் சூரியன்போல் ஆன்ற அறிவுடையனு யிருந்து அஞ்ஞானத்தை நீக்கி உயிருணர்வுகளைக் கம்பன் விளக்கிநிற்றலால் ஆதித்தன் எனவும், குறைகளை நீக்கிப் பிறபுலவர்கட்குக் கூர்மையான அறிவினை விளைத்தலால் அவன் கவியை அரம் எனவும் குறித்து இஃதுணர்த்தி நிற்கும் அழகு அருமைகளை யூன்றி யுணர்க.

மேல், பண்புடையாரது உயர்வு கூறினார்; இதில், பண்பில்லாரது இழிவு கூறுகின்றார்.

அரம்போலுங் கூரிய அறிவுடையரேயாயினும் மக்கட்குரிய நல்லகுணமில்லாதவர் மரமேபோல்வர் என்பதாம்.

தாம் யாண்டும் வழுப்படாது நின்று தம்மை அடுத்தாரை வழூஉக்களைந்து வார்த்துவிடும கூர்த்த அறிவினையுடையரேயாயினும் நல்லகுணம் இல்லாராயின் அவரறிவு மணமில்லாத மலர்போல் இழிக்கப்படுமே யன்றி மதிக்கப்படா தென்பார் "அரம்போலும் கூர்மையரேனும் மக்கட்பண்பில்லாதவர் மரம்போல்வர்" என்றார். மரமேகாண் என்னுது "போல்வர்" என்றது வடிவில் ஒவ்வாது ஓர்படியில் ஒத்திருக்கும் பான்மை கருதி.

ஆறறிவுடைய மக்கட்பிறப்பை யடைந்து மேலும் புத்திக் கூர்மை வாய்ந்து மிகச் சிறந்த நிலையில் ஒருவன் உயர்ந்திருந்தாலும் உள்ளத்தில் நல்லபண்பு இல்லையாயின் எல்லாரானும் அவன் எள்ளப்பட்டு ஓரறிவுடைய மரம்போல் இழிந்துபடுவன் என்றவாறு. "அறிவுடையார் எல்லாம் உடையார்" என்றபடி நுண்ணறிவுடைமையானது எண்ணரிய நலங்களை யெல்லாம் ஒருங்கே விளைக்குமே; அவ்வுடைமையை இங்ஙனம் இளித்துக் கூறியது என்னை? எனின், பண்போடு படாதவழி அது பயன்படாமை கருதி என்க.

அரம்போலும் கூர்மையரேனும் பண்பில்லையாயின் மரம் போல்வர் என்ற இதனால் அவ்வுடைமையின் பெருமையும் மக்கள் அதனை அடைந்து கொள்ளவேண்டிய உரிமையும் இனிது அறியலாகும்.

உயர்ந்த அறிவினை எடுத்துக்காட்டி அதனினும் பண்புடைமை சிறந்ததென்றுணர்த்தி உயிர்கள் அதனை ஓர்ந்து கொள்ளும்படி அடிகள் இதில் அருளியிருக்கும் அழகை ஆய்ந்துகாண்க.

ஒருவன் கூரிய அறிவுடையனாயினும் சீரிய பண்பு இல்லையின் அவன் சிறந்து விளங்கான் என்பது கருத்து.

உறுதிநிலையான அறிவினும் மக்கட்கு உயிர்நிலையாயுள்ள பண்பே மிகச் சிறந்ததாதலால் அதனைஎவ்வகையினும் அடைந்து

கொள்ள வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

உயர்ந்த அறிவுடையனாயினும் அமைந்த பண்பில்லையாயின் அவன் சிறந்து விளங்கான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேனர் பால் உணரப்படும்.

## கதை.

சேனர் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னர் அவந்திநாட்டிலே சககதாரை என்னும் நகரிலிருந்தவர். இவர் சார்வாக மதத்தைச் சார்ந்தவர். பல கலைகளிலும் வல்லவர். சொல்வன்மையில் மிகச் சிறந்தவர். தருக்கம் இலக்கண முதலிய கலைகளில் அக்காலத்தில் தேர்ச்சியுற்றிருந்த புலவர் பலரும் இவரோடு சொற்போர் தொடங்கித் தோல்வியடைந்தனர். எதிர்வாதஞ்செய்வதில் எவரும் தமக்கு நிகரில்லாதபடி உரையாடி வென்று உயரறிவாளராய் விளங்கிநின்றாராதலால் **புத்திசேனர்** என எவரும் இவரைப் போற்றிநின்றார். “மறுமையில் ஒரு இன்பமுண்டென்று கருதி இம்மையில் இவ்வுலக இன்பத்தை வெறுத்தல் மடமையாகும்; சாதிபேதங்களைப் பாராட்டிக்கொண்டு நீதியாளர்போல் நடித்தல் தீதுடைமையாம்; வேள்வி புரிதலும் கேள்வியை நம்பி வேறுபல செய்தலும் வீண்செயலாம்;” என விரித்துரைத்து எவரையும் வாயடக்கி இவர் உயர்வெய்தி நின்றார். இவரது உரைக்குறிப்புகள் வியப்புற நின்றன.

எவ்வுயிர்க்கும் பிறப்பும் அவயவமும் ஒக்கும்
இதில்வருண பேதமுளதென்றால் மோசம்
அவ்வருணத் தவர்க்குறுப்பொன அதிக முண்டோ?
ஆகாயந்தனினின்றும் அவர் வீழ்ந்தாரோ?
செவ்வியவர் நரைதிரைமூப் பிவைதா மின்றித்
தீர்வையிற்சாக் காடின்றிச் சிறந்தார் கொல்லோ?
கவ்வையிலாண் பெண்சாதி இரண்டினல்லாற்
காசினியில் வேற்றுருவங் கண்டார் யாரோ?

பூதமொரு நான்கே தத்துவங்கள்; இன்பம் பொருளிரண்டே
புருடார்த்தம்; புலன்களாறே;
ஏதமிலார் கண்டபிரமாணந் தோற்றும் இவ்வுடலே ஆன்மாவாம்;
இறப்பே முத்தி;
வேதமதன் பொருளிவையே யென்றுமேனாள் விண்ணவர்க்குச்
சற்குருவாய் விளங்கு மாசான்
சாதுரியச் சாத்திரமாய் மகவானுக்குத் தலைநாளிற் சொற்றதுபோல்
தான் வேறுண்டோ?

மாமகங்கள்புரிவதென்று வான்பொருளையுங் கெடுத்துவயிறும் வாடத்
தாமமுதமுண்ணுமற் சார்ந்தவர்க்கு மிடரியற்றித் தழல்வாய்வெம்பித்
தூமமுகத்தினுஞ் சுழன்று தோகைநல்லா ரனுபவமுந் துறந்துசுத்தப்
பாமராய்விழற்கிறைத்துப்பட்டனரா வினையரிந்தப்பாவமுண்டோ.
(பிரபோத—சாருவாகம்)

இன்னவாறு தம் மதக்கொள்கைகளை எங்கும் போதித்து எவரையும் எதிர்த்துவென்று இவர் இசைபெற்று நின்றார். அம் மதத்தவர்கள் பலரும் இவரைத் தமக்கு முதல்வராகக் கொண்டு மிக மதித்துவந்தார். இங்ஙனம் ஒருவாறு உயர்ந்த அறிவோடு விளங்கியிருந்தும் உள்ளத்தில் இழிந்த இயல்பினராய் இவர் மிகுந்திருந்தார். தாம்கூறிய எதையும் சாதித்து, மாறுபட்டவர்களை வைது பழித்து, யாருக்கும் பேரிடர்விளைத்துத் தீமையில் பெருகிநின்ற இவர் முடிவில் இருவிழிகளும் ஒளியிழந்து இருந்து மறைந்தார். கூரிய அறிவுடையராயிருந்தும் நல்ல பண்பில்லாமல் புன்மையும் வன்கண்மையும் பொருந்திப் பொறியின்பங்களை வரம்புகடந்து நுகர்ந்து அறந்திரிந்து நின்றமையால் இவரை யாரும் மதியாமல் அவமதித்து நின்றார். அரம்போலும் கூர்மையரேனும், மக்கட் பண்பில்லாதவர் மரம்போல்வர்; என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

குணமிலான் கூரறிவு கொண்டிருந்து மென்னே
மணமிலாப் புன்மலரே மன்.

பண்பில்லாவழி அறிவாற் பயனில்லை யென்பது இதனால் கூறப்பட்டது.

---

998. அன்பேறன் அரியவசு அல்லசெய்தான் பாலுநலம்
குன்றாமற் செய்தான் குமரேசா—என்றுமே
நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை. (அ)

இ—ள்.

குமரேசா! தனக்குத் தீங்குசெய்த பராவசுவுக்கும் அருவாவசு என் நன்மையைச்செய்தான்? எனின், நண்பு ஆற்றாராகி நயம் இல செய்வார்க்கும் பண்பு ஆற்றாராதல் கடை என்க.

இது, பண்புடையார் யாண்டும் இன்பே செய்வரென்கின்றது. அரிய வசு என்றது செயற்கரிய செய்து அரிய குணங்களோடு அவன் அமைந்திருந்தமை கருதி. நயம் = விருப்பம், இனிமை. "நயம் நின்றபொருள்கெடப் புரியறு நரம்பினும்" (கலி) "நயம்புரிந் துறையுநர் நடுங்கப்பண்ணி" (புறம்) இவற்றுள் நயம் உணர்த்தி நிற்கும் பொருளை யுணர்க.

நயம் இல = என்றது வெறுக்கத்தக்க செயல்களை. அன்பின்றிக் கொடிய செயல்களைச் செய்வாரை நயமிலர் என்பர். "நக்கசாரணர் நயமிலர்தோன்றி" (மணிமேகலை) என்புழிக்காண்க. பண்பு ஆற்றுதலாவது நண்புஆற்றி நயஞ்செய் தொழுகுதல். நண்பாற்றார் கண்ணும் ஒருவன் பண்பாற்று வானாயின் அவனை உலகமெல்லாம் உவந்துபோற்று மாதலால் அவ் ஆற்றலை இங்ஙனம் போற்றி யுரைத்தார். ஆற்றாதல் = செய்யா தொழிதல். கடை = இழிவு. ஆற்றாதவர் இழிவர் என்றதனால் ஆற்றுவார் உயர்வர் என்பதாயிற்று

செய்தார்க்கும் என இறந்தகாலத்தாற் கூறாது செய்வார்க்கும் என எதிர்காலம் படக்கூறியது அச்செயலின் நிலைமை தோன்ற. உம்மை பண்பாற்றாமைக்கு அவர் இடனுடைமை தோன்ற நின்றது.

தமக்கு நயம்இல செய்வார்க்கும் தாம் நலஞ்செய்ய வேண்டுமென்றது பின்பு அதனாலெய்தும் பெருநலங் கருதி என்க. "இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் என்ன பயத்ததோ சால்பு" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

மேல், பண்பிலாதவர் பாடுபெறார் என்றார்; இதில், அதனைச்செய்யாதவர் சிறுமையே அடைவரென்கின்றார்.

பகைமையை விளைத்து மிகைபல செய்வார்க்கும் நகைபுரிந்து நலஞ்செய்யா தொழிதல் மேலோர்க்கு இழிவாம் என்பதாம்.

உள்நட்பு ஒருசிறிதுமின்றித் தமக்கு இடர்மிகச் செய்வார்க்கும் தாம் இதஞ்செய்தொழுகலே பெருந்தன்மையாளர்க்கு அழகாம்; அங்ஙனமின்றி அவர்க்கு மாறாய் எதிர்த்துநின்று இன்னல் செய்யின் இவரும் சின்னவராக அவர்போல் எண்ணப்படுவராதலால் "பண்பு ஆற்றாதல் கடை" என்றார்.

நண்பாற்றாராகி நயமில செய்வார்க்குப் பண்பாற்றுதல் எவர்க்கும் எளிதிலமையாது; சிறந்த அறிவோடுஉயர்ந்த குணங்களும் அமைந்துள்ள பெருந்தன்மையாளர்க்கே பொருந்துவதாகும்; அத்தகைய அரிய சோதனையிலமைந்துள்ள அதனை அமயம் வாய்த்தபோது அடையாமல் வழுவலாகாது; வழுவின் இழிவு நேரும் ஆதலால் கடையென அச்சுறுத்தி இங்ஙனம் உணர்த்தியருளினார்.

தமக்கு ஒருவன் இடர்பல செய்தாலும் நல்லபண்புடையார் அவனுக்கு இதமே செய்வரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அருவாவசு பால் உணரப்படும்.

## கதை.

அருவாவசுஎன்பவன் இரயிப்பியன்என்னும் வேதியனுடைய புதல்வன். வேத முதலிய கலைகள் பலவும் வழுவற ஓதியுணர்ந்தவன். நீதி நெறிகளில் நிலைத்த நெஞ்சினன். தீதற ஒழுகிய மாதவர்கள் யாவரும் காதல்கொள்ளும்படி போதமும் சீலமும் பொருந்தி இவன் புனிதனாயிருந்தான். அன்பும் பணிவும் அடக்கமும் பொறுமையும் மன்பதைக்கிரங்கும் மாட்சியுமுடையவன். என்றும் பிறருக் கிதமே புரிந்து இவன் இசை மிகுந்துநின்றான். இத்தகைய பண்புடையானுக்கு உடன்பிறந்த அண்ணன் ஒருவனிருந்தான். அவன் பெயர் பராவசு நல்ல கல்விமானாயினும் அவன் புல்லியஇயல்பினன். கடுநெஞ்சும் கொடுவஞ்சமுமுடையவன். அக்காலத்தில் பிருகத் துய்மன் என்று பேர்பெற்றிருந்த சூரியகுலத்துமன்னன் ஓர் சத்திரவேள்வி செய்தான். வேள்வி முறையில் கைதேர்ந்திருந்தானாதலால் இவனை அவன் அழைத்திருந்தான். தன் அண்ணனோடு அங்கு இவன் சென்று அதனை நன்கு ஆற்றிவந்தான். வருங்கால் ஒருநாளிரவு முன்னவனாகிய அவன் வெளியே போய் அடுத்திருந்த சோலையில் படுத்திருந்தான். இருக்குங்கால் அங்கு மான்தோல் போர்த்து யோக நிலையில் ஓர் மாதவன் மருவியிருந்தான். அவனை மான் என்று கருதி மறைந்து நின்று பராவசு விரைந்தடித்தான். உடனே உருண்டு துடித்து அவன் உயிர் துறந்தான். அடித்தவன் உற்று

நோக்கினன். தன் தந்தையாய் இருப்பக்கண்டு அவன் தளர்ந்து ஓடிவந்து தம்பியிடம் சொல்லினன். கேட்டவுடனே இவன் நாட்ட நீர் சிந்தி நடுங்கி யழுதான். தந்தை இறந்துபோன தோடு தன் அண்ணனுக்கு நேர்ந்த கொலைப் பாவத்தையும நினைந்து வெம்பித் துடித்தான். ஆயினும் அரசன் வேள்விக்கு இடையூறுவரலாகாதென்று துணிந்து அடக்கமாயிருந்து அதனை முடிக்கும்படி முன்னவனுக்குக் கட்டளையிட்டுவிட்டு இவன் யாருக்குந் தெரியாமல் அடவியில் புகுந்து அப்பிரமகத்தி நீங்க அருந்தவம் புரிந்தான். பன்னீராண்டு வரையும் தவநிலையில் நன்னீர்மையோடு மன்னியிருந்து ஒருவாறு அப் பாவக் கழிவு செய்து இவன் மீண்டு வந்தான். அவ்வமயம் முன் குறித்த மகத்தை முடித்து மன்னவன் உதவியைப் பெற்றுச சிறந்த செல்வ நிலையில் அம் முன்னவன் அந்நகரில் உயர்ந்திருந்தான். இவன் வரவினை யறிந்து அவ்வஞ்சன் வயிறெரிந்தான். இவன் வந்தால் தன் செல்வததில் பாதி தரவேண்டி வருமேயென்று அவன் கடுஞ் சூழ்ச்சி செய்து அரசனிடம கொடுங் கோள் மூட்டினன். "இவன் கொலைசெய்த பாவி; நம் நாட்டில் குடிபுகலாகாது" என்று முடிவு செய்துரைத்தான். அரசனும் நம்பி இவனை அநாதரவு செய்தான். தான்செய்த கொலைப்பாவத்தை நீக்கும்பொருட்டுத் தண்ணளியோடு சென்று தவம் புரிந்து வந்த புண்ணிய சீலனாகிய இவனைச் சிறிதும் போற்றாது அப்பொல்லாதவன் அன்று போக்கிவிடுத்தான். அவன் கொடுமையை நினைந்து நினைந்து குலை துடித்தானாயினும் இருமையினும் அவன் இழிந்துபடுவானே என்று இவன் இரங்கி யேகினன். பின்பு இரவியை நோக்கிக் கடுந் தவஞ் செய்தான். இவன் தவநிலைக்கு மகிழ்ந்து அக்கதிரவன் அமரர் புடைசூழ எதிர்வந்து தோன்றினன். இவன் எழுந்து வணங்கினன். உனக்கு வேண்டியது என்ன? என அவன் விழைந்து வேண்டினன். "இறந்துபட்ட என் தந்தையார் சிறந்த பதத்தில் விளங்கவும, அவரை அறியாது கொன்ற எனது தமையனார் அப்பாவம நீங்கி உயர்ந்த நிலையில் இலங்கவும் அருள்புரியவேண்டும" என்று இவன் உள முருகிப் பணிந்து வேண்டினன். பிரதியுபகாரம் கருதாத மறுத்

தும் இவன் பெருந்தன்மையை மகிழ்ந்து இரண்டு வரங்களையும் ஒருங்கே அவன் அருளியகன்றான். தன்பால் நண்பொரு சிறிதுமின்றிக் கொடுமை பல செய்த கொடியவனிடத்தும் பண்பு குன்றாமல் இனிமையொடு நின்று இதம்புரிந்த இவனது அருமையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். நண்பாற்றாராகி நயமில செய்வார்க்கும் மேலோர் பண்பாற்றுவார் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது. இவனது குணநலங்களைக் குறித்து அமரரு முனிவரும் மிக மகிழ்ந்து பலபடியாகப் பாராட்டியுள்ளார்.

"வணங்கி நின்றிடும் ரயிப்பியன் மகன் முகந் தெரிந்து
பிணங்கில் தேவரும் பானுவும் பேசுவார் பிள்ளாய்!
இணங்குநின் பிரமசரிய நிலைமையால் இழைகரும்
குணங்கொள் மாநவக்கொள்கையான் மறைபயில் குறிப்பால் (க)

புனிதனுயினை; பராவசு பொய்மொழி புகன்று
தனியகற்றவும் பொறுத்தனை; தந்தையைக் கொன்ற
துனியொருநக நீள் விரதமற்றவன் றனைச் சுட்டி
நனிபுரிந்தனை; நவை யுனக் கென் கொலோ நவில்வார்? (உ)

தாவிலுன் றனைக் கொள்ளுதும்; தள்ளுது மவனை;
நீ வரம்பெற வேண்டிய நிகழ்த்துதி யென்றார்
தேவருஞ் சுடர்த் திவாகரச் செல்வனும் சிந்தை
நோவுதீர்ந் தருவாவசு அவர்க்கெதிர் நுவல்வான். (ங)

ஐயனுருயிர் பெற்றெழு மவ்வர மருளிச்
செய்வேண்டுவ லென்றனை னீந்து பின் தேவர்
பொய்யிலாய் இனம் ஒருவரங் கேளெனப் புகன்றார்
மையல் தீரருள் சேரருவாவசு வகுப்பான். (ச)

தன்னை யன்றனைத் தன் கையாற் றடிந்தவத் தவறு
முன்னை யோனையும் விடவருள் வீரென மொழிந்தான்;
பன்னுவாரவர் தாதையாம் பனவனைச் கொன்றாற்
கென்னையோ பரிகாரம் யாம் இயம்புவ தினியே." (ரு)

(சேதுபுராணம்)

மேற்குறித்த சரிதம் இதன்கண்ணும் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. பகைமைகொண்டு தனக்கு இடர் செய்தானுக்கும் பண்புபாராட்டி இவன் இதம்செய்ததும், இமையவரும் புகழ்ந்து

இவனுக்கு இனிதருள் புரிந்ததும், இவனது புனித வியல்பும் பிறவும் இதனால் இனிதறியலாகும்.

**தீங்கு புரிவோர்க்கும் சீரியோர் நன்மையே**
**தாங்கிப் புரிவார் தயை.**

நண்பு செய்யார்க்கும் பண்புடையார் நயஞ் செய்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

999. சார்ந்து நகாத சலன்முன் உலகிருந்தும்
சூர்ந்திழிந்தான் என்னே குமரேசா—நேர்ந்து
நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள். (௯)

இ—ள்.

**குமரேசா!** ஒருவரோடும் உவந்து நகாத சலன் ஏன் வீணே ஒழிந்து போனான்? எனின், நகல் வல்லர் அல்லார்கு மா இரு ஞாலம் பகலும் இருள் பால் பட்டன்று என்க.

இது, பண்பில்லாதார் துன்புறுவரென்கின்றது.

நகல் = ஒருவரோடு ஒருவர் அளவளாவி மகிழ்தல்.

வல்லர் அல்லார்க்கு = நகுதலாகிய அந்நயம் புரிந்து நில்லார்க்கு. வன்மை அன்மைகளை மருவி வைத்தது மாட்டாமை யாகிய அவர் தன்மை தோன்ற.

மா இரு ஞாலம் = மிகப்பெரிய வுலகம். மா இரு என்னும் விசேடணங்கள் ஞாலத்தின் அருமைபெருமைகளை உணர்த்தி நின்றன. அல்லார்க்கு ஞாலம், பகலிலேயும் இருள்பட்டிருக்கும் என்றது ஒன்றுந்தெரியாது உளக் கண் குருடாய் என்றும அவர் குன்றியிருத்தல் கருதி.

பகலும் இருள்பாற் பட்டன்று = பகற்பொழுதும் இருளின் கட் கிடந்ததாம். படுதல் = கிடத்தல், விழுதல். பட்டது என்பது பட்டன்று என அன்சாரியை பெற்று வந்தது. "உயிரினும் சிறந்தன்று நாணே" (தொல்காப்பியம்) என்புழிச் சிறந்தது எனற்பாலது சிறந்தன்று என வந்திருத்தல் காண்க. பகலும் என்பதில் உம்மை சிறப்புணர நின்றது.

மேல், சிறந்த பண்பில்லாதவர் இழிந்து படுவரென்றார்; இதில், அவர் என்றும் இருள் பட்டிருப்பர் என்கின்றார்.

பண்புடையராய் நின்று பிறரோடு உறவாடி மகிழாதார்க்கு மிகவும் பெரிய இவ்வுலகம் பகலின்கண்ணும் இருள் பட்டிருக்கும் என்பதாம்.

எல்லாரோடும் நன்கு கலந்து நகுதலைச்செய்து மகிழமாட்டாதார்க்கு உலகியல் ஒன்றுந் தெரியாது; இன்னா முகத்தராய அவர்பால் ஒருவரும் இனிது நெருங்கார் ஆகவே அவர் கிணற்றுத் தவளைபோல் தாம் கண்டதே காட்சி கொண்டதே கோலமாய் மண்டிமிகுந்து மருளுற்றிருப்பர் ஆதலால் அவர்க்குப் பகலும் இருள்பட்டிருக்கும் என்றார்.

பண்புடைமை என்னும் இவ் அதிகாரத்தில் நகுதலை எடுத்துக் காட்டியது என்னை? எனின், எளிய செவ்வியராய் நின்று யாரோடும் இனிதுறவாடி அருள் செய் தொழுகி நகுதலாலே தான் பண்புடைமை அமைவதாகும்; இங்ஙனம "நகல்வல்லரல்லார்க்கு" அவ்வுடைமை கிடையாததலால் அதனைத்தெளிவாக விளக்கி அதனால் எய்தும் இழவினை இங்ஙனம் உணர்த்தியருளினார் என்க.

ஒருவரோடும உவந்து பேசாமல் சூம்படைந்து கூம்பியிருக்கும் ஒருவன் பொந்துள் புகுந்து கிடக்கும ஆந்தைபோல் சார்துணையும் ஆர்துணையின்றித் தயங்கிக் கிடப்பன்என்பதுகுறிப்பு.

எல்லா வளங்களையும் ஏந்திநிற்கும் இஞ்ஞாலம் பண்பில்லானுக்கு இனிதாய்ப் பயன்தராதென்ற இதனால்அவ்வுடைமையின் நயனுடைமை நன்கு புலனாம்.

இனிய பண்புடையனாய் நின்று மக்களோடு கலந்துறவாடி உவந்து வாழாதானுக்கு இவ்வுலகம் இனிதாயமைந்திரா தென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சலன் பால் உணரப்படும்.

## கதை.

சலன் என்பவன் சூரிய குலத்து மன்னருள் ஒருவன். இவன் தலைமையான செல்வமுடையனாயினும் கலைநலமில்லாதவன். பொறியின்பங்களில் மிகுந்த காதலுடையனாய் எப்பொழு

தும் காமச்சுவையிலாழ்ந்து இவன் களிப்புற்றிருந்தான். நல்லவரை யாதும் நயந்து கொள்ளாத இவனைப் புல்லர் பலர் புடைசூழ்ந்து நின்று அல்லல் புரிந்து வந்தாராதலால் இவனது ஆட்சி மிக அவலமுற்றிருந்தது. தளன், பலன் என்பவர் இவனுடன் பிறந்திருந்தனர். அத்தம்பியரிருவரும் இவன்போலவே தருக்குங்களிப்பும் கொண்டு தகாத வழிகளில் அவாவியிருந்தனர். அரசுமுறையைச் சிறிதும் கவனியாமல் யாரோடும இனிதுரையாடாமல் அந்தப்புரத்திலேயே இவன் அடங்கிக் கிடந்தானாதலால் உலகியல் ஒன்றுந்தெரியாமல் இழிநிலையில் ஓங்கியிருந்தான். ஒருநாள் கொடியர் சிலருடன் கூடி வேட்டைக்குச் சென்றான். அங்கு வேட்டையாடி வருங்கால் அவ்வனத்திடையிருந்த வாமதேவர் என்னும் மாமுனிவரைக் கண்டான். அவரது தவச்சாலைக்கு அருகே மந்திரமுறையோடமர்ந்த சுந்தரமான இரண்டு குதிரைகள் இந்திரன் பரிபோல் இனிதமர்ந்து நின்றன. அவற்றை நோக்கி இவன் ஆசை மீக்கூர்ந்தான். அப்பரிகள் இரண்டையும சிறிதுபோது தனக்கு உதவியருளின் வேட்டையை முடித்துவிட்டு விரைந்து வந்து விடுத்துச் செல்கின்றேன் கொடுத்தருள வேண்டுமென்று அமமுனிவரை இவன் அடுத்துக்கேட்டான். பேரருளாளராதலால் அப்பெரியவர் யாதும் தடை சொல்லாமல் "கொண்டு போ" என்றார். கொண்டு சென்ற இவன் அவற்றின் வேகம் அறிவு மேன்மை பான்மை முதலிய நலங்களைக்கண்டு பெரு மோகமுற்று மீண்டு வந்து முனிவரிடந் தராமல் தன் நகரை நோக்கி நடந்தான். இவன் போக்கினை நோக்கி அவர் புன்னகை செய்து இன்னுரையோடு இனிது அழைத்து அப்பரிகளின் இயல்பினை விளக்கி முன்சொன்னபடி அவற்றை இங்கு விடுத்துச் செல்க என்று வேண்டி மொழிந்தார். வறியராயுள்ள உமககு இப்பரிகள் எற்றிற்கு? என்று அவன் மறுத்துரைத்துச் சடுத்தெழுந்தான். இனைது அறிவின்மைக்கிரங்கி அவர் அறம்பல கூறினார். யாது கூறினும இவன் அறிந்து தேருமல் நிமிர்ந்து நின்று தன் அருகிருநத படைவீரர்களை யழைத்து இவரைக் கொன்று விடுஙகள் என்று குறித்து விடுத்தான். நன்றி மறந்து அன்று இவன் நின்று செய்த கொடுமைகளை

நினைந்து அவர் சுன்றி நோக்கினர். குணமென்னுங் குன்றேறி நின்ற அவர்கொதித்து நோக்கவே உடனே ஆர்த்து வந்த படைகள் யாவும் அழிந்தொழிந்தன. அதன்பின் இவனும் அடியோடு மாண்டான். இனந்தெரியாமல் நடந்து இவன் மடிந்தொழிந்ததைக் கேட்டு அனைவரும் கடிந்து இரங்கினர். நிறைந்த திருவுடையனாயிருந்தும் பண்பில்லாமையால் யாரோடும் கலந்து மகிழாமல் இவன் இழிந்து தொலைந்தான். உலக நிலை தெரியாமல் கண் குருடுபட்டு இவன் ஒழிந்ததைக்குறித்து அக்காலத்தவரெல்லோரும் இகழ்ந்துபழித்தார். நகல்வல்லரல்லார்க்கு மாயிரு ஞாலம் பகலிலும் இருள்பட்டிருக்குமென்பதை உலகம் இவன்பாலுணர்ந்து நின்றது. (விரிவை வியாச பாரதத்தில் காண்க.)

ஓகை புரியான் உரையான் உலகுறினும்
கூகைபோற் பட்டான் குருடு.

பண்பில்லாதானுக்கு உலகியல் தெரியாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1000. அன்று குலிதன் அடைந்த பெருஞ் செல்வம்
குன்றிநின்ற தென்னே குமரேசா—நன்றான
பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று. (௰)

இ—ள்.

குமரேசா! குலிதன் பெற்றிருந்த பெருஞ் செல்வம் ஏன வறிதே கழிந்தொழிந்தது? எனின், பண்பு இலான பெற்ற பெருஞ் செல்வம் நன்பால் கலம் தீமையால் திரிந்தற்று என்க.

இது, பண்பில்லான செல்வம் பழிபடுமென்கின்றது.

சேர்த்த என்னாது பெற்ற என்றது அவன அறிவோடு முயன்று ஈட்டியதன்று; தானாக அது ஈண்டியுள்ளது; என அதன் நிலையினை யறிந்து அதனால் அவன் இழிவினை உணர்ந்து கோடற்கென்க.

நன்பால் என்றது பசுவின் பாலை. அதற்கு நன்மையாவது எருமைப் பால் முதலிய மற்றப் பால்களைவற்றினும் மக்கள் உணவுக்கு உரிமையாய் இனிமையமைந்திருக்குந் தன்மை. என்னை?

"பாலர் கிழவர் பழஞ்சுரத்தோர் புண்ணுளி
சூலையர் மேகத்தோர் துற்பலத்தோர்—ஏனுமிவர்
எல்லார்க்கும் ஆகும் இளைத்தவர்க்குஞ் சாதகமாம்
நல்லாய் பசுவின்பால் நாட்டு". (தேரையார்)

என்றபடி எப்பாலவர்க்கும் இனிதாய் நலம் பயந்து அப்பால் இருத்தல் காண்க.

உவமைக்கு நன்மையும், பொருளுக்குப் பெருமையும் அடைகளாக வைத்தது அவற்றின் தன்மை தோன்ற.

கலம் = கொள்கலம்; பால் நீர் முதலியவற்றை யிட்டுவைத்தற்கு இடமாயிருக்கும் பாத்திரம் ஆகிய இது இடுங்கலம் எனவும் கூறப்படும். "இடுங்கலம் கொள்கலம் பாண்டம் என்ப" (பிங்கலந்தை).

தீமை = குற்றம். திரிந்தற்று = நிலைமாறியதுபோலாம்.

கலம் தீமை என்பது வேற்றுமைப் புணர்ச்சியாதலால் நிலைமொழியீற்றிலுள்ள மகரம் கெட்டு ஈண்டு மெலிந்து நின்றது. பெரும்பாலும் வலிந்துவரும். "வேற்றுமை மப்போய் வலிமெலி யுறழ்வும்—அல்வழி யுயிரிடை வரினியல் பும் முள" (நன்னூல்)

மேல், பண்பில்லாதவர்க்கு இன்பமில்லை என்றார்; இதில், அவரெய்திய செல்வமும் இழிந்துபடும் என்கின்றார்.

பண்பில்லாதவன் அடைந்துள்ள பெருஞ் செல்வமானது நல்ல பால் தான பொருந்தியுள்ள கலத்தின் குற்றத்தால் திரிந்துபட்டதுபோல் இழிந்து கெடும் என்பதாம்.

சுவை வீரிய முதலிய இனிமைகள் அமைந்து பால் நல்லதாயிருந்தாலும் அதனைக் கொண்டிருக்கும் கலம் தீயதாயின் யாரும் பருகமுடியாதபடி அருவருக்கப்பட்டு அது பாழ்படும்; அதுபோல் அறம் பொருள் இன்பங்களை வளர்த்தற்குரியநயங்கள் முழுதும் நன்கமைந்து செல்வம் [illegible]ந்திருந்தாலும் அதனை வைத்திருப்பவன் குணங்கெட்ட புல்[illegible]யின் அது ஒருவருக்கும் பயன்படாதபடி வீணே இழிந்தொழியும் ஆதலால் "பண்பிலான் செல்வம், கலந்தீமையால் பால் திரிந்தற்று" என்றார். இடவகையால் பால் இழிந்து கெட்டாற்போல் இனநிலையால் செல்வம் கழிந்து கெடும் என்றபடி.

எல்லா நலங்களையும் ஆக்க வல்ல செல்வம் பண்பில்லான் கையிற் படின் யாதொரு பயனும் இல்லாமல் இழிந்துபடும் எனற இதனால் அவனது கழிபேரிழிவு எளிது புலனும்.

"மூத்திரக் கலசத்துற்ற முதியநல் லானபால் அந்நோ
மாத்திரை யளவும் இன்ப மருவிடா தழிதல் போல
நேத்திர மனைய செல்வம் நீர்மையில் நீசர் கையில்
கூர்த்திருந திழிந்து வீணை குலைந்தழிந் தொழிந்து போமே''

என்பதும் ஈண்டுணர்ந்து கொள்க. அடிகள் குறிப்பை இஃதடியொற்றி வந்துள்ளமை காண்க. பண்பில்லாரை மூத்திரக் கலத்தோடு ஒப்பவைத்தது பண்புடையார் நல்ல பாத்திரங்களாயுள்ளமை தோன்ற என்க.

நஞ்சு தோய்ந்ததும் இழிந்தன படிந்ததுமாகிய புன்கலத்தில் பொருந்திய பால் யாரும் அருந்தலாகாவண்ணம் இழிந்துபடுதல்போல் பண்பில்லான் செல்வம் ஒருவருக்கும் உதவாமல் கழிந்துபடும் என்றவாறு. இது தொழிலுவமம்.

பண்பில்லாதவன கடுநெஞ்சும், கொடுமுரணும், அருஞ்செய்வியும் இன்னு முகமுடையனு யிருப்பனுதலால் அவன்பாலுள்ள செல்வம் ஒருவருக்கும் பயன்படாதென்பது கருத்து.

- பண்புடைமையானது மிகச் சிறந்த நலமுடையது; மக்கள் அதனை யடைந்துகொள்ளவேண்டும்; தாம் நெறியுடையராய் நின்று பிறரியல்புகளை நுணுகியறிந்து யாவர்மாட்டும் எளிய செவ்வியராய் இதம்புரிந் தொழுகுவோர்க்கே பண்புடைமை எளிதமைவதாகும்; அதனையுடையவர் அன்பும் அமைதியுமுடையராய் இன்பு செய்திருப்பர்; சிறந்த மககட்பிறப்பை யடைந்திருந்தாலும் பண்பில்லையானல் அவர் இழிந்த மாக்களே யாவர்; அதனையுடையாரை உலகமெலாம் உவந்து போற்றும்; அஃதில்லாரை எல்லாரும் எள்ளுவர்; அறிவையும் பொருளையும் எவ்வளவு அடைந்திருந்தாலும் அவரை ஒருவரு மதியார்; எனப் பண்புடைமையின உண்மை இன்மைகளால் உளவாகும் தன்மைகளை புணர்த்தி அவ்வுடைமையை ஒவ்வொருவரும் உறுதியாக அடைந்து கொள்ளும்படி இங்ஙனம் உணர்த்தியருளினர் என்க.

பண்பில்லான் பொருள் பிறர்க்கு யாதொரு பயனுந் தராது வறிதே பாழ்படும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குலிதன்பால் உணரப்படும்.

## கதை.

குலிதன் என்பவன் இற்றைக்கு நானூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சோழநாட்டிலே வாழவந்தான் என்னும் ஊரிலிருந்தவன். இவன் வன்கண்மையுடையவன். இவன் தந்தை வஞ்ச நெஞ்சினனாயினும் வரும் பழிபாராது வணிக நிலையில் பெரும் பொருளீட்டினான். ஒருமுறை மறுபுலம் போயிருந்து மீண்டு கடல் கடந்து வருங்கால் இடையே கலங் கவிழ்ந்தொழிய அங்கு அவன் இறந்தொழிந்தான். அதன்பின் அச்செல்வ முழுவதும் சேரப்பெற்று இவன் சிறந்து விளங்கினான். வளம்பல அடைந்து இங்ஙனம் உயர்ந்திருந்தாலும் இழிந்த இயல்போடு மிகுந்து நின்றானாதலால் அறிஞரெவரும் இவனை நெருங்காதகன்றார். நன்மை யாதும் நயவாது புன்மையும் செருக்கும் பொருந்தி இவன் பொல்லாங்கு பல புரிந்தான். புல்லர் பலர் புடை சூழ்ந்து இவனுக்கு நல்லவராய் நடித்து அல்லன செய்து வந்தார்; ஆயினும் ஒருவருக்கும் ஒன்றும் நல்காமல் இவன் உளங் கரந்து நின்றான். இங்ஙனம் கடு உலோபியாயிருந்தாலும் சிவிகை முதலியவற்றிலேறி ஆரவாரத்தோடு இவன் களித்துத் திரிந்தான். ஒருமுறை தத்துவப்பிரகாசர் என்னும் வித்தகர் இவனைக் கண்டார். அவர் அருளும் அமைதியுமுடையவர். பொருள் விரும்பி வந்துள்ளார் என்று நினைந்து அவரை இவன் சிறிது மதியாமல் சினந்து பேசினான். இவனது சிறுமைக்கிரங்கி அவர் சீறியகன்றார். கள்ளுண்டு பித்தேறிய குரங்குபோல் தலை கால் தெரியாமல் இவன் துள்ளித் திரிதலை யுள்ளி அவர் எள்ளி நகைத்தார். இவனைக் குறிப்பாக இகழ்ந்து அவர் பல கவிகள் சொல்லியுள்ளார். அவற்றுள் ஒன்று அடியில் வருவது காண்க.

“குரங்குமாய் நண்டு கட்டித் தேளும் கொட்டிக்
குடியாத மதுக் குடித்தே பேயும் ஏறி
இரங்கவரும் காஞ்சொறியின் பொடியுந் தூவி
இஞ்சி தின்று கொள்ளி பிடித்தெழுந்தாற் போலத்

தருங் கருணை யில்லாத புல்லர் வாழ்வில்
தண்டிகையின் மீதேறிச் சம்பத் தேறிக்
கருங்கைமதக் களிறேறிக் கழுவி லேறிக்
காடேறி நாடேறித் திரிவார் கண்டீர்''.
(தத்துவப்பிரகாசர்)

இங்ஙனம் அறிஞர் பலரும் இகழ்ந்துபோக இவன் இழிந்து திரிந்தான். அன்பு ஈகை முதலிய குணநலங்கள் சிறிதுமின்றிச் செருக்கித் திரிந்த இவன் முடிவில் செல்வங் குன்றிச் செயலழிந்து நின்றான். இவன் பொருள் ஒருவருக்கும் இனிது பயன்படாமல் வறிதே கழிந்தொழிந்தது. அறம்பொருளின்பங்களைப் பயத்தற்குரிய பெரும் பொருளாயிருந்தும பண்பில்லாதவனாகிய இவன் கைப்பட்டிருந்தமையால் யாதொரு பயனும் படாமல் அது பாழாய்த் தொலைந்தது. இவனும் பழியடைந்து மாண்டான். நன்பால் கலந்தீமையால் திரிந்ததுபோல் பண்பில்லான் செல்வம் பிறர்க்குப் பயன்படாமல் இழிந்துபோம் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது.

அருகல தாகிப் பலபழுத்தக் கண்ணும்
பொரிதாள் விளவினை வாவல் குறுகா
பெரிதணிய ராயினும் பீடிலார் செல்வம்
கருதுங் கடப்பாட்ட தன்று. (நாலடியார்)

குணமிலான் செல்வம் கொடும்பிணமேற் கொண்ட
மணமில் மலராமே மற்று.

பண்பில்லான் செல்வம ஒருவருக்கும் பயன்படாதென்பது இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

எளிய செவ்வியுடையராய் யார்மாட்டும் அருள்புரிந்து நிற்போரே பண்புடையராவர். அன்புடைய குலமக்களுக்கே அப்பண்புடைமை இனிதமைவதாம். பண்பு அமையாவழி மக்கட் பிறப்பால் பயனில்லையாம். பண்புடையாரை உலகம் பாராட்டி நிற்கும். பகைமையுற்றிருந்தாலும் அவர்பால் இனிமையே உண்டாம். அவர் இல்லையாயின் உலகம் இன்புற்றிராது. பண்பில்லா வழி அறி

வால் யாதொரு பயனுமில்லை. நண்பாற்றாதார்க்கும் பண்புடையார் நயமே செய்வர். இனிய பண்பில்லார்க்கு இவ்வுலகம் இன்னாதா யிருக்கும். அவர் சிறந்த செல்வமுற்றிருந்தாலும் சீரழிந்தொழிவர்.

100-வது பண்புடைமை முற்றிற்று.

---

# 101-ம் அதிகாரம் நன்றியில் செல்வம்.

அஃதாவது நன்மையில்லாத செல்வத்தின் தன்மை. அறம் பொருள் இன்பங்களாகிய நலங்கள் யாதும பயவாது வீணே இழிந்துபோகும் பொருளின் இயல்பு கூறுகின்றார் ஆதலின் இது நன்றியில் செல்வம் என நின்றது. உடையானது இழிவு உடைமையின்மேலேற்றப்பட்டது. 'பண்பிலான் பெற்ற பெருஞ் செல்வம் நன்பால் கலந்தீமையால் திரிந்தற்று'' என முன் அதிகாரத்தின் இறுதியில் குறித்ததையே ஈண்டு விரித்துணர்த்துகின்றாராதலால் பண்புடைமையின்பின் இதுவைக்கப்பட்டது.

1001. நின்று பெரும்பொருளை நீட்டிவைத்தும் கும்பனேன்
குன்றி யழிந்தான் குமரேசா—ஒன்றவே
வைத்தான்வாய் சான்ற பெரும்பொருள் அஃதுண்ணான்
செத்தான் செயக்கிடந்த தில். (க)

இ—ள்.

குமரேசா! பொருளை மிகுதியாகத் தொகுத்து வைத்தும் கும்பன் ஏன் ஒரு பயனும கொள்ளாமல் இழிந்தொழிந்தான்? எனின், வாய்சான்ற பெரும்பொருள் வைத்தான் அஃது உண்ணான் செத்தான்; செயக்கிடந்தது இல் என்க.

இது, உலோபி உயிருடனிருந்தாலும் இறந்தவனேயாவனென்கின்றது.

நின்று நீட்டிவைத்தும் என்றது அவன் ஊக்கி நின்று முயற்சித்துப் பொருளை மிகவும் ஆக்கிவைத்திருந்தமை கருதி.

வாய் = இடம். வாய் சான்ற பெரும் பொருள் என்றது உள்ள இடமெல்லாம ஒருங்கே அமைந்துகொள்ளும் வண்ணம் அமைந்த பெருஞ் செல்வம் என்றபடி. பெருமை சால்புகளைப் பொருளுக்கு அடையாக வைத்தது அதன் மிகுதி நிறைவுகளில் யாதும் குறைவின்மை தோன்ற. "வளம் பிழைப்பறியாது வாய் வளம் பழுனி" (மலைபடுகடாம்) என்றபடி நிரம்பிய வளங்களை அடைந்த ஒருவன் நடந்துகொள்ளவேண்டிய திறங்களை மறந்துவிடுவனாயின் அவன் இறந்துபட்டவனேயாவன் என இஃது துணர்த்துகின்றது.

செயக்கிடந்தது இல் = செய்ய நின்றது வேறு யாதொன்றும் இல்லை. எல்லாம் அறவே தொலைந்ததென்றபடி.

செத்த சவம் பின்னர் யாதும் செய்யமாட்டாது; அது போல் உலோபி வைத்த பொருளை ஒன்றும் தொடாமல் செயலற்றிருப்பன் ஆதலால்செத்தபிணத்தோடு அவன் ஒப்பநின்றான்.

இடம் நிரம்பும்படி பெரும் பொருளை யீட்டி வைத்து உலோபத்தால் அதனைஉண்ணாதவன் உயிருடனிருப்பினும் செத்தவனே யாவன்; அதில் அவன் செய்ய நின்றது வேறு யாதும் இல்லை என்பதாம்.

அஃது ஈயான் என்றது "உண்ணான்" என்றது தனக்குப் போய்த் தானம் என்றபடி முன்னதாகவுள்ள தன்னையேபேணாதவன் பின்னதாய அதனை எண்ணவும் செய்யானாதலால் முதலுக்கேமோசமான அவனது அவ் இழிநிலை தோன்ற என்க.

பொருளை ஈட்டுவது போகந் துய்த்தற்கே; அஃதாவது இனியன உண்டும், அரியன கேட்டும், நறியன முகர்ந்தும், நல்லன் பார்த்தும், உரியன தோய்ந்தும் உவந்து கோடற்கேயாம்: இங்ஙனம ஐம்புலன்களும் ஆர அனுபவியாமல் பொருளை ஒருவன் பொதிந்துவைத்திருப்பானாயின அதனால் யாதொருபயனும் இல்லாமல் வறிதே அவன் ஒழிவன் ஆதலால் "வைத்தான் உண்ணான் செத்தான்" என்றார். இவ்வினைமுற்றுக்கள் மூன்றனுள் முன்னதை வினையெச்சமாக் கொண்டு வைத்து உண்ணாதவன் செத்தான் என்று கொள்க.

பல ...ங்களிலும் சிதறிக் கிடந்த நெல் முதலிய தானியங்களைக் கூட்டித் தொகுத்து ஓரிடத்தே குவியல் செய்துவைத்து அதிலிருந்து யாதொரு பயனுங் கொள்ளாத துடைப்பம்போல் உலோபியர் பொருளைத் தொகுத்து வைத்தும் அதன் பயனை அனுபவியாது வறிதே கழிந்தொழிவர் என்றபடி.

"புல்லாதி சிதறினல் எல்லாம் பெருக்கி யொரு
புடைகுவியல் செய்த பின்னர்ப்
பொருந்து பயனென்று மறியாத சோதனி யெனப்
புவியில் பலவினை யியற்றி
எல்லா நிதிப் பொருளும் ஈட்டியொரு காசேனும்
இரவலர்க் கியாமலும்
எழில்பெறத் தானும் அனுபவியாமலுங் கழியும்
ஏழைகளில் ஏழையுண்டோ?"

உலோபியை விளக்குமாற்றோடு ஒப்பவைத்து ஏழை யென்றுகுறித்து இது விளக்கிநிற்றல்காண்க. சோதனி = துடைப்பம்.

உண்ணுன் செத்தான் என இங்ஙனம் சினந்து வைத்தது தான் ஈட்டிய பொருளால் ஒரு பயனுங் கொள்ளாமல் வீணே அவன் கழிந்தொழிந்து போதலை நினைந்து வருந்தி என்க. வருத்தத்தால் நேர்ந்த இரக்கத்தானும் உருக்கத்தானும் இங்ஙனம் ஏச நேர்ந்தது.

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்துக்
கேடுகெட்ட மானுடரே கேளுங்கள்—கூடுவிட்டிங்கு
ஆவிதான் போயினபின் யாரே யநுபவிப்பார்
பாவிகாள்! அந்தப் பணம். (ஔவையார்)

உலோபிகளைப் பாவிகள் என்று வைது பொருளை வைத்து ஒழிந்துபோகாமல் துய்த்து மகிழும்படி ஔவையார் அவர்க்கு இதில் அறிவுறுத்தியிருக்கும் அழகைப் பார்க்க. பொருளைக் கைக்கொண்டவர் தாம் உண்டு மகிழ்ந்தும், பிறர்க்கு உவந்து உதவியும் உறுதியோடமைந்து வாழவேண்டும்; இன்றேல் இம்மையும் மறுமையும் இழந்திழிவர்; உயிரோடிருந்தாலும் அவர் இறந்தவரே யாவர்; என உறுதி தோன்ற வுணர்த்திச் செல்வம் பெற்றால் உடனே மக்கள் செய்துகொள்ளவேண்டிய கிருத்தியத்தை இங்ஙனம் விளக்கியருளினார்.

"உண்ணாது வைத்தான் உறுதி நலமிழந்து
கண்ணனை செத்தான் கதியற்றான்—அண்ணாநீ
தேர்ந்து பொருளின் திறமறிந்து நல்லறத்தை
நேர்ந்து நுகர்ந்துய்க நின்று"

எனப் பண்டொரு தம்பி உலோபியாய் நின்ற தன் அண்ணனுக்கு வலியுறுத்தி உணர்த்தியுள்ளதும் எண்ணுள்ளத்தக்கது.

துய்த்துக் கழியான் துறவோர்க்கொன் றீகலான்
வைத்துக் கழியு மடவோனை—வைத்த
பொருளும் அவனை நகுமே உலகத்
தருளும் அவனை நகும். (நாலடியார்)

பொருளும், அருளும் நகும் என்றது இருமையும் இழந்து அவன் இழிந்துபடு மடமையைக் கண்டு.

"வைத்துப் பொருளைத் தானுகரான் வழங்கா னிருந்துஞ் செத்தானே
செத்தபின்னை யென்செய்வான்? தீயார் கொள்வர்; ஈட்டுதலான்
மெத்தும் வருத்தமேயன்றி வேறொன் றில்லை; ஆதலினால்
பொத்தும் வெறுக்கை நன்றிபுறல் புகிதது வழங்கலே யாகும்"

(விநாயகபுராணம்)

பொருளைப் பெற்றவன் துய்த்து மகிழவேண்டும்; இல்லையானால் அவன் செத்தான் என அச்சந் தோன்ற வுணர்த்தி உலோபிகட்கு அடிகள் இதில் உய்வு காட்டி அருளியிருக்கும் அருமையை யூன்றி யுணர்க.

தான் ஒன்றையும் நன்றாக அனுபவியாமல் பொருளைத் தொகுத்துப் பொதிந்து வைத்திருக்கும் உலோபி அதனை வீணே யிழந்து பழியோடு இழிந்தொழிவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கும்பன்பால் உணரப்படும்.

## கதை.

கும்பன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்தெண்ணூறு ஆண்டுகட்குமுன்னர் மகதநாட்டிலே கஞ்சபுரி என்னும் நகரிலிருந்தவன். இவன் வணிகர் மரபினன். வஞ்சமும் கொடுமையும்

மருவிய நெஞ்சினன். பேராசைக் கோர் தனிநிலையமா யிவன் பெருகி நின்றான். வர்த்தகத்துறையில் வரம்பு கடந்த வரும்படியடைந்து பெரும் பொருளுடையனாய் இவன் விளங்கி யிருந்தான். இங்ஙனம் நிறைந்த செல்வம அமைந்திருந்தும் ஒன்றையும் நுகர்ந்து கொள்ளாமல் இழிந்த இயல்பின் கண்ணேயே இவன் அழுந்தியுழன்றான். கடும்பற்றுள்ளம் கைம்மிகுந்திருப்ப நெடும்பழியோடு நீண்டு நின்ற இவன் முதிர்ந்த பருவத்தை யடைந்திருந்தும் உறுதி நலமொன்றையும் சிறிதும் கருதாது பொருளையே தொகுத்துப் பொதிந்து வைத்துப்பொங்கி நின்றான். இவனது நிலையினைக்கண்டு உறவினரனைவரும் உளம் வெறுத்திருந்தார். சிறந்த வுணவுகளை உண்ணாமலும உயர்ந்த வுடைகளை உடுக்காமலும மிகுந்த உலோபியாய் இழிந்த நிலையில் கழிந்து நின்ற இவனைப் புதையற்காத்த பூதம் என எல்லாரும் புறம்பழித்து நின்றார். இவ்வாறு அறம்புகழ் கேண்மைகள் அறவேயிழந்து நிரம்பிய வசையோடு நிமிர்ந்திருந்த இவன் முடிவில் கொடுநோய் கொண்டு படுகிடக்கையாய்ப் பாயிற்கிடந்தான். பலநாள் கிடந்துழந்தபின் ஒருநாள் உணர்ந்து கருதினன். பெரும் பொருள் வைத்திருந்தும் ஒருபயனும் கொள்ளாமல் ஒழிந்துபோக நேர்ந்ததே யென்று கழிந்து போன தனது நிலையினை நினைந்து நினைந்து இவன் கலுழ்ந்து கலங்கினன். இறந்துபடு முன்னம் சிறிது பொருளை அறம்புரிந்து போக வேண்டுமென்று துணிந்து விரும்பினன். ஆயினும் வாய் பேச முடியவில்லை. நோய் வாய்ப்பட்டு வாயெழாதபடி நொந்து கிடக்கும் இவன் அருகே அவ்வமயம் மருகி வந்தாள். கொஞ்சம் பொருளைக் கொண்டு வா என்று கையைக் குவித்து அவளிடம் இவன் சைகை காட்டினன். சாகப்போகிற சவத்திற்கு இப்பொழுது பொருள் எற்றுக்கு? என்று அவள் சாடையாக ஒரு புறம் சார்ந்து நின்றாள். அடுத்திருந்தவர் "ஏதோ அவர் கேட்கின்றாரே! அம்மா அதனைக்கொடுத்துதவுங்கள்" என்று எடுத்து மொழிந்தார். அதற்கு அவள், ஐயா! "அவர் விளாம்பழம் கேட்கின்றார்; இப்பொழுது அதனை உண்ணலாகாது; இது உங்களுக்குத் தெரியாதா?" என்று உறுதிபெறவுரைத்தாள். பின்பு

எண்ணுதனவெல்லாம் எண்ணியெண்ணியேங்கி உடனே இவன இறந்தொழிந்தான். உண்ணுது வைத்துப் பொருளை வறிதே இழந்து ஒழிந்து போன இவனியல்பினைக்குறித்துப் பலரும் இகழ்ந்து பேசினர்.

"கையாற் பொதித் துணையே காட்டக் கயற் கண்ணுள் அதனைக்காட்டாள், ஐயா விளாம்பழமே என்கின்றீர் ஆங்கதற்குப்பருவமன்றென், செய்கோ! எனச்சிறந்தாள்போல் சிறவாக் கட்டுரையாற் குறித்தவெல்லாம், பொய்யே பொருளுரையா முன்னே கொடுத்துண்டல் புரிமின்கண்டீர்". (சீவகசிந்தாமணி) என உலோபிகட்கு எடுத்துக்காட்டாகப் பின்னர்க் குறிப்போடு வைத்து இங்ஙனம் இவன் குறிக்க நின்றான். இவன் சரித நிகழ்ச்சி நகைச்சுவைக்கேதுவாய் அக்காலத்தில் பெரிதும் பரவி நின்றது. பொருளை அனுபவியாமல் உலோபத்தால் பொதிந்து வைத்தவன் செத்தவனே யாவன் என்பதை உலகங்காண இவன் உணர்த்தி நின்றான்:

சிறுகாலை யேதமக்குச் செல்வழி வல்சி
இறுகிறுகத் தோட்கோப்புக் கொள்ளார்—இறுகிறுகிப்
பின்னறிவா மென்றிருக்கும் பேதையார் கைக்காட்டும்
பொன்னும் புளிவிளங்கா யாம். (நாலடியார்)

இன்னவாறு அக்காலத்தவர் பலரானும் இவன் செய்கை குறிக்கப்பட்டுள்ளது. பிற்காலத்தவரும் இதனைப் பேணிக் கூறியுள்ளார்.

சாங்காலையோர் பிசுனன் பொருள் தானஞ்செய வுன்னித்
தேங்கான்மொழி மனைமைந்தரை விளித்தான் அவர்தெரிந்தே
யாங்காயவ னுரைப்பாவிதம் அவன்மேல் விழுந் தழுதார்
தாங்காதவ னுயிர் நீர்த்தனன் தனம்போல் பகையுளதோ?
(நீதிநூல்)

ஆயா தறிவயர்ந் தல்லாந் தகவிடத்து
மாயா நிதிய மனைச்செறீஇ—வீயா
திறுகப் பொதியன்மின் இன்றுபோ நாளைக்
குறுக வருமரோ கூற்று. (புறப்பொருள்)

உண்ணுது வைத்தான் உயிரிருந்தும் செத்தான்காண்
நண்ணுன் ஒருபயனும் நாடு.

பொருளை அனுபவியாது வீணே இழந்தவன் செத்தவனேயாவன் என்பது இதனால் கூறப்பட்டது.

1002. பண்டொன்றும் ஈயாப் பதுமன்பின் பேய்ப்பிறப்பைக்
கொண்டிழிந்தான் என்னே குமரேசா—கொண்ட
பொருளானாம் எல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு. (உ)

-ள்.

குமரேசா! ஈயாது இவறிநின்ற பதும யோனி ஏன் பின்பு பேயாகி இழிந்தான்? எனின், பொருளான் எல்லாம் ஆம் என்று ஈயாது இவறும் மருளான் மாணாப்பிறப்பு ஆம் என்க.

இது, உலோபியர் இழிபிறப்படைவர் என்கின்றது.

ஆம் என்பன ஈரிடத்தும் பிரித்துக் கூட்டப்பட்டன.

மாணாப் பிறப்பு = மாண்பில்லாத பிறப்பு. என்றது இழி பிறப்பினை. அஃதாவது பேய்ப்பிறப்பென்க. நாய் கழுதை பன்றி முதலிய ஈனப்பிறப்புக்களைக் குறியாமல் இங்குப் பேயைக் குறித்தது என்னை? எனின், ஈயாத பாவத்தால் ஓயாத பசிநோய் எய்தி யுழந்துழலும் அதன் இயைபு கருதி என்க.

எல்லாப் போகபோக்கியங்களும் பொருள் ஒன்றினு ளாவாமாதலால் "பொருளான் எல்லாம் ஆம்" என்றார். "எல்லாம் பொருளிற் பிறந்துவிடும்" (நான்மணிக்கடிகை) என்றதுங் காண்க.

ஈயாது இவறும் = கொடாது உலோபஞ் செய்கின்ற. இவறல் என்பது பொருள்மேல் பெரும் பற்றுக்கொண்டு ஒன்றும் உதவாது உள்ளமிறுகி உலோபித்து நிற்றலை உணர்த்திவரும். "பற்றுள்ளமென்னும் இவறன்மை" "இவறல்-இறைக்கு ஏதம்" என முன்வந்துள்ளன ஈண்டெண்ணற்குரியன.

மருள் = மயக்கம். தெருண்ட அறிவின்றி மாறுபட்டு நின்று மருண்டு நோக்கும் தன்மையுடைமையாதலால் இது மருள் என

நின்றது. இவறுதற்குக் காரணம் பொருளினியல்பினை மருளொடு கருதி அவன் முறுகி நிற்றலே என்பது தோன்ற அதனை முதலிற் குறித்தார். "அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன் பெற்றான் பொருள் வைப்புழி" என்னும் உண்மை புணர்வு புன்மகனுக்கு உதியாதென்க.

மேல், ஈட்டிய பொருளைத் துய்த்துக் கழியாதவன் உயிருடனிருப்பினும் செத்த பிணத்தோடொப்பன் என்றார்; இதில், அவன் இறந்தபின்பு இழிந்த பிறப்பினை யடைந்துழல்வனென்கின்றார்.

பொருள் ஒன்றினால் எல்லா நலங்களும் உளவாம் என்று கருதி அதனை யாதும் கொடாது ஒருவன் உலோபம் செய்வனாயின் அம்மயக்கத்தால் அவனுக்குப் பேப்ப பிறப்பு உண்டாம் என்பதாம்.

"எல்லா அறங்களும், எல்லாப் புகழ்களும், எல்லாப் பெருமைகளும், எல்லா இன்பங்களும் பொருள் ஒன்று உண்டானால் உளவாம்; ஆதலால் அத்தகைய செல்வத்தை எவ்வகையிலும் யாதும் செலவு செய்யலாகாது; செய்யின் அது குறைந்துபோம் அதுபோனால் அவை யாவும் இலவா யொழியும்" என இன்னவாறு மடமையோடு மருண்டு நோக்கி இருண்ட மனத்தனாய் ஒருவன் இறுகிநிற்பனாயின் அவ் ஈன உலோபிக்கு இழிபிறப்பே உண்டாமென்பார் "இவறும் மருளான் மாணாப் பிறப்பு ஆம்" என்றார்.

ஈயாதிவறு மருளுடையார் இளிபிறப்படைந்து இழிந்து படுவரென்றதனால் ஈந்தருளும் தெருளுடையார் உயர் சிறப்படைந்து உயர்ந்து போவர் என்பதாயிற்று.

"ஈதற்குச் செய்க பொருளை" என்றபடி பொருள் கிடைத்தால் உடனே அதனைக்கொண்டு உயிர்க்கு ஊதியமாகிய ஈதலைச் செய்யவேண்டும்; அங்ஙனம் செய்யாது குருட்டுப்பிடியாய் ஒருவன் இறுகப் பற்றி நிற்பின் அவன் பின்னர் இழிந்த பிறப்பினை யடைந்து வருந்துவானென்க. இதனால் உலோபத்தின் தீமை தெளிவாய் உணரலாகும்.

பொருளைப் பொதிக்கிடக்கும் உலோபியை மருளன் என்றது தன் ஈன இயல்பினால் பின்னர்த் தனக்கு எய்த நிற்கும் இழி நிலையை உணராது உளம் களித்திருத்தல் கருதி. என்னை? செல்வம் சேர்ந்தபொழுது ஒருவன் இயன்றவரை பிறர்க்கு ஈந்து உபகரிக்கவில்லையானால் பின்னர் அவன் வறியனாய்ப் பிறப்பன்; அவ்வறுமையால் பாவம் செய்யப் புகுவன்; அத்தீவினை முடிவில் அவனை நரகத்துட் செலுத்திவிடும்; விடவே என்றும் துயருடையனாய் அங்கு அவன் இழிந்துகிடப்பன்; இங்ஙனம் இடையறாதபடி துன்ப நிலைக்கு ஏதுவாயுள்ள இவறலை இனிதென்று கொண்டு நிற்றல் இரங்கத்தக்கதோர் முழு மடமையாம் என்க.

"படர் நரகம் பாவத்தால்; பாவம் மிடியால்;
மிடியீ விலாமையினும்" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

**காரணமாலை** அணிக்கு உதாரணமாக இத் தன்மைகளின் அமைவையும், இவறுதலால் நேரும் இழவுகளை உணர்த்தி நிற்கும் நிலையினையும் இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க.

உலோபமானது ஈன நிலையில் அழுத்திவிடுமாதலால் மக்கள் அதனை ஒழித்தொழுகவேண்டும் என்பது கருத்து.

ஈயாது நின்ற உலோபி இழிந்த பிறப்பினை யடைந்து வருந்தி யுழல்வன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பதுமயோனியால் உணரப்படும்.

## கதை.

பதுமயோனி என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் இருந்தவன். இவன் மறையவர்மரபினன். சாதியில்வேதியனாயிருந்தும் நீதி யாதுமின்றித் தீது பலபுரிந்தான். பொருளில் மிகவும் பேராசையுடையனாதலால் அதனைப் பலவகையிலும் முயன்று தொகுத்து நிலைபெற வைத்து நிரம்பிய செல்வன் என இவன் நிமிர்ந்துநின்றான். வஞ்சமும் புன்மையும் மருவிய நெஞ்சினன். ஒருத்தருக்கும் ஒன்றும் உதவாத உலுத்தனாயினும் தன்னளவில் உயர்ந்த போகங்களை இவன் நுகர்ந்திருந்தான். உண்டியில் பெரு விருப்புடையவன். அதனை மிகுதியும் சுவைபட

செய்து தனியே வைத்துத் துய்த்து வந்தான். போகமகளிரிடத்தும் தன் பொருளைப் போக விடாது பொய்யுரையாடிப் புகுந்து பசப்பிப் பொருந்தி நுகர்ந்து மிகுந்த களிப்போடு இவன் விளங்கியிருந்தான். எவ்வளவு ஊழியஞ் செய்தாலும் எவர்க்கும் ஈயாமல் தருவதாக உறுதிகூறி முடிவில் யாதும் தாராது யாண்டும் இவன் அவம்புரிந்து நின்றான். "ஈயாது இவறும் பேயாம்பதடி இவன்" என எவரும் இகழ்ந்து வைதும் யாதும் நாணாது தன் வாழ்வினை இவன் வியந்து வாழ்ந்தான்.

"வாழ்ந்தனமென்று தாழ்ந்தவர்க்கு உதவாது,
தன்னுயிர்க் கிரங்கி மன்னுயிர்க் கிரங்காது,
உண்டிப் பொருட்டாற் கண்டன வெஃகி,
அவி யடுநர்க்குச் சுவைபகர்ந் தேவி,
ஆரா வுண்டி அயின்றன ராகித்
தூராக் குழியைத் தூர்த்துப் பாரா,
விழுப்பமும் குலனும் ஒழுக்கமும் கல்வியும்
தன்னிற் சிறந்த நன்மூ தாளரைக்
கூஉய் முன்னின்று தன் ஏவல் கேட்கும்
சிறாஅர்த் தொகுதியி னுறூஉப் பேசியும்,
பொய்யொடு புன்மைதன் புல்லர்க்குப் புகன்று
மெய்யு மானமு மேன்மையும் ஓரீஇத்
தன்னைத் தேறி முன்னையோர் கொடுத்த
நன்மனைக் கிழத்தி யாகிய வந்திலைச்
சாவுழிச் சாஅம் தகைமைய ளாயினும்
மேவுழி மேவல் செல்லாது; காவலொடு
கொண்டோ ளொருத்தி யுண்டி வேட்டிருப்ப
எள்ளுக் கெண்ணெய் போலத் தள்ளாது
பொருளி னளவைக்குப் போகம் விற்றுண்ணும்
மருளின் மடந்தையர் ஆகந்தோய்ந்தும்,
மாற்றல் செல்லாது வேற்றோர் மனைவயிற்
கற்புடை மடந்தையர் பொற்பு நனி கேட்டுப்
பிழைவழி பாராது நுழைவழி நோக்கியும்,
நச்சி வந்த நல்கூர் மாந்தர் தம்

விச்சையிற் படைத்த வெவ்வேறு காட்சியின்
அகமலர்ந் திவார் போல முகமலர்ந்
தினிது மொழிந்தாங் குதவுதலின்றி
நாளு நாளு நாள்பல குறித்தவர்
தாளி னாற்றலும் தவிர்த்துக் கேளிசழ்ந்து
இகமும் பரமும் இல்லை யென்று
பயமின் றொழுகிப் பட்டிமை பயிற்றி
மின்னின் அனைய தன் செல்வத்தை விரும்பி''

என்றபடி தன்னயமே கருதிப் பெருந் தீமையோடு இவன் பெருகி யிருந்தான். இங்ஙனம் இருந்த இவன்பால் ஒருநாள் தேவதத்தன் என்னும் ஒரு வேதியன் வந்தான். அவன் மிகவும் சாதுவானவன். வறுமையால் வாடிவந்த அவனைக் கண்ட பொழுது கொஞ்சம் இவன் குறுஞ் சிரிப்புக் கொண்டான். "அரிய வுணவுகளை இனிமையுற எனக்கு ஆக்கித்தருவையாயின் உனக்கு ஆவன தருவன்" என அவனை இவன் மேவியுரைத்தான். அதற்கு இணங்கியிருந்து ஓராண்டுவரையும் உரிமையோடு அவன் உழைத்துவந்தான். வந்தும் இவன் ஒன்றுங் கொடாமல் உளஞ் செருக்கி அவனை இகழ்ந்துவந்தான். உடுக்க நல்ல உடை இல்லையாதலால் ஒன்று உதவவேண்டும் என்று பணிவோடு நின்று ஒருநாள் அவன் பயந்து கேட்டான். அதற்குப் பதிலாக இவன் "உடை கடையிலுள்ளது; மடையனை உனக்கு இடையில் வேண்டாம்" என்று அவனை இளித்துரைத்தான். அருளும் நன்றியும் யாது மின்றிக் கொடு உலோபியாய் நின்ற இப்படு பாவியை அவன் கொதித்து நோக்கினான். "ஈயாத பாவியுன்றன் இரும்பொரு ளெல்லா மின்றே யிழந்து பொல்லாப், பேயாகிப் பிறந்துழந்து பெரும் பழியோடழிந்துழல்வாய் பெயர்கின்றேன் யான்" என்று அவன் பெயர்ந்து போனான். அவ்வாறே இவன் செல்வ முழுவதும் சேர இழந்து சீரழிந்திழிந்து ஒல்லையில் மாண்டு பேயாகி யுழன்று திரிந்தான். பொருளையீயாது இவறும் மருளால் மாணாப்பிறப்பு உண்டாம் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். (விரிவைப் பெண்ணை நதிப்புராணத்தில் காண்க).

மாசித் திங்கள் மாசின சின்னத் துணிமுள்ளின்
ஊசித் துன்ன மூசிய வாடை யுடையாகப்
பேசிப் பாவாய்! பிச்சையெனக் கையகலேந்திக்
கூசிக்கூசி நிற்பர் கொடுத் துண் டறியாதார்.
(சீவகசிந்தாமணி)

ஈயா திருந்தான் இரும்பழியே யெய்திநின்று
பேயா யுழல்வன் பிறழ்ந்து.

ஈயாத உலோபியர் பேயாய்ப் பிறப்பரென்பது இதனால் கூறப்பட்டது.

---

1003. மண்டி யிவறிநின்ற மங்கைமுன் இவ்வுலகம்
கொண்டுநொந்த தென்னே குமரேசா—கண்டென்றும்
ஈட்ட மிவறி யிசைவேண்டா ஆடவர்
தோற்ற நிலக்குப் பொறை. (௩)

இ—ள்.

குமரேசா! ஒரு நலமும் வேண்டாது பொருள் நசையே கொண்டிருந்த மங்கனை ஏன் இவ் உலகம் வெறுத்து நின்றது? எனின், ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர் தோற்றம் நிலக்குப் பொறை என்க.

இது, உலோபியர் பூமிக்குப் பாரமாவர் என்கின்றது.

ஈட்டம் இவறி = பொருளைத் தொகுத்து வைக்குந் திறத்தையே விரும்பி. இவறல் = பொருள்மேல் மேலும் மேலும் காதலித்தெழுதல்.

தோற்றம் = தோன்றி நிற்பது. என்றது உடம்பினை.

நிலக்கு = நிலத்திற்கு. நிலம் என்னு மகரவீற்று நிலைமொழி உருபோடுபுணருங்கால் அத்துச்சாரியைப் பெற்றுவரும். ஈண்டு அது தொக்கு நின்றது. "மஃகான் புள்ளிமுன் அத்தே சாரியை." (தொல்காப்பியம்). பொறை = சுமை. பொறுக்கப்படுவதென்பதாம். பொறுத்தல் = சுமத்தல், தாங்கல்.

ஈட்டம் இவறல் இசை வேண்டாமைக்கு ஏதுவாக முன் எண்ண நின்றது. இசை = புகழ். உயிர்க்குஉறுதிபாயிசைந்து

உலகெங்கும் தன் பெயரை இசைத்து நிற்றலால் புகழ் இசை என நின்றது. இசை வேண்டி நிற்பின் ஈட்டம் இவறல் குற்றமாகாது; ஏன்? எனின், அவ் இசையினை வளர்த்தற்கு அஃது இன்றியமையாமாதலாலெனக.

மேல், ஈயாத உலோபி மறு பிறப்பில் இழிந்துழல்வன் என்றார்; இதில், அவன் இம்மையில் எய்திநின்ற பிறப்பும் இழிக்கப்படும் என்கின்றார்.

பொருள் ஈட்டுதலொன்றையே நச்சி நின்று புகழை விரும்பாத மக்களது பிறப்பு இவ்வுலகத்திற்குப் பெரும் பாரமாம் என்பதாம்.

பொருளாசை மீக்கொண்டு அதனையே மேலும் மேலும் தொகுத்து வைத்து அறவினைகளில் ஒரு காசும் செலவிடாமல் உளமிறுகி நிற்பாராயின் அவர்நிலை இவ்வுலகினுக்கு எப்படியிருக்கும் என்று சிலர் வினவ அவ் ஆடவர் "தோற்றம் நிலக்குப் பொறை" யாம் என அவரை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்துகொள்க.

இசை வேண்டுதலை ஈண்டு இனிதாக எடுத்துக்காட்டியது ஈட்டத்திற்கு அதுவே பயனாகலானும், அதனைப் பெறுதலே மக்களாய்ப்பிறந்தார்க்கு உறுதியாகலானும், என்க. இங்ஙனம் பிறந்தார்க்குரிய பெறும்பேறாகிய அப்பேற்றினைப் பெறுதொழியின் அஃதோர் பேரிழவாம் ஆதலால் அவ் இழவு விழாதபடி ஆடவர் இசைபெற்று வாழவேண்டும் என்பதாம். "வசையென்ப வையத்தார்க் கெல்லாம் இசை என்னும் எச்சம் பெறாஅவிடின்" என்று முன் இசைத்துள்ளதும் காண்க.

இசையில்லார் தோற்றம் நிலத்திற்குப் பொறை என்றது உலோபிகளாகிய அப்பாவிகளைப் புண்ணிய சீலையாகிய இந் நிலமகள் பொறுத்திருக்க மனம் பொருந்தாமல் அருவருத்து வெறுத்து நிற்றல் கருதி. "வசையிலாவண்பயன் குன்றும் இசையிலா யாக்கை பொறுத்த நிலம்" என்றதும் ஈண்டெண்ணத்தக்கது. வேண்டாத ஒன்று மெய் சார்ந்து நிற்பின் வீண் சுமையாகத் தோன்றும் ஆதலால் அத்தோற்றம் பொறையாயதென்க.

எல்லாவற்றையும் பொறையோடு பொறுத்திருக்கும் புவி மகளும் உலோபியைப் பொறுக்கமாட்டாமல் வெறுத்து நிற்பள் என்ற இதனால் அவரது வெந்தீமை புலனும். இவ்வுலகில் இழிந்தன எவற்றினும உலோபம் மிக இழிந்ததாக எண்ணப்பட்டுள்ளது. "இவறன்மை எற்றுள்ளும் எண்ணப்படுவதொன்றன்று" என அடிகள் முன் அருளியுள்ளதும காண்க.

உலோபிகள் புகழ்க்குரிய நலங்கள் யாதும் கருதாது பொருள் ஒன்றையே பற்றிப் பழியோடு பூமிக்குச் சுமையாயிழிந்து கிடப்பர் என்பது கருத்து.

" திரவியம் காக்குமொரு பூதங்கள் போற்பணம
  தேடிப் புதைத்து வைப்பார்;
சேலை நல மாகவுங் கட்டார்கள்; நல்லமுது
  செய்துணார், அறமும் செயார்;
புரவலர் செய்தண்டம் தனக்கும, வனு வாரப்
  புகுந்திருடருக்கும் ஈவார்;
புலவரைக் கண்டவுடன் ஓடிப்பதுங்குவார்;
  புராணிகர்க் கொன்றும் உதவார்;
விரகறிந்தேயிளே சோறுகறி எனுமளவில்
  வெகுபணம செலவாகலால்
விளையாடு கிழவனும் பிள்ளையே பிள்ளையென
  மிகுசெட்டி சொன்ன கதைபோல்
வரவுபார்க்கின்றதே யல்லாது லோபியர்கள்
  மற்றொருவருக்கு ஈவரோ? " (குருபாததாசர்)

ஈட்டம இவறி இசை வேண்டாது நிற்கும் உலோபியர் இயல்பினை இதுகாட்டி நிற்றல் காண்க.

புகழ் பெட்டாமல் பொருளை மட்டும் ஈட்டி உலோபித்திருத்தல் பாவமாதலால் அங்ஙனம் பாழ்பட்டொழியாது செல்வர் ஈந்து பயன்பட்டு வாழவேண்டுமென்பது குறிப்பு.

உலோபிகளை உலகம் வெறுத்திகழும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மங்கன்பால் உணரப்படும்.

## கதை.

மங்கன் என்பவன் இற்றைக்கு மூந்நூறு ஆண்டுகட்கு முன்னர், கொங்குநாட்டிலே மணியூர் என்னு நகரிலிருந்தவன் இவன் வடு

கர் மரபினன். கொடிய செயலினன். விளைநிலங்களோடு பல வகை வளங்களுமுடையனாய் இவன் விளங்கியிருந்தான். இங்ஙனம் பெரும் பொருளமைந்திருந்தும் ஒரு நலமுமின்றி இவன் சிறுமையுற்று நின்றான். இவனுடைய மனைவி மிகக்கொடியவள். இவன் போலவே புன்மையும் வன்கண்மையும் பொருந்திய நெஞ்சினளாதலால் இவனது இல்வாழ்க்கை மிக ஈனமுற்றிருந்தது. அருந்தல் முதலிய நுகர்வு நலங்கள் யாவும் இழிந்த நிலையிலேயே இவனுக்கு இசைந்திருந்தன. இரவென்றும் பகலென்றும் பாராமல் பெரிதும் வருந்திப் பொருளைத் தொகுத்து வைத்தலிலேயே இவன் மருளுற்றிருந்தான். எவர் வரினும் யாதும் கொடாது கடுத்த முகத்தோடு வெறுத்துரையாடும் வெய்ய இயல்பினனாதலால் எல்லாரும் இவனை எள்ளிவைது யாண்டும் நெருங்காது இகழ்ந்திருந்தார். செல்வமிகச் செறிந்திருந்தும் மேலுமேலும் அதனைச் சேர்த்துக் கழித்துக்கடு உலோபியாய் மடமை மிக்கிருந்த இவனது மாந்தோட்டத்தின் வழியே சிவப்பிரகாச சுவாமிகள் ஒருநாள் வந்தார்கள். பெரும் புலமையும் அருங்குணங்களும் ஒருங்கமைந்துள்ள அப்பெருந்தகையாளர் மணிமுத்தா நதியில் நீராடிவிட்டு அவ்வழி வரும்படி நேர்ந்ததாதலால் ஆண்டுக்கிடந்த மாங்கனி ஒன்றைக்கண்டு நாம் செய்யும் பூசனைக்காகும் என்று கொண்டு அதனைப்புரிந்தெடுத்தார். அவ்வமயம் உள்ளே நின்ற இவன் துள்ளி ஓடி வந்து கள்ளா! எங்கே போகின்றாய் என்று கடுத்து முன்புகுந்து மறித்து நின்றான். அவர் மறுகி நொந்து "யான் களவு செய்யவில்லை; வழியில் கிடந்தது எம்பெருமானுக்காமென்று கருதி யெடுத்துவிட்டேன்; அறியாமற்செய்த இதனைப் பொறுத்துக்கொள்ளும்" என்று இனித்த மொழியோடு இசைத்துத் தமது மடியில் வைத்திருந்த கனியை உடனே எடுத்து இவனிடம் உவந்து கொடுத்தார். பேயும் இரங்கும்படி இங்ஙனம் பேசி வேண்டியும் யாதும் கேளாமல் "களவும் கையுமாகப் பிடித்த பின்னர் இனி ஐயரே நீர் எங்கே போவீர்? வாரும் ஊருக்குள்ளே" என்று அவர் மடியைப் பிடித்து இப்படிபாவி வலித்திழுத்தான். அவர் உள்ளங்கொதித்து இவன் மேல் அங்கதமாக ஓர் பாடல் பாடினர். அது அடியில் வருவது.

"அடுத்துவருந் தொண்டனுக்கா அந்நகரைத் தாளால்
அடாத்ததுவும் சத்தியமே யானால்—எடுத்தொரு
மாங்கனிக்கா என்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்" (சிவப்பிரகாசர்)

கனிக்கு ஆதித்தன் வர பாவி சாம் என்றது கன்னியா இராசிக்குச் சூரியன் வரும்போது இப்பாவி சாவான் என்றபடி. இவ்வண்ணம் அவர் பாடிச் செல்ல அவ்வாறே இவன் பட்டு மாண்டான். இவன் செத்தொழிந்ததைக் கேட்டு அந்நாட்டி லிருந்தவரெல்லாரும் "சனி தொலைந்தது; பொருள் காத்திருந்த பூதம் போயொழிந்தது;" என இன்னவாறு பல பேசி இனிது மகிழ்ந்தார். பொருள் ஒன்றையே பேணிப் புகழ் யாதும் விரும் பாமல் கொடிய உலோபியாய் நின்ற இவன் பூமிக்குச் சுமையா கப் பாழ்பட்டிருந்து பழியோ டழிந்தான். நட்டம் இவறி இசைவேண்டா ஆடவர் தோற்றம், நிலக்குப் பொறை என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

மற்றோர்நகர்க்கண்வைகறையொன்றிலாங்குள்ளமாஞ்சோலைவாய்
அற்றோர்பழங் கீழ்விழக் கட்டெடுத்துத் தனுரமேவி வாழ்
புற்றோருடைத்தம்பிராற்காகுமென்றெண்ணுபோதோர்பொருளன்
எற்றோன றுமுன வந்த திருடா! எனச்சொற்றெழுந்தனரோ (௩)

வந்தான்மடிக்கட்டை யிட்டுப்பிடித்தீர்த்து வைதானிதைத்
தந்தாலும் விடுகில்லனென்றான் வெண்ணீறுதத் திராக்கதவச
செந்தானை சிவலிங்கமுடனிட்ட முனியென்று சிறிதெண்ணிலான்
அந்தாமரைதகேதவன் விதிமுற்றிடற் கிதோரடையாளமே (௨)

படுத்திட்ட தொண்டன் றனக்காக அன்றந்த கற்றூளினால்
தடுத்திட்ட துண்டென்னினின் பூசை நைவேதனத்திற்கு நான்
எடுத்திட்ட இம்மாங்கனிக்கா எனமடி தொட்ட இப்பாவியைப்
படுந்திட்டபின் என்றுவரவேண்டுமென் றங்கொர்பாட்டோதியே

அத்திங்களிற் சூரியன் கன்னியிற் காணவுஞ் சொன்னபின்
மெய்த்திங்கள்சூடும் சடைக்கற்றையான் றன்னைமிகநாடலும்
கைத்திண்டிறற்றண்டமணி யேமன்விடுதூதர் கணமங்குவந்
தெப்த்திசைபுறமோதிபவனுவியைக்கொண்டிரிந்தார்களே (௪)

(புலவர் புராணம்)

மேற்குறித்த சரிதம் இதன்கண்ணும் குறிக்கப்பட்டிருத்தல் காண்க.

நாயாய்ப் பிறந்திடினல் வேட்டையாடி நயம்புரியும்
தாயார் வயிற்றினரராய்ப் பிறந்துபின் சம்பன்னராய்க்
காயாமரமும் வறளாங்குளமும் கல்லாவுமென்ன
ஈயா மனிதரை என் படைத்தாய் கச்சியேகம்பனே.

(பட்டினத்தார்)

வையஞ் சுமக்க வருந்தும் உலோபிதன்
வெய்ய நிலையை வெறுத்து.

உலோபிகளை உலகமாதாவும் பொறுக்க வருந்துமென்பது இதனால் கூறப்பட்டது.

---

1004. வச்சையனென் றெல்லாரும் வைதிகழச் சங்கனேன்
கொச்சையுற்று நின்றான் குமரேசா—நச்சலுத்தான்
எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ ஒருவரா
னச்சப் படா தவன். (௪)

இ—ள்.

குமரேசா! எல்லாரும் இகழ்ந்து வெறுக்கும்படி சங்கன் ஏன் உலோபியாய் இழிந்திருந்தான்? எனின், ஒருவரான் நச்சப்படாதவன் எச்சம் என்று என் எண்ணுங் கொல்லோ? என்க. இது, உலோபியர் பழிபட்டு இழிவர் என்கின்றது.

எச்சம் = எஞ்சிநிற்பது. அஃதாவது ஒருவன் பிறந்ததற்குப் பயனாய் உறுதிபயந்து அவன் இறந்தபின்பும் சிறந்து நிற்பது. என்றது புகழினை. "இசை என்னும் எச்சம்" என முன் இசைத்துள்ளதுங் காண்க. மறுமைக் கினிதாய் மருவிநிற்கும் இந்த அருமைத் துணையை ஆதரித்துக்கொள்ளாமல் பொருளொன்றையே காதலித்துக்கிடக்கும் கொடிய உலோபி முடிவில் ஒரு கதியுமின்றி வறிதே இழிந்துபடுதலை எண்ணியும், இவ்வன்மையை எண்ணுதிருக்கும் அவன் புன்மைக்கு இரங்கியும் இது கூறியதென்க.

நச்சப்படாதவன் என்றது உலோபியை. உலோபி ஒருவருக்கும் ஒன்றும் உதவாதாதலால் யாரும் அவனை விரும்பி நெருங்கார்; அதனால் அவன் "நச்சப்படாதவன" என நின்றான். நச்சல் = விரும்பல். "நச்சுவனர் வருஉ நான்மறையாளரை, அச்சங்கொள்ள அகற்றன்மின்" (பெருங்கதை) "நச்சிவந்தோர் நசை பழுதாக" என்பதுங் காண்க.

மேல், உலோபியைப் பூமி தேவியும் பொறுக்கமாட்டாள் என்றார்; இதில், அவனை யாவரும் வெறுத்துநிற்பர் என்கின்றார்.

பிறர்க்கு உதவாமையால் ஒருவராலும் விரும்பப்படாதவன் தனக்கு உறுதியாகப் பின் எஞ்சி நிற்பது யாது என்று எதனை எண்ணியிருப்பனோ? என்பதாம்.

எடுத்த உடம்பு இறந்துபடினும் யாண்டும் இறவாதுநிற்கும் இயல்பினதாய புகழ் ஒன்றே ஒருவனுக்கு என்றும் பொன்றாத் துணையாம்; அஃது ஈகையொன்றானே நன்குளதாவதாகும்; அத்தகைய உறுதிநலனைக் கருதிக்கொள்ளாது கடும்பற்றுள்ளத்தோடு பொருளின்கண்ணேயே அழுந்திக்கிடக்கும் ஓர் உலோபியின் நிலையைக் கண்டு "இப்பாவி மகன் தனக்கு இருமைக்கு முரிமையாய அரிய துணையை எண்ணாது கைவிட்டு இப்படியேன் இழிந்துகழிகின்றான்" என எண்ணி நோக்கி ஒரு முடிவுந் தோன்றாமல் ஐயுறவோடு நின்று அடிகள் இரங்கி யருளியுள்ளபடியை இதில் நுணுகி யுணர்ந்துகொள்க.

இசை என்னும் எச்சத்தைத் தவிர உயிர்க்கு உறுதியென்று உண்மையாக எண்ணத்தக்கது வேறு யாதொன்றுமில்லையாதலால் "என் எண்ணும் கொல்லோ?" என்றார். கொல் ஓ என்பன ஐயமும் இரக்கமும் அமைய நின்றன. "யாதெவன் என்னை எது கொல் ஐயம்." (பிங்கலந்தை).

உலோபியை நச்சப்படாதவன் என்றதனால் அவனது கொடுமைத் தன்மையுணரும். யாதேனும்ஒரு பொருள் இதமுடையதாயிருந்தாலன்றி அதனையாவரும் விரும்பார். உலோபியோ பிறர்க்கு யாதொருதவியும் என்றும் செய்யமாட்டான்; ஆதலால் ஒருவரும் அவனை நச்சி நணுகாரென்க.

இவ்வுலகில் சிறிதும் பயன்படாத பொருள் யாது? என்று ஒருமுறை பலர் குழுமியிருந்துகொண்டு தம்முள் உசாவினர். அவருள் ஒருவன், "உள்ளே ஒருநலனுமில்லாமையால் பதர்தான் பயனற்றது" என்றான். அது, திருநீறு விளைத்தற்கு உதவியாகுமாதலால் நசசப்படுந் தகையது என்று மற்றொருவன் நவின்றான். அடுத்தொருவன் குட்டிச்சுவர்தான் பயனற்றதென்றான். சிறுநீர் விடுதல் முதலிய சில காரியங்களுக்கு மறைவாயிருக்குமாதலால் அது பயன்பாடுடையதே என்று மறுத்தொருவனுரைத்தான. இன்னவாறே மரம், கல், சவம் முதலியவற்றை எடுத்து வாதித்து அவை யாவும் பயன்படுந் தகையனவே என்றுஉடன்பட்டுவந்து முடிவில் சிறிதும் பயன்படாதவன் உலோபி ஒருவனே என்று முடிவுசெய்து நின்றார். அன்று அவர்செய்த முடிவை அடியொற்றிப் பின்வந்த ஒரு புலவர் கூறியுள்ளபடியை அடியில் காண்க.

"பதராகிலும் கன விபூதி விளைவிக்கும்; பழமை பெறு சுவராகிலும் பலருக்கு மறைவாகும்; மாடுரிஞ்சிடும்; மலம் பன்றி கட்குபயோகமாம்; கதம்கு கடாவென்னில் உழுது புவி காக்கும்; வன் கழுதையும் பொதி சுமக்கும்; கல்லெனில் தேவர்களும் ஆலயமுமாம்; பெருங்கான்புற்றும் அரவமனையாம்; இதமிலாச் சவமாகிலும் சிலர்க் குதவி செயும்; இழிவுறு குரங்காயினும் இரக்கம்பிடித்தவர்க் குதவி செயும்; வாருகோல் ஏற்ற மாளிகை விளக்கும்; மதமது மிகும் பரமலோபரால் உபகாரம் மற்றொருவருக்கும் உண்டோ?"

உலோபியரது கழிபேரிழவும், யாவராலும் அவர் நசராய்ப் படாதவராய் நைந்தழிவர் என்பதும் இதனால் இனிது புலனும்.

ஈதலும் இசைபட வாழ்தலுமே உயிர்க்கு ஊதியமாகுமாதலால் ஒருவன் செல்வம் பெற்றால் பிறர்க்குதவி செய்து அவற்றைப் பேணி வாழவேண்டும் என்பது கருத்து.

பொருள் மிகுந்திருந்தாலும் ஒரு புகழுமின்று உலோபி இழிந்து கிடப்பன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சங்கன்பால் உணரப்படும்.

கதை.

சங்கன் என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் மலைநாட்டில் இருந்தவன். இவன் சிறுமையும் வன்கண்மையும் செருக்குமுடையவன். அறிவு நலம் யாதும் இல்லாதிருந்தும் பெருகிய செல்வனாய் இவன் முறுகி நின்றான். பிறவுயிர்கள் எவ்வளவு துயரடைந்தாலும் இவன் இரங்கியருளான். யாரேனும் இரவலர் வந்தால் இவன் இறந்துபட வந்ததுபோல் அழன்று மொழிவான். பாடித் திரியும் பாவலரைக் கண்டால் இவன் ஓடி ஒளிவான். ஒருமுறை ஒரு கவிராயர் வந்தார். அவரை இனந் தெரியாமல் எதிர்ப்பட்டு நீர் யார்? என்று வினவினான். அவர் தமது ஊரையும் பேரையும் உரைத்தார். இவன் உள்ளம் நடுங்கி இங்கு எங்கு வந்தீர்' என்றான். தங்கள் மீது ஒரு பாடல் பாடிவந்துள்ளேன் என்று இவன் நாடும்படி அவர் நயம்பட மொழிந்தார். உடனே இவன் சினந்தெழுந்து வெளியே போமென்று அவரை வெருட்டி விடுத்தான். இவனது மடமையையும் கொடுமையையும் நினைந்து அவர் வயிறெரிந்து சென்றார்.

"வந்தவர் யாவர்காண்? கவிராசர்; எந்தவூர்?
வடகாசி; எங்கு வந்தீர்?
மகராச னென்றுனது சீர்த்தியைக் கேட்டுன்மேல்
மதுரகவி பாடி வந்தேம்;
சந்ததமும் வித்துவான் அல்லநீ என்னுடைய
தாதை மூதாதை வழியில்
தமிழ்கேட்டதி யாவர்காண் தலைமுறையி லில்லாத
தாழ்வினைச் செய்துவந்தீர்!
இந்தமொழி மற்றுமொருதர நீருரைக்கிலோ
இரணகளமாகும் அப்பால்
எகுமென்றே நிடும் புல்லர்தம் பாற்செலா
தெனையாள இது தருணமே".

முன்பு இவன் புரிந்த புன்மையைக் குறித்துத் தான் இங்ஙனம் வந்துளதோ என இஃது எண்ணவுள்ளது. இன்னவாறு கொடிய உலோபியாய்ப் பழிமிகுந்திருந்தானாதலால் யாரும் இவனை நெருங்காது இழிவுறுத்தி வந்தார். இங்ஙனம் வருங்கால் ஒருநாள் இவன் ஊர்வழி ஔவை வந்தாள். அத்தெய்வப்

பாட்டி இத்தியவன் வீட்டில் நிலை தெரியாமல் நுழைந்தாள். அவ்வமயம் உள்ளே இருந்த இவன் துள்ளி யெழுந்து "இங் கென்ன உனக்கு" என்று பொங்கி மொழிந்து வேட்டை நாய் போல் வெகுண்டு மேல்வந்தான். அவள் வெருவினவள்போல் வெளியே விரைந்து போனாள். தன்னைக் கண்டு அக்கிழவி ஓடி விட்டாள் என்று தனக்குள்ளேயே உவந்துகொண்டு இவனும் அயலே அகன்றுபோனான். இவனுடைய மனைவி மிக இனிய வளாதலால் அந்த அம்மையைத் தனியே போய்க் கண்டு தாழ்ந் துவணங்கிப் பிழையைப் பொறுத்தருளும்படி போற்றிவேண்டி உபசரித்தழைத்துவந்து திருந்தியவுணவால் விருந்து செய்து வைத்து அறநிலைகளைக் குறித்து மிக விநயமாக இனிதுரையாடி னாள். அவளது குண நலங்களையும் இவனது கொடிய நிலைகளை யும் குறித்து நோக்கி அக்கவியரசி வருத்தமீக்கொண்டாள். அந்த விழுமிய மங்கை இப்பழி மகனுக்கு மனைவியாயிருந்து மறுகுவதை நினைந்து விதியை நொந்து ஓர் கவி விரைந்து பாடி னாள். அடியில் வருதல் காண்க.

"அற்றதலை போக அறாததலை நான்கினையும்
பற்றித் திருகிப் பறியேனோ — வற்றல்
பரமனையானுக்கிந்த மானை வகுத்த
பிரமனையான் காணப் பெறின்." (ஒளவையார்)

இப்பாட்டு அப்பாட்டியின் ஈரமுடைமையையும், வீரப் பான்மையையும் காட்டிநிற்றல் காண்க. இவ்வாறு யாரும் இரங்க அவள் இவனுக்குத் தாரமாய் நின்று தவித்தாள். யாதொரு நன்மையையும் விரும்பாமல் பொருளொன்றையே நச்சி நின்று முடிவில் வசையோடு இவன் முடிந்தொழிந்தான். யாராலும் நச்சப்படாமலும் இசையென்னும் எச்சம்பெறாமலும் உலோபி யர் இழிந்தொழிவர் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

"ஒருமனை முன்றிலிற் போமுன் அதற்குறியான் சினந்திகழ்ந் திட்
ட்டோடிவந்தான்
வெருவினன்போல் வெளிப்பட்டாள் அவன்றொழிலிற் போயதற்
பின் விரும்பியன்னோன்
மருவுமனையாளிவளைக் கண்டு தொழுதுபசரித்து
டாறில்லாத
அருமைமொழி பல்கூறி அன்னமுதலா முனவும்
அளித்திட்டாளால். (௧)

வற்றல் மரமனையாற்கிம் மானை வருததிட்டதனால் மலரோற்கங்கள்
அற்றதலைபோக்வமைக் துள்ளதலைநான்கினையும் அலறப்பேர்த்துச்
செற்றமொழிப்பேனவனைக் காணுறிலென்றொருகவிதை செப்பினனாக்
கொற்றமுடையானையுமோர் கிழவியெனவுலகுரைக்கை கொடுமையம்மா(உ)
(புலவர்புராணம்)

மேற்குறித்த சரிதம் இதன்கண்ணும் குறித்துள்ளமை காண்க.

எத்துணை யானும் இயைந்த அளவினால்
சிற்றறஞ் செய்தார் தலைப்படுவர்—மற்றைப்
பெரும்பொருள் எய்தியக்கால் பின்னறிது மென்பார்
அழிந்தார் பழிகடலத் துள். (நாலடியார்.)

வையம் இகழும் வசைவளரும் ஐயகோ
வெய்ய வுலோபம் விடல்.

உலோபி பழியடைந்து பாழ்படுவனென்பது இதனால் கூறப்பட்டது.

---

1005. சார்ந்தொன்று மீயாத சத்திரசித் தேனிழந்தான்
கூர்ந்திருந்த வெல்லாம் குமரேசா—ஓர்ந்து
கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில். (ரு)

இ—ள்.

குமரேசா! கொடாதிருந்த சத்திராசித்து ஏன் தான் கொண்டிருந்தவெல்லாம் இழந்து ஒன்றும் இலனாய் நின்றான்? எனின், கொடுப்பதும் துய்ப்பதும் இல்லார்க்கு அடுக்கிய கோடி உண்டாயினும் இல் என்க.

இது, கோடி இருந்தாலும் உலோபியர் பீடு பெறார் என்கின்றது. ஓர்ந்து = பொருளினியல் பினை நுணுகி யுணர்ந்து.

துய்ப்பது = அனுபவிப்பது; அஃதாவது அருந்தல் பொருந்தல்களை ஆர நுகர்தல். ஈரிடத்தும் அளபெடைகள் இன்னிசை தோன்ற நின்றன.

துய்ப்பதினும் கொடுப்பது மிகச் சிறந்ததாதலால் அதனை முதலில் வைத்தார். என்னே சிறப்பு? எனின், தானே விழுங்

கிக் களிப்பதினும் பிறர்க்கு வழங்கியருள்வது மிகவும் உயர்ந்த தாம்; அதுவுமன்றி அக்கொடையால் அறம் உண்டாம்; அவ் அறம் "முன்பு நின்று இசை நிறீஇ முடிவு முற்றிய பின்பு நின் றுறுதியைப் பயக்கும்" என்றபடி எல்லா நலங்களையும் ஒருங்கே பயந்து நிற்குமாதலால் உயிர்க்கு உறுதியாக அது சிறந்துநின்ற தென்க. "செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பேம் எனினே தப்புந பலவே" (புறநானூறு) என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

அடுக்கிய கோடி என்றது செல்வத்தின் மிகுதி தோன்ற. கோடிகோடியாக அடுக்கிய பொருள் என்பதாம். உம்மை சிறப் புணர நின்றது.

மேல், உலோபிக்குப் புகழ் உண்டாகாது என்றார்; இதில், அவனுக்கு அறமும் கிடையாது; இன்பமும் அடையாதென் கின்றார்.

ஈதலும் நுகர்தலும் இல்லாதார்க்குப் பல கோடி பொருள் கள் எய்தி இருந்தாலும் யாதும் இல்லையாம் என்பதாம்.

கொடுப்பதையும் துய்ப்பதையும் ஈண்டெடுத்துக் காட்டியது பொருளுடைமைக்கு அவை பயனுயுள்ளமை கருதி. என்னை? முன்னது அறத்தையும், பின்னது இன்பத்தையும் குறித்து நிற்ற லால் இடையேயுள்ள பொருள் அவற்றிற்கு இனமாயதென்க.

ஒருவனிடம் பொருள் உண்டானால் "நடுவணதெய்த இரு தலையும் எய்தும்" என்றபடி உடனே பிறர்க்கு ஈந்து அறஞ் செய்தும், தான் நுகர்ந்து இன்பமெய்தியும் இசைபெற வேண் டும்; இல்லையானால் அவ்வுடைமையால் யாதும் பயனில்லை ஆதலால் "கோடி உண்டாயினும் இல்" என்றார்.

> "வழங்கலும் துய்த்தலும் தேற்றுதான் பெற்ற
> முழங்கு முரசுடைச் செல்வம்—தழங்கருவி
> வேய்முற்றி முத்துதிரும் வெற்ப அதுவன்றோ
> நாய்பெற்ற தெங்கம் பழம்." (பழமொழி)

கொடுப்பதும் துய்ப்பதும் இல்லாதானை நாயோடு ஒப்ப வைத்து அவனது செல்வ நிலையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

எண்ணரிய பொருள் நண்ணியிருப்பினும் உலோபி அதனால் யாதொரு பயனுங்கொள்ளாமல் வறியன்போலவே ஒரு நலமுமின்றி மறுகிநிற்பன் என்றவாறு.

"எனதெனா தென்றிருக்கும் ஏழை பொருளை
எனதெனா தென்றிருப்பன் யானும்—தனதாயின்
தானு மதனை வழங்கான் பயன்றுவ்வான்
யானும் அதனை அது." (நாலடியார்)

பிறர்க்குக் கொடாமலும், தானும் அநுபவியாமலும் பொருளை மட்டும் இறுகப் பொத்தி வைத்துக்கொண்டு என்னுடையது என்னுடையது என்று அபிமானித்திருந்த ஒரு உலோபியின் பொருளைச் சுட்டி மற்றொருவன் கூறியுள்ளபடி இப் பாட்டு ஊறியுள்ளமை காண்க.

யாதும் ஈயாத உலோபியாகிய ஒருவனது பொருளைக் குறித்து எனது எனது என்று வழியே போகின்ற ஒருவன் ஒருநாள் ஊரறிய உரைத்தான். சிலர் அவனைச் சூழ்ந்து நின்றுகொண்டு அவனுடையது எப்படி உனதாம்? என்றார். "அப் பொருளில் அவன் ஒரு காசேனும் எடுத்துப் பிறர்க்குக் கொடான்; தானும் அநுபவியான்; அப்படியே எனக்கும் அதில் அவ்வளவு உரிமையுண்டு; ஆதலால் யானும் அதனை எனதென்றேன்" என மிக விநயமாக அவன் இனிது மொழிந்த வண்ணம் தனியமைந்து நகைச் சுவைக்கினமாய் மிகச் சுவை பயந்து இது நண்ணி நிற்கும் அழகை நயந்து நோக்குக.

பொருளடைந்தால் பிறர்க்குதவி செய்து தாமும் அநுபவித்து இனிது வாழ்வோரே நல்ல செல்வராவர்; அல்லாதவர் யாதும் இல்லாதவராய் அல்லலுற்றிழிவர் என்பது கருத்து.

பெறுதற்கரிய பெருஞ் செல்வத்தைப் பெற்றிருந்தாலும் உலோபி அதனால் ஒரு பயனையும் அடையான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சத்திராசித்துபால் உணரப்படும்.

## கதை.

சத்திராசித்து என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர்த் துவாரகையிலிருந்து அரசு புரிந்த ஓர் மன்னவன்.

யது மரபினன். இவனுடைய தந்தை பெயர் நிக்கனன். இவன் சித்திரவதி என்பவளை மணந்து சத்தியபாமை என்னும் அருமைத் திருமகளைப் பெற்றுப் பெருமகிழ்வுற்றுக் குறுநில மன்னர் பலர் திறைகொணர்ந்து தர மணி முடிபுனைந்து இவ் அணி நிலம் புரந்தான். பல கலைகளிலும் நல்ல பயிற்சி யுள்ளவன். செல்வ நிலையிலும் கல்வி அறிவிலும் இங்ஙனம் சிறந்திருந்தும் நீதி நலங்களைத் தெளிந்து செய்யாமலும் வாத முறைகளைத் துணிந்து சொல்லாமலும் சபல சித்தனாய் இவன் இழிந்திருந்தான். உள்ளத்தில் நல்ல உறுதியில்லாமல் சமயம் வாய்த்தபடியெல்லாம் அமய நின்றான். ஆதலால் யாரும் இவனைத் துணிந்து நம்பாமல் தணிந்து நின்றனர். இங்ஙனம் நின்று வருங்கால் முனிவரொருவர் இவன்பால் வந்து சூரிய மந்திரத்தை உபதேசித்துச் சென்றார். அதனை ஓதி இவன் உருவேற்றிவந்தான். அதன் பலனுக்கு கதிரவன் ஒருநாள் இவன் முன் தோன்றிக் காட்சி தந்து நின்று உனக்கு யாது வேண்டும் என்றான். இயற்கையாகவே பொருளாசையால் இவன் விழுங்கப்பட்டிருந்தானாதலால் வேறொன்றையும் வேண்டாமல் அவன் கழுத்திலணிந்திருந்த விழுமிய மணியையே விழைந்து வேண்டினான். அப் பகலவன் புன்னகை செய்து புரிந்து கொடுத்து மறைந்து போயினான். அம் மணி மிக்க தெய்வத்தன்மை வாய்ந்தது. சமந்தகம் என்னும் பெயரினை யுடையது; இளஞ் சூரியன்போல் எழில்மிக அமைந்து இருளகல நிற்பது; நாள் ஒன்றுக்கு நூற்றறுபது துலாம் மாற்றுயர்ந்த பொன்னைத் தோற்றுவிப்பது; தன்னை வைத்திருப்பவன் நல்லவனானால் அவன் உள்ளிய நலங்கள் எல்லாவற்றையும் ஒருங்கே கொடுக்கும்; தீயவனாயின் அவன் குடியை அடியோடு கெடுத்துவிடும். அத்தகைய விலை வரம்பில்லாத ஒளிர் மணியைப் பெற்றுக் களிமீக் கூர்ந்து அழகுற அணிந்துகொண்டு இவன் அரச சபைக்கு வந்தான். வருங்கால் இவனைக் கண்டவரெல்லோரும் கண்வழுக்குற்று என்னே இக்கதிரொளி! என்று கலங்கி வியந்தார். கிருதவன்மர், அக்குரூரர், போசர், பிராசீனர், முதலாக அங்கிருந்தவரனைவரும் எழுந்து திகைத்து ஏங்கி விழித்தார். உடனிருந்த கண்ணன் உண்மையை உணர்த்தினான்.

பின்பு அவர் உவந்திருந்தார். தான் பெற்றுள்ள மணியைக் குறித்து நாளும் இவன் பெருமை பல பேசினன். "ஈயும் இயல்பு இல்லாத இவனை அது மாயும் வகை செய்யுமே!" என்று எண்ணி இரங்கித் தன்னிடம் தரும்படி கண்ணன் அதனைக் கனி வாய் திறந்து கேட்டான். கொடேன் என்று இவன் கூறி அகன்றான். அங்ஙனம் அகன்றுபோனவன் தனியே இருந்து பல பல எண்ணினன். கண்ணன் மிகவும் மாயக்காரனதலால் தன்னிடமிருந்தால் எப்படியும் அதனைக் கவர்ந்துகொள்வான் என்று பயந்து தன்னுடன் பிறந்த தம்பியாகிய பிரசேனனிடம் கரவாகக் கொடுத்துவிட்டான். அவன் இவனைக் காட்டிலும் கொடிய உலோபியாதலால் அம்மணியை மறைத்து வைத்திருந் தான். அவ்வுளவறிந்து அவனிடமும் வந்து அக் கரியவன் கரு திக் கேட்டான். யாதும் இல்லையென்று அவன் இறுகி நின் றான். ஒருநாள் அதனை உடன் கொண்டு வேட்டைக்குப் போனன். அங்குச் சிங்க ஏறு ஒன்று சீறி வந்து அவனைச் சினந்து கொன்றது. அவன் பொன்றி விழுங்கால் அவ் ஒள் ளிய மணி அயலே துள்ளி விழுந்தது. அவ் அரிமான் அதனை அள்ளிச் சென்றது. அது தொலைந்ததிலிருந்து அளவிடலரிய துயரங்களை யடைந்து முடிவில் சததன்வா வால் இவன் கொலை யுண்டிறந்தான். வள்ளற் குணமும் உள்ளப் புனிதமு மில்லாதார் அம்மணியைக் கொள்ளக்கூடாதென்று எவ்வளவோ குறித்து மொழிந்தும் இவன் கொடாது நின்று அடியோடு மாண்டான். இவனது கடும் பற்றுள்ளத்தை அனைவரும் கடுத்திகழ்ந் தார். பெறுதற்கரிய பெரும் பாக்கியத்தைப் பெற்றிருந்தும் கொடுத்து மகிழாமலும், துய்த்துக் கழியாமலும் எய்த்திருந்து யாதும் இல்லார்போல் இவன் இழிந்திறந்தான். கொடுப் பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு அடுக்கிய கோடி யுண்டாயி னும் இல்லை என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். (விரிவை விண்டு புராணத்தில் காண்க.)

எரிமணிச்செஞ்சுட் டரவணைதுயிலு மிறையவரிறைவன்மார்வத்துத்
திருமணிகடுப்பப் புணரிமேன் முளைத்துச் செம்பொன்மால்வரைவலந்
திரியும், ஒருதனியாழித் தேரவற்பரவி யுடைதினியாழியேழுடுத்த
பெருநிலங்காக்குஞ் சத்திராசித்து பெற்றனன் சமந்தக மணியே. (௩)

விரிகடல்வயிறு கீண்டுசெக்குருதி வெள்ளம்வர் தெழுந்தெனத்தவழும்
எரிகதிர்க் கற்றை சொரிமணிபிறப்ப எறழ்வலி யாவுகால்யாத்த
வரையினிற்கலக்கும் வலம்புரித்தடக்கை வள்ளலம் மன்னனை நோக்கித்
திருவிழைப்வளச் செய்யவாய்திறந்து செம்மணிதருகெனக் கிளர்ந்தான். (உ)

செறியிருட்குறும்பு திசைதிசையிரியத் திகிரியொன்றுருட்டுசெங்கதிரோன்
மறைதராத்திகிரி வழங்கியதடக்கை மரகதவுருவினன்றனக்கு
உறுபொருள்வேட்கையுடையனுய்க்களித்தவ்வுலம்பொருதோளினன் ஒரு
நூற்,றறுபதுதுலாம்பொனுடொறு மீனு மழன்மணி கொடுக்கிலேன்
என்றான் (௩) (பாகவதம்)

மேற்குறித்த வுண்மை இதன்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க.

"மேவுபிர சேனனெனும் வேந்தனை யடுத்தே
தேவகி குமாரனோர் சமந்தக விரத்நம்
தாவெனவுரைத்துமணி தானருள்செய்யாதே
போவெனமொழிந்தமொழி யார்சொல்புகல்வித்தார்"
(மெய்ஞ்ஞானவிளக்கம்)

இது, உலோபன் தன்ஆற்றலைக்குறித்து மோகனிடம் கூறி வருங்கால் இடையேகூறியது. மேற்குறித்த சத்திராசித்தின் தம்பியாகிய பிரசேனன் உலோபத்திற்கு ஓர் உறுதியான எடுத்துக்காட்டாக இதில் உரைக்கப்பட்டிருத்தல் காண்க.

உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப் படும். (நாலடியார்)

ஐம்புலனும் ஆர அருந்தார் அறங்கருதி
இம்பரிசை யேற இனிதீயார்—வம்பமைய
ஈட்டி யிருந்தார் இரும்பழியே கண்டு துயர்
நீட்டி யழிந்தார் நிலை. (தருமதீபிகை)

கோடி யுடைய னெனினும் கொடுத்துண்ணான்
பீடு பெறுத லிலன்.

ஈகையில்லாதான் யாதும் இல்லாத ஈனமுறுவன் என்பது இதனால் கூறப்பட்டது.

1006. அன்று நகிலன் அடைந்த பெருஞ்செல்வம்
குன்றிநின்ற தென்னே குமரேசா—என்றுமே
ஏதம் பெருஞ்செல்வம் தான்றுவ்வான் றக்கார்க்கொன்
றீத லியல்பிலா தான். (சு)

இ—ள்.

குமரேசா! ஈதலில்லாத நகிலனது பெருஞ்செல்வம் ஏன் ஏத மெய்தி இழிந்தது? எனின், தான் துவ்வான்; தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பு இலாதான் பெருஞ்செல்வம் ஏதம் என்க.

இது, ஈதலில்லான்செல்வம் ஏதமாம் என்கின்றது.

ஏதம் = துன்பம், குற்றம். "குற்றமும் துன்பமும் ஏதமாகும்." (பிங்கலந்தை)

துவ்வான் = நுகரான், அனுபவியான். துவ்வல் என்பது உண்டலின் பொதுவகையை உணர்த்திவரும். "அயிறல் மிசைதல் அருந்துதல் நுகர்தல், துவ்வல் துய்த்தல் துற்றல் துறுவல், ஆர்தல் மாந்தல் கைதொடல் உண்டல்" (பிங்கலந்தை)

தக்கார் = தகுதியுடையார்; அறிவொழுக்கங்களுள்ள நல்லோர்என்க. அற்றாரை அழிபசிதீர்த்தும், தக்காரைத் தாழ்ந்து வணங்கித் தரும்வகைஉதவியும் செல்வம்பெற்றார் ஆதரிக்கவேண்டும் ஆதலால் ஈண்டிவர் எண்ணநின்றார்.

இயல்புஇலாதான் என்றது ஈதற்குரிய தன்மையும் இல்லாதானென அவ்இன்மையின் எல்லைதோன்ற நின்றது. இயல்பு = குணம், பண்பு.

மேல், கோடிபொருள் இருந்தாலும் உலோபி பீடுபெறான் என்றார்; இதில், அவனெய்தியுள்ள செல்வமும் இழிந்துபடும் என்கின்றார்.

தானும் அனுபவியாது தக்கார்க்கும் ஒன்றுஈயாது நிற்கும் இயல்புடையானது செல்வம் ஏதமாம் என்பதாம்.

ஈதற்கு இனமாகத் தக்காரை இங்குக் குறித்ததுஎன்னே.? எனின், குடியர், மடியர், கொடியர்களாய தகார்க்குக்கொடுப்பின் அது பயன்படாமையோடு பழியும் விளைக்குமாதலால் அங்ங

னம் ஆகாவண்ணம் பாத்திரம் அறிந்து கொடுக்கவேண்டும் என்பது கருதி என்க.

அடங்கலர்க்கீந்த தானப்பயத்தினால் அலறுமுந்நீர்த்
தடங்கடல்நடுவுட் டீவுபலவுள அவற்றுட்டோன்றி
உடம்பொடு முகங்க ளொவ்வா ருழ்கனி மாந்திவாழ்வர்
மடங்கலஞ்சீற்றத் துப்பின்மானவேல் மன்னரேறே.
(சீவகசிந்தாமணி)

கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்கும்
சீலமும் நோன்பும் இலாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது வாகுமே. (திருமந்திரம்)

திரைசெய்நீர்விழுஞ் சிலையினைப்புணையன் றிச் சிலக்கரையேற்றுதால்
புரைசெய்பாவத்தி னழுந்தினர்தமைப்புரை யொழிந்தவர்தாமன்றி
நிரைசெய்மேற்கதி செலுத்தவல்லாரலர் நிகழ்கரிசினரற்றால்
உரைசெய்பாத்திரம் அபாத்திரமறிந்தளித்தொழிக்கநற்பயன் வேட்டோர்.
(தணிகைப் புராணம்).

மூகனெ திரொன் றும் பிரியின் மற்றொன் றுமொழிபவர், விழைவுறு தூதர்
அகன்றகேள்வியிலார்,அருமருத்துவர்கள்,அரும்பொருள்கவருநர், தூர்த்தர்,
புகலருந்தீமைபுரிபவர்,மல்லர், செருக்கினர், புன்மொழிற்றீயோர்,
இகழ்தருமினையோர் ஒன்பதுபெயர்க்கும் ஈந்திடல்பழுதென இசைப்பார்.(க)

மாண்புடையாளர்,கேண்மையர், தத்தம்வழிமுறையொழுக்கினிலமர்ந்தோர்
சேண்படுசிறப்பினெய்தினோர், புரப்போர் தீர்ந்தவர்,தந்தைதாய்குரவர்
காண்டகுமுதவிபுரிந்துளோ ரினையோர்ஒன்பதின் மருமுளங்களிப்ப
வேண்டுறுநிதியமளிப்பின் மற்றொன்றேகோடியாமென மறைவிளம்பும்.(உ).
(காசிகாண்டம்)

தக்கார்க்கே யீவர் தகார்க் களிப்பா ரில்லென்று
மிக்கார்க் குதவார் விழுமியோர்—எக்காலும்
நெல்லுக்கிறைப்பதே நீரன்றிக் காட்டுமுளி
புல்லுக் கிறைப்பரோ போய். (நன்னெறி)

தக்கார்க்கு ஒன்றீதலே தக்கதாமென இவை உணர்த்தி நிற்பன காண்க.

செல்வமானது அறவழியிலும் புகழ்வகையிலும் இன்பநிலையிலும் சென்று பண்பட்டு நிற்குமாயின் அது நல்ல பயனுடையதாய் நன்கு மதிக்கப்படும்; அங்ஙனமின்றி ஒரு சொட்டுங் கூட வெளிப்படாது கட்டுக் கிடையாய்க் கிடக்கும் குட்டத்து நீர்

போல் உலோபி பொருள் யாரும் எட்டிப் பார்க்கவும் இயலாத படி கட்டுப்பட்டுக் கெட்டிழிந்து கிடக்கும் ஆதலால் "ஈதல் இயல்பிலாதான் செல்வம் ஏதம்" என்றார். செல்வத்திற்கு என்னே ஏதம்? எனின், எல்லா நலங்களையும் விளைத்தற்குரிய தன் இனிய நிலைமை குன்றி, நோய்வாய்ப்பட்ட சேய்போல் ஈயாத அப் பேய் வாய்ப்பட்டு யாதொரு செயலுமின்றி ஈனமாய் இழிந்து கழிதலின் அது, ஏதமாயதென்க.

இனி, ஈதலும் துய்த்தலுமே செல்வத்திற்குப் பயனுமாதலால் அவ் விரண்டுஞ் செய்யாத உலோபியின் செல்வம் ஏதத்திற்கே இடமாமெனினுமாம். என்னை? பழியும் துன்பமும் இழிபல பிறப்பும் அவனுக்கு அஃது எய்துவித்தலின் என்க. இதனால் அது, நன்றியில் செல்வம் என நின்றமை காண்க.

"கொடா திவறு மடாஅ வெறுக்கையிற்
றுனியுறு வறுமை நனிசிறந் தன்றே!
இம்மைப் பழியும், அம்மை நரகும்,
பெரும்பசி யுழக்கும் இரும்பேய்ப்பிறவியும்,
ஒவின்று யாண்டு மீவின்று மாதோ;
கற்றது புணையாப் பெற்றது மகிழ்தந்
துண்ணீர்த் தல்லாத் தெண்ணீர்ப்புற்கை
தாளிற் றந்தது கேளிற் பகுத்து
மிச்சில் அருந்தி நிச்சல்கழிக்கும்
எளிமைத்தேனும் அளிமைதாகலின்
தெருளுடை மாந்தர்க் கருள்விளைப் பதுவே,
நோக்கிய முகனெலாந் தேக்கிய
வன்கண்மை விளைக்கும் புன்கண்மை யின்றே"

ஈதலிலான்செல்வம் ஏதம்பயத்தலான் அது, வறுமையினும் கொடியதென இஃதுணர்த்திநிற்றல் காண்க.

வழங்காத செல்வரின் நல்கூர்ந்தா ருய்ந்தார்
இழந்தா ரெனப்படுத லுய்ந்தார்—உழந்ததனைக்
காப்புய்ந்தார் கல்லுதலும் உய்ந்தார்தங் கைந்நோவ
யாப்புய்ந்தார் உய்ந்த பல. (நாலடியார்)

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல—கொன்னே
அருளிலன் அன்பிலன் கண்ணறைய னென்று
பலரால் இகழப் படான். (நீதிநெறிவிளக்கம்)

ஒருசிறு தருமமேனும் உஞற்றிடார் இரப்போர்வந்து
தருநிகர் கரத்தாயென்று சாற்றினுங்கொள்ளாராகிக்
கருணைசற் றின்றிஎல்லை கடந்திடத்துறந்துமீள்வர்
மருவுபல் கிளையும்ஒம்பார் வளம்படைத்தென்பெற்றாரால். (க)

முறைதவிர் கொடுங்கோன்மன்னர் முனிவிற்கு நனியும்அச்சம்;
கறைகெழு களவுசெய்வார் கரத்திற்கும் அழற்கும்அச்சம்;
மறைவறு தாயமாக்கள் வெளவுவ ரென்றும் அச்சம்;
அறைபொருள் பெற்றாரல்லர் அச்சமே பெற்றார்போலும். (உ)
(குசேலோபாக்கியானம்)

பொலிவளந் தங்கிய புவியிற் றானுண்டும்
பலிபிறர்க் கிட்டுமே பயன்றுவ் வான்பொருள்
வலியிலாப் பேடிகை வாள்கொல்? ஆணை
அலியினை மேவிய அரம்பையேகொலோ? (க)

நித்தியம் அனுபவி யாது நீணிதி
பத்திரஞ் செய்குவோன் பாரந் தாங்கவூர்
மத்தியிற் புதைத்தகல்; மாசில் தூசர்க்கு
வத்திரஞ் சுமக்கும் வாலேய மொப்பனே. (நீதிநூல்)

ஈதலியல்பிலாதான் செல்வம் அவனுக்கு ஏதம் தருந்திறம் இவற்றானும் இனிதறியலாகும்.

ஈயுந்தன்மை யில்லாதானெய்தியுள்ளசெல்வம் இருந்துயர்க்கே ஏதுவாம் என்பது இதில்உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நகிலன்பால் உணரப்படும்.

## கதை.

நகிலன் என்பவன் இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்குமுன்னர்ப்பாண்டிநாட்டிலே ஸ்ரீவில்லிபுத்தூரிலிருந்தவன். வணிகர் மரபினன். வாணிகத்துறையில் இவன் மிகவும்வல்லவன். மறுபுலங்களிலும்சென்று வருநிலையோர்ந்து பண்டங்கள் பலவாங்கிக் கொண்டுவந்துவைத்துக் காலம்பார்த்து அருவிலைக்குவிற்று மிகு பொருள்திரட்டினன். இவனுடைய மனைவிபெயர் மனோவதி.

அவள் அன்பும் பொறையும் அடக்கமும் வாய்ந்தவள். அவளோடமர்ந்து இவன் இல்வாட்கைபுரிந்தான். செல்வநிலையில் சிறந்திருந்தாலும் உள்ளத்தில் நல்ல இயல்பில்லாமல் கடு உலோபியாய்க் கொடுமைமிக்கிருந்தானாதலால் உறவினருங்கூட உவந்து நெருங்காமல் இவனை இகழ்ந்துகொண்டு அகன்றிருந்தார். ஒரு சிறுகாசு செலவிட நேர்ந்தாலும் தன் உயிரைவிட நேர்ந்ததுபோல் உள்ளங் குலைந்து இவன் உளைந்து நடுங்குவான். தனக்குங்கூட நல்லவுணவுடைகளைக் கொள்ளமாட்டாமல் புல்லிய நிலையில் நாளைப்போக்கி வந்தான். பொருள்மேல் கடும்பற்றோடு மருள்மீக்கொண்டு இருள்பட்டு இங்ஙனம் இருந்துவருங்கால் கொடிய சூலை நோய் ஒன்று வந்து இவன் வயிற்றில் குடி புகுந்தது. அதனால் இவன் அடைந்த துயரங்கள் அளவிடலரியன. மருத்துவரை யழைத்தால் பொருட் செலவாமென்று வெறுத்து விடுத்துச் செலவுறுவகையில் கை மருந்துகளையே இவன் கலந்து உண்டு நின்றான். என்னவுண்டும் அது மண்டியே நின்றது. அப் படுநோயால் படாத பாடுகள்பட்டு இவன் பதைத்துழல்வதைக் கண்டு இவனுடைய மனைவி துடித்து நொந்து அடுத்திருக்கும் மடவார் வளாகம் என்னும் திருப்பதியிலெழுந்தருளியுள்ள பரமனை வழிபட்டுத் தன் கொழுநனைக் குணஞ்செய்தருளும்படி குழைந்து வேண்டினாள். இரு தினங்களுள் சிறிது நோய் தணிந்தது. அதனையறிந்து பெரிது மகிழ்ந்து ஒரு பொன் முடிப்பைப் பொதிந்து வைத்து முற்றுங் குணமானவுடன் இறைவன் திருமுன் "இதனைக் காணிக்கையாகச் செலுத்திவரவேண்டும்" என்று இருவரும் உறுதி செய்து கொண்டார். உடனே அந் நோய் அறவே தீர்ந்தது. உடல் நலம் பெற்று இவன் உறுதிகொண்டபின் குறித்த வண்ணம் அதனைச் செலுத்த மனமில்லாமல் கோட்டமுற்றிருந்தான். மனைவி வருத்திவேண்டியும் இவன் மறுத்து நின்றான். பொருள்மேல் கன்றிய காதலால் நன்றி மறந்து நிற்கும் இவனது நாச நிலையை நோக்கி அவள் நடுங்கி நின்றாள். அதனைக் கொடுத்துவிடும்படி நவிந்து வேண்டியும் யாதும் கேளாதவன்போல் இவன் அடங்கி யிருந்தான். இழிந்த பொறாமை உலோபிகளிடம் இசைந்திருக்குமென்பதை இவன் இருந்து காட்டினான்.

ஒருநாள் அவள் சினந்தெழுந்து சுடிந்து மொழிந்தாள். அன்று அவள் மொழிந்தபடியும் இவன் இருந்த விதமும் அடியில் வருவன காண்க.

" ஈசனுர்க்கிதயமாா ஈகுவோ மென்று கூறி
நேசமில் கொடிய நோயை நீக்குதல் கண்டு மீண்டு
மாசுலோபத்தால் இவ்வாறுரைத்தனை மதிமயங்கி
நீசரும் இன்னதன்மை நிகழ்த்திடார் நினைவிலாதோய்! (க)

என்ற சொல் வணிகன் கேட்டும் பொருளாசை யிடும்பையெய்திக்
கொன்றை வேணியனுரேன்று கொண்டருள் புரிந்து தீரா
வென்றிசேர் சூலைதீர்த்த மேன்மையு மனையாள் செய்த
நன்றியு மறந்து வாளா இருந்தனன் மதியில் நாய்கன்". (உ)

ஈண்டிய வுலோபத்தோடு இங்ஙனம் இவன் இழிந்துநிற்றலைக் கண்டு மீண்டும் அந் நோய் வந்துவிடலாகாதே யென்று அவள் மறுகி நின்றாள். அவ்வாறே அது வந்து சேர்ந்தது. இவன் அலறித் துடித்து ஐயகோ! "அறியாமல் இருந்துவிட்டேன் இனி வட்டியோடு சேர்த்து இரண்டு மடங்கு தந்துவிடுகின்றேன் இப்பிணியைத் தீர்த்துவிட வேண்டும் தெய்வமே!" யென்று தேம்பி யழுதான். கருணை வள்ளலான அப் பரமன் அவ்வாறே தீர்த்தருள் புரிந்தான். தீரவே இவன் முன்பு புனைந்துவைத்திருந்த பொன் முடிப்போடு மறுபடியும் கொஞ்சம் சேர்த்துக் கட்டினன். கட்டினவன் அத் தொகையைப் பார்த்துப் பார்த்து பெருமூச்செறிந்து அம்மவோ! இவ்வளவு பொருளை எப்படிக் கொடுப்பது என்று ஏங்கி நின்று அதனை மறுபடியும் தன் பேழையுள் மறைத்துவைத்தான். பாவம்! உலோபத்தின் கொடுமைதான் என்னே! இவனது புன்மையை நோக்கிப் பரம் பொருள் புன்னகை செய்தது. பின்பு அப் பொன் பொதியோடு இவன் பொருள் முழுதும் ஒருவருக்குந் தெரியாமல் மறைந்து தொலைந்தது. அங்ஙனம் தொலைந்துபோயதை யறிந்தபோது இவன் அடைந்த துயரினை யார்சொல்ல வல்லார்? அடியில் வருவன காண்க.

"வஞ்சமே புரியு கீசர் வறுமையும் பிணியு மெய்த
நெஞ்சகத் துணர்ந்து மீள அன்னதே நெடிது செய்வார்;
பஞ்ச பாதகம் புரிந்தோர் படுந்துயர் கண்டு மீண்டும்
அஞ்சுத லின்றி மூடர் அன்னதே புரிவரந்தோ. (௧)

கள்வரைச் சிரமரிந்து கழுவிடை யேற்றக் கண்டும்
கொள்வது மனத்துளின்றி மீளவுங் களவு கொள்வார்;
எள்ளலார் கொலைகள்செய்வோர் இம்மையே கொலைகளெய்த
வுள்ளலார் மீள அன்ன துளக்கலிப்போடுஞ் செய்வார். (௨)

இத்தன்மை யுலகிலென்றும் இயல்பதாஞ் செய்கையன்றோ
பித்தனும் வணிகன் முன்செய் தீங்குள பெருநோய் தீர்த்த
அத்தனுர் அருண் மறந்தான் அண்ணலா ரருளால் இல்லின்
வைத்துயர் நிதியமிட்ட மடிப்பையுந் தேடிக் காணுன் (௩)

முழுவதுஞ் செம்பொன் இட்ட பை முழுமோச மெய்த
அழுதனன்; அரற்றிக்கையால் முகம் வயிறலைத்துச் சால
இழுதுபெய் எரிபோ லுள்ளம் எரிந்தனன்; இருகண்ணாலும்
ஒழுகு கண்ணீருளாழ்ந்தான் திருவுளச்செயலென்றோரான்"
(புதுவைத் தலபுராணம்).

பொருளை யீட்டிவைத்தும் அதன் பயனைக் கொள்ளாமல் படுதுயரடைந்து இங்ஙனம் இவன் பாழாய் நின்றான். இனிது நுகர்தல், இரங்கி யீதல், முதலிய இயல் நலங்கள் யாதுமின்றி உலோபத்தால் இறுகி நின்ற இவன் பொருள் முழுது மிழந்து பிழையே மிகுந்து வறிதே யொழிந்தது. "தான் துவ்வான் தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பிலாதான் செல்வம் ஏதமாம்" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

தீயாலோ நீராலோ தேர்வேந்தர் தம்மாலோ
மாயாத தெவ்வர் வலியாலோ—யாதாலோ
இப்பொருள்போய் மாய்கின்ற தென்று பொருள் வைத்தார்கள்
எப்பொழுதும் நீங்கா ரிடர். (பாரத வெண்பா).

பிறக்கும்பொழுது கொடுவந்ததில்லைப் பிறந்து மண்மேல்
இறக்கும்பொழுது கொடுபோவதில்லை இடை நடுவிற்
குறிக்குமிச் செல்வம் சிவன்தந்த தென்று கொடுக்கறியா
திறக்குங் குலாமருக்கென் சொல்லு வேன்கச்சி யேகம்பனே
(பட்டினத்தார்.)

ஈயாத புல்லர் இருப்பதினும் இல்லாமல்
போயொழிதல் நன்று புவிக்கு.

ஈகையிலான் பொருள் ஈனமுறு மென்பது இதனால் கூறப்பட்டது.

---

1007. என்றுமொன்று மீயாத எச்சதத்தன் செல்வமெலாம்
குன்றிநின்ற தென்னே குமரேசா—ஒன்றுமே
அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றாள் தமியண்மூத் தற்று (எ)

இ—ள்.

குமரேசா! ஒன்றும் ஈயாத எச்சதத்தன் செல்வம் ஒருவருக்கும் பயன்படாமல் ஏன் ஒழிந்தது? எனின் அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் மிகநலம் பெற்றாள் தமியள் மூத்தற்று என்க.

இது, ஈகையிலான்செல்வம் வீணேஇழிந்துபடும் என்கின்றது. என்றும் என்றது யாண்டும் அவன் ஈயாது நின்றமை கருதி.

அற்றார் = பொருள்அற்றார்; வறியர்என்றபடி. உண்ண உணவு அற்றார்; உடுக்க வுடை அற்றார்; இருக்கஇடம் அற்றார்; படுக்கப் பாய் அற்றார்; என இன்மையின் புன்மை முழுவதையும் இயைத்து நோக்கும்படி இப்பதம் ஈண்டு இசைந்துள்ளமை காண்க. ஒன்று என்றது உதவும் பொருளின் எளிமைதோன்ற நின்றது. அற்றார் வேண்டிய வற்றுள் யாதாவது ஒன்று எனினுமாம்.

ஆற்றாதான் = கொடாதான். ஆற்றுதல் என்பது ஈண்டு ஈதல்மேல் நின்றது. எளியவர்க்கு இரங்கி உதவுதல் உயர்ந்த ஆண்டன்மையர்குமாதலால் அதனை ஆற்றுதல் என்று குறித்தார். "ஆற்றுதல் என்பதொன் றலந்தவர்க் குதவுதல்" (கலித்தொகை.) தமியள் என்றது குமரியை "குமரி யழிவில் கன்னியைக் கூறும்" (பிங்கலந்தை).

மிகநலம் பெற்றாள் என்றது அழகு குண முதலிய நலங்கள் யாவும் ஒருங்கே யுடையாள் என்ற வாறு. கணவனோடு கலந்திருந்து மூத்தால் அம் மூப்புப் பயனுடையதாகுமாதலால் அந்நலனிழந்தமை தோன்றத் "தமியள்" என்றார்.

தமியள் மூத்து அற்று = மணமாகாமல் தனியே குமரிருந்து மூத்தது போலாம். மிக நலம் பெறுதாள் தமியளாய் மூத்திழியின் அவ்வளவு பரிதாபமாகத் தோன்றாதாதலால் "பெற்றாள்" எனப் பேரிரக்கந் தோன்றும்படி பெய்து வைத்தார்.

மேல், ஈதலிலான் செல்வம் ஏதமுறும் என்றார்; இதில், அஃது ஒருவருக்கும் பயன் படாமல் வீணே கழிந்து ஒழிந்து போம் என்கின்றார்.

எளியவர்க்கு ஏதாவது ஒன்று கொடுத்து உதவாதானது செல்வம் மிக்க நலத்தினைப் பெற்றாள் ஒருத்தி கொழுநனைப் பெறாமல் தமியளா யிருந்து மூத்தது போலாம் என்பதாம்.

உலோபி செல்வத்தைக் கலியாணமின்றித் தனியளாய் நின்று மூத்திழிந்த குமரியோடு ஒப்பவைத்தது எல்லா இன்ப நலங்களுக்கும் இடமாயுள்ள அச் செல்வம் ஒரு பயனும் படாமல் வீணே யிருந்து கழிந்தொழிதல் கருதி என்க.

எழில் நலமும், குண நலங்களுமமைந்த ஓர் விழுமிய மகளைப் பெற்றவன் பருவமறிந்து தக்க வரனுக்கு அவளை மணஞ்செய்து கொடுப்பின் மிக்க இன்ப நலன்களை யனுபவித்து மக்களைப் பெற்று அவள் மகிழ்ந்திருப்பள்; கொண்டவனும் அப்பெண்ணைக் கொடுத்த மாமனைக் கண்ணைக்கொடுத்தவனாகக் கருதிக் கனிந்து போற்றுவன்; கொடுத்த அவனும் தன் கால்வழியின் மேன்மையை நோக்கிக் களித்து நிற்பன்; அங்ஙனம் கொடாது வைத்திருப்பின் பெற்றும் பெறாத மலட்டுப்பயல் என்று உலகம் அவனை வையும்; அவளும் யாதொரு பயனுமின்றி நையும்; அது போல் பொருளைப்பெற்றவன் அதனைத் தரமறிந்து கொடுப்பின் எல்லாரும் அவனைப் புண்ணியவான் என்று புகழ்ந்து போற்றுவர்; அவனும் உண் மகிழ்வோடு உயர்ந்து விளங்குவன்; அப்பொருளும் அறம் புகழ்களை விளைத்து நலம்புரிந்து நிற்கும்;

கொடாதிருப்பின் ஒருவருக்கும் பயன் படாமையால் இருந்தும் ஈயாத உலோபிப் பயல் என்று எல்லாரும் அவனை இகழ்ந்து தூற்றுவர்; அவனும் பழியோடு இழிந்து போவன்; அப் பொருளும் யாதொரு பயனுமின்றிக் கழிந்துபோம் என்க.

பொருளை, நலமுடைய குமரியோடு உவமை கூறியதனால் அது, எல்லாரும் விரும்பத்தக்க இனிமையுடையது; கொடுத்தற்கே உரியது; கொடாவழி உடையானுக்குப் பழியும் பாவமும் விளைக்கும் பான்மையது; என இவை யாவும் அறியலாகும். "ஆற்றுதான் செல்வம் மூத்தற்று" என்று உணர்த்தி உள்ள பொழுதே நன்று ஆற்றி யுய்யும்படி இதில் அருளியிருக்கும் அருமையை யூன்றி யுணர்ந்துகொள்க.

செல்வம் குமரிக்கும்; அதனையுடையவன் அவளைப் பெற்றவனுக்கும்; கொள்வோன் கொழுநனுக்கும் உவமையாக இதில் ஓர்ந்து கொள்க. பொருளைப் பெற்றவன் பாத்திரமறிந்து கொடுத்துதவவேண்டும் இல்லையாயின் பழியுட்பட்டு அவன் இழிவான் என்பது இவ்வுவமைக்குறிப்பால் உணரலாகும். பெற்றுள்ள தன்பால் இருப்பதைக்காட்டிலும் கொண்டான் கைப்பட்டபோது தான் குமரி இன்பயனுடையளாய் ஈரிடத்தும் பெருநலம் விளைப்பள் என்க.

"வலம்புரி யீன்ற முத்தம் மண்மிசை யவர்கட்கல்லால்
வலம்புரி பயத்தை யெய்தாது அனையரே மகளிர்."
(சீவகசிந்தாமணி)

பலவுறு நறுஞ்சாந்தம் படுப்பவர்க்கல்லதை
மலையுளே பிறப்பினும் மலைக்கவைதாம் என்செய்யும்?
நினையுங்கால் நும்மகள் நுமக்கு மாங்கனையளே;

சீர் கெழு வெண்முத்தம் அணிபவர்க்கல்லதை
நீருளே பிறப்பினும் நீர்க்கவைதாம் என்செய்யும்?
தேருங்கால் நும்மள் நுமக்கு மாங் கனையளே;

ஏழ்புக ரின்னிசை முரல்பவர்க் கல்லதை
யாழுளே பிறப்பினும் யாழ்க்கவைதாம் என்செய்யும்
சூழுங்கால் நும்மகள் நுமக்குமாங் கனையளே.
(கலித்தொகை)

ஓர் குலக்குமரியைக் குறித்து இவை உணர்த்தி நிற்றல் காண்க.

தன் குமரியைத் தரமறிந்து கொடுத்தவன் புகழடைந்து திகழ்தலும், அவளைக்கொண்டவன் இன்பமடைந்து மகிழ்தலும் கண்கூடாம். பொருளைக் கொடுப்பவரிடத்தும், கொள்பவரிடத்தும் மேற்குறித்த புகழ் இன்பங்கள் முறையே பொலிந்துநிற்றலை யறிந்து கொள்க. இதனால் பொருளின் நிலைமையும் அதனையுடையவன் ஓர்ந்து செய்ய வேண்டிய வுரிமையும் இனிதறியலாகும்.

குணமுடைய உபகாரி செல்வம் மணமுடைய குலமகள் போல் உயர்நலம் பயந்து நிலவி நிற்கு மாதலால் குணங்கெட்ட உலோபி செல்வம் மணங்கெட்ட வன்குமரிபோல் மாண் பிழந்து மூத்து வீண்படு மென்றார்.

மன்னுயிர்க்கு ஒருநலமும் செய்யாமல் தன்னையும் கெடுத்துத் தன் பொருளையும் கெடுத்துஉலோபி தாழ்ந்தழிவன் என்பது இதில் ஆய்ந்தறிந்து கொள்க. இதனால் நல்ல செல்வத்தை "நன்றியில் செல்வ" மாக்கும் அப் பொல்லாப் பாவியின் போக்குடைமை புலனும்.

இனிய பொருள் இடபேதத்தால் இன்னாதாகி இழிந்து படுகின்றதென இரங்கியருளி ஈயாத உலோபியை இகழ்ந்து கூறியிருத்தலை புணர்ந்து கொள்க.

சுற்றுங் கருங்குளவி, சூரைத்தூ, றாரியப்பேய்
எற்றுஞ் சுடுகா டிடிகரையின்—புற்றில்
வளர்ந்த வடற்பனைக்குள் வைத்ததேன் ஒக்கும்
றளர்ந்தார்க் கொன்றீயார் தனம். (ஔவையார்)

கொடாத உலோபியரது செல்வத்தையும் அருகே அணுகலாகாதபடி அஃது அமைந்திருக்கும் அமைவையும், அவரது கொடிய நிலையையும் குறித்து இப்பாட்டில் அப்பாட்டி உணர்த்தியிருக்குந் திறனை யூன்றி யுணர்ந்து கொள்க.

அற்றார்க்கு ஆற்றுதான் பின்புயாதும் அற்றுனய் அரும்பழியடைந்து இழிந்துழல்வனுதலால் அங்ஙனம் உழந்துபடா வண்ணம் உள்ள பொழுதே உவந்துதவி உயர்ந்துகொள்ள வேண்டுமென்பது இதன் திரண்ட பொருளாம்.

இல்லார்க்கு உதவாதான் செல்வம் வீணே இழிந்து தொலை யும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை எச்சதத் தன்பால் உணரப்படும்.

## கதை.

எச்சதத்தன் என்பவன் யவனநாட்டிலே ஆதித்தபுரம் என் னும் நகரிலிருந்தவன். வணிகர் மரபினன். வாணிக முறைகளில் நன்கு கைதேர்ந்தவன். பண்டங்களைக் கண்டு வாங்குவதிலும் காலமறிந்து கொண்டு விற்றலிலும் மிகவும்சதுரனென எவரும புகழ இவன் இசைபெற்று நின்றான். இங்ஙனம் நல்ல தொழிலாளி யாயிருந்தும் புல்லிய இயல்போடு பொருந்திப் பொல்லாதன பல புரிந்து பழி வழிகளில் நிமிர்ந்து பொருள் மிகத்திரட்டினன். திரட்டியும் பேராசையினால் மேலும் மேலும் மறு புலங்கட்குச் சென்று பாவம் பழிகளை யாதும் பாராமல் ஈட்டமொன்றையே பார்த்துக் கூட்டி வைத்து ஒருவருக்கும் ஒன்றுங் கொடாமல் கொடிய உலோபியாய் இவன் பெருகி யிருந்தான்.

" தாப முன்னித் தனம்பல தேட வெத்
தீப மெங்குஞ் சிலசரக் கேற்றுவான் ;
யூப மன்ன வுடற்கல மீதினும்
பாப மென்னும் பலசரக் கேற்றினன். (க)

மூவர்க்காகிலும, முன்னவர்க்காகிலும்
தேவர்க்காகிலும், சென்னிவணங்கலான்;
கோவர்க்காகக் கொடிறுடைபபார்க்கலால்
யாவர்க்காகிலும் ஈர்ங்கை விதிர்க்கலான்." (உ)

என்ற வண்ணம் யாதும் இரங்காமல் பற்றுள்ளங்கொண்டு பாவமே பயின்று மேவி நின்ற இவன்பால் சாதுசன்மன் என் னும் வேதியனொருவன் ஒருநாள் வந்தான். அவன் வறியனாயி னும் மிகவும் அறிவுடையவன். பசித்து வந்துள்ளேன் ஏதேனும் உதவியருள வேண்டுமென்று அவன் உருகிமொழிந்தான். இவன் நாளை வாருமென்றான். இப்பொழுது வேளை சரியில்லைபோலு மென்று அவன் வெளியேறிப்போய் மறுநாள் வந்தான். அன் றும் அவ்வாறே கடத்தி விடுத்தான். இங்ஙனம் நாளை நாளை என்று நாள் பல கடத்தி முடிவில் யாதும் கொடாமல் இவன்

அவரை அவமதித்துரைத்தான். இவனது கொடுமையையும் நயவஞ்சகத்தையும் அறிந்து அவர் கோபித்துச் சென்றார். எவர்க்கும் ஈயாமல் பொருளையே பொதிந்துவைத்து மருளுற்றிருந்த இவன் இறுதியில் பழி மிகுந்துழந்து பதைத்தழிந்தான். இவன் இறந்துபட்டபோது எமபடர் இறுகப்பற்றி எற்றி வைது இடர்பல விளைத்தார்.

"தாளாண்மைத் தனம் படைத்தாய் தானமே கொடுத்தறியாய்
கோளாண்மைத் துடைப்பம்போல் குவித்தனையிங் கார்க்காக
கேளாண்மைத் தருமமிலாக் கெடுமதியோய்! வாவென்றார்
நாளாண்மைக் கொடுவாளால் உயிர் குறைக்கு நமன் தூதர். (க)

அந்தகன் தூதுவ ரலைப்ப ஆவிசோர்ந் தலமருவான்
புந்திகொடி துறத்தேடும் பொருள்களையும் அப் பொருள்கள்
வந்துதன துயிர்க்குதவவாவாதனையும், தனக்கு வந்த
நிந்தனையும் குறித்தெண்ணி நினையா தெல்லா நினைவான்" (உ)

இன்னணம் படுதுயரடைந்து இவன் கொடுநரகடைந்தான். இவன் பொருள் ஒருவருக்கும் இனிது பயன்படாமல் பல படச் சிதைந்து பாழ்பட்டொழிந்தது. அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் மிக நலம் பெற்றாளொருத்தி தமியளாய் நின்று குமரிருந்து மூத்ததுபோல் வீணே யிருந்து இழிந்தழியும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. விரிவை (உபதேச காண்டத்தில் காண்க).

"முற்றொடர்பிற் செய்த முறைமையால் வந்த செல்வம்
இற்றைநாட் பெற்றோமென் றெண்ணாது பாழ்மனமே!
அற்றவர்க்கு மீயாமல் அரன் பூசை யோராமல்
கற்றவர்க்கு மீயாமல் கண்மறந்து விட்டனையே"
(பட்டினத்தார்).

வைத்ததனை வைப்பென் றுணரற்க தாமதனைத்
துய்த்து வழங்கி யிருபாலு மத்தகத்
தக்குழி நோக்கி அறஞ்செய்க அஃதன்றே
எய்ப்பினில் வைப்பென் பது. (பழமொழி)

செல்லாத தீயிடத்தே சேர்ந்ததே ஞெக்குமே
பொல்லா வுலோபி பொருள்.

ஈயாதான் செல்வம் இழிந்துபடு மென்பது இதனால் கூறப்பட்டது.

1008 கண்டிருந்த செல்வமெலாம் கண்ணுக் கினியான்முன்
கொண்டிழிந்த தென்னே குமரேசா—கொண்டாடி
நச்சப் படாதவன் செல்வ நடுவூருள்
நச்சு மரம்பழுத் தற்று. (அ)

இ—ள்.

குமரேசா! கண்ணுக்கினியானது பெருஞ் செல்வம் ஒருவருக்கும் பயன்படாது ஏன் ஒழிந்தது? எனின், நச்சப் படாதவன் செல்வம் நடுவூருள் நச்சுமரம் பழுத்தற்று என்க.

இது, பிசுனன் பொருள் பெருநஞ் சென்கின்றது.

நடு ஊருள் = ஊர் நடுவே. ஊர்நடுவுள் என்பது இங்ஙன மாறி நின்றது. நச்சுமரம் = நஞ்சையுடைய மரம். என்றது எட்டி மர முதலியவற்றை. நஞ்சு என்பது நச்சு என இங்கு வலிந்து நின்றது. "நச்சிலை வேற்படை" நச்செயிற்றரவி னேக்கி" (சீவகசிந்தா மணி) "நச்செயிறணிந்த நாகப்பிள்ளை" (பெருங்கதை). "நச்சு மாமரமாயினுங் கொலார்" (திருவாசகம்) இவற்றுள் இது வந்து நிற்றல் காண்க.

பொருளொன்றையேபற்றி நின்று உலோபி யாதும் உதவா னுதலால் பிறரால் அவன் நசசப் படாதவனுய் நின்றுன். இதனல் அவனது நச்சுத்தனமை புலனும்.

மேல், உலோபியின் செல்வம் ஒருவருக்கும் பயன் படாமல் வறிதே கழிந்தொழியுமென்ருர்; இதில், அது எட்டிப்பழத்தோ டொப்பதாம் என்கின்ருர்.

பிறரால் விரும்பப்படாதவனுகிய உலோபியின் செல்வம் ஊர் நடுவே நிற்பதொரு நச்சுமரம் பழுத்தது போலாம் என்ப தாம்.

உலோபியை நச்சு மரத்திற்கும், அவனுடைய செல்வத்தை அதன் பழத்திற்கும் ஒப்பாகக் குறித்து இதில் உணர்த்தியுள் ளமை காண்க.

வருந்தியலேயாமல் இருந்த இடத்திலேயே யிருந்து எளி தாக அருந்தலாம் படி அமைந்து கிடந்தாலும் எட்டிப் பழத்தை

யாரும் தொட்டுப் பாரார்; அதுபோல் உள்ளூரின் கண்ணேயே அடுத்த வீட்டிலிருந்தாலும் உலோபி பொருளை ஒருவரும் தீண்ட முடியாதென்றபடி.

உலோபிகையில் செல்வமெய்தினால் அது பிறருக்குப் பயன் படாமையோடு உலகிற்கோர் பேரிடராயிருக்குமென்பது "நடு ஊருள் நச்சு மரம் பழுத்தற்று" என்றதனால் அறியலாம்.

நல்ல உபகாரி கையில் செல்வமெய்தினால் அது, இனிய கனி மரம் ஊர் நடுவே கனிந்து நிற்பது போலாம்; "பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வம் நயனுடையான்கட் படின்" எனறபடி தன் செல்வத்தை எல்லார்க்கும் பயன் படுத்தி நிற்ற லால் கொடையாளி "பயன் மரம்" என நின்றான்; ஒருவருக் கும் பயன் படாமையால் உலோபி இங்கு "நச்சு மரம்" என நின்றான்.

"முனிவினும் நல்குவர் மூதறிஞர்; உள்ளக்
கனிவினும் நல்கார் கயவர்;—நனிவிளைவில்
காயினும் ஆரும் கதலிதான்; எட்டி பழுத்
தாயினும் ஆமோ? அறை." (நன்னெறி).

ஈகையாளனைக் கதலியாகவும், இழி உலோபியை எட்டிமர மாகவும் இது சுட்டி நிற்றல் காண்க. "ஈயாத புல்லர் இருந் தென்ன! போயென்ன? எட்டி மரம்—காயா திருந்தென்ன? காய்த்துப் பலன் என்ன?" என்பதும ஈண்டுக் காணத்தக்கது.

"கடல்நீர் மிகுந்தென்ன, ஒதிதான் பெருத்தென்ன, காட்டிலவு மலரில் என்ன, கருவேல் பழுத்தென்ன, நாய்ப்பால் சுரந்தென்ன, கானில்மழை பெய்தென்ன, அடர்கழுதை லத்தி கிலமெலலாங் குவிந்தென்ன, அரிய குணமில்லாத பெண் அழகாயிருந்தென்ன, ஆத்தான கோழைபல அரிய நூலோதியென்ன, திடமினிய பூதம்வெகு பொன்காத்திருந்தென்ன? திறன் மிகுங் காடி மயிர்தான், செறிவாகி நீண்டென்ன, வத்திரபூடணமெலாம் சித்திரத்துற்றமென்ன, மடமிகுந்தவருக்கும உபகார மில்லாத வம்பர் வாழ்வுக்கு நிகராம்" என்பதுங் காண்க.

உலோபி பிறரால் நச்சப்படாதிருத்தற்குக் காரணம் பொருள் மேல் அவன் வைத்திருக்கும் இச்சையேயாம். உலோ பம் என்பது ஒருவருக்கும் ஒன்றுங் கொடாமல் பொருளைக்

கௌவிக்கொண்டு மிக இறுகி நிற்கும் உள்ளப்பற்று. "உளப் பரும் பிணிப்பறு உலோபம்" என்றார் கம்பர். இது பொரு ளாசையோடு பிணைந்து கிடக்குமாதலால் அக் கொடிய இச் சையை உலோபத்திற்கு மனைவி என்பர்.

"உற்றபொருள் பற்றி யுதவாமை யுருவாமென்
வெற்றியும், உறுதபொருள் வேட்கைவடிவாகும்
மற்றெனது தேவியெனும் வாஞ்சையு மலர்தால்
கற்றறிவுளா ரெனினும் யாரவை கடப்பார். (க)

தூதுமுன் நடந்தொரு சுயோதனனை யைவர்க்
கீதியவர் தம்முரிமை யென்றெதி ரியம்பு
மாதவனொ டுள்ளளவு மண்ணிது கொடேனென்
றோதிய தென் னவனுரைத்த மொழியன்றோ? (உ)

மாதுயர முற்றெனினும் வஞ்சனை செய்தேனும்
ஓது பொருள் பெற்றது கொடுள்ளதை மகிழ்ந்தே
ஏதமுறு மென்மனைவி யிச்சையிவள் தன்னால்
போதுமிவை யென்னுமவர் பூமிசையில் யாரே? (ங)

அன்னவள் பெருங்கடலும் அற்பமென ஓங்கித்
துன்னுமளவின்கண் மிகு தூயவர் தமக்கும்,
இன்னவர் நமக்கினிய ரென்பவரிடத்தும்,
பின்னருள் கருத்திடை பிறக்கவும் வராதே. (4)

எண்டல மதற்குளுள இந்தனமதெல்லாம்
உண்டுமழலிற்கொழி வுறுத பசி யொப்ப
அண்டபகிரண்டமும் அகட்டினிடை யேயுட்
கொண்டுமொழி யாதெனது கோதையவட் கென்றான்" (5)
(பிரபோத சந்திரோதயம்).

இவை, உலோபன் தனது ஆற்றலைக் குறித்துத் தன் அரச னாகிய மோகனிடங் கூறி வருங்கால் இடையே கூறியன. உலோ பத்தின் இயல்பும், அதனையுடையாரது செயலும், நிலையும் இவற் றானினிதறியலாகும்.

நச்சு மரம்போல் உலோபி நச்சப்படான் என்று உணர்த்தி அவனது நாச நிலையை இங்ஙனம் விளக்கியருளினார்.

நீத்தமும் பரவையும் குறுக நெஞ்சிடைக்
கோத்த அன் புணர்விடைக் குளிப்ப மீக் கொள
எத்தவம் புரிய ஒன் றீகலான் பொருள்
காத்தவன் புகழெனத் தேயும் கற்பினள். (இராமாயணம்)

சூர்ப்பணகை கற்பு உலோபி புகழ்போல்இருந்தமெதன இதில் இகழ்ந்திருக்கும் அழகைப் பார்க்க.

உலோபி செல்வம் எவ்வளவு மிகுந்திருந்தாலும் அது ஒருவருக்கும் பயன்படாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கண்ணுக்கினியான்பால் உணரப்படும்.

## கதை.

கண்ணுக்கினியான் என்பவன் தொண்டை நாட்டிலே நேரி என்னும் ஊரி லிருந்தவன். இவன் ஈரமற்ற ஈன நெஞ்சினன். யாரையும் கடுத்த முகத்தோடு நோக்கி வடுப்படப் பேசி வைது பழிக்கும் வெய்ய வாயினன் நல்ல அழகனுயினும் பொல்லாத இழிகுணமுள்ளவனுதலால் தனக்குச் சூட்டியிருக்கும் பெயர்க்கு உடன்பாட்டினும், எதிர் மறையினும் இவன் பொருள் விரித்து நின்றுன். இவனுடன் பிறந்த தம்பி ஒருவனிருந்தான், அவன் பெயர் திருவேங்கடம். இரக்கமும் பொறையும் ஈகையுமுடையவன். உற்றுரைப் பேணி அற்றுரை ஆதரித்து ஒத்ததறிந்து எல்லார்க்கும் இனியனுய் அவன் இதம்புரிந்து வந்தான். தந்தை வழியாக வந்திருந்த பெருஞ் செல்வத்தை அவனுக்குச் சிறிது கொடுத்துவிட்டு இவன் பெரிதும் கொண்டு தீமையில் பெருகி நின்றுன். கடுவட்டி முதலிய கொடிய வழிகளில் மேலும் மேலும் பெருக்கிப் பொருளைத் தொகுத்துவைத்து மிகவும் களித்தான். இங்ஙனமிகுந்த செல்வம் அடைந்திருந்தும் ஈதல் என்பது யாதுமின்றிப் படு உலோபியாய் இவன் பாழ்பட்டிருந்தான். இவ்வாறு இருந்துவருங்கால் இரட்டையர் என்னும் புலவர் இருவர் இவன் ஊர்வழியாக ஒருநாள் வந்தார். அவ் இருவரும் ஒரு வயிற்றுதித்த உடன் பிறப்பாளர், அருட்புலமை யுடையவர். பலவிடங்களிலும் திரிந்தமையால் வருந்திவந்துள்ள அவர் எதிரே உயர்ந்து தோன்றிய இவனுடைய விரிந்தமனையுட் புகுந்தார்.

அவரைக் கண்டவுடனே இவன் கனன்றெழுந்து வெளியேபோம் படி வெறுத்துப்பேசினன். அவ்வளவிலமையாமல் ஆர்த்து அடிக்கவும் வந்தான். இவனது பொல்லா இயல்பினைநோக்கி அந்நல்லா விருவரும் முதலில் நகைத்து நின்றாராயினும் முடிவில் நடுங்கி யகன்றார். அடுத்த மனையிலிருந்த இவன் தம்பி விரைந்துபோய் விழுந்து வணங்கி அவரை விரும்பி யழைத்துவந்து மிகுந்த அன் போடு விருந்துபுரிந்து உவந்துபசரித்தான். அவனது ஈகை யியல் பையும் இவனது ஈனநிலையையும் எண்ணி வியந்து "தேன்பிறந்த வாயான் திருவேங்கடத்துடனே ஏன்பிறந்தான் கண்ணுக்கினி யான்?" என்று முன்னவர் வினவினர். "சீதேவி தான் பிறந்த செய்ய திருப்பாற்கடலிற் மூதேவி யேன்பிறந்தாள்? முன்!" என உடனே அதற்கு விடையாகப் பின்னவர் கூறினர். இன்னவாறு பேசிப்போன அவர் இவனது நீச உலோபத்தை நினைந்து நினைந்து வருந்தினர். "இவனுக்கு இணையாகக் கல்லினைச் சொல்லலாமா?" என்றார் ஒருவர். "அது, ஆலயத்துக்கு ஆகுமாதலால் ஒன்றுக் கும் ஆகாத இவனோடு அதனை ஒப்புச்சொல்லலாகாதென்றார்" மற்றொருவர். இவ்வாறு கழுதை பிண முதலிய ஈனப்பொருகளை யெல்லாம் எடுத்தெடுத்துக்கூறி அவற்றினும் இவன் ஏதுக்கும் உதவாத ஈனப்பொருள் என இழித்துப் போனர்.

"கல் ஆலயமாம்; தேவருமாம; கழுதை, கசடர் பொதி சுமக்கும்;
கடாவோ, உழுதுபயிரிடற்காம் ; கட்டம், பன்றிக் கிரையாகும்;
புல்லேறிசர் வாகனமாம்; பொதியுஞ் சுமக்கும்; பிணமெனிலோ,
பூசிமுடித்து மறையோர்க்குப் பொருளை ஈந்து புகழ் எய்தும்;
மல்லார் குட்டிச் சுவரெனிலோ, மாடு முறைஞ்சும்; மறைவாகும்;
மதியாத் துடைப்பம் தானெனிலோ, மாடகூடந் தனைவிளக்கும்;
அல்லாதுலுத்தன் தனக்கிணையா யாரையுரைப்பேன் புவிமீதில்
அவனைக் குறித்து கூறுமிடத்தவனுக்கவனே சரிதானே." (இரட்டையர்).

இவ்வண்ணம் இவனைக்குறித்து அவர் பேசிப்போன பின் னர் இவன் கொடும்பழி யடைந்து கடுந்துயருழந்தான். ஒருவரே னும் இரங்கி நெருங்காமல் எல்லாரும் இவனை இகழ்ந்தகன்றிருந் தார். இவன் செல்வம் யாதும் பயன்படாமல் அவமே கழிந்தொ ழிந்தது. "நச்சப்படாதவன் செல்வம் நடுவூருள் நச்சுமரம் பழுத் தற்று" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்துநின்றது.

"கல்வியில் கண்ணுக்கினியானனையசீர்பெறு திருவேங்கடத்தானென்னும்
சொல்விளங்கு மிருதுணைவர் ஒருவளவிற் குடியிருப்பார் தொந்தந்தீர்ந்தார்,
நல்வினைஞர்க் காகாதான்மூத்தவன் பின்னோனவர்மேல் நசைமிகுள்ளான்
பல்விதத்தால் இளையவன்பேர் விரவியிந்தப் புலவரவர்பதி சேர்ந்தாரே. (க)

அங்கவர்வாழ் மனைமுகப்பிற் போதலுமூத்தவன் சீறி யதட்டிவந்தான்
புங்கவரிற்சீரியரா மவர்வெகுண்டார் போல்நழுவிப் போகலுற்றார்
செங்கணெடு மாலனைய இளையவன் கண்டுடன் வணங்கித் தினமு நாயேன்
உங்கள்புகழ் வினவியெதிர் காணுறச்செய் தவப்பயனுவுற்றீரென்று. (உ)

பேரன்பாலழைத்திடலு மறுக்கிலராய் மகிழ்ந்தவன்றன் பிறகிற்சென்றார்
வாரமுறுமனைவியு மக்களுமவர் தாள் தொழுவித்து மணம்விராவும்
சீதயிலமுநீரு முழுக்காட்டி யுணவருத்திச் செம்பொற்கட்டில்
சாரவைத்துப் பணிபலவுஞ்செய்தனனன்னவர்குலத்தோன் றானென்பாரே.

தேன்பொழிந்தவாய்த் திருவேங்கடத்தான்முன் வேம்புறழ்சொற் செப்பும்
வாயோடு என்பிறந்தானோ கண்ணுக்கினியானென்றன்மூத்தோன்,
இளையோன் மேனாள்,
மான்புரைகட்டிருவருபாற் கடலிடைமுன் மூதேவி வரலே னென்றான்,
வான்பரவுபுகழிரட்டை யார்கவியென் றின்றுமது வழங்கலுண்டே. (ச)

கல்லாலயமுந் தேவுமாகுமலம் பன்றியுணவைக் காமென்றாற்போற்,
பொல்லாதபொருள்களைச்சொற்றவற்றையு நல்லனவாகப்புகழ்ந்திட்டென்று
மெல்லாரும் வெருளுறுகண் ணுக்கினியான் இறுதிவிலிணையில்லா னென்னச்
சொல்லாயேபேசினர் அச்சொற்களுமோர் கவியாகித்துலங்கிற்றம்மா. (ரு)

வெம்பியொருகவியுரைத்தால் அவன்தலைபற் பலதுண்டா வெடித்துவீழும்,
தம்பிகுணசீலதவ நோக்கத்தால் பிழைத்துநடைச் சவம்போன்றுற்றான்;
கம்பிதமெய்தாதுயிர்கட் கிதஞ்செய்திருவேங்கடத்தா னெனுங்காராளன்
செம்பியன் பாண்டியன் சேரன்முதலினரிலொருவனிகர் சீர்பெற்றானே. (சு)
(புலவர்புராணம்)

மேற்குறித்த இவனது பொல்லா இயல்பும், புன்மையும் உலோபமும் இதன்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளன காண்க.

நட்டார்க்கும் நள்ளா தவர்க்கும் உளவரையால்
அட்டது பாத்துண்டல் அட்டுண்டல்—அட்ட
தடைத்திருந் துண்டொழுகு மாவதின் மாக்கட்
கடைக்குமாம் ஆண்டைக் கதவு. (நாலடியார்)

ஈயா திவறும் இழிமகன்றன் செல்வத்தின்
ஓயாவறுமை யுயர்ந்ததே—பேயாகும்
வன்பிறப்பும் பொல்லா வசையும் ஒழியாத
புன்பிறப்பும் நல்கா புகுந்து. (தருமதீபிகை)

ஈந்து நுகரான் இருந்தும் இறந்தான்காண்
ஏந்து புலிக்கோ ரிடர்.

உலோபி செல்வம் ஒருவருக்கும் பயன்படாதென்பது இதனால் கூறப்பட்டது

1009. மண்டி யவந்தனன்று வைத்தபொருள் மற்றவர்கைக்
கொண்டகன்ற ரென்னே குமரேசா—கொண்டாடும்
அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

இ—ள்.

குமரேசா! அவந்தன் வைத்திருந்த பொருளை ஏன் பிறர் கவர்ந்து கொண்டார்? எனின், அன்பு ஒரீஇத் தற்செற்று அறம் நோக்காது ஈட்டிய ஒண் பொருள் பிறர் கொள்வார் என்க.

இது, உலோபி பொருள் அவனுக்கு ஒரு பயனும் படாது பிறர் கைப்பட்டொழிந்துபோ மென்கின்றது.

ஒரீஇ = ஒழிந்து. தற்செற்று = தன்னை ஒறுத்து. அஃதாவது உண்ணல் உடுத்தல் முதலிய இன்ப நலங்களைத் தனக்கு நன்கு செய்து கொள்ளாமல் புன்மையோடு பொருந்தி நின்று என்க. ஒறுத்தல் = வருத்துதல், குறைத்தல்.

அனைபை முன்பு வைத்தது முன்னுறத் தோன்றும் அதன் தன்மை கருதி. என்னை? தன்னைக் காட்டிலும் பிறர்மேல் அன்பு ஒழிதல் முந்துற நிகழுமாதலால் அந் நிகழ்ச்சி நோக்கி என்க. அன்பு ஒரீஇ ஈட்டிய பொருள், தற்செற்று ஈட்டிய பொருள், அறம் நோக்காது ஈட்டிய பொருள் எனத் தனித் தனி கூட்டி நோக்குக. இவ் ஈட்டம் கேட்டிற்கே ஏதுவாகுமாதலால் இங்ஙனம் ஈட்டலாகாதென்க. பிறர்மேல் அன்புடையனாய்த், தன்னைப் பேணி அறம் நோக்கி ஈட்டிய பொருளே ஒருவனுக்கு என்றும் இனிய உரிமையாய் நின்று இன்பம் பயக்குமாதலால் அவ் வகையிலமைந்தே அதனை நன்கு ஈட்டிக்கொள்ளவேண்டுமென்றபடி.

மேல், உலோபி செல்வம் பிறர்க்குதவா தொழியுமென்றார்; இதில், அவனுக்கும் அது பயன்படாதழியுமென்கின்றார்.

அன்பை ஒழித்து, தன்னை ஒறுத்து, அறம் பாராது ஒருவன் ஈட்டிவைத்த பொருளைப் பிறர் வலிந்து வௌவிப் போவர் என்பதாம்.

பிறர் எவ்வளவு வருந்தி யழுதாலும் யாதும் இரங்கியருளாமல், கொடுவட்டி முதலியன கூட்டிப் பெருக்கி, வஞ்சம் புரிந்து வன்னெஞ்சனாய் நின்று அவர் பொருளை வலிந்து வௌவியும், சுற்றம் தழுவின் பொருள் செலவாம் என்று கருதி அவர்மேல் பற்றற நீக்கியும், உலோபி உற்றிருப்பனாதலால் " அன்பு ஒரீஇ " என்றும், இனியன புனையான், அரியன உண்ணான் என்றபடி உடை உணவு முதலியவற்றுள் ஒரு நலனையும் நன்கு அநுபவியாமல் உடலை ஒறுத்து நிற்பனாதலால் " தற்செற்று " என்றும், இங்ஙனம் பிறரையும் தன்னையும்பேணாது பெருந் துயர்ப்படுத்திப் பொருளாசையோடு மருளடைந்து நிற்பவன் அறம் புரி கொள்கையைக் கனவிலும் நினையானாதலால் " அறம் நோக்காது " என்றும் கூறினார். இதனால் உலோபியினது பழி நிலையும், இளிவரவும், படு பாவமும் இனிது புலனாம்.

இவ்வாறு ஈன நிலையில் நின்று ஈட்டிய பொருள் அவனுக்கும் உதவாமல், அவன் சந்ததிக்கும் பயன் படாமல், போனவழி தெரியாமல் வீணே போய்த் தொலையும் என்பார் " ஒண் பொருள் கொள்வார் பிறர் " என்றார். ஒண்மை அப் பொருளின் இயற்கை நலத்தை யுணர்த்தி நின்றது.

அறம் நோக்கான் பொருளைப் பிறர் கொள்வர் என்றது என்னை? எனின், பொருளின் பயன் அறஞ் செய்தலும், இன்பம் அனுபவித்தலுமேயாம்; அத்தகைய பயனுடைய அப்பொருள், பயனற்ற உலோபிபால் நெடிது நில்லாது; பயன் படும் வகையில் கடிது போம் என்க.

" உடாஅதும், உண்ணாதும் தம் உடம்பு செற்றும், கொடாஅது வைத்து ஈட்டினார் இழப்பர் " என்றார் பிறரும்.

தனதாகத் தான் கொடான் தாயத்தவரும்
தமதாய போழ்தே கொடார்—தனதாக
முன்னே கொடுப்பின் அவர் கடியார்; தான் கடியான்
பின்னை அவர் கொடுக்கும் போழ்து. (நாலடியார்.)

பிறர்க்குதவி செய்யார் பெருஞ்செல்வம் வேறு
பிறர்க்குதவி யாக்குபவர் பேறும்—பிறர்க்குதவி
செய்யாக் கருங்கடல் நீர் சென்று புயல் முகந்து
பெய்யாக் கொடுக்கும் பிறர்க்கு. (நன்னெறி.)

இவை யீண்டெண்ணற் குரியன. உலோபி பொருளிழந்து புன்மையுற்று மறுகி நிற்பன் என இவை அறிவுறுத்தி நிற்றல் காண்க. "ஈயார் தேட்டைத் தீயார் கொள்வர்". (ஔவையார்.)

ஈயாத உலோபிகள் பொருளைத் தீயார் கவர்வர் எனவும், ஈக்கள் தேட்டமாகிய தேனைத் தீத்தொழிலாளர் கொள்வர் எனவும் இருபொருள்பட்டு நிற்கும் இதன் அருமையைப் பார்க்க.

"கோடிபொன் அடைந்தால் இல்லவர்க் கீந்து குறிப்பொடு நல்லறம் புரிந்து
நாடிய சுற்றத்தவருட னுண்டு நன்மதிப்படைந்து வாழ்பவன்மேல்
வீடு முற்றிடுவான் இவையியற்றா தோன் மேதகு வாள் கரம்பிடித்த
பேடியை நிகர்ப்பனல்லதூஉ மணிந்த பிணத்தினை நிகர்சொலப் பெறுவான்.

அனுபவம் புரிந்து பிறர்க்கு மீயாதான் அருநிதியவனசன் றப் பொன்
றனையெடுத் தவைசெய் பவர்க்குரித்தனையான் றானுமந் நிதியினைக் காக்கும்,
வினைசெய் சேவகனும்; பேழையும் போல்வான், மிகுவலிப் பூதமுமொப்பான்;
இனையனைத் தனிக னென்றறிவிலரே யிசைப்பர் தெண்ணுதியின்னும். (௨

தங்குபல் கிளைக்கும் பாத்திடான் அடுத்தோர் தம்மையுங்காத்திடான், தானும்
பொங்குமின் பாகப் புசித்திடான் நாளும் பொன்னையே காத்துமா நிலத்தில்
எங்கணு மிழிவு கொண்டுவாழ்பவற்கும் ஏறியதொருபெரும் பொதிகொள்
குங்குமஞ் சுமந்த கர்த்தபந்தனக்கும் குறிப்பிடில் வேற்றுமையுளதோ? (௩

அடுத்தபொன் னிரந்தோர்க் கீந்திடிற் பின்னரடுத்திடும் பிறப்பினிற் பலவா
மடுத்துமேம் படுத்து மின்னதை யுலக மாட்டு நன்னிதி படைத்தவரைக்
கொடுத்துவைத்திருந்த புண்ணியனென்றுக் கூறுமோர் மொழி நிலை நிறுத்
தும், எடுத்தளித்தறியா ரவரவர் பிச்சையெடுத்தழிந்திளைபவரிங்ஙன் (௪)

முன்னைய பிறப்பில் அறம்பல புரிந்த முறைமையாலுயர்பெருஞ் சிறப்பின்
மன்னிய மனித்தரிங்கு மவ்வாறே மனதொடு நல்லறம் புரிந்தால்
பின்னரு மிவ்வாறுயர் நலம்பெறுவார் பேதைமையான் மறந்தனரேல்
என்னபாழுஞ் சென்மமெடுப்பரோ இதனையெண்ணலு நடுங்குமென்னிதயம்"
(குமணன்.)

செல்வம் பெற்றால் அன்புடையராய் நின்று பிறரை ஆதரித்துத் தன்னைப் பேணி அறம் புரிதல் வேண்டும்; இல்லையாயின் யாதும் இல்லாராய் ஈன நிலையில் இழிந்துபடுவர் என்பது இதனால் உணரலாகும்.

கொடுவினையால் ஈட்டி ஒருவருக்குங் கொடாமல் உளமிறுகி நிற்கும் படு உலோபி பொருள் பிறரால் பறித்துக்கொள்ளப்படும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அவந்தன் பால் உணரப்படும்.

## கதை.

அவந்தன் என்பவன் இற்றைக்கு ஐயாயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னர் மாளவதேசத்திலே அவந்திபுரி என்னும் நகரிலிருந்தவன். வேதியர் குலத்தில் பிறந்தவன். இவன் சாதியில் அந்தணனாயினும் யாதும் இரங்காச் சிந்தையன். "கல்மனப் பார்ப்பான்" எனச் சொல்லித் தூற்றி எல்லாரும் இவனை எள்ளி வந்தாராயினும் இவன் இழுக்கொன்றுங் கொள்ளாது தான் உள்ளியதையே உள்ளி ஊக்கி நின்றான். பொருளில் பேராசை யுடையவன், தனது மரபு நிலை திரிந்து நின்று பல வழிகளிலு முயன்று வரும்பழி நோக்காது பெரும் பொரு ளீட்டினான். மேலும் மேலும் வட்டிக்குக் கொடுத்தும் வஞ்சங்கள் புரிந்தும் வளமிகப் படைத்து அளகையர் கோன் என இவன் உளமகிழ்ந்திருந்தான். இங்ஙனம் பெருஞ் செல்வமடைந்திருந்தும் தான் ஒன்றையும் நன்கு அனுபவியாமல் எளியரினும் மிக எளியனாய் இளி நிலையில் இவன் இழிந்து நின்றான்.

"அனுபவமொன்றே பொன்னா லாயநற் பயனஃதின்றேற்
புனலிலாத் தடத்தைப் பெய்யாப் புயலினைப் பொருவுமப்பொன்
தினமுமே நுகர்தலின்றித் தீனர்க்கும் வழங்கலின்றித்
தனமதைக் காத்தல் நச்சுத்தருவினைக் காத்தல் போலாம்"

ஆதலால் இவன் யாதொரு பயனும் கொள்ளாமல் பொருள் காத்த பூதம்போல மருள்மீக் கொண்டு புன் பழியோடு பொங்கியிருந்தான். தன்னைக் கொண்ட மனைவிக்குங்கூட ஒன்றுங் கொடாமல் இவன் கொடுமை செய்துவந்தான். அடுத்தவரெவ

ரும் நெருங்காதபடி கடுத்திருந்தானாதலால் யாரும் இவ
அணுகாதகன்றார். தன் உயிரை விடினும் விடுவனே யன்றிப்
பொருளை விடேன் என இவன் உளமிறுகி நின்றான். இவனது
கொடியநிலையினை நோக்கிச் சுற்றத்தாரெல்லாரும் பற்றற நீத்தார்.
"ஈகையில்லாது பொன் ஈட்டுவோன் கொண்ட, தோகையும் மைந்
தரும் தொலைகிலானென, ஓகையா யருவிடம் உணவி விட்டவன்
சாகையே கருதி மாதவம் செய்வார்களே" என்றபடி இவன்
தொலைந்து போவதையே எல்லாரும் விழைந்திருந்தார். ஒருவ
ரிடத்தும் அன்பின்றிக் கொடிய உலோபியாய்ப் பொருளொன்
றையே பற்றி அறந்துறந்து நின்ற இவனைக் கள்ளர் சிலர் வந்து
ஒருநாள் கனன்று புடைத்துப் பொருளைக் கவர்ந்து போயினர்.
மற்றவரெவரும் வைது பழித்து உற்றவற்றை யெல்லாம் ஒரு
ங்கே பற்றிக்கொண்டு இவனை ஓட்டி விடுத்தார். முடிவில் ஒன்
றும் இல்லானாய் இவன் உழன்று திரிந்தான். "அன்பு ஒரீஇத்
தற்செற்று அறம் நோக்காது ஈட்டிய ஒண் பொருள் கொள்வார்
பிறர்" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது. இவன்
நன்றியில் செல்வனாய் நின்றதும், அப் பொருள் இவனைவிட்டுக்
குன்றி யொழிந்ததும் அக்காலத்தவர் பலராலும் எடுத்துக் காட்
டாகக் குறிக்கப்பட்டுள்ளன. கண்ணனும் இவனது உலோப
நிலையைக் குறித்து உத்தவரிடம் கூறியுள்ளார். அடியில்வருதல்
காண்க.

"அவந்திபுரி யுற்றுறையும் அந்தணன்முன் முனியா
துவந்திடர் பொறுத்த கதை ஒன்றுள துனக்குத்
துவந்தவினை போகவது சொல்குதும் எனக்கண்
சிவந்தெழு பணித்தலை நடித்த புயல் செப்பும். (க)

அந்நகரின் வாழு மறையோன் அளகையாளும்
மன்னவ னெனப்பொருள் வருந்தி நனி யீட்டித்
தன்னையடைவுற்ற வறிஞோர், தமரினோருக்கு
இன்னலற ஒன்றும் உதவான் இனிதியம்பான். (உ)

உற்றமனையாளொடும் உவந்தன தெவிட்டப்
பெற்ற புதல்வர்க்கும் நனிபெட்பினுடன் ஈயான்;
செற்றமொடும் வெவ்விய சினத்தொடும் உழந்து
குற்றமொடு மிக்கநிதி கொண்டுறையு நாளின். (ங)

கள்ளர்களி ஞனு முறை காவலவ ஞனும்
கொள்ளுமுறை யென்றெழு குடித்தமரி ஞனும்
நள்ளிருளி னில்லினலி நண்ணழலி ஞனும்
உள்ளபொருள் யாவும் ஒழிவுற்றிட அயர்ந்தான்".(பாகவதம்

இவன் அன்பின்றித், தன்னை ஒறுத்து, அறம் நோக்காது, பொருளை ஈட்டி வைத்ததும், அதனைப் பிறர்கொண்டு போனதும் பிறவும் இதனுல் அறியலாகும்.

"நம்பன் அடியவர்க்கு நல்காத் திரவியங்கள்
பம்புக்காம் பேய்க்காம் பரத்தையர்க்காம்—வம்புக்காம்
கொள்ளைக்காம் கள்ளுக்காம் கோவுக்காம் சாவுக்காம்
கள்ளர்க்காம் தீக்காகுங் காண்" (ஔவையார்)

"கொடுத்தலுந் துய்த்தலும் தேற்று இடுக்குடை
யுள்ளத்தான் பெற்ற பெருஞ்செல்வம்—இல்லத்
துருவுடைக் கன்னியரைப் போலப் பருவத்தால்
ஏதிலான் துய்க்கப் படும்." (நாலடியார்)

நல்லுடை புனையான் உண்டி நயந்தெரிந்துண்ணு னல்லோர்
சொல்லிய அறமும் செய்யான் சுகமென்பதொன்று மோரான்
புல்லிய வுலோபமென்னும் பூதம் வாய்ச் சிக்கி யென்றும்
அல்லலே யடைந்தான் செல்வமடைந்திடா தழிந்தானந்தோ.

உள்ளம் இரங்கி உதவான் பொருளோருங்கே
கொள்ளைபோம் அந்தோ கொடிது.

கொடாத உலோபி பொருள் கொள்ளைபோ மென்பது இ
ஞல் கூறப்பட்டது.

---

1010. மாரிநின்ற தென்ன மறுகினர் ஓரிமுன்
கூரழிந்த போதேன் குமரேசா—நாரமைந்த
சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

இ—ள்.

குமரேசா! ஓரி துனியுற்று மனந்திருகி நின்ற பொழுது மற்றவர் ஏன் மறுகி நொந்தார்? எனின், சீர் உடைச் செல்வர் சிறு துனி மாரி வறங் கூர்ந்தனையது உடைத்து என்க.

இது, நன்றியுள்ள செல்வரின் நலங் கூறுகின்றது.

மறுகினார் என்றது ஓரி துனிகொண்டிருந்தபொழுது பலரும் மயங்கி அலமந்து வருந்தினமை கருதி. நார் = அன்பு.

சீர் = புகழ். சீருடைச் செல்வர் என்றது சுற்றந் தழுவி, அற்றவர்க் கருளி, உற்றவ ரெவர்க்கும் உறுதி பயந்து உயர் புகழுடையராய் நயனமைந்திருக்கும் திருவினர் என்க.

துனி = வெறுப்பு. அஃதாவது ஏதாவதோர் காரணத்தை முன்னிட்டு மாறுபட்டு நிற்குமனப் பிணக்கு. "துனியின் றியைந்த துவரா நட்பின்" (அகம்) "துனி கொள் துயர் தீரக் காதலர் துனைதர" (கலித்தொகை) "துனிவுகொள் மன்னற்கு முனிவன் கூறும்" (பெருங் கதை) "துனிவரை மார்பன்" (சீவகசிந்தாமணி) "துனியறு முனிவரர் தொடர்ந்து சூழ்வர" "துனியின்றி உயிர் செல்ல" (இராமாயணம்). இவற்றுள் "துனி" உணர்த்தி நிற்கும் பொருளை யுணர்க. "சிறு" என்றது நெடிது நில்லாது கடிதின் னீங்கும் இயல்பினது என அத்துனியின் நிலைமை தோன்ற நின்றது. "செல்லாத் துனி" (குறள்–769). என நீங்காது நிற்கும் வெறுப்பினைக் குறித்து முன் உரைத்திருத்தல் காண்க.

மாரி = மேகம், மழை. வறம் கூர்தல் = மழைபெய்யாது நிற்றல். வறம் = நீரின்மை. "அருவி மாறி அஞ்சுவரக் கடுகிப், பெரு வறங் கூர்ந்த வேனிற்காலை" "கழை காய்ந்துலறிய வறம் கூர் நீளிடை" (புறம்) "வறந்த ஞாலம் தெளிர்ப்ப வீசிக், கறங்குரல் எழிலிகார் செய்தன்றே" (ஐங்குறுநூறு) "கருவி வானம் கடற்கோண் மறப்பவும், பெருவறனுகிய பண்பில் காலையும்" (பொருநராற்றுப் படை) "வறங்கூர் வானத்து வள்ளுறைக் கலமரும்" (கலி) "பெரு வறங்கூர்ந்த கானம்" (பெரும்பாண்). "நாடு வறங் கூறினும் இவ் ஓடு வறங் கூராது" (மணிமேகலை) இவற்றுள் "வறம்" குறித்துநிற்றல் காண்க.

மேல், சீர் கெட்ட செல்வரின் புன்மையை யுணர்த்தினார்; இதில், சீருடைச் செல்வரின் தன்மையை யுணர்த்துகின்றார்.

சிறந்த புகழுடைய செல்வர் சிறிது வெறுப்புற்று ஈயாதிருத்தல் மேகம் மழை பொழியாது மறுத்து நிற்பதுபோல்வதோர் மறுக்கமுடைய தென்பதாம்.

சீருடைய செல்வர், நீருடைய மேகத்திற்கும்; அவரது துனி, அதனது வறங்கூர்தற்கும் ஒப்பாகவைத்து இதில் உணர்த்தியுள்ளமை காண்க.

இரங்கியீதல், இன்னுரையாடல் முதலிய சிறந்த குணங்களமைந்து நிறைந்த புகழோடுயர்ந்து நிற்குந்திருவுடையார் ஒரோவழி ஏதேனு மனவெறுப்பினால் இரவலர்க்கு உதவாதிருப்பின் அவ் இருப்பு, பருவங்கண்டு பெய்தருனி உலகத்தைப்பேணிவந்த மேகம் தன் நிலைமாறி மழைபொழியாது நிற்பது போன்றதாம் என்பார் "சீருடைச் செல்வர்துனி, மாரி வறங்கூர்ந்தனைய துடைத்து" என்றார். இதனால் அவரது தனி இயற்கையும், இனிய நீர்மையும், இடையே தோன்றிய அத்துனி நெடிது நில்லாதென்பதும், என்றும் பிறர்க்கு அவர் இரங்கியுதவுவரென்பதும் பிறவும் அறியலாகும்.

இனி, "துனி" என்பதற்கு வறுமை என்று பொருள் கொண்டு பரிமேலழகர் உரைத்தபடியே உரைத்தால் என்னை? எனின், செல்வம் சேர்ந்திருந்தும் அதனை நல்லவழியில் பண்படுத்தாத புல்லிய இயலைக் குறித்து விளக்கலே இவ் அதிகாரத்தின் குறிக் கோளாதலாலும், "நயனுடையான் நல்கூர்ந்தானாதல், செயுநீர செய்யா தமைகலாவாறு" என நல்லோர் வறுமையைக் குறித்து முன்னரே சொல்லியுள்ளமையானும், பொருளை வைத்துக்கொண்டு இல்லை என்பவரைப்பற்றிப் பேச்சேயன்றி இல்லாதவர் ஈயாதிருத்தலைப்பற்றிப் பேச்சில்லையாக லானும, "செல்வர்" என்று கூறிவிட்டு அதன்பின் அவர்மேல் வறுமையைச் சுமத்தல் பொருத்த மில்லை யாக லானும், "துனி" என்பதற்கு வறுமை என்று நேரே பொருள் இன்மை யானும், அங்ஙனம் வறுமை என்பதே அடிகள் கருத்தாயின் "சீருடையாளர் சிறுமிடி" என அருளியிருப்பராத லானும் அவ்வாறு பொருள் கோடல் பொருந்துமா? என்பதை ஆராய்ந்து உணர்ந்துகொள்க.

நன்றியில் செல்வர்களாகிய உலோபிகளைக் குறித்து இது வரை கூறிவந்த அடிகள் நலல திருவுடைய உபகாரிகளை இங்குக் குறித்தது என்னை? எனின், அவரது மேன்மையும் இவரது கீழ்மையும் தெளிவாகத் தெரிய என்க.

எவ்வளவுக்கு எவ்வளவு பிறர்க்குப் பயன்படுகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவே ஒருவன் செல்வம் நன்றியுள்ளதாய் உயர்ந்து திகழும்; அப்பயன் குன்றின் அவ்வளவுக் கவ்வளவு அது நன்றியில் செல்வமாய் இழிந்து தொலையும் என்பது குறிப்பு.

பெய்துவந்த மேகம் இடையே பெய்யாதொழியின் இவ் வையம் மறுகி நையும், அதுபோல் ஈதலைச் செய்துவந்த மேலோர் இடையே ஏதேனும் ஓர் காரணத்தால் ஈயாது நிற்பின் இரவலர் மிக அலமருவராதலால் அங்ஙனம் உருவண்ணம் உற்று நின்று ஓம்ப வேண்டும் என்பது கருத்து.

எவ்வளவு செல்வம் அமைந்திருந்தாலும் உலோபிகள் கையி லுள்ளது என்றும் பயன் படாது; உபகாரிகளுடையது எப்படி யும் பிறர்க்கு இனிது பயன் படும்; என்பது அவரை "நச்சு மரம்" எனவும், இவரை "மாரிவறம்" எனவும் கூறியத னால் தேறலாகும்.

உலோபிகள் பழியடைந்து பாழ்படுவர்; உபகாரிகள் புகழ் மிகுந்து புத்தேளுலகம் புகுவராதலால் செல்வம் பெற்றார் பற் றுள்ளங் கொண்டு பாழ்படாது, பகுத்துண்டு வாழவேண்டும் என் றபடி. "இரந்தார்க்கொன் றீயான இறந்தான்; இரங்கிப் புரந் தான் இருந்தான் புகழ்" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

நிலையில்லாத பொருள் நிலைத்துள்ளபொழுதே அதனை நல்ல வழியில் பயன்படுத்திக்கொள்ளல்வேண்டும் என்பது கருத்து.

"வெள்ளம், மறலி, விறல் வேந்தர், தீத்தாயம்,
கள்வரென் றிவ்வாற்றிற் கைகரப்பத் தீர்ந்தகலும்
உள்ளி லுறுபொருளை ஒட்டா தொழிந்தவா
றெள்ளும் பெருந்துயர்நோய் எவ்வம் இகப்பவே"

(வளையாபதி)

பொருளைத் துய்த்து மகிழாமல் வைத்துக் கழியாதே, ஈயாது இவறினால் இழிபிறப்புண்டாம், பழிவளரும், பாவம் பற் றும், யாவரும் நெருங்கார், கோடியிருந்தாலும் பீடு பெறமுடி யாது, ஏதமும் தீதும் இன்னலும் பெருகும், எவரும் இகழ்ந்து தூற்றுவர், அப்பொருளையும் பிறர் கவர்ந்துகொண்டுபோவர்; என

ஈயாத உலோபத்தால் நேரும் ஈனங்களை இதுவரை உரைத்து நன்றியில் செல்வத்தின் நிலையினை விளக்கி, முடிவில் பிறர்க்கு வழங்கியருள்வோரே சிறந்த செல்வராய் உயர்ந்து விளங்குவர் என அறுதியிட்டு உறுதிபெற இங்ஙனம் உணர்த்தியருளினார்.

இரந்துவந்தவர்க்கு ஈந்தும், இனிய போகங்களை நுகர்ந்தும், அறம் புரி கொள்கையோடமர்ந்து நிற்போரே மாரிபோல் சிறந்து நிற்பாராதலால் செல்வம்பெற்றார் இங்ஙனம் சீருடைச் செல்வராய்த் திகழ்ந்துகொள்ளவேண்டும் என்பது இதன் திரண்டபொருளாம். ஈந்துவந்த செல்வர் இடையே ஈயாது நிற்பின் அந்நிலை இவ்வுலகிற்கோர் துயராம் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை ஓரிபால் உணரப்படும்.

## கதை.

கொல்லிமலைக்குத் தலைவனாய்ச் செல்வநிலையில் சிறந்து எவர் வரினும் இல்லையென்னுமல் ஈந்து இசைதிசைபரப்பி அசைவிலாண்மையோடு ஓரி உயர்வெய்தியிருந்தான். வில்வலியில் அக்காலத்திருந்தவரெவரினும் இவன் சிறந்து நின்றானுதலால் "வல்வில் ஓரி" என அனைவரும் இவனை வழங்கிவந்தார். "கொல்லி யாண்ட வல்வில்லோரி" என்றார் பெருஞ் சித்திரனாரும். ஒரு முறை வேட்டைக்குப் போயிருந்த இடத்தில் இவன் ஓர் யானையைக் கண்டான். உடனே வில்லை வளைத்து ஓர் அம்பினை அதன் மேல் வேகமுறவிடுத்தான். அப்பகழி அதனை ஊடுருவிச்சென்று அப்பாலிருந்த ஓர் புலியைத் துளைத்து, அதன்பின் நின்ற கலைமான் ஒன்றைக்கொன்று, பின்பு ஓர் பன்றியை வீழ்த்தி, அடுத்திருநத புற்றில் படுத்திருந்த ஓர் உடும்பையும் சிதைத்தது.

"வேழம் வீழ்த்த விழுத்தொடைப் பகழி
பேழ்வாய் உழுவையைப் பெரும்பிறி துறீஇப்
புழற்றலைப் புகர்க்கலை யுருட்டி, உரற்றலைக்
கேழற்பன்றி வீழ, அயல
தாழற் புற்றத் துடும்பிற் செற்றும்,
வல்வில் வேட்டம் வலம்படுத்திருந்தோன்" (புறம்)

என நூன் குறித்த இவனது வில்வன்மையைக் குறித்து வன்பரணர் இங்ஙனம் வியந்து பாடியுள்ளார். "உலையுருவக் கனலுமிழ்

கண் தாடகைதன் உரமுருவி, மலையுருவி, மரமுருவி, மண்ணுருவிற்று ஒருவாளி'' என முன் உருவவிடுத்த இராகுவீரனது தனி ஆண்மைபோல் அன்று இவனும் ஆற்றிநின்றதை யறிந்து மறு புலமன்னரும் போற்றிநின்றார். இவன் தள்ளரிய வள்ளன்மையுடைய வனுதலால் யாண்டும "வள்ளியம்'' என நின்று வாரிக்கொடுத்து வந்தான். மிகுந்த மிடிவாய்ப்பட்டு வருந்தியிருந்த பாடகர் சிலர் இவன்பால் வந்து பரிசில் பெற்றுச் சென்றபின்பு தமது ஆடல பாடல்களை அறவே மறந்து செல்வக் களிப்பில் மூழ்கியிருந்தார்.

"மழைபணி குன்றத்துக் கிழவன் நாளும்
இழைபணி யானை இரபபோர்க்கீயும்
சுடர்விடு பசும்பூண் சூர்ப்பமை முன்கை
அடுபோ ராஅ ஆத ஞேரி
மாரி வண்கொடை காணிய நன்றும்
சென்றது மன்எம் கண்ணுளம் கடும்பே;
பனிநீர்ப் பூவா மணிமிடை குவளை,
வாஅேர்த் தொடுத்த கண்ணியும, கலனும்,
யானை இனத்தொடு பெற்றனர் நீங்கிப்
பசியாரா தன் மாறுகொல்! விசிபிணிக்
கூடுகொள் இன்னியம் கறங்க
ஆடலும் ஒல்லார்தம் பாடலுமறந்தே'' (புறநானூறு)

இது, ஒரு பாணன் கூறியதாகப் பாடப்பட்டுள்ளமை காண்க. கடும்பு-சுற்றம். இன்னவாறு அடுத்தாரை உயர்த்திக் கடுத்தாரைக் கடிந்து கொடுத்தல் ஒன்றே செல்வம் கொண்டதன் பயன் என இவன் கூர்ந்துவந்தான். வருங்கால் காரிமுதலிய சில குறுநில மன்னர் இவன்மேல் படையெடுத்துவந்தார். அவரோடு பலமுறையும் பொருது வென்றாலும் இறுதியில் மிக வருந்திநின்றான். அதில் பொருளழிவும், மனவருத்தங்களும், மிகுதியாக நேர்ந்தன. ஆதலால் எவரோடும் இனிது பேசாமல் சிறிதுகாலம் இவன் உளமடங்கியிருந்தான். உற்றவர்க்கெல்லாம் உதவிவந்த இவன் அவ்வமயம் உளவெறுப்பினுல் உதவாமல் நின்றமையால் பாவலர்முதல் யாவரும பரிசில் கிடையாது பதைத்து நின்றார். இந்நிலையில், கழைதின் யானையார் என்னும் புலவரொருவர் ஒரு நாள் இவன்பால் வந்தார். பெருந்தன்மையாளராய் அவர் நெருங்கி வேண்டியும் இவன் இரங்கி யீயாமல் இணைந்திருந்தான். அவர்

பலநாள் தனியே யமர்ந்திருந்தார். இயற்கையாகவே பெருவள்ளலாயுள்ள இவன் இடையே நேர்ந்த மனத்துயரால இங்ஙனம் மாறி நிற்கின்முன் என அவர் தேறி நின்முராதலால் ஒருநாள் வலிந்து எதிர்வந்திருந்து ஒரு பாடல் பாடினூர். அடியில் வருதல் காண்க.

"ஈயென இரத்தல் இழிந்தன்று; அதனெதிர்
ஈயேனென்றல் அதனினும இழிந்தன்று;
கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதனெதிர்
கொள்ளே னென்றல் அதனினும் உயர்ந்தன்று;
தெண்ணீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணு ராகுப நீர்வேட் டோரே;
ஆவு மாவும் சென்றுணக் கலங்கிச்
சேற்றொடு பட்ட சிறுமைத் தாயினும்,
உண்ணீர் மருங்கின் அதர்பல வாகும்;
புள்ளும், பொழுதும் பழித்தல் அல்லதை
உள்ளிச்சென்றோர்ப் பழியலர்; அதனால்
புலவேன் வாழியர் ஓரி! விசும்பிற்
கருவி வானம்போல
வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே".

(புறநானூறு)

ஈதல், ஏற்றல், ஈயாமை, ஏலாமை என்னும் இவற்றின் நிலைகளைக் குறித்து அப்புலவர் இதில் உணர்த்தியிருக்கும் அருமை யூன்றி யுணரத்தக்கது. நிறைந்திருந்தாலும் உலோபிகள் செல்வம் கடல்நீர் போன்று ஒருவருக்கும் நுகரலாகாது எனவும், சுருங்கியிருந்தாலும் உபகாரிகளுடைய செல்வம் ஊற்றுநீர்போல் உணஉற வினியதாய் எல்லார்க்கும் உதவுவதாகும் எனவும், மாரி போன்று உதவிவந்த நீ இப்பொழுது மனமாறி உதவாயாயின் அது யான் வந்த நேரப்பலனேயன்றி வேறில்லை எனவும், ஓரியை நோக்கி அவர் கூறியிருத்தல் காண்க. இதனால் அவரது உண்மையறிவும், இவனது வண்மை நிலையும் உணரலாகும். அவ்வுறுதிமொழியைக் கேட்டவுடனே இவன் உளமிக மகிழ்ந்து பொருள்பல தந்து அவரைப் போற்றி விடுத்தான். மன வெறுப்பினுல் சிறிது காலம் இவன் ஈயாது நின்றபோது மறுகி நின்றவர்க ளெல்லோரும் பின்பு இவன்பால் வந்து வள மிகப் பெற்று மகிழ்ந்து சென்றுர். மழை வறந்த காலத்துப்

பயிர்கள்போல இவன் துனியடைந்த காலத்தில் உயிர்கள் துயர மிகுந்திருந்தன ஆதலால் "மாரியும் ஓரியும் மாறிலுலகில்லை" எனயாரும் இவனை வாழ்த்தி நின்றார். "சீருடைச்செல்வர் சிறு துனி மாரி வறங்கூர்ந்தனைய துடைத்து" என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

பெயற்பால் மழைபெய்யாக் கண்ணும், உலகம்
செயற்பால செய்யா விடினும்—கயற்புலால்
புன்னை கடியும் பொருகடற் றண்சேர்ப்ப
என்னை யுலகுய்யு மாறு. (நாலடியார்)

ஐயமே பிச்சை அருந்தவர்க் கூணுடை
ஐயமே யின்றி யறிந்தீந்தான்—வையமும்
வாழும் வரிசையாற் றுளுரு நாளுமே
ஊனமே யின்றி யினிது. (ஏலாதி)

சாதி யிரண்டொழிய வேறில்லை சாற்றுங்கால்
நீதிவழுவா நெறிமுறையின்—மேதினியில்
இட்டார் பெரியோர் இடாதார் இழிகுலத்தோர்
பட்டாங்கி லுள்ள படி. (நல்வழி)

உலுத்தன் மிடிவருமென் றுள்வெருவி நல்கான்
நிலத்தென் றொருவன் நிகழ்த்த—நலத் திசைகூர்
வள்ளலுமவ் வச்ச மருவியே நல்குமென
விள்ளலுற்றான் மற்றொருவன் மெய். (அணி-கோன்)

கொடுத்தால் குறைந்து போம் என்று உலோபி கொடாது குப்புற்று நிற்பன்; குன்றியழியும் இயல்பினதாதலால் செல்வம் நின்றுள்ளபோதே நன்றாகப் பண்படுத்திக் கொள்ளவேண்டுமென்று வள்ளல் அதனை வழங்கி மகிழ்வான் என உணர்த்தி, "மற்றதற் காக்கல்" என்னும் அணிக்கு இலக்கியமாய் இஃது அமைந்துள்ளமை காண்க.

கைப்பொருள் பெற்றஞான்றே கடவுளாலயத்திற் கீந்தும்
மெய்ப்படு புராண நூல்கள் விருப்பொடு கேட்டு வந்தும்
வைப்பென இரப்போர்க் கீந்தும் வருபவ ருளரேற் கூற்ற
மொய்ப்புயத் தண்டந்தப்பி முன்னவ னின்பத்தாழ்வார்.
(குசேலர்)

மாரியென மேலோர் வழங்குவார்; வன்னெஞ்சர்
வாரியென வைப்பர் வரைந்து.

பிறர்க்குப் பயன்படும் செல்வமே நன்றியுள்ளதாய் நின்று விளங்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

பொருளைப் பெற்றும அதனை அனுபவியாமல் பொத்தி வைத்திருக்கும் உலோபி செத்தவனோடொப்பான். இப்பிறப்பில் ஈயாத உலோபி மறு பிறப்பில் பேயாய்ப் பிறப்பான். அவன் இவ் வுலகிற்கு ஓர் பாரமே யாவான். யாதொரு புகழுமின்றி அவன் பொன்றி யழிவான். மிக்க செல்வ முடைய னாயினும் அவன் யாதும் இல்லாதவனே யாவன். அவனை யடைந்துள்ள செல்வமும் மிக இழிவுறுவதாகும். மணமகனைப் பெறாமல் மூத் திழிந்த குமரிபோல் வீணே அது விளிந்து தொலையும். நச்சு மரம் பழுத்ததுபோல் அது நாசமுற் றழியும். வன்கண்ணரான உலோபியர் பொருள் பிறரால் வௌவப் பட்டழியும். மென் கண்ணரான சீரியோர் செல்வம் மாரிபோல் நின்று யாருக்கும் நலம் பயந்து நிற்கும்.

௱கவது நன்றியில் செல்வ முற்றிற்று.

---

# 102ம் அதிகாரம் நாணுடைமை.

அஃதாவது இழிவான செயல்களை யாதும் நெருங்காமல் உளங்கூசி ஒதுக்குந் தன்மை. சிறந்த செல்வத்தை யடைந்திருந் தும் அதனைத் தகுந்தவகையில் பயன் படுத்தாமல் கழிந்தொழிந் தார்போல் பழியான வழிகளில் இழிந்தொழியாமல் நாணம் பேணி நயந்தெரிந்து யாண்டும் நன்று புரிந்து ஒழுக வேண்டு மென்று அருளுகின்றாராதலால் நன்றியில் செல்வத்தின் பின் இது வைக்கப்பட்டது. புறவுடைமையாகிய செல்வம் பெற்றார் அதனைக் கொண்டு செய்யவேண்டிய திறத்தினை முன்பு குறித்து உணர்த்தினார்; இதில், அகவுடைமையாகிய நாணினை ஆளு நலத்தினை நன்கு உணர்த்துகின்றார் என்க.

1011. கண்டான் அசோதரன்பின் கண்ணோடி நாணமீக்
கொண்டானேன் தென்னே குமரேசா—கொண்ட
கருமத்தால் நாணுதல் நாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற. (க)

இ—ள்.

குமரேசா! தன் செயலை நினைந்து அசோதரன் ஏன் மிக நாணினான்? எனின், நாணு கருமத்தால் நாணுதல்; பிற திருநுதல் நல்லவர் நாணு என்க.

இது, நாணம் என்பது இன்ன தென்கின்றது.

நாண் = வெட்கம். அஃதாவது இழிவான காரியங்களைச் செய்யக் கூசுதல். "வெட்கம் இலச்சை வெள்கல் சமழ்த்தல்—வட்கல் இருளை மானமுமன்றி—உட்கு நாணத் துரையெனப் படுமே." (பிங்கலந்தை) நாண் என்பது ஈரிடத்தும் உகரம் பெற்று நின்றது.

கருமம் = செயல், தொழில். பொதுவாகக் கருமம் என்று உரைத்திருப்பினும் நாணுதல் என்ற குறிப்பால் அஃது இழிந்த தொழில் என்பது புலன் கொள நின்றது.

திரு = அழகு. நுதல் = நெற்றி. நல்லவர் என்றது பெண்களை. திருநுதல் நல்லவர் என்றது அழகிய நெற்றியை யுடைய பெண்கள் என்றபடி. திருவும், நுதலும் அடையாக வைத்தது அவரது எழில் உருவங்களின் இயல்பு தோன்ற. பெண்களை நல்லவர் என்றது மெல்லிய இயல்போடு இனியராயிருக்கும் தனி நலங்கருதி. 'புரிவளை முன்கைப் புனையிழை நல்லார்' (வளையாபதி) 'நல்லவர்க்கு ஆரணங்காகிய மார்பின்' (புறம்) 'மைபடு மழைக்கண் நல்லார் வாய்க்கொண்ட அமுத மொப்பான்" (சீவக சிந்தாமணி) "கொடியுலா மருங்குல் நல்லார் குழாத்தொரு குரிசில் நின்றான்" (இராமாயணம்) இவற்றுள் இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

இழிந்த செயல்களைக் கூசி ஒதுங்கி நாணுதலே நல்ல நாணமாம்; பிறவெல்லாம் அழகியநெற்றியையுடைய பெண்கள் நாணங்களாம் என்பதாம்.

ஈனமான காரியங்களைச் செய்வதில் உளங்கூசி ஒதுங்கலே உண்மையான நாணமாம் என்பார் "கருமத்தால் நாணுதல் நாணு" என்றார்.

நாணம் உயிரினும் சிறந்த ஒண்குணமாதலால் அதனைப் பூணுக மக்கள் புனைந்துகொள்ளவேண்டும் என்ன,

"அச்சமும் நாணும் மடனுமுந் துறுத்த
நிச்சலும் பெண்பாற் குரிய வென்ப" (தொல்காப்பியம்)

என்றபடி நாண் என்பது பெண்மைக்குரிய குணமன்றோ? அதனை ஆடவர் மேற்கோடலமையுமோ? என்பாரை நோக்கி அதன் பாகுபாட்டைத் தெளிவாக இதில் விரித்துணர்த்துகின்றார்.

நாண் இருவகைப்படும்; ஒன்று சிறப்பு நிலையிலமைந்தது; மற்றொன்று பிறப்புரிமையிலியைந்தது; இரு பாலார்க்கும் உயர் பயன்தரு மியல்பினதாதலால் முன்னதே ஈண்டு உறுதியாக அதிகரிக்கப்பட்டு எண்ண நின்றதென்க.

பெண்களுக்கு இயற்கையாக மனக் கூச்சமுண்டு; அது, அகத்தி லெழுகின்ற காமக் குறிப்பின்மேல் நிகழ்வது; அந் நாணம் அவர்க்கு இன்றியமையாதவோர் இன்குணமாகும்; "நறை மலர்க் குழலார் தமக்கு மெய்யகலா நாணமே நலஞ்செய் பூண்" (பாரதம்) என்றபடி அஃது அவர்பாலமைந்துள்ளது. பெண்பாலார்பாலுள்ள அது, காயத்தால் நாணுதலாதலால் இது, "கருமத்தால் நாணுதல்" என்றார்.

"மையார் நெடுங்கண்ணாள் மாமணியாழ் தானுடைந்து
நையா நடுநடுங்கா நனிநாண மீதூராப் [மாலை
பொய்யாதோர் குன்றெடுப்பாள் போன்மெலிந்து பொன்
பெய்பூங்கழலாற்குப் பெண்ணரசி ஏந்தினளே"
(சிந்தாமணி)

மேற்குறித்த இருவகை நாணும் ஒரு குலமகள்பால் ஒரு காலத்தில் ஒருங்கு நின்றபடியை இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

உள்ளங்கூசல், ஒதுங்கிநடத்தல், மெள்ளப்பேசல், மென் முகம் கவிழ்தல் என்னும் இவைபோல்வனவெல்லாம் பெண்மக்

கள் நாணங்களாமாதலால் அவற்றைப் "பிற" என்று தள்ளி ஆண்மக்கட்குரிய நாண் இதுவென அடிகள் இதில் அறிவுறுத்தி யிருக்கும் அழகைப்பார்க்க.

கள்ளுண்டல், களவாடல், சொல்லியது மாறல், எள்ளுறச் சேறல் முதலிய இழிவினைகளை அஞ்சி ஒடுங்கலே நல்ல நாணமாம் ஆதலால் நன் மக்கள் அந்நாணினை நயந்துகொள்ளவேண்டும் என்பது கருத்து.

நாண வேண்டியதற்கு நாணுமல் வேறுவகையில் நாணுவது வீணும் என்பது கன்மம் என்றதனுல் காணலாகும்.

பிறர் மனைவியரை விழைந்து புகுபவர் ஒருவரும் அறியா வண்ணம் மறைந்து போகின்ருர்; குடியர் ஒளித்துக் குடிககின் ருர்; பரிதானம் கொள்பவர் மறைவாகக் கொள்கின்ருர; இவர் பாலுள்ள அவ் ஒடுக்கம் நாண் அன்ருே? எனின், நன்று கூறி ணுய்! நாண்என்பது புகழ் புண்ணியங்களைப் பயக்கும் உயர்நலமு டையதாதலால் அப் பழி யொடுக்கம் பாழேயாம் என்க.

"வானகு மண்ணுமெல்லாம் நகுநெடு வயிரத் தோளான்
நானகு பகைஞரெல்லா நகுவரென் றதற்கு நாணுன்;
வேனகு நெடுங்கட் செவ்வாய் மெல்லியல் மிதிலை வந்த
சானகி நகுவளென்றே நாணத்தால் சாம்புகின்ருன்."
(இராமாயணம்)

கருமத்தால் நாணுமல், கடைப் பட்டிழிந்து மாண்பிறந்த நாணுேடு இராவணன் மறுகி நின்ற படியை இதில் ஓர்ந்து கொள்க. இங்ஙனம் பழி வினைகளைச் செய்து கொண்டு அதனை விடமாட்டாமல் உள்ளங்கூசி நிற்றல் இழிவேயன்றி இனிய நாணுகா தென்க.

ஈனமான செயல்களை யாதும் செய்யாதவரே இனிய நாணு டைய ராவார் என்பது குறிப்பு.

பழி பாவங்களுக்குரிய இழி செயல்களை யாண்டும் நெருங் காமல் அஞ்சி ஒழுகலே நல்ல நாணும்; அதனை யுடையவர்க்கு எல்லாநலங்களும் எளிதிலடையும்; ஆதலால் அவ்வுடைமையை

ஒவ்வொருவரும் உறுதியான உயிருடைமையாகப் பேணிக் கொள்ளவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

இழிந்த கருமங்களைச் செய்துவிட்டுப் பின்பு இரங்கி நாணுவாராயின் அவரை நாணுடையராகக் கொள்ளலாமா? எனின், கொள்ளலாம்; என்னை? தூய்தல்லாததைத தெரியாமல் மிதித்து விட்டவர் பின்பு தெரிந்து கழுவின் தூயராதல்போல் அவர் அறிந்து விலகின் ஆவர் என்க. அங்ஙனம் கழிந்ததற்கிரங்கி நாணி நிற்பவரது இயல்பினை இதன் அடியில் வரும் அடிகளில் காண்க.

"நாண முற்றோன் அவினயம் நாடின்
இறைஞ்சிய தலையும், மறைந்த செய்கையும்,
வாடிய முகமும், கோடிய வுடம்பும்,
கெட்ட ஒளியும், கிழ்க்கண் ணோக்கமும்,
ஒட்டின ரென்ப உணர்ந்திசி னோரே." (அவிநயம்)

இழிகருமங்களை யாண்டும் நெருங்காது விலகுதல் உத்தமம்; தெரியாது நெருங்கிப் பின்பு தெரிந்து நீங்குதல் மத்திமம்; என்றும் அஞ்சாது செய்தல் அதமமாம் என்க.

"சிலைத்தார் முரசங் கறங்க
மலைத்தனை என்பது நாணுத்தக வுடைத்தே" (புறம்–36)

"நீண்மதி லொரு சிறை ஒடுங்குதல்
நாணுத்தக வுடைத்திது காணுங் காலே" (புறம்–44)

இவை கிள்ளிவளவனையும், நெடுங் கிள்ளியையும் நோக்கி முறையே ஆலத்தூர் கிழாரும், கோவூர் கிழாரும் கூறியன. தமக்கு ஒவ்வா வினைகளில் ஊக்கி நிற்றலும், ஒவ்வும் வினைகளில் உள்ளழிந்திருத்தலும் நாணத்தக்கனவாமென ஆண்மை தோன்ற அவர் உணர்த்தியிருத்தல் காண்க.

இழிந்த வினைகள் நேர்ந்தால் மேன் மக்கள் வருந்தியகல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை அசோதரன் பால் உணரப்படும்.

கதை.

அசோதரன் என்பவன் தாதகி நாட்டிலே பூமிமா திலகம் என்னு நகரிலிருந்து முறை புரிந்துவந்த பவணமா தேவன என்னும் அரசனுடைய அருமைத் திருமகன். இவனுடைய தாய் பெயர் சயமதி. இவன் மிக்க கட்டழகன். அறிவு ஈகை அமைதி வீர முதலிய உயர் குணங்களெல்லாம் இவனிடம் இனிது குடி கொண்டிருந்தன. பருவமெய்தி உருவவேளென இவன் உலாவி நின்றபோது தருண மங்கையர் பலர் பெரு மோக முடையராய் உருகி நின்று இவனை மருவ முயன்றார். அது பழிவினை யாதலால் இழிவு தருமென்று கருதி யாதும் இடங் கொடாது அகன்று நீதியோடு இவன் நிலைத்து நின்றான். நேர்மையும் நாணுமமைந்து நிலைத்து நிற்கும் இவனது நெறியுடைமையை யறிந்து அனைவரும வியந்தார். பின்பு இவன் எழில் நலங்களுக்குத் தகுந்தபடி விழுமிய கன்னியர் ஐவரை மன்னன் மணஞ் செய்து வைத்தான். அவரோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இவன் இனிதமர்ந்திருந்தான். இவனுடைய இன்பானுபவங்கள் எவரும் வியக்கத்தக்க விதமாக மேன்மை யெய்தி யிருந்தன.

“பைங்கழன் மன்னர் மன்னன் பவணமா தேவனென்பான்
சங்கினுண் முத்த மொப்பான், சயமதி பயந்த நம்பி
ஐங்கணைக் காமனன்னான் அசோதரன் அரச சீயம்
தங்கிய கேள்வியாற்குத் தையலார்ச் சேர்த்தினரே. (௧)

இளமுலை பொருது தேந்தா ரெழில் குழைந்தழிய வைகிக்
கிளைநரம் பிசையும் கூத்தும் கிளர்ந்தவைகனற்ற நாளும்
வளைமயங் குருவ மென்றோள் வாய் நலம் பருகி மைந்தன்
விளைமதுத் தேறன் மாந்தி வெற்றிப்போர் அநங்கனானான்.

இலங்கரி பரந்த வாட்கண் இளையவர் புலவி நீங்கச்
சிலம்பெனும வண்டு பாடச் சீறடிப் போது புல்லி
அலங்கல்வாய்ச் சென்னி சேர்த்தி யரி மதர் மழைக்கண்
பில்க, நலங்கவர்ந்துண்டு நண்ணோர் நாமுறக் கழிக்கு மாதோ”
(சீவகசிந்தாமணி) (௨)

இன்னவாறு ஐம்புல இன்பங்களும் ஆரத்துய்த்து யாவரும் போற்ற இவன் அகமகிழ்ந்து வந்தான். வருங்கால் ஒருநாள்

தனது அருமை மனைவிகளோடெழுந்து இனிய பூஞ் சோலையை யடைந்து அங்கு அழகுற விளங்கியிருந்த தாமரைப் பொய்கை யில் இவன் நீராடினன். அரசிகளுடன் நீந்தியும் குளித்தும் ஒளித்தும் நெடிது நேரம் மகிழ்ச்சி மீக் கூர்ந்து அந் நீர் நிலையில் இவன் விளையாடிக் கொண்டிருந்தானதலால் அவண் கிளையோ டமர்ந்திருந்த அன்னங்கள் அலமர லெய்தி அகல, அவற்றின் பார்ப்பினங்கள் தாமரை மலர்ச் செறிவில் தயங்கி மறைந்து நின் றன. அவற்றைப் பிடித்துத் தரும்படி மனைவியர் தூண்ட அவ் வாறே ஒன்றை இவன் பற்றித் தந்தான். அவர் கொண்டுபோய்ப் பாலமு தூட்டிப் பரிவோடு பாதுகாத்து வந்தார். ஒருநாள் இவன் தந்தை அதனைக் கண்டான். அவன் பேரருளாளனாதலால் ஐயகோ! இவ் இளங் குஞ்சினை இங்ஙனம் யார் பிடித்ததென்று இரங்கி வினவி உண்மையை யறிந்து மகனை உடனழைத்து வைத்து உறுதிகள் பல வுணர்த்தி யருளினன். "பிறிதின் நோயைத் தன் நோய்போல் போற்றுவழி ஒருவன் அறிவினல் யாது பயன்? பெண் மொழி கேட்டு இப் பிழைவினை புரிந்து ளாய்; இப் பார்ப்பினை இனம பிரித்தமையால் நீயும் பெற்றோ ரைப் பிரிந்து இனிப் பேதுற நேருமே; வினைப் பயன் வீயாது பின் சென்றடும் என்பதை நீ யாதும் நினைத்திலை; அந்தோ நின் செயலிருந்தபடி என்னே!" என அம் மன்னன் மனங் குழைந்து மொழிந்தான்.

"பூவைகிளி தோகைபுணர் அன்னமொடு பன்மா
யாவை யவை தங்கிளையி னீங்கியழ வாங்கிக்
காவல்செய்து வைத்தவர்கள் தங்கிளையி னீங்கிப்
போவர்புகழ் நம்பி! யிது பொற்பிலது கண்டாய்"
(பவணமாதேவன்).

இன்னவாறு உண்மையை அவன் உருகி யுரைத்த பொழுது இவன் உள்ளங் கூசி ஒடுங்கி நின்றான். தான் புரிந்த வினையை நினைந்து வருந்தி இனித் துறந்து போவதே நலமென்று துணிந் தான். இவனது துணிவினை யறிந்து தந்தை பெரிதும் கலங்கிக் குழந்தாய்! "மணிமுடி புனைந்து இவ் அணி நிலம் புரந்து இவ் அரசு தாய முழுவதையும் உன் அருமை மகனுக்கு உதவி அதன்

பின்னர் நீ துறந்து போகலாம்" என்று அவன் விழைந்து வேண்டினான். அங்ஙனம் பணித்தலாகாதென்று அவனது அடியிற் பணிந்து கருதியபடியே கருமக்கழிபலம் செய்யவேண்டும் என இவன் துணிவுதோன்ற நின்றான். மகவினையையால் மீண்டு மீண்டும் அவன் வேண்டி மறுத்தான். அவ்வமயம் இவன் உரைத்தபடியை இதனடியில் காண்க.

கொலைச்சிறை யுய்ந்துபோகுமொருவனைக் குறுகலுடி
அலைத்தனர் கொண்டுபற்றி அருஞ்சிறை அழுத்துகின்றார்
தொலைப்பருஞ் சுற்றத்தாரோ?பகைவரோ? அடிகள்,என்ன;
விலைப்பருமணியை முந்நீர் நடுக்கடல் வீழ்த்ததொத்தான்.

இன்னணம் அவன் பிரிவஞ்சிவருந்த இவன் துறவுன்னிச் சென்றான். இவன் செல்லுங்கால் இரண்டாயிரம் அரசர்கள் அடிதொழுது புடைசூழ்ந்து சென்றார். இவனது மனநிலையினையும் செயலினையும் தெளிந்து முனிவரும் வியந்தார்.

"நற்பொறி குயிற்றி வல்லான் செய்ததோர் நன்பொற்பாவை
பொற்பொறி கழலஎல்லாப் பொறிகளும் கழல்வதே போல்
சொற்பொறி சோர எல்லாப்பொறிகளும் சோர்ந்து நம்பன்
இற்பொறி யின்பநீக்கி இராயிரர் சூழசென்றான். (க)

தணக்கிறப் பறித்தபோதும் தானனை விடுத்தல் செல்லா
நிணப்புடை யுடம்பனுரை யாதினு னீக்கலாகும்?
மணப்புடை மாலைமார்ப னொருசொலே ஏதுவாகக்
கணைக்கவினழித்தகண்ணார் ததுறந்துப்போய்க் கடவுளானான்."
(சீவகசிந்தாமணி)

பொய்த்தல், பிறர்மனைநயத்தல், கவறாடல் முதலிய பழிவினைகள் யாதும் புரியாது புனிதனாயிருந்த இவன் பின்பு நேர்ந்த ஒரு சிறு கருமம் காரணமாக வளமிக நாணி அரசைத் துறந்து போய் இங்ஙனம் உயர்தவம் புரிந்தான். இவனது அருமையை வியந்து அனைவரும் இரங்கினர். "கருமத்தால் நாணுதல் நாணு" என்னும் உண்மையை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

இழிந்ததொழிலினுணுவதே எய்தற்கரிய நாணென்ப,
ஒழிந்தமனவாக்குடலொடுக்கம் ஒளிவாணுதலார் நாணேயாம்;
கழிந்துவிட நாண்மண் கோடல்கருதார்; நலமெல்லாம் வளர்ப்பார்
அழிந்து நாண் மற்றுயிர் வாழார்; ஆவியழிந்து நாணுள்வார்.
(விநாயகபுராணம்)

பழிசேர் பழிவினையைப் பற்றுதுட் கூசி
ஒழிதலே நாண முணர்.

நாணத்தின் தன்மை இதனால் கூறப்பட்டது.

---

1012. நாடி மமகாரன் நாணுடைமை யாலென்றும்
கூடிநின்றான் சீரன் குமரேசா—கோடநின்ற
ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு. (உ)

இ—ள்.

குமரேசா! நாணுடைமையே தனக்கு நலமாக மமகாரன் ஏன் நயந்திருந்தான்? எனின், ஊண் உடை எச்சம் உயிர்க்கு எல்லாம் வேறு அல்ல; மாந்தர் சிறப்பு நாணுடைமை என்க.

இது, நாணே உயிர்க்கு நலந்தரு மென்கின்றது.

ஊண் = உணவு. உண்ணப்படுவதென்பதாம். ஊணை முதலில் வைத்தது அதன் தலைமை கருதி. எனனை? உடையினும் உயிர்க்கு மிக உறுதியாக அஃதமைந்துள்ளமையான் என்க.

எச்சம் என்றது இச்சை, உறக்கம், அச்சமுதலியவற்றை. உடல்கொளுயிர்க்கு இயல்பாகவுரிய ஊண் உடைகளை முன்னர்க் குறித்ததனால் அவற்றோடு இனமாயெஞ்சியுள்ளவற்றை "எச்சம்" என்று குறித்தார்.

வேறு அல்ல = வேறுபாடுடையனவல்ல; ஒருபடியாகவே பொதுவாகப் பொருந்தியுள்ளன என்றபடி. ஊணுடை முதலியன எல்லாவுயிர்க்கும் ஒருவகையாகவே ஒத்துள்ளன; ஆதலால் "வேறல்ல" என்றார். "உண்பது நாழி, யுடுப்பவையிரண்டே, பிறவுமெல்லாம் ஓரொக்கும்மே" (புறநானூறு) என நக்கீரனார் கூறியுள்ளதுங்காண்க.

ஒத்த பிறப்பினையுடைய மக்களுள் ஒருவன் சிறந்தவனாய் உயர்ந்து திகழவேண்டுமாயின் நாணுடையனாய் அவன் அமைந்து ஒழுகவேண்டும் என்பது, சிறப்பு என்ற குறிப்பால் அறிய நின்றது. உடைமை சிறப்பு என்றதனால் அஃதின்மை இழி வென்பதாயிற்று.

மேல், நாணின் நிலைமை கூறினர்; இதில், அதன் தலைமை கூறுகின்றார்.

உணவும் உடையும் இவை போல்வன பிறவும் மக்களுயிர்க்கெல்லாம் பொதுவாகவுள்ளன; நன்மக்களுக்கு நாணுடைமை சிறப்பாம் என்பதாம்.

உணவு உண்ணல், உடைபுனைதல், அணி அணிதல், உவந்து முயங்கல், அயர்ந்துறங்கல், முதலிய அமைவுகள்யாவும் உடம்பெடுத்தவுயிர்க்கெல்லாம் ஒரு நிலையாக இயற்கையிலமைந்துள்ளன என்பார் "ஊண் உடைஎச்சம் உயிர்க்கெல்லாம் வேறல்ல" என்றார். இங்ஙனம் இயல்பாக அமைந்துள்ள இவை பொதுவாகுமாதலால் செயல்மேலமைந்து உயர்வாகவுள்ள "நாணுடைமை மாந்தர்க்குச்சிறப்பு" என்றார். முதலில் பொதுவாக "உயிர்" என்று குறித்துப் பின்னர் "மாந்தர்" என விதந்துசுட்டியது நாணுடைமையால் ஏந்தியசீரோடு அவர் இசைந்து நிற்கும் இயைபு தோன்ற.

ஊண் முதலியவற்றை இவ்வாறு எடுத்துக்காட்டி நாணினை இன்னணம் உணர்த்தியது என்னை? எனின், உயிர்க்கு உரிமையாயுள்ள அவற்றினும் இவ்வுடைமை மிக உறுதியாயதென்பது தெரிய என்க.

ஊணினும் உடையினும் நாணுடைமையே மிகச் சிறந்ததென்பது குறிப்பு.

ஒருவன் ஊண் உடைமுதலியன எல்லாம் உடையனாயினும் நாண் ஒன்று இல்லையின் அவன் நல்ல ஆண்மகனாக மதிக்கப்படான்; ஆதலால் மாந்தர் சிறப்பு நாணுடைமையிலுள்ளதெனவுணர்த்தியருளினர். ஊண் இன்மையினும், உடையின்மையினும், நாண் இன்மையே மிகவும் இகழ்ச்சிக்கேதுவாகுமாதலால் புகழ்ச்சிக்குரிய மேலோர் அவ் இன்மை தம்பால் இல்லையாம்படி என்றும் இசைந்தொழுகவேண்டுமென்றபடி.

பொதுமக்கள் ஊணுடைகளைமட்டும் நச்சிவாழ்வர்; மேன்மக்கள் நாணுடைமையை நயந்துவாழ்வர் என்க.

கடையெலாம் காய்பசி அஞ்சும்; மற்றேனை
இடையெலாம் இன்னாமை அஞ்சும்;—புடைபரந்த
விற்புருவ வேனெடுங் கண்ணாய்! தலையெல்லாஞ்
சொற்பழி யஞ்சி விடும். (நாலடியார்)

ஊண் உடை யச்சங்களையும், நாணினையும் குறித்து இஃது உணர்த்தி நிற்றல் காண்க. பசிதுயர்களுக்கு அஞ்சுவோரைக் கடை இடை எனக் கழித்தொழித்து, பழிக்கு அஞ்சும் நாணுடையாரைத் தலையென உயர்த்திப் போற்றியுள்ளமையை இதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. எல்லாவுடைமைகளினும் நாணுடைமையே மக்கட்கு மிக்க சிறப்பினைப் பயக்குமாதலால் அதனை யாண்டும் நயந்து பேணிக்கொள்ள வேண்டுமென்பது இதன் திரண்ட பொருளாம்.

சிறந்த மேன்மக்கள் நாணுடைமையைத் தமக்கு உறுதியாக உவந்துகொள்வரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மமகாரன்பால் உணரப்படும்.

## கதை.

மமகாரன் என்பவன் இற்றைக்குப் பல நூற்றாண்டுகட்கு முன்னர் இளவலதேயத்திலே வளவசை என்னும் நகரிலிருந்து அரசுபுரிந்தவன். இவன் மானமும வீரமும் வண்மையுமுடையவன். எண்ணிய எதனையும் எண்ணியாங்கே முடிக்குந் திண்ணிய இயல்பினன். இவனுடைய மனைவி பெயர் மோகினி. எழில் நலங்களில் அவள் மிகச் சிறந்தவள். அவளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இவன் பெருமகிழ்வுற்றிருந்தான். பழிவழி புகாமல் விழுமிய சீர்மையோடு விளங்கி நின்றமையாலால் எவரும் இவனைப் புகழ்ந்து போற்றிவந்தார். இவனது குணநலங்களை வியந்து மறுபுல மன்னரும் மிகமகிழ்ந்து துதித்துள்ளார். சில அடியில் வருவன காண்க.

“திறைதா னளக்குந் திறல்வேந்தர்க் கரிய சீரான்;
குறைதானிரக்குமவர்க் கோடிக் குறுகநிற்பான்;
நிறைதான வெற்பு மணி நாகமு நின்றுதாங்கும்
பொறைதா னெடுக்குமிகுமாற்றல் பொருந்துதோளான் (க)

இரப்பார் வரின் ஓரடி ஞாலபெளியதன்றிக்
கரப்பார் காக்கும் பொருளன்றெனா ஈகைகற்றே
யுரைப்பாருரைக்கு முரையாவும் புகழில் வைத்தோன்;
தரைப்பாலுவமை யிலேயாகத்தருக்கி வாழ்வோன்.'' (உ)
(பிரபுலிங்கலீலை)

இன்னவாறு பெரும்புகழோடு இவன் மன்னி வாழ்ந்தான். இங்ஙனம் வாழ்ந்து வருங்கால்இவனுக்கோர் பெண்மகள் தோன்றினாள். அவள் பருவமடைந்து அழகு கனிந்து ஓர் உவளகத்தில் ஒருநாள் உலாவிவரும்பொழுது அல்லமதேவர் என்னும ஞான சீலரைக்கண்டாள். உடனே அவர்மேல் பெருங்காதல் கொண்டு பேதுற்று நின்றாள். அவளது நிலையினையறிந்து இவன் மனைவி நெஞ்சங் கலங்கினாள். "ஒரு சிறு பிழை யெய்தினும் உளமிக நாணி உயிர்விடுமியல்பினரான உன் தந்தையார் இந் நிந்தையையறிந்தால் அந்தோ சிந்தை என்படுவர்? மன்னன் மகளாயிருந்தும் இங்ஙனம் தன்மை திரிந்து நிற்றல் நன்மையாகுமா? நாண்தலை காத்து நிற்கும் என் ஆண்டகை கேட்பின் யான் யாது பதிலுரைப்பேன்?'' என இன்னவாறு பல பன்னியதோடு நன்னயமான நீதிமுறைகளையும் அவள் ஓதி முனிந்தாள். அன்றவளுரைத்தவற்றுள் சில அடியில் வருவன.

"மானமுமுயிரும் ஒருங்குசில்லாத வழியுயிர் தன்னையே விடுதத்த
தானுறு பொருளாய் மானமே கொளுமுன் தந்தைதன் செவிப்படி
லென்னும்? பானுவு மதியு மியங்குறு மளவும் பழியிது வழிவழி வாராதோ?
யானுனை வருநதி யீன்றது மிதற்கோ என்செய்தாய் பாவியென் றிசைப்பாள்;

குரவர்தா மியைந்து கொடுத்திலராயிற் குமரவே ளனையவ ரெனினும்
அருவரா நிற்பர் தந்தைதாய் தமைகள் ஆணையி னொழுகு கன்னியர்தாம்
உருவிலா ரெனினும் குரவருண் மகிழ்வுற் றுதவுறி னனையவர் தம்மைப்
பரவுவான் கடவுளாகவே நினைந்து பண்பொடும் பயிலுவ ரன்றே. (2)

மணம்புரி வதன்முன் குரவராணையினு மணவினை முற்றிய பின்னர்
இணங்குற அருள்செய் கொழுநனாணையினு மிருப்பர் தம் வயமில ரென்றும்
அணங்கனை யவர்தாமென்பதை யறிந்தும அடாதவிச் செயலினைச் செய்
தாய், பிணங்குவா ரிலையென் றிருந்தனை போலும் பேதைநீ என்றுதாய்
முனிந்தாள். (பிரபுலிங்கலீலை) (௩)

மானமுடையனாய் நின்று இவன் நாணம் பேணிவந்த காட்சியும், அதனாலடைந்துள்ள மாட்சியும், பிறவும் இதனால் அறிய

லாம். ஒருமுறை கவருடுதலில் வல்லுநனாகிய சூதனொருவன் இவனிடம் வந்து தன்னுடன் சிறிது ஆடும்படி ஆதரித்து வேண்டினான். அதற்கு யாதும் இசையாது இவன் அகன்று போயினான். யாதும் அஞ்சா நெஞ்சினனாயினும தனக்கு ஒவ்வாத காரியங்களில் உள்ளங்கூசி ஒடுங்கி நின்றானாதலால் உயர்ந்தோனென உலகெங்கும் இவன் புகழ் பரந்து நின்றது. பிறரெவரினும் நாணுடைமையால் இவன் மிக நலமடைந்து நின்றான். உயிர்க்கெல்லாம் ஊனுடை எச்சம் ஒன்று யிருப்பினும் மாந்தர் சிறப்பு, நாணுடைமை என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

உள்ளசீர் எல்லாம் உயர்நா ணுடையான்பால்
வெள்ளமேன வந்து விழும்.

நாணுடைமையால் உயர்ந்த சிறப்புண்டா மென்பது இதனால் கூறப்பட்டது.

1013. நன்றறிந்த குடம்பவனென நாணமைந்து சால்புநிலை
குன்று திருந்தான் குமரேசா—என்றுமே
ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு
நன்மை குறித்தது சால்பு. (ங)

இ—ள்.

குமரேசா! நாணமைந்திருந்த குட்டுவன் ஏன் என்றும் சால்புடையனாய் நின்றான்? எனின், உயிர் எல்லாம் ஊனைக்குறித்த; சால்பு நாண் என்னும் நன்மை குறித்தது என்க.

இது, நாணுடைமை சால்பிற்கு உயிராமென்கின்றது.

நன்றறிந்த என்றது உயிர்க்குறுதியான அறநலங்களைத் தெளிவாக அறிந்து அதன்படி அவன் ஒழுகி நின்றமை கருதி.

ஊன் என்றது உடம்பினை. தசைத்தொகுதியாலாய தாதலால் இங்ஙனம் அது சாற்ற நின்றது.

குறித்த என்றது தமக்கு உறுதியான நிலையமாக உடம்பினை உயிர்கள் கருதியுள்ளன என்றவாறு. எல்லாம் என்றது எஞ்சாமை

தோன்ற, நாணினை நன்மை என்று குறித்தது தீமைகள் யாதும் சேராதகற்றி எல்லா நன்மைகளையும் இனிதுபயந்து நிற்கும் அதன் தன்மை கருதி.

ஊனைக்குறித்த எனவும் பாடம். அங்ஙனம் கொண்டால் உயிர்களெல்லாம் உணவினைத் தமக்கு ஆதாரமாகக் கொண்டுள்ளன; அதுபோல் சால்பு, நாணினைக் குறித்துள்ளது என்று கொள்க.

மேல், நாணுடைமை மக்கட்கு மிக்க சிறப்பினைக் கொடுக்குமென்றார்; இதில், அது சால்புடைமைக்கு நிலையமாயுள்ளதென்கின்றார்.

உயிர்களெல்லாம் உடம்பினைத் தமக்கு நிலைக்களனகக் குறிக்கொண்டுள்ளன; அதுபோல சால்பு நாண் என்னும் நன்மைக்குணத்தைத் தனக்கு நிலையமாகக் கருதி யுள்ளதென்பதாம்.

உயிர் அருவமானது; அது, உருவமான உடம்பினைச் சார்ந்து நின்றபோதன்றித் தனியேநின்று தொழிற்படாதாதலால் "உயிரெல்லாம் ஊனைக்குறித்த" என்றார். "இடம்படு விறகைப்பற்றி எரிதொழிற்படல்போல் யாண்டும, உடம்பினைச் சார்ந்து நின்றே உயிர் தொழிற்படும்" என்றோர்க.

உடம்பு, நாணுக்கும்; உயிர், சால்புக்கும் இதில் உவமைமாய் நின்றன. சால்பினை உயிரோடொப்ப வைத்தது அதன் அருமை கருதி.

உயிர் ஊனைக்கொண்டு எப்படி உலாவுகின்றதோ அப்படியே சால்பு நாணைக்கொண்டு நிலவுகின்றதென்றபடி. நாணிலாத சால்பு, ஊனில்லாத உயிர்போல் உருப்படாதென்பதாம். சால்பு என்பது எல்லா நல்ல குணங்களும் இயல்பாக அமைந்து இனிதுநிறைந்திருக்கும் உயர்வினது; அத்தகைய அது நாணினை இடமாகக்கொண்டு நிலவுமென்றது என்னை? எனின், நாணுவது, தீயனகண்டவிடத்துக் கூசி நீக்கும் தேசுடையதாதலால் "நல்லவை எல்லாம்" கடனாகக்கொண்டுள்ள சால்பிற்கு அது தக்க சார்பாக அமைந்துள்ளதென்க. கண்ணுக்கு இமையும், உயிர்க்கு உடலும்,

பயிர்க்கு வேலியும்போல் சால்பிற்கு நாண் ஆதாரமாயுள்ளதென் பார் "சால்பு, நாண் என்னும் நன்மை குறித்தது" என்றார்.

உள்ளத்தே நாணில்லாதவன் உலகத்தே சால்புடையனாக ஒளிரமுடியாதென்பது குறிப்பு.

"நாணிலான் சால்பும்; நடையிலான் நன்ஞானும்;
ஊணிலான் செய்யும் உதாரதையும்;—ஏணிலான்
சேவகமும்; செந்தமிழ் தேற்றான் கவிசெயலும்;
நாவகமே நாடின் நகை." (சிறுபஞ்சமூலம்)

நாணில்லாதவன் சால்புடையனா நடித்தல் நகைக்கிடனா மென இஃதுணர்த்தி நிற்றல் காண்க. இதனால் சால்பிற்கும் நாணிற்குமுள்ள உரிமை இனிது புலனும்.

நாணுடைமையானது தன்னையுடையானைச் சால்புடையனாக் குஞ் சதுருடையதாதலால் அதனைத் தவறாமல் மக்கள் சார்ந் தொழுக வேண்டும் என்பது கருத்து.

சால்புடைய மேலோர் என்றும் நாணமைந்து நிற்பரென் பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குட்டுவன்பால் உணரப்படும்.

## கதை.

குட்டுவன் என்பவன் குடநாட்டிலிருந்து அரசுபுரிந்த குறு நில மன்னன். இவன் சிறந்த போர் வீரன். வில் வேல் முதலிய படைக்கலங்களெல்லாவற்றிலும் நல்ல தேர்ச்சியுள்ளவனயினும் வாட் பயிற்சியில் இவன் மிகவும் வல்லவன். பெருங் கொடை யாளி. கருதிய கருமங்களைக் கடைபோக முடிக்கும் உறுதியா ளன். சோழன் சேரன் என்னும் இருபெரு வேந்தரும் இவன் பால் பெரு நண்பு கொண்டு உரிமைகள் பல பேணிச் செய்து தமக்கோர் அரும் பெறல் துணைவனா இவனை ஆதரித்து வந்தார். அதனால் சோழிய வேனதி திருக்குட்டுவன் என அவர் தொடர் போடு பெயர் பெற்று இவன் தோன்றி விளங்கினன். யாண் டும் அஞ்சா நெஞ்சினனயினும் ஏழைகள்பால் நெஞ்சிரக்கமுள்ள வன். வஞ்சமில்லாதவன். அடுத்து வேண்டினார் யாது செய் யினும் அவரைக் கடுத்து நீக்காது கருணைசெய்து காத்து, நின்ற

வன். மறந்தும் புறங்கூறா மாட்சிமையுடையவன்; இறந்துபடவரினும் இழிந்தன புரியாதுயாண்டும் அறம்புரிகொள்கையோடே இவன் அமைந்து நின்றான். எல்லா உயிர்களும் நலமுற முறை செய்து நின்றானாதலால் இவன் புகழ் திசை யெங்கும் பரந்து திகழ்ந்து நின்றது. ஒரு சிறு பிழை நேரினும் உள மிகக் கூசி ஒதுங்கும் இயல்பினனான இவன்முன் ஒருமுறை ஒருவன் நறவருந்தி வந்தான். அவனது நிலையினை நாணி இவன் நலம்பலவுரைத்தான். அன்றுமுதல் அக் குடி கேடன் தன் கொடுங்குடியினை விடுத்துக் குணமுடையனானான். இன்னவாறு மன்பதைகள் புன் செயலில் புகாவண்ணம் புரிந்து காத்து இவன் போற்றி வந்தான். "பாயிருள் நீங்கப் பல்கதிர் பரப்பி, ஞாயிறு குண முதற் றோன்றியாங்கு, இரவன் மாக்கள் சிறுகுடி பெருக, உலகந்தாங்கிய உரவோன்" என்றபடி இரவலர்க்கெல்லாம் இன்றுணையாய் நின்று இனிது பேணி வருங்கால் **மதுரைக் குமரனார்** என்னும் புலவர் ஒருவர் இவன்பால் வந்தார். அவரது அருமையை யறிந்து பணிந்துபசரித்து ஓர் யானையை அவருக்கு இவன் உவந்து கொடுத்தான். "புலவனாகிய எனக்கு விலையுயர்ந்த இவ்வளவு பெரிய யானை எதற்கு? ஏதேனும் சிறிது பொருள் கொடுத்தாற் போதும்;" என அவர் அதனைப் பெயர்த்து இவன்பால் விடுத்தார். கொடுத்தது சிறிது என்று இங்ஙனம் அவர் கொள்ளாது விடுத்தார்கொல்? என்று இவன் உள்ளங் கூசி வேறோர் பெருங் களிற்றினை அரும் பொருளோடு மறுபடியும் வணங்கி நின்று விரும்பிக் கொடுத்தான். சூதும் வாதும் யாதும் அறியாது தானாக நாணி நின்று நயந்து தந்த இவனது பெருந்தன்மையையும், அருங் கொடையையும் வியந்து மகிழ்ந்து அப்புலவர் திலகர் புகழ்ந்து துதித்தார். அன்று அவர் பாடிய பாடல் மிக வியக்கத்தக்கது. அடியில் வருவது காண்க.

"சிலையுலாய் நிமிர்ந்த சாந்துபடு மார்பின்
ஒலிபுனற் கழனி வெண்குடைக் கிழவோன்
வலிதுஞ்சு தடக்கை வாய்வாட் **குட்டுவன்**
வள்ளிய னாதல் வையகம் புகழினும்
உள்ள லோம்புமின் உயர் மொழிப் புலவீர்!
யானும், இருள்நிலாக் கழிந்த பகல்செய் வைகறை

ஒருகண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றிப்
பாடிமிழ் முரசின் இயல்தேர்த் தந்தை
வாடா வஞ்சி பாடினே னாக
அகமலி யுவகையோ டணுகல் வேண்டிக்
கொன்றுசினந் தணியாப் புலவுநாறு மருப்பின்
வெஞ்சின வேழ நல்கினன் ; அஞ்சி
யானது பெயர்த்தனெ னாகத் தானது
சிறிதென வுணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்
பெருங்களிறு நல்கி யோனே; அதற்கொண்டு
இரும்பே ரொக்கல் பெரும்புலம் புறினும்
துன்னரும் பரிசில் தருமென
என்றுஞ் செல்லேனவன் குன்றுகெழு நாட்டே'' (புறம்)

குட்டுவன் நல்கினன் அதனால் அவன் நாடு செல்லேன் என ஓட்டுக. வலியமைந்த பெரிய கையையுடைய வாள்வீரனாகிய குட்டுவனை வள்ளல் என வையகமெல்லாம் புகழினும் யான் அதனை ஒப்பேன்; ஏன்? எனின், பரிசில் கருதி ஒருமுறை அவனைப்பாடினேன்; அதற்கு அவன் ஓர் யானையைத் தந்தான்; பெரிய அது யான் பெறுதற்கு உரியதாகாதென்று பெயர்த்து விடுத்தேன். நான் காணாது என்று திருப்பிவிட்டதாக அவன் நாணமீக்கொண்டு பின்னும் ஓர் பெரிய மதயானையைப் பேணிக்கொடுத்தானாதலால் இனிமேல் என்ன வந்தாலும் அவன் நாட்டிற்குப்போகேன் என அப்புலவர் பெருந்தகை புறத்தே இகழ்வதுபோல உள்ளுறப் புகழ்ந்து மகிழ்ந்து புகழாப் புகழ்ச்சியென்னும் அணிநயந்தோன்ற இவனைப் போற்றியிருக்கும் அழகை இதில் ஊன்றிப் பார்த்துக் கொள்க. இதனால் இவனது வண்மையும், திண்மையும், நாணமைந்திருந்த வுண்மையும், நயத்தகுதன்மையும் நன்கறியலாகும். இவனுடைய மனநிலையினையும், செயல் நலங்களையும் அறிந்து குணநிலையமென அனைவரும் இவனை உவந்து புகழ்ந்தார். யாதொரு வசையும் புகா வண்ணம் நாணுடைமையால் தன்னைப் பேணிவந்தானாதலால் சால்புடையனாய் இவன் தழைத்து நின்றான். உயிர் ஊனைக்குறித்து நிற்றல்போல் சால்பு நாணைக் குறித்து நிற்கும் எனபதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

மாணமைந்த சீல மதியமைந்த மேன்மையெலாம்
நாணமைந்து நிற்கு நயந்து.

நாணம் சால்பிற்கு உயிர் நிலையாமென்பது இதனால் கூறப்பட்டது.

---

1014. நாணிணைமுன் நின்மலனேன் நல்லணியாக் கொண்டென்
கோனு திருந்தான் குமரேசா—பூணும் [றம்
அணியன்றோ நாணுடைமை சான்றோர்க்கஃ தின்றேல்
பிணியன்றோ பீடு நடை. (ச)

இ-ள்.

குமரேசா! நாணினை நின்மலன் தனக்கு ஏன் அணியாக நயந்திருந்தான்? எனின், சான்றோர்க்கு நாணுடைமை அணி அன்றோ? அஃது இன்றேல் பீடு நடை பிணி அன்றோ? என்க.

இது, நாணுடைமை நல்ல அணியாம் என்கின்றது. என்றும் கோனு திருந்தான் என்றது யாண்டும் அவன் நிலை திரியாது நாணுடையனாய் நிலவி நின்றமை கருதி.

அணி = ஆபரணம். அணியப்படுவதாதலால் இது அணி என நின்றது. ஏதுப்பெயர். அன்றோ? என்னும் வினா தெளிவு தோன்ற நின்றது. நாணுடைமை சான்றோர்க்கு அணியாம் என்பது இன்றுகொண்டதன்று; பண்டேயமைந்து பலரும் தெளிந்தவுண்மையாய்ப் பரவியுள்ளதென்பதை வினா வகையில் வைத்து இங்ஙனம் விளக்கியருளினார்.

அஃது என்றது நாணுடைமையாகிய அவ் அணியினை மக்கட்கு என்னது சான்றோர்க்கென்றது குணகணங்களால் நிறைந்துபடியேறி நிற்கும் உயர்வுடைமை தோன்ற. அவர்க்கு அணி என்றதனால் அந்நாணின் அருமையும் பெருமையும் அறியலாகும்.

பிணி—நோய். அன்றோ? என்றது ஆம் என்றபடி. அல்லை என்று சொல்வார் யாரும் இல்லை என்பதாம்.

பீடு = பெருமை. அஃதாவது சிறந்து உயர்ந்திருக்கும் தன்மை. "பீடு கெழுவேந்தன்" (ஐங்குறுநூறு) "பீடு கெழு திருவிற் பெரும் பெயர் நோன்றாள்" (பொருநராற்றுப்படை) "பீடும் கதழ்வும் பெருமைப் பெயரே" (பிங்கலம்) இவற்றுள் பீடு குறித்து நிற்கும் பொருளை யுணர்க.

மேல், நாணுக்கும் சால்புக்குமுள்ள உரிமையை யுணர்த்தி ஞர்; இதில், அது, சால்புடையார்க்கு அமைந்திருக்குந் தகுதியை யுணர்த்துகின்றார்.

சான்றோர்க்கு நாணுடைமை நல்ல ஆபரணமாம்; அவ் அணி இல்லையாயின் அவர் பெருமிதநடை பிணியாம் என்பதாம்.

நாணை அணி என்றது தன்னை யுடையார்க்கு அழகு செய்து நிற்கும் அதன் தன்மை கருதி.

அழிந்தொழிந்து போகும் இயல்பினதாய உடம்பின்கண் ஒட்டி நின்று சிறிது போழ்து எழில் செய்து கழிந்துபோகும் மணியணியானது, என்றும் அழியாது நின்று ஒளி செய்து நிலவும் உயிரணியாகிய நாணோடு எவ்வாற்றானும் ஒவ்வாதாயினும் ஒருபுடை ஒப்புநோக்கி உணர்ந்துகொள்ளுமாறு இவ்வாறு உருப்படுத்தி வைத்தார்.

அணி எப்படிப் பொது மக்கட்கு அழகு செய்து நிற்கின்றதோ அப்படி நாண் நன்மக்கட்கு நலம் செய்து நிற்குமென்க.

மற்ற அணிகளுக்கெல்லாம் ஆதாரமாயமைந்து மங்கல நாண் குலமகளிர்கட்கு மாட்சி செய்து நிற்றல்போல், எல்லாக் குணங்களுக்கும் உயிர்நிலையாய் நின்று குல மக்கட்கு நாண் உறுதி பயந்து நிற்குமாதலால் அவ்வுடைமையைச் சிறிதும் நழுவவிடாதபடி பெரிதும் போற்றி என்றும் அவர் பேணி ஒழுகவேண்டும் என்றபடி. நாணுடையார் நல்ல அழகுடையராய் யாண்டும் புகழ்ந்து போற்றப்படுவர்; அஃதில்லாதார் எல்லாராலும் இகழ்ந்து தூற்றப்படுவர் என்பது குறிப்பு.

நாணுடைமையில்லாதார் பீடு நடை பிணியாம் என்றது காண்பவர்க்கு அது, இன்னாதாயிருக்கும் இயல்பு கருதி. சால்பில்லாத புன் மக்கள் நடை ஒரு பொருளாகப் பார்க்கப்படாததால் யாண்டும் போற்றி நோக்குந் தகையவாய சான்றோர் நடையே இங்குச் சாற்ற நின்றது. பொதுவாக நடை என்னாது "பீடு நடை" என்றது அதன் பாடு தோன்ற. என்னை? வீரம், கொடை, நியாயம், கல்விகளாகிய மேலாய நலங்களையுடையாருளத்தில் இயல்பாக ஓர் வீறுடைமை யமைந்திருக்கும்; அவர்

உரை, செயல், நடைகள் யாவும் கம்பீரமுடையனவாய்க் காணப் படும், ஆதலால் அத்தகையாருடையது பீடு நடை என நின்றது. " ஏறுபோல் பீடு நடை" என முன் வந்துள்ளதுங் காண்க.

நாணம் கெட்டவன் தலை நிமிர்ந்து வெளிவரலாகாது; வந் தால் அவன் நிந்தைக்கு இடமாவன் என்பதாம்; இதனால் அவ் வுடைமையின் பெருமையும், அஃதின்மையா லெய்தும் சிறுமை யும் இனிதறியலாகும். பழி பாவங்களுக்கு அஞ்சி ஒதுங்குத லாகிய நாணுடைமை ஒருவனிடம் இல்லையானல் அவனுயர் வுடைமை முழுதும் பழுதுபடுமாதலால் அங்ஙனம் படாவண் ணம் நாணைப் பாதுகாத்து என்றும் ஒழுகவேண்டும் என்று இங்ஙனம் உணர்த்தி யருளினர்.

நாணினைத் தமக்கு உயிரணியாக் கொண்டு சிறந்த மேன் மக்கள் அமைந்திருப்பரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை நின்மலன்பால் உணரப்படும்.

கதை.

நின்மலன் என்பவர் கன்னட தேயத்திலே உடுதடை என் னும் நகரிலிருந்தவர். இவர் அறிவிலும் நெறியிலு மிகச் சிறந்த வர். அடக்கமும் பொறுமையும் அமைதியும் வாய்ந்து யாவர் மாட்டும் பேரன்புசெய்து இவர் சீர் மிகுந்தொழுகினர். இவ ருடைய மனைவி பெயர் சுமதி. அவள் சிறந்த அழகோடு உயர் ந்த குணங்கள் பலவும் ஒருங்கு அமைந்தவள். இவரை உயிரி னும் அருமையாக உவந்து பேணி வந்தாள். அந் நல்லாளோ டமர்ந்து இல் வாழ்க்கையிலிருந்து அறங்கள் பல ஆற்றி எவர்க் கும் இவர் இதம் புரிந்து நின்றார். நினைப்பிலும் சொல்லிலும் செயலிலும் யாதொரு தீமையும் நிகழா வண்ணம் நீதி முறை யைப் பாதுகாத்துத் தம் பெயர் நிலைக்கேற்ப மிகவுந் தூய்மை புடையராய் உயர் நிலையினின்று ஒழுகி வந்தார். இவரது புனித வாழ்க்கையை வியந்து முனிவரும் புகழ்ந்தனர்.

" நன்மை யென்பனவெலாம் உடையன்; நான் மறைப்
புன்மையென்பன வெலாம் பொருந்துறான்; எனும்
தன்மை, தன் பெயரினால் அறியத் தக்கவன்,
நின்மலன் எனவொரு நிகரிலானுளன். (க)

அவனெழில் மனையவள் ஆடகத் தினைச்
சுவணமென்குதலெனச் சுமதி என்பவள்
தவநிலை தன்னினும் தலைமைத் தென்னவே
உவமையில் இல்லறத் தொழுகு நீர்மையாள்." (உ)

என இவரது நல் லியற்கையையும், இல் லொழுக்கினையும் குறித்து இங்ஙனம் எல்லாரும் சொல்லித் துதிக்க இவர் மறுமை நோக்கோடு மருவியிருந்து உறுதிநிலை யோர்ந்து இல்லறம் புரிந்து வந்தார். வருங்கால் இவருக்கோர் அருமைத் திருமகள் தோன்றினள். அக்கமாதேவி என்று பெயரிட்டு மிக்க சிறப்போடு அவளை வளர்த்தார். அவள் பருவமடைந்து எழில் நலங் கனிந்து அரிய திருவுடன் நிலவி யிருந்தாள். ஒருநாள் அந் நாட்டு மன்னனாகிய விச்சலன் என்பவன் கண்டு இச்சைமேற் கொண்டு அவளை மணந்துகொள்ள விழைந்து, தனது உள்ளக் கிடக்கையை இவரிடம் உரைத்து இசைந்தருளும்படி சிலரைத் தூதுவராக இசைத்து விடுத்தான். அவர் வந்து உண்மையை யுரைத்து "மன்னன் சம்பந்தம் உமக்கு மாட்சியைத் தரும்; யாதும் தடை சொல்லாது தந்தருளும்" எனப் பலவாறாகப் பாரித் துரைத்தார். புகழெனின் உயிருங் கொடுப்பர்; பழியெனின் உலகுடன் பெறுவதாயினும் கொள்ளா தொழிக்கும் உள்ளப் பான்மை யுடையராதலால் அதற்கு இவர் உடன் படாது மறுத்தார். மறுத்தும், அவர் மாறாது நின்று மணம்புரி நிலைமையை விரித்தார்.

"வேந்தன் மாமனை நும் மகள் ஆயின் அவ் வேந்தன்
சார்ந்த வாழ்வெலாம் நுமவென அறிகிலீர்! தானே
போந்த ஓர் திரு மகள் வரவினைப் புறம்போக்கும்
மாந்தர் யாருளரென்று மங்கையர் சொல வகுப்பான்".

இன்னவாறு அவர் பன்னி யுரைத்தபோது உறுதியோடு இவர் எதிருரைத்தனமிக வியக்கத்தக்கன. அடியில் வருவன காண்க.

நின்மலன் மொழிகள்.

"இம்மை சேர் பயன் கருதியே தகாதவ ரிடத்தில்
கொம்மைவார் முலை மகட்கொடை நேர்ந்தவக் கொடியார்
அம்மையாழ் நிரையத்திடை வீழ்ந்தன ரழுந்தித்
தம்மை நோக்குந ரொருவரு மின்றியே தளர்வார். (க)

தமக்கடாதது செய்துயிர் வாழ்வது தன்னில்
சுமைக் கடாதமெய் விடுத்தலே நன்றெனச் செ.
எமக் கடாதது புகன்றி னிர் மங்கைமீர்! இச்சொல்
நுமக்கடாத தென்றியம்பலு மங்கையர் நுவல்வார்."
(பிரபுலிங்கலீலை). (௨)

இவரது மன நிலையும், மானங்கருதி நின்ற மாட்சியும், வானம் வருவதாயினும் வசையுற இசையாத உறுதியும், பிறவும் இதனால் அறியலாகும். தமக்கு ஒவ்வாத செயல்களில் எவ்வளவு இடையூறுகள் வரினும் இழிந்து செல்லாது உள்ளங்கூசி யொதுங்குதலாகிய நாணுடைமையைத் தமக்குப் பூணாக இவர் பொருந்தி நின்ற அருமையை வியந்து ஆன்றோர் பலரும் இவரைச் சான்றோர் தலைவரென அகமகிழ்ந்து துதித்தார். சான்றோர் நாணுடைமையைத் தமக்கு அணியாகக்கொண்டு யாண்டும் அமைந்து நிற்பரென்பதை உலகம்காண இவர் உணர்த்தி நின்றார்.

நாணுடைமை யொன்றே நலனுடைமை மற்றவெலாம்
பேணுடைமை யாகா பிற.

நாணுடையவரே சான்றோராவரென்பது இதனால் கூறப்பட்டது.

---

1015. மண்புகழ் ஏறைக்கோன் மன்னுயிர்க்கு நாணிநலங்
கொண்டிருந்தான் என்னே குமரேசா—கண்ட
பிறர்பழியும் தம்பழியா நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு. (௫)

இ—ள்.

குமரேசா! பிறர் சிறிது பழியுறினும் ஏறைக்கோன் ஏன் அதனைத் தனதாகக் கருதிப் பெரிதும் நாணி நின்றான்? எனின், பிறர் பழியும் தம்பழியா நாணுவார் நாணுக்கு உறைபதி என்னும் உலகு என்க.

இது, தலைமையான நாணுடையாரின் நிலைமைகூறுகின்றது.

தம்பழியா என்றது தமக்கு வந்த பழியாக நினைத்து என்றவாறு. பிறர்பழியையே இங்ஙனம் நினைந்து நாணுவார் தமக்கு

ஓர் பழிநேரின் அதனை எங்ஙனம் எண்ணுவார்? எவ்வண்ணம் பொறுப்பார்? என்ன பாடு படுவார்? என்பது இங்குச் சொல்ல வேண்டாதாயிற்று. தம்பழியும் எனவும், தம்பழிபோல் எனவும் பாடம்.

உறைபதி = இருப்பிடம். உறையுமிடம் என்றபடி. உறைதல் = தங்குதல், நிஇருத்தல். பதி = இடம். தலைமையான நிலையம் என்பதாம். நிறைவான ஒன்று இனிதாக உறைந்திருத்தற்கு இடமாயுள்ளதென்பது தோன்ற உறைபதி என்றார். "அரிய தண் சோலைவாண் மதியமும், கொதிகொள் ஆலமும் தனதிடத்தடக்கி—உரியவொண்கங்கா நதிக்கொரு பதியாயுரை பெறுமுயர் மகோததி" (பாரதம்). "துன்பக்கு உறைபதி மற்றைப் பொருள்" (நாலடியார்) என்பன காண்க.

"நாணுவார் நாணுக்கு உறைபதி" என்றது நாண் என்னும் உயர்குணம் தனியமைந்திருத்தற்கு இனிய நிலைக்களனும் அவர் இயைந்திருத்தல் கருதி.

"என்னும் உலகு" என்றது உற்றபதி என்னும் அவ்வுண்மை முன்னமேயே எல்லாராலும் நன்குதெளியப்பட்டுள்ளதென அதன் பழமைதோன்ற நின்றது.

"தன்னுயிர் தான்பரிந் தோம்பு மாறுபோல்—மன்னுயிர் வைகலும் ஓம்பி வாழுதல்" புண்ணிய நீரார் இயல்பாகுமாதலால் பிறர்பழியும் தம்பழிபோல் அவர் எண்ணி நாணுவரென்க.

மேல், நாணுடைமையைத் தமக்குப்பூணாக மேன்மக்கள் புனைந்து நிற்பர் என்றார்; இதில், பிறரையும் தம்போல் அவர் பேணி ஒழுகுவரென்கின்றார்.

பிறர்க்கு வந்தபழியையும் தமக்குவந்ததாக நாணிநிற்பாரை இவ்வுலகம் நாணுக்கு உறைவிடம் என்று உரைக்குமென்பதாம்.

பிறர்க்கு நேர்ந்தோர் இளிவரவினைத் தமக்கு வந்ததாகக் கருதி நாணுதல் எவர்க்கும் எளிதிலமையாது; மானமும் நேர்மையுமருவி, ஞானசீலங்களமைந்து எல்லாவுயிர்களிடத்தும் பேரருள் வாய்ந்துள்ள நல்ல மேன்மக்களுக்கே அரிதிலமைவ

தாம்; அத்தகைய அருமையாளரை நாணுடைமைக்கு உரிமையாளர் எனப் பெரிய ரெல்லாரும் பேணிப்போற்றுவராதலால் அவர் "நாணுக்கு உறைபதி" என நின்றார். உறைபதி என்னும் வினைத்தொகை உறையும் பதி என விரிக்கப்படும்.

தம்பழிக்கு மட்டும் நாணுவார் பெரியர்; இவரினும் பிறர்பழியும் தமதாகக்கருதி நாணுவார் மிகவும் பெரியராதலால் நாணுடைமைக்கு உயிர் நிலையாய் நிற்கும் அவர் நிலையினை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

இராமன் மறைந்து நின்று விட்ட அம்பு தன்மார்பில்வந்து பட்டபொழுது வாலி அதனைச்சட்டெனப் பற்றிக்கொண்டு உண்மையை உற்றறிந்து "அந்தோ! பழிபடாத இராமனும் இப்பழிச் செயலைச்செய்தானே" என்றுபரிந்து நாணினான். அன்று அவன் வருந்தி புரைத்தபடியை அடியில் காண்க.

"இல்லறந்துறந்த நம்பி எம்மனோர்க்காகத் தங்கள்
வில்லறந்துறந்த வீரன் தோன்றலால் வேதநூலிற்
சொல்லறந் துறந்திலாத சூரியன் மரபும் தொல்லை
நல்லறந்துறந்த தென்னு நகைவர நாணுட்கொண்டான்."
(இராமாயணம்)

வாலியின் மனப்பான்மையும், பிறர்பழியும் தன்பழியா அவன் நாணி நின்ற மேன்மையும், வரன்முறை தெரிந்து மானங் கருதி நின்ற மாட்சியும், பிறவும் இதனால் இனிதறியலாகும்.

பூரணமான நாணுடைமைக்குக் காரணபூதமாய் நிற்பது சிறந்த பெருந்தன்மையே ஆதலால் அத்தன்மையுடையார் நாணுக்கு உறைவிடமா யீண்டு எண்ண நின்றார் என்க.

பெரியோர், பிறர்பழிக்குத்தாம் நாணுவதுபோல் தம்புகழை நேர்நின்று தம்முன் பிறர்கூறுமிடத்தும் அவர் நாணி நிற்பரென்க. "கோவெனப் பெயரிய காலையாங்கது தன் பெயராகலின் நாணி" என ஓரியைக்குறித்துக்கூறியிருத்தல் ஈண்டுள்ளத்தக்கது.

துனியல் வாழி தோழி! சான்றோர்
புகழுமுன்னர் நாணுப
பழியாங் கொல்பவோ? காணுங்காலே." (குறுந்தொகை)

"பார்த்தோரெல்லாம் புகழத்தலைபணிந்
திறைஞ்சியோனே குரிசில்" (புறநானூறு)
"தம்புகழ் கேட்டார்போற் றலை சாய்த்துமரம்துஞ்ச" (கலி)

"பிறர் தன்னைப்பேணுங்கால் நாணலும், பேணார்
திறன்வேறு கூறிற் பொறையும்,—அறவினையைக்
காராண்மையாக ஒழுகலும், இம்மூன்றும்
ஊராண்மை யென்னும் செருக்கு." (திரிகடுகம்)

நாணுக்கு உறைபதியாய் நிற்கும் சான்றோர் இயல்பினைக் குறித்து இவை உணர்த்தி நிற்பன காண்க.

பிறர்பிழை யுறினும் பெருந்தன்மையாளர் அதனைத் தமதாக நாணி வருந்துவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஏறைக்கோன்பால் உணரப்படும்.

## கதை.

ஏறைக்கோன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ச் சேர நாட்டிலிருந்த குறுநில மன்னன். அந் நாட்டில் குறிச்சி, நாஞ்சில், குட்டம், ஏறை என்னும் பகுதிகளிலிருந்த குறிஞ்சி நில மாக்களாகிய குறவர்களெல்லாரும் அடிதொழுதேத்த இவன் அருள்செய்து முறைபுரிந்து வந்தான். வண்மையும் திண்மையும் உண்மையுமுடையவன். வில்வலியில் இவன் மிகவும் வல்லவன். எத்தகைய நுண்ணிய குறியையும் ஒரே தொடையில் ஊடுருவ எய்யும் வீறுமிக உடையவன். போர் முறையில் இங்ஙனம் பெருந்திறலுடையனாயினும் எல்லா உயிர்களையும் தன் இன்னுயிர்போலவே எண்ணி யொழுகி இதம் புரிந்திருந்தான். தன்னை யடுத்தவர் தனக்கு எவ்வளவு பிழைகளைச் செய்தாலும் உடனே அவரை ஒறுத்து நீக்காமல் இவன் பொறுத்துக் காக்கும் பெரும் பொறையாளன். எளியவர்களைக் கண்டால் உளமிக இரங்கி அவர் வாய்திறந்து கேளா முன்னரே இன்சொல்லோடு எதனையும் ஈந்து வந்தான். இவனது குண நலங்களை யறிந்து முடியுடை வேந்தர் மூவரும் பெரிது மகிழ்ந்து தமக்கு உரிமையாளனாக இவனை உவந்து பேணி வந்தார். அவர்க்குத் திறை கொணர்ந்து தருகின்ற பிற குறுநில மன்னர்களினும் இவன் பெருமித முடையனாய்த் தம்முன் வந்துபோம்படி பல வரிசைகளை

அவர் வழங்கி யிருந்தார் ஆதலால் அவ்வாறே இவன் அங்கு மேம்பட்டு நடந்து மேனி வந்தான். இங்ஙனம் உயர்ந்த சிறப்புக்கள் பல அமைந்திருந்தும் அவற்றை யாதும் பாராட்டாமல் யாண்டும் அடக்கமும் பணிவு முடையனாய் இவன் அமர்ந்திருந்தான். ஒருமுறை மிகவும் வறியனான ஒருவன் தன் இன்மை காரணமாக ஓர் இல்லுட் புகுந்து சிறிது பொருளை யெடுத்து வெளியே வந்தான்; வருங்கால் அங்கு நின்ற காவலர் கண்டு பிடித்து அரச சபைக்கு அவனைக் கொண்டு போயினர். இடையே இயல்பாக இவன் எதிர்ப்பட்டு அவரைத் தடுத்து நிறுத்தி உண்மையை உசாவி மிடியின் கொடுமையால் அவ் இளிவினைச் செய்தான் என்னும் உளவினை யறிந்து உள்ளம் நாணி அவரிடமிருந்து விடுவித்து அவனைத் தன்னுடனழைத்துச் சென்று ஓர் பெருந்தொகைப் பொருளைப் பேணிக் கொடுத்து நெறியமைந்து வாழும்படி உறுதி பல கூறி அருமை செய்து விடுத்தான். இவனது பெருந்தன்மையை வியந்து அந் நாட்டிலுள்ளவரனைவரும் இவனை வாழ்த்தி மகிழ்ந்தார். பிறனொருவனுக்கு நேர்ந்த பழியையும் தனக்கு வந்ததாகப் பேணிக் காத்த இவன் பெற்றியை யறிந்து நாணுக்கு இருப்பிடம் என மாண்புடையா ரெல்லாரும் இவனை மதித்துத் துதித்தார். "பிறர்பழியும் தம் பழிபோல் நாணுவார், நாணுக்கு உறைபதி" என்னும் உண்மைக்கு இவன் உரியவனாய் நின்றான். புலவர் பலரும் உளமுருகி இவனைப் புகழ்ந்து பாடியுள்ளார். அவற்றுள் ஒன்று அடியில் வருவது.

"தமர்தற் றப்பின் அதுநோன் றல்லும்,
பிறர்கை யறவு தான் நாணுதலும்,
படைப்பழி தாரா மைந்தினனாகலும்,
வேந்துடை யவையத்து ஓங்குபு நடத்தலும்,
நும்மோர்க்குத் தகுவன வல்ல; எம்மோன்
சிலைசெல மலர்ந்த மார்பிற் கொலைவேற்
கோடற் கண்ணிக் குறவர் பெருமகன்,
ஆடுமழை தவிர்க்கும் பயங்கெழு மீமிசை
எற்படு பொழுதின் இனந்தலை மயங்கிக்
கட்சி காணாக் கடமா னல்லேறு
மடமா னாகுபிணை பயிரின் விடர்முழை
இரும்புலிப் புகர்ப்போத்து ஓர்க்கும்
பெருங்கல் நாடனெம் ஏறைக்குத் தகுமே." (புறநானூறு).

இது, இள எயினி என்னும் புலமையுடைய ஓர் குறமகள் பாடியது. கட்சி = சேக்கை; அஃதாவது விலங்குகளின் இருப்பிடம். பயிர் = விலங்கின் குரல். அஃதாவது மான் முதலிய விலங்குகளுள் ஒன்றினை ஒன்று அழைக்கும் ஓசைக் குறிப்பு. மாலைப்பொழுது மான் குட்டி இனந்தெரியாமல் பிரிந்துபோக, அதனைக் கலைமான் கதறி யழைக்க, அவ் ஒலியினை முழையிலிருந்து புலி செவி சாய்த்துக் கேட்கும் என உரைத்து இவனது மலையின் நிலைமையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. "மான் ஏறு பயிரின், அதனைப் புலிப் போத்து ஓர்க்கும்" எனக் கூட்டி நோக்குக. கடம் = காடு. கல்—மலை. மான் குரலைப் புலி ஓர்ந்திருக்கும நாடன் என்ற இதனால மெலியவர் எளிதாக வெல்லலாம்படி வலிய வந்து வாய்ப்புறக் கிடைத்தாலும் உடனே வன்கண்மையோடு சினந்து சென்று கொல்லாது அவரது மடமையை நாணி நகைத்து அமைதியோடு இவன் அமர்ந்திருப்பன் என்பது நுணுகி நோக்குவார்க்கு இனிது புலனும். ஒருமுறை மாசாத்தியார், புலவியனூர், பாலியாதன் என்னும் புலவர் சிலர் கூடித் தததமக்கு வேண்டிய தலைவர்களாகிய சில குறு நில மன்னர்களுடைய குணஞ் செயல்களைக் குறித்துக் கூறுங்கால் மேற்குறித்த எயினியார் இவனைக் குறித்து இங்ஙனம் இசைத்தருளினர். தன்னை அடுத்தவர் செய்த பிழையைப் பொறுத்தும், பிறர் பழியைத் தம்பழிபோல் நாணியும், படையிடத்து அடலமைந்து நின்றும், அரசவையில் பெருமிதத்தோடு நடந்தும் இவன் இருந்தபடியை முதலடி நான்கினும் விதந்து அறிந்து கொள்க. பொறுமை, நாணம், வீரம், மேன்மை முதலிய குண நலங்கள் "நும்மோர்க்குத தகுவன அல்ல; எம்மோன் ஏறைக்குத் தகுமே" என நலவிசைப் புலமை மிக்க அம் மெல்லியலார் இவனைச் சுட்டிச் சொல்லியிருக்கும் உறுதி நிலையை யூன்றிப் பார்க்க. இதனால் இவனது அருமையும, பெருமையும், நாணமைந்து நின்ற உரிமையும் நன்கு அறியலாகும்.

அழிவஞ்சி யாதும் அயரார் பெரியர்
பழியஞ்சி நிற்பர் பரிந்து.

பெரியோர் யாண்டும் பழிக்கு நாணுவரென்பது இதனால் கூறப்பட்டது.

---

1016. மண்டிணிந்த ஞாலமெலாம் வந்து முயர்நந்தன்
கொண்டிலன்முன் என்னே குமரேசா—தண்டாத
நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர். (சு)

இ—ள்.

குமரேசா! உலக ஆட்சியை உவந்து கொள்ளாமல் நாணினை ஏன் நந்தட்டன் நயந்து கொண்டான்? எனின், மேலா யவர், நாண் வேலி கொள்ளாது வியன் ஞாலம் பேணலர் என்க.

இது, உலகினும் நாண் உயர்ந்த தென்கின்றது.

"கொள்ளாது பேணலர்" என எதிர்மறையில் குறித்ததனால் கொண்டு பேணுவர் என்ற குறிப்பும் தோன்றும்.

நாண் வேலி = நாணாகிய வேலி. நாணை வேலி என்றது பழி பாவங்கள் புகாவண்ணம் உயிரைப் பாதுகாத்து நிற்கும் அதன் பான்மை கருதி. "சாந்த வேலி கோலி" (திருவிடை மருதூர் மும்மணிக் கோவை) இதில் சாந்தத்தை வேலியாக உருவகஞ் செய்திருத்தல் காண்க.

வேலி என்பது பட்டிமாடு முதலியன புகுந்து அழிவு செய்யாவண்ணம பயிருக்கு அரணாக இட்டிருக்கும இனிய பாது காப்பு. "சந்தன வேலிச் சண்பகத் திடையது" (பெருங் கதை) "தில்லை வேலி இவ்வூர்" (ஐங்குறு நூறு) "தருமமும் ஞானமும் தவமும் வேலியாய்க், கருணையங் கோயிலுள் இருந்த கண்ணனை" (இராமாயணம்). "வேலியொடு வரம்பிழந்த பயிரேபோல்" (அரிச்சந்திரபுராணம்). இவற்றுள் வேலி குறித்து நிற்கும் பொருளை யுணர்க. "வீர்தி காவல் வேலியின் பெயரே" (பிங்கலம்). பயிருக்கு வேலிபோல உயிருக்கு யாதோர் இழிவும் நேராவண்ணம் நாண் ஏமம் செய்து நிற்குமாதலால் அதனை வேலி என்று இங்ஙனம் விளக்கி யருளினார்.

வியன் என்னும் அடை ஞாலத்தின் விரிவுதோன்ற நின்றது. வியன் = அகலம. வியல் எனவும் வரும். "அகலமும் பெருமையும காடும் வியலே" (பிங்கலம்) பேணலர் என்றது விரும்பிக் கொள்ளார் என்றபடி. மேலாயவர் என்றது அறிவொழுக்கங்களிற்

சிறந்த மேன்மக்களை. உலகில் எவரினும் தகவினுயர்ந்துள்ளவர் என்பது தோன்ற "மேலாயவர்" என்றார். பொதுவாச ஞாலம் என்னாது வியன் என விதந்து கூறியது யாரும் விழைந்து பேணத்தக்க பெருமையுடையதென அதன் அருமை தோன்றி அவாவுறற்கென்க.

மேல், மேலோர் நாணுக்கு உறைவிடமாயிருப்பரென்றார்; இதில், எதனினும் பெரிதா அதனையே அவர் பேணி நிற்பரென்றார்.

நாணாகிய அரணைக் கொள்ளாதுவிட்டு அகன்ற உலகத்தை உயர்ந்தோர் விழைந்துகொள்ளார் என்பதாம்.

உலகமுழுவதும் ஒரு குடைக்கீழ் ஆளும்படியான உயரிய செல்வம் ஒருங்கே வருவதாயினும் அவ்வரவு நோக்கியும் தம் நாணத்தை உயர்ந்தோர் இழந்து கொள்ளார்; ஏனெனின், நாணத்தின் தலைமையையும், ஞாலத்தின் நிலைமையையும் அவர் நன்கு தெளிந்திருப்பர்; என்றும் அழியாது நின்று தன்னையுடையானுக்கு எல்லா நலங்களையும் இனிது விளைத்து முன்னது இசை வளர்த்து நிற்கும்; பின்னது ஓர் உறுதியுமின்றி இடை கழிந்து சென்று பிழை பெருக்கிவிடும்; என்னை?

"நிலமகள் நிலைமையும் நெறியிற் கேட்டிரேல்,
குலமிலர், குணமிலர், என்னும் கோளிலள்;
வலமிகு சூட்சியார் வழியள்; மற்றவள்
உலமிகு வயிரத்தோள் உருவத் தாரினீர்! (க)

தன்னுயா மணாளனும் பலாகள தன்னலம
முன்னுகர்ந் திகந்தவர் மூரித் தானையீர்!
பின்னும் வந்தவரொடும் சென்று பேர்ந்திலள்
இன்னுமஃதவள் தனதியற்கை வண்ணமே. (உ)

வெற்றிவேல் மணிமுடி வேந்தர் தம்மொடும்
உற்றதோர் உரிமைகள் இல்லள்; யாரொடும்
பற்றிலள்; பற்றினர் பாலலள்; அன்னதால்
முற்றுநீர்த் துகிலுடை முதுபெண்ணீர்மையே" (சூளாமணி)

என்றபடி ஞாலம் நின்றுவருதல் காண்க. இங்ஙனம் புறவுடைமையாய் நின்று ஓர் உரிமையுமின்றி ஒழிந்துபோகும் ஞாலத்தின்

பொருட்டு, அகவுடைமையாய் அமர்ந்து யாண்டும் அழியாத புகழ் நலங்களைப் பயந்து புனிதமுற நிற்கும் நாணினை உயர்ந்தோர் ஒழியார் என்க.

எதுவாயினும் நாணம் கெடாவகையில் வரும் ஊதியத்தைக் கொள்வரேயன்றி அது கெடும்படி வருமாயின் அவ் வரும்படி வானினும் மண்ணினும் பெரிதேயாயினும் நல்ல குல மக்கள் விரும்பார் என்றபடி.

மன் ஓ என்பன வியப்புற நின்றன. இச் சொற் கிடக்கையை நோக்கின் இன்னும் ஓர் உட்கிடை தோன்றும். என்னே அத் தோற்றம்? எனின், பின்னர் வருவது பார்க்க. ஒருமுறை அறிஞர் பலர் கூடி, ஓர் அரச சபையில் நாணின் இயல்பினையும், அதனையுடையார் பெருமையையும் குறித்து வியந்து பேசி, யாண்டும் அவர் நிலை திரியாது நிற்பரென நெடிது சூழ்ந்து முடிவில் முடிவு செய்தனர். அவ்வமயம் அவணிருந்த அரசன், "எண்ணிப் பத்து அங்கையிட்டால் இந்திரன் மகளும் ஆங்கே, வெண்ணெய்க் குன்று எரியுற்றற்போல் மெலிந்து பின் நிறகுமன்றே" (சிந்தாமணி) என்றபடி பொருளாசை எவரையும் நிலை திரியச் செய்யுமாதலால் கொஞ்சம் பொருள் வருவதாயிருந்தால் எவரும் நாணிழந்து இழிவினை செய்ய நேர்வர் என்றான். எவ்வளவு பெருந் தொகைப் பொருள் வருவதாயினும் மேலோர் பிழைபட இசையார் என்று அவ் அறிஞர் மறுத்துரைத்தார். "இஞ் ஞாலம் வரினும் அவர் நயந்து பேணார் கொல்?" என்று அவன் நகைத்து உரைத்தான். அதற்கு அவனை எதிர்த்து நோக்கி "மன்னே! மேலாயவர் நாண் வேலி கொள்ளாது, வியன் ஞாலம் பேணலர்" என மாணமைமொழிந்தார். இங்ஙனம் அன்று அவர் உரைத்தபடியாக இஃது உருக்கொண்டுள்ளமை காண்க.

நாணத்தையும் ஞாலத்தையும் நேரில் சுட்டிக் காட்டி நாணிருந்தால் ஞாலம் கிடையாது; ஞாலம் வேண்டுமாயின் நாணம் கொள்ளலாகாது; இவ்விரண்டுள்ளும் உனக்கு யாது வேண்டுமென்று ஒருகுல மகனிடம் ஓர் தலைமகன் கேட்டபொழுது அவன் நாணத்தையே நயந்துகொண்டான் என்ப.

மேலாயவர் பேணலர் என்றதனால் பேணுவார் கீழாவர் என்பதாயிற்று.

ஞாலத்தோடிணைத்துவைத்து நாணத்தின் பெருமையை இங்ஙனம் உணர்த்தியருளியது அதனை யாதும் நழுவவிடாதபடி தழுவி யொழுகி நலம்பெற வேண்டுமென்னும் உரம் பெற என்க.

ஒரு இழி செயல் செய்வதால் உலகமெல்லாம் பெறுவதா யிருந்தாலும் உயர்ந்தோர் அதனைப் பேணி அங்ஙனம் செய்யார் என்பார் "நாண் கொள்ளாது, ஞாலம் பேணலர்" என்றார்.

நாண் உயிர்க்குறுதியான அரிய பொருளாதலால் அதனை யாண்டும் உரிமையோடு யாது காத்து ஒழுகவேண்டும் என்பது கருத்து.

நாணினையே உயர்ந்தோர் யாண்டும் பேணி நிற்பரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நந்தட்டன்பால் உண ரப்படும்.

## கதை.

நந்தட்டன் என்பவன் ஏமாங்கத நாட்டிலே இராசமாபுரி யிலே யிருந்த கந்துக் கடன் என்னும் வணிகனுடைய அருமைத் திரு மகன். இவன் பெருந் திருவோடு அருந்திறலும் வாய்ந்து பல கலைகளையும் நன்கு பயின்று திருந்திய பண்பும் சீர்த்த நாக ரிகமும் பொருந்தி யிருந்தான். சாதியில் வணிகனாயினும் போராற்றலில் அரசரும் வியக்கத்தக்க பேராற்றலுடையவன். அந் நாட்டு மன்னனாகிய சீவகன் இவனைத் தம்பியாகப் பாவித்து அன்பு மீக் கூர்ந்து ஆதரித்து வந்தான். அவன் பிறந்தபொழுதே இரு முது குரவரையும் இழந்திருந்தமையால் இவன் தந்தை கண் டெடுத்து மைந்தனாக மதித்துத் தன் வீட்டில்வைத்து வளர்த்து வந்தானாதலால் பின்பு வந்த இவன் அவனை அண்ணனாக நினைந்து பேருரிமையோடு அடி வணங்கிப் பேணி நின்றான். மானம், வீரம், தூய்மை, துணிவு முதலிய குணகணங்களுக்கெல்லாம் உறைவிடமாயிருந்து இவன் ஒழுகி வருதலையறிந்து அவன் உள மிக மகிழ்ந்தான். இருவரும் உழுவலன்புடன் ஒருவரை யொரு வர் பிரியாமல் ஒழுகி வருங்கால் பகைவர் செய்த வினைவிளைவினால்

அவன் தனியகன்று அயல் நாடடைந்து ஒருவருக்குந்தெரியா வண்ணம் மறைந்துறைந்திருந்தான். இவன் தேடித் தேடி முடிவில் வந்து ஓர் இனிய இடத்தில் அவனைக் கண்டு ஆர்வத்தால் அலறி அழுது அடியில் விழுந்தான். அவன் தழுவி யெடுத்துப் பரிவு தீர்ந்தான்.

"தாமரைத் தடக்கை கூப்பித் தாள்முதற் கிடந்த தம்பி
தாமரைத் தடத்தை யொத்தான் தமையனும் பரிதி யொத்தான்;
தாமரைக் குணத்தி னானை மும்முறை தழுவிக் கொண்டு
தாமரைச் செங்கணானும் தன்னுறு பரிவு தீர்ந்தான்" (சிந்தாமணி)

இதில் "தாமரைக் குணத்தினான்" என்று கவி இவனைக் குறித்திருத்தல் கூர்ந்து நோக்கத்தக்கது. இங்ஙனம் தழுவி நின்ற அவன், தனக்கு நேர்ந்த இடையூறுகளை நினைந்து பெரிதும் இரங்கினான். அவ்வமயம் அறிவுரைகள் பல கூறி அவனை இவன் ஆற்றி நின்றான். அன்று இவன் கூறியவற்றுள் ஒன்று அடியில் வருதல் காண்க.

நந்தட்டன் உரைத்தது

"ஆக்கமும் கேடு முற்றீர் அடிகளே யல்லிர்; மேலைப்
பூக்குலா மலங்கன் மாலைப் புட்கொடியாற்கு முண்டே;
வீக்குவார் முலையினார்போல் வெய்துயிர்த் துருகிநைய
நோக்கினீரென்னை யென்றான் நுதியழற் குட்டமொப்பான்"

புட்கொடியான் என்றது இராமனை. புள் = கருடன். (சிந்தாமணி.)

இதனால் இவனது உள்ளப்பான்மையும், உறுதியும், உற்றிடத்துதவும பெற்றியும் நன்கு அறியலாகும். இன்னவாறு யாண்டும் பண்பு குன்றாமல் அன்பாற்றி எவர்க்கும் இவன் இன்பு செய்துவந்தான். அவன் பின்பு அரசனாகி ஆட்சி புரிந்தான் அவனுடனிருந்து உதவிகள் பல செய்து இவன் உலகினைப் பேணினான். வசை என்பது யாதும் உறுவகை நாண்வேலி கொண்டு மாண்பமைந்து நின்றானதலால் இவன் புகழ் திசை யெங்கும் செறிந்து நின்றது. இங்ஙனம் இசை வளர்த்து வருங்கால் சீவகன் உலக போகங்களை வெறுத்து மறுமை நோக்கோடு மருவி நின்றான். தன் அரசுரிமையை இவனுக்குத் தர விழைந்து தனியே ஒரு நாள் வரவழைத்துத் தன் அருகிருத்தி உலகினைப்

பெற்று ஆளும்படி உண்மையை உறுதிபெற வுரைத்தான். அவனுடைய அருமைப் புதல்வர்க்குரிய ஆட்சியைத் தன்பால் வைத்துள்ள அன்பால் அவன் தருவதாக வுரைத்தல் தகாதெனை மறுத்து இவன் தகவுரை கூறினன். அவன் மேலும் வற்புறுத்தித் தன் கோவின் கீழ்ப்பட்டுள்ள ஞாலத்தின் பெருமையை விரித்து விளக்கினன். அவ்வமயம் இவன் உரைத்தபடியை அடியில்காண்க.

"கரும்பலாற் காடொன்றில்லாக் கழனிசூழ் பழன நாடும்,
சுருமபுலாங் கண்ணிவிண்ணோர் துறக்கமுமா, வீடும் வேண்டேன்;
அரும்புலா யலர்ந்த வம்மென் தாமரை யனைய பாதம்
விரும்பியான்வழிபட்டன்றே வாழ்வதென் வாழ்க்கையென்றான்"
(நந்தட்டன்).

அதன்பின் தன் மகனுக்கு அவன் முடி சூட்டினன். உலக முழுவதும் வருவதாயிருந்தும் தனக்கு ஒவ்வாததெனை அதனை இவன் உவவாது விடுத்த உறுதியை நினைந்து அனைவரும் வியந்தார். சீலம் தகவு முதலிய சால்பு நிலைகளில் யாண்டும் தவறாது நின்று, ஞாலம் வந்தும் நயவாமல் நாண் கொண்டிருந்த இவனது ஆண்டன்மையை யறிந்து மறுபுலத்தவரும் வியந்து புகழ்ந்தார். "மேலாயவர் நாண் வேலி கொள்ளாது ஞாலம் பேணலர்" என்பதை எவரும் காண இவன் உணர்த்தி நின்றான்.

இழிவு தருஞ்செயலோர் எள்ளளவே யானும்
அழிவுதரு நஞ்செனவே யஞ்சி—விழுமியநாண்
ஆள்வார் அகல்வார்; அகத்துநா ணில்லாதார்
வீழ்வார் பழிமேல் விரைந்து. (தருமதீபிகை).

வானு நிலனும் வரினுமே நாணிழந்
தீனமுறார் மேலோர் இசைந்து.

நாணத்தையே பெரியோர் பெரிதாகப் பேணி நிற்பரென்பது இதனல் கூறப்பட்டது.

---

1017. வேதவதி நாண்காத்து மெய்யுயிரை நீத்தாளேன்
கோதைபுனை வைவேற் குமரேசா—கோதகன்ற
நாணு லுயிரைத் துறப்பர் உயிர்ப்பொருட்டால்
நாண்டுறவார் நாணாள் பவர். (எ)

இ—ள்.

குமரேசா! நாணினைப் பாதுகாத்து உயிரினை ஏன் வேதவதி விடுத்தாள்? எனின், நாண் ஆள்பவர் நாணால் உயிரைத் துறப்பர்; உயிர்ப் பொருட்டால் நாண் துறவார் என்க.

இது, உயிரினும் நாண் சிறந்த தென்கின்றது.

நாண் ஆள்பவர் = நாணினை மேற்கொண்டொழுகுவார். ஆளுதல் = தமக்குறுதியாகக் கருதி யாண்டும் உரிமையோடு பேணுதல.

உயிர்ப் பொருட்டு = உயிர் சிதையா திருக்கும்பொருட்டு. அஃதாவது உயிர் ஒழியாது உடம்பில் நிலைத்திருக்கும் நிமித்தம். பொருட்டு என்பது சொல்லாய் வரும்பொழுது பொருளை யுடையது என விரியும். ஈண்டு உருபாய் வந்து நிமித்த காரணங் குறித்து நின்றது. "நிடமும் பொருட்டும் ஏதுவும் நிமித்தமும்—கருதுங்காலைக் காரணமாகும்" (பிங்கலம்) ஆல் என்பது அசை போன்றிருப்பினும் கட்டுரைச் சுவை பயந்து பொருட்டுப் பொருளை விரித்து நின்றது.

நாண் ஆள்பவர் நாண் பொருட்டு உயிரைத் துறப்பர் என்றதனால் உயிர்ப்பொருட்டு அவர் நாண் துறவார் என்பது தானே பெறப்படுமாயினும் மீண்டும் உரைத்தது துணிபும் தெளிவும் தோன்ற என்க. விதியினும் மறையினும் வைத்து நாணுள்வார் செயல்வகையை இங்ஙனம் உரைத்ததனால் அவர் இயல்பு நிலை நன்கு அறியலாகும்.

மேல், ஞாலத்தினும் பெரிதாக மதித்து மேன்மக்கள் நாணினைப் பேணி நிற்பரென்றார்; இதில், அவர் உயிரினும் அருமையாக அதனை ஓம்பி நிற்பரென்கின்றார்.

நாணினை நயந்து ஒழுகுவார் நாணின் பொருட்டு உயிரினை விடுவர்; உயிரின் பொருட்டு நாணினை விடார் என்பதாம்.

நாணம் கெட்டிருந்தால் மட்டும் உயிர் வாழ முடியும்; அது கெடாது நின்றால் உயிர் போய்விடும் என்னும்படியான இடுக்கண் நேர்ந்தபோது பெரும்பாலும் பொது மக்கள் நாணமிழந்து

உயிரினை ஓம்பி நிற்பரே யன்றி நாணோம்பி நில்லார்; குலமக்களோ அவ் வுயிரினைக் கைவிட்டு நாணம் பேணி நிற்பராதலால் "நாணாள்பவர் உயிரைத் துறப்பர்; நாண் துறவார்" என்றார்.

"என்னின் யாரும் எனக்கு இனியார் இல்லை" என்ற வண்ணம் உயிரினும் இனியதும் அரியதும் யாதும் இல்லையாதலால் அத்தகைய உயிரையும் விட்டு நாணத்தைப் பேணிக்கொள்க என்றது என்னை? எனின், நாணமானது உயிர்க்குணமாய் நின்று அதனை அழகுபடுத்தி உயர்வுறுத்தும் இயல்பினது; அது கெட்டால் ஒளி இழந்த விழிபோல் பழி பட்டு அஃது இழிவுறுமாதலால் அங்ஙனம் உறுவகை அதனை ஓம்பிக்கொள்ளவேண்டும் என்க. உயிரைப பேணுதற்காக நாணமழியார்; நாணத்தைப் பாதுகாத்தற்காக உயிரையும் சான்றோர் ஒழித்துவிடுவர் என்ற இதனால் உயிரினும நாணம் சிறந்ததென்பது இனிது புலனும். "உயிரினும் சிறந்ததன் நாண்" (கலித்தொகை) என்றார் நல்லந்துவனார். நாணினை உயிரோடிணைத்துவைத்து இங்ஙனம் உணர்த்தியருளியது உயிரினும் ஓம்பத்தக்க அருமையுடையதென்னும் அதன் உரிமைதோன்ற என்க.

உயிரை இழந்தாலும் இழக்கலாமே யன்றி நாணத்தை யிழந்து வாழலாகாதென்பது குறிப்பு.

நாணம் உயிரினும் சிறந்த உயர்வினதாதலால் அதனை யாண்டும் வழுவாது பாதுகாத்து வரவேண்டுமென்பது கருத்து.

நாணழிய வந்த விடத்து நல்ல குல மக்கள் தம் உயிரை ஒழித்து விடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வேதவதியால் உணரப்படும்.

## கதை.

வேதவதி என்பவள் குசத்துவசன் என்னும் ஓர் வேதியனுடைய அருமைத் திருமகள். தாய் பெயர் மாலாவதி. தந்தை வேதமோதிக்கொண்டிருந்தபொழுது இவள் பிறந்தபடியால் வேதவதி என்று பெயரிட்டு மிக்க காதலோடு இவளை வளர்த்து வந்தார். அறிவிலும் அழகிலும் மிகச் சிறந்து விழுமிய நீர்மையோடு இவள் நன்கு விளங்கியிருந்தாள். இவளுடையதந்தையார்

மந்திர வலியில் மிகச் சிறந்தவர். அக்காலத்தில் மிகுந்த திறலோடு அமர்ந்திருந்த சம்பு என்னும் அசுர மன்னன் அவர்மேல் கறுவுகொண்டிருந்தானுதலால் ஒருநாளிரவு களவாக வந்து அவரைத் தலை துணித்துச் சென்றான். அவ் அருந்தவர் இறந்து பட்டதை யறிந்து அலமந்தழுது எரியின்மூழ்கி இவளுடைய தாயும் உடனுயிர் துறந்தாள். இங்ஙனம் பெற்றோர் இருவரையும் இழந்து இவள பேதுற்றழுது ஒருவாறுள்ளந்தேறி இல்வாழ்க்கையை வெறுத்து இமயமலை பருகே யிருந்த இபவனம் என்னும் இனிய இடத்தில் புனித நினைவோடு தனியமர்ந்திருந்தாள். இவளது பருவ நிலைமையும், உருவ எழிலையுங் கண்டு அரசர் பலர் மணஞ்செய்ய விழைந்தும் யாதும் இடங்கொடாமல் அவரனைவரையும் அகலவிடுத்துத் திருமாலையே திருமணஞ்செய்து கொள்ளவேண்டுமென்னும் பெருமாலுடையளாய் அருமாதவம் புரிந்து இவள் ஆதரித்து நின்றாள். இவ்வண்ணம் இவள் நின்று வருங்கால் இராவணன் ஒருநாள் அங்கு வந்தான். மூவுலகங்களுக்கும் மாபெருந் தலைவனாய் மதத்துக் களித்துநின்ற அவன் இவள் வனப்பி லீடுபட்டு மறுகி நெருங்கினான். உருகி நோக்கினான். உள்ளந்தெரியாமல் உரைபல கூறினான்.

"இலங்கை மன்னன்; இராவணன் என் பெயர்;
புலன்கள் வென்ற புலத்தியன் பௌத்திரன்;
கலங்கல் சிந்தையென் காதலியாய்த் தரா
தலங்களுககுத் தலைவியு மா கென்றான்"

இன்னவாறான சின்ன மொழிகளைக் கேட்டவுடனே இவள் சிந்தை கலங்கிச் செவிகளிரண்டையும் சேரப் பொத்தி நிலங் கவிழ்ந்து நோக்கி "இனந்தெரியாமல் பேசாதே" என்று அவனைச் சினந்து கடிந்தாள். அவன் சிறிதும் கூசாதுவந்து இவளது செங்கையைப் பிடித்தான். இவள் கடுத்துதறித் தன் கையை யெடுத்துககொண்டு இனி நின்றால் இப் பாவி கெடுத்து விடுவான் என்று கடுத்தகன்று அடுத்து நின்ற வேள்விக் குண்டத்தில் விரைந்து பாய்ந்தாள். அங்ஙனம் பாயுங்கால் அவனைக் காயுங் கனல்போல் கனன்று பார்த்து உளங் கொதித்து வைதாள் அன்று இவள் பகர்ந்த படியை அடியில் காண்க.

வேதவதி இராவணனைச் சபித்தல்.

"வாடா மலரோன் வாசச் செருக்கால் மற்றெனை நீ
கூடாதன சொல்லிக் கூசாது தீண்டினையால்!
ஏடா! உனக்கும், இலங்கைக்கும், உன கிளைக்கும்,
கேடாகத் தோன்றுவேன் என்றாள் கிளர் சினத்தாள்"

வேதவதி தீயுள் மூழ்கல்.

"வானோர் மகிழ்ந்து மலர்மா மழை பொழிய
ஏனோர்களெல்லாம் இனிப்பிழைத்தோ மென்றியம்பக்
கானா ரருந்தவத்தோர் கண்டு வியப் பெய்தத்
தேனார் மொழிமடவாள் செந்தழலின் மூழ்கினாள்".
(உத்தரகாண்டம்).

தன் மானத்தைப் பாதுகாத்து இங்ஙனம் உயிரை விடுத்த இவ் வேதவதியே பின்பு சீதையாய்த் தோன்றி முன்பு கூறிய படியே அவன் குலத்தை முடித்தாள். அமரரும் அடிதொழ நின்ற முடி மன்னனாகிய அவன் வெருட்டியும் மருட்டியும் இவள் உயிரை ஒரு பொருட்டாக மதியாமல் அதனை யறவே துறந்து நாணத்தைப் பேணி நின்ற இவளது பான்மையை வியந்து அனைவரும் துதித்தார், அமரரும் புகழ்ந்தார். "நாண் ஆள்பவர் நாணால் உயிரைத் துறப்பர்; உயிர்ப் பொருட்டால் நாண் துறவார்" என்பதைஉலகம் காண இவள் உணர்த்தி நின்றாள். (விரிவை இராமாயணத்தில் காண்க)

தானத்தின் மிக்க தருமமும், தக்கார்க்கு
ஞானத்தின் மிக்க உசாத்துணையும்,—மானம்
அழியா ஒழுக்கத்தின் மிக்கதூஉம், இல்லை
பழியாமல் வாழும் திறம். (அறநெறிச்சாரம்).

பொன்று முயிர்க்கஞ்சிப் பொன்றாத நாணதனை
என்றுமறார் மேலோர் இழிந்து

நாண் உயிரினும் பேணத்தக்கதென்பது இதனால் கூறப் பட்டது.

1018. கொண்ட மனைவியையும் கோதுசெய்தான கேசவனேன்
கொண்டிலனீ தென்னே குமரேசா—கண்டு
பிறர்நாணத் தக்கது தானுணு னாயின்
அறநாணத் தக்க துடைத்து. (அ)

இ—ள்.

குமரேசா! கண்டவரெல்லாரும் இகழ்ந்து நாணும்படி தான் கொண்ட மனையாளையும் பழுது படுத்திக் கேசவன் ஏன் பாவியாய் இழிந்து நின்றான்? எனின், பிறர் நாணத்தக்கது தான் நாணான் ஆயின் அறம் நாணத்தக்கது உடைத்து எனக.

இது, நாணில்லார்க்கு அறம் இல்லை என்கின்றது.

கோதுசெய்தான் என்றது தீதின்றி நின்ற அமமாதினைக் கற்பழியும்படி தூண்டிப் பொறபழித்து அவன் இறபழி செய் தமை கருதி.

தான் என்றது நாணாது நிற்கும் நரகனை.

பிறர் என்றது கண்டவர்களும் கேட்டவர்களும் என்றபடி.

இன்ன செயல் என வெளிப்படையாக விளக்கிச் சொல்லாமல் "பிறர் நாணத்தக்கது" என நயமாக இங்ஙனம் சுட்டிவிட்டது அப் பழிவினையின் கனத்தைக் கருதி நோக்க.

"கள்ளம் புரிதல், கள்ளுண்டுழலல், உள்ளங்கோடி உறுகரி பொய்த்தல், தன் மனைக்கிழத்தியைப் பிறனிடமுய்த்துப் புன்மையொடு வாழ்தல், புறம்பழித் தொளிதல்" என்னும் இவை முதலியன இகழ்ந்து நாணத்தக்க இழிந்த செயல்களாதலால் இவற்றை நாணாது நயந்து நிற்போர் மானங்கெட்டவரேயாவர்; அவரது ஈனங்கள் பிறர் நாணத்தக்கனவாம் என்க.

நன்றுணவிடாம லான்பால் கறந்துகொள்பவனும், செய்த
நன்றிகொல்பவனும், கோடி நடுநிலை தவறுவானும்,
கொன்றுயிர் பதைப்ப நோக்குங் கொடியனும், போர்க்களத்தில்
தன்றலைவனை விடுத்துச் சாய்ந்துபோ மடமை யானும்; (க)

அடைக்கல மெனவந்தானை அளித்திடா தகற்றுவானும்,
கொடுக்குது மெனவுரைத்துக் கொடானும், ஒண்கொடைவிலக்கி
விடுக்குறுமவனும், பாவவினையிடத் துதவி யாகி
நடக்குறுமவனும், தேர்ந்து நட்டபின் வஞ்சிப் பானும்; (உ)

உறவுசெய் தறிந்த சொல்லை யுவர்த்துழிக் கூறுவானும்,
பிறர்பிழை தனையே நாடிப் பிறரொடு பேசுவானும்,
முறைவழு வுறுகொடுஞ் சொல் முனிவிடை மொழிகுவானும்.
அறிவழி மனைவி சொல்லின் வழிநிற்கு மறிவிலானும். (3)
(பிரபுலிங்கலீலை)

எனவரும் இவை பழிச் செயல்களாகவும், இவற்றை நாணி ஒழித்தொழுக வேண்டும் எனவும் இலக்கணர்த்தி நிற்றல் காண்க.

அறம் நாணத்தக்கது = தருமம் நாணி நீங்கத்தக்க நிலைமை. உடைத்து = அந் நாணுமை யுடையது. உடைத்து என்னும் கூற்று அவனது நாணுமையைக் குறிக்கொண்டு முடிந்தது. இனி, இதற்கு அறத்தையே எழுவாயாகக் கொண்டால் நாணுத அவனை, அறம் நணுகாதொழியும் தகவினை யுடையது என்று கொள்க. அறத்திற்கு என்னே நாணம்? எனின், நாணங்கெட்ட அவனை அது காணக் கூசும்; ஏன்? எனின், நாணம் தருமகுணமாதலால் அதனை இழந்து நிற்பவனை அஃது இகழ்ந்து நீங்குமாகலான் என்க.

மேல், நாணம் உயிரினும் பாதுகாக்கத்தக்கதென்றார்; இதில், அதனைக்காவாதார் பாவிகளாய்ப்பழிக்கப்படுவரென்கின்றார்.

பிறர் நாணத்தக்க பழிச்செயலைத் தான் நாணுது ஒருவன் செய்வானாயின் அந்நாணுமை அவனை அறம் காணியகலும்படியான கொடிய இழிவினை யுடையதென்பதாம்.

கண்டவர்கள், கேட்டவர்களெல்லாரும் உள்ளங்கூசி உறுகண் புதைத்து, இரு செவி பொத்தி, அருவருத்து வெறுக்கத்தக்க பழிச் செயலை ஒருவன் கூசாது செய்வனாயின் அவன் நீசனுவன்; ஆதலே அப் பாவியை அறம் பார்க்கக் கூசுமாதலால் "அறம் நாணத்தக்கது" என்றார். ஈனப் பொருளைக் காண நேர்ந்தால் கண்ணெடுத்துப் பாராதபடி புனிதர் தலை சாய்த்துச் செல்வர்; அதுபோல் தூய அறம், நாணங் கெட்ட அத் தீயரை யாதும் நெருங்காது விரைந்து நீங்கிப்போம் என்றபடி. இதனால் நாணிலிகள் பாவிகளாய் நைந்திழிவர் என்பதாயிற்று.

பிறர் நாணத்தக்கது தாம் நாணுதவர் யார்? என முன்னுற எண்ணி நோக்கின் துச்சாதனன் போல்வார் சிலரை ஈண்டு

என்னலாகும். என்னை? பதிவிரதையாகிய துரோபதையை அரச சபையிலிழுத்து வந்து நிறுத்தி அவள் உடுத்தியிருந்த உடையை வலிந்து பிடித்துப் பலரும் காணும்படி உரிந்து உரிந்து நின்றான்; நிற்குங்கால்,

"நாணே முதலா நாற்குணனு நண்ணுங் கற்பு நயந்தணிந்த
பூணே யனையாள் அழுதரற்றிப் புனபேரவையில் புகுஞ்சோகம்
காணேமென்று நிலனோக்கிக் கதிர்வேனிருபர் இருந்திரங்க
கோணே நேர்பா டாயிருந்தான் குருடென் றுரைக்குங்
கொடியோனே" (பாரதம்)

என்றபடியாரும் நாணியிரங்க அக் குருடன் மகன் மட்டும யாதும நாணுதவனாய் அப் பழிச் செயலை நயந்து புரிந்தானாத லால் அறம் நாணத்தக்கவனாய் அவன் இழிந்தொழிந்தமை காண்க.

பிறர் நாணத்தக்கது தான் நாணுமைக்குக் காரணம் அவன் உள்ளத்தில் நல்ல உணர்ச்சி யில்லாமையேயாம்; உணர்விருந்தால் பழிச் செயல்களைக் கண்டவுடனே உளங்கூசி ஒதுங்குவர் என்க. "அச்சமும் நாணும் அறிவிலோர்க் கில்லை" (நறுந்தொகை). என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. கெடுமதியும், படு பாவமு முடைய முழு மூடர்கள் தாம் நாணமின்றி நவைபுரிந்து திரிவர் என்பது குறிப்பு.

நாணுமையானது அறத்தைக் கெடுத்து அளற்றில் புகுத்தி விடு மாதலால் அதனை அறவே விடுத்து யாண்டும் நாணமுடையராய் நின்று நலம்பெற வேண்டும் என்பது கருத்து.

ஒருவனிடம் இனிய நாணம ஒன்றில்லையாயின் அவன் கொடிய பாவியாயிழிந்தொழிவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது இவ்வுண்மை கேசவன்பால் உணரப்படும்.

## கதை.

கேசவன் என்பவன் இற்றைக்கு மூவாயிர ஆண்டுகட்கு முன்னர்க் கொங்குநாட்டிலே வனமங்கலம் என்னும் நகரிலிருந்த வன். வணிகர் மரபினன். வைணவ மதத்தினன். கொடுமை யும் வஞ்சமும் குடிகொண்ட நெஞ்சினன். இவன் வணிகனாயிரு

ந்தும் தொழில் முறையில் இனிது முயலாமல் பழி வழிகளிற் புகுந்தும் இழிவுகள் பல செய்தும் பொருள்மிகத் தொகுத்தான். இரவுகளில் களவாகச்சென்று இறைவனாலயங்களிலுள்ள பொருள் களைக்கவர்ந்தான். இவன் வல்வாயனாதலால் எவரையும் சொல் வலியாலடக்கிப்புல்வினை புரிந்து புலை மிகுந்திருந்தான். பொய்க் கரி புகன்றும், இச்சகம் பேசியும், புறஞ்சொல்லாடியும், புனிதரை யிகழ்ந்தும் பொருள் கருதி நின்ற இவன் தனது இனியமனைவி யையும் புன் பழிக்காளாக்கிப் புலங்கெட்டு நின்றான். அவள் இயற்கையில் நல்லவளாயினும் இவனது செய்கைக்கேட்டால் சித் தந்திரிந்து செல்வர் சிலரைச்சேர்ந்து முயங்கினாள். தன் இல் லாளை அங்ஙனம் செல்லவிடுத்து யாதும் உள்ளங்கூசாமல் அவ் வழியிலும் இவன் பொருள் சேர்த்துவந்தான். மானம் என்பது சிறிதுமின்றி இங்ஙனம் ஈனஞ்செய்து வந்த இவனை யாவரும் இகழ்ந்து பழித்தார். உறவினரனைவரும் உள்ளம் நாணி எள்ளி வைது தம் இனத்தில் சேர்க்காமல் இவனை இகந்து விடுத்தார். இங்ஙனம் உற்றவரும் மற்றவருமாகிய பிறரெல்லாரும் நாணிநின் றும் இவன் மட்டும் நாணாமல் நின்று நவைபுரிந்து வந்தான். முடி வில் செல்வமுழுவதையும் இழந்து சுவாசகாசம் என்னும் நோய் வாய்ப்பட்டுச்சீரழிந்து செத்தான். கண்டவரும் கேட்டவரும் நாணும்படியான ஈனச்செயல்களைச்செய்திருந்த இவன் இறந்து பட்டபோது மானங்கெட்டபாவி தொலைந்தான் என்று வையம் மகிழ்ந்து நின்றது. பிறர் நாணத்தக்கது தான் நாணாயின் அவன் அறம் நாணத்தக்கவனாய் அழிந்திழிவன் என்பதை உல கம் காண இவன் உணர்த்தி நின்றான்.

"கரைபொரு மணிமுத்தாற்றங் கரைக்கணோர் நகரமுண்டால்
உரைபெறு குடிகள் நான்கும் அந்நகர் ஒருங்குவாழும்
வரைவில் சம்பத்தினோடு வைணவ வணிக னீர் சூழ்
தரைவெறுத்திடவுள்ளான் கேசவனென்பான் அவ்வூர் வாழ்வான்.(க)

அனையவன் கொடியபாவக் குழிசியா யறிஞராகி
நினையவுள்ளவராய்ச்சைவ நெறி நிற்குமேலோர் தம்மைத்
துனைய நிந்திப்பான் சைவ துரோகத்திற் றலைநின்றுள்ளான்
புனையவாஞ் சிவாலயத்துப் பொருளெலாங்கரவிற் கொள்வான். (உ)

தீயமா பாவி யிந்தச்செய்கையி னொழுது நாளில்
மேயசம் பக்தனேச்தும் வீந்தன; சுவாசகாசம்
ஆயு தீப்பிணி முன்னுன அடர்ந்தன; அமைத்த வாழ்நாள்
தேய, இவ்வுலக நீதநுத் தீ நர குலசத்து ற்றான்." (௩)
(திருப்பெருந்துறைப்புராணம்)

மேற்குறித்த சரிதம் இதன்கண் ணும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. இவன் நாணது நவைபுரிந்து நின்றதும, அதனு அறம் சாராததால இவன் கொடும்பாவியாயிறந்து கடுநரகடைந்ததும், பிறவும் இதனாலறியலாகும்.

வானமென நீண்ட வளம்பெறினும் நாணமிலார்
ஈன முறுவ ரிழிந்து.

நாணம்கெட்டவனை அறம் சேராதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1019. அன்று சுமதி அசாமிளனேன் நாணிழந்து
குன்றினார் நன்மை குமரேசா—நின்ற
குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பின் நலஞ்சுடும்
நாணின்மை நின்றக் கடை. (௯)

இ—ள்.

குமரேசா! நாணின்றி நின்ற சுமதியும் அசாமிளனும் ஏன் நலமெல்லாம் இழந்து இழிந்தார்? எனின், கொள்கை பிழைபின் குலம் சுடும்; நாண் இன்மை நின்றக் கடை நலம் சுடும் என்க.

இது, நாணில்லாதவர் நலமின்றி யிழிவர் என்கின்றது.

குலம் = குடிப் பிறப்பு. "துந்துவெனுந்தானவனைச் சுடுசரத்தால் துணித்தானும்—வந்த குலத்திடை வந்த ரகுஎன்பான்" (இராமாயணம்) இதில் குலம் உணர்த்தி நிற்றல் காண்க.

கொள்கை = ஒழுக்கம். வரைந்து கைக்கொண்டு வழுவாதொழுகும் நியமமாகிய குலவொழுக்கம் ஈண்டுக் கொள்கை என நின்றது. "தாவில் கோள்கைத் தந்தொழில் முடிமார்" (திருமுருகாற்றுப்படை) "சிறந்த கொள்கை அறங் கூறவையமும்" (மதுரைக் காஞ்சி). இவற்றுள் இது குறித்து நிற்றல் காண்க.

6436 (264)

## 102-ம் அதிகாரம் நாணுடைமை. 3147



பிழைப்பின் = தவறின். கொள்கைத்தவறு குலத்தைச் சுடும் என்றதனால் அதனோடு அதற்கமைந்துள்ள இயைபு இனிது அறியலாகும். நலம் என்றது கல்வி, செல்வம், அழகு, அறிவு, அன்பு, இன்சொல் ஈகை முதலிய நலங்களை.

நாணின்மை நின்றக் கடை = நாணுமை நிலைத்துநின்ற விடத்து. அஃதாவது நாணம் அறவே ஒழிந்தவழி என்றபடி. "நின்ற" என்றது அந் நாணின்மை யாதும் நீங்காது, என்றும் நிலைத்து நிற்கு நிலைமை தோன்ற நின்றது. கடை என்பது வினையெச்ச வாய்பாடாய் ஈண்டு இறந்த காலங் குறித்து நின்றது. "கடைகால் எனப்பன வினைக்குறை நிலையே".

மேல், நாணில்லார்க்கு அறம் இல்லை என்றார்; இதில், குலம் கல்வி முதலிய நலங்கள் யாவும் அவர்க்கு அழியும் என்கின்றார்.

ஒருவன் ஒழுக்கம் தவறின் அப் பிழை அவன் குடிப்பிறப்பைக் கெடுக்கும்; நாணங் கெடின் அக் கேடு அவனுடைய நலங்களெல்லாவற்றையும் ஒருங்கே அழிக்கும் என்பதாம்.

"ஒழுக்கம் உயர் குலம்" என்னும் பழமொழிப்படி ஒழுக்கத்தை வைத்துத்தான் ஒரு குலம் சிறப்புறுமாதலால் அது பிழைபடின் அக் குலம் இழிவுறும் என்பார் "கொள்கை பிழைப்பின் குலம் சுடும்" என்றார். "சுடும்" என்றது எரிபட்ட துரும்புபோல் கரிந்து அது கடைப்படுதல் கருதி. "ஒழுக்கமுடைமை குடிமை; இழுக்கம் இழிந்த பிறப்பாய்விடும்" (குறள் 133) என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

நாணுடைமை என்னும் இவ் வதிகாரத்தில் குடிப் பிறப்பையும் உடன் புணர்த்தி புணர்த்தியது என்னை? எனின், இதனோடு அதற்குள்ள உறவுரிமை கருதி என்க. என்னே உரிமை? எனின், "ஒழுக்கமும், வாய்மையும், நாணும் இம் மூன்றும் இழுக்கார் குடிப்பிறந்தார்" என்றபடி அவை அடிப்பட்டிருத்தல் காண்க. அடுத்துவரும் குடிசெயல்வகைக்கும் இது, அடிகோலிய படியாம்.

கல்வி அறிவு திரு உரு இளமை எழில் ஈகை இரக்கம் முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருவன்பால் ஒருங்கமைந்திருந்தா

னும், அவன் நாணமின்றி ஈனச் செயல்களைச் செய்வனாயின் அவை யாவும் பயன்படாதொழியுமாதலால் "நாணின்மை நின்றக் கடை, நலம் சுடும்" என்றார். சுடும் என்ற சொல்லாற்றலால் அந் நலமெல்லாம் ஒரு நொடியில் உருவற ஒழிந்துபோம் என்பதாயிற்று. சுடு மொழியால் இங்ஙனம் கடுமையாக வுரைத்தது நாணின்மையால் உளவாம் கொடுமையை அறிந்து யாண்டும் அது கெடாவண்ணம் நின்று ஒழுகவேண்டி என்க.

ஒருவன் உயர்ந்த குலத்தவனாய்ச் சிறந்து விளங்கவேண்டுமாயின் அவன் ஒழுக்கம் குன்றலாகாது; நலங்களெல்லாவற்றையும் ஒருங்கே ஒருவன் அடைந்துகொள்ளவேண்டுமாயின் அவன் நாணம் கெடலாகாது; என்பது இதன் திரண்ட பொருளாம்.

ஒழுக்கம் குலத்திற்கும், நாணம் நலத்திற்கும் உயிராதாரமாயுள்ள படியை யிதில் ஊன்றி யுணர்ந்துகொள்க. பின்னதற்கு முன்னது எடுத்துக்காட்டாக நின்றது. நாணமும் சீலமும் மக்கட்கு நலமும், குலமும் தந்து அவரைத் தலைமையான நிலையில் உயர்த்திவைக்கும் ஆதலால் அத்தகைய அவற்றை உறுதியாகக் கைக்கொண்டு யாதும் வழுவாதொழுகவேண்டும் என்பது கருத்து. "நலம் வேண்டின் நாணுடைமை வேண்டும்; குலம் வேண்டின் வேண்டுக யார்க்கும் பணிவு" என இவ் விரண்டையும் ஒருசேர வைத்து முன் உரைத்துள்ளதும் ஈண்டுணரத் தக்கது.

எவ்வளவு துயரங்கள் நேர்ந்தாலும் ஒருவன் நாணினை இழக்கலாகாது; இழப்பின், அவ் இழவு பல நலங்களையும் இழப்பித்துப் பேரிழிவினை விளைக்குமாகலான் அதனையாண்டும் இழவாது பேணவேண்டும் என்பது கருத்து.

நாணம் இழந்தவர் எல்லாநலங்களையும் ஒருங்கேயிழந்து ஈனராய் இழிந்து படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சுமதியாலும், அசாமிளன் கண்ணும் உணரப்படும்.

## கதை

சுமதி என்பவன் இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் மராடதேயத்திலே யிருந்தவன். எச்சதேவன் என்னும்

வேதியனுடைய மகன். நல்ல அழகனுயினும் இவன் புல்லிய இயல்பினன். பருவமடைந்தவுடன் அறிவு நிலைதிரிந்து சிறுமைகள் பல செய்து செருக்கித்திரிந்தான். தந்தை மிகவும் சீலமுள்ளவனுதலால் இவன் செயல்களையறிந்து சித்தங்கொதித்தான். சினந்து கடிந்தான். தாயும் கனன்று தன்னுளாந்திரிந்தாள். குமதியான இவனைச்சுமதி என்று சொல்லல் தகுதியன்றென அனைவரும் அமைதியின்றி வைதார். இங்ஙனம் எல்லாரும் எள்ளி வைதாலும் இவன் உள்ளங்கூசாமல் புல்லிய வழியே புகுந்து திரிந்தான். களவு பொய் காமம் சூது முதலிய தீமைகளையாதும் நாணுது செய்துவந்த இவன் முடிவில் உற்ருரோடு தன் நாட்டையும் ஒழித்துவிட்டுப் புற்கல நாட்டுட் புகுந்தான். அங்கு மருதங்குளம் என்னும் ஊரருகே நின்ற ஓர் குறத்தியைக்கண்டு கடுங்காதல் கொண்டான். அவளும் இசைந்தாள். இருவரும் கலந்து சிலநாள் இன்பநுகர்ந்தார். அவள் கருப்பியாயினும் நல்ல கட்டுள்ளவளாதலால் அவளது காமவலையிற்பட்டு இவன் கருத்தழிந்து நின்ருன். ஒரு கலத்திலுண்டும், உறுபுலால் தின்றும், பெருநறவருந்தியும், அழிமதியோடு முறுகி நின்ற இவன் இறுதியில் ஒருநாள் இரவு களவு செய்யப்போய் அங்கோர் மறையவனைக் கொலையும்செய்தான்.

" முருகலர்க்குழற் புளினமாதொடு மோக மோவிலான் போக மேவுவான்
ஒருகலத்தினுண்டுண்ணுெ நறவுணவு மற்றவ ளோடருந்தினுன்
திருகலக்கஞெடுறையு மித்தாள் திருடல்வெஃகியே யருள்திரிந்திடும்
பொருகலக்கமில் வேடர்தம்மொடும் போதுவான் கொள்வான் வேடம்
வேறரோ.
வேறுவேடமார் வேடர்போலவே விறலிலாடர்தம் விடயமேவியே
ஆறுசெய்கையான் இல்லிடம் புகுந்தவனதாவியும் அம்பொன்ஈட்டமும்,
பேறுகொண்டுதான் பெருகுகாதலாற்பிறை கொணெற்றியாள் நிறைமதுப்
புலால், நாறுமாம்பலான் புளின மின்னனுள் நண்ணுமவ்விட நண்ணி
னுனரோ." (சேதுபுராணம்)

இவ்வண்ணம் நண்ணி நின்ற இவன் பினபு எண்ணரிய துயரங்களையடைந்து இழிந்து கிடந்தான். நாணின்றி நின்று நவை புரிந்துவந்தமையால் குலமும் நலமு மிழந்து இவன் குன்றி யொழிந்தான். (விரிவைக் காந்தத்தில் காண்க.)

## கதை 2.

அசாமிளன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் அவந்தி நாட்டிலே கன்னியாகுச்சம் என்னும் நகரில் இருந்தவன். மறையவர் மரபினன். பல நூல்களையும் நன்கு பயின்றவன். இங்ஙனம் கல்வியிற் சிறந்திருந்தும் நல்ல சீலமின்றித் தன் உள்ளம்போனபடியெல்லாம் பழிவினைகளில் இழிந்து ஒழுகிநின்றானாதலால் அனைவரும் இவனை அழிமதியனென இகழ்ந்து நின்றார். தன் குலத்தில் மணந்திருந்த தனது இனிய மனைவியைத் தனியேவிட்டு மற்றோர் குலத்து மங்கையை இவன் மருவிக் களித்தான்.

காந்திமதியிற் கதிர்செய் பருமுத்தணிந்
தேந்திவளரும் இளமுலையாள் செவ்விநலம்
மாந்திமயங்கி மலைவுண்டு நல்லொழுக்கம்
நீந்தித்தனது நிலையினிழிந்தொழிந்தான்'' (பாகவதம்)

"இங்ஙனம் ஒழியவே இவன் சாதிவேதியரெல்லாரும் இவனைச்சாதிகெட்டவனெனத்தள்ளி விடுத்தார். அவர் என்ன செய்யினும் இவன் யாதும்கூசாது அவளோடமர்ந்து ஒருகலத்துண்டு உவந்து நுகர்ந்து ஒன்பது மக்களைப்பெற்று எண்பத்தெட்டு வயதுவரையும் இணைபிரியாதிருந்தான். இருபிறப்பாளனாய இவன் ஒருபிறப்பினும் சேராமல் ஊனமுற்றிருந்தானாதலால் இவனுக்குப் பிறந்த பிள்ளைகளையும் அவ்விருவகை மரபிலும் ஒருவரும் உவந்து கொள்ளாமல் இகழ்ந்திருந்தார். உயர்ந்த குலத்தில் பிறந்து, கல்வி முதலிய சிறந்த நலங்களை யடைந்திருந்தும் ஒழுக்கமும் நாணமும் இல்லாமையால் குலமும் நலமுமிழந்து பல இழிவுகளடைந்து இவன் நிலைதிரிந்துழன்றான். "கொள்கை பிழைப்பின், குலஞ்சுடும்; நாணின்மை நின்றக்கடை, நலம்சுடும்'' என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

எல்லா முடைய ரேனினும் உயர்நாணம்
இல்லாரேல் யாது மிலர்.

நாணொன்றொழியின் நலமெலாமழியு மென்பது இதனால் கூறப்பட்டது.

1020. ஓர்ந்துநா ணில்லா வுதிதன் உயிர்வாழ்ந்தும்
கூர்ந்திழிந்தான் என்னே குமரேசா—சேர்ந்தமைந்த
நாணகத் தில்லா ரியக்க மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று. (ப)

இ—ள்.

குமரேசா! நாணில்லாத உதிதன் உயிர்வாழ்ந்திருந்தும் ஏன் இழிந்து கிடந்தான்? எனின், அகத்து நாண் இல்லார் இயக்கம் நாணால் மரப்பாவை உயிர் மருட்டியற்று என்க.

இது, நாணில்லாதவர் நடைப் பிணங்களென்கின்றது.

நாண் இரண்டனுள் முன்னது நாணம், பின்னது கயிறு. "நாண் இலச்சைப்பேர்தானே, கயிறென்று நாட்டலாகும்." (நிகண்டு). அகத்து = மனத்தின்கண். அகம் = மனம். இயக்கம் = இயங்குதல்; அஃதாவது உலாவித்திரிதல். "அசைதலும் இயங்கலும் வழங்கலும் உலாவுதல்" (பிங்கலம்).

மரப்பாவை = மரத்தாற்செய்த பாவை.

மருட்டி அற்று = மயக்கியது போலாம். மருட்டி என்பது மருள் என்னும் பெயரடியாகப் பிறந்தது. மருள் = மயக்கம். அஃதாவது தெருளோடு தேர்ந்து காணாது தோற்றத்தால் ஏமாந்து தியங்கி நிற்பது. "தெருளா நின் வரவறிதல், மருளறு தேர்ச்சி முனைவர்க்கு மரிதே" (பரிபாடல்) இதில் தெருள் மருள்களின் பொருள்களை யறிக. அற்று என்பது அன் என்னும் உவமவுருபிடைச் சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்று.

மேல், உளத்தில் நாணமில்லாதார்க்கு ஒரு நலமு முண்டாகாதென்றார்; இதில், அவர் உயிருடனிருந்தாலும் இறந்தவரே யாவர் என்கின்றார்.

தம் அகத்தின்கண்நாணமில்லாதார்உயிருடையார்போன்று புறத்தில் இயங்குதல், மரப்பாவை இயந்திரக் கயிற்றால் உயிருடையதுபோல் இயங்கி மயக்குதல்போலாம் என்பதாம்.

நாணில்லாரை, மரப் பாவைக்கும்; அவர் இயக்கத்தை, அதன் இயக்கத்திற்கும் ஒப்பாக வைத்து அவரது இருப்பு நிலையினை உய்த்துணரும்படி இங்ஙனம் உணர்த்தி யருளினர்.

அகத்தே நாணில்லாதார், தாமும் மக்களைப்போல் உண்ணல் உடுத்தல்களைச் செய்து உலகத்தே உலாவி வரினும் அவரை உயிருள்ளவராக எண்ணலாகாது; நடைப்பிணங்களாகவேகொள்ள வேண்டும் என்றபடி.

மக்களுருவம்போல் மரத்தால் செய்த பாவையைக் கயிற்றாற் பிணித்து இயக்கினால் அது கண்களை இமைத்தும், கைகால்களை அசைத்தும் இடம் பெயர்ந்து இனிது இயங்கும்; இயங்கவே அதனைக் கண்டவர் பொது நோக்கில் உயிருள்ளதாகவே கருதி நிற்பர்; ஆதலால் "மரப்பாவை நாணல் உயிர் மருட்டியற்று" என்றார்.

உள்ளே நாணில்லாதவர் மக்களுருவங்கொண்டு புறத்தே நடமாடுவதைக் கண்டு சிறப்புள்ள மனிதவர்க்கமாக அவரை மதித்து மருளலாகாது என்பார் அவர் "இயக்கம் மருட்டியற்று" என்று தெருட்டி யருளினர். நாணிலிகளாகிய தோற் பாவைகளுக்கு ஈனுள்ள மரப் பாவைகளை ஒப்புக் கூறி இஃதுணர்த்தி நிற்கும் அழகை யூன்றிப் பார்க்க. இங்ஙனம் உணர்த்தியது உள்ளீடின்றி வேறு ஏற்றமொன்று மெய்தாமல் வெறுந்தோற்ற மாத்திரமே நின்று தொலைந்து போதல் கருதி.

நாணங் கெட்டவர் நெட்டுயிர்ப் போடுற்ற பிணங்களேயன்றி மக்களல்லர் என்பது கருத்து. ஒத்த பிறப்பினை யுடையராய் உயிர்வாழ்ந்திருந்தும் நாணிலிகளை இங்ஙனம் செத்த சவங்களாகக் குறித்தது உயிர்ப்பண்பாகிய அரிய நலனை யிழந்து இழிநிலையில் கழிந்து நிற்கும் அவரது பெரிய இழவு கருதி என்க.

"ஊணல வுண்வழி நாயினுண்டவன்
ஆணலன், பெண்ணலன் ஆர் கொலாமென
நாணலன்; நரகமுண்டென்னு நல்லுணர்
பேணலன்; பிறர்பழி பிதற்றியாகயான்" (இராமாயணம்)

இது, பரதாழ்வார் குணுறு கட்டுரை சொல்லுங்கால் தம் உள்ளங்கொதித்துச்சொல்லியதென்க. நாணமில்லாத வாழ்வு ஈனமெனவும், அந்நிலை மிக இழிக்கத்தக்கதெனவும் அம்மான சீலர் உறுதிதோன்ற அறுதியிட்டு இதில் உணர்த்தியிருக்கும் மான்மை ஊன்றியுணரத்தக்கது.

பழிபாவங்களைக்கூசி ஒதுங்கலே நாணமாம்; அது, ஊணினும் உடையினும் உயிர்க்கு மிகவுரியது; உயர்வு தரும் தகையது; அணியினும் அழகிது; அதனையுடையாரை உலகமெல்லாம் உவந்து தொழும்; ஞாலத்தினும் உயிரினும் மேலோர் அதனை நயந்து பேணுவார்; அதனை உவந்துகொள்ளாதாரை அறம் இகழ்ந்து தள்ளிவிடும்; அவர் உயிருடனிருந்தாலும் இறந்தவரே யாவர் என நாணினது உண்மை யின்மைகளால் உளவாம் தன்மைகளை விளக்கி நாணுடைமையின் பெருமையை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

உருவத்தால் மக்களாயிருந்தாலும் உள்ளத்தில் நாணமில்லையாயின் அவர் உயிர்ப்பிணங்களா எள்ளப்படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உதிதன்பால் உணரப்படும்.

## கதை

உதிதன் என்பவன் இற்றைக்கு இரண்டாயிரத்தறுநூறு ஆண்டுகட்கு முன்னர்க்கௌதமிநதியினருகே யிருந்த தாதுபூந்துறை என்னும் நகரிலிருந்தவன், வேதியர் மரபினன். இவனுடைய தந்தை பெயர் மாதவசன்மன். அவன் நல்ல நீதிமான். கல்வியறிவிலும், செல்வ நிலைமையிலும் அவன் மிகச்சிறந்திருந்தான். இவன் பிறந்த பின்னர் அவன் மிகுந்த நோய்வாய்ப்பட்டு இறந்து போனானதலால் அவ்வுடைமை முழுவதையும் உரிமையாகப்பெற்று உள மிகச்செருக்கிப்பழிநிலையாளர்களுடன் கூடி இழிவினைகள் பல செய்து இவன் களிமிகுத்திருந்தான். தன்குலத்துக்குரிய ஒழுக்க முறைகள் ஒருசிறுதுமின்றி அறிவுநிலை குன்றி ஈனங்கள் புரிந்து இழிந்து நின்றானதலால் இனத்தவர் அனைவரும் இவனைத் துராசாரன் என்று சுட்டியிகழ்ந்து ஒட்டாதிகந்தார். இவனது மடமையையும், கொடுமையையும் அறிந்து

மறுபுலத்தவரும் பழித்தார். குலங்கெட்டுப்புலங்கெட்டுப்புலை மிக்கிருந்த இவன் நிலைமையைச்சுட்டிச் சூதமுனிவரும் மாதவர் களிடம் ஒருமுறை கூறியுள்ளார். அடியில் வருதல்காண்க.

"இடுதுறியன் நிவற்கிப்பேர் காரணத்தாலிட்டகுறி; இடுக்கண் கண்டால் விடுவதிலன்; எவர்மாட்டும் புரிவதுளான்; இழிதொழிலே மேற்கொண்டுய்ப் பான்; கடுவினுடன் தழல்கலந்த காட்சியெனத்தன்னின் மிகக்கயவராகும் கொடுவினைஞருடன் குழுமித் திருமறையோர்குலமரபின்கொள்கை நீத் தான். (1

யாரொரு விப்பிரனிணங்காப்பாதகரோ டொருதின முண்டிணங்கினேல் பாரமரர்குலக்குரிய பண்பதனில் காலிலொருபங்கு நீக்கும்;
ஓரிரண்டுதினத்தி லதிற்பாதிகெடும்; நாண்மூன்றில் ஒழியுமுக்கால்;
ஈரிரண்டில் முழுதுமறும்; மீப்படுமேல் பூரியரோ டிரண்டிலாளும்" (2)
(சேதுபுராணம்)

என்றபடி இங்ஙனம் திரண்டபாவியாய்ப்புரண்டு திரிந்து இவன் நீதுாக்கி நின்றான். தனக்குஇட்டிருந்த இயற்பெயர் வழங் காதொழிய, ஈனமான அவ்வெதுப்பெயருடன் விளங்கி யாண்டும் நாணமின்றி இவன் நவைபுரிந்து வந்தான். தன் புல்லிய செய லால் உள்ளதெல்லாம் இழந்து எள்ளலுற்றுழந்தான். யாதும் கூசாமல் மேலும்மேலும் நீச வினைகளிலேயே இவன் நிலைத்து நின்றான். கள்ளுண்டுருண்டு ஒருமுறை களவாடி வருங்கால் இவனைக்காவலர் கைப்பற்றிக்கடுத்தடித்தார். இங்ஙனம் பலமுறை அடித்து விடுத்தும் இவன் அதனை விடாமல் ஆதரித்தலைந்தான். உயர்ந்த குலத்தில் பிறந்திருந்தும் உள்ளத்தில் நாணமின்றி யிழி ந்து திரிந்தானாதலால் எவரும் இவனை இகழ்ந்து வெறுத்தார். உயிரோடு உலாவி நின்றாலும் ஒரு மதிப்புமின்றி நடைப்பிணம் போலவே இவன் கடைப்பட்டழிந்தான். "நாண் அகத்து இல் லார் இயக்கம் மரப்பாவை நாணால் உயிர் மருட்டியது போலாம்" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

நாணிழந்தார் எல்லா நலனும் ஒருங்கிழந்து
சேணமைந்த இன்பச் செலவிழந்து—மாணமைந்து
நின்ற வுயிரும் நிலையழிந்து நீணிரயம்
பொன்றி விழுவார் புரண்டு. (தருமதீபிகை)

ஒத்தநாண் இல்லான் உயிர்வாழ்ந் திருந்தாலும்
செத்த சவமே தெரி.

நாணில்லாதார் நடைப்பிணங்களே என்பது இத்னல் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

இழிவான செயல்களை அஞ்சி ஒழித்தலே விழுமிய நாணமாம். அந் நாணம் மக்கட்கு மிக்க சிறப்பினை அருளும். சால்பினைப் பயக்கும். சான்றோர்க்கு அணியாய் நின்று அஃது அழகு செய்யும். பிறருக்கு வந்த வசையைத் தமக்கு வந்ததாகப்பேணி நாணுவோரே பெரியராவர். நாணுடைமை உலகினும் உயர்ந்தது. உயிரினும் சிறந்தது. நாணில்லாதவரிடம் அறம் நில்லாது. நாணென்றிழந்தார் நலமெலாம் அழிந்தார். நாணில்லாதவர் நடைப்பிணம்போல் கடைப்பட்டொழிவார்.

௱உ-வது நாணுடைமை முற்றிற்று.

---

## 103ம் அதிகாரம் குடிசெயல் வகை.

அஃதாவது தாம்பிறந்த குடியைச் சிறந்த நிலைமையில் மக்கள் உயரச்செய்யுந் திறம். தாழ்வின்கண் நாணுதலுடையார்க்கே இவ் ஆள்வினையமைதி நன்கு அமையுமாகலான் நாணுடைமையின் பின் இது வைக்கப்பட்டது. நிலையினும் மேன்மேலுயர்த்து நிறுத்துமியல்பினரான குலமக்கள் தமது குடியைத்தலைமை பெறசெய்யாவழித்தம் தோற்றம் தாழ்வுறுதலோடு வழிவழியாகவும் இழிவுபடுமாதலால் அங்ஙனம் படாவண்ணம் ஊன்றி முயன்று உறுதிபெற நின்று ஆன்றசிறப்பில் அமைந்து விளங்கும் வகை அதனை உயர்த்தவேண்டுமென இதில் உணர்த்துகின்றார்.

1021. நின்று தனஞ்சயனேன் நீள்வினைமுன் செய்வலென்று
குன்றா தெழுந்தான் குமரேசா—என்றும்
கருமஞ் செயவொருவன் கைதூவேன் என்னும்
பெருமையிற் பீடுடைய தில். (க)

இ—ள்.

குமரேசா! வினைசெய் வகையை யாண்டும் கைவிடாமல் தனஞ்சயன் ஏன் மூண்டுநின்றான்? எனின், கருமஞ்செய ஒருவன் கைதூவேன் என்னும் பெருமையின் பீடு உடையது இல் என்க.

இது, கருமம் கைவிடாதார் பெருமையடைவரென்கின்றது.

கருமம் = வினை, காரியம். அஃதாவது பொருள் வருதற் குரிய தொழில்முறை. இங்ஙனம் கொண்டது அதிகாரத்தான் என்க. கருமம் கைதூவாவழிப்பெருமை யெய்தும் என்றதனால் அதனைக்கைவிடின் சிறுமை யுண்டாம் என்பதாயிற்று.

கைதூவேன் = கைவிடேன். இடையே செயல் ஒழியேன் என்றபடி. கைதூவல் = செயலற்று நிற்றல். செயல், ஒழுங்கு, கர முதலியவற்றை யுணர்த்திவரும் "கை" என்னும் சொல் தூவேன் என்பதை விசேடித்து உபசர்க்கமாய் நின்றது. தூவல் என்பது சிதறல், சிந்தல், ஒழிதல்களை யுணர்த்திவரும். தூவாமை = ஒழியாமை.

கைதூவும்படியான இடையூறுகள் பலவந்து கதுவினும் இடைவிடாது துணிந்து நின்று வினைசெய்து நிற்பேன் என்பது "கைதூவேன்" என்றதனால் காண நின்றது. "பரிசில் பரிசிலர்க்கு ஈய, வுரவு வேற் காளையும் கைதூவானே" (புறநானூறு) "கரும மறுத்த கைதூவமையத்து" (பெருங்கதை) இவையீண் டெண்ணற்குரியன. கைதூவேன் எனத் தன்மை யொருமை எதிர்மறைவினைமுற்றாகக்குறித்தது என்னை? எனின், தன்குடியை உயர்த்துதற்குரிய வினையில் மூண்டு நிற்கும் ஓர் குலமகன் எதிர் வதை நோக்கித்தனக்குள்ளேயே வரைவுசெய்துகொண்டு தன் உறுதி தோன்ற இஃது உரை செய்தபடி என்க.

தூவேன் என்னும் துணிவுடைமை "பெருமையிற் பீடுடையது" எனறதனால் அதன் அருமைப்பாடு நன்கறியலாகும்.

"ஈன்ற தாய் தந்தை ஏன்ற மனைமக்கள்
ஆன்ற கூழுக் கலைந்து திரிதரத்
தொன்றல் வந்திக்தச் சோற்று மடத்துக்கோர்
ஊன்றுகோலென வுற்று நின்றனரோ" என்றபடி

தாம பிறந்த குடியை நையும்படி கைவிட்டுத் தம் வயிற்றைமட்டும் வளர்த்துத்திரியும் மடிமக்களுக்குக் கருமம் பேணும் பெருமை யுண்டாகாதாதலால் "கருமம் செயக் கைதூவேன் என்னும் ஒருவன்" என இங்ஙனம் அருமை தோன்ற வுரைத்தார்.

அரிமானூர்தல், அடுகளிறடக்கல், வருபடை விலக்கல், பொருமாறமைதல், என்னும இன்ன வகையான வினைகளை விரைந்து செய்வலென வரைநதெழுவதினும் தான்பிறந்த குடியைச் சிறநதபடியில் வைப்பலெனத்தொழின்மேல் மூண்டு ஒருவன் துணிந்து நிற்பானுயின் அவ்வினையாண்மை அவனுக்கு ஓர் தனி மேன்மையை விளைத்து நிற்குமாதலால் அப் "பெருமையிற் பீடு உடையது இல்" என்றார். பெருமையின் என்பதில் இன் உருபு ஒப்புப்பொருளது பீடு=மேன்மை. பெருமை, பீடு என்பன ஒரு பொருளவாயினும் முன்னது இயற்கையான பண்பு குறித்தது; பின்னது செயற்கையான ஆண்மை நலந்தோன்ற நின்றது.

கருமம் செய், அதனல் உனக்குப் பெருமையுண்டாம் என்றது அதில் அவன் கைதூவாது நின்று கருத்தூன்றற்கென்க.

"ஓங்கு குலம் நைய அதனுட்பிறந்த வீரர் தாங்கல் கடனாகும்" எனச் சீதத்தன் தாங்கி நின்றதுபோல் நல்ல குலமக்கள் வல்ல முயற்சிகளைச்செய்து தம்குடியை நன்கு தாங்கி நிற்பர் என்க.

"நிரம்பாத நீர்யாற் றிடுமணலுள் ஆழ்ந்து
பெருமபார ஆடவர்போற் பெய்பண்டந்தாங்கி
மருங்கொற்றி, மூக்கூன்றித், தாடவழ்ந்து வாங்கி
யுரஞ்செட்டுறுப்பழுகிப் புல்லுண்ணுபொன்றும்" (சிந்தாமணி)

மருங்கொற்றியும், மூக்கூன்றியும், தாள்தவழ்ந்தும் பாரச் சகடத்தைத்தாங்கியுய்க்கும் பகடுக்குக், குடிதாங்கி நிற்கும் பெரும் பொறையாளரை இதில் உவமைகூறி யிருத்தல் காண்க. இதனல் மடுத்தவாயெல்லாம் பகடுபோல் நின்று குலமக்கள் எடுத்த கருமத்தைக் கைவிடாது முடிப்பர் என்பது இனிது புலனும். ஆண்மகனுய்ப்பிறந்தவன் ஆன்ற வினைகளைச்செய்து தான் தோன்

றிய குடியை உயரச்செய்யவேண்டும்; இல்லையாயின் அவன் பிற ப்பு இழிக்கப்படும் என்பது குறிப்பு.

தான் கருதிய வினையை உறுதிபெறச் செய்வனேயன்றி இடையில் நேரும் தடைகளுக்கு அஞ்சி நடுவே விட்டொழியேன் எனத் துணிந்து நிற்கும் பெருமைபோல ஒருவனுக்குச் சிறந்த பெருமையுடையது வேறு யாதும் இல்லை என்பதாம்.

குடி செயல் வகையில் முன்னதாக வினைசெயல் வகையைக் குறித்தது என்னை? எனின், "மடியை மடியா ஒழுகல் குடியைக் குடியாக வேண்டுபவர்" என்றபடி ஒருவன் குடி உயர்ச்சி எய்த வேண்டுமாயின் அவன் யாதுமடியின்றி முயறச்செய்யவேண்டும் ஆதலின் அவ்வுரிமை நோக்கி என்க.

ஒருவன் முயற்சியால் அவன் குடி எப்படி உயர்ச்சி அடையும்? எனின், "உள்ளமுடையான் முயற்சி செய்ய ஒரு நாளே வெள்ளநிதி வீழும்; வினையாததனினில்லை" (சிந்தாமணி) என்ற வண்ணம் முயற்சி செய்யின் பொருள் உண்டாம்; அஃதுண்டாக எல்லா உயர்வுகளும் அதனால் ஒருங்கே உளவாம் ஆதலால் ஒரு வன் குடியுயர்ச்சிக்கு அவன் கருமச் செய்கை அடியுறையாய் நின்றதென்க.

என்ன இன்னல்கள் நேர்ந்தாலும் தான் எடுத்த கருமத்தைக் கடைபோக முடிப்பனேயன்றி இடையே கைவிடேன் என்னும் துணிவுடன் ஒருவன் முயல்வனாயின் அவ் வூக்கப்பாடு அவனுக்கு ஆக்கத்தை விளைக்கும்; அதுவுமன்றி அவனது உள்ளப் பான் மையை வியந்து நல்ல ஆண்டகை என எல்லாரும் புகழ்ந்து போற்றுவர்; ஆகவே பொருளும், புகழும் பயந்து இருமையினும் கருமம் பெருமை தரும் ஆதலால் "பீடு உடையது" என அதன் உண்மையை விளக்கி யாண்டும் அதனைக் கைவிடாது கடைப்பிடித்தொழுகுமபடி இங்ஙனம் உணர்த்தியருளினார்.

அரிய முயற்சிகளைச்செய்து தாம்பிறந்த குடியைப்பேணு வோர் சிறந்து திகழ்வரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை தனஞ்சயன்கண் உணரப்படும்.

## கதை.

தனஞ்சயன் என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டு கட்கு முன்னர்ப் பாண்டி நாட்டிலே சேதுக் கரையிலே மாதுலம் என்னும் ஊரிலிருந்தவன். வணிகர் மரபினன். இவன் பிறந்து மூன்று வயது நிரம்பு முன்னரே இவன் தந்தை இறந்து போயி ஞன். அவன் சிறந்த செல்வம் அடைந்திருந்தும தன் சிற்றின்பச் செயலால் பெரும்பாலும அது சிதைந்து போயது. மிகுந் திருந்ததைத் தாயத்தார் கவர்ந்துகொண்டனர். கொடுமையும் வஞ்சமுமுடைய அந்த ஞாதிகள் இவனைக் கொன்றுவிடவும் குறிக் கொண்டு நின்றனர். தினமும் தெய்வத் திருவருளால் யாதோர் இடையூறுமின்றி இவன் இனிது வளர்ந்து, சிறிது கல்வி பயி ன்று, பருவமடைந்தான். கொடிய வறுமையால் தாய் வருந்தி நிற்பதையும, தன்னுடன் பிறந்த தமக்கைமார் மணமின்றிக் குமரிருந்து மறுகி யிருப்பதையும் கண்டு இவன் உருகி நொந்தான. பின்பு ஊக்கி நின்று அரிதின் முயன்று சிறிது பொருள் சேர்த்து அதனை மூலதனமாகவைத்துக்கொண்டு காலநிலை யோர்ந்து வாணிகம் புரிந்தான். கருமமே கண்ணாயிருந்து உறுதியோடு முயன்று வந்தானாதலால் சின்னாளிற் பெரு நிதி யடைந்தான். அதன்பின் உற்றவர்க்கெல்லாம் உதவிபல செய்து மற்றவரெவர்க்கு மாறுதருளிப் பற்றலர் கண்ணும் பண்பு குன்றாது இவன் அன்பாற்றிவந்தான். கனகவல்லி யென்னும் ஓர் கன்னியை மணந்து அவளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து இல்லறத்தை இனிது நடத்தினன். பெருவாழ்வருளும் பெருமாள் என்று திருமாலை நினைந்து அப் பெருமான்பால் இவன் பெருமால் கொண்டிருந்தான். நல்ல சீல முடையவன். அருளினும் திருவினும் கொடையினும் சிறந்திருந்தானாதலால் இவன் புகழ் உலகமெங்கும் பரவி நின்றது. இவனது ஒழுக்கத்தையும், உள்ளப் பான்மையையும், ஊக்கி முயன்று ஆக்கம் பெருக்கியிருக்கும் ஆண்டன்மையையும் குறித்து அக்காலத்திருந்தவர் பலரும் வியந்து புகழ்ந்தார். ஒருமுறை குறுமுனிபால் இவனைச் சுட்டி அறுமுகப் பரமன் கூறியுள்ளபடியை இதன் அடியில் காண்க.

கனம்படிந்துண்ணும் சேதுக் கரையினிற் கருணைக் குன்றும்
தனஞ்சயன் என்றோர் நாய்கனுளனவன் தந்தை தாயை
மனஞ்செய்து வழுத்தல் செய்வோன் வான்பொரு ளீட்டியோகை
தினஞ்செயும் வெய்யோனூழி சென்றுழிச் செல்ல நின்றான். (க)

பைந்துழாய்ப் படலைமாலை பண்ணவற் கன்பு பூண்டோன்;
இந்திர திருவனாகி வறுமையொன் றில்லானேனும்,
உய்ந்திடவரிய பாவ வறுமையொன் றுடையன்; வேனில்
மைந்துடை யழகனேனும் பிறர்மனை விழைதல் செய்யான் "(உ)
(காசிகாண்டம்).

இன்னவாறு அருந்தவ முனிவரும் இவனது பெருந்தன்மையைப் புகழ்ந்து கூறியுள்ளார். இதனால் இவனது அருமைக் குணங்களும் கருமச் செய்கையும் இனிதறியலாகும். மிடிவாய்ப் பட்டு ஒரு தோற்றமுமின்றி நைந்து கிடந்த குடும்பம் இவன் முயன்று நின்றதால் சிறந்த செல்வமுடையதாய் உயர்ந்து நின்றது. இவன் குடியிலுள்ளவ ரெல்லாரும் இவனை முடிமுதலாக் கொண்டு அடிதொழுது நின்றார். எவ்வளவோ இடையூறுகள் வந்தும் தான் கருதிய கருமத்தைக் கைவிடாது நின்று உறுதி பெற முடித்துத் திருமிகப் பெற்றுத் தன்குடியை உயரச் செய்த இவனது அருமையை யறிந்து மறுபுல மன்னரும் மகிழ்ந்து புகழ்ந்தார். கருமம் செய ஒருவன் கைதூவாது நிற்பனாயின் அவன் பிறந்த குடி மிகவும் சிறந்து திகழும், அவனும் பெருமை யடைவான் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

தலையாகத் தன்குடியைத் தான்காண வேண்டின்
உலையா முயற்சி யுறல்.

குடிசெயல் வகைக்கு அடிமுதலின்னதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1022. தேர்ந்த அருவந்தை செய்வினையால் தன்குடி முன்
கூர்ந்துநின்ற தென்னே குமரேசா—நேர்ந்துநின்ற
ஆள்வினையும் ஆன்ற வறிவு மெனவிரண்டின்
நீள்வினையா னீளுங் குடி. (உ

இ—ள்.

குமரேசா! அறிவும் முயற்சியுமுடைய அருவருக்கையின் குடி ஏன் மிகவும் பெருகிநின்றது? எனின், ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையால் குடி நீளும் என்க.

இது, முயற்சியுடையார் குடி உயர்ச்சியடையுமென்கின்றது. கூர்ந்து நினைவுறுதென்றது முடி மன்னரும் நயந்து நோக்கும்படி அவன் குடி உயர்ந்திருந்தமை கருதி.

நீள்வினை என்றது தொடர்பாக நீண்ட செயலை. இடையறவு படாமல் நெடிது நின்று காரியம் நடைபெறும்படியை இம்மொழி துணர்த்தி நின்றது. நீளும் = உயர்ந்து விளங்கும்.

ஆள்வினை = முயற்சி. ஆளும் வினை என விரியும். ஒருவன் தொழிலை ஆளும் திறம் என்க. ஆள்வார் இல்லையாயின் முயற்சி நில்லாதாதலால் அது, ஆள்வினை என நின்றது. இனி, ஊழ்வினை முதலாக வேறு பலவினைகளும் உள்ளனவாதலால் அவற்றினும் வேறு பாடு தோன்ற மனிதன் செய்யும் முயற்சி "ஆள்வினை" என நின்றதெனினுமாம். ஒரு குடி யுயர்ச்சிக்கு அறிவைக் காட்டிலும் முயற்சி சிறந்த காரணமாகுமாதலால் அவ்வுரிமை தோன்ற அதனை முதலில் வைத்தார். ஆன்ற அறிவு = நிறைந்த அறிவு. ஆன்றல் = நிறைதல். அறிவுக்கு நிறைவாவது உலகிய லோர்தலும், கலைபல தேர்தலும், தன்னிலை யறிதலும், பிறர்நிலை தெரிதலும் முதலிய நலங்கள் யாவும் குறைவற நிறைந்திருத்தல் என்க. என = என்று சொல்லப்பட்ட. இங்ஙனம் விதந்து சுட்டியது அவ் ஆள்வினை அறிவுகளின் தோழமை தோன்ற.

குடி உயர்ச்சிக்கு ஒருவன் முயற்சி மட்டும் இருந்தால் போதாதா? அதனோடு அறிவும் அமைந்திருக்க வேண்டுமோ? எனின், அறிவில்லையாயின் மாடு பாடுபடுவதுபோல் படுவனே யன்றி அப் பாடு பயனோடு பண்பட்டு நயனுறாதாதலால் நயனை நாடிக் கோடற்குரிய அறிவு உறுதியாக வேண்டும் என்க. அவ் அறிவும் புல்லிதாயின் நன்கு செல்லாதாதலால் யாண்டும் சூழ்ந்து செல்லவல்லதாய் நுணுகி நிரம்பி இனிது அமைந்திருக்கவேண் டும் என்பது தோன்ற "ஆன்ற" என அடைபுணர்த்திவைத்தார்.

மேல், ஒருவன் குடியுயரவேண்டுமாயின் அவன் கையொழி

யாது கருமம் செய்ய வேண்டுமென்றார்; இதில், அதனோடு ஆன்ற அறிவும் அமைந்திருக்கவேண்டும் என்கின்றார்.

சிறந்த முயற்சியும், நிறைந்த அறிவுமாகிய இரண்டின் தொடர்பாலமைந்த நீண்ட வினைவழியால் ஒருவன் குடி உயரும் என்பதாம்.

முயற்சியும் அறிவும் கூடி ஒருங்கமைந்திருந்தாலும் அவை தொடர்ந்து நின்று நீண்டு காரியப்படவில்லையாயின் குடி உயர்ந்து தோன்றாதாதலால் குடி நீட்சிக்கு வினை நீட்சி வேண்டும் என்பது தோன்ற "நீள்வினையால் குடி நீளும்" என்றார்.

அறிவும், முயற்சியும் ஒருவன் குடியுயர்ச்சிக்கு உறுதியாம் என்றபடி. ஒருவன் குடி உயர்ந்து திகழவேண்டுமாயின அவன் அறிவோடமைந்து நின்று முயன்று கொள்ளவேண்டும் என்க.

நல்ல குலமென்றும், தீய குலமென்றும்,
சொல்லள வல்லாற் பொருளில்லை;—தொல் சிறப்பின்
ஒண்பொருள் ஒன்றோ தவம் கல்வி ஆள்வினை
என்றிவற்றான் ஆகும் குலம். (நாலடியார்)

பொருள், தவம், கல்வி, முயற்சி என்னும் இவைகளை எது தகவோடு உடையதாக வுள்ளதோ அதுவே உயர்ந்த குலமாம் என உணர்த்திக் குடிக்குப் பொருள் செய்திருக்கும் அழகை இதன்கண் ஊன்றிப் பார்க்க. குடி மேன்மைக்கு அடி மூலமாக அடிகள் கருதி முதலில் நிறுத்தியுள்ள ஆள்வினையை இதில் இறுதியில் வைத்தது எல்லாவற்றிற்கும் ஆதாரமா யமைந்து உறுதி பயந்து நிற்கும் அதன் உயர்வு தோன்ற.

உணர்ச்சியோடு ஒருவன் முயற்சி செய்து வந்தால் அவன் குடி தானகவே உயர்ச்சி யடையும் என்பது கருத்து.

நிரம்பிய அறிவுடையனாய் நின்று ஒருவன் முயன்று வருவனாயின் அவன் குடி உயர்ந்து விளங்கும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அருவந்தைபால் உரைப்படும்.

## கதை

அருவந்தை என்பவன் சோழ நாட்டிலே அம்பர் என்னும் ஊரிலிருந்தவன். யாருக்கும் இவன் பேருபகாரி. நல்ல கல்விமான்.

எத்தகைய நுண் பொருளையும் நன்கு உய்த்துணர்ந்து கொள்வதி லும், பிறருள்ளந்தெளியச் சொல்வதிலும் இவன் மிகவும் வல்ல வன். கண்ணோட்டமுள்ளவன். ஊக்கமே யாண்டும் தனக்கு உறுதியாக நோக்கி நின்றவன். வழிவழியாகச் சிறந்துவந்த நிலையினதாயினும் தன் தந்தை காலத்தில் மிடிவாய்ப்பட்டு இவன் குடிமிகத் தளர்ந்திருந்தது. இவன் பருவமடைந்தவுடனே உறுதி பெற நின்று ஊக்கி முயன்று விளை நிலங்களைப பண் படுத்தி மிகு பொருள் திரட்டினன். நீதி முறையினின்று யாதும் வழுவாமல் நெறியான முயற்சியால் நிதி மிகத் தேடித் தன் மதி யின் வலியால் ஓர் குறு நில மன்னனாய்ப் பின்பு இவன் பெருகி யிருந்தான். இங்ஙனம் சிறந்திருந்தும் பெருமிதம் என்பது சிறிது மின்றிப் பெருந்தன்மையோடமர்ந்து பணிவும் இன் சொல்லு முடையனாய் எவர்க்கும் இவன் இதம்புரிந்து வந்தான். பிறர் வாய் திறந்து சொல்லாமலே குறிப்பறிந்து கொடுத்து வந்தானாதலால் அடுத்து நின்றவ ரெல்லாரும் தமக்கு அருமைத் தந்தை என ஆர்வத்தோடு இவனை ஆதரித்து வந்தார். ஒருநாள் கல்லாடனார் என்னும் புலவர் திலகர் இவன் நகர்க்கு வந்து இரவு தங்கி வைகறையிலெழுந்து இவனது முன்றிலின் வழியே சென் றார். அழுக்குப்படிந்த வுடையினராய் அயர்ந்து செல்கின்ற அவரை இவன் நயந்து கண்டான். கருணைமீக் கொண்டு “இங்கு வரவேண்டும்” என்று வணங்கி யழைத்தான். அவர் மகிழ்ந்து வந்தார். உடனே உடன் கொண்டு சென்று ஓர் சிறந்த ஆதனத் தில் உபசரித்து வைத்து, அவரது புல்லிய வுடையைப் போக்கி விடுத்து, மெல்லிய சருகையிழைத்த விலையுயர்ந்த வெள்ளிய ஆடையை உடுத்தி, விருந்தூட்டி, வேறு சில பொருளும் கொடு த்து, அவரை இவன் சீர்பல செய்து விடுத்தான். இவனது அறிவின் திறத்தையும், அருமைக் குணங்களையும், அறிந்து மகிழ்ந்து, உலக மறிய அவர் இவனைப் புகழ்ந்து போற்றினார். அவர் கூறிய பாடல் ஒன்று அடியில் வருவது காண்க.

“வெள்ளி தோன்றப் புள்ளுக்குரல் இயம்பப்
புலரி விடியற் பகடுபல வாழ்த்தித்
தன்கடைத் தோன்றினும் இலனே! பிறன்கடை

அகன்கண் தடாரிப் பாடுகேட் டருளி
வறனியான் நீங்கல் வேண்டி என்னரை
நீல்நிறச் சிதாஅர் களைந்து
வெளிய துடீஇஎன் பசிகளைந் தோனே,
காவிரி யணையுந் தாழ்நீர்ப் படப்பை
நெல்விளை கழனி அம்பர் கிழவோன்
நல்லருவந்தை வாழியர்; புல்லிய
வேங்கட விறல்வரைப் பட்ட
ஓங்கல் வானத் துறையினும் பலவே'' (கல்லாடனார்)

வறன் = வறுமை. சிதார் = சிதைந்ததுணி; கந்தைஎன்க. வெளியது = வெள்ளியஆடை. மேற்குறித்த புலவரை இவன் ஆதரித்திருக்கும் அருமையும், அவ்வுரிமையை நினைந்து அவர் போற்றியிருக்கும் தகுதியும், இதனால் இனிது அறியலாகும். "யான்வறன் நீங்கல் வேண்டி என் அரைச் சிதாஅர் களைந்து வெளியது உடீஇ, அருவந்தை பசிகளைந்தான்; அதனால் வேங்கட மலைமேல் பெய்த மழைத்துளிகள் எவ்வளவோ அவ்வளவு நாளினும் அதிகமாக அவன் இனிது வாழவேண்டும்'' என அவர் இவனை வாழ்த்தியிருக்கும் அன்பு நிலை ஆழ்ந்து நோக்கத்தக்கது. இன்னணம் அறிஞர் பலரும் புகழ்ந்து போற்ற மன்னிய புகழோடு இவன் மருவி வாழ்ந்தான். கல்வி கேள்வி அறிவு கருணை கொடை முதலிய உயர்நலங்கள் யாவும் இவன்பால் உவந்து குடிகொண்டிருந்தன.

"கற்ற நாவினன்; கேட்ட செவியினன்;
முற்ற வுணர்ந்த மூதறி வாளன்;
நாகரிக நாட்டத் தாரியன் அருவந்தை;

வருநற் கங்கை வடதிசைப் பெருமையும்,
தென்திசைச் சிறுமையு நீக்கிய குறுமுனி
குண்டிகைப் பழம்புனற் காவிரிப் பெரும்பதி
அம்பர்க் கதி பதி;

நாடே பிறர்நாட்டிற் குவமை; யாறே
காலமறிந்துதவும் காவிரி தானே;
ஆடவர் திலகன், அம்பர் மன்னன்;
நீடிசைத் தலைவன்; அருவந்தை.'' திவாகரம்).

இவனது சீரும் பேரும் ஊரும் ஆறும் இதில் புகழ்ந்து கூறப்பட்டுள்ளமை காண்க. அரசர் முதலாக அருந்தவர்பலரும் இங்ஙனம் புகழ்ந்து போற்றத்திருவோடு இவன் திகழ்ந்து விளங்கினான். தன்குடி மிகத்தளர்ந்திருந்தும் தனது ஆள்வினை அறிவுகளால் அதனை நீளச்செய்து தான் பிறந்த அந்நாட்டிற்கே சிறந்த அதிபதியாய் இவன் விளங்கி நின்றதையறிந்து மறுபுலத்தவரும் மகிழ்ந்து புகழ்ந்தார். ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையால் ஒருவன் குடிநீளும் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

"கருவந்த உயிர்களெல்லாம் கருதிநின்று தொழுதேத்தத்
திருவந்து தன்குடியில் திகழ்ந்திருந்து மகிழ் பூப்பத்
தருவந்த கொடைக்காத்துத்தண்ணளியா ரெம்மண்ணல்
அருவந்தை அம்பர்பதி அமரர்பதி யெனவிருந்தான்" (அம்பரீயம்)

தன்குடியை நீளச்செய்து முடிமன்னன்போல் இவன் படி தொழ நின்றமை இதன்கண்ணும் குறிக்கப்பட்டிருத்தல் காண்க.

**ஊக்கி முயலும் உணர்வுடையான் ஒண்குடிமேல்**
**நோக்கி வளரு நனித்து.**

அறிந்து முயன்றால் குடி உயர்ந்து விளங்குமென்பது இதனால் கூறப்பட்டது.

---

1023. நாடிக் குடிதாங்கி நம்பியேன் தெய்வவருள்
கூடி யுயர்ந்தான் குமரேசா—நீடிக்
குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும். (௩)

இ—ள்.

**குமரேசா!** தான் பிறந்தகுடி உயரும்படி முயன்றுநின்ற குடிதாங்கி ஏன் தெய்வ அருளை எளிதாக எய்தி நின்றான்? எனின், குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும் என்க.

இது, குடிசெய்வார்க்குத் தெய்வம் துணை செய்யும் என்கின்றது.

செய்வல்=செய்வேன். அல்விகுதி ஒருமைத்தன்மையை உணர்த்தி நின்றது. "அல் அன் என் ஏன் ஆமிவ் விகுதிகள், தன்மை யொருமைக் குரிய வாகும்."

குடி செய்வல் என்னும் ஒருவன் என்றது தன்குடியை உயரச்செய்வேன் என்னும் உறுதியோடு கருதி முயலும் ஒருவன் என்றபடி. முந்துறும் என்றது குடி செய்யும் அவனுக்குத்துணை செய்யும்படி முன்னதாக முனைந்து நிற்கும் என்பதாம்.

மடி= ஆடை. மடித்துஉடுத்தும் இயல்பினதாதலால் உடை மடி என நின்றது. "நறுமடி செறிந்த அறுவை வீதியும்" (சிலப்பதிகாரம்) "புதுநூற் பூந்துகில் அருமடி உடீஇ, கொட்டு மடி விரித்த பட்டுடைத்தானை" (பெருங்கதை) "குறியவும் நெடியவும் மடி தரூஉவிரித்து" (மதுரைக்காஞ்சி) "மடி நல் கூர்ந்த மாக்கள் யாவரும்" (மணிமேகலை) இவற்றுள் மடி உணர்த்தி நிற்கும் பொருளையறிக. தற்று = இறுகவுடுத்திக்கொண்டு. தற்றுதல்= இறுக்கிக்கட்டுதல்.

மேல், முயற்சியால் குடியுயர்ச்சியுறும் என்றார்; இதில், அங்ஙனம் முனைந்து முயல்வார்க்குத் தெய்வம் முன்னின்று விரைந்து துணைசெய்யும் என்கின்றார்.

தான் பிறந்த குடியைச் சிறந்த நிலையில் உயரச்செய்வேன் என்னும் உறுதியோடு நின்று ஒருவன் முயல்வானாயின் அவனுக்குத் தெய்வம் தனது ஆடையை இறுக்கிக் கட்டிக்கொண்டு முன்னிற்கும் என்பதாம்.

ஆள்வினையும் அறிவுமுடையவனாய் ஒருவன் மூண்டு நின்றால் அவன் குடி தானாகவே நீண்டு விளங்கும் என முன் உரைத்ததை நினைத்து, எவ்வளவுதான் முயன்றாலும் "பெருமுழங்கு திரை வரைகள் நீந்திப் பிணியுறினும், திருமுயங்கல் இல்லையெனின் இல்லை பொருளீட்டம்" (சிந்தாமணி) என்றபடி தெய்வம் துணை செய்யாவழிப்பயனெய்தா தன்றே! என்று சிலர் எதிர்ந்து நோக்க அவரை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்துகொள்க. குடும்பம பேணுங் குலமகனுக்குத் தெய்வம் முதன்மையாகி நின்று உதவிசெய்யும் என்றபடி.

என் குடியை நான் உயரச்செய்வேன் என்னும் உறுதியோடு ஒருவன் கருதி முயல்வனாயின் அம்முயற்சி திருவினை ஆக்கும்; ஆகவே எல்லா நலங்களும் அதனால் ஒருங்கே எய்தும்; எய்தவே தெய்வ அருள் கைவந்தபடி அவன் குடி மிகச்சிறந்து தோன்றும் என்க.

குடிசெய்வல் என்னும் ஒருவனுக்குத் தெய்வம் துணை செய்யும் என்றது என்னை? எனின், அவன் உள்ளக்கருத்து நல்லது ஆதலால் நன்மையே தனக்கு வடிவமாகவுள்ள தெய்வம் அத்தன்மைக்கிரங்கித் தான் முந்துற்று நின்று எண்ணிய யாவும் அவன் எளிதிலெய்தும்படி அருள்புரியும் என்க.

"மானிட னொருவன் தனக்கருஞ் செல்வம் வாய்க்கவென் றனுதின முயற்சி
தானுஞற்றுவனேல் கடவுளும் அதனைத் தந்தளிக்குறும்; அதாலன்றே
ஆனபேரறிஞர் திருவினை முயற்சி யாக்கும் அம் முயற்சி யில்லாமை
யீனமார் இன்மை புகுத்திடு மாலென் றியாருநன் குணர்தர நவில்வார்"
(குசேலோபாக்கியானம்)

முயல்வார்க்குத் தெய்வம் முந்துற்றுதவுமென அடிகள் இங்கு அருளியுள்ளதைத் தழுவி இது வந்திருத்தல் காண்க.

தனியே முந்துறும் என்னாது "மடிதற்று முந்துறும்" என்ற இதனால் அத்தெய்வம் அவனுக்குத் துணை புரிதற்கு விரைந்து நிற்கும் நிலை இனிதறியலாகும்.

ஒரு காரியத்தை முடித்தற்கு ஒருவன் முனைந்தெழுங்கால் தனது ஆடையை இறுக்கிக் கட்டிக்கொண்டு விரைந்து செல்வனாதலால் ஈண்டு வினைமேல் மூண்டு நிற்கும் தெய்வத்தின் மேல் அச்செயல் நிலையை ஏற்றி "மடிதற்றுத் தான் முந்துறும்" என இங்ஙனம் உரைத்தருளினார். முந்துறுதலை மடிதற்று என்பதனால் விசேடித்து அடிகள் இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஆய்ந்து பார்க்க.

தான் பிறந்த குடியைச் சிறந்தபடியிலாக்க முயன்று நிற்பானுக்குத் தெய்வம் முன்னின்று விரைந்து அருள் செய்யும் என்பது கருத்து. இங்ஙனம் தெய்வச்செயலைக்குறித்தது குடி செயல் வகையில் மக்களுக்கு எழுச்சி தோன்ற என்க.

தன்குடி யுயரவேண்டுமென்று சிறியோடு ஒருவன் கருதி முயல்வனாயின் அவன் கருத்து இனிது நிறைவேறும் என்பது குறிப்பு.

குடி செய்வார்க்குத்தெய்வம் துணைசெய்யும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குடிதாங்கி முதலியார்பால் உணரப்படும்.

## கதை

குடிதாங்கிமுதலியார் என்பவர் தொண்டைமண்டலத்திலே கிளிந்தை என்னும் ஊரிலிருந்தவர். இவர் இரக்கமும் ஊக்கமும் சிகையுமுடையவர். நிலங்களைப்பண்படுத்தி அவற்றிலிருந்து விளை பொருள்களை யுண்டாக்குவதில் இவர் மிகவும் வல்லவர். தமது மூதாதை காலத்தில் உயர்ந்திருந்த குடி பின்பு பொருள் வளங்குன்றித் தளர்ந்து நின்றதாதலால் அதனை வளம்பெறச் செய்யவேண்டுமென்று உளந்துணிந்து நின்று இரவும் பகலும் இவர் முயன்றுவந்தார். ஒருநாள் தம்வயலில் இவர் உரமிட்டுக் கொண்டிருக்கும் பொழுது அவ்வழியே வந்த முதியனொருவணிக னொருவன் அருகேநெருங்கி "ஐயா! எருவிடவில்லையானால் பயிர் என்ன! விளையாதா?" என்றான். இவர் வியந்து நோக்கி உழவு முறைகளுள் சிலவற்றை அக்கிழவனிடம் உளமகிழ்வோடுஉரைத்தார். "உயிர்க்கு உணவுபோல் பயிர்க்கு எரு; எரு மணமில்லாத பயிரும், நறு மணமில்லாத மலரும் ஒரு நலமும் பெறா; குப்பை உயர்ந்தால் குடி உயரும்; எருச்செய்வது இனஞ்செய்யாது;" என இன்னவாறு சிலஉழவின் உளவுகளை அவன் உளங்கொள மொழிந்தார். இவரது அறிவமைதிகளையும் செயல்நலங்களையும் நோக்கி அவன் மிக மகிழ்ந்து சென்றான். தம் கருமமே கண்ணாய் நின்று இவர் முயன்று வந்தாராதலால் எவரும் வியந்து கொள்ளும்படி சிறந்த செல்வங்களெல்லாம் இவர்பால் விரைந்து வந்தடைந்தன. அங்ஙனம் அடைந்தவற்றை இறுகப் பொத்தி வையாமல் இரவலர்க்கெல்லாம் உள முவந்து கொடுத்தார். அதனால் நாளும் நாளும் பலர் இவரை நச்சி வந்தார். "அருமையும் பெருமையும் அடுத்தவர் எளிமையும், உரிமையும் பழமையும்

உண்மையும் அறிந்தோன், வரையாதெவர்க்கும் வழங்கு பொன் மேகம், கரை கடந்தொழுகும் கருணைத்தடங்கடல், அன்புகனிந்த இன்பக் கொழுங்கனி, பெருமைக்களஞ்சியம் தருமக் கொள்கலம், ஆதுலர் திரவியம் வேதியர் தாபரம், கற்றவர் கண்மணி உற்றவர் பிராணன், ஏற்றவர் கலிநோய் மாற்றுசஞ்சீவி, தந்திரவிவேக மந்திரயூகி" என்பன போலப் பலப்பல துதிகள் இவர் பாடப் பெற்றார். இங்ஙனம் ஈதலியல்பினால் இசை திசை பரப்பி இனிது வாழ்ந்து வருங்கால் இவர் வயலில் விளைந்த செந்நெல்களில் ஒருமுறை பொன் திரள்கள் பொதிந்திருந்தன. அவற்றையும் நெல்லைப் போலவே குவித்து வைத்து எல்லார்க்கும் அள்ளித்தந்தார். இவரது செல்வப்பெருக்கையும் வள்ளற்குணத்தையும் வியந்து முடிமன்னரும் புகழ்ந்தார். தளர்ந்திருந்தகுடியை உலகமெல்லாம் புகழ்ந்துகொள்ளும்படி இவர் தழைத்து விளக்கி நின்றாராதலால் **குடிதாங்கி** என அனைவரும் இவரை அழைத்து வந்தார். இவரது இயற்பெயர் **சம்புநாதன்** என்பர். தாம்பிறந்த குடியைச் சிறந்த நிலையில் செய்யவேண்டுமென்று முயன்று நின்ற இவர்க்கு தெய்வமும் முன்னின்று துணை செய்ததாதலால் இவரது செய்யில் பொன்னும் விளைந்தது. அன்றுமுதல் இவர் ஊர் **பொன்விளைந்த களத்தூர்** என்று போற்றப்பெற்றது. "குடிசெய்வலென்னும் ஒருவற்குத் தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

> "நன்றாய் விளைந்ததை வேதியர்க் கீந்தந்த நன்மையினால்
> பொன்றான் விளைந்திட நெற்போலவே யதைப்போரடித்துக்
> குன்றாக் குவித்ததை நெற்பரிமாற்றங் கொடுத்தளித்தான்
> மன்றார் களந்தைக் குடிதாங்கியுந்தொண்டை மண்டலமே"
>
> (தொண்டைமண்டலசதகம்)

> "பொன்னெல்லை யெல்லாம் பொதிப்பொதியாப் பூசுரர்க்குச்
> செந்நெல்லே போலச் சிறந்தளித்தான்—பன்னகத்தின்
> சீரார் மணியையிலை செய்யானும், செய்யகளத்
> தூரானும் செய்கருமம் ஒன்று."

மேற்குறித்த இவர் சரித வுண்மையும், தெய்வமுன்னின்று துணை செய்த தன்மையும் இவற்றின் கண்ணும் குறிக்கப் பட்டுள்ளமை காண்க.

குடிதாங்கி நீளும் குலமகனைத் தெய்வம்
அடிதாங்கி யாளும் அமர்ந்து.

குடிசெய்ய முயலின் தெய்வம் உடனின்று துணை செய்யும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1024. சேர்ந்து முயன்ற சிவசன்மா தன்குடியைக்
கூர்ந்துகண்டான் என்னே குமரேசா—தேர்ந்துநின்று
சூழாமற் றானே முடிவெய்தும் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு. (௪)

இ—ள்.

குமரேசா! தன்குடியுயர்வினைக்கருதி முயன்ற சிவசன்மாவுக்கு ஏன் எல்லாநலங்களும் எளிதாக இனிது முடிந்தன? எனின், தம் குடியைத்தாழாதுஉஞற்றுபவர்க்கு; சூழாமல் தானே முடிவு எய்தும் என்க.

இது, குடிசெய்வார் கருதியது எளிதில் முடிவெய்தும் மென்கின்றது.

தாம் கருதிய காரியம் கைகூட வேண்டுமாயின் முன்னதாக நன்கு ஆராய்ந்து கொண்டே எவரும் முயல்வர் ஆதலால் முடிவுக்குச் சூழ்ச்சிமூலமென்பது தோன்ற அது முந்துற நின்றது. இங்ஙனம் காரியசித்திக்கு மூலகாரணமாயுள்ள சூழ்தலினை ஆழமாக ஆளவேண்டாமலே தான் கருதிய யாவும் குடிசெய்வார்க்கு எளிதாக வந்து முடிவெய்தும் என்று இதனால் அவரது நிலையுடைமையும், நல்வினைப் பயனும் நன்கு புலனும்.

தம் குடியைத்தாழாது உஞற்றுபவர் = தமது குடியைத் தாழ விடாதபடி தழுவி முயல்பவர். அஃதாவது தாம்பிறந்த குடியை உயர்ந்த நிலையில் செய்ய முயன்று நிற்பவர் என்க.

இனி, தாழாது என்பதை உஞற்றுதலுக்கு அடையாக்கிச் சோம்பலால் தாழ்ந்திராமல் தம் குடிக்குரிய வினையை விரைந்து முயல்பவர் எனினுமாம். இப் பொருளில் குடி ஆகுபெயர்.

உஞற்றல் = முயலல். உஞற்றுபவர்க்கு எய்தும் என்றதனால் அங்ஙனம் உஞற்றாதார்க்கு யாதும் எய்தாதென்பதாயிற்று. எய்தும் என்னும் வினைக்கு ஏற்ற செயப்படுபொருளை வருவித்துக் கொள்க. அஃதாவது உஞற்றுபவர் கருதி நிற்பது. அக்கருத்தாவது தம் குடியுயர்ச்சிக்கு வேண்டிய உறுதி நலம.

மேல், குடிசெய்வார்க்குத் தெய்வம்துணைசெய்யும் என்றார்; இதில், அவர்க்கு யாவும் எளிதில் முடிவெய்தும் என்கின்றார்.

தாம்பிறந்த குடியைத் தாழவிடாதபடி தாங்கிமுயல்வார்க்கு, ஊன்றி ஆராயாமலே எல்லா நலங்களும் எளிதில் முடிவுறும் என்பதாம.

தன்குடி உயரும்படி ஒருவன் கருதி முயல்வனாயின் அவனுக்குத் தெய்வம் முன்னின்று துணைசெய்யும் என முன்னர் உரை செய்ததை நினைந்து அங்ஙனம் செய்யுமாயின், அவன் நெடிது சூழ்ந்து பெரிதும் வருநத வேண்டாமே; அவன் கருதிய உறுதிகள் யாவும் தாமாகவே எளிதில வந்து கைகூடும் அன்றோ? என்று வினவுவார்க்கு விடை கொடுத்தபடியாக இப்பாட்டு வடிவெடுதது வந்துள்ளமை காண்க.

பிறந்தகுடி இழிந்து படலாகாதே; அதுபடின் நாம் இருந்ததனால் ஒரு பயனும் இல்லையே; என்று உருகி நின்று உள்ளந் துணிந்து நல்ல குலமக்கள் ஊன்றி முயன்று வருவராயின் "உள்ளியது எய்தல் எளிது" என்றபடி அவர் கருதிய பலனை எளிதிலடைவர் ஆதலால் "தம் குடியைத்தாழாது உஞற்றுபவர்க்குச் சூழாமல் தானே முடிவெய்தும்" என்றார். இங்ஙனம் எய்துதற்குக் காரணம, கடமைமேல் மூண்டு நிற்கும் அவர் கருத்து நல்லதாகலான் என்க. மனந்தூயராய் நின்று நல்வினை புரிவார்க்கு எல்லா நலங்களும் எளிதிலெய்தும் என்பதாம்.

"நல்லவை புரியுமாந்தர் நாநதகம் பிழைத்து வீழார்;
அல்லவை புரியுமாந்தர்க்கு அத்திரம் ஒன்றும் வாயா;
வெல்வதோகுணத்தின்மிக்கார் வெற்றிலை விடினும்வேலாம்;
இல்லையே வென்றி நீமை யிடங்கொண்ட மனத்தினோர்க்கே"
(சிந்தாமணி)

மனநலமுடையவர் பெரிது முயலாவிடினும் எல்லாக்காரியங்களும் அவர்க்கு எளிதில் முடியும்; தீமையாளர் கடிது சூழ்ந்து கொடிது முயன்றாலும் அவர்க்கு யாதும் பலியா; என இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

தன் குடியை உயர்த்த ஒருவன் முயல்வானாயின் அவன் கருதியனவெல்லாம் எளிதில் முடிவுறும் என்பது கருத்து.

குடிசெயல் வகையில் மக்கள் தளராது அடியிடும்படி அடிகள் உணர்த்தியிருக்கும் அழகை இதில் ஊன்றிப்பார்க்க.

மடி புகாமல் நின்று தன் குடியைப்பேணி ஒருவன் முயன்று வருவானாயின் அவன் நினைந்தனவெல்லாம் எளிதில் நிறைவேறும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சிவசன்மாபால் உணரப்படும்.

## கதை

சிவசன்மா என்பவன் இற்றைக்கு ஐயாயிர ஆண்டுகட்கு முன்னர் வடமதுரையிலிருந்த தருமசன்மன் என்னும் வேதியனுடைய அருமைத்திருமகன். இவன் கலைகள் பல பயின்று பருவமெய்தியவுடன் தான் பிறந்தகுடி வளங்குறைந்து தளர்ந்திருத்தலை நினைந்து மிகவும் வருந்தி நாணினான். அதனைச் சிறந்த நிலையில் செய்யவேண்டுமென்று விழைந்தெழுந்து பலவகையினும் இவன் முனைந்து முயன்றான். வெறுமையாய்க் கிடந்த வறு நிலங்களை எளிய முறையில் தனக்கு உரிமைசெய்துகொண்டு ஏருநிலையேற்றிப் பருவந் தவறாமல் இனிது பாதுகாத்து நன்று பண்படுத்திப் பயிரிட்டு வந்தான். உரிமையான வேலையாட்களை ஏவி இரவும் பகலும் கண்ணூன்றி இவன் உழற்றி வந்தானாதலால் எண்ணியபடியே பெருவளங்களை எய்தி ஒண்மை நிறைந்த செல்வனாய் உயர்ந்து விளங்கினான். அதன்பின் தருமவதி என்னும் கன்னியை மணந்து அரியபோகங்களை நுகர்ந்து இனியமக்களைப் பெற்றுப் பெருகிய ஒக்கலோடு இவன் பேர்பெற்று நின்றான். தன் குடியைப் பேணி நிற்கும் இவனது நிலைமையையும் தலைமையையும் அறிந்து அந்நாட்டு மன்னனும் அன்புரிமை கூர்ந்து இவன்பால் நண்புற்றிருந்தான். கல்வி அறிவிலும் செல்வ நிலையிலும்

சிறந்து யார் வந்தாலும் இல்லை யென்னுமல் ஈந்துவந்தானாதலால் இவன் இசை திசையெங்கும் பரந்து செறிந்து நின்றது. இவனது திருந்திய பண்பினை வியந்து அருந்தவர்களும் புகழ்ந்தார். அகத்திய முனிவரும் இவனைக் குறித்து ஒருமுறை உவந்து உரைத்துள்ளார். அடியில் வருதல் காண்க.

"மல்லல்வளஞ் சிறந்தோங்கு வடமதுரைப் பதியினிலோர் மறைவலாளன், எல்லையில் நற் றவமாற்றி யினிதீன்ற சிவசன்மா என்போன் மேனுளை, தொல்லை மறைப் பொருள் தேர்ந்து துகளறு சீர்ப் பலகலையின் துறைகள் போகிக், கல்வியெனும பெருங் கடலின் கரைகடந்து நிதி யீட்டிக் களித்தானன்றே. (க)

இயற்றரிய பலவினையும் யாவு முயன்றரு நிதியம் எனைத்து மீட்டி
உயிர்க்குயிரா மழலைமொழிக் கிண்கிணிக்காற் சிறார்களை யுவப்பினீன்று,
பயிரப்புறமிற் கிழத்தியொடும் அளகையர்கோன் எனப்போகம பலவும
துய்த்து, வியப்பொடுதன் புதல்வர் பெற வீட்டு நெறி யனைத்தினையும்
விழைவினீத்தான்." (காசி காண்டம்).

இன்னவாறு மாதவர்களும் புகழ்ந்துபேச இவன் உயர்ந்து வாழ்ந்தான். தன் குடி தாழ்ந்து படாதபடி தகவோடு முயன்று வந்த இவன் நினைந்தபடியெல்லாம் எளிதாக நிறைவேறி வந்தனவாதலால் எவரும் நிதிபதி யென்னும்படி அதிபதியாகி நின்றான். இறுதியில் மறுமையிலும் இவன் பெருமைமிகப் பெற்றான். "சூழாமல் தானே முடிவெய்தும் தன் குடியைத்தாழாது உஞற்றுபவர்க்கு" எனனும உண்மையை உலகம் இவன்பாலுணர்ந்து நின்றது.

முன்னியன யாவு முடியும் குடியுயர
மன்னி முயலு மகற்கு

குடி செய்வார்க்கு எதுவும் எளிதில் முடிவெய்து மென்பது இதனால் கூறப்பட்டது.

---

1025. மண்டுபுகழ் அண்ணு மலையானைச் சூழ்ந்துலகம்
கொண்டுநின்ற தென்னே குமரேசா—கண்டுணர்ந்து
குற்ற மிலனுய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு. (ரு)

இ—ள்.

குமரேசா! குற்றமின்றி நின்ற அண்ணாமலையானை உலகத்தார் ஏன் உவந்து சுற்றி நின்றார்? எனின், குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானை உலகு சுற்றமாச் சுற்றும் என்க.

இது, குடிசெய்வானுக்கு உலக முழுதும் உறவா மென்கின்றது.

உலகம் சூழ்ந்து நின்றதென்றது உலகத்தார் பலரும் அவனைப் புடைசூழ்ந்து போற்றி நின்றமை கருதி.

உலகு என்றது உயிர்களை. சுற்றும் என்ற வினையால் இஃது உய்த்துணர நின்றது. என்னை? சுற்றம் தன்மை உலகத்திற்கு இல்லை; அதிலுள்ள உயிர்களுக்கு உண்டு ஆதலால் அதனைக்கொண்டு என்க. உலகு சுற்றமாச் சுற்றும் என்றது மக்கள் எல்லாரும் உறவாக நினைந்து அவனை உவந்து சூழுவர் என்றபடி.

குற்றம் என்றது வஞ்சம் பொய் களவு சூது முதலிய வெஞ்செயல்களை. இவ்வகை வழுக்களையுடையான் தன் குடியினை எவ்வளவு உயரச்செய்து வந்தாலும் நல்லோர் அவனை உவந்து விரும்பார் என்க. குற்றம் இலனாயினும் குடிசெய்து வாழாது மடிகொண்டிருப்பின் அவனை எவரும் நயந்துகொள்ளாராதலால் அவ் இன்மையோடு அவ்வாழ்வின் தன்மையையும் இங்ஙனம் இணைத்துணர்த்தினார்.

நன்மையான ஓர் அரிய காரியத்தைச் செய்கிறவன் முன்னதாகத் தான் நல்ல தன்மையுடையனா யமைந்திருக்கவேண்டும்; இல்லையாயின், அவன் பாடு பீடு பெறாதாதலால் அது பீடு பெறும்படி இவ்வண்ணம் நாடியருளினார்.

மேல், தன்குடியுயரும்படி முயலுகின்றவனுக்கு உயர் நலங்களெல்லாம் எளிதிலெய்தும் என்றார்; இதில், அவனை அனைவரும் உறவாகக்கருதி உவந்து சூழ்வர் என்கின்றார்.

தான் குற்றமிலனாய் நின்று தன் குடியை உயரச் செய்தொழுகுவானை இவ்வுலகத்தார் சுற்றமாகச் சுற்றி நிற்பர் என்பதாம்.

பெரிது முயன்று தன்குடியை உயரச்செய்து ஒருவன் உயர்ந்து நின்றாலும் அவன் குற்றமுடையனாயின் உலகம் அவனைச் சுற்றமாக விரும்பாது; அது, சுற்றமாகச்சுற்றுதற்கு அவன் குற்றமில்லாதவனாயிருக்கவேண்டும் ஆதலால் அதனை முதலில் குறித்துணர்த்தினார். குடிசெய்து வாழ்வான் இப் படிமுழுவதையும் தனக்கு இனிய உறவாக உடையனாவான் என்பார் உலகு அவனைச் "சுற்றமாச் சுற்றும்" என்றார்.

இன்சொல் இரக்கம் ஈகை முதலிய குண நலங்களையுடையனாய் இனிதமைந்து நின்று தன் குடியினை ஒருவன் பேணி வருவானாயின் எல்லாரும் அவன் அடியினையடைந்து அகமகிழ்ந்து நிற்பர் என்பது கருத்து.

எல்லாரும் இங்ஙனம் சுற்றுதற்குக்காரணம் குணமும் செயலுமுடைய அந்நல்லானை அடுத்துத் தாமும் நலம் பெறலாம் என்னும் நயப்பால் என்க.

தம் குடிசெயல் வகையில் தமக்குண்டாகும் வரும்படியை எடுத்துக்காட்டி மக்கள் அதில் விழைந்து புகும் வண்ணம் அடிகள் இதில் உணர்த்தியிருக்கும் அருமையை யூன்றிப்பார்க்க.

குணமுடையனாய் அமர்ந்து தன் குடியினை உயரச்செய்து நின்ற ஒருவனைப் பலரும் புகழ்ந்து போற்றி உவந்து சூழ்ந்து நிற்றலைகண்டு சிலர் வியந்துவந்து அடிகளிடம் வினவ அதற்கு விடைகொடுத்தபடியாக இப்பாட்டு உருவெடுத்து வந்துள்ளமை காண்க.

ஒருவன் தலைவனாகி இவ்வுலகில் சிறந்து விளங்கவேண்டுமாயின் அவன் குடியிலுள்ளாரனைவரையும் இனிது பாதுகாத்து இதஞ்செய்ய வேண்டுமென்பது குறிப்பு.

"இன்னார், இனையர், எமர்பிறர், என்னுஞ்சொல்
என்னும் இலராம் இயல்பினால்—துன்னித்
தொலைமக்கள் துன்பந்தீர்ப் பாரேயார் மாட்டும்
தலைமக்க ளாகற்பாலார்." (நாலடியார்)

இஃது ஈண்டெண்ணத்தக்கது. குலஞ்செய்து வாழ்வாரைத்

தலைவராக நினைந்து இந்நிலம் வலஞ்செய்து சூழும் ஆதலால் அவ் வாழ்வினை மக்கள் மருவி வாழவேண்டும் என்பது கருத்து.

தான் நெறியுடையனாய் நின்று தன் குடியை உயரச்செய் வானை எல்லாரும் உறவாகச்சூழ்ந்து உவந்து போற்றுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அண்ணாமலை ரெட்டி யார்பால் உணரப்படும்.

## கதை

அண்ணாமலை ரெட்டியார் என்பவர் இற்றைக்கு முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் நடு நாட்டிலே துறைமங்கலம் என்னும் நகரிலிருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் இலிங்கா ரெட்டி யார். ஒரு சிறு நிலப் பகுதியை ஆண்டுவந்தாராதலால் இவர் குறுநில மன்னரென நின்றார். தமது தாய்மொழி தெலுங்கா யிருந்தாலும் தமிழ் மொழியில் இவர் நல்ல பயிற்சி எய்தியிருந் தார். கல்வியறிவிலும் செல்வ நிலையிலும் உயர்ந்திருந்ததோடு சீலத்திலும் மிகச்சிறந்து நின்றார். யாவர்மாட்டும் தண்ணளியுடை யவர். வண்மையாளர். எண்ணிய கருமங்களை எண்ணியாங்கு முடிக்கும் திண்ணிய நிலையினர். வழிவழியாகச் சிறந்துவந்ததே யாயினும் தமது தந்தை காலத்தில் குடும்பம் சிறிது தளர்ந்திருந் ததாதலால் அதனை வளம்படுத்தவேண்டி இவர் முனைந்து துணிந் து முயன்று வந்தார். விளைபுலங்களையும் குடிகளையும் விழைந்து பேணி இதம் புரிந்து வந்தாராதலால் மிகுந்த வருவாய்களை இவர் அடைந்து திகழ்ந்தார். இங்ஙனம் விளங்கி வருங்கால் சிவப்பிர காசர் ஒருநாள் இவர் நகர்க்கு வந்தார். இயற்கையாகவே புலவர் கள்பால் நன்கு மதிப்பும் நயந்த பண்புமுடைய இவர் அவ் அறி ஞரையடைந்து ஆர்வமீக்கூர்ந்து அடிபணிந்து தம்முடன் தங்கி யிருக்கும்படி தாழ்ந்து வேண்டினார். அப்புலவர் பெருமான் இவ ரது குண நலங்களையறிந்து உள மிக மகிழ்ந்து அவ்வாறே சில நாள் உடனமர்ந்திருந்தார். அவரது புலமையின் பக்குவத்தை நுகர்ந்து பெருமகிழ்ச்சியடைந்து அவர் இனிதிருந்து வருதற்குத் தனி யாக ஓர் திருமாளிகையமைத்து அதில் அவரை எழுந்தருளச் செய்து அருகமர்ந்திருந்து அறிவுரைகளைக்கேட்டு அகமிகவுருகி

இவர் ஆதரித்து வந்தார். தமது ஆளுகையிலமைந்துள்ள திருவெங்கனூர் என்னும்பதியிலே இறைவனுக்கு ஓர் ஆலயமமைத்து அரிய பணிகள் பல இயர் ஆற்றிநின்றார். இங்ஙனம் ஈகை இரக்கம் இன்சொல் முதலிய குணநலங்களமைந்து தம் குடியினை யுயர்த்திப் படியினையும் இனிது பாதுகாத்து வந்தார் ஆதலால் "வல்லகோலதிபதி" என்று உலகமெல்லாம் உவந்து சொல்ல இவர் உயர்ந்து விளங்கினார். தலைமையோடு நின்று குலநலம் பேணி நிலவிவந்த இவரது அருமையையறிந்து மறுபுலத்தவரும் இவரை உறவுகொண்டு உவந்து சூழ்ந்திருந்தார். குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானை எவரும் சுற்றமாகச்சுற்றி நிற்பர் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். இவரது குணங்களை வியந்து புலவர் பலரும் புகழ்ந்துள்ளார். அவருள் முன் குறித்த சிவப்பிரகாச சுவாமிகள் இவரைக்குறித்துக் கூறியிருந்தலை அடியில் காண்க.

"பண்டை அறத்தின் படிவமிது வென்னவுருக்
கொண்ட இலிங்கையன் குலமைந்தன்,—உண்ட
படிதாங்கி மாயன் தேர்ப்பார்தாங்கி யாங்கெங்கு
குடிதாங்கி நல்லிசைமென் கோதை—முடிதாங்கு
கல்வியுறுநீல கண்டன் துணைவனலாச்
செல்வி யுறையுந் திருமார்பன்,—வல்விரகம்
பூண்ட மடந்தையரே போல்லா னெனு நலலான்,
தூண்டு திகிரிச் சுமை துறந்தான்,—யாண்டும்
இலையென்றல் சேட்பவுமின் றென் றிரப்போர்
நிலைகண்டாங் கெப்பொருளு நேர்வோன்,—அலையுண்டு
பாலாழிக் கின்றுநிலை பான்மதிக்கென் றெப்பிகந்து
தோலா துலகனைத்துஞ் சூழ் புகழான்,—மேலாய
செங்கமல வாணற்கே செந்நாவின் மேவுதல்வெண்
மங்கையெனும அவ்வுரையை மாற்றியே—சங்கையற
மூவுலகு ளோர்க்கு முதுசீர்த்தி வெண்மங்கை
நாவுறைய வைதத நலத்தினன்,—தேவிகவி
வந்துதன்சீர் பாடுநரை மண்மீதில் அந்நிலையே
இந்திரனா க்கும் இயல்பினன்,—நிந்தையற

உண்டு பணையலரென் றெண்காவைக் கீழ்ப்படுத்திக்
கொண்டு புரைதீர் கொடையினன்,—கண்டுபுகழ்
பண்புமலாது பயனும் புணர்ந்து நிதித்
தண்பதுமம் வென்ற தடக்கையான்,—வண்புலவர்
தம்மை விழி காக்குந் தகவி னிமைபோலச்
செம்மைபெறக் காக்குஞ் சீருடையான்,—மெய்ம்மைபெற
நல்லார் ஒருவருளரேல் அவர் பொருட்டால்
எல்லார்க்கும் பெய்யுமழை யென்றுமுனம்—சொல்லாடும்
ஐயம் அகல அகிலமெலாம் தற்சுட்டிப்
பெய்யுமழை யென்னும் பெயராளன்,—துய்ய
மறையோர் மிடிப்பகைஞன், வாய்மைகா மென்றும்
அறையோ மெனப்பொய் அறைவான்,—முறையோதி
வேவியறஞ் செய்ய விளைத்துக் கரும்பயிலக்
கூலி கொடுக்குங் குலத்தோன்றல்,—மாவிரவும்
ஆர்த்தி விருந்தால் அடையாக் கதவமுகு
மாத்திரையாய்நின் றொளிரும் வாய்தலான்,—பூத்தபொருள்
ஏதப்படாமல் இருந்துதவ நல்லறமென்
பூதப் படியுட் புதைக்கின்றோன்,—வேதன்
நிலம் பெயர்த்து வைத்த நெடுவேரிற் சென்னி
குலம்பெயர்த்துவைத்த குணத்தான்,—தலம்படைத்தோன்
கண்ட குலத்திற் கருதி னிரட்டியாம்
பண்ட குலத்தின் பயனுளன்,—மண்டலிகர்
நல்லகோ லின்று நவைக்கோ லெனச் செயுங்கோல்
வல்லகோல் அண்ண மலை வள்ளல்'' (திருவெங்கையுலா)

இக் குலமகனைக்குறித்து அப்புலவர் பெருந்தகை உளமுருகி யுரைத்திருக்கும் உரிமை யுண்மைகள் இதில் ஊன்றி உணரத் தக்கன. இவர் குற்றமிலராய்க் குணஞ் சிறந்து குடி தாங்கி வாழ்ந்ததும், இவரைச் சுற்றமாக விழைந்து உலகம் சூழ்ந்துவந்து நின்றதும், இவரது குலமும், நலமும், கொடையும், நடையும், குணமும், தகவும், பணிவும், பிறவும் இதனால் இனிதறியலாகும்.

உற்ற குடியை யுயர்த்தின் உலகமவன்
பற்றுகி நிற்கும் பணிந்து.

குணமுடையனாய் நின்று குடிசெய்யவேண்டு மென்பது இதனால் கூறப்பட்டது.

---

1026. கண்ட குடியைக் கருணா கரனுண்டு
கொண்டுயர்ந்தான் என்னே குமரேசா—கொண்டாடும்
நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை யாக்கிக் கொளல். (சு)

இ—ள்.

குமரேசா! தான் பிறந்த குடியைச்சிறந்ததாக்கிக்கருணாகரன் ஏன் உயர்ந்து நின்றான்? எனின், ஒருவற்கு நல்லாண்மை என்பது தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல் என்க.

இது, பிறந்த குடியைப்பேணல் சிறந்த ஆண்மை யென்கின்றது.

நல் ஆண்மை என்பது = நல்ல ஆண்டன்மையென்று உயர்த்துச சொல்லப்படுவது. ஆண்மைக்கு நன்மையாவது யாண்டும் எல்லாராலும் நன்கு மதிக்கப்படுந்தன்மை.

இல் ஆண்மை = இல்லினை ஆளுந்தன்மை. அஃதாவது, தான் பிறந்த குடியை உயரச்செய்து அதனால் அதிலுள்ளவரனை வரும் தன்னை வழி பட்டொழுகத் தான் தலைவனாய் நின்றொழுகும் தகுதி. ஆக்கிக்கொளல் = தனக்கு உரிமையாகச் செய்து கொள்ளுதல்.

வில்லாண்மை, மல்லாண்மை, சொல்லாண்மை முதலிய வல்லாண்மைகள் எல்லாவற்றிற்கும் இல்லாண்மை மூலமுதலாயுள்ளதாதலால் அதனை நன்கு ஆக்கிக்கொள்ளல் ஒருவனுக்கு நல்லாண்மை என்றார்.

ஆண்மை இரண்டனுள் முன்னது ஆண்டகைமையை உணர்த்திற்று; பின்னது ஆளுநதன்மையைக்குறித்து நின்றது.

மேல், தன்குடியை உயரச்செய்து வாழ்வானை எல்லாரும் உவந்து சூழுவர் என்றார்; இதில், அவன் நல்ல ஆண்மையாளனாய் யாண்டு மேன்மையெய்தி நிற்பனென்கின்றார்.

ஒருவனுக்கு நல்ல ஆண்மையாவது தான்பிறந்த குடியினைச் சிறந்த நிலையில் வைத்து ஆளுந்தன்மையைத் தனக்கு உரிமை யாக்கிக்கொள்ளுதலே என்பதாம்.

வேறு எவ்வளவு வல்லாளனாயிருந்தாலும் இல்லினை ஆளாதவன் நல்ல ஆண் மகனாக மதிக்கப்படானாதலால் அவ் ஆண்மையின் மேன்மையை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

இல்லாளாதவன் நல்லாளாகான் என்ற இதனால் அவ் ஆட்சியின் உரிமையும், அதனை இழந்து நின்றூரது சிறுமையும் இனிதறியலாகும்.

"இல்லாளல் செய்யா இழிமகன்றான் எவ்வளவு
வல்லாள னாக வளர்ந்தாலும்—தொல்லுலகம்
எள்ளி யவனை இகழுமால் யார்புகழ்வார்
கள்ளி மகனைக் கனிந்து" என்பதும் ஈண்டுக் காணத்தக்கது.

ஒருவன் சிறந்த ஆண்மகனாய்ப் பிறந்திருந்தாலும் முனைந்து முயன்று தனது குடியினை யுயர்த்தி மக்கள் மனைவி ஒக்கல் முதலாக அதிலுள்ளவரனைவரையும் இனிது பாதுகாத்துத் தன் வயப்படுத்தி நில்லானாயின் அவன் இருப்பு மிக இழிக்கப்படும் என்பது குறிப்பு.

தான் பிறந்த குடியை இனிது பாதுகாத்துத்தலைமைபெறச் செய்யாவழி அக்குடி கொழுநனில்லாத குலமகள்போல் நிலைகுலைந்து போம்; போகவே "பேதைமகன் பிறந்தகுடி பேடிகைவாள் போலிழிந்து பிழையே மல்கி, ஊதைபெறி விளக்கென்ன உருவமறத்திரிந்து தொழியும்" என்றபடி அழிந்தொழியப் பழியோடு அவன் கழிந்தொழிவான் ஆதலால் அங்ஙனம் பழிபடா வண்ணம் அமைந்து வாழவேண்டுமென்பார் "இல்லாண்மை ஆக்கிக் கொளல் ஒருவனுக்கு நல்லாண்மை" என உணர்த்தி யருளினார்.

பிறப்பில் ஆண்மகனாயிருந்தாலும் தன் குடும்பத்தைப் பேணி ஆளாதவன் பேடி என இழிக்கப்படுவனாதலால் அவ் ஆண்மையை மக்கள் அடைந்து கொள்ள வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

தன் குடியினை உயரச்செய்து இனிதுகாப்பவனை எல்லாரும் அடிதொழுது போற்றுவரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கருணாகரன்பால் உணரப்படும்.

## கதை

சருணுகரன் என்பவன் இற்றைக்கு எண்ணூறு ஆண்டு கட்கு முன்னர்த் தொண்டை மண்டலத்திலே வண்டை நகரி லிருநதவன். இவன் அருந்திறலும் பெருந்தகைமையும் ஒருங் கமையப்பெற்றவன். தான் கருதிய கருமங்களைக் கடைபோகச் செய்யும் உறுதியாளன். தன் பெயரியல்புக்கேற்ப யாவர் மாட் டும் பெருங்கருணை யுடையனுய் இதம் பல புரிந்து, அறம் பல செய்து சிறந்த புகழோடு இவன் விளங்கியிருந்தான். நந்திவர் மன் என்னும் குறு நில மன்னனுடைய மரபினனே யெனினும் இவன் பிறந்திருந்தபொழுது குடும்பம் சிறிது தளர்ந்திருந்ததாத லால் அதனை நினைந்து நினைந்து மிக வருந்தி நின்றுன். பருவ மடைந்தவுடன் பெரிது முயன்று வளம் பல படைத்து உற்றூர்க் கெல்லாம் உவந்தினிதுதவி இவன் உயர்ந்து திகழ்ந்தான். அறி வும் ஆண்மையும் அமைந்து தன் குடியினை யுயர்த்தி நின்ற இவனைப்பலரும் அடிதொழுது ஆதரித்து வந்தார். இவனது ஏந்திய சீர்த்தியைக்கண்டு வேந்தர் மூவரும் வியந்து நின்றுர். அவருள் விசயதரன்எனவும், விக்கிரமன்எனவும் இசைபெற்று நின்ற சோழ மன்னன் இவனைத் தோழனுகத் தழுவிக்கொண்டு அரிய வரிசைகள் பல உரிமையினல்கித் தனது சேனைக்குத் தலை வனுக்கினுன். இங்ஙனம் தந்திரியே யாயினும் மந்திரியாயு நின்று அவ் அரசனுக்கு வேண்டிய உறுதி நலங்களை அமயந்தோறும் இவன் இனிதுரைத்து வந்தான். வருங்கால் முறைப்படி தன் அரசுக்குச செலுத்தி வரவேண்டிய திறைப்பொருளைச் செலுத் தாமல் கலிங்க மன்னன் மறுத்து நின்றுன். அவனது நிலையினை யறிந்து நெடுஞ்சினங்கொண்டு "அரண்வலியை நினைந்தோ கலிங் கன் இங்ஙனம் முரண் கொண்டுள்ளான்" என அம்மன்னன் சினந்து மொழிந்தான். அருகிலிருந்த இவன் "யான் சென்று வென்று வருவல்" என விரைநதெழுந்தான். அன்று அவன் மொழிந்த விதமும், இவன் எழுந்த திறமும் அடியில் வருவன காண்க.

விசயதரன் மொழிந்தது.

"எளிய னென்றிடினும் வலிய குன்றரணம்
இடிய நம்படைஞர் கடிது சென்று

அளி அலம்புமத மலைகள் கொண்டணேமின்
அவனையும் கொணாமின் எனவுமே."

கருணாகரன் எழுந்தது.

இறை மொழிந்தளவில் எழுகலிங்கமவை
எறிவனென்று கழல் தொழுதனன்
மறை மொழிந்தபடி மரபின்வந்த குல
திலகன் வண்டை நகர் அரசனே. (கலிங்கத்துப்பரணி)

இங்ஙனம் எழுந்து சென்ற இவன் கலிங்கம் புகுந்து பெரும் போர் புரிந்து பகையடங்கவென்று சிறைபிணைந்து படைகளோடு திறைகொணர்ந்து வந்தான். "கடற்கலிங்கம் எறிந்து சயத்தம்பம் நாட்டிக், கடகரியும் குவிதனமும் கவர்ந்து தெய்வச் சுடர்ப்படை வாள் அபயனடியருளினேடும், சூடினுன் வண்டையர்கோன் தொண்டைமானே" என்றபடி சயங்கொண்டுவந்து நின்ற இவனை அவ்வளவன் கண்டு பெருமகிழ்ச்சி கொண்டான். கொடியபோரிலும் முறைதவருது நின்று பொருதுவென்று உறுதிசெய்து வந்தானுதலால் அனைவரும் இவனைப் பெரிதும் புகழ்ந்தார். இராமன் இலங்கையை வென்றுகொண்டதுபோல் கலிங்கத்தை இவன் வென்முன் என்பர்.

"இங்கை எறிந்த கருணாகரன்றன்
இகல்வெஞ் சிலையின் வலிகேட்பீர்!
கலிங்கம் எறிந்த கருணாகரன்றன்
களப்போர் பாடத் திறமினே." (கடைதிறப்பு)

தங்கள் தலைவர்களோடு ஊடிக் கதவடைத்து நின்ற குலமகளிரை நோக்கிக் கூறுங்கால் இது கூறியதென்க. இதனுல் இவனது புகழினினிமை இனிது புலனும். இவ்வண்ணம் பேரும் சீரும் பெற்றுப் பேராசரும் புகழ ஓராசனுகி இவன் உயர்ந்து விளங்கினுன். இவன் குடிமேன்மை இப்படிமுழுவதும்பரவி நின்றது. இவனுடைய இனத்தவரெல்லாரும் தம் குல தெய்வமாக இவனைக் கொண்டாடி நின்ருர். தான் பிறந்த குடியையும், இருந்த நாட்டையும், சிறந்தபடியாகச் செய்து உயர்ந்து பேணிவந்தானுதலால் நல்ல ஆண்டகை என்று மறுபுல மன்னரும் இவனை

வியந்து புகழ்ந்தார். "நல்லாண்மை என்ப தொருவற்குத் தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல்" என்னும் உண்மையை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

"பண்டையோர் நாளையில் ஓரேழ் கலிங்கப் பரணிகொண்டு
செண்டையுமேருவில் தீட்டுவித்தோன் கழற் செம்பியன் செய்
தொண்டை நன்னாடு புரக்கின்ற கோன் நந்தித்தோன்றல் எங்கள்
வண்டையர் கோனங் கருணாகரன் தொண்டை மண்டலமே."

(தொண்டை மண்டல சதகம்)

இவனது பான்மையும் மேன்மையும் இதில் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. இவன்குடி செய்து வந்த தன்மையும் இப் படி செய்து நின்ற நன்மையும் இதனாலும் இனிதறியலாகும்.

பிறந்தகுடி பேணும் பெருமைபோல் யாண்டும்
சிறந்ததோன் றில்லை தெரி.

தன் குடியை ஆள்பவனே ஆண்மகனாவான் என்பது இத னால் கூறப்பட்டது.

---

1027. சார்ந்து பலரிருந்தும் சாத்தனேன் தன்குடியைக்
கூர்ந்து பொறுத்தான் குமரேசா—நேர்ந்த
அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும்
ஆற்றுவார் மேற்றே பொறை. (எ)

இ—ள்.

குமரேசா! தன் குடும்பத்தில் பலரிருந்தும் சீரன் சாத்தன் ஏன் அதன் பாரம் தாங்கி நின்றான்? எனின், அமர் அகத்து வன்கண்ணர் போலத் தமர் அகத்தும் பொறை ஆற்று வார் மேற்றே என்க.

இது, குடிதாங்கி நிற்கும் குலமகனே தலைமகனென்கின்றது.

கூர்ந்து பொறுத்தான் என்றது தன் குடி தளர்ந்து படாத படி மிகுந்த ஊக்கத்தோடு நின்று அவன் முனைந்து காத்தமை கருதி. நேர்ந்த = எதிர்ந்த.

அமர் அகத்து = போர்க்களத்துள். வன் கண்ணர் என்றது வீரரை. யாதும் அஞ்சாது சென்று கண்ணோடாது நின்று கொல்லுமியல்பினரே வெல்ல வல்லவராய் விளங்குவாராதலால் வன்கண்மை அமருக்கு இன்றியமையாது வேண்டியதாயிற்று.

தமர் = தம்மவர்; ஒரு குடியுட் பிறந்துள்ள உறவினர் என்றபடி. தமரகத்தும் என்பதில் உம்மை இறந்தது தழீஇயது. என்னை? முன் குறித்த அமரகத்தைத் தழுவி நிற்றலானென்க.

ஆற்றுவார் என்றது அறிவும் ஆற்றலுமுடையராய் நின்று வினைசெய்ய வல்லாரை. பொறை = சுமை; அஃதாவது குடும்ப பாரம். மேற்றே = மேலதே. ஏகாரம் பிரிநிலை.

மூத்தவன் மேற்றே என்னாது இங்ஙனம் ஆற்றுவாரைக் குறித்தது, பருவ உருவங்களில் சிறந்திருந்தாலும் பயனில்லை; அரிய வினையாற்றலுடையானே குடிசெயற்கு உரியனுவன் என்பதுகருதி. பருவத்தில் சிறியராயிருந்தாலும் தம் குடியைத் தளராது காப்போரே பெரியராவர் என்க.

மேல், தான் பிறந்த குடியைப் பேணுதலே ஒருவனுக்குச் சிறந்த ஆண்மை என்றார்; இதில், அவ் ஆண்மையுடையானது மேன்மை கூறுகின்றார்.

பொருகளத்துட் புகுந்தார் பலராயினும் வீரமுடையாரே அங்குப் போர் தாங்கி வெல்வார்; அதுபோல் ஒரு குடியுள் பிறந்தார் பலர் திரண்டிருப்பினும் ஆற்றலுடையார் மீதே அதன் பாரம் அமைந்து நிற்கும் என்பதாம்.

குடிசெயல் வகைக்கு அமர் செயல்வகையை ஒப்புக்காட்டியது அதன் அருமைப்பாடு கருதி. வன்கண்மை போர்தாங்கற்கும், வினையாண்மை குடும்பந்தாங்கற்கும் உரிமையாம் என்க. வன்கண்மையாவது எறிபடை முதலியவற்றால் எய்தும் இன்னலுக்கு யாதும் இளையாது எதிரேறி நின்று அடலோடு அமராற்றுந் தன்மை.

" கண்ணே, கணைமூழ்கினவே; தலையின்
வண்ணமாலையும், வாளிவிடக் குறைந்தன;
வாயே, பொங்குநுனைப் பகழி மூழ்கலிற் புலாவழித்து

ஆவநாழிகை அம்பு செறித் தற்றே;
நெஞ்சே, வெஞ்சரம் கடந்தன; குறங்கே,
நிறம் கரந்து பலசரம் நிரைத்தன; அதனால்,
அவிழ்பூ அப்பணைக் கிடந்தோன்
கமழ்பூங் கழற்றீங் காய்போன் றனனே'' (தகடூர்யாத்திரை)

என்ற வண்ணம் உடல் முழுதும் அடுபடைகளால் உருவழிந்தாலும், உள மழியாது நின்று அமர் புரியும் வீரரே பொங்கி வந்த போர்தாங்கிப் புகழ் பெறுவர் என்க. படையுள் போராளரும் வீரன் பெருமையடைவான்; குடியுள் வினையாளரும் தீரன் மேன்மை யடைவான் என்றவாறு.

முனை முகத்தில் முனைந்து புகுந்து பலர் செறிந்து நிற்பினும் புறங்கொடாது நின்று பொருகின்ற வீரர் மீதே போர் பொறுத்து நிற்கும்; அதுபோல் ஒரு குடியில் பலர் நிறைந்திருந்தாலும் யாண்டும் சலியாது, மூண்டு வினைசெய்து நிற்பார் மீதே அதன் நிலை மேவி நிற்கும் ஆதலால் "ஆற்றுவார் மேற்றே பொறை'' என்றார்.

வில்லாளரும் வீரனோடு இணைத்துவைத்து இல்லாளரும் தீரனது நிலையை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. அமரகத்துள் போர் தாங்கும் வீரர் உயர்ந்து திகழ்வார்; தமரகத்துள் குடி தாங்கும் தீரர் சிறந்து விளங்குவர் என்க.

இடையூறுகளுக்கு அஞ்சாமல், உடல் வருத்தம் பாராமல், கருதிய வினைகளைக் கடைபோக முடிக்கும் உறுதியாளனே குடி செயற்கு உரியனாவன் என்பது கருத்து.

குடியைப்பொறுத்துப் பேணும் குலமகனே தலைமகனாவன் என்பது குறிப்பு.

தன்குடியை உயரச்செய்வோன் யாண்டும் சிறந்த மதிப்புடையனாய் உயர்ந்து திகழ்வான் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கீரன் சாத்தன்பால் உணரப்படும்.

## கதை

கீரன் சாத்தன் என்பான் பாண்டி நாட்டிலே கீரனூரிலிருந்தவன். வீர மரபினன். ஆள்வினை அமைவிலும் வாள்வினை

நிலையினும் இவன் மிகவும் வல்லவன். யாதும் அஞ்சா நெஞ்சின னாயினும் இரக்கமும் அடக்கமும் ஈகையுமுடையவன். இவனது குண நலங்களையறிந்து பாண்டிய மன்னனும் இவன்பால் பெரு நண்பு கொண்டிருந்தான். அவ் ஆண்டகைக்கு வேண்டிய உதவி களை இவன் விழைந்து புரிந்து வந்தான். ஒருங்கால் ஒருமுறை மறுபுல மன்னர்களோடு அவனுக்கு அமர் மிக மூண்டது. அப் போரில் அவன் படை வீரர் சிலர் இடைமுறிந்து போயினர்; போகவே பகைவர் மிக மிடைந்து எதிரேறி வந்தார். அவ்வம யம் இவன் சினந்து பாய்ந்து முந்துற ஓடி வந்தவரனைவரையும் சிந்த நூறி வென்று வந்தான். வழுதி மன்னன் பெருமகிழ்ச்சி யடைந்து யானை தேர் குதிரை முதலிய அரசசெல்வங்களைப் பரி சிலாக நல்கி இவனுக்கு வரிசை பல செய்தான். அதனால் குறு நில மன்னரெவரினும் பெருவலமுடையனாய் இவன் பெருகினான். இங்ஙனம் தன் ஆண்மையா லெய்திய மேன்மைத் திரு வினைப் பலர்க்கும் உவந்து கொடுத்து உறவினர்க்கெல்லாம் உதவி மிகச்செய்தான். தன் முன்றிலில் எவரைக்கண்டாலும் உடனி ருந்து உண்ணும்படி செய்து யாண்டும் இவன் உபகரித்து வந் தான். இவனது வண்மை திண்மை உண்மை முதலிய தன்மை களை வியந்து புலவர் பலரும் புகழ்ந்து நின்றார். ஆலூர் மூலங்கி ழார் என்னும் புலவர் திலகர் இவனைக்குறித்துப் பாடிய பாடல் ஒன்று அடியில் வருவது காண்க.

"கந்து முனிந்துயிர்க்கும் யானையொடு பணை முனிந்து
காலியற் புரவி யாலும் ஆங்கண்
மணல்மலி முற்றம் புக்க சான்றோர்
உண்ணா ராயினும் தன்னொடு சூளுற்று
உண்மென இரக்கும் பெரும்பெயர்ச் சாத்தன்
ஈண்டோ இன் சாயலனே; வேண்டார்
எறிபடை மயங்கிய வெருவரு ஞாட்பிற்
கள்ளுடைக் கலத்தர் உள்ளோர்க் கூறிய
நெடுமொழி மறந்த சிறுபே ராளர்
அஞ்சி நீங்குங் காலை
ஏம மாகத் தான் முந்துறுமே" (புறநானூறு)

இவனது முற்றத்தில் யானைகளும் குதிரைகளும் ஒலிசெய்யும் எனவும், அங்கு வந்தவரை உண்டுபோம்படி இவன் பணிந்து வேண்டுவன் எனவும், தண்ணளி மிகுந்து ஈண்டு இங்ஙனம் இனியனாயினும் அமரகத்து வலியனாகிக் கண்டோரோடாது பொருவன் எனவும், இதில் இவன் புகழப்பட்டிருத்தல் காண்க. இதனால் இவனது தன்மையும் வன்மையும் தகவும் பிறவும் அறியலாகும். தன் குடும்பத்தில் இவன் இளையவனாயிருந்தும் அறிவு ஆண்மைகளில் சிறந்து நின்று பெரிது முயன்று உறவினரை யெல்லாம் இனிது பாதுகாத்துக் குடியினை உயரச்செய்தானாதலால் அனைவரும் இவனைக்குலமுதல்வனெனக் கொண்டாடி நின்றார். "ஒரு குடிப்பிறந்த பல்லோருள்ளும் மூத்தோன் வருக என்னாது அவருள், அறிவுடையோனாறரசும் செல்லும்" என்ற அரசுரையின்படி இவன்பால் மன்னர் பலரும் வந்து போயிருந்தார். தன்னினும் மூத்தவர் பலரிருந்தும் தன் குடும்ப பாரத்தை இவனே தாங்கி யாதரித்தான். குடிசெய்து நின்ற இவனது ஆற்றலையறிந்து மறுபுலத்தவரும் போற்றி மகிழ்ந்தார். அமரினும் தமரினும் இவன் உயர்வெய்தி நின்ற அமைதியை வியந்து அனைவரும் புகழ்ந்தார். "அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்தும் ஆற்றுவார் மேற்றே பொறை" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

கூர்ந்துகுடி பேணும் குலமகனை இவ்வுலகம்
ஓர்ந்து புகழும் உவந்து.

தன் குடியைத்தாங்கி நிற்போனே தலைவனாவான் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1028 சோர்ந்து படாமல் சுபத்திரனேன் தன்குடியைக்
கூர்ந்து பொறுத்தான் குமரேசா—சார்ந்து
குடிசெய்வார்க் கில்லை பருவ மடிசெய்து
மானங் கருதக் கெடும். (அ)

இ—ள்.

குமரேசா! தன்குடியைப்பேணி நின்ற சுபத்திரன் என் யாண்டும் சோர்ந்து படாமல் ஊன்றி முயன்றான்? எனின், குடி செய்வார்க்குப் பருவம் இல்லை; மடிசெய்து மானம் கருதக் கெடும் என்க.

இது, குடிசெய்வார் மடி செய்யலாகா தென்கின்றது.

மடி = சோம்பல். மடிசெய்தலாவது தொழிலில் மூண்டு முயலாமல் தாமதமாகச்சோம்பி யிருத்தல். உளம் மடிந்திருத்தலால் இது மடி என நின்றது.

பருவம் = காலநியதி. இன்ன காலத்தில் முயற்சிக்க வேண்டும்; இன்ன காலத்தில் தவிர்ந்திருக்க வேண்டும் என்னும் நியதி படி செய்யும் மன்னர்க்கு வேண்டுமேயன்றிக் குடிசெய்யும் இன்னார்க்கு வேண்டாம் என்பார் "குடிசெய்வார்க்குப்பருவமில்லை" என்றார். "காலம் கருதி யிருப்பர் கலங்காது ஞாலம் கருது பவர்" (குறள் 485) என்றபடி தாம் கருதியதைக் கைக்கொள்ள அரசர் பருவம் பார்த்து நிற்கவேண்டும்; என்னை? அது பலர் பார்வையிலுள்ளது; பருவம் பார்த்துச் செய்யாவழிப் பகைவர் கைப்பட்டுப் பயனிழந்துபடும்; குடி செய்வார் தனி நிலையினராத லால் அங்ஙனம் நில்லாது இடையறாது முயலவேண்டும் என்றபடி.

மானமானது மிகச்சிறந்த ஒண் குணம்; அதனை உயிரினும் பாதுகாத்து ஒழுக வேண்டும் என முன்னர் உணர்த்தியருளி னார்; இங்கு அதனை நினைத்து நின்றால் குடி கெட்டுப்போம்; ஆதலால் சிறிதும் கருதலாகாது என்கின்றாரே ஈதென்னை? எனின், பெயரளவில் இரண்டும் ஒன்றாயிருப்பினும் அதற்கும் இதற்கும் பெரிதும் வேறுபாடு உண்டாதலால் மாறுபாடில்லை என்க. என்னே உண்மை? எனின், அது அறிவோடமைந்து உறுதி பயந்து நிற்கும் உயர்வினை யுடையது; இது அறியாமை யோடியைந்து இழவு தந்து நிற்கும் இழிவின தென்க. வீணபி மான மாய இதைக் குடிசெய்வார் சிறிதும் கொள்ளலாகாதென்க. "களிமடி மானி காமி கள்வன்—பிணியன் ஏழை பிணக்கன் சினத் தன்—துயில்வோன் மந்தன்" (நன்னூல்) என உதவாமாக்கள் வரிசையில் இம்மானமுடையாரை இணைத்து வைத்திருத்தல் காண்க.

மேல், குடியைத்தாங்குதற்குரியாரைத் தெரிய வுணர்த்தி ஞர்; இதில், அவர் செயலிலமைந்து நிற்கும் இயல்பினை யுணர்த்து கின்றார்.

சோம்பல்கொண்டு மானம் கருதி மாறி நின்றால் குடி கெட் டுப்போம் ஆதலால் தாம் பிறந்த குடியை உயரச்செய்ய அமை ந்து நிற்பார்க்குப் பருவம் இல்லை யென்பதாம்.

தாம் பிறந்த குடியைச் சிறந்தபடியாகச் செய்யத்துணிந்த வர் மடி கொள்ளாமல், மானம் கருதாமல், பருவம் பாராமல் இடையறாது நின்று என்று முயலவேண்டும் என்றபடி.

பருவம் பார்க்ககெடும்; மடி செய்யக்கெடும்; மானம் கருதக் கெடும் எனத்தனித்தனி கூட்டி நோக்குக. கெடும் என்னும் வினைக் குக் குடி எழுவாயாக நின்றது.

பருவத்தை மட்டும் முன்னுறத்தனியே நிறுத்தியது அது புறத்திலிருத்தல் கருதி. மடியும் மானமும் அகத்தில் நிகழு மாதலால் அவற்றை ஒரு சேர இணைத்து வைத்தார்.

முயற்சி எவ்வளக்கு எவ்வளவு எழுகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு குடி உயர்ச்சி யுறுமாதலால் குடி செய்வார் மடியின்றி மனந்தளராது என்று முயன்று வரவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

"எடுத்த கருமம் முற்றுமை எய்தின் முடித்தே விடுவலெனத்
தொடுத்த முயற்சி அறிவிரண்டிற்றோலாதுயர்வார் குடிசெய்வார்;
அடுத்த பருவம் குறித்துமடி யாக்கி மானம் கருதுவார்
கெடுத்தல் புரிந்தார் ஆதலினால் கிளர்க குடி யூன்றலின்மைந்தா"

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. மடியும் மானமும் குடிக்குக் கெடுதி செய்யும் இயல்பின வாதலால் அவற்றை ஒழித்தொழுக வேண்டும் என இங்ஙனம் உணர்த்தியருளினார்.

வெயிலே மழையே பனியே காற்றே என்று குடி செய்வார் பார்த்து நிற்கலாகாதென்பார் அவருக்குப் "பருவம் இல்லை" என்றார். நாளைச்செய்வோம்; நாளை நின்று செய்வோம்; என்று

நாளைக்கடத்தலாகா தென்பார் மடி செய்யாதே என்றும், இக்குடியிலுள்ளார் எல்லாரும் சுகமாகச்சும்மா இருக்க யான் மட்டும் இப்படி உழைக்க வேண்டுமோ? என்று உள்ளங்கொண்டு உடைந்திராதே என்பார் மானம் கருதற்க என்றும் இங்ஙனம் உணர்த்தியருளினர்

குடி செய்யும் குல் மக்கள் யாதும் மடி கொள்ளாது யாண்டும் மன்னி முயல்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுபத்திரன் பால் உணரப்படும்.

## கதை

சுபத்திரன் என்பவன் தக்க நாட்டிலே கேமமாபுரம் என்னும் நகரிலிருந்தவன். அறிவும் ஆண்மையுமுடைய ஓர் வணிக மரபினன். நீதியும் தருமமும் நிறைந்த நெஞ்சினன். இவன் மிக்க மனவுறுதி யுள்ளவன். மறுபுலங்களிலும் சென்று அரிய முயற்சிகளைச்செய்து பெருவளம் படைத்துத் தன் மரபினரெவரும் நிதிபதி யெனப்புகழ இவன் உயர் வெய்தியிருந்தான். இவனுடைய மனைவி பெயர் நிப்புதி. அவள் அழகிலும் குணத்திலும் புகழ் மிகப்பெற்றவள். அவளோடமர்ந்து அரிய போகங்களை நுகர்ந்து அறங்கள் பல புரிந்து கேமசரி என்னும் ஓர் அழகிய மகளைப் பெற்றுப் பெருமகிழ்ச்சியுற்றுச் சிறந்த சோதிடர்களைக்கொண்டு அவள் பிறந்த கோள்களை நோக்கிச் சாதகம் கணிக்கச்செய்தான். அக்கணிகள் கணித்து நோக்கி "இவள் எவனைக்கண்டவுடன் உளமிக நாணுகின்றாளோ அவனே இவளுக்குக் கணவனாவான்; ஏனெனின், தனக்குரிய மணமகனைத்தவிற வேறெவரும் இவட்கு ஆடவராய்த்தோன்றார்" என்று உறுதிதோன்ற உரைத்துச் சென்றார். அன்றுமுதல் அவ்வாறே இவன் ஆய்ந்து வந்தான். அவள் பருவமெய்தியும் ஒருவரையுங்கண்டு உளங் கூசாமல் தன் இனம் போலவே ஆடவரெவரையும் எண்ணி நின்றாள். இவன் நாளும் நாளும் காளையர் பலரைத் தன் மனைக்கு அழைத்து வந்து விருந்தூட்டி வைத்து அவள் காணும்படி காட்டி நின்றான். பன்னிரண்டு யாண்டுகள் இங்ஙனம் காட்டி வந்தும் யாதொரு பயனும் காணவில்லை. பருவம் கனிந்து அழகு குடிகொண்டு விழு

மீதாய் நிற்கும் அக்குலமகள் குமரிருந்து வருதலை நினைந்து நினைந்து இவனுடைய மனைவி மிக வருந்தினாள். அவளை நாளும் தேற்றி ஆயிரத்தெட்டுப் பேர்களுக்கு யாதும் தளராது இவன் அடிசி லூட்டி வந்தான். இவனது உறுதி நிலைமையும், கருதிய கருமங்களை இறுதிவரையும் அறுதியிட்டுப் பார்க்கும் அரிய திறலையும் நோக்கி அனைவரும் வியந்தார். மடிசெய்யாது, மானம் கருதாது இவன் முயன்று வந்த படியை அடியில்வரும் பாடலால் இனிது காணலாம்.

"வார்சிலை வடிப்ப வீங்கி வரையெனத் திரண்ட தோளன்
சோர்புயல் தொலைத்த வண்கைச் சுபத்திரன் மனைவி பெற்ற
சீர்நலங் கடந்த கேமசரி எனத் திசைகளெல்லாம்
பேர்நலம் பொறித்த பெண்மைப் பெருவிளக்காகி நின்றாள். (க)

மாசிலாள் பிறந்த ஞான்றே மதிவலான் விதியினெண்ணிக்
காசிலான் கண்டபோழ்தே கதுமென நாணப் பட்டான்
தூசலாம் அல்குலாட்குத் துணைவனும் புணர்மி னென்று
பேசினானன்று கொண்டு பெருவிருந் தோம்புகின்றான். (உ)

சேயிழை கணவனுகுந் திருமகன் திறத்து நாளும்
ஆயிரத் தெட்டு கோர்ந்த ஆரமு தடிசில் ஊட்டி
ஏயின வகையினாலே யாறிரண் டெல்லை யாண்டு
போயின என்ப மற்றப் பூங்கொடிச் சாயலாட்கே. (ங)

மாவடு மருட்டு நோக்கின் மதிமுக மழைக்கண் மாசில்
பூவொடு புரையும் சாயல் புனை நலந் தனித்து வைக
ஏவடு பிணையி னோக்கி இறைவனை கழல நின்ற
தாய்படுந் துயரமெல்லாந் தாரவன் நீக்கினானே."

(சீவகசிந்தாமணி).

இதனால் இவனது ஆண்மையும், மேன்மையும், அருங் கொடை அமைவும், அயரா முயற்சியும் அறியலாகும். இங்ஙனம் ஊக்கி முயன்றுவந்த இவன் முடிவில் ஒருநாள் சீவகனைக் கண்டு உடன் கொண்டு சென்று விருந்தருத்துங்கால் அவள் பார்த்து நாணினாள். நாணவே பாக்கியம் பலித்ததென்று தன் மகளை அம்மன்னனுக்கு இவன் மணம்புரிந்து தந்தான். அவன் மருவி

மகிழ்ந்தான். தளர்ந்திருந்த தன் உறவினர் பலரும் வளர்ந்தோங்கச் செய்து இவன் விளங்கி நின்றான். அந்நாட்டு மன்னனாகிய நரபதி தேவனும் இவன்பால் பெரு மதிப்புக்கொண்டு அரிய சிறப்புகள் பல அன்புடன் செய்தான். மடியின்றி மானங் கருதாமல், பருவம் பாராமல், முயன்று வந்ததால் அரசரும் விழைந்து நோக்கும்படி இவன் குடி உயர்ந்து நின்றது. குடிசெய்வார் மடிபுரிந்து மானங் கருதிப் பருவம் பார்த்துப் பாணித்து நிற்கலாகாதென்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

மடிமறவி யாது மருவார் பிறந்த
குடியுயர்வு காண்பார் குறித்து.

குடி செய்யுந் திறம் இதனால் கூறப்பட்டது.

---

1029. கண்ட குடும்பத்தைக் காத்துநின்ற பிங்கலன்முன்
கொண்டுழந்தான் துன்பேன் குமரேசா—மண்டும்
இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ குடும்பத்தைக்
குற்ற மறைப்பா னுடம்பு. (கூ)

இ—ள்.

குமரேசா! தன் குடும்பத்தைக் காத்து நின்ற பிங்கலன் ஏன் பேரிடும்பைகளை அடைந்திருந்தான்? எனின், குடும்பத்தைக் குற்றம் மறைப்பான் உடம்பு இடும்பைக்கே கொள்கலங் கொல்லோ என்க.

இது, குடும்பந்தாங்குதல் இடும்பையா மென்கின்றது.

இடும்பை = துன்பம். கொள்கலம் = பாத்திரம். கொண்டிருக்கும் கலம் என்பதாம். "தீம்பாலுண்பவர் கோள்கலங் வரைதல்" (கலித்தொகை) "இடுங்கலம பாண்டம் ஏற்குங் கோள்கல மெவற்றிற்கும் பேர்." (நிகண்டு) இவற்றுள் அதன் இயல்பினை யறிக. குற்றம் என்றது வறுமை, வசைகளை.

கொல்லோ என்றது ஐயமும் இரக்கமும் அமைய நின்றது. கொல் என்பது இடைச் சொல்லாய் நின்று ஐயத்தையும், வினை முதலாங்கால் கொலையையும், பெயராய் வருங்கால் வருத்தத்தை

யும் உணர்த்திவரும். "கொல்லென்பது அசைச் சொல் ஐயம் கொலை ஏவல் வருத்தம் நாற்பேர்" (நிகண்டு).

குற்றம் மறைப்பான் என்றது குணம்பெறச் செய்வான் என்றபடி. அஃதாவது மாசு நீக்கித் தேசு செய்வான் என்க. மறைத்தல் = விலக்கிக் காத்தல். "உறைப்பெயல் ஓலைபோல, மறைக்குவன் பெருமநிற் குறித்துவருவேலே" (புறநானூறு) மழை பெய்யுங்கால் மனிதன் மீது அம் மழைத்துளி விழாதபடி ஓலைக்குடை காத்துநிற்றல்போல் உன்னைக் குறித்து வருகின்ற வேலை யான் விலக்கிக் காப்பன் என ஒருவன் உரைத்திருக்கும் இதன்கண் மறைத்தல் உணர்த்திநிற்றல் காண்க.

குடும்பத்தின் மீது குற்றம் விழாமல் காப்பான் எனவும், முன்னதாக விழுந்துள்ள குற்றங்களைக் களைந்து போற்றுவான் எனவும் இருவகையாகவும் கருதிக் கொள்க.

இடும்பைக்கே என்பதில் ஏகாரம் வேறு இன்பங்கள் ஒன் றற்கும் யாதும் இடமில்லை என்பது தோன்றநின்றது.

மேல், குடிசெய்வார் மடி செய்யார் என்றார்; இதில், என்ன இன்னல்கள் வந்தாலும் இடையறாது அவர் முயன்று நிற்பரென் கின்றார்.

தன் குடும்பத்தைக் குற்றமுறாது காக்கும் குலமகனது உடம்பு துன்பத்திற்கே இடமாம் என்பதாம்.

வறுமை கடன் வசை முதலிய சிறுமைகள் தன் குடும்பத் தில் புகாவண்ணம் ஓர் குல மகன் இடை நின்று தலைமையோடு முயன்றுவருங்கால் பல இடையூறுகள் எதிர்ந்துபடும், படவே அவையனைத்தையும் மேல் வாங்கி விலக்கி யாண்டும் தளராது நின்று அக்குடியினை அவன் பாதுகாத்து வருவன் ஆதலால் "குடும்பத்தைக் குற்றமறைப்பான் உடம்பு, இடும்பைக்கேகொள் கலம்" என்றார். தன் குடும்பத்தில் நேர்ந்த குற்றத்தை நீக்கும் பொருட்டுப் பகிரதன் பல்லாயிரம் ஆண்டுகளாகப் படாத பாடு பட்டுப் பதைத்து நின்றதுபோல் உணவும் நீரும் துறந்து, பனி மழை வெயில்களையும் பாராது, கருமமே கண்ணாய்க் கருத் தூன்றி முயற்சித்துத் தம் குடியினைக் குல மக்கள் உயர்ச்சி செய்

வாராதலால் அவர் உடம்பு, இடும்பைக்கே இடனாம் என இங்ஙனம் உணர்த்தியருளினார்.

தான் பிறந்த குடியைச் சிறந்தபடி செய்ய விழைந்து முயலும் குலமகன் தன் முயற்சியில் எவ்வளவு துன்பங்கள் தொடர்ந்து வந்தாலும் தளர்ந்து படான் என்பதாம்.

"நெடும்பல் மால்வரை தூர்த்து நெருக்கவும்
துடுமபல் வேலை துளங்கிய தில்லையால்
இடும்பை எத்தனையும் படுத் தெய்தினும்
குடும்பம் தாங்குங் குடிப்பிறந்தாரினே" (இராமாயணம்.)

சேது பந்தனஞ் செய்யுங்கால் வானரங்கள் எறிந்த மலைகள் பல கோடிகளாக வந்து விழுந்தும் கடல் யாதும் கலங்காதிருந்த தென்பதை உணர்த்தற்குச் சம்பர் இதில் புணர்த்தியிருக்கும் உவமையை ஊன்றிப் பார்க்க. இடும்பைகள் எவ்வளவு வந்து எதிர்ந்தாலும் குடும்பம் தாங்குவோர் கலங்காது நிற்பர் என்னும் இது, அடிகள் குறிப்பை அடியொற்றி வந்துள்ளமை அறியலாகும்.

தன் உடம்பைப் பேணிக்கொண்டு மினுக்காக நிழலில் ஒதுங்கி நில்லாமல் யாண்டும் முனைந்து முயன்று தாம் பிறந்த குடியை நல்ல குலமக்கள் விழைந்து பேணுவர் என்பது கருத்து.

பிறர் உழைத்து வர தாம் இருந்துகொண்டு இனிதுண்டு வரும் சோம்பேறிகள் ஒன்றுக்கும் உதவாத கோழைகளாய் இழிந்தொழிவர்; தம் உடம்பைச் சாரமய்ப்பிழிந்து உழைத்துவரும் குலமக்கள் நினைத்த காரியங்களை யெல்லாம் தவறாது முடித்து நிலத்தில் உயர்ந்து விளங்குவர் ஆதலால் குடிசெயல் வகையில் மடி செய்யாமல் யாண்டும் முடிய நின்று முயலவேண்டும் என்றபடி.

தனக்கு நேர்கின்ற வருத்தத்தை நோக்காமல் தன் குடியைக் குணம் பெறத்திருத்தி யாள்வோனே குலமகனாவான் என்க.

அல்லல் பல அடைந்து நின்றாலும் நல்ல குலமக்கள் தம் குடும்பத்தை உவந்து பேணுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பிங்கலன்பால் உணரப்படும்.

## கதை

பிங்கலன் என்பவன் வத்தவ நாட்டிலே கௌசாம்பி நகரிலிருந்து அரசு புரிந்த சதானீகன் என்னும் அரசனுடைய அரு

மைத்திருமகன். இவன் உதயண மன்னனுக்குப்பின் பிறந்தவன். இவனுக்கு ஓர் தம்பியுண்டு. அவன் பெயர் கடகன். இத் துணை வரிருவரும் உருவம் பருவம் குணம் செயல்களில் ஒத்து யாண்டும் இணைபிரியாது நின்று ஒழுகி வந்தாராதலால் பிங்கலகடகர் என ஒரு தொகையாக எங்கும் பெயரமைந்து நின்றார். முன்ன வனான இவன் இன்னிசை பாடுவதில் மிகவும் வல்லவன். நல்ல கல்விமான். ஊக்கமிக வுள்ளவன். அரசனாய் நின்ற உதயணன் பகைவர் சூழ்ச்சியுட்பட்டு மறைந்திருந்த பொழுது அந்நாடும் நகரமும் நலமிழந்து நிலைகுலைந்திருந்தன. அவ்வமயம் இவன் புகுந்து துணிவோடமர்ந்து இடர் பல களைந்து குடியை இனிது பேணி நின்றான். இங்ஙனம் நிற்குங்கால் பாஞ்சால தேசத்து மன்னனாகிய ஆருணி என்பவன் பழம்பகை நினைந்து பெரும் படையோடெழுந்துவந்து இவனது நகரினையடைந்து வளைந்து நின்றுகொண்டு கொடும்போர் புரிந்தான். அவனை வெல்லமுடியா தென்றுணர்ந்து காலங்கருதித் தன் தம்பியோடு மெல்ல நீங்கி நருமதையருகே யிருந்த ஓர் தனி யிடத்தைச்சார்ந்து தயங்கி யிருந்தான். பன்னிரண்டு திங்களாக ஒருவரும் அறியாவண்ணம் அங்கு மன்னியிருந்துகொண்டு பகையை வெல்லும் வகையை மிக மிக எண்ணிப் படாத பாடுகள் பட்டு வருந்தினான். முடிவி லெழுந்து உதயணனை வந்து அரிதிற்கண்டு தம் குடி நிலையைக் குறித்துணர்த்தி அவனது அடியில் விழுந்து இவன் அலறி யழு தான். அன்று இவன் அழுது உரைத்தபடியை அடியில் காண்க.

"பெருங்குடி யாக்கம் பீடற வெருளி
அருங்கடம் பூண்ட அவியாக் காதலொடு
பயந்தினி தெடுத்த படைப்பருங் கற்பினம்
கொற்ற இறைவிக்குக் குற்றேவல் பிழையாது
ஒருங்கியாம் உறைதல் ஒழிந்ததும் அன்றி,
இருங்கடல் வரைப்பின் இனியோர் எடுத்த
இறைமீக் கூறிய இராமன் தம்பி
மறுவொடு பெயரிய மதலைக் கியைந்த
ஆனாப் பெரும்புகழ் யாமும் எய்தத்
தேனார் தாமரைத் திருந்துமலர்ச் சேவடி

வழிபா டாற்றுறும் வன்கண் ணீத்தனேம்
கழிபெருஞ் சிறப்பிற் காவல் வேந்தே!
இம்மை யென்ப தெமக்குநெறி யின்மையின்
முன்னர்ப் பிறப்பின் மூத்தோர்ப் பிழையாது
உடன்வழிப் படூஉ உறுதவம் இல்லாக்
கடுவினை யாளரேம் யாம் என கலங்கிப்
பொள்ளெனச் சென்னி பூமி தோய
உள்ளழல் வெம்பனி உகுத்தரு கண்ணீர்த்
துன்பமோ டிறைஞ்சிய தம்பியர்த் தழீஇ'' (பெருங்கதை)

இராமனுக்கு ஏவல் செய்த இலக்குவன்போல் யான் உட னிருந்து உனக்குப் பணிசெய்யப் பெற்றிலேனே! பெற்ற தாயை யும் பேண முடியாத பேதையானேன்; அந்தோ! நம் குடி குலை ந்த படிதான் என்னே! என்று அண்ணனை உதயணனைப் பார் த்துத் தம்பியை உடன் தழுவி நின்று உளமுருகி இவன் உரைத் திருக்கும் நிலையினை இதில் ஊன்றிப்பார்க்க. இதனால் இவனது மனப்பான்மையும், மானங்கருதியிருந்த மாட்சியும், குலம்பேணி நின்ற நிலைமையும், பிறவும் இனிதறியலாகும். இங்ஙனம் உரை த்து நின்ற இவன் அரிய படைகளையும் உடனழைத்துச்சென்று இடங்காலங்களை யெண்ணியறிந்து பகைவனை அடியோடுவென்று அரசினை யடைந்து அண்ணனுக்கு முடிசூட்டி ஆதரித்து வந் தான். இன்பமென்பது யாதொன்றும் விரும்பாமல் இரவும் பகலும் கண்ணும் கருத்துமாய் நின்று எய்திய இன்னல்களை யெல்லாம் எதிர்ந்து தள்ளித் தன் குடிக்குற்ற குற்றத்தினை நீக்கி மேலும் யாதொரு குறையும் உறுவண்ணம் கருதிக் காத்த இவ னது உறுதியை வியந்து அனைவரும் உவந்து புகழ்ந்தார். குடும் பத்தைக் குற்ற மறைப்பான் உடம்பு இடும்பைக்கே கொள் கலமா மென்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

அல்லலெலாந் தாந்தாங்கி ஆதரிப்பார் தங்குடியை
நல்ல குலமக்கள் நன்கு.

குடி செய்வார் நிலை இதனால் கூறப்பட்டது.

1030. அன்று கழுவுள் அருங்குடியும் வீழ்ந்ததவன்
குன்றிநின்ற போதேன் குமரேசா—துன்றி
இடுக்கண்கால் கொன்றிட வீழு மடுத்தூன்று
நல்லா ளிலாத குடி. (ய),

இ—ள்.

குமரேசா! கழுவுள் என்பவன் அயாடைந்து சாய்ந்த பொழுது அவன் குடி ஏன் நிலைகுலைந்து வீழ்ந்தது? எனின், அடுத்து ஊன்றும் நல்லாள் இலாதகுடி, இடுக்கண்கால் கொன்றிட வீழும் என்க. துன்றி = நெருங்கி.

இது, நன்மகனில்லாத குடி நாசமுறும் என்கின்றது.

அருங்குடி என்றது எவரும் வெல்லுதற்கரிய திறலோடு அது விளங்கி யிருந்தமை கருதி. உம்மை சிறப்புணர நின்றது

இடுக்கண் = துன்பம். கால் என்றது அடியை. அஃது இங்குக் குடியின் அடிமூலமாயுள்ள தலைவனைக் குறிப்பாக உணர்த்தி நின்றது. ஒரு குடியின் சந்ததியைக் கால்வழி என்பதூங் காண்க. "செம்மல் முளைசுதன் கால் பொருள் புதல்வன்" (பிங்கலந்தை). "கால் எனத் தாங்கி நின்ருன்" என்ருர் பிறரும்.

இடுக்கண்கால் கொன்றிட என்றது துன்பமாகிய கோடாலி குடியின் அடிமுதலை வெட்டிச்சாய்க்க என்றபடி. இங்ஙனம் கருவியாகக் கருதியது உருவகம் நோக்கி. "கால் கொன்றிடக் குடி வீழும்" என்றதனல் அக்குடிக்கு உறுதி பயந்து நிற்கும் அதன் உண்மை நிலை புலனும். கால் ஒடிந்த மகன்போல் தன் கால் அழிந்தபொழுது குடி கதி யழிந்து படும் என்பதாம். மரத்திற்கு ஆணிவேர்போல் குடிக்கு மூல முதலாய் நின்றவன் கொல்லப்படுவானுயின் அது சிறிதும் நிலைத்து நில்லாதென்க. "மெய்யே என்றன் வேர் அறநூறும் வினை நோக்கி, நையா நின்றேன் நாவும் உலர்ந்தேன் நளினம் போல்—கையான் இன்றென் கண்ணெதிர் நின்றும் கழிவானேல்—உய்யேன் நங்காய்! உன் அபயம் என் உயிர்" எனக் கைகேசி இடுக்கண் இழைத்த பொழுது தசாதன் இரங்கி யுளைந்ததும் ஈண்டெண்ணத்தக்கது

இனி, கால் என்பதற்குக் காற்று என்று பொருள் கொண்டால் இடுக்கணுகிய சூறைக்காற்று அடர்த்தறையுங்கால் அடுத்து ஊன்றும் நல்லாள் இல்லாத குடி அடியோடு அழிந்து வீழும் என்க.

மேல், இடும்பைகள் எவ்வளவு எய்தினும் நல்ல ஆண் மக்கள் தளராது நின்று தம் குடும்பத்தைத் தாங்குவர் என்ருர்; இதில், அவர் இல்லையாயின் அது நில்லா தென்கின்ருர்.

அல்லல் புகுந்து கால் வழியை அலைத்திடும்பொழுது அருகே நின்று தாங்குகின்ற நல்ல ஆண்மகன் இல்லாத குடி அடியோடு அழிந்து விழும் என்பதாம்.

ஆள் இல்லாத குடி வீழும் என்றதனுல் ஆளுள்ளது வீழா தென்பதாயிற்று. ஆள் என்று மட்டும் கூருமல் நல்லாள் என்று விதந்து கூறியது தன் குலம் தாங்கும் நலந்தோன்ற.

வீழும் என்ற குறிப்பால் குடி, மரம் என உருவகஞ்செய்ய நின்றது. இவ்வாறு வருவது குறிப்புருவகம் என்னும் அணியின் பாற்படும்.

ஒரு பெரிய ஆலமரம் செல் அரித்து அடிவேரற்ருே, அல்லது கோடரி முதலிய வல்லிரும்புகளால் தாக்கப்பட்டுத் தலை யவிழ்ந்தோ, உரமழிந்த பொழுது அது நிலை குலைந்து வீழாதபடி அதன் கிளைகளாயுள்ள விழுதுகள் அடுத்து ஊன்றித் தாங்கி நிலை நிறுத்தும்; அதுபோல் ஒரு குடியின் தலைவன் துயர்வாய்ப் பட்டோ, அல்லது பகைவர் கைப்பட்டோ நிலையழிந்தபோது அக்குடி அடியோடு தலையழிந்து ஒழியாதபடி அதன் வழி முதலாவுள்ள நல்ல ஆண்மகன் உறுதியோடு தழுவி யாதரித்து அதனைத் தாங்கி நிற்பன் என்க. விழுமிய குடியைப் பழுமரத்தோடு இங்ஙனம் ஒப்ப வைத்தது இனிய நிழல் பயந்து பலர்க்கும் தனி நிலையமாய் நிற்றல் கருதி.

சிதலை தினப்பட்ட ஆல மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைகட் டோன்றிற்ருன் பெற்ற
புதல்வன் மறைப்பக் கெடும். (நாலடியார்)

நைந்தடியற்ற ஆலம் நடுங்கி வீழ்கின்றதென்று
வந்த வீழூன்றி வீழா வகை நிலை விளக்கு மாபோல்
மைந்தர்கள் தமக்குள் நல்ல அறிவினால் மகிழ்ந்து சேர்ந்து
தந்தையைத் தளராவண்ணம் தாங்குவர்தவத்தினென்றான்.
(இராமாயணம்)

இவை யீண்டு எண்ணற்குரியன. ஆலமரம் குடிக்கும், அதன் விழுது, அதில் பிறந்துள்ள குலமகனுக்கும் உவமையாக இவற்றுள் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. இங்ஙனம் தாங்குதற்குரிய நல்ல ஆள் இல்லாத குடி ஏதேனும் ஓர் அல்லலடைந்த போது அடியோடு அழிந்துபடும் என்பார் "இடுக்கண் கால் கொன்றிட வீழும்" எனறார். வல்லரசர் மூவரும் வளைத்து நின்று பாரியை வதைத்த பொழுது அவனை அடுத்து ஆதரித்தற்குரிய நல்ல ஆண்மகனில்லாமையால் அவன் குடி அடியோடு அலமந்தழிந்ததும் ஈண்டு அறியத்தக்கது.

ஆளனில்லாத குடி அழியும் என்ற இதனால் குடிக்கும் அதில் பிறந்துவரும் குலமகனுக்குமுள்ள உரிமை இனிதுபுலனும்.

"தந்தை யாயினோர் இனிதுவீற் றிருப்பதும் தமது
மைந்தர் தங்குடி பரித்தபின் அன்றி மற்றுண்டோ?
எந்தைவந்து நந்தொன்முறை போற்றலால் யானும்
சிந்தை தன்னிலோ ரெண்ணமு மின்றியே சிறந்தேன்"
(கந்தபுராணம்)

என்றபடி நல்ல ஆண்மகன் பிறந்து நின்றாலன்றி தொடர்ந்து ஒரு குடி சிறந்து நில்லாதென்க. நல்ல குலமக்களையுடைய குடியே நன்கு நிலைபெற்று நிற்கும் என்பது கருத்து.

நீங்கள் பிறந்த குடியை உயரச்செய்யுங்கள்; அஃது உங்கட்கு ஓர் சிறந்த கடமையாம்; அவ்வுயர்ச்சி முயற்சியாலாம் ஆதலால் அதனை ஓயாது உஞற்றுங்கள்; அதனை உணர்வோடு ஓர்ந்து செய்யுங்கள்; அங்ஙனம் செய்யின் தெய்வமும் உடனின்று துணை செய்யும்; எண்ணியவெல்லாம் எளிதில் முடியும்; உலகம் உங்களை உவந்து போற்றும்; நல்ல ஆண்மையாளராய் மேன்மை பெறுவீர்; குலவீரரென வுயர் புகழோடு நிலவி நிற்பீர்; குடி செய்யுங்கால் பருவம் பாராதீர்கள்; மடி செய்யாதீர்கள்; மானம்

கருதாதீர்கள்; நேர்ந்த துன்பங்களுக்கு நெஞ்சு அஞ்சாது நிலை த்துநின்று குடியை நிலைபெறச்செய்யுங்கள்; அவ்வாறு செய்ய வில்லையாயின் குடி கெட்டுப்போம்; அது கெடின் நீவிர் இழி பிறப்பினராக அவமதிக்கப்படுவீர்; ஆதலால் குடியை உயரச் செய்து நல்ல குலமக்கள் என்று எவரும் வியந்து சொல்லும்படி உயர்ந்து கொள்ளுங்கள்; என அடிகள் முறைப்படுத்தி இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றிப்பார்க்க.

ஒருவன் குடி எவ்வளவு சிறந்திருந்தாலும் தொடர்ந்து பேணுதற்குரிய சிறந்த ஆண்மகன் அதில் பிறந்து நில்லானாயின் அது விரைந்து அழிந்துபடும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை கழுவுள் பால் உணரப்படும்.

## கதை

கழுவுள் என்பவன் சேர நாட்டிலே காமூர் என்னும் நகரி லிருந்தவன். குறு நில மன்னன். நூறு ஊர்களுடைய ஒரு சிறு நிலப்பகுதிக்குத் தலைவனாயிருந்தாலும் பெரு நில வேந்த ரெவரையும் சிறிதுமதியாமல் இவன் பெருமித மெய்தி நின் றான். வேல் வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் நன்கு கை தேர்ந்து போராற்றலில் இவன் சிறந்திருந்தமையே இங்ஙனம் செருக்கி நிற்றற்குக் காரணமாய் நின்றது. நின்றும் இவன் நல்ல வள்ளற் குணமுள்ளவன். எவர் வரினும் இல்லையென்னுமல் ஈந்து வந்தானுதலால் இசை மிகப்பெற்று அசைவிலாண்மை யனுய் அகமகிழ்ந்து இவன் வாழ்ந்து வந்தான். வருங்கால் பெருஞ்சேரலிரும் பொறை என்னும் சேரமன்னன் இவன்மேல் கடுஞ்சினங்கொண்டு பெரும்படையுடன் வந்து கொடும்போர் புரிந்தான். அதில் இவன் பல பொருள்களு மிழந்து அல்லல் மிக அடைந்தான். முடிமன்னர்கள் பலர் திரண்டாலும் எதிர்க்க முடியாத அவனோடு இவன் தனியனுய் எதிர்த்து நெடிதுநேரம் உறுதியுடன் பொருது நின்றுனுதலால் தோல்வி யடைந்தாலும் இவனது போர்த்திறத்தை வியந்து அனைவரும் புகழ்ந்துபோற்றி னர். பெருங்குன்றூர் கிழார் என்னும் புலவர் திலகர் இவனைக் குறித்து ஒருமுறை கூற நேர்ந்தபோது "பொருமுரணெய்திய

கழுவுள்" என உளமகிழ்ந்து கூறியுள்ளார். அவ் அமர் அமர்ந்த பின் அவனோடு உடன்பாடு பெற்று, ஆவன ஆற்றி மறுபடியும் அரண் செய்துகொண்டு தன் நகரின் கண் இவன் இனிதமர்ந்திருந்தான். இந்நிலையில் ஆண்டுகள் மூன்று சென்றன. மீண்டும் பதினான்கு சிற்றரசர்கள் ஒருங்கு திரண்டு இவன்மேல் உருத்து நின்றார். இடையிடையே சில இடையூறுகள் இயற்றினர். இவன் ஒன்றுக்கும் அஞ்சாது, ஒரு பணிவும் காட்டாது ஊக்கி நின்றான். முடிவில் போர் மூண்டது. அவரனைவரும் ஒருங்கு சேர்ந்து அடர்ந்து நின்று பெருஞ்சமர் புரிந்தாராதலால் அதில் இவன் இறந்தொழிந்தான். இவனிருந்த ஊரும் சிதைந்து போயது. அடுத்து நின்று தகுந்த வினைகளைச்செய்து ஆதரித்தற்குரிய சிறந்த கிளைஞர் யாரும் இல்லாமையால் இவன்குடி அன்றோடு குன்றியழிந்தது. "அடுத்து ஊன்றும் நல்லாள் இல்லாத குடி, இடுக்கண்கால் கொன்றிட வீழும்" என்பதை உலகம் இவன் கண் உணர்ந்து நின்றது. இவனது அழிவினை நினைந்து பலரும் இரங்கினர். அவருள் பரணர் பாடிய பாடல் ஒன்று அடியில் வருவது காண்க.

"காடிறந்தனரே காதலர்! அடுபோர்
வீயா விழுப்புகழ் விண்தோய் வியன்குடை
ஈரெழு வேளிர் இயைந்தொருங் கெறிந்த
கழுவுள் காமூர் போல
விளிந்தன்று மாதவர்த் தெளிந்த என் நெஞ்சே" (அகம்)

தலைமகனைப் பிரிந்து நின்ற தலைமகள் தன் நிலைமையைத் தோழிக்குச் சொல்லுங்கால் இது சொல்லியதென்க. தெளிந்த என் நெஞ்சம் கழுவுளது காமூர்போல இது பொழுது நிலை குலைந்து அழிந்துள்ளதென அவள் உளைந்துரைத்திருக்கும் அழகைப் பார்க்க. இதனால் இவன் குடியின் தன்மையும், பின்னின்று ஆள்வாரின்மையால் அடியற்ற மரம்போல் அஃது அழிந்து வீழ்ந்துள்ள வுண்மையும் இனிது அறியலாகும்.

வீழமைந்த ஆல்போல் விறன்மகனைப் பெற்றகுடி
ஊழமைந் தோங்கி யுயருமால்—கூழைவீழ்
பெற்ற மரம்போலப் பேதைமக னுற்றகுடி
பற்றற் றழியும் பரிந்து. (தருமதீபிகை)

கலைமதியில் வான்போல் கவினற் றொழியும்
குலமக னில்லாக் குடி.

ஆளனில்லாத குடி அடியோடழிந்துபோம் என்பது இத
னால் கூறப்பட்டது.

---

இவ்வதிகாரத்தின் தொகைப்பொருள்.

தான் பிறந்த குடியை உயரச்செய்தலே ஒருவனுக்குச் சிறந்த மேன்மையாம். அறிந்து முயன்றால் குடி உயர்ந்து விளங்கும். குடிசெய்யுங் குலமகனுக்குத் தெய்வம் உடனின்று துணை செய்யும். அவன் எண்ணியன யாவும் எளிதில் முடியும். அனைவரும் அவனை உறவாகச்சூழ்வர். இல்லினை ஆளுதல் நல்ல ஆண்மையாம். குடி தாங்குவோனே குலவீரனாவான். மடி செய்யாது யாண்டும் அவன் மன்னி முயல்வான். எய்தும் இடும்பைகளையெல்லாம் தான் ஏற்றுக்கொண்டு தன் குடும்பத்தை அவன் இனிது பாதுகாப்பான். நல்ல ஆண்மகனில்லாத குடி நைந்து வீழும் என்பதாம்.

௱௩வது குடிசெயல்வகை முற்றிற்று.

---

# 104ம் அதிகாரம் உழவு.

அஃதாவது உழவின் பெருமை. தாம் பிறந்த குடியைச் சிறந்தபடியில் காண முனைந்து நின்று முயன்று வருவார்க்கு முதன்மையாக உறுதிபயந்து இனிதமைந்து நிற்பது உழவே. ஆதலால் குடிசெயல்வகையின் பின் இது வைக்கப்பட்டது. "ஏருடைய குடியென்றும் எழிலுடைய தாயெங்கும் சீருடைய தாய் நின்று திருவுயர்ந்து திகழுமால்" என்ற வண்ணம் உழவு உயர்வினை விளைக்குமாகலான் அதனை உறுதியாக மக்கள் உவந்து கொள்ளவேண்டும் என இதில் உணர்த்துகின்றார் என்க.

1031. மண்டுபுகழ் நெற்குன்ற வாணர் வருந்தியுமேன்
கொண்டார் உழவைக் குமரேசா—மண்டிச்
சுழன்றுமேர்ப் பின்ன துலக மதனால்
உழந்தும் உழவே தலை. (க)

இ—ள்.

குமரேசா! நெற்குன்ற வாணர் மிகவும் வருந்தி நின்றும் உழவினை ஏன் உறுதியாக உவந்துகொண்டார்? எனின், சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்; அதனால் உழந்தும் உழவே தலை என்க.

இது, உழவு தொழிலே உயர்ந்த தென்கின்றது.

சுழன்றும் = சுற்றித்திரிந்தும். சுழலல் = அலைந்து திரிதல்.

ஏர் என்றது ஏருடையாரை. அவராவார் வேளாண்மை செய்வோர் என்க. உழவு கருவியாகிய ஏரினைக்குறியாமல் அதனையுடையாரை உணர்த்தியதால் ஏர் ஈண்டு ஆகு பெயராய் நின்றது.

உழந்தும் = வருந்தியும், உடம்பை வருத்தி உழைக்க வேண்டியிருத்தலால் பயிர்த்தொழிலை விட்டு வேறு தொழிலில் புகுந்து மேனிமினுக்கோடு திரிந்து மிகு பொருள் சேர்த்தாலும் சோற்றுப் பொருளுக்கு உழவனிடம் வந்து தான் நிற்க வேண்டுமாதலால் சுழன்றும் என அந்நிலையைப் புலங்கொள வைத்து உழவின் பெருமையை இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

உழவு தலை என்றதனால் அஃதல்லாத பிறதொழில்களெல்லாம் கடை என்பதாயிற்று. உழவுதொழில் ஒன்றே சிறந்தது; பிற எதுவும் அவ்வளவு உயர்ந்ததன்று; என உணர்த்தி நிற்றலால் ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம். உழந்தும் என்பதில் உம்மை உழவின் தன்மைபுணர நின்றது. வருத்தமின்றி மிகுந்த வரவுகள் வருவனவாயினும் பிற தொழில்கள் இழிந்தன என்றது தமது சுய உரிமையை யிழந்து மக்கள் மழுங்கி நிற்கும்படி அவை புரிந்து நிற்றல் கருதி.

வேறு வழியில் அலைந்து திரிந்தும் பின்பு ஏருடையார் அடியையே உலகம் நயந்து நிற்குமாதலால் வருந்தி நின்றாலும் உழவு தொழிலே சிறந்த தென்பதாம்.

வருத்தமுடையதேனும் உழுதொழில் சிறந்ததென்றது எவரிடமும் இழிந்து செல்லாதபடி தன்னையுடையாரை அஃது உயர்த்திவைக்கும் தன்மை கருதி. "சீரைத்தேடின் ஏரைத் தேடு" என்றார் ஔவையாரும்.

நேரே உழவு தொழிலில் புகாமல் அது வருத்தமான தென்று விலகி, வாணிகம் சிற்பம் சேவக முதலிய வேறு தொழில்களில் புகுந்து பிறர் மிகுந்த பொருள் திரட்டினாலும் முடிவில் உணவின் பொருட்டு உழவர்களிடமே வந்து தீருவர்; என்னை? "எல்லையின்றி மிகு பொன்னையீட்டி யுயர்ந்திருந்தாலும் நெல்லையின்றி உயிர் வாழா நீடாழி யுலகத்தே" என்ற வண்ணம் எவ்வளவு பொருள்கள் கையில் வைத்திருப்பினும் உயிராதார மாயுள்ள உணவுப்பொருள்களை வாங்க ஏர்த் தொழிலாளரிடமே எவரும் எய்தவேண்டும் ஆதலால் "சுழன்றும் உலகம் ஏர்ப்பின்னது" என்றார். ஏர் நிலையின் பெருமை இதனால் இனிது புலனும்.

உறையேற்ற செங்கதிரோன் ஒளி நெடுந்தேர் பூண்டநுகம்
திரையேற்ற கடலுலகிற் செறியிருளை மாற்றுவது
விரையேற்ற இரு நிலத்தோர் வெறுமையொடு வீழாமே
கரையேற்று நுகமன்றோ காராளர் உழுநுகமே (க)

நாட்டுகின்ற சோதிடத்திணைப்பொருத்தம் நாட்பொருத்தம்
காட்டுகின்ற கயிறிரண்டும் கயிறல்ல கடற்புவியில்
நீட்டுபுகழ்ப் பெருக்காளர் செழுநுகத்தோ டுழும் பகடு
பூட்டுகின்ற கயிறிரண்டும் புவிமகள் மங்கலக்கயிறே (உ)

செழுவான மழைவாரி திங்கள்தொறும் பொழிந்தாலும்
கெழுவார நிலமடந்தை கீழ் நீர் கொண்டெழுந்தாலும்
வழுவாத காவேரி வளநாடர் உழுங்கலப்பைக்
கொழுவாணி கொண்டன்றிக் குவலயம் சீர் நிரம்பாதே. (௩)
(ஏரெழுபது)

உழவின் தலைமையையும், அஃது உலகுக்கமைந்து நிற்கும் நிலைமையையும் இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

எவ்வாற்றானும் உலகுக்கு உயிராதாரமாயுள்ளது உழவே ஆதலால் அதனை மக்கள் ஓர்ந்து கைக்கொள்ளவேண்டும் என்பது கருத்து.

உழவு தொழிலே சிறந்ததென உணர்ந்தோர்உவந்துகொள்வ ரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நெற்குன்ற வாணர்பால் உணரப்படும்.

## கதை

நெற்குன்றவாணர் என்பவர் தொண்டை நாட்டிலே குன்றூர் என்னும் ஊரிலிருந்தவர். பரம்பரையாகச் சிறந்திருந்த உயர்ந்த குடியில் பிறந்தவர். பெருங்கொடையாளர். பல நூல்களிலும் நல்ல பயிற்சி யுள்ளவர். கவி பாடும் வன்மையு முடையவர். புலமைச் சுவையி லாழ்ந்து அருங்கலை விநோதராய் இவர் அமர்ந் திருந்தார் ஆதலால் அறிஞர் பலரும் நாளும் இவரை நயந்து வந் தார். வந்தவரெவர்க்கும் வரிசையறிந்து பரிசில் பல தந்து பணிவும் இன்சொல்லு முடையராய் இவர் இனிமை செய்து நின்றார். இங்ஙனம் நின்று வருங்கால் கால வேற்றுமையால் கடன்மேற்பட்டு இவர் மிடிவாய்ப்பட்டார். அவ் வறுமையிலும் வண்மை குன்றாது இயன்றவரையும் வழங்கி வந்தார். அவ் வமயம் அம்பிகாளி என்னும் புலவன் ஒருவன் பரிசில் கருதி இவர்பால் வந்தான். அவனுக்குத் தருதற்கு யாதும் இல்லாமை யால் இவர் மறுகி நின்றார். இவரது புகழுடைமையைக் கண்டு முன்னதாகவே பொறாமை கொண்டிருந்த போத்தன் என்னும் செல்வனிடம் போய் "யான் உமக்கு அடிமையாகி ஊழியம் செய்கின்றேன்; எனக்கு விலையாக ஓர் பெருந் தொகைப் பொருளை கொடுக்கின்றீரா?" என்று இவர் கூசாது கேட்டார். இவரை அடிமையாக்கி அல்லற்படுத்தற்கு நல்ல அமயம் வாய்த்ததென்று அக மிக மகிழ்ந்து அக் கொடியனும் கொடுத்தான். உளவு தெரியாமல் அம் மிடியனும் கொண்டு சென்றான். அடிமையாகி அங்கு இவர் அமர்ந்து நின்றார். தமது அருமை மனைவியார் தேடி யலையாதபடி தம் நிலைமையைப் புலப்படுத்தி ஓர் திருமுக மெழுதி விடுத்தார். அடியில் வருவது காண்க.

"கற்குங் கவிவல்லை அந்தணர்கோ னம்பிகாளிக்கியாம்
விற்கும் பரிசனமாகிவிட்டோம் வடவேங்கடமும்
பொற்குன்றமும் புகழ்க் கங்கா நதியும் பொதியமும் போல்
நெற்குன்றமு நம் மரபும் எந்நாளும் நிலை நிற்கவே"

இவ் விலை நிலையைப் பார்த்து அப் பதிவிரதை பதைத் தழுது உடனே தன் தந்தையிடம் சென்று இந் நிந்தையைபுணர்த்

திப் பொருளைப் பெற்று வந்து அப் பொல்லானிடம் தந்து இந் நல்லாளை மீட்டினாள். மீண்டுவந்த இவர் திருப்புகலூர் என்னும் தலத்தினை யடைந்து அங்கெழுந்தருளியுள்ள சிவபெருமானைத் துதித்து அந்தாதித் தொடையாக நூறு பாடல்கள் பாடினார். அது திருப்புகலூரந்தாதி என்று வழங்கப்படுகின்றது.

" வளப்பாடிலாத எருக்கும் இதழி மலரும் அன்பர்
உளப்பா டுறைபுக லூரருக்காதலின் ஓதி மிக்கோர்
தளப்பாடிது தமிழ்க் கென்னினும் சாற்றுவன் சந்திரன்சொற்
களப்பாளன் நெற்குன்றவாணன் அந்தாதிக் கலித்துறையே "

என்று இவர் அவையடக்கங் கூறிச் சுவைபுறச் செய்த அந் நூலின் பொருட்டுக் கோமளம் என்னும் தாசி ஒருத்தி ஆறு யிரம் பொன் இவர்க்கு ஆர்வமுடன் தந்தாள். அதனைப்பெற்று வந்து தமது மனைவியிடம் கொடுத்து இவர் உற்றதை முற்றும் உணரவுரைத்தார். அவ் விலை மகளது வள்ளன்மையை வியந்து அக் குல மகள் உள்ளம் குளிர்ந்தாள்.

" ஆணுருவாய் உயர் குலத்திற் பிறந்து பெருஞ் செல்வம் அநுபவித்திட்டாலும், சேணும் நிலமும் புகழும் பெருஞ் சீர்த்தி விளையாமல் செத்தாராயின், மாணுயர் தென்புகலூரான் திருவடிக்கோர் தமிழ் மாலை வாங்கிச் சூட்டி, நாணு மடமுந்தவிர்ந்து வாழ்ந்த மகளினுந் தாழ்வா நவிலலாமே" எனப் புலவர் புராண முடையாரும் அவளைப் புகழ்ந்து கூறியுள்ளார். இங்ஙனம் புலமைத் திறத்தால்வந்த பொருள் நெடிது நிலை நில்லாதென்று தெரிந்து முன்பு இழந்துபோயிருந்த தமது நிலங்களை யெல்லா மீட்டிக்கொண்டு கண்ணூன்றி முயன்று பின்பு இவர் வளம்படுத்தி வந்தார். அதனால் வளமிகப் பெற்றார். இவரது வயல்களில் விளைந்த நெற் குவியல்கள் மலைகள்போல நிலவி நின்றனவாத லால் நெற்குன்றவாணர் என இவர் நெடும் பெயர் பெற்று நின்றார். இவரது இயற் பெயர் களப்பாளன் என்பர். நிலத் தைப் பண்படுத்தியதுபோலவே மனத்தையும் பண்படுத்தி இவர் மாண்புற்றிருந்தார். வேறு வழியில் புகுந்து பெரும் பொருள் அடைந்தாலும் வளம் பல பெற்றுத் தலைமையோடு நின்று வழங்கி வாழ்தற்கு உழுந் தொழிலே தகுந்ததாமென

இவர் உணர்ந்து தெளிந்தார். "சுழன்றும் ஏர்ப் பின்னது உலகம்; அதனால் உழந்தும் உழவே தலை" என்பதை எவரும் காண இவர் உணர்த்தி நின்றார்.

தலை கொடுத்த குமணனினும், உயிர் கொடுத்த நந்தியினும், தமிழ்க்காத் தான் போய்
விலைபடுமிந் நெற்குன்ற வாணனை மேலெனத் துணிந்து விளம்பலாகும்;
நிலை பொறுத்த புலமையுற்று மானத்தும் புகழ் பெரிதா நினைத்ததாலும்
கலையுணர்ச்சி சிறிதெனினும் இனத் தொடிகல் கொடுங் குணமும் கடந்தானம்மா. (புலவர் புராணம்.)

இவரது வள்ளன்மையையும், உள்ளப் பான்மையையும் குறித்து இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

அலகிலா மறைவிளங்கும்; அந்தணராகுதி விளங்கும்;
பலகலையாந் தொகை விளங்கும்; பாவலர்தம் பாவிளங்கும்;
மலர்குலாந் திருவிளங்கும்; மழை விளங்கும்; மனுவிளங்கும்;
உலகெலாம் ஒளிவிளங்கும்; உழவருழும் உழவாலே. (ஏரெழுபது)

உற்ற உழவே உயிர்க்குறுதி மற்றவெலாம்
குற்ற முடைய குறி.

உழவின் பெருமை இதனால் கூறப்பட்டது.

---

1032. அன்றுழுத சாத்தன் அருமனார் இவ்வுலகம்
குன்றுதேன் காத்தார் குமரேசா—என்றும்
உழுவார் உலகத்தார்க் காணியஃ தாற்று
தெழுவாரை யெல்லாம் பொறுத்து. (உ)

இ—ள்.

குமரேசா! உழுதற்றொழிலை மேற்கொண்டிருந்த சாத்தன், அருமன் என்பவர் இவ்வுலகினை ஏன் காத்து நின்றார்? எனின், உழுவார் உலகத்தார்க்கு ஆணி அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து என்க.

இது, உழவினாலேயே உலகம் உள்ளதென்கின்றது.

ஆணி = அச்சாணி. அஃது என்றது உழவுதொழிலை. ஆற்ருது = செய்யமாட்டாமல். எழுவார் என்றது வாணிகம் சேவகமுதலிய வேறு தொழில்களை மேவி நிற்பாரை. பொறுத்து என்பதை பொறுத்தலான் என ஏதுவை விரித்துக்கொள்க. பொறுத்தல் = தாங்கல்.

"அஃது ஆற்ருர் தொழுவாரே எல்லாம் பொறுத்து" எனவும் பாடம். இங்ஙனம் கொண்டால் வருத்தமென்று நினைந்து உழுதற்ருெழிலைச் செய்யமாட்டாது விட்டவர், பிறர்க்கு ஏவலாளராகி அவர் செய்யும் இழிவுகளையெல்லாம் பொறுத்துக் கொண்டு அவரைத் தொழுது நிற்பார் என்று கொள்க.

உழுவார் இல்லையானல் உலகம் இல்லை என்பது ஆணி என்றதனல் அறிய நின்றது. ஆணி என ஒன்றை மாத்திரம் உருவகம் செய்ததினல் இது, ஏகாங்கவுருவகம் என்னும் அணியின் பாற்படும்.

மேல், உழவின் தலைமை கூறினர்; இதில், அத்தொழிலையுடையாரது நிலைமை கூறுகின்ருர்.

உழவுத்தொழிலைச் செய்யமாட்டாது வேறு வழியில் மேவி நிற்பாராகிய எல்லாரையும் தாங்கி ஆதரித்தலினல் உழுவார் உலகத்தார்க்கு ஆணியாவார் என்பதாம்.

உழுவாரை ஆணி என்றதனல் உலகம் தேர் என நின்றது. ஒரு பெருந்தேர்க்கு அச்சாணி யில்லையாயின் அதன் உருளைகள் கழன்று போம்; அவை போயின் அது யாதும் நடவாது அலமந்தழியும்; அதுபோல் உழவர் இல்லையாயின் உணவுப் பொருள்கள் இலவாம்; அதனல் உயிர்கள் வாழா தொழிந்துபோம்; போகவே உலகம் நிலைகுலைந்தழியும் ஆதலால் அதற்குறுதியாக உழுவாரை இங்ஙனம் உணர்த்தியருளினர். அச்சாணியின் அமைவினல் தேர் இயங்குதல் போல் உழுவாரின் ஆதரவினல் இவ்வுலகம் இனிது நடை பெறுகின்றதென்பதாம். இவ்வுண்மையை உணர்வார் அரியர் என்பது உருவகத்தா லுணர நின்றது. என்னை? அரிய பெரியதேர் அழகுற இயங்குவதைக் கண்டுமகிழ்வார் பலராயினும் அஃது எதனை ஆதாரமாகக்

கொண்டு அங்ஙனம் இயங்குகின்றது என்பதை எவரும் நுணுகி அறியார்; அதுபோல் இவ் வுலகம் இனிது நடைபெறுவதை நோக்கி நிற்பா ரெவரும் "இஃது எவருண்மையால் இங்ஙனம் நன்கு நடைபெறுகின்றது" என எளிதாக உணர்ந்து கொள்ளார் என்க. இலை மறை காய்போல் இவ்வாறு மறைபொருளாய் நின்று உலகினைத் தாங்கிவரும் உபகாரிகள் உழவர்களே என உருவகத்தால் உய்த்துணரவைத்து அடிகள் உணர்த்தியிருக்கும் அழகை இதில் ஊன்றிப் பார்க்க. மரத்திற்கு ஆணிவேர்போல் உழவர் இவ்வுலகிற்கு உறுதி பயந்துள்ளார் என்றபடி.

"ஊழி முதல்வனும், ஆழி அமலனும்,
கேழ்கிளர் தாமரை வாழ்மறையோனும்,
முத்தொழில் புரியு முதன்மை யோரென
எத்திசை மருங்கும் இசைபெற் றிருப்பினும்
உழுதொழில் புரியும் விழுமியோர் இல்வழி
இத்தல மதனில் எத்தொழி லேனும்
உண்டோ? சிறிதே உணர்மின் ஓர்மின்!" என்பதும்

ஈண்டுணரத்தக்கது.

வேறு என்ன தொழிலைச்செய்து எந்நிலையில் நின்றாலும் உண்ண உணவு, உடுக்க உடை, தின்ன வெற்றிலை, தேய்க்க எண்ணெய் முதலிய நுகர்வு நலங்கள் யாவும் உழவரிடமே பெற்று எவரும் உயிர் வாழ்ந்திருப்பர்; அவர் இல்லையாயின் உலகம் இனிது நில்லாது; உயிர்களைப்பேணி யாண்டும் நிலைதிரியாதபடி நின்று நிலம் பண்படுத்தி நலம் பல செய்யும் இயல்பினரான உழவர்களாலே தான் இவ்வுலகம் நன்கு நடைபெறும் ஆதலால் "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என்றார். ஏர் நடந்தாலொழிய இவ்வுலகம் இனிது நடவாது என்றபடி.

"கார் நடக்கும் படி நடக்கும் காராளர் தம்முடைய
ஏர்நடக்கும் எனிற்புகழ்சால் இயலிசை நாடகம் நடக்கும்,
சீர் நடக்கும், திறநடக்கும், திருவறத்தின் செயல்நடக்கும்
பார்நடக்கும், படைநடக்கும், பசிநடக்கமாட்டாதே. (க)

தடுத்தநெடு வரையாலுந் தடவரைகள் எட்டாலும்
உடுத்ததிரைக் கடலாலும் உலகினிலை வலியாமோ?
எடுத்த புகழ்ப் பெருக்காளர் எழுநூகத்தோ டிணைப்பகடு
தொடுத்ததொடை நெகிழாதேல் உலகுதொடை நெகிழாதே" (உ)

நீற்றோனும் மலரோனும் நெடியோனும் என்கின்ற
தோற்றுளர் இவராலே தொல்லுலகம் நிலைபெறுமோ?
மாற்றாத காவேரி வளநாடர் உழுங்கலப்பை
ஊற்றாணி உளதாயின் உலகு நிலைகுலையாதே." (ஏரெழுபது)

இவை ஈண்டெண்ணற்குரியன. உலக நிலைக்கு உழுவார் உயிர்நிலையா யுள்ளா ரென இஃதுணர்த்திநிற்றல் காண்க. "உழுவார் உலகுக்கு உயிர்" என்றார் ஐயனாரிதனாரும்.

உழு தொழிலாளர் பிற ரெல்லார்க்கும் இனிய ஆதரவாய் நின்று இதம்புரிந்திருப்பரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை சாத்தன்கண்ணும், அருமன்பாலும் உணரப்படும்.

## கதை

சாத்தன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டு கட்கு முன்னர்ச் சோழ நாட்டிலே பிடவூர் என்னும் பதியிலிருந்தவன், வேளாண் குலத்தினன், முடி மன்னர்க்கு வழிவழியாக மகட்கொடை செய்துவந்த மாண்புடை மரபினன். சிறந்த கொடையாளன். மிகுந்த ஏர் வளங்களையுடையவன். அறிவும் அருளும் ஆள்வினை அமைதியும் அமையப்பெற்றவன். வேலையாட்களை ஏவிப் பருவந் தவறாமல் வினைகளை முடித்துக்கொள்வதில் இவன் மிகவும் வல்லவன். நிலங்களைப் பண்படுத்திப் பெரு வளங்களை யுளவாக்கி வருபவர்க்கெல்லாம் உவந்துதவி வந்தான். சிறந்த குணங்கள் பல இவன்பாலமைந்திருந்தன.

"ஆணைவழி நிற்றல், மாண்வினை தொடங்கல்,
கைக்கடனாற்றல், கரிலகத் தின்மை,
ஒக்கல் போற்றல், ஓவா முயற்சி,
மன்னிறை தருதல், ஒற்றுமை கோடல்,
திருந்திய ஒழுக்கம், விருந்து புறந்தருதல்,
வேளாண் மாந்தர் செய்கை யீரைந்தே."

என்னும் மெய் நலங்களெல்லாம் இவனிடம் இயல்பாக எய்தி

இருந்தன. சுற்றந்தழுவி அற்றவரை ஆதரித்து யாருக்கும் பேருபகாரியாய் நிலவி நின்ற இவன்பால் மதுரை நக்கீரர் என்னும் புலவரொருவர் ஒருநாள் வந்தார். அவரைக்கண்டவுடனே கனிந்தெழுந்து உவந்துபசரித்து விரைந்தழைத்துப்போய் அந்தப்புரத்துள் தன் மனையிடம் காட்டி "இவரை என்போல் போற்றுக" என்று அன்புரையாடி அருகிருத்தி உணவருத்தி நெடு நாளாக உடன் வைத்திருந்து பொருள் பல கொடுத்துப் புகழ்ந்து விடுத்தான். இவனது மனப்பண்பையும் மாண்பையும் வியந்து அவர் மனங்குளிர்ந்து புகழ்ந்தார். ஒருமுறை இவனைக்குறித்து அவர் கூறிய பாடல் ஒன்று இதனடியில் வருதல் காண்க.

"சீர்சான்ற விழுச்சிறப்பிற்
சிறுகண்யானைப் பெறலருந்தித்தன்
செல்லா நல்லிசை யுறந்தைக் குணது
நெடுங்கை வேண்மான் அருங்கடிப் பிடவூர்
அறப்பெயர்ச் சாத்தன் கிளையேம் பெரும,
ஆங்கு நின்ற எற்கண்டு
சிறிது நில்லான் பெரிதுங் கூறுன்
அருங்கலம் வரவே அருளினன் வேண்டி
ஈயென வுரைத்தன்றி நல்கித் தன் மனைப்
பொன்போல் மடந்தையைக்காட்டி இவனை
என்போற் போற்றென் றோனே; அதற்கண்டு
அவன் மறவலேனே; பிறருள்ளலேனே;
அகன் ஞாலம் பெரிது வெம்பினும்,
மிகவானுள் எரி தோன்றினும்,
குளமீனொடுந் தாட்புகையினும்,
பெருஞ்செய் நெல்லின் கொக்குகிர் நிமிரல்
பசுங்கட் கருனைச் சூட்டொடு மாந்தி
விளை வொன்றே வெள்ளம் கொள்கென
உள்ளதும் இல்லதும் அறியாது
ஆங்கமைந்தன்றால் வாழ்கவன் தாளே" (மதுரை நக்கீரர்)

இவனது ஊர் உறையூருக்குக் கிழக்கே யிருந்ததென்பதும்,

அதிலமர்ந்து உழுந்தொழில் செய்து பெருந்திருவடைந்து உயிர்களைப்பேணி மேற் குறித்த புலவரைப் புரந்து நின்றதும், அவர் இவனைப்புகழ்ந்து துதித்ததும், பிறவும் இதனால் அறியலாகும். தான் பிறந்த குடியும், இருந்த ஊரும், அமைந்த நாடும், உயர்ந்து திகழ இவன் சிறந்து நின்றுனதலால் "சோழ நாட்டுப்பிடவூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன்" என நெடும் பெயரோடு இவன் நிலவி நின்றுன். உழவு தொழிலை ஊக்கிச்செய்து பிறரெவரையும் போற்றி வந்த இவனை அனைவரும் எத்தி நின்றுர். எல்லாரையும் ஆதரித்து வருதலால் "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என்னும் உண்மையை எவரும் காண இவன் உணர்த்தி நின்றுன்.

## கதை 2

அருமன் என்பவன் பாண்டி நாட்டிலே சிறுகுடி என்னும் ஊரிலிருந்தவன். பெருந் திருவுடையவன். ஏர்த் தொழிலால் சீர்த்தி மிகப் பெற்றவன். விளைந்த விளைவுகளையெல்லாம் பிறர் உண்ண உதவிஉவந்து நின்றவன். விருந்தின்றி யுண்ணுப் பெருந்தகையாளன். இவன் உண்ணுமுன் தெய்வத்தை நினைந்து பாற்சோற்றை நாளும் பலியாக இடுவன். அதனைக் காக்கைகள் பல வந்து உண்டு களிக்கும். கரவாது கரைந்துண்ணும் அவற்றின் இயல்பினை இவன் கண்டு களிப்பன். திருந்திய பண்புடனின்று விருந்துபேணிப் பறவைகளும் அருந்தி மகிழும்படி இவன் ஆற்றிவந்ததைக் குறித்துப் புலவர் பலரும் போற்றியுள்ளார். அவருள் நக்கீரர் கூறிய பாடல் ஒன்று அடியில் வருதல் காண்க.

கொடுங்கட் காக்கைக் கூர்வாய்ப் பேடை
நடுங்கு சிறைப் பிள்ளை தழீஇக், கிளைபயிர்ந்து,
கருங்கட் கருனைச் செந்நெல் வெண்சோறு
சூருடைப் பலியொடு கவரிய குறுங்கால்
கூழுடை நன்மனை குழுவின இருக்கும்
மூதில் அருமன் பேரிசைச் சிறுகுடி" (நற்றிணை)

இவனுடைய ஊர் சிறுகுடி என்னும் பெயரினதேயாயினும் இவனால் அது பெரும் புகழடைந்துள்ளது என்பது தோன்றப் "பேரிசைச் சிறுகுடி" என்று அப் புலவர் பெருமான் இதில் அதனைப் போற்றியிருத்தல் காண்க. சூர் = தெய்வம்.

"பாளை தந்த பஞ்சியங் குறுங்காய்
ஓங்கிரும் பெண்ணை நுங்கொடு பெயரும்
ஆதி அருமன் மூதூ ரன்ன
வயல் வெள்ளாம்பல் பகைநெறித்தழை" (குறுந்தொகை)

எனக் கள்ளிலாத்திரையனார் என்னும் புலவரும் இவனாரைப் புகழ்ந்து கூறியுள்ளார். இங்ஙனம் எவரும் உவந்து கூறச் சிறந்த புகழோடு இவன் விளங்கி யிருந்தான். உழுதலைச் செய்யாது ஒழிந்து நின்ற பிறரெல்லாரையும் இனிது ஆதரித்து உழவினை ஊக்கிவந்தானாதலால் ஆன்ற வுயிர்வாழ்க்கைக்கு ஓர் ஊன்று கோல்போல் இவன் உறைந்து நின்றான். இவ் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணி போன்று உழுகின்றவர் உள்ளமைந்துள்ளார் என்பதை உலகம் இவன்கண்ணும் உணர்ந்து நின்றது.

ஓராணித் தேரினுக்கும் உலகங்க ளனைத்தினுக்கும்
பேராணிப் பெருக்காளர் பெருமைக்கு நிகருண்டோ?
காராணிக் காவேரி வளநாட ருழு நுகத்தின்
சீராணிக் கொப்பதொரு சிறந்தாணி செப்பீரே. (க)

தொழுங் குலத்திற் பிறந்தாலென், சுடர்முடி மன்னவராகி
எழுங்குலத்திற் பிறந்தாலென், இவர்க்குப்பின் வணிகரெனும்
செழுங்குலத்திற் பிறந்தாலென், சிறப்புடையாராலென்,
உழுங் குலத்திற் பிறந்தாரே உலகுய்யப் பிறந்தாரே. (ஏரெழுபது)

நீருடைய வையம் நிலைத்து நிலவுமோ
ஏருடையார் இல்லை யெனின்.

உழுவார் உலகுக்கு உயிர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1033. ஏருழுது வாழ்தலே இன்பமென நாரணனேன்
கூருவந்து நின்றான் குமரேசா—சீரா
உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர். (ரு)

இ—ள்.

குமரேசா! உழுது வாழ்தலே தனக்கோர் இன்பமெனக் கொண்டு நாரணன் என் நயந்திருந்தான்? எனின், உழுது உண்டு

வாழ்வாரே வாழ்வார்; மற்று எல்லாம் தொழுது உண்டு பின் செல்பவர் என்க. கூர் உவந்து = மிகவு மகிழ்ந்து.

இது, உழுதுண்பவரே உயர்ந்தவ ரென்கின்றது.

உழுது = உழுதலைச் செய்து. வாழ்வாரே என்பதில் ஏகாரம் தெளிவுதோன்ற நின்றது. மற்று எல்லாம் = மற்றைய ரெல்லாரும். என்றது உழுது வாழாது புறம்போக்கான வழியில் போந்து நின்றாரை. தொழுது = வணங்கி.

உழுதுண்டு வாழ்வார் என்றது வெளாளரை. என்னை?
"வேளாண் மாந்தர்க்கு உழுதூ ணல்லது
இல்லென மொழிப பிறவகை நிகழ்ச்சி" (தொல்காப்பியம்),

என்பது காண்க. அருமறை யோதல், இருநிலங்காத்தல், வாணிகம் என்னும் இவை முறையே அந்தணர்க்கும், அரசர்க்கும், வணிகர்க்கும் எப்படிச் சிறப்புரிமையாக வுள்ளனவோ அப்படியே உழவு வேளாளர்க்குப் பிறப்புரிமையாம் என்க. இவரை, "உழுங் குலத்திற் பிறந்தார்" என்றார் கம்பர். இங்ஙனம் வேளாண்மையைத் தம் குலத் தொழிலாக் கொண்டு பிறர்க்கு உதவிவந்தநிலை தான் வேளாளன் என்னும் பதத்திற்கு உபகாரி என்று பொருளமைந்து நின்றது. "வேளாளன் என்பான் விருந்திருக்க வுண்ணாதான்" என்றார் நல்லாதனார். "சதுர்த்தரும் கொடை வள்ளலும் வேளாளர்" (பிங்கலந்தை).

"அருந்தினர் அருந்திச் செல்ல, அருந்துகின் றருமாங்கே
இருந்தினி தருந்தா நிற்க, இன்னமு தட்டுப் பின்னும்
விருந்தினர் வரவு நோக்கி வித்தெலாம் வயலில் வீசி
வருந்திவிண் ணோக்கும் ஓரேருழவர்போல் வாடி நிற்பார்."
(திருவிளையாடல்.)

"அழுங்குழவிக் கன்புடைய தாயேபோல் அனைத்துயிர்க்கும்
எழுங்கருணைப் பெருக்காளர் எளியரோ யாம் புகழ
உழுங்கொழுவில் கருவீறி யுலகமுதற் கருவாகச்
செழுங்கமலத் தயனிவரைச் செய்துலகம் செய்வானேல்."
(ஏரெழுபது.)

வேளாளர் தன்மையும், உழவோடு அவர் அமர்ந்திருக்கும் உண்மையும் இவற்றான் அறியலாகும். இன்னவாறு பயிர்த் தொழிலை உயிர்த் தொழிலாகப் பாதுகாத்துப் பேருபகாரிகளாய் நின்ற அவர் இது பொழுது நிலைமாறியுள்ளமை காலவேற்றுமை போலும்.

பிறரை ஏவி உழுவித்தும், தாமே நேரில் உழுதும் உழவு தொழிலைச் செய்யலாகும். முன்னது அந்தணர்க்கும் அரசர்க்கும் உரிமையாம். மற்றிருவருக்கும் இயன்றவாறு அவ்விரண்டுமே இயைவதாகும்.

"உழுவித்திருவர்; இருவருழுவித்தும், உழுதும் உணலாகும்; உழுதுண்பவரே தமக்குரியர்; உபகாரியரென்பாரவரே; தொழுதுண்பவரே பிறர்க்குரியார்; தொழின் முற்றுழுந்தும் உழவினர்பால், முழுதும் அடுப்பவேண்டுதலின், முதன்மைத் துழவென்றறிைந்தா." என்பதும் ஈண்டறியத்தக்கது.

மேல், உழுவாரின் உயர்வு கூறினார்; இதில், அவரோடிணைத்து வைத்து உழாதாரின் இழிவு கூறுகின்றார்.

உழுது உண்டு வாழ்கின்றவரே மான முடையராய் வாழ்கின்றவராவர்; அங்ஙனம் உழாது திரிவாரெல்லாரும் பிறரைத் தொழுது உண்டு அவர்பின் செல்பவராவரென்பதாம்.

உழுது வாழ்வார் என்றுமட்டும் கூறாது உண்டு வாழ்வார் என்றது அவ் உணவின் உண்மைநிலையை உய்த்துணர; என்னை? உழுதலாகிய தம் விழுமிய தொழிலால் உளதாவதன்றி வேறு வழியில் இழிந்து நின்று பெறுவதில்லை ஆகலான் அவ் உண்டி பெரு மேன்மையுடையதென்க.

உயிர்நிலைக்கு இனிய ஆதாரமாயுள்ளது உணவு; அத்தகைய உணவு வகைகளை இனிது விளைத்தற்குரியது பயிர்; அப் பயிர் விளைவுக்கு உறுதியாக முந்துறச் செய்யப்படுவது உழவே; அத் தகைய உழவுத் தொழிலைச் செய்பவர் எல்லா நுகர்வு நலங்களையும் தாமே உளவாக்கிப் பிறரெவரும் உண்ணும்படி ஊட்டித் தாமும் உண்டு வாழ்வார்; இவ் வாழ்வுடையார் பிறரிடம்போய்

ஈனப்படாது யாண்டும் மானமுடையராய் மேன்மை யெய்தி நிற்பாராதலால் "உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார்" என்றார்.

தன்னைக் கைக்கொண்டவரெவராயினும் அவரைப் பேருபகாரிகளாக வுருப்படுத்தி உயர்த்திவைக்கும் இயல்பினதாதலால் இத்தகைய உழவு தொழிலைச்செய்து வருவோரே புனிதமான இனிய வாழ்வினை யுடையவராவர் என்றபடி.

இங்ஙனம் உழுதலைச் செய்து தமக்குத் தாமே தலைவராய் நின்று உண்ணமாட்டாதவர் பிறரிடம்போய் ஊழியஞ்செய்து அவர் கொடுப்பதை வாங்கித் தம் வயிற்றை நிரப்பி அவர் உரைத்தபடியெல்லாம் வாய்புதைத்துப் பணிந்துநின்று உழன்று திரிவாராதலால் "மற்று எல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்" என்றார்.

பிறரைத் தொழுது வாழ்வது மிகவும் இழிவாகுமாதலால் அவ் ஈன வாழ்க்கையை எடுத்துக் காட்டி உழுதலாகிய மான வாழ்க்கையை மருவி வாழும்படி இங்ஙனம் உணர்த்தியருளினர்.

"தொழுதூண் சுவையின் உழுதூண் இனிது" (ஔவையார்)

"ஆற்றங் கரையின் மரமும் அரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கு ஒப்பில்லை கண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு." (நல்வழி)

"ஓவா வறுமை யுழந்தாலும் மற்றொருவர்
ஏவா துயிர்வாழ்ந் திருத்தலே நன்றாகும்
தாவாத செல்வம் தருமேனும் குற்றேவல்
ஆவா கொடிது கொடிது என்பாரு மாயினர்." (சீகாளத்திப் புராணம்).

இவை யீண்டு எண்ணற்குரியன. உழுதுண்டு வாழ்தலே உயர்ந்தது; தொழுதுண்டு வாழ்தல் இழிந்ததோடு பழுதுமாமென இவை உணர்த்தி நிற்பன காண்க.

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாரும்
தொழுதுண்டு பின்செல்வார் என்றேயித்தொல்லுலகில்
எழுதுண்ட மறையன்றோ இவருடனே யியலுமிது
பழுதுண்டோ கடல்சூழ்ந்த பாரிடத்திற் பிறந்தோர்க்கே."
(ஏரெழுபது)

இவ்வருமைத் திருக்குறளைப் பொன்போலெடுத்துத் தன் யாவில் பொதிந்துவைத்துக் கம்பர் இதில் உணர்த்தியிருக்கும் அழகை யூன்றிப்பார்க்க. உழுதுவாழ்வார் சிறப்பைக்குறித்து அக்கவிச்சக்கரவர்த்தி கனிந்து கூறுங்கால் "எழுதுண்டமறை" என நம்தேவர் திருக்குறளை இங்ஙனம் தொழுது கூறியிருத்தலால் இந்நூலை அவர் போற்றி வந்துள்ள செழுந்தகைமை புலனும்.

தலைமை, சுதந்திரம், புனிதம், புண்ணியமுதலிய உயர் நலங்கள் பல உழுதுண் வாழ்க்கையில் இனிதமைந்துள்ளன வாதலால் அவ்வாழ்வையே மக்கள் போற்றி யொழுகவேண்டும் என்பது இதன் திரண்டபொருளாம.

உழுது வாழ்தலையே உணர்வுடையார் உவந்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நாரணன் பால் உணரப்படும்.

கதை

நாரணன் என்பவன் தொண்டை நாட்டிலே கூவம் என்னும் ஊரிலிருந்தவன். வேளாண் மரபினன். தாளாண்மையுடனின்று வேளாண்மை செய்து இவன் விளங்கி யிருந்தான். ஏர்த்தொழிலை இனிது பேணி இசை மிகப் பெற்றவன். புழுதி யெழவுழுது, உறுதிபெற வுரமேற்றிப், பருவமறிந்து பயிரிட்டு, விளைபொருள்களை மிகுதியாக வுளவாக்கி உயிர்களின் புற இவன் உதவி நின்றான். நல்ல கல்விபுள்ளவனாதலால் புலவர்கள் பால் பெரு விருப்புடையனாய் வரிசையுடனேக்கிப் பரிசில் பல தந்து பண்பாற்றி வந்தான். இவனுடைய கொடையருமையை யறிந்து நம்பி என்னும் புலவனொருவன் இவனூராகிய கூவத்தைத் தியாகசமுத்திரம் என உருவகம் செய்து ஒரு நாள் வந்து உவந்து பாடினான். தியாகம் = கொடை. கூவம் என்பது கிணற்றினை யுணர்த்து மாதலால் பெயரளவில் அது சிற்றாராயிருந்தாலும் செயல் நிலையில் அளவிடலரிய பெருமையுடையதாய் யாவருக்கும் புகலிடமாயுள்ளதென இவனது கொடைக்குணத்தைப் புலப்படுத்தி நயம்படவுரைத்த அப்புலவரது விநயத்தை வியந்து பொன்னால் ஒரு பெரிய மீனைச்செய்து தூண்டிலிட்ட பாவனையாக அவரை வேண்டிக் கொடுத்தான்.

"தன்னால் இசைபெறக் கூவந்தியாக சமுத்திரமேன்
றந்நாள் ஒருவன் நெடுந்தூண்டிலிட்டிட ஆங்கொருமீன்
பொன்னாலமைத்துப் பொருந்திடச் சேர்த்துப் புகழ் கொண்டதால்
மன்னு வுலகத்து மன்னிய சீர்த்தொண்டை மண்டலமே"

எனத் தாம் பாடிய தொண்டை மண்டல சதகத்தில் படிக்காசுப் புலவர் மேற் குறித்த இவன் கொடைத்திறத்தினை இங்ஙனம் குறிப்பித்துள்ளார். இவன் ஈகையோடு பணிவுமுடையனாய் யாண்டும் இன்சொல்லியம்பி எவரையும் இனிதுபேணி வந்தானாதலால் முடி மன்னரினும் புலவர்கள் இவனை உயர்வாக மதித்திருந்தார். வீர சம்பு என்னும் குறு நில மன்னனொருவன் புலவர் திலகராகிய இரட்டையர்க்கு ஒருமுறை பரிசில் கொடுத்த போது அவர் அதனை இடக்கரத்தால் வாங்கினர். உடனே அவன்,

"பதி வீர சம்புவென்று பாராமல் கல்விக்
கிதமுளஇரட்டையரே யீகை—யுதவில்வலக்
கைத்தலத்திற் கொண்டு களிக்காமல் உம்மிடக்
கைத்தலத்திற் கொள்ளுவதேன் காண்"

என்று கடுத்துக்கேட்டான். அதற்கு உடனே அவர் விடையாக உரைத்தபடியை அடியில் காண்க.

"கூவராயன் தியாகம் கொள்வோம் வலக்கை; முடி
யாவர் தரினும் இடக்கைகொள்வோம்—பூவுலகில்
மின்பணி மின்னார்மதனே! வீர சம்புவே! யினிநாம்
இன்பமுநேரா மினி"

"மாதா பிதாவுமவன், மன்னுகுரு தெய்வமவன்,
தாதா அவனே, தருங்கீர்த்திக்—காதாரன்
த்யாக சமுத்திரன் தண்கூவ ராயன்றன்
ஈகைதனைச் சொல்லவெளிதே" (இரட்டையர்.)

இதனால் இவனது உயர்வு நிலை இனிது புலனும்; இன்னவாறு பெரும் சீரும் பெற்று நின்ற இவன் ஏர் மிக வைத்துழுது எவர்க்கும் உதவி இனிது வாழ்ந்தானாதலால் இவனது வாழ்க்கை ஓர் தனி நிலையாயமைந்து தலைமையோடு நிலவி நின்றது. "உழு

துண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர்'' என்பதை உலகம் இவன்பாலுணர்ந்து நின்றது.

"இடுவோர் சிறிதிங் கிரப்போர் பெரிதே
கெடுவாய் நமனே கெடுவாய்—படுபாவி!
கூவத்து நாரணனைக் கொன்றாயே! கற்பகப்பூங்
காவெட்ட லாமோ கறிக்கு''

இப்பாட்டு இவர் இறந்தபோது எமனை நோக்கி ஓர் புலவர் வருந்தியுரைத்தது. இவர் வாழ்வு கற்பகம்போல் இவ்வுலகிற்கு ஓர் உயிராதாரமாய் அமைந்திருந்த உண்மையும், இவரது தன்மையும் இதனாலும் இனிது அறியலாகும்.

தாழாது நின்று தகைமையுடன் வாழவெண்ணின்
ஊழாகக் கொள்க வுழவு.

உழுதுண் வாழ்க்கையே இனி தென்பது இதனால் கூறப்பட்டது.

---

1034. ஏருடைய பண்ணனிடம் ஏன்று பலமன்னர்
கூரடைந்து நின்றார் குமரேசா—தேரும்
பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்பர்
அலகுடை நீழ லவர். (௪)

இ—ள்.

**குமரேசா!** ஏர்த் தொழிலுடைய பண்ணன்முன் மன்னர் பலர் ஏன் மன்னி நின்றார்? எனின், அலகுடை நீழலவர் பலகுடை நீழலும் தம் குடைக்கீழ்க் காண்பர் என்க.

இது, உழவாரிடமே உலகம் அடங்கும் என்கின்றது.

அலகு = நெல்கதிர். "அலகு, நெற்கதிரே யாதி பலகறை நுளம்பு எண் ஏதி'' (நிகண்டு).

அலகு உடை நீழலவர் = கதிருடைய பசிய பயிர் நிழலையுடையவர், என்றது உழவரை. நீழலவர் என்ற தொனியால் அவர் தண்ணளியுடையவர் என்பது புலனும். என்னை? தன்னிடம் வந்து ஒதுங்கி நின்றார்க்கெல்லாம் இனிய நிழலைத் தந்து

நிற்கும் பழுமரம்போலத் தன்னை யடைந்தவர்க்கெல்லாம் பசி தாகங்களை நீக்கித் தாளாண்மையுடன் நின்று இனிது ஆதரிப்ப சாதலால் வேளாண்மையாளர் நீழலவர் என நின்றார் என்க. நிழல் என்பது ஈரிடத்தும் நீண்டு நின்றது.

'பலகுடை நீழலும்' என்றது பல அரசர்களுடைய ஆட்சிக்குட்பட்ட நிலமுழுவதும் என்றபடி. உம்மை சிறப்போடு எஞ்சாமை தோன்றநின்றது. கோலும், குடையும் அரசரது ஆளுகையை யுணர்த்திவரும். நீழலுள் அடங்கிய நிலத்தை நீழல் என்றதனால் அஃது ஆகுபெயரென்க.

மேல், உழுது வாழ்தலே உயர்வென்றார்; இதில், அவ்வாழ்வுடையாரிடம் வைய முழுதும் வந்து வசமாமென்கின்றார்.

பசிய பயிர் நிழலையுடைய உழவர்கள் பல மன்னர்களுடைய குடை நிழலிலமைந்துள்ள நில முழுவதும் தம் அரசனது குடைக்கீழ்வந்து அடைந்து நிற்கக் காண்பர் என்பதாம்.

தம் குடைக்கீழ் என்றது தமது அரசனுடைய குடைக்கீழ் என்றபடி. உழவர்கள் நிலங்களைப் பண்படுத்தி வளங்களைமிகுப்பராதலால் பெருஞ் செல்வங்களை யடைந்து அவர் உயர்ந்து நிற்பர்; நிற்கவே "குடியுயரக் கோன் உயரும்" என்றபடி அவர்களையுடைய வேந்தன் பெருநில முழுதாளும் பெற்றியுனுக் கொற்றமெய்தி மற்ற மன்னர்களை யெல்லாம் தன்னடிப்படுத்திக் தலைசிறந்து விளங்குவன் ஆகலான் "அலகு உடை நீழலவர், தம் குடைக்கீழ் பல குடை நீழலும் காண்பர்" என்றார். ஒரு குடையும் இல்லாத உழவர்கள் பல குடைகளையும் தம் குடைக்கீழ் வரக் காண்பர் என்ற இதனால் அவர்களது செயல் இயல்களின் அருமை பெருமைகள் இனிது புலனும்.

தம்பால் வந்து இரந்து நிற்கும் இரவலர்க்கேயன்றித் தம்மைப் புரந்துநிற்கும் புரவலர்க்கும் உழவர் உறுதி பயந்து நிற்பர் என்பது கருத்து.

"இரப்போர் சுற்றமும், புரப்போர் கொற்றமும்,
உழவிடை விளைப்போர்" (சிலப்பதிகாரம்).
"வருபடை தாங்கிப் பெயர்புறத் தார்த்துப்

பொருபடை தருஉம் கொற்றமும் உழுபடை
ஊன்று சால் மருங்கின் ஈன்றதன் பயனே.'' (புறம்.)

“ வெங்கோபக் கலிகடந்த வேளாளர் விளைவயலுட்
பைங்கோல முடிதிருத்தப் பார்வேந்தர் முடிதிருந்தும்;
பொங்கோதைக் கடற்றானைப் போர்வேந்தர் நடத்துபெருஞ்
செங்கோலை நடத்துங்கோல் ஏரடிக்குஞ் சிறுகோலே. (க)

குடையாளு முடிவேந்தர் கொலையானை தேர்புரவி
படையாளும் இவை நான்கும் படைத்துடையாரானாலென்?
மடைவாளை வரும் பொன்னி வளநாடர் தங்களலப்
படைவாளைக் கொண்டன்றிப் பகையறுக்க மாட்டாரே. (உ)

தென்னன்முடி சேரன்முடி தேங்குபொன்னி நாடன்முடி
கன்னன்முடி கடல் சூழ்ந்த காசினியோர் தங்கள் முடி
இன்னமுடியன்றியுமற் றெடுத்துரைத்த முடிகளெல்லாம்
மன்னுமுடி வேளாளர்வயலின்முடிகொண்டன்றே.''(ஏரெழுபது)

“போர்வாகை வாய்த்த புரவலரின் மேதக்கார்
ஏர்வாழ்நர் என்பதற் கேதுவாம்—சீர்சால்
உரைகாக்கு மன்னர்க் கொளிபெருகத் தாந்தம்
நிரைகாத்துத் தந்த நிதி.'' (பெரும் பொருள் விளக்கம்)

இவை யீண்டெண்ணற்குரியன. உலகாளும் அரசர்க்கு உழவர் ஊன்றுகோலாயுள்ளார் என இவை யுணர்த்தி நிற்கும் திறங்களை யூன்றிப்பார்க்க. எந்த நாடு உழவர்களை வளமாகவுடையதோ அந்த நாட்டை யாளும் அரசனுக்கு மற்ற நிலவேந்தரெலாரும் திறை கொணர்ந்து தந்து அவன் குடைக்கீழ் அடங்கி நிற்பர் என்பது இதன் திரண்ட பொருளாம்.

இனி, இப்பாட்டிற்கு வேறும் ஒரு பொருள் கூறலாகும்.

பயிர் நிழலையுடைய உழவர்கள் தமது குடைக்கீழ்ப் பலருடைய குடை நிழல்களும் வந்து நிற்கக் காண்பர் என்றவாறு.

“நெல்லுக் களத்தின்கண் நின்று பலருவந்து
புல்லிக் கொடுபோகப் போக்கியே—இல்லையென
வந்தவருக் கெல்லாமே வாரிக் கொடுத்தலால்

தந்தை இவனுகுந் தான்" என்றவண்ணம் உபகாரிகளான உழவர் களத்தில் நிற்குங்கால் இரவலர்முதலாயினோர்குடைதாங்கி வந்து பரிசில் கருதி அவனைப்புடை சூழ்ந்து நிற்பர் ஆதலால் "தம் குடைக்கீழ் பல குடை காண்பர்" என்றார் எனினுமாம்.

ஏர் வாழ்வுடையவர் தேர்வாழ்வுடைய தம் அரசனுக்கும் பெருஞ்சிறப்பினை விளைப்பரென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பண்ணன்பால் உணரப்படும்.

## கதை

பண்ணன் என்பவன் சோழநாட்டிலே சிறுகுடி என்னும் ஊரிலிருந்தவன். சிறந்த குணங்களமைந்த உயர்ந்த குடியில் பிறந்தவன். பெருந்திருவுடையவன். வயல் தோட்டம் முதலிய விளை நிலங்கள் மிகுந்த வளமுடையனவாய் இவனுக்கு நன்கு அமைந்திருந்தன. தகுந்த வினையாளர்களைத் தகவுடன் ஏவித் தானும் நேரில் போய்ப் பார்த்துப் பயிர்த் தொழிலை இவன் நன்கு பாதுகாத்து யாண்டும் பண்பாற்றி வந்தான்.

"உழுத சேற்றினை ஆடியி னொத்திடப்
பழுதில் மள்ளர் பயிற்றி வலாரியைத்
தொழுது வெண்முளை தூவித் தெளிந்தபின்
முழுது நீரைக் கவிழ்ப்பர் முறைமையால் (க)

சேறு செய்யும் செயலினர் ஓர் புறம்;
நாறு வாங்கி நடுபவர் ஓர் புறம்;
வேறு வெண்முனை வித்துநர் ஓர் புறம்;
மாறில் பைங்கூழ் வளர்க்குநர் ஓர்புறம்." (உ)

என்ற வண்ணம் இவனுடைய உழவர்கள் கரவு யாதுமின்றி உள மகிழ்வோடு உண்மையாக உழைத்துவந்தார். எவரும் வியந்து நோக்கும்படி பெரு வளங்களை யடைந்து ஏருடைமையில் இவன் மிகச் சிறந்திருந்தான். விளைந்தவற்றையெல்லாம் பிறர்க்கு இவன் விழைந்து வழங்கினான். தனக்கென ஒன்றையும் விரும்பாமல் பிறர்க்கு நலம் புரிந்து பெருகிநின்றுனாதலால் அனைவரும் இவனை உயர் வள்ளல் என உள்ளங் குளிர்ந்து உவந்து புகழ்ந்தார்.

"தனக்கென வாழாப் பிறர்க்குரி யாளன்
பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப்
புன்காழ் நெல்லிப் பைங்காய் தின்றவர்
நீர்குடி சுவையிற் றீவிய மியற்றி" (அகநானூறு.)

எனக் கோற்றங் கோற்றனார் என்னும் புலவர் ஒருவர் இவனைக் குறித்து ஒருமுறை உவந்து கூறியுள்ளார். இவனது தன்மையும், விளைவின் நன்மையும் இதில் குறிக்கப்பட்டிருத்தல் காண்க. "கைவள் ஈகைப் பண்ணன் சிறுகுடிப் பாதிரி கமழும் ஓதி யொண்ணுதல்" எனக் கோவூர் கிழாரும் இவனை வியந்துரைத்துள்ளார். இன்னவாறு புலவர் பாடும் புகழுடையனாய் உழவு தொழில் புரிந்து திருவளமெய்தி இவன் நிலவி நின்றான். ஏர் வகையில் இவன் செய்து நின்ற சீர்மையை நோக்கி அறிஞர் பலரும் உழவு தொழிலை விழைந்து மேற்கொண்டு நிலங்களைப் பண்படுத்தி வளம் பெருக்கி வந்தார். அதனால் அந் நாடு எந் நாட்டினும் சிறந்து மன்னிய திருவோடு மருவி நின்றது. அக் காலத்தில் அரசு புரிந்திருந்த கிள்ளிவளவன் என்னும் சோழ மன்னன் தனக்கோர் தோழனாக மதித்து உழவலன்புடையனாய் இவன்பால் உரிமைசெய்து நின்றான். மறுபுல மன்னர் பலர் திறைகொணர்ந்துதர அவன் முறைபுரிந்துவந்தான். தனிக்குடை நிழற்றித் தலைமையோடு அவன் நிலவி நிற்றற்கு இவன் உதவி மிகவுரிமையாய் நின்றது. "அலகுடை நீழலவர் தம் குடைக்கீழ் பல குடை நீழலும் காண்பர்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். அம்மன்னன் இவனைக் குறித்துப் பாடியிருக்கும் பாடல் ஒன்று இதனடியில் வருதல் காண்க.

"யான் வாழும் நாளும் பண்ணன் வாழிய;
பாணர் காண்கிவன் கடும்பின திடும்பை
யாணர்ப் பழுமரம் புள்ளிமிழ்ந் தன்ன
ஊணொலி யரவம் தானுங் கேட்கும்
பொய்யா எழிலி பெய்விடம் நோக்கி
முட்டைகொண்டு வற்புலம் சேரும்
சிறுநுண் எறும்பின் சில்லொழுக் கேய்ப்பச்
சோறுடைக்கையர் வீறுவீ றியங்கும்

இருங்கிளைச் சிறாஅர்க் காண்டும், கண்டும்
மற்று மற்றும் வினவுதும் தெற்றெனப்
பசிப்பிணி மருத்துவன் இல்லம்,
அணித்தோ? சேய்த்தோ? கூறுமின் எமக்கே."
(கிள்ளிவளவன்).

பழுத்தமரத்தில் பறவைகள் ஒலித்தல் போல் இவன் வீட்டில் இரவலர் வந்து விருந்தருந்துத லாகிய ஆரவாரங்கள் கேட்கும் எனவும், மழைக்காலத்தில் தம் முட்டைகளை எடுத்துக்கொண்டு மேட்டு நிலத்தை நோக்கிச்செல்லும் எறும்புக்கூட்டம் போல் கிளைகளும், சிறார்களும் இவன் மனையில் உண்டுவிட்டுச் சோறுடைக் கையராய் வேறு வேறு செல்வர் எனவும், பசிப்பிணிக்கு இவன் ஓர் மருத்துவன் எனவும், தன் ஆயுள் நாளளவும் யாதொரு நோயுமின்றி இவன் இனிது வாழவேண்டும் எனவும் அம்மன்னன் மன முருகி இவனை வாழ்த்தி யிருத்தல் காண்க. இதனால், அவ் அரசன் இவனை உயிராதாரமாக் கருதியிருந்த வுண்மை நன்கறியலாகும்.

" வெள்ளி தென்புலத் துறைய விளைவயற்
பள்ளம் வாடிய பயனில் காலை
இருக்கண் இரியல் போக வுடைய
கொடுத்தோன் எந்தை கொடைமேந் தோன்றல்,
வெல்லும் வாய்மொழிப் புல்லுடைப் பண்ணன்
வினைப்பகடு, ஏற்றம், மேழி, திணைத்தொடர்
நாடொறும் பாடேனாயின், நானு
மணிகிளர் முன்றில் தென்னவன் மருகன்
பிணிமுரசிரங்கும் பீடுகெழு தானை
அண்ணல் யானை வழுதி
கண்மாறிலியர் என் பெருங் கிளைப் புரவே." (புறம்)

இது, அளக்கர் ஞாழார் மகனார் மள்ளனார் என்னும் புலவர் பாடியது. இப் பண்ணனுடைய எருது, ஏத்தம், மேழி முதலிய உழவு நலங்களை நாள்தோறும் யான் பாடேனாயின் வழுதி மன்னன் கண்ணோட்டம் இலனாய் என் குடியைக் காவாதொழிக என இதில் அவர் சூளுரைத்துள்ளமை காண்க. பல குடை நீழ

னுடைய முடி மன்னர் பலரும் அலகுடை நீழலுடைய இவன் பால் ஆர்வமுற்றிருந்ததும், அந் நிலையினை அறிந்து உலகம் இவனைப் புகழ்ந்து வந்ததும் இதனுலும் இனிதுணரலாகும்.

"யானை நிரையுடைய தேரோ ரினுஞ்சிறந்தோர்
ஏனை நிரையுடைய ஏர்வாழ்நர்; — யானைப்
படையோர்க்கும் வென்றி பயக்கும் பகட்டேர்
உடையோர்க்கு அரசரோ ஒப்பு." (பெரும்பொருள்.)

பைங்கூழ் வளர்க்கும் பயனுடையார்ப் பற்றிநின்றே
செங்கோல் வளரும் சிறந்து.

உழவினைச் செய்வாரே அரசனை உயரச் செய்வார் என்பது இதனுல் கூறப்பட்டது.

---

1035. ஈதலே செய்தான் எவர்க்கும் இரந்திலனேன்
கோதில் வடுகன் குமரேசா—யாதும்
இரவார் இரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர். (ரு)

இ—ள்.

குமரேசா! உழுது நின்ற வடுக நாதன் என்றும் இரவாது ஏன் எவர்க்கும் ஈந்து வந்தான்? எனின், கை செய்து ஊண் மாலையவர் இரவார் இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர் என்க.

கைசெய்து = கையால் உழுதலைச் செய்து. உழுதல் என்பது இதில் வருவிக்கப்பட்டது. இங்ஙனம் கொண்டது அதிகாரத்தால் என்க. மாலை = வரிசை, இயல்பு, ஒழுங்கு. ஊண் மாலையவர் = உழுதுண்டலை இயல்பாகவுடையவர். அதிகார முதலியவற்றை மேற்கொண்டு வாயடி அடித்து நிற்பவர் எவ்வளவு மாண் பொருள் எய்தினும் வாங்கி யுண்பவரே யாவராதலால் கைசெய்தூண்ணும் இவர்போல் இரவாமலும், கரவாமலும அவர் ஈய இயலாதென்க.

இரவார் = இரத்தலைச்செய்யார். இரத்தல் = யாசித்தல். ஒன்று என்றது இரந்துவந்தவர் விரும்பியதொன்றனை என அவ் ஈயும் பொருளின் எண்மை தோன்ற நின்றது.

கரவாது = மறைக்காது; இல்லை யென்னாது என்க. கரத்தல் = மறைத்தல். ஈவர் = கொடுப்பர். ஈதலும், இசைபட வாழ்தலுமாகிய உயிரூதியங்கள் உழவர்க்கே இயல்பாக உளவாம் என்பதாம்.

இரவாது நிற்றற்கும், கரவாது ஈதற்கும் கைசெய்தல் காரணமாகுமாதலால் அதன் காட்சி தோன்றவைத்தார். மாலையவர், இரவார்; ஈவர்; என்றதனால் மற்றையவர்க்கு இவ் விரண்டும் ஒரு சேர அமையாதென்பதாயிற்று. இரந்து ஈயினும், கரந்து தரினும் அவை சிறந்தபடா என்க.

மேல், உழுவார் அரசனையும் உயரச் செய்வர் என்றார்; இதில், யாண்டும் இரவாது எவர்க்கும் அவர் ஈவரென்கின்றார்.

தம் கையால் உழுதலைச் செய்துண்ணும் இயல்பினை யுடையார் பிறரிடம்போய் இரந்து நில்லார்; தம்பால் வந்து இரந்து நின்றவர்க்கு இல்லை யென்னாமல் யாதாவதொன்றைக் கொடுப்பரென்பதாம்.

இரவு, வறுமையின் கொடுமையால் நேரும்; ஈதல், பொருள் நிலையால் உண்டாம்; "உற்ற தொழில் செய்வோர்க்கு உறுபஞ்சம் இல்லையாம்" என்றபடி தம் கையால் உழுதலைச் செய்வோர் வளமிகப் பெறுவர் ஆதலால் அவர் இரவின்மேல் எழார்; தம்மை நாடி வாடி வந்தவர்க்குத் தம்மிடம் உள்ளதை இல்லையென்னாமல் உவந்து கொடுப்பர் என்க.

இரத்தல் இழிந்தது; ஈதல் உயர்ந்தது; இகழ்ச்சிக்கு ஏதுவான இரவினைச்செய்யாமல் புகழ்ச்சிக்கேதுவான ஈகையையே உழவர் செய்வரென்றதனால் அவரது உளநிலை இனிது புலனும்.

செய் செய்தென ஏதேனும் ஒருவகையில் உழவினை வெளிப்படையாகக் கூறாமல் கையினைக் குறித்தது அதனைச் செய்யுந் திறந் தெரிதலோடு இரவாது ஈதற்குரிய அதன் இயைபுந் தோன்ற என்க.

உழவினைச் செய்த கை இழிவினைச் செய்யாது;
யாண்டும் உயர்வினையே செய்யும் என்றபடி. இதனால மேழி பிடித்த கையின் மேன்மை தெளிவாம்.

"சீர்படைத்த பூபாலர் செங்கோல் பிடிப்பதற்குப்
பேர்படைத்த மேழி பிடிக்குங்கை—கார்படைத்த
மிஞ்சுமதி கீர்த்தியைப்போல் மேதினியெல்லாந்தழைக்கச்
செஞ்சாலி நாற்றைத் தெளிக்குங்கை—எஞ்சாமல்
வெள்ளைக் களைகளைந்து வீறு பயிர் தழைக்கக்
கள்ளக் களைகளைந்த கற்பகக்கை—வள்ளுறையும்
விற்போர் மதகரிப்போர் வெம்பரிப்போர் வெற்றிப்போர்
நெற்போர் முதற்போர் நெரித்திடுங்கை—கற்பகம்போல்
ஆதுலர்க்குச் செம்பொன் அளிக்குங்கை. ஆகமங்கள்
வேதபுராணங்கள் விரிக்குங்கை—நீதிநெறி
மானங் குலங்கல்வி வண்மையறிவுடைமை
தானம் தருமம் தழைக்குங்கை—யானதமிழ்
கல்லார்களென்னுமல் கற்றோர்களென்னுமல்
எல்லாரையும் காத்தீ டேற்றுங்கை—வல்லமைசேர்
மைம்மாமுகில் உலகை வாழ்விக்கு மேன்மைபோல்
கைம்மா றிலாதளித்த கற்பகக்கை—சும்மையார்
ஊருணி நீர்போல் உலகத்தவர்க்கெல்லாம்
பேரறிவால் ஈயும்ப்ரதாபக்கை—பாரில்
உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
கொடுக்க இசைந்த குளிர்க்கை—இடுக்கணின்றன்
மாமறையோர் மன்னர் வணிகர் முதலாகத்
தாமலையாமற்கொடுத்துத்தாங்குங்கை" (திருக்கைவழக்கம்).

கைசெய்தூண் மாலையவர் கையைக்குறித்து இஃதுணர்த்தி நிற்றல் காண்க. இன்னவாறு புகழறங்களை வளர்த்துத் தன்னைக் கொண்டவரை உயர்நிலையில் நிறுத்தும் இயல்பினதாதலால் உழவினை மக்கள் உறுதியாக உவந்துகொள்ள வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

"மண்பதம் நோக்கி மலிவயலும் புன்செய்யும்
கண்பட ஏர்பூட்டிக் காலத்தால்—எண்பதனும்
தத்துநீ ரார்க்குங் கடல்வேலித் தாயர்போல்
வித்தித் தருவான் விளைவு" (புறப்பொருள்)

உழவர் கைசெய்து உலகிற்கு உதவி நிற்குந் திறத்தைக் குறித்து இதுவும் உணர்த்தி நிற்றல் காண்க.

மானமிழந்து இரந்து இழிந்துபடாமல் ஒருவன் உயர்ந்து வாழவேண்டுமாயின் அவன் உழவினை அமைந்து ஆளவேண்டும் என்பது கருத்து.

தாம் இரந்துநில்லாமல் தம்மிடம் வந்து இரந்தவர்க்கெல்லாம் உவந்து கொடுக்குந்தன்மை உழுதுண்பார்க்கே உண்டாம் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வடுகநாதன் பால் உணரப்படும்.

## கதை

வடுகநாதன் என்பவன் தொண்டை நாட்டிலே வாயற்பதி என்னும் ஊரிலிருந்தவன். ஏர்த்தொழிலாளன். முயற்சியில் நல்ல ஊக்கமுள்ளவன். தனக்கமைந்திருந்த விளைநிலங்களை நன்கு பண்படுத்தி வளமிகச்செய்து யாருக்கும் உபகாரியாய் இவன் அமர்ந்திருந்தான். அன்பும் பொறுமையும் அடக்கமுமுடையவன். எவரிடமும் இன் சொல்லாடும் இனிய நீர்மையன். குறிப்பறிந்தீயும் கொடை வள்ளலாய்ச் சிறப்புற்றிருந்தானாதலால் நாளும் பலர் இவனை நாடி வந்தார். திருந்திய பண்புடனின்று விருந்து புறந்தந்து இங்ஙனம் இருந்து வருங்கால் இவனுடன் பிறந்திருந்த தம்பியாகிய நாகையன் என்பவன் இறந்துபோயினான். அவ்வமயத்து இவனைத்தேடி ஓர் புலவன் வந்தான். அவனைக் கண்டவுடனே எதிர்கொண்டுபோய் இனிதுபசரித்து அயலகத்திலிருத்தித் தன் மனையில் நிகழ்ந்துள்ளதை யறியின் அவன் உண்ணாது போய்விடுவான் என்று உளைந்து அவ்வுளவினை வெளிப்படுத்தாமல் விரைவிலாக்கி அவனுக்கு விருந்தூட்டினான். உண்ட அவன் அவ்வுண்மையைக்கண்டு உளமிக வருந்தி இவனது பெருந்தன்மையை வியந்து புகழ்ந்து பாடினான். அடியில் வருவது காண்க.

"தன்னுடன் கூடப்பிறந்த அருந்துணைத் தம்பியுயிர்
அந்நிலை மாண்டது தோன்றாமல்முடிவைத் தன்னமிட்டான்
மன்னவர் போற்றிடவாழ் செங்கலங்கை வடுகனுக்குக்
கன்னனும் சோமனுமோ இணையாகக் கழறுவதே"

இவனது வள்ளற் குணமும் உள்ளப்பான்மையும் இதனால் இனிதறியலாகும். உழவுகருவிகளுள் ஏதேனும் ஒன்று குறைவு நேரினும் அதனையும் கூடப் பிறரிடம்போய் இவன் இரவலாக வாங்கான். இன்னவாறு எவ்வகையிலும் இரந்து நில்லாமல் எவர்க்கும் ஈந்து வந்தான் ஆதலால் இவன் இசைமிகுந்து நின்றான். தான் மெய்வருந்தி உழுதலைச் செய்து உயிர்களை இவன் ஆதரித்துவந்த அருமையை வியந்து அனைவரும் இவனை உவந்து புகழ்ந்தார். உழவர் இரவாது ஈவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

"நேயத்துடன் பிறந்தோன் பிணமூடி, நெருப்பவித்துத்
தாயொப்பனவெதிர்கொண்டழைத்தே "தன்னுடன்" எனவே
ஆயத்தமிழ்கொண்டருங்கவி ராயனுக் கன்புசெய்த
வாயற்பதியில் வடுகப்பனும் தொண்டை மண்டலமே."
(தொண்டை மண்டல சதகம்)

இவன் சரிதம் இதன் கண்ணும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க.

"இறுக முடிந்தே இரப்பார்க்கொன் றீயாத்
தறுகணரைக் கொல்லத் தகாதோ—சிறுகை
வடுகனையும் பேதை வரதனையும் கொன்றாய்
நடுவாமோ ஈது நமா!" (ஒளவையார்)

இஃது இவன் இறந்தபோது வருந்தியுரைத்தது. இரவலர்க்கு உபகாரியாய் நின்று இவன் ஈந்து வந்த வுண்மையும், உலகம் இவனை உவந்துநின்ற தன்மையும் இதனாலும் இனிதுணரலாகும்.

கெட்டாரைத் தாங்குதலால் கேடுபடாத் தொழிற் குலத்தோர்
ஒட்டாரென் றொருவரையும வரையாத வுயர் நலத்தோர்
பட்டாங்கு பகர்ந்தோர்க்கும் பசியகலப் பைங்கூழை
நட்டாரே வையமெல்லா நலந்திகழ நட்டாரே. (ஏரெழுபது.)

வேள்ளாண்மை செய்யும் விழுமியோர் யாரிடமும்
கொள்ளார் கொடுப்பர் குவித்து.

இரவாது ஈயுந்தன்மை உழுவார்க்கே உண்டாம் என்பது இதனால் கூறப்பட்டது.

1036. ஆதன் உழவை அகன்றபோ தேன்துறவோர்
கோதடைந்து நொந்தார் குமரேசா—நீதில்
உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை. (சு)

இ—ள்.

**குமரேசா!** ஆதனுடையகை உழுதலைச் செய்யாது அடங்கி நின்றபொழுது துறந்தவர்களும் ஏன் வருந்தி நொந்தார்? எனின், உழவினார் கைம்மடங்கின், விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கும் நிலை இல்லை என்க.

இது, உழவர் இல்லையாயின் எவர்க்கும் நிலையில்லை என்கின்றது. கை மடங்கின் = உழவாதுகை தம் தொழிலாகிய உழுதலைச் செய்யாது வாளா இருப்பின். தாமடங்கின் என்னாது ஈண்டும் கையைக் குறித்தது அதன் செய்திறமும், மெய் நிலையும் தெரிதர என்க.

விழைவது என்றது உணவினை. எல்லாராலும் விழைந்து கொள்ளப்படுவதாதலால் உணவை இங்ஙனம் உரைத்தருளினார். விழைவு = விருப்பம். உம்மை சிறப்புணர நின்றது. அளபெடை இன்னிசை தோன்ற வந்தது.

விட்டேம் என்பார் என்றது முற்றத்துறந்த முனிவர்களை. விடுத்தல் = துறத்தல். "உணவு நீர் துறந்து உதிர் சருகு ஊதை உட்கொள நின்றனன் உரவோன்" என்றபடி தவ நிலையை மேற்கொண்டு துறவோர் நிற்பாராதலால் அவர் இங்ஙனம் சுட்ட நின்றார். மனைவி மக்கள் முதலிய புறப்பற்றுக்களெல்லாவற்றையும் ஒருங்கே ஒழித்துவிட்டாலும் உணவினை விட முடியாமல் உண்டு திரிவாராதலால் அதனையும் "விட்டேம்" என்னும் அவர் இங்கு அதிகரித்து நின்றார் என்க.

உணவு முதலாக உலக ஆசைகள் முழுவதும் அறவே துறந்து உளமடங்கி யிருக்கும் துறவிகளுக்குங்கூட உழவர்கை மடங்கினால் நிலையில்லை என்றபடி, விட்டேம் என்பார்க்கும் நிலையில்லை என்றதனால் விடாதவரது நிலை சொல்ல வேண்டாவாயிற்று.

வினைவினையுடைய உழவர் இல்லையாயின் விழைவில்லாத துற வோரும் தம் அற நிலையில் நிலைத்து நிற்க முடியாது என்றவாறு. இதனால் அவரது நிலையுடைமையின் அருமை இனிது புலனும்.

மேல், உழவர்கள் உபகாரிகளாய் நின்று உயிர்களை ஆதரிப்ப ரென்றார்; இதில், அவர் இல்லையாயின் எவரும் இனிது வாழ்ந்து நில்லார் என்கின்றார்.

உழவருடைய கை உழுதலைச் செய்யாது அடங்கி நிற்குமா யின் ஆசை முழுவதும் அறவே துறந்தேம் என்னும் துறவிகளு க்கும் நிலை இல்லை என்பதாம். கைசெய் தூண்ணும் இயல்பின ராகிய உழவர்கள் பிறரிடம் போய் ஒரு பொருளையும் இரந்து வேண்டார்; யாண்டும் உபகாரிகளாய் நின்று எவர்க்கும், இதம் புரிந்து தருவர்; என முன் உரைத்ததை நோக்கி அவரது உப காரத்தை எதிர்நோக்கி நிற்கும் உலகர்க்கே யன்றி அனைத்தையும் அறவே துறந்த அறவோர்க்கு அவர் தேவையில்லை அன்றோ? என்று சிலர்கூற, உழவர் இல்லையாயின் விழைவில்லாத அவர்க் கும் நிலையில்லை என அவர் விடைக்கு விடை கொடுத்தபடி இஃது உருவெடுத்துள்ளமை உணரலாகும்.

உழவர்கள் தொழில் செய்யாராயின் விளைவுகள் உளவாகா; ஆகவே இல்வாழ்க்கை யாதும் இனிது நடவாது; துறந்தார்க்கும் துவ்வாதவர்க்கும் துணையாயுள்ள அவ் வாழ்க்கை நில்லா தொழியவே எல்லார் வாழ்வுகளும் இல்லா தொழியும் ஆதலால் அவர் கை மடங்கின் எவர்க்கும் நிலை என்க.

"வெய்யகலி வலி தொலைக்கும் வேளாளர் விளைவயலில்
செய்யின்முடி விளம்பாரேல் விளம்புவன சிலவுளவோ?
மையறும் அந்தணர் விளம்பார் மறை; மனு மன்னவர் விளம்பார்;
ஐயமறு புலவோரும் அருந் தமிழ் நூல் விளம்பாரே"
(ஏரெழுபது)

அந்தணர் அரசர் முதலிய அனைவரும் உழவர் செயலாலே தான் நிலவியுள்ளார்; அவர் செயல் இல்லையாயின் ஒருவர்க்கும் நிலை இல்லை என இதுவும் உணர்த்திநிற்றல் காண்க.

" பார்பூட்டு மன்னர் பரிகரி பூட்டக், கதிரோன்,
தேர்பூட்ட ஏர்பூட்டும் செம்போற்கை—வீரமதன்
ஐங்கோல் தொடுக்க அணைகோல் எடுக்க உழும்
பைங்கோல் பிடிக்கும் பதுமக்கை " என்றபடி உழவர்கை

உலக நிலைக்கு உறுதியாய் நிற்குமென்க. உழவர் கையை விரித்தால் இவ் உலகம் விரியும்; அவர் அதனை மடக்கிக் கொண்டால் இது மடங்கி மடிந்துபோம் என்பதாம். உழவர் கைக்குள்ளே தான் உலகம் ஒடுங்கி யுள்ள தென்பது குறிப்பு.

உழவர் உழுதலைச் செய்யாராயின் இவ்வுலகில் எவரும் இனிது வாழார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை ஆதன்பால் உணரப்படும்.

## கதை.

ஆதன் என்பவன் பாண்டி நாட்டிலே போந்தை என்னும் ஊரிலிருந்தவன். இவனுடைய தந்தை பெயர் நெடுவேள் ஆதலால் அனைவரும் இவனை நெடுவேளாதன் என அழைத்துவந்தார். இவன் உண்மையும் துணிவும் ஊக்கமு முடையவன். உழவு தொழிலை விழுமிதாகச் செய்து வளமிகப் பெற்று வேந்தரும் விழைய இவன் விளங்கி யிருந்தான். அக்காலத்தில் சிறந்திருந்த ஓமன் என்னும் குறுநில மன்னன் இவன்பால் பெரு நண்புடையனாய் உரிமைசெய்து வந்தான். அவனுக்குப் பேரழகியாகிய ஒரு பெண்மகளிருந்தாள். அவளை மணந்துகொள்ள விழைந்து முடியுடை மன்னர் மூவரும் முனைந்து நின்றார். அன்பால் கொள்ளாது தம் அதிகாரத்தால் வலிந்துகொள்ள அவர் துணிந்து நின்றாராதலால் அவரது நிலையினை யறிந்து இவனிடம் வந்து அவன் நெடிது சூழ்ந்தான். வணங்கி வந்தவர்க்கல்லது இணங்கலாகாதென்று இவன் துணிந்து கூறியபடியால் அவனும் நிமிர்ந்து நின்றான். இவனுடன் உறவுகொண்டு அவன் ஊக்கி நின்ற படியை அனைவரும் நோக்கி வியந்தார்.

" ஏர்பரந்த வயல் நீர் பரந்த செறுவில்
நெல்மலிந்த மனைப் பொன்மலிந்த மறுகிற்

படுவண்டார்க்கும் பன்மலர்க் காவின்
நெடுவேளாதன் போந்தை யன்ன
பெருஞ்சீர் அருங்கொண்டியளே; கருஞ்சினை
வேம்பும், ஆரும், போந்தையும், மூன்றும்
மலைந்த சென்னியர் அணிந்த வில்லர்
கொற்ற வேந்தர் வரினும் தற்றக
வணங்கார்க்கு ஈகுவன் அல்லன்; வண்டோட்டுப்
பிணங்கு கதிர்க் கழனி நாப்பண் ஏமுற்று
உணங்குகல னாழியிற் றோன்றும்
ஓரெயில் மன்னன் ஒருமட மகளே." (புறநானூறு)

இது, குன்றூர் கிழார் மகனார் என்னும் புலவர் கூறியது. இவனுடைய ஊராகிய போந்தையோடு உவமித்து அவ் வேந்தன் மகளை இதில் அவர் விளக்கி யிருத்தல் காண்க. இங்ஙனம் ஏர் வாழ்க்கையால் பெருவளமடைந்து நின்ற இவன் தன்பால் வரு பவர்க்கெல்லாம் மகிழ்ந்து கொடுத்துவந்தான். பயிர் நிலையில் பாடுபட்டுப் பயன்மிகப் பெற்று உயிர்களை ஆதரித்து வந்தானாத லால் அந் நாடு முழுவதும் இவனை நயந்து நின்றது. இவ்வண்ணம் நின்றுவருங்கால் அம் மன்னர் மூவரும் மண்டி யெழுந்து இவ னுடைய நண்பனாகிய அவ் ஓமனை வளைந்து உருத்து வென்றார். அவன் பெருந்துயரடைந்து பேதுற்று நொந்தான். அவனது நிலையினை நினைந்து நெடுங்கவல் கொண்டு தனது வினை நிலங்களை யெல்லாம் வெறுத்து விடுத்து இவன் வெய்துற்றிருந்தான். தன் தொழிலாகிய உழவினைத் துறந்து இவன் வறிதே இருந்த காலத் தில் அறவோர் யாவரும் ஆதர வீழ்ந்து அலமந்தலைந்து நிலை குலைந்து நொந்தார். "உழவினார் கைம் மடங்கின், விழைவதும் விட்டேம் என்பார்க்கும் நிலை இல்லை" என்பதை உலகம் இவன் கண் உணர்ந்து நின்றது.

பத்தியினைத் திடுந் தெய்வம் பணிவார்க்கும், தற்பரமா
முத்தியினைத் திடுஞான முதல்வருக்கும், இன்னமுதம்
வைத்து வினைத்திடுவார்க்கும், வல்லவர்க்கும், பெருக்காளர்
வித்து வினைத்திடிலன்றி வேண்டுவன விளையாவே. (ஏரெழுபது)

ஏர்நடவா தெய்த்திருப்பின் இவ்வுலகில் எவ்வுயிரும்
நேர்நடவா தாகும் நிலைத்து.

உழவர் தொழில் செய்யாராயின் உயிர்கள் நிலை செய்யா என்பது இதனால் கூறப்பட்டது.

---

1037. பண்டு புழுதியெழப் பன்முறையும் பாணதரன்
கொண்டுழுதான் என்னே குமரேசா—கிண்டித்
தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும். (எ)

இ—ள்.

குமரேசா! தன் நிலம் புழுதி எழும்படி பல முறையும் உழுது பாணதரன் ஏன் உலர விட்டான்? எனின், தொடிப் புழுதி கஃசா உணக்கின் பிடித்து எருவும் வேண்டாது சாலப் படும் என்க.

இது, நிலத்தை உழவேண்டிய நிலை கூறுகின்றது.

தொடி = ஒரு பலம். "தொடி என் கிழவி ஒரு பலமாகும்" (பிங்கலந்தை)

கஃசு = காற்பலம். "கஃசு காற்பலம்" என்பதும்காண்க.

உணக்கின் = காயவிடின். உணக்கல் = வெயிலில் உலர்த்தல். தொடிப் புழுதி கஃசா உணக்கின் என்றது ஒருபல மண் புழுதி காற்பலமாம் வண்ணம் தொய்ய உழுது உலரவிடின் என்றபடி. பிடித்து என்றது ஒரு கைப்பிடியினளவினது என்க. பிடியளவாவது ஐந்து விரல்களையும் குவித்துக் கவித்தபொழுது உள்ளங்கையகத்து அமைந்து நிற்பது. பிடிஎருவு என்னாது பிடித்து எனக்குறிப்பு முற்றாகக் குறித்தது வினைத்திறந்தோன்ற

சால என்பது சால் என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந்த குறிப்பு வினை எச்சம். இது மிகுதியை யுணர்த்தி வரும் "சால உறுதவ நனிகூர் கழி மிகல்" (நன்னூல்) சாலப்படும் = மிகுதியாக விளையும். "எரு வேண்டாது படும்" என்றதனால் விளைவுக்கு இன்றியமையாது அது வேண்டப்பட்டு நிற்கும் மெய்மை யுணரலாகும்.

மேல், உழுவார் இல்லையாயின் உலகம் இல்லை என்றார்; இதில், அவ்வுழவினை உறுதியுறச்செய்யும் உபாயங் கூறுகின்றார்.

ஒரு பலப் புழுதி காற்பலமாகும்படி நன்றாக உழுது உலரவிடின் அந்நிலம் கைப்பிடியளவு எருவும் இடவேண்டாமலே பெரிதும் விளையும் என்பதாம்.

ஒரு நிலம் வளம்பெற நின்று நன்கு விளையவேண்டுமாயின் அது நிரம்ப உரம்பெற வேண்டும்; "அறிவிலேவிளையுமா? எருவிலே விளையுமா?" என்ற பழமொழிப்படி எவ்வளவுக்கு எவ்வளவு எரு இடப்படுகின்றதோ அவ்வளவுக்கு அவ்வளவு அந்நிலம் பணைத்து விளையும்; இங்ஙனம் பூரணமான விளைவுக்குக் காரணமாயுள்ள எருவு சிறிதும் இடவேண்டாமலே உழவின் உறுதியால் பெரிதும் விளையும் என்பார் "புழுதி உணக்கின், பிடித்து எருவும் வேண்டாது சாலப்படும்" என்றார். உழவுக்கும் எருவுக்குமுள்ள உறுதியும், அவ்விரண்டும் விளைவுக்கு வேண்டியிருக்கும் உரிமையும் இதனால் இனிது புலனாம்.

கூடை எரு, வண்டிஎரு என வேறு கூறாது "பிடித்து எருவும்" என இங்ஙனம் இறுகப்பிடித்துக் கூறியது இவ் அளவின் சிறுமை கண்டு அவ்வுழவின் பெருமை காண. உம்மை அத்தன்மை யுணாநின்றது.

தொடிப்புழுதி கஃசாம் வண்ணம் எப்படி உழுவது? அங்ஙனம் உழுவதினால் விளைவு எங்ஙனம் மிகுந்துபடும்? எனின், நிலத்தைப் பல முறையும் நெருக்கிச்சாலடித்து ஆழ உழுது இடைகட்டி யில்லாமல் நொறுக்கிப் புழுதியாக்கிப் போட்டுவிடின் காற்றும் வெயிலும் படப்படக் காய்ச்சலேறிக் கனங்குறையும்; குறையவே கீழே நிலவலியாலும், மேலே சூரிய கிரணங்களாலும் கவரப்பட்டுத்துவரப் பசித்த குடல்போல் துய்த்தலை விழைந்து கிடக்கும்; இங்ஙனம் காய்ந்து கிடந்த அந் நிலப் புழுதி மழை பெய்தவுடன் நிலையான வுரமெய்தித் தன்பால் வீழ்ந்த வித்துக்களின் வேர் ஆழ்ந்து செல்லும்படி மென்மையோடு மேவியிருந்து பின்பு அவை பயிராய் விம்மி வளர்ந்து மிகுந்து விளையும்படி அமைந்து நிற்கும் ஆதலால் விளைவிற்கு உறுதியாக உழவினை இங்ஙனம் தெளிவுற உணர்த்தியருளினார் என்க.

தொடியையும், கஃசையும் தொடுத்துவைத்து அடிகள் இதில் உழவுக்கு அளவு சொல்லியிருக்கும் அழகை யூன்றிப்பார்க்க.

"எழுதொழு மறைவிளங்கும் இயலிசை நாடகம் விளங்கும்
பழுதிலா அறம் விளங்கும் பார்வேந்தர் முடிவிளங்கும்
உழுதுசால் பலபோக்கி உழவருழக்கிய வெங்காற்
புழுதியால் விளையாத பொருளுளவோ புகலீரே." (ஏரெழுபது)

அடிகள் உரையைத்தழுவி உழவின் திறனை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. புழுதி யெழ வுழுதலால் அளவில்லாத விளைவுகள் உளவாம் ஆதலால் அங்ஙனம் உழுது பயன் கொள்ளவேண்டும் என்பது கருத்து.

குழைய உழுத நிலம் அதிகமாக விளையும் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாணதரன்பால் உணரப் படும்.

## கதை.

பாணதரன் என்பவன் தொண்டை நாட்டிலே குமிழம்பட்டு என்னும் ஊரிலிருந்தவன். வேளாண் மரபினன். இவனுடைய தந்தையார் பெயர் வேலூர்கிழார். நிலங்களைப் பண்படுத்தி வளம்பெறச் செய்வதில் இவன் மிகவும் வல்லவன். யாவாமாட்டும் இரக்கமுள்ளவன். ஈகையும் இன்சொல்லும் என்றும் இயல் பாகவுடையவன். தனக்கமைந்திருந்த சிறு நிலப் பகுதியைத் தானே போய் நின்று உறுதிபெற உழுது இவன் ஊக்கி முயன் றான். உழவு தளரின் விளைவு தளர்ந்து இழவு வளருமென இவன் உணர்ந்திருந்தானுதலால் உழவெருதுகளை அழகுடைய னவாகவும் வலியுடையனவாகவும் அமைத்துக்கொண்டு தொழிலை ஆர்வமுடன் ஆற்றிவந்தான்.

"வானமழை பொழிந்தாலும் வளம்படுவ தெவராலே,
ஞானமறை யவர் வேள்வி நலம்பெறுவ தெவராலே,
சேனைகொடு பெருமன்னர் செருக்களத்திற் செருக்குமத
யானைவலி எவராலே, இவரெருத்தின் வலியாலே."

என்றவண்ணம் எவரும் வியந்து சொல்லும்படி இவனுடைய எருதுகள் விளங்கியிருந்தன. கோடைக் காலத்தில் பல முறை யும் சென்று புழுதியெழ வுழுது வெயிலில் உலரவிட்டு மழை

பெய்தவுடன் பருவமறிந்து விதைத்துப் பாடுபட்டு வந்தானுதலால் மிகு நில முடைய பிறரெவரினும் இவன் பெருவள மடைந்தான். "சுட்டி யுழவு பெட்டி விளைவு" "சித்திரை மாதத் துழவு பத்தரை மாற்றுத் தங்கம்" என்னும் பழமொழிகளை யாரிடமும் உளமகிழ்ந்துரைத்து அம் முதுமொழிகளுக்கு இவன் வழிமுதலாய் நின்றான். இங்ஙனம் நின்று வருங்கால் உலகில் பஞ்சம் தோன்றியது. அக் காலத்தும் இவன் நிலங்கள் வறந்து படாது வளம் பயந்து நின்றன. பஞ்சத்தால் நிலை குலைந்து பல இடங்களினு மிருந்துவந்த மக்களெல்லாரையும் இவன் பரிந்து பாதுகாத்தான். அவருள் கல்வியறிவுடைய புலவர்களை மட்டும் யாண்டும் போகவிடாமல் தன் இல்லின்கண்ணேயே இடந்தந்து இருக்கச் செய்து வேண்டிய உதவிகளை அவர்க்கு இவன் விழைந்து செய்துவந்தான். பஞ்சகாலத்தில் பண்டிதர்களை ஆதரித்து வந்தமையால் பாணதரன் என்னும் பெயர் இவனுக்குச் சாலவும் பொருந்தும் என யாவரும் பகர்ந்து நின்றார். வளங் குறைந்த காலத்தும் எரு முதலியன யாதும் இடாமலே தன் உழவு முறையால் இவனது நிலம் விளைந்து நின்றதை யறிந்து அனைவரும் வியந்து புகழ்ந்தார். "தொடிப் புழுதி கஃசா உணக்கின்பிடித் தெருவும் வேண்டாது சாலப்படும்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

"கோனூருழவுக் குடியானவன்றன் குமிழும்பட்டு
வேளூர்க்கழாரொருவேளாளன் பஞ்சம் விடியளவும்
நாவூரினுள்ள புலவோர்க்குந்தேசத்து நாவலர்க்கும்
மானூரிலன்னங் கொடுத்தளித்தான் தொண்டைமண்டலமே"
(தொண்டை மண்டல சதகம்)

உழவின் திறத்தால் இவன் பெயர் பெற்றுப் பெருவளமெய்தி உயிர்களுக்கு உதவிநின்ற வுண்மை இதன் கண்ணும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க.

போற்று நிலத்தைப் புழுதி யேழவுழுதால்
தோற்றும் வளங்கள் சுரந்து.

புழுதிபட வுழவேண்டும் என்பது இதனால் கூறப்பட்டது.

1038. நீரோடு காப்பை நிறைத்துப் புலவியரேன்
கூர்விளைவு கொண்டார் குமரேசா—சீரான
ஏரினு நன்றால் எருவிடுதல் கட்டபின்
நீரினு நன்றதன் காப்பு. (அ)

இ—ள்.

குமரேசா! கூடபுலவியனார் நீரையும் காப்பையும் நிலத்தில் சீர்பெற அமைத்து ஏன் ஏர்வினை செய்து மிகு விளைவு கொண்டார்? எனின், ஏரினும் எரு இடுதல் நன்று; கட்டபின் அதன் காப்பு நீரினும் நன்று என்க.

இது, எருவிடுதல் முதலிய திறங் கூறுகின்றது.

ஏர் என்றது அதனால் செய்யப்படும் உழவினை யிங்கு உணர்த்தி நின்றது. இன உருபு எல்லைப்பொருளது.

கட்டபின் = களையெடுத்தபின். கட்டல் = களைந்து எறிதல், அகழ்ந்து நீக்குதல். "கண்ணெனக் குவளையும் கட்டல் ஓம்பினார்" (சிந்தாமணி) "நட்டதோர் குழுவினை நாடாததோர் குழு, ஒட்டலர் போலநின் றொருத்தல் உன்னியே, அட்டனராமென அடாதவான்களை, கட்டனர் வேற்றுமை யுணருங் காட்சியார்" (கந்தபுராணம்) களையின் நிலையையும், அதனைக் களைதற்குரிய காரணத்தையும் இதில் வருணித்திருத்தல் காண்க.

காப்பு = காவல். இதனை இறுதியில் வைத்தது விளைவின் முடிவில் செய்யப்படும் அதன் உறுதி கருதி.

மேல், உழவும் எருவும் விளைவுக்கு உறுதியென்றார்; இதில், அவ் இரண்டோடு மேலும் மூன்று வேண்டு மென்கின்றார்.

உழுதலினும் பயிர்க்கு எரு இடுதல் நன்று; அங்ஙனம் இட்டுக் களை எடுத்தபின் நீர் பாய்ச்சலினும் அதனைக் காத்தல் நன்று என்பதாம்.

உழுதல், உரமிடுதல், களை யெடுத்தல், நீர் மடுத்தல், காத்தல் என்னும் இவ் வைந்தும் விளை பயிர்க்கு உறுதியாக வேண்டப்படுமாதலால் அவற்றை வகைப்படுத்தி இங்ஙனம் உணர்த்தியருளினார். வைப்பு நிலையால் அவற்றின் வரன்முறை புலனும்.

விளை நிலத்தில் முன்னதாகச் செய்யப்படுவது உழவே ஆதலால் அதனை முதலில் வைத்தார். புழுதியாக உழுது உணக்கியபின் எருவிட்டு வைத்து, மழை கண்டு விதைத்துப், பயிரானவுடன் களைகட்டு ஆற்றி, நிலைமை நோக்கி நீர் பாய்ச்சி, விளைந்து நின்றபொழுது பட்டி மாடு முதலியன புகாமல் பாதுகாத்து உழவர் பயன் கொள்வர் என்க.

எருவாவது மாட்டுச் சாண முதலியவற்றின் கூட்டுறவாலாவது. குப்பையாகக் குவித்தமைத்துப் பயிர்த் தொழிலாளர் இதனை நன்கு பாதுகாத்து வைப்பர். எல்லாவற்றிலும் எருதிடமிருந்து வரும் உரமே சிறந்ததாதலால் அச் சிறப்பு நோக்கிப் பொதுவாக இஃது எருவென நின்றது. எவ்வளவு குழை சேறுமிழிக்து கிடந்தாலும் உழவர் அதனை விழைந்துகொண்டுபோவர்.

"கோசலம் விராய்க் குளம்பழுந்திச் சேறதாய்
மாடெனை வழித்தெறிக் துலர்ந்த ஆப்பியும்
பூசலோ டுழவர்கள் போதர்வார் பழி
ஆசிலார்க் கடுப்பினும் ஆய்ந்துளோர் விடார்"
(தணிகைப்புராணம்).

உழவர் செயல் மேல் வைத்து ஓராழகிய நீதியை இஃதுணர்த்தி நிற்றல் காண்க. ஆப்பி = பசுவின் சாணம்.

உயிர்க்கு உணவுபோலப் பயிர்க்கு எருவு இன்றியமையாதாதலால் அது "ஏரினும் நன்று" என நின்றது. உரம் ஏற்றி உழவு செய்; உரம் உதவுவது உறவோர் உதவார்; ஏரோட்டுவதினும் எருவிடுதல் நன்று; எருக்குழியின்றி ஏர் பிடியாதே; என வரும் பழமொழிகள் ஈண்டெண்ணத்தக்கன. "அடுத்திறக்கிப் பெருங்கூடை அளவுபடவே எருவை, எடுத்திறக்கித் தலைமேலே கொண்டவர் தாம் இடையிடையே, கொடுத்திறக்கி நில மகளைக் கும்பிட்டு வணங்காரேல், படுத்திறக்கித் திரிவார்தம் பழி மறுக்கமாட்டாரே" என்பதும் காண்க.

"ஏராலே சேறாக்கி, எருவாலே கருவாக்கி,
நீராலே பைங்கூழை நிலைப்பிப்பார் தமையன்றிக்
காராலே காவேரி நதியாலே காசினியில்
யாராலே பசிதீர்வர் அகலிடத்திற் பிறந்தோரே." (ஏரெழுபது)

வினைவுக்கு உறுதியாக அடிகள் இங்குச் சுட்டியுள்ளபடியை இஃது ஒட்டி வந்திருத்தல் காண்க. இவ்வினைவு முறைகள் மறுமை நோக்கோடு மருவியும் பெரியோர்களால் உரைக்கப்பட்டுள்ளன. சில அடியில் வருவன காண்க.

"மெய்ம்மையாம் உழவைச்செய்து, விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையைவாங்கிப், பொறையெனும் நீரைப்பாய்ச்சித்,
தம்மையே நோக்கிக்கண்டு தகவெனும் வேலியிட்டுச்,
செம்மையுள் நிற்பராகில் சிவகதி விளையுமன்றே." (திருநேரிசை).

" உழப்பின் வாரா உறுதிகள் உளவோ?
கழப்பின் வாராக் கையற வுளவோ? அதனால்,
நெஞ்சப் புனத்து வஞ்சக் கட்டையை
வேரற அகழ்ந்து போக்கித், தூர்வைசெய்து,
அன்பென் பாத்தி கோலி, முன்புற
மெய்யெனும் எருவை விரித்தாங், கையமில்
பத்தித் தனிவித் திட்டு, நித்தலும்
ஆர்வத் தெண்ணீர் பாய்ச்சி, நேர்நின்று
தடுக்குநர்க் கடங்கா நெடுக்கண் செய்யும்
பட்டி யஞ்சினுக் கஞ்சியுட் சென்று,
சாந்தவேலி கோலி வாய்ந்தபின்,
ஞானப் பெருமுளை நந்தாது முளைத்துக்
கருணையிளந்தளிர் காட்ட வருகாக்
காமக் குரோதக் களையறக் களைந்து
சேமப்படுத்துழிச் செம்மையின் ஓங்கி
மெய்ம்மயிர்ப் புளக முகிழ்த்திட் டம் மெனக்
கண்ணீர் அரும்பிக் கடிமலர் மலர்ந்து
புண்ணிய அஞ்செழுத் தருங்காய்தோன்றி, நஞ்சுபொதி
காள கண்டமும் கண்ணொரு மூன்றும்
தோளொரு நான்கும் சுடர் முகமைந்தும்
பவள நிறம்பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவையதனினும் உறுசுவை யுடைத்தாய்க்
காணினும் கேட்பினும் கருதினும் களிதரும்
சேணுயர் மருதமாணிக்கத் தீங்கனி

பையப் பையப் பழுத்துக் கைவர
எம்மனோர்கள் இனிதினருந்திச்
செம்மாந்திருப்பச் சிலரிதின் வாராது" (பட்டினத்தார்)

உழவுமுறையைத் தத்துவநெறியில்வைத்து உருவகப்படுத்தி இவை உணர்த்தி நிற்கும் அருமையை உய்த்துணர்ந்து கொள்க. ஏர் எரு முதலிய இத்தகைய விளைவு நலங்களை உழவர் அயராது அளவறிந்துசெய்து வரவேண்டும் என்பது கருத்து.

உயிர்களிடத்துப் பரமன் ஆற்றிவரும் பஞ்சகிருத்தியங்கள் போல் பயிர்களிடத்து மக்கள் போற்றிவரவேண்டிய ஐந்தொழில்களையும் இங்ஙனம் அறிவித்தருளினர்.

புழுதியெழவுழுது, உறுதிபெற உரம்பரப்பி, நிலையறிந்து நீர்பாய்ச்சி, பருவங்கண்டு களைபறித்து, கருதிநின்று காப்பாற்றி ஓர் உழவன் தன் விளைநிலத்தைப் போற்றுவானேல் அவனுக்கு இழவுதான் விளையுமென்பது குறிப்பு.

உழவு முதலிய விளைவுறுதிகளை உணர்வுடையார் யாண்டும் ஓர்ந்து செய்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை குடபுலவியனார்பால் உணரப்படும்.

## கதை.

குடபுலவியனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ப்பாண்டிநாட்டின் வடமேலெல்லையிலிருந்த தடங்குடி என்னும் ஊரிலிருந்தவர். இவர் பேரறிவாளர். பல நூல்களையும் வழுவறப்பயின்று சிறந்தபுலவராய் உயர்ந்திருந்தும் பரிசில் கருதி எவரிடமும் செல்லாது பயிர்த்தொழிலாற்றித் தமது இல்வாழ்க்கையை இவர் இனிது நடத்தி வந்தார். ஏருடைமையே சீரடைதற்குக் காரணமென்று கருதி, அதனைப் பூரணமாகப் பொருந்தச்செய்து, உண்மையான ஏவலாட்களை ஏவி, உறுதிபெறப் பண்படுத்தி விளைநிலங்களை இவர் நன்குபேணி வந்தாராதலால் மிகுந்த வளங்களை அவை வளங்கி நின்றன. துவரை உழுந்து கம்பு சோளம் முதலியன விளைதற்குரிய புன்செய் நிலங்களே பெரும்பாலும் இவர்க்குப் பொருந்தியிருந்தனவாத

லால் சில சமயங்களில் மழை மாறி நின்றமையால் எதிர்பார்த்த படி விளைபொருள்கள் செய்தாமல் இழந்துபோக நேர்ந்தன. அதன்பின் நிலங்கள்தோறும் கிணறுகள் தோண்டிப் பருவங் கண்டு நீர்கால்யாத்து நாளும் நேர்போய்ப் பார்த்தார். ஒருழுங் கால் உடனிருந்து சால்புறச்செய்தார். இயற்கை செயற்கை என்னும் இருவகை நிலையிலும் உழத்தை இவர் பரப்பி வந்தார். "நிலத்தில் எழுந்த பூண்டு நிலத்தில் மடியவேண்டும்" என்று உழவரிடம் நாளும் உரைத்து நின்றார். புலத்தில் விளைத்த செடி கொடிகளெவற்றையும் களைந்து புறம்போக்காது அகழ்ந்து புதைப்பர். எருப்படாத நிலம் உருப்படாது என எவரிடத்திலும் அதன் இயல்பினை விரித்துரைப்பர். இங்ஙனம் ஏர், எரு நீர் முதலியவற்றைச் சீருடன்செய்து வந்தமையால் விளைபுலங்களி லிருந்து பெருவளங்கள் படைத்து இவர் பேர்பெற்று நின்றார். புலத்துறையோடு நிலத்துறையிலும் தலைமையெய்தி நின்ற இவ ரது நிலைமையையறிந்து இந்நாட்டு மன்னனாகிய பாண்டியன் பெரிது மகிழ்ந்து ஈண்டிய அன்புடன் வேண்டியழைத்துத் தன் பக்கல் இருக்கச்செய்து இவர்க்கு இதம்பல செய்தான். அடிக்கடி சென்று அவ் அரசவையை அலங்கரித்திருந்து அறத்திறங்களை இவர் உணர்த்திவந்தார். ஒரு நாள் அவ் அரசனை நோக்கி இவர் உரைத்த உறுதியை அனைவரும் உவந்துபுகழ்ந்தார். அதனை இதன் அடியில் தருதும்; பொருளை ஆய்ந்து காண்க.

"முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்து பட்ட வியன் ஞாலம்
தாளில் தந்து தம்புகழ் நிறீஇ
ஒருதாமாகிய உரவோர் உம்பல்!
ஒன்றுபத் தடுக்கிய கோடிகடை இரீஇய
பெருமைத் தாகநின் ஆயுள் தானே
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்
பூக்கதூஉம் இவைவாளை
நுண்ணுரற் பருவரால்
குரூஉக் கெடிற்ற குண்டகழி

வானுட்கும் வடிநீண் மதில்
மல்லன் மூதூர் வயவேந்தே!
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்,
ஞாலங் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினும், சிறந்த
நல்லிசை நிறுத்தல்வேண்டினும், மற்றதன்
தகுதி கேளினி மிகுதி யாள!
நீரின் றமையா யாக்கைக் கெல்லாம்
உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே
உண்டி முதற்றே உணவின் பிண்டம்
உணவெனப் படுவது நிலத்தொடு நீரே
நீரும் நிலனும் புணரி யோரீண்டு
உடம்பும் உயிரும் படைத்திசி னோரே
வித்திவா னோக்கும் புன்புலம் கண்ணகன்
வைப்பிற் றாயினும நண்ணி யாளும்
இறைவன் தாட்குதவாதே; அதனால்
அடுபோர்ச் செழிய! இகழாது வல்லே
நிலனெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர் அம்ம இவண்தட் டோரே
தள்ளாதோர் இவண் தள்ளாதோரே." (குடபுலவியனார்)

வேந்தே! நீண்ட ஆயுளுடன் நீ நிலைத்து வாழ்க என வழுத்தி அப்பாண்டிய மன்னனுக்கு இவர் உணர்த்தியிருக்கும் உறுதி நலங்களை இதில் ஊன்றிப்பார்க்க. உடம்பு உணவால் நிலை பெற்றுள்ளது; ஆதலால் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோராவர்; அவ்வுணவுப்பொருளை நிலந் தருகிறது; அந்நிலம் நீரால் வளம் பெறுகிறது; விதையை விதைத்துவிட்டு உழவர்கள் மழையை நோக்கி ஏங்கி யிருக்கும்படியான வானம்பாரி நிலம் எவ்வளவு இருந்தாலும் அதனால் பயனில்லை; ஆதலால் உன் நாட்டிலுள்ள நிலங்களில் நீர் நிலைகளை உளவாக்குக; அங்ஙனம் ஆக்கின் அது உனக்குப்புகழும், பொருளும், வலியும் தந்து மறுமையிலும் பெருமையுண்டாக்கும் என நில நலங்களின் நிலைமைகளை அத் தலைவனுக்கு அறிவுறுத்தியிருக்கும். இவரது அறிவின்

திறத்தைக்குறித்து அக்காலத்திருந்தவரெவரும் வியந்து துதித்தார். பயிர்த்தொழிலை உயிர்த் தொழிலாக இவர் பாதுகாத்து வந்த உண்மை இதனால் இனிது புலனும். ஏருழுதல், எருவிடுதல், நீர்ப்பாய்ச்சல், களைகளைதல், காத்தல் என்னும் இம்முறைகளை வழுவறச்செய்து வந்தவர் வளமிகப் பெறுவர் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

பயிர்க்கெருவு நீரும் பதிந்த வுழவும்
உயிர்க்குணவு போலா முணர்.

உரஞ்செய்த நிலம் வளம் பல தருமென்பது இதனால் கூறப் பட்டது.

---

1039. ஆர்ந்தபுகழ் ஆதன் அடிக்கடிபோய்த் தன்னிலத்தைக்
கூர்ந்தேனோ பார்த்தான் குமரேசா—சோர்ந்துதான்
செல்லான் கிழவ னிருப்பின் நிலம்புலந்
தில்லாளி னூடி விடும். (௯)

இ—ள்.

குமரேசா! எழினி ஆதன் அடிக்கடி போய்த் தன்னிலங்களை ஏன் உள்ங்கூர்ந்து பார்த்தான்? எனின், கிழவன் செல்லான் இருப்பின் நிலம் புலந்து இல்லாளின் ஊடி விடும் என்க.

இது, விளைநிலங்களை அடிக்கடிபோய் உடையவன் பார்த்து வரவேண்டும் என்கின்றது. ஆர்ந்த புகழ் ஆதன் என்றது நிறைந்த புகழுடையனாய் அவன் நிலவி நின்றமை கருதி.

கிழவன் = உரியவன். நிலத்திற்கு உரிமையாயுள்ளவன் என்க. கிழமை உரிமையையுணர்த்தி வரும். "வாரமும் குணமும் காணியும் கிழமை" (பிங்கலந்தை.) "பழமுதிர் சோலை மலை கிழவோனே" (திருமுருகாற்றுப்படை) "காவிரி புரக்கும் நாடு கிழவோனே" (பொருநராற்றுப்படை) "மென்புல வைப்பின் நாடு கிழவோனே" (ஐங்குறுநூறு) இவற்றுட் கிழவன் உணர்த்தி நிற்கும் பொருளை யறிக.

செல்லான் இருப்பின் = போய்ப் பாராது நிற்பின். செல்லான் என்னும் எதிர்மறை முற்று ஈண்டு எச்சமாகி இருப்போடு இணைந்து நின்றது. "கிழவன் இருப்பின், நிலம் விடும்" என்றதனுல் அவன் சென்று பார்ப்பின் அது நின்று பயன் தரும் என்பதாயிற்று.

புலந்து = வெறுத்து. இல்லாளின் = மனையாளைப்போல். ஊடிவிடும் = மாறுபட்டு ஒழிந்து போம். நிலத்தை மனையாளோடு ஒப்ப வைத்தது போகம் தருதல் கருதி. மனைவி காமப்பிணி நீக்கிக் கனிந்து பேணுவள்; நிலம் பசிப்பிணி போக்கிப் பரிந்து போற்றும் என்க. புலத்தலையும் ஊடலையும் நிலத்தின் மேலேற்றியது இல்லாளியல்பின் இயைபு கருதி.

மேல், உழவு உர முதலியன விழுமிதாகச்செய்து நிலத்தை நன்கு பண்படுத்த வேண்டுமென்றார்; இதில், அந்நிலத்திற்குடையவன் நாள்தோறும் போய்ப் பார்த்து வரவேண்டும் என்கின்றார்.

நிலத்திற்குரியவன் அடிக்கடிபோய் அதனைப்பாராது இருப்பின் பேணுதுவிட்ட மனைவிபோல் அந்நிலம் பெரிதும் வெறுத்து அவனை இகழ்ந்து விடும் என்பதாம்.

தான்கொண்ட மனையாளை உண்டி உடை முதலியன கொடுத்து உவந்து பேணுமல் ஒருவன் இகந்திருப்பின் அவள் உள்ளம் வெறுத்து அவனை இகழ்நது விடுவள்; அதுபோல் உடையவன் போய் நாள்தோறும் தன்னிலத்தைப் பழுது பார்த்து நன்கு பாதுகாவானுயின் அது விளைவு குன்றி இழவுகாட்டி விடும் ஆதலால் "கிழவன் இருப்பின், நிலம் ஊடி விடும்" என்றார்.

உடையவன் சென்று பார்த்தால் அதனுல் எப்படி நிலம் நன்கு விளையும்? எனின், அடிக்கடிபோய் அவன் பார்ப்பானுயின் களை களைதல், நீர்கால் யாத்தல், காத்தல் முதலியனவாக அங்குச்செய்யவேண்டிய செயல் வகைகளெல்லாம் தெளிவாகத் தோன்றும்; தோன்றவே அவற்றைப் பருவந்தவருமல் செய்வன்; அங்ஙனம் செய்து வரவே அந்நிலம் யாதொரு தீதும் ஏருது சிறந்த நலனேடு திகழ்ந்து செழித்து விளையும் என்க.

ஒரு குறுநில மன்னனது பேரவையில் உழவு நிலையைக் குறித்து ஒரு முறை உரையாட நேர்ந்தது; பல இடங்களிலிருந்து நிலக்கிழவர் பலர் வந்து அங்கு நிறைந்திருந்தனர்; அவனது அமைச்சனுயமர்ந்திருந்த பிரதாபன் என்பவன் எழுந்து நின்று அவையை நோக்கி "ஐயன்மீர்! ஒரு நிலத்துக்குச்சிறந்த "எரு எது?" என்று வினவினன். அதற்கு ஆட்டெரு, மாட்டெரு, சேரிஎரு, என்பனவாக அங்கிருந்தவர் பலரும் தமக்குத்தோன்றியவாறே வேறு வேறு வகையாக விடை பகர்ந்தனர். முடிவில ஒரு முதியவர் எழுந்து எல்லாவற்றினும் "உடையவன் காலடியே உயர்ந்த உரம்" என்றார். உரியவன் அடிக்கடி போய்வரின் பழுதுகள் நீக்கி நன்கு பாதுகாக்கப்படுமாதலால் அந்நிலம் பணைத்து விளையும் என்னும் கருத்தை அவர் குறிப்பா லுணர்த்தியதை யுணர்ந்து அனைவரும மகிழ்ச்சியடைந்தார்.

உணவு முதலியன உதவி தனது மனைவியை இனிது பேணாதவன் அவளது இன்பநலத்தை யிழத்தலோடு அவமானத்தையும் அடைவான்; அதுபோல் தன் நிலத்தை நன்குபாராதவன் அதன் வளத்தை யிழந்து வறுமையையும உறுவான் என்க.

பராமுகம் செய்யாமல் தம் நிலத்தை உழவர்கள் பராமரித்து வரவேண்டும் என்பதை உணர்த்தற்கு இல்லாளை எடுத்துக் காட்டி இங்ஙனம் உணர்த்தியருளினர். இதனல் அதன் இனிய இயல்பு எளிது தெளியலாகும.

மிடியன் ஒருசெய்யாளன் அச்செய் விளையக்காக்கும் செயல்போலப்
படியில் கல்வி விரும்பினேன் பாடம் போற்றும் அதுபோல
ஒடிவில் செங்கோல் மனுவேந்தன் உலகம் புரக்கு முறைபோலக்
கொடிய நோன்பு செய்தீன்ற கொடியை வளர்த்தாள் மோகினியே.

(பிரபுலிங்கலீலை)

தாய் மகளை வளர்த்தற்கு உழவன் நிலத்தைப்பார்த்துப் பாது காத்தலை உவமமாக இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

கூலியாளேயே ஏவியிராமல் தாமும் அடிக்கடிபோய் நேரில் பார்த்துத் தம் நிலத்தை யுடையவர்கள் இடையறாது பேணி வரவேண்டும் என்பது கருத்து.

நல்ல உழவர்கள் தமது நிலங்களை நாளும்போய் நன்கு பார்த்து வருவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை எழினி ஆதன்பால் உணரப்படும்.

## கதை.

எழினி ஆதன் என்பவன் பாண்டி நாட்டிலே வாட்டாறு என்னும் ஊரிலிருந்தவன். இவன் பெருங்கொடையாளி; அருந் திறலுடையவன். பிறர்க்கு இதம் புரிதலே தனக்குச் சிறந்த கடமையாக உவந்துகொண்டு இவன் உஞற்றி வந்தான். தாளா ண்மை யுடனின்று வேளாண்மைபுரிந்து வாளாண்மையிலு மிகு ந்து விளங்கி நின்றருளுதலால் வல்லரசரும் இவன்பால் நல்ல அன புடையராய் நண்பாற்றி வந்தார். எவரிடமும் இவன் பண்பாற்றி நின்றான். "அனம் இலார்க்கு அனமாய்; வாழ அகம் இலார்க்கு அகமாய்த்; துன்ப மனமுள்ளார்க்கு உவப்பாய்; நோயின் வரு ந்துவோர்க்கு அருமருந்தாய்த்; தனம் இலார்க்கு அரும் பொன் னாய்; நற்றாய் தந்தையிலார்க்கு அன்னாய்; இனம் இலார்க்கு இனமாய்; யார்க்கும் யாவுமாய் இசைதலன்றே" என்றபடி அமர்ந்து நின்று உயிர்கள் மாட்டு இவன் இன்புசெய்து வந்தான். நிலத்தைப் பண்படுத்திப் பெருவளங்களை உளவாக்கியது போல் தன மனத்தையும் பண்படுத்தி குணநலங்களிற்சிறந்து இவன் மாண்புற்றிருந்தான். இங்ஙனம் இருந்து வருங்கால் மாங்குடி கிழார் என்னும் புலவர் ஒருவர் ஒருநாள் இவன்பால் வந்தார். அவரை உவந்துபசரித்து நெடுநாள் உடனிருக்க வைத்து வேண் டுவனயாவும் விழைந்து கொடுத்து மேன்மை செய்து விடுத்தான். பின்னரும் ஆண்டுதோறும் மீண்டு மீண்டும் அவர் வேண்டா மலே குறிப்பறிந்து வேண்டியவெல்லாம் கொடுத்து வந்தான். இவனது மன இயல்பையும், கொடை நிலையையும் குறித்து மிக வியந்து அப்புலவர் இலகர் உளமுருகிப் பல பாடல்கள் பாடியுள் ளார். ஒன்று அடியில் வருவது காண்க.

"உள் இல்லோர்க்கு வலியாகுவன்;
கேள் இல்லோர்க்குக் கேளாகுவன்;
கழுமிய வென்வேல் வேளே

வளநீர் வாட்டாற்று எழினியாதன்
இரும்பே ரொக்கல் இருஞ் செஞ்சிய
அழித்துவப்ப ஈத்தோன் எந்தை
எம்மோர் ஆக்கம் கங்குண்டே
மாரி வானத்து மீன் நாப்பண்
விரிகதிர் வெண் திங்களின்
விளங்கித் தோன்றுக அவன் கலங்கா நல்லிசை
யாமும் பிறரும் வாழ்த்த நாளும்
நிரைசால் நன்கலம் நல்கி
உரை செலச் சிறக்க அவன் பாடல்சால் வளனே'' (புறம்)

கங்கு = வரம்பு, எல்லை. உண்டே என்றது இல்லை என்றபடி. ஆதனுகிய எந்தை மாறி மாறித்தந்தான்; ஆதலால் எம்மனோரது செல்வத்திற்கு அளவேயில்லை; அவன் புகழும், வளனும் ஒளிர் மதியென நாளும் நிலவி நிற்கவேண்டும் என்று அப்புலவர் பெருமான் போற்றியுள்ள அருமையை இதில் ஊன்றிப் பார்க்க. இங்ஙனம் யாவரும் துதிக்கப் பேருபகாரியாயிருந்த இவன் தனது விளை நிலங்களை நாளும் போய்ப்பார்த்து நன்கு பாதுகாத்து வந்தான். இவனுடைய உழவர்கள் உழுதல் எருவிடுதல் முதலிய உரிய வினைகளைப் பருவந்தவறுமல் செய்து இவன் காட்சிக்கு மாட்சிபுரிந்து வந்தார். பெற்ற பிள்ளையைத் தாய் உற்று வளர்ப்பது போல் தானேபோய் நேரில் ஓர்ந்து பேணி வந்தானுதலால் இவனுடைய நிலங்கள் பெரு வளங்களை யுதவிப் பேர் பெற்று நின்றன. உரியவன் போய்ப்பாராத பிறநிலங்களெல்லாம் கடையாயொழிய இவனுடையது மட்டும் உயர்ந்து திகழ்ந்துசிறந்திருந்தது. "செல்லான் கிழவன் இருப்பின் நிலம் புலந்து இல்லாளின் ஊடி விடும்'' என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

நேரில் உடையான்போய் நீணிலத்தைப் பாரானேல்
பாரில் இழிந்து படும்.

உடையான் பாராத நிலம் கடையாம் என்பது இதனுல் கூறப்பட்டது.

1040. உள்ளமடிந் தில்லையென வைந்திரா தேன்காரி
கொள்ள முயன்றான் குமரேசா—தள்ளி
இலமென் றசைஇ யிருப்பாரைக் காணின்
நிலமென்னு நல்லாள் நகும். (ம)

இ—ள்.

குமரேசா! இல்லை என்று உள்ளமடிந்திராமல் காரி ஏன் ஊக்கி முயன்றான்? எனின், இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின் நிலம் என்னும் நல்லாள் நகும் என்க.

இது, உழாது சோம்பியிருக்கலாகாதென்கின்றது.

இலம் என்று = வறியேம் என்று சொல்லி. இலம் என இங்ஙனம் பன்மையிற் குறித்தது சோம்பேறிகளின் தொகுதி தோன்ற, தன்மையில் வைத்தது அம் மடியர் மனநிலை கருதி.

அசைஇ = சோம்பி. அசைந்து என்னும் வினையெச்சம் அசைஇ என அளபெடுத்து நின்றது. இது சொல்லிசை அளபெடை. இருப்பாரை எனவும் பாடம்.

நிலத்தினை நல்லாள் என்றது வளஞ் சுரந்து என்றும் நலம் பயந்து நிற்கும் அதன் தன்மை கருதி.

மேல், நிலத்துக்குடையவன் நாள்தோறுஞ்சென்று அதனைப் பழுது பாராவழி விளைவு குன்றும் என்றார்; இதில், ஒன்றும் இல்லை யென்று சொல்லி உள்ளழிந்திருப்பின் அவன் எள்ளப் படுவன் என்கின்றார்.

யாம் வறியேம் என்று சொல்லிச் சோம்பியிருப்பாரைக் கண்டால் நிலமாகிய நல்லவள் இகழ்ந்து சிரிப்பள் என்பதாம்.

நிலம் நகுதற்குக் காரணம்,

"அன்னையென ஆருயிர்கள் ஆரப் புரந்தருளி
என்னபிழை செய்தாலும் ஏற்றமர்ந்து—பின்னையுந்தான்
பேணி வளங்கள் பெருக்கி யினிதூட்டும்
நீணிலமே தெய்வம் நினை" என்றவண்ணம் யாண்டும் வளங்களை ஏந்திக்கொண்டு நீண்டு பரந்து நின்று உயிர்களைப் புரந்து வரும் தனது நிலையினைக் கண்டும் கைசெய்து உண்ணாமல் கருத்தழிந்திருக்கும் அவரது மடமையை நோக்கி என்க.

வேண்டியவெல்லாம் தருதற்குரிய நிலம் ஈண்டி யிருந்தும் தமக்கு ஒன்றுமில்லை யென்று சொல்லிக்கொண்டு உள்ளமடிந்து ஊனமுற்றிருத்தலும், மானமற்றிரத்தலும், ஈனர் செய்கையா மாதலால் அங்ஙனம் இழிந்துபடலாகாதென்பது கருத்து.

" வித்தும் ஏரும் உளவா யிருப்ப
எய்த்தங் கிருக்கும் ஏழையும பதரே " (நறுந்தொகை)

உழுது பயிரிடாது சோம்பி யிருப்பவர் வறியராகி இகழப் படுவராதலால் அங்ஙனம் இருந்திழியலாகாதென்பது குறிப்பு.

வறியேமென்று நினைந்து மடிந்திராமல் இயன்றவரையும் அறிவுடையார் முயன்று நிற்பர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ் வுண்மை காரிபால் உணரப்படும்.

கதை.

காரி என்பவன் தொண்டை நாட்டிலே பழையனூரிலே இருநதவன். இரக்கமும் பணிவும் ஈகையு முடையவன். யாவருக்கும பேருபகாரியாய் நின்ற இவன் சன்மினி என்பவளை மணந்து இல் வாழ்க்கை புரிந்துவந்தான். வருங்கால் காலவேற்றுமையால் பொருள் வளங் குறைந்தது, வறுமை மிக அடைந்தான். அஙஙனம் அடையினும் இவன் யாதும் அசையாது நின்று ஆண்மையுடன் வினைசெய்து வந்தான். தன் இல்லின் பின்புறத்திருந்த சிறிய கொல்லையைப் பண்படுத்திக் கேழ்வரகு விதைத்து நாளும் நன்கு பாதுகாத்தான். ஒருநாள் அதில் இவன் களைபறித்துக் கொண்டிருக்கும்பொழுது அங்கு ஒளவையார் வந்தார், அவரைக் கண்டவுடனே உவந்து சென்று பணிந்து உபசரித்து மனைக்குள் அழைத்துவந்து அவ் வமயம் ஆக்கிவைத்திருந்த கூழை அன்புடன் உதவினன். இவனது குண நலங்களைக் கண்டு அவர் பெரு மகிழ்ச்சிகொண்டு புகழ்ந்து கூறிவிட்டு விடை பெற்றகன்றார். அவரைத் தடுத்து நிறுத்திச் சிலநாள் இருந்துபோம்படி இவன் பரிந்து வேண்டினன். தென்னாடு சென்று மீண்டு வருங்கால் ஈண்டடைகின்றேன் என அவர் வேண்டி யெழுந்தார். அவருக்கு ஏதேனும் கொடுத்துவிடவேண்டும் என்று இவன் கருத்தில் உளைந்தான். கொடுத்தற்கு ஒன்

றும் இல்லை; தன் விளை நிலத்தில் களைவறண்டற் குரியதும், தனக்கு உயிராதாரமாயுள்ளதுமாகிய ஒரு களைக்கோல் மட்டும் இருந்தது; அதனை எடுத்து அவரிடம் உவந்து கொடுத்தான். அவர் மறுக்கமாட்டாமல் வாங்கிச் சென்றார். செல்லுங்கால் இவனுடைய கைக் குழந்தை பாலின்றிப் பதைப்பதை நினைந்து சானூரிலிருந்த வாதவன் என்னும் ஓர் இடையர் தலைவனிடம் பாலாடு ஒன்று கேட்டார். அவன் இன்னொருமுறை வந்தால் தருவன் என்றான். அவனை விடுத்து வத்தவன் என்பவனிடம் போய் "ஓர் ஆடு தருக" என்றார். அவன் நாளை வாரும் என்றான். அவனை யகன்றுபோய்ப் பின்னர் யாதவன் என்பானிடம் வேண்டினார். அவன் யாதும் இல்லை என்றான். நேரே சேர மன்னனிடம் வந்து அம் மூவரிடம் சென்றதையும் ஓர் பாவில் கூறினார்.

"வாதவர்கோன் பின்னை என்றான்; வத்தவர்கோன் நாளை என்றான்;
யாதவர்கோன் யாதொன்றும் இல்லைஎன்றான்—ஆதலால்
வாதவர்கோன் பின்னையினும், வத்தவர்கோன் நாளையினும்,
யாதவர்கோன் இல்லை இனிது" (ஔவையார்)

என்று இங்ஙனம் சொல்லியதைக் கேட்டவுடனே அம் மன்னன் பொன்னால் செய்த ஆடு ஒன்றைப் போற்றிக் கொடுத்தான்.

"சிறப்பார் மணிமுடிச் சேரமான் தன்னைக்
கறப்பாடு கேட்கவே பொன்னாடொன் றீந்தான்
இரப்பவர் என்பெறினும் கொள்வர் கொடுப்பவர்
தாமறிவர் தங்கொடையின் சீர்" என்று உளங் குளிர்ந்து

வாழ்த்தி அச்சேரமான் கொடுத்ததை இவன்பால் சேர விடுத்துச் சிலநாள் கழித்து நேரில் வந்து பார்த்தார். அப்பாட்டி தந்த ஆட்டைப்பெற்று உழுந்தொழிலை இடையறாது செய்து வந்தமையால் வளமிகவுடையனாய் மகிழ்வுடனிருந்தான். அக்காலத்தில் ஒன்று மில்லையென்று உள்ளழிந்திருந்த நீமன் என்பவன் எல்லாராலும் எள்ளப்பட்டிருப்ப, யாவராலும் பூமி பாலகன் என்று இவன் ஏத்தப்பட்டு வந்தான். "இலம் என்று அசைஇ யிருப்பாரைக் காணின் நிலம் என்னும் நல்லாள் நகும்" ஆதலால் அங்ஙனம்

இருக்கலாதென்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான் வறுமையிலும் இவன் வண்மை குன்றாது நின்ற தன்மையை வியந்து மன்னரும் புகழ்ந்தார். "ஏருடையான்போல எழிலு டைய சீர் நிலையை யாரும் அடையார் அறி" என்பதை எவரும் அறியச் செய்து இவன் இதம்புரிந்து வாழ்ந்தான்.

"பாரி பறித்த பறியும், பழையனூர்க்
காரி கொடுத்த களைக் கொட்டும்,—சேரமான்
வாரா யென அழைத்த வார்த்தையும், இம்மூன்றும்
நீலச் சிற்றாடைக்கு நேர்" (ஔவையார்)

மழையில் நனைந்து குளிரால் நடுங்கி வந்தபோது பாரிமகளிர் ஒரு நீலச்சிற்றாடை தர அவ்வமயம் இது பாடியதென்க.

ஏரினியற்றும் களைக்கொட்டை யீந்தன்ன மிட்டு நல்ல
பாரி பறித்தென்னும் பாடல் கொண்டோன், பண்புசேர் பழைய
னூரிலிருப்பவன், ஔவைதன்பாடற் குவந்தபிரான்,
மாரியெனத்தரு கைக்காரியும் தொண்டைமண்டலமே.
(தொண்டைமண்டல சதகம்)

பழையனூர் தன்னிற் புன்செய்ப் பயிரிடுங் குடி வேளாளன்
கழைதரு சாறுபோற் சொற் கழறிடும் காரி என்பான்
உழையிவள் இரந்த நாளில் ஒருகளைக்கோலை நல்கித்
தழை புலாதிய நீப்பித்துத் தானுகர் கூழ்வார்த் தானல்.
(புலவர்புராணம்)

இவன் இல்லாதவனுயிருந்ததும், அங்ஙனம் இருந்தும் இலை என்று சொல்லி மடிந்திராமல் உழுதலைச்செய்து வந்ததும் உதவி புரிந்து உயர்ந்ததும் இவற்றானும் அறிய நிற்பன காண்க.

உயிர்த்தொழி லெல்லாம் பயிர்த்தொழி லொன்றால்
வியத்தகு திறனொடு விளங்கு மாதலால்
ஊழிதோ றூழி உழவோர் வாழ்க்கை
வாழிய நலனே வாழிய நிலனே.

நீண்டு பரந்து நிலமிருந்தும் இல்லெனப்போய்
வேண்டல் மடியர் வினை.

உழுதொழில் செய்யாதார் பழியுற்றிழிவரென்பது இதனால் கூறப்பட்டது.

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

உழவு தொழிலே மிகவும் சிறந்தது. உழவர்களே இவ்வுலகத்துக்கு அச்சாணிபோல் நின்று உறுதி பயந்துள்ளார். உழுதுண்டு வாழ்வோரே விழுமியோராவர். அரசனுக்கும் அவர் உயர் நிலை தருவார். இரவாது நின்று எவர்க்கும் அவர் ஈந்து வருவார். அவர் கையடங்கி நிற்பின் இவ்வையகத்தில் யாரும் தலையெடுத்து வாழமாட்டார். குழையவுழுத நிலம் மிகுதியாக விளையும். ஏருழுதல், எருவிடுதல், களை களைதல், காத்தல் முதலிய தொழில்களைக் கண்ணூன்றிச் செய்வோரே எண்ணிய பலன்களை எய்தி மகிழ்வர். நிலத்துக்குரியவன் அடிக்கடி சென்று அதனைப் பாரானாயின் அது குன்றி யொழியும். உழுதலைச்செய்யாது மடிந்திருப்பவர் வறியராகி இழிந்து படுவர் என்பதாம்.

ாச-வது உழவு முற்றிற்று.

---

# 105ம் அதிகாரம் நல்குரவு.

அஃதாவது வறுமையின் சிறுமை. செல்வ நிலைக்கு ஏதுவாயுள்ள உழவின் பெருமையை முன்னர் உணர்த்தினர்; அத்தகைய உழவினை உவந்து செய்யாமல் மடிந்திருப்பாராயின் யாதும் இல்லாராய் மக்கள் இழிந்துபடுவர்; அங்ஙனம் கழிந்துபடாவகை யாண்டும் முயன்று நின்று உயர்ந்துகொள்ளுமாறு அவ் இலம்பாட்டின் கொடுமையை இதில் உணர்த்துகின்றாராதலால் அதன் பின் இது வைக்கப்பட்டது.

1041. பண்டு வறுமை படுதுயரென் றோடைகிழார்
கொண்டுழந்தார் என்னே குமரேசா—மண்டி நின்ற
இன்மையின் இன்னாத தியாதெனின் இன்மையின்
இன்மையே இன்னா தது. (க)

இ—ள்.

குமரேசா! வறுமையடைந்திருந்த ஓடைகிழார் என் கவும் கொடுந்துன்பமுடையராய் மறுகி நின்றார்? எனின்

இன்மையின் இன்னாதது யாது? எனின், இன்மையின் இன்னாதது இன்மையே என்க.

இது, வறுமைபோலக் கொடியதொன்றுமில்லையென்கின்றது.

இன்மை = வறுமை. நுகரப்படும் பொருள் யாதும் இல்லாமை என்னும் ஏதுவான் வந்தது. இன் உருபு ஒப்புப் பொருளது. இன்னாதது = துன்பம் செய்வது. ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம்.

வறுமைபோலத் துன்பமானது யாது? என்று வினவின் வறுமைபோலத் துன்பமானது வறுமையே யன்றி வேறு ஒன்றும் இல்லை என்பதாம்.

வறுமை மிகக்கொடியது என்று தெளிவாக உணர்த்தற்கு உவமைகூற முயன்று இவ்வுலகிலுள்ள கொடிய பொருள்களெல்லாவற்றையும் ஆராய்ந்து நோக்கி அவற்றுள் யாதும் ஒப்பு இல்லாமை கண்டு ஓய்ந்துவந்து முடிவில் அதற்கு அதுவே ஒப்பாக உரைத்திருக்கும்படியா இஃது உருக்கொண்டுள்ளமை காண்க.

கடலினும் பெரியது யாது? கடலே;

தீயினும் கொடியது யாது? தீயே; என்பன்போல வறுமையினும் துன்பமானது யாது? எனின், வறுமையே; என இன்மையில் ஒப்பற்று நிற்கும் அதன் இயல்புதோன்ற இங்ஙனம் உணர்த்தியருளினர்.

"கொடிதுகொடிது வறுமை கொடிது" என்றார் (ஔவையார்)

அறிஞர் பலர் ஒன்று கூடி வறுமைபோலக் கொடியது யாது? என்று ஒருவரை ஒருவர் வினவித் தத்தமக்குத்தோன்றியவாறே நஞ்சு தீ முதலிய கொடியபொருள்களை யெல்லாம் உவமை கூற ஒன்றும் ஏகமனதா ஒப்புக்கொள்ளப்படாமையால் அடிகளிடம் வந்து வினவ அடிகள் அவரைநோக்கி "இன்மையின் இன்னாதது யாது? எனின்," என்றுதொடங்கி நிறுத்திக்கொண்டு அவர் தொடர்ந்து எண்ணும்படி இடங்கொடுத்துவிட்டு, இனி என்ன பதில் வருமோ என்று ஆவலுடன் எதிர்பார்க்கச்செய்து யாதோ வேறு கூறுவதுபோல் பாவனைகாட்டி முடிவில் "இன்மை

யின் இன்னாதது இன்மையே" எனகயம்பட இயம்பியுள்ளபடியா யிலைந்து அமைந்துள்ளமையும் அறியலாகும்.

வறுமை அடைந்தவர் கொடுந்துன்பமுடையராய் மறுகி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஓடை கிழார்பால் உணரப்படும்.

## கதை.

ஓடை கிழார் என்பவர் சோழநாட்டிலே துறையூரி லிருந்தவர். சாதியில் வேளாளர். அடக்கமும் பொறுமையும் அன்புமுடையவர். பலநூல்களையு நன்கு பயின்று புலமை நிரம்பி இவர் நிலவி யிருந்தார். அறிவொழுக்கங்களில் இங்ஙனம் சிறந்திருந்தும் பொருளில்லாமையால் இவர் மிகவு மறுகி நின்றார். இவருக்கு ஐந்து புதல்வர்களும் நான்கு புதல்விகளும் பிறந்திருந்தனர். பெரும் புலவராயிருந்தும் வறுமையின் கொடுமையால் இழிந்த படியில் அமர்ந்து இளஞ்சிறார்களுக்குக் கல்வி கற்பித்து அவரிடமிருந்து வருந்திவந்த சிறு வருவாயால் தமது பெருங் குடும்பத்தை இவர் பாதுகாத்து வந்தார். அப் பள்ளிக்கூடமும் சின்னாளில் இல்லா தொழிந்தது. அதன்பின் அல்லல்பல அடைந்து அலமந்துழந்தார். தமது மனைவியுமக்களும் பட்டினி கிடப்பதைக் கண்டு பரிந்து நொந்தார். கிழிந்ததும், பலதையல்களுடையதும், அழுக்கடைந்ததுமாகிய இழிந்த ஓராடையையே இடைகழியாது நெடுநாளாக உடுத்தித் திரிந்தாராதலால் அதில் ஈரும் பேனும இருந்திறைகூடி நிரை நிரையாக நிறைந்திருந்தன. இவரது நிலை காண்பவரெவர்க்கும் கழிபெருந் துயரைக்காட்டி நின்றது. மிடியினும் கொடியதொன்றில்லை யென்று இவர் குலைந்தெங்கி நின்றார். அக்காலத்தில் பொதியமலைச்சாரலில் ஆய்க்குடியிலிருந்து அரசு புரிந்த குறுநில மன்னனாகிய ஆயினது குணநலங்களைக் கேள்வியுற்று நெடிது நடந்து, கடிது வந்து அரிதிற் புகுந்து அவனை அகங்குளிர்ந்து கண்டார். அவ்வள்ளல் இவரது வறிய நிலையை நோக்கி உள்ள முருகினான். அவ்வமயம் அவன் திருமுகத்தைப் பார்த்து இவர் கூறிய பாடல் ஒன்று அடியில் வருவது காண்க.

"யாழ்ப்பத்தர்ப் புறங் கடுப்ப
இழை வலந்த பஃறுன்னத்
திடைப்புரைபற்றிப் பிணிவிடாஅ
ஈர்க்குழாத்தோ டிறைகூர்ந்த
பேஎன் பகையென ஒன்றென்கோ?
உண்ணுமையின் ஊன்வாடித்
தெண்ணீரிற் கண்மல்கிக்
கசிவுற்றவென் பல் கிளையொடு
பசியலைக்கும் பகை ஒன்றென்கோ?
அன்ன தன்மையும் அறிந்தீயார்
நின்னது தாஎன நிலை தளர
மரம் பிறங்கிய நளிச்சிலம்பிற்
குரங்கன்னபுன் குறுங்கூளியர்
பரந்தலைக்கும் பகை ஒன்றென்கோ?
ஆஅங்கு, எனைப்பகையும் அறியுனன் ஆய்
எனக்கருதிப் பெயரேத்தி
வாயார நின் இசை நம்பிச்
சுடர் சுட்ட சுரத்தேறி
இவண் வந்த பெருநசையேம்
எமக்கீவோர் பிறர்க்கு ஈவோர்;
பிறர்க்கீவோர் தமக்கு ஈப; என
அனைத்துரைத்தனன் யானாக,
நினக் கொத்தது நீ நாடி
நல்கினை விடுமதி பரிசில்; அல்கலும்
தண்புனல் வாயில் துறையூர் முன்றுறை
நுண்பல மணலினும் ஏத்தி
உண்குவம் பெரும நீ நல்கிய வளனே" (ஔவையார்)

இவரது உடையின் இயல்பும், அதில் பேன்கள் பல கூடி யிருந்த விதமும், பசியலைத்த பாடும், பிறிதின் ழைத்தகேடும் கூறித் தமது வறுமையை இவர் புலப்படுத்தியிருக்கும் அருமையை இதில் ஆய்ந்து பார்க்க. பஃறுன்னம் = பலதையல்.

"எமது வறுமைத் துன்பத்தை ஆய் அறிவான் எனக்கருதிக் கொடுஞ்சுரங்கள் பல கடந்து இவண் வந்தேம்; பரிசில் நல்கிவிடுக; நீ கொடுத்தது எதுவாயினும் பலவாக உன்னைப்புகழ்ந்து போற்றி எம் கிளையோடு யாம் உண்டு மகிழ்வேம்" என இங்ஙனம் இவர் உரைத்ததைக் கேட்டு உடனே அவன் உவந்து கொடுத்தான். இவர் மகிழ்ந்து மீண்டார். மீளினும் முன்கொண்ட மிடியின் கொடுமையை நினைந்தபோதெல்லாம் நெஞ்சம் கலங்கினார், "இன்மையின் இன்னாதது யாது? எனின், இன்மையின் இன்மையே இன்னாதது" என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

அல்லல் பலவுந் தடையும் அடுதுயராம்
பொல்லா வறுமை புகின்.

வறுமை மிகவும் கொடியதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1042. அன்று வறுமை அடைய இருமையுமேன்
குன்றினன் வேமன் குமரேசா—என்றுமே
இன்மை யெனவொரு பாவி மறுமையும்
இம்மையும் இன்றி வரும். (௧)

இ—ள்

குமரேசா! வறுமையுற்ற வேமன் இருமையும் இழந்து ஏன் இன்னல் எய்தினன்? எனின், இன்மைஎன ஒருபாவி மறுமையும் இம்மையும் இன்றி வரும் என்க.

இது, வறுமை இருமையும் அழிக்கும் என்கின்றது.

இன்றிவரும் = இல்லையாக வரும். இன்றிவிடும் எனவும் பாடம். வறுமையைப் பாவி என்றது அதன் கொடுமை கருதி. என்னை? "நாண் கொன்று, கல்வி நலன் கொன்று, நன்கமைந்த— வண் கொன்று, சேர்ந்த எழில் கொன்று, மாண்பொன்ற நேர்ந்த வெலாம் கொன்று நெடுந்துயராய் நீண்டு நிற்கும்—பேர்ந்த வறுமை யெனும் பேய்" என்றபடி பெருந்தீமைகளைச் செய்து துயர்நிலையில் பெருகி நிற்குமாதலால் அத்தீயதைப்பாவி என்றார்.

மறுமை இம்மை என்பன அவ்வுலகத்திலும் இவ்வுலகிலும் அனுபவிக்கின்ற இன்ப நலங்களைக் குறித்து நின்றன. ஒருபாவி வர இருவகை இன்பங்களும் இல்லையாம் என்றபடி.

மேல், வறுமையானது கொடிய துன்பமுடைய தென்றார்; இதில், அது இருமைஇன்பங்களையும் கெடுத்துவிடும் என்கின்றார்.

வறுமை என்று சொல்லப்படுகிற ஒரு பாவி . மறுமையின் பயனும் இம்மையின் பயனும் இல்லையாம்படி வரும் என்பதாம்.

மறுமையைப் முன்னர் வைத்தது அதன் அருமை நோக்கி. என்னை? "வேண்டிய வேண்டியாங் கெய்தி வெறுப்பின்றி விழைந்து துய்க்கும், ஈண்டரும்போக வின்பம் ஈறிலது யாண்டுக் கண்டாம், ஆண்டது துறக்கம்" (இராமாயணம்) என்றபடி ஈண்டிய இன்ப நலங்கள் யாண்டும் நிரம்பி நெடிது நிற்குமாதலால் ஈண்டையதினும் மூர்த்தற அதை எண்ண நின்றது என்க.

இன்மையானது, மறுமையும் இம்மையும் இன்றிவரும் என்றது என்னை? எனின், பொருள் இல்லையானால் ஈதல் முதலிய அறங்களைச் செய்ய இயலாது; ஆகவே அறத்தின் பயனால் அடைதற்குரியதுறக்க இன்பங்கள் இலவாம்; ஆதலால் வறுமைவரின் மறுமை இல்லை என்றார்.

இவ்வுலகம் பொருளிலேயே யிருப்பது ஆதலால் அஃதில்லை யானல் ஐம்புல இன்பங்களும் ஆரத்துய்க்க முடியாது; "பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லை" என்றபடி இல்லாதவர் யாதொருநலமும் இல்லாராய் இங்கு இழிந்து படுவர் ஆகலான் இன்மையுறின் இம்மையும் இல்லை என்றார். உம்மை எண்ணுப் பொருளது. "வறியார் இருமை அறியார்" (திருக்கோவையார்) என்பதும் ஈண்டறியத்தக்கது. இங்ஙனம் இருமையையும் கெடுத்து நல்லமக்களை அல்லற்படுத்துதலால் அப்பொல்லாத வறுமை பாவி என நின்றது, "அழுக்காறெனை ஒரு பாவி" என முன்னர்க் குறித்தார்; இங்கு "இன்மை என ஒரு பாவி" என்றார். அது, "திருச் செற்றுத், தீயுழியுய்த்து விடும்"; இது, மறுமையும் இன்மையும் இன்றிவரும்"; அது, மனக் கோட்டத்தால் எழும்;

இது, வினைக்கேட்டால் விளையும்; இவ்விரண்டனது கொடுமைகளை நோக்கிப் பாவி என அடிகள் பரிந்து கூறியிருப்பினும் அதற்கும் இதற்கும் பெரிதும் வேறுபாடு உண்டு; அது, அகத்திலிருந்து ஈனமாய்த்தோன்றி இழிவு படுத்தும்; இது, புறத்தில் நின்று வினை வயத்தால் பொங்கி பெழுந்து அலைத்திடும் என்க.

இருமையின்பங்களையும் அடியோடு கெடுத்து விடும் கொடுமையது என்றதனால் அம்மிடியின் நிலைமை எளிது புலனும்.

இன்மையானது எல்லா நன்மைகளையும் அழித்துத் தொலைத்துவிடுமாதலால் அது, எய்தலாகாதபடி நல்லவினைகளைச் செய்து கொள்ளவேண்டும் என்பது கருத்து.

வறுமையடைந்தால் இருமையுமிழந்து இழிந்துபடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வேமன்பால் உணரப்படும்.

## கதை.

வேமன் என்பவன் இற்றைக்கு ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர்க் கோதாவரி நதியருகே பிரதிட்டானம் என்னும் நகரிலிருந்தவன். வேதியர் மரபினன். இளமையிலேயே வேதமோதி நீதி நூல்களிலும் சிறிது பயின்று இவன் உறுதிசெய்து இருந்தான். பருவம் நிரம்பு முன்னரே இரு முது குரவரும் இறந்து போயினுராதலால் உளமிக வருந்தி வறுமையடைந்து இவன் மறுகி நின்றுன். இயற்கையில் நல்லவனுயினும் பொருள் இல்லாமையால் எல்லாரும் இவனை எள்ளி யிருந்தார். இவன் உள்ளம் தளர்ந்து அல்லல்பல அடைந்து உழன்று திரிந்தான். பல இடங்களிலும் பரிந்து புகுந்து இரந்துண்டு இவன் இழிந்து அலைந்தான். தீர்த்தமாட விரும்பிச் செல்லும் யாத்திரை வாசிகளிடத்தெல்லாம் அடுத்தடுத்து வாங்கி வயிற்றை நிரப்பி இவன் அலமந்து வந்தான். முடிவில் ஒரு நலமுமின்றிக் கடுந்துயரடைந்து இவன் இறந்து போனுன். இங்கு இரந்துதிரிந்த பாவத்தால் பின்பு அலகையாகித்தோன்றி அவலமுற்று நின்றுன். அங்ஙனம் நின்று வருங்கால் வான்மீகி என்னு முனிவர் ஒருவரை விமலோதக வாவியருகே ஒரு நாள் கண்டான். அவர் யோகசித்தி

யிலும், ஞான நிலையிலும் சிறந்தவராதலால் இவனது வெருண்ட தோற்றத்தை வியந்து நோக்கி நீ யார்? என்று விரைந்து கேட்டார். இவன் ஒடுங்கி நின்று உண்மையை உரைத்தான்.

"ஒட்டியுலர்ந்த கொடிறு, மடிப்புற்ற மூக்கு, நீள் கழுத்தும்,
விட்டு நெறித்த குஞ்சியு, மேல் விரிந்தவுதடும், குழிந்துபுழை
பட்டசெவியும், என்பொடுதோல் பயின்றவுடலும், பசுங்குருதி
கொட்டுபகுவாய் முழங்கும் இடிக்குரலுமாகக் குறுகியதால். (1)

அலகை நின்ற நிலைநோக்கி யாரை? நீ! இங்கடைந்த தெவன்?
மெலிவுசெயு மிவ்வுருவினைந்த தெவ்வாறிவை நீ விளம்புகெனக்
குலநான் மறையோன் வினவுதலும், கோதாவரியின் தீரத்தில்
உலவு பிரதிட்டானம் எனும் தொல்லை நகரம் ஒன்றுளதால். (2)

அன்ன நகரிலுவந்துறையும் அந்தணாளன், புண்ணிய நீர்
மன்னியாடும் அவருளைச்சென் றில லென்றிரந்தவாறதனால்
இன்னவுருவமெய்தியது நெடுநாள் உணவற் றுடற்றுபசி
வெங்நோய் வருத்த நீர்வறந்த நிலத்திலிருந்து மெலிந்தேனால் (3)
(காசிகாண்டம்)

இன்னவாறு இவன் உரைத்ததை நோக்கி "இன்மையின் கொடுமையால் வந்ததா இது" என்று அவர் இரங்கி வருந்தினர். அருமையான குலத்தில் பிறந்தும் வறுமையுற்றமையால் இருமையின்பங்களையுமிழந்து இழிந்துபட்டானாதலால் இன்மையின் தீமையை எண்ணுந்தோறும் இவன் ஏங்கி நடுங்கினன். "இன்மை என ஒருபாவி மறுமையும் இம்மையும் இன்றி வரும்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

வடிவும் தனமும் மனமும் குணமும்
குடியும் குலமும் குடிபோகிய வா
அடியந்தமிலா அயில்வே லரசே
மிடியென்றொரு பாவி வெளிப்படினே (கந்தரனுபூதி)

இருமையிலும் இன்ப மிலரா யிழிவர்
ஒருமை வறுமை யுறின்.

வறுமையுடையார் இருமையுமடையார் என்பது இதனால் கூறப்பட்டது.

1043. மாரியெனும் பாரி மகளிருமேன் நல்குரவால்
கூரழிந்து நின்றார் குமரேசா—சீரமைந்த
தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை. (௩)

இ—ள்.

குமரேசா! வறுமையுற்றகாலத்தில் பாரிமகளிரும் ஏன் சிறுமையுற்றார்? எனின், நல்குரவு என்னும் நசை தொல்வரவும் தோலும் தொகையாகக் கெடுக்கும் என்க.

இது, குடிப்பிறப்பு முதலிய சிறப்பு நலங்களை யெல்லாம் வறுமை கெடுத்துவிடும் என்கின்றது. மகளிரும் என்பதில் உம்மை அவரது தொன்மை யுயர்வு தோன்ற நின்றது.

தொல் = பழமை தோல் = மேன்மை, அழகு. நல்குரவு = வறுமை. நசை = ஆசை.

நல்குரவினை நசை என்றது என்னை? எனின், நசை இல்லையாயின் நல்குரவு இல்லை ஆகலான் அப்புல்லிய நிலை தோன்ற என்க. ஒரு பொருளும் இலராயினும் நசையில்லாமையால் துறவிகள் பெருமேன்மையுடையராய் நிலவுதல் காண்க.

தொல்வரவு என்றது பழமையான குடிப்பிறப்பினை. தொன்று தொட்டு வழிவழியாக அடிப்பட்டுவரும் சிறப்பினது என்றபடி. "தொல்இயல்" "தொல்குடி" (கலி) என வருவன காண்க.

தோல் என்பது பலவகையானும் சிறந்துள்ளதோர் தோற்றப்பொலிவின் மேலதாய் அழகினைக்குறித்து வரும். ஈண்டு, குணம் செயல் எழில் இசை முதலிய வற்றானய விழுமிய நிலையை உணர்த்தி நின்றது. இதனைச் செய்யுள் வனப்பினுள் ஒன்றாகத் தொல்காப்பியனார் செய்து கொண்டுள்ளார். அது வருமாறு.

"இழுமென் மொழியான் விழுமியது நுவலினும்
பரந்தமொழியான் அடி நிமிர்ந் தொழுகினும்
தோல் என மொழிப தொன்மொழிப்புலவர்" (தொல்காப்பியம்)

தொகையாக என்றது ஒன்றையு மீதம்விடாமல் ஒருசேரக் கெடுக்கும் என அதன் மிடுக்குணர நின்றது.

மேல், வறுமை இருமையின்பங்களையும் அறவே அழித்து விடும் என்றார்; இதில், இப்பிறப்பிலுள்ள சிறப்புரிமைகளெல்லா வற்றையும் ஒருங்கே கெடுத்துவிடும் என்கின்றார்.

வறுமை என்று சொல்லப்படுகின்ற கொடிய நசையா னது குடிப்பிறப்பினையும் குணச்சிறப்பினையும் அடியோடு கெடு த்துவிடும் என்பதாம்.

உயர்ந்த குலத்தில் பிறந்து, சிறந்த குணங்களும் அமைந்து நிறைந்த அழகோடு ஒருவன் நிலவி நின்றாலும் அவன் வறுமை யுடையனாயின் அவை யாவும் இலவாய் அவமதிக்கப்படுவன் ஆதலால் "தொல்வரவும் தோலும் தொகையாக நல்குரவு கெடுக் கும்" என்றார். "குடிப்பிறப்பழிக்கும்; விழுப்பம் கொல்லும்; பசிப்பிணி என்னும் பாவி" (மணிமேகலை) என்றதும் ஈண்டு எண்ணத்தக்கது.

"குலம் குப்பையிலே; பணம் பந்தியிலே" என்னும் பழ மொழிப்படி ஒத்த குடிப்பிறந்தவனாயிருந்தாலும் வறியனாயின் அவனை ஒருவரும் மதியாது புறக்கணித்து விடுவர். "பொன் னொடு மணி யுண்டானால் புலையனும் கிளைஞனென்று, தம்மொடுங் கூட்டியுண்டு சாதியில் மணமும் செய்வர்; மன்னரா யிருந்தாரே னும் வசைகெட்டுப் போவாராகில், பின்னவ ராரோ? என்று பேசுவார் ஏசுவாரே" என்பதும் ஈண்டறியத்தக்கது.

"மேலான சாதியில் உதித்தாலும் அதிலென்ன ?
வெகுவித்தை கற்றும் என்ன ?
மிக்க அதிரூப மொடு சற்குணம் இருந்தென்ன ?
மிகுமானி யாகில் என்ன ?
பாலான மொழியுடைய னுமென்ன? ஆசார
பரனுயிருந்தும் என்ன ?
பார்மீது வீரமொடு ஞானவானு மென்ன ?
பாக்கியம் இலாதபோது,
வாலாய மாப்பெற்ற தாயும் சலித்திடுவள்;
வந்த சுற்றமும் இகழுமே;
மரியாதையில்லாமல் அனைவரும் பேசுவார்;
மனைவியும் தூறு சொல்வாள்" என்பதுங்காண்க.

குலம் குணம் அழகு அறிவு முதலிய உயர் நலங்களெல்லாம் ஒருவனிடம் ஒருங்கமைந்திருந்தாலும் வறுமை வந்ததாயின் அவையாவும் இலவாயழிந்தொழிய அவன் மிக இழிந்து நிற்பன் என்க. "விருந்துகண் டொளிக்கும் திருந்தா வாழ்க்கைப், பொறிப்புணர் உடம்பிற் ருேன்றி என், அறிவுகெட நின்ற நல்கூர்மையே" எனப் பெருங்குன்றூர்கிழார் வறுமையை அஞ்சி வருந்தி நின்றதும் ஈண்டறியத்தக்கது.

வறுமையானது சிறுமை பல செய்து சீரழித்து விடும் என்பது கருத்து. இதனால் அதன் கெடுநிலை புலனும்.

சிறந்த குலத்திற் பிறந்தவராயினும் வறுமையுறின் அவர் இழிந்து படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாரி மகளிர்பால் உணரப்படும்.

கதை.

பாரி மகளிர் என்பவர் பாரி என்னும் குறுநில மன்னனுடைய அருமைப்புதல்விகள். இவர் இருவராவர். மூத்தவளுக்கு அங்கவை என்று பெயர். இளையவள் பெயர் சங்கவை. இவ் இருவரும் ஒருவரை ஒருவர் பிரியாமல் அறிவிலும் அழகிலும் உருவிலும் பொறையிலும் நிறை ஒத்திருந்தார். புலமையும் வண்மையும் பொருந்தி இளமையோடு இவர் நிலவி வருங்கால் பகை வேந்தர் வந்து பாரியை வளைந்து கொன்று அரசினைக்கவர்ந்து கொண்டனர். அவ்வள்ளலோடு உடனிருந்த புலவர் திலகராகிய கபிலர் பெரிதும் வருந்தி இவரை இனிது பாதுகாத்து உடனழைத்துச்சென்று திருக்கோவலூரை அடுத்து ஓர் தனியிடத்தில் தங்கியிருந்தார். ஒருநாளிரவு சந்திரோதயத்தைக் கண்டபொழுது இவர் தயங்கியழுதார். ஏன்? எனின், ஒரு மாதத்திற்கு முன்னர் தம் தந்தையோடு மேன்மாடத்து நிலாமுற்றத்தமர்ந்து மகிழ்ந்திருந்ததையும், இது பொழுது அதனையிழந்து வருந்தி நிற்பதையும் நினைந்து நினைந்து மறுகி நொந்தார் என்க. அவ்வமயம் இவர் உருகியுரைத்த பாடல்கள் எவரையும் உள்ளமுருகச்செய்யும். ஒன்று இதனடியில் வருவது காண்க.

"அற்றைத் திங்கள் அவ்வெண் ணிலவின்
எந்தையு முடையேம்; எம் குன்றும் பிறர் கொளார்;
இற்றைத்திங்கள் இவ் வெண் ணிலவின்
வென்றெறி முரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார்; யாம், எந்தையு மிலமே" (புறம்)

சிந்தை கலங்கி இங்ஙனம் மறுகி நின்ற இவரை உறுதி பெறத்தேற்றி விச்சிக்கோன் முதலிய அரசர் சிலரிடம் கொண்டு போய் இவரை ஆதரித்து மணந்துகொள்ளுமாறு அப்புலவர் புகழ்ந்து வேண்டினார். அவரனைவரும் வேண்டாமென்று இகழ்ந்து விடுத்தார். இவர் வருந்தி நாணினர். இறுதியில் இருங்கோவேள் என்பவனிடம் இவரைக் கொண்டுபோயினர். அவன் கண்டு மகிழ்ந்து "இவர் யார்?" என்று கபிலரிடம் கருதி வினவினான். அவ்வமயம் அவனை நோக்கி அவர் கூறியபடியை அடியில் காண்க.

"இவர் யார்? என்குவை யாயின், இவரே
ஊருடன் இரவலர்க்கருளித் தேருடன்
முல்லைக் கீத்த செல்லா நல்லிசைப்
படுமணி யானைப் பறம்பிற் கோமான்
நெடுமாப் பாரி மகளிர்; யானே
தந்தை தோழன், இவர் என் மகளிர்,
அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே" (கபிலர்)

என இங்ஙனம் குறித்துணர்த்தி இவரை மணந்து மகிழும்படி அவனை அவர் குழைந்து வேண்டினார். நல்குரவுடையரென உள்ளேஇகழ்ந்து இவரைக் கொள்ளேன் என்று அவன் சொல்லி விடுத்தான். அவர் உள்ளங் கொதித்தார். "எவ்வி தொல்குடிப் படீஇயர்: மற்றிவர் கைவண் பாரிமகளிர்" (புறம் 202) என்று யான் கருதிச் சொல்லியும் நீ சிறிது மதியாது வறியரென இகழ்ந்தாய்! "நீ பெரியனுயிரு" என்று வயிறெரிந்து கூறி விட்டு இவரை அழைத்துச்சென்று பார்ப்பார் சிலரிடம் அடைக்கலமாகவைத்துப் பாதுகாத்து வரும்படி பணித்துவிட்டு இவ்வுலக நிலையை வெறுத்து அவர் உயிர் துறக்கச் சென்றார். இவர்

உளங்கலங்கி நின்றார். வழிவழியாகச்சிறந்து வந்த உயர்ந்த குடியிற் பிறந்து நிறைந்த குணங்க ளமைந்திருந்தும் வறுமையினால் அப்பெருமை முழுவதும் இழந்து பிறர் இகழ்ந்து சொல்லும்படி இழிந்து நிற்கும் தமது எளிய நிலைமையை எண்ணி யெண்ணி இவர் ஏங்கி யுளைந்தார். "தொல் வரவும் தோலும் கெடுக்கும் தொகையாக நல்குரவென்னும் நசை" என்பதை உலகம் இவரால் உணர்ந்துநின்றது.

பிறந்த குலமாயும் பேராண்மை மாயும்
சிறந்ததம் கல்வியு மாயும்—கறங்கருவி
கன்மேல் கழூஉம் கனமலை நன்னாட
இன்மை தழுவப்பட் டார்க்கு. (நாலடியார்)

உடைமையரு தீட்டல் உறுதுணையாம் யாண்டும்
உடைமையராச் சென்றக்கால் ஊரெல்லாம் சுற்றம்
உடைமைக்கோல் இன்றங்குச் சென்றக்கால் சுற்றம்
உடையவரும் வேறுபடும். (இன்னிலை)

**குடியும் குணமும் கொடுமிடியோன் றற்றால்**
**அடியோ டழிந்து விடும்.**

சிறந்த குடிப்பிறப்பும் வறுமையால் இழிந்துபடும் என்பது இதனால் கூறப்பட்டது.

1044. வீமன் மடையனென வெற்றிநளன் சூதனென்றேறன்
கோமனைமுன் போனார் குமரேசா—தோமகன்ற
இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும். (௪)

இ—ள்.

**குமரேசா!** வீமன் மடையன் என்றும், நளன் சூதன் என்றும் ஏன் வறுமை வந்தபோது மறு மன்னரிடம் போய் மறுகி நின்றார்? எனின், இல் பிறந்தார் கண்ணேயும் இன்மை இளி வந்த சொல் பிறக்கும் சோர்வு தரும் என்க.

இது, உயர்ந்தவரையும் இழிந்து படும்படி வறுமை புரிந்து விடும் என்கின்றது. கோமனை = அரசர் அரண்மனை.

மடையன் என்றது சோறு சமைக்கும் தொழிலுடையோன் என்றபடி. மடை = சோறு. மடைமையென்னும் பண்படியாய்ப் பிறந்துவரின் அம்மடையன் அறிவிலான் என்க. சூதன் = தேர்ப்பாகன். மூடன், வஞ்சகன் என்று தொனிக்கும்படி இவ் இரண்டு பெயர்களும் இங்கு அமைந்துள்ளமை காண்க. இங்ஙனம் வைத்தது அவ் எளிய நிலைமையின் இளிவு தெளிய.

இல் = மனை. இங்கு உயர்ந்த குடியினை அஃதுணர்த்தி நின்றது. கண்ணேயும் என்பதில் உம்மை அப்பிறப்புடையாரது சிறப்புணர நின்றது. எவ்வளவு சிறந்தவராயினும் பொருள் இல்லையாயின் அவர் இழிந்துபடுவர் என்பதாம்.

இளிவந்தசொல் = இழிவு வருதற்குரிய சொல். அஃதாவது பழிமொழிகள். சோர்வு = தளர்ச்சி.

பிறந்தார் கண்ணேயும் தரும் என்றதனால் பிறர் மாட்டு அது தரும் இழிவுநிலை சொல்ல வேண்டாதாயிற்று.

மேல், வறுமை குல மேன்மைகளை யெல்லாம் குன்றச்செய்யும் என்றார்; இதில், உயர்ந்த மக்களையும் அது தாழச்செய்யும் என்கின்றார்.

வறுமையானது நல்ல குடிப்பிறந்தார் இடத்தேயும் இளிவான சொற்களை யுளவாக்கும் தளர்வினைக் கொடுத்து விடும் என்பதாம்.

மானம் வீரமுதலிய சிறந்த குணங்களமைந்த உயர்ந்த குடியில் பிறந்திருந்தாலும் வறுமை வந்ததாயின் இழிந்தவரிடத்தும் சென்று எமக்கு ஏதேனும் ஈயவேண்டும் என்று இரந்து நிற்கும்படி அவரை அது புரிந்துவிடும் ஆதலால் "இளிவந்த சொல் பிறக்கும் சோர்வினை இன்மை தரும்" என்றார்.

ஒள்ளிதாகிய தலைமையிற் பிறந்துளோர் உலகம்
எள்ளுறு நலகுர வெய்தலால் இழிந்தவர் கண்ணும்
கொள்ளுமாறொரு பயன் குறித் தேகல்போல் கொடிய
கள்ளிதன்புடை நீழலுக்கு ஒதுங்குவ கரிகள். (கந்தபுராணம்)

இது பாலைவனத்தைக் குறித்துச் சொல்லுங்கால் சொல்லியது. சிறந்த மதயானைகள் பாலையின் வெயில் வெப்பம் பொறுக்க

மாட்டாமல் கள்ளி நீழலில் ஒதுங்கி நின்றன என்பதற்கு உயர்ந்த குல மக்கள் வறுமைத்துன்பத்தால் கலங்கி இழிந்தவரிடத் துப்போய் இரந்து நின்றமையை உவமையாகக்காட்டி இஃ துணர்த்தி நிற்கும் அழகை யூன்றிப்பார்க்க.

எவ்வளவு இடுக்கண்கள் வந்தாலும் யாண்டும் குன்றாது நிற்கும் இயல்பினரான குலமக்களையும் வறுமை குன்றச்செய்யும் என்றபடி. இதனால் அதன் கொடுநிலை புலனும்.

நீரினும் நுண்ணிது நெய் என்பர்; நெய்யினும்
யாரும் அறிவர் புகைநுட்பம்—தேரின்
நிரப்பிடும்பையாளன் புகுமே புகையும்
புகற்கரிய பூழை நுழைந்து. (நாலடியார்)

நிரப்பு, தன்னையுடையாரை இறப்பவும் அற்பராக்கிவிடும் என, இஃதுணர்த்தி நிற்கும் நுட்பம் நோக்குக.

சிறந்த மேன்மக்களும் வறுமை வந்தால் இழிந்து படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை வீமன் கண்ணும், நளன்பாலும் உணரப்படும்.

## கதை.

வீமன் அரசிழந்து வனம் புகுந்து பன்னிரண்டு வருடம் அலைந்து திரிந்து முடிவில் விராடநகர்க்கு வந்தான். தன் காலம் கழியும் வகையை நினைந்து அங்கு வேலைசெய்ய விழைந்தான். இவன் சமயல் வேலையில் கைதேர்ந்திருந்தானுதலால் அதனைச் செய்து பிழைக்கலாமென்று துணிந்து அமயநோக்கி எழுந்து அவண் அரசனுயிருந்த விராடனை அணுகி, வணங்கி நின்று, நிலைமையை உணர்த்தித் தன்னை அடுதொழிலாளனுக அமைத்துக் கொள்ளும்படி அமைந்து வேண்டினன். அவனும் அவ்வாறே இணங்கி யருளினன். ஆண்டமைந்து வேண்டிய உணவுகளை விதவிதமாகச் செய்துகொடுத்து அவ்வினையாளர்களெவரினும் இவன் முதல்வனுகியிருந்தான். உணவு வகைகளில் இவன் செய்த இனிய முறைகள் வீமபாகம் என இவன் பெயரால் இன்றும் விளங்கியுள்ளது. சிறந்த அரசகுலத்தில் பிறந்து

உயர்ந்த வீரனுயிருந்தும் வறுமையினுல் இங்ஙனம் இழிந்து தொழில் புரிந்திருந்தமையை அறிந்து பின்பு அனைவரும்வருந்தினர். வறுமை எவரையும் சிறுமைப்படுத்தி விடும் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

தண்டினுக்கொருவன் புயவலிக்கொருவன் தனுவினுக்கொருவனென்றுரைக்கும், திண்டிறற் பவனகுமரனும் சின்னுள் சென்றபின் தெள்ளமு தனைய உண்டியைக்குறித்துக் கற்றதன் கல்வியுரிமையைக்குறித்து அடுதொழிற்கு மண்டலத்தரசே! ஒருவன் யான் வீமன் மடையன் என்றரசவை வந்தான்.
(பாரதம்)

மேற்குறித்த இவன் சரிதம் இதில் குறிக்கப்பட்டிருத்தல் காண்க.

## கதை 2.

நளன் கலிவயத்தனுப் நாடிழந்து காடு புகுந்து பல இடங்களிலும் திரிந்துழன்று இறுதியில் இருதுபன்னன் என்னும் மன்னனிடம் வந்து தேரோட்டி நின்றான். முடி மன்னர் பலரும் அடிதொழ இருந்த இவன் மிடிபுகுந்தமையால் நிலை குலைந்து மறுபுலமடைந்து பணிந்து நின்று ஒருவனிடம் இங்ஙனம் ஊழியம் புரிந்ததை யறிந்து முனிவரும் வருந்தினர். உயர்ந்த குடியிற் பிறந்து எவ்வளவு சிறந்தவராயிருந்தாலும் வறுமையடைந்தாராயின் அவர் சிறுமையுடையாராய் இழிந்து நிற்பர் என்னும் இயல்பினைக்குறித்து அக்காலத்தவர் உரையாடுங்கால் இவனை உதாரணமாக வைத்து உரைத்து வந்தார். "இற்பிறந்தார் கண்ணேயும் இன்மை இளிவந்த சொற்பிறக்கும் சோர்வு தரும்" என்பதை உலகம் காண இவனும் உணர்த்தி நின்றான்.

சொற்றரு கலையெலாம் தொடர்ந்து பற்பகல்
கற்றவ ராயினும் கழி நிரப்பினுல்
அற்றவராவரேல் ஆக்கம் வேண்டியே
பற்றலர் தம்மையும் பணிந்து நிற்பரால் (கந்தபுராணம்)

நிரப்பெனும் பெரும் பகை வந்து நிலவலின் யாதும்
இரப்பிலார்களும் இரப்பது துணிந்தனர் அம்மா!
கரப்பிலார்களும் கரப்பது துணிந்தனர் கருத்தின்
விருப்பிலார்களும் இழிந்தவும் விரும்புமா துணிந்தார்.
(காஞ்சிப்புராணம்)

மானங் கெடுத்து மதியழித்து மாண்பொழிக்கும்
ஈன வறுமை எழின்.

வறுமை எவரையும் சிறுமைப்படுத்திவிடும் என்பது இத னால் கூறப்பட்டது.

---

1045. நல்விறையர் நல்குரவால் நைந்துபல துன்பங்கள்
கொல்ல நொந்தார் என்னே குமரேசா—பொல்லாத
நல்குர வென்னு மிடும்பையுள் பல்குரைத்
துன்பங்கள் சென்று படும். (ரு)

இ—ள்

குமரேசா! வறுமை வந்தபொழுது பல் வகைத்துன்பங் களையும் நல்விறையனார் ஏன் அடைந்தார்? எனின், நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குரைத்துன்பங்கள் சென்றுபடும் என்க.

இது, நல்குரவுடையார் அல்லல் பல அடைவரென்கின்றது.

நல்குரவு = வறுமை. பிறர் நல்குதலை நச்சிச்செல்லச் செய்யுமாதலால் வறுமை, நல்குரவு என நின்றது. சென்று படும் = வந்துபுகும். வறுமையை இடும்பை என்று குறித் தது துன்பமே மயமாயிருக்கும் அதன் இயல்பு கருதி.

பல்குரைத்துன்பங்கள் = பலவகையான கொடிய துயரங் கள். குரை என்பது ஒலியினை உணர்த்திவரும் "குவவுக்குரை இருக்கை" (பதிற்றுப்பத்து) "நுரைத்தலைக் குரைப்புனல்வரைப் பகம் புகுதோறும்" (பொருநராற்றுப்படை) "குரைத்ததேரும் களிறும் குதிரையும்" (இராமாயணம்) இங்ஙனம் ஆரவாரத்தினை உணர்த்திவரும் குரை என்னும் சொல் ஈண்டுத் துன்பத்திற்கு அடையாயமைந்து கொடுமை குறித்து நின்றது. பல் என்பது துன்பத்தின் வகையினையும், குரை என்பது அதன் நிலையினை யும் உணர்த்தி நின்றன. நதிகள் பல முழங்கிவந்து கடலில் விழுவன போல் துயரங்கள் பல இரைந்து வந்து வறுமையுள் புகும் என்பதாம். வறுமை, துன்பங்கட்கு நிலையம் என்றபடி.

மேல், வறுமை குடிப்பிறந்தாரையும் குன்றச்செய்யும் என்றார்; இதில், கொடிய துன்பங்களுக்கெல்லாம் அஃது உறைவிடமென்கின்றார்.

வறுமையாகிய துன்பத்துள் பலவகையான கொடிய துன்பங்கள் திரண்டுவந்து நிறைந்து நிற்கும் என்பதாம்.

பொருளில்லாதவர் இன்பநலங்கள் யாதுமிலராய் ஈனமுறுவர்; ஒக்கல் மக்கள் மனைவி முதலிய அனைவராலும் இகழப்படுவர்; அல்லலுக்கே நிலையமான இரவினை மேற்கொண்டு அலைந்து திரிவர்; இன்னவாறு இன்னல் பல எய்தி இழிந்துழல்வராதலால் "நல்குரவு ள் பல்குரைத் துன்பங்கள் படும்" என்றார்.

தரித்திரம் மிக்க வனப்பினை ஒடுக்கிச் சரீரத்தை யுலர்தர வாட்டும்;
தரித்திரம் அளவாச் சோம்பலை எழுப்பும்; சாற்றருமுலோபத்தை மிகுக்கும்;
தரித்திரம் தலைவன் தலைவியர்க்கிடையே தடுப்பருங்கலாம் பல விளைக்கும்;
தரித்திரம் அவமானம் பொய் பேராசை தருமிதிற் கொடியதொன்றிலையே.

தரித்திரம்களிப்பாம்கடலுக்கோர்வடவை; சாற்றுமெண்ணங்கள்வாழிடமாம்
தரித்திரம் பல்பல் துக்கமுந்தோன்றத் தக்கபே ராகரம் என்ப;
தரித்திரம் நன்மைசாலொழுங்கென்னும் தழைவனந் தனக்கழல்தழலாம்;
தரித்திரம் கொடிய எவற்றினும் கொடிதத்தகையதை ஒழித்தனன்றமே;
(குசேலோபாக்கியானம்)

நல்குரவால் நேரும் அல்லல்களைக் குறித்துச் சிறிது இஃது உணர்த்தி நிற்றல் காண்க. கொடுந்துன்பங்கள் பலவற்றிற்கும் வறுமை இடமாம் என்றபடி.

"பொருள் இலார்க்கின்பமில்லை; புண்ணியம் இல்லை; என்றும்,
மருவிய கீர்த்தியில்லை; மாந்தரிற் பெருமையில்லை;
கருதிய கருமம் இல்லை; கதிபெறு வழியும் இல்லை;
பெருநிலந்தனில் நடக்கும் பிணமெனப்படுவரன்றே" என்பதும் காண்க. இன்மையால் நேரும் புன்மைகளை இதில் எண்ணி நோக்குக.

வறுமை வந்ததாயின் சிறுமை பல சேரும் ஆதலால் அஃதடையாதபடி அரிய முயற்சிகளைச் செய்து உரியநலங்களை அடைந்து கொள்ள வேண்டுமென்பது கருத்து.

நல்குரவாளர் அல்லல் பல அடைந்து அலமருவார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நல்லிறையனார்பால் உணரப்படும்.

கதை.

நல்லிறையனார் என்பவர் பாண்டி நாட்டிலிருந்தவர். சங்கப்புலவருள் ஒருவர். அரிய கலைகள் பலவும் பயின்று பெரிய புலவராயிருந்தும் கொடிய வறுமையால் இவர் மிகவும் மறுகி நின்றார். பொருளில்லையாயினும் நல்ல மானமுடையவராதலால் எவரிடத்தும் எளிது செல்லாமல் அறிவு நிலையில் நெறியமைந்து நின்று இயன்றவ்வளவையும் வருந்தி முயன்று தமது குடும்பத்தை இவர் போற்றி வந்தார். வந்தும் பழவினை வயத்தால் தம்பாடனைத்தும் நன்கு பயன்படவில்லை. தமது புலமையின் அருமையை அறிந்து ஆதரிப்பாரும் இல்லாமையால் இவர் அலமந்துழந்தார். பலநாள் பட்டினியும் கிடந்தார். பசிக்கொடுமையால் தமது மனைவி மக்கள் படும் மறுக்கத்தைக் கண்டு ஒருநாள் இவர் மறுகி எழுந்தார். எவரிடஞ்செல்வது? எப்படிக்கேட்பது? எங்ஙனம் மீள்வது? எவ்வாறு வாழ்வது? எனப் பலபல எண்ணிப்பதைத்து நின்றார். அக்காலத்தில் உறையூரில் அரசுபுரிந்திருந்த கிள்ளிவளவன் என்பவன் கல்வியறிவும் வள்ளன்மையு முடையனாய் விளங்கி நின்றனாதலால் அவனை நினைந்தெழுந்து நெடிது நடந்து கடிதுவந்து கண்டார். அவன் இவரை இனிதுநோக்கி இன்னுரையாடினான். அருமை தெரிந்த அவன்பால் இவர் தமது நிலைமையை உணர்த்தினார். அன்று இவர் உரைத்தமை அடியில் வருவது காண்க.

“பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமைவிதலின்
குடிமுறை பாடி ஒய்யென வருந்தி
அடல்நசை மறந்த எம் குழிசி மலர்க்கும்
கடனறியாளர் பிறநாட்டின்மையின்
வள்ளன்மையினெம் வரைவோர் யார்? என
உள்ளிய வுள்ளமொடு உலைநசை துணையா

மலர்தார் அண்ணல்! நின் நல்லிசை உள்ளி
ஈர்ங்கை மறந்த என் இரும்பேர் ஒக்கல்
கூர்ந்த எவ்வம்விடக் கொழுநிணம் கிழிப்பக்
கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த
மூடைப் பண்டம் மிடை நிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற
ஈன்ற அரவின் நாவுருக் கடுக்குமென்
தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போது விரி பகன்றைப் புதுமல ரன்ன
அகன்றுமடி கலிங்கம் உடீஇச் செல்வமும்
கேடின்று நல்குமதி பெரும! மாசில்
மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி
ஆடுமகள் அல்குல் ஒப்ப ஆடிக்
கோடையாயினும் கோடி விளையும்
காவிரி புரக்கும் நன்னாட்டுப் பொருந!
வாய்வாள் வளவன் வாழ்கெனப்
பீடுகெழு நோன்றாள் பாடுகம்பலவே" (புறநானூறு)

இவர் வீட்டில் நெடுநாளாக அடுப்பில் உலையேற்றாமல் சமைக்கும் கலம் கவிழ்க்கப்பட்டிருந்ததெனவும், இவருடைய ஒக்கல் உணவுண்டு கைகழுவுதலை அறியாதிருந்தாரெனவும், தமது வறுமை நிலைமையைப் புலப்படுத்தித் தம்மை ஆதரித்தருளும்படி அவ் அரசனை நோக்கி இவர் இதில் உரைத்திருத்தல் காண்க. பல இடங்களிலும் அலைந்து திரிந்து மிடியின் கொடுமையால் இவர் அடைந்த துயரங்கள் அளவிடலரியன. நல்குரவென்னும் இடும்பையுள் பல்வகைத் துன்பங்களும் வந்து விளையும் என்பதை உலகம் இவர்பால் நன்கு உணர்ந்து நின்றது.

இன்மையோன் றெய்தின் இடர்கோடி வந்தெய்தும்
புன்மை திரண்டு புகும்.

கொடுந்துன்பங்கள் பல வறுமையுள் குடிபுகுந்திருக்கும் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1046. கோடா திடைக்காடர் கூறினும்சொற் கோடிபடுத
கூடலிறை முன்னேன் குமரேசா—நாடியே
நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வு படும். (சு)

இ—ள்.

குமரேசா! இடைக்காடர் நன்கு ஆராய்ந்து இனிதுசொல்லியும் வழுதி ஏன் அதனை இகழ்ந்திருந்தான்? எனின், நல்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும் நல் கூர்ந்தார் சொல்பொருள் சோர்வு படும் என்க. கூடல் = மதுரை.

இது, நல்குரவுடையான் சொல் செல்லாதென்கின்றது.

நற்பொருள் என்றது உண்மையான உயர்ந்த நூற்பொருளை. உயிர்க்குறுதி பயந்து நலம்புரிந்து நிற்கும் தன்மை தோன்ற நல்ல என்னும் அடை புணர்ந்து நின்றது.

நன்கு உணர்ந்து = நன்றாக ஆராய்ந்து. வழுவறத்தெளிந்து என்க. நன்கு என்பதைச் சொல்லுக்கும் கூட்டிக்கொள்க. நல்ல பொருளாயிருந்தாலும் நன்குணர்ந்து சொல்லாவழி சோர்வுபடுமாதலால் அங்ஙனம் படாவகைக்கு ஏதுவை இங்ஙனம் விரித்துரைத்தார். நல்கூர்ந்தார் = வறியர். சொற்பொருள் = சொல்லின் பொருள். சொல்லும் பொருளும் எனினுமாம்.

இல்லாரை எல்லாரும் எள்ளி நிற்பராதலால் நல்லபொருளை அவர் நன்கு சொல்லினும் அதனை எவரும் நயந்து கேளார் என்க. "ஏழை சொல் அம்பலம் ஏறாது" என்பதும் காண்க.

மேல், நல்குரவு அல்லல் பல செய்யும் என்றார்; இதில், அது கல்வியையும் புல்லி தாக்கும் என்கின்றார்.

நல்ல நூற்பொருள்களை நன்றாக ஆராய்ந்து இனிது சொல்லினும் வறுமையுடையார் சொல்லின் பொருள் பயன்படா தென்பதாம். உம்மை அச்சொல்லின் உயர்வுணர நின்றது.

உண்மைப்பொருளை நுண்ணிதின் ஆராய்ந்து உறுதிபெறத் தெளிந்து பணிவுடனமைந்து இனிது சொன்னாராயினும் வறி

யர் சொல்லை எவரும் உவந்து கேளார்; இகந்து போவர்; ஏன்? எனின், நயந்துநின்று கேட்பின் அவர் ஏதேனும் விரும்பிக் கேட்டு விடுவர் என்று பயந்தும், அதனால் இகழ்ந்தும் அகன்று விடுவராதலால் "நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வு படும்" என்றார்.

பொருளில்லாதவர் ஒரு பொருளாக மதிக்கப்படாராதலால் அவர் சொல்லும் அவமதிக்கப்படுவதாயிற்று. ஆகவே பொருளுடையவர் எதையாயினும் உணர்வின்றி உளறிச் சொன்னாலும் அச்சொல் சோர்வு படாது செல்லும் என்பது பெறப்பட்டது.

"நல்லாவின் கன்றாயின் நாகும் விலைபெறூஉம்;
கல்லாரே யாயினும் செல்வர்வாய்ச் சொற்செல்லும்;
புல்லீரப் போழ்தின் உழவேபோல் மீதாடிச்
செல்லாவாம் நல்கூர்ந்தார் சொல்." (நாலடியார்)

"எனைத்துணைய வேனும் இலம்பாட்டார் கல்வி
தினைத்துணையும் சீர்ப்பாடில்வாம்—மனைத்தக்காள்
மாண்பில ளாயின் மணமகன் நல்லறம்
பூண்ட புலப்படா போல்." (நீதிநெறிவிளக்கம்)

"சொல்லவை சொல்லார்; சுருங்குபு சூழ்ந்துணர்
நல்லவை யாரும் நனி மதிப்பார் அல்லர்;
கல்வியும் கைப்பொரு ளில்லார் பயிற்றிய
புல்லென்று போதலை மெய்யென்று கொண்ணீ." (வளையாபதி)

இவை ஈண்டுணரத்தக்கன. நல்குரவாளன் எவ்வளவு கல்வியுடையனாயினும் அவன் சொல் செல்லாதென்றதனால் அதன் பொல்லா நிலைமை புலன் கொளலாகும்.

உயர்ந்த கல்விமானாயினும் இல்லாதவன் சொல்லை எவரும் உவந்து கேளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இடைக்காடர்பால் உணரப்படும்.

## கதை.

கடைச்சங்கப்புலவராய்ச் சிறந்திருந்த இடைக்காடர் அது குலைந்து போனபின் பாண்டிய நாட்டிலே காட்டூர் என்னும் இடத்தில் தனியமர்ந்திருந்தார். அக்காலத்தில் குலேசபாண்டியன்

என்னும் மன்னன் மதுரையிலிருந்து அரசுபுரிந்து வந்தான். கல்வியறிவிலும் பகைவரை வெல்லும் வகையிலும் அவன் மிகச் சிறந்திருந்தான். அருமையறிந்து ஆதரிப்பான் என்று அகமிக மகிழ்ந்து சில பாடல்களைப் புனைந்து ஒருமுறை அவனை இவர் காணச்சென்றார். அவ்வமயம் அழகிய மணி மண்டபத்தில் அரியாசனத்தில் அவன் அமர்ந்திருந்தான். இவர் வாயில்கள் பல கடந்து மருங்கணுகி மகிழ்ந்து நோக்கிப் புகழ்ந்து பாடினர். அவன் யாதும் உவந்து கேளாது இகழ்ந்திருந்தான். தண்ணளியும் நுண்ணுணர்வும் வாய்ந்து புண்ணிய சீலராய் நின்ற இவர் அவனது புன்மையை நோக்கிப் பொங்கி வருந்தினர் அரியபொருளை உரிமையோடு இனிது சொல்லியும் வறியனென்று கருதியன்றோ இங்ஙனம் அவமதித்துவிட்டான் என இவர் அகங்கொதித்தகன்று ஆலயத்துட் புகுந்து அடிதொழுதெழுந்து பெருமான் முன் நின்று அழுது புலம்பி உருகி மொழிந்தார். இவரது உரையினுக்கு இரங்கி இறைவனும் உடனே அருள்புரிந்து திருவுருக்கரந்து ஆலயத்தைத் துறந்து அகன்று போனர். அன்றிவர் உரைத்த விதமும், உற்ற படியும் அடியில் வருவன காண்க.

“சந்நிதியில் வீழ்ந்தெழுந்து தமிழறியும் பெருமானே! தன்னைச்சேர்ந்தார்,
நன்னிதியே! திருவாலவாயுடைய நாயகனே! நகுதார் வேம்பன்,
பொன்னிதிபோல் அளவிறந்த கல்வியுமிக் குளான் என்று புகலக்கேட்டுச்,
சொன்னிறையும் கவிதொடுத்தேன் அவமதித்தான் சிறிதுமுடி துளக்கானகி

பரிவா யின் மொழிதொடுத்து வருணித்தோர்க் ககமகிழ்ந்தோர் பயனும்
நல்கா, விரிவாய தடங்கடலே நெடுங்கழியே அடுங்கான விலங்கே புள்ளே
பொரிவாய பாரை மரத்திரையே வான்தொடு குடுமிப்பொருப்பே வெம்பும்
எரிவாய கொடுஞ்சுரமே என இவற்றோடொன்றிணை யொத்திருந்தான் எந்தாய்!

என்னை இகழ்ந்தனனோ? சொல்வடிவாய் நின் இடம்பிரியா இமையப்பாவை
தன்னையும், சொற்பொருளான வுன்னையுமே இகழ்ந்தனன்; என்றனக்கியா
தென்ன, முன்னைமொழிந்து இடைக்காடன் தணியாத முனிவீர்ப்ப முந்
திச்சென்றன், அன்னவுரை திருச்செவியி னூறுபா டெனவுறைப்ப அருளின்
மூர்த்தி.

போன இடைக்காடனுக்கும் கபிலனுக்கும் அகத்துவகை பொலியுமாற்றன்
ஞானமயமாகிய தன்னிலிங்கவுரு மறைத்துமையா நங்கையோடும்,
வானவர்தம்பிரான்எழுந்து புறம்போய்த்தன்கோயிலினேர்வடபால்வைகை,
யானநதித்தென்பாலோர் ஆலயங்கண் டங்கண் இனிதமர்ந்தானம்மா.”

(திருவிளையாடற்புராணம்)

இதனால் இவரது மெய்மைப் புலமையும், தெய்வத் திருவருளும் இனிதறியலாகும். இப்புலவர் திலகரை அவமதித்திருந்தமையால் தன்நகரில் நேர்ந்த அல்லல்களை நினைந்து அவ்அரசனும் அலமரலடைந்தான். இத்தகைய பெருமையுடைய இவர் அரிய பொருளை நுணுகியறிந்து இனிது சொல்லியும் வறுமையினால் அது சிறுமையுற்றமையை யறிந்து அனைவரும் வருந்தி இரங்கினார். ''நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வு படும்'' என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

''மறுமைகண்ட மெய்ஞ்ஞானியர் ஞாலத்து வரினும்
வெறுமைகண்டபின் யாவரும் யாரென விரும்பார;
குறுமை கண்டவர் கொழுநகை லென்னினும் கூசார்
சிறுமை கண்டவர் பெருமைகண் டன்றியே தேறார்.''
(இராமாயணம்)

வருணனை வழிவேண்டியபொழுது அவன் விரைவில் வராமையால் இராமன் மறுகியுரைத்தது. எவ்வளவு அறிவுடையனாயினும் வறியனென்று தெரிந்தால் அவனை ஒருவருமதியார் என இவ்வுலக நிலைமையை வெறுத்து உள்ளங்கொதித்து அவ்வள்ளல் உரைத்திருக்குந்திறனை இதில் ஊன்றிப்பார்க்க.

நீர்மையே யன்றி நிரப்ப எழுந்ததம்
கூர்மையுமெல்லாம் ஒருங்கிழப்பர்—கூர்மையின்
முல்லையலைக்கும் எயிற்றாய் நிரப்பென்னும்
அல்லல் அடையப்பட் டார். (நாலடியார்).

வல்ல கலைஞ னெனினும் வறியன்சொல்
செல்லா திழியுஞ் சிதைந்து.

இல்லாதான் சொல் செல்லாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1047. பிள்ளைகளைச் சேயனையும் பெற்றவளும் விற்றாளே
கொள்ளைநின் றெனனே குமரேசா—உள்ளும்
அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும். (எ)

இ—ள்.

குமரேசா! பெற்ற தாயாயிருந்தும் தன் மகனாகிய சுனச்சேபனை ஏன் அன்று விற்று நின்றாள்? எனின், அறம் சாரா நல்குரவு ஈன்றதாய் ஆனும் பிறன்போல நோக்கப்படும் என்க.

இது, வறுமையுடையானை எவரும் இகழ்வர் என்கின்றது.

அறம் சாரா = புண்ணியம் பொருந்தாத. வறுமையானது பாவத்தின் சார்பாய் வருமாதலால் அஃது "அறஞ்சாரா" என நின்றது. அறம் சார்ந்து வருவது பொருளாம் என்க. "வித்தி நல்லறம் விளைந்த அதன் பயன், துய்ப்போர்" (மணிமேகலை) எனச் செல்வரைக் குறித்திருத்தல் காண்க.

நல்குரவு = வறுமை. ஈண்டு ஆகுபெயராய் நின்று அதனை உடையானை யுணர்த்தி நின்றது. "நல்குரவு நோக்கப்படும்" என்பதில் பொருள் தெளிவாகப் பொருந்தாமையால் அப்பொருள் நோக்கி இங்ஙனம் கொள்ளப்பட்டது.

செவிலித்தாய், கைத்தாய் முதலாக வேறு தாயர்களும் உளராதலால் அவரினும் வேறுபாடு தோன்ற "ஈன்றதாய்" என்றார். ஈன்ற = பெற்ற. பிறப்புரிமையையும், அவளது இயற்கையான அன்பின் சிறப்பு நிலையையும் உம்மை யுணர்த்தி நின்றது.

தாயானும் நோக்கப்படும் என்றதனால் பிறரால் அவன் இகழப்படுதல் சொல்ல வேண்டாதாயிற்று.

மேல், கல்வியறிவையும் நல்குரவு கடைப்படுத்தும் என்றார்; இதில், அன்புரிமையையும் அஃது அழித்துவிடும் என்கின்றார்.

பாவத்தின் பயனாய் வரும் வறுமையுடையான் பெற்ற தாயானும் இகழ்ந்து நோக்கப்படுவன் என்பதாம்.

இல்லாதவனை ஈன்றதாயும் இகழ்ந்து விடுதற்குக்காரணம் என்னை? எனின், அவனிடமிருந்து யாதும் கொள்ளலாகாமையோடு அவனுக்குக் கொடுத்துதவும் வேண்டி யிருத்தலான் என்க. எவ்வளவு துன்பங்கள் எய்தினும் அன்புசெய்து பேணும் இயல்பினை இயல்பாகவுடைய தாயும் தன் மகன் வறுமையுடையனாயின் அவனை இகழ்ந்து அகல விடுவள் என்ற இதனால் அந்நீச வறுமையின்நிலைமை புலனாம்.

ஈன்றதாயினை இங்ஙனம் எடுத்துக்காட்டியதனால் இல்லானை எல்லாரும் எள்ளிவிடுவர் என்பதாயிற்று. "இல்லானை இல்லாளும் வேண்டாள்; மற்று ஈன்றெடுத்த தாய் வேண்டாள்" என்றார் ஒளவையாரும்.

"தாயும்பகை; கொண்ட பெண்டீர் பெரும்பகை; தன்னுடைய
சேயும்பகை; உறவோரும் பகை; இச்செகமும் பகை;
ஆயும்பொழுதில் அருஞ்செல்வ நீங்கில் இங்காதலினால்
தோயுநெஞ்சே மருதீசர் பொற்பாதஞ் சுதந்திரமே."
(பட்டினத்தடிகள்)

"வறுமைதான் வந்திடில் தாய் பழுது சொல்லுவாள்;
மனையாட்டி சற்றும் எண்ணாள்;
வாக்கில் பிறக்கின்ற சொல்லெலாம் பொல்லாத
வசனமாய் வந்து விளையும்;
சிறுமையொடு தொலையா விசாரமேயல்லாமல்
சிந்தையில் தைரியமில்லை;
செய்யசபை தன்னிலே சென்றுவர வெட்கமாம்
செல்வரைக் காணில நாணும்;
உறுதிபெறு வீரமும் குன்றிடும்; விருந்துவரில்
உயிருடன் செத்த பிணமாம்;
உலகம் பழித்திடும்; பெருமையோர் முன்புசென்று
ஒருவருடன் செய்தி சொன்னால்
மறுவசனமும் சொலார்;" என்பதும்காண்க.

நிலைமை தவறி ஒருவன் வறுமையுறின் பெற்றவரும் கூடப் பிழைபடப்பேசி அவனை ஒழிவுசெய்து விடுவர் என்றபடி.

"சங்க வெண்டாமரைக்குத் தந்தையாய் இரவி தண்ணீர்
அங்கதைக் கொய்துவிட்டால் அழுகச்செய் தந்நீர் கொல்லும்;
துங்கவெண் கரையில் சேர்ந்தால் சூரியன் காய்ந்து கொல்வான்;
தங்களில் நிலைமை கெட்டோர் இப்படித்தயங்குவாரே."

வறுமையுடையானைப் பெற்றதாயும் பேணாது விடுவள் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சுனச்சேபன் பால் உணரப்படும்.

## கதை

சுனச்சேபன் என்பவன் இரிசிகனுடைய அருமைத்திரு மகன். தாய் பெயர் கௌசிகை. அவள் விசுவாமித்திரரோடு உடன் பிறந்தவள். இச் சதிபதிகளிருவரும் பிருகுதுங்கம் என்னும் மலையருகே தனியிருந்து புனித நிலையிலமர்ந்து இனிய போகங்களை நுகர்ந்து சுனகன், சுனச்சேபன், சுனன் என்னும் முதல் மூவரைப்பெற்று இனிது வாழ்ந்து வந்தார். வருங்கால் வறுமைமிக அடைந்தார். நல்ல அறிவும் அமைதியுமுடைய ராதலால் அந் நல்குரவினும் நலந்திரியாது நின்றார். ஆயினும் மிடியின் கொடுமை மிக்கூற்று நின்றது. அக்காலத்தில் திரு வயோத்தியிலிருந்து அரசு புரிந்த அம்பரீடன் என்பவன் நரமேதம் என்னும் ஓர் அரிய யாகம் செய்தான். வேதவிதிப்படி அவ் வேள்விப்பலிக்கு ஓர் ஆள் வேண்டியிருந்தமையால் அம்மன்னன் பெரும் பொருள் கொண்டு தேரேறிச்சென்று பலவிடங்களினும் திரிந்து உளவறிந்து முடிவில் பிருகுதுங்கம் வந்து இரிசிகனைக் கண்டு "பெரும் பொருள் தருகின்றேன் ஒரு குமாரனைத் தரு கின்றீரா?" என்றான். அவர் மனைவியிடம் வினவினார். இரு வரும் கலந்து நெடிது நேரம் நினைந்தார். "இளையவன் மிகவும் சிறுவன்; மூத்தவன் வேலைசெய்து வருவன்; ஆதலால் இது பொழுது நடுவுள்ளவனைக் கொடுத்து விடுவோம்" என்று அவர் முடிவுசெய்தார். அவர் குறிப்பினை இவன் குறிப்பாலுணர்ந் தான். "அந்தோ! வறுமைக்கொடுமையல்லவா? பெற்றோரையும் இங்ஙனம்பேதுறச்செய்தது" என்று இவன் மறுகி எழுந்து மன்னனிடம் போய் "யான் உமக்கு ஆளானேன்; எனக்குரிய விலைப்பொருளை என் தந்தையிடம் தந்துவிடும்" என்றான். அங் ஙனமே அவன் கொடுத்துவிட்டு இவனைக் கொண்டு சென்றான். செல்லுங்கால் இடைவழியில் ஒரு அழகிய சோலையருகேயிருந்த பொய்கையின்கண் அரசன் நீராடச்சென்றான். இவனும் இறங்கி நிய மஞ்செய்ய அயலே போனான். அங்கு அருந்தவஞ்செய்து கொண்டிருந்த விசுவாமித்திரரைக் கண்டான். அவரடியில் விழுந்து தொழுதான். யார் நீ? என்றார். இவன் உற்றதை

முற்றும் ஒளியாதுரைத்தான். அவர் உள்ளமுருகினர். தமது தமக்கையும், மைத்துனனும் செய்துள்ளதை நினைந்து சாலவும் வருந்தினர். இவனுக்கு ஓர் மந்திரத்தை உபதேசித்து இதனை ஓதிச்செல்க; பனியிட்டாமலே அரசன் வேள்வி முடிவு பெறும்; நீயும் இனிது மீள்வாய்; என்று உணர்த்தி விடுத்தார். அவ்வாறே இவன் சென்று நின்றான்; மன்னன் வேள்வி நன்கு முடிந்தது. இவனும் மகிழ்ந்து மீண்டான். பொருள் இல்லையானால் பெற்றதாயும் வெறுத்து விடுவள் கொல்! என்று வியந்து நினைந்து இவ்வுலக நிலையை வெறுத்து உள்ளே நகைத்தான். உறுதவம் புரிந்து பின்பு இவன் உயர்திருவடைந்தான். நல்குரவுடையான் ஈன்றதாயானும் பிறன்போல நோக்கப்படுவான் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். வறுமைத் துயரையும், இவனது அருமைக் குணங்களையும் நினைந்து அக்காலத்தவர் பலரும் வியந்து பரிந்து நயந்து புகழ்ந்தார்.

"குறைதவிரி சிலைவாட்டானைக் கோமகன் அம்பரீடன்,
சுதைதருமொழியன், வையத்துயிர்க்குயிராய தோன்றல்
வதைபுரி புருடமேதம் வகுப்ப ஓர் மைந்தற் கொள்வான்
சிதைவிலன்கனகந்தேர்கொண்டு அடவிகள் துருவிச்சென்றான். (க)

நற்றவ ரிசிகன் வைகும் நனைவரும் பழுவ நண்ணிக்
கொற்றவன் வினவலோடும் இசைந்தனர் குமரர் தம்முள்
பேற்றவள் இளவல் எற்கே என்றனள்; பிதா மூன் என்றான்;
மற்றையமைந்தன் நக்கு மன்னவன் தன்னை நோக்கி; (உ)

கொடுத்தருள் வெறுக்கைவேண்டிற்று ஒற்கமாம் விழுமம் குன்ற
எடுத்தெனை வளர்த்ததாதைக் கென்றவற்றெழுது வேந்தன்
தடுப்பருந்தேரினேறித் தடையிலாப் படர்தலோடும்
சுடர்க்கதிர்க்கடவுள் வானத்துச்சியஞ் சூழல் புக்கான். (ங)

அவ்வயினிழிந்து வேந்தன் அருங்கடன் முறையினாற்றச்
செவ்வியகுரிசில்தானும் சென்றனன் நியமஞ்செய்வான்
அவ்வியம் அவித்த சிந்தை முனிவனை யாண்டுக்காணக்
கவ்வையினேடும் பாத கமலம துச்சி சேர்த்தான். (ச)

சிறப்பொடு வணக்கஞ்செய்த விடலையை யினிதுநோக்கிச்
சிறப்புடை முனிவன்என்னே? தெருமரல் செப்புகென்ன,
அறப்பொருள்உணர்ந்தோய்"என்றன் அன்னை நம்முன்னை என்னை
உறப்பொருள்கொண்டுவேந்தற்குஉதவினரென்றான்" உற்றோன்.
(இராமாயணம்) (ரு)

மேற்குறித்த இவன் சரிதம் இதன்கண்ணும் குறிக்கப்பட்டுள்ளமை காண்க. ஒற்கம் = வறுமை. விழுமம் = துன்பம்.

இருங்கடற்புவியிடத்தினில்லாரை எல்லாரும் எள்ளுவரென்று
ஒருங்குணர்ந்தமுன்னோருரைத்திட்ட அஃதுண்மையென்றுளங்கொண்ணீ
நெருங்குபற்றுறுதாய் தந்தையரும் நிரப்புறுநரை வெறுப்பாரேல்
சுருங்கும் அன்பின் மற்றெவர் வெறுத்திடாதவர் தூநகை மலர்க்கொம்பே.
(குசேலோபாக்கியானம்)

தாயொடு பிள்ளை தலைக்கூட வொட்டாதே
தீய வறுமை செறின்.

இன்மை யுடையானை யீன்றாளும் பேணாது
வெம்மை புரிந்து விடும்.

இல்லானை எல்லாரும் எள்ளிவிடுவரென்பது இதனால் கூறப்பட்டது.

1048. நின்ற நிரப்பை நினைந்தம் பலர்நாதர்
குன்றினார் என்னே குமரேசா—கன்றியே
இன்னும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு. (அ)

இ—ள்

குமரேசா! எய்திய மிடியை நினைந்து பொன்னம்பலக் கவிராயரும், சொக்கநாதரும் என் வெய்துயிர்த்து நொந்தார்? எனின், நெருநலும் கொன்றது போலும் நிரப்பு இன்றும் வருவது கொல்லோ! என்க.

இது, வறுமையானது மக்களை மறுகச்செய்யும் என்கின்றது.

நெருநல் = நேற்று. உம்மை எதிரது தழீஇ நின்றது.

நிரப்பு = வறுமை. கொன்றதுபோலும் = கொலைசெய்தது போன்று கொடுந்துயர்செய்து நின்ற. முதல்நாள் புரிந்துநின்ற அதன் கொடுந்துன்பத்தை நினைந்து கூறியபடி இது.

இன்றும் என்பதில் உம்மை இறந்தது தழீஇ நின்றது.

வருவது கொல்லோ? என்றதனால் அவ் வறுமையால் அவன் அடைந்துள்ள அல்லல் நிலையும் அச்சமும் அறியலாகும்.

மேல், வறுமை தாயோடு பிள்ளை தலைக்கூட ஓட்டாதென்றார்; இதில், அதுவரின் எவரும் நிலைகலங்கி நிற்பர் என்கின்றார்.

நேற்றும் வந்து கொன்றது போன்று எனக்குத் துன்பம் செய்த வறுமை இன்றும் வந்துவிடின் யான் என் செய்வேன் என்பதாம்.

பல நாளாக வறுமையில் உழந்திருந்த ஒருவன் ஒருநாள் ஒன்றும் கிடையாமல் நெடுநேரம் பட்டினிகிடந்து, பசிநோயால் வருந்தி முடிவில் பல படியாக வருந்தித் தொகுத்ததை மாலையில் கொண்டுவந்து, கூழாக்கிக் குடித்துக் கொஞ்சம் கண்ணுறங்கி மறுநாள் விழித்தெழுந்த பொழுது முதல் நாள் பட்டதை நினைந்து அந்தோ! "நான் செத்துப்போகும்படி நேற்று என்னைச் செய்து நின்ற வறுமை இன்றும் சேரவரின் யான் யாது செய்வேன்!" என அவன் குலை நடுங்கிக் கூறியபடியா இது உருவமைந்திருக்கும் அழகை ஊன்றிப்பார்க்க.

"நலம் பாடறியா இலம்பாடு அலைப்ப
நீர்வாய்ச் சிதலையும் நூல்வாய்ச் சிலம்பியும்
சிலவிடமேய்ந்த சிறுபுன் குரம்பையின்
மசகமும் உலங்கும் வாய்ப்படைக் குடவனும்
பசையில் யாக்கைத் தசைகறித் துண்ண
அரும்பசிக்கு உணங்கியும், பெரும்பிணிக்கு உடைந்தும்
சாம்பல் கண்டறியா ஆம்பி பூத்த
எலிதுயில் அடுப்பில் தலைமடித் தொதுங்கிச்
சிறுசிறார் அலறப் பெருமனைக் கிழத்தி
குடங்கையில் தாங்கிய கொடிற்றினள், குடங்கைக்கு
அடங்கா வுண்கண் ஆறலைத் தொழுக
அழுகுரல் செவிசுட விழுமநோய் மிக்குக்
களைகண் காணது அலமரும்" (காசிக்கலம்பகம்.)

என்ற வண்ணம் நிரப்பாளன் நிலைகலங்கி நிற்பனாதலால் அதனை நினைக்குந்தோறும் நெடுந்திகில் கொள்வன் என்க.

எவ்வளவு மனவுறுதியுடையாரும் வறுமை வந்ததாயின் குலைநடுங்கி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பொன்னம்பலக் கவிராயர் கண்ணும், சொக்கநாதப் புலவர்பாலும் உணரப்படும்.

## கதை.

பொன்னம்பலக்கவிராயர் என்பவர் பாண்டிநாட்டிலே பரம்பக்குடியிலிருந்தவர். இலக்கண இலக்கியங்களை நன்கு கற்றுச் சிறந்த புலமையை இவரடைந்திருந்தார். தமது தந்தை வழியில் வந்த சிறு நிலப்பகுதியை உரிமையாகப்பெற்றுத் தமதுகுடும்பத்தைப் பாதுகாத்து வந்தார். அந்நில வருவாய் போதாமையால் கடனேற்பட்டு அதனால் அது கைவிடப்பட்டது. படவே மிடிவாய்ப்பட்டு இவர் மிகுதுயரடைந்தார். பலரிடமும் பாடிச் சென்றார். நாளும் அலைந்து இங்ஙனம் இவர் நைந்து நின்றார். செல்வர் சிலர் இவரைக்கண்டபொழுது பேச்சுங்கூடக் கொடாமல் பராமுகம் செய்து அவமதித்திருந்தார். வறுமையால் நேர்ந்த சிறுமையை நினைந்து இவர் வயிறெரிந்து நொந்தார். ஒருமுறை மதுரையை யடைந்து அம்பிகை முன் நின்று பல பாடல்கள் பாடினார். அவற்றுட்சில அடியில் வருவன காண்க.

"காசும்பொன்னும் கனத்திட்டபேர்க்கிரு காதும் கேட்கில; கண்ணும் தெரிகில; பேசும் பேச்சும் என் பேய்க்கோலமும் கண்டால் பேயென்றாலும் இரங்கும் இரங்குமே; பூசும்பூச்சுஞ் சந்தான விருட்சத்தின் போதும்வையை கொழிக்கும் துறையெலாம், வீசும் கூந்தற்பிடியே சவுந்தர மீனவன் பங்கில் மீனாட்சியம்மையே. (க)

அடிக்குங்காற்றுக்குப் படற்கட்டிச்சாத்தல்போல் அம்மையுன்னை நினையாமலே தனைப், பிடிக்கும் பேயினைத் தெய்வமென்றாலந்தப், பேயினாலிந்தப் பேய்க்கென்னகாரியம், வடிக்குந் தேறற் சுவையே அடியவர் வறுமை நோய்க்கு மருந்தே! மருவிலா, வெடிக்கின் போதின் மணமே! சவுந்தர மீனவன் பங்கில் மீனாட்சியம்மையே. (உ)

ஏட்டைக்கட்டி எழுததோடெழுத்தைவைத் திணைத்துக்கட்டி இசைகட்டி லோபர்மேல், பாட்டைக்கட்டி என்றொண்டையும் கட்டிய பாவந்தானினி என்றைச்குத்திருமோ?, தோட்டைக் கட்டுங் குழலே நினதடித்துணையைக் கட்டிய போக்குப் பாகதி, வீட்டைக்கட்டியதாயே! சவுந்தர மீனவன் பங்கின் மீனுட்சியம் மையே.'' (தனிச்செய்புட்சிந்தாமணி) (ரூ)

வறுமைக்கொடுமையால் இவர் பட்ட சிறுமைகளும், சீரழிவுகளும் இவற்ருன் இனிதறியலாகும் ஒருநாள் சழிவதை ஒரு யுகம்போல் கண்டு உறுதுயருழந்தார். நிரப்பினை நினைந்து நிதத லும் நெஞ்சுடைந்து நின்ருர்.

## கதை 2.

சொக்கநாதப்புலவர் என்பவர் சோழநாட்டிலிருந்தவர். இவர் கல்வியறிவோடு நல்ல சொல்வன்மையுமுடையவர். அடக்கமும் பொறுமையும் அமைதியும் வாய்ந்தவர். இவரது சொற்கள் வியப்பும் நயப்புமுடையனவாய் எவரையும் வசப்படுத்தி நின் றன. இஙஙனம குணநலங்களமைந்து மறுமை நோக்கோடு மருவி நின்ற இவர்பால் கொடிய வறுமை குடிபுகுந்திருநதது. அதனுல் இவரடைந்த துயரங்கள் அளவிடலரியன. நல்லமானி யாதலால் தமது எளிமையை வெளியே சொல்லாமல் இயன்ற வரையுமுயன்று வாழ்ந்தார். யாதும் முடியவில்லை. சில சமயங் களில் குப்பைகளில் முளைத்திருநத கீரைகளைப்பறித்து வநது அவித்துத் தின்ருர். நெடுநாளாக உலையேற்ருமையால் இவரது அடுப்பில் ஆம்பி பூத்திருந்தது. மனைவி மக்களுடன் பல நாள் பட்டினி கிடந்து பதைததார். இவரது இல்வாழ்க்கை அல்லலுக் கிடமாய் அலமந்து நின்றது. "புனிற்று நாய் குரைக்கும் புல் லென் அட்டில், காழ்சோர் முதுசுவர்க் கணர்சிதல் அரித்த, பூழி பூத்த புழற்காளாம்பி, ஒல்கு பசியுழந்த ஒடுங்கு நுண் மருங்குல், வளைக்கைக்கிணைமகள் வள்ளுகிர்க் குறைத்த, குப்பை வேளை உப் பிலிவெந்ததை, மடவோர் காட்சி நாணிக் கடையடைத்து, இரு ம்பே ரொக்கலொடு ஒருங்குடன் மிசையும், அழிபசி வருத்தம்'' என்றபடி இனிதுயர் நிலையில் இவர் மிக இழிநதிருந்தார். ஒரு முறை திருவாரூரை யடைந்து தியாகராசரை நினைந்து ஒரு பாடல் பாடினர். அடியில் வருவதுகாண்க.

"நல்லாரை இடமருவும் தியாகையா உமதிடத்தில் நியாயம் காணேம்
கல்லாலேஎறிந்தோர்க்கும், செருப்படியாலுதைத்தோர்க்கும் கடிந்துபோரில்
வில்லாலே அடித்தோர்க்கும் கொடுத்தீரேயல்லாமல், விழிநீர் சோர
எல்லாம் உம்செயலென்றே இருப்போர்க்கு யாதேனும் ஈகிலீரே"

இங்ஙனம் பாடிவிட்டு மாவையென்னும் பதியினையடைந்து அங்குச் சிறந்து வாழ்ந்திருந்த கறுப்பன் என்னும் செல்வனைக் கண்டார். அவன் தரந்தெரிந்து இவரை உவந்துபசரித்து உணவு உடை முதலியன உதவிச் சிறிது பொருளும் கொடுத்துவிட்டான். அவனது தன்மையையும், முன் பழகி நின்ற வன் செல்வரது புன்மையையும் நினைந்து ஒரு கவி புனைந்து கூறினர்.

"நிணம் போதத்தள்ளிப் பெரும்பூதம்போலப் பின் நேற்றுச்செத்த
பிணம்போற் கிடந்து புரளுவர் காண்! பிறர்க்கிட்டிவைத்த
பணம் போனபின்பு விவேகமுண்டாகும் அப்பஞ்சைகள் வங்
கணம் போதும், போதும் கறுப்பா! தென்மாவையிற் காவலனே"

இவ்வாறு அவனைப் பாடிப்புகழ்ந்துவிட்டுத் தமது ஊரினையடைந்து சிலநாள் இருந்து பின்பு மதுரைக்கு வந்தார். ஒரு நாள் அங்கு வறுமைப்பிணியுடன் இவர் வாடியிருந்தார். அவ்வமயம் ஓர் முதியவன் வந்து அருகேயிருந்து ஊரும் பேரும் வினவி இவருடன் சிறிது உரையாடினன். இவரது புலமையையறிந்து வியந்தான். நிலைமையை நினைந்து வருந்தினன். இவ்வளவு அறிவுடைய உங்களை இக்கொடிய வறுமை எப்படித் தொடர்ந்தது? என்று அவன் இரங்கிக் கேட்டான். அவ்வமயம் அவனை நோக்கி இவர் பாடிய பாடல் ஒன்று இதனடியில் வருவது காண்க.

"சந்திரனுக்கு உடலூனம், தன்தனுக்கோர் கண்ணூனம், தருவின்நிழல்
இந்திரற்கோ பகக்குறியாம், இயமனுக்கோ புழுக்காலாம், இரவியீன்ற
மைந்தனுக்கோ கால்முடமாம், வனசனுக்கோர் தலைகுறையாய் வாழ்வாரா
யின், பந்தமுள மானிடரை விதிவிடுமோ? ஆலவாய்ப் பதியுளானே!"

அம்மனிதனை நோக்கிக் கூறியதாயினும் கவி இறைவனை நோக்கியதாயினிது இசைந்திருத்தல் காண்க. இதனால் இவரது மனப்பான்மையும் அமைதியும் அறியலாகும். பின்னர் அப்பதியினைவிடுத்து வடபால் நடந்து திப்பையன் என்னும் ஓர் குறுநில

மன்னனைப்போய்க் கண்டார். அவன் சிறிது கொடையாளியாயி னும் குறும்பு பேசும் குணமுடையவன். மிடியின் கொடுமை யால் மெலிந்து வந்துள்ள இவரைப்பார்த்து "உங்களுக்கு என்ன குறை? எத்திசை சென்றாலும் அத்திசை யெல்லாம் சிறப்பு. நிதிபதியும் உங்களுக்கு நிகராகான்" என நகையுரையாடினான். அவ்வமயம் அவனை நோக்கி இவர் உரைத்த கவி மிக வியக்கத் தக்கது. அடியில்காட்டுதும்; பொருளை ஆய்ந்து காண்க.

"இந்திரன் கலையாய் என் மருங்கு இருந்தான்;
அக்கினி உதரம் விட் டகலான்;
எமன் எனைக்கருதான் அரனெனக்கருதி;
நிருதிவந்து என்னை என்செய்வான்?
அந்தமாம் வருணன் இருகண்விட்டகலான்;
அகத்தினில் மக்களும் யானும்
அநிலமதாகும் அமுதினைக் கொள்வோம்;
யார் எதிர் எமக்குளார் உலகில்?
சந்ததம் இந்த வரிசையைப் பெற்றுத்,
தரித்திரராசனை வணங்கித்
தலைசெயும் எம்மை நிலைசெய் சற்கீர்த்திச்
சாளுவ கோப்பைய னுதவும்
மந்தர புயத்தான் திப்பையராயன்
மகிழ்வொடு விலையிலா அன்னோன்
வாக்கினாற் குபேரன் ஆக்கினன் அவனே
மாசில் ஈசான பூபதியே." (சொக்கநாதப்புலவர்)

இந்திரன் ஆயிரங்கண்களை யுடையவனாதலால் அவன் இவர் ஆடையாயிருந்தான் என்றார். இதனால் இவர் கட்டியிருந்த உடை பல பொத்தல்களை யடைந்திருந்ததென்பது புலனாகின்றது. இவர் இரந்துண்டு திரிந்தாராதலால் அரன் என நினைந்து எமன் நெருங்கான் என்றார். அநிலம், அமுது என்றது காற்றே உணவு என்றபடி. பிறவும் இங்ஙனமே ஓர்ந்து கொள்க. கிழக்குமுதல் எட்டுத் திசைகளுக்குமுரிய அதிதேவதைகள் எண்மரும் தமக்கு உரிமையாக அமைந்துள்ளார் என்பதாம். பசித்தீ இடையறாது பற்றி யெரியத் துன்பக்கண்ணீர் வடித்து மனைவிமக்களோடு

உணவின்றி இவர் மறுகியிருந்தபடியை இதனால் இனிதறிந்து கொள்ளலாம். இவரது நிலையினைத்தெரிந்து அவனும் நெஞ்சமுருகினான். புலமைத்திறனோடு நிலவியிருந்தும் பொல்லா வறுமையால் இங்ஙனம் இவர் புழுங்கி நைந்தார். சில சமயங்களில் முதல் நாள் பட்ட துயரங்களை நினைந்து நிலைகலங்கி நின்றார்; விடிந்தெழுந்தால் இன்று எப்படி நாட்கழிப்பது என்று ஏங்கி நொந்தார். நிரப்புத்துன்பத்தை நினைத்தபோதெல்லாம் நெருப்புப் பட்டது போல் இவர் நெடுந்திகில் கொண்டார். "இன்றும் வருவது கொல்லோ! நெருநலும் கொன்றது போலும் நிரப்பு" என நல்குரவாளர் நிலைகுலைந்து நிற்பரென்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

பேஎய்ப் பிறப்பிற் பெரும்பசியும், பாஅய்
விலங்கின் பிறப்பின் வெருவும்,—புலைதெரியா
மக்கட்பிறப்பின் நிரப்பிடும்பை இம்மூன்றும்
துக்கப் பிறப்பாய் விடும். (திரிகடுகம்)

உள்ளக் கவலை யுறுத்தி யுறுபழிக்கீழ்த்
தள்ளும் வறுமை தடிந்து.

வறுமை எவரையு நிலைகுலையச் செய்யுமென்பது இதனால் கூறப்பட்டது.

1049. கண்டுஞ்ச லின்றிக் கரைந்தேனோ சந்திரர்முன்
கொண்டுழந்தார் துன்பம் குமரேசா—மண்டும்
நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது. (கூ)

இ—ள்.

குமரேசா! வறுமையுற்ற இராமச்சந்திர கவிராயர் ஏன் கண்ணுறக்கமின்றி வருந்திக்கிடந்தார்? எனின், நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்; நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது என்க.

இது, வறுமை தீயினும் கொடிதென்கின்றது.

நிரப்பு = வறுமை. அரிப்பரித்துத்தேடி நாளும் வயி ற்றை நிரப்பவேண்டியிருத்தலால் வறுமை நிரப்பு எனநின்றது. துன்பங்களால் நிரம்பியுள்ளதெனினுமாம்.

துஞ்சல் = துயிலல். கண்பாடு = உறக்கம். உறங்கும் பொழுது கண்கள் செயலடங்கி அமர்ந்திருக்குமாதலால் அது கண்பாடு என நின்றது. கண்படை எனவும் வரும். "கண்படை கொள்ளும் காவலன்" (மணிமேகலை) "அன்னங் கண்படு தண் பணை நிடதம்" (நைடதம்) "மென்பறவை கண்படுப்பித்து" (சிந் தாமணி) "சிறிது கண்படுப்பினும் காண்குவென்" (ஐங்குறு நூறு) "கனவிற்காணிய கண்பட்டா வாயின்" (கலித்தொகை) இவற்றுள் கண்பாடு உணர்த்தி நிற்றல் காண்க. துஞ்சல், கண் பாடு என்பன உறக்கம் என்னும் ஒன்றையே குறித்து வருமாயி னும் முன்னது அயர்ந்து தூங்கலையும், பின்னது உளைந்துறங்கலை யும் உணர்த்திவரும் என்க. யாதொன்றும் அரிது = எவ்வாற்றா னும் சிறிதும் இல்லை.

மேல், வறுமை வந்தால் எவரும் உளங்கலங்கி நிற்பர் என் றார்; இதில், கண்ணுறக்கமு மின்றிக் கடுந்துயரடைவரென்கின் றார்.

தீயின்மேல் படுத்து ஒருவாறு உறங்கலுமாகும் வறுமை யுள் சிறிதும் உறங்க முடியாதென்பதாம்.

நெருப்பானது தன்னையடுத்த பொருள்களையெல்லாம் எரித் தழித்து விடுமே அதன்மேல் அமர்ந்து எங்ஙனம் உறங்க முடி யும்? எனின், மந்திர மருந்துகளால் அதனை வயப்படுத்திக் கொள்ளலாம்; அவ்வித்தைக்கு அக்கினித்தம்பம் என்று பெயர்; அத்தகைய சித்தி நிலையால் தீயின்மேலமர்ந்து யாதொரு தீது மின்றி இனிது தங்கலாம் ஆதலால் "நெருப்பினுள் துஞ்சலும் ஆம்" என்றார். "கனல்மேல் இருக்கலாம்" என்றார் தாயுமான வரும். உம்மை அத்துஞ்சலின் அருமை தோன்ற நின்றது.

நிரப்பானது பொறுத்தற்கரிய துன்பமுடையதென்பதை உணர்த்தற்கு நெருப்பினை இணைத்துக்காட்டி அடிகள் இதில் அருளியிருக்கும் அழகைப்பார்க்க.

பொருள் இல்லையானால் அல்லல் பல அடைந்து ஓயாத உள்ளக்கவலையோடு என்றும் உளைந்திருப்பர்; அவர் இனிதாக உறங்க இயலாது; விடிந்தெழுந்தால் என்ன செய்வது? இன்று எவ்வாறு கூட்டுவது? என எண்ணுதனவெல்லாம் எண்ணி எண்ணிக் கண்ணுறக்கமின்றி ஏங்கிக்கிடப்பர் ஆதலால் "நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது" என்றார்.

"புடைவை கிழிந்தது; போயிற்று வாழ்க்கை;
அடையப்பட்டார்களும் அன்பிலரானார்;
கொடையில்லை; கோளில்லை; கொண்டாட்டம் இல்லை;
நடையில்லை; நாட்டில்இயங்குகின்றார்கட்கே" (திருமந்திரம்)

என்ற வண்ணம் ஒரு நலமுமின்றி உளமிகவுடைந்து இரவு பகலேங்கிக் கொடுந்துயர் மிகுந்து நெடுந்திகில் கொண்டு வறியர் கலங்கிக் கிடப்பராதலால் அவர் கடுந்துயில் காணாராயினர்.

நெருப்பில் இருந்தாலும் இருக்கலாம்; நிரப்பில் இருக்க முடியாதென்பது கருத்து. இதனால் வறுமையின் கொடுமை நன்கறியலாகும்.

வறுமை யடைந்தவர் மன அமைதியின்றி மறுகி யுளைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமச்சந்திர கவிராயர்பால் உணரப்படும்.

## கதை.

இராமச்சந்திர கவிராயர் என்பவர் இற்றைக்கு நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னர்த் தொண்டை நாட்டிலிருந்தவர். மிக்க மனவுறுதியுள்ளவர். இவர் தெலுங்கராயினும் தமிழ்மொழியை நன்கு பயின்று புலமை நிரம்பி யிருந்தார். இருந்தும கொடிய வறுமையால் மிசவு மறுகி நின்றார். தமது அருமையறிந்து ஆதரிப்பாரின்மையால் பரிசில் கருதிப் பல இடங்களுக்குஞ் சென்றார். எங்கும் தக்கபயன் கிடையாமல் தயங்கியலைந்தார். ஒரு நாள் சீனிவாசன் என்னும் செல்வனொருவனைப் புகழ்ந்து பாடி நயந்து நின்றார். அவன் மிகுந்த பொருளுடையனாயினும் இழிந்த நெஞ்சினனாதலால் இவருக்கு யாதும் கொடாமல் இல்லை

யென்று சொல்லி இகழ்ந்து விடுத்தான். அவ்வமயம் இவர் சொல்லிய கவி ஒன்று அடியில் வருவது காண்க.

"கல்லாத ஒருவனை நான் கற்றாய் என்றேன்;
காடெறியுமவனை நாடாள்வாய் என்றேன்;
பொல்லாத ஒருவனை நான் நல்லாய் என்றேன்;
போர்முகத்தை யறியானைப் புலியே றென்றேன்;
மல்லாரும் புயம் என்றேன் சூம்பற் றோளை;
வழங்காத கையனை நான் வள்ளல் என்றேன்;
இல்லாது சொன்னேனுக்கு இல்லை என்றான்;
யானும் என்றன் குற்றத்தால் ஏகின்றேனே."

என்று இயம்பிச்சென்றார். ஒருநாள் திருவொற்றியூரை யடைந்து அங்கோர் சத்திரத்தில் இரவு பசியோடு படுத்திருந்தார். விடிந்தெழுந்தார். உழவுதொழில் புரியும் ஓர் கிழவன் வந்து சிறிது நேரம் உரையாடி இங்குச் சுவாமி தரிசனத்துக்கு வந்தீர்களா? என்று இவரிடம் உரிமையோடு வினவினான். அப்பொழுது இவர் செப்பிய பாடல் மிக அருமையுடையது. அடியில் வருவது காண்க.

"வஞ்சகர்பால் நடந்தலைந்த காலிற் புண்ணும்,
வாசல்தொறு முட்டுண்ட தலையிற் புண்ணும்,
செஞ் சொல்லை நினைந்துருகு நெஞ்சிற் புண்ணும்,
தீருமென்றே சங்கரன் பால் சேர்ந்தேன் அப்பா!
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும், வேடன்
கொடுங்காலால் உதைத்த புண்ணும், கோலமாகப்
பஞ்சவரில் ஒருவன் வில்லால் அடித்த புண்ணும்,
பாரென்றே காட்டி நின்றான் பரமன் தானே"

புல்லிய செல்வர்கள் பாற் போய் இவர் புண் பட்ட பாடும், முன்பட்ட வறுமையும், பசியலைத்தபோதும் பண்பமையப் பாடுந்திறமும், பரமனை நாடிநின்ற நிலையும் இதனால் நன்கறியலாகும். இன்னவாறு கண்ணுறக்கமின்றி அல்லல் பல அடைந்து அலைந்து திரிந்து தம் இல்லினையடைந்தார். அங்குத் தமது மனைவியும் மக்களும் பட்டினி கிடந்து பதைப்பதைக் கண்டார், பரிந்து நொந்தார். படைத்த பிரமனைக் கடுத்து வைதார்;

"கல்லைத்தான், மண்ணைத்தான், காய்ச்சித்தான், குடிக்கத்தான் கற்பித்தானா? இல்லைத்தான் பொன்னைத்தான் எனக்குத்தான் கொடுத்துத்தான் இரட்சித்தானா, அல்லைத்தான் சொல்லித்தான் யாரைத்தான் நோவத்தான் ஐயோ! எங்கும், பல்லைத்தான் திறக்கத்தான் பதுமத்தான் புவியிற்றான் பண்ணினானே" என்று கண்ணீர் ததும்ப இங்ஙனம் கரைந்து கூறினார். கொடுமிடியுடையராய்க் கடுந்துயரைடந்து நின்ற இவர் தஞ்சாவூரில் துருவப்பன் என்னும் வள்ளல் ஒருவன் நல்ல அறிவுடையனாயுள்ளான் என்று கேள்வியுற்று அங்கு உள்ளிச்சென்றார். அவன் கல்வியருமை யறிந்தவனாதலால் இவரைக் கண்டவுடனே உவந்துபசரித்து ஒரு வாரம் உடன் வைத்திருந்து இவரது அருமை மொழிகளை இனிது நுகர்ந்து பெரிது மகிழ்ந்தான். தன் செவிக்கு இனிமை செய்தமையால் இவர் செவிக்கு அழகு செய்யவேண்டுமென்று சிறந்த கடுக்கன் இரண்டைச்சேர்த்துக் கொடுத்தான். காதிலணிந்தவுடனே இவர் களிநதொரு பாடல் பாடினார்.

> "எதிலே வறியவர்க்கும் இனிய கவிப் புலவருக்கும் இரங்கி யந்தப்
> போதிலே தனங்கொடுக்கும் தஞ்சைநகர்த் துருவப்பபூபன் எற்குக்
> கோதிலே கிடந்துழலும் பலரிடத்தில் சென்று தமிழ் கூறுவண்ணம்
> காதிலே ஒட்டிட்டுத் தாடையின் மோதக் கடுக்கன் தானிட்டானே"

விரைந்துபாடும் இவரது கவிசாதுரியத்தை வியந்து அவன் மேலும் சிறிது பொருள் கொடுத்து விடுத்தான். அதனைக் கொண்டுவந்து இவர் குடும்பத்தைப் பேணினார். பரிந்து தேடி இங்ஙனம் வருந்தி வாழ்ந்து வருங்கால் இடையே யாதும் இல்லையானால் கடையில் கொண்டுபோய் அடகுவைத்து அரிசி வாங்கி வருதற்கு உரிமையாக ஒரு பாக்கு வெட்டி மட்டும் இவர் பையிலிருந்தது. அது வெள்ளி முகப்புடையது. இவரது கல்வியறிவை மெச்சி ஒரு கொல்லன் கொடுத்தது. எப்பொழுதும் அதனை இவர் உடன் வைத்திருப்பர். ஓர் மடத்தில் ஒருநாள் இவர் உரையாடிக்கொண்டு இருக்கும்பொழுது அதனை ஒருவன் களவாடிச் சென்றான். முடிவில் எழுந்தபொழுது அது காணப்படாமையால் இவர் கலங்கி நின்றார். அங்கும் இங்கும் விரைந்து

தேடினார். எங்கும் அகப்படவில்லை. தமக்கு ஆதரவாயிருந்த அதன் திறங்களை யெல்லாம் நினைந்து வருந்தினார்.

"விறகுதறிக்கக், கறி நறுக்க, வெண்சோற்றுப்புக்கு அடகு வைக்கப்,
பிறகு பிளவுகிடைத்த தென்றால் நாலாறாகப்பிளந்து கொள்ளப்,
பறகுபறவென் றேசொறியப், பதமாயிருந்த பாக்குவெட்டி
இறகு முளைத்துப் போவதுண்டோ? எடுத்தீராயில் கொடுப்பீரே"

என்று இரக்கந்தோன்றப்பாடினார். அங்கிருந்தவர் பாட்டருமை தெரியாத பதடிகளாதலால் ஒன்றும் இரங்காமல் ஒதுங்கிப் போனார். இங்ஙனம் நல்குரவால் அல்லல்பல வடைந்து இவர் அலமந்துழன்றார். உள்ளக்கவலையால் கண்ணுறக்கமின்றி நாளும் உளைந்து கிடந்தார். வறுமை தீயினும் கொடிது என்று தேம்பி நின்றார். "நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்; நிரப்பினுள் யாதொன்றும கண்பாடு அரிது" என்பதை உலகம் இவர் பாலுணர்ந்து நின்றது.

"தாங்கொணு வறுமை வந்தால் சபைதனில் செல்லநாணும்,
வேங்கைபோல் வீரங்குன்றும, விருந்தினர்க்காண வெட்கும்,
பூங்கொடி மனையாட்கஞ்சும், புல்லருக்கிணக்கஞ்செய்யும்,
ஓங்கிய அறிவு குன்றும், உலகமும பழிக்குந்தானே"

வெந்தீ யிடைப்பட்ட மென்கொடிபோல் வெம்புமே
அந்தோ வறிய ரகம்.

வறுமையாளர் மிக மறுகியுழல்வரென்பது இதனால் கூறப்பட்டது.

---

1050. உண்டு திரிந்த வுசனை மிடியனென்று
கொண்டிகழ்ந்தா ரென்னே குமரேசா—கண்டமைந்த
துப்புர வில்லார் துவரத் துறவாமை
உப்பிற்குங் காடிக்குங் கூற்று. (0)

இ—ள்.

**குமரேசா!** வறியனாய் நின்று உண்டு திரிந்த உசனை ஏன் எல்லாரும் வைது பழித்தார்? எனின், துப்புரவு இல்லார் துவரத் துறவாமை உப்பிற்கும் காடிக்கும் கூற்று என்க.

இது, வறுமையுற்றிருத்தல் வன்பழி என்கின்றது.

துப்புரவு = துய்க்கப்படுவது; அஃதாவது அனுபவிக்கப் படும் பொருள்கள்: அவையாவன உணவு உடை முதலிய நுகர்வு நலங்கள். துப்புரவு இல்லார் என்றது வறியர் என்றபடி.

துவரத்துறவாமை = முழுதும் விடாமை; அஃதாவது அடியோடு ஒழியாதிருப்பது. துறத்தல் என்னும் வினைக்கேற்ற செயப்படுபொருளை இதில் வருவித்துக் கொள்க. துறவாமையைக் கூற்று என்றது அதனால் நிகழும் கொடுமை கருதி. உப்பையும், காடியையும் குறித்தது உணவின் எளிமை தோன்ற. காடியாவது பருக்கையும் நீருமாய்க்கலந்து பழமைப் பட்டுக் கிடப்பது.

மேல், தீயினும் வறுமை தியதென்றார்; இதில், அது வந்து விட்டால் ஒழிந்து போதல் நலமென்கின்றார்.

வறியர் உடம்பினை ஒழித்துவிடாது உயிர் வாழ்ந்திருப்பது பிறர் மனையிலுள்ள உப்பிற்கும் காடிக்கும் எமனே என்பதாம்.

சோற்றுக்குக் கூற்று என்னாது காடிக்கு என்றது என்னை? எனின், சோறு வளமுடையாரது உணவாதலால் அதனைச் சிறிது கொடுத்து விடுதலால் அவருக்கு யாதொரு கெடுதியும் வாரது; வரைந்து வைத்துப் பரிந்து பார்த்து இடை கழிந்து உண்ணும் எளியர் உணவை வறியர் இடைபுகுந்து இரந்து கவர்ந்துகொள்ளின் அவர் வருந்த நேருமாதலால் ஒழிந்து போகாமல் இழிந்து நிற்கும் அம்மிடியர் அதற்கு எமன் என எண்ண நின்றார் என்க.

இயன்ற வரையும் முயன்று வறுமையுறா வண்ணம் வாழ வேண்டும்; ஒரோவழி அது கொடிதாக வந்து நீக்க முடியாதபடி நிலைத்துவிடின் உடனே இறந்துபோகவேண்டும்; அங்ஙனம் செய்யாமல் நடைப்பிணம்போல் கடைப்பட்டு நின்று இழிந்துழன்று இரந்து திரிதல் மிகவும் இகழத்தக்கதாம்; ஆதலால் துவரத்துற என இங்ஙனம் உணர்த்தியருளினார்.

ஈண்டுத்துறத்தல் என்றது இல்லறத்தை விட்டுத் துறந்து போதலாகிய துறவு நிலையைக்குறித்த தாகாதோ? எனின்,

"துறப்பார்மற் றுப்புரவில்லார் உறற்பால வூட்டா கழியு மெனின்" என்றபடி துப்புரவின்மை துறவு நிலைக்கு ஓர் ஏது வாயினும் அது நல்வினை வயத்தாலன்றி எவர்க்கும் எளிதில் கிடைத்தற்கரியதோர் பெருமையுடையதாதலால் அதனை வறு மைக்கு இனமாக வைத்தல் சாலாதென்க. இனி, துவரத் துறத்தல் என்றதனால் முற்றத்துறத்தலாகிய அவ்வுத்தம நிலை யையே குறித்ததென்று கொண்டால் வறுமை நேர்ந்துழி மான மழிந்து இரந்து திரியாமல உணவு முதலியன துறந்து ஞான நிலையில் நண்ணியுய்யும் படி உணர்த்தியதாக ஓர்ந்துகொள்க.

வறுமையுறின் மானங்கெட்டு இரந்து திரியாதே; ஞானங் கருதித் துறந்துபோ; அல்லது ஊனுடம்பை ஒழித்து இறந்து போ என்பதாம். இதனால் நல்குரவின் பொல்லா நிலைமை புலன் கொளலாகும்.

"வறுமைபோல இன்னாது வறுமையன்றி வேறில்லை;
மறுவின் மொழிகள் சோர்வுபடும்; வாய்த்த குடிநற் செயல்மொழிகள்
இறுதிபடும்; மற்றிரப்பாதி எல்லாத்துயரும் உடனுகும;
பிறனின் நோக்கும் ஈன்றாளும்; பின்னாய்! அது வந்திடின் இறத்தல்"

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது. மிடி மிகவும் கொடி யது; அது, இருமையும் கெடுக்கும்; குடிப்பிறப்பழிக்கும்; விழுப்பம் கொல்லும்; பிடித்த கல்வியைக் கடுத்தொழிக்கும்; நாண் களையும்; மாண் சிதைக்கும்; நெருப்பினும் தீயது; என்று அதன் தீய நிலைகளைத் தெளியக் குறித்து அது வந்துவிடின் மாய்ந்துபோதல் நன்று என முடிவாக முடிவுசெய்து வறுமை யின் கொடுமையை இவ்வாறு உரைத்தருளினர்.

வறுமையாளர் எல்லாராலும் இகழப்படுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உசனன் பால் உணரப்படும்.

## கதை.

உசனன் என்பவன் சோழநாட்டிலே மார்த்தாண்டபுரம் என்னும் ஊரிலிருந்தவன். வேதியர் மரபினன். நல்ல குலத் தில் பிறந்திருந்தும் கல்வி நலத்தில் சிறந்து நில்லாது இவன் திமிர்ந்து நின்றான். பருவமடைந்த பின் வறுமை மிக விடைய

னாய் மறுகி நின்றான்.
இன்சொல்லும் பணிவுமுடையனாப் யாண்டும் பஞ்சாங்கம் முத இவனது தந்தையும் வறியனாயினும்
லியன கூறி இரந்தவரையு முபன்று வந்தான். அவன் இற
ந்து போனபின் இவன் யாது முயலாது நின்று மறையவரில்லங்
களில் உளவறிந்து சென்று வன்சோறுண்டு வளர்ந்து வந்தான்.
இவனைக்கண்டவரெவரும் "சோற்றுவண்டி" என்று தூற்றி
வந்தார். எங்கேனும் சிராத்தம் நடந்தால் அங்கு இவன் முந்
திப்புகுந்து எவ்வளவு நேரமாயினும் தங்கியிருந்து விலாப்புடை
க்க வுண்டு வருவன். வறியனாயினும் பெருநசை யுடையனாத
லால் ஒருநாள் இறைவன் ஆலயத்துட் புகுந்து அங்குப் பொங்
கல் செய்து வைத்திருந்த வெண்கலப்பாத்திரமொன்றை எவரு
மறியா வண்ணம் களவுசெய்து கொண்டுபோய் உணவினையரு
ந்திவிட்டு அதனை ஓர் வணிகனிடம் கொடுத்துச் சிறிது பொருள்
பெற்றகன்றான். மானங்கெட்டு இரந்து நின்றதோ டமையாது
இன்னவாறு ஈனங்கள் பல புரிந்து இவன் இழிந்து திரிந்தான்.
முடிவில் இறந்து தொலைந்து இழிநரகடைந்தான். நெடிது கழி
ந்தபின் பண்டு செய்த பழி படுவினையால் பன்றியாய்ப் பிறந்து
இவன் பதைத்துழன்றான். ஒரு நாள் ஓர் புண்ணிய தீர்த்த
த்தை நண்ணிய பயனால் பூர்வஞானமடைந்து தனது முன்னைய
நிலைகளை எண்ணி வருந்தினான். இவனிடம் முன்பு களவுப்
பொருளை வாங்கிய அத்தீவினை வணிகனும் பாவ நிலையை யடை
ந்து இவனை ஒருமுறை மேவி நின்று நமக்கு இந்தத் தீமை வந்த
விதம் உமக்குத் தெரியுமா? என்று தேம்பி வினவினான். அவ்
வமயம் அவனிடம் இவன் உரைத்தபடி-யை அடியில் காண்க.

"தெரிந்தனன் புகல்வேன் என்று செப்புவான் வராகதேவன்
விரிந்தநீர்த் தரங்கமார்கா விரிப்பெருந் தீரத் தோர்பால்
புரிந்தபல் வள மார்த்தாண்டபுரம் என்றோர் நகருண்டாங்குப்
பரிந்தபன் மறையோருள் ஓர் பனவன்யான் பாவியானேன். (க)

தினநசைஇ ஓடிஓடிச் சிராத்தபோசனமே செய்வேன்
தனிகர் கண்டன கோயிற் பொருளெலாங் கரவிற்கொள்வான்
மனனமர்ந் தொருநாட் கஞ்ச பாத்திரம் ஒன்று வவ்வித்
தனபதியனைய நின்கைத்தந்தனன் நீயும் கொண்டாய். (உ)

அந்த ஏதுவினால் யான் செத் தளவினுள் நரகந்துய்த்து
முந்த வெங்கேழலாகி முட்டயில் காட்டுழன்றேன்;
தநதது மறுமல் ஏற்ற வணிகனும் தகவில் நீயும்
நந்தவெந் நிரயத்தாழ்ந்து நாயுரு வானு யன்றே." (௩)
(திருப்பெருந்துறைப்புராணம்)

இதனால் இவன் தீவினையிருந்தவிதம் தெரியலாகும். ஒரு பொருளுமின்றி உயிருடன் செத்தபிணமாய்ப் பிறர் இல்லங்கள் தோறும் புகுந்து உண்டுவந்தானாதலால் இவனது வறிய நிலைமிக அருவருக்கத்தக்கதாய் எல்லார்க்கும் வருத்தத்தை விளைத்து நின்றது. "துப்புரவில்லார் துவரத்துறவாமை உப்பிற்குங் காடிக்குங் கூற்று" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

தீதாம் வறுமையோடு சேர்ந்தோருவன் வாழ்தலினும்
சாதல் இனிது தனித்து.

மிடியர் வாழ்வு மிகவும் கொடியதென்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

வறுமை மிகவும் துன்பமானது. அதுவரின் இருமையின்பங்களும் இல்லாதொழியும். பெருமை யழிந்துபோம். சிறுமை மிகும். துன்பங்கள் பல தொடர்ந்து வரும். கல்வியும் புல்லிதாகும். பெற்றதாயும் வெறுத்து விடுவள். அதனையுடையார் கவலைமீக்கொண்டு கண் கலங்கி நிற்பர். நிரப்பு நெருப்பினும் கொடியது. அது வந்துவிடின் இறந்து போதல் நல்லது என்பதாம்.

ருந-வது நல்குரவு முற்றிற்று.

---

# 106-ம் அதிகாரம் இரவு.

அஃதாவது யாசகத்தின் இயல்பு. இது, வறுமை வந்த வழி நிகழ்வதாதலின் இங்கு மருவி நின்றது, நல்குரவு கொடுந்

அன்புமுடையது அது கொடிதாக வந்துவிடின் முடிவாக உடம்பைத் துறந்து விடுக என முன்னர் உணர்த்தினார்; அங்ஙனம் வன்கொலையாயிறந்து போதலைத் தவிர இருந்துவாழ வேறு யாதொரு வழியும் இல்லையா? என்பாரை நோக்கித் தரந் தெரிந்தாரிடஞ் சென்று மானங்கெடா வண்ணம் இரந்து வாழலாம் என இதில் இரங்கியருள்கின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது. இறத்தலுக்கு அடுத்தபடியாக இரத்தலைக் குறித்ததனால் இதன் இழிநிலை புலனும். முன்னதினும் பின்னது ஒலியளவில் சிறிது மென்மையாக வுள்ளதேயன்றி வேறு என்ன வகையிலும் அதனோடு ஒத்த தன்மையதே என்பதை உய்த்துணர்ந்து கொள்ளுமாறு இஃதுற்றிருத்தல் காண்க.

---

1051. ஏனோ துணிந்தன் றிரந்தார்நன் ஞானர்
கோனும் இயன்முன் குமரேசா—தானே
இரக்க இரத்தக்கார்க் காணிற் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று. (க)

இ—ள்.

குமரேசா! நல்லியக்கோடனைக் கண்டபொழுது நன்னாகனார் ஏன் துணிந்து இரந்து வேண்டினார்? எனின், இரத்தக்கார்க் காணின் இரக்க; கரப்பின் அவர்பழி தம்பழி அன்று என்க.

இது இரவுக்குரிய இடங்கூறுகின்றது.

இரத்தக்கார் = இரத்தற்குத் தக்கவர். இரத்தல் என்பது விகுதிகுன்றி, இரவென நின்று குவ்வுருபு தொக்கு இநனம் புணர்ந்து நின்றது. இரந்து கோடற்குத் தகுதியுடையார் யாவர்? எனின், இரப்பாளனது குறிப்பறிந்து இரங்கி யுதவும் இயல்புடையார் என்க.

கரப்பின் = இல்லையென மறுப்பின். கரத்தல் = உள்ளதை யில்லையென்று ஒளித்தல். அவர் என்றது இரத்தற்குத் தகுதியுடையாரை. தம் என்றது இரந்து நிற்பாரை. கரவாது ஈயும் கடமையுடையார் ஒரோவழி கரந்து நின்றாராயின் அஃது

அவர்க்கோர் பெருவசைபாமாதலால் "கரப்பின் அவர் பழி" என்றார்.

இரந்து கோடற்குரிய பெருந்தகையாளரைக் கண்டால் துணிந்து இரந்து கொள்க; அங்ஙனம் கேட்குங்கால் இல்லையென்று மறுத்தாராயின் அப்பழி அவர்க்கேயன்றி இரப்பவர்க்கன்று என்பதாம்.

காணின் இரக்க என்றதனால் அங்ஙனம் காணுவழி இரக்கலாகா தென்பதாயிற்று.

வறுமை யடைந்தவர் ஏதேனும் பெறவேண்டுமாயின் குறிப்பறிந்து ஈயும் குணமுடையாரிடம் போய் இரந்து கொள்ளுங்கள்; ஏன்? எனின், உயிர்க்கு ஊதியம் ஈதல் என்பதை அவர் உணர்ந்திருப்பராதலால் இல்லையென்னுமல் உவந்து கொடுப்பர்; அங்ஙனம் கொடாராயின் அப்பழி அவர்க்கு ஏறுமே யல்லாது உங்களைச் சாராது என இரவுக்குரிய இடமும் இயல்பும் கூறி நல்குரவாளர்க்கு இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

கண்டவரிடமெல்லாம் போய் இரக்கலாகாது; இரப்பின் மானங்கெடுமேயன்றி வருபயன் யாதும் இல்லை என்றபடி. பண்டு ஒரு புல்லனிடம் போய் ஓர் நல்ல புலவர் அல்லல் பல பட்டு அவமதிப்படைந்தார். அவர் போன விதமும், அவ் ஈனன் வினவி இகழ்ந்து மொழிந்தபடியும் இதனடியில் வருவன காண்க.

"வெண்பாச்சொல் கவிஞரே! வந்தது ஏது? உம்மீது
மெய்த்தமிழ்ப் பாடிவந்தோம்;
வெகுநேர்த்தி முன்னமே நானூறு கோவையொரு
வித்துவான் பாடிவந்தான்
நண்பாக மனம்வைத்து மூன்றுபடி பெருவரகு
நான் கொடுத்தேன்; அதற்கு இந்
நாடெலாந் தெரியும்; என் மனையாட்டி மூன்றுதரம்
நான்று கொண் டுயிர் பிழைத்தாள்;
புண்பாடெலாமறிந்தின்னம் நீர் கவி சொலும்
புலவரென்றிங்கு வந்தீர்!
போம்; போம்; எனச்சொலிப் புலையாடு புலையரொடு
போராடவோ படைத்தாய்"

இதில் அவ் அறிஞர் புலம்பியுள்ளபடியை ஆய்ந்து பார்க்க, தகாதவரிடம் இரந்தால் இங்ஙனம் தகவழிய நேரும் ஆதலால் தக்காரையே கண்டு சாரவேண்டுமென்றார்.

கரவாது ஈயும் உரவோரிடத்து உளங்கூசாது இரந்து கொள்ளலாம் என்பது கருத்து. இவ்வுண்மை நன்னாகனார்பால் உணரலாகும்.

### கதை.

நன்னாகனார் என்பவர் சங்கப்புலவருள் ஒருவர். அன்பும் பெருந்தன்மையும் அமையப் பெற்றவர். தலைமையான புலமையோடு உலகியலறிவிலும் இவர் உயர்ந்திருந்தார். அகம் புறம் என்னும் இருவகையுள் புறத்தை விரித்துப் பாடுந்திறத்தினராதலால் புறத்திணை நன்னாகனார் என இவர் சிறப்புற்று நின்றார். உண்மைப் பொருளை உறுதிபெற வுரைக்குந் திண்மையாளர். இவர் திருந்திய பண்புடனமர்ந்து இல்லறம் புரிந்து வருங்கால் இடையே நல்குரவடைந்தது. அதனால் இவர் மிக நைந்து நின்றார். ஆயினும் எவரிடமும் செல்லாது இயன்றவரையு முயன்று வந்தார். முடியவில்லை. அக்காலத்தில் ஓய்மானாட்டுக்கு அதிபதியாய்ச் சிறந்திருந்த நல்லியக்கோடன் என்னும் குறுநில மன்னன் பெரு வள்ளலாயுள்ளமையை யறிந்து அவனைக் கண்டுவர வேண்டுமென்று கருதிச் சென்றார். வேலூர், ஆமூர், திண்டிவனம், மாவிலங்கை என்பன அவனுக்குத் தலைநகரங்களாயினும் அவ்வமயம் அவன் கிடங்கில் என்னும் ஊரிலமர்ந்திருந்தான். வறுமைத்துயரால் வாடி நெடிது நடந்துபோய் அவனை இவர் அரிதிற் கண்டார். காணவே இவரது அறிவுடைமையையும் வறிய நிலையையும் நோக்கி அவன் உருகி இரங்கினன். "ஈரும் பேனும் இருந்திறை கூடி, வேரொடு நனைந்து வேற்றிழை நுழைந்த துன்னற் சிதாஅர்" என்றபடி இவர் உடுத்தியிருந்த இழிந்த ஆடையைக் களைந்தெறிந்து சிறந்த உடைகளைப்புனைந்து உவந்துபசரித்து உயர் விருந்தாற்றி நெடுநாள் உடனிருக்க வைத்து முடிவில் பெரும்பொருள் பல கொடுத்து இவரை அவன் பேணி விடுத்தான். அவனது குண நலங்களையும் கொடை

நயங்களையும் வியந்து இவர் பெருமகிழ்ச்சி யடைந்தார். இவர் இரந்து நின்றதையும், அவன் உவந்து தந்ததையும் குறித்துப் பல ரிடமும் பல முறை உவந்து கூறி உளங்கனிந்து துதித்துளார். அவ்வகையில் இவர் கூறிய பாடல் ஒன்று இதன் அடியில் வருகின்றது.

"விசும்பு நீத்தம் இறந்த ஞாயிற்றுப்
பசுங்கதிர் மழுங்கிய சிவந்து வாங்கு அந்தி
சிறுநனி பிறந்த பின்றைச் செறிபிணிச்
சிதாஅர் வள்பினென் தெடாரி தழீஇப்
பாண ராரும் அளவை யான் தன்
யாணர் நன்மனைக் கூட்டுமுதல் நின்றனென்
இமைத்தோர் விழித்த மாத்திரை ஞெரேரெனக்
குணக்கெழு திங்கள் கனையிருள் அகற்ற
பண்டறி வாரா உருவோடு என் அரைத்
தொன்றுபடு துளையொடு பருவிழை போகி
நைந்துகரை பறைந்த என் உடையும் நோக்கி
விருந்தினன் அளியன் இவனெனப் பெருந்தகை
நின்ற முரற்கை நீக்கி நன்றும்
அரவு வெகுண்டன்ன தேறலொடு சூடுதருபு
நிரயத் தன்ன என் வறன்களைந்தன்றே
இரவினானே ஈத்தோன் எந்தை
அன்றை ஞான்றினொடு இன்றி னூங்கும்
இரப்பச் சிந்தியேன்; நிரப்படு புணையின்
உளத்தின் அளக்கு மிளிர்ந்த தகையேன்
நிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெ னாகி
ஒருநாள், இரவலர் வரையா வள்ளியோர் கடைத்தலை
ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாதென் சிறுகிணைக் குரலே." (புறம்)

"கிழிந்து பல தையல்களை யுடையதா யிழிந்திருந்த உடையைக் களைந்து சிறந்த ஆடையை நல்கி, விருந்தூட்டி, நரகத்துன் பத்தையொத்த எனது வறுமையைத்தொலைத்து மிகுந்த

பொருளை எந்தை தந்தான் ஆதலால்இனி எவரிடமும் சென்று ஒன்றையும் இரந்து நில்லேன்" என இப்புலவர் பெருந்தகை உள்ளங்குளிர்ந்து அவ்வள்ளலைத் துதித்து உரைத்திருத்தலை இதில் ஊன்றி நோக்குக. "குறிஞ்சிக்கோமான், கொய்தளிர்க் கண்ணிச் செல்லிசை நிலைஇய பண்பின் நல்லியக்கோடனை நயந்த னிர் செலினே" எல்லாச் செல்வமும் எய்தலாம் என எவரும் உவந்துபோற்றச் சிறந்த வள்ளலாய் அவன் விளங்கியிருந்தான். கரவாதியும் உரவோனுதலால் அவனைக் கண்டவுடனே கனிந்து இரந்து கொண்டு கழி பெருஞ் சிறப்புடன் இவர் இனிது வாழ்ந்து வந்தார். இரத்தற்குத் தகுதியாளரைக்காணின் உளங்கூசாது இரந்து கொள்ளலாம் என்பதை உலகம் காண இவர் அன்று உணர்த்தி நின்றார்.

முன்னரே சாநாள் முனிதக்க மூப்புள
பின்னரும் பீடழிக்கு நோயுள — கொன்னே
பரவன்மின் பற்றன்மின் பாத்துண்மின் யாதும்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து. (நாலடியார்)

உள்ளிரங்கி யீயும் உபகாரி பாலிரந்து
கொள்ளின் இலைகாண் குறை.

கரவாதிவாரிடம் இரவு செய்க என்பது இதனால் கூறப்பட்டது.

---

1052. ஊன்பொதியார் போந்திரந்தும் உற்றா ருயரின்பம்
கோன்பதிமுன் என்னே குமரேசா — வான்பொதிந்த
இன்ப மொருவற் கிரத்தல் இரந்தவை
துன்ப முறாஅ வரின். (உ)

இ—ள்.

குமரேசா! வளவனிடம் வந்து இரந்துகொண்டபொழுது ஊன்பொதி பசுங்குடையார் ஏன் மிகுந்த இன்பமடைந்தார்? எனின், இரந்தவை துன்பம் உறா அவரின் இரத்தல் ஒருவற்கு இன்பம் என்க.

இது, இரவின் வரவு இன்ன வகையில் இருக்கவேண்டும் என்கின்றது.

இரந்தவை = இரந்து நின்ற பொருள்கள். அஃதாவது நல்குரவாளன் விழைந்து வேண்டிய பொருள்கள். இரந்தவர் எனவும் பாடம். வரின் என்பது அங்ஙனம் வருதலின் அருமையை விளக்கிநின்றது.

உறுமல் என்னும் வினை எச்சம் விகுதி குன்றி உறு என நின்று அளபெடுத்து வந்தது. இது, சொல்லிசை அளபெடை.

மேல், உணர்ந்துதவுவாரிடம் இரந்து கொள்க என்றார்; இதில், அவ் இரவு மிக இனிமையாம் என்கின்றார்.

இரந்து கொள்ளும் பொருள்கள் துன்பமுறாவகை வருமாயின் இரத்தல் ஒருவனுக்கு இன்பமாம் என்பதாம்.

இரத்தல் என்றும் துன்பமானது; "இன்னாமை வேண்டின் இரவெழுக" (திரிகடுகம்) என்றபடி யாண்டும் துன்பத்திற்கே இடமான அதனை ஈண்டு இன்பம் என்றது, காவின்றி இனிதாக வரும் அதன் விளைவு நோக்கி. "வரின் இன்பம" என்றதனால் அங்ஙனம் வாராவழி அது துன்பமே என்பது பெறப்பட்டது.

இரப்பவன், ஈவானை நாடிச்செல்லலும், இடந்தெரிந்து காண்டலும், இதமறிந்து நிற்றலும், இனிமையுறச் சொல்லலும் எதிர் நோக்கி இருத்தலும், என இன்னவாறு துன்பங்கள் பல இரப்பில் தொடர்ந்துள்ளன ஆதலின் இவை யாதும் உறுமல் தான் கருதிய பொருள் இனிதாக வந்து விடுமாயின் அது, அவனுக்குப் பெரியதோர் இன்பமே யாகுமாதலால் அவ் இரப்பின் தன்மையை இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

இரப்பாளன் வாய்திறந்து சொல்லாமலே குறிப்பறிந்து உணர்ந்து ஈயும் உணர்வுடையார் மாட்டே இரவு நல்லது என்பது குறிப்பு.

தாம் இரந்து நின்ற பொருள் எளிதாக எய்திவிடின் அதனை விழைந்து வேண்டினவர் பெரிது மகிழ்ந்து கொள்வர் என்பது

இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஊன்பொதி பசுங்குடையார் பால் உணரப்படும்.

கதை.

ஊன்பொதி பசுங்குடையார் என்பவர் சோழநாட்டில் இருந்தவர். பலகலைகளிலும் வல்லவர். உறுதி உண்மைகளை எவரும் தெளிவுற இனிதுணர்த்தும் உரனுடையாளர். சிறந்த புலமையோடு குண நலங்களுமமைந்து விளங்கி யிருந்த இவர் பால் வறுமையும் புகுந்திருந்தது. அக்காலத்தில் உறையூரிலிருந்து அரசு புரிந்து வந்த இளஞ்சேட்சென்னி என்னும் சோழனிடம் பரிசில் கருதிச் சென்றார். இவரை உவந்துபசரித்துச் சிலநாள் அவன் உடன் வைத்திருந்தான். அவ்வமயம் மற்றொரு பாவலர் அக்காவலனிடம் வந்து ஆவலுடன் சில அருளும்படி கேட்டான். "முன்னம் ஒரு முறை தந்துள்ளேன்; இன்னும் வந்துள்ளீரே!" என்று அம்மன்னன் சிறிது மனமாறி யுரைத்தான். அப்பொழுது உடனிருந்த இவர் அவனை நோக்கிச் சில நீதிகளை யுணர்த்தினார். "அன்று பெய்துவிட்டோம்; இன்று என்ன? என வான்மாறி நிற்பினும், சென்ற ஆண்டில் விளைந்து தந்தோம்; இது பொழுது வேண்டாம்; என நிலம் காந்திருப்பினும் இவ்வுலகம் நிலைபெற்று நிற்குமா? அவ்வாறு நினது நிலையும் அரசே! நினைந்தருள்க" என்று இவர் மொழிந்தருளினார்.

"கழிந்தது பொழிந்தென வான்கண் மாறினும்,
தொல்லது விளைந்தென நிலம்வளம் கரப்பினும்,
எல்லா உயிர்க்கும் இல்லால் வாழ்க்கை;
இன்னும் தம்மென எம்மனோர் இரப்பின்
முன்னும் கொண்டிர் என நும்மனோர் மறுத்தல்
இன்று தம்ம இயல்தேர் அண்ணல்!
இல்லது நிரப்ப லாற்று தோரினும்
உள்ளி வருநர் நசை இழப் போரே
அனையையும் அல்லை நீயே; ஒன்னார்
ஆரெயில் அவர்கட் டாகவும் நுமதெனப்
பாண்கடன் இறுக்கும் வள்ளியோய்
பூண்கடன் எந்தைநீ இரவலர் புரவே" (புறம்)

என்று இங்ஙனம் இவர் உரைசெய்தருளியபோது அம் மன்னன் பெருமகிழ்வு செய்து பொருள் மிகத்தந்து அவரைப் பேணி விடுத்தான். இன்னவாறு அறநெறிகளை அரசர்க்குணர்த்தி, யாவருக்கும் இதம் புரிந்து, பெற்றது கொண்டு பெரிது மகிழ்ந்து இல்லறத்தை இவர் பேணி வந்தார். இவரது குடும்பம் பெரிதாயிருந்தபடியால் வந்த வரும்படிகளெல்லாம் காணாமல் வறுமை மிக வளர்ந்து நின்றது. ஒருமுறை செருப்பாழியெறிந்த இளஞ்சேட்சென்னி என்னும் சோழ மன்னனைக்கண்டுவர வேண்டுமென்று இவர் கருதிச்சென்றார். அவன் புலமையின் அருமை யறிந்தவனாதலால் இவர் வாய்திறந்து உரையாமலே குறிப்பறிந்து பெரும் பொருளுடன் அரிய அணிகள் பலவும் தந்து இவரை ஆதரித்தனுப்பினான். இவர் கொண்டுவந்து இல்லில் சேர்த்தார். அவற்றைக்கண்டவுடனே பெருமகிழ்ச்சி கொண்டு இவருடைய மக்களும் ஒக்கலும் பரபரப்புடன் கவர்ந்தெடுத்து, முன்னர் அணிந்து பழக்கமின்மையால் கழுத்திலணி வதைக் காலிலும், காலில் அணிவதைக் கழுத்திலும், விரலணியைக் காதிலும், காதணியை விரலிலுமாக நிலை தடுமாறி முறை தெரியாமல் அணிந்து நின்றனர். அவர்களுடைய நிலைகளையும் வறுமையின் கொடுமையையும் நினைந்து நினைந்து இவர் நெடிது வியந்தார். அம்மன்னனது கொடையினைப் புகழ்ந்து மகிழ்ந்தார். அடியில் வருவது காண்க.

"தென்பரதவர் மிடல் சாய
வட வடுகர் வாள் ஓட்டிய
தொடையமை கண்ணித் திருந்துவேற் றடக்கைக்
கடுமா கடைஇய விடுபரி வடிம்பின்
நற்றார்க் கள்ளின் சோழன் கோயில்
புதுப் பிறை யன்ன சுதைசெய் மாடத்துப்
பனிக் கயத்தன்ன நீணகர் நின்று என்
அரிக் கூடு மாக்கிணை இரிய ஒற்றி
எஞ்சா மரபின் வஞ்சி பாட
எமக்கென வகுத்த அல்ல; மிகப்பல

மேம்படு சிறப்பின் அருங்கல வெறுக்கை
தாங்காது பொழிதந்தோனே; அதுகண்டு
இலம்பாடுழந்த என் இரும்பே ரொக்கல்
விரற்செறி மரபின, செவித்தொடக்கு நரும்;
செவித்தொடர் மரபின, விரற்செறிக்கு நரும்;
அரைக்கமை மரபின, மிடற்றி யாக்குநரும்;
மிடற்றமை மரபின, அரைக்கு யாக்குநரும்;
கடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை
வலித்தகை அரக்கன் வௌவிய ஞான்றை
நிலஞ்சேர் மதரணி கண்ட குரங்கின்
செம்முகப் பெருங்கிளை இழைப்பொலிந்தா அங்கு
அறாஅ வருநகை இனிதுபெற் றிகுமே
இருங்கிளைத் தலைமை யெய்தி
அரும்படர் எவ்வம் உழந்ததன் தலைபே" (புறநானூறு).

சீதையை இராவணன் கவர்ந்துகொண்டு போகும்பொழுது வழி தெரியும்படி அவள் கழைந்தெறிந்த அணிகலங்களைக் கிட்கிந்தையில் குரங்குகள் கண்டு அணிந்துகொண்டது போல் இவர் தமர் அன்று அவ்வணிகளைப் புனைந்துகொண்டனர் என இதில் உரைத்திருக்கும் அழகினை ஊன்றிப்பார்க்க. வறுமையில் செம்மையுடையராய் உண்மையுடன் ஒழுகி நின்ற இவர் இரந்து சென்ற இடமெல்லாம் பொருள் இனிதாக எய்தி வந்தாராதலால் அவ் இரப்பு இவர்க்கு இன்பகரமாயிசைந்திருந்தது "இன்பம் ஒருவற்கு இரத்தல் இரந்தவை துன்பம் உறாஅ வரின்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

வாய்திறந்து கூறுமுன் வந்ததறிப் போர்ந்துதருந்
தாயனையார் பாலிரவு சால்பு.

இரவு செய்யுந்திறம் இதனால் கூறப்பட்டது.

---

1053. மண்டு புகழாதன் மாண்புற்றான் முந்திரப்பைக்
கொண்டுநின்று மென்னே குமரேசா — கண்டு
கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து. (௩)

இ—ள்.

குமரேசா! இரப்பினை மேற்கொண்டும் பாலியாதன் ஏன் எழிலடைந்து நின்றான்? எனின், கரப்பு இலா நெஞ்சின் கடன் அறிவார் முன் நின்று இரப்பும் ஓர் ஏர் உடைத்து என்க.

இது, கரவில்லாரிடம் இரவு நல்லதென்கின்றது.

முன் நின்று என்றது இரந்து சென்றோரது நிலைமை தோன்ற.

ஏர் = அழகு. அளபெடை இசை நிறைக்கவந்தது. "குவளையுண்கண் ஏஎர் மெல்லியல்" (ஐங்குறுநூறு) "நின்கட் கிடந்த சீரணி ஏஎர் என்கண் கவற்றிற்று" (பெருங்கதை). இவற்றுள் ஏர் உணர்த்தி நிற்றல் காண்க.

இரப்பும் என்பதில் உம்மை அதன் இயற்கை இழிவினை யுணர்த்தி நின்றது. உடைத்து = உடையது. இரப்பானது என்றும் மிக இழிவினதேயாயினும் கரப்பில்லாரிடம் செய்யின் அஃது ஓர் புதுமையான சிறப்பினையடையும் என்றபடி.

கடனறிதலாவது செல்வமுடையார் செய்யவேண்டிய கடமையைத் தெளிய வுணர்தல். உயர்ந்தவர், தாழ்ந்தவர்க்கும்; வலியவர், மெலியவர்க்கும், கற்றவர் கல்லாதவர்க்கும், செல்வர் வறியவர்க்கும் இதம்புரிய வேண்டுமென்பது நியமமாதலால் அவ் வுண்மையை உணரும் ஒண்மையுடையாரைக் கடனறிவார் என்றார். இவ் அறிவுடையார் யாண்டும் இரங்கி நின்று உவந்துபசரித்து உதவி விடுவராதலால் இவர் முன்னின்றிரத்தல் இனிதாமென்க. "இடனில் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார் கடனறிகாட்சியவர்" என்பதும் ஈண்டுக்காணத்தக்கது.

மேல், இரவு இன்பமுடையதா யிருக்கவேண்டும் என்றார்; இதில், அஃது அழகுடையதாயுமமைய வேண்டும் என்கின்றார்.

கரத்தலில்லாத நெஞ்சினையுடைய உபகாரிகளிடம் போய் ஒருவன் இரப்பின் அஃது ஓர் அழகுடைய தென்பதாம்.

ஓர் என்றது அவ் அழகின் தனிமையான புதுமை தோன்ற. அறிவார் முன் இரப்பு ஏருடைத்து என்றதனால் அறிவிலிகள்பால் அஃது அவமானம் அடையும் என்பதாயிற்று.

ஒருவன் கையில் எவ்வளவு செல்வம் எய்தியிருந்தாலும் அவன் நெஞ்சில் கரவிருக்குமாயின் ஒருவருக்கும் இனிது பயன் படாதாதலால் இரப்புண்மைக்குக் கரப்பின்மை இடமாய் நின்றது. நெஞ்சைக் குறித்தது மொழி செயல்கள் எவற்றிற்கும் மூலமாயுள்ள அதன் முதன்மை கருதி. "இல்லை என்று இரப்போர்க்கு இல்லை என்றுரையா இதயம் நீ அளித்தருள்" எனக் கண்ணனிடம் கன்னன் வேண்டியுள்ளதும் ஈண்டெண்ணத் தக்கது.

நெஞ்சிற் கரவில்லாதிருந்தாலும் கடனறியாவழி இரவலனது நிலையறிந்து உடனே உதவ இயலாது ஆதலால் அந்நெஞ்சோடு கடன் அறிவும் உடன் எண்ண நின்றது.

இத்தகைய புனித நெஞ்சும், இனிய அறிவுமுடைய உபகாரிகளிடம் ஏதேனும் பொருள் கருதி இரந்து சென்றால் வந்தவன் வாய்திறந்து கூறு முன்னரே குறிப்பறிந்து கொடுத்து இன்னுரையாடி இதம் புரிந்து விடுவர்; விடவே அக்கொடையினைக் கொண்டவர் இரவின் சிறுமையை யாதுங்கொள்ளாது மானமும் மேன்மையு மருவி மாண்புற்று நிற்பராதலால் அவ் "இரப்பு ஏருடைத்து" என்றார்.

தம் மானங்கெடாவகை மதித்துதவும் ஞானமுடையாரிடம் நல்குரவாளர் இரந்து செல்லலாம் என்பது கருத்து. தரந்தெரியாத ஈனர்களிடத்து யாதும் இரக்கலாகாதென்பது குறிப்பு.

அருமையறிவார்கண் இரவு செய்தவர் பெருமையடைவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை பாவியாதன் பால் உணரப்படும்.

## கதை.

பாவியாதன் என்பவர் சேர நாட்டிலே பாவி என்னும் ஊரிலிருந்தவர். யாரிடமும் பேரன்புடையவர். குழிந்து ஆழ்ந்த கண்ணினராதலால் குண்டுகட் பாலியாதன் என்று இவர் கூற நின்றார். தமிழ்ப்புலமையோடு வட மொழியினும் இவர் நல்ல பயிற்சி யெய்தியிருந்தார். இருந்தும் வறுமைத்துயரால் வாடி

வருந்தினர். இவரது குடும்பம் பசித்துயரை நாளும் அனுப வித்துப் பதைத்திருந்தது. புலமை நிலையில் உயர்ந்திருந்தாராத லால் உலக நிலையில் இழிந்து பொருள் ஈட்ட முடியாமல் இவர் உளைந்து நின்றார். நல்லமானர். யாண்டும் செல்லலாகாதென் றெண்ணி யிருந்தும் நிரப்பிடும்பையைப் பொறுக்கமாட்டாமல் இரப்பினை மேற்கொண்டு ஒருநாள் எழுந்தார். அக்காலத்தில் பெருங் கொடையாளியாய்ச் சிறந்திருந்த **செல்வக் கடுங்கோ வாழி யாதன்** என்னும் சேர மன்னனைக் காண விழைந்தார். அவன் போர்த்திறத்தோடு புலமைத் துறையிலும் புகழ் மிகப் பெற்றவன். பகைவர் பலரை வென்று அவர் தந்த திறைகளை யெல்லாம் தன்பால் வந்த புலவர்களுக்கு வழங்கி மகிழ்ந்தவன், “பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநன், நகைப்புலவாணர் நல்குரவகற்றி, மிகப்பொலி” வோடு விளங்கி நின்ற அவனை இவர் விழைந்து வந்து கண்டார். இவரைக் கண்டவுடனே அவன் கழி பேருவகை கொண்டான், கனிந்துப சரித்தான். திருந்திய முறையில் விருந்து புரிந்து பெருந்தக வுடன் புகழ்ந்துரையாடினன். இவர் வந்த குறிப்பை முந்துற அறிந்தான். சிறிது கருதி வந்துள்ள இவர்க்குப் பெரிது உதவ வேண்டுமென்று அவன் உறுதிசெய்து கொண்டான். யானை கள் தேர்கள் குதிரைகள் பசுக்கள் நெற்பொதிகள் பொற்குவி யல்களாகிய பல் பெரும் பொருள்களை முன் கொணர்ந்து நிறை த்து “இவற்றை ஏற்றருள்க” என்று போற்றிக் கொடுத்தான். இது, சனவா? நனவா? என்று இவர் கண்டு மருண்டார். அவ ற்றையெல்லாம் இவர் இல்லிற்கொண்டு சேர்த்து வரும்படி உட னிருந்தவர்க்கு அம்மன்னன் ஆணை செய்து விடுத்து இவரையும் ஓர் ஊர்திமேல் ஏற்றி ஊர்க்கனுப்பினன். மற்றொரு பிறப்பினை யடைந்தவர்போல் மகிழ்ந்து அக்கொற்றவன் கொடைத்திறத் தினை வியந்து வியந்து துதித்தார்.

“வென்றிரங்கும் விறல் முரசினோன்
என்சிறுமையின் இழித்து நோக்கான்
தன் பெருமையின் தகவு நோக்கிக்
குன்றுறழ்ந்த களிறு என்கோ?

கொய்யுளைய மா என்கோ?
மன்று நிறையு நிரை என்கோ?
மனைக்களமரொடு களம் என்கோ?
ஆங்கவை, கனவென மருள வல்லே நனவில்
நல்கி யோனே நசைசால் தோன்றல்,
ஊழி வாழி பூழியர் பெருமகன்,
பிணர் மருப்பியானைச் செருமிகு நோன்றாள்
செல்வக் கடுங்கோ வாழி யாதன்" (புறநானூறு)

என அவ் வள்ளல் கொடையினை இங்ஙனம் உள்ள முருகிப் புகழ்ந்து தம்மைக் காணவந்தவரிடத்தெல்லாம் தாம் கண்டுவந்த படியினை இவர் காட்டி மகிழ்ந்தார். இரப்பினை மேற்கொண்டு இவ ரடைந்த சிறப்பினைக்கண்டு பலரும் புலவராகி இரந்துகொள்ள விழைந்தார். "கரப்பிலா நெஞ்சிற் கடன் அறிவார் முன் நின்று இரப்பும் ஓர் ஏருடைத்து" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

பான்மை யறிந்து பரிந்தருள்வார் பாலிரப்பின்
மேன்மை விளைந்து மிகும்.

அறிந்து ஈவாரிடம் இரந்து கொள்க என்பது இதனால் கூறப்பட்டது.

---

1054. உள்ள மகிழ்ந்தார் உலோச்சனார் கிள்ளியிடம்
கொள்ளவந்த போதேன் குமரேசா — மெள்ள
இரத்தலு மீதலே போலும் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு. (௪)

இ—ள்.

குமரேசா! கிள்ளி வளவனிடம் இரந்து வந்தும் உலோச்சனார் ஏன் சிறந்து நின்றார்? எனின், கரத்தல் கனவிலும் தேற்றாதார் மாட்டு இரத்தலும் ஈதலே போலும் என்க.

இது, இடமறிந்து செய்யின் இரப்பும் சிறப்பாமென்கின்றது.

கரத்தல் கனவிலும் தேற்றாதார் என்றது இல்லை என்னும் அதனை யாண்டும் யாதும் மறந்தும் அறியார் என்றபடி. கனவில் என்றதனால் நனவில் அறியாமை சொல்லவேண்டாவாயிற்று. உம்மை அத்தேற்றாமையின் உறுதி தோன்ற நின்றது. மாட்டு = இடத்து. ஏழனுருபு.

ஈதலே ஆகும் என்னாது போலும் என்றதனால் தோற்ற மாத்திரத்தில் ஒரு மாதிரியாக ஈதல் என்று சொல்லலாமேயன்றி அதற்குரிய ஏற்றமொன்றும் அதில் இல்லை என்பது புலனும். கரத்தல் புரியாரிடத்து நல்குரவாளர் இரத்தல் புரிக என்பதுணர்த்தற்கு அதன் சிறப்பினை இங்ஙனம் உணர்த்தியருளினர்.

மேல், கரத்தலில்லாரிடம் இரத்தல் அழகாம் என்றார்; இதில், அஃது ஈதலோடு ஒக்கும் என்கின்றார்.

இல்லையென்று மறைத்தலைக் கனவிலும் தெரியாதாரிடத்து இரத்தலானது ஈதலே போலச் சிறப்பாம் என்பதாம்.

ஈதல், உயர்ந்தவற்றுள் எல்லாம் சிறப்பாக உயர்ந்தது; இரத்தல், இழிந்தவற்றுளெல்லாம் இறப்பவும் இழிந்தது; அங்ஙனம் இருப்ப இஃது அதனோடு ஒக்கும் என்றது, இடவகையால் தன் இயற்கை நிலை திரிந்து நிற்குந் திறங்கருதி.

இல்லை யென்னாது உள்ள மிரங்கி ஈயும் வள்ளல்களிடத்தில் ஒருவன் போய் ஏதாவது ஒன்று கருதி யிரப்பின் அவர் இனிய முகத்தராய் இன்னுரையாடிக் குறிப்பறிந்து உடனே கொடுத்து விடுவர்; விடவே இரப்பினால் வரும் இளிவரவு யாதும் உறாமல் இன்பொருளெய்தி இசை மிகுந்திருப்பானாதலால் அவ்இரத்தல் ஈதல்போல் இன்பமாம் என இங்ஙனம் இசைத்தருளினர்.

ஈதல் புகழை உண்டாக்கும்; இரத்தல் பழியினை விளைக்கும்; இங்ஙனம் இவை நிலையாக அமைந்திருப்பினும் முன்னது தகாதவர்க்கு ஈயப்படுமாயின் தன் தகவுகெட்டு வசையாக மாறும்; அதுபோல் இது தக்கவரிடத்து செய்யப்படுமாயின் தனது இயற்கையான இழிவு நீங்கி இசையா யோங்கும் என்க.

இல்லையென்று சொல்லாமல் இனிது கொடுக்கும் வள்ளல்களிடம் போய் இரப்பின், மானம் கெடாது; மதிப்பும் குன்றாது ஆதலால் அம்மாண்புடையார்பால் வறியர் இரந்து வாழலாம் என்பது கருத்து.

கரவாதுதவும் உபகாரிகளிடத்து இரந்து சென்றவர் சிறந்து நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உலோச்சனார்பால் உணரப்படும்.

## கதை.

உலோச்சனார் என்பவர் சோழ நாட்டிலே காண்டவாயில் என்னும் ஊரிலிருந்தவர். ஆண்டகைமையும் அன்பும் அமையப்பெற்றவர். பல கலைகளிலும் நல்ல பயிற்சியுள்ளவர். நெய்தல் மருதம் குறிஞ்சி முதலிய நில வகைகளின் இயல் நலங்களை நன்கு தெளிந்தவர். இவர் நெய்தல் நிலத்தினராதலால் அதன் வளங்களை எவரும் புலன் கொள்ளும்படி புகன்றிருக்கின்றார். மழை பெய்தால் நெல் விளையும்; அது பெய்யாது வறந்திருப்பின் உப்பு விளையும்; வான் பொய்த்தாலும் தான் பொய்யாது நின்று என்று மீன் பெய்தளிக்கும்; ஆதலால் மற்றை நிலங்களினும் நெய்தல் நிலமே எக்காலமும் மிகுந்த வருவாயினையுடையது என அதனை இவர் பெரிதும் புகழ்ந்துள்ளார்.

"பெயினே, விடுமா னுழையினம் வெறுப்பத்தோன்றி
இருங்கதிர் நெல்லின் யாணர் அஃதே
வறப்பின், மாநீர் முண்டகம் தாஅய்ச் சேறுபுலர்ந்து
இருங்கழிச் செறுவின் வெள்ளுப்பு விளையும்;" (நற்றிணை)

நிலத்திணை இயங்குதிணைகளின் இயற்கை நிலைகளைக்குறித்து இன்னவாறு இவர் இனிதுரைத்துள்ளார். இங்ஙனம் புலமை நிலையில் சிறந்திருந்தும் வறுமையால் மிக இவர் வருந்தி நின்றார். பெருந்தன்மையாளராதலால் யாரிடமும் இரந்து செல்லாது மானமுடனின்று ஆனவரையும் முயன்று பார்த்தார். முடியவில்லை; முடிவில் பேரியன் என்னும் குறுநிலத் தலைவனிடம் சென்றார். அவன் குணமும் அறிவும் கொடையுமுடைய

வன். அருமை தெரிந்து ஆதரித்து மிகுந்த பொருளை இவர்க்கு உவந்து கொடுத்தான். இவர் மகிழ்ந்துகொண்டு அவனைப் புகழ்ந்து மீண்டார். சிலகாலங்கழிந்தபின் பெருநற்கிள்ளி என்னும் சோழ மன்னனைக் கண்டு வரவேண்டுமென்று கருதி எழுந்தார். அவன் அருந்திறலாளன்; பெருங்கொடையாளி; இல்லை யென்பதை மறந்தும் சொல்லாதவன். அவனையடைந்து சில கவிகள் பாடினர். அவன் உவந்துபசரித்துச் சிலநாள் அங்கு இவரை உடனிருக்கச் செய்தான். ஒருநாள் மணியும் பொன்னும் முத்தும் நெல்லும் நிரை நிரையாகக் குவித்துச் சகடங்களில் ஏற்றி இவரது ஊர்க்கு அனுப்பிவிட்டுச் சிறந்த அணிகளையும் உயர்ந்த உடைகளையும் இவரிடம் உவந்து கொடுத்தான். அவனது கொடை நிலையை வியந்து இவர் நெடிது மருண்டார். "கனவிற் கண்டாங்கு வருந்தாது நிற்ப நனவில் நல்கியோன்" எனவும் "**கரவில்லாக் கவி வண்கையான்**" எனவும், இவர் உள்ளங் கனிந்து அவனை உவந்து துதித்துத்தமது ஊரினை யடைந்தார். இவர் பெற்றுவந்த சீரினையறிந்து எல்லாரும் சித்தந்திகைத்தார். இரப்பினை இளிவென எண்ணியிருந்த நல்ல மானிகளுங்கூட இவருற்ற சிறப்பினைக்கண்டபின் அதனை இனிது மகிழ்ந்தார். "இரத்தலும் ஈதலே போலும் கரத்தல் கனவிலும் தேற்றாதார் மாட்டு" என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். விரிவைப் புறநானூற்றில் காண்க.

"கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருநல் உண்டனம் என்னாது பின்னும்
செலவா னாவே கலிகொள் புள்ளினம்;
அனையர் வாழியோ இரவலர்; அவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்
உடைமை யாகும் அவருடைமை;
அவரின்மை யாகும் அவர் இன்மையே" (புறம்)

இது, பெரும்பதுமனார் என்னும் புலவர் பெருமானார் கூறியது. கரவாததவும் புரவோருடைமையானது என்றும் இரவோருடையதென உரிமை தோன்ற உரைத்து அவர் உணர்த்தியிருக்கும் அருமையை இதில் ஊன்றிப்பார்க்க.

ஏற்றல் இளிவெனினும் இல்லையென்னார் பாலிரப்பின்
ஏற்றமே யாகும் இசைந்து.

காவாதருள்வாரிடம் இரவு இனிதென்பது இதனால் கூறப்பட்டது.

1055. அன்றெதிர்போய் நின்றேனோ ஐயூரர் தாமான்முன்
குன்றூ திரந்தார் குமரேசா — என்றும்
கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது. (டு)

இ—ள்.

குமரேசா! ஐயூர் முடவனார் மனங்கூசாது தாமானிடம் வந்து ஏன் இரந்து வேண்டினார்? எனின், கரப்பு இலார் வையகத்து உண்மையான் கண்நின்று இரப்பவர் மேற்கொள்வது என்க.

இது, இரப்பு நிலை ஈவார்மேலுள்ள தென்கின்றது.

உண்மையான் = உளராயிருத்தலினாலேதான்.

கண்நின்று = முன்நின்று; அஃதாவது கண்ணெதிரே நேர்போய் நின்று என்க. "வாய்திறந்து" இரப்பவர் என்னாது கண்நின்று என்றது அவ் இரப்பின் ஒண்மை தோன்ற; என்னை? நல்ல மானிகள் வாய் திறந்து சொல்லாராதலால் வந்த குறிப் போர்ந்தருளும் வள்ளியோர் முன் அவர் போய் நின்று விடுதலே சாலும் என்க.

மேல்கொள்வது = இரப்பினை மேற்கொண்டு செல்வது. மேற்கோடல் உரிமைத் தொழிலாகத் தழுவிக் கொள்ளுதல். உண்மையான், கொள்வது என்றதனால் அவர் இலராயின் இரப்பவர் இரவினை மேற்கொள்ளார்; இறத்தலையே கைக்கொள்வர் என்பதாயிற்று.

மேல், கரப்பில்லாரிடம் இரப்புறல் சிறப்பாம் என்றார்; இதில், அவராலேதான் இரப்பாளர் நிலைத்துள்ளார் என்கின்றார்.

கரவாது உதவும் உபகாரிகள் இவ்வுலகத்தில் இருந்தவி ருலேல் தான் இரவினை மேற்கொண்டு பிறர் முன்னே போய் இரவலர் இசைந்து நிற்பதென்பதாம்.

உள்ளது மறையாது உள்ளம் இரங்கி உதவுதல் நல்ல குல மக்களுக்கு இயல்பாகும்; அத்தகைய வள்ளியோரை இவ்வுலகம் என்றும் தனக்கு உயிர் நிலையாகப் பெற்றிருக்கும் ஆதலால் "உண்மையான்", என உறுதிதோன்ற வுரைத்தார். அந்நல்லோர் இல்லையாயின் இவ்வையகம் வெய்யதாய் நைந்துபோம் என்க. "உண்டால் அம்ம உலகம், பிறர்க்கெனமுயலுநர் உண்மையானே" என்பதும் ஈண்டுணரத்தக்கது.

"சாலப்பழுத்த மரம் பார்த்து எறிவர்; தண்ணீர் சுரக்கும்
ஞாலத்தகழ்வர்; கறக்கின்ற ஆவை நற்கால் தளைவர்;
நீலக்கடல்விட்டுப் பாலாழி மத்திட்டு நிற்பர்;"

என்ற வண்ணம் கரப்பின்றியுதவும் சிறப்புடையாரைக் கண்டுதான் இரப்பாளர் தம்நிரப்புநீங்க இரந்து கொள்வர் என்க.

"புரப்போன் பாத்திரம் பொழிந்தூண் சுரந்தீங்
கிரப்போர்க்காணு தேமாந்திருப்ப" (மணிமேகலை) என்றபடி என்றும் இரவலரை எதிர் நோக்கி வள்ளியோர் இருப்பர்; அத்தகைமையோரிடத்து எவரும் சார்ந்து கூசாது கேட்பர்; ஆகவே அவர் இருப்பு இரப்பிற்கோர் உயிர் இருப்பாமாதலால் "கரப்பிலார் உண்மையால் இரப்பவர் மேற் கொள்வது" என்றார்.

ஒளியாது உதவும் விழுமியோரிடத்தே தான் எளியவர் இரவினை மேற் கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை ஐயூர் முடவனார்பால் உணரப்படும்.

## கதை.

ஐயூர் முடவனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே ஐயூர் என்னும் பதியில் இருந்தவர். அகன்ற மார்பும், திரண்ட தோளும், நிமிர்ந்த உருவும் அமைந்த மேனியர். இங்ஙனம் நல்லவடிவுடையராயினும் ஒருகால் முடமாயிருந்தாராதலால் ஐயூர்முடவனார் என யாவரும்

இவரை அழைத்து வந்தார். அறிவு நூல்களோடு கருவி நூல்களையும் கசடறக் கற்றுப் பெரும் புலவராய் இவர் விளங்கியிருந்தார். இவரது அருமையையறிந்து மாறன்வழுதி என்னும் பாண்டிய மன்னன் இவர்க்கு வேண்டிய உதவிகளைச் செய்து வந்தான். அவன் சிறந்த போர் வீரன்.

"நீர்மிகிற் சிறையும் இல்லை; தீமிகின்
மன்னுயிர் நிழற்று நிழலும் இல்லை;
வளிமிகின் வலியும் இல்லை; ஒளிமிக்கு
அவற்றோரன்ன சினப்போர் வழுதி" (புறம் 51)

என அவனது போராற்றலை வியந்து இவர் பாராட்டியுள்ளார். பின்பு உறையூரிலிருந்த சோழ மன்னன் இவரை ஆதரித்து வந்தான். இடையே அவனும் இறந்து போயினன். அவன் இறந்ததை நினைந்து நினைந்து இவர் வருந்தி யிரங்கினர்.

"புலவர் புகழ்ந்த பொய்யா நல்லிசை
விரிகதிர் ஞாயிறு விசும்பிவர்ந்தன்ன
சேண்விளங்கு சிறப்பிற் செம்பியர் மருகன்
கொடி நுடங்குயானை நெடுமா வளவன்
தேவருலகம் எய்தினன்" (புறம் 228)

என யாவரும் இரங்க இவர் பாவனைந்து நின்றார். மன்னர்கள் ஆதரவால் இங்ஙனம் மன்னி வாழ்ந்த இவர் பின்னர் ஓராதரவுமின்றிப் பெருந்துயரடைந்தார். தமது பெருங்குடும்பத்தைப் பேண முடியாமல் பேதுற்று நொந்தார். அக்காலத்தில் தாமான் தோன்றிக்கோன் என்னும் குறுநில மன்னன் ஒருவன் இருந்தான். அவன் தோன்றி என்ற மலைக்குத் தலைவன். ஆன்றகேள்வியும் அமைதியும் அமைந்தவன். உயர் குண வள்ளல். எவர் வந்தாலும் இல்லை யென்னாது ஈயும் இயல்பினன். அவனது செயலினை நெடுநாளாக அறிந்திருந்தாராதலால் ஒரு நாள் எழுந்து அரிதினடைந்து அவன் எதிர் போய் நின்றார். இவரைக் கண்டவுடனே அவன் உவந்துபசரித்துச் சிறந்த உண்டியை விரைந்து செய்து விருந்து புரிந்தான். தாம் ஏறிச்செல்லும் வண்டிக்கு ஓர் எருது வேண்டியே இவர் கருதி நின்றாராத

லால் அவ்விருந்தினை விரும்பியுண்ணுமல் வேற்று நோக்கோடு திரும்பி யிருந்தார். இவர் இருப்பினை அவன் குறித்து நோக்கிக் கருத்து என்னை? என்ருன். இவர் உற்றதை யுரைத்தார். உடனே திண்ணிய காளைகளும், தண்ணிய பசுக்களும், எண்ணரியன தந்து ஒண்ணிற ஊர்திகளும் உவந்து நல்கினன். இவர் உண்டு மகிழ்ந்து அவற்றைக்கொண்டு மீண்டார். தமது எளிமை முழுவதும் அவ் விழுமியோனைக் கண்டபின் ஒழிவானதை நினைந்து உவந்து புகழ்ந்தார். ஒருமுறை இவர் உரைத்துள்ளபடியை அடியில் காண்க.

"கிணைமகள் அட்ட பாவற் புளிங்கூழ்
பொழுதுமறுத் துண்ணும் உண்டியேன் அழிவு கொண்டு
ஒருசிறை இருந்தேன்; என்னே யினியே!
அறவர் அறவன்; மறவர் மறவன்;
மள்ளர் மள்ளன்; தொல்லோர் மருகன்;
இசையிற் கொண்டான் நசையமு துண்கென
மீப்படர்ந் திறந்து வன்கோள் மண்ணி
விசிப்புறுத் தமைந்த புதுக்காழ்ப் போர்வை
அலகின் மாலை ஆர்ப்ப வட்டித்துக்
கடியும் உணவென்னக் கடவுட்குந் தொடேன்
கடுந்தேர் அள்ளற்கு அசாவா நோன் சுவற்
பகடே அத்தை யான் வேண்டி வந்தது; என,
ஒன்றுயான் பெட்டா அளவை அன்றே
ஆன்று விட்டனனத்தை விசும்பின்
மீன் பூத்தன்ன உருவப் பல்நிறை
ஊர்தியொடு நல்கியோனே சீர்கொள
இழுமென இழிதரும் அருவி
வான்தோய் உயர்சிமைத் தோன்றிக் கோவே" (புறம்)

பழங்கூழை இவர் இடைகழிந்துண்டதும், மிடிக் கொடுமையை நினைந்து உளமுடைந்திருந்ததும், பின்பு அவ்வுபகாரியையடைந்து காளைகளும், ஊர்திகளும், ஆனிரைகளும், வான் மீனினும் மிகுதியாகப் பெற்றுப் பெருந்திருவுடையராய்ச் சிறந்து

நின்றதும், பிறவும் இதன்கண் இனிதறியலாகும். தம்மை ஆதரித்து வந்த அரசர்கள் அழிந்தபின் ஒருவரிடமும் செல்லாமல் உள்ளடங்கியிருந்த இவர், கரவாது ஈயும் உரவோன் என அப் பெரியோன் இருந்தநிலையறிந்து இரவினை மேற்கொண்டு சென்று கருதிய பேற்றினையடைந்து உறுதிபெற நின்று இனிது வாழ்ந்த திறனை யனைவரும் உளமகிழ்ந்து புகழ்ந்தார். கரப்பிலார் வையகத்து உண்மையினாலேதான் கண் நின்று இரப்பவர் மேற்கொள்வது என்னும் உண்மையை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

"இல்லோர் இரப்பதும் இயல்பே இயல்பே;
இரந்தோர்க் கீவதும் உடையோர் கடனே" (நற்றொகை)

என்பா யுகினும் இயல்பிலார் பின்சென்று
தம்பா டுரைப்பரோ தம்முடையார் — தம்பாடு
உரையாமை முன்னுணரும் ஒண்மை யுடையார்க்
குரையாரோ தாமுற்ற நோய். (நாலடியார்)

**கன்றுள்ளி யீயும் கறவைபோல் வாரிலரேல்**
**நின்றிரவோர் வாழார் நிலத்து.**

இரவு நிலைக்கு உயிர் நிலை இதனால் கூறப்பட்டது.

---

1056. கண்டார் வளவனைமுன் கண்ணனார் காணார் பின்
கொண்ட நிரப்பேன் குமரேசா — ஒண்டிக்
கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும். (௬)

இ—ள்.

**குமரேசா!** தாயங்கண்ணனார் வளவனைக்கண்டபின் வறுமைத் துயரெல்லாம் ஒழிந்து ஏன் மகிழ்ந்திருந்தார்? எனின், கரப்பிடும்பை இல்லாரைக் காணின் நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும் என்க.

இது, நல்ல உபகாரியைக் கண்டால் நல்குரவு ஒழிந்துபோமென்கின்றது. காணின் என்றார் அருமை கருதி.

வளவனைக் கண்டார் நிரப்பினைக் காணார் என்றது அவனைப் பார்த்தவுடனே வறுமை முழுதும் அறவே நீங்கி உயர் திருவுடையராய் இவர் மகிழ்வெய்தி யிருந்தமை கருதி.

கரப்பு = ஒளிப்பு. இடும்பை = நோய். சரப்பினை நோயாகக் குறித்தது எவர்க்கும் அது வெறுப்பினை விளைத்தலான் என்க.

நிரப்பிடும்பை = வறுமைத்துன்பங்கள். எல்லாம் என்றது பசியும் பதைப்பும் பழியும் இழிவு முதலாய துயரங்கள் யாவும் என்க. ஒருங்கு கெடும் = ஒருமிக்க ஒழியும். அடியோடழிந்து போம் என்றபடி.

காணின், கெடும்; என்றதனால் அக்காட்சியின் மாட்சி காணலாகும். சேரின் என்னாது காணின் என்றது தூரத்தே கண்டபொழுதே அந்நிரப்பாளர் கருத்தில் நிகழும் நிலை கருதி. துளிக்கு மேகத்தைக்கண்டு பயிர் செழித்து நிற்றல்போல் அளிக்கும் ஈகையாளரைக் கண்டவுடனே இரவலர் களித்து நிற்பாராதலால் நிரப்பிடும்பை அவரை ஒளித்து நீங்கி விடும் என்க.

மேல், கரவாதுதவும் உரவோராலேதான் இரவோர் உள்ளார் என்றார்; இதில், அவரைக்கண்டபொழுதே வறுமை காணுதொழியும் என்கின்றார்.

மறைத்தலாகிய நோயில்லாதாரைக் கண்டால் வறுமையாகிய துன்பங்களெல்லாம் ஒருங்கே ஒழிந்துபோம் என்பதாம்.

கரப்பானது, உலோபத்தை வளர்த்துக், கொடும் பழியையும், கடுந்துயரையும் தன்னைக் கொண்டவனுக்குக் கொடுத்து விடுமாதலால் அதனை இடும்பை எனக்குறித்து அஃதில்லாதாரது சிறப்பினை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

செல்வரைக் காணின் என்னாது கரப்பில்லாரைக் காட்டியது புறத்தில் எவ்வளவு பொருள்கள் பொருந்தி யிருந்தாலும் அகத்தில் கரப்புடையராயின் அவர் யாதும் உதவாராதலால் அவ்வுதவாமாக்கள் ஈண்டு உதவாராயினார்.

இல்லை யென்னாது ஈயும் வள்ளன்மையாளர் தம்பால் இரந்து வந்தவரது இடும்பையை நீக்கிச் சிறந்தபடியாகச் செய்துவிடுவ ராதலால் அவரைக்காணின் வறுமை கெடும் என்றார்.

சத்திமுத்தப்புலவர் பாண்டியனைக் கண்டவுடன் தம் நிரப் பிடும்பை யெல்லாம் ஒருங்கே கெட்டொழியப் பெருஞ் செல்வ மெய்திச் சிறப்புற்றது போல் கரப்பில்லாரைக் காணின் இரப் பாளர் இன்மை நீங்கி இன்புறுவர் என்க.

உள்ளமெல்லாம் உவந்தருளும் வள்ளியோரை யடைந்தவர் வறுமையடையார் என்றதனால் அவர் வளம் பெற வழங்குந் திறம் புலன் கொளலாகும்.

"செருமான வேற் சென்னி தென்னுறந்தை யார்தம்
பெருமான் முகம்பார்த்த பின்னர் — ஒருநாளும்
பூதலத்தோர் தம்மைப் பொருள்நசையாற் பாராவாம்
காதலித்துத் தாழ்ந்திரப்போர் கண்" (தண்டி—மேற்கோள்)

கரவாது உதவி நின்ற வளவனைக்கண்டபின் இரவலர் கண் இரப்பினைக் காணவில்லை என இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

கரந்து படாரிடம் இரந்து சென்றவர் சிறந்த செல்வ மெய்தி உயர்ந்து விளங்குவரென்பது இதில் உணர்த்தப்பட் டது. இவ்வுண்மை தாயங்கண்ணனார் பால் உணரப்படும்.

## கதை.

தாயங்கண்ணனார் என்பவர் சோழ நாட்டிலே எருக்காட்டூர் என்னும் பதியிலிருந்தவர். அந்தணர் மரபினர். அறிவிலும் பொறையிலும் அருளிலும் சிறந்தவர். உம்பருயர ஒளிர்வேல் தொட்ட எமபெருமான் பால் அன்பமை நெஞ்சினர். அக்காலத் தில் மதுரையிலமர்ந்து அரசுபுரிந்திருந்த பாண்டிய மன்னனது ஆண்டகைமையையும், திருப்பரங்குன்றத்தின் காண்டகைய சிறப்பையும் கருதி மகிழ்ந்து உறுதி புரிந்து இவர் உவந்து புகழ்ந்தனர். அடியில் வருவது காண்க.

"வளங்கெழு முசிறி யார்ப்பெழ வளைஇ,
அருஞ்சமங்கடந்து படிமம் வவ்விய,

நெடுநல்யானை அடுபோர்ச் செழியன்,
கொடி நுடங்கு மறுகிற் கூடற் குடா அது,
பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யுயரிய,
ஒடியா விழாவின் நெடியோன் குன்றத்து,
வண்டுபடட நீடிய குண்டுசுனை'' (அகநானூறு)

எனப் பண்டு நிகழ்ந்த படிகளை இங்ஙனம் பாராட்டி யுள்ளார். பல நூல்களையும் வழுவறப் பயின்று உயர்ந்த புலமையாளராய் விளங்கி யிருந்த இவர்பால் இழிந்த வறுமையும் இடை புகுந்திருந்தது. தமது இனிய மனைவியையும் அருமை மக்களையும் பேண முடியாமல் நாணி நின்றார். பலமுறை பசித்துயரால் பதைத்து நொந்தார். பாழான வறுமை தம்மைக் கீழான நிலையில் கிடத்தி யிருப்பதை நினைந்து நினைந்து இவர் நெஞ்சுடைந்திருந்தார். இவ்வகையாக நெடுநா ளுளைந்திருந்த இவர் ஒருநாள் எழுந்து ஒருவரோடும் உரையாமல் உறையூரை யடைந்தார். அவ்வமயம் கிள்ளிவளவன் என்னும் சோழ மன்னன் அங்கு அரசுபுரிந்திருந்தான். அவன் அறிவும் திருவும் அமையப் பெற்றுக் கர்வாது ஈயும் பெரு வள்ளலாய் உயர்வெய்தி யுள்ளமையை யறிந்து இவர் உளமிக மகிழ்ந்தார். மறுநாட்காலையில் பொழுதொடு சென்று அவன் திருமுகத்தைக் கண்டார். இவரைக் கண்டவுடனே அவன் கனிந்தெழுந்து உவந்துபசரித்து அருகிருத்தி உரை பல புகன்றான். இவரது நிலைமையை யறிந்து நெஞ்சம் இரங்கினான். சிறந்த உடைகளையும் உயர்ந்த அணிகளையும் விரைந்து கொணர்ந்து இவரைப் புனைந்து நோக்கினான். பின்பு நெல்லும் பொன்னும் நிரம்பத்தந்து புகழ்ந்தனுப்பினான். சின்னாட் கழிந்தபின் இவர் இருந்த ஊரையே இவருக்குத் தானமாக உரிமை செய்து வழி வழியாக அனுபவித்து வரும்படி உறுதிசெய்து விடுத்தான். அதன் பின் இவர் **எருக்காட்டூர்த் தாயங்கண்ணனார்** எனச் சிறப்புற்று நின்றார். அம்மன்னனைக் கண்டவுடனே தமது நிரப்புத் துயரங்கள் யாவும் ஒருங்கே நீங்கிச் சிறந்த திருவினராய் இவர் உயர்ந்து விளங்கினமையை யறிந்து அனைவரும் வியந்து புகழ்ந்தார். "காரப்பிடும்பை இல்

லாளைக் காணின், நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும்' என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். அவ்வள வனைக் குறித்து இவர் பல பாடல்கள் பாடியுள்ளார். ஒன்று இதனடியில் வருவது காண்க.

"வெள்ளியும் இருவிசும்பு ஏர்தரும்; புள்ளும்
உயர்சினைக் குடம்பைக் குரற்றோன் றினவே;
பொய்கையும் போதுகண் விழித்தன; பைபயச்
சுடரும் சுருங்கின்று ஒளியே; பாடெழுந்து
இரங்குரல் முரசமொடு வலம்புரி ஆர்ப்ப
இரவுப்புறங்கண்ட காலைத்தோன்றி
எஃகிருள் அகற்றும் ஏமப் பாசறை
வைகறை அரவம் கேளியர் பலகோட்
செய்தார் மார்ப எழுமதி துயிலெனத்
தெண்கண் மாக்கிணை தெளிர்ப்ப ஒற்றி
நெடுங்கடைத் தோன்றியேனே, அது நயந்து
உள்ளிவந்த பரிசிலன் இவன் என
நெய்யுறப் பொரித்த குய்யுடை நெடுஞ்சூடு
மணிக்கல னிறைந்த மணநாறு தேறல்
பாம்புரித் தன்ன வான்பூங் கலிங்கமொடு
மாரியன்ன வண்மையிற் சொரிந்து
வேனில் அன்ன என் வெப்பு நீங்க
அருங்கலம் நல்கி யோனே என்றும்
செறுவிற் பூத்த சேயிதழ்த் தாமரை
அறுதொழில் அந்தணர் அறம்புரிந் தெடுத்த
தீயொடு விளங்கு நாடன் வாய்வாள்
வலம்படு தீவிற் பொலம் பூண் வளவன்
எறிதிரைப் பெருங்கடல் இறுதிக்கட் செலினும்,
தெறுகதிர்க் கனலி தென்றிசைத் தோன்றினும்,
என்னென்று அஞ்சலம் யாமே, வென்வேல்
அருஞ்சமங் கடக்கும் ஆற்றலவன்
திருந்துகழல் நோன்றாட் டண்ணிழ லேமே" (புறம்)

இவர் வறுமையுற்று வாடி நின்றதும், வளவனைப் போய்ச் சண்டதும், அவ்வள்ளல் அள்ளித் தந்ததும், அதனால் நிரப் பிடும்பை நீங்கி நிறை திருவுடையராய் நிலைத்து மகிழ்ந்து இவர் நெடிது வாழ்ந்ததும், பிறவும் இதன் கண் உணரலாகும்.

இல்லையென்று தீயும் இயல்புடையார்க் காணிற்பின்
இல்லை வறுமை யிடர்.

வறுமை ஒழிதற்கு உரிமை இதனால் கூறப்பட்டது.

1057. மண்டுபுகழ் நள்ளியையேன் வன்பரணர் கண்டவுடன்
கொண்டுவந்தார் உள்ளம் குமரேசா — கண்டி
இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம்
உள்ளு ளுவப்ப துடைத்து. (எ)

இ—ள்.

குமரேசா! ஈகையாளனாகிய நள்ளியைக் கண்டபொழுது வன் பரணர் ஏன் உள்ளமுவந்து நின்றார்? எனின், இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்து உள்ளம் உள்ளுள் உவப் பது உடைத்து என்க.

இது, ஈகையாளனைக் காணின் எவரும் இன்புறுவரென்கின்றது.

இகழ்தல் = அவமதித்தல். எள்ளல் = இழித்துச்சொல் லல். முன்னது மனத்தால் புரிதல்; பின்னது வாக்கால் செய் தல் என்க. உள்ளிகழ்தல் எள்ளலுக்கு ஏதுவாகுமாதலால் அம் முறைமை தோன்ற அது முதலில் நின்றது.

காணின் உடைத்து என்றதனால் அவரைக் காணவில்லை யாயின் அவ் உவப்பது இல்லை என்பதாயிற்று.

உள்ளம் என்றது இரந்து நிற்பவரது நெஞ்சினை.

உள் உள் உவப்பது என்றதனால் அவ் இன்பநிலை வெளியே சொல்லமுடியா தென்பதாம். மகிழ்ச்சி, உவத்தல் என்பன இன்பவுணர்ச்சியை ஒருபடியாக உணர்த்தி வருமாயினும் முன் னது, ஓர் இனிய பொருளைப் பெற்ற உடன் உள்ளமலர்ந்து விரிந்து தோன்றும் எனவும், பின்னது அப்பேற்றினை நினையுந் தோறும் கிளர்ந்தெழுந்து நெகிழ்ந்து நிற்கும் எனவும் உணர்ந்து கொள்க. ஈவார், இரப்பார்க்கு இன்னமிர்தாவார் என்பதாம்.

மேல், உரிமையோடு ஈவாரைக் காணின் வறுமை கெடும் என்றார்; இதில், அவரைக் கண்டவுடனே இன்பமுண்டாம் என்கின்றார்.

அவமதித்து இகழ்ந்து சொல்லாமல் உவந்து ஈவாரைக் கண்டால் இரந்து நின்றவரது உள்ளம் உள்ளுற மகிழ்ந்து களிக்கும் என்பதாம்.

இல்லாரை எல்லாரும் எளிதாக எள்ளி நிற்பராதலால் அங்ஙனம் எள்ளாது ஈவாரைக் காண்டல் மிகவும் அரிது என்பது தோன்றக் காணின் என்றும், அவ் அருமையாளரைக் காணப்பெறின் தமது வறுமைத் துன்பமெல்லாம் அடியோடு ஒழிந்து போதலை நினைந்து இரந்து சென்றவருள்ளம் தனக்குள்ளேயே அலர்ந்து மகிழ்ந்து கொள்ளும் ஆதலால் அவர் "உள்ளம் உள்ளுள் உவப்பது உடைத்து" என்றும் கூறினர்.

இகழ்ந்து எள்ளி ஈயாது ஒளிக்கும் இழி மக்களே மிக நிரம்பியுள்ள இவ்வுலகில் இகழாது இரங்கி இனிது அளிக்கும் நன்மக்களைக் காண நேரின், பெருந்தாகமுடையவன் அருஞ் சுரத்தில் குளிர்ந்து தெளிந்த இனிய நீர்ப்பொய்கையைக் கண்டது போல் களி பேருவகை கொண்டு உளம் பூரித்து இரவலர் மகிழ்ந்திருப்பர் என்றபடி.

இரவலரை அவமதித்தொழிக்காது ஆதரித்தளிப்பவர் மிக அரியர் என்பது இதனால் அறியலாகும்.

"என்றும் புதியார் பிறப்பினும் இவ்வுலகத்
தென்றும் அவனே பிறக்கலான் — குன்றின்
பரப்பெலாம் பொன்னொழுகும் பாயருவி நாட
இரப்பாரை எள்ளா மகன்" (நாலடியார்)

இரப்பவரை எள்ளாதவர் பின்பு பிறப்பினை யடையார்; பேரின்ப மெய்துவர் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. அவ் எள்ளாமையின் அருமையும், அதனையுடையாரது பெருமையும், இரவலரது நிலைமையும் இதனானும் இனிதுணரலாகும்.

"கைம்மா றுகவாமல் கற்றறிந்தோர் மெய் வருந்தித்
தம்மா லியலுதவி தாம் செய்வர்; — அம்மா
முளைக்கும் எயிறு முதிர்சுவைநா விற்கு
விளைக்கும் வலியனதாம் மென்று" என்றவண்ணம் தாம் வருந்தி நின்றேனும் குலமக்கள் பிறர்க்கு உவந்துதவுவர்; அத்தகைய பண்புடையாளர் எவர்க்கும் இன்ப நிலையமாயிருப்பராதலால் அவரது இனிய நிலையை இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

இகழ்ந்து சொல்லாது உவந்து கொடுப்பவரைக் காணின் இரவலர் மிகமகிழ்ந்து கொள்வர் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை வன்பரணர் பால் உணரப்படும்.

## கதை.

வன்பரணர் என்பவர் கொங்கு நாட்டிலே செந்தூரம் என்னும் ஊரிலிருந்தவர். பேரறிவாளர். பல நூல்களையும் வழுவறப் பயின்று சிறந்த புலமையுடன் இவர் விளங்கி யிருந்தார். வீரம் கருணை வெகுளி சோக முதலிய சுவைகள் ததும்பக் கவிகள் பாடுவதில் இவர் மிகவும் வல்லவர் புலமை நிலையில் இங்ஙனம் உயர்ந்திருந்தும் பொருள் நிலையில் மிகக் குறைந்திருந்தார். இவருடைய அருமை மனைவி பெயர் மந்தாகினி. அவள் அழகிலும் அன்பிலும் சிறந்தவள். அவளோடமர்ந்து இல்லறம் புரிந்து மக்கள் எழுவரைப்பெற்று வாழ்ந்து வருங்கால் கொடிய வறுமையால் இவர் படுதுயரடைந்தார். கல்வி நலமறியாத புல்லர் குழாம் இவரைப் புடை சூழ்ந்திருந்ததாதலால் அல்லலும் அவமதிப்பு மன்றி நல்ல தொன்றுங் காணாது நைந்து நின்றார். அவ்வூரை விட்டு அயல் நாடு போகவேண்டுமென்று நெடுநாளாக எண்ணியிருந்த இவர் ஒருநாளிரவு ஒருவருமறியாவண்ணம் தமது மனைவி மக்களை யழைத்துக் கொண்டு வெளியேறிச் சென்றார். பாவம்! வழியிடையில் பட்டினி கிடந்து இவர் பட்ட துயரங்கள் பரிதபிக்கத் தக்கன. முடிவில் ஒரு காட்டையடைந்து பசித்துயரால் மிகக் களைத்துக் குடும்பத்தோடு ஒரு ஆலமரத்தடியில் அயர்ந்து படுத்திருந்தார். அவ்வமயம் அங்கு நள்ளி என்னும் குறுநில மன்னன் வேட்டைக்கு வந்திருந்தான்.

அவன் அரிய போர் வீரன். அரிகளோடு கரிகள் துருவி அடலமர் புரியும் ஆண்மையாளன். யாவரிடத்தும் பேரன்புடையவன். பெருங் கொடையாளி. "இரப்போர்க்கு, இழையணி நெடுந்தேர் களிறொடு என்றும், மழை சுரந்தன்ன ஈகை வண் மகிழ்க், கழல்தொடித் தடக்கைக் கலிமான் நள்ளி" (அகம் 238) எனக் கபிலர் முதலிய புலவர் பெரு மக்களெல்லாரும் அவனை உவந்து புகழ்ந்துள்ளார். அவ் வள்ளல் அவண் வேட்டையாடி வருங்கால், வழி தவறி இவரிருந்த இடத்தை வந்தடைந்தான். அத் தலைவனைக் கண்டவுடனே இப்புலவர் விரைந்து தொழுது பணிவோடெழுந்தார். எழுந்த இவரை "இரும் இரும்" என்று கை கவித்து இருத்தி அருகே நெருங்கி அருளுடன் நோக்கினன். இவரது நிலைமையையுணர்ந்து நெஞ்சமுருகினன். முதலில் பசித்துயரை நீக்கவேண்டுமென்று பதைத்து நாடினன். தன் கையால நெருப்பைக் கடுக விளைத்து எய்து வீழ்த்தியிருந்த மானை இனிதாகப் பாகஞ்செய்து இன்மொழியாடி உண்ணும்படி உதவினன். மனைவி மக்களுடன் இவர் மகிழ்ந்துண்டு சுனை நீர் பருகி இனிதுவந்தமர்ந்தார். இவருக்கு ஏதேனும் பொருள் கொடுத்துவிடவேண்டுமென்று அவன் பெரிதும் விரும்பினன். அவ்வமயம் கையில் ஒன்றுமில்லையாதலால் என் செய்வது? என்று சிறிது பொழுது கருதி நின்று முடிவில் தன் கழுத்திலணிந்திருந்த அரிய முத்துமாலையை விரைவில் கழற்றிக் கையில் பூட்டியிருந்த பொற்கடகத்தையும் அவிழ்த்து "இதுபொழுது யான் காட்டில் நிற்கின்றேன்; வேறு கொடுத்தற்கில்லை; இவற்றைக் கொண்டுபோங்கள்" என்று குழைந்து கொடுத்தான். விலை வரம்பில்லாத அவற்றைப் பெறுதற்குத் தாம் தரமில்லை என்று இவர் தயங்கி நின்றார். ஒன்றும் நினையாதீர்! கொண்டுபோம்; என அவன் கொடுத்தே விடுத்தான். அவற்றைக் கொண்டபொழுது இவர் கொண்டவுவகையை யார் சொல்லவல்லார்! பேரருள் செய்து ஈந்த அவனது பேர் ஊர்களையறிய விரும்பிப் பின்தொடர்ந்து சென்று "தங்கள் ஊர் எது? தாங்கள் யார்?" என்று இவர் ஆர்வமுடன் வினவினர். பேரைத் தெரிவித்தால் தன்னை இவர் புகழ்ந்து கூறிப் பிறரறியும்படி செய்துவிடுவ

றென்று நாணி யாதும் கூறாமல் அவன் அகன்று போனான். இம்மியளவு கொடுத்தாலும் தம்பெயரைப் பெருகத்தீட்டி வெளி யீட்டுகளில் தலைநீட்டிப்பார்க்கும் நிலைமக்கட்கும் அக்குலமகனுக் கும் எவ்வளவு வேற்றுமையுள்ளதென்பதை யீண்டு எண்ணி நோக்கவேண்டும். தமது கொடிய வறுமை அடியோடழிய அருளியகன்ற அப் பெரியோன் பெயர் முதலியவற்றைப் பிறரிட மிருந்து இவர் வினவியறிந்தார். அக் கொடைக் குரிசிலின் அருஞ்செயல்களையும், பெருங் குணங்களையும் நினைந்து நினைந்து நெஞ்சமுருகினார். ஒன்று அடியில் வருவது காண்க.

"கூதிர்ப் பருந்தின் இருஞ்சிற கன்ன
பாறிய சிதாரேன் பலவுழதற் பொருந்தித்
தன்னும் உள்ளேன் பிறிதுபுலம் படர்ந்த என்
உயங்குபடர் வருத்தமும் உலைவும் நோக்கி
மான்கணந் தொலைச்சிய குருதியங் கழற்கால்
வான்கதிர்த் திருமணி விளங்குஞ் சென்னிச்
செல்வத் தோன்றலோர் வல்வில் வேட்டுவன்,
தொழுதனன் எழுவேற் கைகவித்து இரீஇ
இழுதி னன்ன வானிணக் கொழுங்குறை
கானதர் மயங்கிய இளையர் வல்லே
தாம் வந்தெய்தா அளவை ஒய்யெனத்
தான்ஞெலி தீயின் விரைவனன் சுட்டு நின்
இரும்பே ரொக்கலொடு தின்மெனத் தருதலின்
அமிழ்தின் மிசைந்து காய்பசி நீங்கி
நன்மர னளிய நறுந்தண் சாரற்
கன்மிசை அருவி தண்ணெனப் பருகி
விடுத்தல் தொடங்கினேனாக, வல்லே
பெறுதற்கரிய வீறுசால் நன்கலம்
பிறிதொன் றில்லைக் காட்டு நாட்டேம் என
மார்பிற் பூண்ட வயங்குகாழ் ஆரம்
மடைசெறி முன்கைக் கடகமொடு ஈத்தனன்
எந்நாடோ? என, நாடும் சொல்லான்;
யாரீரோ? எனப், பேரும் சொல்லான்;

பிறர்பிறர் கூற வழிக்கேட் டிசினே
இரும்பு புனைந் தியற்றாப் பெரும்பெயர்த் தோட்டி
அம்மலை காக்கும் அணி நெடுங் குன்றிற்
பளிங்கு வகுத்தன்ன தீநீர்
நளிமலை நாடன் நள்ளியவன் எனவே" (புறநானூறு)

இவர் உடுத்தியிருந்த ஆடை அழுக்கேறிப் பிணிக்கடைந்து பனியில் நனைந்த பருந்தின் சிறகுபோல் அடை பிடித்திருந்ததும், வறுமைத் துயரால் வாடித் தம் மனைவி மக்களோடு அயல் நாடடைந்ததும், இடை வழியில் ஓர் காட்டகத்தே களைத்திருந்ததும், அங்கு நள்ளி வந்து பசி நீக்கி முத்து வடமும் பொற்கடகமும் தந்து பெயர் கூறாது சென்றதும், பினபு வழிப் போக்கரிடம் வினவி அவ்வள்ளியோனை அறிந்து இவர் உள்ள முருகி நின்றதும், உவந்து துதித்ததும், பிறவும் இதன்கண் உள்ளன காண்க. இகழ்ந்தெள்ளாது நன்கு மதித்துப் புகழ்ந்து தந்த அப்புரவலனைக் கண்ட நாள் முதல் நினைந்த போதெல்லாம் பேரின்பமடைந்து நெஞ்சுள்ளேயே இவர் மகிழ்ந்து நின்றார். "இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் மகிழ்ந்துள்ளம் உள்ளுள் உவப்பதுடைத்து" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

"கறங்குமிசை அருவிய பிறங்குமலை நள்ளி, நின்
அசைவில் கோன்றாள் நசை வளன் ஏத்தி
நாடொறும் நன்கலம் களிற்றொடு கொணர்ந்து
கூடு விளங்கு வியனகர்ப் பரிசில் முற்றளிப்பப்
பீடில் மன்னர்ப்புகழ்ச்சி வேண்டிச்
செய்யா கூறிக் கிளத்தல்
எய்யாதாகின்று எம் சிறு செந்நாவே." (வன்பரணர்)

மேற் குறித்த நள்ளியைக் குறித்து ஓ வளவலே! உன் கீர்த்தியை யன்றி இனி எவரையும் எனது நா பொய்யாகப் புகழாது என்று இதில் இவர் புகழ்ந்திருத்தல் காண்க. இன்னவாறு அவ் ஈகையாளனை எண்ணுந்தோறும் உண்மகிழ்ந்து உருகி நின்று பல படியாக இவர் உவந்து துதித்துள்ளார்.

பிறர்புகழினைக் கைமாற்றைப் பேணியே உதவி செய்வோர்
அறமுளாரல்லர்; நித்தன் அருட்குமே அருகரல்லர்;
திறவலக் காஞ்செய் நன்றைத் திகழிடக் காங்காணுமல்
வறியர்பாத் திரமறிந்து வழங்குவோர் மாட்சியோரே. (1)

மக்கள்தம் பொறையைத் தாங்கு மகிக்கும், அன்னரைக் காக்க
மிக்கநீர் பொழியாநின்ற விண்முகிலினுக்கும், செய்யத்
தக்கவோர் எதிர்நன்றுண்டோ? சமயத்தோர் பயனும் வேண்டாது
ஒக்கவே செய்த நன்றி உலகினும் பெரிதாமாதோ (நீதிநூல்) (2)

வான்கண்ட மென்பயிர்போல் வள்ளியரைக் கண்டவுயிர்
தான்கொண் டுவக்குந் தளிர்த்து.

வள்ளல்களைக் காணின் எவரும் உள்ள மகிழ்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1058. எள்ளா திரவலரை ஏன்றுமுன் சந்திமான்
கொள்ளப் புரந்தான் குமரேசா — உள்ளி
இரப்பாரை யில்லாயின் ஈர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று. (அ)

இ—ள்.

குமரேசா! சந்திமான் ஏன் இரவலரை என்றும் உவந்து போற்றினன்? எனின், இரப்பாரை இல்லாயின் ஈர்ங்கண் மா ஞாலம் மரப்பாவை சென்று வந்தற்று என்க.

இது, இரப்பாளருண்மையே இவ்வுலகிற்கோர் சிறப்பாமென்கின்றது. கொள்ளப் புரந்தான் என்றது எல்லாரும் உள்ள மகிழ்ந்து உயர்ந்து கொள்ளும்படி அவ்வள்ளல் புரந்து நின்றமை கருதி.

ஈர்ங்கண்மா என்றது குளிர்ந்த இடத்தையுடைய பெரிய என்றபடி. ஞாலத்திற்கு இவ் அடை கொடுத்தது கடல் புடை தழுவியும், கீழ் நீர் மேல்நீர்களால் என்றும் இணைந்துமிருக்கும் அதன் குணங்கருதி. எவ்வளவு குளிர்ந்ததாயிருப்பினும் இரப்பாரை யில்லையாயின் இவ்வுலகம் இழிந்ததாம் என்பது குறிப்பு.

ஞாலம் - என்பது ஆகுபெயராய் அதிலுள்ள உயிர்களை உணர்த்தி நின்றது. மரப்பாவை = மரத்தால் செய்தபாவை. சென்று வந்தற்று = உலாவித் திரிவது போலாம்.

மேல், இரவலரை இகழ்நதெள்ளலாகா தென்றார்; இதில், அவர் இல்லையாயின் இவ்வுலகம் நல்லதா யிரா தென்கின்றார்.

குளிர்ந்த இடத்தையுடைய பெரிய இவ்வுலகம் இரப்பாரை உடைத்தாயிராவிடின் மரப்பாவை இயங்கி நிற்பது போல் இழிந்து நிற்கும் என்பதாம்.

நீர் வளம் நில வளங்களால் சிறந்து எவ்வளவு உயர்ந்திருந்தாலும் இரவலர் இலராயின் இவ்வுலகம் பொலிவிழந்து படும்; என்னை? "இரப்பார்க்கு ஒன்று ஈவார் மேல் நிற்கும் புகழ்" என்றபடி ஈதலானே புகழ் புண்ணியங்கள் உளவாம்; அவை இருமை இன்பங்களையும் இனிது பயக்கும்; இங்ஙனம் இன்ப நலங்களுக்கு ஏதுவாயுள்ள ஈகை நிலைக்குக் கொழு கொம்பாய் நின்று இரப்போர் அதனை வளர்ப்பர்; அவர் இல்லையாயின் ஈதல் என்பது இல்லா தொழியும்; ஒழியவே உயர் புகழ் ஒன்றுமின்றி, உண்டு களித்து உயிர்ப் பொம்மைகளைப் போல் உலாவித் திரிந்து ஒரு பயனும் காணாது மக்கள் ஒழிந்துபோவர் ஆதலால் "இரப்பார் இல்லையாயின் ஞாலம் மரப்பாவை சென்று வந்தற்று" என்றார். எங்கு இரப்பவரில்லையோ அங்குள்ள மக்கள் ஈதலின்பத்தை யிழந்து இழிந்திருப்பர் என்பதாம்.

"உடையோர் ஈதலும், இல்லோர் இரததலும்,
கடவதன்மையிற் கையற வுடைத்து" (புறம்)

எனத் தெய்வ வுலகமும்,

"ஈவாரும் கொள்வாரும் இல்லாத வானத்தே
வாழ்வாரே வன்கணவர்" எனத் தேவரும், இரப்பாரை எய்தாமையால் இகழப் பட்டிருத்தல் ஈண்டெண்ணத் தக்கது.

"உடுப்போர்க்கு உடுக்குந்துகில்களால், உண்போர்க்கு உண்ணும் பொருள்களால், தொடுப்போர்க்கு எடுக்கு மலர்களால், அணிவோர்கரு அணியும் சுடரிழையால், அடுப்போர்க்கு அடுக்கு

மனைகளால், குறை பாடுடைய தன்றது தான், கொடுப்போர்க்கு இரப்பாரில்லாத குறை ஒன்றுளது கூறுங்கால்" என்பதும் காண்க.

ஈகைக்கு நிலைக்களனாய் நின்று இரப்பாளர் இவ்வுலகிற்கு மிக்க சிறப்பினை விளைப்பராதலால் அவ்வுண்மையை யூன்றி யுணர்ந்து அந் நன்மையாளரை யாண்டும் நயந்து பேண வேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

உயர்ந்த மதிமான்கள் இரவலரை உவந்து பேணுவர் என்பது கருத்து. இவ்வுண்மை சந்திமான்பால் உணரப்படும்.

## கதை.

சந்திமான் என்பவன் இற்றைக்கு மூவாயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னிருந்தவன். மன்னவர் மன்னன். இவன் மதி நலமும், மன நலமும் மாண்புறப் பெற்றவன். விரத வொழுக்கங்களால் உயர் நல முற்றவன். பேரருளாளனாயினும் போரில் நேர் ஒருவர் உருவண்ணம் ஆரமர் புரியும் அடல் மிக வுடையவன். அறிவிலும் திருவிலும் அழகிலும் சிறந்து இவன் அரசு புரிந்தான். செல்வரினும் நல்குரவாளரையே நயந்து பேணி நன்கு மதித்து நண்பாற்றி வந்தான். ஈகலின் கண்ணேயே காதல்கொண்டு என்றும் இரவலரை இவன் எதிர்பார்த்திருந்தான்.

"அற்றவர் வருத்த நீக்கி ஆருயிர் கொண்டு நிற்கும்
துற்றவிழ் தல் செய்பொற்றுறக்கத்திற்கு வணியாகும்"

என்னும் இனிய வுண்மைக்குக் காணியாளனாய் இவன் கருத நின்றான். இரப்பவரை எவரேனும் இளித்துரைத்தால் அவரை ஒறுத்தடக்கி யாண்டும் கொடுத்துவந்தானாதலால் அடுத்தவிரவலரையும் எடுத்தாதரிக்கும் அருள் வள்ளல் என உலக மெங்கணும் உவந்து புகழ இவன் உயர்ந்து நின்றான். இழிந்த பொருள்களை ஏற்று நின்று, சிறந்த புண்ணியங்களைச் சேர நல்கும் திருவுடையாரென இரவலரைக் குறித்து ஒருமுறை தனது அரசவையில் இவன் உரை செய்துள்ளான். யாதும் எள்ளாது ஈந்து வந்தானாதலால் பின்பு வள்ளல்கள் வரிசையில் இவன் சேர்ந்து நின்றான்.

"அந்திமான் சிசுபாலன் அக்குரன் வக்கிரன்
சந்திமான் கன்னன் சந்தன் இடைவள்ளல்" (பிங்கலந்தை)

என இங்ஙனம் உயர் வள்ளலாய் நின்று இவன் உயிர்களை ஓம்பி வருங்கால் இவ்வுலகம் பெருவளமுடையதாய் உயர் நிலையிலிருந்தது. அறம் பொருளின்பங்களை நிரம்பப் பெற்று நெடிது வாழ்ந்திருந்த இவன் காலகதியால் முடிவடைந்தான். அடையவே அருமை தெரிந்து உதவுவாரில்லாமையால் இரவலரெல்லாரும் இன்றி மறைந்தார். மறையவே ஈதலால் எய்தும் புகழ் புண்ணியங்களெல்லாம் பொலிந்து தோன்றாமல் ஒழிந்து போயின. அதன் பின் ஒரு நலமும் காணாமல் தந்நலமே கருதி உண்டு களித்து விலங்கினங்கள் போல் இழிந்த நிலையில் மக்கள் உழன்று திரிந்தார். அதனால் நடைப்பிணங்களை யுடைய புறங்காடுபோல் இவ்வுலகம் கடைப்பட்டிருந்தது. "இரப்பாரை இல்லாயின் ஈர்ங் கண் மாஞாலம், மரப்பாவை சென்று வந்தற்று" என்னும் உண்மையை இவன்பின் உலகம் உணர்ந்து நின்றது.

"அருந்தவே கூழும், பூண ஆடையும், வீடு மின்றி
வருந்துவோர் எண்ணிலார் நம் மருங்குளா ரெனவறிந்தும்
விருந்திடாய், மணிமாடத்து மேவிநீ ஒருவன் வாழ்ப்
பொருந்தினை, மனமே மக்கட் போலிநீ விலங்காணையே! (க)

ஏவல் செய்வோர்க்குக் கூலி இடைத்துகி லுணவாம்; யாமோர்
காவலனெனினும் சோறு கலையன்றி ஒன்றுங்காணோம்;
ஆவலாய்ப்பொருளையீட்டி அயலவர்க் காச்சுமந்தோம்
ஈவதை மேற்கொண்டே மேல் இணையில் வீடடைவோ நெஞ்சே.

சாந்தமார் வறியர் போலத் தற்பரன் வருவான்; தாவென்று
ஏந்துகை வீடு கொள்ளேன் றேந்துகையாம்; அக்கையின்
ஈந்த பொன் விலைபோல் வீட்டுக்கிட்டபொன்னும்; அன்னைக்
காய்ந்திலை என்பார் வேண்டோம் கதியென்பார் போலுமாதோ"

இரப்பாரின் அருமையும், அவருடைமையால் இவ்வுலகம் அடைந்திருக்கும் பெருமையும், இவற்றான் இனிதறியலாகும்.

**கன்றுகண் டோங்குங் கறவை; இரவலரை**
**ஒன்றிநின் றோங்கு முலகு.**

உலகிற்கு இரவலர் உயிராதாரமென்பது இதனால் கூறப்பட்டது.

1059. வாடி மன்னன் மள்ளுவர்கோன் வந்திரந்து மேவினரால்
கூடினர்சீர் என்னே குமரேசா — நாடியே
ஈவார்க ணென்னுண்டாந் தோற்றம் இரந்துகோள்
மேவார் இலாஅக் கடை. (௯)

இ—ள்.

குமரேசா! ஒரு தோற்றமுமின்றி நின்ற வாடி மன்னனும், மள்ளுவ நாடனும் இரவலர் மேவிய பின் ஏன் உயர்ந்து தோன்றினார்? எனின், இரந்துகோள் மேவார் இலாக்கடை ஈவார்கண் தோற்றம் என் உண்டாம்? என்க.

வாடி மன்னன் என்றது கன்னி வாடி சமீன்தாரை. மள்ளுவர்கோன் என்றது சந்திரன் சுவர்க்கியை.

இது, இரப்பவர் இல்லையாயின் புரப்பவர் இல்லை என்கின்றது.

ஈவார்கண் = ஈகையையுடைய உபகாரிகளிடத்து. கண் ஏழனுருபு. தோற்றம் என்றது புகழினை. தன்னையுடையானை எங்குந் தோன்றச்செய்யுமாதலால் புகழ், தோற்றம் என நின்றது என் உண்டாம்? என்றது யாதும் இல்லை என்றபடி.

இரந்துகோள் மேவார் = இரந்து கோடலை விரும்பி யடைவார். மேவுவார் என்பது மேவார் என நின்றது. மேவல் = விரும்பல், பொருந்தல். "கொள்ளை மேவலை" (புறம்) "புதுவோர் மேவலன்" (ஐங்குறுநூறு) "அவ்வினை மேவலை யாகலின்" (பதிற்றுப்பத்து) "ஒருமைவினை மேவு முள்ளத்தினை" (பரிபாடல்) "மேவாதவரில்லை; மேவினரும் இல்லை" (இராமாயணம்) இவற்றுள் மேவல் உணர்த்தி நிற்றல் காண்க. இலாக்கடை = இல்லாத இடத்து. அளபெடை இசை நிறைக்க வந்தது.

மேல், இரப்பவரிலராயின் இவ்வுலகம் சிறப்புறு தென்றார்; இதில், அவர் மேவாரேல் புரப்பவர் யாவரும் புகழடையாது போவரென்கின்றார்.

இரந்து கொள்ளுதலை விழைந்து செல்வார் இல்லையாயின் ஈதலை விரும்பிப் புரந்து நிற்பவர் யாதொரு புகழும் கொள்ளாது போயொழிவர் என்பதாம். என்றும் பொன்றாத இயல்பினதாய

புகழினை ஈதல்ஒன்றே இனிது பயக்கும்; அத்தகைய ஈகையை யுடைய வள்ளியோர் உயர்ந்த திருவோடு சிறந்திருந்தாலும் அவரிடம் வந்து இரந்து கொள்ளுவார் இல்லையாயின் அவரது ஈதல் வன்மை யாதும் வெளிபபடாது; ஆகவே அதன் பயனாய புகழ் சிறிதும் உண்டாகாது ஆதலால் "ஈவார்கண் தோற்றம் என் உண்டாம?" என எதிர் முகமாக வினவி நிறுத்தி அவர்க்கு யாதும் இல்லை என்பதை இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

அழகும் இளமையும் அமைந்த கணவன் ஆண்மையுடையனாயிருந்தாலும் மனைவி யில்லையாயின் அவன் மகப்பேறடையான்; அதுபோல் கொடையாளர் உயர் திருவமைந்து அருள் நலம் கனிந்து இனியராயிருந்தாலும் இரவலர் இலராயின் அவர் ஒரு புகழும் எய்தார் என்க.

"வள்ளியோர் எவ்வளவு வாய்ப்புற் றிருந்தாலும்
கொள்ளுவோர் இன்றெனில்சீர் கூடாதே — பிள்ளைதான்
உண்டோ மனைவி யுறுவிடத்தே? பேராண்மை
கொண்டவனை யாளும் கூறு" என்பதுங் காண்க.

அழிந்துபோகு மியல்பினதாய இழிந்த பொருளை ஏற்றுக் கொண்டு என்றும் அழியாத உயர்ந்த புகழை இரவலர் உதவுகின்றாராதலால் அவ்வுண்மையை யூன்றி நோக்கி அவரை யாண்டும் உவந்து போற்றவேண்டும் என்பது கருத்து.

எவ்வகையிலும் யாதும் இரவலரை இகழ்ந்து தூற்றலாகாதென்பது குறிப்பு.

"இரவலர்தம்மை எள்ளும் ஏழைகாள்! இபம்பக்கேளீர்,
நரக மோக்கத்தை விற்க நண்ணிய வணிகர் அன்னார்
பரகதி அவரைத்தாங்கும் பண்பினர்க்கு ஈவார்; அள்ளல்
கரவுளார்க்கிவர்; என்னின் அவர் கதை கழறல் என்னே"

என்பதும் எண்ணெண்ணத்தக்கது. இரவோர் தன்மையும், அவர் உயிர்கட் காற்றி வரும் நன்மையும் இதனால் இனிதறியலாகும். இரந்தவர்க்கு அருள்வார் சிறந்துயர்ந்தெழுவார் என்க.

"ஊக்கமும் வலியும் வேட்கையும் விழைவும்
மூப்படர்ந் தழுக்க முடங்கினீரும்,
யாப்பணி நன்னலம் தொலைய அசாஅய்க்
தீப்பிணி யுற்றுத் தீராதீரும்,
இடுமணல் முற்றத்து இன்னியம் கறங்கக்
குடுமிக் கூந்தலுள் நறுநெய் நீவி
நல்லவை நாப்பட் பல்சிறப் பயர்ந்து
கொண்டோன் துறந்து கண்கவிழ்ந் தொழுக
வாழ்தல் ஆற்றுச் சால்பிணி மகளிரும்,
நிறைப்பெருங் கோலத்து நெறிமையின் வழாஅ
உறுப்புக் குறைபட்டு ருட்படப் பிறரும்,
வந்தனிர் குறுகி நுங்குறை யுரைத்துத்
துன்ப நீங்க இன்பம் பயப்ப
வேண்டின கொள்ளப் பெறுதிர் நீர்" (பெருங்கதை.)

என உதயணகுமரன் உரைத்து நின்றதுபோல் இரவலர்க்கு ஏங்கிப் புரவலர் இசைத்து நிற்பர் என்க.

இரவலரை உவந்து பேணினவரே புரவலர் என உயர்ந்து விளங்குவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மையை மலையாண்டியப்பிள்ளையன் பாலும், சந்திரன்சுவர்க்கி கண்ணும் உணரப்படும்.

## கதை.

மலையாண்டியப்பையன் என்பவன் பாண்டி நாட்டிலே கன்னிவாடியிலிருந்தவன். சமீன்தாரன். இவனது காலம் இற்றைக்கு நூற்றிருபது ஆண்டுகட்கு முன்னராகும். இவனுடைய தந்தை பெயர் நாகிங்கையன். இவன் குறுநில மன்னருயினும் பெருங் கொடையாளன். அக்காலத்திலிருந்த சிற்றரசர்களுக் குள் கல்வி யறிவிலும் சொல்லுறுதியிலும் இவன் சிறந்திருந் தான். இருந்தும் இவனது புகழ் எங்கும் பரந்து தோன்றாமல் மறைந்திருந்தது. இங்ஙனம் இருந்த இவன்பால் **சங்கரமூர்த் திக்கவிராயர்** என்பவர் ஒருவர் வந்தார். அவர் கோவை ஒன்று

பாடிப் பல சிற்றரசர்களிடத்தும் சென்று ஒரு பயனும் படாமல் முடிவில் இவனை மேவி யடைந்தார். இவன் அதனை விழைந்து கேட்டுச் சிறந்த பொருள்கள் பல அவர்க்கு உவந்து கொடுத்து உடனிருக்கவைத்து நெடு நாளாக உபசரித்து வந்தான். இவ னது பணிவுடைமையையும், கொடையருமையையும் வியந்து அவர் பெரிது மகிழ்ந்தார். செருக்கு மிகுந்து சிறிது மிரக்கமு படு உலோபிகளாயுள்ள சில பேர்களை வெறுத்து இவனது சீரினை யெங்கும் சிறக்கவுரைத்தார். அவர் உரைத்தவற்றுள் ஒன்று அடியில் வருவது காண்க.

“கல்லைக்குஞ்சிந்தை முட்டாள் துரைகாள்! கொடைகற்கவென்றால்,
வல்லக்கவார்குல நாரசிங்கையன் வரத்துதித்த
செல்லக்குமாரன் மலையாண்டியப்பைய சிங்கத்துக்குப்
பல்லக்குக் கொம்பு சுமந்திரென்றால்புத்தி பாலிக்குமே”

இரவலரெவரும் இன்னவாறு உவந்து போற்ற இவன் உயர்ந்து நின்றான். இங்ஙனம் நின்றிருந்த இவன் சிறிது காலங் கழிந்தபின் இறந்து போனான். அவ்வமயம் அப்புலவர் மிக வருந்தி யழுதார். இவனது குணங்களை நினைந்துநினைந்து அவர் புலம்பியதைக் கேட்டுப் பலரும் உளங் கரைந்து நின்றார்.

“ஏமா, உனக்கென்னஞாயம் அந்தோ! எம் இறைவனெனும்
ராமவ தாரன்மலையாண்டி யப்பைய ராச னுயிர்
போமாறிடர் செய்யலாமா? பொன்மேனி பொரிதழலில்
வேமா? இதுவென்ன காரணங்காண் இந்த மேதினிக்கே. (க)

மலைமீதுவைத்த விளக்காம் வராக கிரியருகே
சிலையேந்தும் எங்கள் மலையாண்டியப்பைய சிங்கபுயர்
தலையேந்து வாணரைக் கண்டால் எழுந்து கைநீட்டி என்றன்
தலைமேலிருக்கத் தகுமென்ற வாயுந் தழலுண்டதே” (உ)

இங்ஙனம் நெஞ்சம் நெக்குருகி நெடிது புலம்பிக் கடிதின் கன்று இவ்வுலக நிலைமை வெறுத்து அவர் ஒடுங்கி யிருந்தார். அவர் போற்றி நின்றமையால் இவன் கீர்த்தி பெங்கும் கிளர்ந்து நின்றது. இரவலராலேதான் புரவலர் புகழோடு தோன்றி நிற்ப ரென்பதை எவரும் இவன்பால் இனிதுணர்ந்து நின்றார்.

## கதை 2.

சந்திரன் சுவர்க்கி என்பவன் சோழ மண்டலத்தின் வட பாலிருந்து அரசு புரிந்தவன். இவன் ஆண்ட நிலப்பகுதிக்கு மன்னுவேதயம் என்று பெயர். அதனால் இவன் மன்னுவ நாடன் என நின்றான். இவன் நல்ல நீதிமான். பேரழகன். குளிர்ந்த நோக்கும், மலர்ந்த முகமும், கனிந்த சொல்லும் வாய்ந்து என்றும் இனிய நீர்மையனாய் எவர்க்கும் இதம் புரிந்து சிறந்த போகியாய் உயர்ந்திருந்தானாதலால் தனக்கு இசைந்த பெயர்க்குத் தகுந்த பொருளாய் இவன் அமைந்து நின்றான். நீர்மையில் சந்திரனை யும், சீர்மையில் இந்திரனையும் ஒத்திருந்தமையால் சந்திரன் சுவர்க்கி என்பது இவனுக்குச் சாலப் பொருந்துமென யாவரும் உவந்து சாற்றி நின்றார். இவன் அருளும் ஈகையும் அமைந்த நெஞ்சினன். ஒருநாள் இவன் பால் புகழேந்திப் புலவர் வந்தார். ஒட்டக்கூத்தன் வயப்பட்டுச் சோழன் ஒருதலைப் பாரமாயுளனு சாய்ந்திருந்தானாதலால் அவனை இகந்து நீங்கி இன்னல் பல எய்தி இறுதியில் வந்து அப்புலவர் திலகர் இவனை யடைந்து நின்றார். அவரை உவந்துபசரித்து உடனிருக்கச் செய்து அரிய பொருள்கள் பல உரிமையினுதவி ஆதரித்து வந்தான். வருங் கால் நள சரிதத்தை ஒரு காவியமாகப் பாடித் தரும்படி அவரை இவன் நயந்து வேண்டினான். அவ்வாறே அவர் பாடி முடித்து இவன் அவையில் அரங்கேற்றினார். அந்நூல் நளவெண்பா என்று இது பொழுது வழங்கப் படுகின்றது. அதன் சொற் சுவை பொருட் சுவைகளை நோக்கி இம்மன்னன் முதலாக அங்கு மன்னியிருந்தவ ரெல்லாரும் மகிழ்ச்சிமீக் கூர்ந்தார். அக்கவிஞர் பெருமானை உயர்ந்த சிவிகையில் வைத்து ஊர்வலம் புரிந்து சிறந்த வரிசைகள் தந்து இவன் சீர் பல செய்தான். இவனது பெருந்தன்மையை நினைந்த போதெல்லாம் அவர் உளங்கரைந்து நின்றார். தமது நூலில் இடையிடையே இவனைப் புகழ்ந்து கூறியுள்ளார்.

“மாமனுநூல் வாழ வருசந்திரன் சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான் — காமருபூந்
தாரான் முரனைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி.” (நளவெண்பா)

களனது இராசதானியாகிய மாணிந்த நகரம் இவனது நகரமாகிய முறையை போலிருந்தது எனவும், இவன் மனுநீதி வாழ வந்த மன்னவன் எனவும் இதில் அவர் உரைத்திருத்தல் காண்க. பாம்பின் வாயகப்பட்ட தமயந்தியை நீக்கி வேடன் பாதுகாத்தது, கலியைப்போக்கி உலகத்தை இவன் காத்தது போலிருந்ததென ஏத்தி நின்றார்.

"சங்க நிதிபோல் தருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலக மீட்டாற்போல்—மங்கையைவெம்
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த
காம்பின்வாய் வில்வேடன் கண்டு."

இவனை யடைந்தவரைப் பசி நீங்கியதுபோல் களனைக் கலி நீங்கியது என்றார்.

"வண்டார் வளவயல் சூழ் மன்ளுநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன் சுவர்க்கி — கொண்டாடும்
பாவலன்பால் நின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன் பால் நின்ற கலி"

இவனைச் சங்க நிதியோடு ஒப்பவைத்து, எங்கோமான் என்று உரிமை தோன்ற வுரைத்து, பாவலன் என ஒருமையிற் குறித்திருத்தலால் இவன்பால் அவர் கொண்டிருந்த தனியார்வமுடைமை இனிது புலனும். இன்னவாறு உள்ளமுருகி இவ் வள்ளலை இடங்கள் தோறும் அவர் உவந்து துதித்துள்ளார். அதனல் இவன் புகழ் உலகமெங்கும் பரவி நின்றது. யாதும் தோன்ருதிருந்த இவன் அவர் மேவியடைந்தபின் யாண்டும் உயர்ந்து தோன்றி இன்றும் புகழோடுபோடு சிறந்து நிற்கின்ருன். இரந்து கொள்ளுதலை விரும்பி நிற்பவரை யடைந்த போது தான் ஈவார் சிறந்து தோன்றுவர் என்பதை உலகம் இவர்பாலுணர்ந்து நின்றது.

"குறிப்பினுணர்ந்து மொழியாமுன் கொடுப்பார் முன்னின்றிரந்துயிரைத்
துறப்பதின்றிச் சிலர்வாழ்வர் தாய்மைமானம் கெடாமையினல்;
இறப்பவுயர்ந்த கொடைமையரே யெனினும் இரப்பாரில்லாக்கால்
சிறப்பென் பெறுவர்? அவரானே சிறப்பர்; கரவாதருள் மைந்தா"
(விநாயகபுராணம்)

"உடைப்பெரும் பொருளினை உலகில் ஊதியம்
கிடைப்பதற்கு அளித்தலின் கிளர் நிரப்பினால்
அடுத்துவந் தேற்குநர்க்கு ஆர்வ மீதுறக்
கொடுக்கில் ஒன்றே பலகோடி யாகு மால். (க)

"உரவுநீர்க் கருங்கடல் உடுத்த மாநிலத்து
அருளுடன் இம்மையின் அளித்த வான்பொருள்
மருவிய மறுமையில் வழங்கு மான்மையால்
இரவலர் தமரினும் இனியராவரே" (நைடதம்) (உ)

இரப்பாளர் அருமையும், அவர் பிறர்க்கு ஈயும் பெருமையும் இவற்றான் இனிதறியலாகும்.

ஈதலின்பம் ஈவார் இரவோர்; அவரிலரேல்
ஓதபுகழ் உண்டோ வுயிர்க்கு.

இரப்பவரிலரேல் ஈவார் சிறப்புறார் என்பது இதனால் கூறப்பட்டது.

1060. எள்ளிநின்ற மோசியார் ஏனோ வெகுளியொன்றுங்
கொள்ளா திருந்தார் குமரேசா — நள்ளி
இரப்பான் வெகுளாமை வேண்டும் நிரப்பிடும்பை
தானேயுஞ் சாலுங் கரி. (ய)

இ—ள்.

குமரேசா! இரந்து சென்ற மோசிகீரனார் ஏன் யாண்டும் வெகுளா திருந்தார்? எனின், இரப்பான் வெகுளாமை வேண்டும்; நிரப்பு இடும்பை தானேயும் கரி சாலும் என்க.

இது, இரப்பவனுக்கு வேண்டியதோர் இயல்பு கூறுகின்றது.

வெகுளி கொள்ளா திருந்தார் என்றது யாதும் சினவாது யாண்டும் அருளுடையரா யமைந்திருந்தமை கருதி.

கரி = சான்று. சாலும் = போதும். கரிசாலும் என்றது வேறு சாட்சி வேண்டாம்; அதுவே போதும் என்றபடி.

தானேயும் என்பதில் உம்மை வேறு சான்றுகளும் உள வென்பது தோன்ற நின்றது. இது, எச்ச வும்மை.

இரப்பாளன் கோபங் கொள்ளலாகா தென்பதற்கு ஏதுவை எடுத்துக்காட்டி இதில் உணர்த்தியிருக்கும் அழகை ஊன்றிப் பார்க்க. தாமே வலிந்துபோய்ப் பிறரிடம் இரந்துகொண்டு பின்பு அவரைச் சினந்து கொள்ளுதல் தகுதியன்றென்க.

"கால்வீழ்ந்து நம்மைக் கவிபாடச் சொன்னுேமோ
மேல்வீழ்ந்து நாமே விளம்பினேம் — நூலறிந்து
தந்தக்கால் தந்தான் தராக்கால் நமதுமனம்
நொந்தக்கால் என்னுகுமோ" என்பதும் காண்க.

தனது நிலைமையை யுணர்ந்து ஒடுங்க வேண்டுமேயன்றிப் பிறரை இரவலன் நோகலாகா தென்றபடி.

மேல், இரப்பவர் இருப்பது ஈவார்க்கோர் சிறப்பாம் என்றார் இதில், அவர் பொறுமையுடையராயிருக்கவேண்டும் என்கின்றார்.

இரந்து செல்பவன் வெகுளியிலனுயிருத்தல் வேண்டும்; தனது வறுமைத் துன்பமே அதற்கு அமையும் சான்று என்பதாம்.

வறுமையுடையவன் பொருள் பெற விரும்பிப் பிறரிடம் இரந்து சென்றபொழுது அவர் உடனே உவந்து கொடாராயின் அவன் சினந்துகொள்ள நேருமாதலால் அவ்வாறு செய்யலாகா தென்பார் "இரப்பான் வெகுளாமை வேண்டும்" என்றார்.

அங்ஙனம் அமைந்திருக்க வேண்டும் என்பதற்கு வேறு சிறந்த காரணங்கள் எடுத்துக்காட்ட வேண்டா; அவன் பட்டிருக்கும் வறுமையே போதுமானது; அதனைச் சிறிது ஊன்றி நோக்கினுல் பொருள் அடைதலின் அருமையும், ஒரோவழி அடைந்தவன் வரவறிந்து அதனைப் பாதுகாக்கவேண்டிய உரிமையும், அது கடிது தேயு முறைமையும், நெடிதுமாயு நிலைமையும் முதலாக அதன் இயல்புகள் யாவும் எளிது தெளிவாம்; ஆகவே அவ்வுணர்ச்சி உறுசினம் ஒழித்து உள்ளடங்கி நிற்கச் செய்யுமாதலால் அவ் வறிய நிலையை ஓர்ந்து கொள்க என்பார் "நிரப்பிடும்பை தானேயும் கரி சாலும்" என்றார். நிரப்பு = வறுமை. இல்லாது இரப்பவனுக்குக் கோபம் ஒல்லாது என்பது குறிப்பு.

ஒருவன் இரவு செய்யத் துணியின் இடையூறுகளும், அவமதிப்புகளும், இன்னல்களும் இடையறாது தொடர்ந்து வருமாதலால் அவற்றையெல்லாம் பொறுத்துக்கொண்டு அவன் அமைதியோடு இருக்கவேண்டும் என்பது கருத்து.

"தேயாத செருப்பும் ஒருபயலும் வேண்டும்; சென்றிருக்க இடம் வேண்டும்; திரியவென்றால், ஓயாத கால் வேண்டும்; உண்ணும் சோற்றில் உருசிகெட்ட நாவேண்டும்; உலுத்தர் தம்மைக், காயாத மனம் வேண்டும்; பொறுமை வேண்டும்; கசடருக்கு வசை யுரைத்துக் காட்டவேண்டும்; தாயாகப் புலவருக்கிதத‌னை யுண்டானால் தரணி யெங்கும் சஞ்சரிக்கத்தகுங் கண்டீரே" எனப் பண்டொரு புலவர் இரவலர்க்கு வேண்டிய இயல்பு கூறியுள்ளமை ஈண்டெண்ணத் தக்கது. அடுத்துவரும் இரவச்சத்துக்கு இந்த அடிகோலியபடியாம்.

இரப்பினை மேற்கொண்டவர் வெகுளியைக் கைக்கொள்ளலாகாதென்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மோசிகீரனார் பால் உணரப்படும்.

## கதை.

மோசிகீரனார் என்பவர் பாண்டிநாட்டிலிருந்தவர். பல கலைகளையும் வழுவறத் தெளிந்தவர். பெருந் தன்மையாளர். யாவர் மாட்டும் இரக்கமும் பணிவும் இன்சொல்லு முடையவர். உறுதி உண்மைகளை எவரும் எளிதிலுணரும்படி தெளிவுற வுணர்த்தும் திறல் மிகப் பெற்றவர். நெல்லினும் நீரினும் உயிர்கட்கு அரசன் உயிராதாரமாயுள்ளான் என உலகமறிய ஒருமுறை இவர் உணர்த்தியுள்ளார். சிறந்த புலமையோடு உயர்ந்திருந்தும் பரிசில் கருதி எவரிடமும் செல்லாது இவர் இனிது வாழ்ந்து வந்தார். வருங்கால் காலவேற்றுமையால் வறுமைமீக் கூர்ந்தார். அறவுரைகளை மக்கள் செவியில் வித்தி அதன் பயனாய் வரும் பரிசிற் பொருள்கள் அரசர்க்குத் திறை வுரிமைகள் போல் புலவர்க்குக் குலவுரிமைகளாமாதலால் அவற்றைக்கொள்ள விழைந்து கூர்ந்தெழுந்தார். கொண்கானங்கிழான் என்னும் குறுநில மன்னனை நாடிச் சென்றார். அவன் கல்வியருமை

தெரிந்தவனுயினும் செல்வச் செருக்குடையவன். அவனை யடைந்து சில பாடல்கள் பாடினர். அவன் உவந்து கேட்டானேயன்றி ஒன்றும் உதவவில்லை. கூறுமலே குறிப்பறிந்து தருவான் என்று சில நாள் தங்கி இவர் எதிர் பார்த்திருந்தார். அவன் யாதும் தரவேயில்லை தரகதெரிந்து இங்ஙனம் அவன் தராதிருந்தும் இவர் யாதும் வெகுளாமல் அமைதியோடு அவண் அடங்கியிருந்தார். ஒருநாள் தமது கருத்தை ஒரு கவியில் குறித்து அவன் காண விடுத்தார். அவ் அருமைப்பாடலை இதனடியில் காட்டுதும்; பொருளை ஆய்ந்து காண்க.

"திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்
அறியுநர்க காணின் வேட்கை நீக்குந்
தின்னீர் வினவுவர் மாந்தர்; அதுபோல்
அரசர் உழைபராகவும், புரை தபு
வள்ளியோர்ப் படர்குவர் புலவர்; அதனுல்
யானும், பெற்றது ஊதியம் பேறியாதென்னேன்;
உற்றனென் ஆதலின் உள்ளி வந்தனனே!
ஈயென இரத்தலோ அரிதே! நீயது
நல்கினும் நல்கா யாயினும் வெல்போர்
எறிபடைக் கோடா ஆண்மை அறுவைத்
தூவிரி கடுப்பத் துவன்றிமீமிசைத்
தண்பல இழிதரும் அருவி நின்
கொண்பெருங் கானம் பாடல் எனக்கு எளிதே" (புறம்)

முந்நீர் = கடல். அறுவை = ஆடை.

பெருகியிருக்கும் கடலருகே சென்றாலும் அதில் சிறிதும் நீர் பருகாது ஊற்றுநீர் எங்கேயுள்ளது? என்று வினவியறிந்து போய் வேட்கை தீர மக்கள் பருகி வருவர்; அதுபோல் பெருந்திருவுடைய அரசர் பலரிருப்பினும் அவரை விடுத்து வள்ளியோரையே புலவர் விரும்பிச் செல்வர்; அங்ஙனமே யான் இங்கு வந்துள்ளேன்; வறுமையுற்றேன் ஆதலால் நீ யாது கொடுத்தாலும் இகழ்ந்து சொல்லேன்; ஆயினும் இன்னது கொடு என்று என் வாய்திறந்து யாதும் கேளேன்; என இப் புல

வர் திலகர் இதில் உரைத்திருக்கும் அருமைகளை ஊன்றிப் பார்க்க. இதனால் இவரது மனப்பண்பும், மாண்பும் நன்கறியலாகும். வெகுளியின்றி யினிது மொழிந்த இவரது அறிவுரைகளைக் கேட்டு வியந்து மகிழ்ந்து பெரும் பொருளை அவன் விழைந்துகொடுத்து நயந்தனுப்பினன். "இரப்பான் வெகுளாமை வேண்டும்" என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

இரவினைமேற் கொண்டார் இழிசினங்கைக் கொள்ளின்
வரவொழிந்து வீழ்வர் வறிது.

இரவலர்க்கு வெகுளியாகாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

இரவினை மானங்கெடா வண்ணம் இடமறிந்து செய்க. இரந்துவேண்டிய பொருள் எளிதிலெய்துமாயின் அது மிக இன்பமாகும். கரத்தலில்லாரிடம் இரத்தல் நல்லது. அஃது ஈதல் போல இசை மிகப் பெறும். கரப்பின்மையே இரப்புண்மைக்குக் காரணமாகும். கரப்பில்லாரைக் காணின் நிரப்பிடும்பையெல்லாம் நில்லாதொழியும். எள்ளாதீயாரைப் புகழ்ந்து எல்லாரும் மகிழ்வர். இரப்பவர் இல்லையாயின் இவ்வுலகம் சிறப்புறாது. இரப்பவராலேதான் ஈவார் விளங்குவர். இரவலர் யாண்டும் வெகுளாதிருத்தல் வேண்டும் என்பதாம்.

௱௬-வது இரவு முற்றிற்று.

---

# 107-ம் அதிகாரம் இரவச்சம்.

அஃதாவது இரவிற்கு அஞ்சுதல். மானம் தீராவகை அமையுமாயின் இரவினையு மேற்கொண்டு உயிர் வாழலாமென முன்னர் அருளினார்; அங்ஙன மின்றி மானம் கெட நேருமாயின் அவ் இரப்பினை மனத்தினும் நினைக்கலாகாதென இதில் உணர்த்துகின்றார். இரவின் இயல்பு கூறிப்பின்னர் இரவாமையின் உயர்வு கூறுகின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது.

1061\. மாறு தருள்கண்ணன் மாட்டும் குசேலர்போய்க்
கூறுதேன் மீண்டார் குமரேசா—தேறிக்
கரவா துவந்தீயும் கண்ணன்னார் கண்ணும்
இரவாமை கோடி யுறும். (க)

இ—ள்.

குமரேசா! கரவாது அருளும் கண்ணனிடம் சென்றும் குசேலர் ஏன் இரவாது மீண்டார்? எனின், கரவாது உவந்து ஈயும் கண் அன்னார் கண்ணும் இரவாமை கோடி உறும் என்க.

இது, எவரிடத்தும் இரத்தலாகாதென்கின்றது. மாறாது அருள் கண்ணன் என்றது இல்லை என்னாது ஈயும் தண்ணளியாளனாய் அவன் இருந்தமை கருதி.

கண் அன்னார் = கண்போன்றவர். கண்ணை உவமை கூறியது உரிமையும் அருமையும் தோன்ற. "கண்போன்ற மாமன் மகள்" (சிந்தாமணி) "வலக்கணோர் முனிவன்" (பாரதம்) "கண்ணனன்னார் உயிரையன்னார்" (இராமாயணம்) இன்னவாறு வருவன காண்க.

கண்ணும் என்பதில் உம்மை அவர் தன்மை தோன்ற நின்றது. இது, உயர்வு சிறப்பும்மை. காலன்னார், கையன்னார் என வேறு கூறாது கண்ணைக் குறித்தது, உயிர்க்கு நெருங்கிய உரிமையாய்நிற்கும் அதன் ஒண்மை கருதி.

இரவாமை என்றும இனிது என்னாது "கோடி உறும்" என்றது அங்ஙனம இரந்து செல்வமெய்தி வாழ்தலினும் இரவாமல் நின்று நல்கூர்தல் கோடி பங்கு நன்று என்று அவ் வாழ்வோடு அளவு காணவேண்டியும், அஃதோர் பேருதியம் என்பதும் தோன்ற என்க.

உள்ளதை மறைக்காது உள்ளமுவந்து கொடுக்கும் உரிமையாளரிடத்தும் இரவாதிருத்தல் கோடிமடங்கு நல்லதென்பதாம்.

இதில் வைத்துள்ள படிமுறைகளின் உரிமை நிலைகளையூன்றி நோக்குக. கரவாமை முதலிய இயல் நலங்களமைந்த தகவுடையார் மாட்டும் இரவாகாதென்றதனால் கரத்தல், வெறுத்

தல், மறுத்தல்களுடைய் புறத்தவரிடத்து இரத்தல் பொல்லாது என்பது சொல்லவேண்டாவாயிற்று.

இரவு மிகவும் ஈனமானது; அதனை மேற்கொண்டால் மானங் கெட்டுப்போம்; என்றுகூற, அங்ஙனம் கெடாதபடி உரிமையோடு உவந்துதரும் அருளுடையாளரிடத்து இரவினைச் செய்யலாமன்றோ? என்பாரை நோக்கி புணர்த்தியுள்ளதாக இந்நூருக்கொண்டுள்ளமை காண்க.

எள் என்று சொல்லுமுன் எண்ணெயாக அளக்கும் இயல்புடையாரிடத்தும் இரந்துகொள்ளலாகாதென்றபடி. "தோழனோடும் ஏழைமை பேசேல்" என்றார் (ஔவையார்).

உள்ளன்போடு வள்ளன்மையுமுடைய உரிமையாளர் கண்ணும் இரவு செய்யலாகாதென்றதனால் அதன் இழிநிலை தெளிவாம்.

"கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணும்
இரவாது வாழ்வதாம் வாழ்க்கை!" (நாலடியார்).

இந்த ஈண்டெண்ணத்தக்கது. அடிகள் கருத்தை இந்த அடியொற்றி வந்துள்ளமை அறியலாகும்.

நல்லமாணிகள் உள்ளன்புடைய உரிமையாளரிடத்துங் கூட இரவு செய்யார் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை குசேலர்பால் உணரப்படும்.

## கதை.

குசேலர் ஞான சீலராய் நின்று இல்வாழ்க்கை புரிந்து வருங்கால் பொல்லாத வறுமையால் அல்லல் பல அடைந்தார். பலநாள் பட்டினி கிடந்தமையால் எலும்பு புறந்தோன்ற மெலிந்த உடலினராய் இவர் பொலிந்திருந்தார். இவர் புனைந்திருந்த உடை பல படக்கிழிந்திருந்ததாதலால் அதனைக் குறித்து அக்காலத்தவர் சிலேடையாக ஓர் புது மொழியினை வழங்கி நின்றனர். "சோமனுக்குத் தையல் இருபத்தேழு; ஐயர் சோமனுக்குத்தையல் கணக்கில்லை." என்னும் அப்பழமொழி இன்றும் புதுமொழியாகயாக நிலவி வருகின்றது. சோமன் = சந்திரன். தையல் என்றது அவன் மனைவியராகிய அசுவினி முதலிய இரு

பத்தெழுவரை. சோமன் என்பது உடையினையும் குறிக்கு மாதலால் இங்ஙனம் விநோதமாக இவர் உரையாட நின்றார். பார்த்தவரெவரும் பரிந்திரங்கும்படி இவர் குடும்ப வாழ்வு மிடிந் திருந்தது. பொருளில்லையாயினும் இருபத்தேழு மக்கள் இவர்க் குப் பிறந்திருந்தனர். அவ் இனிய மக்கள் பசித்துயரால் பதைப் பதைக் கண்டு இவருடைய அருமை மனைவியார் விழிநீர் சிந்தி மிகுதுய ரடைந்தார்.

'ஒருமகவுக் களித்திடும்போது ஒருமகவு கைநீட்டும்; உந்தி மேல் வீழ்ந் திருமகவுங்கைநீட்டும்; மும்மகவுங்கைநீட்டும்; என்செய்வாளால்?
பொருமியொரு மகவழுங்கண் பிசைந்தழுமற்றொரு மகவு புரண்டு வீழாய்
பெருநிலத்தில் கிடந்தழுமற்றொருமகவுஎங்ஙனம்சகிப்பாள்? பெரிதும்பாவம்;

அந்தோஎன்வயிற்றெழுந்த பசியடங்கிற்றில்லையென அழுமாலோர் சேய்;
சிந்தாத கஞ்சிவார்க்கிலை யெனக்கன்று யெனப்பொய் செப்பும் ஓர் சேய்;
முந்தார்வத்தொரு சேய்மிசையப்புகும் போதினில் ஒருசேய் முடுகியீர்ப்ப
நந்தாமற்றச்சேயும் எதிரீர்ப்பச் சிந்துதற்கு நயக்கும் ஓர்சேய்"

இந்த வண்ணம் நாளும் நாளும் அவர் படுந்துயரைச் சகிக்க மாட்டாமல் அவ்வுத்தமி ஒருநாள் வந்து இவர்முன் நின்று "எங்கேயாவது போய் இரந்து வந்தேனும் இவ் அருமைக் குழந் தைகளைப் புரந்தருள வேண்டும்" என உளங்கரைந்துரைத் தாள். அப் பரிவுரையைக் கேட்டவுடன் இவர் பரிந்து இரங்கி னர்; ஆயினும் இரந்துகோடலை இகழ்ந்து நின்றார். "இரத்தல் அந்தோ இழிவு இழிவு எந்த ஞான்றும்; இரந்து வாழ்தலினும் இறந்துபோதல் நன்று; எம்பெருமான் நம்மெல்லாரையும் இனிது புரந்தருள்வார்; நீ வருந்தாதே" என்று உணர்வுரைகள் பல இவர் உணர்த்தியருளினர். மக்கள் மறுக்கம் அவளை மிக மறு கச் செய்திருந்ததாதலால் இவர் யாது உரைத்தாலும் அமைந்து நில்லாமல் இரக்கத்தக்காரிடம் இரந்து வாழலாம என அவள் மொழிந்து நின்றாள். அவ்வமயம் இவர் உரைத்ததை ஈண்டுணா ரத்தக்கது. அடியில் வருவது காண்க.

"தெறுசிறப்புளோர் வாழ்ந்திடுசெல்வர்பாற் செல்வரேல் மதியார்கள்;
மறுவுறுத்தவமானமுமியற்றுவர்; மானமுள்ளவராயின்,
குறுகும்அவ்வவமானத்தாலுயிர்விடு கொள்கையில் தலைநிற்பார்;
நறுமலர்க்குழால்! ஆதலாலவரிடை நண்ணல் நன்றென எண்ணேல்"

என இன்னவாறு பல எடுத்துரைத்தும் முடிவில் கண்ணன் இடமாவது போய் வாருங்கள் என்று அத்தூயவள் தொழுது நின்றாள். அம் மூர்த்தி இளமையில் இவரோடு உடன் படித்த பள்ளித்தோழர்; இவர்பால் பேரன்புடையவர்; அதுபொழுது துவாரகையில் மன்னனாய் மன்னியிருந்தார்; ஆதலால் அவரைக் கண்டுவந்தால் தம் கலி நீங்கிப்போம் என அப் புண்ணியவதி விடாது புகன்று நின்றமையால் இவர் துணிந்தெழுந்து துவாரகையை நோக்கி நெடிது நடந்து கடிதடைந்து கண்ணனை வந்து கண்டார். இவரைக் கண்டவுடனே அப் பெருமானார் பெருமகிழ்ச்சியடைந்து அரியணையை விட்டு விரைந்தெழுந்து எதிரோடி வந்து மெய்யுறத்தழுவி ஆராக்காதலுடன் அழைத்து வந்து அருகிருத்தி விருந்துபசரித்தார். தமது அருமை மனைவியருடனமர்ந்து நின்று அவர் புரிந்த உபசாரங்கள் அளவிடலரியன. இருதினங்கள் கழிந்த பின்பு இவர் ஊருக்குத் திரும்ப நினைந்தார். அவரிடம் விடை பெற விழைந்து நின்றாரேயன்றி வாய்திறந்து ஒன்றும் கேட்கவில்லை. அவராகக் குறிப்பறிந்து ஏதேனும் கொடுத்துவிடுவர் என்று குறித்து நின்றார். இவர்க்குச் செல்வமுண்டாகும்படி தம் உள்ளத்தில் அவர் உள்ளி நின்றாரேயன்றி வெளிப்படையாக யாதும் கொடுக்கவில்லை. இவர் "நான் போய் வருகிறேன்" என்றார். அவர் "நல்லது" என்றார். மறுபடியும் சிறிது மறுகி நின்று "நான் போகிறேன்" என்றார். அவர் சரி என்றார். பின்னரும் திரும்பிப்பார்த்துப் "போய் வரட்டுமா?" என்றார். அவர் ஆகட்டும் என்றார். இவர் தயங்கி நடந்து வெளியே வந்தார். அவரும் உடன்வந்து போய்வாருங்கள் என்று முடிவாகப் புகன்று விடுத்தார். இவர் ஒன்றும் சொளாமல் ஊரைநோக்கி வெறுங்கையராய் விரைந்து மீண்டார். வறுமைதூண்ட வந்தும், இரவினையஞ்சி யாதும் சொளாமல் இனிதகன்றார். உள்ளமகிழ்ந்து அள்ளிக்கொடுக்கும் வள்ளலாகிய அவ்வுரிமையாளரிடத்தும் ஒன்றும் இரவாமல் இவர் உள்ளடங்கி வந்ததை நோக்கி அனைவரும் வியந்து நின்றார். இவரது மன நலத்தை மதித்துப் புகழ்ந்தார். "கரவாது உவந்து ஈயும்கண் அன்னார் கண்ணும் இரவாமைகோடியுறும்" என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார். விரிவைக் குசேலோபாக்கியானத்தில் காண்க.

தாவென்று நீபொன்னைத் தான்கேட்டாய், அப்பொழுதே
வாவென்ற சொல்லுடபோம் மானம்போம்—போவென்று
கூறுங் கொடுமொழியும் கூடுமே யாதுறினும்
ஏறுதே யாணடும இரவு. (தருமதீபிகை)

உரவோர் என்கை இரவா திருத்தல். (ஔவையார்)

அள்ளிநின் றன்பருவந் தார்வமுடன் தந்தாலும்
கொள்ளல் இளிவே கொளல்.

இரவாமை என்றும் இனிதென்பது இதனால் கூறப்பட்டது.

---

1062. பண்டிரந்து வாழ்தல் பழியென்றேன் நன்கணியார்
கொண்டமைந்து நின்றார் குமரேசா—ஒண்டி
இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான். (உ)

இ—ள்.

குமரேசா! இரந்து வாழ்தலை வெறுத்து நன்கணியார் ஏன் முயன்று நின்றார்? எனின், இரந்தும் உயிர் வாழ்தல் வேண்டின் உலகு இயற்றியான் பரந்து கெடுக என்க.

இது, இரந்து வாழ்தல் ஈனமென்கின்றது.

இரந்தும் என்பதில் உம்மை அதன் இழிவுதோன்ற நின்றது.

உலகு இயற்றியான் என்றது பிரமனை. படைத்தற்கடவுளாதலால் இங்ஙனம் குறிக்க நின்றான். இயற்றல் = செய்தல், உண்டுபண்ணல்.

பரந்து கெடுக = அலைந்து திரிந்து அலமந்து அழிக. கெடுக என்னும் ககரவீற்று வியங்கோள் வைதற் பொருளில் வந்தது. வேண்டின் கெடுக என்றது அவன் அங்ஙனம் வேண்டவில்லை என்பது தோன்ற நின்றது.

மேல், எவரிடத்தும் இரக்கலாகா தென்றார்; இதில், அங்ஙனம் இரந்து வாழ்தல் ஈனம் என்கின்றார்.

மக்கள் இரந்துகொண்டு உயிர் வாழ்தலை அயன் விரும்பிச் செய்திருப்பின் அவன் அலைந்து கெடவேண்டும் என்பதாம்.

இரத்தல் மிக இழிந்தது; அதனை யாதும் உவந்து கொள்ளாதீர், கொள்ளின் மானங்கெட்டு ஈனமடைவீர் என்று அடிகள் இனிதுரைப்ப, அதனையும ஒரு தொழிலாகப் பிரமன் படைத்திருக்கிறானே என்று இரப்பாளர் சிலர் எதிர்ந்துகேட்க அவரை நோக்கி உணர்த்தியதாக இதனை உணர்ந்து கொள்க.

இரத்தலானது தன்னைக் கைக்கொண்டவரை மானங் கெடுத்து ஈனப்படுத்திவிடும்; அத்தகைய இழிசெயலை ஒரு தொழிலாகத் தன் மக்களுக்கு உலகியற்றியான் இயற்றி இருப்பானாயின் அவன் சிசுவதை செய்த கொடுவினையாளன்போல் பழிமிகுந்து, பாவமடைந்து, அதன் பயனாக அவர்போல் இழிந்தலைந்து உளைந்துகெடக் கடவன் என வருந்தியுரைத்தபடியிது. இதனால் இரவின் கொடுமை இனிது புலனாம். இங்ஙனம் பிரமனை வயிறெரிந்து வைதது இரவின் தீமையை எண்ணி என்க. உயிர்கள் இரந்து வாழும்படி அதனை ஒரு தொழிலாக விதிக்கவில்லை என்னும் தெளிவினையுட்கொண்டு இவ்வண்ணம் துணிந்து கூறினார்.

இரப்பார் இல்லையாயின் இஞ்ஞாலம் மரப்பாவைபோல் மாண்பிழந்துபடும் என முன்னர் மொழிந்தார்; ஈண்டு அவ் இரப்பினைக் கனவிலும் கருதலாகாதெனக் கடுத்து மொழிகின்றாரே ஈதென்னை? எனின், "ஐயம் இட்டுண்" என்ற வண்ணம் அது ஈவாரை நோக்கியுரைத்தார்; "ஏற்பது இகழ்ச்சி" என்றபடி இது இரப்பாரைக் குறித்துக் கூறுகின்றாராதலால் மாறுபாடின்மையறிக. மானமழியாதபடி அமையுமாயின் ஆபத்து நியாயம்போல் ஒரோவழி ஒரு விதமாகத் தழுவி விடவேண்டுமே யன்றி அதுவே தொழிலாக இரவினைக் கைக்கொண்டு திரியலாகாதென்பது குறிப்பு.

உழவு வாணிக முதலிய தொழில்கள் பல இருப்பவும் அவற்றையெல்லாம் விடுத்து இரந்து வாழ்தல் மிகவும் ஈனமாகுமாதலால் அதில் இழிந்துபடாது கைசெய்து உயர்ந்துகொள்ள வேண்டுமென்பது கருத்து.

வருந்தி நின்று முயன்று வாழ்வரேயன்றி மேலோர் யாண்டும் இரந்து நில்லார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை நன்கணியார்பால் உணரப்படும்.

கதை.

நன்கணியார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தெழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலிருந்தவர். அறிவு நூல்களையும் கருவி நூல்களையும் நன்கு தெளிந்தவர். கணித நூற் புலமையில் எவரும் தமக்கு நிகரில்லாதவர். கோள்களின் நிலைகளைக் கூர்ந்து நோக்கி, வாழ்நாள் நிகழ்ச்சிகளை வழுவறவுணர்த்தி யாவருக்கும் அறநெறிகளை இவர் அறிவுறுத்தி வந்தார். திருந்திய பண்பும் அருந்தவ ஒழுக்கமும் அமையப் பெற்றவர். பிறவுயிர்கட்கு இதம புரிதலே தமது பிறவிப் பயனாகப் பேணி நின்றார். பிறந்த மக்கள் இறந்துபடுமுன் சிறந்த உறுதிகளை அடைந்து கொள்ள வேண்டுமென்று இவர் இரங்கியருளிய இன்னுரைகள் பல. ஒருமுறை இவ்வுலக நிலையைத் தெளியவுணர்த்தி இவர் உரைத்திருக்கும் பாடல் ஒன்று இதனடியில் வருவது காண்க.

"ஓர்இல் நெய்தல் கறங்க, ஓர்இல்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்,
புணர்ந்தோர் பூவணி அணியப், பிரிந்தோர்
பைதலுண்கண் பனிவார் புறைப்பப்,
படைத்தோன் மன்ற அப் பண்பிலாளன்;
இன்னா தம்ம இவ்வுலகம்!
இனிய காண்கிதன் இயல்புணர்ந் தோரே" (புறம் 194)

நெய்தல் = சாப்பறை. பாணி = ஓசை.

ஒரு மனையில் மணவினை புரிகின்றார்; மற்றொரு வீட்டில் பிணவினை நிகழ்கின்றது; சிலர் மகிழ்கின்றார்; பலர் கவல்கின்றார்; இங்ஙனம் ஒரு நிலையின்றி அலமராலுற்றிருக்கும் இவ்வுலக நிலையை ஓர்ந்து இனிது செய்துஉய்யுங்கள் என உலகரை நோக்கி இவர் உணர்த்தியிருக்குந் திறனை யூன்றிப்பார்க்க. இன்னவாறு அரிய வுண்மைகளை இனிதுணர்த்தி எவர்க்கும் இதம் புரிந்து நின்றார். தமது இல்வாழ்க்கையில் பொருள்வளங்குன்றி வறுமை மிகுந்திருந்தும் ஒருவரிடமும் செல்லாது இவர் ஒடுங்கியிருந்தார். இரந்து செல்லல் ஈனம் என அதனை இகழ்ந்து விடுத்து இயன்றவரையும் முயன்று நின்று இவர் இல்லறம் புரிந்

தார். சிறந்த உடையின்றி அகன்ற டைபொன்றை புடித்துத் திரிந்தாராதலால் பக்குடுக்கை நன்கணியார் என இவர் மிக்குபார்ந்து நின்றார். பெரும் புலவராயிருந்தும் பரிசில் கருதி ஒருவரையும் பாடாமல் தமது புலமையைப் புனிதமாக வைத்துத் தலைமையோடு இவர் நிலவி வந்தார். இரவினை வெறுத்து, வறுமையைப் பொறுத்து அறநிலை திறம்பாமல் பெருமிதமுடையராய் நின்ற இவரது அருமையை வியந்து அனைவரும் புகழ்ந்தார். இரத்தலை ஒரு தொழிலாக இறைவன் படைக்கவில்லை; அதனை மேற்கொண்டால் பழியும் இழிவும் பாவமுமாகுமாதலால் அதனை ஒழிவுசெய்து ஒழுகவேண்டுமென உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

மறுமையும் இம்மையு நோக்கி ஒருவற்
குறுமா றியைவ கொடுத்தல் — வறுமையால்
ஈதல் இசையா தெனினும் இரவாமை
ஈதல் இரட்டி யுறும். (நாலடியார்)

இறந்து படவரினும் எண்ணார் பெரியர்
மறந்தும் இரவை மருண்டு.

இரந்து கொள்ளலை மறந்தும் எண்ணலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

1063. அன்றிரந்தும் இன்மை அறுந்தேன் இராமகவி
குன்றியுளைந்தார் குமரேசா — என்றுமே
இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில். (ங)

இ-ள்.

குமரேசா! இரவினை மேற்கொண்ட இராமகவிராயர் ஏன் வறுமை நீங்காது வருந்தி நின்றார்? எனின், இன்மை இடும்பை இரந்து தீர்வாம் என்னும் வன்மையின் வன்பாட்டது இல் என்க.

இது, இரவினால் இனிது வாழமுடியா தென்கின்றது.

இன்மை = வறுமை. இடும்பை = துன்பம். துன்பங்களுக்கெல்லாம் வறுமையிடமாயிருத்தலால் "இன்மையிடும்பை" என ஒருமை பெய்தி உருவகமாய் நின்றது.

வன்பாட்டது = வலிமைப்பாடுடையது; அஃதாவது முரட்டுத் தனம். இரவுத்துணிவை வன்பாடு என்றது அதன் புன்பாடு கருதி.

"இரந்து தீர்வாம்" என்றது வறியாதுஉட்கோள். முயன்று தீர்வாம் என நினையாது இரந்து தீர்வாம் என எண்ணியதனால் அது வன்மையாயிற்று. ஈண்டு வன்மை என்றது மூடத்துணிவினை. அஃதாவது காரியந் தெரியாமல் கதித்து நிற்றல.

மேல், இரத்தல் வெறுக்கத்தக்கதோர் இழிதொழில் என்றார்; இதில், அதனால் வறுமை நீங்காதென்கின்றார்.

வறுமைத் துன்பத்தை இரவினால் நீக்கிக்கொள்வோமென ஊக்கி நிற்கும் வன்மைபோல வேறு வன்பாடுடையது யாதும் இல்லை என்பதாம்.

இரத்தலானது பெரும்பாலும் அறியர் செயலாதலால் இன்மையோடு இணைத்துவைத்தது அதன் புன்மையை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

பொருளின்றி ஒருவன் வறுமையடையின் உழவு வாணிக முதலிய தொழில்களுள் ஏதாவது ஒன்றைக் கைக்கொண்டு முயலவேண்டும்; முயன்றால் பொருள் எய்தும்; அது வர வறுமை தீர்ந்துபோம்; இங்ஙனம் உரிமையான அதனை விடுத்து இரவினை மேற்கொள்ளின் ஒரு பயனும் வாராமையோடு மானமழிந்து ஈனமே மிகுமாதலால் அவ் இழிதொழிலைக் கனவிலும் கருதலாகாதென்பது கருத்து.

தனக்கு நேர்ந்த வறுமையை ஒருவன் முயன்று தீராமல் இரந்து தீர்க்கத் துணிதல் நாவாயில் செல்லாமல், நாய்வாலைப் பிடித்து ஆற்றைக்கடக்கத் துணிந்ததுபோல் முழு மூடமான ஓர் இழி செயலேயாம் என்க. நாவாய் = தோணி.

இரவினால் இழவும் ஈனங்களும் எய்துமேயன்றிக் கருதிய படி ஒரு பொருளும் இனிதாக வாய்தாது; ஆதலால் நெறி கேடான அதனை அறவே விடுத்து நெறியான முயற்சியைக் கைக் கொள்க என்பதாம்.

வறுமை வந்தால் முயன்று வாழவேண்டுமேயன்றி இரந்து தாழலாகாதென்பது இதன் திரண்ட பொருளாம்.

இரவினை மேற்கொண்டு வறுமையை ஒருவன் தீர்க்க முயல்வானாயின் அவன் உறுதி யொன்றுங்காணாது சிறுமை பல அடைவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமகவிராயர்பால் உணரப்படும்.

## கதை.

இராமகவிராயர் என்பவர் தொண்டைநாட்டிலிருந்தவர். இவரது காலம் இற்றைக்கு நூற்றைம்பது ஆண்டுகட்கு முன்னதாகும். இவர் கல்வியறிவிற் சிறந்தவர். கவிபாடும் வன்மையு முடையவர். தமிழ்ப் புலமையோடு தெலுங்கிலும் பல நூல்களை இவர் நன்கு பயின்றிருந்தார். சூது வாதுகள் யாதும் அறியாதவர்; முன்கோபமுள்ளவர். இனியவரிடத்துப் பணிவினராயினும் எதிரிகளிடத்துத் துணிவு மிகவுடையவர். இங்ஙனம் நல்ல அறிவும் நயத்தகு குணங்களும் நன்கமைந்திருந்தும் செல்வம் இல்லாமையால் இவர் தியங்கி நின்றார். பரிசில் கருதிப் பலரிடத்தும் சென்றார். முடிவில் சென்னையை யடைந்தார். அருமைதெரிந்து ஆதரிப்பாரில்லாமையால் அங்கு இவர் அலமந்து திரிந்தார். பலநாள் பட்டினி கிடந்தார். தெருத்திண்ணைகளில் படுத்துறங்கி இரவுகளை இரவாமல் கழித்தார். புழுதி படிந்த மெய்யும், சடை திரண்ட முடியும், அழுக்கடைந்த உடையும், சொறிசிரங்கு முடையராய் ஒருநாள் இவர் தெருவழியே வந்தார். அவ்வமயம் நாட்டுப்புறத்தில் முன்பு இவரை யறிந்திருந்த செல்வரொருவர் அங்கு எதிர்ப்பட்டு "என்ன கவிராயரவாள்! இங்கு வந்தபின் உங்கள் வரவு நிலை எப்படி?" என்று உறவு முறையோடு வினவினர். அவ்வமயம் அவரை நோக்கி இவர் உரைத்த பாடல் மிக வியக்கத்தக்கது. அடியில் வருவது காண்க.

"சென்னைபுரி வந்து சிவனுபி னானன் நல்ல
அன்னமது காணு தவனுகி — மன்னுசிரங்
கைக்கொண் டைச்சோமன் கட்டிச சடைமுறுக்கி
மெய்க்கொண்ட நீறணிந்து மே"

சிவனை அன்னம் காணவில்லை; என்னையும் அன்னம் பார்க்கவில்லை; அவன் சிரம் கைக்கொண்டான்; நானும சிரங்கைக் கொண்டேன்; அவன் பாதிமதி புனைந்தான்; நானும் பாதிபுடையணிந்தேன்; அவன் முடியில் சடையுண்டு; என் தலையிலும் அஃதுள்ளது; அவன் திருமேனி முழுதும் பூதி யணிந்தான்; என் உடல் முழுதுப் புழுதி பணிந்துள்ளேன்; ஆதலால் இது பொழுது யான் சிவனை ஒத்திருக்கிறேன் என இவர் உரைத்திருக்கும் அழகை இதில் ஊன்றி பார்க்க. மிடிவாய்ப்பட்டு, பசித்துயரோடு பதைத்திருநதும் இங்ஙனம் நகைச்சுவை ததும்பப் பாடி நின்றமையால் இவரது பிடிநிலை புலனுட். அச் செல்வர் அவ்வளவு கல்வியாளரல்லாதலால் சிறிது கொடுத்து இவரை ஊருக்கு அனுப்பினுர். இவர் திரும்பி வந்து சிலநாளிருந்த பின்பு ஆனந்தரங்கன் என்னும் செல்வனை யடைந்து தம்மைப் புரந்தருளும்படி சில பாடல்கள் கூறிப் புகழ்ந்து வேண்டினுர். அவன் உடனே உவந்துதவாமல் பாராமுகமா யமர்ந்திருந்தான். மூன்று தினங்கள் பொறுத்துப் பார்த்தார். அதன்பின் அடுத்து அடுத்து என்னை அனுப்பிவிடுங்கள் என்று நெருக்கி நின்றுர். இவரது நெருக்கத்தைப் பொறுக்க முடியாமல் ஐயா! "பறக்கிறீர்கள்" என்று அவன் கடித்து மொழிந்தான். அதற்கு இவர் உடனே,

"கொக்குப்பறக்கும், புறுப்பறக்கும், குருவிபறக்கும் குயில்பறக்கும்,
நக்குப் பொறுக்கிகளும் பறப்பர், நானேன்பறப்பேன் நராதிபனே!
திக்குவிசயம் செலுத்தியுயர் செங்கோல் நடாத்தும் அரங்கா! நின்
பக்கமிருக்க ஒருநாளும் பறவேன் பறவேன் பறவே"

என்று பாடி நின்றுர். இவரது துணிவையும் விரைந்து பாடுந்திறனையுங்கண்டு அவன் பெரிது மகிழ்ந்து சில பேணிக் கொடுத்தான். இவர் பெற்றுவந்து தம் குடும்பத்தைப் பேணினுர். சில நாட்கள் கழிந்தபின் மீண்டும் பரிசில் வேண்டி

பெழுந்தார். பரிசில் என்பது புலவர்களது அருமையை யறிந்து அரசர் முதலாயினோர் உவந்துதவும் வெகுமதி; இது சன்மானம் எனவும் சாற்றப்படும். அத்தகவுடையார் இல்லாதொழிந்தமையால் புல்லர் சிலரிடம் போய் இவர் அல்லல் பல அடைந்தார். வாதுகளுக்கும் சூதுகளுக்கும் வேசிகளுக்கும் வாரியிறைத்து மதத்துக் களித்து முழு மூடமாய்க் கொழுத்து நிற்கும் செல்வர்களிடத்தெல்லாம் சென்று சீரழிந்தாரேயன்றிச் சிறந்தபேறென்றும் இவர் அடைந்திடாது சோர்ந்தார். தமது அருமைப் பாட்டைக்கேட்டுச் சிறிதும் உதவாத புல்லனொருவன் விலைமாதொருத்திக்கு மறுநாள் கொண்டுபோய்ப் பெரும் பொருள் கொடுத்தான். அதனையறிந்து இவர் மிகவு நகைத்தார். திருப்பதியானை நினைந்து ஒரு பாடலும் பாடினார். அடியில் வருவது காண்க.

"பரிக்கொப்பு போலப் பகலோன் சரிதம் பகர்ந்திடினும்,
உரிக்கம்பதாயினும் ஈயார்; கடனுடன் ஓடிச்சென்று
கரிக்கொம்பு போன்முலை மின்னார்க்கீவர்; அக்கன்னியர்கை
நரிக்கொம்பு தானுமுண்டோ? வேங்கடாசலநாயகனே"

இன்னவாறு சின்னமனிதர்களிடமெல்லாம் சென்று சிறுமையுற்று இறைவனை எண்ணி இவர் ஏங்கி நின்றார். இரந்து கோடலால் மானமிழந்து இழிந்துபட நேருமேயன்றி வறுமை தீராது என்று இவர் தெளிந்துகொண்டார். அதன்பின்பு அதனை அறவே துறந்து வேறுவழியில் திரும்பி முயன்று வந்தார். இன்மை இடும்பை யிரந்து தீர்வாம் என்னும் வன்மைபோல வன்பாடில்லை என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

உள்ளதொழில்கள் உலகில் பலஇருப்ப
எள்ளலுறும்இரவை ஏன்றலைதல் — தள்ளரிய
தாயடைந்து நில்லாமல் தாங்குமென நம்பி ஒரு
பேயடைந்த தாமேபிறழ்ந்து. (தருமதீபிகை)

**மறந்தும் இரவை மருவல்; அதனின்**
**இறந்து படுதல் இனிது.**

இரத்தல் மிகவும் ஈனமென்பது இதனால் கூறப்பட்டது.

1064. எள்ளுமிடி யுற்றும் இரவினைமுன் பொன்முடியார்
கொள்ளவில்லை என்னே குமரேசா — உள்ள
இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்லாக்
காலு மிரவொல்லாச் சால்பு. (௪)

இ—ள்.

குமரேசா! வறுமையுற்றகாலத்திலும் பொன்முடியார் ஏன் இரவினைக் கொள்ளாதிருந்தார்? எனின், இடம் இல்லாக் காலும் இரவு ஒல்லாச் சால்பு இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்தே என்க.

இது, இரந்து நில்லாதவரே சிறந்த செல்வர் என்கின்றது.

இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்தே = அகன்ற இடமாகிய உலகமுழுவதும் அமையாத தகுதியை யுடையதே.

இடம் இரண்டனுள் முன்னது உலகினை உணர்த்தியது; பின்னது செல்வத்தைக் குறித்தது. இடம் இல்லாக் காலும் = பொருளில்லாத காலத்தும; அஃதாவது நுகர்வன ஒன்று மின்றி வறுமையுற்ற போதும் என்க. "இடமின்றி யிரந்தோருக் கீயாதார் இழிவே போல்" (கலி), என்புழி இடம் உணர்த்தி நிற்றல் காண்க.

இரவு ஒல்லாச் சால்பு = இரவினைச் செய்ய இசையாத அமைதி. ஒல்லுதல் = இசைதல. இரவாமையைச் சால்பு என்றது அதனால் எய்தும் மேன்மை கருதி. இரவு, எல்லா உயர்வுகளையும் அடியோடழித்து இழிவினை விளைக்கும் இயல்பினதாதலால் சான்றோர் அதனை மறந்தும் சாரார் என்க.

இன்னாசெய்தார்க்கும் இனியவே செய்யு மியல்பினையுடைய சால்பானது ஈண்டு இரவு செய்யாமைக்கு ஏதுவாய் நின்றது.

இரந்து வாழ்வார் உயிரோடிருந்தாலும் அவர் இறந்தவரே யாவராதலால் என்ன இடர் வந்தாலும் எதையும் இரந்துகொள்ள லாகா தென்றபடி. "இன் உயிரேனும் கொள்ளுதல் தீது" (இராமாயணம்) என மாவலி கூறியுள்ளதும் காண்க.

மேல், இரத்தலால் வருஞ் சிறுமை கூறினர்; இதில், இரவாமையால் வரும் பெருமை கூறுகின்றார்.

வறுமையடைந்த காலத்தும் பிறரிடம்போய் இரந்து நில்லாத அமைதி உலக முழுவதினும் பெரிது என்பதாம்.

நுகர்வு நலங்கள் யாதுமின்றி மிகுந்த வறுமை யடைந்திருந்தாலும் பிறரிடம் போய் ஒருவன் இரந்து நில்லானாயின் அவன் சிறந்த நிலையுடையனாய் உயர்ந்து திகழ்வன்; அவனுயர்வு உலகில் அடங்காதபடி ஓங்கி விளங்கும்; எல்லா வுலகங்களையும் இணைத்து எதிர் நிறுத்தினும் அவன் சீர்த்திக்கு இணையகாது என்பார் "இரவொல்லாச் சால்பு இடம் எல்லாம் கொள்ளாத் தகைத்து" என்றார். ஏகாரம் இரக்கமும் தேற்றமும் இசைய நின்றது.

வறுமையானது மக்களைச் சிறுமைப்படுத்தி இரவு முதலிய இழிவினைகளைச் செய்யத் தூண்டுமாதலால் அதனை ஈண்டு எடுத்துக்காட்டி அந்நிலையிலும் மேலோர் தந்நிலை திரியாது நிற்பர் என இங்ஙனம் உணர்த்தி யருளினர்.

நளன் அரசிழந்து வனம் புக நேர்ந்தபொழுது தமயந்தி தன் தந்தையிடம் போயிருக்கலாமென்று கருதித் தனது அருமைக் காதலனது திருமுகத்தை நோக்கி "நாதா! உங்கள் மாமனார் மனையில் போய் மருவியிருப்போம் வாருங்கள்" என்று உருகியுரைத்தாள். அவ்வமயம் அம்மன்னன் மொழிந்தது ஈண்டெண்ணத்தக்கது.

"சினக்கதிர்வேல் கண்மடவாய்! செல்வர்பாற் சென்று ஈ
எனக்கென்னும் இம்மாற்றம் கண்டாய் — தனக்குரிய
தானம் துடைத்துத், தருமத்தை வேர்பறித்து,
மானம் துடைப்பதோர் வாள்." (க)

"மன்னராய் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
இன்னமுதம் தேக்கி யிருப்பாரேல் — சொன்ன
பெருப்பே டிகளலரேல் பித்தரே யன்றே
அரும்பேடை மானே யவர்." (நளன்) (உ)

இடமில்லாக் காலும் இரவொல்லாச் சால்புக்கு இடமாய் நின்று அம்மேலோன் இஞ்ஞாலமெங்கு மேன்மை யெய்தியுள்ளமை இதனால் இனிது புலனும்.

நல்குர வடையினும் இரவின்கட் செல்லாதவர் உலக மெல்லாம் ஒருங்கேயுடைய பெருந்திருவினரேயாவர் என்றபடி.

"ஓதியும் ஓதார் உணர்விலார்; ஓதாதும்
ஓதியனையார் உணர்வுடையார்; தூய்தாக
நல்கூர்ந்தும் செல்வர் இரவாதார்; செல்வரும்
நல்கூர்ந்தார் ஈயா ரெனின்" (நாலடியார்)

வறுமை வாய்ப்பட்டு வருந்தி யிருந்தாலும் சான்றோர் பிறரிடம் போய் இரந்து நில்லார் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை பொன்முடியார்பால் உணரப்படும்.

## கதை.

பொன்முடியார் என்பவர் பாண்டிநாட்டிலிருந்தவர், வீர மரபினர். பாரநூல்கள் பல பயின்று தெளிந்தவர். யாரிடமும் பேரருளுடையவர். உறுதியுண்மைகளை எவரும் எளிதிலுணரும்படி தெளிவுற வுணர்த்தும் திறன் மிகப் பெற்றவர். மானமும் வீரமும் தமக்கு மாணணியாக இவர் மதித்து நின்றவர். ஒருமுறை குறுநில மன்னன் ஒருவனோடு முடிமன்னர் இருவர் பொருது நின்றார். அப்போர்க் களத்தில் அச் சிற்றரசன் குதிரை முனைந்து பாய்ந்து முரணுறப் பொருதது. அப் பேரரசர் பரிகள் ஓரசைவுமின்றி ஒதுங்கி நின்றன. அவற்றின் நிலைகளை நோக்கி இவர் நெஞ்சங் கவன்றார், சில செஞ்சொல் புகன்றார். அடியில் வருவது காண்க.

"பருத்தி வேலிச் சீறூர் மன்னன்
உழுத்ததர் உண்ட ஓய்நடைப் புரவி
கடல் மண்டு தோணியிற் படைமுகம் போழ,
நெய்ம்மிதி அருந்திய கொய்சுவல் எருத்தின்
தண்ணடை மன்னர் தாருடைப் புரவி
அணங்குடை முருகன் கோட்டத்துக்
கலநொடா மகளிரி னிகழ்ந்து நின்றவ்வே" (புறம் 299)

உழுந்தஞ் சக்கையை யுண்ட குதிரை படைமுகம் போழ்ந்தது; நெய்க்கவளந் தின்றது வீட்டுக்குத்தூர மானவள்போல் ஒதுங்கி நின்றது என இவர் உணர்த்தியிருக்கும் அழகை இதில் ஊன்றிப்பார்க்க. ஆண்மையாளராய் நின்று அருவினை புரிவாரையே பெரிது முவந்து இவர் பேணி நின்றார். வீரக்குடியில் பிறந்த ஓர் முதுமகள் மேல் வைத்து ஒருமுறை இவர் கூறியிருக்கும் உறுதி நலங்களை அக்காலத்திலிருந்த அறிஞர் பலரும் வியந்து புகழ்ந்தனர். சில அடியில் வருவன காண்க.

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;
சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக்கடனே;
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;
ஒளிறுவாள் அருஞ்சமமுருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே" (புறம் 312)

இவரது உறுதி நிலையையும், உள்ளப் பான்மையையும் இதனால் இனிது அறியலாகும். ஒவ்வொருவருக்கும் உரிய கடமை இதுவென இவருணர்த்தியிருக்கும் அருமையை நோக்குக. கரவு யாதுமின்றி அரிய நீதிகளை உயிர்களுணர இன்னவாறு இவர் உணர்த்தி வந்தார். சங்கப் புலவர்கள் இவரைத் தம்முள் ஒருவராய்த் தழுவிக்கொண்டார். பாண்டிய மன்னன் ஒருமுறை இவரை வேண்டியழைத்து அருகிருத்தி இனிதுரையாடினன். அங்ஙனம் உரையாடி வருங்கால் இடையே நமது வள்ளுவரது நூலைக்குறித்துத் தங்கள் கருத்து என்னை? என்று இவரிடம் கருதி வினவினன். அவ்வமயம் அவனை நோக்கி,

"கானின்ற தொங்கலாய்! காசிபனார் தந்ததுமுன்
கூநின் றளந்த குறளென்ப — நான்முறையான்
வானின்று மண்ணின் றளந்ததே வள்ளுவனார்
தாநின் றளந்த குறள்" (திருவள்ளுவர் மாலை 14)

என்று இவர் தகவுடன் மொழிந்தார். திருமால் நான்முறை தழுவாது வஞ்சித்து நின்று உலகத்தை மட்டும் அளந்

தார்; வள்ளுவப் பெருமான் நேர்மையோடு நின்று வானும் வையமும் சேர அளந்தார் என துணிந்துணரும்படி நூன்முறை யான் என்னும் அடையை இடைப்பெய்து இவர் உணர்த்தி யிருக்கும் அருமையை வியந்து அம் மன்னன் உளமிக மகிழ்ந் தான். இங்ஙனம் அரசர் முதலாக அனைவரும் மகிழ அறிவுடை யாடி அருள் புரிந்துவந்த இவர் பரிசில் கருதி எவரிடமும் செல் லாது கிலவருவாயைக்கொண்டே தமது இல்வாழ்க்கையை நெடிது நடத்தி வந்தார். வருங்கால் இடையே வருவாய் குறைந் தது; வறுமை மிகுந்தது. அவ் வறிய நிலையிலும் இரவினைச் சிறிதும் கருதாது இவர் உறுதி செய்திருந்தார்.

"செலவப் பெரும்புனல் மருங்கற, வைகலும்
நல்கூர் கட்டழல் கலிந்து கையறப்ப,
மானம் விடலஞ்சித், தானம்
தளராக் கொள்கையொடு சால்பகத் தடக்கிக்,
கன்னி காமம் போல வுள்ள
இன்மை புரையா இடுக்கணுளர்" (பெருங்கதை)

என்னும் உண்மை நிலைக்கு உரிய சான்றாய் இவர் மருவி கின்றார். அருமையறிந்துதவும் உரிமையாளரிடத்துங்கூடத் தமது நிலையைக் குறித்து ஒரு சொல்லேனும் சொல்லாமல் இர வொல்லாது நின்ற இவரது சால்புடைமையின் பெருமையை யறிந்து மேலோர் சாலவும் வியந்தார். "இடமெல்லாம் கொள் ளாத் தகைத்தே இடமில்லாக்காலும் இரவொல்லாச் சால்பு" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

"மல்லன்மா ஞாலத்து வாழ்பவ ருள்ளெல்லாம்
செல்வரெனினும் கொடாதவர் — நல்கூர்ந்தார்;
நல்கூர்ந்தக் கண்ணும் பெருமுத் தகையரே
செல்வரைச் சென்றிரவாதார்." (நாலடியார்)

இல்லா ரேனினும் இரவாது நிற்பாரேல்
எல்லா முடைய ரினிது.

இரவாமையின் பெருமை இதனால் கூறப்பட்டது.

---

1065. ஒன்றும் இரவா துழைத்தேனோ சேந்தனூர்
குன்றுமல் உண்டார் குமரேசா — நன்றான
தெண்ணீர் அடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில். (ரு)

இ—ள்.

குமரேசா! யாதும் இரந்துகொள்ளாமல் சேந்தனூர் ஏன் முயன்று உண்டார்? எனின், தாள் தந்தது தெண்ணீர் அடு புற்கை ஆயினும் உண்ணலின் ஊங்கு இனியது இல் என்க.

இது, இரந்து தாழாமல் முயன்று வாழ்க என்கின்றது.

தெண்ணீர் அடுபுற்கை = தெளிந்த நீரால் அடப்பட்ட புல்லிய கூழ். தண்ணீரை மிகுதியாக வைத்துக் காய்ச்சிய தென்க. "நெடுநீர்ப் புற்கை நீத்தனம் வரற்கே" (புறநானூறு). "சுடுநீர் அட்டுண்ணும் இடுக்கட் பொழுது" (நாலடியார்) என்றபடி தெண்ணீர் அடுபுற்கை என்றது வறுமைக் கொடுமையை யுணர்த்தி நின்றது.

தாள் = முயற்சி. தாள் தந்தது = தன் முயற்சியான் வந்தது. பிறர் தந்தது இன்னாதாதலால் தாள் தந்தது இனியது என நின்றது. அவ் இரப்புணவை உண்டு வாழ்பவர் பேடிகளே யாவராதலால் ஆள்வினை யமைந்து நிற்கும் சிறப்புடையாளர் அதனைச் சிறிதும் விரும்பார் என்க.

"கோளாற்றக் கொள்ளாக் குளத்தின்கீழ்ப் பைங்கூழ்போல்
கேளீவ துண்டு கிளைகளோ துஞ்சுப;
வாளாடு கூத்தியர் கண்போல் தடுமாறும்
தாளாளர்க்கு உண்டோ தவறு?" (நாலடியார்)

இரந்துண்பவர் இழிந்தொழிவர் எனவும், முயன்று வாழ்பவர் உயர்ந்து திகழ்வர் எனவும் இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

உண்ணலின் என்பதில் இன் உருபு எல்லைப் பொருளது. ஊங்கு = மேல். இனியது = இன்பமானது.

மேல், இரவாதவரே திருவாள ரென்றார்; இதில், அவ் இரவினை மறந்தும் கருதாது முயன்று நிற்பவரே உயர்ந்தவ ரென்கின்றார்.

தன்முயற்சியான் வந்தது தெளிந்த நீர்போன்ற புல்லிய கூழேயாயினும் அதனை உண்டலினும் மேலான இனியது வேறு இல்லை என்பதாம்.

பிறரிடம் போய் இரந்து கொண்டுவந்து பெரியனும், அவி யலும் பொருந்த வைத்துத் திருந்த உண்ணினும் அது மானங் கெட்ட சோறே ஆதலால் அதனை யுண்பது ஈனமேயாகும்; தான் முயன்று வந்தது புல்லிய கூழே ஆயினும் ஆண்மையும மானமும் அமையப் பெற்றது ஆதலால் அஃது ஒருவனுக்கு அமிர்தமேயாகும என்க.

தம்மை ஒத்த மனிதரிடம் போய்த் தாம் இரந்துண்டு வாழ் பவர் இழிந்தவரே யாவராதலால் அவ் இழி செயலை உயர்ந்த மேன் மக்கள் மறந்தும் புரியார் என்பதாம்.

"பெருமுத் தரையர் பெரிதுவந் தீயும்
கருனைச் சோறார்வர் கயவர்; — கருனையைப்
பேரும் அறியா நனிவிரும்பு தாளாண்மை
நீரும் அமிழ்தாய் விடும்" (நாலடியார்)

அடிகள் கருத்தை இஃது அடியொற்றி நிற்றல் காண்க.

இரப்பினால் வருவது மானங்கெட்ட ஈனவுணவே ஆதலால் அதனைச் சிறப்புடைய மக்கள் சிறிதும் விரும்பார் என்க

"கண்ணிற் சிறந்தார் தம்மிடத்தும், காழ்த்தமானம் கெடாவால் பண்ணற்குரிய அறங்குறித்தும் படார்க்கொன்றிரவார். பெருமையினால் எண்ணிற் சிறந்தார்; முயற்சியினால் எலா உப்பில் வரும்புற்கை உண்ணற்கமைந்த தமைத்தெனா உவப்பர்; ஏமகண்டனே"

என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

பருக்கையும் நீருமாய்க் கலந்த சிறந்த கூழே யாயினும் தன் முயற்சியால் வந்தது ஒருவனுக்கு உயர்ச்சிடம் என்பது கருத்து.

"போனகம் என்பது தான் உழந்துண்டல்" (ஔவையார்).

இறந்துபட நேரினும நல்ல குலமக்கள் இரந்துண்ணார் என்க.

தாம் மெய்வருந்திக் கைசெய்து முயன்றுண்பரேயன்றி உயர்ந்தோர் யாண்டும் இரந்து கொள்ளார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேந்தனார் பால் உணரப்படும்.

## கதை.

சேந்தனார் என்பவர் இற்றைக்கு ஆயிரத்தறுநூறு ஆண்டு கட்கு முன்னர் மதுரையிலிருந்தவர். இவருடைய தந்தையார் பெயர் பூதனார் ஆதலால் அப்பேரோடு இணைத்துவைத்துப் பூதஞ் சேந்தனார் என அனைவரும் இவரை அழைத்து வந்தார். இவர் அரிய கலைகள் பலவும் பயின்ற பெரிய புலவர். நீதி நிலை வழு வாத நெறிமுறையாளர். அடக்கமும் இரக்கமும் அமைதியும் உடையவர். பரிசில் கருதி எவரையும் பாடாமல், நெறியான முயற்சியைச் செய்து, அதில் வரும் வருவாயைக் கொண்டே தமது பெரிய குடும்பத்தை இவர் பாதுகாத்து வந்தார். இளஞ் சிறார்க்குக் கல்வி பயிற்றுவது உயர் புண்ணியம் என எண்ணி யிருந்தாராதலால் அதனையே தமக்கு உரிமைத் தொழிலாக இவர் உவந்து கொண்டார். சிறந்த அரசரும் உயர்ந்த புலவரும் விழைந்து கேட்கத்தக்க பெரும் புலமையை அடைந்திருந்தும் பொருள் வரும்படியை மிகுதியாகக் கருதாமல் அருளற நெறி யில் இவர் அடங்கி யிருந்தார். இவரது அமைதியை யறிந்து அனைவரும் வியந்து நின்றார். உறுதி பெற நின்று உணர்ந்து ஒழுகவேண்டிய அரிய நீதியொழுக்கங்களை எவரும் எளிதிலுணரும்படி தெளிவுற வமைத்து இனிய நூல் ஒன்று இவர் இயற்றி யுள்ளார். அந்நூல் இனியவை நாற்பது என்னும் பெயரால் இதுபொழுது வழங்கப்படுகின்றது. இவரது குறிக்கோள்கள் பல அதில் குறிக்கப்பட்டுள்ளன. சில அடியில் வருவன காண்க.

"மானம் அழிந்தபின் வாழாமை முன் இனிதே;
தானம் அழியாமைத் தானடங்கி வாழ்வு இனிதே;
ஊனமொன் றின்றி உயர்ந்த பொருளுடைமை
மானிடவர்க் கெல்லாம் இனிது. (க)

"கற்றார்முன் கல்வியுரைத்தல் மிக இனிதே;
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன் இனிதே;
எட்டுணையானும் இரவாது, தானீதல்
எத்துணையும் ஆற்ற இனிது. (உ)

"கடனுண்டு வாழாமை காண்டல் இனிதே;
நிறைமாண்பில் பெண்டிரை நீக்கல் இனிதே;
மனமாண்பிலாதவரை அஞ்சி அகறல்
எனைமாண்புந் தானினிது நன்கு" (இனியவை நாற்பது)

இன்னவாறு இவர் உணர்த்தியுள்ள நன்னயங்கள் பல. இவற்றால் இவரது மனநிலை இனிதறியலாகும். மானம் உயிரினும் சிறந்தது; அதனை யாண்டும் இனிது பாதுகாக்கவேண்டும்; இறந்தொழிந்தாலும் இரந்துபடலாகாது; என இவர் உரைத்து நின்றபடியே ஒழுகி வந்தார். வருங்கால் இவரது வருவாய் குன்றி வறுமை மிகுந்தது. அந்நிலையினும் இவர் உறுதி குன்றாமல் நெறியான வழியில் வருந்தி முயன்று பெருமித முடையராய் இனிதமர்ந்திருந்தார். ஒருநாள் நுகர்பொருள் யாதுமில்லாமையால் பட்டினிகிடக்க நேர்ந்தது. அதனை அறிந்துகொண்ட செல்வனொருவன் இவர் அறியாவகை அரிசி முதலியன கொண்டு வந்து இவரது இல்லில் வைத்துவிட்டு அகன்று போனான். அவற்றை இவர் கண்டார். மனைவியிடம் வினவியறிந்தார். தமது எளிமைக்கிரங்கி அவன் அன்போடு தந்தனவாயினும் இரவலாக வந்தனவாதலால் அவற்றைக்கொள்ள இவர் அகமிக நாணினார், மெல்ல எடுத்து வெளியில் எறிந்து தம் கொல்லையிலிருக்கும் முருங்கைக்கீரையைப் பறித்துகொண்டுவந்து அவித்துத் தின்று அரு நீர் பருகி அமர்ந்துறங்கினார். "உயிர்சென்றுதான் படினும் உண்ணார் கைத்து உண்ணாப் பெருமைபோல் பீடுடையது இல்" என இவர் சொல்லியுள்ள வுண்மைக்கு இவரே சான்றாய் அன்று இருந்து விளங்கினார். இரந்துண்டல் மிக இழிந்தது; முயற்சியால் வந்தது தெண்ணீர் அடுபுற்கையேயாயினும் அது, அமிர்தினும் இனிதாமென உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

"கோற்றொடி! செல்வர்பாற் குறையிரந்து நின்று
ஏற்று அயின்று உயிர்சுமந்திருத்தல் ஈறிலா
ஆற்றலும், மானமும், அறிவும், கல்வியும்,
மாற்றருஞ் சீர்த்தியும், மாற்றும் என்பவே. (க)

"மிக்கவெஞ்சமத்திடை வெருவி ஓடினர்;
ஒக்கல் துன்புறத்தனி யுலகில் வாழுநர்;
புக்குவேட்டகத்தினில் உண்ணும் புன்மையோர்
மக்களுட் பதடியென்று உரைக்கும் வையமே" (நைடதம்)

இது, நளன் உரைத்தது. தன் தாள் தந்தது உண்பவனே ஆண் மகன்; அல்லாதவன் வீண் மகனே என இது விளக்கி நிற்றல் காண்க. வேட்டகம் = மணம்செய்த மாமனார் வீடு.

வானமிர்த மேன்ன வளமுடைய தாயிடினும்
ஈனம் இரவூண் இளிவு.

இரந்துகொள்ளாது முயன்றுண்பதே இனிதாமென்பது இதனால் கூறப்பட்டது.

---

1066. ஏட்டில் இரப்பும் இளிவென்றேன் வள்ளலார்
கோட்டி யொழிந்தார் குமரேசா — நீட்டிநிற்கும்
ஆவிற்கு நீரென் றிரப்பினும் நாவிற்
கிரவி னிளிவந்த தில். (சு)

இ-ள்.

குமரேசா! இரப்பினை எவ்வகையினும் செய்யாமல் இராமலிங்கர் ஏன் அமைந்திருந்தார்? எனின், ஆவிற்கு நீர் என்று இரப்பினும் நாவிற்கு இரவின் இளிவந்தது இல் என்க.

இது, எவ்வாற்றானும் இரத்தல் கூடாதென்கின்றது.

வள்ளலார் என்றது எல்லா உயிர்களுக்கும் அவர் இதம் புரிந்து இருந்தமை கருதி.

ஆ = பசு. பசுவைப் பாதுகாத்தல் பேரறமாதலால் "ஆவிற்கு" என அதனை ஈண்டு எடுத்துக்காட்டினார்.

"ஆவுக்காயினும், அந்தணர்க்காயினும்
யாவர்க்காணும் எளியவர்க்காயினும்
சாவப் பெற்றவரே தகை வானுறை
தேவர்க்குந்தொழுந் தேவர்களாகுவார்." (இராமாயணம்)

இது இராமன் கூறியது. ஏதேனும் இடையூறு நேர்ந்தால் தன் உயிரைக் கொடுத்தேனும் பாதுகாத்தற்கு உரியார் இவரென அப் பெரியோன் கூறுங்கால் முதன்மையாக ஆவைக் குறித்திருத்தல் காண்க. இதனால் அதன் அருமையும், பெருமையும் இனிது புலனும்.

நீர் = தண்ணீர். வேறு கூறுது நீர் என்றது இரக்கப் படும் பொருளின் எண்மை தோன்ற.

இரப்பினும் என்பதில் உம்மை அதன் மென்மைதோன்ற நின்றது. நீர் தா என்று இரந்து கேட்டது நாவே ஆதலால் இளிவு அதற்காயிற்று.

மேல், இரந்து செல்லாமல் முயன்று நிற்பவரே சிறந்தவரென்ருர்; இதில், அவ் இரப்பினல் பெரும் புண்ணியம் வருவதாயினும் அதனைச் செய்யலாகா தென்கின்ருர்.

நீர் வேட்கையினல் சாகக்கிடக்கும் பசுவிற்குச் சிறிது நீர் வேண்டி இரந்தாலும அவ் இரப்பைப் போல நாவிற்குப் பேரிளிவு தருவது வேறு யாதும் இல்லை என்பதாம்.

தெண்ணீர் அடுபுற்கையாயினும் முயன்றுண்ணலே இனிது என முன்னர் உரைத்ததை எண்ணி நின்று தன் வயிறு வளர்த்தற் பொருட்டுப் பொருள் வேண்டி இரந்தால் இளிவாகுமேயன்றிச் சிறந்த அறத்தின் பொருட்டு இரந்து கொள்ளின் அதனல் யாதொரு இளிவும் உண்டாகாதன்ருே? என்பாரை நோக்கி இஃதுணர்த்தியதாகக் கொள்க.

சிறந்த பசு இறந்துபடும்படி கிடப்பினும் அதன் பொருட்டும் இழிந்த நீரையும் கூட நீ இரந்து கொள்ளாதே என்ற இதனல் இரப்பின் தீமை நன்கு புலனும்.

"எச்சநீர் ஆவிற்கு ஈகெனினும் நன்ருகா;
எச்சிறுமை யானும் இரவற்க இல்லறத்தார்;
பிச்சை ஏற்றுண்கை துறந்தார்க்கே பெற்றியாம்
இச்சை வெறுப்பு இல்லாமையின்" என்பதும் காண்க.

பொய் மொழிதல், புறங்கூறல், கோளுரைத்தல், பயனில பேசல் முதலிய இழிவுகள் யாதுமின்றி உயர்வடைந்திருப்பினும் அப்புனிதநா யாதேனும் சிறிது இரவுரையாடி விடுமாயின் அப்பொழுதே அதன் பெருமை முழுவதும் பொன்றிப் பேரிளிவினை அடையும் என்பார் "நாவிற்கு இரவின் இளிவந்தது இல்" என்றார். கடுந்தாகத்தினால் சாகக்கிடக்கும் ஆவிற்கேயாயினும் தண்ணீரையும் கூட இரந்துகொள்ளலாகாது என்ற இதனால் பிற காரியங்களுக்கு வேறு பொருளை இரத்தலால் வரும் பேரிழவு சொல்லவேண்டாவாயிற்று.

நீர், மிக எளிய பொருள்; அதனைக் கொடுப்பதில் யாதும் வருந்தமாட்டார்; எவரும் உவந்து கொடுப்பர்; கொள்ளப் படுவதோ பசுவின் பொருட்டு; கொடுத்தவர்க்கும் கொண்டவர்க்கும் பெரும் புண்ணியமுண்டாய்; அங்ஙனமிருப்பவும் அதனைக் கொள்ளின் இளிவாம் என்றது என்னை? எனின், எவ்வளவு புண்ணியமுடையதாயினும் தானாக ஒருவன் முயன்று செய்யவேண்டுமேயன்றிப் பிறரிடம்போய் இரந்துசெய்யலாகாது; செய்யின் அவ்விரப்பு இளிவையே பயந்து விடுமாதலால் எவ்வகையினும் அதனை ஒழியவிடவேண்டும் என்க.

எவ் அறம் குறித்தும், எவ்வளவும் இரக்கலாகா தென்பது கருத்து.

நல்ல குலமக்கள் எவ்வளவு அல்லல் நேர்ந்தாலும் பிறரிடம் யாதும் இரந்து செல்லார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை இராமலிங்கசாமிகள்பால் உணரப்படும்.

## கதை.

இராமலிங்கசாமிகள் என்பவர் இற்றைக்கு நூறு ஆண்டுகட்குமுன்னர்ச் சோழநாட்டில் மருதூர் என்னும் பதியிலிருந்தவர். வேளாண் மரபினர். இவருடைய தந்தையார் பெயர் இராமையா பிள்ளை. தாயார் சின்னம்மை. இவர் அருள் நெறி படர்ந்த தெருளுடையறிவினர். மருளற ஒழுகிய மாதவ நெறியினர். இறைவனை என்றும் மறவா நெஞ்சினர். பல கலைகளையும் எளிதிலுணர்ந்து ஒளி மிகு பண்பினர். யாவர் மாட்டும் பேரிரக்கமும்

ஆன்ம உருக்கமும் அமையப் பெற்றவர். அடக்கம் பொறுமை அமைதி துணிவு முதலிய உயர் குணங்களெல்லாம் இவர்பால் ஒருங்கமைந்திருந்தன. கவிபாடும் வன்மையில் மிக உயர் வெய்தி நின்றார். சிறந்த கவிகளை விரைந்து பாடும் உயர்ந்த புலமையை இவர் அடைந்திருந்தும் பரிசில் கருதி ஒருவரையும் புனைந்து பாடாமல் ஒடுங்கியிருந்தார். பரமனையே நினைந்து எப்பொழுதும் உளங்கரைந்து இவர் பாடி நின்றார். "பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப் பக்கம் நின்று கேட்டாலும் பரிந்துள் உணர்ந்தாலும், ஈர்த்தாலும் பிடித்தாலும் கட்டியணைத்தாலும் இத்தனைக்கும் தித்திக்கும் இனித்த சுவைக்கரும்பே, வேர்த்தாவி மயங்காது கனிந்த நறுங்கனியே! மெய்ம்மை யறிவானந்தம் விளக்கும் அருளமுதே!" என்பதாதியாக இறைவனை நோக்கி அன்பு ததும்ப இவர் பாடியுள்ள பாடல்கள் அளவிடலரியன. இவருடைய கவிகள் திருவருட்பா எனப் பெருவியப்போடு புகழப்பட்டுள்ளன. புலமை நிலையில் இங்ஙனம் சிறந்திருந்தும் பொருள் நிலையில் இவர் குடும்பம் மிகத்தளர்ந்திருந்தது. இருந்தும் எவரிடத்தும் யாதும் கேளாத நெறி முறையில் இவர் உறுதி செய்து நின்றார். இவருடன் பிறந்த தமையனாகிய சபாபதிபிள்ளை என்பவர் சென்னை முதலிய இடங்களில் புராணப் பிரசங்கஞ் செய்து அதனால் கொண்டு வரும் வருவாயையும் கூட இவர் அருவருத்து வந்தார். கல்வி யருமையறியாத இக்காலத்தில் செல்வர் பலர் கற்றவர்களை ஒரு வகை இரவலாளர்களாகவே கருதியுள்ளார் ஆதலால் அவ்வழியினை ஒழிய விடுத்து உழவு, கைத்தொழில் முதலியவற்றில் ஏதேனும் ஒன்றைத் தழுவிக் கொள்ளுதல் நலம் என அடிக்கடி இவர் அவரிடம் வணக்கமுடன் உரைத்து நின்றார். ஒருமுறை இவர் உறவினராகிய சுந்தரம்பிள்ளை என்பவர் வறுமையால் மிக வருந்தி இவரிடம் வந்து மறுகி நின்று "அடிகளிடம் உரிமையாளராய் நிற்கும் பொருளாளரிடம் ஏதேனும் ஒருதவை அருள் புரியவேண்டும்" என உருகி மொழிந்தார். அதற்கு இவர், "தருவோர்க்கு தில்லை நகர்க்கு ஓரிருபா ளுள் வரைக்குட் சார்கின்றேன் நம், இருவோர்கள் குறையும் இறைக்கு உரைத்து

அகற்றிக் கொள்ளலாம் நீ இனிமேல் ஐயா!" என இனிது மொழிந்து அவரைத் தேற்றி விடுத்தார்.

"புல்லளவாயினும் ஈயார் தம் வாயிற் புகுந்து புகழ்ச்
சொல்லளவா நின்றிரப்போர் இரக்க; நற் சொன்னங்களைக்
கல்லளவாத்தருகின்றோர் தம்பாலும் கருதிச் சென்றோர்
நெல்லளவாயினும் கேளேன் நின்பாலன்றி நின்மலனே"

என்று இவர் நினைத்து நின்றார். இவரது மனப்பான்மையை யறிந்து இரத்தலை அவரும் வெறுத்துச் சென்றார். ஏழைகளிடம் இரங்கிச் செல்லினும் செல்வர்கள்பால் இவர் சிறிதும் செல்லார். புலவர்களென்றால் பொருளைச் சேட்பர் என மருள்மீக் கொண்டு அவர் மதத்து நிற்பர்; செருக்கும் சிறுமையும் பெரும்பாலும் அவரிடம் சேர்ந்து நிற்கும் என்று இவர் தேர்ந்து நின்றாராதலால் அவரை யாண்டும் சேராது அகன்றிருந்தார். உலகத் தோடமைந்து இவர் ஒழுகிவந்த நிலைமையைக்குறித்து ஒரு முறை உரைத்துள்ளார். அடியில் வருவது காண்க.

"பொருளிலே உலகம் இருப்பதாதலினால் புரிந்து நாம் ஒருவர் பால்பலகால், மருவினால் பொருளின் இச்சையால் இங்ஙன் மருவுகின்றானெனக்கருதி, வெருவுவர் என நான் அஞ்சி எவ்விடத்து மேவிலேன்; எந்தை நீ அறிவாய், ஒருவுமப் பொருளை நினைத்தபோதெல்லாம் உவர்த்தனன் இதுவு நீ அறிவாய்"

(திருவருட்பா)

உலகநிலையைத் தமது அனுபவத்தோடு பொருத்திவைத்து இதில் இவர் உரைத்திருக்கும் அழகை யூன்றிப்பார்க்க. இதனால் இவரது மானமும் மதிப்பும் மேன்மையும் நன்கறியலாகும். பிறவுயிர்கள் சிறிது வருந்தினும் இவர் உளமிரங்கி நிற்பர். பள்ளிப்பிள்ளைகளை உபாத்தியாயர் ஒருவர் கடுத்து அடித்ததைக் கண்டு இவர் துடித்து நொந்து அடுத்துவந்து ஐயா, "அடிப்பது மச் சிறுவர்களை அடிப்பது நன்றல; என் மேல் ஆணை ஆணை" என்று ஆர்வமுடன் கூவினார். இவரது அருள் நிலையை அறிந்து அவரும் அகமிக நாணி அன்றுமுதல் யாரையும் அடியாது நின்றார். பிறர் வருந்தாவண்ணம் இங்ஙனம் பேணி வந்தமையால்

அருட்பிரகாச வள்ளலார் என அனைவரும் இவரை அழைத்து வந்தார். இவர் சிறந்த புகழுடையராய் விளங்கி நின்றார். இவரது செல்வாக்கு எங்கும் பரவி நின்றது. ஒருமுறை இவர் சென்னையில் எழுந்தருளியிருந்தபொழுது அங்குச் சிறந்த அன்பராய் அமர்ந்திருந்த கந்தசாமி முதலியார் என்பவர் இவரை வந்து வணங்கினார். அவர் செங்குந்த மரபினர். அரிய கல்வியாளராயிருந்தும் வறுமைநோயால் அவர் மிக வருந்திநின்றார். ஒருநாள் இவரிடம் இனிது நெருங்கி "இங்குள்ள செல்வர்கள்பால் என்னைக்குறித்துத் தாங்கள் ஒரு சொல்லுதவினால் என் இல்லாமை யெல்லாம் இல்லாதொழியும்." என இதமாக சொல்லாடி நின்றார். நம்மை இறைவன் காப்பான்; பிறரிடம் இரவுரை கூறல் மிகவும் இளிவு; என இவர் இனிது மொழிந்தார். அவர் தனியகன்றார். சிலநாள் கழிந்தபின் மறுபடியும் வந்து தமக்கு உதவிசெய்யும்படி ஒரு சீட்டிலாவது செல்வர் சிலர்க்கு எழுதித் தரவேண்டும் என்று தொழுது வேண்டினார். அதற்கு உறுதி தோன்ற இவர் உரைத்த கவி ஒன்று இதனடியில் வருவது.

"எட்டாலும்கேள் ஐயல் என்பாரை நான் சிரித்துஎன்னை வெட்டிப்
போட்டாலும் வேறிடம் கேளேன்; என்னுணர்ப்புறம் விடுத்துக்
கேட்டாலும் என்னையுடையானிடம் சென்று கேட்பனென்றே
நீட்டாலும் வாயுரைப்பாட்டாலும் சொல்லி நிறுத்துவனே"

இதனைக்கேட்டவுடனே இவரது உறுதிநிலையை யுணர்ந்து, இரவினிளிவை யறிந்து அவர் உவந்துபோனார். இறந்துபடினும் இரந்துபடலை மறந்தும் எண்ணலாகாதென எவர்க்கும் இவர் உணர்த்தி வந்தார். பெருங்கருணையாளராயிருந்தும் இரவு நிலையில எவர் பொருட்டும் சிறிதும் இறங்காமல் உறுதி செய்து நின்ற இவரது பெருமையை அனைவரும் வியந்து புகழ்ந்தார். ஆவிற்கு நீரென்றிரப்பினும் நாவிற்கு இளிவாம் என்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

கற்றைக் குழலார் கவினெல்லாம் ஓர் மகவைப்
பெற்றக் கணமே பிரியுமே — கற்றருளை
வேட்ட பெரியோர் பெருமையெலாம வேறொன்றைக்
கேட்ட பொழுதே கெடும். (நீதிவெண்பா)

உய்ய வுயிருக் குறுதி தருமே னினும்
ஐய இரவை அகல்.

சிறந்த அறமேயாயினும் இரந்துசெய்யலாகா தென்பது இதனால் கூறப்பட்டது.

---

1067. எள்ளிக் கரப்பார் இடமேன் புகழ்த்துணையார்
கொள்ளாது நின்றார் குமரேசா — தள்ளி
இரப்பன் இரப்பாரை யெல்லாம் இரப்பிற்
கரப்பார் இரவன்மின் என்று. (எ)

இ—ள்.

குமரேசா! கரவுடைய லவரிடத்தும் புகழ்த்துணையார் ஏன் இரவாது நின்றார்? எனின், இரப்பாரை எல்லாம் இரப்பன்; இரப்பின் கரப்பார் இரவன்மின் என்று என்க.

இது, கரவுடையாரிடம் மறந்தும் இரவுறலாகா தென்கின்றது.

இரப்பன் என்றது கெஞ்சிக் கேட்பன் என்றபடி. உயிர் போனாலும் இரக்கலாகாதென்று உணர்த்திவந்த அடிகள் இங்கு இரப்பன் என்று இறங்கியது அவ் இரவின்கண் இரப்பார்க்கு உண்டாகும் இழி நிலைக்கு இரங்கி என்க.

எல்லாம் என்றது பல்வேறு வகையினராயுள்ள யாசகர் எல்லாரையும் என எஞ்சாமை தோன்ற நின்றது. "பயலொடும் பல்லக்கொடும் போய் யாசகம் பண்ணுவனே" என்றபடி நண்ணி நிற்கும் அவ்வுயர்ந்த இரவலர் முதல் எவரையும் என்க.

கரப்பார் = உள்ளதொளிக்கும் உலோபிகளை.

இரவன்மின் = இரவாதொழிமின். அல்விகுதி எதிர் மறை வியங்கோள். மின் என்பது ஏவற் பன்மை குறித்து வரும். "இர் ஈர் ஈற்ற இரண்டும் இருதிணைப், பன்மை முன்னிலை; மின் அவற்றேவல்" (நன்னூல்). "மின் ஈறு பலர்பால் வினையொடு முடிமே" (அகத்தியம்).

இரப்பின் என்றது விருப்பின்றிக் கூறும் வெறுப்புரை. தீயவழியிற் செல்லாதே; செல்லின் அங்கு மாயுமுறையில் மாட்டிக்கொள்ளாதே என்பதுபோல் இங்கு இது மருவி நின்றது.

மேல், பெரும்புண்ணியம் வருவதாயினும் இரந்துகொள்ளலாகா தென்றார்; இதில், கரந்து நிற்பாரிடம் மறந்தும் அது செய்யலாகா தென்கின்றார்.

நீவிர் இரக்க விரும்பின் கரந்து நிற்கும் உலோபிகளிடம் போய் இரந்து நில்லாதீர்கள் என்று இரப்பாரை யெல்லாம யான் இரவா நின்றேன் என்பதாம்.

பிறரிடம் போய் இரப்பாரிடம் யான் ஒன்று இரப்பன் என விநயமாக அடிகள் இதில் அருளியிருக்கும் அருமையைப் பார்க்க. இரத்தல் மிக ஈனமானது; அதனை மறந்தும் எண்ணலாகாது; ஒரோவழிச் செய்ய விரும்பின், இல்லை என்று சொல்லும் புல்லரிடம் போய் இரந்து விடாதீர்கள்; இரப்பின் அவர் ஒன்றும் ஈயமாட்டார்; இளித்தே விடுவர்; ஆகவே முன் இருந்த வறுமையோடு இச்சிறுமையுமடைந்து பெருந்துயரினராய்ப் பேதுற்று நிற்க நேருமேயன்றி ஆம் பயன் யாதும் அமையாதாதலால் அப்பாழான இரவை அறவே ஒழித்துவிட வேண்டுமென்று இங்ஙனம் உணர்த்தியருளினர்.

கரந்து நின்று கடிந்து சொல்லும் கடும்பிசுனரிடம் இரந்து சென்றால் மக்கள் இழிந்துபடுவராதலால் "இரவன்மின்" என இங்ஙனம் இரங்கியருளினர்.

"முந்து தமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீதி பாடிப் பாடி
மூஞ்சர்மனை வாசல் தேடித் தேடி உழலாதே" (திருப்புகழ்)

"தம்மையேபுகழ்ந் திச்சைபேசினும் சார்வினும் தொண்டர் தருகிலார்
பொய்ம்மையாளரைப்பாடாதே எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள்"
(தேவாரம்)

"கொள்ளும் பயனில்லைக் குப்பைகிளர்ந்தன்ன செல்வத்தை
வள்ளல் புகழ்ந்து நும் வாய்மை யிழக்கும் புலவீர்காள்!"

"உளனாகவே எண்ணித் தன்னைஒன்றாகத் தன் செல்வத்தை
வளனா மதிக்கும் இம்மானிடத்தைக் கவிபாடி என்?"
(திருவாய்மொழி)

அருணகிரிநாதர், சுந்தரமூர்த்தி நாயனார், நம்மாழ்வார் ஆகிய பெரியோர்கள் "இரவன்மின்" எனப் புலவர்களை நோக்கி உளமிரங்கி இவற்றுள் உணர்த்தியிருத்தல் காண்க.

"சொல்லைக்காட்டி, அருத்தத்தைக்காட்டி, நற்றுதியைக்காட்டிச், சுளிக்கும் உலோபர்பால், பல்லைக் காட்டியே யான் அலையாவகை பலனைக்காட்டிப் பயந்தனை ஓட்டுவாய்" எனப் பண்டொரு புலவர் கரப்பாரிடம் போய் இரப்பஞ்சி நின்றதும் ஈண்டெண்ணத்தக்கது.

கரப்பவர்பால் இரப்பு கடுந்துயராம் என்பது குறிப்பு.

கரவுடையார் யாதும் இரங்காமல் வன்னெஞ்சராயிருப்பராதலால் அவரிடம் போய் இரப்பின் அவமானமடைந்து அலமாலுறுவரேயன்றி ஒரு நலமும் அடையாராதலால் அக்கொடியரை மறந்தும் கேட்கலாகாதென்க. "இரைவது காத்தலிற் கொடுமை யில்லை." (முதுமொழிக்காஞ்சி).

இல்லை யென்று சொல்லும் புல்லரிடம் போய் நல்லோர் இரந்து நில்லார் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை புகழ்த்துணையார் பால் உணரப்படும்.

## கதை.

புகழ்த்துணையார் என்பவர் சோழநாட்டிலே செருவிலிபுத்தூரிலிருந்தவர். வேதியர் மரபினர். அருள் அமைதி முதலிய உயர் நலங்களெல்லாம் இவர்பால் இயல்பாக இனிதமைந்திருந்தன. இவர் அறுபத்துமூன்று நாயன்மார்களுள் ஒருவர். நூலறிவோடு சீலமும் வாய்ந்து என்றும் இறைவழிபாடு செய்து மறுமை நோக்குடன் இவர் மருவி வாழ்ந்தார். வாழ்ந்து வருங்கால் வறுமை மீக் கூர்ந்தார். இல்லாதவராயினும் எவரிடத்தும் இரந்து நில்லாமல் இயன்றவரையும் முயன்று வந்தார். வந்தும் யாதும் முடியவில்லை. நுகர்பொருள் இன்மையால் இவர் குடும்பம் துயர் மிகுந்திருந்தது. தமது அருமை மனைவியையும் இனிய மக்களையும் பேணமுடியாமல் இவர் பேதுற்று நின்றார்.

நின்றும் தமது மான நிலைகுலையாமல் அனைவரையும் உழைத்து ஆதரித்து வந்தார். இடையிடையே பல முறை பட்டினி கிடந்தார். ஒரு முறை மூன்று தினங்களாகத் தொடர்ந்து உணவின்றியிருந்தார். இருந்தும் உளந்தளராது நின்று பரமனைப் பூசித்து வந்தார். நான்காம் நாள் காலையில் மஞ்சனம் ஆட்டிக் கொண்டு இருக்கும்பொழுது பசிக்களைப்பினால் கைகள் தளர்ந்து போயினமையால் குடம் சாமி முடிமேல் விழ இவர் பூமியில் விழுந்தார். விழுந்தவர் உடனே எழுந்துகொள்ள முடியாமையால் நெடிது நேரம் அயர்ந்து கிடந்தார். இவரது மனவுறுதியை இறுதிவரையும் சோதித்து நின்ற பரமன் உளமுருகிக் கனவில் தோன்றித் தினமும் உணவிற்கு வழி செய்துள்ளோம் எழுக என அருள் செய்து நின்றார். இவர் எழுந்து பார்த்தார்; எதிரே ஒரு பொன் இருக்கக் கண்டார். இறையருளை வியந்து மறுபடியும் விழுந்து தொழுதார். பின்பு எழுந்து இல்லினையடைந்தார். இறைவன் அருள் புரிந்ததை மனைவியிட மொழிந்தார். அதுகொண்டு பசி நீக்கி அனைவரும் அன்று மகிழ்ந்திருந்தார். மறுநாள்முதல் தினமும் அவ்வாறே பொன் ஒன்று போதக்கண்டார். பெரு வியப்படைந்து பரனருளைத் துதித்து பிறரெவர்க்கும் உதவி இவர் உளமகிழ்ந்து வாழ்ந்தார். யாதும் இல்லாதிருந்தும் இரவினை மேற்கொண்டு செல்லாமல் தாழங் குடை முதலியவற்றை முடைந்து விற்று அடங்கி நின்று இறுதியில் திருவருளையடைந்து வறுமையைக் கடந்து இவர் விளங்கி நின்றபடியை அனைவரும் வியந்து துதித்தார். நல்ல மானிகள் புல்லரிடம் போய் இல்லை என்று சொல்லி ஒன்றையும் இரந்து நில்லார் என்பதைக் குறித்துச் சொல்லாடுங்கால் அக்காலத்திலிருந்தவர் எல்லாரும் இவரையே முன் மாதிரியாக எடுத்துக் காட்டி இசைத்து வந்தார். பழி விளைக்கும் இரவினை ஒரு பொழுதும் செய்யாமல் விழுமிய நிலையில் என்றும் எழிலமைந்து நின்றாராதலால் புகழ்த்துணையார் என்னும் பெயர் இவர்க்கே பொருந்தும் என எவரும் புகழ்ந்து மகிழ்ந்தார். கரவாதருளும் இறைவனையன்றிக் கரப்பாரை என்றும் இரக்கலாகா தென்பதை உலகம் காண இவர் உணர்த்தி நின்றார்.

இல்லாமை கந்தா இரவு துணிந்தொருவர்
செல்லாரும் அல்லர் சிறுநெறி; — புல்லா
அகம்புகுமின் உண்ணுமின் என்பவர்மாட் டல்லால்
முகம்புகுத லாற்றுமோ மேல். (நாலடியார்)

ஈனம் இரவேனினும் இல்லையேனல் ஐயகோ
ஊனமே யாகும் உயிர்க்கு.

இறந்துபடினும் காப்பவர்பால் இரக்கலாகாதென்பது இத னால் கூறப்பட்டது.

---

1068. சார்ந்திரந்து நின்ற சரவணனார் பின்கரவிற்
கூர்ந்துடைந்தார் என்னே குமரேசா — நேர்ந்த
இரவென்னு மேமாப்பில் தோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும். (அ)

இ—ள்.

குமரேசா! இரவினை மேற்கொண்ட சரவணப் பெருமாட் கவிராயர் உலோபிகளைக் கண்டு ஏன் நிலையழிந்து நொந்தார்? எனின், இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி கரவு என்னும் பார் தாக்கப் பக்கு விடும் என்க.

இது, இரவலர் இன்னல் பல அடைந்து இழிந்து படுவர் என்கின்றது.

ஏமாப்பு = பாதுகாப்பு. ஏமாப்பு இல் தோணி என்றது உறுதியான பாதுகாப்பற்ற தோணி என்றபடி.

இரவினைத் தோணி என்று உருவகம் செய்தது வறுமைக் கடலைக் கடத்தற்கு உரிமையானதென்று இரவலர் மருவி நின்றமை கருதி. தன்னை நம்பி ஏறினவரைச் சேமமாகக்கொண்டு கரை சேர்க்காதாதலால் அது, "ஏமாப்பு இல்" என நின்றது.

வறுமைக் கடலைக் கடந்து பொருட்கரை காணவேண்டுமாயின் முயற்சி என்னும் சிறந்த மரக்கலத்தில் அமர்ந்து செல்ல வேண்டும்; அங்ஙனமின்றி இரவு என்னும் இழிந்த தோணி மேல் ஏறிப்போனால் இடையே அடியோடு அழிந்து படுவீர் என அடிகள் இதில் உணர்த்தியிருக்கும் அழகைப் பார்க்க.

கரவு = உலோபம். பாறை = பாறை. தாக்க = மோத. பக்குவிடும் = உடைந்து தொலையும்.

மேல், கரப்பாரிடம் இரப்பாரா தென்றார்; இதில், அங்ஙனம் இரந்து செல்லின் இழிந்து படுவீரென்கின்றார்.

இரத்தல் என்று சொல்லப்படுகின்ற ஏமமற்ற தோணி கரத்தலாகிய பாறை தாக்கப் பாழ்பட்டழியும் என்பதாம்.

இரவைத் தோணியாகவும், கரவைப் பாறையாகவும் உருவகம் செய்திருத்தலான் வறுமையைக் கடலாகவும், பொருளைக் கரையாகவும், வறியரை வழியினராகவும் கருதிக் கொள்க.

வறுமையாகிய கரிய கடலைக் கடத்தற்கு உறுதியான தென்று துணிந்து இரவாகிய தோணிமேல் ஏறிச் சென்றவர் இடையே உலோபிகள் என்னும் வலிய கற்பாறைகளில் மோதி அது உடைந்தொழிய அவர் உள்ளழிந்து வீழ்வர் என்றபடி.

உலோபிகளைக் கற்பாறைகளோடு ஒப்பவைத்தது சிறிதும் இரங்காமல் கடு நெஞ்சராய்க் கடுத்து நிற்றல் கருதி. வறுமைத் துயரால் வருந்தி நின்றவர் பொருளுடைய விரும்பி இரவினை மேற்கொண்டு சென்று, அருள் நீர்மையராகிய உபகாரிகளால உதவியடைந்து இனிது நடந்து வருங்கால், இடையே உலோபிகளைப் போய் முட்டின் அவர் இல்லையென்று தட்டிவிடுவர்; விடவே இரவலர் தட்டழிந்து தவிப்பர் ஆதலால் "இரவென்னும் தோணி கரவென்னும் பார்தாக்கப் பக்குவிடும்" என்றார்.

கரப்பாளர் இரக்கமில்லாமல் இருப்பாராதலால் இரப்பாளர் அவரை யாதும் நெருங்கலாகா தென்பது கருத்து.

பண்டொரு புலவர் பல பாடல்கள் பாடிக் கரவுடையார் பலரிடமும் சென்று ஒரு பலனும் காணாமல் உளமுடைந்து நொந்து முடிவில் திருப்பனந்தாள் அம்பிகைமுன் போய் நின்று ஒரு பாடல் பாடி விட்டு இரவுத்தொழிலை அறவே வெறுத் தொழித்தார். அவர் அன்று பாடிய பாடல் அடியில் வருவது.

"வண்ணம் கலித்துறை விருத்தம் அகவல் வஞ்சி மடல்கோவை தூதுபள்ளு, மாலைமாற்றுச் சுரி குளங்குழந்தைத் தமிழ் மனஞ்

சிவக்கச் சிவக்கத், திண்ணமுறு சொற்சுவை பொருட்சுவை பொருந்தவே தியாகரைப் போனடிச்சும், திதியிலா உலோபரைப் பாடியவர் சமயம் தெரிந்திலிற் சென்று மற்றோர், எண்ண எலுமிச்சம்பழத்தை மங்கலாகவி இசைத்து உமது கீர்த்தி கேட்டே, இங்குவந்தோ மெனக் கை நீட்டில் ஊறுகாய்க்கு இது போது மெனு மூடர்பால், பெண்ணமுதமே யலைய வையாது நிற்பாடு பெரியசம்பத் தருளுவாய், பெற்றிதரு தனமிகுதி யுற்றுவளர் பனசை வாழ்பெரிய நாயகி யம்மையே"

கரப்பாரிடம் போய் அப்புலவர் பட்டிருக்கும் புண்பாடுகளை இது உணர்த்தி நிற்றல் காண்க. இரவின்னிழிவு இதனால் இனிது புலனும். இரப்பு மிக இளிவானது ஆதலால் அதனைத் தழுவாதகன்று ஏதாவது ஒரு தொழிலை உறுதியாக மக்கள் உவந்து கொள்ளவேண்டும் என்பது கருத்து.

தன் இன்மையை இரந்து நீக்கத் துணிந்து சென்றவன் பெருந்துயரடைந்து இழிந்துபடுவன் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சரவணப்பெருமாட் கவிராயர்பால் உணரப்படும்.

## கதை.

சரவணப்பெருமாட் கவிராயர் என்பவர் இற்றைக்கு நூற்றிருபது யாண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே முதுகுளத்தூரில் இருந்தவர். வேளாண் மரபினர். இலக்கிய இலக்கணங்களை நன்கு கற்றுப் புலமை நிலையில் சிறந்து அட்டாவதான முதலிய அரிய கலைத்திறங்களை எளிதிற் புரிந்து இவர் எழில் பெற்றிருந்தார். இவர் செய்துள்ள அவதான வகைகள் எவரும் வியக்கத்தக்கன. சில அடியில் வருவன.

"மாறாமல் வாய் வேலு மயிலுமெனவேசொல்ல, வாசகம் கைகளெழுத,
வருகணக் கொருபுறந்தீர, மற்றொருபுறம் வரைந்திடு மிலக்கமாற,
வளை திரைக்குட்சிறிதுகல்லணி வகுக்கின்ற வன்கணக்கினிதுபகர,
மருவு சொக்கட்டானும் விளையாட, மறைவாகவைத்த சதுரங்கமாடக்,
கூறுக எட்டெழுத்தாணி யெழுதும் படிக்குங் கவிதை பகர, அதிலோர்
கூறெழுத்தாணி சதுரங்க முதகுப்புறம் குதிரையடி வெண்பாவரக்,

கூறுபுலவோர் சபையில் அட்டாவதான முலகோர் புகழவே நடத்தக்,
கோடிலாச்சதுரங்கமாட, அயலமர்கின்றகுதிரையுமாட ஒருபால்,
ஏறுகி வண்ணப்ரபந்தமெட்டுப்பேர்க் கெழுத்தெழுத்தாவுரைக்க,
இவ்வாறு நாற்புறக் கவிதைப் பிரசங்கம திசைக்கும் பிரசண்டமாக்கி,
இலக்கண இலக்கியக்கடலை முழுதுகுடித் தேப்பமிடு காளமேகம்,
இனிய கவி அவதானி சரவணப்பெருமாள்" என இவர் உயர்வெய்தி நின்றார். அக்காலத்தில் இராமநாதபுரத்தில் அரசு புரிந்திருந்த முத்துராமலிங்கசேதுபதி என்பவர் இவரது அருமையை யறிந்து இனிதுதவி வந்தார். அவர் முதலாகப் பலரிடமும் சென்று பரிசில் பல பெற்று இவர் மிக மகிழ்ந்து வந்தார். வருங்கால் அவ் வள்ளல்கள் மறைந்து போயினர். பின்பு இல்லையென்று சொல்லும் புல்லர்களிடம் சென்று இவர் அல்லல் பல அடைந்தார். ஒருமுறை பெரும் பொருளுடைய ஒருவனிடம் இவர் வரும்படி கருதிச் சென்றார். அவன் வாயினிக்கப் பேசுவனு யினும் வஞ்ச நெஞ்சினன், கொடிய உலோபி. இவர் வந்த குறிப்பை அறிந்து தன் இல்லிலுள்ள தொல்லைகளை யெல்லாம் எடுத்துச் சொல்லி முடிவில் யாதும் இல்லை என்று விடுத்தான். இவர் உள்ளங் கொதித்து உடனே மீண்டார். இரவினை வெறுத்துப் பரமனைப் பாடினர். அப்பாடலில் இவர் போன விதமும், அவன் புகன்ற திறமும் பொருந்தியுள்ளன.

இரந்துபடுதலையஞ்சி இன்னவாறு உளங்கரைந்து ஒதுங்கி நின்ற இவர் பின்னொருநாள் பரிசில் பேணி எழுந்து ஒரு நகரினை யடைந்தார். அங்குக் கனகராயன் என்னும் தனவானொருவனை அணுகி இனிது மொழிந்தார். இவர் கருதி வந்துள்ளமையை யறிந்து அவன் கடுத்து மொழிந்தான்.

"உலகில் எதிர்பட்டவன் நான்தானோ? உங்களுக்கு ஒருதொழில் தானுமில்லையோ?, ஓட்டாரங்காட்டியே நித்த நித்தம் வந்து உபாதிக்கிறீர்களேயோ!, புலவரென்றால் தனம் கொட்டிவைத்தீர்களோ? புதையல் யாரெடுத்ததுண்டோ?, புளுகக்கற்றது போலோர் தொழில்கற்க ஒண்ணாதோ? புகழ்வதாற் பயனேது காண், கலைகற்றவர்களென்னில் நெஞ்சம் எரிகின்றதே! கவிராசரே சொல்லுவீர், காசென்னிடத்திலை; சபிக்கில் அஞ்சேன்;" என

இவ்வாறு அவன் வெவ்வாய் திறந்தான். இவர் வெறுத்தெழுந்தார். இறந்துபடினும் இனிமேல் இரவு செய்யலாகாதென உறுதி செய்து கொண்டார். புரவலரால் முன்னர் உயர்வெய்தியிருந்த இவர் கரவுடையாரைக் கண்டபின் கருத்தழிந்து நின்றார். "இரவென்னும் ஏமாப்பில் தோணி கரவென்னும் பார்தாக்கப் பக்கு விடும்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

"ஒன்றும் வேண்டலராயினும் ஒருவர் பால் ஒருவர்
சென்று வேண்டுவரேல், அவர் சிறுமையில் தீரார்;
இன்று வேண்டியது எறிகடல் நெறி; இதை மறுத்தால்,
நன்று நன்றென நகையொடும் புகைபுக நக்கான்."
(இராமாயணம்)

இது, இராமன் இலங்கை செல்லுங்கால் இடையே கடல் கடக்கும்பொருட்டு வருணனை வழி வேண்டி நிற்ப, அவன் வராமைகண்டு வருந்தி புகைத்தது. பிறரிடம் ஏதாவது ஒன்றை விரும்பி ஒருவன் சென்றால் அன்றே அவன் சிறுமையில் விழுந்தான் என உலக நிலையைக் குறித்துச், கடல் நிலையை வெறுத்து அவ் வீரமூர்த்தி வெகுண்டு நிற்கும் தீர நிலையை இதில் தெளிந்து நோக்குக. வெறும் வரவு போக்குகளிலேயே சிறு செல்வர் இரவினை நோக்கி விடுவர் ஆதலால் அவரிடம் சிறிதும் சேறல்; சேறின் சிறுமையும் இளிவும் சேரவரும் என முதலீரடிகள் கூறியிருத்தலைக் கூர்ந்து பார்க்க.

வறுமையற வேண்டின் வருந்தி முயல்க
சிறுமை இரவு செயல்.

இரவுநிலை இளிவு தருமென்பது இதனால் கூறப்பட்டது.

---

1069. அன்றிரவை எண்ணி அலமந்து தத்துவனார்
குன்றி நின்றார் என்னே குமரேசா — என்றும்
இரவுள்ள வுள்ள முருகுங் கரவுள்ள
வுள்ளதூஉ மின்றிக் கெடும். (கூ)

இ—ள்.

குமரேசா! இரவினை நினைந்தபோதெல்லாம் தத்துவப்

பிரகாசர் ஏன் உளங்கரைந்து நின்றார்? எனின், இரவு உள்ள உள்ளம் உருகும்; கரவு உள்ள உள்ளதூஉம் இன்றிக் கெடும் என்க.

இது, இரவுத்தொழில் மிக இரங்கத்தக்க தென்கின்றது.

இரவு = இரப்பினை. உள்ள = நினைக்க. உள்ளம் உருகும் = நெஞ்சம் நிலைகுலைந்து உருகி நிற்கும். உருகல் = கரைதல். உள்ள உருகும் என்றதனால் சொல்லவும், செய்யவும் முடியாதென்பது சொல்ல வேண்டாவாயிற்று.

உள்ளதூஉம் இன்றி = உருகிநின்ற அந்நிலையும் இல்லாமல், அளபெடை இன்னிசை தோன்ற நின்றது. கெடும் = அடியோடழிந்து தொலையும்.

இரவினை நினைக்க என் நெஞ்சம் கரைந்துருகும்; கரவினை நினைப்பின் அவ்வுருகிய அளவுமின்றி முழுதும் அழிந்துபோம் என்ற இதனால் இரவையும், கரவையும் குறித்து அடிகள் எண்ணியிருக்கும் உண்மை இனிது புலனாம். "இரவினை, உள்ளுங்கால் உள்ளம் உருகுமால், என்கொலோ கொள்ளுங்கால் கொள்வார் குறிப்பு" (நாலடியார்) என அடிகள் குறிப்பை இஃது அடியொற்றி வந்திருத்தல் காண்க.

மேல், இரவானது இடையூறுகள் பல வுடையதாய் இழிந்துபடும் என்றார்; இதில், அதனை நினைத்தாலும் நெஞ்சம் கலங்கும் என்கின்றார்.

இரவின் கொடுமையை எண்ணினால் உள்ளம் கரைந்து உருகா நிற்கும்; அங்ஙனம் இரந்து வந்தவரைக் கண்டும் இரங்காது நிற்கும் கரவின் கொடுமையை நினைந்தால் அவ்வுருகிய அளவுமின்றி அவ் வுள்ளம் அழிந்துவிடும் என்பதாம்.

இரத்தலானது இழிவு பல வுடையது; உயிரினும் இனிய மானத்தைக் கெடுத்து ஈனப்படுத்தும்; அதனை நினைத்தால் நெருப்பைத் தொட்டதுபோல் நெஞ்சம் பதைத்து நிலைகுலைந்து போம் என்பார் "இரவு உள்ள உள்ளம் உருகும்" என்றார். அத்தகைய பொல்லா இரவையும் வறுமைக் கொடுமையால் மேற்கொண்டு தன்னை ஒத்த மக்களிடம் போய் ஒருவன் வேண்டி

நின்றால் உடனே இரங்கி உதவ வேண்டும்; அங்ஙனம் உதவாமல் வன் கண்ணராய் நின்று இல்லையென்று சொல்லுவாராயின் அக் கொடுமையை உள்ளினும் உள்ளம் தீய்ந்து உருக்குலைந்து மாய்ந்து போம் என்பார் "கரவு உள்ள உள்ளதும் இன்றிக் கெடும்" என்றார். இரப்பினும் கரப்பு இறப்பவும் கொடிது என்றபடி.

"இரப்பவன் நெஞ்சம்போல் புல்லென்று புறமாறிக்,
கரப்பவன் நெஞ்சம் போல் மரமெல்லாம் இலைகூம்ப" (கலி)

இரவு, கரவுகளைக் குறித்து இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

"கரவொடு நின்றார் கடிமனையிற் கையேற்று
இரவொடு நிற்பித்த தெம்மை — அரவொடு
மோட்டாமை பூண்ட முதல்வனை முன்வணங்க
மாட்டாமை பூண்ட மனம்"

இல்லை யென்பாரிடம் போய் இரத்தல் பாவத்தின் பயனும் என இஃது உணர்த்தி நிற்றலை யூன்றிப்பார்க்க.

இரவச்சம் என்னும் இவ் அதிகாரத்தில் கரவினை உடனிணைத்து வைத்தது என்னை? எனின், இரவினை அஞ்சுதற்குக் கரவுதான் காரணமாதலால் அவ்வுரிமை கருதி என்க. "இரத்தலும் ஈதலே போலும் கரத்தல் கனவிலும் தேற்றாதார் மாட்டு" என்றபடி கரவு இல்லையாயின் எவரும் இரவினை விழைந்துகொள்வராதலால் இரவச்சத்திற்குக் கரவுடைமை யீண்டினமாய் எண்ண நின்றது.

ஈயாத உலோபிகளின் இழிவினை நினைந்து இரவின் பழியினை விழுமியோர் அஞ்சுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை தத்துவப் பிரகாசர்பால் உணரப்படும்.

## கதை.

தத்துவப்பிரகாசர் என்பவர் சோழநாட்டிலிருந்தவர். கருவி நூல்களோடு சித்தர் நூல்களையும், தத்துவக் கலைகளையும் நன்கு தெளிந்த வித்தகக் கலைஞர். ஒழுக்கத்தை உயிரினும் இனிதா ஓர்ந்துகொண்டு இவர் உவந்து பேணி நின்றார். சொல்

விலும் செயலிலும் யாண்டும் நேர்மையுடையராய் இவர் நிலைத்திருந்தார். சூதுவாதுகள் யாதும் அறியார். பிறரிடம் சிறிது பிழை காணினும் பெருஞ் சினங்கொண்டு கடுஞ் சொல்லாடுவ ராதலால் நெறியில்லா ரெவரும் இவரை நெருங்க அஞ்சினர். வறுமையாளராயிருந்தும் பரிசில் கருதி எவரையும் பாடாது பெருமித முடையராய் உளமடங்கி யிருந்தார். ஒரு குறுநில மன்னனது அவையில் தமது இயல்புகளைக் குறித்து ஒரு முறை இவர் உரை செய்தபோது பலரும் கேட்டு மிக வியந்திருந்தார். சில அடியில் வருவன காண்க.

"நினைவுகவி சொல்வோம் எனச் சொலிப் பல கவிதை
நினைவினைத் திருடி வையோம்;
நீடுலகில் மனிதரைப்பாடிலோம்; நாமென்றும்
நீர்வசைகள் பாட அறியோம்;
பினை இளைய நாவலருடன் பங்குபேசிப் பிர
பந்தங்கள் பாடிக் கொடோம்;
பேசுவது தேவாரமேயலால் வாய்க்கெளிய
பேய்க்கிரந்தங்கள் பேசோம்;
இனிமைதரு பூருவத்துக்குருக்களை மறந்து
எங்கணும் தீட்சை யேற்கோம்;
இட்ட ஒரு பேர் மாற்றி மாதமொரு பேரிட்
டிடப் பெறேம்; இறுமாந்திரோம்;"

என இங்ஙனம் கூறியிருக்கின்றார். இதனால் இவரது மனப்பான்மை தேறலாகும். தீவினைகளை மறந்தும் செய்ய லாகாதென்று இரங்கி நின்று பலர்க்கும் இவர் இதமொழி புகன்றார். புகன்றும் புல்லர் சிலர் அதனைப் பொருட்படுத்தாமல் அல்வழியிலேயே அகந்திமிர்ந்து திரிந்தார். அவரது நிலையினை நோக்கி நெடுங்கவல் கொண்டு பலவழியினும் அவரைத் திருத்திப் பார்த்தார். யாதும் பயன்படவில்லை. முடிவில் ஒருநாள் இவர் பரிதபித்துரைத்ததை இதனடியில் பார்க்க.

"பாம்பு கடித்தால் அதுவும நீக்கவல்லோம்;
பசாசு அறைந்தால் நீறிட்டுப்பார்க்கவல்லோம்;
வேம்புகசப்புஅறக் கறியும் ஆக்கவல்லோம்;
விறல்வேழத்ததிகமதம் தணிக்கவல்லோம்;

சாம்பொழுது திடமாகப் பேச வல்லோம்;
தரணியின்மேல் கல்லாத தொன்றும் இல்லை;
தீம்பரை நல்லவராக்கிக் குணமுண்டாக்கும்
திறமது அறியாமல் நின்று திகைக்கின்றோமே"

புல்லறிவாளரைத் திருத்த இவர் பட்டு நின்ற அல்லற்பாடு இதனால் நன்கு புலனும். செல்வர்களை நத்தி நின்று பொய்களைப் புனைந்து கூறுஞ் சிறு கல்வியாளர்களைக் கண்டபோதெல்லாம் இவர் பெரிதும் கடிந்து மொழிந்தார். அருமை தெரியாத புல்லர் களிடம் போய் இரந்து திரியன்மின்; அது மிகவும் ஈனம்; என இடித்துணர்த்திப் புலமையைப் புனிதமாக இவர் பேணி வந்தார். கல்வி நலனை யிழந்து புல்லிய நிலையிலிழிந்து பொருளிரந்து திரிந்த இருவர் ஒருமுறை இவர்முன் எதிர்ப்பட்டார். இரத்தலை ஒழித்துவிடும்படி இவர் அவர்க்கு உணர்த்தி நின்றார். அவர் சிறிதும் கேளாமல் இரவினையே விழைந்து விரைந்தெழுந்தார். அவ்வமயம் அவரைப்பார்த்துஇவர் சினந்துரைத்த கவி இத னடியில் வருவது.

"கவடிகளாகத் திரியும் கள்ளர்காள்! நன்னூற்
சுவடியிருந் தாவதென்ன சொல்வீர்! — குவலயத்துள்
காட்டுக்கு எரித்தநிலா; கண்ணிரண்டும் இல்லாதான்
வீட்டுக்கு எரித்த விளக்கு."

என இவர் விளக்கி நின்றார். இன்னவாறு இரவினை வெறுத்து எவர்க்கும் இதம் உரைத்து வந்தார். தாம் வறியரா யிருந்தும் இரவு செய்யாமல் அதனை அறவே ஒழித்து இவர் உரவோடிருந்தார். கரவுடையார் இடம் சென்று இரவலர் படும் பாட்டை எண்ணியெண்ணிக் கண்ணீர் வடித்துக் கரைந்து நின்றார். "இரவுள்ள உள்ளம் உருகும்; கரவுள்ள உள்ளதும் இன்றிக் கெடும்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

இன்று இசைக, இனிய ஒழிகென்று
தன்னையே தானிரப்பத் தீர்வதற்கு — என்னைகொல்
காதல் கவற்று மனத்தினால் கண்பாழ்பட்டு
ஏதிலவரை இரவு. (நாலடியார்)

நரகம் புகினும் நலமே கொடிய
இரவொன்றி நிற்றல் இளிவு.

இரத்தலை நினைத்தாலும் நெஞ்சம் வேம் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1070. அன்றிரந்து நின்ற அவிநாசி யார்கரப்பிற்
குன்றிநொந்தார் என்னே குமரேசா — நின்று
கரப்பவர்க் கியாங்கொளிக்குங் கொல்லோ இரப்பவர்
சொல்லாடப் போஒம் உயிர். (ம)

இ—ள்.

குமரேசா! கரப்புடையார் இல்லை யென்று சொல்லாடிய பொழுது அவிநாசிப்புலவர் ஏன் உயிர் துடித்தார்? எனின், இரப்பவர் சொல்லாட உயிர் போம்; கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும் கொல்லோ! என்க.

இது, இரப்பு இறப்பினும் கொடி தென்கின்றது.

சொல் ஆட = இல்லை என்னும் சொல்லைச் சொன்னவுடனே. உயிர்போம் = இரப்பவர்க்கு உயிர் போய்விடுகின்றது. அளபெடை இசை நிறைத்து நின்றது.

யாங்கு ஒளிக்கும் கொல் ஓ = உயிர் யாண்டு மறைந்திருக்குமோ? ஓகாரம் ஐயமும் இரக்கமும் அமைய நின்றது. இல்லையென்னும் சொல், கேட்டவரை உயிர் துடிக்கச் செய்கிறதே; அத்தகைய நச்சுச் சொல்லை வாயில் வைத்திருந்தும் உலோபிகள் மாயாதிருக்கின்றாரே; ஈதென்னே! என வியந்து வினவியபடியிது.

"சுரப்புறு சிறைப்புனல் எனக்கருதி வற்றிய துவட்சியதனால்
இரப்புறு தவிப்பினை ஒழித்திட மனத்தினில் நினைத்து உழையெலாம்,
இரப்பவரை நித்தலு நடத்திய மொரற்பமும் இரக்கமிலர்பால்
பரப்பவரை ஒத்தன; கரப்பவரை ஒத்தன பசாசரதமே" (அரிச்சந்திர சரிதை)

கரப்பவரிடம் இரப்பு இறப்பேயாமெனவும், அதனை உணர்ந்து ஒதுங்கவேண்டும் எனவும் இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

மேல், கரப்புடையாரிடம் போய் இரத்தலை நினைத்தாலும் நெஞ்சழிந்துபோம் என்றார்; இதில், அவ்வுளுத்தர் உயிர் வாழ்ந்திருத்தல் வியக்கத்தக்க தென்கின்றார்.

இல்லை என்று சொல்லாடியவுடனே இரப்பவர் உயிர்போய் விடும்; அத்தகைய கொடிய சொல்லை வாய் கூசாது கூறும் உலோபிகட்கு உயிர் எங்கு ஒளித்து நிற்குமோ? என்பதாம்.

வறுமைத் துயரால் வருந்தி நொந்து மானத்தை மழுக்கி, மறுகிவந்து எளியர் இரந்து நின்றபோது அளிசெய்து உதவாமல இல்லை என்று செல்வர் சொல்லிவிடுவராயின் இனி என் செய்வேம் என உள்ளம் குலைந்து அவர் உயிருலைந்து நிற்பாராதலால் "சொல் ஆட இரப்பவர் உயிர்போம்" என்றார்.

"புறத்துத் தன் இன்மை நலிய, அகத்துத்தன்
நன்ஞானம் நீக்கி நிறீஇ — ஒருவனை
ஈயாய் எனக்கு என்று இரப்பானேல் அந்நிலையே
மாயானோ மாற்றி விடின்" (நாலடியார்)

மாற்றிவிடின் இரப்பவன் அந்நிலையே மாயானோ? என இஃதுணர்த்தி நிற்றல் காண்க. சொல்லாட உயிர்போம் என அடிகள் சுட்டியபடியை இஃது ஒட்டியுள்ளமை யறியலாகும்.

மானம் கெட்டு இரந்து நின்றும் வரும் பயனில்லாமையால் இரவலர் இவவாறு பெருந்துயரடைந்தனர் எனக. கேட்டவுடனே பிறர் உயிரை வாட்டவல்லதாய கொடிய சொல்லைத் தம்மிடம் வைததிருந்தும் உலோபிகள் உயிர் போகாது இருக்கின்றாரே இஃதென்னே? என்பார் "கரப்பவர்க்கு யாங்கு ஒளிக்கும் கொல்லோ?" என்றார். இல்லை போ என்னும் சொல்லை யாதும் இரக்கமின்றி இரவலரிடம் சொல்லி உயிர்வதை செய்யும் கொடியர் உயிர் போயொழியாமல் இவ்வுலகிலிருப்பது அவர்க்குப் பெரிய ஓர் இழவாம் என்றபடி.

வறுமை வநததாயின் அதற்குப் பயந்து இரவுசெய்யப் போகாதே; போனால் அதில் மரண வேதனை யுள்ளது என வுரைத்து இரவினை அஞ்சி ஒழிக்கும்படி இதில் உணர்த்தியிருத்தல் காண்க.

"காவென்றும், சிந்தாமணி என்றும், சொல்லி என்கையிலுள்ளித்
தாவென்று கேட்கத் தரித்திரம் பின்னின்று தள்ளி என்னைப்
போவென்றுரைக்கவும், நாணம் அங்கே யென்னைப்போவதிங்கு
வாவென்றிழுக்கவும், வந்தேன் விராலி மலைக்கந்தனே"

என்று பண்டொரு புலவர் இரவஞ்சி மீண்டதும் ஈண்டெண்ணத்தக்கது. இரத்தல் மிக இழிந்தது; கண்ணன்னார் கண்ணும் அதனை எண்ணாதே; அது பழிபாடுடையது; அதனால் பொருள் பெற முடியாது; அதனை மறந்தும் தொடாதே; தொழில் செய்து உண்; அறங்கருதியும் அது புரியற்க; புரியின் இழிவே வரும்; தொட்டால் கெட்டாய்; அதனை நினைத்தாலும் நெஞ்சம் நடுங்குகின்றதே; உயிர் உலைகின்றதே; என இரவின் நிலைமையைத் தெளித்து இரவச்சத்தை இங்ஙனம் உணர்த்தியருளினார்.

உலோபிகள் இல்லையென்று சொல்லினால் இரந்து சென்றவர் உயிருலைந்து நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அவிநாசிப்புலவரால் உணரப்படும்.

## கதை.

அவிநாசிப்புலவர் என்பவர் இற்றைக்கு எண்பதாண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே வாசுதேவநல்லூரிலிருந்தவர். இவர் சாயம் காய்ச்சும் தொழிலினர். துளுவ வேளாளர் மரபினர் இவர் மெலிந்த மேனியராயினும் துணிந்த நெஞ்சினர். வஞ்சனையில்லாதவர். முன்கோபமுள்ளவர். இவர் இதிகாச புராணங்களை நன்கு பயின்று கவி பாடுந்திறமும் கைவரப் பெற்றார். கல்வியிலேயே எப்பொழுதும் கருத்தூன்றியிருந்தாராதலால் கைத்தொழிலை மறந்தார். அதனால் வறுமை மிகுந்தது. பரிசில் கருதிப் பல இடங்களுக்குஞ் சென்று முடிவில் கொங்கு மண்டலத்தை யடைந்து அங்கு அவிநாசி என்னும் பதியில் சில காலம் தங்கியிருந்தார். அதனால் அவிநாசிப்புலவர் என இவர் பெயர் பெற்று நின்றார். மீண்டு தம் ஊரினை யடைந்தார். தமது குடும்பம் மிடிவாய்ப்பட்டு மிகவும் தளர்ந்திருப்பதைக் கண்டு இவர் உளங்கரைந்தார். அக்காலத்தில் சிவகிரியில் அரசுபுரிந்திருந்த வரகுணராமன் என்னும் குறுநில மன்னனைக் காண

வேண்டுமென்று வேணவாவோடு இவர் விரைந்து சென்றார். அவ்வமயம் அங்குச் சர்க்கரையப்பன் என்பவன் தானாதிபதியா யிருந்தான். அவன் பெயரில் இனியனாயினும் செயலில் இன்னாதவன். செருக்கு மிக்கவன். இவரைச் சிறிது மதியாது சீறி நின்றான். இவர் மறுகி நின்று தமது வறுமையை விளக்கித் தாம் கருதி வந்துள்ளதை உருகி மொழிந்தார். அவன் யாதும் இரங்காமல், தானும் ஈயாமல், அரசனையும் காணவொட்டாதபடி இவரை அகற்றி விடுத்தான். வயிறெரிச்சலோடு இவர் வைது திரும்பினார். திரும்புங்கால் ஓர் சாவடிச் சுவரில் அவனைக்குறித்து இருபா எழுதி வைத்தார். அவை அடியில் வருவன.

"நற்கவி ராசருக்கு ஈயாதமட்டி, இந்நானிலத்தில்
அக்கரையான நிதிபோய்க் கரிக்கந்தை ஆடைகட்டிக்
கற்கரைந்தாலும் கரையாத சிந்தைக் கசடனுக்குச்
சர்க்கரையப்பன் என்று ஏன் பேரிட்டான் பெற்ற தப்பிலியே?

ஒருமரக்கட்டையெனச், செத்தநாயென, ஊதுகின்ற
எருமைக்கடாப்பயல் சர்க்கரையப்பனை ஏதுக்கென்றோ
அருமைத் துரைநல் வரகுணராமன் என்னையன் என்ன
பெருமைக்குவேண்டி வைத்தானோ தன்வாசற்ப்ரதானி என்றே?"

என்று இங்ஙனம் எழுதிவிட்டு இவர் ஊரடைந்தார். அங்கு அவன் சீரழிந்தான். உபகாரிகள்பால் உதவி பெற்றதினும் உலோபிகளிடம் போய் இவர் அவதிப்பட்டதே அதிகமாயிருந்தது. ஒருமுறை வேங்கட்டராமன் என்னும் செல்வனைப் போய்க் கண்டார். அவன் வடுகர் மரபினன். கடுமனமுடையவன். பெரும் பொருளுடையனாயினும் இழிந்த இயல்பினன். அவனை அடைந்து நின்று இவர் இனிது மொழிந்தார். அவன் இதமுடனேனோக்காது மதமீறி யிருந்தான். நெடுந்தூரங்கடந்து பசித்துயரால் பதைத்து வந்திருத்தலை யறிந்தும் சிறிதும் இரங்காமல் குறும்புரையாடி முடிவில் யாதும் கொடாது விடுத்தான். அவனது கொடுமையை நினைந்து நெஞ்செரிந்து இவர் வெளியே வந்தார். வயிறெரிந்து அவன்மேல் வசை ஒன்று பாடினார். அது மிகவும் கொடியது; அடியில் வருவது காண்க.

"சிவனுள்ளளவுமே நட்டுவக் காலியும் தேளும்
  சினந்து கொட்டத்,
திருதிரெனுமுண்டவிழியிற் குளவிகொட்ட, அது
  செங்குருதி யாறுகொட்டப்,
பாவிமகனே! உனதுவாசலில் சாம்பிணப்
  பறைகள்மிக வந்து கொட்டப்,
பந்தரடி-மாரடித்து உறவினர்கள் வாய்க்கரிசி
  படிநெற்கொணர்ந்து கொட்ட,
ஆவலொடுகால்மாட்டில் உனது பெண்டாட்டிகண்
  அருவி ஒரு கோட்டை கொட்ட,
ஐயையோ என்செய்வேன் என்று மகன் நீர்மாலை
  அதனைக் கொணர்ந்துகொட்டச்,
சாவடியில் அறுதலிகள் கூடி அழ, நீ வந்து
  சப்பாணி கொட்டி யருளே
சண்டிக்குலாமனே! வேங்கட்டராமனே!
  சப்பாணி கொட்டி யருளே"

என ஒரு ஓலைச்சீட்டில் இக்கவியை எழுதி உருட்டிவிட்டு இவர் கடுத்தகன்றார். சின்னாளில் யாவும் இழந்து அவன் அடியோடழிந்தான். கரவுடையனை அவன் இல்லையென்று சொல்லியவுடனே இனி என் செய்வேம் என ஏங்கி யுளைந்து யாதொரு செயலுமின்றி இவர் இனைந்து நின்றார். கரப்பவர் சொல்லாட இரப்பவர் உயிர்போம் ஆதலால் "இல்லை" என்னும் அக் கடிய சொல்லைச் சொல்வோர் மிகவும் கொடியர் என்பதை உலகம்காண இவர் உணர்த்தி நின்றார்.

நல்குரவு, இரவு, இரவச்சம் என்னும் இவ் அதிகாரங்களில் எடுத்துக்காட்டாக வந்துள்ளவர் பெரும்பாலும் புலவராகவே நின்றுள்ளார். வறுமைக்கு உரிமையாக இங்ஙனம் அவர் மருவி நிற்றற்குக் காரணம் யாது? என்று கருதநேரும் ஆதலால் ஒரு கருத்தினைச் சிறிது ஈண்டு விரிக்க நேர்கின்றேம். "இருவேறு உலகத்தியற்கை; திருவேறு, தெள்ளியராதலும் வேறு;" என்றபடி கல்வியும் செல்வமும் இருவேறுவகை ஊழ்களானமைவன; ஆயி

னும் ஊழ் என்பது பழவினையாதலால் அதனை யகல விடுத்து அவ்விரண்டற்குமுரிய புதிய வினைகளை இங்கு அறியலாகும். கல்வி அருவமானது; செல்வம் உருவமானது; கல்வி அகத்தி லுள்ளது; செல்வம் புறத்திலுள்ளது; கல்வி மனமொருமையா லமைவது; செல்வம் வினை நிலையால் விளைவது; இங்ஙனம் மாறு பட்ட நிலையிலுள்ள இவ்விரண்டு செல்வங்களும் மக்கட்கு இன்றி யமையாது வேண்டப்பட்டுள்ளன. ஒன்றை யீட்டவல்லார் மற் றொன்றைப் பெரும்பாலும் ஈட்டல் ஒல்லார். புலவர்கள் அறிவு நிலையில் மிதந்து நிற்பாராதலால் உலக நிலையில் இழிந்து முயல இயலாது; ஆகவே பொருள் முட்டுப்பாடு என்றும் அவர்க்கு உரிமையாய் நிற்கின்றது. அதனாலேதான் துறவோர், அறவோர் களோடு ஒப்பவைத்து இவ் அறிவோர்களை அரசர்கள் ஆதரித்து வந்தனர். புரவலராய் நின்று அங்ஙனம் புரந்துவந்த அவர் இரவலர்போல இவரை எள்ளி நோக்காது இருக்கை எழுந்தும், எதிர்சென்று கண்டும், உருக்கமொடுரைத்தும், உவந்து பணிந் தும் நயந்து பேணி வந்தார். இவரும் அவர்க்கு நீதிகள் உரைத்தும், நெறிமுறையுய்த்தும், ஓதி யுணர்த்தியும், உறுதித் தோழரா யுடனமர்ந்திருந்தார். அவர் சிறிது இகழ்ந்து நடந் தாலும், சினந்து பேசினாலும்,

"மன்னவனும் நீயோ? வளநாடும் உன்னதோ?
உன்னையறிந்தோ தமிழை ஓதினேன்? — என்னை
விரைந்தேற்றுக் கொள்ளாத வேந்துண்டோ? உண்டோ
குரங்கேற்றுக் கொள்ளாத கொம்பு?" (கம்பர்)

என்று எள்ளித் தள்ளிவிட்டு இவர் துள்ளிச் செல்வர். அங் ஙனம் சென்றவரைத்தேடித் தொடர்ந்து "அறியாது செய்து விட்டேம்; பொறுத்தமர்ந்து கொள்ளவேண்டும்" என அவர் நயந்துகொண்டு வருவர். மாமனும் மருகனும் போல் செல்வரும் கல்வியாளரும் மருவிய அன்பரா யினிதமர்ந்திருந்தார். இங்ஙனம் இனிய நிலையிலிருந்த இப்புலமையானது காலவேற்றுமையால் மிக மாறுபட்டு முடிவில் சாலவும் பரிதபிக்கத்தக்க நிலையைச் சார்ந்துவிட்டது. அருமையறிய மாட்டாமல் செல்வர் பலர்

கல்வியாளரை அவமதிக்கத் துணிந்தனர்; அவரது நிலைமையை யறிந்து ஒதுங்காமல் புலவர் பலர் வலிந்து பாடி அவரால் இகழ்ந்துபட்டனர்; இப் பழி பாட்டினைக்கண்டு அறிஞர் பலர் வருந்தி நொந்தனர். அந்த வரிசையில் நின்று ஒரு புலவர் புலம்பியுள்ளபடியை அடியில் காண்க.

"அடகெடுவாய் பலதொழிலும் இருக்கக் கல்வி
அதிகமென்றே கற்றுவிட்டோம் அறிவில்லாமல்;
திடமுளமோ கனமாடக், கழைக்கூத்தாடச்,
செப்படி வித்தைகளாடத் தெரிந்தோம் இல்லை;
தடமுலைவேசையராகப் பிறந்தோம் இல்லை;
சனியான தமிழைவிட்டுத் தையலார்தம்
இடமிருந்து தூதுசொல்லிப் பிழைத்தோம் இல்லை;
என்ன சென்மம் எடுத்துலகில் இரக்கின்றோமே"

எவ்வளவு வயிற்றெரிச்சலோடு இப்பாட்டு வெளிப்பட்டிருக்கிறதென்பதை யூகித்துணர்ந்து கொள்க.

இன்னவாறு பெருந்துயரோடு பலர் இரங்கி நின்றனர்; நிற்கின்றனர். "புலவர்கள் எவ்வளவுக்கு எவ்வளவு போற்றப்படாது புறக்கணிக்கப் படுகின்றனரோ அவ்வளவுக்கவ்வளவு' அந்நாடு ஏத்தப்படாது இழிநிலையிலுள்ளதென்பது தெளிவாம்' என ஓர் உயர் நிலையாளர் உரைத்து நொந்துள்ளார். ஓர் புலவன் வறிய நிலையில் நின்று வருந்துவானாயின் அப் பழி அந் நாட்டு மன்னனையும், செல்வரையுமே சேர்வதாகும். உலகநிலைக்கும், உணர்வுநிலைக்கும் உறுதுணையாயுள்ள புலவர் நிலையைக் குறித்து ஓர் குலமகன் உரைத்துள்ளபடியை அடியில் காண்க.

"கலைமதிநாணுறச் சகல கலை படைத்துப் பிறர்க்கு நல்குங் கவிசிரேட்டத்
தலைமையுறுமவர் மிகுந்த தகுந்த வித்யாதான தன சம்பத்துள்ளோர்,
இலை என ஒன்றிரக்கின், அந்தக்குறை அரசர்க்கல்லது அவர்க்கில்லை; நல்ல
விலைமதியாமணி, தெரியாதவர், மதியாவிடினும் அது மேன்மைதானே. (1)

கைத்தனம்போல் அழியாது வித்தியாதனப் புதையல்; கற்பாந்தத்தும்
சத்துரு சோராக்கினிகள் அபகரியா; ஒருத்தருக்குத் தாமீந்தாலும்
நித்தமபிவிர்த்தி; சுகம் கீர்த்தியுண்டிவ் விதத்தகலா நிதியம் பெற்ற
வித்துவசம்பனரிடத்தில் வேந்தரே! மாச்சரியம் வேண்டாந்தானே. (2)

வாரணந் தாமரை நூலில் வசப்படமாட்டாது; உமது
சீரணமாம் சம்பத்துத் திரணம் அவர்க்கு; ஆதலினால்
பூரண பண்டிதரிடத்துப் போக்குகொர்வந்தனைப் போக்கித்
தாரணி மன்னவரே! சந்ததமவரைப் போற்றுவீரே." (3)

(பத்திரகிரியார்)

கல்வியறிவினும், செல்வ நிலையிலும் சிறந்து அரசர் பெருமானாய் நிலவியிருந்த இப் பெருந்தகையாளர், புலவர் நிலையை விளக்கி, அவர் வறுமையுற நேரின் அஃது உலகத்திற்கே ஒரு சிறுமையாம் ஆதலால் அவரை உவந்துபேணி அரசர் நயந்து ஆதரிக்கவேண்டும் என இதில் உணர்த்தியிருக்குந் திறனையூன்றி யறிக. அழியாச் செல்வமாகிய கல்வியைத் தம் அகத்தே யுடைய மக்கள் அழியும் செல்வமாகிய பொருளைப் புறத்தே பொருந்தாது வறியராகி அலமந்துழந்தமை மிகவும் அதிசயிக்கத் தக்கதே. அறிவிலிகளாய்க் கரந்து நிற்கும் இழிந்த மக்களிடம் போய் நிலைகுலைந்து நின்று சிறந்த மதிமான்கள் இரந்துபடுதல் பெரிதும் வருந்தற்குரியதாம்.

"இரக்கமில் கொடியசெல்வர் மருங்குபோய் இரப்பார்போல
உருப்பமொண்டிறைக்குங் கள்ளி நீழல் புக் கொதுங்குவாரும்;
தருக்கற நிரப்பால் எய்த்தோர், தம்மினும் வறியர் பாற் சென்று
இரப்பர்போல் இலைதீர்ந்துக்க மரநிழல் எய்துவாரும்."

(திருவிளையாடல்)

கரப்பவரிடம் இரப்புக் கடுந்துயராமென இஃதுணர்த்தி நிற்றல் காண்க இரத்தலும், கரத்தலும் ஈனம் என்பது கருத்து.

இரந்து புகுவார்பால் இல்லலென்பார் அந்தோ
பரந்து படுவார் பழி.

இரவினும் கரவு இன்னாதென்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப்பொருள்.

இரத்தலை எவ்வகையானும் எவரிடத்திலும் செய்யலாகாது. அது மிகவும் பழித்தற்குரிய இழிதொழில். அதனால் வறுமை நீங்

காது. இரந்து செல்லாதவரே யாண்டும் சிறந்து நிற்பர். மூயன்று வாழ்தலே என்றும் இனிது. சிறிது இரப்பினும் அது பெரிதும் பழியாம். கரப்பவரிடம் இரத்தல் கடுந்துயராகும். இரவினால் இன்னலேயன்றி இனிதொன்றுமில்லை. அதனைக் கனவிலும் கருதலாகாது. அது, இறப்பினும் கொடியதாதலால் அதனை அடியோடு ஒழித்தொழுகவேண்டும் என்பதாம்.

ஈளவது இரவச்சம் முற்றிற்று.

---

# 108-ம் அதிகாரம் கயமை.

அஃதாவது கயவரது தன்மை. கயவராவார் இனிய குணங்கள் யாதும் இல்லாத ஈனமக்கள். இனிவானவற்றுளெல்லாம் மிக இனிவானது என இரத்தலைக் குறித்துக்காட்டி அதனை ஒழித்தொழுகும்படி முன் உணர்த்தியருளினார்; அங்ஙனம் இரந்துவந்தவர்க்கும் இரங்கி ஈயாமல், கரந்து நின்று, இழிந்தனவெல்லாம் இயல்பாக்கொண்டு, ஒரு வழியிலும் திருந்தாமல், இழிநிலையில் பெருகி நிற்கும் கீழ்மக்களின் இயல்பினை இதில் உணர்த்துகின்றாராதலால் அதன்பின் இது வைக்கப்பட்டது. இவ்வமை இப் பொருட்பாலின் இறுதியில் வைத்தது அருட்பால் முதலிய அறநலங்கள் யாதும் இன்றி மருட்பாலராய்க் கடைப்பட்டிருத்தல் கருதி. "கயம்போல் கடையானதில்" என்பதும் காண்க.

1071. உற்றமக்கள் போல உருவொத்தார் என்சவரர்
குற்றமுற்று நின்றார் குமரேசா — பெற்றமைந்த
மக்களே போல்வர் கயவர் அவரன்ன
ஒப்பாரி யாங்கண்ட தில். (க)

இ—ள்.

குமரேசா! சவரர் மக்களைப்போல உருவொத்திருந்தும் என மிக்க கீழ்மையை மேவி நின்றார்? எனின், கயவர் மக்களே போல்வர்; அவர் அன்ன ஒப்பாரி யாம் கண்டது இல் என்க.

இது, கயவரை இழிகுணங்களால் காணலாம் என்கின்றது.

கயவர் = கீழ்மக்கள். கசந்து வெறுத்தற்குரிய இழிந்த இயல்பினர் என்றபடி. கீழோரைக் குறித்துவரும் காரணப் பெயர்கள் சில இதனடியில் வருவன காண்க.

"பல்லவர் கயவர் பதகர் நீசர்
புல்லர் பூரியர் புள்ளுவர் கையர்,
கலரே தீயோர் கண்டகர் மூடர்
அசடர் அதன்மர் முசுண்டர் சுமட்டர்
வெளிறர் அற்பர் கீழோர் பெயரே." (பிங்கலந்தை)

ஒப்பாரி என்றது ஒப்பினை. ஒப்பு ஆர் இ எனப் பிரித்து ஒப்பு நிறைந்திருப்பது என்று கொள்க. ஆர்தல் = நிறைதல். ஒப்பாவது ஒன்றனைப்போல் மற்றொன்று ஒத்து நிற்பது. மக்களே என்பதில் ஏகாரம் அவ் ஒப்புண்மையின் தெளிவுதோன்ற நின்றது.

கயவர் உருவத்தால் மக்களை ஒத்திருப்பர்; அவர்போன்ற ஒபபினை வேறு எங்கும் யாம் கண்டதில்லை என்பதாம்.

கயவர் மிகவும் இழிந்தவர்; அவரை மறந்தும் அணுகலாகாது; என்று கூற, அதனைக்கேட்டவுடனே அவர் எப்படி யிருப்பர்? என்பாரை நோக்கி உணர்த்தியபடியிது.

உருவத்தால் மக்களை ஒத்திருப்பினும் குண நிலையில் கீழ் மக்கள் பாழ்பட்டிருபபராதலால் "கயவர் மக்களே போல்வர்" என்றார். போல்வர் என்றதனால் உண்மையான மக்கட்பண்பு அவர்பால் இல்லை என்பதாயிற்று. ஆகவே அவர் மக்கட்பதடி களென்பது பெறப்பட்டது.

"மக்கள் தாமே ஆறறி வுயிரே" (தொல்காப்பியம்) என்ற படி மிக்க அறிவும், மேதக்க தன்மையும் மேவியிருப்போரே மக்களாவர்; அல்லாதவர் மாக்களே என்க.

சிங்கம் போல்வார், யானை போல்வார், புலி போல்வார் என இங்ஙனம் ஒரோவழிமக்களை ஒப்புக் கூறின் அவற்றின் தன்மை மட்டும் ஒரு புடை சிறிது ஒத்திருக்கும்; பெரிதும் ஒவ்வாது நிற்கும்; கயவரோ உருவத்தால் மக்களை முழுதும் ஒத்துக் குணங்களால் ஒரு சிறிதும் ஒவ்வாதிருத்தலால் "அவர் அன்ன ஒப்பு

யாம் கண்டது இல்" என்றார். யாம் கண்டது இல்லை என நெஞ்சில் கைவைத்து அடிகள் இங்ஙனம் கூறியது அக்கொடிய மாக்களின் வடிவொப்புமையை வியந்தென்க.

இரக்கம் ஈகை இன்சொல் அடக்கம் பொறுமை அன்பு அமைதி வாய்மை மானம் நாணம் முதலிய குணநலங்கள் யாவுமின்றிப் பாவ வினைகளையே பயின்று பூமிக்குப் பொறையாய்க் கயவர் பொங்கியிருப்பர் என்பது கருத்து.

மனித உருவில் மறைந்திருக்கும் இருகால் விலங்குகளே யாதலால் கயவரை யாதும் நெருங்கலாகாதென்பது குறிப்பு.

மக்கட் பண்பின்றிக் கயவர்கள் மிக்க தீமையை மேவியிருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சவரர் பால் உணரப்படும்.

## கதை.

சவரர் என்பவர் இற்றைக்கு இரண்டாயிரத்தெழுநூறு யாண்டுகளுக்கு முன்னர் உஞ்சை நகரின் வடபாலிருந்த குறிஞ்சி நிலப்பகுதிகளில் இருந்தவர். அம்பு தொடுத்தல், கம்பு வீசல், கவண்கல் எறிதல் முதலிய செயல்வகைகளை இவர் நன்கு பயின்றவர். கொடிய நெஞ்சினர். வன்கண்மையுடையராய் நின்று எப்பொழுதும் உயிர்கட்குப் புன்கண் புரிந்து இவர் பொங்கியிருந்தார். வழிப்போக்கர்களை இடைமறித்தடித்துச் சிறிதும் இரக்கமின்றிப் பொருளைப்பறித்து அப் பறிமுதலின் அருமை தெரியாமையால் ஈன விலைக்கு விற்று இழிந்துண்டு வந்தார். தம் கையில் அகப்பட்ட மக்கள் பிராணபயங்கொண்டு இவருடைய காலில் விழுந்து வணங்கினும் இவர் கண்ணோட்டஞ் செய்யார். கை கால் முதலிய உறுப்புக்களை வெட்டி வீழ்த்தி அவை துடிப்புறுவதைக் கண்டு இவர் களித்து நின்றார். இக்கொடியரின் இயல்புகளைக் கொங்குவேளிர் என்னும் புலவர் பெருமானார் தெளிவுறக் குறித்துள்ளார். சில அடியில் வருவன காண்க.

"பல்விலைப் பண்டம் கவர்ந்து பயம் அறியார்
சில்விலைக்கு இடூஉம் செல்லாவாழ்க் கையர்;

சுரஞ்செல் வம்பலா அருமபத மடக்கு
மாறுறு யாத்த வாணத் தாளையர்;
ஆடூஉவும் மகடூஉவும் ஆடும் அறியார்;
காடுசேர் முயற்சியர்; கைப்பட்டோர்களைப்
பாடற் பாணிப் பல்லிசை கேட்டும்,
ஆடென வணங்கிற் கருந்தலை துமித்தும்,
வீளை யோட்டின் வெருவ எய்து, அவர்
ஊனைப் பூசலொடு ஆடல்கண்டு உவந்தும்,
காட்டுயிர் காணூர் கைப்பயில் குறியொடு
வேட்டன செய்யும் வேட்டுவினைக் கடுந்தொழில்
கவர்கணை வாழ்க்கைச் சவரர்" (பெருங்கதை)

என இவர் சாற்றி நின்றார். இதனால் இவரது கொடிய நிலைமை இனிது புலனும். புல்லிய இழிமக்களாய் இங்ஙனம் இவர் பொருந்தியிருந்தும் நல்ல மக்கள் போலவே உடையணி புனைந்து உலாவித் திரிந்தார். இவரது புறத்தோற்றத்தைக் கண்டு எவரும் இவரை ஈனர் என்றெண்ணார்; அகநிலையை யறிந்தபின்னரே கயவரென்று தெளிந்து கடுத்தகன்றார். "மக்களே போல்வர் கயவர்; அவரன்ன ஒப்பாரி யாம் கண்டது இல்" என்பதை உலகம் இவர்பால் உணர்ந்து நின்றது.

உருவால் மகனெனினும் ஒண்குணமொன் றில்லான்
இருகால் விலங்கே இனிது.

கயவர் நிலைமை இதனால் கூறப்பட்டது.

1072. பண்டு கவலையின்றிப் பண்ணியனேன் வெங்களிமீக்
கொண்டு திரிந்தான் குமரேசா — கண்டுநின்று
நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர். (உ)

இ—ள்

குமரேசா! துட்பண்ணியன் ஏன் சிறிதும் கவலாது செருக்கித் திரிந்தான்? எனின், நன்று அறிவாரின் கயவர் திருவுடையர்; நெஞ்சத்து அவலம் இலர்; என்க.

இது, கயவர் கவலையின்றித் திரிவர் என்கின்றது.

கயவர் நன்று அறியார் என்பதும், அவர் அவலம் இலரா யிருப்பர் என்பதும், அவ் இருப்பிற்கு அவரது அறியாமையே காரணம் என்பதும் இதில் காட்டப்பட்டுள்ளமை காண்க.

நன்று என்றது அறம் புகழ்களாகிய உறுதி நலங்களை. உயிர்க்கு நன்மைதருந் தன்மையவாதலால் இவை நன்று என நின்றன. ஒருமையில் குறித்தது இனவுரிமை கருதி. இங்ஙனம் வருவதைச் சாதியொருமை என்ப. அறிவாரின் = அறியுமவரினும் இன் உருபு எல்லைப்பொருளது.

திருவுடையர் என்றது பாக்கியவான்கள் என்றபடி.

அவலம் = கவலை, வருத்தம். "கவலைகொள் நெஞ்சினேன் கலுழ்தரக் கடனோக்கி அவலம் மெய்க்கொண்டது" (கலி 134)

கயவர் அறிவிலிகளாதலால் அகத்துள் அவலம் இலராய்ப் பழிவழிகளில் அஞ்சாது திரிவாராயினர்.

"அறிவுடையா ரன்றி அதுபெறுர் தம்பால்
செறிபழியை அஞ்சார் சிறிதும் — பிறைநுதால்
வண்ணஞ்செய் வாள்விழியே யன்றி மறைகுருட்டுக்
கண்ணஞ்சுமோ இருளைக் கண்டு" என்பதும் காண்க.

மேல், கயவரின் உருவநிலையை உணர்த்தினர்; இதில், அவரது அகநிலையை உணர்த்துகின்றார்.

உறுதிநலங்கள் தெரிந்து வழுவாதொழுகும் மேன்மக்களினும் கீழ்மக்கள் பாக்கியவான்கள்; ஏன்? எனில், அவர்போல உளத்தில் கவலையின்றி இவர் இருப்பர் ஆதலால் என்பதாம்.

உறுதி நலங்களை ஆராய்ந்து விரதநிலைகளைக் கைக்கொண்டு புகழறங்களை வளர்த்து நெறிவழுவாது நாளும் ஒழுகிவந்தாலும் தம் ஒழுக்கம் கடைபோகச் செலுத்தப்படுமா? இடையே ஏதேனும் பிழைகள் புகுந்துவிடுமா? பழியடைந்துவிடுமா? என இன்னவாறு மேன்மக்கள் உளம் உளைந்து நிற்பர்; கீழ்மக்கள் ஒரு நலமும் கருதாது பழி பாவங்களைப் புரிந்து இழி நிலையில் திரிந்தும் தம் நிலைமையை நினைந்து சிறிதும் கவலாது உளங்களித்துத் திரிவாராதலால் நெஞ்சத்து அவலம் இலர் என்று குறித்து அந்த ஏதுவால் அவரினும் இவர் திருவுடையர் என்றார்.

திருவிலிகளாகிய கயவரைத் திருவுடையர் எனக் கூறி அவரைப் படுகுழியிலிறக்கியிருக்கும் அழகைப் பார்க்க.

உளக்கண் குருடுபட்டு முழு மூடமாய்க் கயவர் முனைந்து நிற்பராதலால் நெஞ்சில் யாதும் கவலாது தீதுாக்கித் திரிவர் என்க. "களிமிகுத்திருப்பர் தெளிவிலாமையின் மேல் காரியம் கருதுறு நரரே" என்பதுங்காண்க.

"இனி ஏது எனக்கு உன் அருள் வருமோ? எனக் கருதி ஏங்குதே நெஞ்சம் ஐயோ! இன்றைக்கு இருந்தாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திடம் இல்லையே; அநியாயமா யிந்த உடலை நான் என்று வரும் அந்தகற்கு ஆளாகவோ"?

(தாயுமானவர்)

"வளைத்துநின்று ஐவர் கள்வர் வந்தெனை நடுக்கஞ்செய்யத்
தளைத்துவைத்து உலையை ஏற்றித்தழலெரி மடுத்த நீரில்
திளைத்து நின்று ஆடாநின்ற ஆமைபோல் தெளிவிலாதேன்
இளைத்துநின்று ஆடுகின்றேன் என்செய்வான் தோன்றினேனே"

(அப்பர்)

"இனிப்பிரிந்து இறையும் இருக்கலேன் பிரிவை எண்ணினும் ஐயகோ மயங்கிப், பனிப்பிலென்னுடம்பும் உயிரும், உள்ளுணர் வும், பரதவிப்பதை யறிந்திலையோ? தனிப்படு ஞானவெளியிலே இன்பத்தனிநடம்புரிதனித்தலைவா! கனிப்பயன் தருதற்கிது தகு தருணம் கலந்தருள் கலந்தருள் எனையே" (இராமலிங்கர்)

"வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே! வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமல் காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடுனக்குச் சொல்கின்றேன் பல்காலும்
வீழ்கின்றாய் நீஅவலக்கடலாய வெள்ளத்தே" (மாணிக்கவாசகர்)

நன்றறிந்த இவர் யாதும் வழுவாது உயர் நிலையில் நின்றிருந்தும் உய்தி கருதித் தம் உள்ளத்து அவலமுடையராய் உளைந்திருத்தல் காண்க. புண்ணிய சீலராய இவர் இங்ஙனம் எண்ணி ஏங்கவும், பாவ வினைகளில் மண்டி நிற்கும் கயவர் யாதும் கவலாது களித்து நிற்பர் ஆதலால் அவர் திருவினர் என ஒரு வழியில் புகழ்வது போல் பொதிந்து வைத்து மறைமுகமாக இங்ஙனம் அவ் அறிவிலிகளை இகழ்ந்தருளினார்.

தாம் அடையப் போகிற அவநிலைமை யறியாமல் மகிழ்ச்சிமீக் கூர்ந்து கீழ்மக்கள் மதத்துத் திரிவர் என்பது கருத்து.

ஒரு சிறிதும் கவலாது பழிவழிகளில் புகுந்து கயவர் களிமிகுத்திருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துட்பண்ணியன்பால் உணரப்படும்.

## கதை.

துட்பண்ணியன் என்பவன் இற்றைக்கு ஆயிரத்திருநூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாடலிபுரத்திலிருந்த பசுமான் என்னும் வணிகனுடைய மகன். இவன் மிகவும் இழிந்த இயல்பினன். பருவம் நிரம்பியும் தன மரபிற்குரிய தொழில் முறைமையைச் சிறிதும் கருதாமல் அழிமதியுடையனாய் இவன் களிமிகுத்திருந்தான். கொடியவினைகளைக் கூசாது செய்தான். இளஞ்சிறார்களைக் கவர்ந்துகொண்டு போய் அணிகலங்களை உரிந்துகொண்டு நீர் நிலைகளில் தள்ளித் துள்ளத்துடிக்கக் கொன்று ஒன்றும் அறியாதவன்போல் இவன் கள்ளம் புரிந்து நின்றான். கள்ளுண்டல் களவாடல் கொலைபுரிதல் முதலிய பழிவினைகளைப் பயமின்றிச் செய்துவந்த இவன் ஒருநாள் தாமரைத் தடாகம் ஒன்றில் ஓர் மாமறைச் சிறுவனைக் கொல்லத்துணியுங்கால் காவலரிருவர் கண்டு கொண்டனர். உடனே கைப்பிடியாகப் பிடித்து அரசன் முன் இவனைக் கொண்டுவந்து நிறுத்தினர். பண்டுசெய்த படு கொலைகளுக்கெல்லாம் இவனே உரியன் என்று தெரிய வந்தது. இவன் நிலையினையறிந்து அவ் வேந்தன் நெஞ்சம் கலங்கினான். இவனுடைய தந்தையாகிய பசுமான் நல்ல நீதிமான்; நயத்தகு பண்பினன்; அத்தகைய புண்ணிய சீலனிடமிருந்து இப் புலை மகன் எப்படித் தோன்றினான்? என்று பொங்கி வெகுண்டு அவ் வணிகனை வரும்படி செய்து அரசவையில் நிறுத்தி நிகழ்ந்ததைப் புணர்த்தி, இவனை யாது செய்வது? என அரசன் வினவினான். அனைவரும் வருந்தி அவனை எதிர்நோக்கி நின்றனர். அவ்வமயம் அவன் ஓதியன ஈண்டு உணரத்தக்கன.

"பல்வளம் பயில் பாடலிபுத்திரச்
செல்வ மைந்தரைச் செற்ற இத் தீயனுக்கு
ஒல்வது ஏது? என்றுணர்வதும் உள்ளதோ?
கொல்வதே முடிவு; அன்றியும் கூறுகேன்: (க)

வாழிமன்னவ! வாதைசெய்யாது நீ
ஏழை என்னினும், இற்றொழிவான் இவன்
காழுறுங் கொலை அக்கொலை காரரைச்
சூழுமென்றிடும் தொன்மொழி பொய்க்குமோ? (உ)

சேயினோரையும், சிற்றிடையாரையும்,
காயுறாத கடும்பினுள்ளோரையும்,
பாயும் வேலைப்படியில் ஓர் பண்டம் என்று
ஆய்வரோ, நல்லறம் பொருள் என்பவர்? (ங)

பன்னி என்பல? பாவி இட்டபண்ணியன்
தன்னைக்கொன்று தலையணி செய்திடாது
என்னை நோக்கி விடுக்கில் இத்தீவினை
பின்னை என்குலம் வேரிற் பெயர்க்குமால்; (ச)

அண்ணிசெய் மைந்தரை நீரில் அமிழ்த்திடும்
பண்ணியினின்ற இட்டபண்ணியன் சென்னியைத்
துண்ணிவுசெய்வதே தொல்லறம் என்றனன்;
வணிகர்சோன் பசுமான் எனும நீதிமான்." (ரு)

(சேதுபுராணம்)

நடுவுநிலைமையோடு இங்ஙனம் அவன் உரைத்ததைக் கேட்டு அரசன் உளமிக மகிழ்ந்தான். அவனுடைய தகவுக் கிரங்கி இவனைக் கொலைசெய்யவில்லை; ஆயினும் தன் நாட்டிலிருக்கலாகா தென்று இவனை ஓட்டிவிட்டான். இவன் அயல்நாடு புகுந்தான்; அங்கும் பழிவினைகளையே நயந்து ஒருகவலையுமின்றி உங்களித்துத் திரிந்தான். முடிவில் கொடுந்துயரடைந்து குன்றிமடிந்தான். புகழ் அறங்களில் நிலைவழுவாது நின்ற தந்தை முதலாயினோர் சிறுபழி நேரினும் சிந்தை கவன்று நிற்ப இவன் சிறிதும் கவலாது பெரும்பழிகள் புரிந்து சீரழிந்தொழிந்ததை நினைந்து

அனைவரும் வியந்து நின்றார். கயவர், நெஞ்சத்து அவலம் இலராய் நிமிர்ந்து திரிந்து இழிந்து தொலைவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

யாதும் கவலா தவமே துணிந்துகீழ்
தீத்து புரியும் திமிர்ந்து.

கயவர் கவலையின்றி களித்துத் திரிவர் என்பது இதனால் கூறப்பட்டது.

1073. உள்ளியவா றெல்லாம் ஒழுகினான் பஞ்சகன்முன்
கொள்ளியென நின்றேன் குமரேசா—தெள்ளிய சீர்த்
தேவ ரனையர் கயவர் அவருந்தாம்
மேவன செய்தொழுக லான். (௩)

இ—ள்.

குமரேசா! நெஞ்சு போன படியெல்லாம் பஞ்சகன் ஏன் நிமிர்ந்து திரிந்தான்? எனின், கயவர் தேவர் அனையர்; அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான் என்க.

இது, கயவர் கருதியபடியெல்லாங் களித்துத் திரிவரென்கின்றது. மேவன = விரும்புவன. மேவல் = விரும்புதல்.

அவரும் என்றது கயவரை. உம்மை இறந்தது தழீஇயது. கயவர், தேவர் அனையர் என்று சொன்னவுடனே என்ன வகையில் அவர் ஒப்பு? என்று எதிர்ந்து வினவ "மேவன செய்தொழுகலான்" என்று இகழ்ச்சி நயந்தோன்ற ஏதுவை இங்ஙனம் இணைத்தருளினார்.

தாம் விரும்பியவற்றை யெல்லாம் விரும்பியவாறே விரைந்து செய்து ஒருவாம்பினும் கட்டுப்படாமல் கயவர் நிமிர்ந்து நிற்பராதலால் சிறந்த தேவரோடு ஒருநிகராக அவர் சேர நின்றார். இழிந்த மனப்பான்மையுடைய அவரது ஈன நிலைமை உயர்ந்தாரோடு ஒப்பவைத்து உள்ளூர இகழ்ந்து உணர்த்தியபடியிது.

மேல், கயவரின் மனநிலையை உணர்த்தினார்; இதில், அவரது செயல் வகையை உணர்த்துகின்றார்.

தாம் விரும்பியபடியெல்லாம் கயவர் விழைந்து திரிவராதலால் அவர் தேவர்போல்வர் என்பதாம்.

தேவர்கள் புண்ணியப் பேறுடையவர்களாதலால் தம்மை நியமிப்பாரின்றித் தமக்குத் தாமே தலைவராய் நின்று தாம் விழைந்தபடியெல்லாம் மகிழ்ந்து திரிந்து விளங்கி நிற்பாராகலான் அவர் மேவன செய்தொழுகு மேன்மையாளர் என மேவி நின்றனர்; உயரிய வழியிலமைந்துள்ள அத்தகைய செயல் நிலைகள் கயவர்பால் இழிந்த நிலையிலமைந்துள்ளன ஆதலால் அச் செய்கையை ஒரு புடை ஏதுவாக எடுத்துக்காட்டி அவரைத் தேவரனையர் என்றார். இது புகழ்வது போலப் பழித்ததென்க. இங்ஙனம் வருவதை அணி நூலார் வஞ்சப் புகழ்ச்சி என்பர்.

பாவகாரிகளாகிய கயவரைத் தேவரனையர் எனக் குறிப்பா யிகழ்ந்து வைத்து அவரது தீவினைகளின் நிலைகளை இங்ஙனம் உணர்த்தியருளினார். வருங்கேட்டை அறியாமல் மனம்போனபடியே கயவர் மதத்துத் திரிவர் என்றபடி.

“களைப்பினும் பல்காற் கனல்சுட விட்டில்
விளக்கத்துப் பின்னும் விழுந்துயிர் மாயும்;
அளப்பில் துயரத் தழுந்தினும் கீழ் பின்னும்
களித்துவிழும் காமக் கனல்” என்பதும் காண்க.

பழி பாவங்களுக்கு அஞ்சாமல் தம் நெஞ்சு போனபடியெல்லாம் கயவர் களித்துத் திரிவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ் வுண்மை பஞ்சுகன் பால் உணரப்படும்.

## கதை.

பஞ்சுகன் என்பவன் இற்றைக்கு எண்ணூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டி நாட்டிலே தோகைமலை என்னும் ஊரிலிருந்தவன். இவன் ஈரமில்லாத இழிந்த நெஞ்சினன். அப் பகுதியி லிருந்த குறிஞ்சி நில மக்களுக்குத் தலைவனாகி நின்று சிறிய செயல்கள் பல செய்து திரிந்தான். தன் கண்ணெதிர்ப்பட்ட அழகிய பெண்கள் எவராயினும் அவர்மேல் கடுங் காதல்கொண்டு வலிந்து புகுந்து கருதியபடி நுகர்ந்தும், அழிவழக்காடியும், இழிமொழி கூறியும், பழிவழிகளில் நாளும் இவன் களிமிகுத்து நின்றான்

ஒருநாள் மதங்கி என்னும் ஓர் மங்கையைக் கண்டான். அவள் பேரழகும் பெருந்தன்மையும் சேரப்பெற்றவள். அவளுடைய கணவன் பெயர் நாகன். அவனுமிக நல்லவன். இருவருமருவி நெறி வழுவாமல் நின்று இல்லறம் புரிந்துவந்தார். அப் பதி விரதையைக் கலந்து மகிழ இப் பதகன் விழைந்தான். தன்னுலானவகையும் அடுத்தடுத்து அவளைக் கெடுக்கப் பார்த்தான். அவள் யாதும் இசையாது தடுத்து விடுத்தாள். முடிவில் இக் கொடியவன் ஓர் சதியாலோசனை செய்தான். அக் கொழுநனைக் கொன்றொழித்தால் யாதொரு தடையுமின்றி அவ் அழகியைக் கொண்டு வரலாமென்று குறித்து நின்றான். இத் தீயவன் துணிந்து நிற்குங் குறிப்பினை அத் தூயவரிருவருமக் குறிப்பால் அறிந்துகொண்டாராதலால் எவரும் அறியாவகை ஒரு நாளிரவு அவ்வூரை விட்டகன்று அயலிடந்தங்கி இறுதியில் திருப்பெருந் துறையை யடைந்து அங்கோர் இருப்பிடத்தில் இருந்தார். நிகழ்ந்ததைத் தெரிந்து இக் கயவன் சினந்தான்; சில மூர்க்கருடன் எழுந்து பலவிடங்களிலும் தேடி உளவறிந்து வந்து முடிவில் அவரிருப்பிடத்தை யடைந்தான். அவ் வமயம் நாகன் வெளியே வந்தான். அவனைக் கண்டவுடன் இவன் கடுத்து விரைந்து துடுக்கான மொழிகள் சில சொல்லி நெருங்கினான்.

"எடா! நீ எனைத்தப்பி இங்குற்றாய் உய்திகொலோ?
தேடவரும்பொருள் இறைவற்சேர்வதெனை உணராயோ?
கூட மனைவியைக் கொடுத்தி! கொடாயேல், உன்னுயிர் வீப்பன்;
மூட! விடுத்தொழிதியென மொய்படைஞ ரொடு வளைத்தான்"

இங்ஙனம் வளைத்த வுடனே அவன் மறுகி நடுங்கினான். உள்ளிருந்த அவளும் இவன் துள்ளி நிற்பதை நோக்கி உள்ளம் பதைத்தாள். கற்பழித்து விடுவான் என்று கலங்கி நொந்தாள்; அப்பதியிலெழுந்தருளியுள்ள அம்பிகையை நினைந்து அகங் குழைந்து துதித்தாள்.

"புலிவலையப் பதைக்குமான் போற்பதைக்குங் குறகொடியும்,
மெலிவமைநின் மகட்கிரங்கவேண்டும் யோகாம்பிகையே!
வலியவன்பன் மூர்க்கரொடும் வளைத்தனன்யான் என்செய்வேன்!
கலிபொரு மற்றவற்றுாகது என் கற்புநிலை கா என்றாள்;

வருந்தாமே உலகனைத்தும் ஈன்றெடுத்த மாதாவே!
பொருந்தாதான் எனைத்தீண்டின் போவதொழியாதென் உயிர்;
அருந்தாகஞ் சயின்றவர்பால் அமர்ந்தருள் போகாம்பிகையே!
சருந்தார் வண்டமர் குழலாய்! காப்பதுநின் கடன் என்றாள்''
(திருப்பெருந்துறைப்புராணம்)

இவ்வாறு அந் நங்கை துதித்துநின்றபொழுது இறைவன் திருவருளால் கூரியவாள் ஒன்று அவளது கொழுநன்கையில் குதித்து நின்றது. உடனே அவன் கொதித்துப் பாய்ந்து அக் கொடியனைக் கொன்று வீழ்த்தினான். அவன் வென்று நின்றதைக் கண்டு அனைவரும் வியந்து மகிழ்ந்தார். ஒரு கட்டுப்பாடுமின்றிப் பட்டிமாடுபோல் வேண்டியபடியெல்லாம் விழைந்து திரிந்த இவன் மாண்டு தொலைந்து வன்பழி யடைந்தான். கயவர் மேவன செய்தொழுகிப் பாவகாரிகளாய் வீவர் என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

**வேட்டவா றெல்லாம் விழைந்து திரிந்துகீழ்**
**கோட்டிகொண் டாடும் கதித்து.**

கயவர் விழைந்தபடி திரிந்து இழிந்துபடுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

1074. சேர்ந்த சிறியர்முன் செம்மாந்து சேகனேன்
கூர்ந்து மிகுந்தான் குமரேசா — தீர்ந்த
அகப்பட்டி யாவாரைக் காணின் அவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ். (௪)

இ—ள்

குமரேசா! தீயனசெய்யும் சிறியரைக் கண்டபொழுது சேகன் ஏன் அவர்முன் தன்னை மிக வியந்து நின்றான்? எனின், அகப்பட்டியாவரைக் காணின் கீழ் அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும் என்க.

இது, கீழ்மக்கள் நிலையில் இறுமாப்பர் என்கின்றது.

பட்டி என்றது திருட்டுச் செயலை. அஃதாவது களவு காமம் முதலிய பழிவழிகளில் உளங்கூசாது ஒளிந்து திரிதல் என்க. விளைபுலங்களிலுள்ள பயிர் முதலியவற்றைக் களவாகப் புகுந்து கவர்ந்து தின்னும் காலியைப் பட்டிமாடு என்பர். "தடுக்குநர்க்கு அடங்காது இடுக்கண் செய்யும், பட்டி அஞ்சினுக்கு அஞ்சி" (மருதூர்மும்மணி) "நோதக்க செய்யும் சிறு பட்டி" (கலித்தொகை) "பட்டிமாக்கள் சட்டுரை பகரும்" (பெருங்கதை) "பட்டிமை உரைத்த தோராள்" (சிந்தாமணி) இவற்றுள் பட்டி உணர்த்தி நிற்கும் பொருளை யறிக.

அகப்பட்டியாவார் = சிறிய களவாணிகள். அகம் என்பது உள்ளிடத்தை உணர்த்திவரும் ஆதலால் ஈண்டுச் சிறிய சுருக்கத்தின்மேல் நின்றது. அவரின் = அப்பட்டி மக்களினும். இன் உருபு எல்லைப் பொருளது. மிகப்பட்டு = மிகுதியாளனாய் மேம்பட்டு. செம்மாக்கும் = இறுமாந்து நிற்கும். செம்மாத்தல் = இறுமாத்தல். "செம்மாந்ததுபோல் மதைஇனள்" (கலி) "சிங்கம்போல் — செம்மாந்திருந்தான்" (சிந்தாமணி)

மேல், கயவர் மனம்போனபடியெல்லாம் மதத்துத் திரிவர் என்றார்; இதில், தீயவினைகளில் அவர் செருக்கி நிற்பர் என்கின்றார்.

சிறிய தீவினையாளனைக் காணின் அவரினும் தான் பெரியனாகச் செருக்கிக் கீழ்மகன் பெருகி நிற்பன் என்பதாம்.

"மூர்க்கரை மூர்க்கர் முகப்பர்" என்றபடி தீயரைக் கண்டபோது தான் தீப்பர் தம்பாடு தோன்றப் பிலுக்கிச் செருக்கு மீக்கூர்ந்து செம்மாப்பர் ஆதலால் "பட்டியாவாரைக் காணின் கீழ் செம்மாக்கும" என்றார்.

கள்ளுண்டல் களவாடல் பொய்த்தல் வியபிசரித்தல் முதலிய பழிவழிகளில் திறமைகாட்டித் தம் பெருமையே பேசிக் கயவர் களிமிகுத்து நிற்பர் என்றபடி. இதனால் கீழ்மக்களது பாழ்பட்ட நிலைமை இனிது புலனும். தனித்து நின்றபொழுதினும் தன் இனத்தைக் கண்டபொழுது கயம் களித்து நிற்கும் என்பதாம்.

"கழுத்தை காவெனக் கண்டுநின்றாடிய அலகைத்
தொழுது மீண்டும் அக்கழுதையைத் துதிசெய அதுதான்
பழுதிலா நமக்கார் நிகர் என மிகப்பகரும்
முழுதுமுடைமை மூடர் கொண்டாடிய முறைபோல்"

உஞ்சையில் ஒருமுறை ஒரு கழுதை பெருங்குரலெடுத்துக் கத்தியது; அதுபொழுது அருகே கேட்டிருந்த இழிபேய் ஒன்று தன்னினும் அது உயர்ந்த தொனியுடையதென்று வியந்து அதனை நயந்து பணிந்தது; பணியவே அவ் வேசரி தான் மிக மேம்பட்டதாக நினைந்து பெருஞ்செருக்கடைந்தது; அதுபோல் கீழ்மக்கள் இழிமக்களைக் கண்டவுடன் பழிவழியில் அளவுறத் தருக்கி உளமிக மகிழ்வர் என இது உணர்த்தி நிற்றல் காண்க.

இழிந்த காரியங்களில் உள்கூசாது வளம் பல பேசிக் கீழ்மக்கள் இறுமாந்திருப்பர் என்பது கருத்து.

சிறிதும் நாணமில் தீயநெறிகளில் கயவர் செருக்கி நிற்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை சேகன்பால் உணரப்படும்.

## கதை.

சேகன் என்பவன் காசியின் அருகிருந்த அவிமுத்தம் என்னும் நகரிலிருந்தவன். இவன் அழிமதி யுடையவன். கழிபெருங் காமி. சிறியர் சிலரைத் துணைசூழ வைத்து எப்பொழுதும் பழி வினைகளைச் செய்து இவன் களித்திருந்தான். தன் கண்ணில் பட்ட அழகிய மங்கையர் எவராயினும் அவரைக் கலந்து மகிழ இவன் விழைந்து நின்றான். ஒரு கட்டுப்பாடுமின்றிப் பட்டிமாடுபோல் தான் விரும்பியபடி யெல்லாம் இவன் புரிந்து திரிந்தான். கீழ்மையாளனாய் இங்ஙனம் வளர்ந்து வருங்கால் ஒருநாள் சுதர்மா என்னும் விழுமிய நங்கையைக் கண்டான். அவள் கபீர்தாசருடைய அருமைத் திருமனைவி. பேரழகினள். பெருங்குணமுடையவள், கணவனுரை கடவாக் கற்புடைத் தேவி. அப்பதிவிரதையைக் கலந்து மகிழவேண்டுமென்று காதல் மீக்கூர்ந்தான். வஞ்சகங்கள் பல செய்து அவளை வசப்படுத்த முயன்றான். யாதும் முடியவில்லை. இவ் ஈனனது இழி

நிலைமையை அம் மானநலமுடையவள் அறிந்திருந்தும் ஞான சீலராகிய தன் நாயகனிடம் யாதும் உரையாமல் அடங்கி யிருந் தாள். இங்ஙனம் இருப்ப ஒருநாள பாகவதர்கள் சிலர் அவர் வீட்டிற்கு வந்தார். அவ்வமயம் கொடிய வறுமை குடிபுகுந் திருந்ததாதலால் நுகர் பொருள் யாதும் இல்லில் இல்லை. இல்லை யாயினும் அரிபத்தர்களிடம் பெரும பித்தராய்ப் பெருகி நின்று ராதலால் எப்படியும் அவர்க்கு விருந்து செய்துவிடவேண்டும் என்று விரைந்து துடித்து வெளியே சென்று பலவிடங்களிலும் நாடி ஒன்றும் அகப்படாமல் முடிவில் இவனிடம் வந்து சிறிது பொருள் தரும்படி உருகி வேண்டினர். அதற்கு இவன், நீர் விரும்பியதைத் தருகின்றேன்; எனக்கு ஒன்று தருவீரா? என் றான். ஏழையாகிய யான் உமக்கு யாது தரவல்லேன் என்று உள்ளம் இரங்கி அவர் ஓதி நின்றார். உம்மிடம் உள்ளதுதான் என மீண்டு இவன் உரைத்து நின்றான். அஃது என்னை? என் றார். “உமது பெண்டாட்டியை ஒருநாள் இரவு முழுவதும் யான் கலந்து நுகர நீர் இசைந்து கொடுப்பீரா?” என்று இக் கொடியவன் கூசாது கேட்டான். மெய்யுணர்வினராய அவர் இவ் வெய்யவுரையைக் கேட்டவுடனே முதலில் வெருண்டா ராயினும் திருவருளை நினைந்து தமது நிலைமையை நொந்து சரி யென இசைந்து விரைவிலகன்றார். தம் கருத்து முற்றுமென்று காமம் தலைக்கொண்டு இரவினை எதிர்நோக்கி இவன் இனைந்திருந் தான். இறைவனருளால் அத் தீது யாதும் நிகழாதொழிந்தது. அன்றிரவு அடியும் மிதியும்பட்டு இவன் அல்லல் பல அடைந் தான். அந்நல்லவளை விழைந்து இவன் சொல்லிய வார்த்தையை யறிந்து பாவி என அனைவரும் இவனைப் பழித்து வைதார். எல் லாரும் எள்ளி வைதாலும் உள்ளஞ் சிறிதும் நாணாமல் உள்ளிய படியெல்லாம் இவன் துள்ளித் திரிந்தான். தன்னைப்போல் கெட்டவழிகளில் திரியும் பட்டிமக்களைக் கண்டபொழுது தன் திறங்களை வரம்பு மீறிக் கூறிப் பெரும்பிலுக்கோடு இவன் இறு மாந்து நின்றான். “அகப்பட்டியாவாரைக் காணின் அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும் கீழ்” என்பதை உலகம் இவன்பால உணர்ந்து நின்றது. விரிவைத் தாசர் சரிதையில் காண்க.

ஈன வழியில் இறுமாந்து வெங்கயவர்
மானமின்றி நிற்பர் மருண்டு.

பழிவினைகளில் கயவர் களிமிகுந்திருப்பர் என்பது இக ருல் கூறப்பட்டது.

---

1075. நீறணிந்து நல்ல நெறியினன்போல் நீமனேன்
கூறிமுன் நின்ருன் குமரேசா — மாறமைந்த
அச்சமே கீழ்கள தாசாரம் எச்சம்
அவாவுண்டேல் உண்டாஞ் சிறிது. (ரு)

இ-ள்.

குமரேசா ! பொருளை அவாவி நல்ல ஆசாரமுடையவன் போல் நீமன் ஏன் நீறணிந்து நின்ருன்? எனின், கீழ்களது ஆசாரம் அச்சமே; எச்சம் அவா உண்டேல் சிறிது உண்டாம் என்க.

இது, கயவரது ஒழுக்கம் இன்னவகையில் இருக்கும் என்கின்றது. மாறு அமைந்த = பகை நிறைந்த.

அச்சம் = பயம். ஏகாரம் தெளிவுதோன்ற நின்றது.

எச்சம் = மீதம். அவா = ஆசை. ஆசாரம் = ஒழுக்கம்; நூல்முறையை ஆசரித்து மேலோர் ஒழுகிவருமுறைமை ஆதலால் இது ஆசாரம் என நின்றது. இது உள் ஒழுக்கம் எனவும், புற ஒழுக்கம் எனவும் இருவகைப்படும். முன்னது வஞ்சமின்மை, வாய்மை, பிறர்மனை நயவாமை முதலிய அறநலங்களாலமையும்; பின்னது இனிய முறையில் உடம்பைப் புனிதமாக வைத்து நீறணிதல் முதலிய சீர் நிலைகளால் இயையும் என்க.

கீழ்மக்கள் அநாசாரமுடையவராதலால் அவர்பால் ஆசாரம் உண்டாகாது; ஒருவேளை உண்டாயின் அது பயம் காரணமாக வந்திருக்கும் என்பார் 'கீழ்களது ஆசாரம் அச்சமே'' என்ருர். அவாவைப் பின்னர் வைத்தது அச்சத்தினும் ஏதுவில் அது தாழ்ந்திருத்தல் கருதி. அடி உதைகளுக்கே முக்கியமாய்ப் பயந்து கீழோர் ஆசாரம் செய்வர் என்பதாம்.

மேல், தீயவழியில் கயவர் செம்மாந்திருப்பர் என்றார்; இதில், நல்ல ஆசாரம் இயற்கையில் அவர்க்கு இல்லை என்கின்றார்.

கயவரது ஒழுக்கம் அச்சமே காரணமாய் அமைந்து நிற்கும்; அஃதில்லையாயின் ஆசை ஏதுவால் சிறிது இசைந்திருக்கும் என்பதாம்.

நிமித்தங்களால் தோன்றிய அவ் ஆசாரமும் பெரிதாய் நெடிது நில்லாது என்பார் சிறிது என்றார்.

ஆசாரமானது உயிர்க்கு உயர் நிலை தர வல்லதாய் மேன்மக்கள் பால் மேவியிருக்கும் மேன்மையுடையதாதலால் அது கீழ்மக்கள்பால் இயல்பாக உண்டாகாதென்க.

"ஆசாரம் செய்வாராகில் அறிவொடு புகழும் உண்டாம்;
ஆசாரம் மேன்மையாயின் அவனியில் தேவராவார்;
ஆசாரம் செய்யாராகில் அறிவொடு புகழுமற்றுப்
பேசார்போல் பேச்சுமாகிப் பிணியராய் நரகில் வீழ்வார்"
என்னும் இந்நூல் ஆசாரத்தின் அருமை அறியலாகும்.

இத்தகைய ஆசாரம் கயவர்பால் இயற்கையில் இராது; அரசன் முதலாயினோர் தண்டிப்பரே என்னும் பயத்தினாலும், தனக்கு ஏதேனும் பொருள் வருவாய் வருமே என்னும் ஆசையினாலும் ஒரோவழி தோற்றமாத்திரத்தில் உண்டாகுமேயன்றி உண்மையில் இல்லை என்பார் அச்சம் அவாவுகளை இணைத்து வைத்து இங்ஙனம் உணர்த்தியருளினார். அனுமான் அடிக்குப் பயந்து "அரி அரி" என்று அரக்கர் உரைத்ததுபோல் அச்சம் பற்றி அமயம் நோக்கிக் கயவர் ஆசாரம் செய்வர் என்க.

புறக்கோலம் கொண்டு நல்ல ஒழுக்கமுள்ளவர்போல் கயவர் தோன்றினாராயின் அத் தோற்றத்திற்குக் காரணம் அச்சம், அல்லது ஏதேனும் ஓர் இச்சை அவருள்ளத்திருக்கும் என ஊகித்தறிந்து கொள்ளவேண்டும் என்பது இதன் திரண்ட பொருளாம்.

ஆசாரத்தை உலகம் விரும்பி மதிக்கும்; மதிக்கவே அதனால் பொருள் வரவு நேரும்; ஆகவே அவ் வருவாயை அவாவி காரியார்த்தயாகக் கயவர் ஆசாரம் புரிவராதலால் "அவா உண்டேல் கீழ்களது ஆசாரம் சிறிது உண்டாம்" என்றார்.

இரவெலாம் காமக்கணிகையர் முயக்கி லின்பமுற் றியற்பகலெல்லாம்
குரவரா யணிவெண் ணீற்றுருத்திராட்ச கோலமார்ச் சாலமாங்குழைவும்
புரவுபாவனையும் தேவதார்ச்சனைதாம் பண்ணல்போல் உருப்பல பரப்பி
விரவுமா மணிதொட்டாட்டலும் பார்க்கின் மிகக்கொடிதிவர் வஞ்சவேடம்

நின்றந்திரீக்குடத்தின் மலமுறப்புறத்தி னீர் கொடு கழுவினனிகர்ப்ப
அகத்துண்டைத் தன்புர்துடைத்துத்தம்முளத்தில் அழுமலமிருக்கத்தண்புனலால்
புறந்துடைத்தங்க முழுதும் வெண்ணீற்றைப் பூசணிக்காயெனப்பொதிந்து
பறந்துபுற்பலர்கைப்பொருள்கொளச்சைவப்பழங்கள்போன்றவரிவர்பலரால்
(பிரபோதச்சந்திரோதயம்)

பழிபொழுக்கமைந்து இழி நிலையிலிருந்தாலும் பொருளை அவாவி ஆசாரம் பூண்டு விழுமிய சீர்போன்று அழிமதியாளர் இருப்பர் என இஃதுணர்த்தி நிற்றல் காண்க.

இச்சை அச்சங்களாலன்றி நல்ல ஆசாரங்கள் கீழ்மக்கள்பால் இயற்கையில் இல்லையாம் என்பது கருத்து. ஆசைபற்றியே கயவர் வஞ்சமாக ஆசாரங்கொள்வர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை நீமன்பால் உணரப்படும்.

## கதை.

நீமன் என்பவன் திருமுனைப்பாடி நாட்டிலே மாரமங்கலம் என்னும் ஊரிலிருந்தவன். இவன் வஞ்ச நெஞ்சினன். களவு பொய் காமம் முதலிய இழிநிலைகளில் இவன் அளவுமீறித் திரிந்தான். கரவுபல புரிந்து பருவமங்கையர் பலரை மருவி மகிழ்ந்தான். அவ்வளவிலமையாமல் தான் பழிவழியில் தேடிய பொருள் முழுவதையும் பரத்தையர்க்குக் கொடுத்து இரவுபகலறியாது வரன்முறையின்றிக் காம நிலையில் இவன் களிமிகுந்திருந்தான். இவனது இழிசெயல்கள் மிகவும் அருவருக்கத்தக்கன. அழிமதியாளனாய் அவம் புரிந்து நின்றான்.

"கானகவேட்டமாடிக் கடுங்கொலை களவு செய்து,
தானமுமழிந்து மானம் தவறியும் தவறுன் காயம்;
ஞானமங்கையர்பால் ஊனுற, துவசமங்கையர்பால் கள்ளும்,
ஈனமங்கையர்பால் ஊனும், போகமுமிசைவதானுன்."

இன்னவாறு ஈனநிலையில் இழிந்து திரிந்து வன்கண் வினைஞப் இவன் வளர்ந்து வந்தான். அக்காலத்தில நரசிங்க முனையரையர் என்னும் குறுநில மன்னன் சிவநேசமிகவுடையனுய்ச் சிறந்திருந்தான். அவன் நல்ல சீலமுள்ளவன். சைவ சின்னங்களுள் திருநீற்றில் பெருவிருப்புடையனுய் அதனைப் பேணியணிந்து பிறரெவர்க்கும் அதன் பெருமையை அவன் இனிது உணர்த்திவந்தான். திருவாதிரை நட்சத்திரமானது சிவபெருமானுக்கு உரியதாதலால் அந்நாள் வருந்தோறும் அடியவா பலர்க்கு உயர்விருந்தாற்றினன். அதில் தான் விரும்பியபடி நீறணிந்து வருவோர்க்குத் தனித்தனி நூறு நூறு பொன் மாறுது கொடுத்து மகிழ்ந்து நின்றான். அந்நிலையினைப் பறிந்த இவனும் ஒருமுறை உடம்பு முழுதும் விபூதியைப் பூசிக்கொண்டு சிறந்த ஆசாரமுடையவன் போல் அவ் அடியவர் வரிசையில் புகுந்து அமைதியாள்ளுபடங்கி நின்றான். இழுக்குமிக்க இவன் பொருளாசையினுல் ஒழுக்கமுள்ளவன்போல் கள்ளவேடம் பூண்டு உள்ளேவந்து நிற்றலை அருகிருந்த ஒருவன் அறிந்து பிடித்து அரசனிடம் கொண்டுபோய் அரசே! "இவன் இழி தொழிலுடையவன்; கழிபெருங்காமி; பொருளுக்காகப் பூதியை அள்ளி இங்ஙனம் பூசிவந்துள்ளான்; பொய்ப் பூச்சுக்காரன்" என்று புகன்று நின்றான். அவ் அண்ணல் பேரருளுடையனுதலால் பொருள் கருதியேனும் இவ்வாறு பூதியணிந்து வந்தானே! எனப் பெரிது மகிழ்ந்து இருநூறுபொன்னை எடுத்துக் கொடுத்து நாளும் இவ்வண்ணம் பூசி வருக என்று நயமொழி கூறி விடுத்தான். இவன் பெற்று மீண்டான். அன்றுமுதல் அரசனல் ஏதேனும் ஏதம் வருமே என்று அஞ்சி நீறு பூசிவந்தான். ஆசாரம் யாதும் இன்றி நீசநிலையில் நின்றிருந்தும் அச்சத்தாலும் பொருளவாவினுலும் பூதி முதலியன புனைந்து ஆசாரமுடையவன்போல் இவன் அமைந்து நின்றான். "கீழ்களது

ஆசாரம் அச்சமே; எச்சம் அவாவுண்டேல் சிறிது உண்டாம்'' என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

நல்லொழுக்கம் யாதும் நயவார் கயவரெவும்
புல்லொழுக்கே பூண்பர் புரிந்து.

கயவர் ஒழுக்கமிலராயுழல்வர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1076. அன்றேறன் மறையை அபலறியத் தூற்றினான்
குன்றுமியல் புஞ்சன் குமரேசா — என்றும்
அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான். (சு)

இ—ள்

குமரேசா! தான் கேட்ட இரகசியத்தை உஞ்சன் ஏன் உலகறியத் தூற்றினான்? எனின் தாம்கேட்ட மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான் கயவர் அறை பறை அன்னர் என்க.

இது, கயவர் என்றும் கோள்கூறித்திரிவர் என்கின்றது.

மறை = இரகசியங்கள். மறைக்கப்படுவது மறை என்க.

உய்த்து உரைக்கலான் = சுமந்துகொண்டுபோய்ச் சொல்லுதலான். கயவர், அறைபறைபோல்வர் என்றதற்குக் காரணம் கூறியபடியிது.

மேல், கயவர் ஒழுக்கமிலராயிருப்பர் என்றார்; இதில், அவர் உள்ளடக்கமின்றி உளறி நிற்பர் என்கின்றார்.

தாம்கேட்ட இரகசியங்களை உய்த்துக்கொண்டுபோய்ப் பிறர்க்கு உரைத்து நிற்றலால் கயவர் அறையப்படும் பறையினை ஒப்பர் என்பதாம்.

கயவரைப் பறையோடு ஒப்பவைத்தது அறைபோய நெஞ்சத்தராய் மறைவெளிப்படுத்தி நிற்கும் அவரது அழி நிலைமை சுருதி. வெறும் பறை என்னாது அறை என அடைகொடுத்தது ஒலிவிளைத்து நிற்கும் அதன் தொழில்நிலை தோன்ற. ''ஓர்த்தது இசைக்கும் பறை'' (கலி) என்றபடி கயவர் கேட்டதை

மறையாமல் கிளத்திவிடுவர் என்பதாம். நிறை சிறிதுமின்றிப் பறை யறைந்தது போல் மறை வெளிப்படுத்தும் கறைகெழு கயங்களை இறையும் நெருங்கலாகா தென்றவாறு.

பறை என்பது ஒருவகைத் தோற் கருவி. முரசு, மொந்தை, பம்பை, பதலை என இது பலவகைப்படும். ஒருகைப்புறமாகவே இஃது, ஒலிக்கப் பெறும்.

"ஒருகட் பறையே மொந்தை என்ப." (பிங்கலந்தை)

உள்ளே மறைவாக நிகழ்ந்துள்ள ஓர் காரியத்தை ஊரறியச் செய்தற்கு இது, ஒலிக்கப்படும். இதனை அடித்துணர்த்துபவரைப் பறையர் என்பர். யாரேனும் ஒருவர் இறந்துபட்டாலும் அதனையும் அயலறியும்படி இஃது அறையப்படும்.

"சென்றே எறிப ஒருகால் சிறுவரை
நின்றே எறிப பறையினை — நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண்டெழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து."

"கணங்கொண்டு சுற்றத்தார் கல்லென் றலறப்
பிணங்கொண்டு காட்டுய்ப்பார்க் கண்டும்—மணங்கொண்டீண்
டுண்டுண்டுண் டென்னும் உணர்வினாற் சாற்றுமே
டொண்டொண்டொண் என்னும் பறை" (நாலடி. 24, 25.)

பறையின் ஒலிக்குறிப்பும், அதன் பாடும் உறுதி நிலையோடு தழுவி இதில் உணர்த்தப்பட்டிருத்தல் காண்க.

"மாற்றருங் கூற்றம் வருவதன் முன்னம்
போற்றுமின் அறமெனச் சாற்றிக் காட்டி
நாக்கடிப்பாக வாய்ப்பறை அறைந்தீர்" (மணிமேகலை)

"மறந்துறை நீங்குமின்; வல்வினை யூட்டுமென்று,
அறத்துறை மாக்கள் திறத்திற்சாற்றி
நாக்கடிப்பாக வாய்ப்பறை அறையினும்
யாப்பறை மாக்கள் இயல்பிற் கொள்ளார்" (சிலப்பதிகாரம்)

இவற்றுள் பறைகுறித்து நிற்கும் பான்மையைப் பார்க்க.

"யாழ், நறையடுத்த அசுண நன்மாச்செவிப்
பறையடுத்தது போலும் என்பா" (என்றார் கம்பர்)

இதனால் இது, இன்னா ஒலியினையுடையதென்பது தெளிய

நின்றது. இப் பறையோடு கயவரை ஒப்பிட்டது என்னை? எனின், ஒருவன் கையால் அறைந்ததனை யாதும் மறையாமல் இடந்தோறும் சென்று அது, அறிவித்து விடுதல்போல் தாம் கேட்ட இரகசியங்களைக் கயவர் விரைந்துகொண்டுபோய்ப் பிறரிடம் சொல்லிவிடுவராதலால் அப் புல்லிய தொழிலின் பொதுமை யான் என்க. ஓட்டை நெஞ்சராய், உளறுவாயராய்க் கயவர் என்றும் கோட்டிகொண்டாடுவர் என்பதாம்.

வருங்கேடு தெரியாமல் அரிய மறைகளையும் கயவர் வெளிப்படுத்திவிடுவாராதலால் அப் புல்லர்களிடம் உள்ளதை யாதும் சொல்லாடலாகாது என்பது கருத்து.

"வெள்ளமாண் பெல்லா முடைய தமரிருப்ப
உள்ளமாண் பில்லா ஒருவரைத் — தெள்ளி
மறைக்கட் பிரித்தவரை மாற்று தொழிதல்
பறைக்கட் கடிப்பிடு மாறு" (பழமொழி 180)

மனநலமில்லாக் கயவரை மறைமுகமான கருமச் சூழ்ச்சியில் வைத்திருக்கலாகாதென இஃதுணர்த்தி நிற்றல் காண்க. அடிகள் சுட்டியுள்ளபடியே பறையோடு அவரை இதில் ஒப்பிட்டிருத்தலறிக.

"கோட்செவிக்குறளை காற்றுடன் நெருப்பு" (ஔவை)

என்றபடி கயவர் யாதும் ஆற்றி நில்லாது உடனே தூற்றி விடுவர் ஆதலால் அப் பொல்லா வாயரை எவ்வகையிலும் பொருந்தலாகாதென்பது குறிப்பு.

உள்ளடக்கமின்றிக் கயவர் எதையும் பிறரிடம் உரைத்து விடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை உஞ்சன்பால் உணரப்படும்.

## கதை.

உஞ்சன் என்பவன் வத்தவநாட்டிலே கௌசாம்பி நகரிலிருந்தவன். நல்லறிவில்லாதவன். புல்லியல்புடையவன். ஒரு முயற்சியும் செய்யாமல் கோளும் குண்டணியும் கூறி வீண் பொழுது போக்கிக் கீழ்மையாளனாய் இவன் இழிபட்டிருந்தான்.

இவன் காலத்தில் பதுமினி என்னும் பார்ப்பனி ஒருத்தி பேரழகுடையளாய் அந்நகரில் விளங்கி யிருந்தாள். எழிலும் இளமையும் கனிந்திருந்த அவள் தனது நாயகனை இளமையில் இழந்துநின்றுளாதலால் இயன்றவரையும் நிறைவழுவாமல் தன்னை இனிது பேணிவந்தாள். வந்தும் சங்கதருமன் என்னும் வணிகனொருவன் நெடுநாளாக அவளைக் காதலித்து நின்று பலவகையிலு முயன்று அமயம் வாய்க்காமல் அலமந்துழன்று ஒரு நாள் தனியிடத்தில் நேர்ந்து தன் உள்ளக்கருத்தை உருகி மொழிந்தான். அவள் முதலில் மறுகினளாயினும் உருவிலியின் பெருவலியால் உளமுடைந்து உடன் பட்டாள். இருவரும் கலந்து இனிது நுகர்ந்து பெரிது மகிழ்ந்து மருவிய அன்போடு அரிதினகன்றார். இங்ஙனம் அகன்ற அவன் ஒருநாள் இவனோடு உரையாடி நின்றான். இயல்பாகவே முன்னுற இவனும் அவனும் உறவாயிருந்தார். அந்தவுரிமையில் அத் தருணமங்கை தனக்கு அமைந்த படியினை அம் முழுமகன் மொழியிடையே நழுவி மொழிந்தான். மொழிந்தபின் இவன் உழறுவாயன் என்று பயந்து இந்த அரிய இரகசியத்தை யாரிடமும் யாதும் உரைத்துவிடாதே என உறுதிசெய்து விடுத்தான். சரி என்று இவனும் இசைந்து சென்றான். சென்றவன் மறுநாளே அப்பழி வினையினைப் பலரிடமும் பகர்ந்து நின்றான். இதனை அறிந்தவுடனே அந்தணர் பலர் வருந்தி நொந்தார். தம் குலத்திற்கு இழுக்கு விளைத்தாளாதலால் அவளைக் கொன்றுவிடவேண்டும் என்று கூடிப் பேசினர். அரசனுணையால் அவளை அம்பலத்தில் நிறுத்தி செங்கற்பொடியை உடல் முழுதும் தூவி, மணற்பெட்டியைத் தலையிலேற்றி யமுனை நதிக்கு அழைத்துச் சென்றார். மணற்குடத்தோடு பிணைத்து நீர்ச்சுழியில் வீழ்த்தி வரும்படி அவளைத் தோணியிலேற்றி உய்த்தார். அவ்வமயம் இளவரசனாகிய உதயணன் யானைமீதேறித் தற்செயலாக அங்கு வந்தான். அவன் நிறைந்துநிற்கு மக்களை நோக்கி ஈதென்னை? என்று வினவி உண்மையை யறிந்து உள்ளமிரங்கித் தோணியைத் திருப்பி அவளைக் கரையிலிறக்கித் துறவாகித் தவம் புரிந்தால் தொடர்ந்த அவம் ஒழிந்துபோம் என உரைத்து விடுத்

தான். அவள் அவ்வாறே அருந்தவஞ்செய்து சிறந்த நிலைமை யடைந்தாள். பழைமையை மறந்துவிடாமல் இளமையில் தனக்குச் செய்த உதவியை உதயணனிடம் அவள் ஒருமுறை உரைத்து நின்றாள். அடியில் வருவது காண்க.

"மன்னவன் மகனே! மனத்திற் கொள்ளெனச்
செம்மற் செங்கோ னுரைத்த அவையத்து
என்னிகந் தொரீஇயினன் இளமையிற் கணவன்;
தன்னிகந் தொரீஇயான் தகோனோக்,
கொண்டோற் பிழைத்த தண்டந்தூக்கி
வடிக்கண் இட்டி கைப்பொடித்துகள் அட்டிக்
குற்றம் கொள்ளுமெங் கோப் பிழைப் பிலனென
முற்றந்தோறு மூதூரறிய
நெய்தற்புலையன் நெறியிற் சாற்றிப்
பைதற் பபழை இடங்க ணொருக்கி
மண்ணற்குடம்பூட்டி மாநீர் யமுனை
இடைக்கயத் தழுந்த இடூஉ செல்வுழிப்
புனற்கரைப் படீஇயர் புதல்வனோடோர்க்கும்
தோணி ஆரவம் சேனைக்கு இசைப்ப" (பெருங்கதை)

தன்னைப் பேணிக்காத்த உரிமையை அம்மன்னன் மகனிடம் இவ்வாறு பின்னர் ஓர் நாள் அவள் பேசி மகிழ்ந்துளாள். இதனால் மேற்குறித்த உண்மை இனிதறியலாகும். இத்தொல் லைகளெல்லாம் இவன் சொல்லால் விளைந்தன ஆதலால் எல்லாரும் இவனை எள்ளி வைதார். பெண்டிரும் கூட இழிமகனென இவனைப் பிழைபடப் பேசினர். தான்கேட்டது எவ்வளவு அரிய இரகசியமானாலும் பிறரிடம் விரைந்துபோய்க் கூறிவிடுவானாதலால் ஓட்டை நெஞ்சன் என்று அனைவரும் இவனை அருகு வரவொட்டாது அருவருத்து நின்றார். "தாம் கேட்ட மறை பிறர்க்கு உய்த்து உரைக்கலான் கயவர் அறைபறை அன்னர்" என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

உள்ளடக்க மின்றி யுளறிக் கயவர்தாம்
துள்ளித் திரிவர் துடித்து.

ஓட்டை வாயராய்க் கீழோர் எதனையும் உரைத்துவிடுவர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1077. உள்ளிரங்கி ஒன்றும் உதவா மயிலனேன்
கொள்ளைகொள்ளத் தந்தான் குமரேசா—தள்ளியென்றும்
ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு. (எ)

இ—ள்

குமரேசா! யார்க்கும் யாதும் கொடாது நின்ற மயிலன் ஏன் தன்னை எள்ளி உதைத்துக் கொள்ளை செய்தார்க்குக் கொடுத்தான்? எனின், கொடிறு உடைக்கும் கூன்கையர் அல்லாதவர்க்கு, கயவர் ஈர்ங்கை விதிரார் என்க.

இது, கயவர் யாதும் ஈயார் என்கின்றது.

கொடிறு = கன்னம், கதுப்பு. வேறு கூறாது கொடிறைக் குறித்தது நேர் நின்று ஓங்கி அடிக்குங்கால் அதுவே பாங்கா யமைதல் கருதியும், பரிவேதனைபுறுதல் நோக்கியும் என்க. உடைக்கும் என்றது அவ் அடியின் உறுதியான பலன் முழுதும் தோன்ற. மெல்ல அறைந்தால் அதற்கு இணங்கி விடார்; கதுப்பு நெரிய அடித்தால் அவ் விதிராக்கையர் விதிர்த்து விடுவர் என்பதாம்.

ஈர்ங்கை = ஈரமுடைய கை. அஃதாவது உண்டவுடன் கழுவி அவ் ஈரம் உலராதிருக்கும் கை. "எச்சில் ஈர்ங்கை விற்புறந் திமிரி" (புறம் 258)

விதிரார் = சிதறார்; விதிர்த்தல் = சிதறல், தெறித்தல். "செய்புடை அடிசில் மெய்பட விதிர்த்து" (புறம் 188) என்புழி இஃதுணர்த்தி நிற்றல் காண்க. ஈரமற்ற நெஞ்சினராதலால் ஈரமுள்ள கையையும் கயவர் இனிது விதிராராயினர்.

கூன்கையர் = வளைந்த கையினை புடையவர். நையப் புடைத்தற்குக் கையை முறுக்கிவளைத்து ஓங்கி நிற்பாராதலால் அவர் கூன்கையர் என நின்றார். உறுப்பின்மேல் வைத்து இங்ஙனம் உரைத்தது அவர் உருத்து நிற்கு நிலை தெளிவுற வுணர என்க.

மேல், கயவர் அடக்கம் யாதுமின்றிப் பிறர்க்குரை யாவெர் என்றார்; இதில், அவர் ஒன்றும் கொடுக்கமாட்டார் என்கின்றார்.

கன்னஞ்சிதைய அடிக்கும் கையுடையார்க்கன்றித் தாம் உண்டு கழுவிய கையையுங்கூடக் கயவர் உதரார் என்பதாம்.

கயவர் மனமார ஒரு சிறிதும் உதவார் என்பார் "ஈர்ங்கை விதிரார்" என்றார். கொடிய உலோபியாயிருக்கும் ஒருவனைக் குறித்துக் கூறுங்கால் "அவன் எச்சிற் கைபால் காக்கை விரட்டானே" என்று உலகர் கடுத்துக் கூறுவர்; அப்பொழுது மொழியை இம்முதுமொழி நினைப்பிக்கின்றமை காண்க.

உண்டு பூசிய கையை விதிராமைக்குக் காரணம் அங்ஙனம் வீசின் அதில் ஒட்டியிருக்கும் பருக்கை ஏதேனும் சிதறி விழும்; விழவே காக்கை முதலிய பிராணிகள் அதனை உண்டுபோய்விடும் என்னும் கருத்தான் என்க.

அறம் கருதியேனும், அன்புகொண்டேனும் கயவர் எவர்க்கும் இரங்கி ஈயார்; தம் பல்லுதிரும்படி கன்னங்கெதன்ன ஓங்கி அடிப்பார்க்கே உள் நடுங்கி அவர் உதவி நிற்பர் என்றபடி. இதனால் அவரது இழிதகவும், பழிநிலையும், அழிமதியும் இனிதறியலாகும். "பொருட்பாலை விரும்புவர்கள்; காமப்பால் இடைமூழ்கிப் புரள்வர்; கீர்த்தி, அருட்பாலாம் அறப்பாலைக் கனவிலுமே விரும்பார்கள்; அறிவொன்றில்லார்; குருப்பால், மெய்க்கடவுளர் பால், வேதியர்பால், புலவர்கள்பால் கொடுக்கக் கோரார்; செருப்பாலே அடிப்பவர்க்கு விருப்பாலே கோடி செம்பொன் சேவித்து ஈவார்" என்றபடி கீழ்மக்கள் ஈனநிலையில் பாவித்துநிற்பர் என்க.

ஐயா, தருமம் என ஏந்தியகையராய் மெலிந்து கேட்பவர்க்கு யாதும் இரங்கி ஈயார்; அடே வையடா கீழே! என்று ஓங்கிய கையராய் உருத்து நிற்பவர்க்கு எல்லாம் ஒருங்கே கொடுத்துவிடுவர் என்பார் "கூன் கையரல்லாதவர்க்கு ஈர்ங்கை விதிரார்" என்றார். உள்ளிரக்கமும், உதவி நலனும் கயவர்பால் இயல்பில் இல்லை என்பது கருத்து.

இரக்கமற்ற படு உலோபிகளாய்க் கயவர் இருப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை மயிலன்பால் உணரப் படும்.

## கதை.

மயிலன் என்பவன் இற்றைக்கு எழுநூறு ஆண்டுகட்கு முன்னர்ப் பாண்டிநாட்டிலே நொச்சியம் என்னும் ஊரிலிருந்தவன். வணிகர் மரபினன். பேராசையுடையவன். வரவு நிலை கருதிக் கரவுகள் பல செய்தவன் அருள் சிறிது மிலனுப் பொருள் மிகப்பெற்று இவன் களிமிகுந்திருந்தான். நல்ல நாட்டம் வேறுயாதுமின்றி ஈட்டம் ஒன்றையே இவறி நின்முன். கடும்பற்றுள்ளமும் கொடுமையுமுடையனுய்க் கதித்திருந்தானுதலால் அனைவரும் இவனை அருவருத்து நின்முர். ஒருவருக்கும் ஒன்றும் கொடாத படு உலோபி என்று அயலிடமெங்கணும் இவன் பழி பரந்து நின்றது. பொருள்காத்த பூதம் என மருள்மீக்கொண்டு இருள்பட்ட மனத்தனுய் இங்ஙனம் இவன் இருந்து வருங்கால் ஒருநாள் காளமயிடன் என்னும் மந்திரவாதி ஒருவன் இவனது இல்லினையடைந்து புறத்திண்ணையில் இருந்தான். இவன் அவ்வமயம் உண்டு கைகழுவி வெளியே வந்தான். பசிப்பிணியால் மிகக் களைத்து உச்சிப்போதில் வந்து இளைத்திருந்த அவனை இவன் கடுத்துநோக்கி அடுத்துள்ள மடத்தில் போய்ப் படுத்திரு; இங்கிராதே; எழுந்து செல்; என்று பொங்கி மொழிந்தான். இவனது வன்கண்மையை யறிந்து வைது பழித்து அயலிடம் போய் அவன் அமர்ந்திருந்தான். அன்றிரவு நடு யாமத்தில் கள்வர் சிலர் வந்து இவன் இல்லுட் புகுந்து கொள்ளையடித்தார். அக் கொள்ளையில் அடிகளும் மிதிகளும் பட்டு இவன் அல்லலபல அடைந்தான். பொழுது விடிந்தபின் ஊரவர் வந்து பார்த்தார். கன்னம் நெரிந்து பல்லுடைபட்டுச் சொல்ல முடியாதபடி இவன் துன்புற்றுக்கிடந்தான். உள்ள பொருளெல்லாம் கொள்ளைபோனதைக் கண்டு எல்லாரும் உள்ளம் வியந்தார். "இல்லை என்றே என்றும் சொல்லாடிய வாய்க்கு இத்தொல்லை வந்ததே" என இரவலர் பலர் சொல்லி மகிழ்ந்தார்.

எச்சில் கையால் காக்கை விரட்டானே! இருந்த பொருளை யெல்லாம் எப்படிக் கள்வர்க்கு இவன் எடுத்துக் கொடுத்தானோ? என்று எல்லாரும் இவனை இகழ்ந்து போனார். கொடிறுடைக் கும் கூன்கையர்க்கன்றிக் கயவர் ஈர்ங்கை விதிரார் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான். இவன் சரிதம் புதுவைப் புராணத்திலும் குறிக்கப்பட்டுள்ளது.

"அழுக்கற்றவர்க்கும் வடுக்காண்பார்; அச்சம் ஆசையாலன்றி
ஒழுக்கம்புரியார்; மறைபிறர்பால் உய்த்துமொழிவார்; தம்போல
இழுக்குக்கேதுங்கவலார்; முன் ஏற்றமாகிச் செம்மாப்பார்;
மழுக்குவார்க்கே பயன்படுவார்; வறிதும் வறியார்க்கிடார் கயவர்"
(விநாயகபுராணம்)

அருத்தினும் பாலை அராக்கடு வன்றிக்
குருத்தின் மணிகொடா, கொன்றுகொளாராயின்;
வருத்திற் பயன்படுங்கீழ்; நன்றியுற்றின் மாய்க்கும்;
கருத்துடையார் நாடல் கடன். (இன்னிசை)

பல்லுடையப் போட்டால் பணிந்தீவர் வெங்கயவர்
நல்லவர்க்கோன் றீயார் நயந்து.

உதைத்தாலன்றிக் கயவர் உதவார் என்பது இதனால் கூறப்பட்டது.

1078. சொல்லக் கொடாத துரியோ தனன்பின்பேன்
கொல்லக் கொடுத்தான் குமரேசா — மெல்லப்போய்ச்
சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கரும்புபோல்
கொல்லப் பயன்படுங் கீழ். (அ)

இ—ள்.

குமரேசா! கண்ணன்போய்ச் சொன்னபோது கொடாத துரியோதனன் பின்பு என் கொன்றவுடன் கொடுத்தான்? எனின், சான்றோர் சொல்லப் பயன்படுவர்; கீழ், கரும்புபோல் கொல்லப் பயன்படும் என்க.

இது, கொல்கின்றவர்க்கே கயவர் கொடுப்ப ரென்கின்றது.

மெல்லப்போய் என்றது பிறரிடம் ஒன்றை விரும்பிச் செல்வார் உள்ளங்கூசி மெள்ள ஒடுங்கி நெருங்குவராதலால் அச்செலவு நிலை கருதி. சான்றோர் = மேன்மக்கள்.

பயன்படுவர் = இரங்கி உதவுவர்.

கீழ் என்றது கீழ்மக்களை. இங்ஙனம் அஃறிணையிற் குறித்தது அவரது இழி நிலைமை தோன்ற. கீழ்மை என்னும் பண்புப் பெயர் கீழ் என நின்று இழிமக்களாகிய கயவரை உணர்த்திற்று.

கரும்புபோல் கொல்ல = கரும்பை நெருக்கியதுபோல் நொறுக்கி வருத்த. சொல்ல, கொல்ல என்னும் செயவென் எச்சங்கள் காரணப்பொருளில் வந்தன.

மேல், பல்லை யுடைத்தாலன்றிக் கயவர் பயன்படார் என்றார்; இதில், கொன்றாலன்றி அவர் யாதும் கொடார் என்கின்றார்.

மெலியவர் வந்து சொல்லியவுடனே மேன்மக்கள் இரங்கியுதவுவர்; கீழ்மக்கள் வலியவர் புகுந்து கரும்புபோல நைய நெருக்கிய பின்பே ஏதேனும் பயன்படுவர் என்பதாம்.

கீழ்மக்களைக் குறித்துவரும் கயமை என்னும் இவ் அதிகாரத்தில் மேன்மக்களாகிய சான்றோரையும் உடன் குறித்தது என்னை? எனின், பயன்பாடுடைய அப்பண்புடையாளரோடு இணைத்து நோக்கின் பயனற்ற இப்பழிநிலையாளரின் இழிநிலை இனிது தெளிவுறும் ஆதலால் அவ் அளவுறுதி கருதி என்க.

கயவரை எண்ணிக் கைத்த நெஞ்சு இடையே இங்ஙனம் நயவரை நினைந்து சிறிது இனிமையுறும்படி உற்றபடியிது.

மேலோர் இயற்கையில் இரக்கமுடையவராதலால் வறியர் முதலாயினோர் தம் மருங்குவந்து ஏதேனும் விரும்பி வேண்டின் உடனே தம்மாலியன்றதை அவர் உவந்து கொடுத்துவிடுவர்; கீழோர் ஈரமற்ற ஈனநெஞ்சினராதலால் அவர் அங்ஙனம் இரங்கி ஈயார்; வலியராயினோர் வந்து வலிந்து பிடித்து நைய நெருக்கிப் பலவகையிலும் வெய்யதுயரங்களைச் செய்தால் வேறுபோக்கின்றி ஏதேனும் போக விடுவர் என்க.

சான்றோர் சோல்லப் பயன் படுவர்; கீழ், கொல்லப் பயன் படும் என்ற இதனால் அவரது இனிய நிலையும், இக் கொடியரது இன்னா நிலைமையும் இனிது புலனும்.

இரவலர் கன்றாக, ஈவார் ஆவாக,
விரகிற் சுரப்பதாம் வண்மை; — விரகின்றி
வல்லவர் ஊன்ற வடிஆபோல் வாய்வைத்துக்
கொல்லச் சுரப்பதாம் கீழ். (நாலடியார் 279)

அடிகள் சொல்லே இது அடிபொற்றி நிற்றல் காண்க.

கொல்ல என்றது கொடிய வேதனையைக் குறித்து நின்றது.

வெட்கம் வரும்படி விநயமாகத் திட்டினாலும், அல்லது நாயே பேயே என்று வாய்க்கு வந்தபடியெல்லாம் வைது பழித்தாலும், அன்றி வெகுண்டடித்து வெருட்டினாலும் இவற்றிற் கெல்லாம் இசைந்து விடார்; இனி உயிர்போய்விடும் என்று அவர் உணரும்படி மரணவேதனை புரிந்தால் யாதாவது கயவர் பயன்படுவர் என்பார் கொல்ல என இங்ஙனம் கொடுமைதோன்றச் சொல்லியருளினார்.

கரும்பை உவமை கூறியது தனது இனிய சாரம் எளிதில் பயன் படாதபடி இறுகியிருக்கும் அதனியல்பு கருதி. கணுக் கணுவாகத் தறித்து ஆலையிலிட்டு நைய நெருக்கிய வழி தான் கரும்பு இனிமை காட்டும்; அதுபோல் தலை தகர அடித்துத் துயர் செய்தபொழுது தான் கயவர் உதவி செய்வர் என்றபடி.

“ஏறுகாட்டிய திறல் இளைஞர் எந்திரம்
கூறுகாட்டிய கழை அழுங்கக் கோறலும்
சாறுகாட்டியதரோ! யாதும் தம்மிடை
ஊறுகாட்டினர்க்கலால் உலோபர் ஈவரோ?” (கந்தபுராணம்)

இது, அடிகள் கருத்தை அடிபொற்றி வந்துள்ளமை அறியலாகும். சிறந்த பெரியார் வந்து இதம் பெற நின்று இனிது சொல்லினும் கயவர் இரங்கியீயார் என்பது இதில் உணர்த்தப் பட்டது. இவ்வுண்மை துரியோதனன்பால் உணரப்படும்.

## கதை.

துரியோதனன் உயர்ந்த அரசனுயமர்ந்திருந்தும் இழிந்த நிலையில் அழுந்தியிருந்தான். பாண்டவர்கட்குரிய அரச பாகத்தைக் கொடுப்பதில்லை என்று விடாப்பிடியாகக் கடுத்து நின்றான். உலூகர் முதலிய பெரியோர் பலர் வந்து உறுதிகளுரைத்தும் சிறிதும் இசையாமல் இவன் செயிர்த்து விடுத்தான். இறுதியில் கண்ணன் வந்தான். அமயமறிந்து அவையினை யடைந்து இதம் பெற இருந்து உறவுரிமைகளை இனிது மொழிந்து ஐவர்க்குரியதை அருள செய்து உதவும்படி ஆர்வமொடு வேண்டினான். அம்மாயவன் இங்ஙனம் மறுகி வேண்டியும் இத் தீயவன் யாதும் இரங்காமல் தீதூக்கி நின்றான். பாதியாயினும் தந்தருள் என்று அம் மாதவன் மன்றாடினான். இவன் முடியாதென்றான். முடிவில் ஐந்து ஊராவது அருளுக என்றான். அதுவும் இல்லை என்று முதிர் சினத்தோடு இவன் முகங்கடுத்து மொழிந்தான்.

"கார்வழங்குருமெனச் சினத்திஞெடு கண்ணிலான் மதலை கழறவும்
பார்வழங்க நினைவில்லையேல் அவனி பாதியாயினும் வழங்குவாய்
தார்வழங்குதடமார்ப! என்ன, அதுதானும் அன்னவன் மறுக்க, ஐந்து
ஊர்வழங்குகென உற்றிரந்தனன் இவ்வுலகெலாமுதவுமுந்தியான்"

இவ்வண்ணம் எவ்வளவோ அவ்வண்ணல் இரந்து வேண்டியும் இம்மியளவும் கூட ஈயேன் என்று இவன் இறுகி நின்றான். இவனது ஈன நிலையை நோக்கி இகழ்ந்து விடுத்து ஐவரை யடைந்து ஆவதை உணர்த்திப் பெரும்படை திரட்டிக் கடும் பகையோடு வந்து கொடும்போர் புரிந்து இவனைக் கொன்று முடித்து அரசு முழுவதையும் கவர்ந்து உரியவர்க்கு உதவி அப் பெரியவன் உவந்து போனான். உரிமையோடு வந்து கண்ணன் இனிமையாகச் சொல்லுங்கால் ஈயாது நின்ற இவன் பின்பு மண் முழுதும் இழந்து வசையோடு மாண்டான். வீடுமர் முதலாயினோர் சொல்லிய உடனே பயன் பட்டு நின்றார்; கொன்ற பின்னரே இவன் கொடுத்திடலானான். "சொல்லப் பயன்படுவர் சான்றோர்; கீழ், கரும்பு போல் கொல்லப் பயன் படும்" என்பதை உலகம் இவன்பால் உணர்ந்து நின்றது.

கந்திற் பிணிப்பர் களிற்றைக்; கதந்தவிர
மந்திரத்தி னாற்பிணிப்பர் மாநாகம்; — கொந்தி
இரும்பிற் பிணிப்பர் கயத்தைச்; சான்றோரை
நயத்திற் பிணித்து விடல். (நான்மணிக்கடிகை)

“விரைந்துபாய்பரி மன்னவர் இதப்பட மெலியுற்று
இரந்து வேண்டினும் கிளைஞருக்கு ஒரு பொருள் ஈயார்;
பரந்தபோரினில் எதிர்த்தவர் படப்படப் பகழி
துரந்தபோது அவர்க்கு உதவுவர் சொன்னவையெல்லாம்”
(பாரதம்)

உள்ள மிரங்கி யுதவார் கயவர்வன்
கோள்ளகோளின் நிற்பர் குனிந்து.

கயவர் மனமார எதுவும் ஈயார் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1079. கண்டு துருமன்முன் கண்ணன்மேல் வெய்பழிமீக்
கொண்டுரைத்தான் என்னே குமரேசா — மண்டி
உடுப்பதூஉம் உண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ். (௯)

இ—ள்.

குமரேசா! கண்ணன் சிறந்து நின்றதைக் கண்டபொழுது துருமன் ஏன் அவன்மேல் இழிந்த வசைகளை ஏற்றி யுரைத்தான்? எனின், உடுப்பதும், உண்பதும் காணின் பிறர்மேல் கீழ் வடுக்காண வற்றாகும் என்க.

இது, கயவர் பிறராக்கம் பொறார் என்கின்றது.

கண்டு பழி உரைத்தான் என்றது கண்ணனது உருவப் பொலிவையும் அரிய மகிமைகளையும் கண்டபொழுது கடுத்து நின்று வசை பல கூறி அவன் வைது பழித்தமை கருதி.

உடுப்பதும், உண்பதும் என்பன செல்வநிலை தோன்ற நின்றன. உடையும், உணவும் என்னாது உடுப்பது உண்பது எனத் தொழில்மேல்வைத்துக் கூறியது அவற்றின் எழில்நலந் திகழ.

ஆரபெடைகள் இன்னிசைதோன்ற வந்தன.

உடையினை முதலில் வைத்தது உணவினும் ஆடம்பரமாக முன்னுற அது வெளிப்பட்டு நிற்றல் கருதி. சிறப்புடைய இவ்விரண்டினை யீண்டு விதந்து குறித்திருப்பினும் அணிதல், ஊர்தல், பூசுதல், சூடுதல் முதலிய பீடு நிலைகளையும் பேணிக் கொள்க. காணின் = காண்பானாயின்.

கீழ் வற்றாகும் = கீழாயினோன் வல்லனாம்.

அஃறிணைபிற் குறித்தது அவனது இழிவு தோன்ற.

வற்று என்பது வன்மை என்னும் பண்படியாய்ப் பிறந்த ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று. வல்லது என்பது பொருள்.

வடு = குற்றம். ஆளைக்காணுவழி வடுக்காண இயலாது ஆதலால் காணின் என்றும், கண்ட அப்பொழுதே குற்றங்களைக் கற்பித்துச்சொல்ல வல்லனும் என்பார் வற்றாகும் என்றும் கூறினார். இவ் அன்மையால் அவன் புன்மை நிலை யறியலாகும்.

மேல், கயவர் கொடிய உலோபியரா யிருப்பரென்றார்; இதில், அவர் பொறாமைமீக் கொண்டு எவரையும் பிழைபடப் பேசுவரென்கின்றார்.

பிறர் நல்ல உடை உடுப்பதையும், நயமான இனிய உணவை உண்பதையும் கண்டால் அவர்மீது குற்றங்களைக் கற்பித்துக் கீழ் மக்கள் கூறிவிடுவர் என்பதாம்.

கயவர் ஈனநெஞ்சினராதலால் பிறர் செல்வமடைந்து நல்ல நிலையில் இருக்கக் கண்டால் உடனே உள்ளம் பொறாராய் இல்லாத பழிகளை யெல்லாம் அவர்மேல் ஏற்றிச்சொல்லி அவரைத் தூற்றிப்போவர் என்பார் "கீழ் பிறர்மேல் வடுக்காண வற்றாகும்'' என்றார். வற்று என்றது தான் படைத்துக் கூறும் வடுக்களைப் பிறர் தடுத்துச் சொல்லாமல் ஆம் என இசைந்துகொள்ளும்படி புனைந்து சொல்லும் அவன் பொல்லா வன்மை புலங்கொள என்க. கயவர் படு புளுகராய்ப் பழிபுரிந்து நிற்பர் என்பதாம்.

கடுக்கெனச் சொல்வற்றாம்; கண்ணோட்ட மின்றாம்;
இடுக்கண் பிறர்மாட்டுவக்கும்; அடுத்தடுத்து
வேகமுடைத்தாம்; விறன்மலை நன்னாட!
ஏகுமாம்; எள்ளுமாம்; கீழ். (நாலடியார் 348)

கயவரது இயல்புகளைக் குறித்து இஃது உணர்த்தி நிற்றல் காண்க.

இக் கீழ்மைக் குணங்களை அறவே களைந்தவரே மேன்மக்களாவர் என்க. "கீழ்மை அகற்று" (ஔவையார்)

பிறர் இனிது வாழக் கயவர் சகியார்; ஆகவே பொய்யான பிழைகளை அவர்மீது படைத்துக் கூறி அவ்வளவில் தம் மனப் புழுக்கத்தை ஆற்றி அப் புன்மக்கள் களித்துப் போவர் என்றபடி. இதனால் அவரது மனப்பான்மையின் இழிநிலை இனிது புலனும். இவ் ஈன இயல்பினை அசூயை என்பர்.

"அன்னியர்க்கு அறிவுருவு ஆக்கம் கண்டுகே
டுன்னியுட் பொறாமையாம் உருவினேனுடன்
தன்னில் உட்புழுங்கும் அத்தன்மையே வடி
வென்னும் என் அசூயையை யாவர் வெல்வரோ" (பிரபோதம்)

எனப் பொல்லா மச்சரன் புகன்றிருத்தல் காண்க.

மனப் புன்மையும், வன்கண்மையும், வஞ்சச் சொற்களுமுடையராய்க் கயவர் வளர்ந்து நிற்பர் என்பது கருத்து.

கீழ்மக்கள் பொறாமை மிக்கு எவரையும் இளித்துரைப்பர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை துருமன்பால் உணரப்படும்.

## கதை.

துருமன் என்பவன் சேதிநாட்டிலே வாதுளம் என்னும் ஊரிலிருந்தவன். இவன் சிசுபாலனுடைய இனிய நண்பன். கொடிய நெஞ்சினன். பெருந்திருவெய்திக் குறுநில மன்னனாய் நிலவியிருந்தும் இழிந்த காரியங்களை விழைந்து புரிந்து பழி வழிகளில் இவன் அழுந்தி யிருந்தான். குடிகள் ஏதேனும் தம் குறைபாடுகள் கூறி முறையிட வந்தால் அவர்களிடமும் பரிதானம் வாங்கி நடுவுநிலை குன்றி அழிவழக்காடி அல்லல் பல புரிந்து பொல்லாதவனாய்ப் பொங்கி நின்றான். இவனது எல்லையிலிருந்தவரெல்லாரும் உள்ளேர இவனை எள்ளி நின்றார்.

"வேங்தொடு பொற்சிவிகை மேவி அறுசுவை யூண்
மாந்தினும் பவ்வீமறக்குமோ நாய்? கீழும்
வேந்தனெனத் திரு மேவினும் வெஃகுமே
போந்துபரி தானப் பொருள்" என்றவண்ணம் ஈன நிலை

யில் இவன் இருந்து வந்தான். சகுசன், சிசுபாலன் என்னும் அவ் வெஞ்சின வேந்தரிருவரோடும் நெருங்கி உறவாடி அவர்க்கினியவன் போல் நின்று இதமாக கண்ணன் மேல் வசை பல கூறி வஞ்சமுடன் இவன் வாழ்ந்து வந்தான். வருங்கால் இந்திரப்பிரத்தத்தில் பாண்டவர் செய்யும் இராசசூய யாகத்திற்குக் கண்ணன் பீதாம்பரதாரியாய்ப் பிறங்கி யெழுந்தான். அப்பெருமானது பெரு மீத நிலையைக் கண்டபொழுது இவன் பெரிதும் புழுங்கி விரைந்து சென்று சேதிமன்னனிடம் நெருங்கி நின்று அம் மணிவண்ணனைப் பல பட இகழ்ந்து மொழிந்தான் "ஆட்டிடையனுக்கு பேட்டிமை எவ்வளவு! இன்று அவன் அரசவைக்குப் போகின்றான்; அங்குச் சிறந்த உபசாரங்கள் பல அவனுக்கு நடக்குமென்று தெரிகின்றது; வெண்ணெயைத் திருடி; உரலில் கட்டுண்டு; மத்தடிபட்டு; மொத்துண்டவற்றையெல்லாம் அறவே மறந்துவிட்டுத் தானொரு சிறந்த மேன்மையாளன் போல் உடையணிகள் புனைந்து பலரும் புடைசூழ உயர்ந்த வூர்தி மேல் அவன் அமர்ந்து செல்கின்றான். நாமும் உடன் போக வேண்டும்; அவன் நடைபெறும் மரியாதைகளைத் தடுத்து; அவனது பிழைநிலைகளை வெளிப்படுத்தி அவமானஞ் செய்து அரசர் பலரும் காணச் சபையைவிட்டு அவனை அகற்றிவிடவேண்டும்;" என இன்னவகையாக இப்புன்மையாளன் இழிவுரைகள் பல கூறி அம்மன்னனை எழுப்பிவிட்டான். அவ்வாறே அவன் எழுந்து சென்று வகைதெரியாமல் வசையுரையாடி வன்பழியோடு அங்கு மடிந்து விழ்ந்தான். தருமன் சொற்கேட்டே எம் குடி உருவற வழிந்ததென்று சிசுபாலனுடைய உறவினர் பலர் இவனை இகழ்ந்து பழித்தார். வசையற்ற கண்ணனுக்கும் இவன் வடுக்கண்டு கூறினுதலால் அறிஞர் அனைவரும் இவனை வைத்து வெறுத்தார். உடுப்பதும் உண்பதும் காணின் பிறர் மேல வடுக்காண வற்றாகும் கீழ் என்பதை உலகம் காண இவன் உணர்த்தி நின்றான்.

"தேர்ந்துகண் ணோடாது தீவினையும் அஞ்சலராய்ச்
சேர்ந்தாரை யெல்லாம் சிறிதுரைத்துத் — தீர்ந்த
விரகர்கட் கெல்லாம் வெறுப்பனவே செய்யும்
நரகர்கட் கில்லையோ நஞ்சு." (பழமொழி)

பட்டுடுத்திச் சென்றால் பகட்டென்பார்; பைகிழிந்த
ஒட்டுடுத்தின் ஏழை யெனஒத் திழிப்பர்—தொட்டனின்
என்னவகை யானாலும் ஏதேனும் ஓர்குறையைப்
பன்னுவரீ னர்புன்வாயர் பார். (தருமதீபிகை)

எள்ளிப் பிறரை இகழ்ந்து கயவர்போய்
உள்ளி யுரைப்பர் உவந்து.

பொறாமை மேற்கொண்டு கயவர் புறங்கூறி நிற்பர் என்பது இதனால் கூறப்பட்டது.

---

1080. அன்று துயரமுடைய அநுகனேன்
குன்றிவிலை நின்றான் குமரேசா — என்றுமே
எற்றிற் குரியர் கயவரொன் றுற்றக்கால்
விற்றற் குரியர் விரைந்து. (௰)

இ—ள்

குமரேசா! துன்பம் வந்தவுடன் எல்லாவற்றையும் விற்றுத் தானும் ஈன அடிமையாய் அநுகன் ஏன் இழிந்து நின்றான்? எனின், கயவர் எற்றிற்கு உரியர்? ஒன்று உற்றக்கால் விரைந்து விற்றற்கு உரியர் என்க.

இது, கயவர் என்றும் ஈன அடிமைகளாயிருப்பரென்கின்றது.

ஒன்று = யாதாயினும் ஒரு துன்பம். உற்றக்கால் = வந்து சேர்ந்தால். எற்றிற்கு உரியர் = வேறு எத்தொழிலுக்கு அவர் தகுதியாவர்? ஒன்றுக்கும் உதவார் என்றபடி.

விற்றற்கு உரியர் = விலைப்படுத்தற்கு உரியர். இங்ஙனம் விற்றலைக் குறித்துக் காட்டியது உலையாது நின்று தலைமையோடு முயலாது சிறு துயரினும் அவர் நிலைகுலைந்து வீழும் நிலைமை கருதி.

"குலம்விற்றுக் கொள்ளும் வெறுக்கையும்; வாய்மை
நலம்விற்றுக் கொள்ளும் திருவும்; தவம்விற்றாங்
கூணோம்பும் வாழ்வும்; உரிமைவிற் றுண்பதூஉம்
தானோம்பிக் காத்தல் தலை." (நீதிநெறிவிளக்கம்.)

விற்றலின் இழிவினை இது விளக்கி நிற்றல் காண்க.

மேல், கயவர் பொறுமையாளராய்ப் புன்மையுற்றிருப்பர் என்றார்; இதில், அவர் ஒன்றுக்கு முதவாராய்க் குன்றி நிற்பர் என்கின்றார்.

ஏதேனும் ஓர் இடர்வந்து சேர்ந்தால் உடனே தம்மை விற்றுவிடக் கயவர் விரைந்து நிற்பர்; அதுவன்றி வேறு ஒரு தொழிற்கும் அவர் உரியராகார் என்பதாம்.

வறுமை இடையூறுகளுள் யாதாயினும் ஒன்று இடையே நேர்ந்தால் உடனே கீழ்மக்கள் தமக்கு உள்ளது உரியதை யெல்லாம் விற்றுப் பின்பு தாமும் விலையாய்ப் பிறர்க்கு அடிமைப் பட்டு நின்று ஊழியம் செய்வர் என்பார் "ஒன்று உற்றக்கால் கயவர் விற்றற்கு உரியர்" என்றார்

விரைந்து என்றது முன் பின் யோசியாமல் பரபரப்போடு அதில் அவர் பட்டு நிற்கும் பாடு தோன்ற.

துன்பங்கள் பல தொடர்ந்து வந்தாலும் மேன்மக்கள் மெலிந்து படாமல் காலம் இடம் கருதி முயன்று நின்று உயர்ந்து கொள்வர்; கீழ்மக்கள் ஒரு சிறு துயர் நேர்ந்தாலும் உடனே உள்ளமிடிந்து உள்ளமெல்லாம் மிழந்து தாமும் இழிந்து ஒழிந்து போவர் என்க.

"தென்றலினும் நுண்பஞ்சு சேட்சென்று அலைவுபடும்;
என்றும் பெயரா பெருங்காற்றெனினும் மலை;
ஒன்றிற் சிறுபடரும் ஆற்றாது உடையும் கீழ்;
வென்றிடும் எத்துன்பிணையு மேல்" (என்பதும் காண்க)

கயவர் புல்லிய நெஞ்சினராதலால் மெல்லிய துயரிலும் நிலையழிந்து ஈனமா யிழிந்துபடுவர் என்றபடி.

இனி, இக்குறளுக்கு வேறுமொரு பொருள் காணலாகும். ஒன்று உற்றக்கால் = ஏதாவது ஒரு இரகசியம் கிடைத்தால், உடனே விரைந்துபோய்ப் பிறரிடம் வெளிப்படுத்தி இச்சகம் பேசி அதனால் வரும் கொச்சை வருவாயைக்கொண்டு இழி நிலையில் நின்று ஈனமா வயிறு வளர்ப்பரேயன்றி வேறு ஒரு தொழிற்கும் கயவர் உரியராகார் எனவும் இஃதுணர நிற்றல் காண்க.

"உற்ற மறையகத்தில் உய்க்குமவன் உத்தமனே;
மற்றம் பறைபகர்வோன் மத்திமனே — முற்றிழையீர்
அத்தமுறலாற் புகல்வான் அதமனென
வித்தகநூல் ஓதும் விரித்து" என்பதும் ஈண்டெண்ணத்தக்கது.

மனிதத்தோல் போர்த்து நிற்கு மாடுகள்போல் நின்று ஒருகவலையுமின்றி, மனம்போனபடியெல்லாந் திரிந்து, மதத்துக் களித்துப், பொய்யொழுக்கேய்ந்து, புறம் பழித்துப் படுஉலோபிகளாய்ப் பாழ்பட்டிழிந்து, பழிபுரையாடி, ஒரு தொழிலுக்கு முதவாமல், இழிநிலையாளராய், ஒழிபுமவரே கயவர் என விளக்கிக் கயமையின் இயல்பினை இங்ஙனம் உணர்த்தி யருளினார்.

அமயம் நேர்ந்தபொழுது ஈன அடிமைகளாய்க் கயவர் இழிந்துபடுவர் என்பது இதில் உணர்த்தப்பட்டது. இவ்வுண்மை அநுகன்பால் உணரப்படும்.

## கதை.

அநுகன் என்பவன் போசலதேயத்திலே சோலைநதம் என்னும் ஊருலிருந்தவன். இவன் தீதுநன்மைகள் யாதும் அறியாத பேதைமையாளன். சிறிது செல்வமடைந்திருந்தானாயினும் நல்ல அறிவில்லாதவனாதலால் அவ் எல்லாவற்றையும் அல்வழியில் செலவழித்துவிட்டுப் புல்லர் சிலருடன் கூடி அல்லல் பல செய்து இவன் அலைந்து திரிந்தான். அந்நாட்டு மன்னனாகிய தானவர்மன் என்பவனோடு இவனுடைய தந்தை மருத்துவ முறையில் சிறிது உறவாயிருந்தானாதலால் அவ்வுரிமையினால் இவனிடமும் அவ் அரசன் அன்பு செய்துவந்தான். இவன் பெற்றோரையுமிழந்து உற்றோர் பலரும் வெறுப்ப உறு பொருளெல்லாம் தொலைத்து ஒரு தொழிலும் செய்யாமல் பழுதே பகல் கழித்துப் பழி மிகுத்து நின்றான். இங்ஙனம் இவன் நின்று வருங்கால் அவ் வேந்தன் காலநிலை கருதிச் சேமநிதியாகப் பெரும் பொற்றிரளை ஓரிடம் சேமித்து வைத்தான். அவ் வைப்பினை இவன் துப்பறிந்துகொண்டு கைப்பற்ற விழைந்தான். கோழை நெஞ்சினனாதலால் தனியே சென்று அதனைக் கவர்ந்து கொள்ளத் துணியாமல் கள்வர் சிலருடன் கலந்து பேசினான்.

அம்மறவர் மிகவும் கொடியர். பழிவினைகளை அஞ்சாது செய்யும் பாவ நிலையினர்.

"வஞ்சம் புரியவலர்; நள்ளிருள் வந்த காலை
நெஞ்சம் களிப்பார்; சிறிதாம் புழை நேருமேனும்
அஞ்சங்ககற்றி நுழைவார்; எதிராய பேரை
நஞ்சங்கலந்தாலெனச் சாடுவர்; நாளும் நாளும்" (தியாகராசலீலை)

என்ற வண்ணம் பாழ்வழிகளில் பழகிநின்ற அப் பழிகாரரிடம் போய் உளவுநிலை கூறி உடனமர்ந்து நின்று இவன் களவு செய்தான். செய்தும் அக் கொள்ளைப்பொருள் இவனுக்குக் கொஞ்சமும் கிடைத்திலது. உற்ற நிகழ்ச்சியைக் கொற்றவனறிந்து அக்கொடியரைத் தண்டித்துப் பழைமை கருதி இவனை ஒரு துயரும் செய்யாது தன் நாட்டைவிட்டு அகன்றுபோம்படி அருள் புரிந்து விடுத்தான். நன்றிகெட்ட இவன் சென்றவிடமெல்லாம் சிறுமை பல அடைந்தான். அரிய இரகசியங்கள் ஏதாவது ஒன்று தெரிய வந்தால் உடனே விரைந்துசென்று பிறரிடம் வெளிப்படுத்தி இச்சகம் பேசி அதனால் வரும் சிறு வரவினால் தன் பழி வயிற்றை வளர்த்து இளிவரவோடு இவன் இழிந்து திரிந்தான். முடிவில் ஒருவகையுமின்றிச் சாரதரன் என்னும் காணியாளனிடம் விலைப்பட்டு அடிமையாய் நின்று ஊழியம் புரிந்து இவன் உழன்று நின்றான். "ஒன்று உற்றக்கால் கயவர் விரைந்து விற்றற்குரியர்" என்பதை உலகம் இவன் கண் உணர்ந்து நின்றது.

உள்ளவெலாம் விற்றுண் டுருக்கால் விலைப்பட்டு
மேள்ள விழுங்கீழ் மிகுந்து.

ஏற்றிற் சுமக்கும் இடிற்றின்னு மாடுபோல்
ஆற்றுங்கீழ் ஆற்று தயல்.

கயவர் ஈன அடிமைகளாய் இழிந்து நிற்பரென்பது இதனால் கூறப்பட்டது.

---

இவ் அதிகாரத்தின் தொகைப் பொருள்.

கயவர் மக்கட்பதடிகளாய் மிக்க தீமையை மேவி யிருப்பர்; அவர் யாதும் கவலாது நாளை அவமே கழிப்பர்; மனம்போன படியெல்லாம் மதத்துத் திரிவர்; சிறுமையிற் செருக்கித் தீங் கூக்கி நிற்பர்; ஒழுக்கம் ஓம்பார்; வாளா ஓடி எங்கும் கோளுரை யாடுவர்; இரங்கி யாதும் ஈயமாட்டார்; உதைத்தவர்க்கே உதவி நிற்பர்; பிறர் வசைகளையே எப்பொழுதும் பேணி யுரைப்பர்; ஏதாவது ஓரிடர் வந்தால் உடனே ஈன அடிமைகளாய் அவர் இழிந்துபடுவர்; என்பதாம்.

இங்ஙனம் கயவராய்க் கழிந்தொழியாமல் நயவராய் நின்று நலம் பல புரிந்து சிறந்த நீர்மையோடு மக்கள் உயர்ந்துகொள்ள வேண்டும் என இறுதியில்வைத்து உறுதிபெற உணர்த்திப் பொருட்பாலை இவ்வழி முடித்தருளினர்.

எ-வது ஒழிபியல் முடிந்தது.

ளூஅவது கயமை முற்றிற்று.

உவது பொருட்பால் முற்றுப்பெற்றது.

பொய்பா மொழிமுன் பொழிந்த பொருளமுதம்
மெய்யாங் கதைகளொடு மேவியே — எய்யாக
இன்பமுடன் உள்ள திதன்கண் இனிதுண்க
மன்பதைகள் வந்து மகிழ்ந்து.

# திருக்குறட் குமரேசவெண்பாச் செய்யுள் முதற்குறிப்பகராதி.

# கதைகளின் பெயரும் விளக்கமும்.

## அணிந்துரை

### ஸ்ரீ ஆறுமுகசுவாமியவர்கள் இயற்றியது.

வேங்கடங் குமரி யோங்கலி னிடையே
இறைகொளுந் தமிழ்க்கட னிறைதரப் பருகிப்
புலம்பெறு முலகிடை நலம்பெறப் படர்ந்து
பொழிதரு முகிலென மொழிதரும் புகழினன்
வம்ப மாக்கள் கம்பலை யுறாஅ
மாக்கலஞ் சிறந்த துறைமுகங் கெழுமிய
தூத்துக் குடிநக ரோத்தக் குடிகொளூஉத்
தமிழறி வழுதியர் தாமென விவனுந்
தமிழறி வாணெனத் தம்முது குரவா
அறிந்தன ரிட்டன ராமென வணிகிளர்
சேகவீர பாண்டிய னெனும்பெயர் சிறக்க
வீறிய புலவன் வேறுபல் பொழியிடைத்
தோன்றிய வவருட் டோன்றிய நார்புனை
திருக்குற ளதற்கே திருக்குற ளதற்கே
பொருக்கென வம்ம பொருக்கென வம்ம
மற்றுளோர் போலாது முற்றுங் கதைபல
விளக்குறு மிரண்டடி யளக்கறு புகழ்பெறு
குறளென வினைத்து விறலமை யுரையே
எவரும் புகல வியற்றின னவைதமை
வள்ளுவர் கண்டு மகிழ்தரத் தவமே
இலரா கியரே யிலரா கியரே
யெனப்புகல் வன்றி யெய்த்தில னம்ம
அயலதை யதனு லவையே யவனே
ஊழி யூழி யுறுதுய ரிலாமை
வாழி வாழி மண்மிசை யானே.

## இசைமுடியார்.

தேனின்று கொண்டுதித்த திருவள்ளுவக்கலத்தில்
சிறக்கும்பாலிற்
பாவுலகம் பயனுறவெண்பாளளவுந் தேன் இனிதாகப்
பரிந்துள்ளார்த்துத்
தாவில் புலவரும் விழைந்து தணவாமல் அகத்தருந்தத்
தந்தான் கஞ்சப்
பூவினுறை பூவையின் பொருள்படைத்த செகவீரப்
புகழ்ச்சிங்கமே.

---

## திருக்குறுங்குடி ஸ்ரீமத் ஜீயர் சுவாமிகள்.

பொய்யாமொழியினைத் தழுவிச் சொற்சுவை பொருட்சுவை சுரந்து முதிய இதிகாச புராணதிகாதைகளுடன் கலந்து தேனும் பாலும் கன்னலும் அமுதும் மொத்துக் கனிந்து விளங்கும் இந் நூலினைக்கண்ணுற்று மிகவும் வியந்து இந் நூலாசிரியரது கவித் திறமையும், கல்வி நலமும் பெரிதும் மேன்மையுடையனவாகக் கருதிப் பெருமகிழ்ச்சியடைந்தோம். திருக்குறுங்குடியாளனும் பூரணன் இன்னருளால் பொருந்திய தேசும், பொறையும், புகழும் திருந்திய ஞானமும் செல்வமும் நிறைந்து இந் நூலாசிரியராகிய ஜெகவீரபாண்டியனவர்கள் பல்லாண்டுகள் வாழ்ந்துவர எம்பெருமானைச் சிந்தித்து வந்திக்கின்றோம்.

## "கலாநிலயம் சென்னை"

திருக்குறட் குமரேச வெண்பா என்னுந் திவ்விய நூலின் சில பகுதிகள் கைவரப்பெற்றோம். அதனைத் திறந்து சில பகுதிகள் ஓதுதன்முன், என்னே! இந்நூலியற்றிய பெரியாரது கல்வியின் அகலமும் அறிவினது ஆழமும் இருந்தவண்ணம் என்று எம்மைப்போல் யாவரும் இனிதின் வியப்பெய்துவா ரென்பதற்கையமில்லை. வெண்பாக்களில் ஓசை நயம் இனிமை யாய் அமைந்திருக்கின்றது. இந்நூலாசிரியரது உரைநடை

அவரது செய்யுளைப் போன்றே செவிக்கினிமையளிக்குஞ் செவ்வியது. அரிய விடயங்களை யினிமையோடு தெளிவும் பெறச் செப்பும் வன்மை இவர்போல் திறம் பெற்றவர் இந்நாள் இலர். நமது ஆசிரியர் ஜெகவீரபாண்டியனவர்கள் இயற்றும் இந்நூல் பெருமைக்கிடனாய் யாவர்தம் நன் மதிப்பிற்கும் இலக்காய்க் கற்றோரால் போற்றுதற்குரியதாய் விளங்குகின்றதாதலால் அதனை யாம் மனமார வாழ்த்தி அதன் பயன் உலகெங்கும் பரவுமாறு மூவிரு முகத்தானைப் பராவுகின்றோம். செய்வதற்கு இயலாத அருமைவாய்ந்த ஒன்றைச் செய்ய முயல்பவர்க்கு அம்முயற்சியிலேயே பெருமையுளது. இந்நூலின் சிறப்பும் பயனும் இத்துணையாக இதன் ஆசிரியர் பெருமை யளவிடற்பாலதன்று.

---

(கரந்தைத் தமிழ்ச் சங்கம், தஞ்சை)

கல்வி, கவிவன்மை, விரிவுரை யியற்றுந்திறன் ஆகிய செல்வங்களை ஒருங்கெய்தியுள்ள ஸ்ரீமான் ஜெகவீர பாண்டியனவர்கள் செய்துவரும் இந் நூல் மிகவும் வியந்து போற்றுதற்குரியது. பரிமேலழகரே சில பல குறள்களைத்தொகுத்து, இவை இன்ன பொருளைக் கூறுகின்றன என எழுதிச் செல்லவும், நமது கவிராஜரவர்கள் ஒவ்வொரு குறளுக்கும் தனிக் கருத்துக் கூறி இக் காலத்துக் கட்டுக் கதை யல்லாத, பண்டைப்பெரு நூல் களிற்கண்ட அருங்கதைகளைச் சான்று காட்டிக், குறளையும் அதன் உரைகளையும் விளக்கிக் காட்டும் திறன் பெரிதும் பாராட்டத்தக்கதாகும். இங்ஙனம் ஒவ்வொரு குறளுக்கும் ஒரு கதை — சில இடங்களில் இரண்டு மூன்றுகூட — காட்டிச் செல்லுமிடத்து அக்கதைகளைக் குறளோடும் அதன் உரையோடும் பொருத்திக் காட்டியிருக்கும் திறங்களும், நயங்களும் ஊன்றி நோக்குவார்க்கு வியப்பினைத் தருவனவாகும். இப் பெருந் தொண்டு இனிது கைகூடி முற்ற உதவி புரிந்து வருதல் தமிழகத்தின் கடமையாகும். தெள்ளிய குறள்களையும், கதைகளையும் கொண்ட சில பகுதியைத் திரட்டிச் சிறு சிறு நூலாக்கிப் பள்ளிக்கூட மாணவர்கட்கு உதவிப்பாட மாக்கின் இரு பாலார்க்கும் பெரு நலன் விளையும் என்பது எமது கருத்து.

## மணியனார்.

இமிழ் கடல் வரைப்பினி லினிமையார்தரு
தமிழ்தனில் வயங்கிடு தலைமைசேர் திரு
வமிழ் தினு முயர்ந்தநல் லரிய நூல்பல
கமழ்தரு வாயினன் கசடில் கேள்வியன். (க)

எப்பொரு ளெத்தன்மைத் தேனு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்குறும் விரிந்த காட்சியன்
ஒப்புர வொழுகலோ டுள்ளத் தூய்மைசெய்
செப்பலன் புடைமையார் செழுங் குணத்தினன் (உ)

கேட்டவர் பிணிப்புண்டு கிடக்க மாணவை
மாட்டினி திசைக்குஞ் சொல் வன்மையன் பிற
நாட்டவரும் புகழ் நலத்தன் நன்னயப்
பாட்டவை நவமுறப் பாடும் பாவலன். (௩)

வியன்பெரும் புகழ்ச்செக வீரபாண்டியன்
அயன்பெரும் புவியில் வந்தளித்த தெய்வநூல்
பயன்பெற வென்றுதன் மாண்பினுற் றெரி
நயன்பெறும் அழகவை நாட்டித் தந்தனன். (௪)

## அழகர்சாமி ஆச்சாரியார்.

மலத்திருக்குமாக்கடலைக்கரையேற்றுவான்றொடங்கிமகிழ்ந்தோ இன்சொற்
யலத்திருக்குர் திருக்குறளார் குமரேசவெண்பாவைப் பாடி யீந்தார்
நலத்திருக்கு மறைமுதலாங் கலைமுழுதும் உணர்ந்தொட்ட நகரமென்னும்
தலத்திருக்கும் ஜெகவீரபாண்டியனும் உலகுபுகழ் தனிச்சிங்கேறே.

## கழுவலை, முரு. நாராயணனார்.

முன்னாளில் வள்ளுவனார் உலகுய்ய மொழிந்ததிருக் குறள்கட்கெல்லாம்
அந்நாளி லேபரிமே லழகர்முதற் பலருரைசெய் தளித்தாரேனும்
இந்நாளில் பலருணர எழுந்துதிகழ் குமரேசவெண்பா என்னும்
பொன்னுடர் புகழ்நூல்போல் எந்நாளும்பு துமணங்கொள் புகழ்மைத்தாமோ?

பன்னூலிலுள்ளரிய பொருளெல்லாம் ஒருங்குணரப் பண்போடியும்
இந்நூலுக் கிணையொருநூ லிலையெனவே யெல்லோரு மேத்துமிந்த
நன்னூலைச் செகவீர பாண்டியனார் நாருய்ய நயந்து தந்தார்
முந்நீர்சூழ் வையமெங்கும் இந்நூல்செய் மெய்யின்பம் மொழிதற்பாற்றோ.

## சவ்வாதுப் புலவர்.

தெள்ளியநூல் பலபயின்று தேர்ந்தபெரும் புலவர்கட்குஞ்
சிந்தைக்கின்பம்
அள்ளிவரும் இளைஞர்கட்கும் அறிவுவர அருளிவரும்
யாரும் மேன்மை
கொள்ளவரும் குமரேச வெண்பாவாம் குளிர்மதியைக்
கூர்ந்து கண்டேன்
உள்ள இருள் ஒதுங்கியின்பம் ஓங்கினேன் பாண்டியன்சீர்
உணர்ந்தேனம்மா?

## முனியாண்டியா பிள்ளை.

பண்டிலகை இனிதாண்ட பாஞ்சாலங் குறிச்சி மன்னர்
கண்டுநின்று திண்குலத்தே கதிரவன்போல் எழுந்து திசை
மண்டுபுகழ்ச் செகவீரபாண்டியனார் மதிநூலைக்
கண்டுகொண்டேன் உணர்ந்தோறும் களியினின்பே
காண்கின்றேன்.